ஸ்ரீ

திவ்யகவி

பிள்ளைப்பெருமாளையங்கார்

அருளிச்செய்த

# அஷ்ட பிரபந்தம்



திருவல்லிக்கேணி

வை. மு. சடகோபராமாநுஜாசாரியரும்

சே. கிருஷ்ணமாசாரியரும்

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியரும்

இயற்றிய

விரிவான உரையுடன்

சென்னை:

கணேச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

நள ௵

விலை ரூபா ௩-௨.

## இப்புத்தகத்தில் அடங்கியவை.





* இந்த எட்டுநூல்களுக்கும் 'அஷ்டபிரபந்தம்' என்று பெயர்வழங்கும்.



# பிள்ளைப்பெருமாளையங்கார் வரலாறு.

* அழகியமணவாளதாச ரென்கிற திவ்யகவி† பிள்ளைப்பெருமாளையங்கார், சோழநாட்டில் திருமங்கை யென்னுந் திருப்பதியில் பிராமணவருணத்தில் ‡ ஸ்ரீவைஷ்ணவசமயத்தில் அவதரித்து, நல்லாசிரியர்பக்கல் தென்மொழியில் தொல்காப்பியம் முதலிய அரிய பெரிய இலக்கணநூல்களையும் பழைய சங்கச்செய்யுள்களையும் அக்காலத்துவழங்கிய மற்றைநூல்களையும் ஐயந்திரிபறஓதிஉணர்ந்து, இங்ஙனமே வடமொழியிலும் வேதம் வேதாங்கம் வேதாந்தம் முதலிய சகல கலைகளிலும் வல்லவராகி, மற்றும் தமது ஸ்ரீவைஷ்ணவசமயத்திற்கு உரிய சம்பிரதாயக்கிரந்தங்க ளெல்லாவற்றையுங் கற்று அவற்றிலும் அதிநிபுணராய், அடக்கம்முதலிய நற்குணங்களெல்லாம் ஒருங்கே அமையப்பெற்று, ஆழ்வார்களருளிச்செயல்களில் ஆழ்ந்துஈடுபடுபவராய், திருவரங்கம் பெரியகோயிலி லெழுந்தருளியிருக்கின்ற நம்பெரியபெருமாளுடைய திருவடித்தாமரைகட்கு மிக்கபக்திப்பேரன்புபூண்டு ஒழுகுமவராய் அமர்ந்திருந்தனர். அமருநாளில், அந்நாட்டில் ஆண்டுகொண்டிருந்த § அரசன், அவரது நற்குணங்களனைத்தையும் அறிந்து, 'இக்குணங்களெல்லாம் ஒருங்கு அமைவது அருமை அருமை!' என வியந்து, அவரைத் தனது சம்ஸ்தானத்திற்கு வரவழைத்து அவர்க்குத் தனது இராஜாங்ககாரியங்களிற் சிறந்ததோர் உத்தியோகங் கொடுத்து, அவரைத் தன் சமீபத்தில் வைத்துக் கொண்டனன். அவர் உத்தியோகத்தை மேற்கொண்டிருந்தபோதும் விஷ்ணுபக்தி விஞ்சிநின்றார்.

அப்பொழுது ஒருநாள், இராஜசம்ஸ்தானத்தில் உத்தியோகம்நடத்துகின்றவர்களின் நடுவே தாமும் உடனிருந்து காரியஞ்செய்துவருகிற அவர், தமதுதோளி லணிந்த உத்தரீயத்தை இரண்டுகையிலுங்கொண்டு 'கிருஷ்ண கிருஷ்ண' என்று தேய்த்தனர். அதுகண்ட பலரும் 'ஐயங்காரே! நீர் நுமது உத்தரீயத்தை இங்ஙனம் ஏன் செய்தீர்?' என வினவ, அவர், 'திருவரங்கம் பெரியகோயிலில் நம்பெருமாள் திருத்தேரி லெழுந்தருளித் திருவீதியிலுத்ஸவங்கண்டருளுகிறபோது அருகுபிடித்தகைப்பந்தத்தின்சுவாலை தாவியதனாற் பற்றியெரிகின்ற திருத்திரையை அவித்தேன்' என்றார். அது

---

* அழகியமணவாளனென்பது, ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கின்ற திருமாலின் திருநாமம்; அப்பெருமானுக்கே அடியவராயிருந்ததனால், இவர் அழகியமணவாளதாச ரெனப் பெயர்பெற்றனர்.

† கிருஷ்ணனுடைய குழந்தைத்திருநாமமாகிய பிள்ளைப்பெருமாளென்னும் பெயரை இடப்பெற்ற ஐயங்கா ரென்று இப்பெயர்க்குப் பொருள்கூறுவர். ஐயங்காரென்பது, ஸ்ரீவைஷ்ணவப்பிராமணர்க்குக்குறியாகவழங்கும்.

‡ இவரை 'தென்கலைவைணவர்' என்பர், புலவர்புராணநூலுடையார்.

§ இவ்வரசனைப் பெரியதிருமலைநாயக னென்பர் ஒருசாரார்; அது, காலக்கணக்குக்கு ஒத்துவாராது.

கேட்டு அவர்கள் 'கோயிலில் நம்பெருமாள் திருத்தேருத்ஸவங் கண்டருளு கிறது உமக்கு இங்ஙன் எங்ஙனே தெரிந்தது?' என்று நகைத்து 'ஏதோ இவர்க்கு இவ்வாறு திகைப்புஉண்டாயிருக்கிறது:இது இராஜசேவைக்கு மிக விரோதமாகுமே!' என்று அவர்விஷயத்தில் இரக்கமுற்றவர்களாய், நடந்த செய்தியை அரசனுக்கு அறிவித்தனர். இது நிற்க: கோயிலில் திருத்தேரி லே திருத்திரையிற் பந்தத்தின்சுவாலை தாவியெரியும்போது அருகிற் பெரு மாளைச்சேவித்துநின்ற ஐயங்கார் கைகளால் திரையைத் தேய்த்துத் தீயை அவித்திட்டதாக அர்ச்சகர் முதலிய சந்நிதிகைங்கரியபரர்கள் கண்டு உடனே தோஷபரிகாரஞ்செய்து திருத்தேருத்ஸவத்தை நடத்தினார்கள். பின்பு இவ்வரலாறுகளைச் செவியுற்றறிந்த அரசன் ஆச்சரியபரவசனாய் ஐயங்காரைநோக்கி 'திருத்தேருத்ஸவத்திற்கு எங்ஙனேபோயினீர்!' என்ன, ஐயங்கார் 'எனக்கு மாநஸாநுபவமே யல்லது கோயிலுக்குப் போனதில்லை' என, அரசன் 'ரதோத்ஸவத்தினன்றுநீர்அங்குஇருந்ததாகப்பலர்சொல்வது பொய்யோ?' என்ன, அப்போது இவர் இங்கிருந்தபடியே உத்தரீயத்தை 'கிருஷ்ண கிருஷ்ண' என்று தேய்த்தது கண்ட சிலர் 'இவர் அப்பொழுது இங்கேதான் இருந்தனர்' என்று உண்மைகூற,அரசன் 'நன்று!' என்று அத் தெய்விகத் திருவருட்செயலைக்குறித்து ஆச்சரியப்பட்டது மன்றி அன்றை யிரவு நித்திரையில் தான் நம்பெருமாள்சந்நிதிக்குப்போனதாகவும், தென் திருக்காவேரியில் ஐயங்கார் நீராட்டஞ்செய்துநிற்கக்கண்டு அவருடனே சந் நிதிக்குப்போய்ப் பெரியபெருமாளைசசேவித்து மீளும்போது ஐயங்காரைக் காணாது மயங்கியதாகவுங் கனாக்கண்டு, கண்விழித்து, பொழுதுவிடிந்தவுட னே ஐயங்காரைவருவித்து,'நீர் மகாநுபாவரும் நம்பெருமாளுக்குஅந்தரங்க பக்தருமாக இருக்கின்றதனால்,இனி என்னிடம் உத்தியோகஞ்செய்தற்குச் சிறிதுந்தக்கவரல்லீர்; அடியேன் இதுவரையிலுந் தேவரீர்பெருமையைஅறி யாதுசெய்த அபராதங்களையெல்லாம் பொறுத்து, அடியேன் செய்யவேண் டும் பணிவிடையை நியமித்தருளவேண்டும்' என்று வேண்ட, ஐயங்கார் 'பெரியகோயிலில் எனக்கு நிரந்தரவாசங்கிடைக்கும்படி செய்யவேண்டும்' என்ன, அரசன் அன்றுதொடங்கிக் கோயிலில் அவர்க்கு ஓர் இருப்பிடம் அமைப்பித்து, தளிகைப்பிரசாதமும் அவர்க்குக் கிடைக்குமாறு செய்து அனுப்பிவிட்டனன்.

அவரும், அவ்வாறே எழுந்தருளியிருந்து, திருவரங்கத்தந்தாதி, திருவ ரங்கத்துமாலை, திருவரங்கக்கலம்பகம், ஸ்ரீரங்கநாயகநூசல், திருவேங்கட மாலை, திருவேங்கடத்தந்தாதி, அழகரந்தாதி, நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி என்னும் * எட்டுநூல்களையும் பரப்பிரஹ்மவிவேகம் முதலிய பலநூல்களை யும் அருளிச்செய்து, பலநாள் வாழ்ந்திருந்தனர்.

இவர் திருவேங்கடமாலை முதலிய நூல்க ளியற்றியதைக் குறித்து ஒருசாரார் வழங்குவதொரு வரலாறு வருமாறு:—இவர் ஸ்ரீரங்கநாதனுக்கே தொண்டராகி அப்பெருமானையன்றிப் பிறிதொருதெய்வத்தை மறந்துந்

---

* இந்த எட்டுநூல்களும், 'அஷ்டப்பிரபந்தம்' எனவும், 'ஐயங்கார்பிர பந்தம்' எனவும் வழங்கும்.

தொழாத மனவுறுதியுடையவராய், அப்பரமன்விஷயமாகவே அந்தாதியும் மாலையும் கலம்பகமும் ஊசலும் பாடியபொழுது, திருவேங்கடமுடையான் இவர்வாயால் தாம் பிரபந்தம் பாடப்பெற விரும்பித் தமது உண்மைவடிவத்துடன் இவரது கனவில் தோன்றி 'வேங்கடத்தின் விஷயமாகச் சிலபிரபந்தம்பாடுகே' என்று கட்டளையிட, இவர் அதற்குஇணங்காமல்'அரங்கனைப் பாடிய வாயாற் *குரங்கனைப் பாடேன்' என்றுகூறி மறுக்க, திருவேங்கடமுடையான் எங்ஙனமாவது இவர்வாயாற் பாடல்பெற அவாக்கொண்டதுமன்றி, எல்லாத்திருப்பதிகளிலும் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான் ஒருவனே யென்று இவர்க்குத்தெரிவித்து இவர்கொண்டுள்ள பேதபுத்தியை அகற்றவுங் கருதியதனால், இவர்க்கு உடனே கண்டமாலையென்னுங் கொடியநோய் உண்டாகும்படி செய்ய, அந்த வியாதியால் மிகவருந்திய இவர் அதன்காரணத்தை உணர்ந்துகொண்டு அப்பெருமான்பக்கல் தாம் அபசாரப்பட்ட அபராதம் தீருமாறு உடனே திருவேங்கடமாலை திருவேங்கடத்தந்தாதி என்னும் பிரபந்தங்களை இயற்றி அப்பெருமானைத் துதிக்க, அது பற்றித் திருவுள்ளமுவந்த திருவேங்கடமுடையான் உடனே இவரெதிரில் எழுந்தருளிக் காட்சிதந்து அநுக்கிரகிக்க, அதனால் இவர் அப்பொழுதே அந்நோய் நீங்கப்பெற்றவராகி, பின்பு, அவ்வடமலைக்கு ஈடான தென்மலையின் விஷயமாக அழகரந்தாதி பாடி, அப்பால் தமது பேதபுத்தி யொழிந்தமை நன்குவிளங்க நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி பாடினர்.

திருவேங்கடமுடையான்[ஸ்ரீநிவாசன்]ஐயங்கார்க்குச் சேவைசாதித்த இடம் - கோயிலில் சலவைக்கல்மண்டபப்பிராகாரமென்கிற உட்பிராகாரத்தில் தென்கிழக்குப்பக்கத்தில் என்பர்.

பரமதநிரஸநம்பண்ணி ஸ்வமதஸ்தாபநஞ் செய்தற்பொருட்டு இவர் பாடிய பாடல்களின் தொகுதியே, பரப்பிரஹ்மவிவேக மெனப்படுவது.

விசுவரூபதரிசநபசுசம்வாதமென்னும் மறுபெயரையுடைய பரப்ரஹ்ம விவேக மென்னும் நூலின் உரைத்தொடக்கத்தில் அந்நூலின்வரலாற்றைக் குறித்து எழுதியுள்ள விவரத்தை அடியிற்காண்க:—"திருவரங்கத்தமுதனார் திருப்பேரனாராகிய அழகியமணவாளதாச ரென்கிற திவ்வியகவி பிள்ளைப் பெருமாளையங்கார் நம்பெருமாள் முதலிய சில திவ்வியதேசப்பெருமாள்களின்மீது தமிழ்ப்பிரபந்தங்கள் பல செய்தருளுங்காலத்தில், தமிழிலக்கணவிலக்கியங்களைக் கற்றுவல்ல சிறந்த புலவர்கள் பலரும் இவருடைய கவிகளிற் சொல்நோக்கு பொருள்நோக்கு முதலியவற்றைக் கண்டுங் கேட்டுங் கொண்டாடுவதை ஆனைக்காவிலிருக்கும்ஆகமவாதிகள் கேள்விப்பட்டு 'இப்படிப்பட்ட வித்துவானால் நம்முடைய ஜம்புகேசுரச்சிவபெருமான்மீது ஒரு பிரபந்தம் பாடுவித்துக்கொள்ளவேண்டும்' என்னுங் கருத்துடையவர்களாய் ஒருநாள் இவருடையதிருமாளிகையில் வந்து தங்கள்கருத்தை வெளியிட, அதுகேட்டருளி, திரிகரணத்தாலும் தேவதாந்தரத்தைப்பற்றறவிட்ட சுத்த

---

* திருவேங்கடமுடையானைக் குரங்கனென்றது, குரங்குகளுடன் மலையில் வாழ்தலால்; "மந்திபாய் வடவேங்கடமாமலை," "வானரமும் வேடுமுடை வேங்கடம்" என்றார் ஆழ்வார்களும்.

சத்துவ தொண்டக்குல ஸ்ரீவைஷ்ணவசிகாமணியாகிய ஐயங்கார் புன்னகைகொண்டு 'யாம் அரங்கனைப்பாடினவாயினால் மற்றொரு*குரங்கனைப் பாடுவதில்லையே' எனத் திருவாய்மலர்ந்தருள, கேட்டு, 'குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளுமவரைப்போல நம்முடைய பரமசிவத்தின்மீது பாடல்பெற்றுக்கொள்ள வந்து குரங்கனென்னுஞ் சொல்லைப் பெற்றுக் கொண்டோமே' என்று மனம் பொறாதவர்களாய்ச் சடக்கென எழுந்திருந்து, 'எவ்வகையினாலாவது உம்முடைய வாக்கினால் எங்கள்பரமசிவத்தின் மீது ஒருபாடலாவது பெற்றுக்கொள்ளுகிறோம்' என்று சபதங்கூறித் தங்களிருப்பிடத்திற்குப்போய் அதற்குவகைதேடிக்கொண்டிருந்தனர்கள். இப்படியிருக்கச்செய்தே, கோயிலில் உதயத்தில் திருக்காப்புநீக்கி நம்பெருமாளுக்குச்செய்யுங்கைங்கர்யமாகிய விசுவரூபதரிசனஞ் செய்விக்கப்போகிற சமயத்திற் கொண்டுபோய் அர்ச்சகர் சமர்ப்பிக்கிற பொருள்களில் ஒன்றாகிய கபிலையென்கிற பசுவானது ஒருநாள் ஆனைக்காவைச்சார்ந்த ஒருபுலத்தில் மேய அதை மேற்கூறிய ஆகமவாதிகள் பிடித்து இதனால் நாங்கள் கொண்டகருத்தைஈடேற்றுவித்துக்கொள்ளலாமென நினைத்துக் கட்டிவைத்தனர்கள். அன்றுஇராத்திரி கோயிலில் அர்ச்சகர்முதலாயினோர் விசுவரூப தரிசநபசுவைக் காணாமல் தேடிக்கொண்டு போகையில், ஆனைக்காவிலிருக்கக் கண்டு ஆகமவாதியர்களைப் பசுவைக்கொடுக்கும்படி கேட்க, அவர்கள் 'உங்களுடைய பிள்ளைப்பெருமாளையங்கார் வந்து கேட்டால் தருகிறோம்' என்றுசொல்ல, அதுகேட்டு,விசுவரூபதரிசநத்துக்குப்ராதக்காலத்தில்வேண்டுமேயென்னும் எண்ணத்தினால் அதைமறுத்துஒன்றும்பேசாமல் ஒத்துக் கொண்டு, பரபரப்புடன் சென்று ஐயங்காரிடத்தில் விண்ணப்பஞ்செய்ய, "மறந்தும்புறந்தொழாமாந்தர்" என்கிறபடியே அந்தப்பிரபந்நநிஷ்டாநுபவராகிய வைதிகவைஷ்ணவரானவர் அதுகேட்டருளி, 'ஸ்வகர்மகாலம்தவிர மற்றைக்காலத்தில் ருத்திரபூமியில் அடிவைப்பது கூடுமோ? அன்றியும், அவ்வாலயத்திற் பிரவேசிப்பது வைதிகவைஷ்ணவனுக்குத் தக்கதன்று: 'ஆனை துரத்திவந்தாலும் ஆனைக்காவில் நுழையாதே' என்கிற பழமொழியையேனும் கேட்டதில்லையோ? ஆதலால், அந்த ஆகமவாதியர்களைக் கோயிலிடத்தில் அழைத்துவாருங்கள்' எனச் சொல்லினர். அவ்வாறே அந்த ஸ்ரீவைஷ்ணவர்களும் ஆனைக்காவிற் சென்று அவர்களுக்குச்சொல்ல, எவ்வகையாலாயினும் ஐயங்காரால் ஒருபாடல்பெற்றுக்கொள்ள எதிர்பார்த்துக்கொண்டிருந்த அவர்களும், 'நம்முடைய எண்ணம் நிறைவேறுங் காலம் இதுதான்' என்று அதற்கு ஒத்துக்கொண்டு, அதிகசந்தோஷத்தோடு அக்கபிலையையும் ஓட்டிக்கொண்டு, ஜயவிஜயர்கள்எழுந்தருளியிருக்கும் சந்தநுமகாராஜமண்டபத்தில் வந்துசேர்ந்தனர்கள். ஐயங்காரும் அவ்விடத்தில் எழுந்தருளி,'கபி

*குரங்கம் - மான்: வடசொல்; அதனை இடக்கையிலேந்தியுள்ளவன், குரங்கன்: எனவே, சிவபிரானும். அன்றி, குரங்குமுகமுள்ள நந்திகேசுரனை அடிமையாகவுடையனாதல்பற்றியும், அநுமானாக அவதரித்தவனாதல்பற்றியும், சிவபிரானைக் குரங்கனென்றனரென்னலாம். கு - குற்சிதமான, ரங்கன் - அம்பலத்தையுடையான் என்றுங் கூறுவர்.

லையை விடுவதற்கு உங்களுடைய கருத்து எது?' என்று கேட்டருள, அவர்கள் 'உம்முடைய வாக்கால் ஜம்புகேசுரச்சிவபெருமாளாகிய எங்கள்தெய்வத்தின்மீது ஒருபாடல்பாடித் தருவீரேல், விசுவரூபதரிசனப்பசுவை நாங்கள் விடுவதற்கு யாதோராடங்கமுமில்லை' என்று சொல்லினர். "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்கிற குறளின்படி அவர்கள்சொன்னதற்குஇணங்கினவரைப்போலநடித்து ஐயங்கார் 'நம்பெருமாளுக்கு விசுவரூபதரிசனத்திற்கு மற்றுநாள் பிராதக்காலத்தில் ஆடங்கமாகிறபடியால், அப்பசுவை விடுவீர்களாகில், உடனே யாம் பாடுகிறோம்' என, 'எங்கள்சிவபெருமான்விஷயமாக நீர்பாடுவது யதார்த்தமாகில், அப்பாட்டில் இரண்டொரு சீரையேனும் முன்னே சொல்லுவீராகில் பசுவை விடுகிறோம்' என்று அவர்கள் சொல்ல, ஐயங்காரும் புன்னகைகொண்டு அவ்வாறே "மங்கை பாகன்" என்று முதலிரண்டு சீரை அருளிச்செய்தமாத்திரத்தில், அப்பசுவை விட்டனர்கள். உடனே ஐயங்காரும் முன் தாம் சொன்ன சீரைத் தொடங்கி,

"மங்கைபாகன் சடையில்வைத்த கங்கை யார்பதத்துநீர்
வனசமேவு முனிவனுக்கு மைந்தனான தில்லையோ
செங்கையா லிரந்தவன் கபால மாரகற்றினார்
செய்யதாளின்மல ரான்சிரத்தி லான தில்லையோ
வெங்கண்வேழ மூலமென்ன வந்த துங்கள்தேவனோ
வீறுவாணனமரி லன்று விறலழிந்த தில்லையோ
அங்கண்ஞால முண்டபோது வெள்ளிவெற் பகன்றதோ
ஆதலா லரங்கனன்றி வேறுதெய்வ மில்லையே.

ஆதலால், சிவகோடியிற்சார்ந்தவரேயொழிய உங்கள்தேவதை பரமாத்மா வல்லர்" என்று இச்செய்யுளைச் சொல்லி 'உலகத்துக்குப் பலதெய்வங்கள் உண்டோ? ஒருதெய்வமேயாம்; அத்தெய்வம் திருவரங்கனேயல்லாமல் வேறில்லை' என, அதுகேட்டு அவ்வாகமவாதியர்கள்'கிணறுவெட்டப்பூதம்புறப்பட்டாற்போல் இது என்ன விபரீதமாய்முடிந்ததே!'என்று சினங்கொண்டு அந்த ஆகமவாதிகளுக்குச் சிறந்த நிஷ்டாநுபவர்களாகிய சிவவித்வான்கள் வேதவிருத்தமாகிய ஆகமபுராணங்களைக்கொண்டு புலவர்பெருமாளாகியஐயங்காரோடு வாதுசெய்யத் தொடங்கினர்கள். அவ்வாதிசைவவித்வான்கள் கேட்ட வினவுக்கு விடைசொல்லியருளிய உத்தரங்களைப் பின்னுள்ளோரும் தெரிந்துகொள்ளும்படி பரமகாருணிகராகிய ஐயங்கார் வெள்ளைப்பாவாற் கூறினார். ஆதிசைவசமயநிஷ்டாநுபவர்களாகிய வித்துவான்கள் சொல்லிக்கொண்டுவந்தபிரச்னைகளுக்கு வடமொழியிலும்தென்மொழியிலும் தெய்வப்புலமையுள்ள வீரவைஷ்ணவசிகாமணியாகிய ஐயங்கார் அருளிச்செய்த விடைகளை மறுத்துச்சொல்ல ஒன்றுந் தோன்றாமல் அவ்வாதியர்கள் 'ஓம்' என்று தங்கள்தங்களிருப்பிடத்துக்குச் சென்றனர்கள்."

'திருநறையூர்நம்பிமேகவிடுதூது' என்ற நூலும் இவர்செய்ததென்பர். இவர்செய்தனவாகத் தனிப்பாடல்களும் சில வழங்குகின்றன.

பின்பு இவர் ஒருநாள் தமது திருவடிகளிற் சம்பந்த முடையவர்களை நோக்கி 'நமக்கு அந்திமதசை பசுவினாலே நேரிடும்' என்று சொல்லி அப்படியே சக்கரவர்த்தித்திருமகனைச்சேவித்துக்கொண்டு ஸ்ரீவைகுண்டநாதர் சந்நிதியிற் சேவிக்கும்பொழுது, ஒரு நொண்டிப்பசு வந்து தவறி இவர்மேல் விழ, அது விழுந்ததனாலாகிய துன்பத்துடனே இவர்

"தளவ துளவவெனச் சொல்லுஞ் சொற் போச்சே
அளவி னெடுமூச்சு மாச்சே—முளரிக்
கரங்கால் குளிர்ந்ததே கண்ணும் பஞ்சாச்சே
இரங்கா யரங்கா வினி"

என்று சொல்லித் திருநாட்டை யலங்கரித்தனர்.

இவர், சிலேடை திரிபு யமகம் அந்தாதி கலம்பகம் ஊசல் முதலியன விசித்திரமாகப்பாடுவதில் ஒப்புயர்வில்லாது மிக வல்லவர்; இது, இவர்செய்துள்ள நூல்களால் இனிதுவிளங்கும்: அன்றியும், 'திவ்வியகவி' என்ற இவரது பட்டப்பெயர்தானே இதனை வற்புறுத்தும். இவர் இயற்றிய திருவரங்கக்கலம்பகம் - வெண்பாப்பாடுதலில் வல்ல புகழேந்தியும், விருத்தம்பாட வல்ல கம்பரும், அந்தாதிக்குஎடுத்த ஒட்டக்கூத்தரும்,கலம்பகத்திற்கென்று சிறப்பித்துச்சொல்லப்படுகின்றஇரட்டையர்களும்,சந்தம்பாடுதலிற்சமர்த்தரான படிக்காசுப்புலவரும் முதலிய மகாவித்வான்கள் சேர்ந்து செய்தாலொத்த சிறப்பினை யுடையது. இங்ஙன மிருக்க, ஒருசாரார் 'ஐயங்கார் அம்மானையில் அடிசறுக்கினர்' என்று குறைகூறுவது, சிறிதும் சரியன்று; திருவரங்கக்கலம்பகத்திலுள்ள "தேனமருஞ்சோலை" என்ற தொடக்கத்து அம்மானைச்செய்யுளினது ஈற்றடியின் பிற்பகுதியிற் பொருந்திய சிலேடைப்பொருள் நயத்தையும் சரித்திரவமைப்பையும் ஆழ்ந்தகருத்தையும் ஊன்றி நோக்குமிடத்து, அங்ஙனம் இழித்துரைப்பாரது பழிப்புரை வெற்றுரையேயா மென்பது தெற்றென விளங்கும்: அன்றியும், அக்கூற்று அழுக்காற்றினாலாகியதேபோலும்; அந்த அம்மானைச்செய்யுளின் அருமை பெருமைகள் இங்கு விரிப்பிற் பெருகும். இன்னும், இவர் செய்துள்ள பிரபந்தங்களெல்லாம், ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தில் உள்ள நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்கள் பன்னிருவர் அருளிச்செய்த திவ்வியப்பிரபந்தங்களின் ஸாரார்த்தங்களும், நாதமுனிகள் முதலிய ஆசாரியர்களுடைய அருளிச்செயல்களின் விசேஷார்த்தங்களும் பொதிந்திருத்தல் மாத்திரமேயன்றி, "சொல்நோக்கும் பொருள்நோக்கும் தொடைநோக்கும் நடைநோக்கும் துறையின்நோக்கோடு எந்நோக்குங் காண இலக்கிய" மாகியும் இருப்பன.

இவர், ஸ்ரீவைஷ்ணவவிசிஷ்டாத்வைதமதஸ்தாபநாசாரியரான ஸ்ரீபகவத்ராமாநுஜாசார்யரென்கிற ஸ்ரீபாஷ்யகாரரது அந்தரங்கசிஷ்யரான கூரத்தாழ்வானுடைய குமாரராகிய ஸ்ரீபராசரபட்டரது சிஷ்ய ராதலாலும், அந்தப்பட்டரது திருவவதாரம் சாலிவாகனசகாப்தம் ஆயிரத்துநாற்பத்தைந்தில் என்று தெரிதலாலும், இவரதுகாலம் இற்றைக்குச் சற்றேறக்குறைய எழுநூற்றறுபது வருஷத்துக்குமுன்ன ராகின்றது; (இப்பொழுது நிகழ்கிற சாலிசகம் - கஅ௩௬.) இவரை ஸ்ரீபாஷ்யகாரரது ஸ்ரீபாதத்தி லா

சிரயித்தவர்களுட் பிரதானரும், இராமாநுசநூற்றந்தாதி அருளிச்செய்தவரு மாகிய திருவரங்கத்தமுதனாரது திருக்குமாரரென்று பலரும் திருப்பேரனு ரென்று சிலரும் வழங்கிவருவதும், கீழ்க்கூறிய காலக்கணக்கையே வற் புறுத்தும்.

இவர்பேரனார், ஸ்ரீரங்கநாயகியாருசல்செய்த கோனேரியப்பனையங்கார்.

இன்னும் இவரது வைபவவிசேஷங்களை வல்லார்வாய்க் கேட்டு உணர்க.

அடியில்வருகிற புலவர்புராணச்செய்யுள்கள் இங்குநோக்கத்தக்கவை:—

(க) "தென்கலைவயிணவன் செகமெலாம்புக
ழின்தவிப்பிரபலன் இணையில்பட்டர்தம்
நன்கணத்தினர்களிலொருவன் நாரணன்
பொன்கழலன்றி மற்றொன்றும் போற்றிலான்.

(உ) மருவழகியமணவாளதாசனென்
றொருபெயர்புனைந்தவன் உரைக்குமோர்சொலாற்
பொருள்பலதருங்கவிபொறிக்கும்பொற்பினிற்
பெருமிதனெனப் பலர்பேசும் பெற்றியான்.

(௩) செவ்வியசொற்சுவைசிறிதுந்தேர்ந்திடா
தவ்வியப்போர்பொருமவர்களன்றிமற்
றெவ்வியற்புலவருமிசைந்துநாடொறுந்
திவ்வியகவியெனச்செப்புஞ்சீர்த்தியான்.

(௪) தேனையுமமுதையுமனையதீஞ்சொலோர்ந்து
ஆனையின்கன்றெனவமைக்கும்பாடலான்
ஏனையபாடலொன்றேனுமோதிலான்
பூனைபோல்வஞ்சனைப்புந்திகொண்டிலான்."

இவரை மிருதியாகச் சிவதூஷணை செய்கின்றவ ரென்று சைவர்கள் பழித்தற்குப் புலவர்புராணமுடையார் கூறும் சமாதானத்தை அடியில்வரு கின்ற செய்யுள்களிற் காணலாம்:—

(கூ) "சிவனைநிந்தனைசெய்தவனேயென
இவனைச்சிற்சிலிளஞ்சைவரேசுவார்
அவன்தன்மாயவனகத்திற்பாதியென்று
உவந்துபாடியபாக்களுமுள்ளவே.

(கசு) என்றென்றுந்தனதிட்டதெய்வத்தையே
நன்றென்றேத்திடல்ஞானிகள்சம்மதம்
அன்றென்றோதவொண்ணாததனாலவன்
குன்றென்றச்சுதனைக்குறிக்கொண்டதே.

(உஎ) சைவரிற்சிலர்தாமரைக்கண்ணனை
வைவதொப்ப வயிணவரிற்சிலர்
மைவனக்களவள்ளலைநிந்தனை
செய்வதுண்டு மதங்கொண்டசிந்தையால்.

(உ௩) திரிவுசொற்றிறந்தேடித்தினந்தினம்
அரியின்மேற்கவிபாடுமெந்தணன்
கரிவலஞ்செய்கருவைமன்றன்னிலும்
பெரிதுநிந்தனைபேசிலனுண்மையே.

(உ௪) வளங்குலாந்துறைமங்கலவாசன்போல்
உளங்கனன்றரியன்பரொருவரும்
களங்கறுத்தவராயிரர்க்காதுதல்
விளங்கொர்பாடல்விளம்பிலர்மெய்ம்மையே."

ஸ்ரீ

## கோயிலந்தாதி

என்னும்

# திருவரங்கத்தந்தாதி.

'திரு' என்னும் பலபொருளொருசொல் - வடமொழியில் 'ஸ்ரீ' என்பதுபோல, தமிழிலே தேவர்கள் அடியார்கள் ஞானநூல்கள் மந்திரங்கள் புண்ணியஸ்தலங்கள் புண்ணியதீர்த்தங்கள் முதலிய மேன்மையையுடைய பலபொருள்கட்கு விசேஷணபதமாகி மகிமைப்பொருளைக்காட்டி, அவற்றிற்குமுன்னே நிற்கும்; ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீபக்திசாரர் ஸ்ரீராமாயணம் ஸ்ரீஅஷ்டாக்ஷரம் ஸ்ரீரங்கம் ஸ்ரீகைரவிணி ஸ்ரீபாதம் எனவும், திருமால் திருமழிசைப்பிரான் திருவாய்மொழி திருவெட்டெழுத்து திருவரங்கம் திருவல்லிக்கேணி திருவடி எனவும் வழங்குவது காண்க. இது, இங்கு அரங்கத்திற்கு அடைமொழி; அந்தாதிக்கு அடைமொழியாகவுமாம்.

திருவரங்கம் என்பது - திருமாலின் திவ்யதேசங்கள் நூற்றெட்டனுள் தலைமைபூண்டதும், சோழநாட்டுத்திருப்பதிகள் நாற்பதில் முக்கியமானதும், 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று பிரதானமாக எடுத்துக்கூறப்படுகின்ற மூன்று தலங்களுள் முதலதும், 'கோயில்' என்றும் 'பெரியகோயில்' என்றும் மறுபெயருடையதும், 'பூலோகவைகுண்டம்' எனப்படுகின்ற மகிமையுடையதும், 'போகமண்டபம்' எனப்படுவதுமாகிய தலம்.

பிரணவாகாரமான ஸ்ரீரங்கவிமானத்திலே ஆதிசேஷசயனத்திற்பள்ளிகொண்டருளுந் திருமால், ஆதியிற் சத்தியலோகத்திற் பிரமனது திருவாராதனத்திருவுருவமாயிருந்தான்; பின்பு, சூரியகுலத்து மநுகுமாரனான இக்ஷ்வாகுமகாராசன் பிரமனைக்குறித்துப் பலகாலம் அரும்பெருந்தவம்புரிந்து அத்தேவனருளால் அப்பெருமானைத் தான் பெற்றுத் திருவயோத்திக்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்து பிரதிஷ்டித்துத் திருவாராதனஞ்செய்துவந்தனன்; அந்த ஸ்ரீரங்கநாதனே, இக்ஷ்வாகுமுதல் இராமபிரான்வரையி லுள்ள இரவிகுலமன்னவ ரெல்லார்க்குங் குலதெய்வமாகி விளங்கினன்; இங்ஙனம், மனிதவுருவங்கொண்ட பெருமாளாகிய இராமபிரானால் வணங்கப்பட்டமைபற்றி, அரங்கநாதனுக்கு 'பெரியபெருமாள்' என்று திருநாமம்: இராமபிரான், வனவாசஞ்சென்று விபீஷணனுக்கு அபயமளித்துக் கடல்கடந்து இலங்கைசேர்ந்து இராவணாதிராக்ஷஸசங்காரஞ்செய்து திருவயோத்திக்கு மீண்டு பட்டாபிஷேகஞ்செய்துகொண்டபின்பு, சுக்கிரீவன் முதலிய அனைவர்க்கும் விடைகொடுத்து அவரவரை ஊர்க்கு அனுப்பும்பொழுது, தனது திருவாராதனமூர்த்தியும் குலதனமுமான திருவரங்கநாதனைத் தனக்குமிகவும்அந்தரங்கனான விபீஷணாழ்வானிடங் கொடுத்து ஆரா

நித்துவரும்படி நியமித்து அனுப்பினன்; * அங்ஙனமே அவ்வரக்கர்பெருமான் அவ்வமரர் பெருமானை அவ்விமானத்துடனே எழுந்தருளப்பண்ணிக்கொண்டு இலங்கைநோக்கிச் செல்லும்பொழுது, இடைவழியில் உபய காவேரிமத்தியிலே பெருமான் புடைபெயராது விமானத்துடனே நிலைநின்றருளினன்: அவ்வாறு திருமால் திருவுள்ளமுவந்து தங்கிய இடமே ஸ்ரீரங்க மெனப்படுவது.

(ஸ்ரீவைகுண்டம் திருப்பாற்கடல் சூரியமண்டலம் யோகிகளுடைய உள்ளக்கமலம் என்னும் இவையனைத்தினும் இனிய தென்று திருமால்)திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கு மிட மானதுபற்றி, 'ரங்கம்' என்று அவ்விமானத்திற்குப் பெயர்; திருமால் இங்கு ரதியை [ஆசைப்பெருக்கத்தை] அடைகின்றன னென்க. ரங்கம் என்னும் வடமொழி, அகரம் மொழிமுதலாகிமுன்வரப்பெற்று 'அரங்கம்' என நின்றது; [நன்னூல் - பதவியல்-௨௧.] இங்கு 'அரங்கம்' என்பது - விமானத்தின்பெயர் திருப்பதிக்குஆனதோர் ஆகுபெயர் [தானியாகுபெயர்]. இனி, திருமகளார் திருநிருத்தஞ்செய்யுமிடமாயிருத்தலாலும், ஸ்ரீவைஷ்ணவர்களுடையதிருவுக்கு [மேன்மைக்கு]க்கூத்துப்பயிலிடமாயிருத்தலாலும், ஆற்றிடைக்குறை [நதியினிடையேஉயர்ந்த திடர்] யாதலாலும், திருவரங்கமென்னும் பெயர் வந்த தெனினுமாம்.

திரு என்பதற்கு - மேன்மைபான என்று பொருள்கொண்டால் திருவரங்கம் என்ற தொடர்-பண்புத்தொகையும், மேன்மையையுடைய என்று பொருள்கொண்டால் இரண்டாம்வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்க தொகையுமாம். அரங்கத்தந்தாதி யென்ற தொடர் - அரங்கத்தினது சம்பந்தமான அந்தாதி யென்று விரித்து அரங்கத்தின்விஷயமான பிரபந்தமென்று பொருள்கொண்டு ஆறும்வேற்றுமைத்தொகையாகவும், அரங்கத்தைப்பற்றிய அந்தாதி யென்றுவிரித்துப் பொருள்கொண்டு இரண்டாம்வேற்றுமையுருபும்பொருளுந்தொக்கதொகையாகவும் உரைக்கத்தக்கது; அரங்கத்தின்மேற் பாடிய அந்தாதியென்று விரித்துப் பொருள்கொண்டு ஏழனுருபும்பயனுந்தொக்கதொகை யென்பாரும் உளர். திருவரங்கம் என்ற தொடரில், வகரவொற்று - உடம்படுமெய்; அரங்கத்தந்தாதி யென்ற தொடரில், அத்துச்சாரியையின் முதல்அகரம், மவ்வீறுஒற்றழிந்து நின்ற அகரத்தின் முன் கெட்டது.

அந்தாதி - அந்தத்தை ஆதியாக வுடையது; அன்மொழித்தொகை; வடமொழித்தொடர், தீர்க்கசந்தி: அந்த ஆதி எனப் பிரிக்க. அந்தாதியாவது - முன்நின்றசெய்யுளின் ஈற்றி லுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ் செய்யுளின் முதலாக அமையும்படி

* இராமபிரான்,திருவவதாரத்தைமுடித்துக்கொண்டு தன்னடிச்சோதிக்குஎழுந்தருளும்போது, வந்து தன்னைவணங்கித் தனது பிரிவை யாற்றமாட்டாதுநின்ற விபீஷணனுக்கு இக்ஷ்வாகுகுலதெய்வமும் தனதுதிருவாராதனமூர்த்தியுமான திருவரங்கநாதனைத் தந்தருளின னென வரலாறு கூறுதலு முண்டு.

பாவேது; இங்ஙனம் பாடும் நூலினது ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல், மண்டலித்த லெனப்படும். இது, தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றும். பதிற்றந்தாதி, நூற்றந்தாதி என்ற வகைகளில் இந்நூல், நூற்றந்தாதியாம்; அதாவது - நூறு வெண்பாவினாலேனும், நூறுகட்டளைக்கலித்துறையினாலேனும் அந்தாதித்தொடையாற் கூறுவது.

“முதனூல் கருத்தன் அளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே” என்றுகூறப்படுகின்ற நூற்பெயர்வகைகளுள் நுதலிய பொருளினாலும் தன்மையினாலும் பெயர்பெற்றது இந்நூ லெனஅறிக; (நுதலியபொருள்-நூலிற் கூறப்பட்ட விஷயம். தன்மை - நூலின் இயல்பு.) இங்கு ‘அரங்கம்’ என்பது - அத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானைக் குறித்தது; இலக்கணை. இனி, “திருவாளன்திருப்பதிமேல் திருவரங்கத் தமிழ்மாலை விட்டுசித்தன் விரித்தன” என்று பெரியாழ்வார் திருமொழியிற் கூறியபடி திருவரங்கத்தின் விஷயமான தமிழ்த்தொடை யாதல்பற்றி ‘திருவரங்கத்தந்தாதி’ எனவும் தகும்; (மேற்காட்டிய அருளிச் செயலின் வியாக்கியானத்தில் ‘தேஶ்யரான பெருமாளைச் சொன்னதெல்லாம் உபஸர்ஜநகோடியிலேயாய், அத்தேசமேயாய்த்து இத்திருமொழிக்கு விஷயம்’ என்றது காண்க.) எனவே, திருவரங்கத்தைப்பற்றிப் பாடியதொரு பிரபந்தமென்பது பொருளும், திருவரங்கத்திலெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானைக் குறித்துப் பாடியதொரு நூலென்பது கருத்து மாகலாம். ‘கோயிலந்தாதி’ என்பதற்கும் இங்ஙனமே கொள்க.

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் “விருந்தே தானும், புதுவது கிளந்த யாப்பின் மேற்றே” என்பதனால், ‘விருந்துதானும், பழங்கதை மேலதன்றிப் புதிதாகத் தாம்வேண்டியவாற்றால் தொடுக்கப்படுந் தொடர்நிலைமேலது’ என்று கூறினமையின், இந்நூல் அங்ஙனங்கூறிய விருந்தாமென்று உணர்க. அச்சூத்திரவுரையில் அந்தாதியும் கலம்பகமும் முதலாயின உதாரணங்காட்டப்பட்டுள்ளவாறுங் காண்க. இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார். இப்பிரபந்தம், தோத்திரரூபமானது.

இந்நூலிலுள்ள கலித்துறைகள் யாவும் யமக மென்னுஞ் சொல்லணியையுடையன வாதலால், இந்நூல், யமகவந்தாதியாம். யமகமாவது -பலஅடிகளிலாயினும் ஓரடியிற்பலவிடங்களிலாயினும் வந்தஎழுத்துத்தொடர்களே மீண்டும்வந்து பொருள்வேறுபடுவது; இது, தமிழில் மடக்கு என்னப்படும். இந்நூற்செய்யுள்களிலெல்லாம் நான்கடிகளிலும் முதலெழுத்துக்கள் சில ஒன்றிநின்று வெவ்வேறுபொருள்விளைத்தல்,இடையிட்டுவந்த முதல் முற்று மடக்கு எனப்படும்.

இந்நூல் - நூற்புறமாக முதலிற்கூறப்பட்ட காப்புச்செய்யுள் ஐந்தும், நூலினிறுதியிற் கூறப்பட்ட தற்சிறப்புப்பாயிரச்செய்யுள் ஒன்றும் தவிர, அந்தாதித்தொடையாலமைந்த நூறு கட்டளைக்கலித்துறைகளை யுடையது. சொற்றொடர்நிலைச்செய்யுள் பொருட்டொடர்நிலைச்செய்யுள் என்ற வகை

யில், இது, சொற்றொடர்நிலை; "செய்யு ளந்தாதி சொற்றொடர் நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும்.

தலத்தின் பெயர்—ரங்கம், ஸ்ரீரங்கம், திருவரங்கம், பெரியகோயில், கோயில் என்பன. பூலோகவைகுண்டம், போகமண்டபம், ஸ்வயம்வ்யக்த க்ஷேத்திரம் என்பவை - விசேஷநாமங்களாம். இது, ஸ்வயம்வ்யக்தக்ஷேத்ரம் எட்டில் ஒன்று.

இத்திருப்பதியின் எம்பெருமானது திருநாமம் — ஸ்ரீரங்கநாதன், பெரியபெருமாள், நம்பெருமாள், அழகியமணவாளன்.

கோலம்—பள்ளிகொண்ட திருக்கோலம். சேஷசயனம்.

சந்நிதி—தெற்குநோக்கியது.

நாச்சியார்—ஸ்ரீரங்கநாயகி, ஸ்ரீரங்கநாச்சியார்.

விமானம்—பிரணவாகாரவிமானம், வேதசிருங்கம்.

நதி—உபயகாவேரி. (தென்திருக்காவேரியும், வடதிருக்காவேரியும் [கொள்ளடம்.])

தீர்த்தம்—சந்திரபுஷ்கரிணி முதலிய நவதீர்த்தங்கள்.

தலவிருக்ஷம்—புன்னைமரம்.

பிரதியக்ஷம்—தர்மவர்மா, ரவிதர்மன், சந்திரன், காவேரி முதலானவர்களுக்குப் பிரதியக்ஷம்.

பாடல்—பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என்கிற ஆழ்வார்கள் பதின்மர், ஆண்டாள் இவர்கள் மங்களாசாஸநம்.

பஞ்சகாவியங்களுள் ஒன்றாகிய சிலப்பதிகாரத்தில் இந்தத்திவ்வியதேசமும் இதிலெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானும் "நீலமேக நெடும்பொற் குன்றத்துப், பால்விரிந் தகலாது படிந்தது போல, ஆயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறற், பாயற்பள்ளிப் பலர்தொழுதேத்த, விரிதிரைக்காவிரி வியன்பெருந் துருத்தி, திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்,......என் கண்காட்டென் றென்னுளங் கவற்ற, வந்தேன்" என்று பாராட்டிக் கூறப்பட்டிருத்தலுங் காண்க.

---

# திருவரங்கத்தந்தாதி.

## சிறப்புப்பாயிரம்.

மணவாளரவிந்தைமார்நோக்கவிம்மைமறுமையின்மா
மணவாளர்தம்பதம்வாய்த்திடுங்கோயிலில்வந்தவந்த
மணவாளர்பொற்றிருப்பாதாம்புயங்கட்குமாலையென
மணவாளர்சூடும்யமகவந்தாதியைவாசிமினே.

(இதன்பொருள்.) கோயிலில் வந்த - திருவரங்கத்தி லெழுந்தருளியுள்ள, அந்தம் மணவாளர் - அழகியமணவாளருடைய, பொன் திரு பாத அம்புயங்கட்கு - அழகிய திருவடித்தாமரைகட்கு (உரிய), மாலை என - மாலையாக, மணவாளர் சூடும் - அழகியமணவாளதாசர் சாத்திய, யமகம் அந்தாதியை- இந்த யமகவந்தாதிப் பிரபந்தத்தை, வாசிமின் - (நீங்கள் படியுங்கள்:) (இதனைப்படிப்பீராயின் உங்கட்கு),—இம்மை - இம்மையிலே, மணம் வாள் அரவிந்தைமார் நோக்க-வாசனையையும் ஒளியையுமுடைய செந்தாமரைமலரில் வசிக்கின்ற அஷ்டலக்ஷ்மிகளும் கருணையோடு பார்த்தருள,—மறுமையில் - மறுமையிலே, மா மணவாளர்தம் பதம் வாய்த்திடும் - திருமகள்கணவரான திருமாலினது ஸ்தானம் [ஸ்ரீவைகுண்டம்] தவறாது கிடைக்கும்; (என்றவாறு.)—ஏ - ஈற்றசை.

இது,உலகத்தாரை விளித்து முன்னிலைப்படுத்திஅவர்கட்கு நல்லறிவை உபதேசிக்கிற வாய்பாட்டினால் நூற்சிறப்பையும் பயனையும் வெளியிட்டது. திருவரங்கத்தந்தாதியைப் படிப்பவர்கட்கு இம்மையில் அஷ்டலக்ஷ்மீகடாக்ஷத்தால் சகலஐசுவரியங்களும் குறைவற உண்டாவதுடன் மறுமையில் மீளாவுலகமாகிய பரமபதத்து நிரதிசயப்பேரின்பமும் எளிதிற் கிடைக்குமெனப் பயன்கூறியவாறும். அஷ்டலக்ஷ்மிகள் - ஆதிலக்ஷ்மி, கஜலக்ஷ்மி, தாலக்ஷ்மி, தானியலக்ஷ்மி, வீரலக்ஷ்மி, விஜயலக்ஷ்மி, சந்தானலக்ஷ்மி, சௌபாக்கியலக்ஷ்மி என்பர்.

ஸ்ரீரங்கத்துக்கு அருகி லுள்ளதும் நிசுலாபுரியென்னும் மறுபெயரையுடையதுமான உறையூரை இராசதானியாகக்கொண்டு அதில் வீற்றிருந்து அரசாளுகிற தர்மவர்மாவின் வம்சத்தவனான நந்தசோழன் வெகுகாலம்பிள்ளையில்லாமலிருந்து ஸ்ரீரங்கநாதனைக்குறித்துத் தவஞ்செய்து அத்தவத்தின் பயனாய் ஒருநாள் தாமரையோடையில் ஒருதாமரைமலரில் ஒருபெண்குழந்தையிருக்கக்கண்டு களித்து அக்குழந்தையை எடுத்துக்கொண்டுவந்து கமலவல்லி யென்று திருநாமஞ்சாத்தி வளர்த்துவருகையில், மங்கைப்பருவமடைந்த அந்தப்பெண் தோழியருடன் உத்தியானவனத்தில் மலர்கொய்து விளையாடிவரும்போது, திருமகளின்அம்சமான அப்பெண்மணியை மணம்புரிந்து ஏற்றுக்கொள்ள விரும்பிய ஸ்ரீரங்கநாதன் அதிசுந்தர மூர்த்தியாய் விபவாவதாரமாகக் குதிரைமீதுஏறி வேட்டையாடச்செல்லுகிற வியாஜத்

தால் அவளெதிரில் எழுந்தருளிக் காட்சிகொடுக்க, மிகஅழகிய அப்பெருமானைக் கண்டு கமலவல்லி மோகங்கொள்ள, அதனையுணர்ந்த நந்தசோழன் அந்தக்கன்னிகையை ரங்கநாதனுக்கு மிக்கசிறப்போடு மணம்புரிவித்தான்; இங்ஙனம் அழகியவடிவங்கொண்டுமணம்பெற்றுக்கலியாணக்கோலத்தோடு விளங்கியதனால், ஸ்ரீரங்கநாதனுக்கு அழகியமணவாளனென்று ஒருதிருநாமமாயிற்று; (மணம் - விவாகம்; அதனைஆள்பவன் [பெற்றவன்] - மணவாளன்.) முன்னிலும்பின்னழகியபெருமாள், ஆபரணத்துக்குஅழகுகொடுக்கும் பெருமாள் என்ற திருநாமங்களும் உண்டு. "எழிலுடையவம்மனைமீர் என் அரங்கத்துஇன்னமுதர், குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழி, லெழுகமலப்பூவழகர் எம்மானார் என்னுடைய, கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே" என்ற நாச்சியார்திருமொழியையுங் காண்க. அழகியமணவாள னென்ற பொருளில் 'அந்தமணவாளன்' என்றார்; (அந்தம் - அழகு). அந்த என அகரச்சுட்டின் மரூஉவாக எடுத்து, அப்படிப்பட்ட [அதாவது - அதிப்பிரசித்திபெற்ற] என்றும் உரைக்கலாம்; உலகறிசுட்டு.

கோ + இல் = கோயில்; பொது விதிப்படி கோவில்என வகரவுடம்படுமெய் பெறாது யகரம்பெற்று வழங்குவது, இலக்கணப்போலி. பெருமானுடையஇருப்பிடமென ஆறும்வேற்றுமைத்தொகையாகவாவது, தலைமையான இடமெனப் பண்புத்தொகையாகவாவது விரியும். (கோ - தலைவன், தலைமை; இல் - இடம், வீடு.) இது தேவாலயங்கட்கெல்லாம்பொதுப்பெயராயினும், நூற்றெட்டுத் திருமால்திருப்பதிகளுள் திருவரங்கம் தலைமைபெற்ற தாதலால், இதனை 'கோயில்' எனச் சிறப்பாகவழங்குவது, வைஷ்ணவசம்பிரதாயம்; இது, காரணவிடுகுறியின்பாற்படும். (சிவதலங்களுட் சிறந்ததான சிதம்பரத்தை 'கோயில்' என வழங்குவர் சைவர்.) ரங்கநாதன் ஆதியில் பிரமனது திருவாராதநத்திருவுருவமாய்ச் சத்தியலோகத்திலே இருந்து பின்பு* இக்ஷ்வாகுகுலதநமாய்த் திருவயோத்தியி லெழுந்தருளியிருந்து, பின்பு விபீஷணாழ்வானால் இவ்விடத்து வந்தமை தோன்ற, 'கோயிலில் வந்த அந்தமணவாளர்' என்றார்.

பொன் - பொன்போலருமையாகப் பாராட்டத்தக்க தெனினுமாம். பாதாம்புஜம் - தீர்க்கசந்தி பெற்ற வடமொழித்தொடர்; திருவடியாகிய தாமரைக்கு என உருவகப்பொருள்பட 'பாதாம்புயங்கட்கு' எனக் கூறினும், மேல்வரும் 'மாலையெனச்சூடும்'என்றமுடிக்குஞ்சொல்லுக்கு ஏற்ப, தாமரைபோன்றதிருவடிக்கு என முன்பின்னாகத்தொக்க உவமைத்தொகையாகக் கருத்துக்கொள்ளுதலே சிறப்பாமென்க: உருவகத்துக்குஏற்ற தொடர்ச்சிச்சொல் இல்லாமையின். திருவடிக்குத் தாமரைமலர் உவமை, செம்மை மென்மை யழகுகட்கு. அம்புஜம் - நீரில்தோன்றுவதெனப் பொருள்படும்; தாமரைக்குக் காரணவிடுகுறி: மலர்க்கு முதலாகுபெயர். (அம்பு-நீர்.) அம்புயங்கட்குமாலையென-நான்காம்வேற்றுமை, தகுதிப்பொருளது; அழகியமணவாளனது திருவடிகளின் மகிமைக்கும் மென்மைக்கும் ஏற்ற சிறப்பும் மென்மையும் வாய்ந்தது இந்நூலென்றகருத்து இதனாற்போதரும். பாதாம்புயங்களிற் சூடின எனக் கொள்ளுதலும் ஒன்று; உருபுமயக்கம். பெருமானது திருவடி

களிற் சூட்டும் பூமாலைபோன்ற பாமாலை யென்க; ("அடிசூட்டலாகுமந்தாமம்," "செய்யசுடராழியானடிக்கேசூட்டினேன்சொன்மாலை," "சுற்றினம் மேய்த்த கழலிணைக்கீழ்-உற்ற, திருமாலை பாடுஞ் சீர்"என்றார் பெரியாரும்.)

வாள் - ஒளி; உரிச்சொல். அரவிந்தம் - தாமரை; வடசொல்: அதில் வாழ்பவள், அரவிந்தை: அதன்மேல், மார் - பலர்பால்விகுதி. இம்மை - இப்பிறப்பு, மறுமை - இறந்தபின்வரும் நிலை. மாமணவாளர்- ஸ்ரீயஃபதி.மா, பதம் - வடசொற்கள். "தேனார்கமலத்திருமாமகள்கொழுநன், தானேவைகுந்தந்தரும்" என்றபடி பிராட்டியின் புருஷகாரபலத்தாலே பெருமான் தனது உலகத்தைத் தந்தருள்வ னென்பது தோன்ற, 'மாமணவாளர்தம்பதம் வாய்த்திடும்' என்றார். மணவாளர் என்றது - மூன்றடியிலும், உயர்வுப்பன்மை. ஒருபெயரின் ஒருபகுதியைக் கொண்டு அப்பெயர்முழுதையுங்குறிப்பதொரு மரபுபற்றி, அழகியமணவாளதாசரை 'மணவாளர்' என்றார்; இதனை வடநூலார் 'நாமைகதேசேநாமக்ரஹணம்' என்பர். இரண்டாமடியில், தம்-சாரியை. வாய்த்திடும், இடு - தேற்றமுணர்த்தும் துணைவினை.

'மணவாளர்' என ஆக்கியோன் பெயரும், 'யமகவந்தாதி' என நூற்பெயரும், 'கோயிலில் வந்த அந்தமணவாளர் பொற்றிருப்பாதாம்புயங்கட்கு மாலையெனச்சூடும்'என நுதலியபொருளும், 'மணவாளரவிந்தைமார்நோக்க விம்மை மறுமையில் மாமணவாளர்தம்பதம் வாய்த்திடும்' எனப் பயனும் பெறப்பட்டன. "ஆக்கியோன்பெயரேவழியேயெல்லை, நூற்பெயர்யாப்பே நுதலியபொருளே, கேட்போர் பயனோடா யெண்பொருளும், வாய்ப்பக்காட்டல் பாயிரத்தியல்பே" என்ற சிறப்புப்பாயிரத்திலக்கணத்தில் மற்றவை குறிப்பிக்கப்படுவன உய்த்துணர்ந்துகொள்க.

இக்கவி, பிறன்கூறியது; அபியுக்தரிலொருவர்செய்த தென்பர்: இது, வைஷ்ணவசம்பிரதாயத்தில்'தனியன்'எனப்படும்;(நூலுள்அடங்காதுதனியே பாயிரமாய் நிற்றல் பற்றியது,அப்பெயர்; 'அன்'விகுதி-உயர்வுப்பொருளது.)

---

## காப்பு.

காப்பு - காத்தல்; அது, இங்கு, காக்கின்ற கடவுளின் விஷயமான வணக்கத்தைக் குறிக்கும்: ஆகவே, கவி தமக்குநேரிடத்தக்க இடையூறுகளை நீக்கித் தமது எண்ணத்தை முடிக்கவல்ல தலைமைப்பொருளின் விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது கருத்து.

[விஷ்வக்ஸேநரும், பஞ்சாயுதமும்.]

க. ஓராழிவெய்யவன்சூழுலகேழுவந்தேத்தரங்கர்
காராழிவண்ணப்பெருமாளந்தாதிக்குக்காப்புரைக்கிற்
சீராழியங்கையிற்பொற்பிரம்பேந்தியசேனையர்கோன்
கூராழிசங்கந்திருக்கதைநாந்தகங்கோதண்டமே.

(இ - ள்.) ஓர் ஆழி - ஒற்றைச்சக்கரங்கோத்த தேரையுடைய, வெய்யவன் - சூரியனால், சூழ் - சூழ்ந்துவரப்பெற்ற, உலகு ஏழ் - ஏழுதீவுகளாகவுள்ள பூமியி லிருக்கிற சனங்கள், உவந்து ஏத்து - மனமகிழ்ந்து துதிக்கப்

பெற்ற, அரங்கர் - திருவரங்கமென்னுந்திருப்பதியில்எழுந்தருளியிருக்கின்றவரும்,கார் ஆழி வண்ணம் பெருமாள் -கரியகடல்போன்ற திருநிறமுடைய நம்பெருமாளுமாகியஎம்பெருமான்விஷயமாக(யான்பாடுகிற),அந்தாதிக்கு-அந்தாதியென்னும்பிரபந்தம்இடையூறின்றிஇனிதுநிறைவேறுதற்கு,காப்பு-பாதுகாவலாகும் பொருள்கள்,—உரைக்கின் - (இன்னவையென்று) சொல்லுமிடத்து,—சீர் ஆழி அம் கையில் பொன்பிரம்புஏந்திய சேனையர்கோன்-சிறந்தமோதிரத்தை யணிந்த அழகியகையிற் பொன்மயமானபிரம்பை[செங்கோலைத்] தரித்த சேனைமுதலியாரும், கூர் ஆழி சங்கம் திரு கதை நாந்தகம் கோதண்டமே - கூரிய சக்கரமும் சங்கமும் அழகிய கதையும் வாளும் வில்லுமாகிய (திருமாலின்) பஞ்சாயுதங்களும்; (எ - று.)

"சிறைப்பறவை புறங்காப்பச் சேனையர்கோன் பணிகேட்ப, நறைப்படலைத்துழாய்மார்பிஞாயிறுபோன்மணிவிளங்க, அரியதானவர்க்கடிந்த ஐம்படையும்புடைதயங்க, . .....ஆயிரவாய்ப்பாம்பணைமேலறிதுயிலினிதமர்ந்தோய்", "கோலார்ந்தநெடுஞ்சார்ங்கம்கூனற்சங்கம்கொலையாழிகொடுந்தண்டு கொற்றவொள்வாள்,காலார்ந்தகதிக்கருடனென்னும்வென்றிக்கடும்பறவை யிவையனைத்தும் புறஞ்சூழ்காப்பச்,சேலார்ந்தநெடுங்கழனிசோலைசூழ்ந்த திருவரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளு, மாலோன்" என்றபடி எம்பெருமானது திருவுள்ளக்கருத்தின்படி அவனுக்குக் குற்றேவல்செய்யும் பரிசனங்களும் எப்பொழுதும் அவனருகில் விடாதுநின்று அவனது திருமேனிக்குப் பாதுகாவல்செய்பவருமான ஸ்ரீசேனைமுதலியாரும், திவ்விய பஞ்சாயுதமூர்த்திகளுமே, அப்பெருமானது தோத்திரமாகத் தாம்செய்யும் அந்தாதிக்கு நேரும் இடையூறுகளை நீக்கிப் பாதுகாப்பரென்று கொண்டு அவர்களை இவ்வந்தாதிக்குக் காப்பு என்றார்.

ஸ்ரீவைஷ்ணவசமயத்தவரான இந்நூலாசிரியரால் கூறப்பட்ட இக்காப்புச்செய்யுள் அந்தஸ்ரீமகாவிஷ்ணுவினதுதொண்டர்கட்குத்தலைவரான சேனைமுதலியாரையும்,அத்திருமாலின் ஐம்படையையுங் குறித்ததாதலால், வழிபடுகடவுள்வணக்கம் எற்புடைக்கடவுள்வணக்கம் என்ற வகையிரண்டில் வழிபடுகடவுள்வணக்கமாம். அடுத்த நான்குசெய்யுள்களும் இவ்வாறே. தம் தமதுமதத்துக்கு உரிய கடவுளை வணங்குதலேயன்றி அக்கடவுளினடியார்களை வணங்குதலும் வழிபடுகடவுள்வணக்கத்தின்பாற்படுமென அறிக.

சேனையர்கோன்-பரமபதத்திலுள்ள நித்தியமுக்தர்களின் திரளுக்கும் மற்றவுலகங்களிலுள்ள திருமாலடியார்கட்கும் தலைவராதலாற்சேனைமுதலியாரென்றும் சேனைத்தலைவரென்றும் சொல்லப்படுகிற விஷ்வக்ஸேநர். தம்மைச்சரணமடைந்தவர் தொடங்குந் தொழில்கட்கு வரும் விக்கினங்களை [இடையூறுகளை]ப் போக்குதலாலும், தம்மையடையாது அகங்கரித்தவர்கட்கு விக்கினங்களை ஆக்குதலாலும் விக்நேசுவரரென்று பெயர்பெற்றவரான விநாயகர் இவரதுஅம்சத்தைச் சிறிதுபெற்றவரே யாதலால், இவரை முதற்காப்பாகக் கொள்ளுதல் சாலும். "ஆளி லமர ரரக்கேசர்சேனைக் கணுகுந்தொறுங், கோளில் திரளை விலக்கும் பிரம்பின் கொனை படலால், தோளிலடித்தழும்புண்டச்சுரர்க்கு"என்றபடிதிரள்விலக்குதற்பொருட்டும்,

எம்பெருமானது ஆணையைத் தான்கொண்டு நடத்துதற்கு அறிகுறியாகவும் இவர் கையிலே பொற்செங்கோலேந்தியிருப்பர். இவர்கையில் 'ஆழி' என்றது, எம்பெருமானிடம் இவர்பெற்றுள்ள அதிகாரத்துக்கு அறிகுறியான முத்திரைமோதிரத்தை. திருமாலின் பஞ்சாயுதங்களுள் சக்கரம் - சுதர்சநமென்றும், சங்கம் - பாஞ்சஜந்ய மென்றும், கதை - கௌமோதகி யென்றும், வாள் - நந்தக மென்றும், வில் - சார்ங்க மென்றும் பெயர்பெறும். இவை துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநஞ் செய்யுங் கருவியாய்ச் சிறத்தலால், இவற்றைக் காப்பாகக் கொண்டார்.

சூரியனது தேர் சம்வற்சரரூபமான ஒற்றைச் சக்கரமுடைய தென்று புராணம் கூறும். வெய்யவன் - உஷ்ணகிரணமுடையவன்; வெம்மையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர். இங்கு 'உலகேழ்' என்றது, ஜம்பு பிலக்ஷம் குசம் கிரௌஞ்சம் சாகம் சால்மலி புஷ்கரம் என்ற ஏழுதீவுகளை. இங்கு 'உலகு' என்றது, உயிர்களின்மேல் நிற்கும். காராழிவண்ணம் - மேகமும் கடலும் போன்ற திருநிறமெனினுமாம். பெருமாள் = பெருமான், பெருமையையுடையவர்; இதில், பெருமை யென்ற பகுதி ஈற்றுஐகாரம்மாத்திரம் கெட்டு, பெரும் என நின்றது; 'ஆன்'என்ற ஆண்பால்விகுதி'ஆள்'என ஈறு திரிந்தது; 'ஆள்' என்ற பெண்பால்விகுதியே சிறுபான்மை ஆண்பாலுக்கு வந்ததென்றலும் ஒன்று: அன்றி, பெருமையைஆள்பவனெனக்கொண்டால் 'ஆள்'என்ற வினைப்பகுதி கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்துகெட்ட தென வேண்டும். பெருமாளந்தாதி என்ற தொடரில் தொக்குநின்ற ஆறும்வேற்றுமையுருபின் பொருளாகிய சம்பந்தம் - விஷயமாகவுடைமை; விஷ்ணுபுராணம், விநாயகரகவல் என்பவற்றிற் போல. நாந்தகம் - நந்தக மென்பதன் விகாரம். ஆழி என்ற சொல் - தேர்ச்சக்கரம் மோதிரம் சக்கராயுதம் என்ற பொருள்களில் வட்டவடிவுடைய தென்றும், கடலென்றபொருளில் ஆழ்ந்துள்ள தென்றும் காரணப்பொருள்படும்; இனி, கடலென்றபொருளில் பிரளயகாலத்து உலகங்களை அழிப்ப தென்றும், சக்கராயுதமென்ற பொருளில் பகைவர்களையழிப்ப தென்றும் கொள்ளலு மொன்று. 'ஓர்ஆழி' என்றது - ஒற்றைச்சக்கரமுடைய தேருக்கு, பண்புத்தொகையன்மொழி.

இச்செய்யுளில் ஆழிஎன்கிற ஒருசொல் அடிதோறும் வேறுபொருளில் வந்தது, சொற்பின்வருநிலையணி. இப்பொருளணியோடு திரிபு என்னும் சொல்லணியும் அமைந்திருத்தல் காண்க. (திரிபாவது - ஒவ்வோரடியிலும் முதலெழுத்துமாத்திரம் வேறுபட்டிருக்க, இரண்டுமுதலியபலஎழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபடுவது.) இவ்விரண்டணியும் பேதப்படாமற் கலந்துவந்தது, கலவையணி. (க)

[பன்னிரண்டுஆழ்வார்களின் அருளிச்செயல்.]

உ. வையம்புகழ்பொய்கைபேய்பூதன்மாறன்மதுரகவி
ஐயன்மழிசைமன்கோழியர்கோனருட்பாண்பெருமாண்
மெய்யன்பர்தாற்பொடிவிண்டுசித்தன்வியன்கோதைவெற்றி
செய்யங்கைவேற்கலியன்றமிழ்வேதநிலைநிற்கவே.

(இ - ள்.) வையம் புகழ் - உலகத்தவர்களாற்புகழப்படுகிற, பொய்கை-பொய்கையாழ்வாரும், பேய்-பேயாழ்வாரும், பூதன்-பூதத்தாழ்வாரும், மாறன்-நம்மாழ்வாரும், மதுரகவி ஐயன்-மதுரகவியாழ்வாரும், மழிசை மன்-திருமழிசையாழ்வாரும், கோழியர்கோன் - குலசேகராழ்வாரும், அருள் பாண் பெருமாள் - (நம்பெருமாளின்) விசேஷகடாக்ஷம் பெற்ற திருப்பாணாழ்வாரும், மெய் அன்பர் கால் பொடி-தொண்டரடிப்பொடியாழ்வாரும், விண்டு சித்தன்-பெரியாழ்வாரும், வியன் கோதை-பெருமையையுடைய ஆண்டாளும், வெற்றி நெய் வேல் அம் கை கலியன்-சயம்பொருந்தியதும்நெய்பூசியதுமான வேலாயுதத்தை யேந்திய அழகிய கையையுடைய திருமங்கையாழ்வாரும் ஆகிய பன்னிரண்டுஆழ்வார்களால் அருளிச்செய்யப்பட்ட, தமிழ் வேதம் - திராவிடவேதமாகிய (நாலாயிர) திவ்வியப்பிரபந்தங்கள், நிலை நிற்க - (எக்காலத்தும் அழிவின்றி உலகத்தில்)நிலைபெற்றிருக்கக்கடவன; (எ - று.)

ஆசீர்வாதம்[வாழ்த்து], நமஸ்காரம்[வணக்கம்],வஸ்துநிர்த்தேசம்[தலைமைப்பொருளுரைத்தல்] என்ற மூவகை மங்களங்களுள், இது வாழ்த்தாம். ஆழ்வார்களால் வெளியிடப்பட்ட திவ்வியப்பிரபந்தங்களின் சொற்பொருட் கருத்துக்கள் அமைய அப்பிரபந்தங்கள் போலச் செய்யப்படுவது இத்திருவரங்கத்தந்தாதி யாதலால், இந்நூலின் இக்காப்புச்செய்யுளை ஏற்புடைக்கடவுள்வாழ்த் தென்றும் கொள்ளலாம்.

வையம் - இடவாகுபெயர். 'வையம்புகழ்' என்ற அடைமொழியை எல்லாஆழ்வார்கட்கும் கூட்டலாம். இனி, வையம் புகழ் பொய்கை - "வையந் தகளியா" என்றுதொடங்கிப் பிரபந்தம்பாடி(எம்பெருமானை)த் துதித்த பொய்கையாழ்வா ரெனினுமாம்;அவ்வுரைக்கு,வையம்என்பது-அவர்பாடிய முதல்திருவந்தாதிக்கு முதற்குறிப்பு. "பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை, யையனருள்மாறன்சேரலர்கோன் - துய்யபட்ட, நாதனன்பர் தாட்டூளி நற்பாணனன்கலியன், ஈதிவர்தோற்றத்தடைவாமிங்கு" என்றபடி திருவவதாரக்கிரமத்தால் பொய்கையார் பூதத்தார் பேயார் மழிசைப்பிரான் மாறன் குலசேகரர் பெரியாழ்வார் தொண்டரடிப்பொடி திருப்பாணர் திருமங்கையாழ்வார் என முறைப்படுத்தி, பெரியாழ்வாரது திருமகளான ஆண்டாளையும் நம்மாழ்வாரது சிஷ்யரான மதுரகவியையும் ஈற்றில் வைத்தாயினும், ஆண்டாளைப் பெரியாழ்வாரையடுத்தும் மதுரகவியை நம்மாழ்வாரையடுத்தும் வைத்தாயினும் கூறுவதே முறையாயினும், இங்குச் செய்யுள் நோக்கி முறைபிறழ வைத்தார்.

பொய்கை-குளம்; பொற்றாமரைப் பொய்கையில் திருவவதரித்த ஆழ்வாரை 'பொய்கை' என்றது, இடவாகுபெயர். இனி, உவமவாகுபெயராய், ஊர்நடுவேயுள்ள குளம்போல எல்லார்க்கும் எளிதிற் பயன்கொடுப்பவ ரென்றுமாம். பேய் - உவமையாகுபெயர்: உலகத்தவராற் பேய்போலஎண்ணப் படுபவர்;அல்லது, அவர்களைத் தாம் பேய்போல எண்ணுபவர்: "பேயரேயெனக்கியாவரும் யானுமோர், பேயனே யெவர்க்கும் இதுபேசியென், ஆயனேயரங்கா வென்றழைக்கின்றேன், பேயனாயொழிந்தே னெம்பிரானுக்கே" என்ற கொள்கைப்படி, இவர் பகவத்பக்தியாற் பரவசப்பட்டு, நெஞ்சழிதல்

கண்சுழலுதல் அழுதல் சிரித்தல் தொழுதல் மகிழ்தல் ஆடுதல் பாடுதல் அலறுதல் முதலிய செய்கைகளையே எப்பொழுதும் கொண்டு, காண்பவர் பேய்பிடித்தவரென்னும்படி யிருந்ததனால், பேயாழ்வாரென்று பெயர்பெற்றனர். பூதன்-எம்பெருமானையறிதலாலே தமது உள்ளுகையை யுடையவராதலால், இவர்க்கு, பூதனென்று திருநாமம்: "பூஸத்தாயாம்" என்றபடி ஸத்தையென்னும் பொருள்கொண்ட பூ என்னும் வடமொழி வினையடியினின்று பிறந்த பெயராதலால், பூதன் என்பதற்கு - ஸத்தை [உள்ளவனாயிருக்கை] பெறுகின்றவனென்று பொருளாயிற்று. இனி, இத்திருநாமத்துக்கு - உலகத்தவரோடு சேராமையாற் பூதம்போன்றவரென்று பொருளுரைத்தல் சம்பிரதாயமன்று. நம்மாழ்வார்க்கு அநேகம் திருநாமங்கள் இருப்பினும் அவற்றில் 'மாறன்' என்பது, முதலில் தந்தையார் இட்ட குழந்தைப்பெயராதலால் அதில் ஈடுபட்டு அப்பெயரினாற் குறித்தார். பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பாலுண்ணுதல் முதலியன செய்யாது உலகநடைக்கு மாறாயிருந்ததனால் சடகோபர்க்கு 'மாறன்' என்று திருநாமமாயிற்று. வலியவினைகட்கு மாறாக இருத்தலாலும், அந்நியமதஸ்தர்களை அடக்கி அவர்கட்குச்சத்துருவாயிருத்தலாலும், பாண்டியநாட்டில் தலைமையாகத் தோன்றியதனாலும் வந்த பெயரென்றலும் உண்டு. மதுரகவி - இனிமையான பாடல் பாடுபவர். மழிசைமன்-திருமழிசையென்று வழங்குகின்ற மஹீஸாரக்ஷேத்திரத்தில் திருவவதரித்த பெரியோன்; இது, தொண்டைநாட்டி லுள்ளது. கோழியர்கோன் - கோழியென்னும்ஒருபெயருடைய உறையூரி லுள்ளார்க்குத் தலைவர்; உறையூர், சோழநாட்டிராசதானி. சேரநாட்டரசரான குலசேகராழ்வார் திக்விஜயஞ்செய்தபோது சோழராசனை வென்றுகீழ்ப்படுத்தி அந்நாட்டுக்குத்தலைமைபூண்டதனால், 'கோழியர்கோன்' எனப்பட்டனர். "கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்றதனால், இவர் தமிழ்நாடுமூன்றுக்குந் தலைமைபூண்டமை விளங்கும். முற்காலத்து ஒருகோழி நிலமுக்கியத்தால் அயல்நாட்டியானையோடு பொருது அதனைப் போர்தொலைத்தமை கண்டு அந்நிலத்துச்செய்த நகர மாதலின், 'கோழி' என்று உறையூருக்குப் பெயராயிற்று. இனி, குலசேகராழ்வார் அரசாட்சிசெய்த இடமான கோழிக்கூடு என்ற சேரநாட்டு இராசதானி (நாமைகதேசேநாமக்கிரகணத்தால்) கோழியெனப்பட்ட தென்றலு மொன்று.

பாண்பெருமாள் - வீணையும் கையுமாய்ப் பெரிய பெருமான் திருவடிக்கீழே நிரந்தரசேவை பண்ணிக்கொண்டு பாட்டுப் பாடிப் புகழ்பவர்; பாண் - இசைப்பாட்டு: அதற்குத் தலைவர், பாண்பெருமாள். இவர் நம்பெரியபெருமாளுடைய திருமேனியழகில் ஈடுபட்டு அதனை அடிமுதல் முடிவரை அநுபவித்து அப்பெருமாளாற் கொண்டாடி யழைக்கப்பெற்று அப்பெருமாளின் திருவடிகளிலே ஐக்கியமடைந்ததனால், 'பெருமாள்' என்று சிறப்பித்துக் கூறப்படுவர்; "சீரிய நான்மறைச் செம்பொருள் செந்தமிழாலளித்த, பாரியலும் புகழ்ப் பாண்பெருமாள்", "காண்பனவு முரைப்பனவு மற்றொன்றின்றிக் கண்ணனையே கண்டுரைத்தகடியகாதற், பாண்பெருமாள்" என்பனகாண்க. உறையூரில் அயோநிஜராய் நெற்பயிர்க்கதிரில் அவதரித்துப் பஞ்சமசாதியிற் பாணர்குலத்திற்பிறந்தானொருவன் வளர்க்கவளர்ந்து யாழ்

ப்பாடலில் தேர்ச்சிபெற்று மகாவிஷ்ணுபக்தரான இவர், ரங்கநாதனுக்குப் பாடல்திருத்தொண்டுசெய்யக் கருதி, தாம்தாழ்ந்தகுலத்தில்வளர்ந்தவராதலால் உபயகாவேரிமத்தியிலுள்ள ஸ்ரீரங்கதிவ்வியக்ஷேத்திரத்தில் அடியிடுதற்குந்துணியாமல் தென்திருக்காவேரியின்தென்கரையில் திருமுகத்துறைக்குஎதிரிலே யாழுங்கையுமாக நின்றுகொண்டு நம்பெருமாளைத்திசைநோக்கித் தொழுது இசைபாடி வருகையில், ஒருநாள், நம்பெருமாள் தமக்குத்தீர்த்தகைங்கரியஞ்செய்பவரான லோகசாரங்கமகாமுனியின்கனவில்தோன்றி 'நமக்கு நல்லன்பரான பாண்பெருமாளை இழிவாகநினையாமல் நீர் சென்று தோள்களில்எழுந்தருளப்பண்ணிவாரும்' என்றுநியமிக்க, அவரும் அங்ஙனமே சென்று பாணரை அரிதில்இசைவித்துத் தோளில் எடுத்துக்கொண்டு வந்துசேர்க்க, அம்முனிவாகனர் அணியரங்கனைச்சேவித்து அவனடியிலமர்ந்தனர்; இங்ஙனம் விசேஷகடாக்ஷம் பெற்றமைபற்றி, 'அருட்பாண்பெருமாள்' என்றார். ஐயன்-ஆர்யன்: பூசிக்கத்தக்கவன், அந்தணன்; ஆசாரியன்.

மெய்யன்பர்காற்பொடி - உள்ளும்புறமும் ஒத்துத் தொண்டுசெய்யும் மெய்யடியாரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவடித்தூளிபோல அவர்கட்குக் கீழ்ப்படிந்து அடிமைபூண்டு ஒழுகுபவராதலால், இவர்க்கு, தொண்டரடிப்பொடி யென்று திருநாமம். இளமைதொடங்கி எப்பொழுதும் தமது சித்தத்தை விஷ்ணுவினிடத்திலே செலுத்தி "மார்வமென்பதோர்கோயிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தை நாட்டி" என்னும்படி அப்பெருமானை மனத்திலேநிலைநிறுத்தித் தியானித்துவந்ததனால், விஷ்ணுசித்தர்என்று பெரியாழ்வார்க்குப் பெயர். கோதை-மாலை; எம்பெருமானுக்கு மாலைபோல மிகஇனியளா யிருப்பவள்; அல்லது, எம்பெருமானுக்குச் சமர்ப்பித்தற்காகத் தனதுதந்தையார் அமைத்துவைத்த பூமாலையை அவர்இல்லாதசமயத்தில் தான் சூடிக்கொண்டு அழகுபார்த்துப் பின்பு கொடுத்தவள்; அன்றி, எம்பெருமானுக்குப் பாமாலை சூட்டினவள். "ஆழ்வார்கள்தஞ் செயலை விஞ்சிநிற்குந் தன்மையளாய்ப்,பிஞ்சாய்ப்பழுத்தாளை யாண்டாளை"என்றபடி ஞானபக்தியாதிகளில் ஆழ்வார்களனைவரினும் மிகவிஞ்சியிருத்தல், மிக்க விளமையிலேயே பரமபக்தியை இயல்பாகக்கொண்டமை முதலியசிறப்புக்களை யுடைமையால், 'வியன்கோதை' என்றார்.

கலியன் - மிடுக்குடையவன். சோழராசன் கட்டளைப்படி மங்கை நாட்டுக்கு அரசராகிய இவ்வாழ்வார் குமுதவல்லி யென்னுங் கட்டழகியை மணஞ்செய்துகொள்ளும்பொருட்டு அவள்விருப்பத்தின்படி நாள்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்வித்து வருகையில், கைப்பொருள்முழுவதுஞ் செலவாய்விட்டதனால் வழிபறித்தாகிலும் பொருள் தேடிப் பாகவதததியாராதநத்தைத் தடையற நடத்தத் துணிந்து வழிச்செல்வோரைக் கொள்ளையடித்து வரும்போது ஸ்ரீமந்நாராயணன் இவரை யாட்கொள்ளக் கருதித் தான் ஒரு பிராமணவேடங்கொண்டு பலஅணிகலங்களைப்பூண்டு மணவாளக்கோலமாய் மனைவியுடனே இவரெதிரில்எழுந்தருள, இவர் கண்டு களித்து ஆயுதபாணியாய்ப் பரிவாரத்துடன் சென்று அவர்களை வளைந்து வஸ்திரஆபரணங்களையெல்லாம் அபகரிக்கையில், அம்மணமகன்காலிலணிந்துள்ள மோதிரமொன்றைக் கழற்றமுடியாமையால்

அதனையும் விடாமற் பற்களாலே கடித்துவாங்க, அம்மிடுக்கை நோக்கி எம்பெருமான், இவர்க்கு 'கலியன்' என்று ஒருபெயர்கூறினனென உணர்க. தமிழ்வேதம்-வேதங்களின் சாராம்சமானகருத்து அமையப் பாடிய தமிழ்ப் பிரபந்தங்கள். வியன் - உரிச்சொல்; வியல்என்பதன் விகாரமுமாம். நெய் வேல் - பகைவரது நிணம் தோய்ந்த வேலுமாம். (உ)

[குருபரம்பரை.]

ங. ஸ்ரீதரன்பூமகள்சேனையர்கோன்றென்குருகைப்பிரா
னாதமுனியுய்யக்கொண்டாரிராமர்நல்லாளவந்தா
ரேதமில்வண்மைப்பராங்குசதாசரெதித்தலைவர்
பாதமடைந்துய்ந்தவாழ்வானெம்பார்பட்டர்பற்றெமக்கே.

(இ - ள்.) ஸ்ரீதரன் - (பரமாசாரியனான) திருமாலும், பூமகள் - (அத்திருமாலினதுசிஷ்யையான) திருமகளும், சேனையர்கோன்-(அப்பெரியபிராட்டியாரின் சிஷ்யரான) சேனைமுதலியாரும், தென்குருகை பிரான்-(அச்சேனைத்தலைவரதுசிஷ்யரான) அழகியதிருக்குருகூரில் அவதரித்த தலைவராகிய நம்மாழ்வாரும், நாதமுனி - (அச்சடகோபரதுசிஷ்யரான) ஸ்ரீமந்நாதமுனிகளும், உய்யக்கொண்டார் - (அந்நாதமுனிகளின் சிஷ்யரான) உய்யக்கொண்டாரும், இராமர் - (அவருடைய சிஷ்யரான) ராமமிச்ரரென்னுந் திருநாமமுடைய மணக்கால்நம்பியும், நல் ஆளவந்தார்-(அவரது சிஷ்யரான ஞானங் கனிந்த)நலங்கொண்ட ஆளவந்தாரும், ஏதம் இல் வண்மை பராங்குசதாசர்-(அவர்சிஷ்யரான) குற்றமில்லாத உதாரகுணமுள்ள பெரியநம்பியும், எதி தலைவர் - (அவர்சிஷ்யரான) யதிராஜராகிய ஸ்ரீபாஷ்யகாரரும், பாதம் அடைந்து உய்ந்த ஆழ்வான் - (அவருடைய) திருவடிகளைச் சரணமடைந்து நல்வாழ்வுபெற்ற கூரத்தாழ்வானும், எம்பார் - (அவ்வாழ்வான்போலவே ஸ்ரீ பாஷ்யகாரர்க்கு அதிஅந்தரங்கசிஷ்யரான) எம்பாரும், பட்டர் - (கூரத் தாழ்வானுடைய குமாரரும் எம்பாரதுசிஷ்யருமான)பட்டரும்,(ஆகிய இவர்கள்), எமக்கு பற்று - எமக்குத் தஞ்சமாவர்; (எ - று.)

இந்நூலாசிரியர்க்குப் பட்டர் ஸ்வாசாரிய ராதலால்,குருபரம்பரையில் அவரளவே கூறலாயிற்று. ஸ்ரீதரன்முதல் பட்டர்ஈறாகச் சொல்லும் குருபரம்பரைக்கிரமத்தில்எதித்தலைவர்க்குப்பின்னேஎம்பார்க்குமுன்னேகூரத்தாழ்வானை வைக்கவேண்டிய அவசிய மில்லையாயினும்,ஸ்வாசாரியரான பட்டர்க்குக் கூரத்தாழ்வான் திருத்தமப்பனாராதல்பற்றியும், தம்குலமுதல்வரான திருவரங்கத்தமுதனார் ஸ்ரீபாஷ்யகாரருடையதிருவடிகளில்ஆச்ரயித்தற்குக் கூரத்தாழ்வான் புருஷகாரராய்நின்றமைபற்றியும், அவ்வாழ்வானை இடையிலே நிறுத்தினர். இது, இந்நூலாசிரியருடைய குலகுருபரம்பரை யென்க. அன்றியும், ஸ்ரீபாஷ்யகாரரது நியமனத்தின்படி சென்று பட்டர்க்கு த்வயோபதேசஞ்செய்துஆசாரியராகி அவர்க்குப் பஞ்சஸம்ஸ்காரங்களையும்திருவாய்மொழிமுதலிய கிரந்தங்களையும், அவற்றின் வியாக்கியானங்களையும் அருளினவர், எம்பார்: பட்டர்க்கு ஜாதகரும நாமகரண சௌளோபநயநாதிகளையும், ஸ்ரீபாஷ்யாதிகிரந்தங்களையும் அருளினவர், திருத்தந்தையாரான கூரத்தாழ்வான்; ஆதலால், ஆழ்வானையும் பட்டர்க்கு ஆசாரியரென்றல் ஒருவாறு அமையும்.

"மங்காதகீர்த்தியெதிராசர்பாதமணிமுடியாத், தங்காதலாற்றந்தலைச் சூடிக்கொண்டுதடங்கடல்சூழ், மங்காசினியைப்புரக்குமெட்டெட்டுடனையிரண்டாஞ், சிங்காதனக் குருராயர்தம்பேர்சொலிற் றீதறுமே" என்ற திருவேங்கடக்கலம்பகத்துக் காப்புச்செய்யுள் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. (௪)

[நம்மாழ்வார்.]

ரு. மாறன்பராங்கதிதந்தடியேனைமருட்பிறவி
மாறன்பரானகுழாத்துள்வைப்பான்றொல்லைவல்வினைக்கோர்
மாறன்பராமுகஞ்செய்யாமலென்கண்மலர்க்கண்வைத்த
மாறன்பராங்குசன்வாழ்கவென்னெஞ்சினும்வாக்கினுமே.

(இ - ள்.) மால்தன் - திருமாலினுடைய, பராங்கதி - பரமபதத்தை, தந்து - அளித்து, அடியேனை - தொண்டனான என்னை, மருள் பிறவி மாறு அன்பர் ஆன குழாத்துள் வைப்பான் - மயக்கமுள்ள பிறப்பு நீங்கப்பெறுகிற அடியார்களான முக்தர்களுடைய கூட்டத்தில் (ஒருவனாகச்) சேர்த்தருள விருப்பவனும், தொல்லை வல்வினைக்கு ஓர் மாறன் - அநாதியாய்வருகிறவலிய கருமங்கட்கு ஒரு சத்துருவாயுள்ளவனும், பராமுகம் செய்யாமல் என்கண் மலர் கண் வைத்த மாறன் பராங்குசன் - உபேக்ஷைசெய்யாமல் என்மீது தாமரைமலர்போன்ற (தனது) திருக்கண்பார்வையை வைத்தருளியவனும் மாறனென்றும் பராங்குசனென்றும் பெயர்களையுடையவனுமான ஸ்ரீசடகோபன், என் நெஞ்சினும் வாக்கினும் வாழ்க - எனது மனத்திலும் மொழியிலும் வாழக்கடவன்; (எ - று.)

இப்பிரபந்தம் இனிதுமுடிதற்பொருட்டு ஆழ்வார் எனது மனத்திலும் வாக்கிலும் இருந்து நல்லகருத்துக்களையும் வளமானசொற்களையும் தோற்றுவிப்பாராக வென வேண்டியவாறும். ஆழ்வாரை மனத்திற்கொண்டு தியானித்துச் சொல்லிற்கொண்டு துதிப்பேனென்ற கருத்தும் அமையும்.

மால்தன் பராங்கதி - விஷ்ணுலோகமாகிய ஸ்ரீவைகுண்டம். மருள் - விபரீதஞானம்; மருட் பிறவி - அவித்தையினாலாகிற பிறப்பு எனினுமாம்; "பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும், மருளானா மாணாப் பிறப்பு" என்றார் திருக்குறளிலும். கருமத்தை முற்றும்ஒழித்து மீளாவுலகமாகிய முத்தி பெற்றவர் மீண்டும்பிறத்தல் இல்லையாதலால், 'பிறவிமாறுஅன்பர்' எனப்பட்டனர். வல்வினைக்கு மாறன் - அழித்தற்குஅரியகருமங்களை எளிதில் அழிப்பவன். பராமுகம் = பராங்முகம், முகங்கொடாமை. என்கண், கண் - ஏழனுருபு. மலர்க்கண்வைத்தல் - அருள்நோக்கம். மிகக் களித்துக் கொழுத்துச் செருக்கித் திரிந்து எதிர்த்து வாதப்போர்க்கு வரும் பிறமதத்தவராகிய மதயானைகளைத் தமதுபிரபந்தங்களிற் கூறிய தத்வார்த்தங்களினால் அடக்கிக் கீழ்ப்படுத்தித் தம்வசத்தில்வைத்து நடத்துந் திறமுடையராய் அவற்றிற்கு மாவெட்டி யென்னுங் கருவிபோ லிருத்தலால், நம் ஆழ்வார்க்குப் பராங்குசனென்று திருநாமமாயிற் றென்க: பர அங்குசன் என்று பிரிக்க: பரர் - அயலார்; அங்குசம் - மாவெட்டி, தோட்டி, தந்து வைப்பானென முடியும். (ரு)

# திருவரங்கத்தந்தாதி.

## நூல்.

க. திருவரங்காவுறைமார்பாதிசைமுகன்சேவிப்பக்கந்
திருவரங்காதரித்தின்னிசைபாடத்திருக்கண்வளர்
திருவரங்காவுன்பழவடியேற்கருள்செய்யவெழுந்
திருவரங்காதலித்தேனுனக்கேதொண்டுசெய்வதற்கே.

(இ - ள்.) திரு - திருமகள், அரங்கு ஆ-தான் வசித்தற்குஉரிய இடமாக (க்கொண்டு), உறை - வசிக்கப்பெற்ற, மார்பா - திருமார்பையுடையவனே! திசைமுகன் சேவிப்ப - பிரமன் தரிசித்துவணங்கவும், கந்திருவர் அங்கு ஆதரித்து இன் இசை பாட - கந்தருவர்கள் அவ்வாறே [தரிசித்துவணங்கிப்] பக்திகொண்டு இனிமையான கீதம்பாடவும், திரு கண் வளர் திரு அரங்கா- திருவரங்கமென்னுந்திருப்பதியில்அழகாகப்பள்ளிகொண்டு யோகநித்திரை செய்தருள்பவனே ! உனக்கே தொண்டு செய்வதற்கு வரம் காதலித்தேன்- (யான்) உனக்கே அடிமைசெய்யுமாறு வரம்பெற ஆசைப்பட்டேன்: உன் பழ அடியேற்கு அருள் செய்ய எழுந்திரு - நினது பழமையான அடியவனு கிய எனக்குக் கருணைசெய்தற்கு எழுந்திருப்பாயாக ; (எ - று.)

'திரு என்பது - கண்டாரால்விரும்பப்படுந் தன்மைநோக்கம்: என்றது, அழகு; இஃது என்சொல்லியவாறோ வெனின்,—யாவனொருவன் யாதொரு பொருளைக் கண்டானோ அக்கண்டவற்கு அப்பொருள்மேற் சென்ற விருப்பத்தோடே கூடிய அழகு. அதன்மேல் அவற்கு விருப்பஞ்சேறல் அதனிற் சிறந்த உருவும் நலனும் ஒளியும் எவ்வகையானும் பிறிதொன்றற்கு இல்லாமையால்', 'எல்லாராலும் விரும்பப்பட்ட அழகு அவட்கு உண்டாகையாலே திருமகள் என்று பெயராயிற்று' என்பது, திருக்கோவையார் பேராசிரியருரை. "அகலகில்லே னிறையு மென் றலர்மேன்மங்கை யுறை மார்பா" என்றாற்போல, 'திருவரங்காவுறைமார்பா' என்றார். அரங்கு - ரங்க மென்ற வடசொல்லின் விகாரம்: இதற்கு - கூத்தாடுமிடமென்றபொருளும்உண்டு; ஆ - ஆக என்பதன் விகாரம். இனி, அரங்கா-அழுந்தி யெனினுமாம்; சிறிது பொழுதும்விட்டுநீங்காமல் நிலையாக என்றபடி: ஒருசொல்;செய்யாஎன்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம்: அரங்கு-வினைப்பகுதி, ஆ என்ற விகுதியே இறந்தகாலங்காட்டும். உறை மார்பு - வினைத்தொகை, இடப்பெயர்கொண்டது.

"எம்மாண்பிலயன் நான்குநாவினுலுமெடுத்தேத்தி யீரிரண்டுமுகமுங் கொண்டு, எம்மாடுமெழிற்கண்களெட்டினோடுந் தொழுதேத்தி யினிதிறைஞ்சநின்றசெம்பொன்,அம்மான்றன் மலர்க்கமலக்கொப்பூழ்தோன்ற வணியரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளு, மம்மான்", "ஏதமில் தண்ணுமையெக்கம் மத்தளி யாழ் குழல் முழவமோ டிசை திசை கெழுமிக், கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள் கெந்தருவரவர் கங்குலுமெல்லாம், மாதவர் வானவர் சாரண ரியக்கர் சித்தரு மயங்கினர் திருவடிதொழுவான், ஆதலிலவர்க்கு நாளோலக்கமருள அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே" என்ற

ஜ

ஆழ்வாரருளிச்செயல்களை அடியொற்றி, 'திசைமுகன்சேவிப்பக்கந்திருவரங் காதரித்தின்னிசைபாடத் திருக்கண்வளர் திருவரங்கா எழுந்திரு' என்றார். திசைமுகன் - நான்குதிசையையும்நோக்கிய நான்குமுகமுடையவன்; எம்பெருமானைத்துதித்தல்முதலியன செய்தற்கு வேண்டிய கருவியிற் குறைவற்றவனென்பது இதில்தொனிக்கும். சேவிப்ப,பாட-வினைச்செவ்வெண். கந்தர்வர் என்ற வடமொழி, யமகநயத்தின்பொருட்டு,கந்திருவரென விகாரப்பட்டது; பதினெண்வகைத்தேவகணங்களுள் ஒருசாரார் இவர்: இசைபாடுதலிற் சிறந்தவர். அங்கு-அப்பிரமன்போலவே யென்றபடி; அவ்விடத்திலே யெனினுமாம்: அசையாகவுங் கொள்ளலாம்.

உன் பழவடியேன் - "எந்தைதந்தைதந்தைதந்தைதம்மூத்தப்பனேழ்படிகால்தொடங்கி,வந்துவழி வழியாட்செய்கின்றோம்" என்றபடி வம்சபரம்பரையாக நெடுங்காலமாய் உனக்கு அடிமைசெய்துவருகிற தொண்டக்குலத்தில்தோன்றிய நான்என்றபடி. அழகியமணவாளதாசர் பெரியபெருமாள் திருவடிகளிலே அடிமைசெய்ய ஆசைப்பட்டு அருகிற்சென்றவளவிலே,அர்ச்சாரூபியான அப்பெருமான் எதிர்முகங்கொடுத்தல்,திருக்கண்களாலேகுளிரநோக்குதல், கைகளைநீட்டியணைத்தல், குசலப்ரச்நம்பண்ணுதல் முதலியன செய்யாதே பள்ளிகொண்டிருக்க, அவனைப் பள்ளியுணர்த்தி அவனுணர்ந்தருளும்போதையழகுகண்டு அவன் உகந்து வாய்திறந்து ஏவுங் குற்றேவல்களைச் செய்யவேண்டி, அவனை 'எழுந்திரு' என எழுப்புகிறார். எழுந்திருத்தல் - துயிலொழிதல். இதில், இருஎன்பது - துணைவினை. இனி, எழுந்து இரு - நாளோலக்கமாக வீற்றிரு என்றுங் கொள்ளலாம். "கிடந்தநாள் கிடந்தாய்எத்தனைகாலங்கிடத்திஉன் திருவுடம்பசையத், தொடர்ந்துகுற்றேவல்செய்துதொல்லடிமைவழிவருந்தொண்டரோர்க்கருளித்,தடங்கொள்தாமரைக்கண்விழித்து நீயெழுந் துன்தாமரைமங்கையு நீயும், இடங்கொள்மூவுலகுந்தொழஇருந்தருளாய் திருப்புளிங்குடிக்கிடந்தானே" எனப்பள்ளிகொண்ட பெருமானை நம்மாழ்வார் துயிலுணர்த்தியெழுப்பி அடிமைசெய்யப் பாரித்தமை காண்க. "மறந்தும் புறந்தொழா மாந்தர்" ஆதலால், "எற்றைக்குமேழேழ்பிறவிக்கு முன்றன்னோ,டுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்"என்றாற்போல, 'உன்பழவடியேன் உனக்கே தொண்டுசெய்வதற்குவரங் காதலித்தேன்' என்றார்; ஏ - பிரிநிலை. வரம்-வேண்டுவனகொள்ளுதல்.

எல்லாநூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டுவது மரபாதலால், 'திரு'என்று தொடங்கினார்; "சீர் மணி பரிதி யானை திரு நிலம் உலகு திங்கள், கார் மலை சொல் எழுத்துக் கங்கை நீர் கடல் பூத்தேர் பொன், எருறு மிவை மூவாறும் இதிற்பரியாயப்பேரும், ஆரு மங்கலச்சொல் செய்யுளாய்ந்து முன்வைக்க நன்றாம்" என்பது காண்க. (௧)

௨. செய்யவளைக்குருவின்னருளாற்றிருத்தாள்வணங்கிச்
செய்யவளைக்குலஞ்சூழரங்கேசன்சிறிதமுது
செய்யவளைக்கும்புவிக்குமங்காந்தசெவ்வாய்முகுந்தன்
செய்யவளைக்குஞ்சிலம்பணிபாதங்கள்சேர்ந்தனமே.

(இ - ள்.) குரு இன் அருளால் - ஆசாரியருடைய இனிமையான கிருபா கடாக்ஷத்தினால், செய்யவளை திரு தாள் வணங்கி - திருமகளைத் திருவடி தொழுது,--செய்ய வளை குலம் சூழ் அரங்க ஈசன் - கழனிகளிலுள்ளசங்கினங்கள் சூழப்பெற்ற திருவரங்கத்து நாதனும், அளைக்கும் புவிக்கும் அமுது செய்ய சிறிது அங்காந்த செம் வாய் முகுந்தன் - வெண்ணெயையும் பூமியையும் உண்ணுதற்குச் சிறிதுதிறந்த சிவந்த வாயையுடைய முகுந்தனென்னும் ஒரு திருநாம முள்ளவனுமான திருமாலினது, செய்ய வளைக்கும் சிலம்பு அணி பாதங்கள் - செவ்வியையுடைய வளைந்துள்ள சிலம்பென்னும் ஆபரணத்தை யணிந்த திருவடிகளை, சேர்ந்தனம் - அடைந்தோம்; (எ - று.)

ஸதாசாரியனையடுத்து அவனபிமானத்தை அவனருளாற்பெற்று அது மூலமாகவுண்டானபிராட்டிபுருஷகாரபலத்தாலேபெருமாள்திருவடியிலே சரண்புகுந்தோமென்றார். ஆக, இதனால்,ஆசார்யாபிமானமே உத்தாரகமென்னும் அர்த்தம்சொல்லியதாயிற்று. ஈற்றுஏகாரம்-தேற்றவகையால், இனி எமக்கு ஒருகுறையுமில்லையென்ற பொருளைத்தொனிப்பிக்கும்.சேர்ந்தனம் என்ற தன்மைப்பன்மை - தனதுகுலத்து முன்னோரையும் பின்னோரையும் தனது அடியார்களையும் உளப்படுத்தும்.வணங்கிச்சேர்ந்தனம் என இயையும்.

செய்யவள் - செந்நிறமுடையவள்: செம்மையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர். குரு என்றவடசொல் - அஜ்ஞாநமாகிய அகவிருளை யழிப்பவ னென்று அவயவப்பொருள்படும். (கு - இருள், ரு - ஒழிப்பவன்.) இன் அருள் - பண்புத்தொகை; இன் - சாரியையெனக் கொண்டு குருவினது அருளென்றால், னகரமெய் - விரித்தல்விகாரமாம். செய்யவளைத் தாளை வணங்கி என இரண்டுசெயப்படுபொருள்வந்த வினையாகவாவது, செய்யவளினது தாளைவணங்கி என உருபுமயக்க மென்றாவது, செய்யவளைத் தாளிலே வணங்கி யென்றாவது கொள்க. செய்யஎன்றசொல் - இரண்டாமடியில்செய்யென்னும்பெயரின்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்சமும்; மூன்றாமடியில், செய் என்னும் வினைப்பகுதியின்மேற் பிறந்த தெரிநிலைவினையெச்சமும்; நான்காமடியில், செவ்வியையுணர்த்தும்செம்மையென்னும்பண்பின்மேற்பிறந்தகுறிப்புப்பெயரெச்சமுமாம். வயலை 'செய்'என்பது-பன்றிநாட்டுத்திசைச்சொல். வளை - வளைந்துள்ளது; உட்சுழிந்துள்ளது. 'செய்யவளைக்குலஞ்சூழரங்கம்' என்பது, நீர்வளமிகுதியை உணர்த்தும். அரங்கேசன் - குணசந்திபெற்ற வடமொழித்தொடர். பெரியோர்உண்ணுதல், அமுதுசெய்த லெனப்படும்: உபசாரச்சொல். வெண்ணெயுண்ண வாய்திறந்தது, கிருஷ்ணாவதாரத்திலே திருவாய்ப்பாடியில்வளர்ந்த குழந்தைப்பருவத்தி லென்க. புவி என்ற சிறப்புப்பெயர், பொதுப்பொருளின் மேலதாய் உலக மென்றவாறும். அதனை யுண்ண வாய்திறந்தது, பிரளயகாலத்தி லென்க. பிரமன்முதலான சகலதேவர்களு முட்பட யாவும்அழிந்துபோகிற யுகாந்தகாலத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு அண்டங்களையெல்லாம் தன்வயிற்றில் வைத்து அடக்கிக்கொண்டு பிரளயப் பெருங்கடலில் ஆதிசேஷாம்சமானதோ ராலிலையின்மீது யோகநித்திரை செய்தருள்கின்றன னென்பது, நூற்கொள்கை. அங்காந்த, அங்கா-பகுதி. முகுந்தன்—(தன்அடியார்க்கு), மு - முத்தியின்பத்தையும், கு - நிலவுலக

வின்பத்தையும், தன் - கொடுப்பவன். செய்ய என்பது - சிலம்புக்கும் பாதத்துக்கும் அடைமொழியாகத்தக்கது. சிலம்புவது, சிலம்பு எனக் காரணக்குறி; நூபுரம், பாததண்டை. (உ)

௩. தனமாதரஞ்சொற்குதலைப்புதல்வர்தரணியில்லந்
தனமாதரஞ்செயும்வாழ்வஞ்சியேதஞ்சநீயெனப்போந்
தனமாதரங்கிக்கவெற்பெடுத்தாய்தண்ணனந்தசிங்கா
தனமாதரங்கமுள்ளாயரங்காமுத்திதந்தருளே.

(இ - ள்.) ஆ - பசுக்கள், தரங்கிக்க - (இந்திரன்பெய்வித்த மழையினால்) நிலைகலங்க, வெற்பு எடுத்தாய் - (அவற்றைப் பாதுகாத்தற்பொருட்டுக்) கோவர்த்தநகிரியைக் குடையாக எடுத்துப்பிடித்தவனே! தண் அனந்த சிங்காதன - ஆதிசேஷனை மெத்தென்றசிங்காதனமாகவுடையவனே! மாதரங்கம் உள்ளாய் - பெரிய கடலிற் பள்ளிகொண்டுள்ளவனே! அரங்கா - ஸ்ரீரங்கநாதனே!—தனம் மாதர் - கொங்கையெழிலையுடைய மகளிரும், அம் சொல் குதலை புதல்வர் - அழகிய மழலைச்சொற்களையுடைய பிள்ளைகளும், தரணி - விளைநிலமும், இல்லம் - வீடும், தனம் - செல்வமும் ஆகிய இவற்றில், ஆதரம் செயும் - ஆசைகொள்ளுகிற, வாழ்வு-(நிலையற்ற இப்பிரபஞ்ச) வாழ்க்கைக்கு, அஞ்சி - பயந்து, நீயே தஞ்சம் என போந்தனம் - நீயே ரக்ஷகமென்றுகொண்டு (வந்து உன்னைச்) சரணமடைந்தோம்; முத்தி தந்தருள் - (அங்ஙனம்அடைந்த எமக்கு) மோட்சத்தைக் கொடுத்தருள்வாய் ; (எ - று.)

பற்றற்று உன்பக்கல் சரணம் புக்கோம்; நீ எமக்கு நற்கதியருளக்கடவை யென்பதாம். உன்னை நம்பி யடுத்துள்ள உயிர்களைச் சிரமம்பாராது துயர்நீக்கிப்பாதுகாத்தருளுந்தன்மையுடையாய்என்னுங்கருத்துத்தோன்ற, 'ஆதரங்கிக்கவெற்பெடுத்தாய்'எனவிளித்தார்:கருத்துடையடைகோளியணி.

ஆதிசேஷன்திருமாலுக்குப்பலவகைக்கைங்கரியங்கள்புரியும்வகையை "சென்றாற் குடையாம் இருந்தாற் சிங்காதனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள்-என்றும், புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்,அணையாம் திருமாற்கு அரவு" என்றதனால் அறிக. திருப்பாற்கடலிலும் பிரளயப்பெருங்கடலிலும் திருமால் பள்ளிகொள்கின்றன னென்பது, நூற்கொள்கை. குதலை - கிரம்பாமென்சொல். "குழலினிது யாழினி தென்ப தம்மக்கள், மழலைச்சொற் கேளாதவர்," "மக்கள்மெய்தீண்ட லுடற்கின்பம் மற்றவர், சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு" என்றபடி தம் புதல்வருடைய மழலைச்சொல் தந்தைதாயர்க்கு மிக்கஇனிமை விளைத்தலால், 'அஞ்சொற்குதலைப் புதல்வர்' என்றார். இல்லம், அம்-சாரியை. இரண்டாமடியில், ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. தரங்கிக்க - அலைய; தரங்கம் என்னும் பெயரின் மேற்பிறந்த செயவெனெச்சம். தரங்கம் - அலை: வடசொல் ; கடலுக்குச் சினையாகுபெயர். அநந்தன் என்ற வடமொழிப்பெயர், ந+அந்த என்று பிரிந்து, (பிரளயத்திலும்) அழிவில்லாதவ னென்று பொருள்படும். முக்தி என்ற வடசொல்லுக்கு - பற்றுக்களை விட்டு அடையும் இடமெனக் காரணப்பொருள். (௩)

௪. தந்தமலைக்குமுன்னின்றபிரானெதிர்தாக்கிவெம்போர்
தந்தமல்லைக்குமைத்தானரங்கேசன்றண்பூவினிடைத்
தந்தமலைக்குத்தலைவன்பொற்பாதஞ்சரணென்றுய்யார்
தந்தமலைக்கும்வினையானைவார்பலர்தாரணிக்கே.

(இ - ள்.) தாரணிக்கு - பூமியில்,—பலர் - அநேகர்,—தந்தம் மலைக்கு முன் நின்ற பிரான் - தந்தங்களையுடையதொரு மலைபோன்ற யானைக்கு [கஜேந்திராழ்வானுக்கு] எதிரில் எழுந்தருளிக் காட்சிதந்த பெருமானும், எதிர் தாக்கி வெம் போர் தந்த ம(ல்)லை குமைத்தான் - எதிர்த்து மோதிக் கொடியபோரைச்செய்த மல்லர்களைச் சிதைத்து அழித்தவனும், தண் பூவின் தந்து இடை அமலைக்கு தலைவன் - குளிர்ச்சியான தாமரைமலரில் வீற்றிருக்கின்றவளும் நூல்போன்ற[மிகமெல்லிய]இடையையுடையவளும் குற்றமற்றவளுமான திருமகளுக்குக் கொழுநனும் ஆகிய, அரங்கேசன் - ஸ்ரீரங்கநாதனுடைய, பொன் பாதம் - அழகிய திருவடிகளை, சரண் என்று - சரணமாகஅடைந்து, உய்யார் - உய்வுபெறுராய், அலைக்கும் தம் தம் வினையால் நைவார் - வருத்துகிற தங்கள்தங்கள் பூர்வகர்மங்களினுல் வருந்துவார்கள்.

வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்குஅழுவார் போலே, சரண் புக்கமாத்திரத்தில் அச்சரணாகதருடைய கருமங்களையெல்லாம் ஒழித்து முத்திதருபவையான எம்பெருமானது திருவடிகள் இருக்க அவற்றையடைந்து பிறவிப்பெருங்கடல்கடந்து வாழாது உலகத்திற் பேதையர்பலர் கருமவசப்பட்டு வருந்துவது என்னேயென்று உலகைநோக்கி இரங்கியபடியாம்.

'தந்தமலை'எனவே, யானையென் றாயிற்று; மலை - உவமையாகுபெயர்: பருமைவலிமைகளால் உவமம். முன்-இடமுன். இரண்டாமடியில், மலை என்பது - தொகுத்தல். மல் - ஆயுதமின்றி உடல்வலிமைகொண்டு செய்யும் போர் ; இங்கு அப்போருடையார்க்கு ஆகுபெயர். இடைத்தந்து - முன்பின்னாகத்தொக்க உவமைத்தொகை; தந்து - வடசொல். அமலை - அமலாஎன்ற வடசொல் ஆவீறு ஐயாயிற்று ; இப்பெயர், தூய்மையுடைமையை உணர்த்தும். சரண் - சரணமென்ற வடசொல்லின் விகாரம். தாரணிக்கு - உருபுமயக்கம். தரணி என்ற வடசொல் விகாரப்பட்டது. (௪)

ரு. தாரணிதானவன்பாலிரந்தான்சங்கம்வாய்வைத்தொன்னார்
தாரணிதானவஞ்செய்தானரங்கன்றமர்கள்பொருந்
தாரணிதானவமராவதியுந்தருநிழலுந்
தாரணிதானவயிராவதமுந்தருகினுமே.

(இ - ள்.) தானவன்பால் - அசுரனான மகாபலியினிடத்து, தாரணி இரந்தான் - (மூன்றடி) நிலத்தை யாசித்தவனும், சங்கம் வாய் வைத்து - (தான் தனது) திவ்வியசங்கத்தை வாயில்வைத்து ஊதியமாத்திரத்தாலே, ஒன்னார் தார் அணி அவம் செய்தான் - பகைவர்களுடைய படைவகுப்பினொழுங்கைப் பழுதுபடுத்தியவனும் ஆன, அரங்கன் - ரங்கநாதனுடைய, தமர்கள் - அடியார்கள்,—அணிது ஆன அமராவதியும் - அழகியதாகிய சுவர்க்கலோகத்தையும், தரு நிழலும் - (அங்குள்ள) கற்பகவிருக்ஷங்களின் நிழலை

யும், தார் அணி தானம் அயிராவதமும் - கிண்கிணிமாலையை யணிந்ததும் மதங்கொண்டதுமான ஐராவதமென்னுந் தெய்வயானையையும், தருகினும் - (வலியக்) கொடுத்தாலும், பொருந்தார் - (மனமிசைந்து அவற்றைப் பெற) உடன்படார்; (எ - று.)

திருமாலடியார்கள் மீளாவுலகமாய்ப் பேரின்பத்திற்குஉரிய இடமான பரமபதத்திற்குச் செல்ல இணங்குவரேயன்றிச் சிலகாலம் சிற்றின்பங்களை யனுபவித்தற்கே உரிய சுவர்க்கலோகத்து இந்திரபதவியைக் கொடுத்தால் அதனையும் சிறிதும்பொருள்செய்யார் என்பதாம்; "ஆனாதசெல்வத்தரம்பையர்கடற்சூழ, வானாளுஞ்செல்வமு மண்ணரசும் யான்வேண்டேன்" என்று குலசேகராழ்வார் அருளிச்செய்தமை காண்க; பிரமன் கட்டளையால் இந்திரன் சரபங்கமகாரிஷியைச் சத்தியலோகத்துக்கு அழைத்தபோது, மகாவிஷ்ணுபக்தரான அம்முனிவர் அம்மேலுலகையுமுட்பட இகழ்ந்து "அற்பங்கருதேன்" என்றும், "மறுகாநெறி யெய்துவென்" என்றும் உரைத்ததும் உணரத்தக்கது.

தாநவன் - (காசியபமுனிவரது மனைவிகளுள்) தநுவென்பவளது மரபினனென்று பொருள்படும்; வடமொழித் தத்திதாந்தநாமம். ஒன்னார் - ஒன்றார் என்பதன் மரூஉ. அவம்செய்தான் - பயனிலதாக்கியவன். தமர் - தம்மவர்: கிளைப்பெயர். அணிது - அண்ணிது; அதாவது - சமீபத்திலுள்ளது என்றும் உரைக்கலாம். எல்லாவுலகங்களினும் மேலுள்ளதான முத்தியுலகத்தின்சேய்மையை நோக்குமிடத்து, இந்திரனதுநகரமான அமராவதி மிகஅருகிலுள்ளதாதல் காண்க. சேணுலகமாகிய முத்தியைப் பெறவல்ல பாகவதர்க்குச் சுவர்க்கலோகம் அரியதொன்றன்றாதலால், எளிதுஎன்னும் பொருளில் 'அணிது' என்றதாகவுங் கொள்ளலாம். சங்கம், அமராவதி, தரு, தாநம், ஐராவதம் - வடசொற்கள். அமராவதி என்ற பெயர் - தேவர்களையுடையதென்று காரணப்பொருள்படும். சுவர்க்கலோகத்தில் பஞ்சதேவதருக்களின் நிழல் இந்திரன் அரசுவீற்றிருக்குமிடமாதலை, "இன்றளிர்க் கற்பகநறுந்தே னிடைதுளிக்கு நிழலிருக்கை" என்றதனாலும் அறிக. அயிராவதம் - முதற்போலி. இது, இந்திரனது வெள்ளையானை; நான்குதந்தங்களையுடையது. தருகின், கு - சாரியை. உம்மை - உயர்வுசிறப்பு.

கண்ணன் சத்தியபாமைக்காகப் பாரிசாததருவைத் தேவலோகத்தினின்று பெயர்த்துப் பூலோகத்துக்குக் கொணர்கையில் வந்துஎதிர்த்துப் போர்செய்த சகலதேவசைநியங்களையும் தனதுசங்கநாதத்தினாலே பங்கப்படுத்தினமையும், மகாபாரதயுத்தத்தில் கண்ணன் அருச்சுனனுக்குச் சாரதியாய் நிற்கையில் தனதுசங்கினொலியாற் பகைவர்களை அஞ்சுவித்து அழித்தமையும், மற்றும்பலபோர்களில் இங்ஙனஞ்செய்தமையும்பற்றி, 'சங்கம்வாய்வைத் தொன்னார்தாரணிதா னவஞ்செய்தான்' என்றார். "அருட்கொண்டலன்னவரங்கர்சங்கோசையிலண்டமெல்லாம், வெருட்கொண்டிடர்படமோதுவீழ்ந்தன வேகமுடன், தருக்கொண்டுபோகப்பொறாதே தொர்டருஞ் சதமகனும், செருக்கொண்ட முப்பத்துமுக்கோடிதேவருஞ் சேனையுமே", "கருணவாள்திருபர்மயங்கிவீழ்தரவெண்சங்கமுழக்கி" என்பன காண்க.

கூ. தருக்காவலாவென்றுபுல்லரைப்பாடித்தனவிலைமா
தருக்காவலாய்மயிலேகுயிலேயென்றுதாமதராய்த்
தருக்காவலாநெறிக்கேதிரிவீர்கவிசாற்றுமின்பத்
தருக்காவலாயுதன்பின்றேன்றரங்கர்பொற்றாளிணைக்கே.

(இ - ள்.) தரு காவலா என்று புல்லரை பாடி - கற்பகவிருக்ஷத்துக்குத் தலைவனான இந்திரனே யென்று அற்பமனிதர்களைப் புகழ்ந்துபாடியும், தனம் விலைமாதருக்கு ஆவல் ஆய் மயிலே குயிலே என்று-கொங்கையெழிலையுடைய வேசையர்கள்பக்கல் மோகங்கொண்டு (அவர்களை) மயிலேயென்றும் குயிலேயென்றும் கொண்டாடி விளித்தும், தாமதர் ஆய்-தாமதகுணத்தையுடையவர்களாய், தருக்கா - களிப்புக் கொண்டு, அலா நெறிக்கே திரிவீர் - நல்லதல்லாதவழியிலேயே திரிகிற புலவர்களே!—(இனி நீவிர் அங்ஙனஞ்செய்வதை விட்டு), பத்தருக்கு ஆ அலாயுதன் பின் தோன்று அரங்கர் பொன் தாள் இணைக்கே கவி சாற்றுமின் - அடியார்கட்கு அருள்செய்யும் பொருட்டாகப் பலராமனுக்குப் பின்னே (அவன் தம்பியாய்க் கண்ணனாய்த்) திருவவதரித்த நம்பெருமாளுடைய உபயதிருவடிகளின் விஷயமாகவே கவி பாடித் துதியுங்கள்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - பிரிநிலை.

எம்பெருமானைத்துதித்து அவனருள்பெற்று அழிவிலாவீடடைதற்கு ஏற்ற சாதனமான நாவையும் கவனசக்தியையும் அவன்விஷயத்தில் உபயோகியாமல்தருமவிரோதமாக நிலையில்லாதபொருளையும்சிற்றின்பத்தையும் பெறுதற்கு ஆசைப்பட்டு அவற்றிற்காக நரகவனமும் விலைமாதரைநயந்துரைத்தலுஞ் செய்யும் அற்பப்புலவர்களை நோக்கி, 'அங்ஙனஞ் செய்ய வேண்டா: துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலநசீலனும் அடியவர்க்கெளியவனுமான ரங்கநாதன்விஷயமாகக் கவிபாடித் துதித்து உய்யுங்கள்' என உணர்த்தியவாறும்.

செல்வஅதிகாரங்களிற் சிறப்பை விளக்குதற்கு இந்திரனே யென்றும், சாயலிலும் குரலிலும் உள்ள இனிமையை விளக்குதற்கு மயிலே குயிலே யென்றும் விளிப்பரென்க. பலராமன்-கண்ணனுக்குத் தமையன்; திருமாலின் எட்டாம் அவதாரம்: வசுதேவனுடைய பத்தினிகளுள் தேவகியின் கருப்பத்தில் முதலில் ஆறுமாசந்தங்கிப் பின்பு ரோஹிணியின்கர்ப்பத்திற்சென்றுசேர்ந்து ஆறுமாசம்இருந்து பிறந்தவன் இவன். ஹலாயுதன் என்ற இவன் பெயர் - ஹல ஆயுத எனப்பிரிந்து, கலப்பையை ஆயுதமாகவுடையவனென்று பொருள்படும்; தீர்க்கசந்தி; ஹலம்-கலப்பை. கண்ணன் - திருமாலின் ஒன்பதாம் அவதாரம்.

காவலன் - காத்தலில் வல்லவன். புல்லர் - புன்மையுடையவர். விலைமாதர்-தமது இன்பத்தை விலைகொடுப்பார்யாவர்க்கும் விற்கும் மகளிர். ஒழுக்கவழு, காமம், நீதிவழு முதலியன தாமசகுணகாரியமாம். தருக்கா - உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். அலாநெறி - துர்மார்க்கம், தீயொழுக்கம். நெறிக்கு - நெறியில்; உருபுமயக்கம். ஏ-பிரிநிலையோடு இழிவுசிறப்பு. திரிவீர் - திரிவார் என்பதன் ஈற்றயல்திரிந்த விளி. சாற்றும் இன் பத்தருக்கு, இன்பத்தர் - இனிமையான அடியார்களென்றலு மொன்று. பத்தர் - பக்தர்

என்ற வடசொல்லின் விகாரம்; பக்தியுடையவர். ஆக என்பது, ஆ என விகாரப்பட்டது. பின்என்பது - இங்கே காலப்பொருளது. 'கவிசாத்துமின்' என்ற பாடத்துக்கு - கவிமாலையைச் சமர்ப்பியுங்க ளென்று பொருள். (௬)

௭. தாளத்தனத்தத்தைச்சொல்லியரால்வருந்தாழ்மலபா
தாளத்தனத்தத்தைத்தப்பநிற்பீர்புடைதங்கியவே
தாளத்தனத்தத்தைத்தீர்த்தானரங்கன்சகடுதைத்த
தாளத்தனத்தத்தையாயுதன்பாதந்தலைக்கொண்மினே.

(இ - ள்.) தாளம் தனம் தத்தை சொல்லியரால் வரும் - கைத்தாளம் போன்ற வடிவமுடைய கொங்கைகளையும் கிளிகொஞ்சிப்பேசுவதுபோ லினியசொற்களையு முடைய அயல்மாதர்களின் சம்பந்தத்தா லுண்டாகும், தாழ் மல பாதாளத்து அனத்தத்தை - ஆழ்ந்த அசுத்தம்பொருந்திய நரகத் துன்பத்தை, தப்ப நிற்பீர் - தப்பிஉய்யவேண்டி நிற்பவர்களே!—(நீங்கள்), புடைதங்கிய வேதாளத்தன் அ தத்தை தீர்த்தான் - எல்லாப்பக்கங்களிலுஞ் சூழ்ந்துநின்ற பூதகணங்களையுடையவனான சிவபிரானது (பிச்சையெடுத்த லாகிய) அந்தத்துன்பத்தைப் போக்கியருளியவனும், சகடு உதைத்த தாள் அத்தன்-சகடாசுரனை உதைத்துத்தள்ளியழித்த திருவடிகளையுடைய இறை வனும், அத்தத்து ஐ ஆயுதன்-திருக்கைகளில் ஏந்தும் பஞ்சாயுதங்களையுடை யவனுமான, அரங்கன் - ரங்கநாதனுடைய, பாதம் - திருவடிகளை, தலை கொண்மின் - தலைமேற்கொண்டு பணியுங்கள்; (எ - று.)

தத்தை - கிளி; அதன்மொழிக்கு முதலாகுபெயர். சொல்லி என்ற பெண்பாற்பெயரின்மேல் அர் - பலர்பால்விகுதி. நரகம் கீழுலகிலுள்ளதாத லால், அதனை 'பாதாளம்' என்றார்; இடவாகுபெயர். அநர்த்தம் பேதாளம் சகடம் ஹஸ்தம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. தாருகவனத்து முனிவரால் ஏவப்பட்டுத் தன்னைக்கொல்ல வந்துசூழ்ந்த பூதகணங்களைச் சிவபிரான் தனதுஆற்றலால்அடக்கி அடிமையாக்கிக்கொண்டன னாதலால், 'புடைதங்கிய வேதாளத்தன்' எனப்பட்டான். அத்தத்து என்றவிடத்து, அகரச்சுட்டு - பிரசித்தியையும் இழிவையும் விளக்கும். நத்தத்தை எனப் பதம்பிரித்து, கேட்டை யென்று உரைப்பாரு முளர் ; நத்தம் - நசுஎன்ற வினைப்பகுதியின் தொழிற்பெயர். (௭)

௮. தலையிலங்காபுரஞ்செற்றானரங்கனென்றாழ்சொற்புன்கு
தலையிலங்காதரஞ்செய்தபிரான்சரணன்றிமற்றோர்
தலையிலங்காநின்றகண்ணிலங்காண்கைக்குத்தாழுகைக்குத்
தலையிலங்காதிலங்கேட்கைக்குவாயிலஞ்சாற்றுகைக்கே.

(இ - ள்.) தலை இலங்காபுரம் செற்றான் - தலைமைபெற்ற (ராக்ஷசராஜ தானியான) இலங்கைநகரை அழித்தவனும், என் தாழ் சொல் புல் குதலையில் ஆதரம் செய்த பிரான் - எனது இழிவான துதிச்சொற்களில் பொருட்சிறப்பில்லாத(தம்மக்கள்பேசும்)மழலைச்சொற்களினிடத்தில்(தாய் தந்தையர் அன்புவைக்குமாறு)போல விருப்பம்வைத்த பெருமானு மாகிய, அரங்கன்-திருவரங்கனுடைய, சரண் அன்றி-திருவடிகளேயல்லாமல், மற்று

ஓர்தலை - வேறோரிடத்தை,காண்கைக்கு - தரிசித்தற்கு,இலங்காநின்ற கண் இலம்-விளங்குகின்ற கண்களையுடையோமல்லோம்; தாழுகைக்கு-வணங்கு தற்கு, தலை இலம் - தலையை யுடையோமல்லோம்; கேட்கைக்கு - கேட்ப தற்கு, காது இலம் - செவிகளையுடையோமல்லோம்; சாற்றுகைக்கு - துதித் துப்பேசுதற்கு, வாய் இலம்-வாயையுடையோமல்லோம்; (எ - று.)—இரண் டாம்அடியில், அங்கு - அசை.

தேவாதிதேவனான எம்பெருமான் விஷயத்தில் உபயோகித்து ஈடேறு வதற்கே உரியவையாய் அமைந்த உறுப்புக்களைத் தேவதாந்தரவிஷயத்தில் உபயோகிக்கக்கடவோமல்லோம் யாம் என்றார், "மறந்தும்புறந்தொழாமா ந்த" ராதலின்; "வாயவனையல்லது வாழ்த்தாது கையுலகந், தாயவனையல் லதுதாம்தொழா—பேய்முலைநஞ்சு, ஊணாகவுண்டானுருவொடுபேரல்லால், காணாகண் கேளாசெவி" என்ற ஆழ்வாரருளிச்செயலை அடியொற்றியது இச்செய்யுள்.

இலங்காபுரத்துக்குத்தலைமை, திக்விஜயஞ்செய்து அனைவரையும் கீழ்ப் படுத்திய ராக்ஷசராசனான இராவணனது இராசதானியா யிருத்தல். அத னைச்செற்றது, ஸ்ரீராமாவதாரத்தில். இராமதூதனான அநுமான் இலங்கை யை எரியூட்டியழித்ததும், அவ்விலங்காநகரவாசிகளான கொடிய அரக்கர் களையெல்லாம் இராமபிரான் அழித்திட்டதும் ஆகிய இரண்டும் 'இலங்கா புரஞ்செற்றான்' என்ற தொடரில் அடங்கும். செற்றான், செறு - பகுதி. குதலையில், இல் - ஐந்தனுருபு, ஒப்புப்பொருளது; எழனுருபாகக்கொண்டு, எனது இழிவான புல்லியகுதலைச்சொல்லாகிய துதியில் எனினுமாம். இலங் காநின்ற, ஆநின்று - நிகழ்காலஇடைநிலை. இலம்என்ற தன்மைப்பன்மை - பிறரையும் உளப்படுத்தியது. (அ)

கூ. கைக்குஞ்சரமன்றளித்தாயரங்கமண்காக்கைக்குமாய்க்
கைக்குஞ்சரமசரம்படைத்தாய்கடனீறெழுத்து
கைக்குஞ்சரமகரக்குழையாயெனைக்கைக்கொளுடல்
கைக்குஞ்சரமதசையிலஞ்சேலென்றென்கண்முன்வந்தே.

(இ - ள்.) கை - துதிக்கையையுடைய, குஞ்சரம் - யானையை [கஜேந் திராழ்வானை], அன்று - (ஆதிமூலமே யென்று கூவியழைத்த) அக்காலத் தில், அளித்தாய் - பாதுகாத்தருளியவனே! அரங்க - திருவரங்கனே! காக் கைக்கும் - காக்கப்படுவதற்கும், மாய்க்கைக்கும் - அழிக்கப்படுவதற்கும் உரி யனவாக, மண் - உலகத்திலே, சரம் அசரம் படைத்தாய் - ஜங்கமமும் ஸ்தாவரமுமான உயிர்களைப் படைத்தருளியவனே! கடல் நீறு எழ துகைக் கும் சர - கடல் வறண்டு புழுதிபடும்படி அதனை வருத்தத்தொடங்கிய ஆக் நேயாஸ்திரத்தையுடையவனே! மகரம் குழையாய் - மகரகுண்டலங்களை அணிந்துள்ளவனே! உடல் கைக்கும் சரமதசையில் என்கண்முன் வந்து அஞ்சேல் என்று எனை கைக்கொள்-உடம்பை (உயிர்) வெறுத்தொழியும்படி யான (எனது) அந்திமகாலத்திலே நீ எனது கண்களினெதிரில் வந்து தோன்றிக் காட்சிகொடுத்து 'அஞ்சாதே' என்று அபயமளித்து என்னை அடிமையாக ஏற்றுக்கொண்டருள்வாயாக; (எ - று.)

பெரியாழ்வார்திருமொழியில் "துப்புடையாரை" என்றதொடக்கத்துத் திருப்பதிகத்தில் "ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன் ஆனைக்கு நீஅருள் செய்தமையால்", "வஞ்சவுருவின் நமன்றமர்கள் வலிந்துநலிந் தென்னைப் பற்றும்போது, அஞ்சலமென்றென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப் பள்ளியானே" என்றவற்றின்பொருள் இச்செய்யுளில் விளங்குதல் காண்க. கஜேந்திராழ்வானைக் காத்தருளின வரலாற்றை யெடுத்துக்கூறினது, உயர் திணைப்பொருள்களோடு அஃறிணைப்பொருள்களோடு பேதமற அடிமைப் பட்டஉயிர்களை அன்போடு துயர்தீர்த்துப் பாதுகாத்தருள்கிற எம்பெருமா னது கருணைமிகுதியை விளக்குதற்கு. குஞ்சரத்துக்குக் கொடுத்த 'கை' என்ற அவசியமில்லாத அடைமொழி, அந்தயானை கால்முதல் உடம்புமுழுவ தும் முதலையின்வாய்ப்பட்டு எம்பெருமானையழைத்தற்குக் கைம்மாத்திரமே வெளித்தோன்றநின்ற தென்னுங் கருத்தைப் புலப்படுத்தும். "கைம்மான மதயானையிடர் தீர்த்த கருமுகிலே," "கடுத்தகராங்கதுவகிமிர்கையெடுத்து மெய்கலங்கி.........எடுத்தொருவாரண மழைப்பநீயோவன்றேனென்றாய்" என்பன காண்க. மண் சரம் அசரம் படைத்தாய்-உலகங்களையும் சராசரங் களையும் படைத்தவனே யென்றும், உலகங்களைச் சராசரங்களுடன்படைத் தவனே யென்றும் கொள்ளலாம். சரம் - சஞ்சரிப்பன, இயங்குதிணைப்பொ ருள். அசரம் - சஞ்சரியாதன, நிலைத்திணைப்பொருள். மண்காக்கைக்கும் மாய்க்கைக்கும் சரம் அசரம் படைத்தாய்—"உலகம்யாவையும் தாமுளவாக் கலும்,நிலைபெறுத்தலும்நீக்கலும்நீங்கலா,அலகிலாவிளையாட்டுடையாரவர்" என்றபடி உலகங்களைப் படைத்தலையும் காத்தலையும் அழித்தலையும் விளை யாட்டாக வுடையவனே யென்றபடி. நீறெழ - எரிபட்டுச் சாம்பலாய் மேலெழ. மகரகுண்டலம் - சுறாமீன்வடிவமமையச் செய்யப்படுவதோர் காதணி. இது, மற்றையாபரணங்கட்கும் உபலக்ஷணம்.

குஞ்சரம் - வடசொல்; காட்டுப்புதர்களிற் சஞ்சரிப்ப தென்றும், துதிக்கையுடைய தென்றும் காரணப்பொருள்படும். 'அன்று' எனச் சுட் டினது, கதையை உட்கொண்டு. சரமதசா - வடமொழித்தொடர். அஞ் சேல் - எதிர்மறையொருமையேவல். காக்கை, மாய்க்கை - 'கை' விகுதி பெற்ற தொழிற்பெயர். சரமதசையில் எனைக் கைக்கொள் - "எய்ப்பு என்னை வந்து நலியும்போது அங்கு ஏதும் நான் உன்னை நினைக்கமாட் டேன், அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன்" என்றாற்போலப் பிரார்த்தித்தவாறும். (௯)

௧௦. வந்தனையேற்றனையென்புன்சொற்கொண்டனைவன்மனத்தே
வந்தனையேற்றனையாவையுமாயினைவான்றரவு
வந்தனையேற்றனைத்தாளுத்ததாளில்வைப்பாய்பலித்து
வந்தனையேற்றனைத்தீர்த்தாயரங்கத்துமாதவனே.

(இ - ள்.) ஏற்றனை பலித்துவந்தனை தீர்த்தாய் - ருஷபவாகனமுடைய னான சிவபிரானை இரத்தற்றொழிலை நீக்கியருளியவனே! அரங்கத்து மாதவ னே - திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கிற திருமகள் கணவனே! (என்) - எனது, வந்தனை - நமஸ்காரத்தை, ஏற்றனை - ஏற்றுக்கொண்டாய்; என்

புல் சொல் கொண்டனை - எனது இழிவான துதிச்சொற்களை ஏற்றுக்கொண்டாய் ; (என்) வல் மனத்தே வந்தனை ஏற்று - எனது வலிய மனத்திலே வந்துபொருந்தி, அனை யாவையும் ஆயினை-(எனக்குத்)தாயும்மற்றைஎல்லாவுறுதுணையு மாயினாய் ; வான் தர உவந்தனை ஏல் - (எனக்குப்) பரமபதம் அளிக்கத் திருவுளங்கொண்டனையானால், தனை தான் ஒத்த தாளில் வைப்பாய் - (வேறுஒப்புமையில்லாமையால்) தன்னைத்தானே ஒப்பதான (உன்) திருவடியில் (என்னைச்) சேர்த்துக்கொண்டருள்வாய் ; (எ - று.)

எளியேன் திரிகரணங்களாலுஞ் செய்யும் வந்தனைவழிபாடுகளை ஏற்றுக்கொண்டு என்பக்கல் அன்புகாட்டினை யாதலால், அந்தஅன்பை முற்றச்செலுத்தி எனக்குப் பரமபதங்கிடைக்குமாறு என்னை உன்திருவடியிற் சேர்த்துக்கொண்டருளவேண்டு மென வேண்டியபடி. அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் எம்பெருமான் அவர்நினைந்தவடிவத்துடன் விரைந்து சென்று வீற்றிருத்தலால், 'மனத்தே வந்தனையேற்று' என்றார். 'என்' என்பதைப் பிறவிடத்துங் கூட்டுக.

வந்தனை - வந்தநா என்ற வடசொல்லின் விகாரம். ஏற்றனை என்ற முன்னிலையொருமையிறந்தகாலமுற்றில், ஏல் - பகுதி; ஏற்றல் - அங்கீகரித்தல், இணங்குதல், கொள்ளுதல். வன்மனம் - "இரும்புபோல் வலியநெஞ்சம்", "மரங்கள்போல் வலியநெஞ்சம்" என்பன காண்க. வந்தனை - முன்னிலையொருமை யிறந்தகால முற்றெச்சம். ஏற்று என்ற இறந்தகாலவினையெச்சத்தில், ஏல்-பகுதி; ஏலுதல்-பொருந்துதல். அனையாவையும் ஆயினை- "அத்தனாகி யன்னையாகி யாளுமெம்பிரானுமாய்" என்றார் பெரியாரும். அனை - அன்னை யென்பதன் தொகுத்தல்: தனையென்பதும் இவ்வாறே. ஏல்- என்னில் என்பதன் மரூஉ. தனைத்தானொத்ததாள் - இயைபின்மையணி: ஒருபொருளையே உபமானமும்உபமேயமுமாகச்சொல்லுதல், இதன் இலக்கணம்; உவமையாதற்கு ஏற்ற பொருள் வேறுயாதுமில்லை யென்பதை விளக்கும். ஏற்றனைப் பலித்துவந்தனைத் தீர்த்தாய் - இரண்டுசெயப்படுபொருள் வந்த வினை. பலித்துவந்தனை ஏற்றனுக்குத் தீர்த்தாய் என உருபுமயக்கமுமாம். பலித்துவம் - ஒருசொல்; அதன்மேல், தன் - சாரியை, ஐ - இரண்டனுருபு. பலி துவந்தனைஎனத் தொடர்மொழியாக்கொண்டு பிரித்து, இரத்தலினாலாகிய துன்பத்தை எனினுமாம்; துவந்தனை-துன்பம்; பந்தம். ஏறு-பசுவின் ஆண்பாற்பெயர்; எருது: அதனையுடையவன், ஏற்றன். மாதவன்-ஸ்ரீய:பதி: வடசொல்; மா-இலக்குமி, தவன் - கணவன். அரங்கத்துமா-ஸ்ரீரங்கநாயகி. வைப்பாய் - ஏவலொருமை முற்று; விளிப்பெயராகக் கொண்டு, ஓர் உயிர்க்குப் பரமபதமளிக்கத் திருவுளங்கொண்டனை யானால், அவ்வுயிரைத் திருவடியிற் சேர்த்துக்கொண்டருள்பவனே யென்றலும் ஒன்று. (க0)

கக. மாதங்கத்தானையரங்கனைவஞ்சனிலங்கையிலே
மாதங்கத்தானையிருதிங்கடாழ்த்துப்பின்வாம்பரிதேர்
மாதங்கத்தானைவலத்தானைமுன்வதைத்தானைத்தன்பான்
மாதங்கத்தானைவைத்தானைவைத்தேனென்மதியகத்தே.

-ள்,) மாதங்கம் தானை அரங்கனை-சிறந்த மாற்றுயர்ந்த பொன்மயமான ஆடையையுடைய திருவரங்கனும்,—வஞ்சன் இலங்கையிலே மா தங்க - வஞ்சகனான இராவணனுடைய இலங்காபுரியிலே திருமகளின் அவதாரமான சீதாபிராட்டி தங்கியிருக்க, தான்—, ஐ இரு திங்கள் தாழ்த்து - பத்து மாதம்கழித்து,பின்-பின்பு,வாம் பரி தேர் மாதங்கம் தானை வலத்தானை முன் வதைத்தானை - தாவிச்செல்லுங்குதிரைகளும் தேர்களும் யானைகளும் காலாளகளுமாகிய சேனையின்பலத்தோடு மற்றும் பலவகைவலிமைகளையுமுடையனை இராவணனை முற்காலத்தில் அழித்திட்டவனும்,—மாது அங்கத்தானை தன்பால் வைத்தானை - உமாதேவியை வாமபாகத்திற் கொண்டுள்ளவனை சிவபிரானை(த் தனது வல)ப்பக்கத்தில் அமையவைத்துள்ளவனுமான திருமாலை,—என் மதியகத்து வைத்தேன் - எனது மனத்தினுள்ளே நிலையாகவைத்திட்டேன்; (எ - று.)

எப்பொழுதும் நம்பெருமாள்பக்கலிலே மனத்தைச்செலுத்திஅப்பெருமானையே தியானிக்கின்றேன் என்பதாம்.

தங்கத்தானை-பீதாம்பரமெனப்படும் பொற்பட்டாடை. வஞ்சன்-எண்ணம் சொல் செயல் என்னும் திரிகரணத்தொழிலிலும் வஞ்சனைகொண்டவன்; பிராட்டியை வஞ்சனையாற் கவர்ந்துசென்றவன். திருமால் இராமனாகத் திருவவதரித்தபோது திருமகள் சீதையாகத் திருவவதரித்ததனால்,சீதையை 'மா' எனக் குறித்தார். ஐயிருதிங்கள் - பண்புத்தொகைப்பன்மொழித்தொடர். சாந்திரமானபக்ஷத்தில் அமாவாசைக்கு அமாவாசை ஒருமாசமெனக்கொண்டு சந்திரசம்பந்தத்தாற் கணக்கிடுதல்பற்றி, திங்கள் என்ற சந்திரனது பெயர் இலக்கணையாய் மாதத்தை யுணர்த்தும்; 'மதி' என்பதும் இவ்வாறே வருதல் காண்க. வாம் - வாவும் என்னுஞ் செய்யுமெனெச்சவீற்றுயிர்மெய் சென்றது. மூன்றாமடியிலுள்ள 'மாதங்கம்' என்ற வடசொல் - மதங்க முனிவரிடத்தினின்று ஆதியில் உண்டானதென்று காரணப்பொருள்படும். இங்கே, வலம் - வரபலம் புஜபலம் ஆயுதபலம் மனோபலம் ஸ்தானபலம் முதலியன. பலம் என்ற வடசொல், வலமென விகாரப்பட்டது; வலம்-வெற்றியுமாம். பின், முன் என்பன-காலத்தின்மேல் நின்றன. மாது அங்கத்தான் - அர்த்தநாரீசுவர மூர்த்தியானவன். மாதங்கத்தானைத் தன்பால்வைத்தான்-"பிறைதங்குசடையானை வலத்தேவைத்து," "வலத்தனன் திரிபுரமெரித்தவன்" என்பன காண்க. மதியகத்து-அறிவிலே எனினுமாம்; அகத்து-ஏழனுருபு. அம்பிகையை ஒருபாகத்தில் வைத்தவனைத் தனது ஒருபாகத்தில் வைத்தவனை எனது அகத்துறுப்பினுள்ளே வைத்தேன் யான் என ஒரு சமத்காரம் தோன்றக் கூறியவாறு. (௧௧)

௧௨. மதிக்கவலைப்புண்டவெண்டயிர்போலமறுகுறுமென்
மதிக்கவலைப்புண்டணிகின்றிலேன்மண்ணும்வானகமு
மதிக்கவலைப்புனல்சூழரங்கா நின்மனத்தருடா
மதிக்கவலைப்புன்பிறப்பினிமேலும்வருங்கொலென்றே.

(இ - ள்.) மண்ணும் வானகமும் மதிக்க - மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் கொண்டாடும்படி, அலை புனல் சூழ்-அலைகளையுடைய கா

வேரிதீர்த்தத்தாற்புடைசூழப்பெற்ற, அரங்கா-திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனே!—நின் மனத்து அருள் தாமதிக்க-உனது திருவுள்ளத்திலுண்டாகும் கருணை (என்பக்கல் உடனே சித்தியாமல்) காலம்நீட்டித்தலால்,—வலை புல் பிறப்பு இனிமேலும் வரும்கொல் என்று-வலைபோன்ற இழிவான சன்மம் இனிமேலும் (எனக்கு) வந்துவிடுமோவென்று சிந்தித்து, மதிக்க அலைப்புண்டவெள் தயிர்போல மறுகுறும் என் மதி கவலை புண் தணிகின்றிலேன்-கடைதலால் அலைக்கப்பட்ட வெண்மையான தயிர்போல (ஒருநிலையில்லாது) சுழல்கிற எனதுமனத்தின் கவலையாகிய விரணம் ஆறப்பெற்றிலேன்; (எ - று.)

எனதுகவலை தணியுமாறு விரைவில் எனக்கு நற்கதியருளவேண்டுமென்பதாம்.

மறுகுறும், மறுகு - பகுதி, உறு - துணைவினை. மனத்திற்குச் சுழற்சி - பலவகைச்சிந்தனையால் தடுமாற்றங்கொள்ளுதல். கவலை-கவற்சி; 'ஐ'விகுதிபெற்ற தொழிற்பெயர். கவலைப்புண்-மனோவியாதி. தணிகின்றிலேன்-தன்மையொருமை யெதிர்மறை நிகழ்காலமுற்று. மண், வானகம் - இடவாகுபெயர்கள். மூன்றாமடியில், மதிக்கச் சூழ் என இயையும். வலை மிருகபக்ஷிகளைப் பந்தப்படுவதுபோலப் பிறப்பு உயிரைப் பந்தப்படுத்துதலால், 'வலைப்புன்பிறப்பு' எனப்பட்டது. இனிமேலும் - இப்பிறப்பொழிந்தபின்பும் என்றபடி. வருங்கொல் என்றதில், கொல்என்ற இடைச்சொல் - ஐயவினாப்பொருளோடு இரக்கத்தையும் உணர்த்தும். (கஉ)

கங. வருந்துவரைப்பட்டமங்கையரெண்மர்மனங்களைக்க
வருந்துவரைப்பட்டவாயரங்கேசனைவஞ்சப்பகை
வருந்துவரைப்பட்டவேழமட்டானைமறந்துலகோர்
வருந்துவரைப்பட்டவீப்போன்மடந்தையர்மால்வலைக்கே.

(இ - ள்.) துவரை வரும் - துவாரகாபுரியில்வந்துசேர்ந்த, பட்டம் மங்கையர் எண்மர் - பட்டத்துத்தேவிமார் எட்டுப்பேர்களுடைய, மனங்களை—, கவரும் - (தன்பக்கல்) இழுக்கின்ற, துவரை பட்ட வாய் - செந்நிறத்தைப்பொருந்திய வாயழகையுடைய, அரங்க ஈசனை - ரங்கநாதனும்,—வஞ்சம் பகைவர் உந்து - வஞ்சனையையுடையபகைவர்(தன்னைநோக்கிச்)செலுத்திய, வரை பட்ட வேழம் - மலையையொத்த (குவலயாபீடமென்னும்) யானையை, அட்டானை-கொன்றவனுமான திருமாலை, மறந்து—, உலகோர்-உலகத்துச்சனங்கள், ஐ பட்ட ஈ போல் - கோழையில் அகப்பட்டு (மீளவொண்ணாதபடி) சிக்கிக்கொண்டழிகிற ஈயைப்போல, மடந்தையர் மால் வலைக்கே வருந்துவர் - மகளிர்பக்கல் கொள்ளும் மோகமாகிய வலையிலே அகப்பட்டு (மீளமாட்டாது) வருந்துவர்; (எ - று.)

இது என்ன அநீதி! என்று உலகத்திற்பெரும்பான்மையான சாதாரண சனங்களின் பேதைமையைக் குறித்து இரங்கியபடி.

ருக்மிணி, ஸத்யபாமை, ஜாம்பவதி, ஸத்யை, மித்ரவிந்தை, ஸுசீலை, ரோகிணி, லக்ஷணை என்கிற எட்டுப்பேரும்—ஸ்ரீ கிருஷ்ணனுடைய பட்டத்

துத்தேவிமார். இப்பெயர்களைச் சிறிதுமாறுபடக் கூறும் புராணங்களும் உண்டு. 'துவரை வரும்' என்றது, கண்ணபிரானுக்கும் அவனது தேவியர்க்கும் அடைமொழியாகத்தக்கது. ஜராசந்தனும் காலயவனனும் ஒருங்குபடையெடுத்துவந்தகாரணத்தாற் கண்ணன் மதுரையைவிட்டுத் துவாரகாபுரியை மேல்கடலிலே நிர்மாணஞ்செய்துகொண்டு அங்குச் சகலசனங்களுடனே குடிபுகுந்தமையும்,வெவ்வேறுநாடுகளிற்பிறந்த ருக்மிணிமுதலிய இளமகளிர் கண்ணனால் மணஞ்செய்துகொள்ளப்பட்டு அவனதுவாசஸ்தாநமான துவாரகைக்கு வந்துசேர்ந்தமையும் காண்க. அம்மனைவியரனைவர்க்கும் ஒருநிகராக மகிழ்ச்சிவிளைத்து வந்தமையை 'மனங்களைக் கவரும்' என்றதனால் வெளியிட்டார். 'எண்மர்மனங்களைக் கவருந் துவரைப்பட்டவா யரங்கேசன்' என்றது, அதரத்தினழகில் ஈடுபாடு. 'பகைவர்' என்றது, கம்சனையும், அவனது பாகன் முதலிய ஏவலாளரையும்.

துவரை-வடமொழிச் சிதைவு. பட்டமங்கையர் - பட்டமகிஷிக்குஉரிய நெற்றிப்பொற்பட்டத்தைத் தரித்துள்ள மாதர்கள். எண்மர்—எட்டு என்ற பகுதி எண்என விகாரப்பட்டது; ம் - பெயரிடைநிலை. இரண்டாமடியில், துவர் ஐ பட்ட என்று பதம் பிரித்து, செந்நிறமும் அழகும் அமைந்த என்று உரைப்பாருமுளர். மூன்றுமடியில், பட்ட - உவமவுருபு. அட்டான், அடு - பகுதி. அகப்பட்டவரை மீளவிடாமையால், மடந்தையரதுமால் 'வலை' எனப்பட்டது. வலைக்கு - உருபுமயக்கம். (௧௩)

௧௪. மாலைக்கல்லாரமடவார்புண்ணாக்கையில்வாஞ்சைவைத்து
மாலைக்கல்லாரம்புலிக்குநையாநிற்பர்மாய்விப்பதோர்
மாலைக்கல்லாரம்புயத்தாளில்வைக்குமதிலரங்க
மாலைக்கல்லாரஞ்சலியாரென்னேசிலமானிடரே.

(இ - ள்.) சில மானிடர் - (உலகத்துச்) சிலமனிதர்கள்,—மாலை கல்லாரம் மடவார் புண் ஆக்கையில் வாஞ்சை வைத்து - மாலையாகத் தொடுக்கப்பட்ட செங்கழுநீர்மலர்களைச் சூடிய மாதர்களுடைய அசுத்தமான உடம்பினிடத்திலே விருப்பம்வைத்து, (அக்காமத்தினால்), மாலைக்கு அல் ஆர் அம்புலிக்கு நையாநிற்பர் - (காமோத்தீபகப்பொருள்களான) அந்திமாலைப்பொழுதுக்கும் இரவில்விளங்குகின்ற சந்திரனுக்கும் வருந்திநிற்பார்கள்; மாய்விப்பது ஓர் மாலை கல்லார் - (இவ்வாறு தங்களை) அழியச்செய்வதான ஒப்பற்ற காமமயக்கத்தைக் களைந்தொழிக்கமாட்டார்கள்; அம்புயம் தாளில் வைக்கும் - தாமரைமலர்போன்ற (தனது) திருவடிகளில் (அடியார்களை) இருத்துகிற, மதில் அரங்கம் மாலை - (எழு)மதிள்கள்சூழ்ந்த திருவரங்கத்திற் பள்ளிகொண்டிருக்கிற திருமாலை, கல்லார் - துதிக்கமாட்டார்கள்; அஞ்சலியார்-கைகூப்பிவணங்கமாட்டார்கள்; என்னே-இதுஎன்னபேதைமையோ?

எம்பெருமானுக்கு ஆட்பட்டு உய்யாமல் விஷயாந்தரங்களில் ஆழ்ந்து அழிகிற பேதைமாந்தர்களுடைய தன்மையைக்குறித்து இரங்கிக் கூறிய வாறும்.

மாலைக்கல்லாரம் - கல்லாரமாலை என முன்பின்னாக மாற்றிக்கூட்டிச் செங்கழுநீர்மலர்மாலை யென்னலாம். கல்ஹாரம் - வடசொல். 'மாலைக்கல்லாரமடவார்' என்றது, மேனிமினுக்குபவரென்றபடி. மடவார் இளமையை அல்லது மகளிர்க்குஉரிய பேதைமைக்குணத்தை யுடையவர். வாஞ்சை - வாஞ்சா என்ற வடசொல்லின் விகாரம். நையா - உடன்பாட்டுஇறந்தகால வினையெச்சம். மூன்றாமடியில், மால் - பெண்மோகம். கல்லல் - கல்லுதல், வேரொன்றினைத் பெயர்த்தொழித்தல். 'அம்புயத்தாளில் வைக்கும்' என்றதனால், திருவடியே வீடாயிருக்கு மென்றபடி. ஸ்ரீரங்கம் ஸப்தப்ராகாரமுடைய தாதலால், அச்சிறப்பு விளங்க, 'மதிலரங்கம்' எனப்பட்டது. நான்காமடியில், கற்றல் - எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லிப்பழகுதலும், அவனுடைய சொரூபகுணவிபவங்களைக் கூறுகிற நூல்களைப் படித்தலும், அவனைப் புகழ்ந்துகூறுதலும். மானிடர் - மாநுஷரென்ற வடசொல்லின் திரிபு; காசியபமுனிவரது மனைவியருள் மநுவின் சந்ததியாரென்று காரணப்பொருள்படும். தாம்காதலித்த மகளிரின் சேர்க்கை நேராத விரகதசையில் அந்திப்பொழுதும், சந்திரனதுநிலாத்தோற்றமும் அத்துயரை வளர்த்து வருத்து மென்க. புண்ணாக்கை - மாம்சசரீரம். (கச)

கரு. மானிடராகவரலரிதோர்மண்டலத்தினெறி
மானிடராகமிலாதவராதன்மலரயனார்
மானிடராகமத்தாலன்பராயவரங்கத்துளெம்
மானிடராகமலரடிக்காட்படும்வாழ்வரிதே.

(இ - ள்.) ஓர் மண்டலத்தின் - ஒப்பற்ற இந்தநிலவுலகத்திலே, மானிடர் ஆக வரல் - மனிதராய்ப் பிறத்தல், அரிது - அருமையானது; (அங்ஙனம் மனிதசன்மமெடுத்தாலும்), இடர் ஆகம் இலாதவர் ஆதல் (அரிது) - துன்பம்மிக்க விகாரசரீரமில்லாதவராதல் அரியது; (அங்ஙனம் உடற்குறையில்லாதவராயினும்), நெறிமான் (ஆதல் அரிது) - நீதிநெறியுடையவனாயிருத்தல் அருமையானது; (அங்ஙனம் சன்மார்க்கத்தில் ஒழுகினாலும்),—மலர் அயனார்-தாமரைமலரில்தோன்றிய பிரமதேவரும், மான் இடர்-மானை இடக்கையிலேந்திய சிவபிரானும், ஆகமத்தால் - சாஸ்திரங்களிற் கூறிய முறைப்படி, அன்பர் ஆய - தொண்டுபூண்டொழுகுதற்கு இடமான, அரங்கத்துள்-ஸ்ரீரங்கத்தில் (பள்ளிகொண்டருள்கிற), எம்மான் - எம்பெருமானுடைய, இடம் ராகம் மலர்அடிக்கு - பெருமையுடைய சிவந்ததாமரைமலர்போன்ற திருவடிகளுக்கு, ஆள் படும் - அடிமைசெய்து ஒழுகுகிற, வாழ்வு - வாழ்க்கை, அரிதே - (பெறுதற்கு) அருமையானதே; (எ - று.)

திருவரங்கநாதனான திருமாலினது திருவடிகளுக்கு அடியவராதல் நல்வினைப்பயனாலன்றி நேராது என்பதாம். "அரியது கேட்கின் வரிவடிவேலோய், அரிதரிது மானிடராதலரிது, மானிடராயினுங் கூன் குருடு செவிடு, பேடு நீக்கிப் பிறத்த லரிது, பேடுநீக்கிப் பிறந்தகாலையும், ஞானமுங் கல்வியு நயத்தலரிது, ஞானமுங்கல்வியுநயந்தகாலையுந், தானமுந்தவமுந்தான்செயலரிது, தானமுந் தவமுந் தான்செய்வ ராயின், வானவர்நாடு வழிதிறந்திடுமே" என்றதனோடு இச்செய்யுளின் முன்னிரண்டடியை ஒப்பிடுக.

நெறிமான் என்பதில், மான் - ஆண்பாற்பெயர்விகுதி. அயனார், மாணிடர் - உயர்வுப்பன்மை. மலர் - திருமாலின் நாபித்தாமரைமலர். அயன் - அஜன்; இவ்வடமொழிப்பெயர் - திருமாலினிடத்தினின்று தோன்றினவனென உறுப்புப்பொருள்படும்; அ - விஷ்ணு. சிவபிரான் இடக்கையிலேந்திய மான், தாருகவனமுனிவர் ஏவினது. நான்காமடியில், மான் - மஹாந். இடராகம் என்பதற்கு - தன்னிடத்துச் செந்நிறத்தையுடையஎன்று உரைத்தலு மொன்று. எம்மானிடம் - எம்பெருமானுடைய என்று உரைத்து,இடம் என்பதை ஆறனுருபின்பொருளில்வந்த சொல்லுருபென்பர் ஒருசாரார். ஈற்று ஏகாரம் - தேற்றம். 'இலாதவனுதல்' என்றும் பாடம். 'அரிது' என்பதும், 'ஆதல்' என்பதும் எடுத்துப் பிறவிடத்தும் கூட்டப்பட்டன. (கரு)

௩௬. அரிதாமரைக்கணந்தோலுடுத்தாரயனார்க்கரியான்
அரிதாமரைக்கணம்மான்றிருப்பாதமடைமின்சன்மம்
அரிதாமரைக்கணந்தங்காதுயிரவனூர்வினவில்
அரிதாமரைக்கணமீர்த்தோடும்பொன்னியரங்கமன்றே.

(இ - ள்.) அரி - இந்திரனுக்கும், தாம் அரைக்கண் அம் தோல் உடுத்தார் - தாம் இடையிலே அழகிய புலித்தோலை யுடுத்துள்ளவரான சிவபிரானுக்கும், அயனார்க்கு - பிரமதேவர்க்கும், அரியான்-(அறிதற்கு) அரியவனும், அரி-ஹரிஎன்னும் ஒருதிருநாமமுடையவனும், தாமரை கண் அம்மான்-செந்தாமரைமலர் போன்ற திருக்கண்களையுடையதலைவனுமான எம்பெருமானுடைய, திரு பாதம் - திருவடிகளை, அடைமின்-சரணமடையுங்கள்; (அதனையடைவதனாற் பயனென்னவெனின்,—) சன்மம் அரிது ஆம் - மீண்டும் பிறப்புஇல்லாமற்போம்: (அது எங்ஙனமெனின்,—)உயிர் அரைக்கணம் தங்காது - (சரணமடைபவருடைய) உயிர் (முத்திபுகுமேயன்றி மறுபடி ஒருடம்பில்) அரைக்ஷணப்பொழுதும் பொருந்திநிற்கமாட்டாது: அவன் ஊர் வினவில் - அப்படிப்பட்ட மகாவிபவமுடைய எம்பெருமானது திருப்பதி (யாது என்று) வினவினால், அரி தாம் மரை கணம் ஈர்த்து ஓடும் பொன்னி அரங்கம்அன்றே - சிங்கங்களையும் தாவிப்பாயும் மான்களின் கூட்டத்தையும் ஒருங்கு இழுத்துக்கொண்டு ஓடிவருகிற உபயகாவேரியின் மத்தியிலுள்ள திருவரங்கமன்றோ? (எ - று.)—அன்றே - தேற்றம்.

முதலடியில், அரி-ஹரி; (பகைவரை) அழிப்பவன். தாம்-அசை. அரைக்கண், கண்-ஏழனுருபு. அரை-பாதி; உடம்பிற் பாதியளவிலுள்ள உறுப்பான இடையைக் குறிக்கும்போது ஆகுபெயர். இரண்டாமடியில், அரி - ஹரி; (அடியார்களுடைய துயரத்தை) ஒழிப்பவன். தாமரைக்கண்அம்மான்-புண்டரீகாக்ஷன். அரி - செவ்வரிபரந்த கண்என்றலும் ஒன்று; அரி-உத்தமலக்ஷணமான சிலசிவந்தரேகைகள். இனி, அரி - (காண்பவர்களுடைய கண்களையும் மனத்தையும்) அபஹரிக்கிற [கவர்கிற]கண் எனினுமாம். அம்மான்-அப்படிப்பட்ட மகான். ஜந்மம் - வடசொல். அரிது என்பதில், அருமை - இன்மைமேலது. கணம்-க்ஷணம்; வடமொழிவிகாரம். நான்காமடியில், அரி-ஹரி; யானை முதலிய விலங்குகளை அரிப்பது: அரித்தல் - அழித்தல். தாம் - தா

கும் என்பதன் விகாரம்; கீழ் கக - ஆஞ் செய்யுளில் 'வாம்'என்பது போல. ஸஹ்யபருவதத்தினின்று உற்பத்தியாகிப் பெருவெள்ளமாய்ப் பெருகிவரும் விசையில்அக்குறிஞ்சிநிலக்கருப்பொருளாகிய சிங்கம் மான் முதலிய விலங்குகளை அடித்துத்தள்ளிக்கொண்டுவரும் காவேரியென்க; "மலைத்தலையகடற் காவிரி, புனல்பரந்துபொன்கொழிக்கும்" என்றபடி தான் பெருகும்போது பொன்னைக் கொழித்துக்கொண்டு வருதலால், காவேரிக்குப் பொன்னியென்று பெயர்; இ - உடைமைப்பொருள் காட்டும் பெண்பால்விகுதி.

செய்யுளடிகளினிறுதியில் சந்தி அநித்யமென்பது இலக்கணநூலார் துணிபாதலின்,நின்றஅடியின் ஈற்றோடு வரும்அடியின்முதல் சேருமிடத்துப் புணர்ச்சி கொள்ளப்பட்டிலது, யமகப்பொருத்தத்தின்பொருட்டு. இதனை, மேல் இங்ஙனம் வருமிடங்கட்கெல்லாங் கொள்க. (கசு)

கஎ. அரங்காதுவார்கணைகண்வள்ளைகோங்கினரும்புமங்கை—
அரங்காதுவார்முலையென்றைவர்வீழ்ந்தனராடரவின்
அரங்காதுவாரமிலாமணியேயணியார்மதில்சூழ்
அரங்காதுவாரகையாயடியேனுன்னடைக்கலமே.

(இ - ள்.) 'மங்கையர் - இளமகளிருடைய, கண் - கண்கள், அரம் காது வார் கணை - அரமென்னுங்கருவியினால் அராவப்பட்ட [கூரிய]நீண்ட அம்பு போலும்: அம் காது வார் முலை - (அம்மாதரது) அழகிய காதுகளும் கச்சிறுக்கிய கொங்கைகளும், வள்ளை கோங்கின் அரும்பு - (முறையே) வள்ளையென்னும் நீர்க்கொடியின் இலையையும் கோங்கமரத்தின் அரும்பையும்போலும்,' என்று - என்று (உவமமுகத்தாற் புனைந்து) கருதி, ஐவர் வீழ்ந்தனர்-பஞ்சேந்திரியங்களாகிய ஐந்துபேர் (அம்மகளிர்பக்கல்) ஆசைகொண்டு (அப்பெண் மோகக்கடலில்) விரைந்து விழுந்தன்மையர்; ஆடு அரவு இன் அரங்கா-படமெடுத்தாடுகிற(காளியனென்னும்)பாம்பைஇனியகூத்தாடுமிடமாகக்கொண்டவனே! துவாரம் இலா மணியே - புரைசலில்லாத முழுமாணிக்கம்போன்றவனே! அணி ஆர் மதில் சூழ் அரங்கா - அழகுநிறைந்த மதிள்களாற் சூழப்பட்ட திருவரங்கநகருடையவனே! துவாரகையாய் - (கிருஷ்ணவதாரத்தில்) துவாரகாபுரியில் எழுந்தருளியிருந்தவனே! அடியேன் உன் அடைக்கலம் - நான் உனக்கு அடைக்கலப்பொருளாகின்றேன்; (எ - று.)

யான் உன்னையே சரணமாகஅடைந்து உன்னாற்பாதுகாக்கப்படும்பொருளாயினேனாதலால், என்னைப் பஞ்சேந்திரியங்களின் வசப்பட்டு அழியாதபடி பாதுகாத்தருளவேண்டுமென்பதாம்.

அரம் - வாள்விசேடம். அரங்காது வார்கணை - "வாளரந்துடைத்த வைவேல்" என்றாற்போலக் கொள்க. காது வார் என்ற இரண்டும் - வினைத்தொகை. வார் - உரிச்சொல்லுமாம். வள்ளைபோலும் காது, கோங்கினரும்புபோலும் முலை என முறையே சென்றுஇயைதல், முறைநிரனிறைப்பொருள்கோள். இரண்டாமடியில், வார் - கஞ்சுகம். மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளை ஐவர் என உயர்திணையாகக்கூறியது, இழிப்புப்பற்றிய திணைவழுவமைதி; தொல்காப்பியவுரையில் நச்சினார்க்கினியர்

"தாம்வந்தார் தொண்டனுர்' என்பது, உயர்சொல் குறிப்புநிலையின் இழிபு விளக்கிற்று' என்பது, இங்கு உணரத்தக்கது. ஐவர்-தொகைக்குறிப்பு. வீழ்ந்தனரென இறந்தகாலத்தாற் கூறினது, விரைவை விளக்கும். மூன்றுமடியில், அரங்கு-ரங்கமென்ற வடசொல்லின் விகாரம். த்வாரம், த்வாரகா-வடசொற்கள். அனைவராலும் விரும்பியேற்றுக்கொள்ளப்படுதலும், மதித்தற்கரிய மதிப்புடைமையும், சிறப்பும் பற்றி, 'மணியே' என்றார். 'அடியேன்' என்றது, பணிவை விளக்கும். 'அடியேன் உன் அடைக்கலம்' என்றவிடத்து, தன்மையிற் படர்க்கை வந்த இடவழுவமைதியும், இழிப்பினுல் [பணிவுபற்றி] உயர்திணை அஃறிணையாக்கூறப்பட்ட திணைவழுவமைதியும் இருத்தல்காண்க. கண்ணன் காளியனுடைய முடியின்மேல் ஏறி நர்த்தனஞ்செய்தருளும் போது ஐந்துதலைகளையுடைய அந்நாகம் எந்தெந்தப் படத்தைத் தூக்குகின்றதோ அந்தப்படத்தைத் துவைத்து நர்த்தனஞ்செய்து நின்று அப்பாம்பின் வலிமையை யடக்கி அதனை மூர்ச்சையடையச் செய்கையில் பலவகைநடனத்திறங்களைச் செய்து காட்டியமை தோன்ற, 'ஆடரவினரங்கா' என்றார்.

முதலடியினிறுதியில், மங்கையர் என்ற பெயர்ப்பகுபதத்தினிடையே சந்தியால் வரும் உடம்படுமெய்யாகிய யகரத்தோற்றத்தைக் கொள்ளாது விட்டது, யமகநயத்தின்பொருட்டு. இப்படி பகுபதத்தின் அல்லது பகாப்பதத்தி னிடையிலே யுள்ள எழுத்துக்களை யமகப்பொருத்தத்தின்பொருட்டுப் பிரித்து எழுதியுள்ள விடங்களிலெல்லாம் மூலத்தில் (–) இக்குறி இடப்பட்டிருக்கிறது. இங்ஙனம் சொல்லணிக்காகப் பிரித்துக்காட்டியிருந்தாலும் பொருள் நோக்கும்பொழுது சேர்த்துப் படித்துக்கொள்க. (கஎ)

கஅ. அடைக்கலந்தாயத்தவர்போலுடலுறையைவரையும்
அடைக்கலந்தாயுலகங்கொண்டதாள்களுக்கண்டமுண்டால்
அடைக்கலந்தாயரங்காவாயர்பாடியிலன்றுநெய்பால்—
அடைக்கலந்தாய்வைத்துவாய்நெரித்தூட்டவழுமையனே.

(இ - ள்.) அண்டம்-அண்டகோளங்களை, உண்டு - உட்கொண்டு, ஆல் அடை கலந்தாய்-ஆலிலையிற்சேர்ந்து(பிரளயப்பெருங்கடலிற்)பள்ளிகொண்டவனே! அரங்கா—! அன்று-அக்காலத்தில் [முன்புகண்ணனுகத்திருவவதரித்தபொழுது], ஆயர்பாடியில் - திருவாய்ப்பாடியிலே, நெய்-நெய்யை [எண்ணெயை], பாலடை கலம் வைத்து - பாலடையாகிய பாத்திரத்திற் பெய்துகொண்டு, தாய் - (உன்னைவளர்த்த) தாயாகிய யசோதைப்பிராட்டி, வாய் நெரித்து ஊட்ட-(உனது) வாயில்வைத்து அவ்வாயை நெரித்து உண்பிக்க, அழும்-(எதிரிட்டுக்கொண்ட மனிதப்பிறப்புக்கேற்ப எளியசிறுகுழந்தைபோலவே) அழுத, ஐயனே - இறைவனே!—தாயத்தவர்போல் - பங்காளிகள் போல, உடல் உறை - (விலக்கவொண்ணுதவராய் எமது) உடம்பாகிய குடிசையிலே ஒருங்கு உடன் இருக்கிற, ஐவரையும் - ஐந்து இந்திரியங்களையும், அடைக்கலம்-(விஷயாந்தரத்திற் செல்லவொட்டாமல்)அடக்கிவசப்படுத்திவைக்க வல்லமையுடையோமல்லோம், (யாம்);தாய் உலகம் கொண்ட தாள்களுக்கு அடைக்கலம் - தாவி உலகங்களை அளந்துகொண்ட (உனது)திருவடிகளுக்கு அடைக்கலப்பொருளாகிறேம்; (எ - று.)

யாம் பஞ்சேந்திரியநிக்ரகசக்தியையுடையோமல்லோமாயினும் உனது திருவடிகளிற் சரண்புகுந்தோ மாதலால், எங்களை நீ பாதுகாத்தருளக் கடவை யென்பதாம்.

அடைக்கலம்-தன்மைப்பன்மையெதிர்மறைமுற்று; கு-சாரியை, அல்-எதிர்மறையிடைநிலை அடைத்தல் - இப்பொருளதாதலை, "ஐவரை யகத்திடை யடைத்த முனி" என்ற விடத்துங் காண்க. தாயம்-பங்குக்கு உரிய பொருள்; அதனைப்பெறுதற்கு உரியவர், தாயத்தவர்; தாயாதிகள், ஞாதிகள். ஓர்இல்லத்திலே ஒருங்குவசித்தற்கு உரியவர்களான அவர்கள், ஓர்உடம்பிலே ஒருங்குவசிக்கின்ற ஐம்பொறிகட்கு உவமைகூறப்பட்டனர்; இவ்வுவமையில் 'பங்காளியோ பகையாளியோ' என்னும்படி தீங்குசெய்யுந்தன்மையும் விளங்கும். ஐவரையும், உம் - இனத்தென்றறிபொருளில்வந்த முற்றும்மை. தாய்என்றதெரிநிலைவினையெச்சத்தில், தாவுஎன்பதன் விகாரமான தா-வினைப்பகுதி, ய் என்ற விகுதியே இறந்தகாலங்காட்டும். அண்டம் - உலகவுருண்டை. அடைஎன்றசொல்-இலையென்றபொருளில் வருதலை, 'அடைக்காய்' என்றவிடத்திலுங் காண்க. ஆ-பசு; அதனையுடையவர், ஆயர்: இடையர்; ய் - எழுத்துப்பேறு. அவர்கள்வசிக்கிற ஊர், ஆயர்பாடி. கண்ணபிரான் வளர்ந்த இடம், கோகுலமென்னும் பெயரினது. 'அன்று' எனச் சுட்டினது, கதையை உட்கொண்டு. பாலடை - பால்புகட்டும் சங்கு; பால்அடுக்கப்பெறுவதெனப் பொருள்படுங் காரணக்குறி; கலம் - உண்கலம். "பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய வித்தகன்" என்றபடி அருமையான பரத்வத்தையுடையஎம்பெருமான் அதனை இருந்ததுதெரியாதபடி விட்டெளிமைமேற்கொண்டு பாவனைசெய்த சௌலப்பியம்விளங்க,'ஆயர்பாடியிலன்று நெய்பாலடைக்கலந்தாய்வைத்துவாய்நெரித்தூட்டவழுமையனே' என்றார்.

கசு. ஐயமருந்திவையுண்ணென்றுமாதரட்டூட்டுஞ்செல்வம்
ஐயமருந்தினைப்போதேயவரின்பமாதலினால்
ஐயமருந்தியக்கங்குறுகாமுன்னரங்கற்கன்பாய்
ஐயமருந்தியும்வாழ்மின்கண்மேலுமக்காநந்தமே.

(இ - ள்.) 'ஐய - ஐயனே! இவை - இவ்வுணவுகள், மருந்து-(இன்சுவை மிகுதியால்) தேவாமிருதம்போன்றன: உண்-(இவற்றை) உண்ணக்கடவை,' என்று - என்று (அன்புபாராட்டி உபசாரவார்த்தை) சொல்லி, மாதர்-காதற்குஇடமான உரிமைமகளிர், அட்டு ஊட்டும் - (தாமே) சமையல்செய்து உண்பிக்கும், செல்வம் - ஐசுவரியம், ஐயம் - சந்தேகத்துக்கு இடமானது [நிலையற்றது என்றபடி]; அவர் இன்பம் - அந்தமகளிருடைய போகரசமும், அருந் தினை போதே-சிறிய தினையென்னுந் தானியத்தி னளவினதான அதிசொற்பகாலத்ததே; ஆதலினால்-ஆதலால், ஐ அமரும் தியக்கம் குறுகாமுன்-கோழை (கண்டத்திற்) பொருந்துகிற கலக்கம் [அந்திமதசையில் ஆகின்ற தமோற்றம்] நெருங்குதற்குமுன்னமே, ஐயம் அருந்தியும் அரங்கற்கு அன்பு ஆய் வாழ்மின்கள்-பிச்சையெடுத்துப்புசித்தாயினும் ரங்கநாதன்விஷயத்திற் பக்திகொண்டு சீவியுங்கள்; (இப்படிசெய்வீராயின்), மேல் - இனிமேல்

[இப்பிறப்பு ஒழிந்தவளவில் என்றபடி], உமக்கு - உங்களுக்கு, ஆநந்தமே - (பரமபதத்து) நித்தியாநந்தமே உண்டாம்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - பிரி நிலையோடு தேற்றம்.

செல்வநிலையாமையையும்சிற்றின்பத்தின்சிறுமையையும்அறிந்து அவற்றைவெறுத்து, முற்றமூத்தநிலையில் மனம்ஒருநிலைப்படா தாதலால், இம்மையில் வருந்தியாவது இளமைதொடங்கியே அழகியமணவாளனுக்குத் தாசராவீரேல், மறுமையில் பேரின்பமடைந்து அழிவிலாநந்தம் பெறலாமென்று உலகத்தார்க்கு உணர்த்தியவாறும்.

ஐய-ஸ்வாமீ; இவ்விளி, அன்பையும் மரியாதையையும் காட்டும்: அண்மைவிளி யாதலின், ஈறுஅழிந்தது. மருந்து=சாவாமருந்து; சாவாமைக்குக் காரணமாகிய மருந்து. 'இவை' என்ற பன்மையால், பலவேறுவகைப்பட்ட உண்டிகளும் சிற்றுண்டிகளு மென விளங்கும். ஊட்டும், உண் என்பதன் பிறவினையான ஊட்டு - பகுதி. செல்வவானுதலால் பரிசாரகர்பலர் இருக்கையிலும் மனைவியரே சமைத்து உண்பித்தல், அன்புடைமையால் இன்பஞ்செய்தற்பொருட்டு. 'ஊட்டும்' என்ற சொல்லின் ஆற்றலால், தாம் கையில் வாங்கி யுண்ணுமல் மனைவியர்தாமே வாயிற்போகட உட்கொள்ளுதல் தோன்றும். செல்வச்செருக்கினுல் சிறிதளவே உண்டு மிச்சத்தை வேண்டாவென்றுவிலக்குதலால்,'சாமி! அமிருதம் இவைஉண்' என்று உரிமைமகளிர் வேண்டலாயிற்று. செல்வம் என்ற பெயர்தானே அதன்நிலையின்மையை விளக்கும். செல்வம் - நிலைத்திராமல் நீங்கிச் செல்வதென்று பொருள்படுங் காரணக்குறி: செல் - பகுதி, அம்-கருத்தாப்பொருள்விகுதி, வ்-எழுத்துப்பேறு. "அறுசுவையுண்டி யமர்ந்தில்லா ளூட்ட, மறுசிகைநீக்கி யுண்டாரும் - வறிஞராய்ச்,சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்று, உண்டாக வைக்கற்பாற்றன்று," "முல்லைமுகை சொரிந்தாற்போன் றினிய பாலடிசில் மகளிரேந்த, நல்ல கருனையால் நாள்வாயும் பொற்கலத்துநயந் துண்டார்கள், அல்லலடைய அடகிடுமி னோட்டகத்தென்றுஅயில்வார்க்கண்டும், செல்வம் நமரங்காள் நினையன்மின் செய்தவமே நினைமின்கண்டீர்", "ஆமின்சுவையவையாறோ டடிசிலுண்டார்ந்தபின், தூமென்மொழிமடவா ரிரக்கப் பின்னுந் துற்றுவார், ஈமி னெமக்கொரு துற்றென் றிடறுவ ராதலிற், கோமின்துழாய்முடி யாதியஞ்சோதிகுணங்களே"என்பன இங்குநோக்கத்தக்கவை.

அருமை - சிறுமையின்மேலது. தினை - சிறுமைக்குக் காட்டுவதோரளவை. போகாதே,ஏ-தேற்றத்தோடு இழிவுசிறப்பு. செல்வநிலையாமையையும், இன்பநிலையாமையையும்முன்னிரண்டடியில்விளக்கினவர், மூன்றாமடியில் இளமைநிலையாமையையும், யாக்கைநிலையாமையையும் விளக்கினர். தியக்கம்-தியங்கு என்ற பகுதியின் தொழிற்பெயர்; அம் விகுதி, வலித்தல்-விகாரம். ஐ அமர் உந்தி அக்கம் குறுகாமுன் எனப் பதம்பிரித்து, கோழை (கண்டத்தில் வந்து சிக்கிக்கொண்டு வெளிவருதற்பொருட்டுப்) போரைச் செலுத்தி இந்திரியங்கள் ஒடுங்காதமுன்னே யென்று உரைத்தலு மொன்று. "புலன்கள் நைய மெய்யில்மூத்துப் போந்திருந் துள்ளமெள்கிக், கலங்க ஐக்கள் போதவுந்திக் கண்டபிதற்றாமுன், அலங்கலாய தண்டுழாய்கொண்

டாயிரநாமஞ்சொல்லி, வலங்கொள் தொண்டர் பாடியாடும் வதரி வணங்கு துமே" என்றார், பெரியதிருமொழியிலும். அக்கம்-அக்ஷ மென்ற வடசொல்லின்விகாரம். இனி, அக்கம் குறுகாமுன்-கண்பார்வை குறைதற்குமுன்னே எனினுமாம். அருந்தியும்,உம்-இழிவுசிறப்பு. வாழ்மின்கள், கள்-விகுதிமேல் விகுதி. மேல்ஆநந்தம்-மேன்மையான ஆநந்தத்தைத்தருவதாம் எனினுமாம்.

உ0. நந்தமரங்கலேமாகடலேழுநடுங்கவெய்த
நந்தமரங்கனைப்பற்றுநெஞ்சேவினைநையுமுன்கை
நந்தமரங்கனையார்மயல்போம்வருநற்கதிவா
ரந்தமரங்கனைவர்க்குமெஞ்ஞான்றுநரகில்லையே.

(இ - ள்.) நெஞ்சே - என்மனமே! மரம் (ஏழும்) நந்த - ஏழுமராமரங்களும் அழியவும் [துளைபடவும்], கலே மா கடல் ஏழும் நடுங்க - ஒலிக்கின்ற பெரியஏழுசமுத்திரங்களும் அஞ்சிநடுங்கவும் [வெம்மையை ஆற்றாமல் கலங்கிக்குழம்பவும்], எய்த - அம்புதொடுத்த, நம்தம் அரங்கனை - திருவரங்கத்து எம்பெருமானை [நம்பெருமாளை], பற்று - சரணமடைவாய்; (அங்ஙனம் அடைந்தால்), வினை நையும் - கருமங்கள் அழிந்துபோம்; முன் கை நந்து அமர் அங்கனையார் மயல் போம் - முன்னங்கைகளிற் சங்குவளையல்கள் பொருந்திய மாதர்கள்பக்கல் உண்டாகும் ஆசைமயக்கமும் ஒழியும்; நல்கதி வாரம் வரும் - (எல்லாப்பதவிகளினுஞ்) சிறந்த பதவியாகிய பரமபதம் சித்திக்கும்; தமர் அனைவர்க்கும் -(நமக்கேயன்றி) நம்மைச்சார்ந்தவரெல்லார்க்கும், எஞ்ஞான்றும் - எப்பொழுதும், நரகு இல்லை - நரகமடைதல் இல்லையாம்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - தேற்றம். அங்கு - அசை.

உவர்நீர்க்கடலின்மேல் இராமபிரான் ஆக்நேயாஸ்த்ரந்தொடுக்கத் தொடங்கியவளவில்,அதன்வெப்பத்திற்கு ஆற்றாது எழுகடல்களும் கொதித்தனவென்பதை, "அண்டமூலத்துக்கப்பாலாழியுங் கொதித்த தேழு,தெண்டிரைக்கடலின் செய்கை செப்பி யென் தேவன்சென்னி, பண்டைநாளிருந்த கங்கைநங்கையும் பதைத்தாள் பார்ப்பான்,குண்டிகையிருந்தநீரும் குளுகுளு கொதித்ததன்றே" என்றதனால் அறிக. "ஒற்றைச்சரஞ் சுட்டவுட்கடல்போற் புறத்தோலமிட, மற்றைக்கடல் வெந்த தெவ்வண்ணமோ மதமாவழைக்க, அற்றைக்குதவுமரங்கர் வெங்கோபத்தை யஞ்சி யரன், கற்றைச்சடையினிடையே வெதும்பினள் கங்கையுமே" என்றார் திருவரங்கத்துமாலையிலும். 'ஏழும்' என்பதை 'மரம்' என்பதனோடும் கூட்டுக; கடைநிலைத்தீவகம். பற்றுதல் - இடைவிடாது நினைத்தல். நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாதலால், 'வினை' எனப் பொதுப்படக் கூறினர். நைதல் - நசித்தல். 'முன்கை' என்றதில், முன் என்பது - இடமுணர்த்தும். நந்து - சங்கு; அதனாலாகிய வளைக்குக் கருவியாகுபெயர். அங்கநா என்ற வடசொல், அங்கனை யென விகாரப்பட்டது; அச்சொல், அழகிய் தனது அங்கங்களாற் பிறரைத் தன்னிடம் சேர்ப்பவ ளென்று பொருள்படும்.

பொதுநகரத்துக்கும்சிறப்புனகரத்துக்கும்வரிவடிவில் மிக்கவேறுபாடு இருப்பினும், ஒலிவடிவில் மிக்கவேறுபாடு இல்லாமைபற்றி, யமகம் திரிபு சிலேடை இவற்றில் நகரனகரங்களை அபேதமாகக்கொண்டு அமைத்தல் மர

பாதலால், 'வானம்' என்னவேண்டியவிடத்து 'வாநம்' எனப்பட்டது. இங்ஙனம் யமகநயத்தின்பொருட்டு வரிவடிவின் வேறுபாடு கருதாது ஒலிவடிவொற்றுமையால் ஒன்றுக்குஒன்றாகக் கொள்ளப்பட்ட எழுத்துக்கள், தடித்தவெழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன. (உ0)

உக. நரகந்தரம்புவியிம்மூன்றிடத்துநனிமருவு
நரகந்தரங்கித்துவெங்காலற்கஞ்சுவர்நாயகவா
நரகந்தரம்புட்பிடரேறரங்கர்நல்லாய்க்குலத்தி
நரகந்தரங்கமுற்றாரடியார்க்குநமனஞ்சுமே.

(இ - ள்) நரகு - நரகம், அந்தரம் - சுவர்க்கம், புவி - பூமி, இ மூன்று இடத்தும் - என்கிற இந்த மூன்றுஉலகங்களிலும், நனி மருவுநர் - மிகுதியாகப் பொருந்தியுள்ள சனங்களெல்லாம், அகம் தரங்கித்து வெம் காலற்கு அஞ்சுவர் - மனம்அலைந்து கொடிய யமனுக்குப் பயப்படுவோர்கள்; நாயக வாநர கந்தரம் புள் பிடர் ஏறு அரங்கர்-சிறந்த குரங்கான அநுமானுடைய கழுத்தின்மேலும் (பக்ஷிராஜனான) கருடனுடைய பிடரியின்மேலும் ஏறுகிற திருவரங்கரும், நல் ஆய்க்குலத்து இநர்-சிறந்தஇடையர்குலத்தில்(வளர்ந்து அதனைவிளக்கின) சூரியன் போன்றவரும்,தரங்கம் அகம்உற்றார்-திருப்பாற் கடலைவசிக்குமிடமாகக்கொண்டுஅங்குவாழ்பவருமானநம்பெருமாளுடைய, அடியார்க்கு-தொண்டர்கட்கு, நமன் அஞ்சும் - அந்த யமன் பயப்படுவான்.

மூன்றுஉலகங்களிலுள்ளாரும் யமனுக்கு அஞ்சுவர்; அந்த யமன் திருமாலடியார்க்கு அஞ்சுவன் என்று அடியார்களின்பெருமையை விளக்கியவாறாயிற்று.ஆதலால்,அனைவரும்எம்பெருமானுக்குஅடியராய்உய்யக்கடவரென்பது, குறிப்பெச்சம். இங்ஙனம் இவர்கள் அஞ்சுதற்கும், அவன் அஞ்சுதற்கும் காரணம் - முறையே மூவுலகத்தாரும் தீராவினையையுடைமையும், திருமாலடியார்வினைதொலைத்திருத்தலு மென்க. அடியார்க்கு நமன் அஞ்சுதலை, "திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன்னாமம், மறந்தும்புறந்தொழாமாந்த - ரிறைஞ்சியுஞ், சாதுவராய்ப் போதுமின்க ளென்றான் நமனுந் தன், தூதுவரைக் கூவிச் செவிக்கு" என்ற அருளிச்செயலினாலும் அறிக. 'ஒருகாலத்தில் பாசத்தைக்கையிலெடுத்துக்கொண்டு பிராணிகளைக்கொண்டுவரும்படி புறப்பட்ட தன்சேவகனை யமதருமராசனானவன் அந்தரங்கத்தில் அழைத்து 'ஓ படனே! நீ உன்தொழிலை நடத்திவருகையில் ஸ்ரீ மதுசூதநனை ஆசிரயித்தவரைத் தொடாதே, விட்டுவிடு; நான் மற்றவர்களுக்குப் பிரபுவேயல்லது வைஷ்ணவர்களுக்குப் பிரபுவல்லேன்.........'கமலநயன! வாசுதேவ! விஷ்ணுவே! தரணிதர! அச்சுத! சங்கசக்ரபாணி! நீ அடியேங்களுக்குச் சரணமாகவேண்டும்' என்று எவர்கள் சொல்லிக்கொண்டேயிருப்பார்களோ, அப்படிப்பட்டமகாபரிசுத்தபுருஷரை ஓ படனே! நீ கண்ணெடுத்துப்பாராமல் தூரமாய்ஓடிப்போ; விகாரநாசாதிகளில்லாமல் சத்தியஞானாநந்தமயனாய்ப் பிரகாசிக்கின்ற அந்த எம்பெருமான் எவனுடைய இருதயகமலத்தில் வாசஞ்செய்துகொண்டிருப்பனோ, அந்தமகாபுருஷனுடைய கடாக்ஷம் பிரசரிக்குமிடங்களிலெல்லாம் நீ செல்லத்தக்கவனல்லை, நானும் செல்லத்தக்கவனல்லேன்; பதறிச்சென்றால், அவ்வெம்பெருமானுடைய திருவாழியின்

தேஜோவிசேஷத்தினாலே பதராக்கப்படுவோம்; அந்தமகாபுருஷன் ஸ்ரீவைகுண்டதிவ்யலோகத்துக்கு எழுந்தருளத்தக்கவன்' என்று கூறினன்' என்ற வரலாற்றை ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் யமகிங்கரசம்வாதரூபமான வைஷ்ணவப்பிரபாவத்திற் பரக்கக்காணலாம். ஸ்வர்க்க மத்திய பாதாளமென்று மூன்றாகப்பகுக்கப்படுகிற பதினான்குஉலகங்களிலுமுள்ள பிராணிகளெல்லாம் இயல்பில் கர்மபந்தமுடையவர்களாதலால், கர்மிகளைத் தண்டிப்பவனான யமனைக்குறித்து அஞ்சுவரென்க.

நரகு - நரகம்; இது, கீழுலகங்கட்கெல்லாம் உபலக்ஷணம். அந்தரம் - வானம்; இது, மேலுலகங்கட்கெல்லாம் உபலக்ஷணம். மருவுநர், ந் - பெயரிடைநிலை. அகம் - அகத்துஉறுப்பு, அந்தஃகரணம்; அகம் - உள். காலன் - பிராணிகளின் ஆயுளைக் கணக்கிடுபவன். பெருமான் இராமாவதாரத்தில் அநுமானையும், எப்பொழுதும் கருடனையும் வாகனமாகக்கொண்டு அவர்கள் பிடரியில் ஏறியருள்வன்; அதுபற்றி, அவர்கள் முறையே சிறியதிருவடியென்றும், பெரியதிருவடியென்றும் பெயர்பெறுவர். கந்தரம்-வடசொல்; தலையைத் தரிப்பது: கம் - தலை. பிடர் - கழுத்தின் பின்புறம். இநன்-சூரியன்; வடசொல். 'உலகங்களாகிய தாமரைகளெல்லாம் மலரும்பொருட்டு, தேவகியாகிய கிழக்குச்சந்தியில் அச்சுதபாநு [திருமாலாகிய சூரியன்] உதித்தருளினான்' என்று கண்ணனைச் சூரியனாகக் கூறியுள்ளதனால், 'ஆய்க்குலத்துஇநர்' என்றார். அக்குலத்துக்கு நன்மை, தேவாதிதேவனான திருமால் மனிதனாய் எழுந்தருளிக் குழந்தைப்பருவத்தில் வளர்ந்தருளப்பெற்ற பேறுடைமை. அகம் - இடம், வீடு. நமன் அஞ்சும் - செய்யுமென்முற்று, ஆண்பாலுக்கு வந்தது. ஆய்க்குலத்திநர் அகம் தரங்கம் உற்றார் என்று எடுத்து, இடைச்சாதியாருடைய வீட்டிலும், பாற்கடலிலும் பொருந்தியவரென்றும், ஆயர்குலத்தில் வளர்ந்தவரும் பாற்கடலினிடத்துப் பொருந்தியவருமானவரென்றும் உரைப்பாருமுளர். (உக)

உஉ. அஞ்சக்கரத்தலைக்கங்கையனேற்றனுமஞ்சிறைய
அஞ்சக்கரத்தலைக்குண்டிகையான்மண்டையங்கைவிட்டே
அஞ்சக்கரத்தலைச்செய்துபித்தேகவருளரங்கன்
அஞ்சக்கரத்தலைவன்றாளலான்மற்றரணிலையே.

(இ - ள்.) அஞ்சு அக்கரம் தலை கங்கையன் ஏற்றனும் - பஞ்சாக்ஷர மந்திரத்துக்கு உரியவனும் தலையிற் கங்காநதியைத் தரித்தவனுமான சிவபிரான் (தன்பக்கல் வந்து) இரந்தவளவிலே, அம் சிறைய அஞ்சம் கரத்தலை குண்டிகையான் மண்டை அம் கை விட்டே கரத்தலை செய்து அஞ்ச - அழகிய இறகுகளையுடைய ஹம்ஸவாகனத்தையும் கையிற்கமண்டலத்தையுமுடையனான பிரமனது கபாலமானது(அச்சிவபிரானுடைய) உள்ளங்கையை நீங்கி மறைதலைச்செய்து விலகவும், பித்து ஏக - (அச்சிவபிரான் கொண்டிருந்த) திகைப்பு ஒழியவும், அருள் - கருணைசெய்த, அம் சக்கரம் தலைவன் அரங்கன்-அழகிய சக்கராயுதத்தையுடைய இறைவனான ரங்கநாதனுடைய, தாள் அலால் - திருவடியேயல்லாமல், மற்று அரண் இலை - வேறு ரக்ஷகம் (எவ்வுயிர்க்கும்) இல்லை; (எ - று.)

மும்மூர்த்தியில் ஒருமூர்த்தியான சிவபிரான் பிரமகபாலத்தால்தனக்கு நேர்ந்த சங்கடத்தைத் தீர்த்துக்கொள்ள வேறுவகையில்லாமற் கலங்கி எம்பெருமானைச் சரணமடைய, அப்பெருமான் எளிதில்அதனைத்தீர்த்தருளின னென்ற வரலாற்றுமுகத்தால், நம்பெருமாளுடைய பரத்வத்தை வெளியிட்டு, அப்படிப்பட்ட சர்வேசுவரனல்லாமல் வேறுபுகலிடமில்லையென்று ஜீவாத்மாக்களின் அநந்யகதித்வத்தை விளக்கினார். பித்தேகவருளரங்கன் - "சிரந்தடிவா னிவனேயென் றயன் வெய்ய தீய சொல்லக், கரந்தடிவான் தலைகவ்வப் பித்தேறலிற் கண்ணுதலோன், இரந்தடிவீழத் துயர்தீர்த்த வேங்கடத்தெந்தை" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும்.

ஐந்து - அஞ்சு; முழுப்போலி. அக்ஷரம், கங்கா, ஹம்ஸம், பித்தம், சக்ரம், சரணம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. சிறைய-குறிப்புப்பெயரெச்சம். கரத்தலை, தலை - ஏழனுருபு; கரம் - வடசொல். வைதிகர் கையிலே எப்போதும் ஜலபாத்திரங்கொண்டிருத்தல், பரிசுத்தியின்பொருட்டென்க. அகம் + கை = அங்கை; "அகமுனர்ச் செவி கை வரின் இடையன கெடும்" என்றார் நன்னூலார். விட்டே, ஏ - அசை. அஞ்ச = விலக, காரியப்பொருளைக் காரணச்சொல்லாற் குறித்தார், உபசாரவழக்கால். மூன்றாமடியில் உள்ள 'கரத்தலை' என்பது - கரத்தல் என்ற தொழிற்பெயரின் இரண்டாம் வேற்றுமைவிரி. சக்கரத்தலைவன் - ஆழிப்பிரான். (உஉ).

உ௩. இலங்கையிலாதரனைங்கரன்மோடியெரிசுரத்தோன்
இலங்கையிலாதமலையானவீசனிரியவெம்போர்-
இலங்கையிலாதபடிவாணனைச்செற்றவென்னரங்கன்
இலங்கையிலாதவன்போகக்கண்டானென்னிதயத்தனே.

(இ - ள்.) இலங்கு அயில் ஆதரன் - விளங்குகின்ற வேலாயுதத்தினிடத்து விருப்பமுடையவனான சுப்பிரமணியனும், ஐங் கரன் - (நான்குகைகளோடு துதிக்கையுமாகிய)ஐந்துகைகளையுடையவனான விநாயகனும்,மோடி- துர்க்கையும், எரி - அக்கினியும், சுரத்தோன்-ஜ்வரதேவதையும், இலம் கயிலாதமலை ஆன ஈசன்-வசிக்குமிடம் கைலாசகிரியாகப்பெற்ற இறைவனான சிவனும், இரிய - அஞ்சிநிலைகெட்டோட, வெம் போரில் - உக்கிரமான யுத்தத்தில், அம் கை இலாதபடி வாணனை செற்ற - அழகிய (ஆயிரம்) கைகள்இல்லாமற்போம்வண்ணம் பாணாசுரனை அழித்திட்ட, என் அரங்கன் - எனது திருவரங்கனும், இலங்கையில் ஆதவன் போக கண்டான் - இலங்காபுரியிற் சூரியன் போகும்படி செய்தவனுமான திருமால்,—என் இதயத்தன்-எனது இருதயகமலத்தி லுள்ளான்; (எ - று.)

துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநசீலனும், அங்ஙனம் நல்லோரைக்காத்தற்பொருட்டுத் தீயோரையழிக்குமிடத்துச் சர்வசங்காரமூர்த்தியே வந்து தடுத்தாலும் தடுக்கவொண்ணாத பேராற்றலுடையவனு மான பெருமான் எனதுமனத்தில் எழுந்தருளியிருக்கும்படி அவனை நான் எப்பொழுதும் மனத்திலே நிலைநிறுத்தித் தியானித்துவருகின்றே னென்பதாம்.

"மோடியோட வங்கிவெப்புமங்கியோடவைங்கரன்,முங்கியோடமுருக ேடைமுக்கணீசன்மக்களைத், தேடியோட வாணனுயிரம்புயங்கள் குருதிநீர், சிந்தியோட நேமிதொட்ட திருவரங்கராசரே" என்ருர் திருவரங்கக்கலம்பகத்திலும்.

"இருணன்காசற வெழுகதிரவனிற்கவென்றும், அருணன் கண்களுங் கண்டிலா விலங்கை" என்றபடி இராவணனிடத்து அச்சத்தால் சூரியன் சென்றறியாத இலங்கையிலே அவ்விராவணனைக் கொன்றதனுல் சூரியன் தனது சஞ்சாரரீதியின்படி அங்குத் தடையின்றி இனிதுசெல்லும்படி செய்தனன் இராமபிரானென்பது, 'இலங்கையி லாதவன் போகக்கண்டான்' என்பதன்கருத்து. இலங்கையரசனுய்த் தேவர்கட்கு இடையூறுசெய்துவந்த இராவணனைச் சங்கரித்துத் தேவர்கட்குநன்மைசெய்தவனென்ற பொருளை 'இலங்கையி லாதவன் போகக்கண்டான்' என வேறுவகையாற்சொன்னது, பிறிதினவிற்சியணி. காணுதல் - செய்தலென்னும் பொருளில் வருதலை, 'திருநகரங்கண்ட படலம்' என்றவிடத்திலுங் காண்க.

முருகன் வேற்படையில்விருப்பமுடையனுதல்,'வேலன்' என்ற அவன் பெயரினுலும் விளங்கும். இவன், சிவபிரானது இளையகுமாரன். விநாயகன் யானைமுகமுடையனுதலால்,ஐங்கரனுவன்; இவன்,சிவபிரானதுமூத்தகுமாரன். துர்க்கை - பார்வதியின்அம்சமானவள். அயில்என்பது-ஐயில்எனவும் கைலாஸம் என்ற வடசொல்லின் திரிபான கயிலாதம் என்பது கையிலாதம் எனவும் யமகவமைப்பின்பொருட்டு முதற்போலியால் அகரத்துக்கு ஐகாரம் பெற்றன; "அ ஐ முத லிடையொக்கும் சஞயமுன்" என்ருர் நன்னூலார். ஜ்வரம், பாணன், ஆதபன், ஹ்ருதயம் என்றவடசொற்கள் விகாரப்பட்டன. இலம் - இல்லம் என்றதன் தொகுத்தல்; அம் - சாரியை. ஈசன் - ஐசுவரியமுடையவன். யமகநயத்தின்பொருட்டு 'போரில்' என்ற ஏழாம்வேற்றுமைவிரி, போர் இல் என உருபுபிரிக்கப்பட்டது; இங்ஙனம் சொல்லணிக்காகப் பிரித்துக்காட்டியிருந்தாலும், பொருள்நோக்குமிடத்துச் சேர்த்துப்படித்துக் கொள்க. ஆயிரங்கைகளிற் பெரும்பாலன ஒழிந்ததனுல், 'கையிலாதபடி' எனப்பட்டது. காலில்விழுந்தபின் கண்ணபிரானுல் துணியாதுவிடப்பட்ட நான்கு கைகளும் பொலிவிழந்தன வென்பதும் தொனிக்க, 'அங்கையிலாதபடி' என்றன ரென்னலாம். செற்ற, செறு-பகுதி. ஆதவன்-ஆதபன் என்ற வடசொல்லின் விகாரம்; நன்ருகத்தபிப்பவன் என்று பொருள். (௨௩)

## தலைவி இரங்கல்.

௨௪. அத்தனைவேதனையீன்றவரங்கனையைம்படைசேர்
அத்தனைவேதனைவாய்வைத்தமாயனையாரணங்கோர்
அத்தனைவேதனைதீர்த்தானைச்சேர்க்கிலளாயிரஞ்சால்
அத்தனைவேதனையப்புவள்சாந்தென்றனலரைத்தே.

(இ - ள்.) அத்தனை - எப்பொருட்கும் இறைவனும், வேதனை ஈன்ற அரங்கனை-பிரமனைப்பெற்ற திருவரங்கனும், ஐம்படை சேர் அத்தனை-பஞ்சாயுதங்கள்பொருந்திய திருக்கைகளையுடையவனும், வேதனை வாய் வைத்த

மாயனை - (கிருஷ்ணாவதாரத்தில்) வேய்ங்குழலைத் திருவாயில்வைத்தூதிய மாயவனும், ஆர் அணங்கு ஓர் அத்தனை வேதனை தீர்த்தானை - அருமையான (பார்வதியென்னுஞ் சிறந்த) தெய்வமகளைத் தனதுஉடம்பில் ஒருபாதியி லுடையவனான சிவபிரானைத் துயர்தீர்த்தருளியவனும் ஆன அழகியமணவா ளனை, சேர்க்கிலள் - (என்னுடன்) சேரச்செய்யாள் : அனை - (என்னுடைய) தாய், (பின்னை என்செய்வளென்றால்,—)சாந்து என்று அனல் அரைத்து - சந்தனக்குழம்பென்று நெருப்பை யரைத்து, ஆயிரம் சால் அத்தனை வேது அப்புவள்-ஆயிரஞ்சாலவ்வளவு வெப்பத்தை (என்னுடம்பிற்பூசி) நிரப்புவள்.

கீழ் உங-பாசுரங்களில்எம்பெருமானுடைய பலவகைப்பிரபாவங்களைக் கூறி அவனது உத்தமபுருஷத்தன்மையைக்கருதியதனாலே, அப்பொழுதே அவனைக்கிட்டவேண்டும்படியான ஆசை யுண்டாய், அங்ஙனம் அவனைக்கிட் டப்பெறாமையாலே,ஐயங்கார் ஆற்றாமைமீதூர்ந்து தளர்ந்தார் ; அத்தளர்ச்சி யாலே தாமானதன்மையழிந்து ஆண்பெண்ணும்படியான நிலைமை தோன்றி ஒருபிராட்டிநிலையை யடைந்தார் ; ஆண்பெண்ணுதல் கூடுமோ வெனில்,— "கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினாய்," "வாராக வாமனனே யரங்கா வட்டநேமிவலவா ராகவா உன்வடிவுகண் டால் மன்மதனும் மடவாராக ஆதரஞ்செய்வன்" என்ப வாதலாலே, இது கூடும்: தண்டகாரணியவாசிகளான முனிவர் இராமபிரானது சௌந்தரி யாதிசயத்தில் ஈடுபட்டுத் தாம் பெண்மையைப்பெறவிரும்பி மற்றொருபிறப் பில் ஆயர்மங்கையராய்க் கண்ணனைக் கூடின ரென்ற ஐதிகியமும் உணர்க. "கண்ணனுக்கே, யாமதுகாமம் அறம்பொருள்வீடிதற்கென்றுரைத்தான், வாமனன் சீலன் இராமாநுசன் இந்த மண்மிசையே" என்பதன் பொருளும் அறியற்பாலது. ("பெண்டிரும் ஆண்மைவெஃகிப் பேதுறு முலையினாள்," "வாண்மதர்மழைக்கணோக்கி, ஆண்விருப்புற்றுநின்றார் அவ்வளைத்தோளி னாரே" எனப் பெண் ஆணுகும்இடமும் உண்டு.) அங்ஙனம் ஆண் பெண்ணு கிலும் சாதாரணப்பெண்மையையேயன்றி எம்பெருமானுக்குஉரியவளாகும் ஒருபிராட்டியின்நிலைமையை அடையுமாறு எங்ஙனமெனில்,—பரமாத்மாவி னது தலைமையும், ஜீவாத்மாவினது அடிமையும்,ஜீவாத்மா பரமாத்மாவுக்கே உரியதாயிருக்கையும்,புருஷோத்தமனாகியஎம்பெருமானதுபேராண்மைக்கு முன் உலகமுழுதும் பெண்தன்மையதாதலும்,ஜீவாத்மாவினதுசுவாதந்திரிய மின்மையும், பாரதந்திரியமும், தாம் எம்பெருமானது சேர்க்கையால் இன் பத்தையும் பிரிவினால் துன்பத்தையும் அடைதலும், அவனையே தாம் கரண ங்களெல்லாவற்றாலும் அனுபவித்து ஆனந்தித்தலும் முதலிய காரணங்க ளால், தம்மைப்பிராட்டிமாரோடொக்கச் சொல்லத் தட்டில்லை. தோழிநிலை மையும் தாயார்நிலைமையும் முதலியன ஆகிறபடி எங்ஙனே யென்னில்,— தாம்விரும்பியபொருளின்வரம்பின்மையால்அங்ஙனமாகுமென்க.சிருங்கார ரசப்பிரதானமான அகப்பொருட்கிளவித்துறைகளைத் தோத்திரப்பிரபந்த ரூபமான ஞானநூலாகிய இதிற் கூறுதற்குக் காரணம், கடுத்தின்னாதானைக் கட்டிபூசிக் கடுத்தின்பிப்பார்போலச், சிற்றின்பங்கூறும்வகையாற் பேரின் பத்தைக் காட்டி நாட்டுதல் என்பர்.

ஓர்உத்தமபுருஷன் பரிவாரத்துடன் வேட்டையாடுதற்குப் புறப்பட்டு வனத்துக்குச் சென்றவனும், ஓர்உத்தமகன்னிகையும் தோழியருடன் பூக்கொய்து விளையாடுதற்கென்று பூஞ்சோலையிற் சேர்ந்தவளவிலே, ஒவ்வொரு வியாஜத்தால் தோழியர் பிரிய அக்கன்னிகை அங்குத் தனித்துநின்றசமயத்திலே, ஒவ்வொருவியாஜத்தாற் பரிவாரங்கள்பிரியத் தனிப்பட்டவனும் அப்புருஷன் அங்குவந்துசேர, இருவரும் ஊழ்வினைவசத்தால் இங்ஙனம் தற்செயலாய் ஓரிடத்திலே சந்தித்து ஒருவரையொருவர்கண்டு காதல்கொண்டு காந்தருவவிவாகக்கிரமத்தாற் கூடி உடனேபிரிய, பின்பு அப்பிரிவினாலாகிய தாபத்தால் வருந்தி அரிதில் மீண்டுவந்த அத்தலைமகளைக் கண்ட செவிலித்தாய் அத்தாபத்துக்குக் காரணம் இன்னதென்று அறியாளாய் அப்பொழுது நிகழ்கிற வேனிற்காலத்தினாலாகியதென்று கருதி அதனைத்தணித்தற் பொருட்டுச் சந்தனக்குழம்பை அம்மகளுடம்பின்மேல் மிகுதியாக அப்பிச் சைத்யோபசாரஞ் செய்ய, காலதாபமல்லாததால் அதனைத் தணிக்கமாட்டாத அச்சந்தனக்குழம்பு கலவிக்காலத்தில்இன்பஞ்செய்யும்பொருள்களுள் ஒன்றாதல்பால் பிரிவுக்காலத்தில் காமதாபத்தை மிகுவிப்பதாய் மிக்கவெப்பஞ் செய்ய, அதனால் மிகவருந்திய தலைமகள் தோழியின்முன்னிலையில் அத்தாய் செயலைக்குறித்து வெறுத்துக்கூறியது இது. அழகியமணவாளன் ஒருகால் ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்கானபொழுது அவனைக்கிட்டி முத்தியின்ப மனுபவிக்கும்படியான ஆசைகொண்டவரானஇவரை அப்பெருமான் அப்பொழுதே சேர்த்துக்கொள்ளாதுமறைய,அதனாலுண்டான துயரத்தால் ஐயங்கார் தபிக்கிறகாலத்தில்,அவ்வருத்தத்தின்காரணத்தை இன்னதென்று அறியாத அவரிடம் அன்புள்ள ஞானிகள் அவர்க்குச் செய்த உபசாரங்கள் அவர்வருத்தத்தைத் தணிவிக்கமாட்டாது அதனை மிகுவிக்கிறநிலையிலே ஐயங்கார் அவர்களது திறத்தைத் தமதுநண்பரை நோக்கி உரைத்தவாறாகும் இது வென்று இச்செய்யுளுக்கு உள்ளுறைபொருளும் காண்க.

வேதன் - வேதம்வல்லவன்; நான்குமுகங்களாலும் நான்குவேதங்களையும் பாராயணஞ்செய்கிறவன்; வேதா என்னும் வடசொல்லின் திரிபெனக் கொண்டால், விதிப்பவன்[படைத்தற்கடவுள்]என்று பொருள்படும். இரண்டாமடியில் ஹஸ்தம் என்ற வடசொல் அத்தம் என்றும், மூன்றாமடியில் அர்த்தம் என்ற வடசொல் அத்தம் என்றும் விகாரப்பட்டன. வே - மூங்கில்; வேய் என்பதன் விகாரம்: அதனாலாகிய புள்ளாங்குழலுக்குக் கருவியாகு பெயர்; தன் - சாரியை. பலவிடங்களிற் பரவிமேய்கிற பசுக்கூட்டங்களை ஒருங்குசேர்த்தற்பொருட்டும்,அவற்றைமகிழ்வித்தற்பொருட்டும் கண்ணன் வேணுகானஞ்செய்தனன். மாயன் - மாயையையுடையவன்;மாயையாவது- செயற்குஅரியன செய்யுந் திறம்; ஆச்சரியகரமான குணங்களும் செயல்களுமாம்; பிரபஞ்சகாரணமான பிரகிருதியுமாம். வேதனை, பிரமகபாலம் கைவிடாமையால் நேர்ந்தது. 'ஆயிரஞ்சால்' என்றது, மிகுதியை விளக்கக் கூறியது: சால் - பெரியபாத்திரம். வேது - வெவ்வியது. அனை - அன்னை; தொகுத்தல். வேதநா, சந்தநம் என்ற வடசொற்கள்-வேதனை, சந்தனென்று விகாரப்பட்டன. ஆர் அணங்கு ஓரத்தன் னை வேதனை எனப்பிரித்து,நிறை

ந்த அழகுடையளான அம்பிகையைப் பக்கத்திலுடையனான சிவபிரான் வருந்திய வருத்தமென்று உரைப்பாருமுளர். நை - வினைத்தொகை. (உச)

உரு. அரைக்கலைவேலையுடுத்தமண்பல்பகலாண்டுபற்றல்-
அரைக்கலைவேலையுடைவேந்தர்வாழ்வெண்ணலைவரையும்
அரைக்கலைவேலையவர்க்கேபுரிவையென்றாலுநெஞ்சே
அரைக்கலைவேலையரங்கனுக்காட்படவாதரியே.

(இ - ள்.) நெஞ்சே - (என்) மனமே! அரைக்கு - அரையினிடத்து, அலை வேலை உடுத்த-அலைகளையுடைய கடலை (ஆடையாக)த்தரித்த, மண் - பூமியை, பல்பகல் ஆண்டு-பலநாளளவும் அரசாண்டு, பற்றலரை கலை வேலை உடை - பகைவர்களை நிலைகுலைந்தோடச்செய்கிற வேலாயுதத்தை யுடைய, வேந்தர் - அரசர்களது, வாழ்வு - (நிலையற்ற) வாழ்க்கையை, எண்ணல்-ஒரு பொருளாகக்கருதாதே: ஐவரையும் - பஞ்சேந்திரியங்களையும், அரைக்கலை-நீ அடக்கமாட்டாமல், அவர்க்கே வேலை புரிவை என்றாலும்-அவ்விந்திரியங்கட்கே வசப்பட்டு (அவைசெல்லும்வழியிலேயே நின்று அவற்றிற்குப்)பணிவிடைசெய்வாயாயினும், அரை கலை வேலை-அரைக்கணப்பொழுதாயினும், அரங்கனுக்கு ஆட்பட ஆதரி-ஸ்ரீரங்கநாதனுக்கு அடிமைசெய்ய விரும்புவாய்.

இவ்வுலகத்தில் எதிரற்ற தனியரசாட்சி கிடைப்பதாயினும், அது, முத்திப்பெருஞ்செல்வத்தைநோக்கப் பெரிதும்அற்பமாதலால், அதனை விரும்பாதே; பெரும்பாலும்காலத்தையெல்லாம் ஐம்பொறிகளின்வழியிலேயேசெலுத்துவையாயினும்,'அவப்பொழுதிலும் தவப்பொழுது' என்றபடி மிகச்சிறிதுபொழுதேனும் நம்பெருமாளுக்குஅடிமைசெய்யவிரும்புவையாயின்,பஞ்சேந்திரியமூலமாகவுண்டாகிற சகலகருமங்களையும் போக்கி எல்லாச்செல்வங்களினும் மேலான முத்திப்பேற்றைத் தவறாமலடைதல் கூடும் என்று தன்னெஞ்சத்தைத் தானே விளித்து அறிவுறுத்தினர்.

அரை-பாதி;உடம்பின்நடுவுறுப்பான இடைக்கு ஆகுபெயர். அரைக்கு= அரையில்; உருபுமயக்கம். அலை வேலை - இரண்டனுருபும்பயனுந்தொக்க தொகை; அலையலைக்கிற வேலை யெனக்கொண்டால், வினைத்தொகையாம். இனி, அரை - இடையில், கலை - ஆடையாக, வேலை -கடலை, உடுத்த என்று பதவுரை கூறினுமாம். கலை - மேகலையென்னும் இடையணியுமாம். பூமியைச் சூழ்ந்துள்ள கடலைப் பூமியாகியபெண்உடுக்கும்ஆடையாகவும் அப்பெண்இடையிலணியும் அணியாகவும் கூறுதலும், அரசனாலாளப்படுகின்ற பூமியை அக்கணவனாலாளப்படும் மனைவியாகக் கூறுதலும், கவிசமயம். பகல் - நாளுக்கு இலக்கணை. ஆண்டு உடை என இயையும். பற்றலர் - விரும்பாதவர், சேராதவர்: எதிர்மறைவினையாலணையும்பெயர். கலை வேல் - வினைத்தொகை. எண்ணல் - எதிர்மறையொருமையேவல்.

அடக்குதற்குஅரிய உட்பகைவரென்ற கருத்து 'ஐவர்' என்ற உயர்திணைத்தொகைக்குறிப்புப்பெயரில் தோன்றுதல் காண்க; உம் - முற்று. அரைக்கலை - முன்னிலையொருமையெதிர்மறைமுற்றெச்சம்: கு - சாரியை, அல் - எதிர்மறையிடைநிலை. ஏ - பிரிநிலை. உம் - இழிவுசிறப்பு. கலை -

காலநுட்பம்: 'கண்ணிமைப்பொழுது பதினெட்டுக் கூடினால், ஒரு காஷ்டை; முப்பது காஷ்டைகள் கூடினால், ஒரு கலை' என்ற காலவளவையை யுணர்க. (உரு)

உசு. ஆதவனந்தரந்தோன்றாமற்கன்மழையார்த்தெழுநாள்
ஆதவனந்தரவெற்பெடுத்தானடியார்பிழைபார்-
ஆதவனந்தரங்கத்தானரங்கனடியனென்றுள்-
ஆதவனந்தரங்கண்டீர்வினைவந்தடைவதுவே.

(இ - ள்.) ஆதவன் - சூரியன், அந்தரம் - வானத்திலே, தோன்றாமல் - கட்புலனாகாதபடி, கல் மழை - ஆலாங்கட்டியைப்பொழிகின்ற மேகங்கள், ஆர்த்து எழு நாள் - ஆரவாரித்துக்கொண்டு எழுந்த காலத்தில், ஆ - பசுக்கள், தவனம்தர - தவிப்பையடைய, வெற்பு எடுத்தான் - (அத்துன்பத்தை நீக்கும்பொருட்டுக்) கோவர்த்தந கிரியை (க்குடையாக) எடுத்துப்பிடித்தவனும், அடியார் பிழை பாராதவன் - தன் அடியார்களுடைய குற்றத்தைப் பொருள்செய்யாது அவர்கட்கு அருள்செய்பவனும், அம் தரங்கத்தான் - அழகிய அலைகளையுடைய கடலிற் பள்ளிகொள்பவனும் ஆகிய, அரங்கன் - ஸ்ரீரங்கநாதனுக்கு, அடியன் -தொண்டன் யான், என்று உள்ளாத அனந்தரம் கண்டீர்-என்று (ஒருவன் தன்னைக்)கருதாதபின்பன்றோ, வினை வந்து அடைவது - (முன்பு அவன்செய்த) கருமம் (தன்பயனை விளைத்தற்கு அவனிடம்) வந்து சேர்வது; (எ - று.)

பிறப்பு அநாதியாய்வருதலின் ஒருவன் முற்பிறப்புக்களில் எவ்வளவு கருமம் செய்திருப்பினும், அவன் தன்னைத் திருவரங்கநாதனது அடியவனென்று கருதுதல்மாத்திரஞ் செய்வனாயின், அவனதுபழவினையனைத்தும், விளக்கின்முன் இருள்போலவும், காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுத்துய்போலவும் இருந்தவிடமுந்தெரியாதபடி விரைவில் அழிந்திடுமென்பதாம்.

கண்டீர் என்ற முன்னிலைப்பன்மையிறந்தகாலவினைமுற்று, இடைச்சொல் தன்மைப்பட்டுத் தேற்றப்பொருள் குறித்து நிற்கும். அந்தரம் ஆர்த்து என்று இயைத்து, வானத்தை யடைத்துக்கொண்டு எனினுமாம். எழு நாள் - வினைத்தொகை; பண்புத்தொகையாய், ஏழுநாளென்றும் பொருள்படும். மேகங்களின் மிக்கமழை பசுக்களுக்கு வருத்தத்தை விளைத்ததோடு, அவற்றின் மிக்க பேரிடிகளினோசையும் அச்சத்தால் ஆநிரையை மிகவருத்தின தென்பது, 'கல்மழையார்த்தெழுநாள் ஆதவனந்தர' என்பதில் தோன்றும். ஆதவநம்தர என்பதற்கு - பசுக்கள்(அம்மழைமிகுதியைப் பொறுக்குமாற்றலின்றி நிலைநிற்கமாட்டாமல்)ஓடத்தொடங்க என்று உரைத்தலு முண்டு.

இந்திரன் கல்மழைபொழிவித்ததனால் அதனைக் கல்மலைகொண்டே தடுத்திட்டனன், அவன் நீர்மழைபொழிவித்திருந்தால் அதனை நீர்கொண்டே தடுத்திருப்பன், அகடிதகடநாசாமர்த்தியமுடைய எம்பெருமான் என்ற தாற்பரியம், 'கன்மழைக்காக வெற்பெடுத்தான்' என்ற சொற்போக்கில் தோன்று மென்பர் ஆன்றோர். பாராதவன்—"தன்

னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்குமேல், என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தா ரென்பர்போலும், மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்க்கண்வைத்த, என்னுடைய திருவரங்கர்க்கன்றியும் மற்றொருவர்க்கு ஆளாவரே" என்ற பெரியாழ்வாரருளிச்செயலைக் காண்க. அம் - உரிச்சொல். தரங்கம் - அலை. 'அம் தரங்கம்' என்பதை அடையடுத்த சினையாகுபெயரென்றாவது, பண்புத்தொகையன்மொழியென்றாவது கொள்ளவேண்டும். அடியார் அந்தரங்கத்தான் என்றும் எடுத்து, "மலர்மிசை யேகினான்" என்றபடி அன்பால்நினைக்கின்ற அடியார்களுடைய இதயத்தில் அவர் நினைந்த வடிவோடு சென்று வீற்றிருப்பவன் என வுரைப்பினும் அமையும். அடியன் - தன்மையொருமை. உள்ளாதவன் அந்தரம் என்று பதம் பிரித்து, உள்ளாதவன் - கருதாதவனுக்கு, அந்தரம் - முடிவில், வினை வந்து அடைவது என்று உரைப்பாருமுளர்.

அந்தரம், தபநம், தூவநம், தரங்கம், அந்தரங்கம், அநந்தரம் - வடசொற்கள். அடைவதுவே - குற்றியலுகரம் சிறபான்மை கெடாது பொது விதியால் வகரவுடம்படுமெய் பெற்றது. (உசு)

உஎ. அடையப்பன்னாகங்கடிவாயமுதுகவங்கிகுளிர்
அடையப்பன்னாகமருப்பாயுதமிறவன்றுகுன்றால்
அடையப்பன்னாகமிசைதாங்கப்பாலற்கருள்செய்ததால்
அடையப்பன்னாகங்கரியானரங்கனெட்டக்கரமே.

(இ - ள்.) ஆல் அடை - (பிரளயப்பெருங்கடலிலே) ஆலிலையிற் பள்ளிகொண்டருள்கிற, அப்பன் - (யாவர்க்குந்)தலைவனும், ஆகம் கரியான் - திருமேனி கறுத்திருப்பவனுமான, அரங்கன் - ரங்கநாதனது, எட்டு அக்கரம் - திருவஷ்டாக்ஷரமந்திரமானது,—பல் நாகம் அடைய கடி வாய் அமுது உக - விஷப்பற்களினாற் சர்ப்பங்கள் (உடம்பு)முழுவதிலும் கடித்த வாயினிடமாக அமிருதம் சிந்தவும், அங்கி குளிர் அடைய - நெருப்புக் குளிர்ச்சியையடையவும், பல் நாகம் மருப்பு ஆயுதம் இற - பலயானைகளின் தந்தங்களாகிய ஆயுதங்கள் ஒடியவும், குன்றால் அடை அப்பு அ நாகம் மிசை தாங்க - மலையோடு அடுத்தலையுடையதான ஜலம்[கடல்] அந்த மலையின்மீது ஏந்தவும், பாலற்கு - சிறுவனான பிரகலாதனுக்கு, அன்று - அந்நாளில் [இரணியன் பலவாறுவருத்தத்தொடங்கிய காலத்தில்], அருள் செய்தது - கருணைபுரிந்தது; (எ - று.)

தனித்தனி எல்லாப்பிராணிகளாலும் இறவாதபடி வரம்பெற்றவனும் மூவுலகையும் வென்று தன்னையே கடவுளாக அனைவரும் வணங்கும்படி செய்துவருகின்றவனுமான இரணியாசுரன் தன்மகனான பிரகலாதனுக்கு அசுரகுருவாகிய சுக்கிராசாரியரைக்கொண்டு அக்ஷராப்பியாசஞ் செய்விக்கிறபொழுது, அக்காலவழக்கத்தின்படி அவ்வாசிரியன் 'இரணியாயநம:' என்று முதலிற் சொல்லிக் கல்விகற்பிக்க, பிரகலாதன் அங்ஙனஞ்சொல்லிக் கல்விகற்க உடன்படாது நாராயண நாமத்தை யுட்கொண்ட அஷ்டாக்ஷர மகாமந்திரத்தைச் சொல்ல, அதனை யுணர்ந்த இரணியன் மைந்

தனைத் தன்வழிப்படுத்துதற்குப் பலவாறுமுயன்றும் அவன் வழிப்படாத விடாப்பிடியையுடையனுனமை கண்டு கடுங்கோபங்கொண்டு, தன்னைச் சார்ந்த அசுரர்களை யழைத்துப் பிரகலாதனைக் கொன்றுவிடும்படி கட்டளையிட்டனன்; அதற்கு இசைந்த அவர்கள் தக்ஷகன் முதலிய கொடிய அஷ்டமகாநாகங்களைக் கொண்டுவந்து அக்குமாரன்மீது கடிக்கவிட, அந்தப்பெரும்பாம்புகள் காளி காளாத்திரி யமன் யமதூதி என்ற விஷப்பற்கள் கொண்டு அவனுடைய சகலஅவயவங்களிலுங் கடித்து உக்கிரமானவிஷங்களைக் கக்க, அவன் இடைவிடாது நாராயணநாமோச்சாரணஞ் செய்துவந்ததுபற்றி அவன்பக்க லெழுந்த திருமாலருளால், அக்கடித்தவாய்களினின்று சொரிந்த விஷமே அமிருதமயமாக, அந்தப்பரமபாகவதன் சிறிதும்ஊறுபாடின்றி யிருந்தனன்; அசுரர்கள் அவனை நெருப்பிலே போகட, அத்தீயும் குளிர்ந்து அவனை எரிக்கமாட்டாதாயிற்று; இரணியன் கட்டளையால் திக்கஜங்கள் பிரகலாதனைப் பூமியிலே வீழ்த்தித் தங்கள்வலியதந்தங்களாற் பாய்ந்து இடித்தபோது, திருவருள்வலிமைபெற்ற அவனது மார்பிற் பட்டதனுல் அத்திசையானைகளின் தந்தங்கள் முறிந்துபோய்விட்டன; அசுரர்கள் அவனைப் பெரியமலையுடன்சேர்த்து நாகபாசங்களினுற் கட்டிக் கடலிலே போகட, அச்சமுத்திரத்திலே அம்மலையானது பிரகலாதன் தன்மேற்பக்கத்திலிருக்கத் தெப்பமாய்மிதந்தது: நாகபாசந் தானே விடுபட்டதனுற் பிரகலாதன் இனிது பிழைத்துக் கரைசேர்ந்தனன்; இங்ஙனம் பலவாறுகத் துன்பந்தீர்த்துப் பக்தனைப் பாதுகாத்தது எனப் பெரியதிருமந்திரத்தின் பிரபாவத்தை வெளியிட்டார். நாகம் மருப்பு ஆயுதம் இற என்பதற்கு - யானைத்தந்தங்களும் ஆயுதங்களும் ஒடிபட வென்று உரைத்தலுமாம்; அசுரர்கள் ஒருங்குசேர்ந்து பலவகைப்படைக்கலங்களைக்கொண்டு பிரகலாதனை வதைக்கத்தொடங்க அவ்வாயுதங்களெல்லாம் அவனுடம்பிற் பட்டமாத்திரத்தில் ஒடிந்துபோய்விட அவன் அவற்றுற் சிறிதும்வேதனையுறாது விளங்கின னென்பதும் உணர்க. "நம்பெருமா ளெழுத்தெட்டின் பெருமை நவிலுமதோ, சம்பரன்மாயம்புரோகிதர்சூழ்வினை தாரணிவாள், வெம்படை மாசுண மாமதவேழம் விடந் தழல் கா, லம்பரமே முதலானவை பாலனுக் கஞ்சினவே" என்றார் திருவரங்கத்துமாலையிலும்.

நாகம் என்ற வடசொல் - யானையையும் பாம்பையும் குறிக்கும்போது, நகத்தில்வாழ்வது எனக் காரணப்பொருள்படும்: தத்திதாந்தநாமம்; (நகம் - மலையும், மரமும்.) அங்கி - அக்நி என்ற வடசொல்லின் சிதைவு. குளிர் - முதனிலைத்தொழிற்பெயர். மூன்றுமடியில், அடை - அடுத்தல்; தொழிற்பெயர்: அடு - பகுதி, ஐ - விகுதி. குன்றால் அடை அப்பு என்பதற்கு - மலைகளினுலே யடைக்கப்பட்ட சமுத்திர மெனினும் அமையும்; நாகபாசத்தினுற்கட்டிக் கடலிலேயிடப்பட்ட பிரகலாதன்மேல் இரணியன்கட்டளைப்படி அசுரர்கள் அனேகமலைகளைக் கொண்டுபோய்ப் போகட்டு அழுத்துவாராயின ரென்று புராணங் கூறும். 'அன்றுகுன்றாலடையப்பு' என்று எடுத்து, அக்காலத்தில் [இராமாவதாரத்தில்] மலைகளைக்கொண்டு திருவணை கட்டியமைக்கப்பட்ட கட லென்று இயற்கையடைமொழி புணர்த்தது

கப் பொருளுரைத்தல் சிறப்பன்று. 'நாகம்' - மலையையுணர்த்தும்போது, நக மென்ற வடசொல்லின் நீட்டல். ஆயுதம், அப், பாலன் - வடசொற்கள். அப்பன் - ஸர்வஸ்வாமி. ஈற்றடியில், ன் - விரித்தல்.

மூன்றாமடியில், 'அந்நாகம்' என்பது, 'அன்னுகம்' என்று கொள்ளப் பட்டது, யமகநயத்தின்பொருட் டென்க. (உஎ)

உஅ. அக்கரவம்புனைந்தாரயனாரிடையாயிருநால்
அக்கரவம்புமலராள்கொழுநனரங்கன்செங்கோல்-
அக்கரவம்புயன்றான்மூலமென்பதறிவித்திடான்
அக்கரவம்புவிமேல்வேழமேவெளியாக்கியதே.

(இ - ள்.) இரு நால் அக்கரம் - அஷ்டாக்ஷரமகாமந்திரத்துக்கு உரியவனை, வம்பு மலராள் கொழுநன் - வாசனையையுடைய தாமரைமலரில் வீற்றிருக்கின்ற திருமகளுக்குக் கணவனும், செம் கோலம் கரம் அம்புயன் - சிவந்த அழகிய தாமரைமலர்போன்ற திருக்கைகளையுடையவனுமாகிய, அரங்கன்-ரங்கநாதன்,—அக்கு அரவம் புனைந்தார் அயனார் இடை ஆய் - எலும்பையும் சர்ப்பங்களையும் ஆபரணமாகத்தரித்த சிவபிரானுக்கும் பிரமதேவருக்கும் நடுவிலே தானிருந்துகொண்டு, தான் மூலம் என்பது அறிவித்திடான்-தானே (எல்லார்க்கும்) ஆதிமூலப்பொருள் என்கிற உண்மையை வெளிப்படுத்தான்; அ கரவு-அந்த ஒளிப்பை, அம் புவிமேல் வேழமே வெளியாக்கியது - அழகிய நிலவுலகத்தில் (கஜேந்திரனாகிய)யானையே பகிரங்கப்படுத்திவிட்டது; (எ - று.)

படைத்தல் காத்தல் அழித்தல் என்ற முத்தொழில்களையும் முறையே செய்பவராதலாற் பிரம விஷ்ணு ருத்திர ரென்று முறைப்படுத்திக் கூறப்படுகின்ற திரிமூர்த்திகளுள் இடைப்பட்டவனான திருமால் முன்னும் பின்னுமுள்ள மற்றையிருவர்க்கும் ஸமனானவன்போன்றிருத்தலால், 'அவனே அம்மூவரில் மற்றையிருவர்க்கும் முதற்பொருள்' என்கிற மெய்ம்மை அறிதற்கு அரியதாயிருந்தது ; அந்த மறைபொருள், கஜேந்திராழ்வான் ஸ்ரீமந்நாராயணனை மற்றைப்பெயர்களாற் குறியாமல் 'ஆதிமூலமே' என்று குறித்து விளித்ததனால் இனிது வெளியாயிற்று என்பதாம். "உன்னொக்க வைத்த விருவர்க்கு மொத்தி யொருவர்க்கு முண்மையுரையாய்" என்றது, முதன் மூன்றடிகட்கு மேற்கோளாகத்தக்கது. கஜேந்திராழ்வான் ஆதிமூலமேயென்று பொதுப்படக்கூப்பிட்டபொழுது,எம்பெருமானல்லாத பிறதேவரெல்லாரும் தாம்தாம் அச்சொல்லுக்குப் பொருளல்ல ரென்று கருதி யொழிய, திருமால் தானே வந்து அருள்செய்தன னாதலால், இரகசியார்த்தம் வெளியாயிற் றென்க.

அக்கு - ருத்திராக்ஷமாலையுமாம். கரவு - கள்ளம். வேழமே, ஏ - இழிவுசிறப்பு; "விலங்குமன்றோ சொல்லிற்று ஐயமற்றே" என்பர் திருவேங்கடத்தந்தாதியிலும்.

(உஅ)

உகூ. ஆக்குவித்தார்குழலாலரங்கேசரன்பால்விதுரன்
ஆக்குவித்தாரவடிசிலுண்டார்கடலாடையகல்-
ஆக்குவித்தாரறிவற்றேனைத்தம்மடியார்க்கடிமை
ஆக்குவித்தாரடியேயடியேன்றுய்க்குமாரமுதே.

(இ - ள்.) குழலால் - வேய்ங்குழலினிசையால், ஆ குவித்தார் - பசுக்களை (ஓரிடத்துத் திரளாக)க் கூட்டினவரும், விதுரன் ஆக்கு வித்தாரம் அடிசில் - விதுரன் சித்தஞ்செய்த விசேஷபோஜநத்தை, அன்பால் உண்டார்-அன்பினுற் புசித்தருளியவரும், கடல் ஆடை அகலா-சமுத்திரமாகிய ஆடையை நீங்காத, கு - பூமியின் உற்பத்திக்கு, வித்தார் - விதைபோலக் காரணமானவரும், அறிவு அற்றேனை தம் அடியார்க்கு அடிமை ஆக்குவித்தார்-அறிவற்ற என்னைத் தமது அடியார்கட்குஅடியவனாகும்படி அருள்செய்தவருமாகிய,அரங்கஈசர்-ரங்கநாதருடைய,அடியே-திருவடிகளே, அடியேன் துய்க்கும் ஆர் அமுது-தாசனாகிய யான் அனுபவிக்கும்அருமையான அமிருதமாம்.

அமிருதத்தை நுகர்ந்து ஆனந்தமடைவார்போல அடியேன் எம்பெருமானுடைய திருவடிகளைத் தியானித்தல் துதித்தல் பூசித்தல் முதலியன செய்து பேரானந்தமடைவே னென்பதாம். பலவிடங்களிற் பரவிமேய்கிற பசுக்கூட்டங்களை ஒருங்குசேர்த்தற்பொருட்டும், அவற்றை மகிழ்வித்தற் பொருட்டும், கண்ணன் இனிமையாக வேணுகானஞ் செய்வன். விதுரன் - திருதராட்டிரனுக்கும் பாண்டுவுக்கும் தம்பிமுறையாகிறவன்; விசித்திரவீரியனது மனைவியாகிய அம்பிகையினால் ஏவியனுப்பப்பட்ட தாதியினிடம் வியாசமுனிவனருளாற் பிறந்தவன்; பாண்டவர்க்குந் துரியோதனாதியர்க்குஞ் சிற்றப்பன். கண்ணன் பாண்டவர்க்காகத் துரியோதனனிடம் தூதுபேசுபவனாய் அத்தினாபுரிக்குச் சென்றபோது அங்கு வேறு யாருடைய வீட்டிற்குஞ் செல்லாமல் ஞானபக்திகளிற்சிறந்த விதுரனுடைய திருமாளிகையினுட் புக்குத் தங்கி அங்கு அவனால் மிக்கஅன்புடனமைக்கப்பட்ட விருந்துணவை அமுதுசெய்தருளின னென்பது, பிரசித்தம்.

குழல் - அதனொலிக்கு, முதலாகுபெயர். அன்பால் உண்டார் என இயையும்; அன்பால் ஆக்கு என்றும் இயைக்கலாம். வித்தாரவடிசில் - பலவகைச்சுவைப்பண்டங்களோடு கூடிய உணவு. விஸ்தாரம், கு - வடசொற்கள். அகலா - ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சம். அடியே, ஏ - பிரிநிலை. அடியே அடியேன் துய்க்கும் ஆரமுது—"உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாங், கண்ண னெம்பெருமான்" என்றார் நம்மாழ்வாரும். அரங்கேசர் - குணசந்தி. (உகூ)

௩௦. ஆராதனஞ்செய்துகண்டனின்கீர்த்தியறைவன்றிரு
ஆராதனஞ்செய்வன்வேதாவென்றாலடியேன்புகழ்கைக்கு+
ஆராதனஞ்செய்யபோதாந்திருமகளாகபல்பூண்
ஆராதனஞ்செயன்பாகாவரங்கத்தமர்ந்தவனே.

(இ - ள்.) செய்ய போது - செந்தாமரைமலர், ஆதனம் ஆம் - வீற்றிருக்குமிடமாகப் பெற்ற, திருமகள் - இலக்குமியை, ஆக - மார்பிலுடையவனே! பல் பூண் ஆரா-ஆரத்தையும் மற்றும்பலவகையாபரணங்களையுந் தரித்

தவனே! தனஞ்செயன் பாகா - அருச்சுனனுக்குச் சாரதியானவனே! அரங்கத்து அமர்ந்தவனே - திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனே!— ஆராத நஞ்சு எய்து கண்டன் - உண்ணத்தகாத விஷம் பொருந்திய கழுத்தையுடையவனான சிவபிரான், நின் கீர்த்தி அறைவன் - உனது புகழை யெடுத்துச்சொல்லித் துதித்துப்பாடுவன்; வேதா - பிரமதேவன், திரு ஆராதனம் செய்வன் - (உனக்குப்) பூசனைபுரிவன்; என்றால்—, அடியேன் புகழ்கைக்கு ஆர் - நான் (உன்னைத்) துதித்தற்கு என்ன தகுதியுடையேன்!

திரிமூர்த்திகளுள் மற்றையிருவரும் புகழ்ந்து பூசனைபுரியுஞ் சிறப்பையுடைய உனது புகழ் எளியனான என்னால் எடுத்துச்சொல்லுந் தரமுடையதன்று என்பதாம். 'ஆராதநஞ்செய்துகண்டன்' என்றது - மகாபாகவதனான உருத்திரனுடைய செயற்கரியனசெய்யுந் திவ்வியசக்தியையும், 'வேதா' என்ற பெயர் - விதித்தற்கடவுளான பிரமனது பெருமையையும் விளக்கும். திருமாலின்கட்டளைப்படி தேவர்கள் அசுரர்களைத் துணைக்கொண்டு திருப்பாற்கடல் கடைகையில், அதனினின்று எழுந்த அதிப்யங்கரமானதொரு பெருவிஷத்தைக் கண்டமாத்திரத்தில் அதன்கொடுமையைப் பொறுக்கமாட்டாமல் அஞ்சியோடிச்சரணமடைந்த தேவர்களின் வேண்டுகோளால் அவ்விஷத்தைச் சிவபிரான் அமுதுசெய்து கண்டத்தில் நிறுத்தி அனைவரையும் பாதுகாத்தருளினனென்பது வரலாறு; பாற்கடல் கடைகையில் அதனினின்று உண்டான பலபொருள்களுடனே விஷமும் தோன்றத் திருமால் அவற்றில் விஷத்தைச் சிவபிரானுக்குக்கொடுத்து உண்ணச்செய்தன ரென்றும் வரலாறு கூறப்படும். அருச்சுனனது வேண்டுகோளின்படி கண்ணன் திருவருளால் மகாபாரதயுத்தத்தில் அருச்சுனனுக்குத் தேரூர்ந்து அதனாற் பார்த்தசாரதியென்று ஒருதிருநாமம்பெற்றமை பிரசித்தம்.

முதலடியில் 'னஞ்செய்து' என்றவிடத்து நகரம் னகரமாகத் திரித்துக்கொள்ளப்பட்டது, யமகநயத்தின்பொருட் டென்க. கண்டம், கீர்த்தி, ஆராதநம், வேதா, ஆஸநம், ஹாரம், தநஞ்ஜயன் - வடசொற்கள். மூன்றாமடியில், ஆர் - யார் என்பதன் மரூஉ. திருமகளாக - திருமகளாகன் என்ற பெயரின் ஈறுகெட்டவிளி. ஹாரம்-பொன்னாலும் முத்தினாலும் மற்றையிரத்தினங்களாலும் மலரினாலு மாகிய மார்பின்மாலை. தருமபுத்திரன் இராஜசூயயாகஞ் செய்யவேண்டிய பொழுது அருச்சுனன் வடக்கிற்சென்று பல அரசர்களை வென்று அவர்கள்செல்வத்தைத் திறைகொணர்ந்ததனால், அவனுக்கு 'தநஞ்ஜயன்' என்று ஒருபெயராயிற்று; இனி, இப்பெயர்க்கு - வெற்றியைச் செல்வமாகவுடையவ னென்றும் ஒருபொருள் கொள்ளலாம். அடியேன் ஆர் என்றவிடத்து, யார் என்ற வினாவினைக்குறிப்புமுற்று - தன்மையொருமைக்கு வந்தது.

இரண்டாமடியிறுதியில், வருமொழிமுதலுயிர்வரக் குற்றியலுகரக்கேடு கொள்ளாமலும், பொதுவிதிப்படி வகரவுடம்படுமெய்த்தோற்றத்தையேனும் ஏற்காமலும் சந்திபிரித்து நிறுத்தினது, யமகவமைப்பின்பொருட்டு. இங்ஙனம் சொல்லணிக்காகப் பிரித்துக்காட்டியிருக்கிற இடங்களிலெல்

லாம், கட்டளைக்கலித்துறையிலக்கணவமைதியை நோக்குமிடத்து, குற்றிய லுகரம் அலகுபெறவில்லை யென்று கொள்ளவேண்டும்; இல்லாவிடின், "முதற்சீர்நான்கும் வெண்டளைபிழையாக், கடையொருசீரும் விளங்கா யாகி, நேர்பதினாறே நிரைபதினேழென், றேதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே" என்ற கட்டளைக்கலித்துறையிலக்கணம் அமையாது. இங் ஙனம்கொள்ளவேண்டியவிடங்களிலெல்லாம் மூலத்தில் இப்பதிப்பில் (+) இக்குறி இடப்பட்டிருக்கிறது. (௩௦)

௩௧. அமரவரம்பையினல்லார்பலரந்திக்காப்பெடுப்ப
அமரவரம்பையில்வேல்வேந்தர்சூழமண்ணாண்டிருந்தோர்
அமரவரம்பையில்கான்போயிறந்தனராதலில்வீடு+
அமரவரம்பையின்மஞ்சாரரங்கருக்காட்படுமே.

(இ - ள்.) அமர அரம்பையின் நல்லார் பலர் அந்திக்காப்பு எடுப்ப - தேவசாதியாகிய ரம்பையென்னும் அப்ஸரஸ்திரீயைக்காட்டிலும் அழகிய வர்களான மகளிர் பலர் திருவந்திக்காப்பு எடுக்கவும், அமர அரம் பையில் வேல் வேந்தர் சூழ - போர்க்குஉரியதும் அரமென்னும்வாள்விசேடத்தால் அராவப்பட்டதுமான வேலாயுதத்தை யேந்திய அரசர்கள் பக்கங்களிற் சூழ்ந்துநிற்கவும், மண் ஆண்டு இருந்தோர் அமர - நிலவுலகத்தை யர சாண்டிருந்தவர்களெல்லாரும், (பின்பு), வரம்பை இல் கான் போய் இறந் தனர் - எல்லையை யுடையதாகாத வனத்திற்குச் சென்று மாய்ந்தார்கள்: ஆதலில் - ஆகையால்,—வீடு அமர - (நீங்கள்) பரமபதமடைதற்பொருட்டு, அரம்பையில் மஞ்சு ஆர் அரங்கருக்கு ஆள்படும்-வாழைமரத்தின்மீது மேக ங்கள் தங்கப்பெற்ற ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கிற நம்பெருமாளுக்கு அடிமைப்படுங்கள்; (எ - று.)

செல்வம் யாக்கை இவற்றின் நிலையில்லாமையை முதல்வாக்கியத்தில் எடுத்துக்காட்டி, இரண்டாம் வாக்கியத்தில், அரங்கனுக்கு ஆட்பட்டால் அழியாச்செல்வமாகிய முத்தி சித்திக்குமென்றார். அரசர்கள் தமதுஆயுளிற் பெரும்பான்மை அரசாண்டு முதுமைவந்தபின்பு அவ்வரசாட்சியைத் தமது மைந்தர்க்கு அளித்து வனம்புகுந்து மறுமைப்பேற்றின்பொருட்டுச் சில காலம் தவஞ்செய்தலு முளதாயினும், அச்சிலநாளைத்தவத்தால் வீடுபேறு கிடைக்குமென்ற நிச்சய மில்லை யென்பதும் இதிற் போதரும். 'வேந்தர் சூழ மண்ணாண்டிருந்தோர்' என்றதனால், சக்கரவர்த்திகளென்றதாயிற்று.

அரம்பை - ரம்பா என்ற வடசொல்லின் விகாரம்; இன் - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது; இங்ஙனம் உபமானஉபமேயங்களினிடையே வரும் எல்லைப்பொருளை உறழ்பொரு வென்பர். அந்திக்காப்புஎடுத்தல் - பவனி வருதலாகிய திருவிழாவின் முடிவிலே கண்ணெச்சில்கழித்தற்பொருட்டு ஆரதியேந்துதல்; அந்திக்காப்பு - அந்திமாலைப்பொழுதில் திருஷ்டிதோஷ பரிகாரத்திற்காக ஆரதியேந்துதலுமாம். இரண்டாமடியில், அமரம் - ஸம ரம் என்ற வடசொல்லின் விகாரம்; அமர என்று எடுத்து, அமர் என்ற பெயரின்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்ச மெனினுமாம். பயில் என்பது பையில் எனப் போலியாய்நின்றது, யமகத்தின்பொருட்டு. அரம்பயில்வேல்

—கீழ் "அரங்காதுவார்களே" என்றதனோடு ஒப்பிடுக. மூன்றாமடியில், அமர என்பது - 'அடைய' என்பதுபோல எஞ்சாமைப்பொருள்காட்டிநின்றது; அம் மரம் என்று எடுத்து, அழகியமரங்களையுடைய வென்று உரைப்பாரு முளர். வரம்பை யில் என்றவிடத்து, இல் என்பது - செயப்படுபொருள்குன்றுததாய் நின்றது. அரம்பையில் மஞ்சுஆர் அரங்கம்—வாழைமரங்களின் உயர்ச்சிவளத்தை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணி. ஆட்படும் - உம்ஈற்று ஏவற்பன்மை. (௩௧)

௩௨. ஆளாகவந்தவடியேற்கருள்பரியானைதிண்டேர்
ஆளாகவந்தனிற்செற்றிலங்கேசனையட்டவல்வில்
ஆளாகவந்தன்புயந்துணித்தாயரங்காமுளரி-
ஆளாகவந்தமிலுன்னடியார்க்கன்பனாவதற்கே.

(இ - ள்.) ஆகவந்தனில் - போரிலே, பரி - குதிரைகளையும், யானை - யானைகளையும், திண் தேர் - வலிய தேர்களையும், ஆள் - காலாள்களையும், செற்று - அழித்து, இலங்கா ஈசனை அட்ட - இலங்கையரசனான இராவணனைக் கொன்ற, வல் வில் ஆளா - வலிய வில்லை யாள்கிற வீரனே! கவந்தன் புயம் துணித்தாய் - கபந்தனென்ற அரக்கனது தோள்களை யறுத்திட்டவனே! அரங்கா - ரங்கநாதனே! முளரியாள் ஆக - தாமரைமலரில் வாழ்பவளான திருமகளை மார்பிற்கொண்டவனே! ஆள் ஆக வந்த அடியேற்கு-அடிமையென்றுவந்து உன்னைச்சரணமடைந்த எனக்கு, அந்தம் இல் உன் அடியார்க்கு அன்பன் ஆவதற்கு அருள் - எல்லையில்லாத உனது அடியார்கட்கு அடியவனாகுமாறு கருணைசெய்வாய்; (எ - று.)

எம்பெருமானுக்குத் தொண்டனாவதனோடு அப்பெருமானடியார்கட்கு அடிமைபூண்டொழுகுதலில் தமக்கு உள்ள அபேக்ஷையைக் கூறினர்.

பரியானைதேர்ஆள் - சதுரங்கசேனை. குதிரை, ஓரங்கமாதலோடு மற்றோரங்கமான தேரைச் செலுத்துவது மாதலால், முன்நிறுத்தப்பட்டது. அதனையடுத்து யானையை நிறுத்தினது,அது சேனைக்கு அலங்காரமாதலும் வீரர்க்கு வாகனமாய்நிற்றலோடு தானும் போர்செய்து பகையழிப்பதாதலும் பற்றியென்க. ஆஹவம், லங்கேசன்,அந்தம்-வடசொற்கள். லங்கேசன்-குணசந்தி. முளரி - முட்களையுடைய அரியையுடையது: வேற்றுமைத்தொகையன்மொழி; அரி=அரை: தண்டின் சுற்றுப்புறம். (௩௨)

௩௩. ஆவாகனத்தரடியார்மனத்துட்புள்ளானவொப்பில்-
ஆவாகனத்தரரங்கர்பொற்றாளுக்கடிமைப்படார்
ஆவாகனத்தவழுக்குடல்பேணியறிவிழந்தவ-
ஆவாகனத்தரிருந்தென்னிராமமெலென்னம்புவிக்கே.

(இ - ள்,) அடியார் மனத்துள் ஆவாகனத்தர் - அடியார்களுடைய இதயகமலத்தில் வந்துவீற்றிருத்தலையுடையவரும், புள் ஆன ஒப்பு இலா வாகனத்தர் - கருடப்பறவையாகிய ஒப்பற்ற வாகனத்தையுடையவருமாகிய, அரங்கர் - ஸ்ரீரங்கநாதருடைய, பொன் தாளுக்கு - அழகிய திருவடிகளுக்கு, அடிமைப்படார் - ஆட்படமாட்டார்கள் (சிலர்): ஆ ஆ - அந்தோ!

கனத்த அழுக்கு உடல் பேணி - பாரமாயுள்ள அசுத்தமான தம்உடம்பைப் பாதுகாத்துக்கொண்டு, அறிவு இழந்து - மதிகெட்டு, அவா ஆகு - (சிற்றின்பத்தில்) ஆசைகொள்ளுகிற, அனத்தர் - பயனற்ற அவர்கள், அம் புவிக்கு - அழகிய இந்நிலவுலகத்தில், இருந்து என் - உயிர்வாழ்ந்திருத்தலால் என்ன லாபம்? இராமல் என் - இராதொழிதலால் என்ன நஷ்டம்? (எ-று.)

அரங்கர்க்கு ஆட்படாதவர் இருந்தென்ன? போயென்ன? என்றபடி; எனவே, இவ்வுலகத்தில் மானுடப்பிறப்பெடுத்தலின் பயன் அரங்கர்க்கு ஆட்பட்டு உய்தலே யென்பது, தேர்ந்தகருத்து. "மலர்மிசையேகினான்" என்றபடி அன்போடுதியானிக்கின்ற அடியார்களுடைய இதயகமலத்தில் எம்பெருமான் அவர்நினைந்த வடிவத்தோடு வந்துவீற்றிருத்தலால், 'ஆவாகனத்த ரடியார்மனத்துள்' என்றார். ஆவாகனத்தர் - தம்மைத்தாமே அங்கு நிலைநிறுத்துபவ ரென்க.

ஆவாஹநம், மநஸ், வாஹநம், கநம், அநர்த்தம், புவி - வடசொற்கள். "நேமிசேர்தடங்கையினானை நினைப்பிலா வலிநெஞ்சுடைப், பூமிபாரங்கள்" என்றபடி பகவத்பக்தரல்லாதவரது உடல் பூமிக்குப்பாரமாதலால், 'கனத்தவுடல்' எனப்பட்டது. ஆ ஆ - இரக்கக்குறிப்பிடைச்சொல்லின் அடுக்கு.

௩௪. அம்புவிலங்கைநகர்பாழ்படச்சங்குமாழியும்விட்டு—
அம்புவிலங்கைகொண்டாயரங்காவன்றிடங்கர்பற்றும்
அம்புவிலங்கையளித்தாயினியென்னையாசையென்றிய-
அம்புவிலங்கையிட்டேசஞ்சிறையிலடைத்திடலே.

(இ - ள்.) அம் - அழகிய, புவி - பூமியில், லங்கை நகர் பாழ்பட - இலங்காபுரியிலுள்ள அரக்கர்கள் அழியும்படி, சங்கும் ஆழியும் விட்டு அம்பு வில் அம் கை கொண்டாய் - சங்கசக்கரங்களைக் கைவிட்டு[வந்து இராமனாகத்திருவவதரித்து]அம்பையும் வில்லையும் அழகியகைகளிற்கொண்டவனே! அரங்கா—! அன்று - அந்நாளில், அம்பு - ஜலத்திலே, இடங்கர் பற்றும் - முதலையினாற் பிடித்துக்கொள்ளப்பட்ட, விலங்கை - மிருகஜாதியான கஜேந்திராழ்வானை, அளித்தாய் - பாதுகாத்தருளியவனே!— இனி—, என்னை—, ஆசை என்று இயம்பு விலங்கை இட்டு - ஆசையென்று சொல்லப்படுகிற [ஆசையாகிய] விலங்கைப் பூட்டி, ஏசும் சிறையில் அடைத்திடல் - இகழப்படுகிற (பிறப்பாகிய)சிறைச்சாலையில் அடைக்காதே;(எ - று.)

உனக்கு ஆட்பட்ட அடியேனது காமம்முதலிய குற்றங்களைப் போக்கி இனிப் பிறப்பில்லாதபடி முத்தியளித்தருளவேண்டு மென வேண்டியபடி. பெருமாள் இலங்கையரசனான இராவணன் முதலிய இராக்கதர்களை யழிக்கக்கருதி வனவாசஞ்செல்லுங்காலத்தில் சங்கசக்கராம்சமான பரதசத்துருக்கனர்களை உடன்கொண்டுசெல்லாது நகரத்திலேயே விட்டுச் சென்றமையும், 'சங்கும் ஆழியும் விட்டு' என்றதில் அடங்கும். ஒருவிலங்கினாலே மற்றொரு விலங்கிற்கு நேர்ந்த துன்பத்தையும் பொறாமல் தனதுபேரருளினால் அரைகுலையத் தலைகுலைய மடுக்கரைக்கேவந்து உதவின மகாகுணத்திலீடுபட்டு, 'அன்றுஇடங்கர்பற்றும்விலங்கையளித்தாய்' என்றார். விலங்கு- திர்யக்ஜாதி. 'விலங்கையிட்டேசஞ்சிறையில்' என்று பாடமோதி,விலங்கை

யிட்டே, சம் - ஜந்மமாகிய, சிறையில் - சிறைக்கூடத்தில் என்று உரைப் பாருமுளர்; சம்=ஜம்: ஜநநம், பிறப்பு. ஏசு அம் சிறை என்று எடுத்து, அம்-சாரியை எனினும் இழுக்காது. உயிரைப்பந்தப்படுத்துதலால், பிறப்பு 'சிறை' எனப்பட்டது. "அவாவென்ப எல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்றதுகொண்டு, அவாவை 'விலங்கு'என்ற தன் காரணத்தை உணர்ந்துகொள்க.

லங்கைநகர் - இடவாகுபெயர். மூன்றாமடியில், அம்பு - வடசொல். அடைத்திடல் - எதிர்மறையொருமையேவல்; எதிர்மறைவியங்கோளுமாம்.

௩௫ இடவமலைக்கும்புயங்கமலைக்குமிலங்குமகல்
இடவமலைக்குமிருங்கமலைக்குமிறைவசங்க
இடவமலைக்கும்புனலரங்காவெய்த்தமார்க்கண்டன்கண்டு+
இடவமலைக்குமுலகழியாதுள்ளிருந்ததென்னே.

(இ - ள்.) இடவ மலைக்கும் - ருஷபகிரியாகிய திருமாலிருஞ்சோலை மலைக்கும், புயங்க மலைக்கும் - சேஷகிரியாகிய திருவேங்கடமலைக்கும், இலங்கும் அகல் இடம் அமலைக்கும்-விளங்குகின்ற விசாலமான நிலவுலகத்துக்கு உரிய அதிதேவதையான பூமிதேவிக்கும்,இருங் கமலைக்கும் - பெரிய செந்தாமரைமலரில்வாழ்பவளான ஸ்ரீதேவிக்கும், இறைவ - தலைவனே! சங்கம் இடவ - சங்கத்தை இடக்கையிலுடையவனே! மலைக்கும் புனல் அரங்கா - (கரையை) மோதுகின்ற காவிரிநீர்ப்பெருக்குப் பாயுந் திருவரங்கத்தி லெழுந்தருளியிருப்பவனே! எய்த்த மார்க்கண்டன் கண்டிட - (பிரளயத்திலலைபட்டு) மெலிவடைந்த மார்க்கண்டேயமுனிவன் (நினது திருவயிற்றினுட் சென்று) காணுமாறு, அம் அலைக்கும் உலகு அழியாது உள் இருந்தது- (பிரளயவெள்ள)நீரினால் அழிக்கப்பட்ட உலகங்களெல்லாம் அழியாமல் நினது திருவயிற்றினுள்ளே யிருந்த விதம், என்னே - என்னவிசித்திரமோ!

ருஷபம் தவஞ்செய்து பேறுபெற்ற மலையாதலால் தென்திருமலைக்கு 'ருஷபகிரி' என்றும், பரமபதநாதனது கட்டளையின்படி அவனுக்குப் பல வகைக்கைங்கரியங்களைச் செய்யும் ஆதிசேஷனே அப்பெருமான் இனிது எழுந்தருளியிருத்தற்கு மலைவடிவமானதனாலும் மேருமலையினிடமிருந்து ஆதிசேஷனுடனே வாயுவினாற் கொணரப்பட்ட மலையாதலாலும் வடதிருமலைக்கு 'சேஷகிரி' என்றும் பெயர்கள் வாய்த்தன. இடவம் - ருஷபம் என்ற வடசொல்லின் விகாரம். புஜங்கமலை யென்பது - 'சேஷகிரி' என்பதன் பரியாயநாமமாக நின்றது. புஜங்கம் என்பது, புயங்கம் என்று விகாரப்பட்டது. அமலா, கமலா என்ற வடசொற்கள்-ஆவீறு ஐயாயின. அமலை- குற்றமில்லாதவள். இறைவன் - இறைமை என்ற பண்பினடியாப் பிறந்த பெயர்; வ் - பெயரிடைநிலை. மலைத்தல் - பொருதல். எய்த்தல் - மெலிதல். மார்க்கண்டன்-மிருகண்டுவினது குமாரன்; வடமொழித்தத்திதாந்தநாமம். அம் - நீர்; வடசொல்.

காலகதியைக்கடந்து என்றும்பதினாறாக நெடிதூழிவாழும்படி நீண்ட ஆயுள்பெற்ற மார்க்கண்டேயமுனிவன் பத்திரநதிக்கரையில் தவம்புரிந்து நரநாராயணரது தரிசனத்தைப்பெற்று 'யான் பிரளயக்காட்சியைக் காணு

மாறு அருள்புரியவேண்டும்" என்று பிரார்த்திக்க, அவ்வாறே அவர்கள் அநுக்கிரகித்துச்சென்றபின்பு, மாயவன்மாயையால் மகாபிரளயந் தோன்ற, அப்பிரளயப்பெருங்கடலிற் பலவாறு அலைப்புண்டுவருந்திய மார்க்கண்டேயன், அவ்வெள்ளத்தில் ஆலிலையின்மீது ஒருகுழந்தைவடிவமாய்அறிதுயிலமர்கிற ஸ்ரீமந்நாராயணனைக் கண்டு அப்பெருமானது திருவயிற்றினுட் புக்கு, அங்கிருந்த உலகங்களையும் எல்லாச்சராசரங்களையும் கண்டு பெருவியப்புக்கொண்டனனென்பது, இங்குக்குறித்தவிஷயம். (௬௫)

௬௬. இருந்தையிலங்கவெளிறுபடாதென்செய்தாலுநிம்பத்து+, இருந்தையிலந்தித்தியாதவைபோற்புல்லர்யாவுங்கற்றுய்ந்து+, இருந்தையிலம்பன்னகண்ணார்க்கல்லால்வெண்ணெயிலொளித்து+, இருந்தையிலங்கையரங்கர்க்கன்பாகியிருக்கிலரே.

(இ - ள்.) என் செய்தாலும் - என்னஉபாயஞ்செய்தாலும், இருந்தை - கரியானது, இலங்க - விளங்கத்தக்கதாக, வெளிறு படாது - வெண்ணிறமடையாது; (என்செய்தாலும்)—, நிம்பத்து இருந் தையிலம் தித்தியாது - சிறந்த வேப்பெண்ணெய் இன்சுவைபெறாது; அவை போல்—,—புல்லர் - அற்பகுணமுடையரான கீழ்மக்கள், யாவும் கற்று ஆய்ந்து இருந்து - சகல சாஸ்திரங்களையும் பயின்று ஆராய்ந்திருந்தும், ஐயில் அம்பு அன்ன கண்ணார்க்கு அல்லால் - கூரிய அம்புபோன்ற கண்களையுடைய மகளிர்க்கு அன்பாயிருப்பரேயல்லாமல், இல்லில் ஒளித்து இருந்து வெண்ணெய் ஐயில் அம் கை அரங்கர்க்கு அன்பு ஆகி இருக்கிலர் - (ஆய்ச்சியருடைய) கிருகத்தில் (அவரறியாதபடி) ஒளித்து வீற்றிருந்து வெண்ணெயை எடுத்து உண்ட அழகியகையையுடைய ரங்கநாதர்விஷயமாக அன்புகொண்டிருக்க மாட்டார்கள்; (எ - று.)

என்றது, புல்லறிவாளரியல்புக்கு இரங்கியவாறும். உவமையணி. 'என் செய்தாலும்' என்பதை மத்யமதீபமாக முன்பின்வாக்கியமிரண்டற்கும் கூட்டுக. வெண்ணெயை ஒளித்திருந்துஉண்டது, கிருஷ்ணாவதாரத்தில். நிம்பம், தைலம் - வடசொற்கள். இரண்டாமடியில் 'தையிலம்' என்பதும், மூன்று நான்கா மடிகளில் 'ஐயில்' என்பதும் - யமகத்தின்பொருட்டுக் கொண்ட போலிகள். தைலம் - எண்ணெய்; திலம் - எள்: அதன்சம்பந்தமானது. இங்கு இச்சொல் நெய் என்றமாத்திரமாய் நின்றது. வேப்பெண்ணெய்க்கு 'இரும்' என அடைமொழிகொடுத்தது, இகழ்ச்சிக்குறிப்பு; கைப்பிற்பெரிய என்று பொருள்கொள்ளினுமாம். யா-அஃறிணைப்பன்மைவினாப்பெயர். மூன்றுமடியில், 'இருந்து' என்பது-துணைவினை: நான்காமடியில், 'இருந்து' என்பதற்கு - உட்கார்ந்துஎன்பது பொருள்; ஆகவே, ஒருசொல் வந்தபொருளில்வாராமை காண்க. மூன்றுமடியில், 'இருந்து' என்றதன்பின் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. ஐயில் அம்பு அன்ன - வேலையும் அம்பையும் போன்ற எனினுமாம். (௬௬)

௬௭. இருக்குமந்தத்திலறியாவரங்கன்மண்ணேழுண்டுந்தய்-
இருக்குமந்தத்திருவாய்மலர்ந்தானெட்டெழுத்தைக்குறி-
இருக்குமந்தப்புத்தியிர்த்துநல்வீடெய்தலாகுங்கைபோய்-
இருக்குமந்தச்செவிட்டுமென்முந்நீர்கடந்தேறிடிலே.

23651

(இ - ள்.) இருக்கும் அந்தத்தில் அறியா அரங்கன் - வேதமும் தனது முடிவில் [வேதாந்தமாகிய உபநிஷத்துக்களில்] அறியமாட்டாதுநின்ற ரங்கநாதனும், மண் ஏழ் உண்டும் தயிருக்கும் அந்த திரு வாய் மலர்ந்தான் - ஏழுவகைப்பட்ட உலகங்களையெல்லாம் புசித்தும் (வயிறுநிரம்பாமற் கிருஷ்ணாவதாரத்திலே) தயிரை உண்ணும்பொருட்டாகவும் அந்த அழகிய வாயைத் திறந்தவனு மான திருமாலினது, எட்டு எழுத்தை - திருவஷ்டாக்ஷரமந்திரத்தை, குறியிருக்கும் - சிந்தியாத உங்களுக்கும், மந்தம் புத்தி ஈர்த்து நல் வீடு எய்தல் ஆகும் - கூர்மையற்ற அறிவை யொழித்து [தத்துவ ஜ்ஞாநம்பெற்று]ச் சிறந்த முக்தியை அடைதல் கூடும்: கை போய் இருக்கும் அந்தன் செவிடு ஊமன் முந்நீர் கடந்து ஏறிடில் - கைகளில்லாத முடவனும் குருடனும் செவிடனும் ஊமையு மான ஒருவன் கடலைக்கடந்து அக்கரையேறுவனானால்; (எ - று.)

ஏறிடில் எய்தலாகும் என இயையும். முடம், குருடு, செவிடு, ஊமை என்ற உறுப்புக்குறைகளையெல்லாமுடைய ஒருவன் கடல்கடந்து. கரையேறுவது உண்டானால்,எம்பெருமானது திருவஷ்டாக்ஷரத்தைச் சிந்தியாத உங்கட்கும் பிறவிக்கடல்கடந்து முத்திக்கரைசேர்தல் உளதாம் என்றார்; என்றது, அஸம்பாவித மென்றபடியாம்: இது,பொய்த்தற்குறிப்பணி; வடநூலார் மித்யாத்யவஸிதியலங்கார மென்பர்: இதன் இலக்கணம் - ஒரு பொருளைப் பொய்யென்றுநிரூபித்தற்கு மற்றொரு பொய்ப்பொருளைக் கற்பித்தல். நீந்தமாட்டாமைக்கு முடமும்,கரை இன்னதிசையிலுள்ளது எனக் காணமாட்டாமைக்குக் குருடும், அதனைக்குறித்துப் பிறரை உசாவியுணரமாட்டாமைக்கு ஊமையும், பிறர்சொல்லக் கேட்டறியமாட்டாமைக்குச் செவிடும் சேர்க்கப்பட்டன.

ருக், அந்தம், மந்தம், புத்தி, அந்தன் - வடசொற்கள். இருக்கும், உம் - உயர்வுசிறப்பு; பகவானது சொரூபத்தை யுணர்ந்து உரைத்தற்கென்றே யமைந்ததும் என்றபடி. மண்ஏழ் - ஈரேழுலகம். மண்ணேழுண்டும், தயிருக்கும் என்ற உம்மைகள் - முறையே, உயர்வுசிறப்பு இழிவுசிறப்புப் பொருளன. அந்தத் திருவாய் - உலகமுண்ட பெருவாய். குறியிர் - முன்னிலைப் பன்மை யெதிர்மறை வினையாலணையும்பெயர்; இர் - விகுதி: எதிர்மறை ஆகாரம் புணர்ந்துகெட்டது. உம் - இழிவுசிறப்பு. எய்தல், எய்து - பகுதி. முந்நீர் - படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்றுநீர்மையுடையது; நீர்மை - தன்மை: ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூன்றுநீரையுடையது என்றலு முண்டு; பண்புத்தொகையன்மொழி. (௬எ)

௬அ. ஏறுங்கரியும்பரியுஞ்செற்றான்பரனென்றுமன்றுள்
ஏறுங்கரிமறையாதலினாலையம்யாதுமக்கீடு—
ஏறுங்கரியவரங்கர்க்கன்பாய்வினையென்னுமிடி
ஏறுங்கரியுமினிமேற்பிறவியிடரில்லையே.

(இ - ள்.) 'ஏறும் - எருதையும், கரியும் - யானையையும், பரியும் - குதிரையையும், செற்றான் - வென்றவனான திருமால்தானே, பரன் - (யாவர்க்கும்) மேலான இறைவன்,' என்று - என்று ஐயந்திரிபறத்தெரிவித்து, மன்

றன் ஏறும் - அவையேறுகிற [நியாயசபையாராற் சரியென்றுஏற்றுக்கொள் ளப்படுகிற], கரி-சாட்சி, மறை-வேதமாகும்: ஆதலினுல்-ஆதலால், உமக்கு-உங்கட்கு, ஐயம் யாது - (திருமாலே பரம்பொரு ளென்கிற விஷயத்திற்) சந்தேக மென்ன? [சிறிதும் சங்கைகொள்ளவேண்டா என்றபடி]: கரிய அரங்கர்க்கு அன்பு ஆய் - கரிய திருநிறமுடைய ரங்கநாதருக்கு (நீங்கள்) அன்புள்ள அடியார்களாகி, ஈடேறும் - உய்வுபெறுங்கள்: (அங்ஙனம் நீங் கள் அன்பரானுல்),வினை என்னும் இடி ஏறும் கரியும் - (தொன்றுதொட்டு வருகிற உங்கள்) கருமமாகிய பேரிடியும் கரிந்தொழியும்: இனிமேல் பிறவி இடர் இல்லை-(உங்கட்கு)வரும்பிறப்புத்துன்பமும் இல்லையாம்; (எ - று.)— ஈற்றுஏகாரம் - தேற்றம்.

இது, உலகத்தார்க்கு நல்லறிவுணர்த்தியது. அரங்கர்க்கு அன்புபூண்டு ஒழுகினுல், அப்பரமனதருளால், மூவகைக்கருமங்களில் சஞ்சிதம் ஆகாமி யம் என்ற இரண்டும் ஒழிய, பிராரப்தகருமமும் வலியொடுங்கியிடுமென்க. (சஞ்சிதம் - பிறப்பு அநாதியாய்வருதலின் உயிரால் அளவின்றியீட்டப்பட்ட வினைகளின் பயன்கள். பிராரப்தம்-அவ்வினைப்பயன்களுள் இறந்தஉடம்பு களால் அனுபவித்தன ஒழியப் பிறந்தஉடம்பால் மூகர்துகின்றவை. ஆகா மியம் - இப்பிறப்பில் ஈட்டப்பட்டுப் பின்அனுபவிக்கக்கடவன.)

வேதம் அனைவராலும் தடையின்றிஒப்புக்கொள்ளப்படும் மூலப்பிரமா ணமென்பார், 'மன்றுளேறுங் கரி மறை' என்றார். வினைப்பயன் தவறாது விளைந்து வருத்துதலால், 'இடியேறு' எனப்பட்டது. ஏறு - ஆண்பாற்பெ யர்; சிறந்ததையும் பெரியதையும் 'ஏறு' என்றல், மரபு. (௧அ)

௧௯. இடராகவந்தென்னைப்புன்சிறுதெய்வங்களென்செயுமான்-
இடராகவன்பிணிமாநாகமென்செயும்யான்வெருவி-
இடராகவன்னிபுனலிடிகோண்மற்றுமென்செயும்வில்
இடராகவன்னரங்கன்றிருத்தாளென்னிதயத்ததே.

(இ - ள்.) வில் - வில்லை, இடம் - இடக்கையிலேந்திய, ராகவன் - ரகு குலத்தி லவதரித்தவனுன, அரங்கன் - ரங்கநாதனது, திரு தாள்-திருவடி, என் இதயத்தது - அடியேனது மனத்தி லுள்ளது: (ஆதலால்),—புல் சிறு தெய்வங்கள் - இழிகுணமுடைய அற்பதேவதைகள், என்னை—,இடர் ஆக வந்து என் செயும் - துன்பம்விளைப்பனவாக வந்து நெருங்கி யாதுசெய்ய மாட்டும்? மானிடர் ஆகம் வல் பிணி மா நாகம் - மனிதசரீரத்துக்கு உரிய கொடிய நோய்களாகிய பெரும்பாம்புகள், என் செயும்—? ராகம் வன்னி - செந்நிறமுடைய தீயும்,புனல் - நீரும், இடி - இடியும், கோள் - (நவ)கிரகங் களும், மற்றும் - இன்னும்தீங்குவிளைப்பன யாவும், யான் வெருவியிட என் செயும் - நான்அஞ்சும்படி என்னசெய்யமாட்டும்? (எ - று.)

"வேண்டுதல் வேண்டாமை யில்லா னடிசேர்ந்தார்க், கியாண்டு மிடும் பை யில" என்றபடி தன்னைப்பற்றிவருவனவும், பிறவுயிர்களைப்பற்றிவரு வனவும், தெய்வத்தைப்பற்றிவருவனவும் என மூவகையால்வரும் பிறவித் துன்பங்கள்யாவும் எம்பெருமானது திருவடியை இடைவிடாது நினைப்ப வர்க்கு உளவாகா என்பதாம். (தன்னைப்பற்றிவருவன - உடம்பைப்பற்றி

வருந் தலைநோய் முதலியனவும், மனத்தைப்பற்றிய காமம் கோபம் முதலியனவும்; இவை, ஆத்யாத்மிகம் எனப்படும். பிறவுயிர்களைப்பற்றிவருவன மிருக பக்ஷி மநுஷ்ய பிசாச சர்ப்ப ராக்ஷஸாதிகளால் உண்டாவன; இவை, ஆதிபௌதிகம்எனப்படும்.தெய்வத்தைப்பற்றிவருவன-குளிர் காற்று மழை இடி வெயில் முதலியவற்றால் நேர்பவை; இவை, ஆதிதைவிகம் எனப்படும். இவற்றை வடநூலார் தாபத்ரய மென்பர்.)

மானிடர் - மாநுஷர் என்ற வடசொல்லின் விகாரம். ராகவஹ்ருதி என்ற வடமொழித்தொடர், விகாரப்பட்டது. ராகவன் - வடமொழித்தத்திதாந்த நாமம். இதயம் - வடசொற்சிதைவு. தாள் - சாதியொருமை. ராகவன்னரங்கன், னகரமெய் - விரித்தல். (௩௯)

௪௦. அத்திரங்காயமெனவுணரேனெனதாசையுன்கை
அத்திரங்காயத்தியிற்பெரிதானரையாகிப்பல்வீழ்-
அத்திரங்காயந்திரம்போற்பொறியைந்தழியுமக்கால்-
அத்திரங்காயரங்காவடியேனுன்னடைக்கலமே.

(இ - ள்.) அரங்கா—!—காயம் - உடம்பு, அத்திரம் - நிலையற்றது, என உணரேன்-என்றுஅறியும்மெய்யுணர்வுடையனல்லேன் யான் ; எனது ஆசை - என்னுடைய அவாவோ, உன் கை அத்திரம் காய் அத்தியின் பெரிது - உனது கையினால் எய்யப்பட்ட ஆக்கிநேயாஸ்திரத்தினால் தவிப்படைந்த கடலினும் பெரியது; நரை ஆகி - கிழத்தனம் முதிர்ந்து, பல் வீழ- பற்கள் விழ, திரங்கா - தோல்திரைந்து, யந்திரம் போல் பொறி ஐந்து அழியும் அ காலத்து - யந்திரம்போல இடையீடின்றித் தொழில்செய்கிற பஞ்சஇந்திரியங்களும் அழியும் மரணகாலத்தில், இரங்காய் - இரக்கங்கொண்டு (அடியேனுக்கு) அருள்செய்வாய்: அடியேன் உன் அடைக்கலம் - நான் உனதுதாசனாகச் சரண்புகுந்தேன்; (எ - று.)—ஆல் - அசை.

"எய்ப் பென்னை வந்து நலியும்போ தங்கேது நா னுன்னை நினைக்க மாட்டேன்,அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தே னரங்கத்தரவணைப்பள்ளியானே"என்ற பெரியாழ்வாரருளிச்செயல் இங்குக் கருதத்தக்கது.

அஸ்திரம், காயம், ஆசா, அஸ்த்ரம், அப்தி, யந்த்ரம், காலம் - வடசொற்கள். அப்தி - நீர்தங்குமிடம்; அப் - ஜலம். 'உன்கையத்திரங்காய்' என்றது, கடலுக்கு அடைமொழியாய் நின்றது. திரங்கா - உடன்பாட்டெச்சம். யந்திரம்போற் பொறியைந்து அழியும் என்பதற்கு - (சூத்திரமற்ற) மரப்பாவைபோலப் பஞ்சேந்திரியங்களும் அழியு மென்று உரைத்தலுமொன்று. பொறியைந்து என்பதில், இனத்தென்றறிபொருளில் வரும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. (௪௦)

௪௧. கலக்கூழைக்கைக்குங்கருத்துடையீரரங்கத்துளிலைக்
கலக்கூழைக்கைக்குங்கறியிட்டுந்துய்த்திருங்காதுபடைக்
கலக்கூழைக்கைக்குள்வருவாணனைக்கண்ணுதலும்விட்ட
கலக்கூழைக்கைக்குப்பைகண்டானைவீதியிற்கண்டுவந்தே.

(இ - ள்.) கலக்கு - (மனத்தைக்) கலங்கச்செய்கிற, ஊழை -ஊழ்வினையை, கைக்கும் - வெறுத்தொழிக்கவேண்டு மென்னும், கருத்து உடையீர் -

எண்ணத்தையுடையவர்களே!—(நீங்கள்),—அரங்கத்துள் - ஸ்ரீரங்கத்திலே,—காது - (பகைவரை) மோதவல்ல, படைக்கலம் - ஆயுதங்களையுடைய, கூழை கைக்குள் - படைவகுப்பின் ஒழுங்கினிடையிலே, வரு - (போர்க்கு) வந்த, வாணனை-பாணாசுரனை, கண்நுதலும் விட்டு அகல - (தன்னைச்சரணமடைந்ததுபற்றிப் பாதுகாப்பதாக உடன்பட்ட) நெருப்புக்கண்ணை நெற்றியிலுடையவனான சிவபிரானும் (பாதுகாக்கமாட்டாமற்) கைவிட்டு விலக, கூழை கை குப்பை கண்டானை - (அவ்வாணனது) குறைபட்ட கைகளின் குவியலைக் கண்டவனை [அவன்கைகளைத் துணித்துவீழ்த்திக் குவியல்செய்தவனான எம்பெருமானை], வீதியில் கண்டு - திருவீதியிலே உத்ஸவங்கண்டருளத் தரிசித்து, உவந்து - மனமகிழ்ந்து, இலை கலம் கூழை கைக்கும் கறி இட்டு துய்த்தும் இரும் - இலையாகிய பாத்திரத்திலே கூழாகியஇழிந்தவுணவைக் கசக்கின்றகறிகளைச்சேர்த்து உண்டுகொண்டாயினும் வசித்திருங்கள்; (எ - று.)

'வறுமையினால்வருந்தியாயினும் நம்பெருமாளைச் சேவித்துக்கொண்டு ஸ்ரீரங்கத்திலே வசித்தல் கொடியபழவினையை யொழித்து முத்திபெறுவித்தற்குச் சாதனமாகு மென்று சனங்களுக்கு உபதேசித்தவாறும். அரங்கத்துள் கண்டு உவந்து இரும் என இயையும்.

இரண்டாமடியில், கலம் - உண்கலம். கைக்கும்-இனியதல்லாத என்றபடி. கறி - கறிக்கப்படுவது; கறித்தல் - கடித்துத்தின்னுதல். இட்டுந்துய்த்து என்றவிடத்து உம்மை மாற்றப்பட்டது. காது படைக்கலம்-வினைத்தொகை. படைக்கலம்-போர்க்கருவி. கண்ணுதல் - வேற்றுமைத்தொகையன்மொழி. கை-படைவகுப்பினது, கூழைக்குள்-பின்னணிக்குள்ளே, வரு - வருகின்ற என்று உரைப்பாருமுளர். நான்காமடியில், கைக்குப்பை-கைகளின்தொகுதியை, கூழைகண்டான் - குறைசெய்தவனென்று இயைத்து உரைப்பினுமாம். (௪௧)

௪௨. கண்டகனாவின்பொருள்போலயாவும்பொய்காலனென்னுங்
கண்டகனாவிகவர்வதுவேமெய்கதிநல்கெனக்
கண்டகனாவிப்பொழுதேசெல்கென்றருள்காரரங்கற்
கண்டகனாவின்புறக்கண்டுவாழ்த்திக்கடிதுய்ம்மினே.

(இ - ள்.) 'யாவும் - (செல்வம் இளமை முதலிய) எல்லாப்பொருள்களும், கனாவின் கண்ட பொருள் போல பொய் - சொப்பனத்திலே காணப்பட்ட பொருள் போலப் பொய்யாகும் [சிறிதும்நிலைபேறின்றிஅழியுமென்றபடி]; காலன் என்னும் கண்டகன் ஆவி கவர்வதுவே மெய் - யமனென்கிற கொடியவன் (பிராணிகளின்) உயிரை (உடம்பினின்று)கவர்ந்துகொள்ளுதலே உண்மை: (ஆதலால்), கதி நல்கு - (எனக்கு) உயர்ந்தகதியாகிய பரமபதத்தை அளித்தருள்வாய்,' என - என்று (கண்டாகர்ணன்) பிரார்த்திக்க, கண்டகனா இபொழுதே செல்க என்று அருள் - 'கண்டாகர்ணனே! இப்பொழுதே (பரமபதத்திற்குச்) சென்றுசேர்வாயாக' என்று சொல்லி அருள்செய்த, கார் அரங்கன் - (கைம்மாறுகருதாதகொடையிலும் கரியதிருநிறத்திலும் குளிர்ச்சியிலும் காளமேகம்) போன்றவனான ஸ்ரீரங்க

நாதனை, கடிது-விரைவில், கண் தக கண்டு - கண்கள் தகுதிபெறுமாறு தரிசித்தும், நா இன்புஉற வாழ்த்தி - நாக்கு இனிமையடையுமாறு துதித்தும், உய்ம்மின் - ஈடேறுங்கள்; (எ - று.)

காலன் - பிராணிகளின் ஆயுட்காலத்தைக் கணக்கிடுபவன்: கண்டகம் - முள்; அதுபோலப் பிராணிகளைவருத்துபவன், கண்டகன். மூன்றாமடியில் 'கண்டகனு' என்பது - வடமொழிச்சிதைவு. செல்கென்று - தொகுத்தல். கண் தக நா இன்புற கண்டு வாழ்த்தி - முறைநிரனிறைப்பொருள்கோள். கண்தக - கண்படைத்தபயன்பெற என்றபடி. அரங்கற்கண்டகநாவின்புறக்கண்டு என்றவிடத்து, உயர்திணையில் இரண்டனுருபு தொக்கது: உயர்திணைப்பெயரீற்று னகரமெய் பொதுவிதிப்படி வலிவர இயல்பாகாது றகரமாத் திரிந்தது, இரண்டாம்வேற்றுமைத்தொகையாதலால்; "இயல்பின் விகாரம்." நாவின்புற என்றவிடத்து, நகரவேறுபாடு, யமகநயத்தின் பொருட்டுக் கொண்டது. (௬௪)

௬௫. கடிக்கும்பணிநஞ்சமுதாகுந்தீங்குநன்காகும்பராக்
கடிக்கும்பணியலர்தாழ்வார்கல்லாமையுங்கற்றமையாங்
கடிக்கும்பணியறமெல்லாமரங்கர்பைங்கன்னித்துழாய்க்
கடிக்கும்பணியொளிக்குநல்லபாதங்கருதினர்க்கே.

(இ - ள்.) அரங்கர் - ரங்கநாதரது, பைங் கன்னி துழாய் கடிக்கும் - பசிய இளமையான திருத்துழாய்மணம்வீசப்பெற்றனவும், பணி ஒளிக்கும் - ஆபரணங்கள் விளங்கப்பெற்றனவு மான, நல்ல பாதம் - அழகிய திருவடிகளை, கருதினர்க்கு - தியானித்தவர்கட்கு,—கடிக்கும் பணி நஞ்சு அமுது ஆகும் - கடிக்கிற பாம்பின் விஷமும் அமிருதமாகும்; தீங்கும் நன்குஆகும் - (பிறர்செய்யுந்) தீமையும் நன்மையாய்முடியும்; பராக்கு அடிக்கும் பணியலர் தாழ்வார் - பராமுகஞ்செய்து அவமதிக்கிற பகைவர்களும்கீழ்ப்படிந்து வணங்குவார்கள்; கல்லாமையும் கற்றமை ஆம் - பயின்றறியாத பொருள்களும் பயின்றனபோல விளங்கும்; பணி அறம் எல்லாம் கடிக்கும் - (சாஸ்திரங்களிற்)சொல்லப்பட்ட தருமங்களெல்லாம் சித்திக்கும்; (எ - று.)

எம்பெருமானது திருவடிகளை மநநஞ்செய்பவர்க்கு நேர்கிற இஷ்டப்பிராப்தியும், அநிஷ்டநிவிருத்தியும் இச்செய்யுளிற் கூறப்பட்டன.

பணம் - படம்; அதனையுடையது, பணீ எனப் பாம்புக்குக் காரணக்குறி: அவ்வடசொல், பணியென ஈறு இகரமாயிற்று. பராக்கடித்தல் - முகங்கொடாது அசட்டைசெய்தல்; ஏமாற்றுதலுமாம். பணியலர் - வணங்காதவர்; எனவே, பகைவராயிற்று: எதிர்மறைப்பலர்பால்வினையாலணையும் பெயர். மூன்றாமடியில், கடித்தல் - கிடைத்தல். பணியறம் - வினைத்தொகை; இருபெயரொட்டுப்பண்புத்தொகையாகக் கொண்டு, கைங்கரியரூபமான நல்வினைப்பயன்களெல்லாம் கைகூடு மெனினுமாம். நான்காமடியில், கடிக்கும் என்பது - கடி என்ற உரிச்சொல்லின்மேற் பிறந்த எதிர்காலப் பெயரெச்சம். ஒளித்தல்-ஒளிசெய்தல். 'கடிக்கும்', 'ஒளிக்கும்' என்ற தெரிநிலைப்பெயரெச்சங்களும், 'நல்ல' என்ற குறிப்புப்பெயரெச்சமும், அடுக்கி, 'பாதம்' என்ற பெயரைக் கொண்டன. முதலிரண்டடிகளில் முரண்தொ

டை காண்க. கடிக்கும்பணிநஞ்சுஅமுதாதல் முதலியவற்றைப் பரமபாகவத ஞன பிரகலாதன் முதலாயினரிடம் காணலாம். ஒளிக்குநகல்ல, நகர மெய் - விரித்தல். (சங)

சச. தினகரனார்கலிதீகாற்றொடுங்குஞ்செயலும்விண்மீ
தினகரனார்கொண்டலேழ்செருக்காமையுஞ்சென்றெதிர்மோ
தினகரனாருயிர்செற்றாரரங்கர்திகிரிசங்கேந்
தினகரனார்நம்பெருமாளமைத்ததிருக்கைகண்டே.

(இ - ள்.) தினகரன் - சூரியனும், ஆர்கலி - கடலும், தீ-அக்கினியும், காற்று - வாயுவும், (ஆகிய இவைகளெல்லாம்), ஒடுங்கும் செயலும் - தம்தம் வரம்புகடவாது ஒரெல்லைக்கு உட்பட்டு அடங்கியிருக்குஞ்செயலும், விண் மீதில் நகரனார் கொண்டல் ஏழ் செருக்காமையும் - வானத்தில் (அமராவதி யென்னும்)நகரத்தையுடையவனை இந்திரனாற் செலுத்தப்படுகிற ஏழுமே கங்களும் செருக்கி அளவிறந்தமழைபொழிந்து உலகங்களை யழித்திடாமை யும், (என்னும் இவை யாதுகாரணத்தா லெனின்),—சென்று எதிர் மோ தின கரன் ஆர் உயிர் செற்றார் - எதிராக வந்து பொருத கரனென்னும் அரக்கனது அருமையான உயிரை யொழித்தவரும், திகிரி சங்கு ஏந்தின கரனார்-சங்கசக்கரங்களைத் தரித்த திருக்கைகளை யுடையவரும், நம் பெரு மாள் - நம்பெருமாளென்று திருநாம முடையவருமான, அரங்கர் - ரங்க நாதப்பிரான், அமைத்த - நில்லென்று குறித்துவைத்த, திரு கை - திருக் கையை, கண்டே - பார்த்தேயாம்; (எ - று.)

திநகரன் முதலியன அமைந்துநடப்பது திருவரங்கர் திருக்கைகொ ண்டு குறிப்பித்த திருவாணையைக் கண்டேயா மென அப்பெருமானது ஸர்வநியாமகத்வம் இதிற் கூறப்பட்டது. "நெடுங்கடனிற்பதும் நாயிறு காய்வதும் நிற்றலும் கா, லொடுங்கிநடப்பதும் தண்கார்பொழிவதும் ஊழி தனிற், சுடுங்கனல் பற்றிச்சுடாதேயிருப்பதும் தும்பைபுனைந், தடுங்கன லாழியரங்கேசர்தந் திருவாணையினே" என்பர் திருவரங்கத்துமாலையிலும்.

திந கரன் - பகலைச்செய்பவன்: வடசொல். ஆர்கலி - நிறைந்த ஓசை யையுடையது; வினைத்தொகையன்மொழி. விண்மீதினகரனார் என்றவிட த்து, 'ஆர்' என்ற பலர்பால்விகுதி - உயர்வுப்பொருளது. கொண்டல் - நீர்கொண்ட மேகம்; தொழிலாகுபெயர். கொண்டலேழ் - ஸம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என் பன. இந்திரன் மேகவாகன னாதலால், 'விண்மீதினகரனார்கொண்டலேழ்' எனப்பட்டது. ஆர்கொண்டல் என்றெடுத்து, ஒலிக்கின்ற மேகம் எனப் பொருள்கொள்ளினுமாம். 'ஆர்உயிர்-பண்புத்தொகை.'நம்பெருமாளமைத்த திருக்கை' என்றது, அபயஹஸ்தமாயமைந்த வலத்திருக்கையை. கரன்என்ற வடசொல் - கொடியவனென்று பொருள்படும்; இவன் இராவணனுக்குத் தம்பிமுறையில்நிற்கின்ற ஓரரக்கன்; தண்டகாரணியத்திலே சூர்ப்பணகை வசிப்பதற்கென்றுகுறிப்பிட்ட ஜனஸ்தானமென்றவிடத்தில் அவட்குப் பாது காவலாக இராவணனால் நியமித்து வைக்கப்பட்ட பெரிய அரக்கர்சேனை க்கு முதல்தலைவன். (சச)

௪௫. திருக்காவிரிக்கும்யமுனைக்குங்கங்கைக்குந்தெள்ளமுதாந்
திருக்காவிரிக்குங்கடற்கும்பிரான்றென்னரங்கமென்னத்
திருக்காவிரிக்குமொழியார்க்குத்தீமெழுகாவிரன்புய்த்
திருக்காவிரிக்குமதெவ்வாறவனுங்கள்சென்மத்தையே.

(இ - ள்.) திரு கா விரிக்கும் - அழகிய சோலைகளைச் செழித்துவளரச் செய்கின்ற, யமுனைக்கும் - யமுனாநதிக்கும், கங்கைக்கும் - கங்காநதிக்கும், தெள் அமுது ஆம் திரு காவிரிக்கும் - தெளிவான அமிருதம்போ லினிய தாகிற மேன்மையுள்ள காவேரிநதிக்கும், கடற்கும் - சமுத்திரத்துக்கும், பிரான் - தலைவனான எம்பெருமானது, தென் அரங்கம் - அழகிய திருவரங்கம், என்ன - என்று (ஒருதரமேனும் வாயினாற்)சொல்ல, அன்பு உய்த்து இருக்கா - அன்புசெலுத்தியிராமல், திருக்கு ஆவிர் - மாறுபடுவீர்கள்; இக்கு மொழியார்க்கு-கருப்பஞ்சாறுபோலினியசொற்களையுடைய மகளிர்திறத்திலோ, தீ மெழுகு ஆவிர் - தீப்பட்ட மெழுகு போலக் கரைந்துஉருகுவீர்கள்; (இவ்வாறு ஆக), அவன் உங்கள் சென்மத்தை இரிக்குமது எ ஆறு-அப்பெருமான் உங்களுடைய பிறப்பை யொழிப்பது எங்ஙனம் நிகழும்?(எ-று.)

திருவரங்கமென்று வாயினாற்சொல்லுதலுஞ் செய்யாமல் விஷயாந்தரங்களில் ஊன்றிநிற்கின்றீர்களே, அவன் உங்கள் ஜந்மத்தை எங்ஙனம் ஒழிப்பான்? என்று, நல்வழிச்செல்லாதவர்களைக்குறித்து இரங்கிக்கூறினர். 'திருக்காவிரிக்கும்' என்ற அடைமொழியைக் கங்கை காவிரிகட்குங் கூட்டலாம். யமுனைக்குப் பிரான் என்றது, யமுநாநதிதீரத்திற் கிருஷ்ணாவதாரஞ் செய்து பலதிருவிளையாடல்களைநிகழ்த்தியருளியதனால். கங்கைக்குப்பிரான் என்றது, அந்நதி திருமாலின்ஸ்ரீபாததீர்த்த மாதலால். காவிரிக்குப்பிரான் என்றது, உபயகாவேரி மத்தியிற் பள்ளிகொண்டருளுதலால். கடற்குப் பிரான் என்றது,கடலைஉறைவிடமாகக்கொண்டிருத்தலால். யமுனை கங்கை முதலிய புண்ணியநதிகளின் தீர்த்தத்தினும் காவேரிதீர்த்தத்திற்கு உள்ள இனிமைமிகுதி தோன்ற,அதற்கு 'தெள்ளமுதாம்'என்ற அடைமொழி கொடுத்தார்.

யமுநா என்ற வடமொழி - யமனுடன்பிறந்தவள் என்று பொருள் படும். யமனும் யமுனையும் சூரியன்மக்க ளென்றறிக. காவிரி-காவேரீஎன்ற வடசொல்லின் விகாரம்: அப்பெயர்-கவேரனென்ற அரசனது மகள் என்று பொருள்படும். இக்ஷு, ஜந்மம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. இருக்கா=இராமல்; ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம்; கு - சாரியை; உடன்பாட்டுஇறந்தகாலவினையெச்சமாக 'இருந்து' எனப் பொருள்கொண்டு, 'தீமெழுகாவிர்' என்றதனோடு இயைப்பினும் அமையும். (௪௫)

௪௬. சென்மந்தரங்கங்கருமஞ்சுழிபிணிசேலினங்கு
சென்மந்தரங்கதிர்பொன்கோள்கண்மாரிதிண்கூற்றசனி
சென்மந்தரங்கவற்றுள்விழுவோர்கரைசேர்க்கும்வங்கஞ்
சென்மந்தரங்கவின்றோளரரங்கர்திருப்பதமே.

(இ - ள்.) சென்மம் - (மாறிமாறிவருந்தன்மையனவான) பிறப்புக்கள், தரங்கம்-(மாறிமாறிவரும்)அலைகளையுடைய கடலாகும் ; கருமம்-(உயிர்

களைப் பிறப்பிலே சுழலச்செய்வதான) ஊழ்வினை, சுழி - (அகப்பட்டபொருள்களைத் தன்னில்உழலச்செய்வதான) நீர்ச்சுழியாகும்; பிணி - (பிறந்த உயிர்களைவருத்துகின்ற) தேகவியாதிகளும் மனோவியாதிகளும், சேல்-(நீரில் விழுந்தாரைக் குத்திவருத்துகிற) மீன்களாகும்; குசென்-அங்காரகனும், மந்தர் - சனியும், அம் கதிர் - அழகிய சூரியசந்திரர்களும், பொன் - பிருகஸ்பதியும், கோள்கள் - மற்றையகிரகங்களும், மாரி - மழையும், திண் கூற்று-(பிராணிகளைத் தவறாது அழிக்கும்) வலிமையுடைய யமனும், அசனி - இடியும், (ஆகிய ஆதிதைவிகத்துன்பங்கட்குக் காரணமான தேவவர்க்கங்கள்), இனம் - (அம்மீனின்) இனமாய்ப் பிராணிகளை வருத்துகிற நீர்வாழ்ஜந்துக்களாகும்; அவற்றுள் செல் மந்தர்-அப்பிறப்புக்களிலே (கருமவசத்தாற்) சென்று அகப்பட்டுக்கொண்ட அற்பபாக்கியமுடைய மனிதர்கள், அங்கு விழுவோர்-அக்கடலில் விழுந்துவருந்துபவர்களாகும்; செல் மந்தரம் கவின் தோளார் அரங்கர் திரு பதமே - மேகந்தவழும் மந்தரகிரி போன்ற அழகிய தோள்களையுடையவரான ரங்கநாதரது திருவடியே, கரை சேர்க்கும் வங்கம்-(அப்பிறவிக்கடலினின்று) முத்திக்கரைசேர்க்கும் மரக்கலமாகும்; (எ - று.) —ஈற்றுஏகாரம் - பிரிநிலை.

அவயவி அவயவம் முதலிய அனைத்தையும் இங்ஙனம் உருவகஞ்செய்து உரைத்தது, முற்றுருவகவணி; வடநூலார் ஸகலரூபக மென்பர். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தா, ரிறைவனடி சேராதார்," "அறவாழியந்தணன்றாள் சேர்ந்தார்க் கல்லாற், பிறவாழி நீந்த லரிது" என்பவாதலால், 'சென்மம்தரங்கம் செல் மந்த ரங்கு அவற்றுள் விழுவோர் கரைசேர்க்கும்வங்கம் அரங்கர்திருப்பதமே' என்றார். 'செல்மந்தரம்' என்றது, மந்தரத்தின் உயர்வு தோன்றக் கூறியதாம். அஷ்டகுலபர்வதங்களி லொன்றாகிய மந்தரமலைபோல ஓங்கி வளர்ந்த தோ ளென்க; பாற்கடலைக் கலக்கிய மந்தரம் போலப் போர்க்கடலைக் கலக்குந் தோளென்றுங் கொள்க.

செல்வது செல் என மேகத்துக்குக் காரணக்குறி. கவின் - உவமவுருபுமாம். ஜந்மம், தரங்கம், கர்மம், குஜன், மந்தர், அசநி, பதம்-வடசொற்கள். தரங்கம் - கடலுக்குச் சினையாகுபெயர். குஜன் என்ற பெயர் - பூமியினின்று பிறந்தவ னென்றும், மந்தன் என்ற பெயர் - (நொண்டியாதலால்) மெதுவாகநடப்பவ னென்றும் பொருள்படும். குசென்என்றது, யமகநோக்கிய விகாரம். இரண்டாமடியில் 'மந்தர்' என்ற பன்மை - இழிவுணர்த்தும். செல் மந்தரம் கவின் தோளார் என்பதற்கு - மேகமும் மந்தரகிரியும் போன்ற திருமேனியழகையும் தோள்களையு முடையவ ரென்று உரைத்தலு மொன்று; மேகம்போன்ற அழகியமேனியும், மந்தரம்போன்ற தோளு மென முறைநிரனிறை. மூன்றமடியில், மந்தர் - மந்தபுத்தியுடையாருமாம்.

சஎ. பதக்கமலங்கலணிமார்பபொன்னிபடிந்திமையோர்
பதக்கமலங்களறுசீரரங்கபகட்டயிரா
பதக்கமலங்கரித்தூர்வோன்சிவனயன்பார்க்கவந்துன்
பதக்கமலங்களடியேன்றலைக்கென்றுபாலிப்பதே.

(இ - ள்.) பதக்கம் - பதக்கமென்னும் அணிகலத்தையும், அலங்கல் - (பலவகை) ஆரங்களையும், அணி - அணிந்த, மார்ப - திருமார்பையுடைய

வனே! இமையோர் - தேவர்கள், பொன்னி படிந்து - திருக்காவேரிதீர்த்தத்தில் நீராடி, பதக்கம் மலங்கள் அற - தீவினைகளாகிய அசுத்தம் நீங்கப் பெறுதற்கிடமான, சீர் அரங்க - ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனே!— பகடு அயிராபதம் கம் அலங்கரித்து ஊர்வோன் - பெருமையையுடைய ஐராவதமென்ற யானையின் மத்தகத்தைச் சிங்காரித்து ஏறிநடத்துபவனுன இந்திரனும், சிவன் - சிவபிரானும், அயன் - பிரமனும், பார்க்க—, வந்து - (நீ) எழுந்தருளி, உன் பதம் கமலங்கள் அடியேன் தலைக்கு பாலிப்பது - உனது திருவடித்தாமரைமலர்களை அடியேனுடைய முடியில் வைத்து அருள்செய்வது, என்று - எந்நாளோ! (எ - று.)

அலங்கல் - தொங்கியசைதல்; மாலைக்குத் தொழிலாகுபெயர். இமையோர் - கண்இமையாதவர். யமகத்தின்பொருட்டு, பாதகம் என்ற வடசொல் குறுக்கலும் விரித்தலு மாகிய விகாரங்களைப் பெற்றுப் பதக்கம் என நின்றது. அயிராபதம் - ஐராவதம் என்ற வடசொல்லின் போலிவிகாரம். கம், சிவன், பதம், கமலம் - வடசொற்கள். கம் - தலை. சிவம் - சுபம்; அதனை(த் தன் அடியார்க்கு)ச் செய்பவன், சிவன். அயிராபதப்பகடு என்று மாற்றி, ஐராவதமென்னும் ஆண்யானை யென்றும் உரைக்கலாம்: பகடு - யானையின் ஆண்மைப்பெயர். கமலம் என்ற பெயர் - நீரை யலங்கரிப்பது என்று காரணப்பொருள்படும். (சள)

சஅ. பாலனஞ்செய்யமர்நாடாண்டுபூணுெடுபட்டணிந்து
பாலனஞ்செய்யகலத்துண்டுமாதர்பல்போகத்தையும்
பாலனஞ்செய்யவிருப்பதிலையம்பருகிநந்தன்
பாலனஞ்செய்யவள்கோமானரங்கம்பையில்கைநன்றே.

(இ - ள்.) பால் அனம் - வெண்ணிறமான அன்னப்பறவைகள், செய்- கழனிகளில், அமர் - பொருந்திவசிக்கப்பெற்ற, நாடு - தேசத்தை, ஆண்டு- அரசாட்சிசெய்து, பூணொடு பட்டு அணிந்து - ஆபரணங்களையும் பட்டாடையையும் தரித்து, செய்ய கலத்து பால் அனம் உண்டு - சிவந்த [செம்பொன்மயமான] பாத்திரத்திற் பாற்சோற்றைப் புசித்து, மாதர் பல் போகத்தையும் பாலனம் செய்ய இருப்பதில் - மகளிர்சேர்க்கையாலாகும் பல வகையின்பங்களையும் பரிபாலித்து வீற்றிருப்பதனினும்,— ஐயம் பருகி - இரந்துபெற்ற கூழைக் குடித்தாயினும், நந்தன் பாலன் அம் செய்யவள் கோமான் அரங்கம் பையில்கை - நந்தகோபனது குமாரனும் அழகிய திருமகளின் கணவனுமான திருமாலினது ஸ்ரீரங்கத்திலே வாசஞ்செய்தல், நன்று - நல்லது; (எ - று.)—ஈற்றுஏகாரம் - தேற்றம்.

அனம் - ஹம்ஸம் என்ற வடசொல்லின் சிதைவான அன்ன மென்பதன் தொகுத்தல். நீர்வளமிகுதியால் தாமரை முதலிய நீர்ப்பூக்களுள்ள விடத்திலே சென்று விரும்பிவாழ்தல் அன்னப்பறவையின்இயல்பாதலால், 'பாலனஞ்செய்யமர்' என்ற அடைமொழி நாட்டின்வளத்தை யுணர்த்தும். அணிதல் - பொதுவினை. அனம்=அந்நம். பசும்பொன்னினாலாகிய பூணை 'பைம்பூண்' என்றல் போல, செம்பொன்னினாலாகிய கலத்தை 'செய்ய கலம்' என்றார். கலம்-உண்கலம். பாலனஞ்செய்தல்-தவறாமல் நுகர்தல்.

செய்ய=செய்து : எச்சத்திரிபு. தமக்கு உரிய பலவகைப்போகங்களையும், மாதர்கள், பாலனம் செய்ய - தவறுநடக்கும்படி பாதுகாக்க என்று உரைப்பினும் அமையும். இருப்பதில் - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது.

நந்தன் - கண்ணனை வளர்த்த தந்தை. வசுதேவனும் தேவகியும் கம்சனுற் சிறையிலிருத்தப்பட்டு வடமதுரையில் தளைபூண்டிருக்கையில், திருமால் தேவகியினிடம் எட்டாவதுகருப்பத்தில் கண்ணனாய் அவதரிக்க, அக்குழந்தையைக் கம்சன் கொல்லக்கூடு மென்ற அச்சத்தால், தாய்தந்தையர் அத்தெய்வக்குழவியின் அநுமதிபெற்று அந்தச்சிசுவை அதுபிறந்தஇராத்திரியிலேயே திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்க்கெல்லாந்தலைவனான நந்தகோபனது திருமாளிகையிலே இரகசியமாகக் கொண்டுசேர்த்துவிட்டு, அங்கு அப்பொழுது அவன்மனைவியான யசோதைக்கு மாயையின்அம்சமாய்ப் பிறந்திருந்த தொரு பெண்குழந்தையை எடுத்துக்கொண்டுவந்துவிட, அதுமுதற் கம்சனைக் கொல்லுகிறவரையில் கண்ணபிரான் அக்கோகுலத்திலேயே நந்தகோபன்குமாரனாய் யசோதைவளர்க்க வளர்ந்தருளினனென்று உணர்க. செய்யவள் - செவ்வியையுடையவள். கோமான், மான்-பெயர்விகுதி. பையில்கை=பயில்கை; இப்போலி, அடுத்த யமகச்செய்யுளின் அந்தாதித்தொடர்ச்சி நோக்கிக் கொள்ளப்பட்டது. 'பருகி' என்ற வினையை நோக்கி, 'ஐயம்' என்றது - கூழ் எனப்பட்டது. போகம், பாலநம், பாலன் - வடசொற்கள். நம் செய்யவள் கோமான் என்றுஎடுத்துரைத்தலு மொன்று. (சரு)

சகூ. பையிலத்திமூளைநரம்பூனுதிரம்பரந்தகுரம்
பையிலத்தியுள்விளைபாண்டமென்னுமற்புன்பாவையர்தோற்
பையிலத்திசெய்துநரகெய்துவீருய்யப்பற்றுமினோ
பையிலத்திமேவித்துயில்கூரரங்கர்பொற்பாதத்தையே.

(இ - ள்.) 'பையில்-(ஒன்றோடொன்று) பொருந்தியிருக்கின்ற, அத்தி-எலும்பும், மூளை - மூளையும், நரம்பு - நரம்பும், ஊன் - தசையும், உதிரம் - இரத்தமும், பரந்த - பரவிய, குரம்பை - (உயிர் சிலநாள்தங்குஞ்)சிறுகுடிசை (இது): இலத்தி உள் விளை பாண்டம் - மலம் அகத்திலே மேன்மேலுண்டாகப்பெறும் பாத்திரம்(இது)', என்னுமல் - என்று (உடம்பின்அசுத்தத்தன்மையைக்)கருதாமல், புல் பாவையர் தோல் பையில் அத்தி செய்து - இழிகுணமுடைய மகளிரது உடம்பினிடத்து ஆசைவைத்து, நரகு எய்துவீர் - நரகத்தை யடைபவர்களே!—(நீங்கள்), உய்ய - ஈடேறுமாறு, அத்தி பையில் மேவி துயில் கூர் அரங்கர் பொன் பாதத்தை பற்றுமினோ-(திருப்பாற்)கடலில் (ஆதிசேஷனது) படத்தின்கீழ்த் திருவுள்ளமுவந்து யோகநித்திரை செய்தருளுகிற ஸ்ரீரங்கநாதருடைய அழகிய திருவடிகளைச் சரணமடையுங்கள் ; (எ - று.)

அத்திஎன்பது - எலும்புஎன்றபொருளில் அஸ்தி என்றவடசொல்லும், ஆசைஎன்ற பொருளில் அர்த்தி என்ற வடசொல்லும், கடல் என்ற பொருளில் அப்தி என்ற வடசொல்லும் சிதைந்ததாம். பையில்=பயில் ; முதற்போலி, ருதிரம், பாண்டம், நரகம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன.

தோற் பை - தோலினாலாகிய பை. அத்திசெய்தல் - அர்த்தித்தல்: வேண்டுதல். பற்றுமினோ என்ற ஓகாரம் - கழிவிரக்கத்தைக் காட்டும்.

"குடருங் கொழுவுங் குருதியு மென்புந், தொடரு நரம்பொடு தோலும் - இடையிடையே, வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்றுள், எத்திறத்தா ளீர்ங்கோதையாள்", "ஊறி யுவர்த்தக்க வொன்பதுவாய்ப்புலனுங், கோதிக் குழம்பலைக்குங் கும்பம்," "தோற்போர்வை மேலுந் துளைபலவாய்ப் பொய்ம்மறைக்கும், மீப்போர்வை மாட்சித் துடம்பானால் - மீப்போர்வை, பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப், பைம்மறியாப் பார்க்கப்படும்" என்ற நாலடியார்ப்பாடல்கள் உடம்பின்அசுத்தியை நன்கு விளக்கும்.

இச்செய்யுளில் அடிதோறும் முதலிலுள்ள ஐகாரம் குறுக்கமாதலால், அதனைத் தனியே நேரசையாகக்கொள்ளாது அடுத்தகுறிலோடு சேர்த்து நிரையசையாகக் கொள்ளவேண்டும்; இல்லாவிடின், "நேர்பதினாறே நிரைபதினேழென், றோதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே" என்றது முதலிய கட்டளைக்கலித்துறையிலக்கணம் சிதையும். கீழ்ச்செய்யுளின் ஈற்றடியில் வந்த "பையில்கை" என்றவிடத்தும் இங்ஙனமே காண்க. (சக)

ரு௦. பாதகங்கைக்குமரங்கர்பல்பேய்பண்டிராவணனுற்
பாதகங்கைக்குமென்றெள்ளக்கொய்தார்படிக்கேற்றதிருப்
பாதகங்கைக்குள்விழுமுன்னமேபங்கயன்விளக்கும்
பாதகங்கைக்குளிர்நீர்வீழ்ந்ததீசன்படர்சடைக்கே.

(இ - ள்.) பாதகம் - (அடியார்களுடைய) பாவங்களை, கைக்கும் - வெறுத்தொழிக்கின்ற, அரங்கர்-ரங்கநாதரும்,பல் பேய் - பலபேய்கள், பண்டு-முன்னாளில், இராவணன் உற்பாதம் கம் கைக்கும் என்று எள்ள - இராவணனுடைய உற்பாதமான தலைகள் கசக்குமென்று இகழுமாறு,கொய்தார்-(அத்தலைகளைத்) துணித்தவருமான திருமால்,படிக்கு-(தாம் மாவலிபக்கல்வேண்டிய) மூவடிநிலத்தைத் தவறாது பெறுதற்காக, ஏற்ற - வாங்குதற்குஉடன்பட்ட, திருப்பாத கம் - (கொடுப்பதைத்) திருப்பக்கூடாதஜலம் [வாக்குதத்தத்தோடு மகாபலிசக்ரவர்த்தி தாரைவார்த்துக்கொடுக்கிற நீர்], கைக்குள் விழும் முன்னமே - (அப்பெருமானது) அகங்கையில் விழுதற்கு முன்னமே, —பங்கயன் விளக்கும் பாதம் கங்கை குளிர் நீர் - பிரமன் திருமஞ்சனஞ்செய்த திருவடியின் தீர்த்தமாகிய குளிர்ந்த கங்காஜலமானது, ஈசன் படர் சடைக்கே வீழ்ந்தது-சிவபிரானது பரவியசடையிலே விழுந்திட்டது;(எ-று.)

மாவலிபக்கல் மூவடிமண்வேண்டிப் பெற்று உலகனைத்தையும் தனது உடைமையாக்கி அவனைச்செருக்கடக்குதற்கென்று திருமால்கொண்டதிருவவதாரமாகிய வாமனமூர்த்தியின் கையில் மகாபலி தாரைவார்த்துக்கொடுத்த நீர் விழுவதன்முன், அவ்வாமனன் திரிவிக்கிரமனாய்வளர்ந்து உலகமளக்க மேலே சத்தியலோகத்துச்சென்ற அப்பிரானது திருவடியை அங்குப் பிரமன் தன்கைக்கமண்டலதீர்த்தத்தாற் கழுவிவிளக்க அந்த ஸ்ரீபாததீர்த்தமாகப்பெருகிய கங்காநதி சிவபிரானதுசடையில் வீழ்ந்தது என்றார்,

விரைவுமிகுதி தோன்ற; இங்ஙனம் காரணத்தின்முன் காரியம் நிகழ்ந்ததாகக் கூறுதல், மிகையுயர்வுநவிற்சியணி. "தாரேற்றவெண்குடைமாவலி வார்க்கவுந் தாமரைமேற், சீரேற்றதொன்முகத்தோன் விளக்கவுஞ் செம்பொன்முடிக், காரேற்றமேனி யரங்கேசர் கையுங் கழலு மொக்க, நீரேற்றன வண்திருக்குறளாகி நிமிர்ந்தவன்றே" என்று திருவரங்கத்துமாலையிற் கூறுவதற்கும் இதற்கும் உள்ள ஒற்றுமைவேற்றுமைநயங்களை உய்த்துணர்க. "குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர் பெய்து, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்திக் - கறைகொண்ட, கண்டத்தான் சென்னி மேலேறக் கழுவினான், அண்டத்தான் சேவடியை யாங்கு" என்ற ஆழ்வாரருளிச்செயலும் இங்கு அறியத்தக்கது.

உத்பாதம் - வடசொல்: பின்நிகழுந் தீமைக்கு அறிகுறியாக முன்னர்த் தோன்றுந் தீநிமித்தம்; இராவணனது பத்துத்தலைகளை உலகத்தின் தீமைக்கு அறிகுறியென்றும் இனியனவல்லவென்றும் பிணம்பிடுங்கித்தின்னும் இயல்பினவான பேய்களும் இகழ்வதாகக் கூறியது, அவனது மிக்கஇகழற்பாட்டை விளக்கும். பங்கஜம் - சேற்றில் முளைப்பது: வடசொல்; தாமரைக்குக் காரணவிடுகுறி: அதில் தோன்றியவன், பங்கயன். ஈசன் - ஐசுவரியமுடையவன். சடைக்கு - உருபுமயக்கம். (௫௦)

௫௧. படநாகத்தந்தரமீதிருப்பானெம்பரனரங்கன்
படநாகத்தந்தம்பறித்தோன்புகழைப்பரவுமின்க
படநாகத்தந்தக்கரணம்பொல்லான்சிசுபாலன்முற்பல்
படநாகத்தந்தவசைக்குந்தந்தான்றொல்பரகதியே.

(இ - ள்.) அந்தரம்மீது - பரமபதத்தில், படம் நாகத்து - படங்களையுடைய திருவனந்தாழ்வான்மீது, இருப்பான் - வீற்றிருப்பவனும், எம்பரன் - எமதுஇறைவனும், நாகம் தந்தம் பட பறித்தோன் - (கம்சனேவிய குவலயாபீடமென்னும்) யானையினது தந்தத்தை (அவ்யானை) அழியுமாறு பறித்துக்கொண்டவனுமான, அரங்கன் - ரங்கநாதனது, புகழை - கீர்த்தியை, பரவுமின் - கொண்டாடித் துதியுங்கள்; (அங்ஙனம் அனைவரும் புகழுமாறு அப்பெருமான் யாதுசெய்தானெனின்),—கபடன் - வஞ்சகனும், ஆகத்து அந்தக்கரணம் பொல்லான் - உடம்பின்அகத்துறுப்பான மனம் தீயவனுமாகிய, சிசுபாலன் - சிசுபாலனென்பவன், முன் - முன்பு, பல் பட - பலவாறாக, நாகத்து - நாவினாற் பிதற்றின, அந்த வசைக்கும் - அப்படிப்பட்ட [மிகக்கொடிய] நிந்தனைச்சொற்களுக்கும், தொல் பரகதி தந்தான் - அநாதியான பரமபதத்தைக் கொடுத்தருளினான்; (எ - று.)

சிசுபாலன் எம்பெருமானை இகழ்ந்ததற்குப் பயனாகப் பரகதியைப் பெற்றனனென்றால், அப்பெருமானைப்புகழ்வதற்குப் பயன் பரகதி யென்பது கூறாமலே யமையு மென்ற கருத்து, இதில் தொனிக்கும். சிசுபாலன் - வசுதேவனதுஉடன்பிறந்தவளும் அதனாற் கண்ணனுக்குஅத்தையும் சேதிதேசத்தரசனான தமகோஷனுக்குப் பத்தினியுமாகிய சுருதசிரவையென்பவளுடைய மகன். திருமாலின் துவாரபாலகராகிய ஜயவிஜயர்கள் ஒருசமயத்

தில் விஷ்ணுலோகத்தினுட் செல்லவந்த ஸநகாதியோகிகளைத் தடுத்தமை பற்றி அவர்கள்வெகுண்டுகூறிய சாபமொழியால் மூன்றுபிறப்புத் திருமாலுக்குப் பகைவராய்ப் பூமியிற் சனித்து அத்திருமாலின்கையா லிறப்பவராகி, முதலில் இரணிய இரணியாக்ஷராகவும், அதன்பின் இராவண கும்பகர்ணராகவும், அப்பால் சிசுபால தந்தவக்கிரராகவுந் தோன்றின ரென அறிக.

எம்பெருமான் பக்தியோடு தன்னைத்தியானிப்பவர்க்குத் திருவுள்ளமுவந்து மோக்ஷமளிப்பதுபோலவே, விரோதத்தினாலாகிலும் தன்னை இடைவிடாதுநினைந்திருந்தவர்க்கும் சிறுபான்மை தனது பரமகிருபையால் அந்த முக்தியை யளிக்கின்றன னென்பது, நூற்கொள்கை.

அந்தரம் - வானம்,பரமாகாசம். மூன்றாமடியில் 'கபடநர்கத்து' என்றவிடத்து, னகரவேறுபாடு யமகநயம்பற்றியது. வஞ்சக்கும், உம் - இழிவு சிறப்பு. பர கதி - உயர்ந்த கதி. (ருக)

ருஉ. பரவையிலன்னகட்பாஞ்சாலிநின்பரமென்னநிரு
பரவையில்மேகலையீந்தானரங்கன்பணிந்திமையோர்
பரவையிலாழிப்பிரானடிக்கீழுற்பவித்தழியும்
பரவையில்மொக்குளைப்போற்பலகோடிபகிரண்டமே.

(இ - ள்.) பரவு - விசாலித்த, ஐயில் அன்ன கண் - வேலைப்போன்ற [கூரிய] கண்களையுடைய, பாஞ்சாலி - திரௌபதி, நின் பரம் என்ன - '(என்னைக் காப்பது) உனதுபாரம்' என்று சொல்லி முறையிட்டுச் சரணமடைய, நிருபர் அவையில்-அரசர்கள் கூடிய சபையிலே, மேகலை ஈந்தான்-(அவட்கு) ஆடையை யளித்தவனும், இமையோர் பணிந்து பரவு - தேவர்கள் வணங்கித் துதிக்கப்பெற்ற, ஐயில் ஆழி பிரான் - கூரிய சக்கராயுதத்தை யேந்திய இறைவனுமான, அரங்கன்-திருவரங்கநாதனது, அடிக்கீழ்-திருவடியில்,— பரவையில் மொக்குளை போல் - கடலில்தோன்றும் நீர்க்குமிழிகள் போல, பல கோடி பகிரண்டம் - அநேககோடிக் கணக்காகிய அண்டகோளங்கள், உற்பவித்து - தோன்றி, அழியும் - (சிலகாலம் கழிந்தவாறே) மாய்ந்துபோம்; (எ - று.)

"வாரித்தலமுங் குலபூதரங்களும் வானு முள்ளே, பாரித்துவைத்த விவ்வண்டங்கள்யாவும் படைக்க முன்னாள், வேரிப்பசுந்தண்டுழாயரங்கேசர் விபூதியிலே, மூரிப்புனலிற் குமிழிகள்போல முளைத்தனவே," "மண் கழலில்" என்பர் திருவரங்கத்துமாலையிலும்.

பாஞ்சாலீ - வடமொழித்தத்திதாந்தநாமம். பாஞ்சாலதேசத்து அரசனது மகள்; பஞ்சபாண்டவரது பத்தினி. மேகலை யென்ற எண்கோவை யிடையணியின் பெயர், ஆடைக்கு இலக்கணை. மேவுகலை என வினைத்தொகைநிலைத்தொடராக எடுத்து, விரும்பப்படுகின்ற ஆடை யென்றும், பொருந்திய ஆடை யென்றும் பொருள் கொள்ளலாம். ஐயில்=அயில். பஹிரண்டம் - வெளியண்டம்; இங்கு, அண்டமென்ற மாத்திரமாய் நின்றது. யமகநயத்தின்பொருட்டு, 'நிருபரவையின்மேகலை', 'பரவையின்மொக்குளை'என்று சந்திபுணர்க்காமல் லகரவீறாகவே நிறுத்திக்கொண்டார். (ருஉ)

௫௩. அண்டமடங்கலையுந்தந்துகாத்தவையந்தந்தன்பால்
அண்டமடங்கலைச்செய்காரணமம்பொன்முத்தலைவான்
அண்டமடங்கலையீர்த்தோடும்பொன்னியரங்கன்புட்கார்
அண்டமடங்கலைமுந்நீர்மகளுகப்பாகவென்றே.

(இ - ள்.) அம் - அழகிய, பொன் - பொன்னையும், முத்து - முத்துக்களையும் கொழிக்கின்ற, அலை - அலைகள், வான் அண்ட - மேகமண்டலத்தையளாவியுயர, மடங்கலை ஈர்த்து ஓடும் - சிங்கங்களை யிழுத்துக்கொண்டு ஓடிவருகிற, பொன்னி - காவேரிநதியினாற் சூழப்பட்ட, அரங்கன் - திருவரங்கத்திலெழுந்தருளியிருக்கிற பெருமான், அண்டம் அடங்கலையும் - அண்டகோளங்களெல்லாவற்றையும், தந்து - படைத்து, காத்து - பாதுகாத்து, அவை அந்தம் தன்பால் அண்ட மடங்கலை செய் - அவ்வண்டங்களெல்லாம் கற்பாந்தகாலத்திலே மீண்டும் தன்பக்கல் ஒடுங்கும்படி அழிவுசெய்கின்ற, காரணம் - ஏது, (யாதெனில்),—காரண்டம் புள் அடங்கு அலை முந்நீர் மகள் உகப்பு ஆக என்றே - நீர்க்காக்கையாகிய பறவைகள் தம்மிலடங்கப்பெற்ற அலைகளையுடைய திருப்பாற்கடலினின்று தோன்றிய திருமகள் (கண்டு) களிப்படைதற்கு என்றேயாம் ; (எ - று.)

எம்பெருமான் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலையுஞ் செய்வது பெரியபிராட்டியாரின்மனத்தைமகிழ்விக்குந் திருவிளையாடலேயா மென்பது, கருத்து. இரட்டுறமொழித லென்னும் உத்தியால், 'முந்நீர்மக ளுகப்பாக' என்பதற்கு - (அண்டங்கட்கெல்லாம் அதிஷ்டாநதேவதையான) கடலாடைசூழ்ந்த பூமிப்பிராட்டி மகிழ்ச்சி யடைய வென்றும் பொருள்கொள்ளலாம். அண்டமடங்கலையுந் தந்து காத்து அவை அந்தந் தன்பால் அண்ட மடங்கலைச்செய்—"தன்னுளே திரைத்தெழுந் தரங்க வெண்டடங்கடல், தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல், நின்னுளேபிறந்திறந்து நிற்பவும் திரிபவும், நின்னுளேயடங்குகின்ற நீர்மை நின்கண் நின்றதே" என்ற திருமழிசைப்பிரானருளிச்செயலையுங் காண்க.

அடங்கல் என்றது, எஞ்சாமைப்பொருளைக் காட்டும் ; உம்மை - முற்றும்மை. அந்தம்அண்ட - அழிவையடைய, மடங்கலைச்செய் - ஊழிக்காலத்தைச் செய்கிற வென்றுரைத்தலு மொன்று. பொன்னும் முத்தும் சிங்கங்களும்-மலையிலுள்ளவை. மலையில் முத்து, யானைத்தந்தம் முதலியவற்றினின்று தோன்றியவை யென்க. மடங்கல்-(பிடரிமயிர்) மடங்குதலையுடைய தென ஆண்சிங்கத்துக்குக் காரணக்குறி. காரண்டவம்-வடசொல். உகப்பு - தொழிற்பெயர். (௫௩)

௫௪. ஆகமதிக்குமுகமேன்முகமுடையானயன்வாழ்
ஆகமதிக்குநவநீதக்கள்வவணிகொள்வரா-
ஆகமதிக்குளஞ்சேரரங்காவுன்னையன்றித்தெய்வம்
ஆகமதிக்குளெண்ணேனடியேன்பிறராரையுமே.

(இ - ள்.) ஆகமம் - (காமிகம் முதலிய) ஆகமங்களைக் கூறிய, திக்குமுகம் மேல் முகம் உடையான் - நான்குமுகங்களுக்குமேலும் ஒருமுகத்

தை [ஐந்துமுகங்களை] யுடையவனான சிவபிரானும், அயன் - பிரமனும், வாழ் - இனிதுவசிக்கின்ற, ஆக - திருமேனியையுடையவனே ! மதிக்கும் நவநீதம் கள்வ - கடைந்தெடுத்த வெண்ணெயை (க் கிருஷ்ணாவதாரத்திற்) களவுசெய்துண்டவனே ! அவனி கொள் வாராக - பூமியைக் கோட்டினாற் குத்தியெடுத்துக்கொண்டுவந்த வராகமூர்த்தியானவனே ! மதி குளம் சேர் அரங்கா-சந்திரபுஷ்கரிணிபொருந்திய ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனே ! அடியேன் - (உனது) அடியவனான நான், உன்னை அன்றி பிறர் ஆரையும் தெய்வம் ஆக மதிக்குள் எண்ணேன் - உன்னையல்லாமல் வேறு எவரையும் கடவுளாக மனத்திற்கருதுதலுஞ்செய்யேன் ; (எ - று.)

"மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்றபடி பரதேவதையாகிய ஸ்ரீமந்நாராயணனையே யன்றி அவனது திருமேனியிலடங்கிய அபரதேவதைகளைச் சிறிதும்பொருள்செய்யாமையில் தமக்குஉள்ள உறுதியை இங்ஙனம் வெளியிட்டார். திருமாலின் திருநாபியிற் பிரமனும், வலப்பக்கத்திற் சிவபிரானும் அடங்கியுறைதலை, "பிறைதங்குசடையானை வலத்தே வைத்துப் பிரமனைத் தன்னுந்தியிலே தோற்றுவித்துக், கறைதங்குவேற்றடங்கட்டிருவை மார்பிற் கலந்தவன்" என்ற அருளிச்செயல்கொண்டும் உணர்க.

இங்கு 'ஆகமம்' என்றது, காமிகம் முதல் வாதுளம் ஈறாகச் சொல்லப்படும் இருபத்தெட்டுச் சிவாகமங்களை. சிவபூசைசெய்யுந்திறம் சிவஸ்வரூபம் முதலியவற்றைச் சொல்லுகிற இந்தச்சைவாகமங்கள் அச்சிவபிரானாலேயே சொல்லப்பட்டவை. திக்கு என்பது - இலக்கணையால், அதன்தொகையாகிய நான்கென்னும் எண்ணின்மேல் நின்ற தென்க. சிவபிரான் நான்கு திசையையும் நோக்கிய நான்குமுகங்களோடு மேல்நோக்கியஊர்த்துவமுகமொன்றுமாக ஐந்துமுகங்களையுடையா னென்ற விவரம் விளங்க, 'திக்குமுகமேல்முகமுடையான்' என்றன ரென்றுங் கொள்ளலாம். சதாசிவமூர்த்தியினுடைய ஐந்து முகங்களுள்ளும் சத்தியோசாதமென்னும் முகத்தினின்று காமிகம் யோகஜம் சிந்தியம் காரணம் அசிதம் என்னும் ஐந்து ஆகமங்களும்,வாமமென்னும் முகத்தினின்று தீப்தம் சூக்குமம் சகத்திரம் அஞ்சுமான் சுப்பிரபேதம் என்னும் ஐந்து ஆகமங்களும், அகோரமென்னும் முகத்தினின்று விசயம் நிச்சுவாசம் சுவாயம்புவம் ஆக்நேயம் வீரம் என்னும் ஐந்துஆகமங்களும்,தத்புருஷமென்னும் முகத்தினின்று ரௌரவம் மகுடம் விமலம் சந்திரஞானம் விம்பம் என்னும் ஐந்து ஆகமங்களும், ஈசானமென்னும் முகத்தினின்று புரோற்கீதம் லளிதம் சித்தம் சந்தானம் சர்வோக்தம் பாரமேசுவரம் கிரணம் வாதுளம் என்னும் எட்டுஆகமங்களும் தோன்றினவென்று அறிக.

நவநீதம் என்ற வடசொல் - புதிதாகஈட்டப்பட்டது என்றும், அவநி என்ற வடசொல் - காத்தற்குஉரியதுஎன்றும் காரணப்பொருள்படும். கள்வன், வ் - பெயரிடைநிலை. சந்திரபுஷ்கரிணி - க்ஷயரோகமடைந்துஅழியும்படி தக்ஷப்பிரஜாபதியினாற் சாபமடைந்த சந்திரன் தவஞ்செய்து அச்சாபநிவிருத்திபெற்ற குளம். மதி - நன்குமதிக்கப்படுபவன். மதி - அறிவு ; வடசொல். 'மதிக்குள் வையேன்' என்றும் பாடம். (௫௪)

டுடு. ஆரத்தநந்தருந்தாய்தந்தையாநந்தமாவரிகழ்-
ஆரத்தநந்தனன்றீமைகண்டாலங்கவுத்துவபூண்
ஆரத்தநந்தசயனுவணியரங்காதிகிரி
ஆரத்தநந்தன்மதலாயென்றீங்குனக்கத்தன்மைத்தே.

(இ - ள்.) அத்த-(எனது) தந்தையே! அம் கவுத்துவ - அழகிய கௌஸ்துபமென்னும் இரத்தினத்தைத் (திருமார்பில்) தரித்துள்ளவனே! பூண் ஆரத்து - அணிந்த ஹாரங்களையுடைய, அநந்தசயனு - ஆதிசேஷனைப் படுக்கையாகவுடையவனே! அணி அரங்கா - அழகிய திருவரங்கத்துக்குத் தலைவனே! திகிரி ஆர் அத்த - சக்கராயுதம் பொருந்திய திருக்கையையுடையவனே! நந்தன் மதலாய் - நந்தகோபன் வளர்த்த குமாரனே!—ஆர தநம் தரும்* தாய் - (தான்பெற்றபிள்ளைக்குக்) குடிக்க முலைப்பாலைக் கொடுக்கிற தாயும், தந்தை - தந்தையும், நந்தனன் தீமை கண்டால் - தமதுபுதல்வன் (இளமையில் தம்மை உதைத்தல் ஏசுதல் முதலிய)தீங்குகள்செய்தலைக் கண்டால், ஆநந்தம் ஆவர் - மகிழ்ச்சியடைவரேயன்றி, இகழார் - வெறுப்புக் கொள்ளார்:—என் தீங்கு உனக்கு அ தன்மைத்தே - (அறிவிற்சிறியேனான) எனது பிழையும் (எந்தையான) உனக்கு அத்தன்மையதேயாம்; (எ - று.)

அன்பிற்சிறந்த தாய்தந்தையர் தம் மக்கள் இளமையிற் செய்கிற சிறு குறும்புகளைப் பொருள்செய்யாது அவற்றைக்கண்டு களித்துநிற்றல்போல, அருளிற்சிறந்த எம்பெருமானும் தனது அடியாரது பிழைகளைப் பாராட்டாது "என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்றுசெய்தா ரென்பர்போலும்" என்னும்படி அவற்றையே குணமாகப்பாவித்துப் போக்யமாகக்கொண்டு அருள்செய்வ னென்பதாம். "திருவரங்கத்துள்ளோங்கு, மொளியுளார்தாமேயன்றே தந்தையுந் தாயு மாவார்" என்ற திருமாலை இங்கு உணரத்தக்கது. இக்கருத்துக்கு, இரண்டாமடியில் 'அத்த' என்றதைத் தந்தையையழைக்கும் விளியாகக்கொண்டமை இனிதுபொருந்தும்; "அணியார்பொழில்சூ ழரங்கநக ரப்பா" என்றார் பெரியாரும். இனி, அத்தம் என்று பிரித்து அர்த்தம் என்ற வடசொல்லின் விகாரமென்று கொண்டு, அத்த நந்தனன் - செல்வப்புதல்வன் என்று உரைப்பாரும், அதம் நந்தனன் என்றுபிரித்து அந்தத் தமதுபுதல்வ னென்று உரைப்பாரு முளர். இரட்டுறமொழிதலென்னும் உத்தியால், 'ஆரத் தநந் தரும்' என்பதற்கு - (தனதுமகனுக்குத்) தனது செல்வத்தை முழுவதுங்கொடுக்கின்ற என்று உரைத்து, அந்தஅடைமொழியைத் தந்தைக்குங் கூட்டலாம்; (ஆர - நிரம்ப; தநம் - செல்வம்.) நந்தநன் என்ற பெயர் - (தாய்தந்தையர்க்கு) ஆநந்தத்தைச் செய்பவனென்று காரணப்பொருள்படும். 'என்தீங்கு' என்றது, வணங்காமை புகழாமை முதலியவற்றை. தீங்கு - சாதியொருமை.

ஸ்தநம், தநம், ஆநந்தம், நந்தநன், கௌஸ்துபம், ஹாரம், அநந்தசயநன், ஹஸ்தம் - வடசொற்கள். கௌஸ்துபரத்தினம், திருப்பாற்கடலினின்று தோன்றியது. ஹாரம் - மார்பின்மாலை. 'பூணாரத்து' என்றது, அநந்தசயநனுக்கு அடைமொழி. மதலாய் - மதலை யென்பதன் ஈறுதிரிந்த விளி. தாய்தந்தை-பன்மைவிகுதிபெறாத பொதுத்திணையும்மைத்தொகை.

ருசு. அத்தனுமன்புளவன்னையும்பேருமனந்தமதாம்
அத்தனுமன்புலனாதலினாண்டருளம்புயைவீர்-
அத்தனுமன்புயமீதேறரங்கனஞ்சார்ங்கவயிர்-
அத்தனுமன்புகல்பேரிருவீர்க்குமடியனென்றே.

(இ - ள்.) அத்தனும் - தந்தையும், அன்பு உள அன்னையும் - (மக்களிடத்து) மிக்கஅன்பையுடைய தாயும், பேரும் - பெயரும், அனந்தம்அது ஆம் - எல்லையில்லாததாகப்பெற்ற, அ தனு - அந்தந்தஉடலில் [பலவகைப் பிறப்புக்களில்], மன் - பொருந்திவருகிற, பு(ல்)லன்-எளியவன் யான்: ஆதலின் - ஆகையால்,—அம்புயை - இலக்குமி யென்றும், வீரத்து அனுமன் புயம் மீது ஏறு - பராக்கிரமத்தையுடைய அநுமானை (இராமாவதாரத்தில்) வாகனமாக்கொண்டு அச்சிறியதிருவடியின்தோள்களின்மேலேறிய, அரங்கன் - ரங்கநாதனாகிய, அம் சார்ங்கம் வயிரம் தனு மன் - அழகிய சார்ங்கமென்னும் உறுதியான வில்லையுடைய பெருமானென்றும், புகல் - சொல்லப்படுகிற, பேர் இருவீர்க்கும் - உங்களிரண்டுபேர்க்கும், அடியன் என்று அடியவனாகஎன்னைக்கொண்டு, ஆண்டு அருள் - பாதுகாத்தருள்வாய்; (எ-று.)

ஒவ்வொரு பிறப்புக்கு ஒவ்வொரு தந்தையும் தாயும் பெயருமாக எத்தனையோபிறப்புக்களில் எத்தனையோ தந்தைதாயர்களையும் பெயர்களையுங் கொண்டு உழன்றுவருகிறவன் யானென்று தனதுசிறுமையை விண்ணப்பித்து, இனியாயினும் பரமபிதாமாதாக்களாகிய நீயும் பெரியபிராட்டியாரும் என்னை ஆட்கொண்டு உங்கட்குஅடியனென்ற பெயரையிட்டுப் பிராகிருத பிதாமாதாக்களின் தொடர்பையும் பிராகிருதநாமத்தையும் போக்கி எனக்கு முத்தியளித்தருளவேண்டு மென்று பிரார்த்தித்தபடி. "தாயொக்கு மன்பின்" என்னும்படி மக்களிடத்துத் தந்தையினன்பினும் தாயினன்பு மிகுதலால், அன்னைக்கு 'அன்புள' என்றஅடைமொழி கொடுக்கப்பட்டது; இனி, அதனை மத்திமதீபமாகக்கொண்டு அத்தனுக்கும் இயைத்தலு மொன்று.

உள்ள, புல்லன் என்பவை - உள, புலன் என்று தொகுத்தல்விகாரமடைந்தன. 'தனு' என்றது - உடம்பைக்குறிக்கையில் தநு என்ற வடசொல்லின் விகாரமும், வில்லைக்குறிக்கையில் தநுஸ் என்ற வடசொல்லின் விகாரமுமாம். மன்புலன் - வினைத்தொகை. அம்புயை - அம்புஜா என்ற வடசொல்லின் விகாரம்; தாமரைமலரில் வாழ்பவ ளென்று பொருள். நான்காமடியில், மன் - மன்னன்; பண்பாகுபெயர். இருவீர் - முன்னிலைப்பன்மைக்குறிப்புவினையாலணையும்பெயர். (ருசு)

ருஎ. அடியவராகவுமாட்கொள்ளவுமெண்ணியாருயிர்கட்கு+
அடியவராகம்படைத்தமையாலகமேபெரிய
அடியவராகவரங்கருக்காட்செயருட்கதையால்
அடியவராகஞ்செய்மாரனுக்காட்செயுமைவரையே.

(இ - ள்.) அடியவர் ஆகவும் - (ஜீவாத்மாக்கள் பரமாத்மாவாகிய தமக்குத்) தொண்டர்களாகுமாறும், ஆள் கொள்ளவும் - (அங்ஙனம் தொண்டரானவர்களைத் தாம்) அடிமைகொள்ளுமாறும், எண்ணி - திருவுள்ளங்

கொண்டு, அவர் - அப்பெருமான், அடி - ஆதிகாலத்தில் [சிருஷ்டிகாலத்தில்], ஆர் உயிர்கட்கு ஆகம் படைத்தமையால் - நிறைந்த உயிர்கட்குச் சரீரத்தைக் கொடுத்ததனால்,—அகமே - மனமே! பெரிய அடிய வராகம் அரங்கருக்கு ஆள் செய் - பெரிய கால்களையுடைய வராகமூர்த்தியாக அவதரித்த ஸ்ரீரங்கநாதர்க்கு (நீ) அடிமையாவை; (அங்ஙனமாகி), அருள் கதையால்-(அவருடைய)கருணையாகிய தண்டாயுதத்தைப்பெற்று அதுகொண்டு, அவம் ராகம் செய் மாரனுக்கு ஆள் செயும் ஐவரை அடி - கெட்ட ஆசையை விளைக்கிற மன்மதனுக்கு அடிமைசெய்யும் பஞ்சேந்திரியங்களாகிய ஐந்துஉட்பகைவர்களையும் தாக்கி வலியடக்குவாய்; (எ - று.)

உபயவிபூதிநாயகனான சர்வேசுரன், த்ரிபாத்விபூதியாகிய பரமபதத்திலுள்ளார் எப்பொழுதும் பரமானந்தத்தையே நுகர்ந்துவருதல் போலவே, உரைமெழுக்கிற் பொன்போல் மூலப்பிரகிருதியிலழுந்திக்கிடக்கிற உயிர்களும் தம்தம்முயற்சியால் அப்பெரும்பதவியை யடைந்து இன்புற்று வாழலாம்படி, அவ்வுயிர்கள் தன்னைத் தரிசித்தல் தொழுதல் சேர்தல் தியானித்தல் துதித்தல் முதலிய பணிவிடைகளைப் புரிதற்கு உபயோகமாக, கண் கை கால் மனம் வாய் முதலிய உறுப்புக்களோடு கூடிய உடம்பை அவ்வுயிர்கட்கு ஆதியில் அளித்தருளினனாதலால், நீ அப்பரமகருணாநிதியின்பக்கலிலேயே அடிமைபூண்டு, அவனருளாற் பஞ்சேந்திரியநிக்கிரகஞ்செய்து வீடுபெறுவை யென்று தம் மனத்துக்கு நல்லறிவுணர்த்தினர். 'அருட்கதையாலைவரை யடி' என்றது - "யானு மென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம் வல்வினையைக், கானும் மலையும் புகக்கடிவான் - தானோர், இருளன்ன மாமேனி யெம்மிறையார் தந்த, அருளென்னுந் தண்டா லடித்து "என்ற அருளிச்செயலின் கருத்தைக் கொண்டது. அவராகஞ்செய்மாரனுக்குஆட்செயும் ஐவர் - "மாரனார்வரிவெஞ்சிலைக் காட்செய்யும், பாவிகள்" என்றார் பெரியாரும். அடி - அடிநாளில். 'அவர்'என்ற சுட்டுப்பெயர் முன்வந்தது, செய்யுளாதலின்: "செய்யுட் கேற்புழி"என்றார் நன்னூலாரும். அடியவர் என்றெடுத்து, ஆதிகாரணமானவ ரென்று உரைப்பாரு முளர்.

"சிலம்பினிடைச் சிறுபரல்போற் பெரியமேரு திருக்குளம்பிற் கணகணப்பத் திருவாகாரங், குலுங்க நிலமடந்தைதனை யிடந்து புல்கிக் கோட்டிடை வைத்தருளிய வெங்கோமான் " என்றபடி பெரியகால்களையுடைய மகாவராகரூபமாகத் திருவவதரித்ததனால், 'பெரிய அடிய வராக வரங்கர்' என்றார். ஆர்உயிர்-அருமையான உயி ரெனினுமாம்; முத்திபெறுதற்குஉரிய தென்றபடி. மாரன் என்ற வடசொல் - (ஆசைநோயால்) மரணவேதனைப் படுத்துபவ னென்று காரணப்பொருள்படும். 'அகமே' என்றவிடத்து, 'அறிவே' என்றும் பாட முண்டு. அரங்கர்க்கு ஆட்செய்தால் ஐவரை யடிக்கலாம்; அடித்தால் உய்யலாம் என்பது, குறிப்பு. (௫எ)

செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடுநிற்றல்.

௫அ. வரையாழிவண்ணரரங்கேசரீசன்முன்வாணன்றிண்டோள்
வரையாழியார்புள்ளின்வாகனத்தேவந்தநாடொடிற்றை
வரையாழியதுயராய்த்தூசுநாணுமதியுஞ்செங்கை
வரையாழியும்வளையும்மிழந்தாளென்மடமகளே.

(இ - ள்.) வரை ஆழி வண்ணர் - (கண்டவர்மனத்தைக்) கவர்ந்து கொள்ளும் கடல்போன்ற கரியதிருநிறத்தையுடையவரும், ஈசன்முன் வாணன் திண் தோள் வரை ஆழியார் - (பாதுகாப்பதாக ஏற்றுக்கொண்ட) சிவபிரானது முன்னிலையிலே பாணாசுரனுடைய வலியதோள்களைத் துணித்தொழித்த சக்கராயுதத்தையுடையவருமான, அரங்க ஈசர்-திருவரங்கநாதர், புள்ளின் வாகனத்தே வந்த நாள்தொடு - கருடவாகனத்திலேறிப் பவனி வந்த நாள் தொடங்கி, இற்றை வரை - இன்றைநாளளவும், என் மடமகள் - எனது மடமைக்குணமுடைய மகள், ஆழிய துயர் ஆய்-ஆழ்ந்தமனக்கலக்கமுடையவளாய், தூசும் - ஆடையையும், நாணும் - நாணத்தையும், மதியும் - அறிவையும், செம் கை வரை ஆழியும் வளையும் - சிவந்த கைகளிலணிந்துள்ள மோதிரத்தையும் வளையல்களையும், இழந்தாள் - இழந்துவிட்டாள் ; (எ - று.)

இயற்கைப்புணர்ச்சி முதலிய சிலவகைகளால் தலைவியைக் களவிற்கூடிய தலைவன் பிரிந்தபின்பு அப்பிரிவாற்றாமைத்துயரத்தால் உளமழிந்து உடல்மெலிந்து கைவளையும் விரலாழியும் நெகிழ்ந்து கீழ்விழ ஆடைசோர நாணங்குலைந்து அறிவிழந்து நிலைமாறி நிற்கிற தலைவியின் துயர்க்காரணத்தைத் தோழியாலறிந்த செவிலித்தாய், அத்தலைவனைத் தலைவிக்கு வெளிப்படையாக மணம்புரிவித்துத் துயர்நீக்கக் கருதியவளாய், அத்தலைமகளின் நிலைமையை நற்றாய்க்குஉரியவாற்றா லுணர்த்திய துறை, இச்செய்யுளிலடங்கியது. தியானநிலையில் நின்ற ஐயங்காரது அகக்கண்ணுக்கு எம்பெருமான் கருடாரூடனாய்ப் புலனாகி மறைந்தவளவிலே, அப்பெருமானது ஸதாஸாந்நித்யத்தை அபேக்ஷித்துப் பிரிவாற்றாமையால் வருந்துகிற ஐயங்காருடைய துயரத்தை நோக்கிய ஞானிகள், அவர்பக்கல் தம்மினும் மிக்க ஆதரத்தையுடைய பேரறிவாளர்க்கு ஐயங்காரதுநிலைமையை யெடுத்துக்கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள் ; விவரங் கேட்டு உணர்க.

தன்னைச்சரணமடைந்தவன் பரிபவப்படுவதைப் பார்த்தும் ஒன்றும் பரிகாரஞ்செய்யமாட்டாதொழிய வென்பார், 'ஈசன்முன்' என்றார். தொட்டு என்பது 'தொடு'எனத் தொகுத்தல்விகாரப்பட்டது. இன்று+வரை= இற்றைவரை ; மென்றொடர் வன்றொடராய் ஐகாரச்சாரியை பெற்றது. ஆழிய - இறந்தகாலப்பெயரெச்சம்: 'இன்' என்ற இடைநிலை ஈறுதொக்கது. வளையும்மிழந்தாள், மகரவொற்று - விரித்தல். மடமை - பேதைமை ; இளமையுமாம். வரைதல் - கவர்தல், நீக்குதல், கொள்ளுதல். (ருஅ)

## தலைவி, தனது வேட்கைமிகுதியைக் கூறுதல்.

ருகூ. மகரந்தகாதலைவாழ்வென்னவாரிசுட்டாய்திதிதன்
மகரந்தகாதலைவானினுள்ளோர்க்குமண்ணோர்க்குவட்டா
மகரந்தகாதலைவார்குழையாய்வளர்சீரங்கதா
மகரந்தகாதலைவாக்கிற்சொல்லேன்மடவாரெதிரே.

(இ - ள்.) மகரம் - (கடலிலேயேவாழுமியல்பினவான) சுறாமீன்களும், அலை வாழ்வு தகாது என்ன - கடலில்வாழ்தல் இனிக்கூடாதென்று தவித்

துக்கூறும்படி, வாரி சுட்டாய் - கடலை (ஆக்நேயாஸ்திரத்தால்) எரிக்கத் தொடங்கியவனே ! திதிதன் மகர்அந்தகா-திதியென்பவளுடைய புதல்வர்களான அசுரர்கட்கு யமனானவனே ! வானின் உள்ளோர்க்கு தலை - மேலுலகத்திலுள்ளவர்களான தேவர்கட்குத் தலைவனே ! மண்ணோர்க்கு உவட்டா மகரந்த - நிலவுலகத்து வாழும் மனிதர்கட்குத் தெவிட்டாத தேன்போலினியவனே ! காது அலை வார் குழையாய் - காதுகளில் அசைகிற பெரிய குண்டலங்களையுடையவனே! வளர் சீரங்க தாம-ஸ்ரீரங்கத்தைக் கண்வளருமிடமாகக்கொண்டவனே!—காந்த காதலை-(உன்மேல் எனக்கு) அந்தரங்கமாக வுள்ள மோகத்தை, மடவார் எதிரே வாக்கின் சொல்லேன் - (தோழியர் முதலிய) மகளிரின் முன்னிலையிலே பகிரங்கமாக வாயினாற்சொல்லுந் தூமுடையே னல்லேன் ; (எ - று.)

இயற்கைப்புணர்ச்சி முதலிய வகைகளால் தலைவியைக் களவிற்கூடி நின்ற தலைவன் அங்குப் பழியெழுந்ததென்று தோழியால் விலக்கப்பட்ட பின்னர் அப்பழியடங்கச் சிலநாள் ஒருவழிப்பிரிந்துறைதல், ஒருவழித்தணத்தலெனப்படும்; அங்ஙனம் பிரிந்துறைகின்ற சமயத்தில், அப்பிரிவையாற்றாது வருந்துகிற தலைவி, தனதுநினைப்புமிகுதியால் தலைவனை எதிரில்நிற்கின்றவாறுபோலப் பாவித்து, அங்ஙனம் உருவெளித்தோற்றத்திலே வெளிப்பட்ட அத்தலைவனை முன்னிலைப்படுத்திக் கூறியது,இது. ஒருவழித்தணந்துவந்த தலைவன் சிறைப்புறமாக, அதனையுணர்ந்த தோழி அவனை முன்னிலையாக்கிக்கூறியதென்று இதற்குத் துறைகொள்ளுதலு மொன்று. நெஞ்சென்னும் உட்கண்ணால் எம்பெருமானைத் தரிசித்த ஐயங்கார் அவன் பக்கல் தமக்கு உண்டான வியாமோகத்தை அப்பெருமானைக்குறித்து விண்ணப்பஞ்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். காந்தகாதலை வாக்கிற் சொல்லேன் மடவாரெதிரே - எனது அந்தரங்கபக்திமிகுதியைப் பேதையரான உலகத்தார் முன்னிலையிலே வாயினாற்சொல்லேன் என்க.

'மகரம் தகாது அலைவாழ்வென்ன வாரிசுட்டாய்' என விளித்தது, பிரிந்த ஒருதலைவியை மீளவுங்கூடுதற்காக அரிய பெரிய முயற்சி செய்த நீ இங்ஙனம் என்பக்கல் உபேக்ஷைசெய்வது தகுதியோ வென்ற குறிப்பு. 'காதலை வார்குழையாய்' என்றது, காதும் குண்டலமும் சேர்ந்த சேர்த்தியாலாகிய செயற்கையழகைக் கண்டு அதிலீடுபட்டுக்கூறியது. மற்றைவிளிகள், அப்பெருமானது பராக்கிரமம், துஷ்டநிக்கிரகம், பரத்வம், இனிமை, இனியஇடமுடைமை முதலியவற்றில் ஈடுபாடு. மகரமென்னும்மீன் கடலிலேயே வாழ்வதாதலை 'மகராலயம்' என்ற கடலின் பெயர்கொண்டும், "கடல்வாழ்சுறவு" என்ற தொல்காப்பியங்கொண்டும் உணர்க. இது கடலில்வாழுமியல்பினதாய்ச் சிறத்தல்பற்றியே, இதனைத் தலைமையாக எடுத்துக் கூறினர்: இது, மற்றை நீர்வாழுயிர்கட்கும் உபலக்ஷணமாம். வாரி-நீர்: வடசொல் ; கடலுக்கு இலக்கணை. அந்தகன் - அந்தத்தைச் செய்பவன் : அந்தம் - அழிவு. திதிதன்மகரந்தகா-காசியபமுனிவரது மனைவியருள் திதியென்பவளது புதல்வராதலால் தைத்யரெனப்படுகிற அசுரர்களை அழித்தவனே யென்றபடி. மகர் - மகன் என்பதன் பன்மை; மகார் என்றும் வழங்

கும். தலை - தலைவனுக்குப் பண்பாகுபெயர்: உவமையாகுபெயராக, உத்தம அங்கமாகிய தலைபோலச் சிறந்தவனே யென்றும் பொருள்கொள்ளலாம்; அண்மைவிளி யாதலின், இயல்பு. ரங்கநாதன் நிலவுலகத்தில் எழுந்தருளி யிருந்து அவ்வுலகத்தார்க்குக் காட்சிக்கினியனாதல்பற்றி, 'மண்ணோர்க்கு உவட்டா மகரந்த'என்றார். இனி,தலைமைபெற்ற வானிலுள்ளார்க்கும் மண்ணுலகத்தார்க்கும் தெவிட்டாத தேனே யென்று உரைப்பாரு முளர். உவட்டா மகரந்த' என்றதை "ஆராவமுதே" என்றாற்போலக் கொள்க. தாமம் - வடசொல்: இடம். இனி, 'வளர் சீரங்க தாம' என்பதற்கு - ஸ்ரீரங்கத்தில் வளர்ந்துவிளங்குகிற ஒளிவடிவமானவனே யென்று உரைத்தலும் அமையும்; தாமம் - ஒளி. கரந்த காதல்-உயிர்ப்பாங்கிக்கும் ஒளித்த வேட்கை யென்றபடி. (ருகூ)

## இதுவும் அது.

கூ0. வாராகவாமனனேயரங்காவட்டநேமிவல
வாராகவாவுன்வடிவுகண்டான்மன்மதனுமட
வாராகவாதரஞ்செய்வனென்றாலுய்யும்வண்ணமெங்கே
வாராகவாசமுலையேனைப்போலுள்ளமாதருக்கே.

(இ - ள்.) வாராக - வராகாவதாரஞ்செய்தவனே! வாமனனே - வாமனமூர்த்தியானவனே! அரங்கா - ஸ்ரீரங்கநாதனே! வட்டம் நேமி வலவா - வட்டவடிவமான சக்கராயுதத்தைப் பிரயோகித்தலில் வல்லவனே! ராகவா - ரகுகுலராமனாகத் திருவவதரித்தவனே! உன் வடிவு கண்டால் - நினது திருமேனியழகைப் பார்த்தால், மன்மதனும் மடவார் ஆக ஆதரம் செய்வன் - (எல்லாராலும் காமிக்கப்படுங் கட்டழகுடையவனான) மன்மதனும் (தான் உன்னைக்கூடுதற்கு)மகளிராய்ப்பிறக்க ஆசைப்படுவன்: என்றால்—, வார் ஆகம் வாசம் முலையேனை போல் உள்ள மாதருக்கு உய்யும் வண்ணம் எங்கே - கச்சணிந்தனவும் மார்பிலெழுந்தனவும் நறுமணப்பூச்சுடையனவுமான தனங்களையுடையளாகிய என்னைப்போலவிருக்கிற மகளிர்க்கு (உன் வடிவழகுகண்டபின்பு) பிழைத்திருக்கும்வகை எவ்வாறோ! (எ - று.)

அழகிற்சிறந்த ஆண்பாலான மன்மதனும் புருஷோத்தமனான நினது வடிவைக் கண்டு தான் பெண்ணுருக்கொண்டு உனது அழகின்நலத்தை யனுபவிக்க எண்ணுவனாயின், பெண்பாலான என்போன்ற மடமங்கையர்க்குப் பிழைக்கும்வழி என்னே யென்பதாம். கீழ் உச-ஆஞ் செய்யுளின் விசேடவுரையிற் கூறிய விஷயங்கள், இங்கும் நோக்கத்தக்கன. 'வாராக' என்று விளித்தது, நினது காதலியரில் ஒருத்தியினது [பூமிதேவியினது] துயரத்தை நீக்குதற்குப் பெருமுயற்சிசெய்து அவளையெடுத்துக்கொண்டு வந்து கூடியருளியவனே யென்ற குறிப்பு. 'வாமனனே'என்றது-சௌலப்பியத்தையும், 'அரங்கா' என்றது-இன்பநுகர்ச்சிக்குஏற்ற இனியவிடத்தில் வசித்தலையும், 'வட்டநேமிவலவா' என்றது - பகையழிக்கவல்ல படைக்கலத்திற் கைதேர்ந்தவனாதலையும், 'ராகவா' என்றது - உயர்குடிப்பிறப்பையும் உணர்த்தும். தண்டகாரணியவாசிகளான முனிவர்கள் கண்டு காமுற்று

ஆண்மைமாறிப் பெண்மை பெறவிரும்பும்படியான சௌந்தரியாதிசயத்தையுடையா யென்ற கருத்தும், 'ராகவா' என்ற விளியில் தொனிக்கும்.

மன்மதன் தான்கொண்ட ஆசைமிகுதியால் தானொருவனே பலமகளிராக வடிவுகொண்டு உத்தமபுருஷனை எம்பெருமானை அநுபவிக்க விரும்புவ னென்பது, 'மடவாராக' எனப் பன்மையாற் கூறியவதனால் தோன்றும். 'வாராகவாசமுலையேன்' என்றது, போகாநுபவத்துக்கேற்ற பருவம் நிரம்பியவ ளென்றவாறு. 'நேமிவலவா' என்பதற்கு - சக்கராயுதத்தை வலக்கையிலுடையவனே யென்று உரைப்பினும் அமையும்; இவ்வுரைக்கு, 'நேமிவலவா' என்றதைக் கீழ் ௬௫ - ஆஞ் செய்யுளில் "சங்கஇடவ" என்றாற் போலக் கொள்க; வலவன், இடவன் என்பன - வலம், இடம் என்றவற்றின்மேற் பிறந்த பெயர்க ளென்க.

வாராக - வராஹ என்ற வடசொல்லின் விகாரம். வட்டம் - வ்ருத்த மென்ற வடசொல்லின் சிதைவு. மந்மதன் என்ற வடமொழிப்பெயர்-(ஆசைநோயால்) மனத்தைக் கலக்குபவ னென்று பொருள்படும்; உம் - உயர்வு சிறப்பு. வாமநன், நேமி, ராகவன், ஆதாரம், வாஸம் - வடசொற்கள். (ரு௦)

ருக. மாதம்பத்துக்கொங்கையும்மல்குற்றேரும்வயிறுமில்லை
மாதம்பத்துக்குறியுங்கண்டிலேம்வந்துதோன்றினை பூ
மாதம்பத்துக்கெதிர்மார்பாவரங்கத்துவாழ்பரந்தா
மாதம்பத்துக்கருத்தில்லார்பிறப்பென்பர்வையகத்தே.

(இ - ள்.) பூ மாது அம்பத்துக்கு எதிர் மார்பா - தாமரைமலரில் வீற்றிருக்கிற திருமகளாரது கண்களுக்கு இலக்காய் விளங்குகின்ற திருமார்பினழகையுடையவனே! அரங்கத்து வாழ் பரந்தாமா - திருவரங்கத்தில் நித்தியவாசஞ்செய்கின்ற பரந்தாமனே!—மா தம்பத்து - பெரிய தூணிலே, கொங்கையும் - தனங்களும், அல்குல் தேரும் - தேர்த்தட்டுப்போன்ற அல்குலும், வயிறும்—, இல்லை—; மாதம் பத்து குறியும் கண்டிலேம் - (கர்ப்பகாலமாகிய) பத்துமாசத்துக்கு முரிய கர்ப்பசின்னங்களையும் (அத்தூணிலிருந்தனவாகக்)கண்டோமில்லை;(அங்ஙனமிருக்கவும்), வந்துதோன்றினை - (தூணிலிருந்து நரசிங்கமூர்த்தியாக) வந்து அவதரித்தாய்; (இந்நுட்பத்தையுணராமல்), தம் கருத்து பத்து இல்லார் - தமது கருத்திலே (உன்விஷயமான)பக்தியில்லாதவர்கள், வையகத்து பிறப்பு என்பர் - பூமியிலே (உனக்குக் கருமவசத்தால்நேர்ந்த)பிறப்பென்று (அதனைச்)சொல்வார்கள்; (எ-று.)

சாதாரணமான பிறப்புக்கு உரிய சின்ன மொன்று மில்லாமல் உனது நரசிங்காவதாரம் விலக்ஷணமாயிருக்கவும் அதனையுமுட்படப் பிறப்பென்று இகழ்வது, உன்பக்கல்பக்தியில்லாதவர்கள் அவதாரரகசியஞானமில்லாமையாற்சொல்லும் பேதைமைச்சொல்லேயென்பது கருத்து. "மண்ணும்விண்ணுமுய்ய,மூதண்டத்தானத்தவதரித்தானெனின் மூத்தி வினைத், தீதண்டத் தானத்தனுவெடுத்தானெனிற் றீநரகே", "மாயன் தராதலத்து, மீனவதாரம் முதலானவை வினையின்றி இச்சை, யானவ தாரறிவா ரவரே முத்தராமவரே" என்பர் பிற பிரபந்தங்களிலும். ஜீவாத்மாக்கள் தேவதிர்

யம்மநுஷ்யஸ்தாவரரூபங்களாய்ப் பிறப்பதுபோலக் கருமவசத்தினாலன்றி, பரமாத்மா மத்ஸ்யகூர்மாதிஅவதாரங்கள்செய்வது துஷ்டநிக்ரக சிஷ்டபரி பாலநத்தின்பொருட்டுத் தான்கொண்ட இச்சையினாலேயே யாகு மென்ற இவ்வுண்மையை யுணர்தல், அவதாரரஹஸ்யஞ்ஜாநம் எனப்படும்.

பத்துமாதக்குறி - மசக்கைநோய், உடல்விளர்த்தல், வயிறுபருத்தல், முலைக்கண்கறுத்தல் முதலியன. "பீரமலர்ந்த வயாவுநோய் நிலையாது, வளைகாய்விட்டபுளியருந்தாது, செவ்வாய்திரிந்துவெள்வாய்பயவாது, மனை புகையுண்டகருமணிடந்து, பவளவாயிற் சுவைகாணாது, பொற்குடமுகட் டுக் கருமணியமைத்தெனக்,குங்குமக்கொங்கையுந் தலைக்கண்கறுது, மலா வவிழ்ந்த தாமரைக் கயலெனவரிகொடு மதர்த்த கண் குழியாது, குறிபடு திங்களொருபதும் புகாது, தாணம் பயந்த மாணமர் குழவி" என்ற கல்லா டம், இங்குக் காணத்தக்கது. பரந்தாமன் என்ற வடசொல் - மேலான இடத்தையுடையவ னென்றும், சிறந்த சோதிவடிவமானவ னென்றும் பொ ருள்படும். பக்தி என்ற வடசொல் 'பத்து' என்று விகாரப்படுதலை, "பத்து டையடியவர்க் கெளியவன்" என்ற திருவாய்மொழியிலுங் காண்க. மஹா, ஸ்தம்பம், மாஸம், அம்பகம் என்றவடசொற்கள் விகாரப்பட்டன. கொங் கையும்மல்குல், மகரவொற்று - விரித்தல். (கூக)

கூஉ. வைகுந்தர்தாமரைபோற்பாதர்நாகத்துமாதர்புடை
வைகுந்தமேற்கொண்டிருந்தோர்வடிவைந்தின்வாழுமிடம்
வைகுந்தம்பாற்கடன்மாநீரயோத்திவண்பூந்துவரை
வைகுந்தமன்பர்மனஞ்சீரரங்கம்வடமலையே.

(இ - ள்.) வை - கூர்மையான, குந்தர் - குந்தமென்னும் ஆயுதத்தை யுடையவரும், தாமரை போல் பாதர் - செந்தாமரைமலர்போன்ற திருவடி களையுடையவரும், மாதர் புடைவை - கோபஸ்திரீகளுடைய சேலைகளை, நாகத்து - புன்னைமரத்தின்மேலும், குந்தம்மேல் - குருந்தமரத்தின்மேலும், கொண்டு இருந்தோர் - கவர்ந்துகொண்டு சென்று ஏறியிருந்தவரு மாகிய திருமால், வடிவு ஐந்தின் - ஐந்து வடிவத்தோடும், வாழும் - வாழ் கிற, இடம் - இடங்களாவன,—(முறையே), வைகுந்தம்-பரமபதமும், பால் கடல் - திருப்பாற்கடலும், மா நீர் அயோத்தி வண் பூ துவரை - மிக்க நீர் வளமுள்ள அயோத்தி வளப்பமுள்ள அழகிய துவாரகை ஆகிய நகரங்களும், வைகும் தம் அன்பர் மனம் - (சஞ்சலப்படாது) நிலைநிற்கிற தமது அடியார் களுடைய மனமும், சீர் அரங்கம் வடமலை - ஸ்ரீரங்கம் வடக்கிலுள்ள திரு வேங்கடமலை என்னுந் திவ்யதேசங்களுமாம்; (எ - று.)

வடிவுஐந்து என்றது - பரத்வம் வியூகம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச் சை என்ற ஐவகைநிலைகளை. இவற்றில், பரத்வமாவது - பரமபதத்தில் எழுந் தருளியிருக்கும் நிலை. வியூகமாவது-வாசுதேவ சங்கர்ஷண ப்ரத்யும்ந அநி ருத்தர்களாகிய நான்குரூபத்துடன் திருப்பாற்கடலில் எழுந்தருளியிருக் கும் நிலை. விபவம் - ராம கிருஷ்ணாதி அவதாரங்கள். அந்தர்யாமித்வம் - சராசரப் பொருள்க ளெல்லாவற்றினுள்ளும் எள்ளினுள்எண்ணெய்போல

மறைந்துவசித்தல்; அடியார்களின் மனத்தில் வீற்றிருத்தலும் இதில் அடங்கும். அர்ச்சை - விக்கிரகரூபங்களில் ஆவிர்ப்பவித்தல். "வலனேங்குபரமபதமாமணிமண்டபத்திலமர், நலனேங்குபரம்பொருளாய் நான்குவியூகமுமானாய், உபயகிரிப்புயராமனொடு கண்ணன் முதலான, விபவவுருவமுமெடுத்து வீறுமுயிர்தொறுங் குடிகொ, ளந்தரியாமியுமான தமையாமே யெளிதாக, இந்த நெடுவேங்கடத்தி லெல்லோருந் தொழ நின்றோய்" என்பது

அப்பொழுது கண்ணபிரான் ஏறினது புன்னைமர மென்றும், குருந்தமர மென்றும் இருவகையாகக் கூறுத லுளதாதலால், காலபேதத்தால் இரண்டையுங் கொண்டு கூறின ரிவ ரென்க. இனி, 'வைகுந்தந்தாமரை போற்பாதர்' என்று பாடங்கொண்டு, நாகத்து - (காளியனென்னும்)பாம்பின்மேல், வை - வைத்த, குந்து - குந்துகிற [சிறிதுதூக்கியெடுத்து நடனஞ்செய்கிற],அம் தாமரை போல் பாதர் - அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளையுடையவர் என்று உரைத்தலும் அமையும்; குந்துபாதம்=குஞ்சிதபாதம்: 'வைகுந்தந் தாமரைபோற் பாதர் நாகத்து'—"பாதமாம் போதைப் படத்துவைத்தார்" என்றாற்போலக் கொள்க; என்றது, காளியன் முடியில் தமதுதிருவடி பதிந்த தழும்பு என்றும் நிலையாகவிருக்கும்படி அழுந்தவைத்தவ ரென்ற பொருளை விளக்கும்: 'ஓ சர்ப்பராசனே ! நீ கருடனுக்கு அஞ்சவேண்டாம் ; உன்சிரசில் என்திருவடி பொறித்த வடு இருத்தலைக் கண்டு உன்னை அவன் ஒன்றுஞ் செய்யமாட்டான்' என்று கண்ணன் காளியனுக்கு வரமளித்தமை காண்க.

வை - உரிச்சொல் ;"வையே கூர்மை" என்பது, தொல்காப்பியம். குந்தம் - ஈட்டியென்ற ஆயுதம்; இது, மற்றைப்படைக்கலங்கட்கும் உபலக்ஷணம். எம்பெருமான் விசுவரூபத்தில் மிகப்பல கைகளுடையனாய் அவற்றில்ஏந்தும் ஆயுதங்களிற் குந்தமும் ஒன்றாம். "வடிநுதிக்குந்தம் வலமிடம் வாங்குவ", "வெங்கணையத்திரள் குந்தநிறப்படை வெம்புமுலக்கைகள் போர்,..........தங்கிய சக்கரபந்தி தரித்தன தண்பலகைத்தலமே" என்பன காண்க.

குந்தம், தாமரஸம், பாதம், நாகம், வைகுண்டம், அயோத்யா, த்வாரகா, ஸ்ரீ-வடசொற்கள். திருமாலின் திருப்பதிகளுள்தலைமைபெற்றனவான கோயில் திருமலைகளைக் கூறினது, பிறவற்றிற்கும் உபலக்ஷணமாம். (௬௨)

௬௩. வடமலைதென்மலைகச்சிகுறுங்குடிமானிற்பது
வடமலைவேலையரங்கங்குடந்தைவளருமிடம்
வடமலைகொங்கைத்திருவோடிருப்புவைகுந்தங்கர
வடமலையன்பருளநடையாட்டமறையந்தமே.

(இ - ள்.) மால் - திருமால், நிற்பது - நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருக்குமிடம்,வடமலை தென்மலை கச்சி குறுங்குடி - வடக்குத்திருமலையாகிய திருவேங்கடமும் தெற்குத் திருமலையாகிய திருமாலிருஞ்சோலைமலையும் திருக்கச்சியத்திகிரியும் திருக்குறுங்குடியுமாம்; வளரும் இடம் -

(அப்பெருமான்) பள்ளிகொண்டு திருக்கண்வளர்ந்தருளுமிடம், வடம் அலை வேலை அரங்கம் குடந்தை - ஆலிலையும் அலைகளையுடைய திருப்பாற்கடலும் ஸ்ரீரங்கமும் திருக்குடந்தையுமாம்; வடம் அலை கொங்கை திருவோடு இருப்பு - ஆரங்கள் அசையப்பெற்ற தனங்களையுடைய திருமகளுடன் வீற்றிருந்ததிருக்கோலமாக எழுந்தருளியிருக்கு மிடம், வைகுந்தம் - பரமபதமாம்; நடை - நடந்துசென்றுசேரு மிடம், கரவடம் மலை அன்பர் உளம் - கபடத்தையொழித்த அடியார்களுடைய மனமாம்; ஆட்டம் - திருவுள்ளமுகந்து நடனஞ்செய்யுமிடம், மறை அந்தம் - வேதாந்தமாகிய உபநிஷத்துக்களாம்; (எ - று.)

முதல்வாக்கியத்தி லுள்ள 'மால்' என்பதை மற்றைவாக்கியங்களிலுங் கூட்டுக; முதனிலைத்தீவகம். திருவேங்கடம் - நூற்றெட்டுத் திவ்வியதேசங்களுள் வடநாட்டுத்திருப்பதி பன்னிரண்டில் ஒன்று. திருமாலிருஞ்சோலை மலையும், திருக்குறுங்குடியும் - பாண்டியநாட்டுத்திருப்பதி பதினெட்டிற் சேர்ந்தவை. கச்சி-தொண்டைநாட்டுத்திருப்பதி இருபத்திரண்டில் ஒன்று; பெருமாள்கோவில் என்று சிறப்பாக வழங்கும். அரங்கமும், குடந்தையும் - சோழநாட்டுத்திருப்பதி நாற்பதிற் சேர்ந்தவை. ஆலிலையிற் பள்ளிகொள்ளுதல், பிரளயப்பெருங்கடலில். வேதாந்தம் எம்பெருமானது சொரூபத்தையும் குணஞ்செயல்களையும் மகிமையையுமே எடுத்துப்பாராட்டிக்கூறுதலால், அதில் அப்பெருமான் மிக்ககுதூகலத்துடன் நிற்கின்றனனென்பார், 'ஆட்டம் மறையந்தம்' என்றார். கச்சி - காஞ்சீ என்ற வடசொல்லின் விகாரம். மால் - பெருமை, அடியார்களிடத்து அன்பு, திருமகள்பக்கல் மிக்ககாதல், மாயை இவற்றை யுடையவன். நிற்பது - வினையாலணையும்பெயர். வடம் - வடசொல்; இந்தஆலமரத்தின்பெயர், முதலாகுபெயராய், அதன் இலையை உணர்த்திற்று. வடம் = வடபத்திரம். இருப்பு, நடை, ஆட்டம் - தொழிலாகுபெயர்கள். நிற்பது முதலியவற்றிற்குப் பிறபல தலங்களும் உள்ளனவாயினும், இச்செய்யுளிற் சிலவற்றையே எடுத்துக் கூறினர். மலை அன்பருளம் - வினைத்தொகை. (கூங)

கூச அந்தகராசலம்வந்தாலுனையழையாதிருப்பார்
அந்தகராசலங்காபுரியார்க்கரங்காமறையின்
அந்தகராசலக்கூக்குரலோயுமுன்னாழ்தடங்கல் -
அந்தகராசலத்தேதுஞ்சநேமியறுக்கக்கண்டே.

(இ - ள்.) ராச லங்கா புரியார்க்கு - தலைமைபெற்ற இலங்காபுரியில் வாழ்ந்த (இராவணன் முதலிய) அரக்கர்களுக்கு, அந்தக - யமனானவனே! அரங்கா - ரங்கநாதனே! மறையின் அந்த - வேதாந்தத்தில் எடுத்துக்கூறப்படுபவனே!—கரஅசலம் கூக்குரல் ஓயும்முன்-கஜேந்திராழ்வான் (ஆதிமூலமேயென்று உன்னைக்) கூவியழைத்துமுறையிட்ட ஓலம் அடங்குதற்குமுன்னமே, ஆழ் தடம் கலந்த கரா சலத்தே துஞ்ச நேமி அறுக்க - ஆழ்ந்த தடாகத்திற் பொருந்திய முதலையானது அந்நீரிலே யிறக்குமாறு (நீ பிரயோகித்த) சக்கராயுதம் (அதனைத்) துணிக்க, கண்டு - பார்த்தும், அந்தகர் - ஞானக்கண்குருடரான பேதையர்கள், சலம் வந்தால் - (தங்கட்

குத்) துன்பம் சேர்ந்தகாலத்து, உனை அழையாதிருப்பார் - (அதனைத்தீர்க்கு மாறு) உன்னை அழையாமலிருப்பார்கள்; ஆ - அந்தோ! (எ - று.).

ஆ - இரக்கக்குறிப்பிடைச்சொல்; அவர்களுடைய பேதைமையையும் வினைப்பயனையுங் குறித்து இரங்கியவாறு. "வேங்கடத்தாரையுமீடேற்ற நின்றருள்வித்தகரைத், தீங்கடத் தாரைப்புனைந்தேத்திலீர் சிறியீர் பிறவி, தாங்கடத்தாரைக்கடத்துமென்றேத்துதிர் தாழ்கயத்து, ளாங்கடத்தாரை விலங்குமன்றோ சொல்லிற் றையமற்றே" என்ற திருவேங்கடத்தந்தாதிச் செய்யுளையுங் காண்க.

அந்தகர், சலம், அந்தகன், ராஜலங்காபுரீ, அந்தம், கராசலம், ஜலம், நேமி - வடசொற்கள். கரா - க்ராஹ மென்ற வடசொல்லின் சிதைவு; (பிராணிகளை) விடாதுபிடித்துக்கொள்வது என்று காரணப்பொருள்படும். ராஜலங்காபுரியார் - லங்காபுரிராசர் எனினுமாம். கர அசலம் - துதிக்கையையுடைய மலை: எனவே, யானையாயிற்று; வலிமை பருமைகளிலே மலைபோன்ற தென்க: தீர்க்கசந்தி. துஞ்சுதல் - தூங்குதல்; இறத்தலைத் துஞ்சுத லென்பது - மங்கலவழக்கு: மீண்டும் எழுந்திராத பெருந்தூக்க மென்க. அழையாதிருப்பார் என்பதில், இரு - துணைவினை. அழையாது - இருப்பார் என்று பிரித்து, அழையாமல் அத்துன்பத்திலேயே உழன்றிருப்பார்கள் என்று உரைத்தலு மொன்று. 'கண்டு' என்பதில் உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது; கண்டும் அதன்பயனாகிய அழைத்தலைச் செய்யாமைபற்றி, குருட ரென்றார். (கூச)

கூரு. அறுகுதலைப்பெய்பனிபோன்றதாதுருவாய்ப்பிறந்தல-
அறுகுதலைப்பிள்ளையாய்க்காளையாய்க்கிழமாகியையள-
அறுகுதலைச்செய்துவீழ்காயநானென்னுமாரிருளை
அறுகுதலைக்கொள்பணியரங்காநின்கணுசைதந்தே.

(இ - ள்.) கு - பூமியை, தலை - முடியின்மேல், கொள் - கொண்டுசுமக்கின்ற, பணி - ஆதிசேஷனிடத்துப் பள்ளிகொண்டருள்கின்ற, அரங்கா - ரங்கநாதனே!—அறுகு தலை பெய் பனி போன்ற - அறுகம்புல்லின் நுனியில் வீழும் பனிபோலச் சிறிய, தாது - இந்திரியம், உரு ஆய் - மனிதவடிவமாகப் பரிணமித்து, பிறந்து - (பின்பு) ஜனித்து, (பிறகு), அலறு - அழுகிற, குதலை பிள்ளை ஆய் - மழலைச்சொற்களையுடைய பாலனாகி, காளை ஆய் - (அதன்பின்னர்) யௌவனபருவமுடையவனாய், கிழம் ஆகி - (அப்பால்) மூப்படைந்து, ஐ அளறு உகுதலை செய்து - கோழையாகிய சேறு சிந்துதலைச் செய்து, வீழ் - இறக்கிற, காயம் - உடம்பை, நான் என்னும் - நான் என்றுநினைத்து அபிமானிக்கிற அகங்காரமாகிய, ஆர் இருளை - போக்குதற்கு அரிய (எனது)மனவிருளை, அறு - நீக்கு: நின்கண் ஆசை தந்து - உன் பக்கல் பக்தியை (எனக்கு) உண்டாக்கி; (எ - று.)

நின்கண்ஆசைதந்து, காயம் நானென்னும் ஆரிருளை அறு என இயைத்து முடிக்க.

காயம் நா னென்னும் ஆரிருள் - தானல்லாத உடம்பை யானென்று கருதி அதனிடத்துப் பற்றுச்செய்யும் மயக்கம்; இது, அகப்பற்று எனப்

பமும். ஆர்இருள் - பண்புத்தொகை; வினைத்தொகையாய், நிறைந்தஇருளெனினுமாம். ஆரிருள் - முச்சுடர்களினொளி முதலியவற்றாற் போக்குதற்குஅரிய அகவிருள்: அஜ்ஞாநாந்தகாரம்; சரீரத்தை ஆத்மாவென்று மாறுபடக்கருதும் விபரீதஞானம். முதல்மூன்றடிகளில் யாக்கையினியற்கையை யெடுத்துக்கூறினர்; (இதனை, "ஒளிகொள்கித்திலமொண்பவளச்செறு, விளைய வித்திய தென்ன நல்வீரியம், தளிர்நிறத்தெழுதாய் கருவிற்பனித், துளியிற்சென்றுபொருந்தித்துளக்குறும்" என்பது முதலாகப் பாகவதத்திற் பரக்கக்காணலாம்.)

தூது, காயம், கு, பணீ, ஆசா - வடசொற்கள். குதலை -நிரம்பாமென்சொல். காளை-இளவெருது: அதுபோலக் கொழுத்தபருவமுடையானுக்கு இலக்கணை. (௬௫)

௬௬. ஆசுகவிக்குநிகரெனக்கில்லையென்றற்பரைப்பூ
ஆசுகவிக்குவில்வேள்வடிவாவறிவாலகத்திய-
ஆசுகவிக்குவலயமன்னவென்றரற்றியிரந்து+
ஆசுகவிக்கும்புலவீர்புகழ்மினரங்கனையே.

(இ - ள்.) ஆசு கவிக்கு எனக்கு நிகர் இல்லை என்று - ஆசுகவிபாடுதலில் எனக்கு ஒப்பாவார் எவருமில்லை யென்று காட்டுபவராய், அற்பரை - புல்லர்கள் பலரை, 'பூ ஆசுகம் இக்கு வில் வேள் வடிவா - மலர்களாகிய அம்புகளையும் கரும்பாகிய வில்லையுமுடைய மன்மதன்போ லழகிய வடிவமுடையவனே! அறிவால் அகத்தியா சுக - ஞானத்தினால் அகத்தியனையும் சுகனையும் போன்றவனே! இ குவலயம் மன்ன - இந்தப்பூமண்டலத்துக்கு அரசனே!' என்று அரற்றி - என்று தனித்தனி புகழ்ந்துவிளித்துப்பிதற்றிக் கவிபாடி, இரந்து - (அவர்களைக் கூறை சோறு முதலியன) வேண்டி, ஆசு கவிக்கும்-குற்றங்களால் மூடப்படுகிற, புலவீர் - புலவர்களே!—அரங்கனை புகழ்மின் - நம்பெருமாளைப் புகழுங்கள்; (எ - று)

பந்தத்துக்குஏதுவான நரஸ்துதி செய்து கெடுவதை விட்டு மோக்ஷத்துக்குஏதுவான திருவரங்கநாதனைத்துதிசெய்துஉய்யுங்களென்றுஉபதேசஞ்செய்தார். "என்னாவது எத்தனைநாளைக்குப்போதும் புலவீர்காள், மன்னா மனிசரைப்பாடிப் படைக்கும் பெரும்பொருள், மின்னார்மணிமுடி விண்ணவர் தாதையைப் பாடினல், தன்னாகவேகொண்டு சன்மஞ்செய்யாமையுங் கொள்ளுமே" என்ற ஆழ்வாரருளிச்செயலுங் காண்க.

ஆசுகவிக்கு - உருபு மயக்கம். ஆசுகவி - வடமொழித்தொடர். ஆசுகவி-நால்வகைக்கவிகளுள் ஒருவகை; அதாவது - ("மூச்சுவிடுமுன்னே முந்நூறு நானூறும், ஆச்சென்றா லாயிரம்பாட் டாகாதோ", "இம்மென்னு முன்னே யெழுநூறு மெண்ணூறும், 'அம்மென்றா லாயிரம்பாட் டாகாதோ," "எழுந்தஞாயிறு விழுவதன்முன் கவிபாடின தெழுநூறே," 'நிமிஷக்கவிராயர்' என்னும்படி) விரைவிற் பாடுங் கவி. (மற்றவை - மதுரகவி, சித்திரகவி, விஸ்தாரகவி.) தாமரைமலர் அசோகமலர் மாமலர் முல்லைமலர் நீலோற்பலமலர் என்ற ஐந்தும் - மன்மதனுக்கு அம்பாம். அகத்தியன் -

தமிழ்ப்பாஷையைவளர்த்த முனிவன். சுகன் - வியாசமாமுனிவனது குமாரன் : அவனினும் மேம்பட்ட அறிவொழுக்கங்களை யுடையவன். தென்மொழியுணர்வு மிகுதியுடைமையைக் குறித்தற்கு அகத்தியனே யென்றும், வடமொழியுணர்வு மிகுதியுடைமையைக் குறித்தற்குச் சுகனே யென்றும் விளிப்பரென்க. இங்குக்குறித்த விளிகள் நான்கும், வடிவழகு அறிவு ஒழுக்கம் செல்வம் இவற்றின்சிறப்பைக் காட்டு மென்றுங் கொள்ளலாம்.

அல்பர், ஆசுகம், இகூஉ, அகஸ்த்யன், சுகன், குவலயம் - வடசொற்கள். அகஸ்த்யன் என்ற பெயர் - (விந்திய) மலையை அடக்கியவனென்று பொருள்படும் ; அகம் - மலை. மூன்றாமடியில், சுகம் என்று எடுத்து, மன்னனுக்கு அடைமொழியாக்கி, இன்பத்தையனுபவிக்கிற அரசனே யென்றலுமொன்று. நான்காமடியில், ஆசு உகவிக்கும் என்று பதம்பிரித்து, குற்றமுண்டாக மகிழ்விக்கிற என்று பொருள்கொள்ளலுமாம். (சுசு)

சுஎ. கனகவிமானமற்றீனர்க்குரைக்கிலென்கால்பெற்றவா
கனகவிமானற்கருடப்புள்ளூர்தியைக்கான்மலர்கோ
கனகவிமானம்புவிமான்றடவரக்கண்வளருங்
கனகவிமானத்தரங்கனைநாச்சொல்லக்கற்றபின்னே.

(இ - ள்.) கால் பெற்ற - வாயுபகவான் ஈன்ற, வாகன கவி - வாகனமாயமைந்த குரங்காகிய அநுமானையும், மால் நல் கருடன் புள் - பெருமையையுடைய அழகிய கருடப்பறவையையும், ஊர்தியை - ஏறிநடத்துபவனும்,—கோகனக வி மான் - தாமரைமலரில் வாழும் திருமகளும், அம் புவி மான் - அழகிய பூமிதேவியும், கால் மலர் தடவர - (தனது) திருவடித்தாமரைகளைத் தடவ, கண்வளரும் - அறிதுயிலமர்கிற, கனக விமானத்து - சுவர்ணமயமான விமானத்தையுடைய, அரங்கனை - ரங்கநாதனுமாகிய எம்பெருமானை,—நா சொல்ல கற்றபின் - (எனது) நாவினாற் புகழ்ந்துசொல்லப் பயின்றபின்பு,—கனம் கவி - பெருமைபொருந்திய பாடல்களை, மானம் அற்று - மானங்கெட்டு, ஈனர்க்கு உரைக்கிலென் - அற்பர்கள்விஷயமாக (யான்)பாடேன் ; (எ - று.)

'நரஸ்துதியாகக் கவிபாடலாகா தென்று பரோபதேசஞ்செய்யத்தலைப்பட்டீரே, நீர் அங்ஙனம் நரஸ்துதி செய்ததில்லையோ?" என்று புலவர்கள் தம்மைக்குறித்து ஆசங்கித்ததாகக் கொண்டு, 'யான் அரங்கனைத் துதிக்கக் கற்றபின் ஈனர்க்குக் கவியுரைக்கிலேன்' என்றா ரென்க. அதற்குமுன்பு அறியாப்பருவத்தில் ஒருகால் மனிதரைப்பாடியிருந்தால் அது "அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்" என்றபடி அமையு மென்பது, உட்கோள். "சொன்னால் விரோதமி தாகிலுஞ் சொல்லுவன் கேண்மினோ, என்னாவி லின்கவி யா னொருவர்க்குங் கொடுக்கிலேன், தென்னா தெனாவென்று வண்டுமுரல் திருவேங்கடத், தென்னானையென்னப்ப னெம்பெருமா னுளனாகவே" என்ற ஆழ்வாரருளிச்செயல் இங்குக் கருதத்தக்கது.

கால்பெற்றவாகனகவிமானற்கருடப்புள்ளூர்தி - சிறியதிருவடியையிராமாவதாரத்திலும் பெரியதிருவடியை மற்றைஎப்பொழுதிலும் வாகனமாகக்

கொண்டு அவர்கள்தோண்மே லேறிவருபவன். கோகனகவிமான் அம்புவிமான் கான்மலர் தடவரக் கண்வளரும்— "சீர்பூத்த செழுங்கமலத் திருத்தவிசின் வீற்றிருக்கும், நீர்பூத்த திருமகளு நிலமகளு மடிவருட,......அறிதுயிலி னினிதமர்ந்தோய்" என்பர் திருவரங்கக்கலம்பகத்தும்.

காகவி, மாநம், ஹீநர், வாஹநகபி, கோகநதம், புவி, கநகவிமாநம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. கால் மலர் - மலர்போன்ற கால்: முன்பின்னாகத்தொக்க உவமத்தொகை. கோகநதம் என்ற வடசொல் - கோகமென்னும் நதியில் ஆதியிலுண்டான தென்றும், சக்கரவாகப்பறவைகள் தன்னிடத்து மகிழ்ந்து விளையாடப்பெற்றதென்றும் காரணப்பொருள் கூறப்பெறும். வி - வீ என்பதன் குறுக்கல்; வீ - மலர். மான் - மான்போன்ற பார்வையையுடைய பெண்ணுக்கு உவமையாகுபெயர். தடவர, வா - துணைவினை. தடவு வா என்ற இரண்டுவினைப்பகுதிசேர்ந்து ஒருசொல் தன்மைப்பட்டு விகாரமடைந்து தடவா என நின்றதென்க. கண்வளர்தல்- கண்மூடித்துயிலுதற்கு இலக்கணை. உரைக்கிலென், கு - சாரியை, இல் - எதிர்மறையிடைநிலை. உரைக்கில் என் என்று பதம்பிரித்து, (எல்லாப்புருஷார்த்தங்களையும் பெருமையோடு பெறுமாறு) அரங்களைப்புகழக் கற்றபின்பு மானமிழந்து ஈனர்மேற் கவிபாடுதலால் என்னபயனென்று உரைத்தலு மொன்று. 'நான்சொல்ல' என்றும் பாட முண்டு. (௯௭)

௯௮. கற்றினமாயவைகாளையர்வான்கண்டுமீணினைவ
கற்றினமாயமுநீகன்றுகாளையராகிப்பல்ப
கற்றினமாயர்பரிவுறச்சேரிகலந்தமையுங்
கற்றினமாயவொண்ணுவரங்காசெங்கமலற்குமே.

(இ - ள்.) அரங்கா—!—கன்று இனம் ஆயவை - கன்றுகளின் கூட்டங்களும், காளையர் - (இடையர்சாதிச்) சிறுபிள்ளைகளும், வான் கண்டு மீள் நினைவு அகற்றின - தாம் வானத்தையடைந்து மீண்டமை பற்றிய ஞாபகத்தை யொழித்த, மாயமும் - அற்புதமும்,—நீ—, கன்று காளையர் ஆகி-அக்கன்றுகளும் ஆயச்சிறுவர்களுமாக வடிவுகொண்டு,பல் பகல்-வெகுகாலமளவும், தினம் - நாள்தோறும், ஆயர் பரிவுஉற சேரி கலந்தமையும் - (தம்தமக்குஉரிய) இடையர்கள் கண்டு (தம்பக்கல் முன்னினும்) அன்புமிகுமாறு இடைச்சேரியிற் சேர்ந்துவந்த விசித்திரமும்,—செம் கமலற்கும் - சிவந்த (உனது நாபித்) தாமரைமலரில் தோன்றியவனான பிரமதேவனுக்கும், இனம் கற்று ஆய ஒண்ணா - இன்னமும் ஆராய்ந்துஅறியமுடியாதனவா யிருக்கின்றன; (எ - று.)

வான்கண்டது பிரமன்மாயையினாலாயினும், வான்கண்டுமீண்டமை பற்றியநினைவு சற்றுமில்லாதபடி அகற்றியது மாயவனதுமாயை யென்க. மெய்ச்சிறுவரின்மேலும் மெய்க்கன்றுகளின்மேலும் உள்ள பரிவினும் மிக்க பரிவு போலிச்சிறுவரின்மேலும் போலிக்கன்றுகளின்மேலும் உண்டானது, எம்பெருமான்கொண்ட வடிவமாதலினாலென்பர்.கமலற்கும், உம் - உயர்வுசிறப்பு; உனதுஎதிரில் மாயைசெய்யவந்தவனுக்கும் உனதுபெருமாயைகள் அறியப்படா என்றபடி. எல்லாமாயைக்கும் மேம்பட்ட மாயை செய்யவல்லாய் நீயென்பது குறிப்பு.

கன்று + இனம்=கற்றினம் ; வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று. ஆயவை-முதல்வேற்றுமைச் சொல்லுருபு. பகல்-நாளுக்கு இலக்கணை. தினம் என்றதில், தொறுப்பொருளதாகிய உம்மை விகாரத்தால் தொக்கது. உற-மிகுதியுணர்த்தும் உறு என்ற உரிச்சொல்லின்மேற் பிறந்த செயவெனெச்சம். சேரி - இங்குத் திருவாய்ப்பாடி. கற்று ஆய - ஆய்ந்து கற்க என விகுதிபிரித்துக்கூட்டுக. இனம் - இன்னம் என்பதன் தொகுத்தல். ஒண்ணு - ஒன்று என்பதன் மரூஉ. (கூஅ)

கூகூ. கமலங்குவளைமடவார்தனங்கண்களென்றுரைத்த
கமலங்குவளைமுதுகாகியுங்கரைவீர்புனற்கா
கமலங்குவளைவிளையாடரங்கன்விண்காற்றுகனல்
கமலங்குவளையுண்டான்றொண்டராயுய்ம்மின்காமமற்றே.

(இ - ள்.) மடவார் - மாதர்களுடைய,தனம் கண்கள் - கொங்கைகளையும் கண்களையும், கமலம் குவளை என்று உரைத்து - (முறையே) தாமரை மொட்டும் நீலோற்பலமலருமா மென்று புனைந்துரைத்து, மலங்கு வளை முதுகு ஆகியும் அகம் கரைவீர்-வருந்துகிற கூன்முதுகானபின்பும் [முற்ற மூத்தபிறகும்] (மகளிர்பக்கல்ஆசையால்) மனமுருகுகின்றவர்களே!—(நீங்கள்), காமம் அற்று - (இத்தன்மையதான) பெண்ணாசையை யொழித்து,— விண் காற்று கனல் கமலம் கு அளை உண்டான்-ஆகாசம் வாயு அக்நி ஜலம் பூமி ஆகிய பஞ்சபூதங்களையும் வெண்ணெயையும் அமுதுசெய்தவனும், புனல் காகம் மலங்கு வளை விளையாடு அரங்கன் - நீர்க்காக்கைகளும் மலங்குஎன்ற சாதிமீன்களும் சங்குகளும் விளையாடுகிற [நீர்வளம்மிக்க] ஸ்ரீரங்கத்தி லெழுந்தருளியிருப்பவனுமான நம்பெருமாளுக்கு, தொண்டர் ஆய் - அடியார்களாகி, உய்ம்மின் - உஜ்ஜீவியுங்கள் ; (எ - று.)

தீவினைக்குக்காரணமான பெண்ணாசையை யொழித்து,வீடுபெறுமாறு எம்பெருமானுக்கு அடியார்களாகி ஈடேறுங்கள் என்பதாம். சிற்றின்பத்தால் உய்யீர், பேரின்பம்பெற்று உய்யப்பாரும் என்பது, குறிப்பு. முதலடியில், கமலம்தனம் குவளைகண் என முறையே சென்றுஇயைதல், முறைநிரனிறைப்பொருள்கோள் : வடிவுவமை. ஐம்பெரும்பூதங்களை யுட்கொள்ளுதல், மகாபிரளயகாலத்தில். வெண்ணெயுண்டது, கிருஷ்ணாவதாரத்தில். விண் காற்று கனல் கமலம் கு என்ற ஐம்பூதமுறைமை, உற்பத்திக்கிரமம் பற்றியது. கமலம், குவளை - முதலாகுபெயர்கள். ஓசைநயத்தின்பொருட்டு, காற்றுக்கனல் என வலிமிகவில்லை. (கூகூ)

எ0. காமனத்தால்விழவூதியக்காவைக்கவரரங்கன்
காமனத்தாவென்றுநைவார்க்கமுதன்கன்னெஞ்சர்க்கிரங்
காமனத்தானளக்குங்கடற்பார்கலம்போன்றதுமீ
காமனத்தாமரையோன்கங்கைபாய்மரங்கான்மலரே.

(இ - ள்.) கா மன் - கற்பகச்சோலைக்குத் தலைவனான இந்திரன், நத்தால் விழ - பாஞ்சஜந்யத்தின் ஓசையினால் மூர்ச்சித்துக் கீழ்விழும்படி,ஊதி-(அந்தத் தனதுதிவ்யசங்கத்தை) ஊதிமுழக்கி, ... காவை ... கவர் - அச்சோ

லையிலுள்ள பஞ்சதருக்களுள் ஒன்றான பாரிசாததருவைக் கவர்ந்துகொண்டு வந்த, அரங்கன் - ரங்கநாதனும், காமன் அத்தா என்று நைவார்க்கு அமுதன் - 'மன்மதனது தந்தையே!' என்றுசொல்லி விளித்து(த் தன்பக்கல்) மனமுருகும் அடியவர்க்கு அமிருதம்போலினியனாகின்றவனும், கல்நெஞ்சர்க்கு இரங்கா மனத்தான் - (அங்ஙனமுருகாது தன்திறத்திற்) கல்லைப் போல வலியநெஞ்சையுடையராயிருப்பார்பக்கல் தானும் மனத்துக் கருணைகொள்ளாதவனுமான எம்பெருமான், அளக்கும் - (திரிவிக்கிரமாவதாரத்தில்) அளந்தருளிய, கடல் பார் - கடல்சூழ்ந்த பூமியானது, கலம் போன்றது - (அக்கடலில்மிதக்கும்) மரக்கலம்போன்றது; அ தாமரையோன் - அந்த [மேலுலகமாகிய சத்தியலோகத்திலே வசிக்கின்ற] பிரமதேவன், மீகாமன் - மாலுமிபோன்றனன்; கால் மலர் - (மேல்நோக்கிச்சென்ற திருமாலினது) தாமரைமலர்போன்ற திருவடியானது, மரம் - பாய்மரம்போன்றது; கங்கை - (அத்திருவடியினின்று பெருகிய) கங்காநதியானது, பாய் - (அம்மரத்திற்கட்டிய) பாய்போன்றது; (எ - று.)

பூமியை மரக்கலத்தோடும், பிரமனை மாலுமியோடும், கங்கையைப் பாயோடும், திருவடியைப் பாய்மரத்தோடும் உவமித்தார்; இயைபுவமையணி. "விரிகடல்சூழ் மேதினி நான்முகன் மீகானச், சுரநதி பா யுச்சி தொடுத்த - வரிதிருத்தாள், கூம்பாக வெப்பொருளுங் கொண்ட பெருநாவா, யாம்பொலிவிற் றாயினதா லன்று" என்றதனோடு இதனை ஒப்பிடுக. 'போன்றது' என்ற முற்றை உரியபடி மற்றை வாக்கியங்களிலுங் கூட்டியமைக்க.

கண்ணனது மனைவியும் திருமகளின்திருவவதாரமுமான உருக்குமிணிப்பிராட்டியினிடம் மன்மதன் பிரத்யும்நனென்னுங் குமாரனாகத் தோன்றினானென்ற வரலாறுபற்றி, திருமால் 'காமன்தந்தை' எனப்படுவன். இங்கு 'காமனத்தா' என்றது, காமனுக்கு நியாமகனே யென்றபடி. நைவார்க்கு அமுதன் கல்நெஞ்சர்க்கு இரங்கா மனத்தான் - நல்லார்க்கு நல்லானும் பொல்லார்க்குப்பொல்லானுமாய் ஒழுகுபவனென்க. (எ0)

எக. மலருந்திமேல்விழமெய்நெரித்தான்வையமேழுந்துஞ்சா
மலருந்தினனரங்கன்குறளாய்மண்ணளந்தவந்நாண்
மலருந்திவாக்கதிர்வண்குடையாய்முடிமாமணியாய்
மலருந்தியாய்த்திருத்தாள்விரலாழிமணியொத்ததே.

(இ - ள்.) மலர் - மல்லர்கள், உந்தி மேல் விழ - தள்ளித் தன்மேல் வந்துவிழ, மெய் நெரித்தான் - அவர்களுடலை நொருக்கியழித்தவனும், வையம் ஏழும் துஞ்சாமல் அருந்தினான் - ஏழுவகையுலகங்களையும் அழியாதபடி யுட்கொண்டவனுமான, அரங்கன் —, குறள் ஆய் - (முதலில்) வாமனமூர்த்தியாய்ச் சென்று, மண் அளந்த அ நாள் - (உடனே பெருவடிவாய் வளர்ந்து) உலகத்தை அளந்துகொண்ட அந்தக்காலத்திலே,— மலரும் திவாக் கதிர் - பரவி விளங்குந் தன்மையதான சூரியமண்டலமானது,— (அப்பெருமானுக்கு), வள் குடை ஆய் - முதலில்) அழகிய குடைபோன்றிருந்து, முடி மா மணி ஆய் - (உடனே) கிரீடத்திலுள்ள நடுநாயகமணி

போன்று, மலர் உந்தி ஆய் - (பிறகு) நாபித்தாமரைமலர்போன்று, திரு தாள் விரல் ஆழி மணி ஒத்தது - (அதன்பின்பு) திருவடிவிரலிலணியும் மோதிரத்திற் பதித்த மாணிக்கத்தைப் போன்றது ; (எ - று.)

இதுவும், கீழ்ச்செய்யுள்போலத் திரிவிக்கிரமாவதாரவைபவங்கூறியது. திருமால் திரிவிக்கிரமாவதாரத்தில் வானத்தையளாவி ஓங்கிவளர்கையிற் சூரியன் வரவரக் கீழ்ப்பட்டுப் பலவாறுஉவமைகூறுதற்கு உரியனாயின னென்க. "முன்னங் குடைபோன் முடிநாயக மணிபோன், மன்னுந் திலகம் போல் வாளிரவி - பொன்னகலந், தங்கு கவுத்துவம்போ லுந்தித் தடமலர்போ, லங்க ணுலகளந்தாற் காம்" என்ற செய்யுளிலும் இவ்வகைக்கருத்து நிகழ்தல் காண்க. "பூமரு பொங்கர் புடைசூ ழரங்கர் பொலங்கழலாற், பாமரு மூவுலகும் கொண்டபோது பழிப்பில்பெரும், காமருமோலிச்சிகாமணியாகிக் கவுத்துவமாய்த், தேமருநாபியந்தாமரையானது செஞ்சுடரே" என்பர் திருவரங்கத்துமாலையிலும்.

மல்லரென்பது, 'மலர்' எனத் தொக்கது. திவாக் கதிர் - பகலிற்குஉரிய சுடர். ஆய் - உவமவுருபு. தாள்விரலாழி - காலாழி. (எக)

எஉ. மணிவாசற்றூங்கவொருகுடைக்கீழ்வையங்காத்துச்சிந்தா
மணிவாசவனெனவாழ்ந்திருப்போர்பின்னைமாதிருக்கு
மணிவாசமார்பரங்காகேசவாவென்றுவாழ்த்தித்திரு
மணிவாசகங்கொண்டணிவாரடியைவணங்கினரே.

(இ - ள்.) மணி - ஆராய்ச்சிமணி, வாசல் தூங்க - அரண்மனைவாயிலிலே தொங்க, ஒரு குடை கீழ் - ஒற்றைவெண்கொற்றக்குடையின்கீழ், வையம் காத்து - உலகத்தை யரசாண்டு, சிந்தாமணி வாசவன் என வாழ்ந்திருப்போர் - சிந்தாமணியென்னுந் தெய்வரத்தினத்துக்கு உரிய இந்திரன் போல இனிதுவாழ்ந்திருப்பவர்கள்,—பின்னை மாது இருக்கும் - திருமகள் வீற்றிருக்கின்ற, மணி - அழகிய, வாசம் மார்பு - திவ்வியபரிமளமுள்ள மார்பையுடைய, அரங்கா - ரங்கநாதனே! கேசவா - கேசவனே! என்று வாழ்த்தி - என்று விளித்துத் துதித்து, இ வாசகம் கொண்டு - இந்தக்கேசவாதிநாமங்களை யுச்சரித்துக்கொண்டு, திருமண் அணிவார் - திருமண்காப்பைத் தரித்துக்கொள்ளும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, அடியை - திருவடிகளை, வணங்கினரே - நமஸ்கரித்தவர்களே ; (எ - று.)

"ஈராறுநாம முறைசெய்து மண்கொ டிடுவோர்கள்" என்றபடி கேசவன் நாராயணன் மாதவன் கோவிந்தன் விஷ்ணு மதுசூதனன் திரிவிக்கிரமன் வாமநன் ஸ்ரீதரன் ஹ்ருஷீகேசன் பத்மநாபன் தாமோதரன் என்ற திருமாலின் துவாதசநாமங்களை முறையே சொல்லி உடம்பிற் பன்னிரண்டிடத்தில் முறையே திருமணிட்டுக்கொள்ளுகின்ற ஸ்ரீவைஷ்ணவர்களை வணங்கினவர்களே அந்நல்வினையின்பயனால் உலகமுழுவதும் ஒருகுடைக்கீழாளுஞ் சக்கரவர்த்திபதவி யெய்திச் சகலஐசுவரியங்களையு மனுபவித்து மேம்பட்டுவாழ்வோ ரென்று, பாகவதர்க்குஅடிமைபூணுதலின் மகிமையை வெளியிட்டவாறும். அவ்வரசர்பெருமையினும் பாகவதர்பெருமையே பெருமை யென்பது, குறிப்பு. ஆராய்ச்சிமணி - அரண்மனைவாயி

லிற் கட்டிவைப்பதொரு மணி: எவரேனும் அரசனிடத்துத் தமது குறை யைக் கூறவேண்டின் இம்மணியை யடித்தலும், அவ்வொலிகேட்டமாத்தி ரத்திலே அரசன் விரைந்துபோந்து வாயிலையடைந்து அங்குள்ளாரை வினவி அவர்குறையையறிந்து அதனைத்தீர்த்தலும் இயல்பு. சிந்தாமணி - கருதியபொருளைத் தருந் தேவமணி. திருப்பாற்கடல்கடைந்தகாலத்தில் மூதேவி முன்னர்ப்பிறக்க அதன்பின்னர்ப் பிறந்த திருமகளுக்குப் பின்னை யென்றும் இளையாளென்றும் பெயர்கள் நிகழ்ந்தன. பன்னிருநாமத்துள் முதலதான கேசவநாமத்தைக் கூறியது, மற்றவற்றிற்கும் உபலக்ஷணம்.

வாசல் - வாயில்என்பதன் மரூஉ. தூங்குதல் - தொங்குதலாதலை "தூ ங்குசிறைவாவல்" எனச் சிந்தாமணியிலுங் காண்க. கேசவன் என்றதிருநாமம்- பிரமனையும் உருத்திரனையும் தன் அங்கத்திற் கொண்டவ னென்றும், (க - பிரமன், ஈசன் - சிவன்), கேசி என்னும் அசுரனைக் கொன்றவ னென்றும், மயிர்முடியழகுடையவனன்றும் பொருள்பெறும். இவ்வாசகம் என்பது 'இவாசகம்' எனத் தொக்கது. வாசகம்-சொல்: வடமொழி. ஈற்று ஏகாரம்- பிரிநிலையோடு தேற்றம். (எஉ)

எக. வணங்கரியானரங்கன்னடியார்தொழவாளரவு
வணங்கரியாடற்பரிதேர்நடத்தெந்தைவானவர்க்கும்
வணங்கரியானன்றிக்காப்பாரில்லாமைவிண்மண்ணறியும்
வணங்கரியானவர்வாணன்கண்டாகனன்மார்க்கண்டனே.

(இ - ள்.) வணம் கரியான் - திருமேனிநிறம் கருமையாயுள்ளவனும், அடியார் தொழ - தொண்டர்கள் சேவிக்க, வாள் அரவு உவணம் கரி ஆடல் பரி தேர் நடத்து - ஒளியையுடைய ஆதிசேஷனும் கருடனும் யானையும் ஆட்டக்குதிரையும் தேரு மாகிய வாகனங்களி லெழுந்தருளித் திருவீதியுத் ஸவங் கண்டருள்கிற, எந்தை - எமது தலைவனும், வானவர்க்கும் வணங்கு அரியான்-தேவர்கட்கும்தரிசித்துநமஸ்கரித்தற்கு அருமையானவனும் ஆகிய, அரங்கன் அன்றி - ரங்கநாதனே யல்லாமல், காப்பார் இல்லாமை - (சரண மடைந்தவர்களைத் துயர்தீர்த்து வேண்டுவன அளித்துப்) பாதுகாப்பவர் மற்றுஎவருமில்லாதிருக்கிற உண்மையை, விண் மண் அறியும் வணம் - வா னுலகத்தாரும் நிலவுலகத்தாரும் அறியும்படி, கரி ஆனவர் - சாக்ஷியானவர் கள், (யாவரெனில்),—வாணன் கண்டாகனன் மார்க்கண்டனே - பாணா சுரனும் கண்டாகர்ணனும் மார்க்கண்டேயனு மாவர்; (எ-று.)

இம்மூவரும் முதலிற் சிவபிரானையடுத்து அவனால் தமதுகுறைகள்தீர வும் வேண்டுவனயாவும் பெறவும் மாட்டாமல் பின்பு திருமாலருள்பெற்றுப் பேறுபெற்றுஉய்ந்தமை அவரவர்சரித்திரத்தால் நன்குவிளங்குதல்பற்றி, இங் ஙனங் கூறினார். சாக்ஷியாதற்கு ஏது - வாணாசுரனுடைய கைகளைக் கண் ணன் சக்கராயுதத்தால் அறுக்கிறபோது அவனுக்கு ரக்ஷகனாய் நின்ற சிவ பிரான் ஒன்றும்எதிர்செய்யமாட்டாது அப்பெருமானை இரக்க, அதற்கு இரங்கி அவன் நான்குகைகளோடும் உயிரோடும் விட்டருள, அவ்வசுரன் பின்பு ஸ்ரீகிருஷ்ணனை வணங்கி உறவுபூண்டு உய்ந்ததும்; கண்டாகர்ணன் முதலிற் சிவபக்தியோடு விஷ்ணுத்வேஷமும் மேலிட்டிருந்து பின்பு சிவ

ளுல் முத்திபெறமாட்டாது கண்ணபிரானுற் பெற்றதும்; மார்க்கண்டேயன் மகாபிரளயகாலத்தில் திருமாலையேயன்றி மற்றைத்தேவரெவரையும் பிழைத்திருக்கக்காணாது அப்பெருமானது திருவயிற்றினுள்ளே அனைவரையும் கண்டதுமன்றி, முன்பு சிவபிரானருளால் நீண்டஆயுளைமாத்திரமே பெற்றதான் பின்பு பரகதிக்குத் திருமாலையே வேண்டினமையுமாம்.

வர்ணம் என்ற வடசொல்லின் விகாரமான வண்ணம் என்பது, வணம் எனத் தொக்கது. அரங்கன்னடியார், னகரவொற்று - விரித்தல். வாள் அரவு - கொடிய பாம்புமாம். உவணம் - ஸுபர்ணம் என்ற வடசொல்லின் சிதைவு. ஆடல் பரி - வெற்றியையுடைய குதிரை யெனினுமாம். விண், மண் - இடவாகுபெயர்கள். (எங)

எச. தண்டலங்காரளகங்கெண்டைமேகங்கவிரிதழ்சொல்
கண்டலங்காரமுலையிளநீரென்றுகன்னியர்சீர்
கண்டலங்காரமருளேன்புனற்கயல்கொக்கென்றஞ்சக்
கண்டலங்காரமலரரங்கேசர்க்குக்காதலனே.

(இ - ள்.) புனல் - நீரிலுள்ள, கயல் - கயல்மீன்கள், கொக்கு என்று அஞ்ச - 'கொக்கு' என்று நினைத்துப் பயப்படும்படி, கண்டல் - தாழைகள், அங்கு - அந்நீரின்பக்கங்களில், ஆர மலர் - மிகுதியாக மலரப்பெற்ற, அரங்கம்-திருவரங்கத்துக்கு, ஈசர்க்கு-தலைவரான நம்பெருமாளுக்கு, காதலன் - அன்புபூண்டவனான யான்,—கன்னியர் - இளமங்கையரது, கண் தலம் கார் அளகம் - கண்களும் கரியகூந்தலும், கெண்டை மேகம் - (முறையே) கெண்டைமீனையும் காளமேகத்தையும் போலும்: இதழ் - (அவர்களுடைய) அதரம், கவிர் - முருக்கமலர்போலும் : சொல் - பேச்சு, கண்டு - கற்கண்டு போலும் : அலங்கு ஆரம் முலை - அசைகிற ஹாரங்களையுடைய தனங்கள், இளநீர்-இளநீர்போலும், என்று—,சீர் கண்டு அலங்காரம் மருளேன்-(அவர்களுடைய) சிறப்பைக்குறித்து அவர்கள்புனைகோலத்தால் மதிமயங்கேன்.

திருவரங்கர்க்கு அன்பனுயினே னுதலால், பெண்ணுசைமயக்கத்திலாழேனென்பதாம். பேரின்பத்துக்குஇடமான பெருமானிடத்துக் காதல் செலுத்தினுல், சிற்றின்பத்திற்கு இடமான மகளிர்பக்கல் மோகம் தீருமென்பது, குறிப்பு.

கண்தலம் - கண்ணுகிய இடம். முதலடியில் கண்தலம் கெண்டை, காரளகம் மேகம் என முறையே சென்றுஇயைதல், முறைநிரனிறைப்பொருள்கோள். இளநீர் - தெங்கினிளங்காய். கயல்மீன் வெண்டாழைமலரைக் கொக்கென்று கருதி அஞ்சிய தென்றது, மயக்கவணி; "அருகு கைதை மலரக் கெண்டை, குருகென் றஞ்சுங் கூடலூரே" என்ற ஆழ்வாரருளிச் செயலை அடியொற்றியது இந்த வருணனை. கொக்கு மீன்குத்திப்பறவையாதலால், அதற்கு மீன் அஞ்சும். இதழுக்கு முருக்கம்பூ செந்நிறத்திலுவமம். (எச)

எரு. காதலைவாரிமண்வெண்கோட்டில்வைத்துண்டுகொட்டியரங்
காதலைவாகழற்குள்ளாக்கினுய்கரப்பெங்கெனவே
காதலைவார்குழைவைதேகியைநின்கருத்தருக்குங்
காதலைவானரர்த்தேடவிட்டாயிதுகைதவமே.

(இ - ள்.) அரங்கா—! தலைவா - (எல்லாவுயிர்கட்குந்) தலைவனே!— காது - மோதுகின்ற, அலை-அலைகளையுடைய, வாரி-கடலினாற்சூழப்பட்ட, மண் - பூமியை, வெள் கோட்டில் வைத்து - (வராகாவதாரத்திலே) வெண்ணிறமான மருப்பிற் குத்தியெடுத்து, உண்டு - (பிரளயகாலத்திலே) வயிற்றினுட்கொண்டு, காட்டி-(அந்தப் பிரளயம் நீங்கினவாறே) வெளிநாடு காண உமிழ்ந்து, கழற்கு உள் ஆக்கினாய் - (திரிவிக்கிரமாவதாரத்திலே) ஓரடிக்குள் ஒடுங்கச்செய்தாய்; (அங்ஙனம் நிலவுலகமுழுதையும் ஸ்வாதீனமாக நடத்திய நீ),—நின் கருத்து உருக்கும் காதலை - உனதுமனத்தையுருகச்செய்கிற ஆசைமயமானவளாகிய, காது அலை வார் குழை வைதேகியை - காதுகளிலசைகிற பெரிய குழையென்னும் அணிகலத்தையுடைய ஜாநகிப்பிராட்டியை, கரப்பு எங்கு என வானரர் தேட விட்டாய் - (இந்நிலவுலகத்தில் இராவணன்)ஒளித்துவைத்தது எவ்விடத்தென்று தேடிப்பார்த்தறியும்படி (அநுமான்முதலிய) வாநரவீரர்களை (நாற்றிசைக்கும்) அனுப்பினாய்; இது கைதவமே - இது (உனது)மாயையேயாம்; (எ - று.)

இரணியாக்ஷனாற் பூமிமுழுதும் ஒளிக்கப்பட்டபோது அது இருந்த இடத்தை நாடிக்கண்டு அதனையெடுத்துவந்தவனும் அந்தப்பூலோகமுட்பட எல்லாவுலகங்களையும் உண்டுஉமிழ்ந்தவனும் பூமிமுழுவதையும் ஓரடிக்கு உள்ளாக்கினவனு மாகிய நீ, அந்நிலவுலகத்தில் இராவணனாற் கவரப்பட்ட சீதை யிருக்குமிடத்தை அறியாய்போன்று வாநரரைத் தேடவிட்டது, மாயச்செய்கையே யென்பதாம். எல்லாம் உனதுதிருவிளையாடலே யென்பது, குறிப்பு.

காது அலை - வினைத்தொகை. கரப்பு - தொழிற்பெயர். வைதேஹீ- வடமொழித் தத்திதாந்தநாமம்: விதேகராஜனது குலத்திற் பிறந்தவள். காதல்=காதலி. கைதவம் - வடசொல். ஏ - அசை. (எ௫)

எசு. தவராகவக்கணையொன்றாற்கடற்றெய்வந்தானென்றிருந்
தவராகந்தீர்த்துத்தொழக்கண்டநீதர்ப்பைமேற்கிடந்து
தவராகப்பாவித்தென்னோதொழுதாய்தண்ணரங்கத்துமா
தவராகவாகண்ணனேயெண்ணொவதாரத்தனே.

(இ - ள்.) தண் - குளிர்ச்சியான, அரங்கத்து - திருவரங்கத்தி லெழுந்தருளியிருக்கின்ற, மாதவ - திருமகள்கொழுநனே! ராகவா - இராமனாகத் திருவவதரித்தவனே! கண்ணனே - கிருஷ்ணனாகத் திருவவதரித்தவனே! எண் ஒணா அவதாரத்தனே - மற்றும் கணக்கிடமுடியாத [மிகப்பல] திருவவதாரங்களையுடையவனே!—தவர் - வில்லினின்று எய்யப்பட்ட, ஆகவம் கணை ஒன்றால் - போர்க்குஉரிய அம்புஒன்றினால் [ஆக்நேயாஸ்திரத்தினால்], கடல் தெய்வம் தான் என்று இருந்த அராகம் தீர்த்து தொழ கண்ட- கடலுக்கு அதிதேவதையான வருணன் தான்[ஸ்வதந்த்ரன்] என்று செருக்கியிருந்த அந்த அபிமானத்தை யொழித்து (உன்னை) வணங்கும்படி (பின்பு) செய்த வல்லமையையுடைய, நீ—, (முதலில்), தர்ப்பைமேல் கிடந்து - தருப்பசயனத்திற் படுத்து, தவர் ஆக பாவித்து - விரதாநுட்டானஞ்

செய்பவர்போலப் பாவனைகாட்டி, என்னை தொழுதாய் - என் (அத்தே வனை) வணங்கினையோ? (எ - று.)

வருணனைச் செருக்கடக்கித் தொழும்படி செய்யும் வல்லமையுடைய நீ முதலில் வல்லமையில்லாதவன்போல அவனைத்தொழுது வரங்கிடந்தது உனதுமாயையினாற் செய்த திருவிளையாடல்போலு மென்பது, குறிப்பு. முன்பு மாநுடபாவனையைக் காட்டிப் பின்பு பரத்வத்தை வெளியிடத் தொடங்கின னென்க.

ஆஹவம், தைவம், ராகம், தர்ப்பம், மாதவன், அவதாரம் - வடசொற்கள். தான்என்றுஇருந்த அராகம் - தான் இராமபிரானுக்கு அடங்கினவனல்ல னென்று கருதி உபேக்ஷித்திருந்த அகங்காரம். அ ராகம் எனச் சுட்டியதூ, கதையை உட்கொண்டு. இனி, அராகம் என்பதன் முதல்அகரத்தை "ரவ்விற்கு அம்முதலா முக்குறிலும்,......மொழிமுதலாகி முன்வருமே" என்றபடி ராகம் என்ற வடசொல்லின் முதலில் வந்த குறிலாகவுங் கொள்ளலாம். தவர் என்றதில், 'தவம்' என்றது, பிராயோபவேசத்தை. மத்ஸ்யம் கூர்மம் முதலிய தசாவதாரங்களேயன்றி நாரதன் நரநாராயணர் கபிலன் தத்தாத்ரேயன் பிருது தந்வந்திரி வியாசன் புத்தன் அருச்சுனன் முதலாகச் சமயோசிதமாக எம்பெருமான் தனது திவ்யசங்கல்பத்தினாற் கொண்ட திருவவதாரங்கள் பற்பலவாகப் புராணங்களிற் கூறப்படுதல் பற்றி, 'எண்ணெணுவவதாரத்தனே' என்றார். (எசு)

எஎ. தாராகணமண்ணளந்தவந்நாளன்பர்சாத்துந்துழாய்த்
தாராகணம்புயம்போலரங்காதலமேழுக்குமா
தாராகணமங்கையாயும்பர்தூவியதண்மலர்வீழ்
தாராகணமுநில்லாகாற்றிற்சூழ்வளந்தானொக்குமே.

(இ - ள்.) அன்பர்-அடியார்கள், சாத்தும்-சமர்ப்பித்த, துழாய் தாரா-திருத்துழாய் மாலையை யுடையவனே! கண் அம்புயம் போல் - கண்கள் தாமரை மலர்போ லிருக்கப்பெற்ற, அரங்கா—! தலம் ஏழுக்கும் ஆதாரா - எழுவகை யுலகங்கட்கும் ஆதாரமாயிருப்பவனே! கணமங்கையாய் - திருக்கண்ணமங்கையென்னுந் திவ்யதேசத்தி லெழுந்தருளியிருக்கின்றவனே!—மண் அளந்த அ நாள் - (நீ) உலகமளந்த அக்காலத்தில்,—தாராகணம் - (வானத்திற்சுற்றுகின்ற) நக்ஷத்திரமண்டலம் (எப்படியிருந்ததென்றால்),—உம்பர் தூவிய தண் மலர் - தேவர்கள் (அக்காலத்தில் உன்மீது) சொரிந்த குளிர்ந்த மலர்கள், வீழ்தாரா - பூமியில் விழாதனவாயும், கணமும் நில்லா - ஒருகணப்பொழுதேனும் (வானத்தில் ஓரிடத்தில்) நிலையுற்றிராதனவாயும், காற்றில் சூழ் - வாயுமண்டலத்தில் அகப்பட்டுச் சுழல்கின்ற, வளம் - மாட்சிமையை, ஒக்கும் - போன்றிருந்தது; (எ - று.)—தான்-அசை.

உனது பெருவடிவத்துக்குமுன் நக்ஷத்திரங்கள் மலர்கள்போலச் சிறியனவாயின வென்பது, குறிப்பு. பற்பல நிறமுடையனவாய் விளங்கும் நக்ஷத்திரங்கள், பற்பலநிறமுள்ள மலர்கள்போலும். இடையிற் பெருவடிவமாய் எழுந்த எம்பெருமானைச் சுற்றிலும் நக்ஷத்திரங்கள் வானத்தில் திரிந்ததற்கு, மலர்கள் காற்றிலகப்பட்டுக் கீழ்விழாமலும் ஓரிடத்துநிலையுறு

மலும் சுழலுதலை ஒப்புமைகூறினர்; உவமையணி. தேவர்கட்குப் பகைவனாய் அவர்களை வென்றடக்கிய மாவலியைச் செருக்கடக்குதற்குத் திருமால் திரிவிக்கிரமனாய் வளர்ந்த சமயத்தில் அதுகண்ட களிப்பினால் தேவர்கள் மேலுலகத்தினின்று மலர்மாரிசொரிந்தன ரென்க.

"இறைமுறையான் சேவடிமேன் மண்ணளந்த வந்நாள், மறைமுறையால் வானாடர் கூடி - முறைமுறையின், தாதிலகு பூத்தெளித்தா லொவ்வாதே தாழ்விசும்பின், மீதிலகித் தான்கிடக்கும் மீன்" என்ற ஆழ்வாரருளிச்செயலை அடியொற்றியது, இச்செய்யுள்.

கண் அம்புயம்போல் அரங்கன் - புண்டரீகாக்ஷன். எல்லாவுலகங்கட்குங் கீழே எம்பெருமான் ஆதிகூர்மரூபியாயிருந்துகொண்டு அவற்றையெல்லாந் தாங்குதலும், பிரளயகாலத்தில் அனைத்துலகத்தையும் வயிற்றில் வைத்திருத்தலும், பகவானது திவ்வியசக்தியின் உதவியினாலன்றி யாதொரு பொருளும் எங்கும் நிலைபெறாமையும் பற்றி, 'தலமேழுக்கும் ஆதாரா' என்றார். திருக்கண்ணமங்கை - சோழநாட்டுத் திருப்பதிகளிலொன்று. உம்பர் - இடவாகுபெயர். மலர் - பால்பகாஅஃறிணைப்பெயர்; இங்குப் பன்மையின்மேலது. வீழ்தாரா, நில்லா - எதிர்மறைப் பலவின்பால் முற்றுக்கள் எச்சமாய் நின்றன; ஆதலால், "அல்வழி ஆ மா மியா முற்று முன்மிகா"என்றபடி இவற்றின்முன் வலி இயல்பாயிற்று. வீழ்தாரா=வீழா: தா - துணைவினை, ர் - விரித்தல். தாராகணம் - வடமொழித்தொடர். (எஎ)

எஅ. தானந்தியாகந்தவங்கல்விதீர்த்தந்தழலிலவி
தானந்தியாகந்தருமிழிபாயினதண்ணரங்கத்
தானந்தியாகப்பகன்மறைத்தான்பெயர்தந்திடும்வே
தானந்தியாகண்டலனறியாப்பரந்தாமத்தையே.

(இ - ள்.) தானம் - தானஞ்செய்தலும், தியாகம் - தியாகமளித்தலும், தவம் - தவஞ்செய்தலும், கல்வி - நூல்களையோதுதலும், தீர்த்தம் - புண்ணியதீர்த்தங்களில் நீராடுதலும், தழலில் அவி நந்து யாகம் - அக்கினியிலே ஹவிஸ் பக்குவமாகப்பெறுகின்ற யாகமும், (என்னும் இவையெல்லாம்), இழிபு ஆயின தரும் - இழிவான பதவிகளையே (தம்மையுடையார்க்குக்) கொடுக்கும்; அந்தி ஆக பகல் மறைத்தான் - மாலைப்பொழுது உண்டாம்படி சூரியனை(ச் சக்கரத்தால்) மறைத்தவனான, தண் அரங்கத்தான் - குளிர்ந்த திருவரங்கநகருடையானது, பெயர் - திருநாமமோ, வேதா நந்தி ஆகண்டலன் அறியா பரந்தாமத்தை தந்திடும் - (தன்னைக்கருதினவர்க்குப்) பிரமனும் சிவனும் இந்திரனும் அறியமாட்டாத பரமபதத்தைக் கொடுத்திடும்; (எ - று.)—இரண்டாமடியில், தான் - அசை.

ஆதலால், அவன்திருநாமத்தைக் கூறிப் பரமபதமடையுங்க ளென்பது, குறிப்பு. நற்கதிபெறுதற்குஉரிய உபாயமென்று கொள்ளப்படுகிற தானம் முதலிய அனைத்திலும் பகவந்நாமஸ்மரணத்துக்கு உள்ள மகிமையை வெளியிட்டார். மற்றவையெல்லாம், அழியுந்தன்மையனவான இழிந்த இந்திரன் முதலிய இறையவர்பதங்களையே கொடுக்கமாட்டும்; நாமஸ்மரணமோ, அந்தமிலின்பத்து அழிவில்வீட்டைத் தரும் என வேறுபாடு விளக்கப்பட்டது.

இங்குத் தானம் முதலியனவாகக் கூறினது, சுவர்க்கம் முதலிய சிற்றின்பங்களை உத்தேசித்துச் செய்யும் காமியகருமங்களை; முத்தியுலகத்து நிரதிசயவின்பத்தைப் பெறுதற்கு உபயோகமாகச் செய்யும் நிஷ்காம்ய கருமங்களை யன்றென் றறிக. தானம்-சற்பாத்திரங்களிலே கொடுத்தல் என்றும், தியாகம் - வரையறையின்றிப் பொதுப்படக் கொடுத்தல் என்றும் வேற்றுமை யுணர்க; முன்னது-புண்ணியக்கொடை யென்றும், பின்னது-புகழ்க்கொடை யென்றுங் கூறப்படும்.

தாநம், த்யாகம், தபஸ், தீர்த்தம், ஹவிஸ், யாகம், வேதா, நந்தீ, ஆகண்டலன், பரந்தாமம் - வடசொற்கள். அவி - வைதிகாக்கினியில் மந்திரபூர்வமாக ஓமஞ்செய்யப்படும் நெய் முதலிய தேவருணவு. நந்துதல் - கெடுதல்; இங்கு, நன்றாகப்பசநமாதல். நந்துயாகம் - வினைத்தொகை. நந்தியாகம் என்பதில் இகரத்தை, "யவ்வரி னிய்யாம்" என்றபடி நிலைமொழியீற்றுக் குற்றியலுகரம் திரிந்த தென்றாவது, "யவ்விற்கு, இய்யும் மொழிமுதலாகி முன்வருமே" என்றபடி வருமொழிவடசொல்லின் யகரத்துக்குமுன் வந்த இகர மென்றாவது கொள்க. ஆகண்டலன் - (பகைவரை) நன்றாகக் கண்டிப்பவன். பரந்தாமம் - மேலான இடம். தரும் - முற்று. இழிபாயின - பெயர்; செயப்படுபொருள். தந்திடும் என்றதில், இடு - துணிவுணர்த்தும். பகல் - சூரியனுக்கு இலக்கணை. நந்தி என்றதன் நகரம், யமகத்தின்பொருட்டு னகரமாக் கொள்ளப்பட்டது. (எஅ)

எகூ. தாமரைமாத்திரைமூப்பற்றவானவர்தண்ணறுஞ்செந்
தாமரைமாத்திரைவந்தாடலைவரைத்தண்ணரங்க
தாமரைமாத்திரைபோல்வளைந்தேற்றுத்தருப்பொருட்டால்
தாமரைமாத்திரைக்கேசங்கினோசையிற்சாய்ந்தனரே.

(இ - ள்.) தாமரை மாத்திரை - பதுமமென்னுந்தொகையளவுள்ளவர்களான, மூப்பு அற்ற வானவர் - முதுமையில்லாத இயல்பையுடைய தேவர்கள், —தரு பொருட்டால் - பாரிஜாததருவின்நிமித்தமாக,—திரை தண் நறுஞ் செம் தாமரை வந்தாள் மா தலைவரை தண் அரங்க தாமரை - திருப்பாற்கடலிற் குளிர்ந்த பரிமளமுள்ள சிவந்த தாமரைமலரின்மீது தோன்றினவளான திருமகளினது கணவரும் குளிர்ந்த ஸ்ரீரங்கத்தை இடமாகக் கொண்டவருமாகிய நம்பெருமாளை, மா திரை போல் வளைந்து ஏற்று - பெரிய திரைச்சீலைபோலச் சூழ்ந்துஎதிர்த்து,—சங்கின் ஓசையின் - (அப்பெருமான் ஊதிமுழக்கிய) சங்கத்தினோசையினால், தாம்—, அரை மாத்திரைக்கே-அரைமாத்திரைப்பொழுதிலே,சாய்ந்தனர்-மூர்ச்சித்து வீழ்ந்தனர்.

பதுமமென்பது, ஒருபெருந்தொகை; அது, கோடியினாற் பெருக்கிய கோடி. இங்குப் பதுமமென்றஅத்தொகையைஅதற்குஒருபரியாயநாமமாகிற 'தாமரை' என்ற சொல்லினாற் குறித்தது, லக்ஷிதலக்ஷணை. மாத்ரா என்ற வடசொல் விகாரப்பட்டது. தா - வருத்தம்மிக்க, மரை - மரணமும், மா - மிகுந்த, திரை - தோற்சுருக்கமும், மூப்பு - முதுமையும், அற்ற வானவரென்று உரைப்பாரு முளர். திருப்பாற்கடல்கடைந்தபோது, அதனினின்று மலர்ந்த செந்தாமரைமலரை ஆசனமாகக்கொண்டு திருமகள் திருவவதரித்தன ளென்று புராணம் கூறும். முதலடியிலும் இரண்டாமடியிலும்

வந்த 'தாமரை' என்ற சொல்லுக்குப் பொருள் வெவ்வேறுதலால், யமக விலக்கணம் சிதைந்ததாகாது. மா - இலக்குமியைக் குறிக்கையில், வடசொல். திரை - அலை; கடலுக்குச் சினையாகுபெயர். பொருட்டு - நான்காம்வேற்றுமைச் சொல்லுருபு; ஆல் - அசை. மாத்திரை - கண்ணிமைப்பொழுது, அல்லது கைந்நொடிப்பொழுது. திரைச்சீலையுவமை - பிறர்காணவொண்ணாதபடி சூழ்ந்துகொள்வதற்கு. (எக)

அ0. சாகைக்குந்தத்துத்துகிறாக்கிமாதர்தமைநகைத்தாய்
சாகைக்குந்தத்துவங்கட்குமெட்டாய்தண்புனலரங்கே
சாகைக்குந்தத்துப்புடையாழியேந்தறமர்கள்வெய்யோர்
சாகைக்குந்தத்துத்தவிர்கைக்கும்போலுமுன்சங்கற்பமே.

(இ - ள்.) சாகை - கிளைகளையுடைய, குந்தத்து - குருந்தமரத்தின் மேல், துகில் தூக்கி - (கோபஸ்திரீகளுடைய) சேலைகளை எடுத்துப் போய் வைத்துக்கொண்டு, மாதர்தமை நகைத்தாய் - அந்தஇடைப்பெண்களைநோக்கிப் பரிகாசமாகச்சிரித்தவனே! சாகைக்கும் தத்துவங்கட்கும் எட்டாய்-வேதங்களுக்கும் தத்துவங்களுக்கும் எட்டாதவனே! தண் புனல் அரங்கம் ஈசா - குளிர்ச்சியான நீர்வளத்தையுடைய ஸ்ரீரங்கத்துக்குத் தலைவனே!—கை - (நினது) திருக்கைகளில், குந்தத்து - குந்தமென்னும் ஆயுதத்தோடு, புடை ஆழி - பகையழிக்கவல்ல சக்கரத்தையும், ஏந்தல்-தரித்திருத்தல்,—வெய்யோர் சாகைக்கும் தமர்கள் தத்து தவிர்கைக்கும் உன் சங்கற்பம் போலும் - துஷ்டர்கள் அழியுமாறும் அடியார்கள் துன்பம் நீங்குமாறும் நீகொண்ட கருத்தினாற் போலும்; (எ - று.)

'போலும்' என்பது - ஒப்பில்போலி: அதாவது - உவமைப்பொருள் தராத 'போல்' என்னுஞ் சொல்; "ஒப்பில் போலியு மப்பொருட்டாகும்" என்ற தொல்காப்பியத்தால், அச்சொல் உரையசைப்பொருளதாகி வாக்கியாலங்காரமாய் நிற்கு மென்று விளங்குதலால், எம்பெருமான் திருக்கைகளிற் சிறந்தபடைக்கலங்களைக் கொண்டிருத்தல் துஷ்டநிக்கிரகஞ் செய்து சிஷ்டபரிபாலனம்பண்ணுஞ் சங்கல்பத்தினாலேயேயா மென்ற கருத்து அமையும். சாகை - வேதத்தின் பகுப்பு; வேதத்துக்குச் சினையாகு பெயர். தத்துவங்கள் - ஐம்பொறி, ஐம்புலன், ஐம்பூதம், ஐந்துகருமேந்திரியம், பிரகிருதி, மஹாந், அகங்காரம், மநஸ் என்பன. எட்டுதல் - புலனாதல். இனி, வேதங்கட்கும் மற்றைத்தத்துவநூல்கட்கும் சிறிதளவேயன்றி முழுவதுஞ்சொல்லமுடியாதவனே யென்று உரைப்பினும் அமையும்; இப்பொருளில், தத்துவமென்பது - அதனையுணர்த்தும்நூலுக்கு ஆகுபெயராம். தமர் - தம்மைச்சேர்ந்தவர்.

சாகா, தத்வம், ஸங்கல்பம் - வடசொற்கள். கை குந்த துப்பு உடை ஆழி ஏந்தல் என்று பதம்பிரித்து, கை - கையில், குந்த - இருக்க, துப்பு உடை ஆழி ஏந்தல் - வலிமையையுடைய சக்கரத்தைத் தரித்தல் என்று உரைத்தலு மொன்று. 'தமர்கள் வெய்யோர் சாகைக்கும் தத்துத்தவிர்கைக்கும்' என்ற தொடரில், 'தமர்கள்' என்பது 'தத்துத்தவிர்கை' என்பதனோடும், 'வெய்யோர்' என்பது 'சாகைக்கும்' என்பதனோடு மாக மாறிச் சென்றுஇயைதல், எதிர்நிரனிறைப்பொருள்கோள். (அ0)

அக. சங்கத்தமரர்குழாத்தொடுமூழ்வினைதான்விலங்கச்
சங்கத்தமரன்பராயிருப்பீர்கடறானவர்தே
சங்கத்தமரம்படவெய்தசார்ங்கத்தனுவரங்கன்
சங்கத்தமரன்சரணேசரணென்றுதாழ்ந்திருமே.

(இ - ள்.) கடல் - சமுத்திரமும், தானவர் தேசம் - அசுரர்களுடைய நாடும், கத்த - தவித்துக்கதறவும், மரம் பட - (ஏழு) மராமரங்கள் அழியவும், எய்த - அம்புஎய்த, சார்ங்கம் தனு - சார்ங்கமென்னும் வில்லையுடைய, அரங்கன் - ரங்கநாதனும், சங்கம் தமரன் - (பாஞ்சஜந்யமென்ற) சங்கத்தின் முழக்கத்தை யுடையவனு மாகிய திருமாலினது, சரணே - திருவடிகளே, சரண் - ரக்ஷகம், என்று - என்றுகொண்டு, தாழ்ந்திரும் - (அவற்றை) வணங்கியிருங்கள் ; (அங்ஙனமிருப்பீராயின்),—ஊழ்வினை தான் விலங்க - (உங்கள்)கருமமுழுதுந் தொலைய,சங்கத்து அமரர் குழாத்தொடும் - (எம்பெருமான் பக்கல்)மனம்பற்றுதலையுடைய நித்தியசூரிகள் வர்க்கத்தோடு ஒப்ப, சங்கத்து அமர் - (அவர்களுடைய) கூட்டத்திற் பொருந்திய,அன்பர் ஆய் - அடியார்களாய் [முக்தர்களாய்], இருப்பீர் - (பரமபதத்தில்) வாழ்ந்திருப்பீர்கள் ; (எ - று.)

திருவரங்கனது திருவடியே தஞ்சமென்று சரண்புகுந்திருப்பீராயின், பரமபதத்தில் நித்யசூரிகள்சமூகத்தில் அவர்களோடொப்ப இருக்கப்பெறுவீரென உலகத்தார்க்கு உபதேசித்ததாம். முதலடியில்,சங்கம்=ஸங்கம்; இரண்டாமடியில், சங்கம்=ஸங்கம் ; நான்காமடியில், சங்கம்=சங்கம். அமரர் - மரணமில்லாதவர் ; "அயர்வறுமமரர்களதிபதியவனவன்" என்றவிடத்துப் போல, 'அமரர்' என்பது - இங்கு, முத்தியுலகத்துநிரதிசயவின்பமனுபவிக்கிற நித்தியசூரிகளைக் குறித்தது. இராமபிரான் ஆக்கினேயாஸ்திரம் பிரயோகித்துக் கடலைவற்றுவிக்கத்தொடங்கியபோது தாபமடைந்து அஞ்சிக்கதறியோடிவந்து சரண்புகுந்து ஒடுங்கிநின்று தன்பிழையைப்பொறுக்குமாறு பிரார்த்தித்த வருணனுக்கு அபயமளித்து அவனைநோக்கி 'எனது அம்பு வீண்போகாதாதலால், அதற்கு இலக்கு என் ?' என்ன, நீர்க்கடவுள் 'மருகாந்தாரமென்ற தீவில் நூறுகோடிக்கும்மேலாக வாழ்கிற அசுரர்கள் மிகக் கொடியராய் உலகத்தை வருத்துதலால், அவர்கள்மேல் இந்தஅனலம்பை விடுத்தருள்க' என்றுசொல்ல, இராமமூர்த்தி அங்ஙனமே அதனைவிடுத்து அவ்வசுரர்களனைவரையும் எரித்தொழித்தன னென்ற வரலாற்றை யுட்கொண்டு, 'கடல் தானவர்தேசங் கத்த வெய்த' என்றார். இராமனம்பினாற் பீடிக்கப்பட்டு அம்மருகாந்தாரபூமி அலறிற்றென்று ஸ்ரீவால்மீகிபகவான் கூறியிருத்தலுங் காண்க. கடல் தானவர்தேசம் - கடலிடையேயுள்ள அசுரர்நாடுமாம். சார்ங்கமென்பது-திருமால்வில்லின் பெயர். திருமாலின் அம்சமான இராமபிரானது வில் அவ்விஷ்ணுதநுசின் அம்சமுடைய தென்பார், இங்கு 'சார்ங்கத்தனு' என்றார்.

சரண் - சரணமென்ற வடசொல்லின் விகாரம் ; ஏ - பிரிநிலை. 'சார்ங்கத்தன் றண்ணரங்கன்' என்றும், 'என்று சார்ந்திருமே' என்றும் பாடமுண்டு. கடல் தானவர் தேசம் - கடல்போன்ற [பெருவெள்ளமாகத்திரண்

ட] அசுரர்களுடைய நாடுகளை, கத்து அமர் - ஆரவாரிக்கின்ற போரிலே, அம்பு அட - தனது அம்புகள் அழிக்கும்படி, எய்த - பிரயோகித்த என்று உரைப்பாருமுளர். சங்கத்து அமரர் என்பதற்கு - சங்கமென்னுந்தொகை யளவினரான அமரர்களென்று உரைத்தலுமொன்று; கீழ் "தாமரைமாத் திரைவானவர்" என்றாற்போல: சங்கம் - ஓர்பெருந்தொகை; நூறுபதுமங் கொண்டது. ஈற்றடி - முற்றுமோனை. (அக)

அஉ. இருந்தேனுகமுடவன்வரைநோக்கியிருப்பதுபோல்
இருந்தேனுகந்துனைவைகுந்தநோக்கியெதிர்பொருங்கேள்-
இருந்தேனுகனும்படவதைத்தாய்வெண்ணெயாமத்தொளித்
இருந்தேனுகரரங்காகாணுநாளினியென்றருளே. [து+

(இ - ள்.) எதிர் பொரும் - எதிரில் வந்து போர்செய்த, தேனுகனும் - தேநுகாசுரனும், கேளிரும் - அவ்வினத்தாரான மற்றும்பல அசுரர்களும், பட - அழியும்படி, வதைத்தாய் - (அவர்களைச்) சங்கரித்தவனே! யாமத்து - இராத்திரிகாலத்தில், ஒளித்திருந்தே - (ஆயர்மனையில்) மறைந்திருந்து கொண்டே, வெண்ணெய் நுகர் - (கிருஷ்ணாவதாரத்திலே) வெண்ணெயை (க் களவுசெய்து) உண்ட, அரங்கா—!—இருந் தேன் உக - பெருமையுள்ள [சுவைமிக்க] தேன் (தனதுநாவிலே) சிந்தவேண்டுமென்று கருதி, முடவன் - முடவனொருவன், வரை நோக்கி இருப்பது போல் - (அத்தேன் கூட்டையுடைய)மலையை(ஆசையோடு அண்ணாந்து)பார்த்திருந்தாற்போல, உனை உகந்து வைகுந்தம் நோக்கி இருந்தேன் - உன்னையடைய விரும்பிப் பரமபதம்சேர்தலை நெடுநாளாக எதிர்நோக்கியிருக்கிறேன்; காணும் நாள் - (அப்பரமபதத்தை நான்)அடைந்து உன்னைத்தரிசிக்குங்காலம், இனி என்று - இனி எப்போதோ! அருள் - அருளிச்செய்வாய்; (எ - று.)

யாதொருமுயற்சியுஞ்செய்யமாட்டாத முடவன் தனக்குக்கிடைத்தற்கு அரியதென்று ஆராய்ந்துணராது கொம்புத்தேனுக்கு ஆசையுற்றிருந்தாற் போல, அதிகாரபூர்த்தியில்லாத யான் பெறுதற்கு அரிதென்று கருதாமல் பரமபதத்தில் உன்னை யடைய நெடுநாளாக அவாவுற்றிருக்கிறேன்; அடி யேனுக்கு விரைவில் அருள்புரியவேண்டுமென்பதாம். காணும் நாள் இனி என்று அருள் - அந்நாள் இந்நாளென்று சொன்னாலும் அதனைஎதிர்பார்த் துக்கொண்டு ஆறியிருப்பேனென்பது, குறிப்பு.

கேளிர் என்றது, மற்றும் கண்ணனைக்கொல்லும்படி கம்சனாலேவப் பட்ட பிரலம்பன், கேசி, பூதனை, அரிஷ்டன், கபித்தன், வத்ஸன் முதலிய அசுரவர்க்கத்தாரைக் குறிக்கும்; இனி, தனதுஉறவினரென்றுகொண்டு, சிசுபாலன்முதல் நாராயணகோபாலர் ஈறாகத் தனது நெருங்கியஉறவினர் பலரைத் தான் நேராகவும் அருச்சுனனைக்கொண்டுங் கொன்ற செய்தி யைக் குறித்ததாகவுங் கொள்ளலாம்.

கேளிர் - (யோகக்ஷேமங்களைக்) கேட்குந்தன்மையையுடையவர்; என் வே, உறவினரும் நண்பருமாவர்: இதனை, கேண்மையென்ற பண்பினடி யாய்பிறந்த தென்னலாம்; இர் - பலர்பால்விகுதி. யாமம் - ஏழரைநாழி

கைகொண்ட பொழுது : மூன்றுயாமங்களையுடையதான இரவுக்கு ஆகு பெயர் ; 'த்ரியாமா'என்பது, இரவி னொருபெயர். 'இல்லிலொளித்து'என் றும், 'ஆளுநாள்'என்றும் பாட முண்டு. 'வெண்ணெய்யாமத்துஒளித்திருந் தேநுகர்'என்றதனால், இவ்வுடம்பாகிய உறியிலே கட்டுப்பட்டுள்ள வெண் ணெய்போலச் சாரமான ஆத்மாவை விரும்பி எவரும் அறியாதபடி கைக் கொண்டு அநுபவிப்பவன் எம்பெருமா னென்பது தோன்று மென்பர். 'ஒளித்திருந்து'என்றவிடத்து, 'இருந்து' என்பது-துணைவினை: 'எழுந்திருந் து'என்றவிடத்துப்போல. 'நுகர்'என்றதன் நகரம் னகரமாகத் திரித்துக் கொள்ளப்பட்டது, யமகத்தின்பொருட்டு. வெண்ணெய்+யாமம்=வெண் ணெயாமம்; தனிக்குறிலைச்சாராத யகரம், யகரம்வரக் கெட்டது. (அஉ)

ருரு.' அரும்பாகவதரிக்கும்பெயராய்புள்ளரசினுக்கோர்
அரும்பாகவதரந்துப்பனையாயரங்காவெனவுண்-
அரும்பாகவதர்பததீர்த்தங்கொள்ளாதடிகள்கொப்புள்
அரும்பாகவதர்தொலைப்பார்கல்லார்கங்கையாடுதற்கே.

(இ - ள்.) கல்லார் - அறிவில்லாதவர்கள்,—'அரும் பாகு அவதரிக்கும் பெயராய் - (துதிப்பவர்நாவிலே) மேன்மையான கருப்பஞ்சாற்றுப்பாகு போன்ற இனிமை யூறும்படியான திருநாமங்களையுடையவனே! புள் அர சினுக்கு ஓர் அரும் பாக - பக்ஷிராஜனான கருடனுக்கு ஓர் அருமையான பா கனே! [கருடனை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்துபவனே!], அதரம் துப்பு அனையாய் - வாயிதழ் பவழம்போலச் சிவந்தவனே! அரங்கா - திரு வரங்கனே!' என உணரும் - என்று (எம்பெருமானை) அறிந்து துதிக்கின்ற, பாகவதர் - ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, பத தீர்த்தம் - ஸ்ரீபாததீர்த்தத்தை, கொள்ளாது - ஏற்றுஉட்கொள்ளாமல்,—கங்கை ஆடுதற்கு - கங்காஸ்நா நஞ் செய்தற்பொருட்டு, அடிகள் கொப்புள் அரும்பு ஆக அதர் தொலைப் பார் - (நடந்து யாத்திரைசெய்வதனால்) உள்ளங்கால்களிற் கொப்புளங்கள் அரும்புபோலுண்டாக அருநெறிகளைக் கடந்து கழிப்பார்கள்; (எ - று.)

திருமாலின்மெய்யடியார்களுடையஸ்ரீபாததீர்த்தங் கொள்ளாமல் கங் காஸ்நாநஞ்செய்தலினால் என்னபயன்? என்பதாம். பகவத்பாததீர்த்தமாகிய கங்கையினும் பாகவதபாததீர்த்தம் மேம்பட்ட தென்பது, குறிப்பு. பாகவ தர் - பகவானுடைய பக்தர்; வடமொழித்தத்திதாந்தநாமம். 'ராமநாமமே கற்கண்டு'என்றாற்போல, 'அரும்பாகுஅவதரிக்கும்பெயராய்' என்றார். அத ரம் - வடசொல். முதலடியில், அருமை-மேன்மை; (ஒப்பு)இல்லாமையுமாம்.

ருச. ஆடுமுன்னீர்முதற்றீர்த்தத்தினாலருமாதவத்தால்
ஆடுமுன்னீர்மறைவேள்வியினாலண்டராயுடன்மாறு+
ஆடுமுன்னீரதுமாயையினாலென்றரங்கனைக்கொண்ட்-
ஆடுமுன்னீர்செய்தபாவமும்போய்முத்தராம்வண்ணமே.

(இ - ள்.) ஆடும் முந்நீர் முதல் தீர்த்தத்தினால் - நீராடுகிற கடல் முத லிய புண்ணியதீர்த்தங்களினாலும் [புண்ணியதீர்த்தங்களில் நீராடுதலினா லும்], அரு மா தவத்தால் - (செய்தற்கு)அரிய பெருந்தவத்தைச் செய்தலி

னாலும், ஆடு முன் ஈர் மறைவேள்வியினால் - ஆடு முதலியவற்றை அறுக்கிற வேதவிதிப்படிசெய்யும் யாகங்களினாலும், அண்டர் ஆய் உடல் மாறும் - (மனிதசன்மம்நீக்கித்) தேவசன்மமாக உடம்பு மாறும்: அது - அங்ஙனம் வேற்றுமையடைவது தானும், மாயையினால் - (திருமாலினது) மாயையி னாலேயே, என்று முன்னீர் - என்று எண்ணுங்கள்: முன் நீர் செய்த பாவமும் போய் முத்தர் ஆம் வண்ணம் - முற்பிறப்புக்களில் நீங்கள் செய்த தீவினைகளும் தீர்ந்து முத்திபெற்றவராகும்படி, அரங்கனை கொண்டாடும் - ஸ்ரீரங்கநாதனைத் துதியுங்கள்; (எ - று.)

தீர்த்தயாத்திரை, தவம், யாகம் என்பன செய்தலாற் சுவர்க்கம்பெற லாம்; அங்ஙனம்பெறுதலில், மனிதசன்மம் ஒழிந்து தேவசன்மம் நேரும்: அதுவும் கருமவசப்பட்டதே யாதலால், அங்ஙனம் பிறவிமாறுதலிற் பய னென்னே! எம்பெருமானைத் துதித்தால்தான் பிறப்புஒழிய மாயையைக் கடந்து முத்திபெறலாம் என்பது, கருத்து. தேவர்கள் நல்வினைப்பயனால் இன்பநுகர்வரேனும் உயிரைப்பந்தப்படுத்துவதில் பொன்விலங்கும் இருப்பு விலங்கும் போலப் புண்ணியசன்மமும் பாவசன்மமும் சமமேயாதலா லும், அத்தேவர்களும் நல்வினைமுடிந்தவுடனே அவ்வுடம்புஒழிய மீளவும் இவ்வுலகத்திற் கருமவசத்திற்குஏற்ப வேறுபிறவிகொள்வ ராதலாலும், சுவர்க்கப்பேறு வீடுபேறுபோலச் சிறந்ததாகா தென்க. தேவசன்மம் எழு வகைப்பிறப்புக்களிலும் நால்வகைக்கதிகளிலும் ஒன்றாதல் காண்க.

முந்நீர் என்பது, முன்னீர் என னகரம் திரித்துக்கொள்ளப்பட்டது, யமகத்தின்பொருட்டு; முன்னீர் என்றே கொண்டு, பழமையான நீரெனக் கடலைக் குறிக்கலாமாயினும், நான்காமடியில் முன் என்பது - முற்காலத்தி லென்ற பொருளில் வருதலால், அங்ஙனங்கொள்ளுதல் சிறவாது. ஆடு - ஆட்டை, முன் - எதிரிலே, ஈர் - அறுக்கிற என்றும் பொருள்படும்; முன் - இடமுன். ஈர் வேள்வி - வினைத்தொகை; ஈர்தல் - அரிதல். அண்டம் - வானம்: அதிலுள்ளவர், அண்டர். முன்னீர் - ஏவற்பன்மைமுற்று; முன் னிலையெதிர்மறைப்பன்மைமுற்றாகக் கொண்டு, நினைக்கமாட்டீ ரென்றலு மொன்று; உன்னீர் என்று எடுப்பினும், இப்பொருள்கள்படும். (௯௪)

௯௫. வண்ணங்கலிவஞ்சிவெண்பாவகவல்வகைதொடுத்தோர்
வண்ணங்கலிகெடவேண்டுமென்றேமக்கண்மாட்டுரையேன்
வண்ணங்கலிகடல்போல்வானரங்கன்வகுளச்செல்வன்
வண்ணங்கலிபன்புகழ்தாளெனக்கென்றுமாநிதியே.

(இ - ள்.) ஓர் வண்ணம் கலி கெட வேண்டும் என்றே-(ஏதேனும்) ஒரு விதமாக வறுமை யொழியவேண்டுமென்றே கருதி [எவ்வாற்றாலாயினும் பொருளீட்டுதலையே முக்கியமாகக்கொண்டு], மக்கள்மாட்டு - மனிதர்கள் பக்கல் [மனிதர்கள்விஷயமாக], வண்ணம் கலி வஞ்சி வெண்பா அகவல் வகை தொடுத்து உரையேன் - அழகிய கலிப்பாவும் வஞ்சிப்பாவும் வெண் பாவும் ஆசிரியப்பாவும் அவற்றின் இனமுமான செய்யுள்களைப் புனைந்து கவிபாடேன்; வண்ணம் கலி கடல் போல்வான் - திருமேனிநிறம் ஒலிக் கின்ற கடல் போன்றவனாகிய, அரங்கன் - ரங்கநாதனது, வகுளம் செல்

வன் வள் நம் கலியன் புகழ் தாள் - மகிழமலர்மாலையையுடைய ஞானச் செல்வரான நம்மாழ்வாரும் ஞானவளத்தையுடைய நமது திருமங்கையாழ்வாரும் துதிசெய்த திருவடிகளே, எனக்கு என்றும் மா நிதி - அடியேனுக்கு எப்பொழுதும் பெரியசெல்வமாம்; (எ - று.)

வண்ணம் என்பதற்கு - வண்ணமென்னும் உறுப்புக்கு இடமான என்றும் பொருள்கொள்ளலாம்: செய்யுளுறுப்புக்களிலொன்றாகிய வண்ணமாவது - ஒரு பாவின்கண் நிகழும் ஓசைவிகற்பம்; அது, வல்லெழுத்துமிக்கு வருதலாகிய வல்லிசைவண்ணமும், மெல்லெழுத்துமிக்குவருதலாகிய மெல்லிசைவண்ணமும், இடையெழுத்துமிக்குவருதலாகிய இயைபுவண்ணமும், நெட்டெழுத்துப்பயின்றுவருதலாகிய நெடுஞ்சீர்வண்ணமும், குற்றெழுத்துப்பயின்றுவருதலாகிய குறுஞ்சீர்வண்ணமும், நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் சமமாக விரவிவருதலாகிய சித்திரவண்ணமும், ஓசையானொழுகி நடப்பதாகிய ஒழுகுவண்ணமும் முதலாகப் பலவகைப்படும். கலிப்பா முதலிய நால்வகைப்பாக்களில் ஒவ்வொன்றன் இனமும், தாழிசை துறை விருத்தம் என்று மூன்றுவகைப்படும். மக்கள்மாட்டு, மாட்டு - ஏழனுருபு: நான்கனுருபின்பொருளில் வந்தது. வண்ணம் - வர்ண மென்ற வடசொல்லின் விகாரம். கலி கடல் - வினைத்தொகை. கலி - கடலுக்கு இயற்கையடைமொழி. அரங்கன்தாளென இயையும்.

வகுளம், நிதி - வடசொற்கள். தம்பக்கல் திருவுள்ளமுவந்து திருக்குருகூர்ப்பொலிந்துநின்றபிரான் பிரசாதித்த மகிழமலர்மாலையைத் தரித்ததனால், நம்மாழ்வார்க்கு, வகுளாபரண ரென்று ஒரு திருநாமம் வழங்கும். ஆழ்வார்கள்பன்னிருவரில் திருவாய்மொழிப்பிரபந்தம் முதலிய நான்கு தமிழ்வேதங்களையும் அருளிச்செய்தவரான நம்மாழ்வாரையும், பெரியதிருமொழி முதலிய ஆறு அங்கங்களையும் அருளிச்செய்தவரான திருமங்கையாழ்வாரையும் எடுத்துக்கூறியது, மற்றைப் பதின்மர்க்கும் உபலக்ஷணம். எம்பெருமான் திருவடிகள், வேண்டும்பொருள்களையெல்லாந் தந்து தாமும் குறையாமையால், 'மாநிதி' எனப்பட்டன. அத்திருவடியாகிய பெருநிதியைப் பெற்றுள்ளேனாதலால், ஒருவாறு வறுமைகெடவேண்டு மென்று உரையேனென்றார். ஓர்வண்ணம் தொடுத்து என இயைத்தலு மொன்று.

அசு. மாநாகவருநிருதன்புன்மாயையின்மங்கையென்னு
மாநாகவருமணியைமுன்னீங்கினன்மாயனென்பார்
மாநாகவரும்பலர்சோலைசூழுமதிலரங்கா
மாநாகவருமமுதேயதுவுநின்மாயமன்றே.

(இ - ள்.) மால் - பெரிய, நாகம் - புன்னைமரத்தினது, அரும்பு - அரும்புகள், அலர் - மலரப்பெற்ற, சோலை - சோலைகள், சூழும் - சூழ்ந்த, மதில் அரங்கா - மதில்களையுடைய திருவரங்கத்தி லுள்ளவனே! மால் நாகவரும்-ஆசையுடன்(அடியார்களால்) நாவிற்கொண்டுநுகரப்படுகிற,அமுதே-அமிருதம்போன்றுள்ளவனே!—மாயன் - ஆச்சரியகரமான குணஞ்செயல்களையுடையவனாகிய இராமபிரான், மான் ஆக வரும் நிருதன் புல் மாயையின் - மான்வடிவமாகவந்த மாரீசனென்ற அரக்கனது அற்பமான மாயை

யினால், மங்கை என்னும் - தனது மனைவியாகிய, மால் நாகம் அரு மணியை - (விஷத்தினால்) மயக்கத்தைச்செய்யுந்தன்மையதான சர்ப்பத்தினது பெறுதற்குஅரிய மாணிக்கத்தை, முன் - முன்பு, நீங்கினன் - பிரிந்தான், என்பார் - என்றுசொல்வார்கள் : அதுவும் - அங்ஙனம் மயங்கியதும், நின் மாயம் அன்றே - நீகாட்டிய மாயையன்றோ; (எ - று.)—அன்றே-தேற்றம்.

நினதுசங்கல்பத்தினாற் கொண்ட மநுஷ்யபாவனையினாலேயே அங்ஙனம் மாயைக்குஉட்பட்டவன்போன்று காட்டினா யென்றபடி.

நாகமணி - நாகரத்நம்; கிடைத்தற்கு அருமையும் ஒளியும் பற்றி, அது பிராட்டிக்கு உவமைகூறப்பட்டது. நாவினால் துதித்தற்குஇனிய னென்பது, 'நா கவரும் அமுது' என்பதன் கருத்து. (அசு)

அஎ. மாயாதவர்தலைவாவரங்காவடமாமதுரை
மாயாதவரண்டர்வந்தடைந்தான்மழுவாளிபிர
மாயாதவர்செய்வர்முந்நூல்செந்நூல்கொண்டவண்ணமொ
மாயாதவரத்தனைக்குடல்கோத்ததுன்வாணகமே. [ப்ப

(இ - ள்.) மா யாதவர் தலைவா - பெருமையையுடைய யதுகுலத்தார்க்குத் தலைவனே! அரங்கா—! வட மா மதுரை மாயா - வடதிசையிலுள்ள பெரிய மதுரையிற் கண்ணனாகஅவதரித்த மாயவனே!—தவர் - முனிவர்களும், அண்டர் - தேவர்களும், வந்து அடைந்தால் - (கொடியபகைவர்க்கு அஞ்சி) வந்து சரணமடைந்தால், மழு ஆளி - சிவனும், பிரமா - பிரமனும் ஆகிய, அவர் - அவ்விருமூர்த்திகளும், யாது செய்வர் - என்னசெய்யமாட்டுவர்! [ஒன்றுஞ்செய்யத் திறமில்லா ரென்றபடி]; உன் வாள் நகமே-உனது வாள்போற் கூரிய நகமே, முந்நூல் செந்நூல் கொண்ட வண்ணம் ஒப்ப - (நினதுமார்பில்விளங்கிய வெண்ணிறமான) முப்புரிநூல் சிவந்தநூலை வடமாகஅணிந்தவிதத்தை யொக்கும்படி, மாயாத வரத்தனை குடல் கோத்தது- (பலவாற்றாலும்) அழியாத வரத்தைப் பெற்றவனாகிய இரணியனது குடலைப் பிடுங்கி மாலையாகஅணிந்தது; (எ - று.)—ஈற்றுஏகாரம் - பிரிநிலையோடு, சிறப்பு.

'முந்நூல் செந்நூல் கொண்ட வண்ண மொப்ப' என்றது - "கூருகிர் நுதியிற் பைந்தேன், பொழிமலரலங்கன்மார்பம்போழ்ந்து செங்குருதியூறி, வழிபசுங்குடர்மென்கண்ணி யாளரி வனைந்ததன்றே" என்றபடி நரசிங்கமூர்த்தி இரணியனதுமார்பைத் தனதுகைந்நகங்களினாற் பிளந்து குடலைப் பறித்து மாலையாகத் தரித்துக்கொண்டபோது அக்குடலினின்று வழிந்த இரத்தப்பெருக்கின் சம்பந்தத்தால் வெண்புரிநூல் செந்நூல்போலாயிற் றென்றும், இரத்தமூறுதலாற் செந்நிறமான அக்குடலானது செந்நூலினாலானதோ ருபவீதத்தை நிவீதமாக [கழுத்தில்மாலைபோலத் தொங்கும்படி] அணிந்ததுபோலு மென்றுங் கருத்துப்படும். இரணியன், தனித்தனி தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் ஆயுதங்களாலும் பகலிலும் இரவிலும் பூமியிலும் வானத்திலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்குமரணமில்லாதபடி வரம்பெற்றவனாதலால், 'மாயாதவரத்தன்' எனப்பட்டான். பிரமருத்திரர்கள் தம்மைக்குறித்துத் தவம்புரிந்து துதித்துப்

பிரார்த்திக்கின்ற அசுரர்முதலிய கொடியவர்கட்கு அவர்கள்வேண்டியபடி யெல்லாம் பெருவரங்களைக் கொடுத்திடுதலும், அவற்றால் அவர்கள் மிகச்செருக்கி உலகங்களைப் பலவாறு வருத்திய காலத்தில் தேவர்களும் இருடிகளும் முதலிற் சிவபிரானைப் போ யடுக்க அப்பெருமான் தன்னு லொன்றுமாகாமற் பிரமனை யடுக்க அத்தேவனும் அங்ஙனமே விஷ்ணு வைச் சரணமடைய அப்பரமன் அங்ஙனமே அவர்கட்கு அபயமளித்து அவ்வசுரர்களை உரியசூழ்ச்சிபலசெய்து அழித்தலு மாகிய வழக்கத்துக்கு இரணியன்செய்தி ஒருதாரணமாதலே இச்செய்யுளில் விளக்கினர்.

சந்திரகுலத்து யதுவென்னும்அரசனதுமரபில் திருமால் கண்ணனாகத் திருவவதரித்துச் சிறப்புற்றதனால் 'மா யாதவர்தலைவா' என்றும், அக்கண் ணன் மதுரையில் திருவவதரித்து முதலிற்செய்த மாயங்கள் அநந்தமாத லால் 'வடமாமதுரைமாயா' என்றும் விளித்தார். மழுஆளி-மழுவென்னும் ஆயுதத்தை யாள்பவன்; இ - ஆண்பாற்பெயர்விகுதி. வடமும், வடத்திற் புரியும், புரியிலிழையும் மூன்றாகவுள்ளதனால், உபவீதத்துக்கு, முந்நூலெ ன்று பெயர். முந்நூல், செந்நூல் - பண்புத்தொகைகள். மாயாதவரத்த னைக்குடல்கோத்தது உன்வாணகமே—"மேருகிரியுடலவுணன் மிடல்கெ டுத்தா யென்ப ரதுன், கூருகிரே யறிந்ததல்லாற் கோவே நீ யறியாயால்" என்பது காணத்தக்கது. (அஎ)

அஅ. நகமுண்டகந்தரித்தாற்கருண்மாயற்குஞாலமுந்நீர்
நகமுண்டகமகிழ்ந்தாற்கடியேமென்மினற்கதிவா
நகமுண்டகம்பரனென்றுதரங்கனைநாடிலயன்
நகமுண்டகமலர்தான்குவியாதுநடுக்குளத்தே.

(இ - ள்.) நக - (கண்டவரனைவரும்) பரிகாசமாகச் சிரிக்கும்படி, முண்ட கம் தரித்தாற்கு - முண்டமாகிய தலையை [பிரம கபாலத்தை]க் கை யிற்கொண்டவனான சிவபிரானுக்கு, அருள் - கருணைசெய்த, மாயற்கு - ஆச்சரியசக்தியையுடையவனும், ஞாலம் - பூமியையும், முந்நீர் - கடல்களை யும், நகம் - மலைகளையும், உண்டு - (பிரளயகாலத்திலே) திருவயிற்றினுட் கொண்டு, அகம் மகிழ்ந்தாற்கு-மனமகிழ்ந்தவனுமான திருமாலுக்கு, அடி யேம் - தொண்டர்களாயினோம் (யாம்), என்மின் - என்று எண்ணுங்கள்; (அங்ஙனம் எண்ணின மாத்திரத்தால்), நல் கதி வானகம் உண்டு - (எல்லாப் பதவிகளினுஞ்) சிறந்த பதவியாகிய பரமபதம் (உங்கட்குச்) சித்திக்கும்: (மற்றும்), அகம் பரன் என்றுது அரங்கனை நாடில் - நானே தலைவ னென்று அகங்காரங்கொள்ளாமல் ரங்கநாதனை விரும்பிச் சரணமடைந் தால்,—அயன் - பிரமனது, நகம் முண்டக மலர் - நகங்களையுடைய தாம ரைமலர்போன்ற கையானது, உம் நடு குளத்தே குவியாது - உங்கள்நடுத் தலையிலே (மீண்டும்பிறக்குமாறு விதித்தெழுதுதற்குக்)குவியாது; (எ - று.) —தான் - அசை.

அகம் பரன் என்றுது அடியேம் என்மின், அயனது நகமுண்டகமலர் உம்நடுக்குளத்துக் குவியாது, நற்கதிவானகம் உண்டு என்று இயைத்தும் கருத்துக்கொள்ளலாம். யானென்னுஞ் செருக்கை யறுத்து, ஆபத்காலத் திலே சிவனுக்கும் அருள்செய்தவனும் நித்தியனு மாகிய மாயவனுக்குத்

தொண்பூணுங்கள்; அங்ஙனம் அடிமைபூண்டவளவிலே கருமயனைத்துந் தொலைதலால், பிரமன் கையைக்குவித்து உங்கள் தலையில் மறுபடி பிறக்க விதித்துஎழுதான்; ஆகவே, உங்கட்கு முத்தி கைகூடும் எனக் காண்க.

நால்வகைநகையுள் இங்குக்குறித்த நகை, இகழ்ச்சிபற்றியது. முண்டகம்-உடலினின்று கிள்ளியெடுக்கப்பட்ட தலை.முண்டம்-உடற்குறையென்றபடி. இனி, நகமுண்டகம் தரித்தான் என்பதற்கு-தாருகவனமுனிவர் ஏவிய நகுவெண்டலையைச் சிரத்திலணிந்த சிவபிரா னென்றும் பொருள்கொள்ளலாம்; முண்ட கம் - தலைமாத்திரமாகிய உடற்குறை, நக-(தன்னையழித்தற் பொருட்டுச்) சிரித்துக்கொண்டு வர,தரித்தாற்கு-(அதனைக் கைப்பற்றிச்சிரத்தின்மீது) அணிந்து அடக்கினவனுக்கு என்று பதவுரை காண்க: "சீற்றமாமுனிவர் வேள்வித்தீயில் வெண்டலைதானென்று, தோற்றியே யுலகம்யாவுந் தொலைய நக்கெழுந்ததன்றே," "நக்கெழுசிரத்தை யன்னோர் நாதன்மேல் விடுத்தலோடும், அக்கணமணுக வற்று லகிலமதிறவாவண்ணம், முக்கணனருள்செய்தந்தமுண்ட முண்டகக்கைபற்றிச், செக்கரஞ்சடைமேற்கொண்டுன் செயலினைப் புரிதி யென்றான்" என்பன, இங்கு நோக்கத்தக்கன. இனி, நக - விளங்க, முண்டகம் - சிரமாலையை, தரித்தாற்கு - தரித்த உருத்திரமூர்த்திக்கு என்று உரைப்பாருமுளர்.

நகம் - மலை யென்ற பொருளில், புடைபெயராத தென்று காரணப் பொருள்படும் வடசொல். வானகம்என்றதன் னகரத்தை நகரமாகத் திரித்துக்கொண்டது, யமகத்தின்பொருட்டு. அஹம், பரன், நகம் - வடசொற்கள். அயனகமுண்டகமலர் என்று சந்திசேர்க்காமல் அயன் நகமுண்டகமலர் என்று சந்திபிரித்தபடியே கொண்டதும், யமகத்தின்பொருட்டே. "சிலவிகாரமா முயர்திணை" என்றபடி அயன் என்ற நிலைமொழியின் ஈற்றுனகரத்தை யொழித்து 'அயநகமுண்டகமலர்' என்ற பாடங்கொள்ளினும் இழுக்காது. நகம்முண்டகமலர் - நகத்தையுடைய தாமரைமலர்: எனவே, கையென்றதாயிற்று; இது, யானையை 'கைம்மலை' என்றல் போலும். குளம் - நெற்றி: இங்குத் தலையென்ற பொருளில் வந்தது; இலக்கணை: சிறப்புப்பெயர் பொதுப்பொருளின்மேலது. கருமகதியைத் தலைவிதியென்றும், தலையெழுத்தென்றுங் கூறுதல், மரபு. சிறுபான்மை'லலாடலிபி' என்றவழக்கும் இருத்தல்பற்றி, குளம் - நெற்றி யென்றே கொள்ளினுமாம். பிரமன் உங்களை மீண்டும்பிறப்பெடுக்கச்செய்யான் என்ற பொருளை வேறு வகையாகக் கூறிவிளக்கியது, பிறிதினவிற்சியணி. எழுதும்பொழுது எழுதுகருவிபிடித்தற்குக் கைகுவிதலாகிய இயல்பு, இங்குக் கருதற்பாலது. (அஅ)

அகூ. குளப்படிநெய்யடிசிற்கொத்ததோகொள்ளப்பற்றியதோ
குளப்படியிற்றிங்கள்சேரரங்காகோலமாயவன்றுன்
குளப்படிகாட்டும்பிறைமறுப்போலொருகோட்டிருந்து
குளப்படியின்னகத்துட்பரல்போன்றகுவலயமே.

(இ - ள்.) குளம் படியில் திங்கள் சேர் அரங்கா - குளத்தின் [சந்திர புஷ்கரிணியின்] படியிலே சந்திரன் (தன்குறைதீர்த்தற்பொருட்டுத் தவஞ் செய்யுமாறு)சேர்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனே!—கோலம் ஆய அன்று - (நீ) மகாவராகரூபமாகிய அந்நாளில், உன் குளம் படி காட்

டும் பிறை மறு போல்-உனது நெற்றியினுருவத்தைக் காட்டுகின்ற பிறைச் சந்திரனிடத்து விளங்குங் களங்கம்போல, ஒரு கோடு இருந்து - (உனது) ஒரு மருப்பிலே தங்கி, குளம்பு அடியின் அகத்துள் பரல் போன்ற - கால் குளம்பின்கீழ்ப் பருக்கைக்கல்லை நிகர்த்து அடங்கிய, குவலயம் - பூமண்டலமானது, (பிரளயகாலத்தில் நீ உண்டபொழுது), குளம் படி நெய் அடிசிற்கு ஒத்ததோ - வெல்லமும் படியளவுகொண்ட நெய்யுங் கலந்த உணவுக்கு ஒப்பாயிருந்ததோ! கொள்ள பற்றியதோ - அமுதுசெய்தற்குப் போதுமானதாயிருந்ததோ! (எ - று.)

உனது பெருவடிவுக்குமுன் மிகச்சிறியதாகிற மண்ணுலகம், நீ உண்ணுங்காலத்தில் உனக்கு ஒருகவளத்துக்கேனும் போதுமோ! அன்றி, மண்ணையுண்டது அதன் இனிமைபற்றியோ! என வியந்துகூறியவாறு. "அண்டமெலாம்உண்டையென்ப ரறியாதா ராங்கவை நீ, உண்டருளுங் காலத்தி லொருதுற்றுக் காற்றாவால்" என்பதுங் காண்க. ஒவ்வாது பற்றா தென்பதே துணிவு; நீ உண்டது நினதுதிருவிளையாட்டே: உயிர்களைக் காப்பது கருதியே அங்ஙனஞ்செய்தாய் என்பது, குறிப்பு. "நாண்மன்னுவெண்டிங்கள்கொல் நயந்தார்க்குநச்சிலைகொல், சேண்மன்னுநாற்றடந்தோட்பெருமான்றன் திருநுதலே", "இருநாற்பகலினிலங்குமதி யலங்கலிருளினொழினிழற்கீழ்ப், பெருநாணிற்பி னவனெற்றிப்பெற்றித்தாகப்பெறு மன்றே" என்றபடி எம்பெருமானது திருநெற்றி பிறைச்சந்திரன்போலுதலால், 'உன் குளப்படிகாட்டும்' என்ற அடைமொழி பிறைக்குக் கொடுக்கப்பட்டது.

பிறைமறுப்போற் குவலயம் உன்ஒருகோட்டிருந்து—வளைந்த வெண்ணிறமான கோரதந்தத்துக்குப் பிறையும், அவ்வளை மருப்பிற் குத்தியெடுத்த பூமிக்குப் பிறையிலுள்ள களங்கமும் உவமையாம்; "நிறக்குஞ் செழுஞ்சுடர்க்கோடு மிப்பாரு நிசாமுகத்துச்,சிறக்கும்பிறையுங் களங்கமும் போலுமெனிற் சிறுகண், மறக்குஞ்சரஞ்செற்றமாயோ னரங்கன் வராகமதாய்ப், பிறக்கும் பிறப்பின் பெருமை யெவ்வா றினிப்பேசுவதே" என்பர் திருவரங்கத்துமாலையிலும்: "பன்றியாய்ப் படியெடுத்த பாழியா யென்ப ரது, வென்றியா ருனதெயிற்றின் மென்றுகள்போன் றிருந்ததால்" என்பதுங் காண்க. குளப்படியின்னகத்துட் பரல்போன்ற குவலயம்—"தீதறுதிங்கள் பொங்குசுடரும்ப ரும்ப ருலகேழினோடு முடனே,மாதிர மண்சுமந்து வடகுன்று நின்றமலை யாறு மேழுகடலும், பாதமர்சூழ்குளம்பினகமண்டலத்தி னொருபாலொடுங்க வளர்சே, ராதிமுனேனமாகி யரணாயமூர்த்தியது நம்மையாளு மரசே" எனப் பெரியார்பணித்தது பார்க்கத்தக்கது. குளப்படி நெய்யடிசில் - சர்க்கரைப்பொங்கல்.

பின்னிரண்டடி - உவமையணி. கோலம் - பன்றி. குளம்பு + அடி = குளப்படி; மென்றொடர் வன்றொடராயிற்று. அடியின்னகத்து, னகரமெய் விரித்தல். நெற்றிக்குப் பிறையுவமை - வளைந்தவடிவிலும், ஒளியிலும்.(அகூ)

கூ0. குவலையஞ்சூழ்கடல்காயாமரகதங்கொண்டனெய்தல்
குவலையங்கண்டன்பர்நைவரென்றூற்கொற்றவாணற்குவா
குவலையநேமிதொட்டாயரங்காகொடும்பல்பிறப்பா
குவலையங்கற்றுனைக்காணிலென்னுங்கொல்குறிப்பவர்க்கே.

(இ - ள்.) கொற்றம் வாணற்கு - வெற்றியையுடைய பாணாசுரனுக்கு, வாகு அலைய - தோள்கள் (துணிப்புண்டு) துடிக்கும்படி, நேமி தொட்டாய் - சக்கராயுதத்தைப் பிரயோகித்தவனே !. அரங்கா—!—அன்பர் - (நினது) அடியார்கள், குவலயம் சூழ் கடல் - பூமண்டலத்தை வளைந்திருக்கிற சமுத்திரத்தையும், காயா - காயாம்பூவையும், மரகதம் - மரகதரத்தினத்தையும், கொண்டல் - நீர்கொண்ட மேகத்தையும், நெய்தல் - கருநெய்தல்மலரையும், குவலயம் - கருங்குவளைமலரையும், கண்டு - பார்த்து, நைவர் - (அவை நினதுவடிவத்தை நினைப்பூட்டுதலால்) மனமுருகுவார்கள், என்றால்—,—கொடும் பல் பிறப்பு ஆகு வலை அற்று அங்கு உனை காணில் - கொடிய பலவகைப்பட்ட பிறப்புக்களாகிய வலைகளின் தொடர்பு ஒழிந்து அப்பரமபதத்திலே நினது திருமேனியைப் பிரதியக்ஷமாகத் தரிசித்தால், அவர்க்கு குறிப்பு என் ஆம் கொல் - அவர்கள் கருத்து மற்றும் யாதாகுமோ ! (எ-று.)

பலவகைக்கலக்கத்துக்குஇடமான இவ்வுலகத்துப் பிறவியி லிருக்கையிலேயே நினது உருவத்துக்குப் போலியாமவற்றைக் கண்டவளவிலே மனமுருகும் மெய்யடியார் பிறப்புநீங்கிப் பரமபதத்தில் உன்னையே நேரிற்கண்டால் எவ்வளவு ஆனந்த மடையார் என்றபடி; தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. கடல்முதலியன எம்பெருமானது திருமேனிநிறத்திற்கு உவமையாகுதலை, "கடலோ மழையோ முழுநீலக்கல்லோ காயாநறும்போதோ, படர்பூங்குவளைநாண்மலரோ நீலோற்பலமோ பானலோ, இடர்சேர்மட்வாருயிருண்பதியாதோ வென்று தளர்வாள்", "பூவையுங் காயாவு நீலமும் பூக்கின்ற, காவிமல ரென்றுங் காண்டோறும் - பாவியேன், மெல்லாவி மெய்ம் மிகவே பூரிக்கு மவ்வவை, யெல்லாம் பிரானுருவே யென்று" என்பவற்றாலும் அறிக. கருநெய்தலும் கருங்குவளையும் - சாதிபேதம். நெய்தல் குவலயம் என்பதற்கு - நெய்தல்நிலத்துத் தோன்றும் நீலோற்பல மென்று உரைப்பாரு முளர். தொட்டாய் என்ற சொல்லின் ஆற்றலினால், நீ படைக்கலத்தைத் தொட்டமாத்திரமே துஷ்டநிக்கிரகத்துக்குப் போதும்என்ற குறிப்பு விளங்கும் ; "அன்றியவாணனாயிரந்தோளுந் துணியவன்றாழிதொட்டான்" என்றார் பெரியாரும்: " வாணனாயிரம்புயங்கள் குருதிநீர்சிந்தியோட நேமிதொட்ட திருவரங்கராசரே" என்பதுங் காண்க.

குவலயம், மரகதம், பாணன், பாஹு, நேமி - வடசொற்கள். வாகு வலைய—வாகு என்பது வடமொழித் திரிபாதலால், அதன் குற்றியலுகரம் உயிர்வரக் கெடவில்லை. முதலிரண்டடிகளில் குவலயம் என்றது, இடைப்போலி. பிறப்பு உயிரைப் பந்தப்படுத்துவதால், வலை யெனப்பட்டது. காயா என்ற செடியின்பெயரும், நெய்தல் குவலயம் என்ற நீர்ப்பூங்கொடிகளின் பெயரும் - அதனதன் மலர்க்கு முதலாகுபெயராம். மரகதம் - பச்சையிரத்தினம். அங்கு - சேய்மைச்சுட்டு. (கூ0)

கூக குறியானைச்செங்கணெடியானைவானவர்கோவைச்சங்கக்
குறியானைவித்ததிருவரங்கேசனைக்கூவிநின்று
குறியானைகாத்தவனைப்பாடினேன்கொடிகூப்பிடினுங் [றே.
குறியானையப்பவர்போற்கொடியேன்சொலுங்கொள்வனென்

(இ - ள்.) குறியானை - குறுகிய வடிவமுடைய வாமனாவதாரஞ் செய்தவனும், செம் கண் நெடியானை - சிவந்ததிருக்கண்களையுடைய திரிவிக்கிரமனாய் நீண்டுவளர்ந்தவனும், வானவர் கோவை சங்கம் குறியால் நைவித்த திருவரங்கேசனை - தேவராஜனான இந்திரனை (த் தனது பாஞ்சஜந்யமென்னுஞ்) சங்கத்தின் முழக்கத்தால் (பாரிஜாதாபஹரணகாலத்திலே) மூர்ச்சித்துவிழச்செய்த ஸ்ரீரங்கநாதனும், கூவி நின்று குறி யானை காத்தவனை - ('ஆதிமூலமே!' என்று தன்னைக்) கூவியழைத்துத் தியானித்த கஜேந்திராழ்வானைப் பாதுகாத்தவனு மாகிய திருமாலைக்குறித்து,—கொடி கூப்பிடினும் குறி ஆ நயப்பவர் போல் கொடியேன் சொலும் கொள்வன் என்று-காக்கை (இயல்பாகக்) கத்தினாலும் (அதனை ஒரு) நல்லநிமித்தமாக விரும்பி உலகத்தார் கொள்வதுபோலக் கொடியவனான யான் வாய்க்குவந்தபடி சொல்லுஞ் சொல்லையும் நன்மையாக (அப்பெருமான்) ஏற்றுக்கொள்வ னென்று நினைத்து, பாடினேன் - வாய்விட்டுக் கவிபாடினேன் ; (எ - று.)

அற்பஜந்துவாகிய காக்கை தன்னடைவிலே செய்யுஞ் சத்தத்தையும் விருந்துவருதல் முதலியவற்றைக் குறிக்கும் நற்குறியாக நிமித்தமுணர்ந்த பெரியோர் கொள்ளுதல்போல, எளியவனான யான் வாயில்வந்தபடி சொல்லுஞ் சொல்லையும் எம்பெருமான் குற்றமாகக்கொள்ளாது குணமாகக்கொள்வ னென்றெண்ணியே, யான், அப்பரமனது பெருமையையும் எனது சிறுமையையுங் கருதாது அவனைக்குறித்து வாய்விட்டுக் கவிபாடலானே னென்றன ரென்க. "நாக்கு நின்னையல்லாலறியாது நானதஞ்சுவ னென்வசமன்று, மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலு மென்னாவினுக்காற்றேன், காக்கைவாயிலுங் கட்டுரைகொள்வர் காரணா கருள்க்கொடியானே " என்ற பெரியாழ்வார் பாசுரத்தையும், அதன் வியாக்கியானத்தில் 'அறிவுடையார் குற்றமாகாதவளவன்றிக்கே குணமாகவுங் கொள்வர்கள்; அது ஓரிடத்தேயிருந்து தனக்குவேண்டினதுபிதற்றிப்போகவும் அத்தை அறிவுடையார் 'நமக்கு நன்மைசொல்லுகிறது'என்று கொள்ளுவர்களிறே' என்றதையும் காண்க. இது, " திருமாலவன்கவி யாதுகற்றேன், பல்லியின் சொல்லுஞ் சொல்லாக் கொள்வதோ வுண்டு பண்டுபண்டே" என்றதனோடு ஒப்பு நோக்கத்தக்கது.

'குறியானைச் செங்கணெடியானை' என்றவிடத்து, முரண்தொடை காண்க. செம் கண் - செந்தாமரைக்கண் ணென்ற குறிப்பு. குறி - ஒலி. நைவித்தல் - வருந்தச்செய்தல். குறி யானை - வினைத்தொகை; குறித்தல் - கருதுதல். ஆ - விகாரம். 'நயப்பவர்'என்பது, யமகத்துக்கு ஏற்பப் போலிவிகாரங்களேற்றி 'னயப்பவர்' என்று கொள்ளப்பட்டது. உம்மை இரண்டும் - இழிவுசிறப்பு. (கூக)

கூஉ. வனத்திற்சிலம்பிவிடுநூலுட்பட்டுமசகமெய்த்த
வனத்திற்சிலம்பினபோற்பிணிவாய்ப்பட்டென்வாய்புலம்பின்
வனத்திற்சிலம்பின்குரலன்னம்வாழுமரங்கனிப்பு
வனத்திற்சிலம்பினின்றான்கேட்குமோவும்பர்வாழ்த்தைவிட்டே.

(இ - ள்.) மசகம் - கொசுகானது, வனத்தில் சிலம்பி விடு நூலுள் பட்டு - காட்டிலே சிலந்திப்பூச்சி வாய்விட்டுஇழைத்த நூலினிடையே சிக்கிக்கொ

ஒருசிறிதும் ஸ்வரூபயோக்யதையில்லாத அந்த இடையர்கள் அதனைக் கண்ட தோடு நில்லாமல் சாஸ்திரத்திற்கும் மாறாக அங்குநின்றும் மீண்டுவந்தன ரென்றால், இவ்வாறெல்லாம் செய்வித்த உனது நிலைமையைப்பற்றி எவ்வாற் றானும் பேசமுடியா தென்பதாம். சாஸ்திரங்களெல்லாம் எம்பெருமானது ஆஜ்ஞாரூபமே யாதலால், ஸ்வதந்த்ரனான அப்பெருமானே ஒன்றைச்செய் கையில் அதுவே சாஸ்திரத்தோடு மாறுபட்டதாகா தென்க. 'பூவின்மங்கை யானுதசெல்வம்' என்பதனைத் திருவரங்கத்துக்கு அடைமொழியாகக் கொள்ளலு மொன்று. கொச்சை - திருந்தாத மழலைச்சொற்களாகவுமாம். 'கொச்சையாயர்' என்றது, இடங்கை வலங்கை யறியாத அவர்களது தகுதி யின்மையைச் சுட்டுதற்கு. பரமபதம் - மிகவும் மேலான ஸ்தாநம், மோ க்ஷம்; 'மீளாவுலகம்' எனப்படுவது. மற்று-வினைமாற்று. எங்ஙன் - எங்ஙன மென்பதன் விகாரம். (ருகூ)

ருஎ. கூனந்துலாவயற்கோயிலுள்ளேபள்ளிகொள்ளுமெங்க
ளானந்தவாரிதிருக்குழலூத வறத்தடிந்த
கானந்தழைத்தன கால்வரைநெக்கன கார்முகிறோய்
வானமயர்த்தன வையமெல்லாமெய்ம்மறந்தனவே.

(இ-ள்.) கூன் நந்து உலா வயல்-வளைவாகிய சங்கங்கள் உலாவுகிற கழ னிகளையுடைய, கோயிலுள்ளே - திருவரங்கம் பெரிய கோயிலில், பள்ளி கொள்ளும்-(ஆதிசேஷசயனத்தின்மீது)பள்ளிகொண்டுயோகநித்திரைசெய் தருளுகின்ற,எங்கள் ஆனந்தம் வாரி-எங்களதுபேரின்பக்கடலாகிய கண்ண பிரான், திரு குழல் ஊத - அழகிய வேய்ங்குழலை ஊதும்பொழுது,—அற தடிந்த கானம் - முற்றவும் [வேரோடு] உலர்ந்த காடுகள், தழைத்தன—; கால் வரை - சாரல்களையுடைய மலைகள், நெக்கன - உருகின; கார் முகில் தோய் - கரிய மேகங்க ளுலாவுகின்ற, வானம் - வானுலகம், அயர்த்தன - சோர்ந்தன; வையம் எல்லாம் - நிலவுலகமுழுதும், மெய் மறந்தன - பரவச மாயின; (எ - று.)

ஸ்ரீ கிருஷ்ணபகவான் வேணுகாநஞ்செய்கையில் சேதநாசேதநங்கள் யாவும் அந்த வேய்ங்குழலின் இன்னிசையி லீடுபட்டன வென்பதாம். சங் கீதசாஸ்திரலக்ஷணத்துக்கு நன்குபொருத்தமான மிக இனிய இசைப்பாட் டைக் கேட்டமாத்திரத்தில் பட்டுப்போன மரங்களும் தளிர்த்துப் பூத் துக் காய்த்துப் பழுத்தலும், கருங்கல்லும் நெகிழ்ந்து கரைந்து உருகுதலும் இயல்பு; "கலைத்தொழில்படவெழீஇப் பாடினாள் கனிர், நிலைப்பொழில் குரங்கின வீன்ற தாண்டளிர்," "உருகின மரமுங் கல்லு மோர்த்தெழீஇப் பாடுகின்றான்" என்றார் சிந்தாமணியார்: "ஆயர், தறித்த மரமத்தனையுந் தழைத்தலர்ந்து பழுத்துதவ,......கருங்கற்றான் வெண்ணெயெனக் கரைந் தோட......தொனித்தகுழ லிசைத்தோய் கேள்" என்பது அழகர்கலம்பகம். "படுமரன்களு நறிய பசிய தண்டளிர் தழைய, வடைவுறுங் கழையி னிசை யமுதமுஞ் செவிநிறைய," "நின்றுயர்வரையுமுருக" என்பர் பாகவதத்தும்.

இச்செய்யுள் - கிருஷ்ணபகவானது வேய்ங்குழலின் இன்னிசையைப் பற்றி உள்ளபடி இனிதாக வருணித்தலால், தன்மைநவிற்சியணியாம். ஆநந்த

மயாதிகாரத்தில் பரப்பிரமத்தை ஆநந்தமயமென்றுகூறியிருத்தலால், அந்தப் பரப்பிரமத்தின் சொரூபமான திருவரங்கனை 'ஆநந்தவாரி' என்றார். வாரி-நீர்; இங்குக் கடலுக்கு இலக்கணை. அறத்தடிந்த கானம் என்பதற்கு - நன்றாக வெட்டப்பட்டுப் பட்டுப்போன காடு என்றும் பொருள்கூறுவர். கால்-மலையைச்சுற்றிலு மிருக்கின்ற குன்றுகள்: அவற்றிற்கு வடமொழியிற் பாதமென்று பெயர். கால்வரை=பாதசைலம். வானம் - அங்குள்ள உலகத்துக்கு ஆகுபெயர். (௫௭)

௫௮. ஊருந்திரைப்பொன்னிநன்னீரரங்க வுருப்பலவாய்க்
காருந்தடித்துங்கலந்ததுபோலிடைக்கன்னியர்கள்
யாருங்களிக்கவிடையிடையேகலந்தின்பநலங்
கூருந்திருநடமாடியமாயமென்கூறுகவே.

(இ-ள்.) ஊரும் - மேன்மேல்வருகின்ற, திரை-அலைகளையுடைய, பொன்னி - காவேரியினது, நல் நீர்-நல்லநீரால் சூழப்பட்ட, அரங்க-திருவரங்கத்துநாதனே!—(நீ கிருஷ்ணாவதாரத்தில்), இடை கன்னியர்கள் யாரும் களிக்க - இளமையான இடைப்பெண்கள்யாவரும் மகிழும்படி, பல உரு ஆய் - பலதிருவுருவங்கொண்டு, இடை இடையே -(அவர்களது) நடுநடுவே, காரும் தடித்தும் கலந்தது போல்-மேகமும் மின்னலும் ஒருசேரக் கலந்து தோன்றியதுபோல, கலந்து—, இன்பம் நலம் கூரும் - சிறந்தஇன்பமிகுகின்ற, திருநடம்-திருநடநத்தை, ஆடிய—, மாயம்-மாயையை, என் கூறுக-என்னவென்று சொல்லுக! (எ - று.)

கார் - கண்ணனுக்கும், தடித்து-இடைக்கன்னியருக்கும் உவமை. திருநடமாடியமாய மென்றது-கோபஸ்திரீகள்யாவரும் வட்டமாய்நின்றுசெய்த ராஸக்கிரீடையில் அவர்யாவருந் தன்பக்கத்திலேயே நிற்க மனமுள்ளவராய்த் தன்பக்கத்தை விடாதிருந்ததனால்,கண்ணன் யாவர்க்கும்பக்கத்திலிருந்தவன்போலக் காணப்பட்டதனை. அப்பொழுது ஒவ்வொருத்தியது இவ்விரு கைகளிலுந் தன்கைபொருந்தும்படி அவ்வவரது இருபக்கங்களிலும் நின்று நின்று சுற்றி வந்ததனால், 'இடையிடையே கலந்து' என்றார். இவ்வாறு ஸ்ரீகிருஷ்ணபகவான் ஆடிய கூத்து, தமிழ்மொழியில் 'குரவைக்கூத்து' எனப் பெயர்பெறும்; "குரவைக்கூத்தே கைகோத்தாடல்" என்பது, திவாகரம்; இதனை, வடமொழியில் 'ராஸம்' என்பர். பல நாட்டியப்பெண்கள் வட்டமாக நின்று சித்திரமான தாளலயங்களுடன் மெதுவாகவும் உன்னதமாகவும் கூத்தாடுதல், இதன் இலக்கணம்; 'குரவையென்பது - காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்து ஆடுவது', "குரவையென்பது கூறுங்காலைச், செய்தோர் செய்த காமமும் விறலும், எய்தக் கூறு மியல்பிற்றென்ப" என்பவற்றை இங்கே அறிக. (௫௮)

௫௯. மின்போலிடையிடைமாதரெல்லாமுன்றன்மெய்தழுவி
நன்போகசாகரத்துள்ளேமுழுகவு நாண்மலரா
டன்போகமேமகிழ்தாரரங்கா வண்டர்தாமவரை
யன்போடணைத்துத்துயின்றதெம்மாயமறிந்திலமே.

(இ-ள்.) நாள்மலராள்தன் - எந்நாளும்மலர்ந்ததாமரைமலரிலெழுந்தருளியிருக்கிற திருமகளது, போகமே - இன்பத்தையே, மகிழ் - மகிழ்கின்ற, தார் - திருமாலையையுடைய, அரங்கா—! — மின் போல் இடை - மின்னல்போன்ற இடையினையுடைய, இடை மாதர் எல்லாம் - கோபகன்னிகைகள் யாவரும், உன்தன்மெய்தழுவி - உன்னுடைய திருமேனியை ஆலிங்கனஞ்செய்துகொண்டு, நல் போகம் சாகரத்துள்ளே - சிறந்தஇன்பமாகியகடலிலே, முழுகவும் - அழுந்திக்கிடக்கவும்,—அண்டர் - (அவர்களது கொழுநரான) இடையர்கள், அவரை அன்போடு அணைத்து - (அம்மங்கையரிடத்துச் சிறிதும் குற்றம்பாராட்டாமல்) அவர்களை விருப்பத்தோடு ஆலிங்கனஞ் செய்துகொண்டு, துயின்றது - தூங்கியது, என் மாயம் - என்ன மாயை? அறிந்திலம் - (அதனை யாம்) தெரிந்தோமில்லை; (எ - று.)

திருமால் ஸ்ரீராமாவதாரஞ் செய்கையில் அவனது திருமேனியைத் தழுவுதற்குவிரும்பிய தண்டகாரணியமுனிவர் முதலிய யாவர்க்கும் ஏகபத்நீவ்ரதங்கொண்டுள்ள தான் வேறொரு திருவவதாரத்தில் தனது ஆலிங்கனத்தைத் தருவதாக வாக்களித்திருந்தனனாதலால், அதற்கேற்பக் கோபகன்னிகைகளாய்ப் பிறந்த அவர்கட்கெல்லாம் ஸ்ரீகிருஷ்ணனாகத் திருவவதரித்த தான் தனது வாக்கின்படியே செய்தனனல்லது போகத்தில் இச்சையினால் அவர்களைத்தழுவினனல்லனென்பது, இங்குக் கருதத்தக்கது. தருமத்தை ஸ்தாபிக்க அவதரித்த எம்பெருமான் தருமவிரோதமாக இவ்வினைஞ்செய்வது ஒக்குமோ? அக்கன்னிகைகளுக்கும் இதனால் பாதகமுண்டாகாதோ? எனின்,—அப்பெருமான் தன்னைச்சேர்ந்தவர்களுடைய சகலபாபங்களையும் போக்கடிக்கும்படியான பரிசுத்தியுடையவனாதலாலும், வேதாந்தநிர்ணயத்தின்படி அன்புசெலுத்தவேண்டுமிடத்திலேயே அக்கன்னியர் அன்பு செலுத்தினார்களாகையாலும், அவர்கட்குச் சகலபாபநிவிருத்தியேயல்லது பாவமுண்டாவதில்லை. எம்பெருமானுக்கோ, ஜீவாத்மாவுக்கு உண்டாவது போலே பாபபந்தம் உண்டாகாது; ஏனெனில்:— ப்ருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்கிற பஞ்சபூதங்கள் எப்படி எல்லாப்பிராணிகளிலும் வியாபித்திருக்குமோ, அப்படியே, ஸ்வாமி அந்தப்பெண்களினிடத்தும் அவர்களது கணவர்களிடத்தும் மற்றுமுள்ள ஆத்மகோடிகளிலும் வியாபித்திருக்கும் பரமாத்மாவாகையாலே, அவனுக்குப் புதிதாக ஒருசம்பந்தம் வந்ததில்லை யென்க. மேலும், ஸ்ரீகிருஷ்ணபகவான் தன்னைப்பாவஞ்சாராத ஏழு பிராயத்திற்குள் உபநயநமாதற்கு முந்தித் திருவாய்ப்பாடியி லிருந்தபொழுது இவ்வனம் கோபகன்னிகைகளுடன் கலந்திருந்தானே யன்றி உபநயநமானபின்பு அக்கன்னிகைகளைக் கண்ணெடுத்துப்பார்த்தலுஞ் செய்திலனென்பதும் இங்கு உணரத்தக்கது. இன்னும் பலவகையாகவும் ஏற்றசமாதானம் ஆன்றோரால் கூறப்பட்டு வழங்கும். (௫௯)

௬0. நீரிற்புகுங் கண்டுதேரினைப்பார்க்க நிறுத்தியபொற்
றேரிற்றொழும் பின்னை நீரினிறகாணுஞ் சிறந்தபச்சைக்
காரிற்றிறமெய்யரங்கனுஞ்சேடனுங்கஞ்சவஞ்ச
னூரிற்செலவுடன்போமக்குரூரன்றனுண் மகிழ்ந்தே.

(இ-ள்.) சிறந்த—, பச்சை காரின்-நீலமேகம் போன்ற, திறம் - தன்மை யையுடைய, மெய் - திருமேனியையுடைய, அரங்கனும் - கண்ணபிரானும், சேடனும் - ஆதிசேஷனது அவதாரமாகிய பலராமபிரானும், வஞ்சன் கஞ்சன் - வஞ்சகனாகிய கம்ஸனுடைய, ஊரின் - ஊராகிய வடமதுரைநகரத்துக்கு, செல - எழுந்தருளினபொழுது;—உடன் போம் - கூட (அவர்களை அழைத்துக்கொண்டு) போகின்ற, அக்குரூரன் - அக்குரூரரென்னும் யாதவபாகவதர்,— நீரில் - (வழியிலுள்ள யமுநாநதியின்) தீர்த்தத்துக்குள்ளே, புகும் - (மாத்தியாந்நிகஆராதனத்திற்காகப்) போய் நீராடுவர்; கண்டு - (அங்குப் பலராமனையுங் கண்ணனையும்) பார்த்து, தேரினை பார்க்கும் - (அங்கிருந்து உடனே ஓடிக் கரைக்குவந்து) திருத்தேரைப்பார்ப்பர்; நிறுத்திய பொன் தேரில் (கண்டு)- (கரையிலே) நிறுத்தப்பட்ட பொன்மயமான அந்தத் தேரிலே (அவர்கள்) எழுந்தருளியிருக்கக் கண்டு, தன் உள் மகிழ்ந்து தொழும் - தாம் மனமகிழ்ந்து (அவர்களை) வணங்குவர்; பின்னை - மறுபடியும் (நீரிலேபோய் முழுகிநிற்க), நீரினில் காணும் - (அவர்களை) அச்சலத்தினுள்ளே பார்ப்பர்.

கிருஷ்ணபலராமர்களை எப்படியாவது கொல்லவேண்டுமென்று பல அசுரர்களை யேவிப் பார்த்தும் தான்கருதியசெயல் நிறைவேறாததனால், கம்சன் முடிவில் வில்விழாவென்று ஒருவியாஜம் வைத்து அதற்கு ஸ்ரீராம கிருஷ்ணர்களை அன்போடு அழைக்கிற பாவனையாக அக்குரூரரைத் திருவாய்ப்பாடிக்குத் தூதனுப்ப, அவ்வக்குரூரரால் அழைக்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ணனும் பலராமனுடனே பிரயாணப்பட்டுப் போகையில் அக்ரூரர் மத்தியான்னக் கடனைமுடிப்பதற்சாக வழியிலெதிர்ப்பட்ட காளியமடுவின் கரையில் கிருஷ்ணபலராமர்களை யேற்றிவந்த தேரை நிறுத்திவிட்டு அம்மடுவில் இறங்கி ஸ்நாநஞ்செய்கையில் அந்நீரினுள்ளே ஸ்ரீராமகிருஷ்ணர்களைக் கண்டு 'தேரிலிருக்கின்றவர்கள் இங்கு எப்படி வந்தார்கள்?' என்று சங்கித்துக் கரையேறிச்சென்று தேரைப்பார்த்தனராக, அங்கும் அவர்களைக் கண்டு, இவ்வாறு மீண்டும் மீண்டும் நீரிலும் தேரிலுங் கண்டு முடிவில் எம்பெருமானது செயலை வியந்து வாயாரவாழ்த்தின ரென்பதாம். கஞ்சன் - கம்ஸன் என்பதன் சிதைவு. ஸ்ரீராமகிருஷ்ணர்களைக் கொல்வதற்காக அழைத்துவரும்படி அக்குரூரருக்குக் கட்டளையிட்டவனாதலால், வஞ்சனெனப்பட்டான். அக்ரூரன் - கொடுந்தன்மையில்லாதவன், யாதவபாகவதன். (சுo)

சுக. நாமமிகும்புகழ்யாதவர்வாழுநகரிலும்பர்
தாமருவுஞ்சவைதத்தமவாய தளையவிழுந்
தேமருவும்பொங்கரரங்கேசருக்கிரசேனனுக்கு
மாமுடிவைக்கும்படிபடிமேற்கொடுவாவெனவே.

(இ-ள்.) தளை அவிழும் - (அரும்புகள்) கட்டவிழப்பெற்ற, தேன் மருவு - தேன் பொருந்திய, பொங்கர் - சோலைகளையுடைய, அரங்கேசர் - திருவரங்கத்துநாதர்,—உக்கிரசேனனுக்கு - உக்கிரசேனமகாராஜனுக்கு, மா முடி வைக்கும்படி - பெரிய கிரீடத்தைச் சூட்டிப் பட்டாபிஷேகஞ் செய்தருளும்படியாக, படிமேல் கொடுவா - இப்பூமியின்மேற் கொண்டுவா, என - என்று (வாயுதேவனைநோக்கி) நியமித்தருள,—நாமம் மிகும் புகழ் - பேர்மிக்க கீர்த்தியை

யுடைய,யாதவர் - யதுவம்சத்தார், வாழும் - வாழ்கின்ற, நகரில் - வடமதுரா நகரத்தில், உம்பர்தாம் மருவும் - தேவர் வீற்றிருத்தற் கிடமாகிய, சபை - (சுதர்மையென்கிற) சபாமண்டபம், தத்தம ஆய - தங்கள்தங்களதாயிற்று [யாதவரெல்லார்க்கும் உரியதாயிற்று என்றபடி]; (எ - று.)

கண்ணன் கம்ஸவதஞ்செய்த பின்பு, மகனிழந்தவனும் தன் மாதாமகனுமாகிய உக்கிரசேனமகாராஜனைத் தளையினின்றும் விடுவித்து வடமதுரையிற் பட்டாபிஷேகஞ் செய்தவுடனே வாயுவை நினைக்க, அவனும் உடனே ஸ்வாமிஸந்நிதிக்கு வந்துநிற்க, அவனை நோக்கி 'ஓ வாயுவே! ஸுதர்மையென்கிறதேவசபையானது நம்முடைய உக்கிரசேன மகாராஜாவுக்கே ஏற்றது; அதில் யதுவம்சத்தார் வீற்றிருக்கத்தகுந்தவர்; ஆதலால், ஒப்பற்ற அந்தச் சபையை மகாராஜாவுக்கு அனுப்பிவிடு என்று இந்திரனுக்கு என்கட்டளையைத் தெரிவித்துச் சபையைக்கொண்டுவா' என்று நியமித்தவுடனே, அக்கட்டளையை வாயு சிரசில் வகித்துப்போய்ப் புரந்தரனுக்குத் தெரிவிக்க, அவனும் அச்சபையைச் சமீரணன்கையிற் கொடுத்துவிட, உடனே வாயு அதைக் கொண்டுவந்து சுவாமிசந்நிதியிற் சமர்ப்பிக்க, அதனைச் சுவாமி உக்கிரசேனனுக்குப் பிரசாதித்தருள, அச்சபையிலே யாதவர் யாவரும் வீற்றிருந்தார்களென்பதாம்.

யாதவர்-தத்திதாந்தநாமம். சவை - ஸபை. தத்தமவாய - தத்தமதாயது என்பதன் விகாரம். இனி, தளையவிழும் என்பதனை உக்கிரசேனனென்பதனோடு கூட்டி, தளையினின்றும் விடுவிக்கப்பட்ட என்றுமாம்; தளை - கால்விலங்கு. உக்கிரசேனன் - கொடியசேனைகளை யுடையவன். (கூக)

கூஉ. மறியாவெழுந்திரைமாநீர்மதுரையின்மன்னவரைக்
குறியாதவன்படைவந்தவந்நாட் செழுங்கோகனகப்
பொறியாடரவணைத்தென்னரங்கா வொருபூதருமங்
கறியாவகைத்துவராபதிக்கேயெங்ஙனுய்க்கினையே.

(இ - ள்.) செழு கோகனகம் பொறி-செழித்த செந்தாமரைமலரில் வீற்றிருக்கின்ற திருமகளையுடைய, ஆடு அரவு அணை - படமெடுத்தாடுகின்ற ஆதிசேஷனாகிய சயனத்திற் பள்ளிகொண்டருளுகின்ற, தென் அரங்கா—! மறியா எழும் - மடங்கி யெழுகின்ற, திரை-அலைகளையுடைய, மா நீர்-மிக்க நீர்வளத்தையுடைய, மதுரையில்-வடமதுரையில், மன்னவரை குறியாதவன் - வேற்றரசர்களை ஒருபொருளாக மதியாத காலயவனனது, படை-சேனை, வந்த அ நாள்-(யுத்தஞ்செய்ய) வந்தபொழுதில்,—ஒரு பூதரும் அறியாவகை-ஒருவரும் அறியாதபடி, (மதுரையிலிருந்த சகலபிரஜைகளையும்), துவராபதிக்கே - துவாரகா நகரத்திலே, எங்ஙன் ஆக்கினை - எப்படிக் கொண்டுபோய்ச் சேர்த்தாய்? (எ - று.)

காலயவனனென்னும்யவனதேசாதிபதி யாதவர்மேற்படையெடுத்தற்காக அநேகமிலேச்சரோடு மதுரைக்கு வந்த தருணத்தில், கண்ணன் காலயவனனும் ஜராசந்தனுஞ் சேர்ந்து யாதவசேனையை நாசஞ்செய்யக்கூடுமென்று நினைத்துச் சமுத்திரராஜனைப் பன்னிரண்டுயோசனைதூரம் இடம்

விடும்படி கேட்டு, அவன்விட்ட அவ்வளவு பூமியிலே துவாரகையை நிருமித்தருளி,மதுரையிலிருந்த தன்னுடைய பிரஜைகளை அந்நகரத்திற் கொண்டுபோய்ச் சேர்த்து, யதுவம்சமானது சத்துருபய மற்றதாயிருக்கும்படி செய்தனனென்று புராணம் கூறும். மது வென்பவன் கைக்கொண்டிருந்தது பற்றியும், கண்ணுக்கினிமையானது பற்றியும், மதுரையெனப் பெயர். ஒருவர் - ஒருவரென்னுமாத்திரையாய் நின்றது. அங்கு - அசை. துவராபதி-த்வாரவதி யென்றவடசொல்லின் திரிபு; விசாலமான வாயிலையுடையது என்று காரணப்பொருள் பெறும்; இது, முத்திதரும் நகர மேழனுள் ஒன்று. (கூஉ)

கூரு. நறைத்துளவம்புனைநம்பெருமாள்விறனுஞ்சொல்வதோ
மறைப்பரிபூட்டியமாநிலத்தேரில்லை வாளெயிற்றின்
கறைப்பணிநாணுடைமேருவில்லில்லை கடும்பவனச்
சிறைத்தழலம்பில்லை யொன்னாரறுபுரஞ்செற்றதற்கே.

(இ-ள்.) (கண்ணன்), ஒன்னார் - பகைவர்களுடைய, அறு புரம் - ஆறு பட்டணங்களை, செற்றதற்கு-அழித்ததற்கு,—(சிவபிரானது திரிபுரசங்காரத்துக்குப்போல), மறை பரி பூட்டிய - நான்குவேதங்களாகிய குதிரைகளைக் கட்டிய, மா நிலம் தேர் - பெரிய பூமியாகிய இரதம், இல்லை—; வாள் எயிற்றின்-வாள்போலும் பற்களையும், கறை - விஷத்தையுமுடைய, பணி - சர்ப்பமாகிய, நாண் உடை - நாணியையுடைய, மேரு வில் - மகாமேருபர்வதமாகியவில், இல்லை—; கடு பவனம் - கடிய காற்றுப்போன்ற வேகத்தையுடைய, சிறை-இறகுகளையுடைய, தழல்-நெருப்பைக்கக்குகின்ற, அம்பு—, இல்லை—; (ஆதலால்),—நறை துளவம் புனை - வாசனையையுடைய திருத்துழாய்மாலையைச் சூடிய, நம்பெருமாள் - நம்பெருமாளது, விறல் - வல்லமையானது, நாம் சொல்வது ஓ - நம்மாற் சொல்லப்படுந் தன்மையதோ? [அன்றென்றபடி]; (எ - று.)

இச்செய்யுளில் சிவபெருமான் முப்புரஞ்செற்றதற்கும் திருமால் அறுபுரஞ்செற்றதற்கு முள்ள வேறுபாட்டைத் தெரிவித்தது, வேற்றுமையணியாம்: இதனால், திருமால் அறுபுரஞ்செற்றது, சிவபெருமான் முப்புரஞ்செற்றதினும் பாராட்டத்தக்க தென்பது, கருத்து. நறை - தேனுமாம். பணி - பணத்தையுடையது; பணம் - படம். தழலம்பு - தழல்போன்ற அம்பென்றுமாம். பரமசிவனது திரிபுரசங்காரத்துக்குத் திருமால் கணையாக இருந்து துணையாயினாற்போல, கண்ணன் அறுபுரமழித்தற்குச் சிவனது துணை சிறிதுமில்லை யென்பார், 'கடும்பவனச்சிறைத்தழலம்பில்லை' என்றார். ஒன்னார் - ஒன்றார் என்பதன் மரூஉ; இணங்காதவர். (கூரு)

கூச. அருட்கொண்டலன்னவரங்கர்சங்கோசையிலண்டமெல்லாம்
வெருட்கொண்டிடர்படமோகித்துவீழ்ந்தனர் வேகமுடன்
றருக்கொண்டுபோகப்பொறாதேதொடருஞ்சதமகனுஞ்
செருக்கொண்டமுப்பத்துமுக்கோடிதேவருஞ்சேனையுமே.

(இ-ள்.) தரு கொண்டு போக - பாரிஜாதவிருக்ஷத்தைப் பெயர்த்து(த் துவாரகைக்குக்) கொண்டுபோக, பொறுதே - (அதனை) மனம்பொறுமல், வேகமுடன் தொடரும் - வேகத்தோடு பின்தொடர்ந்துவந்த, சதமகனும் - நூறுயாகங்களையுடைய இந்திரனும், செரு கொண்ட-யுத்தஞ்செய்துநின்ற, முப்பத்துமுக்கோடி தேவரும்—, சேனையும் - (அவர்களது) சேனைகளும்,—அருள் கொண்டல் அன்ன - கருணையாகிய மழையைப்பொழிகின்ற மேகத்தை யொத்த, அரங்கர்-திருவரங்கநாதரது, சங்கு ஓசையில் - சங்கத்தினது நாதத்தினுல், அண்டம் எல்லாம் - அகிலாண்டங்களும், வெருள் கொண்டு- அச்சங்கொண்டு, இடர் பட-துன்பமடையாநிற்க, மோகித்து வீழ்ந்தனர்—.

அண்டம்-ஆகுபெயர். செரு - செருக்கு என்பதன் விகாரமுமாம். முப்பத்துமுக்கோடி தேவர்-ஆதித்தர்பன்னிருவரும்,உருத்திரர்பதினொருவரும், வசுக்கள் எண்மரும், மருத்துவர் இருவரு மாகிய முப்பத்து மூவரையுந் தலைவராகவுடைய முப்பத்துமூன்று கூறுகிய தேவர்கள். "பலவயினனு மெண்ணுத்திணை விரவுப்பெய, ரஃறிணை முடிபின செய்யுளுள்ளே" என்றதனுல், 'சதமகனும் செருக்கொண்ட முப்பத்துமுக்கோடிதேவரும் சேனையும்' என உயர்திணையும் அஃறிணையுங் கலந்து எண்ணி 'வீழ்ந்தனர்' என்று உயர்திணையான் முடிந்தன. (கூச)

கூரு. நிணக்கோலநேமித்திருவரங்கேச நினக்கினிய
குணக்கோகனகையுங்கண்டனளோ மணிக்குன்றில்வைகுங்
கணக்கோதையர்பதினாறுயிரவரைக்கைப்பிடிக்க
மணக்கோலமும்பதினாறுயிரங்கொண்டுவாழ்ந்தவன்றே.

(இ - ள்.) நிணம் - (பகைவரது) கொழுப்புத் தோய்ந்த, கோலம் -அழகிய, நேமி - சக்கரத்தையுடைய, திருவரங்கேச—!—(நீ), மணி குன்றில் வைகும் - இரத்தின பருவதத்திலே தங்கியிருந்த, கணம் கோதையர் பதினாறு ஆயிரவரை - கூட்டமாகிய பதினாறுயிரங் கன்னிகைகளை,கை பிடிக்க- பாணிக்கிரகணஞ் செய்தருள, மணம் கோலமும் பதினாறுஆயிரம் கொண்டு- அத்தனையாயிரங் கலியாணத்திருமேனியையெடுத்து, வாழ்ந்த அன்று - மகிழ்ந்திருந்த அப்பொழுது,—நினக்கு இனிய - உனது திருவுள்ளத்துக்கு உகப்பாகிய, குணம் - நற்குணத்தையுடைய, கோகனகையும் - திருமகளும், கண்டனளோ - (உன்னைப்) பார்த்தாளோ ? (எ - று.)

தான்ஒருத்தி மனைவியாயிருக்க, நீ பதினாறுயிரவரை மணந்ததை இலக்குமி கண்டிருப்பளாகில், தான் ஆறியிருப்பளோ? என்பது, த்வநி. கண்ணபிரான் நரகாசுரவதஞ்செய்து,அவனுற் கொண்டுபோகப்பட்ட மந்தரகிரியினுடைய சிகரமான இரத்தினகிரியிற் பலதிசைகளிலிருந்துங் கொணர்ந்து சிறைவைக்கப்பட்ட பதினாறுயிரங் கன்னிகைகளையும் ஒவ்வொருவருக்குந் தனித்தனி ஒவ்வொருகணவனுயிருக்கும்படி அத்தனையாயிரந் திருமேனியெடுத்துப் பாணிக்கிரகணஞ்செய்து அவரவர் மாளிகைகளிலெழுந்தருளி அவர்களை மகிழ்வித்துக்கொண்டிருந்தன னென்பதாம்.

கோகனகை- செந்தாமரையாள்: கோகனகம் - கோகநதம் என்பதன் விகாரம்; அதற்கு - சக்கரவாகங்கள் இனிமையாகப் பேசப்படுவதென்பது

பொருள். பதினாறாயிரத்தொருநூற்றுவ ரென்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்திற் காணப்படுகின்றது. கணக்கோதையர் - தேவர், சித்தர், கந்தருவர் முதலிய தேவகணங்களுடைய கன்னிகைக ளென்றுமாம். 'நிணக்கோலநேமித்திரு வரங்கேச' என்றது-பகைவனைக்கொன்று பதினாறாயிரவரையுஞ்சிறையினின் றும் மீட்டற்கு ஏற்ற கருவி படைத்தவனே! என்ற குறிப்பு. (கூரு)

கூகூ. விடந்தோயரவிற்றுயிலரங்கேச விசும்புமுட்ட
நடந்தோகைதன்னுடனாரதன்காணநகைக்குமுத்து
வடந்தோய்வனமுலையெண்ணிரண்டாயிரமாதர்தங்க
ளிடந்தோறுநின்றெழில்வேறாயிருந்ததங்கெவ்வண்ணமே.

(இ - ள்.) விடம் தோய் - விஷம்பொருந்திய, அரவில் - ஆதிசேஷசயன த்தில், துயில் - யோகநித்திரை செய்தருளுகின்ற, அரங்கேச—!—(நீ),— அங்கு - ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில், நாரதன்—, விசும்பு முட்ட நடந்து - ஆகாயத்தை யளாவச் சென்று, ஓகைதன்னுடன் - மகிழ்ச்சியோடு, காண - பார்க்கும்படி,—நகைக்கும் - ஒளிவிடுகின்ற, முத்து வடம் - முக்தாஹாரங் கள், தோய் - நிறைந்த, வனம் முலை - அழகிய தனங்களையுடைய, எண் இரண்டு ஆயிரம் மாதர்தங்கள்-பதினாறாயிரம் மகளிரது, இடம்தோறும்—, வேறு எழில் ஆய் - வெவ்வேறு ரூபமாய், நின்று இருந்தது - நிலைபெற்றிருந் தது, எ வண்ணம் - எவ்வாறு? (எ - று.)

நாரதபகவான், ஸ்ரீகிருஷ்ணன் நரகாசுரனைச் சங்கரித்துக் கொண்டு வந்த பதினாறாயிரங் கன்னிகைகளையும் ஒரு முகூர்த்தத்தில் விவாகஞ்செய் ததைக் கேள்வியுற்று,கண்ணன் அவர்கள் யாவருடனுஞ் செய்யுஞ் செய்கை களை யெல்லாங் கண்டு சேவிக்கவேண்டுமென்று அவரவர்களுடைய கிருகங் களிலெல்லாஞ் சென்று, அவ்வக்கிருகங்கள்தோறும் எம்பெருமான் ஒவ் வொரு திவ்வியஸ்வரூபத்தை வகித்துத் திருவிளையாடல் செய்தருளுவதைக் கண்டு அதியாச்சரிய மடைந்து துதித்து மகிழ்ந்தன ரென்பதாம்.

தேவர்கள் தோத்திரஞ்செய்வதைக் கேட்டு 'இது பகைவர்செய்யும் ஒலியோ?' என்று பொங்கும் பரிவால் அஸ்தாநே பயசங்கைகொண்டு சீறி விஷத்தைக் கக்குபவன் ஆதிசேஷனாதலால், இங்கு, அவனை 'விடந்தோய ரவு' என்றார்; "ஆங்காரவாரமதுகேட் டழலுமிழும், பூங்காரரவணையான்" என்றார் முதலாழ்வாரும். ஓகை - உவகை யென்பதன் மரூஉ. நாரதன் - ஒரு தேவமுனி. நாரம்-மனிதர் கூட்டம்: அதனை, தன்-பேதிப்பவன்; அன் றிக்கே, நாரம்-மநுஷ்யதர்மத்தை, தன்-கொடுப்பவன் [ஆத்மஞானத்தை உபதேசிப்பவன்] என்றுமாம். 'நின்றெழில்' என்றும்பாடம். அங்கு - அசை. (கூகூ)

கூஎ. பாவிக்கொணாதபெருமாள்விநோதம்பகருமதோ
வாவிக்குணாரதனாரதியாயொருமன்னவன்ற
னாவிக்குலக்கொடியாய்நெடுங்காலத்தழிவிலின்ப
மேவிக்குடும்பத்திடும்பையெல்லாமெய்திவிட்டனனே.

(இ - ள்.) பாவிக்க ஒணாத - எண்ண முடியாத, பெருமாள் - நம்பெரு மாளது, விநோதம் - திருவிளையாட்டு, பகருமதோ-எளிதிற் சொல்லத்தகும

தோ? [அன்று என்றபடி]; (அத்திருவிளையாட்டினால்), வாவிக்குள் - ஒரு குளத்திலே, நாரதன்-நாரதமுனிவன், நாரதி ஆய் - நாரதி யென்னும் ஒரு மகளாகி, ஒரு மன்னவன்தன்-ஓரரசனது, ஆவி - உயிரையொத்த, குலம் கொடி ஆய் - சிறந்த பூங்கொடிபோன்ற மனைவியாய், நெடுங் காலத்து-பல நாள், அழிவு இல் இன்பம்-குறைவில்லாத சிற்றின்பத்தை, மேவி-அடைந்து, குடும்பத்து இடும்பை எல்லாம் - குடும்பங்களி லுண்டாகின்ற துன்பங்களை யெல்லாம், எய்திவிட்டனன் - அடைந்தான்; (எ - று.)

பிரமவிருடிகளையும் மயக்கவல்லது எம்பெருமானது மாயையென்று வியந்து கூறியவாறு. வேதபுருஷன் எம்பெருமானது குணங்களுள் ஆனந்த குணமொன்றை ஆராயத்தொடங்கி முழுதும் ஆராயமுடியாமல் "யதோ வாசோநிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸாஸஹ [பரம்பொருளைக் கிட்டமுடியாமல் வாக்குக்கள் மனத்துடன் திரும்புகின்றன]" என்று கூறுகின்றானென்றால், மற்றையோர் அப்பிரானை உள்ளபடியுணர்தல் கைகூடாத காரியமென்பது தேற்றமாதலால், 'பாவிக்கொணாதபெருமாள்' என்றார். பாவிக்கவொண்ணாத-தொகுத்தல். 'பாவிக்கொணாத பெருமாள் விநோதம் பகருமதோ' என்று கூறியதைப் பின்மூன்றடிகள் சமர்த்தித்து நிற்றலால், இச்செய்யுள்-தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம். நாரதி-நாரதனென்பதன் பெண்பால். வாவி-வாபீ: வடசொல். குலக்கொடி - அடையடுத்தஉவமவாகுபெயர். ஆவிக் குலக்கொடி - உயிர் போன்ற மிக இனிய மனைவி. (௬எ)

௬அ. தண்டுளவம்புனைதாரரங்கா வைவர்தையலுக்கு
வண்டுகிலொன்றவைக்கண் ணுற்றபோதுதன்மன்னர்முன்னே
கண்டுளிசோரத்தொழுதுநின்பேர்கட்டுரைத்தபின்னை
யொண்டுகில்கோடிகுவிந்ததெம்மாயமுரிந்துரிந்தே.

(இ - ள்.) தண் துளவம் புனை - குளிர்ந்த திருத்துழாயினால் தொடுக்கப்பட்ட, தார்-மாலையையுடைய, அரங்கா—! அவைக்கண்-(துரியோதனனது) சபையிலே, உற்றபோது - (அவனது தம்பியாகிய துச்சாதனனால் இழுத்து வந்து) சேர்ந்த பொழுது,—தன் மன்னர் முன்னே - தனது கணவர்களாகிய பாண்டவர்களின் முன்பாக, கண் துளி சோர - கண்ணீர்த்துளி சிந்தும்படி (அழுது), தொழுது - வணங்கி, நின் பேர்-உன்னுடைய திருநாமத்தை, கட்டுரைத்த பின்னை-உறுதியாகச் சொன்னபின்பு, ஐவர் தையலுக்கு-அப்பாண்டவரது மனைவியாகிய திரௌபதிக்கு, வள் துகில் ஒன்று - (துரியோதனனது ஏவலினால் துச்சாதனன் உரிந்த) அழகிய ஆடையொன்றுதானே, ஒள் துகில் கோடி-ஒள்ளிய அநேகவஸ்திரங்களாக, உரிந்து உரிந்து-கழன்று கழன்று, குவிந்தது - திரண்டது, எ மாயம் - எவ்வகையான மாயமோ?

துச்சாதனன் துகிலுரியத் தொடங்கியபோது திரௌபதியானவள் தனக்குநேரும் மானபங்கத்தைச் சிந்தித்துக் கண்ணீர்ஆறாய்ப்பெருகவும், துச்சாதனன் பிடித்துஇழுத்துவந்தபோது அவிழ்ந்த கூந்தல் அவ்வாறே விரிந்துபுரளவும், அவன் வலிய அவிழ்த்தஆடையைத் தன்னாலானவரையுந் தகைந்துபார்த்தும் முடியாமல் தளர்ந்து அச்செயலொழிந்து தலைமேற்கை

குவியவும், தன்வசந்தப்பிப் பரவசமாய், தத்துவஞானமுதிக்கப்பெற்றவளா தலின் பர்த்தாக்களாவது பிறதெய்வங்களாவது உதவுவார்களென்ற கரு த்தை விட்டு 'பெரிய ஆபத்துக்காலத்தில் உதவுபவன் திருமாலே' என்று துணிந்து அப்பெருமானது திருநாமத்தையே உச்சரிக்கும்போது மெய்ப் பாட்டினால் உடம்புகுளிரப்பெற்று நாவில் அமிர்தூற, பக்தியின்மேலீட் டினால் உடம்புபுளகமுற, மனம்நெக்குஉருகிக் கிருஷ்ணனைப் பிரார்த்தித்த பிறகு அவனது திருவருளால் ஆடை மேன்மேல் வளரப்பெற்றன ளென்ப தாம்.

இதுவரையில் ஸ்ரீகிருஷ்ணபகவான் செய்தருளிய மாயாசேஷ்டிதங் களைக் கூறிவந்த கவி, இச்செய்யுளினால் அப்பரமன் தன்சங்கற்பத்தினாற் செய்த காத்தல்தொழிலைக் கூறினாரென்க. உலகத்தில் விதிவசத்தாற் சுற்ற மாகின்றவர் யாவரும் ஆபத்துக்காலத்தில் உதவமாட்டா ரென்றும்,எவர்கள் வேறொன்றையும் உபாயமாகப்பற்றாது தன்னையே நம்பித் தன்மீது காப்பாற் றும் பாரத்தை வைக்கின்றார்களோ அவர்கட்கு எம்பெருமான் தவறாமல் உத வுகின்ற ஆபத்பந்து வாவ னென்றும் இச்செய்யுளில் ஏற்படுதலைக் குறிப் பாக நோக்குக. 'மகத்தான ஆபத்து நேருங்காலத்தில் பகவானாகிய திரு மால் தியானிக்கத்தகுந்தவனென்று வசிஷ்டமுனிவர் கூறியுள்ளதை நினைத் துத் திருமாலைக்குறித்துத் திரௌபதி முறையிடுவளானாள்' என்று வியாச பாரதம் கூறும். 'ஸ்திரீகளுக்குப் பர்த்தாக்கள் ரக்ஷகரல்ல ரென்னுமிடம் தர்மபுத்ராதிகள்பக்கலிலும் நளன்பக்கலிலும் காணலாம்' என்ற ப்ரபந்ந பரித்ராணம் இங்கு நினைக்கத்தக்கது.

திருநாமத்தின் மகிமை இருந்தபடி என்னே! என்று வியந்தவாறு. அத்திருநாமம், கோவிந்த னென்பது. "ஆறாகி யிருதடங்க ணஞ்சனவெம் புனல் சோர வளகஞ்சோர, வேறான துகிறகைந்த கைசோர மெய்சோர வேறோர் சொல்லுங், கூறாமற் கோவிந்தா கோவிந்தா வென்றரற்றிக் குளிர் ந்து நாவி, லூறாத வமிழ்தூற வுடல் புளகித் துள்ளமெலா முருகினாளே" என்னும் பாரதச்செய்யுளை நோக்குக. எம்பெருமானுக்குப் பல திருநா மங்க ளிருக்கவும் கோவிந்த னென்ற இப்பெயரால் விளித்தது, இந்தி ரன் விடாப்பெருமழையைப் பொழிவித்தபோது தம்மாலும் தம்மைப்பாது காத்தற்கு உரிய இடையராலும் காக்கமுடியாமல் தவித்துஅலைகிற நிலையி லே பசுக்களையெல்லாம் யாதொருகுறைவுமின்றிக் கோவர்த்தனமலையைக் கொண்டு உனதுபேரருளினாற் காப்பாற்றியதுபோலவே, என்னாலும் என் னைப்பாதுகாக்கவேண்டிய பர்த்தாக்களாலும் பாதுகாக்கமுடியாமல் தவி த்து அநந்யகதியாய் உன்னையே சரணமாகநம்பியிருக்கிற என்னை நீ பேரருள் கொண்டு காக்கவேண்டுமென்ற குறிப்பு. ("இனி, அரைகுலையத் தலைகுலைய அலமாக்கும்படியாக முடிசூடின பேரைச் சொல்லிக் கூப்பிடுகிறாள்; 'கோவிந்த - தன் ஆஶ்ரிதரை நோவுபட விட்டிருக்குமவனையோ நான் ஆஶ் ரயித்தது? 'கோவிந்த - நீ கோவிந்தாபிஷேகம் பண்ணிக் கோப்தாவாயிரு க்க, ஒருவர்கூறை எழுவருடுக்கும்படி யிருப்பதென்?' 'கோவிந்த - நீ ஆஶ் ரிதரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்க, "க்ருஷ்ணாஶ்ரயா" என்றிருக்கிற என்னை

க்ருபைபண்ணுதொழிவதென்?' 'கோவிந்த - நாராயணுஎன்று உன்சிறுபேரையோ நான் சொல்லிற்று?......உன்னிலும்அதிகமான உன்பேரையன்றோ நான் சொல்லிற்று!' 'கோவிந்த - என்னுடைய ரக்ஷணத்துக்கு மலையெடுக்க வேணுமோ? கண்ணாலே நோக்க அமையாதோ?'' என்ற வியாக்கியான வாக்கியங்கள், இங்கு நோக்கத்தக்கன.)

துளவம்-துளஸீ. ஐவர்-தொகைக்குறிப்பு. இனி, துகில் ஒன்று அவைக் கண் உற்றபோது எனப் பிரித்து, சபையில் ஒருதுகில் காணப்பட்டபோது என்றுமாம். (கூ௲)

கூகூ. இசையளவிட்டவரங்கேசரைவர்தம்மேவலிற்போய்
வசையளவிட்டமகிபன்முன்னேவளருந்திரடோ
டிசையளவிட்டன பாரளவிட்டனசேவடி வான்
மிசையளவிட்டனபொன்முடி மேலென்விளம்புவதே.

(இ - ள்.) இசை - கீர்த்தியானது, அளவிட்ட - எல்லாவுலகங்களிலுஞ் சென்று சேரப்பெற்ற, அரங்கேசர்—, ஐவர்தம் ஏவலின் - பஞ்சபாண்டவர்களது கட்டளையினால், போய் - (தூது) சென்று, வசை அளவிட்ட - இகழ்ச்சிச் சொற்களை மிகுதியாகச் சொல்லிய [அல்லது அபகீர்த்தி மிகுந்த], மகிபன்முன்னே - துரியோதனனது முன்பே, வளரும் - மேன்மேல் வளர்ந்த, திரள் தோள்-திரண்ட (அவரது) தோள்கள், திசை அளவிட்டன - திக்குக்களை அளாவின; சே அடி-சிவந்த திருவடிகள், பார் அளவிட்டன-பூமியை அளாவின: பொன்முடி - பொன்மயமான கிரீடமணிந்த தலைகள், மிசை - மேலாக, வான் - தேவலோகத்தை, அளவிட்டன—; மேல் - இதனினும் மேலாக, என் விளம்புவது-யாது சொல்வது ? (எ - று.)

இங்குக் குறித்தது, துரியோதனன் தனது சபையில் பாண்டவர்க்குத் தூதாகவந்த கண்ணனைப் படுகுழி பாய்ச்சிச் சிறையிடத்தொடங்குகையில் கண்ணன் விசுவரூபங்கொண்டபோது உண்டான நிகழ்ச்சியை. துரியோதனனோ வசையொன்றையே அளவிட்டனன்; நீயோ தோள்களால் திசையையும், சேவடியால் பாரையும், முடியால் வானையும் அளவிட்டாய் என ஒருசமத்காரந்தோன்றக் கூறியமை காண்க. துரியோதனனை 'வசையளவிட்ட மகிபன்' என்றது, கல்வி ஒழுக்கம் முதலிய புகழ்க்குக்காரணமான மேன்மைகளைச் சிறிதும்பெறாது இழிகுணத்தையே பாராட்டி மிகக்கொண்டவனாதலினால்;''இசையினும் பெருகநன்றெனத் தனதியற்கையால் மிகவளர்த்திடும், வசை'' என்பர் பாரதத்தும். அளவிட்டன என்ற சொல் ஒரேபொருளிற் பலமுறை வந்ததனால், சொற்பொருட்பின்வருநிலையணியாம்.

அளவிடுதல்-அளாவிடுதல்; இனி, அளவுவிட்ட என்பதன் விகாரமாகக் கொண்டு, எண்ணிறந்த கீர்த்தியை யுடைய அரங்கேச ரென்றுமாம். மஹீபன் - பூமியைக் காப்பவன் ; வடசொல் : மஹீ - பூமி. முடியாயிரங் கொண்ட மூர்த்தி யாதலால், 'அளவிட்டன பொன்முடி' எனப் பன்மையாற் கூறினர். (கூகூ)

எ0. மாயிருஞாயிறுபாரதப்போரின்மறையவங்ஙன்
பாயிருணீதந்ததென்னகண்மாயம் பவளநெற்றிச்
சேயுயர்மாமதில்சூழரங்கேச திரண்டுதித்த
வாயிரகோடிதிவாகரன்போலொளிராழிகொண்டே.

(இ - ள்.) பவளம் நெற்றி - பவழத்தாலாகிய உச்சியையுடைய, சேய் உயர்-நெடுந்தூரம் உயர்ந்த, மா மதில் - பெரிய மதிலால், சூழ்-சூழப்பட்ட, அரங்கஈச - திருவரங்கத்துநாதனே! நீ—, பாரதம் போரில் - பாரதயுத்தத்தில், திரண்டு உதித்த - ஒருங்கே உதயமாகிய, ஆயிரம் கோடி திவாகரன் போல்- பலகோடி சூரியர்போல, ஒளிர் - பிரகாசிக்கின்ற, ஆழிகொண்டு - சக்கரத்தினால், மா இரு ஞாயிறு - மிகவும் பெரிய சூரியன், மறைய - மறையும்படி, அங்ஙன் - அவ்வாறு, பாய் இருள் - பரவிய இருட்டை, தந்தது - உண்டாக்கியது,என்ன கண்மாயம்-என்ன கண்கட்டுவித்தையோ? (எ - று.)

அருச்சுனனைக் காத்தற்கு ஸ்ரீகிருஷ்ணபகவான் தனது திருக்கையிலுள்ள சக்கரத்தினாற் செய்த செயலை இச்செய்யுளினாற் கூறினார்.

மிக்கஒளிமயமான சூரியனை இருள்மயமானதொரு பொருளைக்கொண்டு மறைப்பதன்றியே, "ஸூர்யஸஹஸ்ர பாஸ்கரகோடி துல்யம்" என்னும்படி கோடிசூரியபிரகாசமமைந்த திருவாழியாழ்வானைக்கொண்டு மறைத்தது என்னே! என்று வியந்தவாறு. இனி, கோடிசூரியபிரகாசமான திருவாழியைக்கொண்டு சூரியனைமறைத்தல் எங்ஙனந்தான் கூடுமெனின்,—சூரியனுடையஒளி கண்ணாலே காணலாம்படி அளவுபட்டிருத்தலால் இருட்டைப் போக்கும், அப்படியில்லாமல் திருச்சக்கரத்தினொளி நேராகக்கண்கொண்டு காணமுடியாதவாறு அளவுபடாத மிக்கபேரொளியை யுடைமையால் மிகவும்பளபளப்புக்கொண்டு கண்களை இருளப்பண்ணுமெனச் சமாதானங் கூறினர் ஆன்றோர்.

அருச்சுனனும் துரியோதனனும் கண்ணனைத் தத்தமக்குப் பாரதயுத்தத்திற் படைத்துணைசெய்யவேண்டுமென்று அழைத்தபோது, "போரிற் படையெடாதொழிமின்" என்று வேண்டிய துரியோதனனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் "நடையுடைப்புரவித்திண்டேர் நானிவற்கூர்வதன்றி, மிடைபடையேவி நும்மோடமர்செயேன் வேந்த" என்று வாக்குதத்தஞ்செய்துள்ளதையும் மறந்து இங்ஙனஞ் சக்கராயுதத்தைக்கொண்டு தொழில்செய்ததனால், தனது வாய்மை தவறியாயினும் அடியார்கட்கு வருகின்றஆபத்தைப் போக்கி அவர்களைக் காத்தருள்கிற பகவானது பேரருளுடைமை வெளியாகின்றது; "வஞ்சின மறந்து நேமியுந்தரித்து", "எழிற்படையெடுக்கிலேனென்றிசைத்த நின்மொழி விட்டு.....முறுகுவெஞ்சினத்த வாழி, யழற்படையெடுத்தா யன்பர்க்களியை நீ பெரிதுமன்றே" என்பன இங்கு நோக்கத்தக்கன. இங்குக் கண்ணன் தனது திருவாழியினால் வெயிலைமறைத்தது, "மமப்ராணாஹி பாண்டவா: [எனக்குப் பிராணன்களன்றோ பாண்டவர்கள்]" என்று கண்ணபிரான்தானே அருளிச்செய்துள்ளபடி தார்மிஷ்டர்களாகிய பாண்டவர்கள்பக்கல் அவன்கொண்டுள்ள பெருங்கருணையினாலே

யே. துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநங்களே திருவவதாரத்தின் நோக்க மாதலால், துரியோதனன்பக்கத்தவனான சயத்திரதனைத் தொலைத்தற் காக இதுசெய்தனன். எம்பெருமானுக்குத் திவ்வியாயுதமான திருவாழி வேண்டியபொழுதெல்லாம் வேண்டியவாறெல்லாம் உதவுதல் இயல்பே.

பாரதர் - சந்திரகுலத் தரசனாகிய பரதனுடைய மரபிற் பிறந்தவர்; அவர்-துரியோதனாதியரும், பாண்டவரும்; இவர்களுள் நிகழ்ந்த போர்,பார தப்போர். திவாகரன் - தனது உதயஅஸ்தமனங்களாற் பகலிரவுகளை உண் டாக்குபவன்; திவா-தினம் ; பகலுமாம். மாஎன்பது உரிச்சொல்லாதலின், அதன்முன் யகாரவுடம்படுமெய் தோன்றிற்று. (எ௦)

எக. நெட்டரவின்பெருமூச்செழவீசுநெருப்பில்வெந்து
பட்டகடம்புந்தழைத்ததுமீளப் பசுந்துளவின்
மட்டவிழ்தொங்கலரங்கர்பொற்றாள்பட வாளிவெந்தீச்
சுட்டகருங்கட்டையும்பெற்றதாருயிர் சொல்வதென்னே.

(இ - ள்.) பசு துளவின்-பச்சைத் திருத்துழாயினாலாகிய, மட்டு அவிழ்-வாசனை வீசுகின்ற, தொங்கல் - மாலையையுடைய,அரங்கர்-திருவரங்கநாதரது, பொன் தாள் - அழகிய திருவடி, பட - மேற்பட்டமாத்திரத்தில்,—நெடு அரவின் - பெரிய (காளியனென்னும்) நாகத்தினது, பெரு மூச்சு—, எழ-எழும்படி, வீசும் - வீசுகின்ற, நெருப்பில் - விஷாக்கினி ஜ்வாலையில், வெந்து பட்ட - எரிபட்டு அழிந்த, கடம்பும் - கடப்பமரமும், மீள தழைத்தது - மறுபடியும் தளிர்த்து வளர்ந்தது;வாளி வெம் தீ-(அசுவத்தாமன் எவிய)அஸ் திரத்தினது கொடிய நெருப்பினால், சுட்ட - சுடப்பட்ட, கரு கட்டையும்-தீந்துபோன கரிய கட்டையும், அரு உயிர் பெற்றது-(மீளவும்)அரிய உயிரை அடைந்தது; சொல்வது என் - (அத்திருவடிகளின் மகிமையைக்குறித்துச்) சொல்வதென்னை ? (எ - று.)

கொடிய காளியனென்னும் பாம்பினது விஷாக்கினியினாற் கருகிக் கிடந்த கடப்பமரமும், அசுவத்தாமனது அம்பின் வெப்பத்தினாற் கருகிப் போன கருப்பிண்டமும் கண்ணபிரானது திருவடி பட்டமாத்திரத்தால் முறையே தளிர்த்தும் உயிர்பெற்றும் வளர்ந்தமை கூறி அவ்வெம்பெருமா னது அகடிதகடநாசாமர்த்தியத்தை இச்செய்யுளில் விளக்கியவாறு.

மீள என்பதனை 'ஆருயிர்பெற்றது' என்பதனோடுங் கூட்டுக. வாளி - அபாண்டவாஸ்திர மென்பர். சுட்ட கருங்கட்டை - அபிமந்யுவின் மனைவி யாகிய உத்தரையின் வயிற்றுக்கரு. 'மீளவுருப்பெற்றது' என்றது, இளங் குழந்தையாகி நன்றாக வளர்ந்தமையை. அவ்வாறு வளர்ந்தவனே பிறகு பரி க்ஷித்துமகாராஜனாயினனென அறிக. (எக)

எஉ. தாளாற்சகங்கொண்டதாரரங்கா பண்டுசாந்திபன்சொற்
கேளாக்கடல்புக்கசேயினைமீட்டதுங் கேதமுடன்
மாளாப்பதம்புக்கமைந்தரைமீட்டது மாறலவே
மீளாப்பதம்புக்கபாலரைமீயன்றுமீட்டதற்கே.

(இ - ள்.) தாளால்-திருவடியால், சகம் கொண்ட-உலகங்களை அளந்து வசப்படுத்திக்கொண்ட, தார்-மாலையையுடைய, அரங்கா—! பண்டு-முன்னே [கிருஷ்ணாவதாரத்தில்], நீ—, சாந்திபன்-சாந்திபினியென்னும் ஆசாரியனது, சொல்-வார்த்தையை, கேளா-கேட்டு, கடல் புக்க சேயினை-கடலில்முழுகி யிறந்துபோன (அவனுடைய) புத்திரனை, மீட்டதும் - திரும்பவுங் கொண்டு வந்து (குருதக்ஷிணையாகக்) கொடுத்ததும்,—கேதமுடன் - வருத்தத்தோடு, மாளா பதம் - புகுதற்கரிய பாதாளலோகத்தை, புக்க-அடைந்த, மைந்தரை-(இரணியகசிபுவின் குமாரரும் தேவகியின் கருப்பத்திற் சேர்ந்தவருமாகிய) அறுவரையும், மீட்டதும் - திரும்பவும் (தனதுதாயானதேவகி காணும்படி) கொண்டுவந்துகொடுத்ததும்,—அன்று - அந்நாளில், மீளா பதம் - மீண்டுந் திரும்பவொண்ணாத பரமபதத்தை, புக்க - அடைந்த, பாலரை - (வைதிக னொருவனது) புத்திரரை, மீட்டதற்கு - திரும்பவுங் கொண்டுவந்து கொடுத்ததற்கு, மாறு அல - ஒப்பாகமாட்டா; (எ - று.)

இதனால், ஸ்ரீகிருஷ்ணபகவான் தானே நடந்துசென்று இறந்தவுயிரை மீட்டுப் பாதுகாத்தமை சொல்லப்பட்டதென்க. கடலிற்புக்கசேயும் பாதாளத்திற்புக்க மைந்தரும் மீளுதற்குஉரிய இடத்திற் சென்றன ராதலால் அவர்களை மீட்டலில் ஓர்அருமைப்பாடு இல்லை; பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகள் நால்வரோ மீளாவுலகமாகிய பரமபதத்திற் புக்கன ராதலால் அவர்களை மீட்டுக்கொடுத்தது முன்னையசெயல்களினும் மிகவும்பாராட்டத்தக்கதொன்று என்பது கருத்து. இனி, மீளாவுலகம்புக்க மைந்தர் மீண்டது எங்ஙனமோ வெனின்,—பரமபதஞ்செல்லுதற்குத் தூமாதிமார்க்க மென்றும் அர்ச்சிராதிமார்க்க மென்றும் இரண்டுவழிகள் உள்ளன; பகவானைத்தியானித்ததன் பயனாக அந்தஎம்பெருமானருளாற் பரமபதமடைகின்றவர் அர்ச்சிராதிமார்க்கத்தாற் செல்லுதலால் மீளுதலிலராவர்; தூமாதிமார்க்கத்தாற்சென்றாலோ மீண்டுவரலாம்; பிராட்டிமார் கிருஷ்ணாவதாரத்தின் வடிவழகைத் தாம் தரிசிக்கவேணுமென்று கருதித் தூமாதிமார்க்கத்தால் அப்பிள்ளைகளை யெடுத்துப்போய் வைத்தன ராதலின், அவர்கள் ஸ்ரீகிருஷ்ண பகவானால் மீட்டுக்கொணரப்பட்டன ரென்பர். இச்செய்யுளில் மீளாப்பதம் புக்கபாலரை மீட்டலாகிய மேற்செயலோடு ஒப்பிடுகையில் கடல்புக்கசேயினை மீட்டதும் மாளாப்பதம்புக்கமைந்தரை மீட்டதும் குறைவுள்ளனவாமெனக்கூறியதனால், யலர்ச்சியணி தோன்றுதல் காண்க; இது, வடமொழியில் 'உல்லாஸாலங்காரம்' எனப்படும். சாந்திபன் - விகாரம். கேளா மீட்டதென்க.

("மாதவத்தோன்புத்திரன்போய்மறிகடல்வாய்மாண்டானை, யோதுவித்ததக்கிணையாவுருவுருவேகொடுத்தான்," "வேதவாய்மொழியந்தணனொருவன்எந்தைநின்சரண்என்னுடைமனைவி, காதல்மக்களைப்பயத்தலுங்காணாள்கடியதெய்வங்கொண்டொளிக்குமென்றழைப்ப,ஏதலார்முன்னேயின்னருளவற்குச்செய்து உன்மக்கள்மற்றிவரென்றுகொடுத்தாய்," "பூவைபோலத், தேவகிவந்துசெவ்வாய்திறந்தனள்செப்பலுற்றாள்", "துஞ்சியபுதல்வற்கொண்டுதுணையறுகுரவற்குய்த்தாய், வெஞ்சினவுருமேறன்னவெகுளியங்களிநல்யானைக், கஞ்சன்முன்கோறல்செய்தகருங்கடற்பவளச்செவ்வாய்,மஞ்

சரைத்தருகவென்றுமனங்குழைந்துரைத்துநைந்தாள்,” “இளங்கிளிமழலையன்னையிசைத்தசொற் கேட்டலோடும், உளங்கசிந்துருகவின்னேயுய்த்துநீகாண்டியென்றுக், களங்கனிவண்ணன் யற்றைக்கலைமதிவண்ணனோடு, வளங்கெழுசுதலலோகம்வல்லையிற்சென்றுசார்ந்தான்”, “காவலனுகிமற்றுக்கண்ணகலுலகங்காக்கும், மாவலியெதிர்கொண்டேத்திமலரடியிரண்டினுனே, மூவகையுலகங்கொண்டமுழுமுதலுற்றவண்ணம், யாவதோவென்னப்பூவைவண்ணனுங்கினிதியம்பும்”, “ஆறறிமரீசிமைந்தரறுவருமலரோனீன்ற, நாறிணர்க்கோதைகொங்கைநயந்தனரென்றுதக்கார், வீறினால் விரிஞ்சன்சாவவிளைவினலவுணராகி, யீறிலாவுணர்வுகுன்றியிரணியற்குதித்தாரன்றே”, “சிறந்தவெண்முறுவற்செவ்வாய்த்தேவகியசட்டின்மீட்டும், பிறந்தனர்பிறங்குஞாங்கர்ப்பெரும்படைக்கஞ்சன்வீட்ட, இறந்தனர்வந்து நின்பாலிருந்தனர்தருகவென்றாங், குறைந்தவர்தமைக்கொண்டெய்தியுய்த்தனனன்னைக்கன்றே”, “முந்துநூலும்முப்புரிநூலும்முனிந்த, அந்தணாளன் பிள்ளையைஅந்நான்றளித்தான்”, “ஒதுவாய்மையுமுவணியப்பிறப்புமுனக்குமுன்தந்த அந்தணனொருவன், காதலென்மகன்புகலிடங்காணேன் கண்டு நீதருவாயெனக்கென்று, கோதில்வாய்மையினுனைவேண்டியகுறைமுடித்தவன்சிறுவனைக்கொடுத்தாய்”, “சப்பினபிள்ளைகளைத்தனமிகுசோதிபுகத்தனியொருதேர்கடவித்தாயொடுகூட்டிய, வென்னப்ப”, “பிறப்பகத்தேமாண்டொழிந்தபிள்ளைகளைநால்வரையும், இறைப்பொழுதிற்கொணர்ந்துகொடுத்தொருப்படுத்தவுறைப்பன்”,“மாமறையோன்பால்தோன்றி,மாண்டாரைப்பண்டழைத்தார்”என்பன இங்கு நோக்கத்தக்கன.) (எ௨)

எ௩. பொருங்கேதனப்படைமன்னரைமாய்த்துப்புவிமடந்தை
பெருங்கேதநீக்கிநடந்தது மீளப்பிறங்குபுள்ளின்
வருங்கேசவன்சக்ரமாயோனரங்கன்வரவிடுத்த
கருங்கேசமொன்றுதன்னிச்சையிலேசெய்தகாரியமே.

(இ - ள்.) பொரும் - போர் செய்கின்ற, கேதனம் படை - துவசங்களோடுகூடிய படையையுடைய, மன்னரை - அரசரை, மாய்த்து - அழித்து, புவி மடந்தை-நிலமகளது, பெரு கேதம்-பெரிய துன்பத்தை, நீக்கி—,மீள நடந்தது-திரும்ப நடந்தொழிலானது,—பிறங்கு புள்ளின் வரும்-விளங்குகின்ற பெரியதிருவடியின்மேல் எழுந்தருளுகின்ற, கேசவன் - கேசவனென்னுந் திருநாமமுடையவனும், சக்ரம் - சக்கரத்தையுடைய, மாயோன்-மாயையையுடையவனும், அரங்கன்-திருவரங்கநாதனுமாகிய திருமால், வரவிடுத்த - வரும்படி அனுப்பியருளிய,8 கரு கேசம் ஒன்று - கரிய உரோமமொன்று, தன் இச்சையிலே செய்த காரியம் - தனது விருப்பத்தின்படி அலட்சியமாகச் செய்த தொழிலாகும் ; (எ - று.)

கவி இச்செய்யுளோடு கிருஷ்ணவதாரத்தை முடிக்கின்றனராதலின், அவதாரகாரணத்தையும் அதன்பயனையும் இப்பாசுரத்திற் கூறினரென்க. பொரும் படை யென்று கூட்டுக. கேதம் - அதிகபாரத்தைப் பொறுக்கமாட்டாமையா லுற்ற துன்பம். கேசவன் என்பதற்கு - கேசியென்கிறஅசுரனைக் கொன்றவ னென்றும், பிரம ருத்திரர்கள் தன்னிடத்தி லுண்டாகப்

பெற்றவ னென்றும், பிரம ருத்திரர்கள் தன்னிடத்தி லிருக்கப்பெற்றவ னென்றும், அழகிய மயிர்முடியை யுடையவ னென்றும் காரணப்பொருள் கள் படும்; வடசொல்.

பூமிதேவி, தன்மேலிருக்கின்ற பெரிய அசுரர்களா லுண்டான மிகுந்த பாரத்தைப் பொறுக்கமாட்டாதவளாய்த் துன்ப முற்றுப் பிரமதேவன் முதலான தேவர்களின்முகமாய் ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்து பிரார்த் திக்க, அவ்வெம்பெருமான் தமது திருமேனியினின்றும் வெண்மையுங் கரு மையுமான மயிர்கள்போற் காணப்பட்ட தேஜசுகளை யெடுத்து, 'இந்த எனது தேஜசுகள் பூமியில் தேவகியின்கருப்பத்தில் அவதரித்துப் பூமிக்குப் பாரத்தினா லுண்டாகின்ற துன்பத்தை நீக்கும்' என்று நியமித்து விட, அந் தத் தேஜசுகளே ஸ்ரீராமகிருஷ்ணர்களாய்த் திருவவதாரஞ்செய்து மிகவுங் கொடிய அசுரரையும் அரசரையு மெல்லாஞ் சங்கரித்தருளிப் பூமிபாரத்தை நீக்கின வென்பது, இச்செய்யுளிற் கூறிய விஷயம். (எ௩)

[ஸ்ரீவேதவ்யாஸாவதாரம்.]

எ௪. அராவணையிற்றுயிறென்னரங்கா மறையாயும்வண்ணம்
பராசரன்மாமகனாகியநீபண்டுபாரதப்போர்
பொராவிழுநூற்றுவர்சேனையெல்லாம்புனற்கங்கைவெள்ளத்
தராதலமேல்வரக்காட்டியவாதந்தைசந்திக்கவே.

(இ - ள்.) அரா அணையில் துயில் தென் அரங்கா—!—மறை ஆயும் வண்ணம் - வேதங்களை ஆராய்ந்து சீர்திருத்தும்படி, பராசரன் மா மகன் ஆகிய - பராசரமுனிவரது சிறந்த புத்திரராகிய வியாசமுனிவராக அவ தரித்த,நீ—, பண்டு - முன்னே, பாரதம் போர்-பாரதயுத்தத்தில், பொரா- போர்செய்து, விழும்-இறந்துகிடந்த, நூற்றுவர்-துரியோதனாதியர் நூற்றுவ ரது,சேனை எல்லாம்-எல்லாச் சேனைகளையும், தந்தை சந்திக்க-(அவர்களது) தாதையாகிய திருதராட்டிரன் கூடிக் காணும்படி, கங்கை புனல் வெள்ளம் தராதலமேல் - கங்காஜலத்தின்பிரவாகத்தினிடத்தின்மேல், வர-வரும்படி, காட்டிய ஆ - காண்பித்த விதம், (என்னே!) (எ - று.)

திருமாலின் தசாவதாரங்களைச் சொல்லிக்கொண்டுவந்த ஆசிரியர் இடையே வேதவ்யாஸமுனிவரது அவதாரத்தைக் கூறியது, இவர் விஷ்ணு வின் அம்சமேயாதலாலும், கிருஷ்ணாவதாரகாலத்தோடு சமகாலத்தவராத லாலும்,பாண்டவதுரியோதனாதியர்க்கு உறவினராய் ஸ்ரீகிருஷ்ணபகவானை ப்போலவே அவர்கட்கு ஹிதாஹிதங்களை உபதேசித்துவந்தமையாலு மென் னலாம். வேதங்களெல்லாம் சிதறி ஒன்றோடொன்று கலந்து ஓதற்கரிதாகி யிருந்த நிலையில், திருமால் வியாசரென்னும் பெயருடன் பராசரமுனிவர்க் குப் புத்திரராகத் திருவவதரித்து அவற்றைச் செம்மைப்படுத்தி ருக் யஜுஸ் ஸாம அதர்வணங்க ளென்று நான்காகப் பகுத்தன ராதலால், 'மறையாயும் வண்ணம் பராசரன் மாமகனாகிய நீ' என்றார்: இவ்வாறு வேதங்களைப் பகுத் ததனால்தான், இவரை வ்யாஸரென்றும், வேதவ்யாஸரென்றும் வழங்குவ ரென்க. பராஶர என்ற வடசொல்,பரர்களான [பகைவர்களான] குத்ருஷ்டி களை ப்ராமாணிகமான தர்க்கங்களாலே நன்றாக ஹிம்ஸிப்பவ னென்று

காரணப்பொருள்படும். பராசரபகவான் - வசிஷ்டமகாரிஷியினது பௌத்திரர்; புலஸ்திய முனிவரது அனுக்கிரகத்தால் சகல சாஸ்திரஞானமும் பெற்று, வசிஷ்டருபதேசத்தால் தத்துவஞானியாகி, பராசரஸ்மிருதியென்று வழங்கப்படும் கலியுகதர்மசாஸ்திரத்தையும் புராணரத்நமெனப்படும் விஷ்ணுபுராணத்தையும் உரைத்தருளினர். ஆ - ஆறு என்பதன் விகாரம். என்னே என வருவித்து முடிக்க. (எச)

[கல்கியவதார வைபவம்.]

எரு. தருமந்தவிர்ந்துபொறைகெட்டுச்சத்தியஞ்சாய்ந்துதயை
தெருமந்துதன்பூசனைமுழுதுஞ்சிதையக்கலியே
பொருமந்தகாலக்கடையினிலெம்பொன்னரங்கனல்லா
லருமந்தகற்கியென்றாரேயவைநிலையாக்குவரே.

(இ - ள்.) தருமம் தவிர்ந்து-தருமங்கள் விட்டு விலகி, பொறை கெட்டு-பொறுமை அழிந்து, சத்தியம் சாய்ந்து - உண்மையொழிந்து, தயை தெருமந்து-அருள் நிலைகலங்கி, தன் பூசனை முழுதும் - தனது திருவாராதன முழுவதும், சிதைய-கெட, கலியே பொரும்-பாவமே வெல்லுகின்ற, அந்த காலம்-அந்தக் கலியுகத்தினது, கடையினில்-முடிவில்,—எம் பொன் அரங்கன் அல்லால்-எமது அழகிய திருவரங்கநாதனல்லாமல், அருமந்த - கிடைத்தற்கரிய தேவாமிருதத்தையொத்த, கற்கி என்று-கற்கியென்று திருவவதாரமெடுத்து, அவை-அத்தருமம் முதலியவற்றை, ஆரே - வேறு யாவர்தாம், நிலை ஆக்குவர்-நிலைபெறச் செய்வர்? [ஒருவரு மில்லை]; (எ - று.)

திருமாலினது தசாவதாரங்களுள் மத்ஸ்யாவதாரம் முதலியவற்றில் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநங்கள் முக்கியமானவை யென்றும், இந்தக் கல்கியவதாரத்தில் தர்மஸம்ஸ்தாபநமே முக்கியமா மென்றும் உணர்க.

பொன் அரங்கன் - அழகிய அரங்கன்; அன்றிக்கே, கிடைத்தற்கரிய பொன்போன்ற அரங்கன்: இலக்குமிக்குக் கணவனாகிய திருவரங்கநாதனுமாம். அருமந்த - அருமருந்தன்ன என்பதன் மரூஉ. கற்கி-கல்கி; குதிரை. இது, எம்பெருமானது பத்தாந் திருவவதாரம். சந்தவின்பம் நோக்கி, அந்த காலமென இயல்பாயிற்று. (எரு)

[அந்தர்யாமி வைபவம்.]

எகூ. தெள்ளும்புனற்பொன்னிநன்னீரரங்கர்சிலாகிக்குமா [டத்
றெள்ளுங்கரந்துறையெண்ணெயும்போலெண்ணில்கோடியண்
துள்ளும்புறம்பும்பொழியாதுநின்றுமுகங்கடோறுங்
கொள்ளுந்திருவுருவெல்லாமவரறிகோலங்களே.

(இ - ள்.) தெள்ளும் - தெளிவாகிய, பொன்னி புனல் - காவேரிநதியினது, நல் நீர் - நல்ல நீர் சூழ்ந்த, அரங்கர்-திருவரங்கத்துநாதர்,—சிலாகிக்கும் ஆறு-(யாவரும்)புகழும்படி,எண் இல்-அளவில்லாத, கோடி அண்டத்து-அண்டகோடிகளது, உள்ளும் - உள்ளிடத்திலும், புறம்பும் - வெளியிடத்திலும், எள்ளும்—, கரந்து உறை - (அதற்குள்ளே) மறைந்து தங்குகின்ற, எண்ணெயும் போல்—, ஒழியாது நின்றும் - நீங்காது பொருந்தியிருந்தும், உகங்கள்தோறும் - யுகங்களிலெல்லாம், கொள்ளும் - கொள்ளுகின்ற, திரு

உரு எல்லாம் - அழகிய ரூபங்களெல்லாம், அவர் அறி கோலங்களே - அவர் தமது இச்சையினு லெடுத்த திருவவதாரங்களேயாம்;(எ-று.)—ஏ-தேற்றம்.

எம்பெருமான் உலகத்திலுள்ள சேதநாசேதநப்பொருள்களது உள்ளேயும் புறம்பேயும் பிரியாமல் உடனுறையுந் தன்மை, இச்செய்யுளின் முதல் மூன்றடிகளிற் குறிக்கப்பட்டது. எம்பெருமான் 'ஸாதுக்களை ரக்ஷிக்கும் பொருட்டும், துஷ்டர்களை நிக்கிரகிக்கும்பொருட்டும், தருமத்தை நிலை நிறுத்தும் பொருட்டும் யுகங்கள்தோறும் திருவவதரிக்கிறேன்' என்று அருளிச்செய்தபடி அவ்வப்போது கொள்ளும் அவதாரங்களெல்லாம் தன் விருப்பத்தினுற் கொள்வனவன்றிப் பத்தசேதநரைப்போலக் கருமவசத்தினுலாவன வல்ல என்னும் உண்மையை ஈற்றடியால் விளக்கினுர். (எசு)

[தத்துவவுண்மை.]

எஎ. உம்பர்க்கரியபெருமாளரங்கர்தமுண்மையெல்லா
மிம்பர்க்குலகில்வெளியிட்டவே சரணில்லையென்றோர்
கும்பக்கடகயங்கூப்பிடச்சென்றதுங் கோளரியாய்த்
தம்பத்துதித்ததுந் தாழிக்குவீட்டினைத்தந்ததுமே.

(இ - ள்.) கும்பம் - குடம்போன்ற, கடம் - மஸ்தகத்தையுடைய, ஓர் கயம் - ஒப்பற்ற கஜேந்திராழ்வான், சரண் இல்லை என்று கூப்பிட - (தடாகத்தில் முதலையாற் பிடிப்புண்டு)'(நினது) உபயசரணமல்லாமல் (எனக்கு) வேறுசரண மில்லை' என்று அழைக்க,—சென்றதும் - (அதனைப் பாதுகாத்தற்குப் பெரியதிருவடியின்மேலேறிப்) போனதும்,—கோள் அரி ஆய்-வலிமையையுடைய நரசிங்கமாய், தம்பத்து - கம்பத்தில், உதித்ததும் - திருவவதரித்ததும்,—தாழிக்கு - (ததிபாண்டனது) தயிர்த்தாழிக்கு,வீட்டினை-பரமபதத்தை, தந்ததும் - கொடுத்ததும்,—உம்பர்க்கு - தேவர்களுக்கும், அரிய-காணுதற்கரிய, பெருமாள் அரங்கர்தம் - பெரியபெருமாளது, உண்மை எல்லாம்-தத்துவத்தின் இரகசியங்களையெல்லாம், இம்பர்க்கு உலகில்-இவ்வுலகத்திலுள்ளார்க்கு, வெளியிட்ட - வெளிப்படுத்திவிட்டன; (எ - று.)

கஜேந்திராழ்வானைப் பாதுகாத்து நற்கதியளித்தது முதலிய எம்பெருமானது செயல்கள், மற்றைத்தேவரன்றித் திருமாலே பரம்பொருளென்னுந் தத்துவத்தை விளக்கு மென்பது கருத்து. உம்பர்க்கரியபெருமாளென்ற சொற்போக்கில், அன்பர்க்கெளிய பெருமாளென்பது தொனிக்கும். கஜேந்திராழ்வான் 'ஆதிமூலமே!' என்று விளித்தபோது அதற்குச் சேவைசாதித்ததனுல் திருமாலே பரம்பொருளென்பதும், இங்கில்லையோவென்று இரணியன் தூண்புடைப்ப அங்கு அப்பொழுதே தோன்றியமையால் அப்பிரானது அந்தர்யாமித்வமும்,தாழிக்கு முத்தியளித்ததனுல் மோக்ஷப்ரதத்வமும் வெள்ளிடைமலைபோலத் தெள்ளிதிற் புலனுதல் காண்க. கயம் - கஜம், தம்பம் - ஸ்தம்பம்; வடசொற்கள். (எஎ)

[எம்பெருமானது பரிக்ரஹங்கள்.]

எஅ. பொங்கரவென்பதுமெல்லணை யூர்திவெம்புள்ளரசு
பங்கயமின்றெடுபார்மகடேவி படைப்பவன்சேய்
கிங்கரர்விண்ணவர் சாதகநாடிறை கேழலொன்று
யங்கணெடும்புவியெல்லாமிடந்தவரங்கருக்கே.

(இ - ள்.) கேழல் ஒன்று ஆய்-ஒப்பற்ற வராஹஸ்வரூபியாய், அம் கண்-அழகிய இடத்தையுடைய, நெடு - நீண்ட, புவி எல்லாம் - பூமிமுழுவதை யும், இடந்த-கோட்டாற் குத்தியெடுத்த, அரங்கருக்கு—,—பொங்கு அரவு என்பது-சீறுகின்ற ஆதிசேஷன், மெல் அணை-மெல்லிய படுக்கை[மெத்தை;] வெம் புள் அரசு-உக்கிரமான பெரியதிருவடி, ஊர்தி - வாகனம்; பங்கயம் மின்னொடு பார்மகள் - தாமலரமலரில் தோன்றிய மின்னல்போன்ற திரு மகளும் நிலமகளும், தேவி - மனைவியர்; படைப்பவன்-படைப்புத்தொழிலை யுடைய பிரமன், சேய் - புத்திரன்; விண்ணவர் - தேவர்கள், கிங்கரர்-ஏவல் செய்பவர்; சாதக நாடு - பரமபதம், இறை - வீற்றிருக்குமிடம்; (எ - று.)

மின் - உவமவாகுபெயர். "போனகம் பதினலு புவனந் திருப்பள்ளி பொறியரவணைப் பாற்கடல் பூமடந்தையு நிலமடந்தையுந் தேவியர் புராத னமறைக்கு மெட்டா, வானகம் பேரின்பமுடன் வீற்றிருக்கு மிடம் வாக னம் வயினதேயன் மலர்வந்த நான்முகன் திருமைந்த னவன்மைந்தன் மதி சூடி வாசவன்முதற், றேனகுந் தொடைமௌலி முப்பத்து முக்கோடி தேவ ருன தேவல்செய்வோர்" என்பர், திருவரங்கக்கலம்பகத்தும். ஸாதகர்-உபா ஸகை செய்வோர்; அவர் தாம்செய்யும் உபாசனையினுற் பெறுதற்கு உரிய நாடாதலின், பரமபதத்தை 'சாதகநாடு' என்றார். (எஅ)

[இதுவும் அது.]

எகூ. சிங்காதனம்பொற்கிரி திருமஞ்சனந்தெய்வவிண்ணீர்
கொங்கார்தொடையுடுத்தாமஞ் சுடருடைக்கோள்விளக்கம்
பொங்காழிமண்டிருப்போனகமாக்கினர் புண்டரிகை
தங்காதலர்நம்பெருமாளரங்கர்தமக்குமுன்னே.

(இ - ள்.) புண்டரிகைதம் காதலர் - திருமகள்கேள்வராகிய, நம்பெரு மாள் அரங்கர்—,—முன்னே - முற்காலத்தில். தமக்கு—,பொன்கிரி-மேரு மலையை, சிங்காதனம்-ஸிம்ஹாஸநமும், தெய்வம் விண் நீர் - தேவலோகத்தி லுள்ள கங்கையை, திருமஞ்சனம் - அபிஷேகமும், உடு தாமம் - நக்ஷத்தி ரங்களின் வரிசையை, கொங்கு ஆர் தொடை - வாசனைநிறைந்த மாலையும், சுடர் உடை கோள் - ஒளியையுடைய கிரகங்களை, விளக்கம் - தீபமும், பொ ங்கு ஆழி மண் - பொங்குகின்ற கடல்சூழ்ந்த பூமியை, திரு போனகம் - இனியஉணவும், ஆக்கினர் - ஆகச் செய்துகொண்டனர்; (எ - று.)

சிங்காதனம்=ஸிம்ஹாஸநம்; சிங்கந் தாங்குவதுபோலச் செய்யப்பட்ட பீடம். சுடருடைக்கோள் - சூரியசந்திரர்களாகவுமாம். 'பொங்காழிமண்' என்றதனால், மண் - உணவும், ஆழிநீர் - பருகும்நீருமாகு மென்க. (எகூ)

[தேவிமார்களின் சிறப்பு.]

அ௦. தேமாமலர்க்கயஞ்சூழ்கோயின்மேவுந்திருவரங்கர்
தாமாதரித்ததிருத்தேவிமாரிற்றரங்கவுடைப்
பூமாதுநாளும்புரத்தேசுமந்துபுரக்குமலர்
மாமாதுசெல்வங்கொடுத்தேயுயிர்களைவாழ்விக்குமே.

(இ - ள்.) தேன் - தேனையுடைய, மா - பெரிய, மலர் - பூக்கள்நிறைந்த, கயம் - தடாகங்கள், சூழ்-சூழ்ந்த, கோயில் - திருவரங்கம்பெரியகோயிலில், மேவும் - எழுந்தருளி யிருக்கின்ற, திரு அரங்கர்—, தாம் ஆதரித்த - தாம் அன்புவைத்த, திரு தேவிமாரில்-அழகிய(திருமகள் நிலமகளென்னும்) உபய தேவியர்களுள்,—தரங்கம் உடை-கடலை உடுக்குமாடையாக வுடைய, பூமாது - நிலமகள், நாளும் - எந்நாளும், உயிர்களை—, புரத்து-தனதுஉடம்பின்மேலே, சுமந்து - தாங்கி, புரக்கும் - காப்பாற்றுவாள்; மலர் மா மாது-தாமரையில் தோன்றிய திருமகள், செல்வம் கொடுத்து வாழ்விக்கும் - (அவ்வுயிர்கட்குச்) செல்வத்தைக் கொடுத்துக் காப்பாற்றுவாள்; (எ - று.)

எம்பெருமானது வலப்பக்கத்தில் ஸ்ரீதேவியும், இடப்பக்கத்தில் பூதேவியும் எப்பொழுதும் விட்டுப்பிரியாமல் உடன் உறைவரென்க. திருமால் காத்தல்தொழிற்கடவுளாதலால் அவனது தேவிமார்தாமும் தமது கொழுநனுக்கு ஏற்ற குணமுடையவராய்க் காத்தல்தொழிற்கு உபகாரப்பட்டிருப்பரென்று இப்பாசுரத்தால் அருளிச்செய்கிறார். தரங்கம் - ஆகுபெயர். பூ, மா - வடசொற்கள். மா - இலக்குமி. 'புறத்தே' என்றும் பாடம். (அ௦)

[திருவெட்டெழுத்து: பெரிய திருமந்திரம்.]

அக. நம்பெருமாளெழுத்தெட்டின்பெருமைநவிலுமதோ
சம்பரன்மாயம்புரோகிதர்சூழ்வினைதாரணிவாள்
வெம்படைமாசுணமாமதவேழம்விடந்தழல்கா
லம்பரமேமுதலானவைபாலனுக்கஞ்சினவே.

(இ - ள்.) சம்பரன் - சம்பரனென்னும் அசுரனது, மாயம் - மாயையும், புரோகிதர் சூழ் வினை - புரோகிதர்கள் (கொல்லும்படி) ஆலோசித்துச் செய்த செயல்களும், தார் அணி வாள் வெம் படை - வெற்றிமாலையை யணிந்த வாள் முதலிய கொடிய ஆயுதங்களும், மாசுணம் - பெரும் பாம்புகளும், மா மதம் வேழம் - பெரிய மதயானைகளும், விடம் - விஷமும், தழல்-அக்கினியும், கால் - காற்றும், அம்பரம் - கடலும், முதலானவை—, பாலனுக்கு - (திருவஷ்டாக்ஷரத்தின்மகிமையை அறிந்து உச்சரித்த)சிறுவனாகிய பிரகலாதாழ்வானுக்கு, அஞ்சின - பயந்து நடந்தன; (என்றால்),—நம்பெருமாள் - அந்த நம்பெருமாளது, எட்டு எழுத்தின் - ஸ்ரீ அஷ்டாக்ஷர மந்திரத்தினது, பெருமை - மகிமை, நவிலுமதோ - (என்போல்வாரால்) சொல்லுந்திறமுடையதோ? (எ - று.)

புரோகிதர்-பின்னே வரும் நன்மைதீமைகளைமுன்னேதெரிந்துசொல்பவர். இரணியன்பேச்சைக்கேட்டுப் பிரகலாதனைக்கொல்லும்படி மகாமாயாவியான சம்பராசுரன்செய்த மாயைகளையெல்லாம் ஸ்ரீமந்நாராயணனது நியமனத்தினாலே திருவாழியாழ்வான் அவனைப் பாதுகாக்கும்பொருட்டு அங்கே யெழுந்தருளித் தகித்துச் சாம்பராக்கிவிட்டதனால், சம்பரன்மாயமும்; மிகவும்பயங்கரமாகக் காணப்படும்படி புரோகிதர் உண்டாக்கிமேலே யேவின கிருத்தியை வந்து ஒன்றுஞ்செய்யமாட்டாதே திரும்பிப்போய் அப்புரோகிதர்மேலேவிழுந்து தகிக்கஆரம்பித்ததனால்,புரோகிதர்சூழ்வினையும்; அங்கிருந்த அசுரர்களெல்லாரும் ஒன்றாய்ச்சேர்ந்து பலவித ஆயுதங்களை

யெடுத்துப் பிரகாசித்துவதைக்கும்படி யத்தனிக்க அவன் அவற்றினூற் கிஞ்சித்தும் வேதனையுறாமல் விளங்கியதனால், தாரணிவாள்வெம்படையும்; தக்ஷகன் முதலான கொடிய மகாசர்ப்பங்கள் உக்கிரமான விஷங்களைக் கக்கிக்கொண்டுவந்து அவனுடைய சகல அவயவங்களிலுங் கடிக்கவும் அவனுடையதேகத்திலுள்ள தோலிற் கிஞ்சித்தாயினுஞ் சேதமுண்டாகவில்லை யாகையால், மாசுணமும்; திக்கஜங்கள் அவனைப் பூமியிலேவீழ்த்தித் தந்தங்களினாலேபாய்ந்து இடிக்க அத்தந்தங்கள் முறிந்து பொடியாய்ப்போனதனால், மாமதவேழமும்; பாகஞ்செய்வோர் போஜனங்களிலெல்லாங் கலந்து கொடுத்த மகாவிஷமானது அந்த நாமோச்சாரணப்ரபாவத்தாலே நிர்வீரியமாகி அவனுடைய உதரத்தில் ஜீர்ணமாய்விட்டதனால், விடமும்; அசுரர்கள் அக்கினியை வளர்த்தி அவனை அதிலே மறையவைத்து அனலை மூட்டிக் கொளுத்த அவ்வக்கினி கொஞ்சமாகிலும் அவனைத் தகிக்கமாட்டாமல் அதிசீதளமானதனால், தழலும்; ஸம்சோஷகனென்ற வாயு அதிகசீதளமும் அதிக உக்கிரமுமுள்ளவனாகிச் சகிக்கக்கூடாத விதமாய்ப் பிரஹலாதனுடைய திருமேனிக்குள்ளே பிரவேசிக்க அந்தச் சம்சோஷகனை அவனது இருதயத்தி லெழுந்தருளியிருந்த ஸ்ரீமஜநார்த்தனன் விழுங்கி ஒரு க்ஷணமாத்திரத்திலே நாசஞ்செய்தருளினதனால், காலும்; தைத்தியர்கள் நாகபாசங்களினாலே கட்டிக் கடலிலே போகட அவன் அதில்வீழ்ந்து அசைந்துகொண்டு அதனைவிட்டுப் புறப்பட்டு வெளியில் வந்துவிட்டதனால், அம்பரமும் அஞ்சின வென்க. இதனால், அநிஷ்டநிவாரணத்திற்குத் தப்பாத உபாயமானபடியை விளக்கினாரென்க. 'முதலானவை' என்றதனால், பருவதம் முதலியன கொள்க.

பெரியதிருமந்திரத்தின் மகிமைக்கு ஓர் உதாரணம் எடுத்துக்காட்டியவாறு; அதன்மகிமையை, வேதங்களும் ருஷிகளும் ஆழ்வார்களும் சிறப்பித்துக்கூறியிருப்பனவற்றைச் சம்பிரதாய நூல்களிற் காணலாம். "ஸர்வவேதாந்தஸாரார்த்தஸ் ஸம்ஸாரார்ணவதாரக:—கதிரஷ்டாக்ஷரோ ந்ருணா மபுநர்ப்பவகாங்க்ஷிணாம்", "ஆர்த்தாவிஷண்ணாஶ்ஶிதிலாஶ்ச பீதா: கோரேஷு சவ்யாதிஷுவர்த்தமாநா: - ஸங்கீர்த்ய நாராயண ஶப்தமாத்ரம்விமுக்தது:காஸ்ஸுகிநோபவந்தி", "நாராயணேதிஶப்தோஸ்திவாகஸ்திவஶவர்த்திநீ - தாபிநரகேகோரேபதந்தீதிமத்புதம்" என்னும் வடநூல்மேற்கோள்களால் அம்மந்திரோச்சாரணத்தின்பயனை அறிக. "குலந்தரும் செல்வந்தந்திடும் அடியார்படுதுயராயினவெல்லாம், நிலந்தரஞ்செய்யும் நீள்விசும்பருளும் அருளொடு பெருநிலமளிக்கும், வலந்தரும் மற்றுந்தந்திடும் பெற்றதாயினுமாயினசெய்யும், நலந்தருஞ்சொல்லை நான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம்" என்ற பெரியதிருமொழிப்பாசுரமும் இங்குக் கருதத்தக்கது. (அக)

[துவாதசாக்ஷரமகாமந்திரம்.]

அஉ. அத்தாவரங்கத்தமர்ந்தவனே யெழுத்தாறிரண்டின்
வித்தாயநின்னருள்கொண்டல்லவோ வினைவொன்றறியா
வுத்தானபாதன்மகன்சலியாதுலகுள்ளளவு
மெத்தாரகைக்குமுனிவர்க்குமேற்சென்றிருக்கின்றதே.

(இ - ள்.) அத்தா—தலைவனே! அரங்கத்து அமர்ந்தவனே - திருவரங்கத்தில் எழுந்தருளி யிருக்கின்றவனே!—விளைவு ஒன்று அறியா - உண்டாவதனைச் சிறிதும் அறியாத, உத்தானபாதன் மகன் - உத்தானபாதமகாராசனது குமாரனாகிய துருவன், சலியாது - சஞ்சலமில்லாமல், உலகு உள்ள அளவும் - லோக முள்ளவரையிலும், எ தாரகைக்கும் முனிவர்க்கும் மேல் சென்று இருக்கின்றது - எல்லாநக்ஷத்திரங்களுக்கும் இருடிகளுக்கும் மேலான ஸ்தாநத்திற் போய் அடைந்திருக்கின்றது,—எழுத்து ஆறு இரண்டின்-ஸ்ரீ துவாதசாக்ஷரமகாமந்திரத்தினது, வித்து ஆய - விதையாகிய, நின் அருள்கொண்டு அல்லவோ - உனது கருணையினாலன்றோ? (எ - று.)

துவாதசாக்ஷரமகாமந்திரத்தின் பிரபாவத்திற்கு ஓர்உதாரணம் எடுத்துக்காட்டியவாறு. அம்மந்திரம் - 'நிறைந்தமகிமை துணிவு கீர்த்தி ஐசுவரியம் ஞானம் வைராக்கியம் என்பவற்றையுடையனான வாசுதேவனுக்கு நமஸ்காரம்' என்னும் பொருளையுடையது. தன்னைஉச்சரித்துஜபிப்பவர்க்கு இஷ்டசித்தியைக் கொடுக்கவல்லது. துருவன் அந்தமந்திரத்தின் மகிமையால் விமானத்தின்மீதேறிக்கொண்டு தேவயாநமார்க்கமாய் நவக்கிரகங்களுக்கும் மூன்றுலோகத்திற்கும் ஸப்தருஷிகளுடையஸ்தாநத்துக்கும் மேலேயுள்ள விஷ்ணுபதமென்கிற இடத்திற் சேர்ந்தானென்பதை ஈற்றடியால் விளக்கினர். காமவெகுளிமயக்கங்களை யொழித்துப் பரம்பொருளினிடத்தே மனத்தை உறுதிப்படுத்திய யோகிகளுக்கு இருவினைத்தொல்லைகள் யாவும் தொலைந்தபோது அடையத்தக்க இடம் அது. அங்குச்சென்றவர்கள் மறுபடி பிறப்படையாமற் பிரமனுடனே முத்திபெறுவார்கள் என அறிக. உத்தானபாதன் - சூரியகுலத்தில்தோன்றிய பிரசித்திபெற்ற ஓர் அரசன்.

விளைவு ஒன்று அறியா - இன்னது செய்தால் இன்னது வருமென்று அறியாத. இது - துருவனுக்கு அடைமொழி. இவ்வடைமொழி, துருவனது தவஞ்செய்தற்குத் தகாத மிக்க இளமையைக் காட்டும். இனி, இவ்வடைமொழியை உத்தானபாதனுக்கே கூட்டவுமாம்; தனதுமனைவியர் இருவரில் இளையாளிடத்து அன்புமிக்குப் பக்ஷபாதமாகநடப்பது பெருந்தீங்கிற்குக் காரணமென்பதைப் பகுத்துணராமல் நடந்துகொண்டனனாதலின். 'சலியாது' என்றது, பிரமகற்பம்வரையில் துருவன் சிறிதும் ஊறடையாது நின்றமையை வற்புறுத்தும் உள்ளளவு - விகாரம். (அஅ)

[திருவாயுதங்கள்.]

அகூ. புடைக்குங்குடமுலைப் பூமகளார்தம்பொருட்டுமுந்நீ
ரடைக்கும்பெரியபெருமாளரங்கரவர்கரத்துப்
படைக்குங்கமலமளிக்குமின்னூழிப்படைபடைக்குந்
துடைக்குங்கதை முத்திமாற்றுதுநல்குஞ்சுரிசங்கமே.

(இ - ள்.) புடைக்கும் - (மேன்மேற்) பருக்கின்ற, குடம் முலை - குடம்போன்ற தனங்களையுடைய, பூமகளார்தம் பொருட்டு - (இராவணனால் அபகரிக்கப்பட்ட) ஜாநகிப்பிராட்டியை மீட்பதற்காக, முந்நீர் - கடலை, அடைக்கும் - திருவணை கட்டியருளிய, பெரிய பெருமாள் அரங்கர் அவர் -

நம்பெருமாளது, கரத்து - திருக்கையில், படைக்கும் - தரிக்கின்ற, கமலம்- தாமரைமலர், அளிக்கும் - காக்கும்; மின் ஆழி படை - மின்னல் போல விளங்குகின்ற சக்கராயுதம், படைக்கும் - (உலகங்களைச்) சிருஷ்டிக்கும்; கதை - கதாயுதம், துடைக்கும் - அழிக்கும்; சுரி சங்கம் - உள்ளே சுழியைக் கொண்ட வலம்புரிச்சங்கம், முத்தி - பரமபதத்தை, மாற்றுது - கைம்மாறு கருதாமல், நல்கும் - கொடுக்கும்; (எ - று.)

பூமகள் - தாமரைப்பூவிலுள்ள திருமகள்; சீதாபிராட்டி இலக்குமியின் அம்சமானவளென்பதுபற்றி, இவ்வாறுகூறியது; அன்றிக்கே, பூ-வடசொல் லாய், பூமியின்மகள்; இது, அப்பிராட்டி கலப்பையுழுபடைச்சாலினின்று தோன்றியவளென்பதைச் சுட்டும். 'யோகிகள் ஸ்ரீமகாவிஷ்ணுவைத் தியா னிக்கும்போது சதுர்ப்புஜபக்ஷத்தில், சங்கசக்கரகதைகளும் தாமரைமலரும் ஏந்தியதாய்த் தியானிக்கவேண்டும்' என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற் கூறு மாறு காண்க. (அரு)

[திருச்சக்கரப்படை.]

அச. ஞாலத்திகிரிமுதுநீர்த்திகிரிநடாத்துமிந்தக்
காலத்திகிரிமுதலானயாவுங் கடல்கடைந்த
நீலத்திகிரியனையாரரங்கர்நிறைந்தசெங்கைக்
கோலத்திகிரிதலைநாளினிற்கொண்டகோலங்களே.

(இ - ள்.) ஞாலம் திகிரி - பூசக்கரமும், முதுநீர் திகிரி - ஜலசக்கரமும், நடாத்தும்-(இவற்றை) நடத்துகின்ற, இந்த காலம் திகிரி-இந்தக்காலசக்கர மும், முதலான - முதலிய, யாவும் - எல்லாம்,—கடல் கடைந்த-திருப்பாற் கடலைக் கடைந்தருளிய, நீலம் திகிரி அனையார் - நீலமலையை யொத்தவ ராகிய, அரங்கர்-அரங்கநாதரது, நிறைந்த - (உத்தமவிலக்கணங்கள்) அமை ந்த, செம் கை - சிவந்த வலத்திருக்கையிலே தரித்த, கோலம் திகிரி-அழகிய சக்கரம், தலைநாளினில் - முற்காலத்தில், கொண்ட - எடுத்த, கோலங்கள்- திருவுருவங்களாம்; (எ - று.)

இதனால், காலசக்கரம்முதலிய எல்லாவற்றிற்கும் திருவாழியாழ்வானே முதற்காரணமென்று கூறியவாறு. முன்செய்யுளால் திருமால் தமது திருக் கைகளிலேந்திய ஆயுதங்களின்தன்மைகளைப் பொதுவாகக்கூறி, இச்செய் யுளினாலும் அடுத்த செய்யுளினாலும் திருச்சக்கரத்தின் தன்மையைச் சிறப் பாகக் கூறுகின்றன ரென்க.

வட்டவடிவா யிருத்தலாலும், வட்டமாகச் சூழ்ந்திருத்தலாலும், மாறி மாறிச் சுழன்றுவருதலாலும்—ஞாலமும்,நீரும், காலமும், 'திகிரி' எனப்பட் டன. முதுநீர் - கடல்; பழையநீர். 'காலத்தினாலேயே மலைகள் சமுத்திரங் கள் முதலான சகல சராசரங்களுக்கும் வளர்தல் நசித்தல் முதலானவை உண்டாகும்' என்று புராணங்களிற் கூறுதலால், 'நடாத்து மிந்தக் காலத் திகிரி' என்றார். 'முதலான' என்றதனால், சிம்சுமாரசக்கரம் முதலியன கொள்க. (அச)

[இதுவும் அது.]

அரு. மோதித்திரைதவழ்நன்னீரரங்கர்முடிமுதலாஞ்
சாதிக்கதிர்மணிப்பேரணியாகித் தனஞ்சயன்போர்
பேதித்திரவுபகலாகவிண்ணிற்பிறழ்ந்து செங்கேழ்
சோதித்திகிரி திருமேனியெங்குஞ்சுடர்விடுமே.

(இ - ள்.) திரை மோதி தவழ் - அலை யெறிந்து வருகின்ற, நல் நீர் - நல்ல காவேரிநதியாற் சூழப்பட்ட, அரங்கர் - திருவரங்கத்துநாதரது, செம் கேழ் சோதி - சிவந்த நிறமமைந்த ஒளியையுடைய, திகிரி-சக்கரமானது,—முடி முதல் ஆம் - கிரீடம்முதலிய, சாதி கதிர் மணி பேர் அணி ஆகி-சிறந்த ஆகரத்தில்தோன்றிய ஒளியையுடைய இரத்தினங்களாலாகிய பெரிய ஆபரணகோடியிலேயாகி, தனஞ்சயன் போர் - அருச்சுனனுடைய (பதினெண் காநாள்) யுத்தத்தில், பகல் இரவு ஆக - பகல் இரவாகும்படி, பேதித்து - வேறுபடுத்தி, விண்ணில் - ஆகாயத்தில், பிறழ்ந்து - விளங்கி, திருமேனி எங்கும்-(அவரது)திருமேனி முழுவதிலும், சுடர் விடும் - ஒளிவீசும்; (எ - று.)

எம்பெருமானது திவ்வியாயுதங்கள் அன்பர்கட்கு ஆபரணகோடிகளாகத் தோன்றி அல்லாதார்க்கு ஆயுதமாக நின்று நிரசனஞ்செய்யு மென்னும் வரலாறு விளக்கப்பட்டது. தநஞ்ஜயன் - சயத்தையே தனமாகவுடையவன் ; வடசொல்: தருமபுத்திரன்செய்த இராஜசூயயாகத்திற்காக அருச்சுனன் பலதேசத்தரசர்களையும் வென்று மிக்கபொருள் கொண்டுவந்ததனால், அவனுக்குத் தநஞ்ஜயனென்று பெயர். (அரு)

[திருவனந்தாழ்வான்.]

அசு. ஓலாழிசூழ்புவியுச்சியிலேந்து முகக்கடையிற்
காலானநற்குணமூர்த்தியைக்காலு மக்காலமெல்லா
மேலாவிளங்கும் புவிமீதிலென்றன்விழுத்துணையா
மாலாமரங்கமணவாளர்கண்டுயின்மாசுணமே.

(இ - ள்.) என்தன் விழு துணை ஆம் - எனது சிறந்த துணையாகிய, மால் ஆம் - ஆச்சரிய குணசேஷ்டிதரான, அரங்கம் மணவாளர் - திருவரங்கத்தி லெழுந்தருளியிருக்கின்ற அழகியமணவாளப்பெருமாள், கண் துயில் - யோகநித்திரை செய்தற் கிடமாகிய, மாசுணம் - பெரும்பாம்பு [ஆதிசேஷன்],—ஓல் ஆழி சூழ் புவி - ஆரவாரத்தையுடைய கடல் சூழ்ந்த பூமியை, உச்சியில் ஏந்தும் - (தனது) முடிமேல் தாங்கும்; உகம் கடையில்-யுகாந்த காலத்தில், கால் ஆன நல் குணம் மூர்த்தியை காலும் - (தன்)சுவாசத்தினின்றும் பொருந்திய நல்ல குணங்களையுடைய காலாக்கினிருத்திர மூர்த்தியை உண்டாக்கும் ; அ காலம் எல்லாம் - அந்தப்பிரளயகாலமுழுதும், புவிமீதில் மேலா விளங்கும் - பூமியின்மேல் வந்து விளங்கும்; (எ - று.)

பிரளயகாலத்தில் ஆதிசேஷன் தன்சுவாசத்தினின்றும் பகவானுடைய அம்சமாகிய காலாக்கினிருத்திரனை யுண்டாக்கிப் பாதாளங்களை யெல்லாந் தகித்துக்கொண்டு பூமிக்கும் வந்து அதனையுங் கொளுத்திவிடு மென்பதாம். ஓல்-ஓலம்என்பதன் கடைக்குறை. விழு-விழுமம்என்ற உரிச்சொல்லின்சிதைவு; "விழுமம் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்" என்பது தொல்காப்பியம்.

[இதுவும் அது.]

அஎ. சென்றாற்குடையாங் கடற்புணையாந் திருத்தீவிகையா
நின்றாலிருதிருப்பாதுகையா நித்திரைக்கணையாங்
குன்றாமணியொளியாசனமாம் புனைகோசிகையா
மன்றாலிலையிற்றுயிலரங்கேசர்க்கரவரசே.

(இ - ள்.) அன்று-அக்காலத்தில் [பிரளயகாலத்தில்], ஆல்இலையில்—, துயில்-யோகநித்திரை செய்தருளுகின்ற, அரங்கேசர்க்கு - திருவரங்கநாதனுக்கு,—அரவு அரசு - (அவரும் பெரியபிராட்டியாருங் கூடிக் கண்ணுற்றுத் துகைத்துப் பரிமாறுகைக்கு யோக்கியமான வடிவையுடைய) திருவனந்தாழ்வான்,— சென்றால் - (உகப்புக்குப் போக்குண்டாக அவர்) உலாவியருளப் புக்கால், குடை ஆம் - (மழை வெயில் படாதபடி) குடையாகும்; கடல் - கடலிலே (கண்வளர்ந்தருளும்போதைக்கு), புணை ஆம் - திருப்பள்ளிமெத்தையாகும்; திரு தீவிகை ஆம்-(ஏதேனுமொன்றை விளக்கிட்டுக்காண அபேக்ஷிதமானபோது) மங்களதீபமாகும்; நின்றால் - (ஸ்வேச்சையாலே) எழுந்தருளி நின்றால், இரு திரு பாதுகை ஆம் - இரண்டு திருவடிநிலைகளாகும்; நித்திரைக்கு அணை ஆம் - (சாய்ந்தருளின போதைக்குப் பிராட்டிமார் சீறுமாறு என்னும்படி) திருவணையாகும்; குன்றா மணி ஒளி ஆசனம் ஆம் - (தன்னிச்சையாலே எழுந்தருளியிருந்தால்) குறைவுபடாத ஒளியினையுடைய இரத்தினமயமான திவ்விய சிங்காசனமாகும்; புனை கோசிகை ஆம் - (சாத்தியருளத் திருப்பரியட்டம் அபேக்ஷிதமான சமயத்தில் பும்ஸ்த்வாவஹமாகிய) அழகிய திருப்பரியட்டமாகும்; (எ - று.)

திருவநந்தாழ்வான் எம்பெருமானுக்குப் பலவகைக் கைங்கரியங்களையுஞ் செய்தலை இங்கு எடுத்துக்கூறினார். "சென்றாற் குடையாம் இருந்தாற் சிங்காசனமாம், நின்றான் மரவடியாம் நீள்கடலு - ளென்றும், புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கு, மணையாம் திருமாற் கரவு" என்றார் பெரியாரும். இப்படித் திருவனந்தாழ்வான் மிக்க உவப்போடு பலவடிவங்களையெடுத்துக்கொண்டு எம்பெருமானுக்கு சேஷவ்ருத்திகளை [அடிமைத்தொழில்களை]ச் செய்வதனால்தான், 'சேஷன்' எனப்படுகின்றான்; இங்கு, "நிவாஸ ஶய்யாஸந பாதுகாம்ஶுக உபதாந வர்ஷாதபவாரணாதிபி: - ஶரீர பேதைஸ் தவ ஶேஷதாம்கதை: யதோசிதம் ஶேஷ இதீர்யதேஜநை:" என்ற ஆசார்ய ஸூக்தியும் உணர்க. புணை - தெப்பம். தீவிகை - தீபிகை. பாதுகை - மரவடி. கோசிகை - பட்டாடை. அரவரசு - சர்ப்பராஜன்.

இச்செய்யுளில் 'அரங்கேசர்க்குஅரவரசு' என்னுஞ் சொற்கள் முன்னர்ப் பலவிடத்துஞ்சேர்ந்து, கடைநிலைத்தீவகவணியின்பாற்படும். (அஎ)

[பெரியதிருவடி.]

அஅ. சிரஞ்சேதனன்விழிதேகஞ்சிறைபின்சினைபதங்கந்
தரந்தோள்களுருவடிவம்பெயரெசுர்சாமமுமாம்
பரந்தேதமதடியார்க்குள்ளபாவங்கள்பாற்றியருள்
சுரந்தேயளிக்குமரங்கர்தமூர்திச்சுவணனுக்கே.

(இ - ள்.) தமது அடியார்க்கு - தமது பக்தர்களுக்கு, பரந்து உள்ள - பரவி யிருக்கின்ற, பாவங்கள் - தீவினைகளை, பாற்றி-அழியச்செய்து, அருள் சுரந்து அளிக்கும் - கருணை பொழிந்தருளுகின்ற, அரங்கர்தம் - நம்பெருமாளது, ஊர்தி - வாகனமாகிய, சுவணனுக்கு-பெரியதிருவடிக்கு,—சிரம்-தலை, சேதனன் - உயிர், விழி - கண்கள், தேகம் - உடல், சிறை - சிறகுகள், பின்னை - பின்புறம், பதம் - பாதங்கள், கந்தரம்-கழுத்து, தோள்கள்—, ஊரு- தொடை, வடிவம் - உருவம், பெயர் - திருநாமம், (இவைகளெல்லாம்), எசுர் சாமமும் ஆம்-யஜுர்வேதம் ஸாமவேதம் இவற்றின்ஸ்வரூபங்களாம்; (எ-று.)

கருடன் வேதமயனுனதனல், இவ்வாறு கூறினர். "வேதாத்மாவிஹகேஶ்வர:," "வன்னுதப்புள்" என்றார் பெரியாரும். 'கருத்மானுக்கு த்ருவ்ருத்தென்பது சிரஸ், ஸ்தோமமென்பது ஆத்மா, காயத்ரியென்பது கண், ஸாமமென்பது உடல், ப்ருஹத் ரதந்தரம் என்பவை இரண்டும் இரண்டு சிறகுகள், யஜ்ஞாயஜ்ஞியமென்பது தோகை, மற்றைச் சந்தஸுகள் மற்றையவுறுப்புக்கள், பெயர் யஜுஸுக்கள்' என்று வேதத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது; ஆகவே, இச்செய்யுள் மறைப்பொருளாதல் காண்க. கந்தரம் - தலையைத் தரித்துநிற்பது எனக் கழுத்துக்குக் காரணப்பெயர்; கம் - தலை. சுவணன் - ஸுபர்ணன் என்பதன் சிதைவு; அழகியஇறகுகளையுடையவனென்பது அவயவப்பொருள். ஊர்தி - ஏறிநடத்தப்படுவதெனக் காரணக்குறி. (அஅ)

[சேனைமுதலியார்.]

அகூ. ஆளிலமரரரங்கேசர்சேவைக்கணுகுந்தொறுங்
கோளிற்றிரளைவிலக்கும்பிரம்பின்கொனைபடலாற்
றோளிலடித்தழும்புண்டச்சுரர்க்கச்சுரர்தொழலாற்
றாளின்முடித்தழும்புண்டுநஞ்சேனைத்தலைவருக்கே.

(இ - ள்.) அமரர் - தேவர்கள், ஆளில் - அடிமைசெய்வதற்காக, அரங்கேசர் - நம்பெருமாளது, சேவைக்கு—, அணுகும் தொறும் - சமீபிக்கும் பொழுதெல்லாம், கோளின் - வலிமையுடைய, திரளை - கூட்டத்தை, விலக்கும் - விலக்குகின்ற, பிரம்பின் - (ஸ்ரீசேனைமுதலியாரது திருக்கையில் தரித்த) பிரம்பினது, கொனை - நுனி, படலால் - தாக்குதலால்,—அ சுரர்க்கு - அந்தத் தேவர்களுக்கு, தோளில்—, அடி தழும்பு - அப்பிரம்படிபட்ட காயம், உண்டு—; அ சுரர் தொழலால் - அத்தேவர் வணங்குதலால், நம் சேனைத்தலைவருக்கு - நமது சேனைமுதலியாருக்கு, தாளில் - திருவடிகளில், முடி தழும்பு - (அத்தேவர்களது) கிரீடங்கள் பட்ட காயம், உண்டு—; (எ - று.)

சேனைத்தலைவர் - பரமபதத்திலுள்ள நித்தியமுக்தர்களின் திரளுக்குத் தலைவர், சேனுபதியாழ்வார்: இவர், விஷ்வக்ஸேநரென்றுங் கூறப்படுவர். எக்காரியம் தொடங்கினாலும் அத்தொடக்கத்தில் விக்கின நிவிருத்தியின் பொருட்டுச் சைவர்கள் விநாயகபூஜைசெய்வதுபோல வைஷ்ணவர்கள் விஷ்வக்ஸேநாராதநஞ் செய்யவேண்டுதல் மரபாதலை அறிக. நமது குருபரம்பரையில் எம்பெருமான்பிராட்டிகட்குப்பின்னே நம்மாழ்வார்க்கு முன்னே

விளங்கும் பிரதானஆசாரியர் இவர். எம்பெருமானது திருவோலக்கத்தில் சேவிப்பதற்குநெருங்கிவரும் தேவர்களின் திரளை யிலக்கும்போது இவரது கைப்பிரம்பினடி அத்தேவர்களின் தோள்களிலும், அவர்கள் இவரைச் சாஷ்டாங்கமாக வணங்குகையில் அவர்களதுமுடித்தழும்பு இவரதுதிருவடிகளிலும் விளங்குமென்று சமத்காரமாகக் கூறப்பட்டது. (அக)

[சிறியதிருவடி.]

கூo. ஆதித்திருவெழுத்தைந்துடைத்தாயுமராவணிந்துஞ்
சோதித்திருக்கண்கண்மூன்றுடன்றோன்றுஞ் சுருதிசொன்ன
நீதிக்கிசையநடவாமனிதரைநேமிகொண்டு
வாதித்தருளும்பெருமாளரங்கர்தம்வாகனமே.

(இ - ள்.) சுருதி சொன்ன - வேதங்கள் கூறிய, நீதிக்கு - விதிவிலக்குக்களுக்கு, இசைய-பொருந்தும்படி, நடவா - நடவாத, மனிதரை—,நேமிகொண்டு - சக்கரத்தால், வாதித்தருளும் - அழித்தருளுகின்ற, பெருமாள் அரங்கர்தம்-நம்பெரியபெருமாளது, வாகநம்-வாகனமாகிய சிறியதிருவடி,—ஆதி திரு எழுத்து ஐந்து உடைத்து ஆயும்-முதன்மையாகிய பஞ்சாக்ஷரமகாமந்திரத்தை யுடையதாகியும், அரா அணிந்தும் - சர்ப்பங்களை (ஆபரணமாக) அணிந்தும், சோதி திரு கண்கள் மூன்றுடன் - (சூரிய சந்திர அக்கினிக ளென்னும்) முச்சுடர்வடிவமாகிய மூன்று திருக்கண்களோடும், தோன்றும்—; (எ - று.)

திருவெழுத்தைந்து - பஞ்சாக்ஷரமகாமந்திரம்; இது, சிவபிரானுக்கு உரியது. சோதித்திருக்கண்கள்மூன்று-"இறைவனுக்குக் கண்மூன்றும் முச்சுடர்." இராவணனது இம்சையைப் பொறுக்கமாட்டாமல் தேவர்கள்யாவரும் திருமாலைச் சரணமடைய, அப்பெருமான் தான் தசரதமகாராஜனுக்குப்புத்திரனாகத் திருவவதரிப்பதாக வாக்களித்து, தேவர்களை அக்காலத்துத் தனக்குத்துணையாக உதவும்படி கட்டளையிட்டபடியே தேவர்கள் வானரசாதியிற் பலபடியாகப் பிறக்கையில் சிவபெருமான் தனது அம்சத்தினால் அநுமானை உண்டாக்கினனென்பது, வரலாறு. சிறியதிருவடி பரமசிவனது அம்ச மாதலால், இவ்வாறு கூறினார்; அதனை, "புராரிமற்றியானே வாத, சேயெனப்புகன்றான்" எனக் கம்பராமாயணத்திற் கூறியதனாலு முணர்க. இனி, வாதித்து அருளும் எனப் பிரித்து, துஷ்டர்களை நிக்கிரகித்துச் சிஷ்டர்களைப் பரிபாலிப்பவ ரென்றுமாம். ஶ்ருதி என்ற வடசொல்லுக்கு - எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்யகிரமத்திற் கர்ணபரம்பரையிற் கேட்டேவருவது என்று அவயவப்பொருள். வாஹநம்-வடசொல்; தாங்குவது என்று பொருள். (கூo)

[இதுவும் அது.]

கூக. வல்லாமுலைத்திருவின்பெருமான்விட்டவாகனம்போய்த்
தொல்லாழிநீரைக்கடந்ததுதாளின் சுடரிரண்டுஞ்
செல்லாதவூரைத்திரிபுரங்கண்டது சேனைவெள்ள
மெல்லாமுயக்கொண்டது மருந்தார்கிரியேந்திவந்தே.

(இ-ள்.) வல் ஆம் முலை - சூதாடுகருவியை யொத்த தனங்களையுடைய, திருவின் - திருமகளுக்கு, பெருமான் - தலைவனாகிய நம்பெருமாள், விட்ட - (ஸ்ரீராமாவதாரத்திற் சாநகியைத் தேடுவதற்காக) அனுப்பிய, வாகனம் - தமது வாகனமாகிய சிறிய திருவடி,—போய்—, தொல் ஆழி நீரை-பழைய சமுத்திரஜலத்தை, தாளின் - தனது பாதங்களால்,கடந்தது-தாண்டிற்று; சுடர் இரண்டும் செல்லாத ஊரை - சூரியசந்திரர் இருவரும் (இராவணனாஜ்ஞையாலே) நுழைந்து மறியாத இலங்கையை, திரிபுரம் கண்டது-திரிபுரங்களைப்போல எரியச்செய்தது;(அவ்விலங்கையில் யுத்தம்நடந்தபொழுது), மருந்து ஆர் கிரி - (ஸஞ்சீவிநியென்னும்) ஔஷதியுள்ள (துரோணமென்னும்) மலையை, ஏந்தி வந்து - எடுத்துக்கொண்டுவந்து, சேனை வெள்ளம் எல்லாம் - (ஸ்ரீராமபிரானது எழுபது) வெள்ளஞ் சேனைகளையும், உய கொண்டது - பிழைக்கச்செய்தது; (எ - று.)

இச்செய்யுளில் அநுமான்செய்த செயற்கருஞ்செயல்களுள் மூன்றைக் கூறி அவனது போராற்றலை விளக்கியவாறு. வல் - மெய்யுவமை; இனி, வலிமையாகிய என்றுமாம். 'சுடரிரண்டுஞ்செல்லாத' என்றது, சூரிய சந்திரர்கள் பிறவிடங்களிற்போலத் தமது மிக்கவெப்பத்தோடுந் தட்பத்தோடுஞ் செல்லாமல் இலங்கையில் இராவணனிடத்து அச்சத்தால் ஒடுங்கிச்செல்வரென்னுங் கருத்தால். முச்சுடர்களுள் இருசுடர் செல்லாத ஊரை அநுமான் மற்றொரு சுடருக்கு வசமாக்கினன் என்பதாம். அநுமான் மருந்துமலையை ஏந்தி வந்தது, இராமன் முதலியோர் இந்திரஜித்தின் அஸ்திரங்களால் மூர்ச்சித்துக்கிடந்தபொழுதி லென்க. வெள்ளம் - ஒருபெருந்தொகை. (கூக)

[ஸ்ரீவைகுண்டம்.]

கூஉ. தொல்லைக்கமடத்தலநவகண்டந்தொடுகடனீ
ரெல்லைக்கிரிதனக்கிப்புறத்தெண்கிரியப்புறத்தின்
மல்லைப்பரிதியின்மண்டலநாகமவ்வான்முகட்டூ
ரல்லப்புறத்துவைகுந்தம்பொற்கோயிலரிக்கிடமே.

(இ - ள்.) (முதலில்),தொல்லை கமடம் தலம்-ஆதிகூர்மந் தாங்குகின்ற கீழுலகம்; நவ கண்டம் - (அதன்மேல்) ஒன்பது கண்டங்கள்; தொடு கடல் நீர்-(அவற்றைச் சூழ்ந்த) சமுத்திர ஜலம்; எல்லை கிரி - (அவற்றைச் சூழ்ந்த) சக்கரவாள பருவதம்; தனக்கு - அதற்கு, இப்புறத்து - இப்புறத்தில், எண் கிரி - அஷ்டகுல பர்வதங்கள்; அப்புறத்தில்—, மல்லை பரிதியின் மண்டலம் - வட்டமாகிய சூரியமண்டலம்; நாகம் - (அதன்மேல்) சுவர்க்கலோகம்; அ வான் முகடு ஊர் - (அதன்மேல்) அம்மேலுலகங்களினுச்சியிலுள்ள சத்தியலோகம்; அல்-(அதற்கு வெளியில்) அந்தகாரம்; அப்புறத்து - அதற்குமேலுள்ள, வைகுந்தம் - ஸ்ரீவைகுண்ட மென்னும் நகரமானது,— பொன் கோயில் அரிக்கு - அழகிய திருவரங்கத்தி லெழுந்தருளியிருக்கின்ற நம்பெருமாளுக்கு, இடம் - (பரத்துவம் விளங்கும்படி) எழுந்தருளியிருக்கும் தலமாம்; (எ - று.)

ஐயங்கார் வைகுண்டம் இன்னவிடத்திலுள்ளதென்று ஒருவாறு ஊகித்துணர்தற்பொருட்டுப் பூகோளநிலையை இப்பாசுரத்திற் சுருக்கிக் கூறுகின்றார்; 'எல்லாவற்றிற்கும் கீழிருந்துகொண்டு உலகங்களையெல்லாம் ஆதிகூர்மம் தாங்குகின்றது; அவற்றையடுத்து அதலம் முதலிய கீழேழுலகங்கள் இருக்கின்றன: அவற்றிற்குமேல் அஷ்டகுலாசலங்களோடுங் கூடிய ஜம்பூத்வீபம் முதலிய நவத்வீபங்களைக் கொண்ட பூமி பெரும்புறக்கடலினாலும் சக்ரவாளமலையினாலும் சூழப்பட்டதாயிருக்கின்றது; இதற்குமேல் சூரியமண்டலமும் அப்பால் புவர்லோகம் முதல் ஸத்யலோகம் ஈறாக வுள்ள லோகங்களும் இருக்கின்றன: இவ்விடத்தோடு ப்ரக்ருதிமண்டலம் முடிந்திடுதலால் அந்தகாரமயமான வெளியொன்று அங்கு இருக்கின்றது; அப்பால், தேஜோமயமாயும் ஆநந்தமயமாயு முள்ள திருமாலின் ஸ்ரீவைகுண்டலோகமென்பது இருக்கின்றதென்பதாம்; இம்முறையே உலகம் அமைந்திருப்பதென்பதை ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலிய நூல்களிற் காணலாம்.

எம்பெருமானது ஐவகைநிலைகளுள் பரத்துவநிலை விளங்குந் தானம் இது. வைகுந்தம்-வைகுண்டம் என்ற வடசொல்லின் திரிபு. தடையென்னும் பொருளுடைய 'குடி' என்னும் வடமொழித்தாதுவினடியாப்பிறந்து 'வி' என்னும் எதிர்மறையுபசர்க்கம்பெற்ற 'விகுண்டா:' என்ற பதம் ஞானசக்தியாதிகளில் தடையில்லாத நித்தியசூரிகளைக் குறிக்கும்; அவர்கள் வாழ்கின்றதானம் - வைகுண்டம்; இனி, ஞானசக்தியாதிகளில் தடையில்லாத எம்பெருமானது தானமென்றும் பொருள்கூறுவர் ஆன்றோர். இன்னும், இச்சொல்லுக்கு— ஒருகாலத்தில், திருமால் தன்னைப் புதல்வனாகப்பெற விரும்பித் தன்னைக்குறித்துத்தவஞ்செய்த சுப்பிரமுனிமனைவியான விகுண்டையென்பவளிடத்தில் ஒரு குமாரனாக அவதரித்ததனால், அப்பெருமானுக்கு 'வைகுண்டன்' என்று ஒருதிருநாமம். அப்பெயர்தானே அவளது வேண்டுகோளின்படி அவனது உலகத்துக்கும் பெயராக இட்டுவழங்கப்பட்டது என்று கூறப்படுவதும் காண்க.

நவகண்டம் - இந்திரம், கசேரு, தாமிரபருணம் கபஸ்திமான், நாகம், சவுமியம், காந்தருவம், வாருணம், பாரதம்என்பன; கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்னிரேபதம், வடபாரதம், தென்பாரதம், மத்திமம் என்பாருமுளர். அரி - ஹரி, (அடியவர் அருவினைகளை) அழிப்பவன்; அன்றிக்கே, (துஷ்டர்களை) நிக்கிரகிப்பவன். தொடுகடல் - (சகரபுத்திரர்களால்) தோண்டப்பட்ட கடல். (கஉ)

[இதுவும் அது.]

கங. எந்தவுலகத்துமேலது நித்தியமின்பத்தது
பந்தநசிப்பது நித்தருமுத்தரும்பாரிப்பது
முந்தைமறையினின்றல்லாதெத்தேவர்க்குமுன்னவரி
தந்தமில தரங்கன்மேவுவைகுந்தமானதுவே.

(இ - ள்.) அரங்கன்—, மேவு - எழுந்தருளியிருக்கின்ற, வைகுந்தமானது - ஸ்ரீவைகுண்ட லோகமானது:— எந்த உலகத்தும் மேலது - எல்லாவுலகங்கட்கும் மேலிடத்தி லுள்ளது; நித்தியம் இன்பத்தது - எப்

பொழுதும் அழியாதுள்ள பேரின்பத்தையுடையது; பந்தம் நசிப்பது - (அங்குச்செல்பவர்க்கு) ஸம்ஸார பாசபந்தம் அழியப்பெறுவது; நித்தரும் முத்தரும் பாரிப்பது-நித்தியர்களும் முக்தர்களும் வாழப்பெறுவது; முந்தை மறையின்நின்று அல்லாது - பழமையாகிய வேதங்களைகொண்டல்லாமல்,(வேறு வகையால்),எ தேவர்க்கும்-எத்தகைய தேவர்களுக்கும், முன்ன அரிது - நினைத்தற்கும் அரிய தன்மையது; அந்தம் இலது - அழிவில்லாதது; (எ - று.)

மேலது - மேற்பட்ட தன்மைய தென்றுமாம். நித்தியவின்பம் - என்றும் அழியாத நிரதிசயப்பேரின்பம். பந்தம் - கட்டு; பந்தமாவது - மனைவி மக்கள் வீடு செல்வம் முதலிய சம்பந்தமுடையபொருள்களிடத்து உண்டாகும் மனப்பிணிப்பு. வேதம் எல்லா நூல்கட்கும் மூலகாரணமானதாதலின், அதனை, 'முந்தைமறை' என்றார். நித்தியர் - ஸ்ரீவைகுண்டத்திலே நிலையாக வாழ்கின்ற அநந்த கருட விஷ்வக்ஸேநாதியர். முக்தர் - இவ்வுலகங்களினின்று வீடுபெற்றவர். சிந்தையும் மொழியுஞ் செல்லாநிலைமைத் தாதலால், 'முன்னவரிது' என்றார். வேதங்களின் உதவியினாலேயே முக்தியுலகம் கிடைக்கக்கூடியதென்பது, மூன்றுமடியின் கருத்து. (கூ௩)

[திருப்பாற்கடல்.]

கூ௪. காவுஞ்சுரபியுஞ்சிந்தாமணியுங்கடிக்கமலப்
பூவும்பணிலமும்பொங்கிளமாவும்புகர்த்தடக்கைம்
மாவும்பிறையுமமுதமுமெங்ஙன்மதிலரங்கர்
மேவுந்தரங்கக்கடலில்லையாகிலிவ்விண்ணவர்க்கே.

(இ-ள்.) மதில் அரங்கர் - ஏழு மதில்கள் சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளிய நம்பெருமாள், மேவும் - (வியூகநிலையிற்) பள்ளிகொண்டருளுகின்ற, தரங்கம் கடல்-அலைகளையுடைய திருப்பாற்கடல், இல்லை ஆகில்—, இவ்விண்ணவர்க்கு-இந்தத்தேவர்களுக்கு, காவும்-கற்பகச்சோலையும், சுரபியும்-காமதேனுவும், சிந்தாமணியும் - சிந்தாமணி யென்னு மிரத்தினமும், கடி கமலம் பூவும்-வாசனையையுடைய தாமரைமலரின் பேர்கொண்ட பதுமநிதியும், பணிலமும்-சங்கநிதியும், பொங்கு இள மாவும்-விளங்குகின்ற இளைய (உச்சைசிரவமென்னும்) குதிரையும், புகர் தட கை மாவும் - செம்புள்ளிகளையுடைய பெரிய துதிக்கையையுடைய (ஐராவதமென்னும்) யானையும், பிறையும் - சந்திரனும், அமுதமும்—, எங்ஙன்-(இவையெல்லாம்)எங்கிருந்து உண்டாகும்? (எ - று.)

எம்பெருமான் திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டிருத்தலின் அவனது சம்பந்தத்தால் பாற்கடலினின்று தேவர்கட்கு இன்றியமையாத எல்லாப் பொருள்களும் உண்டாயின என்பதாம். திருப்பாற்கடல் - திருமாலினது ஐவகைநிலையுள் வியூகநிலை விளங்குந் தானம். கடி-விளக்கமுமாம். கமலப்பூ-திருமகளுக்கு ஆசனமாகவிருந்த செந்தாமரைமல ரென்றுமாம். இவையெல்லாம், எம்பெருமான் திருவருளால் அவனது சயனத்தலமான திருப்பாற்கடலைக் கடையும்போது அதனினின்று உண்டான தேவலோகத்துச்செல்வங்கள். (கூ௪)

[ஏழுமதில்களும், திருவரங்கவிமானமும்.]

கூரு. அருமறையோதியவோரெட்டெழுத்துமயன்படைத்த
இருநிலமீதினில்யாவருங்காணவிலங்குதுத்திக்
குருமணிநாகத்திலெங்கோன்விழிதுயில்கொண்டருளத்
திருமதிலேழும்விமானமுமாகிச்சிறக்கின்றவே.

(இ - ள்.) அரு மறை ஓதிய - அறிதற்கரிய வேதங்களிற் கூறிய, ஓர் எட்டு எழுத்தும் - ஒப்பற்ற திருவஷ்டாக்ஷரமும்,—அயன்படைத்த-பிரமன் சிருஷ்டித்த, இரு நிலம் மீதினில் - பெரிய நிலவுலகத்தில், யாவரும்—, காண - சேவிக்கும்படி, இலங்கு துத்தி - விளங்குகின்ற படப்புள்ளிகளையும், குரு மணி - பெரிய மாணிக்கங்களையுமுடைய, நாகத்தில் - திருவனந்தாழ்வான்மேல், எம் கோன் - நம்பெருமாள், விழி துயில் கொண்டருள - யோக நித்திரை செய்தருளும்படி, திரு மதில் ஏழும் விமானமும் ஆகி - ஏழுதிரு மதில்களும் திருவரங்கவிமானமுமாகி, சிறக்கின்ற-மேன்மைப்படுகின்றன.

அருமறையோதியவோரெட்டெழுத்து-விஷ்ணுகாயத்ரியில் தலைமையாக எடுத்துக்கூறப்பட்டுள்ள ஸகலவேதஸாரமான திருமந்திர மென்றபடி.குரு-நிறமுமாம். திருவஷ்டாக்ஷரமகாமந்திரத்தை ஆராய்பவர்க்குக் கடவுளின் தன்மை புலப்படுவதுபோல, ஸ்ரீரங்கத்திற்செல்பவர்க்கும் கடவுள் நேரே புலனாவதலால், அத்திருப்பதியை அந்தத்திருமந்திரமாகவே உத்ப்ரேக்ஷிக்கின்றனர்: அஷ்டாக்ஷரத்திருமந்திரத்துள் பிரணவம் - விமானமும், மற்றையேழுதிருவெழுத்துக்களும்-ஏழுமதில்களுமாயின வென்க. திருவரங்கவிமானம் பிரணவாகாரமாக இருத்தல், இவ்வாறு உத்பிரேக்ஷித்துக் கூறுவதற்குக் காரணம். விழிதுயில்-விழியாநின்று செய்யுந் துயிலெனநிகழ்காலவினைத்தொகை; துயிலாத்துயில், யோகநித்திரை. இருள்தருமாஞாலத்தில் ஞானசூனியர்களான மனிதரும் சேவித்துத் தத்துவஞானம்பெறுமாறு அத்திருப்பதியில் எம்பெருமான் எழுந்தருளியருக்குந்தன்மையைப் பாராட்டி 'இருநிலமீதினில் யாவருங்காண...சிறக்கின்ற' என்றார். (கூரு)

[இதுவும் அது.]

கூசு. தாழாதிபஞ்சொல்லவந்தாரரங்கர்தயங்குசெம்பொற்
கேழாவிமானங்கிளர்செம்பொன்மேருகிரிநிகர்த்த
வேழாவரணத்திடையிடைத்தீவுகளிவ்வனைத்துஞ்
சூழாறுமாகடலெவ்வாறுநாமினிச்சொல்லுவதே.

(இ - ள்.) இபம் - கஜேந்திராழ்வான், சொல்ல - (ஆதிமூலமேயென்று) கூப்பிட, தாழாது வந்தார் - காலம்நீட்டியாது [உடனே] அங்கு எழுந்தருளி (அதன் துன்பத்தைத் தீர்த்தருளிய), அரங்கர்-நம்பெருமாளது, தயங்கு செம்பொன் கேழ் ஆ விமானம்-விளங்குகின்ற செம்பொன்மயமாகிய விமானம், கிளர் செம் பொன் மேரு கிரி - விளங்குகின்ற சிவந்த பொன்மயமான மகாமேருமலையையும்,—ஏழ் ஆவரணத்து இடை - ஏழு மதில்களின் நடுவிலுள்ள இடங்கள், இடை தீவுகள் - (கடலின்) நடுவிலுள்ள ஸப்தத்வீபங்களையும்,—இ அனைத்தும் சூழ் ஆறு-இவ்வெல்லாவற்றையுஞ் சூழ்ந்த காவேரி நதி, மா கடல் - பெரிய கடலையும், நிகர்த்த - ஒத்தன ; இனி நாம் எ ஆறு

சொல்லுவது - இனிமேல் நாம் (விமானம் முதலியவற்றைப்பற்றி) வேறு எவ்விதமாக வருணித்துக்கூறுவது? (எ - று.)

ஸ்ரீரங்கத்தைச்சுற்றிச்செல்லுங் காவேரிநதி கடலையும், ஸப்தப்ராகார மத்தியிலுள்ள இடங்கள் கடலினிடையேயுள்ள ஏழுதீவுகளையும், நடுவிலுள்ள பிரணவாகாரமான பொன்மயமாகிய ஸ்ரீரங்கவிமானம் பூமிமத்தியிலுள்ள மேருபருவதத்தையும் போலு மென்பதாம். 'எவ்வாறு நாமினிச் சொல்லுவது' என்றதனால், பூலோக வைகுண்டமாகிய திருவரங்கத்தின் மகிமை வருணித்துச் சொல்வதற்கு எவ்வாற்றாலும் இயலாது என்றவாறு. இடம் - வடசொல். 'ஆம் விமானம்' என்றும் பாடம். (கசு)

[சயனத்திருக்கோலம்.]

கஎ. ஞாலத்திகிரிபகலிரவாகநடத்துமிந்தக்
காலத்திகிரிநடக்கவற்றோ வெங்கனலுமிழ்வா
யாலப்பணியணைமீதேயரங்கத்தமர்ந்துறையு
நீலக்கடல்கண்விழித்துறங்காவிடினிச்சமுமே.

(இ - ள்.) அரங்கத்து - திருவரங்கத்தில், வெம் கனல் உமிழ் வாய் - கொடிய நெருப்பை யுமிழ்கின்ற வாயினையும், ஆலம் - விஷத்தையுமுடைய, பணி - திருவனந்தாழ்வானாகிய, அணைமீதே - சயனத்தில், அமர்ந்து உறையும் - விரும்பி யெழுந்தருளி யிருக்கின்ற, நீலம் கடல் - நீலநிறமாகிய கடல் போன்ற நம்பெருமாள், நிச்சமும்-தினந்தோறும், கண்விழித்து உறங்காவிடின் - யோகநித்திரை செய்து விழியாவிட்டால்,—ஞாலம் திகிரி - பூமி சக்கரத்தை, பகல் இரவு ஆக - பகலும் இரவுமாக, நடத்தும் - நடத்துகின்ற, இந்த—, காலம் திகிரி - கால சக்கரம், நடக்க வற்றோ - இடையறாது நடத்தற்கு வன்மையையுடைய தாகுமோ? [ஆகாது என்றபடி]; (எ - று.)

யாவும் நம்பெருமாளது சங்கல்பத்தின்படியே நடக்கு மென்றவாறு. நீலக்கடல் கண்விழித்து உறங்குதல் - கரியகடல்போன்ற திருமேனியையுடைய நம்பெருமாள் (ஜகத்ரக்ஷணசிந்தையோடு) செய்யும் அறிதுயிலென்க. இங்ஙனம் எம்பெருமான் உலகத்தை ரக்ஷிக்கவேணுமென்னுஞ் சங்கல்பத்துடனே யோகநித்திரை செய்வதனால்தான் இவ்வுலகில் பகலிரவுகள் தோன்றி இவ்வுலகத்துஉயிர்களை வாழ்விக்கின்றன என்பதாம். யோகநித்திரை என்ற தொடர் உலகத்தைப் பாதுகாத்தற்கு உபாயத்தைத்தேடுகின்ற துயில் என்று பொருள்படுதலும் அறியத்தக்கது; "உறங்குவான்போல் யோகு செய்த பெருமான்" என்று நம்மாழ்வார் அருளிச்செய்திருத்தலுங் காண்க. வற்று - வல் என்னும் பண்படியாப் பிறந்த குறிப்பு முற்று. நிச்சம் - நித்யம் என்ற வடசொல்லின் திரிபு. நீலக்கடல் - உவமவாகுபெயர். (கஎ)

[இதுவும் அது.]

கஅ. தாமக்கடையுகத்துள்ளேவிழுங்கித்தரித்தபழஞ்
சேமப்புவனஞ்செரிக்குமென்றே சிவன்மாமுடிக்கு
நாமப்புனறந்தபொற்றாளரங்கர்நலஞ்சிறந்த
வாமத்திருக்கரமேலாகவேகண்வளர்வதுவே.

(இ - ள்.) சிவன் மா முடிக்கு - சிவபிரானது பெரிய தலைக்கு, நாமம் புனல் - பரிசுத்தமாகிய கங்காதீர்த்தத்தை, தந்த - உண்டாக்கிக்கொடுத்தருளிய, பொன் தாள் - அழகிய திருவடிகளையுடைய, அரங்கர்—, நலம் சிறந்த - அழகுமிக்க, வாமம் திரு கரம் - இடத்திருக்கை, மேல் ஆக - (தமக்கு) மேலாயிருக்க, கண் வளர்வது - பள்ளிகொண்டருளுவது,— தாம்—, அ கடை யுகத்துள்ளே-அந்த யுகாந்தகாலத்தில், விழுங்கி - உட்கொண்டு, தரித்த -தமதுவயிற்றில் வைத்திருக்கின்ற, பழ சேமம் புவனம் - தம்மாற் காக்கப்படுகின்ற பழைய உலகங்கள், செரிக்கும் என்றே - ஜீர்ணித்துவிடுமென்னுங் கருத்தாலேயாம் ;(எ - று.)

'வாமத் திருக்கர மேலாக' என்றதனால், வலத்திருக்கரம்கீழாகக்கண்வளர்ந்தருளுகின்றனர் என்றதாயிற்று; "மின்னிலங்கு தொடிவலய வியன்வலக்கை கீழ்கொடுத்துத், தென்னிலங்கைத் திசைநோக்கித் திருநயனந் துயில்வோய்" என்பர் திருவரங்கக்கலம்பகத்தில். இடக்கை கீழ்கொடுத்து வலக்கை மேலாகக் கண்வளர்ந்தருளினால், தமது வயிற்றில் இடப்பக்கத்திலுள்ள ஜாடராக்கினியின் சுவாலை பட்டு அங்குத் தரிக்கப்பட்டிருக்கின்ற அண்டங்களெல்லாம் அழிந்துவிடுமென்று கருதி, நம்பெருமாள் அங்ஙனமன்றி வலக்கை கீழ்கொடுத்து இடக்கை மேலாகக் கண்வளர்ந்தருளினரென்பதாம். இது, திருவரங்கநாதன் இயற்கையில் வலக்கை கீழாகவும் இடக்கை மேலாகவும் பள்ளிகொண்டிருத்தற்கு ஓர் ஏதுவைக் கற்பித்துக் கூறியதனால், ஏதுத்தற்குறிப் பேற்றவணியாம்; தேற்றேகாரம், இதன் உருபாகும்: இவ்வணியினால். எம்பெருமான் காத்தற்றொழிலிற் கருத்தாயிருக்குந்தன்மை வெளியாம். என்றே என்னும் ஏகாரத்தை வினாவாகக் கொண்டு பொருளுரைத்தலுமாம். திரிவிக்கிரமாவதாரகாலத்தில் மேலேசென்ற திருமாலினது திருவடியைப் பிரமன் தனதுகைக்கமண்டலதீர்த்தத்தாற் கழுவிவிளக்க, அத்தீர்த்தமே கங்காநதியாகப் பெருகி வானத்தினின்று பூமிக்கு வருகையில் சிவபிரான் தனதுசடைமுடியில் ஏற்றனனாதலால், 'சிவன்மாமுடிக்கு நாமப்புனல்தந்த பொற்றாளரங்கர்' என்றார். இனி, நாமப்புனல் - பிரசித்திபெற்ற கங்காநதி யெனினுமாம். (கூஅ)

[திருக்கைகள்.]

கூகூ. கதிராருநீண்முடிசேர்ந்தகைப்போதெக்கடவுளர்க்கு
மதிராசனாமைகாண்மினென்றேசொல்லுமாயபொன்மா
மதிலாரரங்கர்பொற்றாளார்திருக்கரமற்றிதுவே
சதுராननன்முதலெல்லாவுயிர்க்குஞ்சரணென்னுமே.

(இ - ள்.) பொன் ஆய மா மதில் ஆர் அரங்கர் - பொன்னாலாகிய பெரிய மதில்கள் பொருந்திய திருவரங்கத்து நாதரது, கதிர் ஆரும் நீள்முடி சேர்ந்த - ஒளி நிறைந்த நீண்ட கிரீடத்தைப் பொருந்திய, கை போது - தாமரைமலர்போன்ற வலத்திருக்கையானது,—'எ கடவுளர்க்கும் - எல்லாத்தேவர்களுக்கும், அதிராசன் ஆனமை - (இப்பெருமான்) தலைவனான தன்மையை, காண்மின் - பாருங்கள்,' என்றே சொல்லும்—; பொன் தாள்

ஆர் - அழகிய திருவடிகளைப் பொருந்திய, திரு கரம்-இடத்திருக்கையானது, 'இதுவே - இத்திருவடியே, சதுர்ஆனனன் முதல் - நான்குமுகமுடைய பிரமன் முதலிய, எல்லா உயிர்க்கும்—, சரண் - புகலிடம்,' என்னும் - என்று சொல்லும்; (எ - று.)

சயனத்திருக்கோலத்தில் நம்பெருமாளது திருமுடியைச்சேர்ந்த முடக்கிவைத்த வலத்திருக்கையானது'எல்லாத்தேவர்க்கும் இவனே இறைவன்' என்பதையும், திருவடியைச்சேர்ந்த நீட்டிவைத்த இடத்திருக்கையானது 'பிரமன்முதலிய எல்லாவுயிர்கட்கும் இத்திருவடிகளே புகலிடம்' என்பதையும் குறிப்பிக்கு மென்பது கருத்து. எம்பெருமான் திருக்கைகளை வைத்திருக்குந்தன்மைக்கு ஏற்றவாறு ஒவ்வொருகருத்தைக்கற்பித்துக்கூறும் மரபுக்கு ஏற்ப இவ்வாறு இங்குக் கூறுகின்றனரென்க. கிரீடம் தலைமைக்கு அறிகுறியாதல், கருதத்தக்கது. 'கதிர்' என்னுஞ் சொல் ஆகுபெயரால் ஆயிரங் கிரணங்களையுடைய சூரியனை யுணர்த்துமெனக் கொண்டு, 'கதிராருநீண் முடி' என்ற தொடர்க்கு - சூரியனையொத்துவிளங்குகின்ற நீண்டகிரீடம் என்று உரைப்பினுமாம்; "கதிராயிரமிரவி கலந்தெறித்தாலொத்த நீண்முடியன்" என்ற பெரியார்பாசுரத்தையுங் காண்க. பிரமனை ஜீவாத்மாக்களுள் ஒருவனாக வைத்துக்கூறியதனால், திருமால் யாவரினும்மேம்பட்ட பரமாத்மாவென்பது தெற்றென விளங்கும். (௯௯)

[வியூகமூர்த்தியே ஸ்ரீரங்கநாதன்.]

௧00. மோகத்துயில்புரிமெய்போலக்கண்டமுறையினுக்கிங்
கேகத்திருவுருவென்றறிந்தே னிந்திரையையன்போ
டாகத்துவைத்தருடென்னரங்கா வங்குமிங்குமொக்கப்
போகத்துக்கொண்டபணநாகமொன்றுபொறுத்தபின்னே.

(இ - ள்.) அன்போடு - அன்புடனே, இந்திரையை - பிராட்டியை, ஆகத்து - திருமார்பில், வைத்தருள்-வைத்தருளுகின்ற, தென் அரங்கா—!— அங்கும் - திருப்பாற்கடலிலும், இங்கும் - திருவரங்கத்திலும், ஒக்க—, போகத்து கொண்ட - தனது உடலின்மேற் கொண்ட, பணம் நாகம் ஒன்று - படங்களையுடைய திருவனந்தாழ்வான், பொறுத்தபின் - தாங்கியபின்பு [தாங்கியதனால்],—மோகம் துயில் - பொய்த்துயிலை [யோகநித்திரையை], மெய் புரி (துயில்) போல கண்ட - மெய்யாகச்செய்கின்ற துயிலைப்போலச் செய்தருளுகின்ற, முறையினுக்கு - தன்மைக்கு, இங்கு—, ஏகம் திரு உரு என்று - (அதுவும் இதுவும்) ஒரு ரூபமேயென்று, அறிந்தேன்—; (எ - று.)

திருப்பாற்கடலில் எழுந்தருளியுள்ள வியூகரூபமும் திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள அர்ச்சாரூபமும் ஒன்றேயென்பது விளக்கப்பட்டது; இருவகைநிலையிலும் திருவனந்தாழ்வானே திருப்பள்ளிமெத்தை யென்க. கண்ட - செய்த; காணுதலென்பது செய்தலென்னும் பொருளதாதலை, 'திருநகரங்கண்டபடலம்' என்ற விடத்துங் காண்க. பாம்பினுடலுக்கு'போகம்' என்று பெயர். இனி,பணம்கொண்ட நாகம் போகத்துப்பொறுத்தபின் என்றுமாம். (௧00)

[எம்பெருமானது திருமேனியின் நீலநிறம்.]

௧௦௧. சோதித்திருவுருவாகாயமாகச்சுருதிநன்னூல்
சாதித்துநின்றுதெளிந்துவிட்டேன் மிக்கதானவரைச்
சேதித்தநேமித்திருவரங்கா சங்கைதீரவுன்ற
னாதித்திருவுருவின்பேரணிநிறமானபின்னே.

(இ - ள்.) மிக்க தானவரை-மிகுந்த [பெருங்கூட்டமான] அசுரர்களை, சேதித்த - அழித்த, நேமி - சக்கரத்தையுடைய, திரு அரங்கா—! உன்தன்- உன்னுடைய, ஆதி - முதன்மையாகிய, திரு உருவின் - திருவுருவத்தினது, பேர் அணி நிறம் ஆன பின் - பெரிய அழகிய நிறமாகிய பின்பு,—சுருதி நல் நூல் சாதித்து நின்று - சிறந்த வேதசாஸ்திரங்களைப் பழகிநின்று,— சோதி திரு உரு - (உனது) தேஜோமயமான அழகிய ரூபம், ஆகாயம் ஆக- ஆகாசம் போன்றதென்று, சங்கை தீர - ஐயமற, தெளிந்துவிட்டேன் - தெளிவுகொண்டேன்; (எ - று.)

நினது திருமேனியின்நிறம் ஐம்பெரும்பூதங்களுள்ளும் முதலதாகிய ஆகாயம்போல நீலநிறமானதென்பதாம். இவ்வாறுகூறியது-ஆகாயம் எங்கும்வியாபித்திருப்பதுபோல எம்பெருமானும் ஸர்வவியாபியென்பதையும், மற்றை உலகத்துப்பொருள்களெல்லாம் ஐம்பெரும்பூதங்களுள் முதலதாகிய ஆகாயத்தினின்று தோன்றுவதுபோலப் பிரமன்முதலிய எல்லாப்பொருள்களும் அப்பெருமானிடத்தினின்றே தோன்றுமென்பதையும் விளக்கியபடியாம். வேதத்தில் எம்பெருமானை ஆகாயமாகவே கூறியிருக்கின்றது; அவ்வாறுகூறியதற்குக் காரணம் - எம்பெருமானது ஸ்வரூபம் எங்கும் ஒளிவீசுந் தன்மையதாதலா லாகும்; மிக்கபேரொளியுடைமைபற்றி வேதத்தில் எம்பெருமானை ஆகாசமாகக்கூறியிருப்பதற்கு, திருமேனிநிறம் ஆகாசம்போல நீலநிறமுடைமையால்தான் அவ்வாறுகூறியதாக இங்குக் கவி சமத்காரமாக வேறொருகாரணங்கற்பித்துக் கூறினரென்க; இவ்வாறு ஒருகாரணம்பற்றி ஒன்றற்கு ஒருபெயர் கூறியிருப்ப,அப்பெயர்வந்ததற்கு வேறொருவகையாகக் காரணங்கற்பித்துக்கூறுவது - பிரிநிலைநவிற்சியணியின்பாற்படும்; இதனை வடநூலார் நிருக்தியலங்கார மென்பர். எம்பெருமானை ஆகாசமென்றுகூறியிருப்பதை உத்தரமீமாம்ஸையில் ஆகாசாதிகரணத்தின் ஸ்ரீபாஷ்யத்தால் தெளிக. ஆகாயம் - ஆகாசம். தெளிந்துவிட்டேன் - ஒருசொல். மிகுதல் - திரளுதலாகவேனும், செருக்குதலாக வேனுங் கொள்க. (௧௦௧)

[இது முதல் ஐந்து கவிகள் - ஆனந்த அநுபவம்.]

௧௦௨. ஓங்காரவட்டத்துமாசுணப்பாயிலுலோகமுண்ட
பூங்கார்விழிக்குப்புலப்பட்டதா லெப்பொழுதுமென்னை
நீங்காதிடர்செய்யுந்தீவினைகா ளினிநின்றுநின்று
தேங்காதுநீருமக்கானிடத்தேசென்றுசேர்மின்களே.

(இ - ள்.) எப்பொழுதும்-எக்காலத்தும், என்னை நீங்காது-என்னைவிட்டுப்பிரியாமல், இடர் செய்யும் - வருத்தத்தை (மேன்மேலுஞ்) செய்கின்ற,

தீவினைகாள் - பாவங்களே!—ஓங்காரம் வட்டத்து - பிரணவாகார விமான த்துள், மாசுணம் பாயில் - ஆதிசேஷனாகிய சயனத்தில், உலோகம் உண்ட- லோகங்களை வயிற்றில் வைத்தருளிய, பூ கார் - அழகிய காளமேகம், விழிக்கு-(எனது)கண்களுக்கு, புலப்பட்டது - விளங்கிற்று; ஆல் - ஆதலால், இனி—, நீரும் - நீங்களெல்லாரும், நின்று நின்று தேங்காது - இங்கு நிரைந்து நிற்காமல், அ கானிடத்தே - அந்தக் காட்டினிடத்தே, சென்று சேர்மின்கள் - போய்ச் சேருங்கள்;(எ - று.)

இதுவரையில் நீங்கள் என்னைத் துன்பப்படுத்தியது போல எம்பெரு மான்திருவருளுக்கு இலக்கான என்னை இனிப் படுத்தமுடியா தென்று தீவினைகளை ஓறுத்தன ரென்பதாம்."நெய்க்குடத்தைப்பற்றியேறுமெறும்பு கள்போல்நிரந்துஎங்கும், கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள் காலம்பெற வுய்யப்போமின், மெய்க்கொண்டுவந்து புகுந்து வேதப்பிரானார் கிடந்தார்" என்ற திருப்பதிகத்தை அடியொற்றியது இச்செய்யுள். வட்டம், கார் - ஆகு பெயர்கள். அக்கான் - சேர்தற்கரிய காடு என்றபடி. இங்குக் கேளாத தீவினைகள் கேட்பதுபோலச் சொல்லப்பட்டன; மரபுவழுவமைதி. (௧0௨)

௧0௩. விண்ணிட்டசோலையரங்கத்துமேவியமெய்ப்பொருளைக்
கண்ணிட்டபார்வையிற்கட்டியென்கண்வரக்கண்டுடலாம்
புண்ணிட்டவண்ணக்கிழியுட்பொதிந்துபுறத்துவெள்ளை
மண்ணிட்டிலச்சினையிட்டுவிள்ளாதுள்ளம்வைத்தனனே.

(இ - ள்.) விண் இட்ட சோலை - ஆகாயத்தை யளாவிய சோலைகளை யுடைய, அரங்கத்து - திருவரங்கத்தில், மேவிய - விரும்பி யெழுந்தருளியி ருக்கின்ற, மெய் பொருளை - பரதத்துவத்தை, என்கண் வர கண்டு - என் னிடத்தே வரப் பார்த்து, கண் இட்ட பார்வையின் - கண்வைத்த பார்வை யினால், கட்டி—, புண் இட்ட - ஊன் பொருந்திய, உடல் ஆம் - சரீரமா கிய, வண்ணம் கிழியுள் - அழகிய சீலையுள்ளே, பொதிந்து - வைத்துமூடி, புறத்து-வெளியே, வெள்ளை மண் இட்டு - வெண்மையாகிய மண்ணை அப்பி, இலச்சினை இட்டு - முத்திரைவைத்து, விள்ளாது - விட்டு நீங்காதபடி, உள் ளம் - மனத்திலே, வைத்தனென் - வைத்திட்டேன்; (எ - று.)

கட்டிப்பொன்கிடைத்தால் அதனைக் கட்டிக்கொணர்ந்து கிழியில்வை த்துப் பத்திரப்படுத்தி நம்முடையதென்றுதெரிவித்தற்காக அக்கிழியின்வெ ளியில் மண்ணை யப்பி முத்திரைவைக்கின்ற இயல்பை மனத்திற்கொண்டு இவ்வாறு கூறினர். ஸ்ரீரங்கத்து எம்பெருமானைப் பொற்கட்டியாகவும், அவர்தமக்குச்சேவைசாதித்ததை அப்பொன் காணக்கிடைத்ததாகவும்,தாம் கண்ணாரச்சேவித்துத் தம்மனத்தே பதியவைத்ததனை அப்பொற்கட்டியைக் கட்டிக்கொணர்ந்து பொற்கிழியிலே பத்திரப்படுத்தியதாகவும், அப்பெரு மான் எழுந்தருளியுள்ள உடலின்மேற்புறத்தில் தாம் திருமண்காப்புத்தரித் தலைப் பொற்கிழியின்மேல் மண்ணை அப்பியதாகவும், தாம்திருவிலச்சினை தரிப்பதை முத்திரை வைப்பதாகவும் உருவகஞ்செய்தன ரென்க; இது, ஸாவயவரூபகவணியாகும். "உன்னைக்கொண்டென்னுள்வைத்தேன்" என்

ரூர்ஆழ்வாரும். திருவரங்கநாதனை 'மெய்ப்பொருள்' என்றதற்கேற்ப இவ்வாறு கூறினர். மெய்ப்பொருள்-நிலையாகிய செல்வம், பரம்பொருள். பார்வையின் - பார்வையாகிய கயிற்றால். கிழி - நிதிவைக்குஞ் சீலை வண்ணக்கிழி - வர்ணச்சீலை யென்றுமாம். வெள்ளைமண் இடுதல் - திருமண்காப்பிடுதல் [புண்ட்ரம்]; இலச்சினையிடுதல் - தோள்களிற் சங்க சக்ர சின்னந் தரித்தல் [ஸமாஶ்ரயணம்] என்கண்-என்கண்ணினிடத்தே யென்றுமாம். (௧0௩)

௧0௪. கைத்துப்பழவினை தித்திக்கவென்றன்கருத்தினுள்ளே
பைத்துத்திமெத்தையின்மீதேதுயிலும் பைங்கேழெறிந்து
மைத்துக்குளிர்ந்துமதுரித்துமெத்தென்றுமாமணத்து
நெய்த்துப்புகர்த்துநிகர்க்கும்பொன்மேனிநெடுங்கடலே.

(இ - ள்.) பைங் கேழ் எறிந்து - பசிய ஒளியை வீசி, மைத்து-கறுத்து, குளிர்ந்து—, மதுரித்து - இனியதாகி, மெத்தென்று - மிருதுவாய், மாமணத்து-மிக்கவாசனைவீசப்பெற்று, நெய்த்து-பளபளப்புக்கொண்டு, புகர்த்து - கபிலநிறமுடையதாய், நிகர்க்கும் - (இத்தன்மையெல்லாம்) ஒத்திருக்கின்ற, பொன் - பொன்போன்ற, மேனி - திருமேனியையுடைய, நெடுங்கடல் - பெரிய கடல் [நம்பெருமாள்],—பழ வினை கைத்து - பழைய இருவினைகளைப்போக்கி, என் தன் கருத்தினுள்ளே-எனது மனத்திலே, தித்திக்க-இனிக்கும்படி, பை துத்தி மெத்தையின்மீதே - படங்களையும் புள்ளிகளையுமுடைய (திருவனந்தாழ்வானாகிய) சயனத்தின்மேலே, துயிலும்-யோகநித்திரைசெய்தருள்வர்; (எ - று.)

"ஸர்வகந்தஸ்ஸர்வரஸः" என்றபடி எம்பெருமான் எனக்கு எவ்விதத்திலும் இனிமைதருபவனென்று கருத்து. தாம் அழகியமணவாளனை ஸ்ரீரங்கத்திலே கண்டு ஸேவித்து ஆட்பட்டது முதல் அப்பெருமான் ஐயங்காருடைய மனத்தி லெழுந்தருளியிருத்தலினால் 'என்றன் கருத்தினுள்ளே பொன்மேனி நெடுங்கடல் துயிலும்' என்றார் எனினுமாம்; "பணிக்கடலுட் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்து என், மனக்கடலுள் வாழவல்ல மாய மணாள நம்பீ" என்றார் பெரியாழ்வாரும்: 'உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய சரீரைகதேஶத்திலே பண்ணும்; அங்குத்தை வாஸம் ஸாதநம், இங்குத்தை வாஸம் ஸாத்யம்' என்ற ஸ்ரீவசநபூஷணமும் கருதத்தக்கது. கைத்தல்-கோபித்தல்; இங்கு, காரியத்தைக் காரணமாக உபசரித்தார். நெய்த்து-செழித்து, அல்லது வழுவழுத்து என்றுமாம். மேனியாகிய கடலென்றுமாம். இனி, நிகர்க்கும் என்பதனை முற்றாகவுங் கொள்ளலாம். (௧0௪)

[கருடஸேவை.]

௧0௫. தெள்ளாவரும்பொன்னிசூழரங்கா வொருதேவரையு [ணப்
முள்ளாதெனதுள்ளம்யானென்செய்வேன் விண்ணிலோருவ
புள்ளாகிவேதப்பொருளாகியுன்னைத்தன்பொற்கழுத்திற்
கொள்ளாவருகின்றகோலமுள்ளேகண்டுகொண்டபின்னே.

(இ - ள்.) தெள்ளா வரும் பொன்னி சூழ் அரங்கா - தெளிவில்லாமல் [மிகக்கலங்கி] வருகின்ற காவேரிநதி சூழ்ந்த திருவரங்கத்து நாதனே!— விண்ணில் - ஆகாசத்தில், ஓர் உவணம் புள் - ஒப்பற்ற பெரியதிருவடி, வேதம் பொருள் ஆகி - வேதார்த்த ஸ்வரூபியாய், தன் பொன் கழுத்தில் - தனது ஸ்வர்ணமயமான கழுத்தின்மேல், உன்னை—, கொள்ளா - எழுந்தருளப்பண்ணிக்கொண்டு, வருகின்ற - விரைந்தோடி வருகின்ற, கோலம் - அழகை, உள்ளே - என்மனத்திலே, கண்டுகொண்டபின்-சேவித்தபின்பு,— எனது உள்ளம் - என்னுடைய மனம், ஒரு தேவரையும் - வேறொரு தேவரையும், உள்ளாது - (ஒருதெய்வமாக) மதியாது; யான் என் செய்வேன்—?

பரதேவதையாகிய உன்னைக் கண்கூடாகக்கண்டு களித்தபின்பு அபர தேவதைகளும் பொறிபில்லாதவரும் கீர்த்தியில்லாதவரும் ஆற்றலில்லாதவருமான மற்றை க்ஷுத்ர தேவதைகளை நான் ஒருபொருளாக மதியேன் என்பதாம். இதனால், கவி, தமது அநந்யசரணத்வத்தை [வேறொருகடவுளுக்கு ஆட்படாமையை] வெளியிட்டார். தெள்ளாவரும் பொன்னிசூழரங்கன் - "தெளிவிலாக் கலங்கல்நீர்சூழ் திருவரங்கத்துள் ளோங்கு, மொளியுளார்" என்றார் பெரியாரும். இனி, தெள்ளிவருகின்ற பொன்னி யென்றுமாம். உவணப்புள் - கருடப்பறவை. ஆகி - அசை. (௧0௫)

௧0௬. முன்பாலிலைமகவாகியபோதிந்தமுதண்டங்க
ளுன்பாலொடுங்கியிருந்ததுபோலு முததிமங்கைக்
கன்பாவரங்கத்தென்னாரமுதே யணுவாயிருந்து
மென்பாலகண்டமுமாகியநீவந்திருக்கின்றதே.

(இ - ள்.) உததி மங்கைக்கு அன்பா - திருப்பாற்கடலில் தோன்றிய திருமகளுக்குக் கணவனே! அரங்கத்து - திருவரங்கத்தி லெழுந்தருளியிருக்கின்ற, என் ஆர் அமுதே - எனது கிடைத்தற்கரிய தேவாமிருதமே!— அணு ஆய் இருந்தும் - (எனதுமனம்) மிகச்சிறுமையாயிருந்தும், என்பால் - அந்த என்மனத்தினிடத்து, அகண்டமும் ஆகிய - எல்லாமாகிய, நீ—, வந்து இருக்கின்றது - வந்து எழுந்தருளியிருக்கின்ற தன்மை,—(நீ), முன்பு - முன்னே, ஆல் இலை - ஆலிலையில், மகவு ஆகிய போது-சிறுகுழந்தையாய்க் கிடந்தருளினபோது, இந்த முது அண்டங்கள்-இந்தப் பழைய அண்டங்களெல்லாம், உன்பால் - உன்னிடத்து, ஒடுங்கி இருந்தது - அடங்கியிருந்த தன்மையை, போலும் - ஒக்கும்; (எ - று.)

ஸர்வவியாபியாய் மிகப்பேருருவமுடைய நீ எனதுமிகச்சிறுமனத்தில் எழுந்தருளியிருக்குந் தன்மை, பிரளயகாலத்தில் சிறுகுழந்தைவடிவான உனது வயிற்றினுள் எல்லாப்பிரபஞ்சமும் ஒடுங்கியிருப்பது போலும் என்பதாம். ஆதாரமாகிய ஆலிலை அணுக்களை விட, ஆதேயமாகிய பரம்பொருளுக்குப் பருமைதோன்றக் கூறியது, மிகுதியணியின்பாற்படும். மக - இளமை. உததி - கடல்; நீர் நிறைந்து தங்குமிடம்: இங்கு, பாற்கடல். உததிமங்கை-அதனிடத்துத் தோன்றிய மங்கையெனத் திருமகள்; உததியாற்சூழ்ந்த மங்கையென நிலமகளாகவுமாம். (௧0௬)

[பகவானைப் பிரார்த்தித்தல்.]

க0எ. வலைப்பால்விடம்பிணைக்கண்ணியர்போகத்தின்மாலுறுமென்
றலைப்பாற்கழலருடாரரங்கா பலதாயர்தந்த
முலைப்பாற்கடலுன்றிருக்கழலாணிவெண்முத்தெறியு
மலைப்பாற்கடலினளவாமெனின்மற்றதுவுமன்றே.

(இ - ள்.) தார் - திருத்துழாய்மாலையையுடைய, அரங்கா—!—பல தாயர் தந்த - (இதுவரையில் பல பிறப்புக்களிலும்) பல தாய்மார்கள் கொடுத்த, முலை பால் கடல்-முலைப்பாலினது வெள்ளம்,—உன் திரு கழல்-உனது திருவடிகளில், ஆணி வெள் முத்து-மேன்மையான வெள்ளிய முத்துக்களை, எறியும்-வீசுகின்ற, அலை-அலைகளையுடைய, பால் கடலின்-திருப்பாற்கடலினது, அளவு ஆம் எனின் - அளவினதாகு மென்றால், அதுவும் அன்றே - அதுவும் ஒப்பாகமாட்டாது; [அலைப்பாற்கடலினும் முலைப்பாற்கடல் மிகவும் பெரியது என்றபடி]; (ஆதலால், இனி அப்பால் குடிக்குமாறு பிறவாதபடி)—வலை-வலையும், பால் - அமிருதமும், விடம் - விஷமும், பிணை - பெண்மான் கண்ணும், (ஆகிய இவைபோன்ற), கண்ணியர்-கண்களையுடைய மகளிரது, போகத்தில் - சிற்றின்பத்தில், மால் உறும்-பெருமயக்கமடைகின்ற, என்-எனது, தலைப்பால் - தலையின்மீது, கழல் - (உனது) திருவடிகளை, அருள் - வைத்தருள்வாய்; (எ - று.)

எம்பெருமானைச் சரணமாகப்பற்றும்போது ஜீவாத்மாக்கள் தம்முடைய குற்றங்களையே காணிக்கைப்பொருளாகக்கொண்டு சரணமடையும் மரபின்படியே ஐயங்காரும் மூன்றடிகளினால் தமது குற்றத்தைக் கூறிச் சரண்புகுந்து, இரண்டாமடியால் தம்மை யாட்கொண்டு எம்பெருமான் தனது திருவடிகளைத் தமதுமுடியின்மீது பொறித்தருளுமாறு வேண்டுகின்றனரென்க. "முன்னம்பிறந்த பிறப்போ முடிவில்லை" என்றபடி பலபிறப்பெடுத்து உழன்று வருந்திய என்னை இனிப் பிறப்பற்று முத்தியடையுமாறு அருள்செய்ய வேண்டுமென்று வேண்டியபடி. 'உன்திருக்கழ லாணிவெண்முத்தெறியும்' என்றது,பாற்கடலானது தன்னிடத்திற்சயனித்துள்ளஉனது திருவடிகளில் சிறந்தமுத்துக்களை அலைகளாற்கொழிக்கு மென்றவாறு. கண்ட ஆடவர்களைக் கவர்தலால் வலையும், இன்பஞ் செய்தலாற் பாலும், துன்பஞ் செய்தலால் விடமும், மருட்சி பொருந்திய பார்வையாற் பிணையும் - மகளிர்கண்கட்கு உவமை கூறப்படும்; இனி, சுற்றிடம் வினர்த்திருத்தலாற் பாலும், நடுவிடம் கறுத்திருத்தலால் விடமும் உவமையாகவுமாம். பாலும், விடமுஞ் சேர்த்துச்சொல்லப்படுதலால், அவை பாற்கடலிற் பிறந்த தேவாமிருதமும், ஆலாகலவிடமுமாம். பிணை - ஆகுபெயர். (க0எ)

[இதுவும் அது.]

க0அ. தொடைமாறனுந்தமிழ்சொன்மாறனுந்தொழத்துத்தி வெள்ளைக், குடைமாசுணத்திற்றுயிலரங்கேசகுலவுவைவேற், படைமாறுகொண்டமைக்கண்ணியர்பால்வைத்தபாசநெஞ்சை, மடைமாறியுன்றன்றிருவடிக்கேவரவைத்தருளே.

(இ - ள்.) தொடை மாறனும்-(வேப்பம்பூ) மாலையையுடைய பாண்டிய னும், தமிழ் சொல் மாறனும் - தமிழினாற் சொல்லுகின்ற (பாமாலையையு டைய) நம்மாழ்வாரும், தொழ - தொழும்படி, துத்தி - படப்புள்ளிகளை யுடைய, வெள்ளை-வெண்மையாகிய, குடை-குடைபோலக் கவிந்துகொண் டிருக்கின்ற, மாசுணத்தில்-திருவனந்தாழ்வான்மேல், துயில்-பள்ளிகொண் டருளுகின்ற, அரங்கேச—!—குலவு - விளங்குகின்ற, வை - கூர்மையாகிய, வேல் படை - வேலாயுதத்தோடு, மாறு கொண்ட - பகைமைகொண்ட [ஒத்த], மை கண்ணியர்பால் - மையூட்டிய கண்களையுடைய மகளிரிடத்து, வைத்த—,பாசம் நெஞ்சை-அன்பினையுடைய(எனது)மனத்தை, மடைமாறி- மாற்றி, உன்தன் திருவடிக்கே வர - உனது திருவடிகளுக்கே ஆட்படும்படி, வைத்தருள் - அன்புவைத்தருள்வாயாக; (எ - று.)

பாண்டியன் - ஸ்ரீவல்லபதேவ னென்பர். குடைமாசுணம் - சென்றாற் குடையாகும் மாசுண மென்றுமாம். பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பாலுண்ணுதல் முதலியன செய்யாமல் உலகநடைக்கு மாறாயிருந்ததனால், நம்மாழ்வார்க்கு 'மாறன்' என்று ஒரு திருநாமம். பகைவர்க்கு மாறாயிருந்து வெல்பவனாதலால், பாண்டியன் 'மாறன்' எனப்படுவேன். நெஞ்சு விஷயங் களிற் பாய்ந்துசெல்லுந் தன்மைய தாதலால், அதனைப் பெருக்காகக் கொண்டு, 'மடைமாறி' என்றனர். மடைமாறுதல் - ஓரிடத்திற் பாயும் நீரை மற்றோரிடத்துப் பாய்வதற்காக நீர்மடையை மாற்றுதல். (கoஅ)

[அநந்யகதித்வமும், பிரார்த்தனையும்.]

கoகூ.கரணந்தவிர்ந்துவிழிபோய்ச்சுழன்றுகலங்குமென்றன்
மரணந்தனில்வந்துதவுகண்டாய் கொற்றவாளியொன்றா
லரணங்கடந்தவன்காணாவரங்க வென்னாருயிர்க்குன்
சரணஞ்சரணமொழிந்தில்லைவேறித்தராதலத்தே.

(இ - ள்.) கொற்றம் வாளி ஒன்றால் - வெற்றியையுடைய ஒரு பாண த்தினால், அரணம் கடந்தவன் - முப்புரங்களையும் வென்ற பரமசிவனும், காணா-கண்டறியாத, அரங்க—!—என் ஆர் உயிர்க்கு-எனது அருமையான உயிருக்கு, உன் சரணம் ஒழிந்து - உனது திருவடி யன்றிக்கே, வேறு சர ணம் - வேறு அடைக்கலம், இ தராதலத்து - இவ்வுலகத்தில், இல்லை—; (ஆதலால், நீ),—கரணம் தவிர்ந்து - கரணங்கள் நிலைகுலைந்து, விழி போய்- கண்பார்வை மழுங்கி, சுழன்று - மனஞ் சுழன்று, கலங்கும் - கலங்குகி ன்ற, என்தன் - எனது, மரணம்தனில் - மரணகாலத்தில், வந்து - எழுந் தருளிவந்து, உதவு - காத்தருள்வாய்; (எ - று.)

நான் அந்திமகாலத்தில் யமபாதையினாற் செயலற்று ஒடுங்குஞ் சமயத் தில் நீ அஞ்சேலென்று அபயமளித்துக் காக்கவேண்டுமென்பதாம்; அப்போ தைக்கு இப்போதே சொல்லிவைத்தேன் என்றபடி. கரணம் - ஐம்பொறிக ளென்றாயினும், திரிகரணங்க ளென்றாயினும், அந்தக்கரணமென்றாயினுங் கொள்க. அரணம் - மதில். வாளி - விஷ்ணுஸ்வரூபமாகிய அம்பு. "துப் புடையாரை யடைவதெல்லாஞ் சோர்விடத்துத் துணையாவரென்றே,

ஒப்பிலேனாகிலு நின்னடைந்தே னானைக்குநீயருள்செய்தமையால், எய்ப்பென்னை வந்து நலியும்போ தங்கேது நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தே னரங்கத்தரவணைப்பள்ளியானே" என்ற பதிகத்தின் கருத்துக்கொண்டது, இச்செய்யுள். உபாயாந்தரநிஷ்டர்க்குப்போல, ப்ரபந்நர்க்கு அந்திமஸ்மிருதி வேண்டுமென்ற நியமமில்லையாதலால், இவ்வாறு கூறுகின்றனர். (கOக)

[நைரபேக்ஷ்யம்.]

ககO. நீடுந்திகிரிப்படையாயுனைக்கற்றுநின்னையென்றும்
பாடும்படித்தமிழ்ப்பாடறந்தாய் பழநான்மறைநூ
றேடுந்திருவரங்கா வடியேனுயிர்செல்லுமந்நாள்
வீடுந்தரவிருந்தா யெனக்கேதினிவேண்டுவதே.

(இ - ள்.) நீடும் திகிரி படையாய் - (விரோதிகளளவே விரைந்து) ஓடுகின்ற சக்கராயுதத்தை யுடையவனே!—பழ நால் மறை நூல் தேடும் - பழைய நான்கு வேதசாஸ்திரங்க ளெல்லாந் தேடுகின்ற, திருவரங்கா—!—உனை கற்று - உன்னைப் படித்து, என்றும் - எந்நாளும், நின்னை - உன்னை, பாடும்படி-(அடியேன்) பாடித்துதிக்கும்படி, தமிழ் பாடல் - தமிழ்ப் பாடல்களை, தந்தாய் - ஈந்தருளினாய்; அடியேன்—, உயிர் செல்லும் அ நாள் - உயிர் விடுகின்ற அக்காலத்தில், வீடும்-மோக்ஷசாம்பிராச்சியத்தையும், தர இருந்தாய் - (அடியேனுக்குக்) கொடுக்க இருந்தாய்; எனக்கு இனி வேண்டுவது ஏது - அடியேனுக்கு இனிமேல் ஒன்றும் பெறவேண்டுவதில்லை; (எ - று.)

தமது ஜாயமாநகடாக்ஷத்தால், எம்பெருமான் தம்மிடத்து நிர்ஹேதுகமாக அருள்செய்தமைபற்றி இனித் தமக்கு ஒன்றுங் குறையில்லாமையால், இதனால் தம்முடைய நைரபேக்ஷ்யத்தை [ஒன்றிலும் விருப்பின்மையை] வெளியிடுகின்றனரென்க. உனைக்கற்று - உன் திருநாமங்களையும் வைபவங்களையுங் கற்றறிந்து என்றபடி. பாடல்தருதல் - பாடும்படி அநுக்கிரகித்தல். தெளிவுபற்றி, இருந்தா யென இறந்தகாலத்தாற்கூறினார்; காலவழுவமைதி. பேறு தப்பா தென்று துணிந்திருத்தல், பிரபந்நனுக்கு அவசியாபேக்ஷிதமென்று மேலோர் அருளிச்செய்திருத்தல் காண்க. (கOக)

[அந்யசேஷத்வநிவ்ருத்தி.]

கககூ. ஆவைக்கல்லாவையெதிரென்றுசொல்லியழுக்கடைந்த
நாவைப்பரிசுத்தம்பண்ணியவே கஞ்சனஞ்சன்விட்ட
கோவைச்சகட்டைப்பகட்டைப்பொருதியகோயிலில்வாழ்
தேவைப்பகர்ந்தசெஞ்சொற்றிருநாமங்கள்சிற்சிலவே.

(இ - ள்.) கஞ்சன் நஞ்சன் விட்ட - விஷம்போன்ற துஷ்டசுவபாவத்தையுடைய கம்ஸன் ஏவியனுப்பிய, கோவை - எருதையும், சகட்டை-சகடாசுரனையும், பகட்டை - (குவலயாபீடமென்னும்) யானையையும், பொருதிய - கொன்று வென்ற, கோயிலில் வாழ் தேவை - திருவரங்கம் பெரிய கோயிலில் நித்திய வாசம் பண்ணுகின்ற திருவரங்கநாதனை, பகர்ந்த - சொல்லித் துதித்த, செம் சொல் திருநாமங்கள் சில சில - சிலசில செஞ்சொற்களாகிய திருநாமங்கள்,—ஆவை - உண்மையான பசுவையும், கல் ஆவை -

கல்லினாற்செய்யப்பட்ட பசுவையும், எதிர் என்று சொல்லி-ஒப்பென்றுகூறி, அழுக்கு அடைந்த - அசுத்தமாகிய, நாவை - (எனது) நாக்கை, பரிசுத்தம் பண்ணிய - முழுதும் சுத்தமாக்கின ; (எ - று.)

ஆவைக் கல்லாவை எதிரென்று சொல்லுதல் - பரதேவதையாகிய ஸ்ரீமந்நாராயணனையும், தேவதாந்தரங்களையும் ஒப்பென்னுதல். பெயர் சொல்லித்துதித்தமாத்திரத்தில் காமதேனுவைப்போல எல்லாப்பயனையும் அளிக்கவல்ல எம்பெருமானைத்துதியாமல் எவ்வளவுகாலம் துதித்து முறையிட்டாலும் சிறிதும்பயன்தருந்திறமையில்லாத கல்லாற்செய்த பசுவையும் மலட்டுப்பசுவையும் போன்ற தேவதாந்தரங்களைத் துதித்தலால், வாய்வலிப்பேயல்லாமல் அபரிசுத்தமும் நேரிடுமென்க. முன்பெல்லாம் தேவதாந்தரங்களைப் போற்றி எனதுவாய் அபரிசுத்தமாயிற்று ; இப்போது எம்பெருமானது திருநாமங்களிற் சிலவற்றைச் சொல்லி அதனால் அவ்வெச்சில்வாயைப் பரிசுத்தமாக்கிக்கொண்டேனென்பதாம். இதனால், யான் இனிப் பிறதேவர்க்கு ஒருபோதும் அடிமைப்பட்டு அவரைத்துதியேனென்பது பெறப்படுதல் காண்க. கோ - விருஷபவேஷம் பூண்டுவந்த அரிஷ்டாசுரன். சகடு - பண்டியில் வந்துஆவேசித்த அசுரன் [சகடாசுரன்.] (கககூ)

---

ககஉ. மணிதக்கவிமொழியாமங்கைவாழ்மணவாளவள்ளல்
புனிதக்கவிகொண்டுமாலைசெய்தான் புயல்போன்முழங்குந்
தொனிதக்கசங்கந்திருச்சக்கரஞ்சுடர்வாண்முசலங்
குனிதக்கசார்ங்கந்தரித்தாரரங்கர்பொற்கோயிலுக்கே.

(இ - ள்.) புயல் போல் முழங்கும்-மேகம்போல முழங்குகின்ற,தொனி தக்க-பேரொலி மிக்க, திரு சங்கம்-அழகிய பாஞ்சசந்யத்தையும், சக்கரம்-சுதரிசனத்தையும், சுடர் வாள் - ஒளியையுடைய நந்தகத்தையும், முசலம் - கௌமோதகியையும், குனி தக்க சார்ங்கம் - வளைவு பொருந்திய சார்ங்கத்தையும், தரித்தார் - தாங்கியருளியவரான, அரங்கர் - திருவரங்கநாதரது, பொன் கோயிலுக்கு - அழகிய கோயிலுக்கு,—மணிதக்கவி மொழியா - நரஸ்துதியாகக் கவிபாடாத, மங்கை வாழ் - திருமங்கையில் வாழ்கின்ற, மணவாளவள்ளல் - அழகியமணவாளதாசன், புனிதம் கவி கொண்டு - பரிசுத்தமாகிய பாக்களால், மாலை செய்தான் - ஒருமாலையைச் செய்தான்; (எ-று)

தொனி-த்வநி. முசலம்-முஸலம்; இருப்புலக்கை. மணிதக்கவி - நரகவனம்.மனிதக்கவிமொழியா மணவாளவள்ளல்-“நாக்கொண்டு மானிடம் பாட வந்தகவியேனல்லேன்”என்றதுகாண்க.இது,தன்னைப்பிறன்போலும்நாந்தி கூறுகின்ற பதிகச்செய்யுள் ; சடகோபர் சம்பந்தர் முதலாயினாரும், திவாகரரும்,பதினெண்கீழ்க்கணக்குச்செய்தாரும்,வடநூலாரும் முன்னாகப் பின்னாகப் பதிகங்கூறுவது காண்க. இது, தற்சிறப்புப்பாயிர மெனப்படும். (ககஉ)

திருவரங்கத்துமாலை முற்றிற்று.

---

# திருவரங்கத்துமாலைச் செய்யுண்முதற்குறிப்பகராதி.

# திருவரங்கக்கலம்பகம்.

## சிறப்புப்பாயிரம்.

ஆழ்வார்முன் பின்னவர்க்கு மாமறைதந் தார்தமிழால்
வாழ்வார் மணவாளர் மாண்பவருட்—டாழ்வாரு
மெம்போ லியர்க்கு மிரங்கியரங் கக்கலம்ப
கம்போத நல்கவைத்தார் காண்.

(இதன் பொருள்.) முன் - முற்காலத்தில், ஆழ்வார் - நம்மாழ்வார்,— பின்னவர்க்கு - பிற்காலத்திலுள்ளார்க்கு, (போதம் நல்க) - நல்லறிவைக் கொடுக்குமாறு, (இரங்கி) - திருவுளமிரங்கி, மா மறை - சிறந்த (வடமொழி) வேதத்தை, தமிழால் - தமிழ்ப்பாஷையினால், தந்தார் - திருவாய்மலர்ந் தருளினார்; (பின்) - பிற்காலத்தில், மாண்பவருள் - மாட்சிமையையுடைய வர்களுள், வாழ்வார் - வாழ்பவராகிய, மணவாளர் - அழகிய மணவாள தாசர்,—தாழ்வு ஆரும்-கீழ்மைபொருந்திய, எம்போலியர்க்கும் - எம்மைப் போன்றவர்களுக்கும், போதம் நல்க—, இரங்கி—, அரங்கக்கலம்பகம் - திருவரங்கக்கலம்பக மென்னுந் திவ்வியப் பிரபந்தத்தை, (தமிழால்)—, வைத்தார் - பாடி வைத்தார்; (என்றவாறு.)

ஆழ்வார் - பகவானுடைய மங்களகுணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவர்; இது, இங்கே, அல்லாத ஆழ்வார்களிற்காட்டிலுஞ் சிறந்து அவர்களுக்கு அவயவியாகிய நம்மாழ் வாரை உணர்த்திற்று. 'பின்னவர்' என்றது - ஸ்ரீமந்நாதமுனிகள், ஸ்ரீ ஆள வந்தார், ஸ்ரீபாஷ்யகாரர் தொடக்கமான ஆசாரியர்களை. (ஓதலாகாதென்று சிலர்க்கு) மறைக்கப்படுதல்பற்றி, மறை யென்று பெயர்; மறு - பகுதி, ஐ - செயப்படுபொருள் விகுதி. இனி - இச்சொல்லுக்கு - (எளிதிலுணரலாகாத படி) மறைந்துள்ள பொருள்களையுடைய தென்று காரணப்பொருள் கூறவு மாம். யாகம் முதலிய கிரியைகளைக் குறிக்கிற கர்மகாண்டத்தையும் பகவா னைக்குறிக்கிற பிரமகாண்டத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டிருத்தல் பற்றி, இதற்கு 'மா' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. நான்கு வேதங்களையும் முறையே திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய்மொழி, பெரியதிருவந்தாதி என்னும் நான்குதிவ்வியப்பிரபந்தங்களாக ஸ்திரீசூத்தி ரருமுட்பட அனைவர்க்கும் அதிகரிக்கலாம்படி தமிழால் அருளிச்செய்கை யால், 'மறைதந்தார் தமிழால்' என்றார்.

முற்காலத்தில் ஆழ்வார் தாழ்வுயாதுமில்குரவராகிய ஸ்ரீமந்நாதமுனி கள் தொடக்கமானார்க்கு ஏற்ப வடமொழி மறைப்பொருளையே தமிழால்

தந்தார்; அதுபோல, பிற்காலத்தில் அழகியமணவாளதாசரோ தாழ்வாரும் எம்போலியர்க்கு ஏற்பத் தமிழ்மறைகளின் சாரமாக விசித்திரமான கவனங்களைக்கொண்ட திருவரங்கக்கலம்பகத்தைச் செய்தருளினா ரென்பதாம். இது, எடுத்துக்காட்டுவமையணி; இதனை வடநூலார் திருஷ்டாந்தாலங்கார மென்பர். தாழ்வாவது - பகவத்கதை சிறிதுமில்லாத நூல்களாற் பொழுது போக்குகை. ஸ்ரீமந்நாதமுனிகள் முதலானோர் தாழ்வியாதுமில் குரவ ராதலால், தம்மை 'தாழ்வாரு மெம்போலியர்' என்றார். போதம் நல்குதல் - கல்வியாலாகிய அறிவோடு உண்மையறிவையும் உதவுதல். 'முன்' என வந்ததனால், 'பின்' என வருவிக்கப்பட்டது. உபமேயவாக்கியத்திலுள்ள 'போதநல்க' 'இரங்கி' என்பவை - உபமான வாக்கியத்திலும், 'தமிழால்' என்பது,—உபமேய வாக்கியத்திலுங் கூட்டப்பட்டன.

அழகிய மணவாள ரென்னும் நம்பெருமாள் பெயரைக் கவிக்கு இட்டு வழங்கியது, ஆகுபெயர். 'எம்' என்பது - தனித்தன்மைப்பன்மை. 'போலியர்க்கும்' என்ற உம்மை-இழிவுசிறப்பு; அது, சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடைய சிறியேமென்ற இழிவுப்பொருளுணர்த்திற்று. 'போதம்' - வடசொல். காண் - முன்னிலையசை; தேற்றப்பொருளதாகவுமாம்.

இது, இருவிகற்பத்தால் வந்து நாளென்னும் வாய்பாட்டான் முடிந்த நேரிசைவெண்பா.

'மணவாளர்' எனவே ஆக்கியோன்பெயரும், 'ஆழ்வார் முன் பின்னவர்க்கு மாமறை தந்தார்' என்னும் உபமானத்தால் அத்திவ்வியப்பிரபந்தங்களின்சார மிதுவென வழியும், 'தமிழால்' எனவே அத்தமிழினது எல்லையாகிய கீழ்கடல் தென்குமரி மேல்கடல் வடவேங்கடமாகிய எல்லையும், 'அரங்கக்கலம்பகம்' எனவே நூற்பெயரும், நுதலியபொருளும், 'எம்போலியர்' எனவே கேட்போரும், 'போதநல்க' எனவே பயனும், 'இரங்கி' எனவே காரணமும் பெறப்பட்டன; மற்றையவற்றுட் குறிப்பிக்கப்படுவன உய்த்துணர்ந்துகொள்க.

இக்கவி, அபியுக்தரில் ஒருவர் செய்தது; இது, ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தில் தனிய னெனப்படும்: (நூலினுட் சேராது) தனியே பாயிரமாக நிற்றல்பற்றியது, அப்பெயர். உயர்திணையாண்பால்விகுதி சிறுபான்மை அஃறிணைக்கும் வருதலை, கடுவன் கோட்டான் தோளுக்கினியான் என்ற விடங்களிற் காண்க; நாலடியார் சிவஞானசித்தியார் என்ற இடங்களில் 'ஆர்' விகுதிபோல இங்கு 'அன்' விகுதி உயர்வு குறிப்பதென்றலுமாம். மேலிற்கவியும் இவ்வாறே. (க)

சொன்னோக்கும் பொருணோக்குந் தொடைநோக்கு நடைநோக்குந் துறையினோக்கோ, டெந்நோக்குங் காண விலக்கியமாவதன்றி யிதிலீடுபட்டோர், நன்னோக்கும் புத்தியும் பத்தியும் பெறுவர் முத்தியுண்டா நானென்சொல்கேன், பன்னோக்கு மணவாளர் பகரரங்கக்கலம்பகத்தைப் பாரீர் பாரீர்.

(இ - ள்.) (இந்நூலானது),—சொல் நோக்கும் - சொல்லழகும், பொருள் நோக்கும் - பொருளழகும், தொடை நோக்கும் - தொடையழகும், நடை நோக்கும் - நடையழகும், துறையின் நோக்கோடு - துறையினழகும்(ஆகிய இவைமுதலிய), எ நோக்கும்-எல்லாவழகையும், காண - காணுமாறு, இலக்கியம் ஆவது அன்றி - இலக்கியமாயிருத்தல்மாத்திரையேயன்றி,—இதில்- இந்நூலில், ஈடுபட்டோர் - அன்புடன் மிகப்பயின்றவர், நல் நோக்கும் - நல்ல ஒழுக்கத்தையும், (நல்) புத்தியும் - நல்ல அறிவையும், (நல்)பத்தியும் - நல்ல பக்தியையும், பெறுவர் - அடைவர்; (அவர்களுக்கு), முத்தி - பரமபதம், உண்டாம் - உண்டாகும்; (ஆகையால்),—பல் நோக்கு மணவாளர் - பலவகைஞானத்தையுடைய அழகியமணவாளதாசர், பகர் - திருவாய்மலர்ந்தருளிய, அரங்கக் கலம்பகத்தை - திருவரங்கக்கலம்பகத்தின் சிறப்பை, நான் என் சொல்கேன் - யான் என்னவென்று எடுத்துச் சொல்லுவேன்! பாரீர் பாரீர் - ஆராய்ந்து நோக்குங்கள் நோக்குங்கள்; (எ - று.)

சொன்னோக்கு - மடக்கு முதலிய சொல்லணிகளால் வரும் அழகு. பொருணோக்கு-உவமைமுதலிய பொருளணிகளால் வரும் அழகு. தொடை நோக்கு - மோனை எதுகை முரண் இயைபு அளபெடை என்கிற ஐந்திலும் அடிமோனை முதலாக ஓரொன்றிலே எவ்வெட்டுத்தொடையாக நாற்பதும், அந்தாதித்தொடை இரட்டைத்தொடை செந்தொடை என்கிற மூன்றும் ஆக நாற்பத்துமூன்றுதொடைகளால் வரும்அழகு. நடைநோக்கு- வைதருப்பம், கௌடம் முதலாகக் கூறப்படுகின்ற நடைகளால் வரும் அழகு. துறை நோக்கு - காட்சி, ஐயம், தெளிதல் முதலிய களவித்துறைகளால் வரும் அழகு. 'எந்நோக்கும்' என்றதனால், விளங்கவைத்தல் நவின்றோர்க்கினிமை நன்மொழி புணர்த்தல் ஓசையழகு ஆழ்ந்தபொருளுடைமை முதலானவையுங் கொள்க. 'நல்நோக்கு' என்பதில் உள்ள நன்மையை 'புத்தி', 'பத்தி' என்பவற்றோடுங் கூட்டுக. "உரைத்த தமிழ்வரைந்த ஏட்டைப், பட்டாலே சூழ்ந்தாலும் பூவுலகும் பரிமளிக்கும் பரிந்த ஏட்டைத், தொட்டாலும் கைம்மணக்கும் சொன்னாலும் வாய்மணக்கும் துய்ய சேற்றில், நட்டாலும் தமிழ்ப் பயிராய் விளைந்திடுமே பாட்டினது நளினந்தானே" என்று சிறப்பித்துக் கூறுமாறு இந்நூலின்நடை மிகப்பிரசித்தி பெற்றது என்பதாம்.

'பத்தி', 'முத்தி' என்பவை - முறையே 'பக்தி', 'முக்தி'என்பவற்றின் விகாரங்கள். முத்தி - வீடு : சரீர இந்திரியங்களிலிருந்து ஜீவாத்மா விடுபடுவதென்று பொருள். 'என்சொல்கேன்' என்றது, இவ்வளவென்று ஓரளவின்மையாலே சொல்லத்தெரிந்திலேனென்றபடி. 'சொல்கேன்', ககரவொற்று - எதிர்கால இடைநிலை. இலக்கியம் - லக்ஷ்ய மென்பதன் திரிபு. 'பாரீர் பாரீர்'-உவகையில் வந்த இருமுறையடுக்கு ; இனி, பாரீர் - உலகத்தவரே! பாரீர் - (இவ்வாறு பலவகையழகும் நிரம்பியிருத்தலால் கவனித்துப்) பாருங்கள் எனினுமாம்.

இது - முதல் நான்குங் காய்ச்சீர்களும், மற்றை யிரண்டும் மாச்சீர்களுமாகிய அறுசீராசிரியவிருத்தம். (௨)

ஸ்ரீ

# கோயிற்கலம்பகம்

என்னும்

# திருவரங்கக்கலம்பகம்.

'திரு' என்னும் பலபொருளொருசொல் - வடமொழியில் 'ஸ்ரீ' என்பதுபோல, தமிழிலே தேவர்கள் அடியார்கள் ஞானநூல்கள் மந்திரங்கள் புண்ணியஸ்தலங்கள் புண்ணியதீர்த்தங்கள் முதலிய மேன்மையையுடைய பலபொருள்கட்கு விசேஷணபதமாகி, மகிமைப்பொருளைக் காட்டி, அவற்றிற்குமுன்னே நிற்கும்; ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீபக்திசாரர் ஸ்ரீராமாயணம் ஸ்ரீஅஷ்டாக்ஷரம் ஸ்ரீரங்கம் ஸ்ரீகைரவிணி ஸ்ரீபாதம் எனவும், திருமால் திருமழிசைப்பிரான் திருவாய்மொழி திருவெட்டெழுத்து திருவரங்கம் திருவல்லிக்கேணி திருவடி எனவும் வழங்குவது காண்க. இது, இங்கு அரங்கத்திற்கு அடைமொழி; கலம்பகத்திற்கு அடைமொழியாகவுமாம்.

திருவரங்கம் என்பது - திருமாலின் திவ்வியதேசங்கள் நூற்றெட்டனுள் தலைமைபூண்டதும், சோழநாட்டுத்திருப்பதிகள் நாற்பதில் முக்கியமானதும், 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று பிரதானமாக எடுத்துக்கூறப்படுகின்ற மூன்று தலங்களுள் முதலதும், 'கோயில்' என்றும் 'பெரியகோயில்' என்றும் மறுபெயருடையதும், 'பூலோகவைகுண்டம்' எனப்படுகின்ற மகிமையுடையதும், 'போகமண்டபம்' எனப்படுவதுமாகிய தலம்.

பிரணவாகாரமான ஸ்ரீரங்கவிமானத்திலே ஆதிசேஷசயனத்திற்பள்ளிகொண்டருளுந் திருமால், ஆதியிற் சத்தியலோகத்திற் பிரமதேவனது திருவாராதனத்திருவுருவமாயிருந்தான். பின்பு, சூரியகுலத்து மநுகுமாரனான இக்ஷ்வாகுமகாராசன் பிரமனைக்குறித்துப் பலகாலம் அரும்பெருந்தவம்புரிந்து அத்தேவனருளால் அப்பெருமானைத் தான் பெற்றுத் திருவயோத்திக்குஎழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்து பிரதிஷ்டித்துத் திருவாராதனஞ்செய்துவந்தனன்; அந்த ஸ்ரீரங்கநாதனே, இக்ஷ்வாகுமுதல் இராமபிரான் வரையிலுள்ள இரவிகுலமன்னவரெல்லார்க்குங் குலதெய்வமாகி விளங்கினன்; இங்ஙனம், மனிதவுருவங்கொண்ட பெருமாளாகிய இராமபிரானால் வணங்கப்பட்டமைபற்றி, அரங்கநாதனுக்கு 'பெரியபெருமாள்' என்று திருநாமம்: இராமபிரான், வனவாசஞ்சென்று விபீஷணனுக்கு அபயமளித்துக் கடல்கடந்து இலங்கைசேர்ந்து இராவணாதிராக்ஷஸசங்காரஞ்செய்து திருவயோத்திக்கு மீண்டு பட்டாபிஷேகஞ்செய்துகொண்டபின்பு, சுக்கிரீவன் முதலிய அனைவர்க்கும் விடைகொடுத்து அவரவரை ஊர்க்கு அனுப்பும்பொழுது, தனது திருவாராதனமூர்த்தியும் குலதனமுமான திருவரங்கநாதனைத் தனக்குமிகவும்அந்தரங்கனான விபீஷணாழ்வானிடங் கொடுத்து ஆராதித்துவரும்படி நியமித்து அனுப்பினான்; * அங்ஙனமே அவ்வரக்கர்பெரு

* இராமபிரான், திருவவதாரத்தைமுடித்துக்கொண்டு தன்னடிச்சோதிக்குஎழுந்தருளும்போது, வந்து தன்னைவணங்கித் தனது பிரிவை யாற்றமாட்டாதுநின்ற விபீஷணனுக்கு இக்ஷ்வாகுகுலதெய்வமும் தனதுதிருவாராதனமூர்த்தியுமான திருவரங்கநாதனைத் தந்தருளினனென்ன வரலாறு கூறுதலுமுண்டு.

மான் அவ்வமரர்பெருமானை அவ்விமானத்துடனே எழுந்தருளப்பண்ணிக் கொண்டு இலங்கைநோக்கிச் செல்லும்பொழுது, இடைவழியில் உபய காவேரிமத்தியிலே பெருமான் புடைபெயராது விமானத்துடனே நிலை நின்றருளினான்: அவ்வாறு திருமால் திருவுள்ளமுவந்து தங்கிய இடமே ஸ்ரீரங்க மெனப்படுவது.

(ஸ்ரீவைகுண்டம் திருப்பாற்கடல் சூரியமண்டலம் யோகிகளுடைய உள்ளக்கமலம் என்னும் இவையனைத்தினும் இனியதென்று திருமால்) திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்குமிட மானதுபற்றி, 'ரங்கம்' என்று அவ் விமானத்திற்குப் பெயர்; திருமால் இங்கு ரதியை [ஆசைப்பெருக்கத்தை] அடைகின்றன னென்க. ரங்கம் என்னும் வடமொழி, அகரம் மொழிமுதலாகிமுன்வரப்பெற்று 'அரங்கம்' என நின்றது. இங்கு 'அரங்கம்' என்பது-விமானத்தின்பெயர், திருப்பதிக்குஆனதோர் ஆகுபெயர் [தானியாகுபெயர்]. இனி, திருமகளார் திருநிருத்தஞ் செய்யு மிடமாயிருத்தலாலும், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவுக்கு [மேன்மைக்கு]க் கூத்துப்பயிலிடமாயிருத்தலாலும், ஆற்றிடைக்குறை [நதியினிடையேயுயர்ந்த திடர்] யாதலாலும், திருவரங்கமென்னும் பெயர் வந்ததெனினுமாம்.

திரு என்பதற்கு - மேன்மையான என்று பொருள்கொண்டால் திருவரங்கம் என்ற தொடர் - பண்புத்தொகையும், மேன்மையையுடைய என்று பொருள்கொண்டால் இரண்டாம்வேற்றுமையுருபும்பயனும்உடன்தொக்க தொகையுமாம். அரங்கக்கலம்பக மென்ற தொடர் - அரங்கத்தினது சம்பந்தமான கலம்பக மென்று விரித்து அரங்கத்தின்விஷயமான பிரபந்தமென்று பொருள்கொண்டு ஆறாம்வேற்றுமைத்தொகையாகவும், அரங்கத்தைப்பற்றிய கலம்பகமென்றுவிரித்துப் பொருள்கொண்டு இரண்டாம்வேற்றுமையுருபும்பொருளுந்தொக்கதொகையாகவும் உரைக்கத்தக்கது; அரங்கத்தின்மேற் பாடிய கலம்பக மென்று விரித்துப் பொருள்கொண்டு ஏழனுருபும்பயனுந்தொக்கதொகை யென்பாரும் உளர். திருவரங்கம் என்ற தொடரில், வகரவொற்று - உடம்படுமெய்.

கலம்பகமாவது - ஒருபோகும் வெண்பாவும் கட்டளைக்கலித்துறையும் முதற்கவியுறுப்பாக முதலிற்கூறி, புயவகுப்பு மதங்கு அம்மானை காலம் சம்பிரதம் கார் தவம் குறம் மறம் பாண் களி சித்து இரங்கல் கைக்கிளை தூது வண்டு தழை ஊசல் என்னும் பதினெட்டு உறுப்புக்களும் இயையுமாறு, மருட்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா ஆசிரியவிருத்தம் கலிவிருத்தம் கலித்தாழிசை கலிநிலைத்துறை வஞ்சிவிருத்தம் வஞ்சித்துறை ஆசிரியத்துறை வெண்டுறை முதலியவற்றால், இடையிடையே வெண்பாவும் கலித்துறையும் விரவிவர, மடக்குடைச்செய்யுளும் வண்ணம் சந்தம் முதலியனவும் பொருந்த, அந்தாதித்தொடையால் முற்றுற, இறுதியும் முதலும் மண்டலித்துப்பாடுங்கால் தேவர்க்கு நூறும் அந்தணர்க்குத் தொண்ணூற்றைந்தும் அரசர்க்குத் தொண்ணூறும் அமைச்சர்க்கு எழுபதும் வணிகர்க்கு ஐம்பதும் வேளாளர்க்கு முப்பதுமாகப் பாடுவதொரு பிரபந்தம்; இக்கலம்பகவிலக்கணத்தைப் பன்னிருபாட்டியல், வச்சணந்திமாலை, இலக்கணவிளக்கம் முதலியவற்றிற் காண்க.

"களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த, அலங்கலந் தொடையல் கொண் டடியிணை பணிவா னமரர்கள் புகுந்தன ராதலி லம்மா" என்னும் பெரியார்பாசுரத்தில் பலவகைமலர்களைக்கொண்டு தொடுக்கப்பட்டுள்ள மாலை, 'கலம்பகம்புனைந்ததொடையல்' எனக் கூறப்பட்டுள்ளதனால், அப் பூமாலைபோலப் பலவகைப்பாக்களைக்கொண்டு அமைக்கப்பட்ட பாமாலை யைக் கலம்பக மெனப் பெரியோர் பெயரிட்டுவழங்கின ரென்பர்; இதற்கு இவ்வாறு பொருள்கொள்ளும்போது, இது - கதம்ப மென்னும் வடமொழி யின் திரிபுபோலும்: இனி, கலப்பு அகம் எனப் பிரித்து, மெலித்தல்விகாரம் பெற்றதாக்கி, பலவுறுப்புக்களுங்கலத்தலைத் தன்னிடத்தேயுடைய தென அன்மொழித்தொகைக்காரணக்குறியாகவும்கொள்ளலாம்; இனி, ஒருசாரார் பன்னிரண்டுமரக்காலென்னும் பொருளுள்ள, 'கலம்' என்னுஞ் சொல்லும் கடவுளது ஆறுகுணங்களைக் குறிக்கும் 'பகம்' என்னுஞ் சொல்லும் குறிப் பாய்ப் பன்னிரண்டு ஆறு என்னுந் தொகையைமாத்திரம் உணர்த்தி உம் மைத்தொகையாகப் புணர்ந்து பதினெட்டுஉறுப்புக்களையுடைய பிரபந்தத் துக்கு ஏதுப்பெயராயிற் றென்றும் உரைப்பர்.

(அந்தாதி - அந்தத்தை ஆதியாகவுடையது; அந்தாதியாவது - முன் நின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது; இங்ஙனம் பாடும் நூலினது ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல், மண்டலித்த லெனப்படும். சொற்றொடர்நிலைச் செய்யுள் பொருட்டொடர்நிலைச்செய்யுள் என்ற வகையில் இது, சொற் றொடர்நிலை; "செய்யுளந்தாதி சொற்றொடர்நிலையே" என்றார் தண்டிய லங்காரத்தும்.)

"முதனூல் கருத்தன் அளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன் மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கெய்தும் பெயரே" என்று கூறப்படுகின்ற நூற்பெயர்வகைகளுள் நுதலியபொருளினாலும் தன்மையி னாலும் பெயர்பெற்றது இந்நூலென அறிக; (நுதலியபொருள் - நூலிற் கூறப்பட்ட விஷயம். தன்மை-நூலின் இயல்பு.) இங்கு 'அரங்கம்' என்பது- அத்திருப்பதியிலெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானைக் குறித்தது; இலக் கணை. இனி, "திருவாளன் திருப்பதிமேல், திருவரங்கத்தமிழ்மாலை விட்டு சித்தன்விரித்தன" என்று பெரியாழ்வார்திருமொழியிற் கூறியபடி திருவ ரங்கத்தின் விஷயமான தமிழ்த்தொடையாதல்பற்றி 'திருவரங்கக்கலம்பகம்' எனவும் தகும்; (மேற்காட்டிய அருளிச்செயலின் வியாக்கியானத்தில் 'தே ஶ்யரான பெருமாளைச் சொன்னதெல்லாம் உபஸர்ஜநகோடியிலேயாய், அத்தேசமேயாய்த்து இத்திருமொழிக்கு விஷயம்' என்றது காண்க.) என வே, திருவரங்கத்தைப்பற்றிப் பாடிய தொரு பிரபந்த மென்பது பொரு ளும், திருவரங்கத்தி லெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானைக்குறித்துப் பாடியதொரு நூலென்பது கருத்து மாகலாம். 'கோயிற்கலம்பகம்' என்ப தற்கும் இங்ஙனமே கொள்க.

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் "விருந்தே தானும், புது வது கிளந்த யாப்பின் மேற்றே" என்பதனால், 'விருந்துதானும், பழங்கதை

மேலதன்றிப் புதிதாகத் தாம்வேண்டியவாற்றால் தொடுக்கப்படும் தொடர்நிலைமேலது' என்று கூறினமையின், இந்தக்கலம்பகம், அங்ஙனங்கூறிய விருந்தா மென்று உணர்க. அச்சூத்திரவுரையில் அந்தாதியும் கலம்பகமும் முதலாயின உதாரணங்காட்டப்பட்டுள்ளவாறுங் காண்க. இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார். இப்பிரபந்தம், தோத்திர ரூபமானது.

நூலின் புறமாக முதலிற்கூறிய சிறப்புப்பாயிரச்செய்யு ளிரண்டும், காப்புச்செய்யுள் நான்கும், நூலின் இறுதியிற்கூறும் தற்சிறப்புப் பாயிரச்செய்யுளொன்றும் நீங்கலாக நூறுசெய்யு ளுடையது, இந்நூல்.

தலத்தின் பெயர்—ரங்கம், ஸ்ரீரங்கம், திருவரங்கம், பெரியகோயில், கோயில் என்பன. பூலோகவைகுண்டம், போகமண்டபம், ஸ்வயம்வ்யக்த க்ஷேத்ரம் என்பவை, விசேஷநாமங்களாம். இது, ஸ்வயம்வ்யக்தக்ஷேத்ரம் எட்டில் ஒன்று.

இத்திருப்பதியின் எம்பெருமானது திருநாமம் — ஸ்ரீரங்கநாதன், பெரியபெருமாள், நம்பெருமாள், அழகியமணவாளன்.

கோலம்—பள்ளிகொண்ட திருக்கோலம்; சேஷசயனம்.

சந்நிதி—தெற்குநோக்கியது.

நாச்சியார்—ஸ்ரீரங்கநாயகி, ஸ்ரீரங்கநாச்சியார்.

விமானம்—பிரணவாகாரவிமானம், வேதசிருங்கம்.

நதி—உபயகாவேரி (தென்திருக்காவேரியும், வடதிருக்காவேரியும் [கொள்ளடம்.])

தீர்த்தம்—சந்திரபுஷ்கரிணி முதலிய நவதீர்த்தங்கள்.

தலவிருக்ஷம்—புன்னைமரம்.

பிரதியக்ஷம்—தர்மவர்மா, ரவிதர்மன், சந்திரன், காவேரி முதலானவர்களுக்குப் பிரதியக்ஷம்.

பாடல்—பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என்கிற ஆழ்வார்கள் பதின்மர், ஆண்டாள் இவர்கள் மங்களாசாஸநம்.

பஞ்சகாவியங்களுள் ஒன்றாகிய சிலப்பதிகாரத்தில் இந்தத்திவ்வியதேசமும் இதிலெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானும் "நீலமேக நெடும்பொற் குன்றத்துப், பால்விரிந் தகலாது படிந்தது போல, ஆயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறற்,பாயற் பள்ளிப் பலர்தொழுதேத்த,விரிதிரைக்காவிரி வியன்பெருந் துருத்தி, திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்......என் கண் காட்டென் றென்னுளங் கவற்ற, வந்தேன்" என்று பாராட்டிக்கூறப் பட்டிருத்தலுங் காண்க.

---

# காப்பு.

காப்பு - ரக்ஷித்தல்; அது இங்கு ரக்ஷகவிஷயமான வணக்கத்துக்கு ஆகுபெயர்: ஆகவே, கவி தமக்கு நேரிடத்தக்க இடையூறுகளை நீக்கித் தமது எண்ணத்தை முடிக்கவல்லதோர் பொருளின் விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது கருத்து.

[ஆழ்வார்கள் பன்னிருவர்.]

வேதந்தொகுத்துத்தமிழ்ப்பாடல்செய்தவிமலன்பொய்கை
பூதன்மயிலையர்கோன்புகழ்ச்சேரன்புத்தூரன்றொண்டர்
பாதந்தருந்துகண்மாமழிசைக்குமன்பாணன்மங்கை
நாதன்மதுரகவிகோதைபாதங்கணண்ணுதுமே.

(இ - ள்.) வேதம் - வேதங்களின் பொருளை, தொகுத்து - சுருக்கமாக அடக்கி, தமிழ் பாடல் செய்த - தமிழ்ப்பாசுரங்களாக அருளிச்செய்த, விமலன் - நம்மாழ்வாரும்,—பொய்கை - பொய்கையாழ்வாரும்,—பூதன் - பூதத்தாழ்வாரும்,—மயிலையர் கோன்-பேயாழ்வாரும்,—மாமழிசைக்குமன்-பெருமைபொருந்திய திருமழிசையாழ்வாரும்,—புகழ் சேரன் - புகழினையுடைய குலசேகராழ்வாரும்,—புத்தூரன் - பெரியாழ்வாரும்,—தொண்டர் பாதம் தரும் துகள் - தொண்டரடிப்பொடியாழ்வாரும்,—பாணன் - திருப்பாணாழ்வாரும்,—மங்கைநாதன்-திருமங்கையாழ்வாரும்,—மதுரகவி-மதுரகவியாழ்வாரும்,—கோதை - ஆண்டாளும் என்னும் ஆழ்வார்கள் பன்னிருவர்களது, பாதங்கள் - திருவடிகளை, நண்ணுதும் - சேருவோம்; (எ - று.)

ஆசீர்வாதம் [வாழ்த்து], நமஸ்காரம் [வணக்கம்], வஸ்துநிர்த்தேசம் [தலைமைப்பொருளுரைத்தல்] என்ற மூவகைமங்களங்களுள் இது, வணக்கத்தின்பாற்படும். எப்பொழுதும் எம்பெருமானது குணங்களில் ஈடுபட்டுப் பாடல்பாடித்துதிக்கும் ஆழ்வார்கள் அப்பெருமானது தோத்திரமாகத் தாம் செய்யும் கலம்பகத்திற்கு நேரும் இடையூறுகளை நீக்கிப் பாதுகாப்பரென்று கொண்டு அவர்களை இங்கு வணங்குகின்றார். ஸ்ரீவைஷ்ணவசமயத்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இக்காப்புச்செய்யுள், அந்த ஸ்ரீமகாவிஷ்ணுவினது தொண்டர்களாகிய ஆழ்வார்களைக் குறித்ததாதலால், வழிபடுகடவுள்வணக்கம் ஏற்புடைக்கடவுள்வணக்கம் என்ற வகையிரண்டில் வழிபடுகடவுள்வணக்கமாம். அடுத்த மூன்று செய்யுள்களும் இவ்வாறே. தம்தமது மதத்துக்கு உரிய கடவுளை வணங்குதலேயன்றி அக்கடவுளினடியார்களை வணங்குதலும் வழிபடுகடவுள்வணக்கத்தின்பாற்படுமென்க.

எல்லாநூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக்கூறவேண்டுவது பெருமரபாதலின், காப்புச்செய்யுளின் முதலில் 'வேதம்' என்று தொடங்கினார். மேல் நூல்தொடக்கத்தில் 'சீர்' என்னுஞ் சொல்லை வைத்தவாறுங் காண்க.

பாடலென்னுந் தொழிற்பெயர்-அதனைப்பொருந்திய கவிக்காதலால், தொழிலாகுபெயர். விமலனென்பதற்கு - குற்றமற்றவனென்று பொருள்; இது, பிறந்தபொழுது பரிசித்தமாத்திரத்தில் அஞ்ஞானமயமாக்குகிற ஶட மென்னும் வாயுவைத் தம்மீது படவொட்டாமற் கோபித்துப் போக்கி யருளியவ ரென்னும் பொருளதாகிய ஶடகோபனென்னுந் திருநாமத்தின் பொருளை உட்கொண்டது. நம்மாழ்வாரை முதலிற் கூறியது, அவயவியாய்த் திருத்துழாய் அங்குரிக்கும்போதே பரிமளத்தோடு தோற்றுதல்போல ஞானத்துடனேயே திருவவதரித்து மற்றையாழ்வார்களினும் மேம்படுதலா லென்க. செய்யுளாதலின் முறைபிறழ வைத்தாரேனும், பாடக்ரமாபேக்ஷயா அர்த்தக்ரமஸ்ய பலீயஸ்தவம் [சொல்நிற்கும் முறையைவிடப் பொருள் நிற்கும்நிலையே வலியுடைத்து]" என்ற முறைமைபற்றி, மயிலையர்கோன் என்ற சொற்குப்பின் 'மாமழிசைக்குமன்' என்பதனைக் கூட்டுக.

பொய்கை - குளம்; பொய்கையில் திருவவதரித்தவரைப்பொய்கையென்றது, இடவாகுபெயர்: இனி, உவமவாகுபெயராய், ஊர்நடுவேயுள்ள ஊருணிபோல எல்லார்க்கும் எளிதிற் பயன்கொடுப்பவ ரென்றுமாம். பூதன் - "கடல்வண்ணன் பூதம்," "மறுத்திருமார்பனவன்றன்பூதம்" என்றவாறு எம்பெருமானை யறிதலாலே தமது உளனுகையை யுடையவர். மயிலையர்கோன் - திருமயிலையிலுள்ளார்க்குத் தலைவர். கோன், னகரமெய் - சாரியை. புகழாவது - இம்மைப்பயனுகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாது நிற்கும் கீர்த்தி. சேரன்-சேரகுலத்தில் திருவவதரித்தவர். புத்தூரன்-வில்லி புத்தூரில் திருவவதரித்தவர். தொண்டர்பாதந்தருந்துகள் - ஸ்ரீபாததூளியா யிருப்பவர்; உள்ளும் புறமும் ஒத்துத் தொண்டுசெய்யும் மெய்யடியாரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவடித்தூளிபோல அவர்கட்குக் கீழ்ப்படிந்து அடிமைபூண்டு ஒழுகுபவராதலால், இவர்க்கு இத்திருநாமம். மாமழிசைக்கு மன் - மஹீஸாரக்ஷேத்ரமென்கிற பெருமையையுடைய திருமழிசைக்குத் தலைவர்; "இடங்கொண்ட கீர்த்தி மழிசைக்கிறைவன்" என்றார் அமுதனாரும். பாணன் - வீணாபாணியாய்ப் பெரியபெருமாள் திருவடிக்கீழே நிரந்தரசேவைபண்ணிக்கொண்டு பாட்டுப்பாடிப் புகழ்பவர்; பாண் - இசைப்பாட்டு: அதனையுடையவன், பாணன்: "பாட்டினாற் கண்டுவாழும் பாணர்" என்பர். மங்கைநாதன் - திருமங்கையென்னுந் திருப்பதிக்குத் தலைவர். மதுரகவி - இனிமையான பாடலைப் பாடுபவர். கோதை - மாலை ; எம்பெருமானுக்கு மாலைபோல நிரதிசயபோக்கியையாயிருப்பவள் : அன்றிக்கே, பாமாலையையும் பூமாலையையுஞ் சூடிக்கொடுத்தவள்.

நண்ணுதல்-இடைவிடாது நினைத்தல்; "மலர்மிசை யேகினான்மாணடி சேர்ந்தார்" என்பதில் 'சேர்தல்'போல. நண்ணுதும் - தன்மைப்பன்மை முற்று; ஈண்டு ஒருவரைக்கூறும் பன்மை: தும்மீறு எதிர்காலமுணர்த்திற்று. யாமென்னும் பயனிலைகுறைந்துநின்றது ; இனி, யாமென்பது தோன்றா எழுவாயெனக் கொண்டு நண்ணுதுமென்னும் வினைப்பயனிலை கொண்டதெனினும் அமையும். இது கடவுள்வணக்க மாதலால் "நான்முகற்றொழுது நன்கியம்புவன்", "பத்தமடி தொடை பாவினங் கூறுவன்" என்றாற்போல

ஒருமையாற்கூறித்தாழ்த்தாமற் பன்மையாற்கூறித் தன்னை உயர்த்தியபின் இதில் வணக்க மென்னெனின்;—அங்ஙனம் உயர்த்திக் கூறுதல் பிறவிடங் களில் உண்டெனினும் இவ்விடத்தில் உயர்த்தியதன்று: தன்மைப்பன்மை யென்பது தன்னோடு சார்ந்தாரையுங் கூட்டி யல்லது தனித்து இயலாமை யால் தானொருவன் கடவுளை அறிந்து அன்புகூர்ந்து வணங்கி அப்பயனைத் தான் அடைதலினுஞ் சிருட்டி தொடங்கித் தன் கோத்திரத்தாரையுந் தன் னோடு கூட்டி வணங்கி அவர்க்கும் அப்பயனை அடைவித்தலே சிறந்ததெனக் கருதிச் சான்றோரெல்லாம் தொன்றுதொட்டு இவ்வாறு கூறிவருவதோர் மரபாமென்க; என்னெனின்;—"ஏகதந்த னிணையடி பணிவாம்", "ஏத்தி யேத்தித் தொழுவோம் யாமே", "சரண வாரிசமலர் தலைக்கொள் வாம ரோ" என இவ்வாறுகூறியவை அளவிலவென்க. நூல்செய்தவர்க்கு மாத்தி ரையேயன்றி, இந்நூலைப் படிக்கத்தொடங்குவோர் முதலியோர்க்கும் யா தோரிடையூறுமின்றி இந்நூல் முற்றப்போதற்கு அவர்களையும் உளப்படுத் திய தன்மைப்பன்மையெனினு மமையும். யாமென்னுந் தோன்றாஎழுவா யை முதலிற்கூட்டி நண்ணுது மென முடிப்பினும், இச்செய்யுளில் நின் றாங்கே யாமென்பதனை இறுதியிலே கூட்டி முடிப்பினும் நேராகச் சென்று பொருள் முடிதலால், யாற்றுநீர்ப்பொருள்கோள். ஏகாரம்- ஈற்றசை.

இங்ஙனம் வணங்கியதனால், எடுத்த கருமம் இனிது முடியுமென்று கருத்து.

இது, நேரசை முதலாய் ஒற்றொழித்துப் பதினாறெழுத்துப் பெற்று வந்த கட்டளைக்கலித்துறை. (௧)

[நம்மாழ்வார் துதி.]

மறைப்பாற்கடலைத்திருநாவின்மந்தரத்தாற்கடைந்து
துறைப்பாற்படுத்தித்தமிழாயிரத்தின்சுவையமிர்தங்
கறைப்பாம்பணைப்பள்ளியானன்பரீட்டங்களித்தருந்த
நிறைப்பான்கழலன்றிச்சன்மவிடாய்க்குநிழலில்லையே.

(இ - ள்.) மறை - வேதமாகிய, பால்கடலை - திருப்பாற்கடலை, திரு நாவின் - (தமது) சிறந்த நாக்காகிய, மந்தரத்தால் - மந்தரபருவதத்தால், கடைந்து—; துறை பால் படுத்தி - துறைகளின் வகைகளோடு பொருந் தச்செய்து, தமிழ் ஆயிரத்து - ஆயிரந் தமிழ்ப்பாசுரங்களாகிய, இன் சுவை அமிர்தம் - இனிய சுவையினையுடைய அமிருதத்தை, கறை பாம்பு அணை பள்ளியான் - நஞ்சினையுடைய திருவநந்தாழ்வானாகிய திருவணையிற் பள்ளி கொள்ளுதலையுடைய திருமாலினது, அன்பர்-தொண்டர்களது, ஈட்டம் - கூட்டம், களித்து - மனமகிழ்ந்து, அருந்த - உண்ணும்படி, நிறைப்பான் - நிறைத்தருளிய நம்மாழ்வாரது, கழல் அன்றி - திருவடிகளேயல்லாமல், சன்மம் விடாய்க்கு- பிறவித்துன்பமாகிய தாபத்திற்கு, நிழல் - வேறுநிழலா வது, இல்லை—; (எ - று.)

அளத்தற்கரிய பரப்புடைமைபற்றியும், இன்சுவையுடைமைபற்றியும், எம்பெருமானுக்கு உறைவிடமாதல்பற்றியும், மறையைப் பாற்கடலாக உரு

வகப்படுத்தினர். திரு - வேறொன்றற்கில்லாத மேன்மை; 'திருநாவீறுடைய பிரான்' என்னுந் திருநாமத்தின் பொருளை நோக்குக. தமிழ்-தமிழ்ப்பாடலுக்கு ஆகுபெயர். தமிழாயிரம்-திருவாய்மொழி. கறை - புள்ளி யென்றுமாம். அணை-சயநம்.பள்ளி-யோகநித்திரை.அன்பரீட்டங்கள்த்தருந்துதல்-"தொண்டர்க்கமுதுண்ணச்சொன்மாலைகள்சொன்னேன்" என்றதனுனுமுணர்க. ஈட்டம்-தொழிற்பெயர்; ஈண்டு-முதனிலை. களிப்பு-பெறலரிய இப்பேறு பெற்றோமே யென்பதனு லுண்டாவது. சன்மம்-ஜந்மம். பிறவித்துன்பங்களெல்லாந் திருவடிகளைச் சேர்ந்தார்க்கு இல்லையாதலின், ஸம்ஸாரதாபத்தை நீக்குதற்கு நிழலாமென்பார், 'சன்மவிடாய்க்கு நிழலில்லை' என்றார்.

இது, உருவகவணி; இதில், விண்ணுலகத்திலுள்ள தேவர்க்குத் திருப்பாற்கடலமிருதம்போல மண்ணுலகத்திலுள்ள மானிடர்க்கு இத்திருவாய்மொழியமிருதம் அமையுமென்னும் உவமையணி தொனிக்கின்றது. இங்கு 'இன்சுவையமிர்தம்' என்று சிறப்பித்துக் கூறியிருத்தலால், மரணத்தைமாத்திரம் தவிர்க்கும் அந்தத்தேவாமிருதத்தினும், பலவகைப்பிறப் பிறப்புக்களைத் தவிர்த்து முத்தியளிக்கும் ஆற்றலையுடைய இந்தத் திருவாய்மொழியமிருதம் சிறந்ததென்பது தெற்றென விளங்கும். "அம்பிலே சிலையை நாட்டி யமரர்க்கன் றமுத மீந்த, தம்பிரா னென்னத் தானுந் தமிழிலே தாலை நாட்டிக், கம்பநா டுடைய வள்ளல் கவிச்சக்ர வர்த்தி பார்மே, னம்புபா மாலை யாலே நரருக்கின் றமுத மீந்தான்" என்பதனோடு இக்கவியை ஒப்பிட்டு உணர்க.

'திருநாவென் மந்தரத்தால்' என்றும் பாடமுண்டு.

இது, நிரையசைமுதலாய்ப் பதினேழெழுத்துப்பெற்றுவந்த கட்டளைக் கலித்துறை; மேலிற்கவியும் இது. (உ)

[எம்பெருமானர் துதி.]

பிடிக்கும்பரசமயக்குலவேழம்பிளிறவெகுண்
டிடிக்குங்குரற்சிங்கவேறனையானெழுபாருமுய்யப்
படிக்கும்புகழெம்மிராமாநுசமுனிபல்குணமும்
வடிக்குங்கருத்தினர்க்கேதிருமாமணிமண்டபமே.

(இ - ள்.) பிடிக்கும் - (தந்தமது சமயமே சிறந்ததாக) மேற்கொள்ளுகின்ற, பர சமயம்-வேறுமதத்தினராகிய, குலம் வேழம் - சிறந்தயானைகள், பிளிற - அலறும்படி, வெகுண்டு - கோபித்து, இடிக்கும் - கர்ச்சிக்கின்ற, குரல்-ஒலியையுடைய, சிங்கம் ஏறு- ஆண்சிங்கத்தை,அனையான் - போன்றவராகிய,—எழு பாரும் - ஏழுலகத்தவரும், உய்ய - நற்கதியடையும்படி, படிக்கும் - பாராயணஞ்செய்கின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, எம் இராமாநுசமுனி - எம்பெருமானாரது, பல் குணமும் - பலகுணங்களையும், வடிக்கும் - (சாரமாகத் தெளிந்தெடுத்துத்) தியானிக்கின்ற, கருத்தினர்க்கே - மனத்தையுடையவர்களுக்கே, திரு மா மணி மண்டபம் - (பரமபதத்திலுள்ள) முக்திமண்டபம், (பெறலாம்); (எ - று.)—பயனிலை வருவிக்கப்பட்டது.

மற்றையோர்கீர்த்திபோலாகாமல், எம்பெருமானாருகீர்த்தி ஏழுலகத்தவரும் படித்து ஈடேறும்படியான பெருமை வாய்ந்த தென்பதை விளக்க, 'எழுபாருமுய்ய' என்ற அடைமொழி கொடுத்துக்கூறினர்; "அனைத்துலகும் வாழப் பிறந்தவன்" என்னக்கடவதிறே. பிரமோபாசநத்தை விதிக்கிற வேதாந்தசாஸ்திரங்களில் ஐயமுழுதும்அகலும்படி இவர் ஸ்ரீபாஷ்யமுகமாகச் சகலஅர்த்தங்களையும் பிரசாதித்து மண்ணுலகத்தாரை வாழ்வித்தமையும், இவர் சாரதாபீடத்துக்கு எழுந்தருளியபோது தேவர்கட்கெல்லாந் தலைவனான பிரமதேவனது மகிஷியாகிய சரசுவதியானவள் இவர் பக்கல் தனதுஐயங்களையெல்லாம் தீர்த்துக்கொண்டதன்றி இவர்செய்தருளின ஸ்ரீபாஷ்யத்தைச் சிரசினால்வகித்தமையும் எங்கும் பிரசித்தம்; இவ்வரலாறுகளால், மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் இந்த எம்பெருமானாரால் ஈடேறியமை அறிக. இனி, எழுபார் என்பதற்கு - ஏழுத்வீபங்களிலுள்ளவர்களென்றுங் கூறலாம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணமென்று இருப்பவர்க்குத்தான் மோக்ஷலோகம் ஸித்திக்குமென்பதாம். இவ்வாறு கூறியதற்குக் காரணம் - அஜ்ஞாநிகளாய் நித்யஸம்ஸாரிகளாய்ப் போருகிற நமக்குக் கர்மம் ஜ்ஞாநம் பக்தி ப்ரபத்தி என்ற சதுர்வித உபாயங்களில் எதனிலும் அந்வயித்தற்கு ஏற்ற யோக்கியதை யில்லாமையாலும், எம்பெருமானார்திறத்து 'உமக்கும் உம்முடையார்க்கும் உபயவிபூத்யைஶ்வர்யமுந் தந்தோம்' என்று எம்பெருமான் அநுக்கிரகித்திருத்தலாலும், அவ்வெம்பெருமானார் ஸம்பந்தத்தைக் கொண்டே நற்கதி பெறவேண்டியிருத்தலாலுமாமென்க. 'எம்பெருமானார் திருவடிகளைத் தொழவே, திவ்யதேசங்களெல்லாம் திருவடி தொழுதானாக்கடவன்; உடையவரை ஆராதித்து அமுதுசெய்யப் பண்ணவே, எல்லாத் திவ்ய தேசங்களி லெம்பெருமான்களையும் ஆராதித்து அமுதுசெய்யப் பண்ணினனாக்கடவன் ; 'கர்மமும் உபாயமன்று, ஜ்ஞாநமும் உபாயமன்று, பக்தியும் உபாயமன்று, ப்ரபத்தியும் உபாயமன்று, எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயம்' என்கையாலே, எம்பெருமானாரைப் பற்றுகையே ப்ரபத்தி, ராமாநுஜ னென்கிற சதுரக்ஷரியே திருமந்திரம்; அவர்திருவடிகளிலே பண்ணுங் கைங்கரியமே பரமபுருஷார்த்தம்; இதுவே நிச்சிதார்த்தமான ஸித்தாந்தம்' என்ற வாக்கியங்கள் இங்குநினைக்கத்தக்கன. இராமாநுசனென்னுஞ்சொல்லுக்கு-இராமன்தம்பியென்று பொருள்;ஆதிசேஷனது அம்சமாகிய லக்ஷ்மணனது அம்சமாதலால், உடையவருக்கு இப்பெயர். ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைத ஸ்தாபநாசாரியரான ஸ்ரீபாஷ்யகாரர்க்கு, ஸர்வலக்ஷண ஸம்பந்நராயிருத்தல் பற்றி, லக்ஷ்மணரது திருநாமமான 'இராமாநுசன்' என்னும் திருநாமம் பஞ்சஸம்ஸ்காரம் செய்யும்போது பெரியநம்பியால் இடப்பட்டது ; பிறகு இவர் ஸந்யாஸம் பெற்றபோது திருக்கச்சியத்திகிரிப் பேரருளாளப்பெருமாள் 'ராமாநுஜமுநி'என்று இவர்க்குத் திருநாமம் சாற்றியருளினர். குலவேழம் - உயர்ந்த குலத்தில் தோன்றிய யானை; இனி, வேழக்குலமென மாற்றி, யானைக்கூட்ட மென்றுமாம். சிங்கம் - ஸிம்ஹம்; யானை முதலிய பெரிய விலங்குகளையும் ஹிம்ஸிப்பதென்று பொருள். திருமாமணி மண்டபம் - அழகிய பெரிய இர

த்தினமயமான மண்டபம்; இது, அந்தமில் பேரின்பத்தையுடைய நித்திய விபூதியாகிய பரமபதத்தி லுள்ளது.

"தர்க்கச்சமணருஞ் சாக்கியப் பேய்களுந் தாழ்சடையோன், சொற் கற்ற சோம்பருஞ் சூனியவாதரு நான்மறையும், நிற்கக் குறும்புசெய்நீசரு மாண்டனர் நீணிலத்தே, பொறகற்பகம் எம் மிராமாநுசமுனி போந்தபின் னே", "சாருவாகமத நீறுசெய்து சமணர் செடிக்கனல் கொளுத்தியே சாக்கியக்கடலை வற்றுவித்து மிகுசாங்கியக்கிரிமுறித்திட, மாறுசெய்திடு கணாதவாதியர்கள் வாய்தகர்த்தறமிகுத்துமேல் வந்தபாசுபதர் சிந்தியோடும் வகை வாதுசெய்த வெதிராசனார், கூறுமா குருமதத்தொ டோங்கிய குமாரிலன் மதமவற்றின்மேல் கொடியதர்க்கசரம் விட்டபின் குறுகிமாய வாதியரை வென்றிட, மீறிவாதில் வரு பார்கரன் மதவிலக்கடிக் கொடியெறிந்து போய் மிக்கயாதவமதத்தை மாய்த்தபெருவீரர்நாளுமிகவாழியே" என்னும் பெரியார் பாசுரங்கள் முன்னிரண்டடிக்கு மேற்கோளாகத்தக்கன. ()

பட்டர்துதி.

வானிட்டகீர்த்திவளர்கூரத்தாழ்வான்மகிழவந்த
தேனிட்டதார்நம்பெருமாள்குமாரர்சிவனையயன்
றானிட்டசாபந்துடைத்தாளரங்கர்சங்காழிபுய
நானிட்டனென்றருள்பட்டர்பொற்றாள்கதிநந்தமக்கே.

(இ - ள்.) வான் இட்ட - தேவலோகத்திலும் பரவிய, கீர்த்தி - புகழானது, வளர் - (மேன்மேல் மிக்கு) வளரப்பெற்ற, கூரத்தாழ்வான் - கூரத்தாழ்வானென்னும் ஆசாரியர், மகிழ - திருவுள்ளமுகக்கும்படி, வந்த - (அவரது திருக்குமாரராய்த்) திருவவதரித்த, தேன் இட்ட தார் - தேன் துளிக்கின்ற மாலையையுடைய, நம்பெருமாள் - திருவரங்கநாதரது, குமாரர் - திருக்குமாரரும்,— சிவனை-சிவனுக்கு, அயன் பிரமன், இட்ட - கொடுத்த, சாபம்-சாபத்தை, துடைத்து - போக்கி, ஆள்-காத்தருளிய, அரங்கர்-ரங்கநாதரது (சின்னமாகிய), சங்கு ஆழி - சங்க சக்கரங்களை, புயம் - (என்னுடைய)தோள்களில், நான் இட்டன் என்று-அடியேனையும்ஒரு அன்பனாகக்கொண்டு, அருள் - (திருவிலச்சினையிட்டு) அருளியவருமான, பட்டர்-ஸ்ரீபராசரபட்டரது, பொன் தாள் - அழகிய திருவடிகள், நந்தமக்கு - நமக்கு, கதி - அடைக்கலமாகும்; (எ - று.)

சங்கசக்கரங்களாகிய திருவிலச்சினையை அடியேனுக்குப் பிரசாதித்த ஸ்ரீபராசரபட்டரது திருவடித்தாமரைகளே அடியேனுக்குத் தஞ்சமென்பதாம். இங்குத் திருவிலச்சினையாகிய தாபத்தைக் கூறியது-புண்ட்ரம் நாமம் மந்த்ரம் திருவாராதநம் என்னும் மற்றை ஸம்ஸ்காரங்கட்கும் உபலக்ஷணம். "ஞானமனுட்டானமிவை நன்றாகவேயுடைய, ஞான குருவை யடைந்தக்கால் - மானிலத்தீர், தேனார்கமலத் திருமாமகள்கொழுநன், தானேவைகுந் தந்தரும்" என்ப வாதலால், இவ்வாறுகூறினரென்க. கீர்த்தி வானுலகத் திற் பரவியமை கூறவே, இவ்வுலகத்துப் பரவியமை தானே பெறப்படும். கூரத்தாழ்வான் - கூரமென்னும் ஊரில் திருவவதரித்தவர். வந்த பட்டர், குமாரராகிய பட்டர், அருள் பட்டர் என இயையும். தேனிட்ட தார் -

வண்டுகள் இடைவிடாது மொய்க்கின்ற மாலை யென்றுமாம். நம்பெருமாள் என்றது, சிறப்புச்சொல்; "நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை யென்ப ரவரவர்த மேற்றத்தால்" என்றார் பெரியாரும். நம்பெருமாளது திருவருளாற் கூரத்தாழ்வான் திருக்குமாரராய்த் திருவவதரித்ததுபற்றியும், ஸ்ரீரங்கநாதன் இளங்குழந்தைப்பருவத்திலேயே பட்டரைத் தமதுபுத்திரனாக அங்கீகரித்துத் தம்முடையசன்னிதியிலே திருமணத்தூணினருகே தொட்டிலிலேவைத்து ஸ்ரீரங்கநாச்சியாரும் தாமுமாகச் சீராட்டிவளர்க்க வளர்ந்தவராதல் பற்றியும், பட்டர்க்கு 'நம்பெருமாள்குமாரர்' என்று திருநாமம். பண்டிதரைக்குறிக்கின்ற 'பட்டர்' என்ற பொதுப்பெயர், சிறப்பாக இவர்க்கு இட்டுவழங்கப்பெற்றது; வடசொல். "பொருளல்லாத வென்னைப் பொருளாக்கியடிமைகொண்டாய்" என்றாற்போல, 'நானிட்டனென்றருள் பட்டர்' என்றார். இனி, நானிட்டனென்பதற்கு - நான் உனக்கு இஷ்டனென்று சொல்லி யென்றும், நான் இட்டேனென் றென்றுங் கொள்ளலாம். கதி - புகலிடம். சாபம் - வெகுண்டு கூறிய மொழி; இங்கே, பிரமகபாலம் கையிலொட்டிக்கொண்டு பலவிடங்களிலும் பலியேற்றுத்திரிய நேர்ந்தமை. சங்கு - வடசொல்விகாரம். ஆழி - வட்டம்; சக்கரத்துக்கு வடிவுப்பண்பாகுபெயர்: அன்றிக்கே, அசுரர் முதலிய பகைவரை அழித்தலையுடையது. புயம் - புஜம்.

இது, நேரிசைமுதலதாகிய கட்டளைக்கலித்துறை. (ச)

---

# நூல்.

க. சீர்பூத்தசெழுங்கமலத்திருத்தவிசின்வீற்றிருக்கு
நீர்பூத்ததிருமகளுநிலமகளுமடிவருடச்
சிறைப்பறவைபுறங்காப்பச்சேனையர்கோன்பணிகேட்ப
நறைப்படலைத்துழாய்மார்பினுயிறுபோன்மணிவிளங்க
வரியதானவர்க்கடிந்தவைப் படையும்புடைதயங்கக்
கரியமால்வரைமுளரிக்காடீன்றுகிடந்தாங்குப்
பாயிரநான்மறைபரவப்பாற்கடலுட்பருமணிச்சூட்
டாயிரவாய்ப்பாம்பணைமேலறிதுயிலினிதமர்ந்தோய்!

உ. மண்ணகந்துயர்நீங்கவானகந்தொழுதேத்தக்
கண்ணகன்சோணாட்டுக்காவிரிவாய்ப்புளினத்துப்
பம்புகதிர்விசும்பிரவிபசும்புரவிவழிவிலங்கு
செம்பொன்மதிலேழுடுத்ததிருவரங்கப்பெருங்கோயி
லாணிப்பொற்றகடரிஞ்சுமணிக்கதவநீள்வாயின்
மாணிக்கவெயில்பரப்பும்வயிரமணிவிமானத்துண்
மின்னிலங்குதொடிவலயவியன்வலக்கைகீழ்கொடுத்துத்
தென்னிலங்கைத்திசைநோக்கித்திருநயனந்துயில்வோய்கேள்:

க. தேவராய்த்தேவர்க்குந்தெரியாதவொளியுருவாய்
மூவராய்மூவர்க்குண்முதல்வனாய்நின்றோய்நீ.

உ. போற்றுவார்போற்றுவதுன்புகழ்ப்பொருளேயாதலினால்
வேற்றுவாசகமடியேன்விளம்புமாறறியேனால்.

ங. பணித்தடங்காநிமையவற்கும்பங்கயத்தோன்முதலோர்க்கும்
பணித்தடங்காப்புகழடியேன்பணித்தடங்கற்பாலதோ.

ச. யாங்கடவுளென்றிருக்குமெவ்வுலகிற்கடவுளர்க்கு
மாங்கடவுணீயென்றாலஃதுனக்குவியப்பாமோ.

ரு. அனைத்துலகுமனைத்துயிருமமைத்தளித்துத்துடைப்பதுநீ
நினைத்தவிளையாட்டென்றானின்பெருமைக்களவாமோ.

சு. கருதரியவுயிர்க்குயிராய்க்கரந்தெங்கும்பரந்துறையு
மொருதனிநாயகமென்றாலுன்புகழ்க்குவரம்பாமோ.

க. உருவெனவருவெனவுளனெனவிலனென
வருமறையிறுதியுமறிவருநிலைமையை.

உ. இவரிவரிறையவரெனமனவுறுதியொ
டவரவர்தொழவுறுசமயமுமருளினை.

ங. கடுவளிகனல்புனல்ககனமொடகலிட
முடுபதிகதிரவனுருவமுமருளினை.

ச. கடிமலரடியிணைகருதினர்பெறுகென
வடிநடுமுடிவறவருள்பரகதியினை.

க. ஒருநாளுமுகத்தவனேடிலகின்றுயென்பரதுன்
றிருநாபிமலர்ந்ததல்லாற்றிருவுளத்திலுணராயால்.

உ. மேருகிரியுடலவுணன்மிடல்கெடுத்தாயென்பரதுன்
கூருகிரேயறிந்ததல்லாற்கோவேநீயறியாயால்.

ங. பன்றியாய்ப்படியெடுத்தபாழியாயென்பரது
வென்றியாருனதெயிற்றின்மென்றுகள்போன்றிருந்ததால்.

ச. அண்டமெலாமுண்டையென்பரறியாதாராங்கவைநீ
யுண்டருளுங்காலத்திலொருதுற்றுக்காற்றுவால்.

க. நஞ்சமுமமுதமுநரகும்வீடுமாய்
வஞ்சமுஞானமுமறப்புமாயினை.

உ. இருவினைப்பகுதியுமின்பதுன்பமுங்
கருணையும்வெகுளியுங்கருத்துமாயினை

க. அலைகடல்வயிறுகலக்கினை. ந. மலைகடகளிறுவதைத்தனை.
உ. அவுணரைமதுகையடக்கினை. ச. மலைதலைகவிழவெடுத்தனை.

க. மண்ணைவிண்டனை. ரு. உண்ணிறைந்தனை.
உ. வெண்ணெயுண்டனை. சா. எண்ணிறந்தனை.
ந. மருதிடந்தனை. எ. ஒருமையாயினை.
ச. எருதடர்ந்தனை. அ. பெருமைமேயினை.

எனவாங்கு

மலர்தலையுலகத்துப்புலமைசான்ற
பதின்மருப்பணித்தபாடலோதையொடு
முதுமறைக்கறங்கமுரசமார்ப்ப
வலம்புரிபிளிறும்பொலம்புரிகோயி
லாழியஞ்செல்வவாதியம்பரம
வாழிவாழிமாயோய்வாழி
நெடியோய்வாழிநின்மாட்டொன்றே
யடியேன்வேண்டுவதஃதுநீமறுக்கேற்
பூவருமயன்முதல்யாவருமறியா
மூவுலகளந்தநின்சேவடிவாழ்த்தித்
தொழுதகைத்தொண்டர்தந்தொண்டருட்சேர்க்கா
தெழுவகைத்தோற்றத்தின்னுப்பிறப்பி
னென்பொழியாக்கையுட்சேர்ப்பினுமவர்பா
லன்பொழியாமையருண்மதியெனக்கே.

க.—சீர்பூத்த * * * தமர்ந்தோய்.—(இ - ள்.) சீர் பூத்த - சிறப்பு மிக்க, செழு - செழுமையான, கமலம் - செந்தாமரை மலராகிய, திரு தவிசின் - சிறந்த ஆசனத்தில், வீற்றிருக்கும் - எழுந்தருளி யிருப்பவளும், நீர் பூத்த - திருப்பாற்கடலில் திருவவதரித்தவளுமான, திரு மகளும் - பெரியபிராட்டியாரும், (நீர் பூத்த-) கடலாற் சூழப்பட்ட, நிலம் மகளும் - பூமிப்பிராட்டியாரும், அடி வருட - (தமது திருக்கைகளால் நினது) திருவடிகளைத் தடவவும்,—சிறை பறவை - சிறகுகளையுடைய பெரியதிருவடி [கருடன்],புறம் காப்ப-(நினது)பக்கத்தேபாதுகாத்திருக்கவும்,—சேனையர் கோன்-சேனைமுதலியார், பணிகேட்ப-ஏவல்கேட்கவும்,நறை - வாசனையை யுடைய, துழாய் படலை - திருத்துழாய்மாலையையுடைய, மார்பின் - திருமார்பிலே,மணி - (கௌஸ்துப) ரத்தினம், நாயிறு போல் - சூரியன்போல, விளங்க - பிரகாசிக்கவும்,—அரிய-வெல்லுதற்கரிய, தானவர் - அசுரர்களை, கடிந்த - அழித்தருளிய, ஐம் படையும் - பஞ்சாயுதங்களும், புடை தயங்க- இருபக்கங்களிலும் நின்று விளங்கவும்,—பாயிரம் நால் மறை - முகவுரையையுடைய நான்குவேதங்களும், பரவ - புகழவும்,—பால் கடலுள் - திருப்

பாற்கடலின்நடுவிலே, பரு மணி - பருத்த மாணிக்கத்தையுடைய, சூட்டு-உச்சியையுடைய, ஆயிரம் வாய் - ஆயிரந் தலைகளையுடைய, பாம்பு அணை மேல்-ஆதிசேஷசயநத்தில், கரிய மால் வரை-கரிய பெரிய ஒரு மலை,முளரி காடு ஈன்று - தாமரைக்காடு பூக்கப்பெற்று, கிடந்தாங்கு - படுத்திருந்தாற் போல,அறி துயிலின் - யோகநித்திரையில், இனிது அமர்ந்தோய் - இனிதாகப் பொருந்தி யிருக்கின்றவனே!—(எ - று.)

வீற்றிருத்தல் - வேறொன்றற்கில்லாத சிறப்போடு இருத்தல். 'நீர்பூத்த' என்பது இரட்டுறமொழிதலாக, திருமகளோடும் நிலமகளோடுஞ் சேர்க்கப்பட்டது. நீர்-கடலுக்கு ஆகுபெயர் [இலக்கணை.] இங்கே சந்தர்ப்பம் நோக்கி நீரென்பதற்குப் பாற்கடலெனப் பொருள்கொள்ளப்பட்டது; பொதுப்பெயர் சிறப்புப்பொருளின் மேலது; "தாழி தரையாகத் தண்டயிர் நீராகத் தடவரையே மத்தாக" என்பதிற்போல; இனி, திருமகளுக்கு அடைமொழியாம்போது பெண்களுக்குஉரிய குணங்கள் நிறைந்த வென்றும், நிலமகளுக்கு அடைமொழியாம்போது நீரினின்றுந்தோன்றியவென்றுங் கொள்ளினும் அமையும். திருமகள் - திருவாகிய மகள், ஸ்ரீதேவி. நிலமகள் - நிலமாகிய மகள், பூதேவி. சேனையர்கோன் - பரமபதத்திலுள்ள நித்தியமுக்தர்களுக்குத் தலைவர். நறை - தேனுமாம். படலை - மார்பின்மாலை. ஐம்படை - சக்கரம், சங்கு, கதை, வில் - வாள்; இவற்றிற்கு முறையே சுதரிசநம், பாஞ்சசந்நியம்,கௌமோதகி, சார்ங்கம், நந்தகம் என்று பெயர். தாமரைத்தொகுதியைத் தாமரைக்காடென்றார். பெருங்கருமலை-எம்பெருமானது திருமேனிக்கும்,தாமரைக்காடு - வாய் கண் கை கால் முதலிய அவயவங்களுக்கும் உவமை; இதனை மேல் எழுபத்துமூன்றாம் பாட்டில் விவரமாகக் காண்க. கிடந்து - எச்சத்திரிபு. ஆங்கு - உவமவுருபு. பாயிரம் - ப்ரணவம். அறிதுயில் - அறியாநின்று செய்யுந் துயில். "கோலார்ந்த நெடுஞ்சார்ங்கங் கூனற்சங்கங் கொலையாழி கொடுந்தண்டு கொற்ற வொள்வாள், காலார்ந்த கதிக்கருடனென்னும் வென்றிக் கடும்பறவை யிவையனைத்தும் புறஞ்சூழ் காப்ப" என்ற பெரியார் பாசுரம் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

உ.—மண்ணகந் * * * கேள்.—(இ - ள்.) மண்ணகம் - மண்ணுலகத்திலுள்ளாரும், வானகம் - விண்ணுலகத்திலுள்ளாரும், துயர் நீங்க - (தத்தம் இம்மை மறுமைத்) துன்பங்கள் நீங்குமாறு, தொழுது எத்த - வணங்கித் துதிசெய்யாநிற்க, கண் அகல் சோணாடு - இடமகன்ற சோழநாட்டில், காவிரிவாய் - திருக்காவேரிநதியின் நடுவிலே, புளினத்து - மணற்றிட்டையிலே,—பம்பு கதிர்-நெருங்கிய கிரணங்களையுடைய, விசும்பு-ஆகாயத்தே செல்லுகின்ற, இரவி - சூரியனது, பசும் புரவி - பச்சைநிறத்தையுடையகுதிரை,வழிவிலங்கு-(தான்செல்லும்) வழியினின்று விலகிப்போவதற்குக்காரணமாகிய [அச்சூரியமண்டலத்தினும்உயர்ந்துநின்ற], செம்பொன் - சிவந்தபொன்மயமான, மதில் எழ் - எழுதிருமதில்களை, உடுத்த - சுற்றிலும் உடைய,திருவரங்கப்பெருங்கோயில்-திருவரங்கம்பெரியகோயிலில்,—ஆணி பொன் தகடு உரிஞ்சும் - சிறந்த பொன்தகடு பதித்த, அணி கதவம் - அழகிய கதவுகளையுடைய, நீள் வாயில்-நீண்ட திருவாயிலையுடைய, மாணிக்கம்

வெயில் பரப்பும் - மாணிக்கங்களி னொளியை வீசுகின்ற, வயிரம் மணி-வயி ரக்கற்க ளிழைத்த, விமானத்துள் - பிரணவாகார விமானத்தினுள்ளே,— மின் இலங்கு - ஒளி விளங்குகின்ற, தொடி வலயம் - தொடியென்னும் வளை யையுடைய, வியல்-பெரிய, வலக்கை - வலத் திருக்கையை, கீழ்கொடுத்து- (உனது திருமுடியின்) கீழே வைத்துக்கொண்டு, தென் இலங்கை திசை நோக்கி - தெற்குத்திக்கிலுள்ள இலங்காபுரியை நோக்கி, திரு நயனம் துயில்வோய் - திருக்கண்வளர்ந்தருளுகின்றவனே !—கேள் - (அடியேன் செய்யும் விண்ணப்பத்தைக்) கேட்டருள்வாயாக; (எ - று.)

வானகம் - தேவர்கள்; நித்தியசூரிகளுமாம். அகல் சோணுடு - அகன் சோணுடு; புணர்ச்சியில் விகாரம். சோணுடு - மரூஉமொழி. மதிலுக்கும் இரவிக்குஞ் சம்பந்தமில்லாமலிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தலால், தொடர்புயர்வுநவிற்சியணி ; இதனை வடநூலார் ஸம்பந்தாதிசயோக்தி யென்பர்: இதனால், மதிலினது மிக்க உயர்வு தொனிக்கின்றது. திருவரங் கத்திற்குப் பெரியகோயிலென்றும், அங்குஎழுந்தருளியிருக்கின்ற எம்பெரு மானுக்குப் பெரியபெருமாளென்றுந் திருநாமம். கோயில் - கோவில், தேவா லயம்; வகரம் யகரமானது, இலக்கணப்போலி. ஆணிப் பொன்-மாற்றுயர் ந்த பொன். வைரம் - வஜ்ரம். 'வியன்வலக்கை' - உத்தமபுருஷலக்ஷணமாய் முழந்தாளளவும் நீண்ட கையென்க. தாய் குழந்தைக்கு முலைகொடுத்து அதன் முகமலர்ச்சி காண்கைக்குப் பாங்காகச் சாயுமாறுபோல, ஸ்ரீவிபீஷ ணாழ்வானுக்கு இராச்சியத்தைக் கொடுத்து அவரது பொலிவைப் பார்த் துக்கொண்டே கண்வளர்ந்தருளுகின்றபடியால், 'தென்னிலங்கைத் திசை நோக்கித் திருநயனந் துயில்வோய்' என்றார்; "மன்னுடைய விபீடணற் காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்க்கண் வைத்த, வென்னுடைய திருவரங்கர்க்கு," "வன்பெரு வானக முய்ய வமரருய்ய மண்ணுய்ய மண் ணுலகின் மனிசருய்யத், துன்பமிகு துயரகல வயர்வொன் றில்லாச் சுகம் வளர வகமகிழுந் தொண்டர் வாழ, வன்பொடு தென்றிசை நோக்கிப் பள்ளிகொள்ளு மணியரங்கன்," "குடதிசை முடியைவைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்புகாட்டித் தென்திசை யிலங்கை நோக்கி" என்றார்களிறே ஆழ்வார்களும்.

இவையிரண்டும் - எட்டடித் தரவுகள்.

க.—தேவராய் * * * நீ.—(இ - ள்.) நீ—, தேவர் ஆய் - (இந்திரன் முதலிய) தேவர்களது சொரூபியாய், தேவர்க்கும் - அந்தத்தேவர்களுக்கும், தெரியாத - அறியக்கூடாத, ஒளி உரு ஆய் - தேஜோரூபியாய், மூவர் ஆய்- (அயன் அரி அரன் என்னுந்) திரிமூர்த்திகளாய், மூவர்க்குள் - அந்தமும்மூர் த்திகளுள்ளும், முதல்வன் ஆய் - தலைவனாய், நின்றோய் - நின்ற தன்மையை யுடையை ; (எ - று.)

எம்பெருமான் தானே இந்திரன் முதலிய தேவர்களாகவும், திரிமூர்த்தி களாவும், அவர்கள்யாவர்க்குந்தலைவனுகவும் நின்று சிறப்புறுவன் என்ப தாம். "முதலாவார் மூவரே யம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர் வண் ணன்", "முதலாந்திருவுருவும் மூன்றென்பர் ஒன்றே, முதலாகு மூன்றுக்கு மென்பர்" என்றார் பெரியாரும். மூவர் - தொகைக்குறிப்பு.

ஒளியுரு - உலகத்தில் ஒளிவடிவமாயுள்ளவையும் அதனால் 'ஜ்யோதி' என்று சொல்லப்படுபவையுமான ஆத்துமாக்களெல்லாவற்றுக்குந் தலைவனாகிய பரமாத்துமா என்றபடி; இவனை "பரஞ்சோதி" என்று வேதம் கூறும்: "ஆதிப்பிரமனுநீ யாதிப்பரமனுநீ, யோதியுறுபொருளுக்கப்பாலுண் டாயினுநீ, சோதிச்சுடர்ப்பிழம்புநீ யென்று சொல்லுகின்ற, வேதமுறை செய்தால் வெள்காரோ வேறுள்ளார்" என்னுங் கம்பராமாயணச்செய்யுள் இங்குக் கருதத்தக்கது.

உ.—போற்றுவார் * * * றறியேனால்.—(இ - ள்.) போற்றுவார் - துதிப்பவர்கள், போற்றுவது - துதிப்பது, உன் - உனது, புகழ் பொருளே - புகழாகிய பொருளையே; ஆதலினால்—, அடியேன்—, வேறு வாசகம் - (அப்புகழையேயன்றி) வேறுவார்த்தையை, விளம்பும் ஆறு - சொல்லுந்தன்மையை, அறியேன் - அறியாதவனாயிருக்கின்றேன்; (எ - று.)

இதுவரையில் மற்றையோர் யாவரும் உன்னைக்குறித்துப் புகழ்ந்து கூறும் பழையதொரு மரபின்படி கூறத் தெரியுமேயன்றிப் புதுமையாக நினது திருவுள்ளத்தில் ஒருவியப்புத் தோன்றுமாறு புகழ்ந்துகூறத் தெரிந்திலேனென்பதாம்.

வானத்தினின்றும் பெய்கின்ற மழைநீர் முழுவதும் முடிவிற் கடலையே அடைவதுபோல, எந்தத்தேவரைக்குறித்துச் செய்யப்படுந் தோத்திரமும் ஸர்வேச்வரனாகிய ஸ்ரீமந்நாராயணனையே சேர்வதென்பதுபற்றி, 'போற்றுவார் போற்றுவதுன் புகழ்ப்பொருளே' என்றார். வைசேடிகர் பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பவற்றை அறுவகைப் பொருளென்றாற்போல, ஈண்டுப் புகழ் பொருளெனப்பட்டது; இறைமைக் குணங்களிலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் ஒருபொருளல்லவாகலின், அவைமுற்றவுமுடைய எம்பெருமானதுபுகழே பொருளெனப்பட்டதென்றுங் கொள்க. "ஒதுவாரோத்தெல்லா மெவ்வுலகத்தெவ்வெவையுஞ், சாதுவாய் நின்புகழின்றகையல்லாற் பிறிதில்லை, போதுவாழ் புனந்துழாய் முடியினாய்! பூவின்மேல், மாதுவாழ்மார்பினாய்! என்சொல்லி யான்வாழ்த்துவனே" என்னுந் திருவாய்மொழியை அடியொற்றியது இது. அடியேன் - அடிமையென்னும் அடியிற் பிறந்து தாழ்வுப் பொருள் தந்து நின்ற தன்மையொருமைச்சொல். ஆல் - ஈற்றசை.

ந.—பணி * * * பாலதோ.—(இ - ள்.) பணி - பாம்பைக் குழையாக அணிந்த, தட காது - பெரிய காதுகளையுடைய, இமையவற்கும் - பரமசிவனுக்கும், பங்கயத்தோன் முதலோர்க்கும் - பிரமன்முதலிய தேவர்களுக்கும், பணித்து அடங்கா - சொல்லி முடியாத, புகழ் - (உனது) திருப்புகழ், அடியேன்—, பணித்து - சொல்லி, அடங்கல்பாலதோ - முடியத்தக்கதன்மையையுடையதோ? [அன்றென்றபடி]; (எ - று.)—ஓகாரம் - எதிர்மறை.

திரிமூர்த்திகளுள் மற்றையிருமூர்த்திகளும் புகழ்ந்துகூறிமுடியாத பெருஞ்சிறப்புடைய உனது புகழ் எளியனான என்னால் எடுத்துச்சொல்லுந் தரமுடையதன்று என்பதாம். "ஆராதனஞ்செய்துகண்டனின் கீர்த்தியறைவன் றிரு, ஆராதனஞ் செய்வன் வேதா வென்றாலடியேன் புகழ்கை

க்கு, ஆர்" என்பர் திருவரங்கத்தந்தாதியிலும். நாகாபரண ஞதலால்,'பணி த்தடங்காதிமையவன்' என்ருர். காது - மற்றை அவயவங்களுக்கும் உப லக்ஷணம். இமையவற்கும், முதலோர்க்கும் என்பவற்றிலுள்ள உம்மைகள் - எண்ணுப்பொருளோடு, உயர்வு சிறப்பும் உணர்த்தி நின்றன. பங்கயத் தோன்-திருமாலினது திருவுந்தித்தாமரைமலரில் தோன்றியவன். 'பணித் தடங்காது' என்ற சொற்ருெடரில் யமகம் என்னுஞ் சொல்லணி காண்க.

ச.—யாம் * * * வியப்பாமோ.—(இ - ள்.) யாம் - நாமே, கடவுள் - பரதெய்வம், என்று-என்றெண்ணி, இருக்கும்-இறுமாந்திருக்கின்ற, எ உல கில் - எல்லாவுலகத்திலுமுள்ள, கடவுளர்க்கும் - தெய்வங்களுக்கெல்லாம், ஆம் - தலைமையாகிய, கடவுள்—, நீ என்ருல் - நீயென்றுசொல்லிப் புகழ்ந் தால், அஃது - அது, உனக்கு—, வியப்பு ஆமோ - ஒரு அதிசயமாகுமோ? [ஆகாது என்றபடி]; (எ-று.)

உண்மையில் எல்லாத்தேவர்கட்கும் இறைவன் ஸ்ரீரங்கநாதனே யாத லால் அவ்வெம்பெருமானை எல்லாத்தேவர்கட்கும் தலைவனென்று கூறின் அஃது இயற்கையைக்கூறுவதாவதல்லது அதனில் வியக்கத்தக்க பொருளின் மையை யறிக. யாம் கடவுள் என்று இருக்கும் கடவுளர் — "நாயகராத்திரி யுஞ் சிலதேவர்" என்பர் திருவேங்கடத்தந்தாதி யிலும். இனி, பலசமயத் தோரும் தம்தம் தெய்வமே நன்றென்று கொண்டு தந்தம் இஷ்ட தெய்வங் களுக்குச் செய்யும் வழிபாடுகளையெல்லாம் நீயே பெற்றுக்கொண்டு அவர வர்க்குத் தக்கபடி பயன்களை யளிக்கின்ருர யாதலால், அவ்வத்தேவர்களால் யாது பயன்? என்றும் இதற்குக் கருத்துக் கூறுவர். யாம் - உயர்வுப்பன்மை. கடவுள் - எல்லாவற்றையுங் கடந்து நிற்பவன்; தொழிலாகுபெயர். 'எவ்வு லகு', எகரவினு - எஞ்சாமைப் பொருளது. 'உனக்கு வியப்பாமோ' என் றது, உன்பெருமையைக் குறிக்கத்தக்கதொரு அதிசயமாகா தென்றபடி.

டு.—அனைத்து * * * களவாமோ.—(இ-ள்.) அனைத்து உலகும் - எல் லாவுலகங்களையும், அனைத்துஉயிரும்-(அவற்றிலுள்ள சராசரங்களாகிய)எல் லாவுயிர்களையும், அமைத்து - படைத்து, அளித்து - காத்து, துடைப்பது - அழிப்பது, நீ—, நினைத்த - எண்ணியமாத்திரத்திற் செய்கிற, விளையாட்டு- திருவிளையாடலாகும், என்ருல்—, (அது), நின்பெருமைக்கு-நினதுமகிமை க்கு, அளவு ஆமோ - ஒரு வரையறையாகுமோ? (எ - று.)

"உலகம் யாவையுந் தாமுள வாக்கலு, நிலைபெறுத்தலு நீக்கலு நீங் கலா, வலகிலா விளையாட்டுடையார்" என்ருர் கம்பரும். அயனுயிருந்து படைத்து, தானுனதன்மையிலே நின்று காத்து, அரனுயிருந்து அழிப்பன் திருமாலென்க. ஸர்வஶக்தியான ஸர்வேஶ்வரனுடையபெருமைக்குப் படை த்தல் முதலியன ஒருபெருந்தொழிலல்ல வென்பதாம்.

சு.—கருதரிய * * * வரம்பாமோ.—(இ-ள்.)(நீ), கருதரிய - நினைத் தற்கும்அருமையான, உயிர்க்கு-எல்லாச்சீவாத்துமாக்களுக்கும், உயிர் ஆய்- அந்தராத்துமாவாய், கரந்து - மறைந்து, எங்கும்-எல்லாவிடத்திலும் [உள் ளும் புறமும்], பரந்து - பரவி, உறையும் - தங்குகின்ற, ஒரு தனி நாயகம்-

ஒப்பில்லாததொரு தலைமைப்பொருளாவாய், என்றால்—, (அது), உன்புகழ்க்கு-உனது பெருங்கீர்த்திக்கு, வரம்பு ஆமோ-ஓர் எல்லையாகுமோ? (எ-று.)

எம்பெருமானுடைய திருப்புகழ்கள் அனந்த மாதலால், ஒன்றைக் கூறுவதால் அவைமுற்றும்கூறப்பட்டனவாகாவென்க. ஆத்மாக்களை அநந்தமென்று கூறுவதல்லது இத்துணையன வென்று அளவிட்டுக்கூறுதல் எவர்க்கும் இயலா தாகையால், 'கரிதரிய வுயிர்' என்றார். உடலுக்குள்உயிர் அதற்குத் தாரகமாய் நியாமகமாய்ச் சேஷியாய்த் தங்கியிருத்தல்போலப் பரமாத்துமா அச்சரீராத்துமாக்களுள் அந்தர்யாமியாய் அவற்றிற்குத் தான் தாரகனும் நியாமகனுய்ச்சேஷியாய் விடாதுவீற்றிருத்தலால், 'உயிர்க்குயிராய்'என்றார்; "எள்ளுமெண்ணெயும்போ, னீங்கா துலகத் துயிர்க்குயி ராகி நியாமகனும்" என்பர் திருவரங்கத்துமாலையிலும். பரத்தல் - வியாபித்தல். "திடவிசும் பெரி வளி நீர் நில மிவைமிசை, படர்பொருண் முழுவது மாயவை யவைதொறு, முடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்," "பரந்தவண்டமிதென நிலவிசும் பொழிவறக், கரந்தசி லிடந்தொறு மிடந்திகழ் பொருடொறுங், கரந்தெங்கும் பரந்துளன்" என்றார் நம்மாழ்வாரும். ஒருதனி நாயகம் - பிரமன்முதல் எறும்பு ஈறான எல்லாவுயிர்க்கும் ஈடுமெடுப்பு மில்லாத தலைமைத்தேவன் எம்பெருமான் என்றபடி.

இவை யாறும் - ஈரடித் தாழிசைகள்.

க.—உரு * * * நிலைமையை.—(இ - ள்.) (நீ), உரு என-உருவமுடையவனென்றும், அரு என - உருவமில்லாதவனென்றும், உளன் என - உள்ளவனென்றும், இலன் என - இல்லாதவனென்றும், (ஒருதலையாகத் துணிந்து), அரு மறை இறுதியும் - அறிதற்கரிய வேதாந்தங்களும், அறிவரு - அறிதற்கரிய, நிலைமையை - தன்மையையுடையனு யிருக்கிறாய்; (எ - று.)

உனது மகிமைகளைக் கூறுகின்ற பிரமகாண்டமாகிய வேதாந்தங்களும் உனது மகிமைகளை உள்ளபடி முற்றுங் கூறுந் தரத்தனவல்ல என்பதாம். உரு, அரு என்பன - ரூபம், அரூபம் என்னும் வடமொழிகளின் சிதைவுகள். "இலன தி வுடையனி தெனநினை வரியவ, னிலனிடை விசும்பிடை யுருவின னருவினன்," "உளனெனி லுளனவ னுருவமிவ் வுருவுக, ளுளனல னெனிலவனருவமிவ்வருவுக, ளுளனென விலனென விவைகுணமுடைமையி, னுளனிரு தகைமையொ டொழிவிலன் பரந்தே" என்றார் ஆழ்வாரும்.

உ.—இவ * * * மருளினை.—(இ - ள்.) இவர் இவர் - இந்த இந்தத் தேவர்கள், இறையவர் - (எங்களுக்குத்) தலைவர்கள், என - என்று எண்ணி, மனம் உறுதியொடு-மனத்துணிவுடனே, அவர் அவர்-அந்தந்த மதத்திலுள்ளவர்கள், தொழ - வணங்கும்படி, அறு சமயமும் - ஆறுவகைப்பட்ட மதங்களையும், அருளினை - கொடுத்தருளினாய்; (எ - று.)

"வணங்குந்துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பாற், பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி யவையவைதோ, றணங்கும்பலபலவாக்கி நின்மூர்த்திபரப்பி வைத்தாய்" என்றார் நம்மாழ்வாரும். அறு சமயம் - வைஷ்ணவம், சைவம், சாக்தம், சௌரம், காணபதம், கௌமாரம் என்பன வென்றேனும்; கபில

மதம், கணாதமதம், பதஞ்சலிமதம், அக்ஷபாதமதம், வியாசமதம், ஜைமினி மதம் என்பனவென்றேனும்; பௌத்தம், ஜைநம், பைரவம், காளாமுகம், லோகாயதம், சூனியவாதம் என்பனவென்றேனுங் கொள்க.

ங.—கடு * * * மருளினை.—(இ-ள்.)கடு வளி - கடிய காற்றும், கனல்- நெருப்பும், புனல் - நீரும், ககனமொடு - ஆகாயமும், அகல்இடம் - பரந்த பூமியும், உடுபதி - நக்ஷத்திரங்களுக்குத் தலைவனாகிய சந்திரனும், கதிரவன் - சூரியனும், உருவமும்-இயமானனும், (ஆகிய இவற்றை),அருளினை- வகுத்தருளினாய்; (எ - று.)

இவையே அஷ்டமூர்த்திகள். "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்" என்றார் திருவாசகத்திலும். கடுவளி, கடுமை - விரைவு; கடியென்னும் உரிச்சொல்லின் திரிபென்றுங் கொள்ளலாம். நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்பதே முறையாயினும் ஈண்டுச் செய்யுள்நோக்கிப் பிறழவைத்தார். 'ககனமொடு' என்பதில்உள்ள 'ஒடு' வென்னும் எண்ணிடைச்சொல், நின்ற விடத்துப் பிரிந்து பிறவழியுஞ் சென்று பொருந்திற்று. கதிரவன் - கிரணங் களையுடையவன். இனி, உருவம் என்பதற்கு-இவர்களது உருவத்தை யெனப் பொருள்கூறி, பாஞ்சபூதிகமான அண்டங்களைப் படைத்து, அவற்றிற்கு ஒளியைத்தருதற்காகச் சூரியசந்திரர்களையும் உண்டாக்கிவைத்தாய் நீ யென்றுங்கருத்துக் கூறுவர்.

ச.—கடி * * * கதியினை.—(இ- ள்.) 'கடி மலர் - வாசனையையுடைய தாமரைமலர்போன்ற, அடி இணை - உபய திருவடிகளை, கருதினர் - தியானஞ்செய்தவர்கள், பெறுக-பெறுவார்களாக,' என-என்று, அடி நடு முடிவு அற-முதலிடைகடையில்லாமல் [எப்பொழுதும்], அருள் - (அவர்களுக்கு) அருளுகின்ற, பரகதியினை - பரமபதத்தையுடையவனாயிருக்கிறாய்; (எ - று.)

கடி-உரிச்சொல். இனி, அடி நடு முடிவு அற என்பதற்கு-உத்தமர், மத்தியமர், அதமரென்னும் வேறுபாடு கருதாமலென்றுமாம்; அன்றி, பிறப்பு வளர்ப்பு இறப்பு இல்லாமலெனினும் அமையும். பரகதி-மற்றையெல்லாப் பதவிகளினும் உயர்ந்த பதவி.

இவை நான்கும் - ஈரடி அராகங்கள்.

ரு.—ஒரு * * * லுணராயால்.—(இ - ள்.) ஒரு நாலு முகத்தவனோடு- ஒப்பற்ற பிரமனுடனே, உலகு - எல்லாவுலகங்களையும், ஈன்றாய் - படைத்தாய், என்பர் - என்று (யாவருஞ்) சொல்லுவர்; அது—, உன் திரு நாபி - உனது அழகிய உந்தித்தாமரை, மலர்ந்தது அல்லால் - விரிந்ததல்லாமல், திரு உளத்தில் - நெஞ்சில், உணராய் - நினைத்தாயு மில்லை; (எ - று.)

படைப்புத்தொழில் எம்பெருமானுக்கு மிகவும் எளியதென்று கூறி, அந்த எம்பெருமான் சிறிதும் வருத்தமின்றித் [அநாயாஸேந] தொழில் செய்யும் வல்லமையை இங்கு வெளியிடுகின்றாரென்க. நாலுமுகத்தவன்- நான்கு திசையையும் நோக்கிய நான்கு முகங்களை யுடையவன் ; சதுர்முகன். அல்லால் - எதிர்மறை வினையெச்சம். "பந்திக் கமலத் தடஞ்சூ

முரங்கர் படைப்பழிப்புச், சிந்தித் திடவெது மில்லை கண்டீ ரத் திசைமுகனே, யுந்திக் கமலம் விரிந்தால் விரியு முகக்கடையின், முந்திக் குவியி லுடனே குவியு மிம் மூதண்டமே" என்பர் திருவரங்கத்துமாலையிலும்.

உ.—மேரு * * * யறியாயால்.—(இ - ள்.) மேருகிரி - மகாமேருமலை போன்ற, உடல்-உடம்பினையுடைய, அவுணன் - இரணியாசுரனது, மிடல்-வலிமையை, கெடுத்தாய்-அழித்தாய், என்பர்—; அது—, உன் கூர் உகிரே-உனது கூரிய நகமே, அறிந்தது அல்லால்—, கோவே-இறைவனே! நீ அறியாய்—; (எ - று.)

உனது கைந்நகத்துக்கே இவ்வளவு பேராற்ற லுள்ளபோது உனது முழுவலிமை எத்திறத்ததோ வென்று வியந்தவாறு. மிடல் - தேகபலம், வரபலம் முதலியன. இவ்வலாற்றால், சிவபிரான் முதலிய பிறதேவர்களாற் கிடைத்துள்ள பூரணவலிமைகள் உனக்கு முன்னே பஞ்சுக்கனல் போலப் பறந்தொழியு மென்று நீயே பரதேவதையென்பதை விளக்கினர். மேருகிரி - நிறத்திற்கும், வலிமைக்கும், பெருமைக்கும் உவமை.

ந.—பன்றி * * * றிருந்ததால்.—(இ - ள்.)பன்றியாய்- வராகாவதாரமாய், படி-பூமியை, எடுத்த—, பாழியாய்-வலிமையையுடையாய், என்பர்—; அது - அப்பூமி, வென்றி ஆர் - வெற்றி பொருந்திய, உனது—, எயிற்றில்-கோட்டில், மெல் துகள் போன்று - சிறிய தூளியை ஒத்து, இருந்தது—.

பூமிக்கு நேர்ந்த பிரளயாபத்தைப் போக்கியருளுதற்காக எடுத்த சிறந்த திருவவதாரமாதலால், 'படியெடுத்த பாழியாய்' என்றனர். குழந்தை கிணற்றில் விழுந்தால் உடனே அதிற்குதித்துக் குழந்தையையெடுக்குந்தாய் போலப் பூமி கடலினுட்புக்கவளவிலே நீருக்குஞ் சேற்றுக்கும் பின்வாங்காதவராக ரூபமாய்க் கடலினுட்புக்குப் பூமியை எடுத்தற்காகக் கொண்ட அத்திருமேனியின் பெருமையை விளக்குவார், பூமியை ஒருதுகளாகக் கூறினர். "ஆருக்கிவரையளவிடலாந் தென்னரங்க ரிந்தப்பாருக் கரந்தை தவிர்ப்பதற்காகப் பழிப்பில்பெருஞ், சீருற்ற செங்கட்கரும்பன்றியாகித் திருக்குளம்பின், மேருக்கணகணமாத் தலைநாளில்விநோதிப்பரே" என்பர் மாலையிலும். வென்றி-இரணியாக்ஷ வதம். துகள்=தூளி; வடசொற் சிதைவு.

ச.—அண்ட * * * காற்றுவால்.—(இ - ள்.) அறியாதார் - (உன் திறமையை நன்றாக) அறியாதவர்கள், அண்டம் எலாம் - எல்லா அண்டங்களையும், உண்டை - புசித்தாய், என்பர் - என்று (ஒருபெருமையாகச்)சொல்லுவர்; அவை - அவ்வண்டங்கள், நீ உண்டருளும் காலத்தில்—, ஒரு துற்றுக்கு ஆற்று - ஒரு கவளத்திற்கும் போதாவாம்; (எ - று.)

உலகங்களெல்லாம் ஒருகவளத்துக்கும் போதாதபடி மிகப்பேருருவமுடைய விராட் சொரூபியாகிய உன்னைப்பற்றி 'உலகங்களை உண்டாய்' என்று இதனை அரிய தொழில் செய்ததுபோல எடுத்துக்கூறுதல் உனது பெருமைக்குத் தகுமோ? என்பதாம். உண்டை - அன்சாரியை பெறாத முன்னிலை யொருமை யிறந்தகால வினைமுற்று. ஆங்கு - அசை. துற்று - ஒருபிடியளவு கொண்ட உணவு. 'துத்துக்கு' என்றும் பாடம்.

இவை நான்கும் - பெயர்த்தும் ஈரடித் தாழிசைகள்.

க.—நஞ்ச * * * மாயினை.—(இ - ள்.) நஞ்சமும் - (உயிரை முடித்தே விடுவதான) விடமும், அமுதமும் - (போன உயிரை மீட்கவல்லதான) அமிருதமும்,—நரகும்-(துக்க ஏதுவான) நரகமும், வீடும்-(பேரின்பத்துக்கு ஏதுவான) மோக்ஷமும், ஆய்—, வஞ்சமும் - (பிறரை வஞ்சிக்கும்) வஞ்சனையும், ஞானமும் - (பொருள்களின் தன்மையை உள்ளபடி அறியவல்ல) அறிவும், மறப்பும் - (அவ்விஷயத்தில்) மறதியும், ஆயினை - ஆனவனுயிருக்கின்றாய்; (எ - று.)

அநிஷ்டமான விஷம் முதலானவற்றோடு இஷ்டமான அமுதம் முதலானவற்றோடுவாசியில்லாமல் அந்தந்த உருவங்களாலே எம்பெருமான் யாவர்க்கும் உத்தேசயமாயிருப்ப னென்பது கருத்து. இவ்வாறு ஒன்றற்கொன்றுஎதிரான பொருள்களாகப் பரிணமிக்கும் எம்பெருமானை "விருத்தவிபூதியன்" என்று பெரியோர் பணிப்பர். "விடமு மமுதமுமாய்," "நரகுஞ் சுவர்க்கமுமாய்," "ஞானமு மூடமுமாய்" என்றார் நம்மாழ்வாரும்.

உ.—இருவினை * * * மாயினை.—(இ - ள்.) இரு வினை பகுதியும் - (சுகசாதனமான) நல்வினை (துக்கசாதனமான) தீவினையின் பிரிவுகளும்,— இன்ப துன்பமும் - (அவற்றாலுண்டாகுஞ்) சுகதுக்கங்களும்,—கருணையும்- (தேற்றமடியாக வரும்) அருளும், வெகுளியும்-(கலக்கமடியாக வரும்) கோபமும், கருத்தும் - எண்ணமும், ஆயினை—; (எ - று.)

இருவினை-புண்ணியபாபங்கள்; "புண்ணியம்பாவம்...என்றிவையாய்," "கண்டவின்பந்துன்பம் கலக்கங்களுந் தேற்றமுமாய்த், தண்டமுந் தண்மையும்" என்றார் நம்மாழ்வாரும்.

இவை யிரண்டும் - நாற்சீர் ஈரடி அம்போதரங்கங்கள்.

க.—(இ - ள்.) அலை கடல் - அலைகின்ற கடலினது, வயிறு - நடுவிடத்தை, கலக்கினை - கலங்கச்செய்தாய்; (எ - று.)

கடல் கலக்குதல் - கூர்மாவதாரத்தில் க்ஷீராப்தி மதந காலத்திலும், ஸ்ரீராமாவதாரத்தில் இலங்கைக்குச் செல்ல வருணனை வழிவேண்டிய பொழுது சுடுசரமெய்த காலத்திலும் நடந்ததென்க.

உ.—(இ - ள்.) அவுணரை - அசுரர்களை, மதுகை அடக்கினை - வலிமை கெடச் செய்தாய்; (எ - று.)

இது, துஷ்டநிக்கிரகஞ்செய்யுமாறு எம்பெருமான் எடுத்த பலஅவதாரங்களிலும் நிகழ்ந்ததென்க. இனி, இரண்டுசெயப்படுபொருள்வந்த வினையாகக்கொண்டு அவுணரை வலியை யடக்கினை யென்றும், உருபுமயக்கமாய் அவுணரது வலியை யடக்கினை யென்றுங் கொள்ளலாம்.

ங.—(இ - ள்.) மலை - எதிர்த்துப் போர்செய்யவந்த, கட களிறு-(குவலயாபீட மென்னும்) மதயானையை, வதைத்தனை - கொன்றாய்; (எ - று.)

இது,கம்ஸனால் கிருஷ்ணபலராமர்களைக்கொல்லும்படி ஏவப்பட்டது.

ச.—(இ - ள்.) மலை - கோவர்த்தனகிரியை, தலை கவிழ - தலைகீழாம்படி, எடுத்தனை - (குடையாக) எடுத்துப் பிடித்தாய்; (எ - று.)

மலையெடுத்தது - கிருஷ்ணாவதாரத்தில் திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங் கூடி மழையின்பொருட்டாக இந்திரனை ஆராதித்தற்கென்று சமைத்த சோற்றை அவனுக்கிடாதபடி விலக்கிக் கோவர்த்தனமலைக்கு இடச்சொல்லித் தானே ஒருதேவதாரூபமாய் அமுது செய்தருள, அவ்விந்திரன் பசிக்கோபத்தாலே புஷ்கலாவர்த்தகம் முதலிய மேகங்களை ஏவித் தான்விரும்பி மேய்த்துக்கொண்டுபோகின்ற கன்றுகளுக்கும் பசுக்களுக்குந் தனக்கு அபிமதரான ஆயர்க்கும் ஆய்ச்சிமார்க்குந் தீங்குதரும்படி கன்மழையை ஏழுநாள் விடாது பெய்வித்தபொழுதென அறிக. பசுக்கள் எட்டிமேய்ந்துநிற்கலாம்படி தலைகீழாக எடுத்துப்பிடிக்கப்பட்ட தாதலால், "மலைதலைகவிழஎடுத்தனை' என்றார். "மதுசூதன னெடுத்து மறித்த மலை," "செந்தாமரைக்கை விரலைந்தினையுங், கப்பாக மடுத்து மணிநெடுந்தோள் காம்பாகக்கொடுத்துக்கவித்த மலை" என்றார் பெரியாழ்வாரும்.

இவை நான்கும் - மூச்சீ ரோரடி அம்போதரங்கங்கள்.

க.—(இ - ள்.) மண்ணை விண்டனை - (வராகாவதாரத்திற்) பூமியைக் (கோட்டாற்) குத்தி யெடுத்தாய்; (எ - று.)

இது, இரணியாக்ஷன் பூமியைப் பாயாகச்சுருட்டி யெடுத்துப்போன பொழுது நிகழ்ந்தது.

உ.—(இ - ள்.) வெண்ணெய் உண்டனை - (கிருஷ்ணாவதாரத்தில் இடையர்கள் வீட்டில்) வெண்ணெயைப் புசித்தாய்; (எ - று.)

ங.—(இ - ள்.) மருது இடந்தனை - மருதமரங்களை முறித்தாய்; (எ-று.)

இது, நாரதமுனிவரது சாபத்தால் மருதமரங்களாகப்பிறந்திருந்த குபேர புத்திரர்களது சாபவிமோசனத்தின்பொருட்டுக் கிருஷ்ணாவதாரத்தில் நிகழ்ந்ததென்க.

ச.—(இ - ள்.) எருது அடர்ந்தனை - ஏழுஎருதுகளோடு பொருது அவற்றின் வலியடக்கினாய்; (எ - று.)

கண்ணன் நப்பின்னைப்பிராட்டியைத் திருமணஞ் செய்துகொள்வதற்காக, அவள் தந்தையின் ஏற்பாட்டின்படி, யாவர்க்கும் அடங்காத அசுராவிஷ்டமான ஏழெருதுகளையும் ஏழுதிருவுருக்கொண்டு சென்று வலியடக்கித் தழுவின னென்பது.

ரு.—(இ - ள்.) உள் நிறைந்தனை - எல்லாப்பொருள்களுள்ளும் வியாபித்திருக்கின்றாய்; (எ - று.)

இது, அந்தர்யாமிவைபவங் கூறியது.

சு.—(இ - ள்.) எண் இறந்தனை - யாவரது எண்ணத்தையுங் கடந்திருக்கின்றாய்; (எ-று.)

மனத்தைக்கூறியது, மொழிமெய்களுக்கும் உபலக்ஷணம்.

எ.—(இ - ள்.) ஒருமை ஆயினை - ஒப்பற்றவனாயிருக்கிறாய்; (எ-று.)

அத்விதீயன், உன்னையன்றி வேறொருகடவுளில்லாமல் நீஒருத்தனே எல்லாவற்றுக்கும் முதற்கடவு ளென்பதாம்.

அ.—(இ - ள்.) பெருமை மேயினை - எல்லாமகிமைகளும் பொருந்தி யிருக்கின்றாய்; (எ - று.)

இவை எட்டும் - இருசீ ரோரடி அம்போதரங்கங்கள்.

எனவாங்கு - அசைநிலை. இது, தனிச்சொல்.

மலர் * * * யெனக்கே.—(இ - ள்.) மலர் தலை - பரந்த இடத்தையுடைய, உலகத்து - நிலவுலகத்திலே, புலமை சான்ற-அறிவு மிகுந்த, பதின்மரும் - ஆழ்வார்கள் பத்துப்பேரும், பணித்த - திருவாய்மலர்ந்தருளிய, பாடல் - பாசுரங்களாகிய தமிழ்வேதங்களினது, ஓதை'யொடு - கோஷத்துடனே, முது மறை - பழைய வடமொழி வேதங்களும், கறங்க - உத்கோஷிக்கவும்,—முரசம் - பேரிகைகள், ஆர்ப்ப - ஆரவாரஞ் செய்யவும்,—வலம்புரி பிளிறும்-வலம்புரிச்சங்குகள் ஒலிக்கின்ற, பொலம் புரி-பொன்னாலாகிய, கோயில் - திருவரங்கம் பெரியகோயிலிலே எழுந்தருளி யிருக்கின்ற, ஆழி அம் செல்வ - திருவாழியுந் திருக்கையுஞ் சேர்ந்த சேர்த்தியா லுண்டான அழகைச் செல்வமாகவுடையவனே !—ஆதி அம் பரம-ஆதிமூலமாகிய பரம்பொருளானவனே !—வாழி வாழி - வாழ்வாயாக வாழ்வாயாக; மாயோய்-மாயவனே ! வாழி—; நெடியோய் - நீண்டு வளர்ந்தவனே ! வாழி—; நின் மாட்டு-உன்னிடத்தில், அடியேன்—, வேண்டுவது-வேண்டிக் கேட்பது,ஒன்றே-ஒருவரமேயாகும்; அஃது-அதனை, நீ—,மறுக்கேல் - மறுக்காதே; (அது யாதெனில்),—பூ வரும் அயன் முதல் - (நினதுநாபித்) தாமரைமலரில் தோன்றிய பிரமன்முதலாக, யாவரும் - எல்லாத் தேவர்களும், அறியா - அறிய முடியாத, மூஉலகு அளந்த - மூன்றுலோகங்களையும் அளத்தல்செய்த, நின் சேவடி - உனது சிவந்த திருவடிகளை, வாழ்த்தி—, தொழு தகை - வணங்குகின்ற தன்மையையுடைய, தொண்டர்தம் - அடியார்களது, தொண்டருள் - அடியார்களுள், சேர்க்காது - (அடியேனையும் ஒருவனாகச்) சேர்த்திடாமல், எழு வகை தோற்றத்து - எழுவகைப்பட்ட தோன்றற்பாட்டையுடைய, இன்னு பிறப்பின் - துன்பந் தருவதாகிய பிறவிகளுள், என்பு ஒழி யாக்கையுள் - எலும்பில்லாத புழுவுடம்பிலே, சேர்ப்பினும் - சேர்ந்து பிறக்கச்செய்தாலும், அவர்பால் - அவ்வடியாரடியார்பக்கல், அன்பு - பக்தி, ஒழியாமை - நீங்காதபடி, எனக்கு—, அருள் - கருணை செய்வாயாக, (என்பதேயாம்); (எ - று.)

பதின்மர் - கீழ் முதற்காப்புச்செய்யுளிற் கூறிய பன்னிருவருள் மதுரகவியுங் கோதையுந் தவிர்ந்த மற்றையவர். வேதங்கள் கடவுளைப்போல நித்தியமாதலால், 'முதுமறை'எனப்பட்டன. வலம்புரி-வலமாக உட்சுழிந்த சங்கு. ஆடுக்கு - உவகை பற்றியது. மாயோன் - மாயையையுடையவன்; மாயையாவது - கூடாததையுங் கூட்டுவிக்குந் திறம்: அகடிதகடநா சாமர்த்தியம்; பிரபஞ்சகாரணமான பிரகிருதியுமாம்: ஆச்சரியகரமான குணங்களையுஞ் செயல்களையு முடையவ னென்றுமாம்; கருநிற முடையோ னென்றுங் கொள்ளலாம். மாட்டு, பால்-ஏழனுருபுகள். அறியாச் சேவடியென இயை

யும். தொழுத கை என்றும் பிரிக்கலாம். எழுவகைத் தோற்றத்துள்ளும் இன்னதபிறப்பாகிய என்பொழியாக்கை யென்றுமாம். தேவர் மனிதர் புள் விலங்கு ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்பன எழுவகைத்தோற்றங்கள். யாக்கை - எழுவகைத் தாதுக்களால் யாக்கப்படுவது; யாத்தல் - கட்டுதல். சேர்ப்பினும் என்ற உம்மை, நீ சிறிதும் அருளின்றி அவ்வாறுசேர்க்கமாட்டாயென்னுந் துணிவு தோன்ற நின்றது. மதி - முன்னிலையசைச்சொல்; "உரைமதி வாழியோ வலவ" என்பதிற்போல. இனி, அன்பொழியாதபடி மதியை [அறிவை] அருளென்றுமாம்.

இது, பதினான்கடி நிலைமண்டில ஆசிரியச் சுரிதகம்.

இப்பாட்டு, தரவும், தாழிசையும், அராகமும், பெயர்த்துந்தாழிசையும், அம்போதரங்கங்களும், தனிச்சொல்லும், சுரிதகமும் பெற்றுவந்த மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா. (க)

எனக்கே திருவரங்க னேபிரா னெம்மான்
றனக்கே யடிமை தமியேன்—புனக்கேழ்
மருத்துளவோன் மேலன்றி மற்றொருவர் மேலென்
கருத்துளவோ வாராயுங் கால்.

(இ - ள்.) ஆராயுங்கால்-ஆராய்ந்துபார்க்குமளவில்,—எனக்கு—, திரு அரங்கனே - ஸ்ரீரங்கநாதனே, பிரான் - தலைவன்; எம்மான்தனக்கே - அவ்வெம்பெருமானுக்கே, தமியேன் - தனியனாகிய யான், அடிமை - அடியவன்; (ஆகையால்), என் கருத்து - எனது எண்ணம், புனம் - வனத்திலுள்ள, கேழ் - ஒளியையும், மரு - வாசனையையுமுடைய, துளவோன்மேல் அன்றி - திருத்துழாய் மாலையையுடைய அவ்வெம்பெருமான்மே லல்லாமல், மற்றொருவர்மேல் - வேறொரு தேவர்மேல், உளவோ - உள்ளனவாமோ? [ஆகாவென்றபடி]; (எ - று.)

எம்பெருமானுக்கும் தமக்குமுள்ள ஸ்வஸ்வாமிபாவ [எம்பெருமான் தலைவன்; நாம் அவனது உடைமை என்ற] சம்பந்தத்தைத் தாம் நன்கு உணர்ந்ததனால் இனித் தேவதாந்தரங்கட்குத் தொண்டுபூண்டொழுகேனென்று தாம் அந்யசேஷத்தினின்று தவிர்ந்தமையை இதனாற் கவி வெளியிடுகின்றனரென்க.

'கருத்து உளவோ' என்ற குறிப்பால், எனதுவாய் அவனையன்றிப் பிறரை வாழ்த்தாது என்றும், எனதுஉடல் அவனையன்றிப் பிறர்க்குப் பணிவிடைசெய்யாது என்றுங் கூறியபடியாம். பிரான் - ப்ரபு; மான் - மஹான். ஏகாரங்கள் - தேற்றப்பொருளன.

இது, நாளென்னும்வாய்பாட்டான்முடிந்த இருவிகற்பநேரிசைவெண்பா.

காரையிரமுடியாயிரமாயிரங்கைபரப்பி
மேலாயிரந்தலைநாகங்கவிப்பவிண்பூத்தகஞ்சம்
போலாயிரங்கண்வளரும்பிரான்பொன்னரங்கனென்றே
மாலாயிரங்கவல்லார்க்கெய்தலாந்திருவைகுந்தமே.

(இ - ள்.) கால் ஆயிரம் - ஆயிரந் திருவடிகளையும், முடி ஆயிரம் - ஆயிரந் திருமுடிகளையும், ஆயிரம் கை - ஆயிரந் திருக்கைகளையும், பரப்பி - பரப்பிக்கொண்டு, ஆயிரம் தலை நாகம் - ஆயிரந் தலைகளையுடைய திருவநந்தாழ்வான், மேல் கவிப்ப - மேலே கவிந்திருப்ப, விண் பூத்த கஞ்சம்போல் - (கரிய)ஆகாயத்தே மலர்ந்த (செந்) தாமரை மலர்போல, ஆயிரம் கண் வளரும் - ஆயிரந்திருக்கண்கள் அறிதுயில் செய்யப்பெற்ற, பிரான் - எம்பெருமான், பொன் அரங்கன் - அழகிய அரங்கநாதன், என்று - என்றெண்ணி, மால் ஆய் - அன்புடையர்களாய், இரங்கவல்லார்க்கு - நெஞ்சுருகவல்லவர்கட்கு, திருவைகுந்தம்-வைகுண்டத்தை, எய்தலாம்-(எளிதில்)அடையலாம்.

திருவரங்கநாதனை அன்போடு தியானித்து உருகுபவர்க்கு முத்தி சித்திக்கு மென்பதாம். இங்கே ஆயிரமென்பது, அளவில்லாததென்னும் பொருளது; அங்ஙனங்கொள்ளாவிடின் காலாயிரம் முடியாயிரம் முதலியன சேராவாம். ஆகவே, அளவற்றபாதம்முதலான சகலஅங்கங்களையுமுடையவன் எம்பெருமான் என்பதாம்: இதனால், அபரிமிதமாய் அற்புதமாயிருக்கிற மகாஞானமும் மகாசக்தியுமுள்ளவன் எம்பெருமான் என்பது தேர்ந்தபொருள்; இவ்வெம்பெருமான் சகலஇந்திரியங்களாலேயாதல், ஓரிந்திரியத்தாலேயாதல், ஒருவிஷயத்திற்குரிய இந்திரியத்தை மற்றொன்றற்கு மாற்றியாதல், திருமேனியாலேயாதல், திவ்வியாத்துமசுவரூபத்தாலேயாதல் எல்லாவற்றையும் எப்போதும் எல்லாவிதத்திலும் மேலாக அறிகின்றவனுஞ் செய்கின்றவனுமா யிருக்கின்றானென்பது, முக்கியமான கருத்து: இங்ஙனமன்றி முள்ளம்பன்றி தேகமுழுவதிலும் முட்களாலே செறிந்திருப்பதுபோல அநேகந் திருவடிகள் திருமுடிகள் திருக்கைகள் திருக்கண்கள் முதலான அவயவங்களாற் செறிந்து கோரரூபமுள்ளவனாயிருக்கின்றான் பகவானென்பது கருத்தன்று; அளவில்லாதகண்முதலியவைகளையுடையவன் எப்படி அளவில்லாதகாட்சிமுதலானவற்றை யுடையவனாயிருப்பனோ அப்படியே பகவானும் என்று எடுத்துக்காட்டியவாறும்: இங்குச் சிலர், உலகமெல்லாம் பகவானுடைய சொரூபமாதலாலே உலகத்திலுள்ளோருடைய சிரம் கண் முதலானவையெல்லாம் அவனுடையவையா மெனக் கருத்துக் கூறுவர்; அது பலவிதத்திலும் பொருந்தாதென அறிக. இது, திவ்வியாத்துமசுவரூபங் கூறியபடி. நாக மென்னுஞ் சொல்லுக்கு - நகத்தி லுள்ளதென்று பொருள்; நகம் - மலை, அல்லது சந்தன மரம்: இச்சொல்லுக்கு நடவாததென்று பொருள். விண் - ஆகுபெயராய் மேகமென்றுமாம். கஞ்சம் - நீரில் முளைப்பது. விண்பூத்த கஞ்சம் - இல்பொருளுவமை. 'அரங்கம்' என்றும் பாடம். இரங்கவல்லாரென்பது, அங்ஙனம் இரங்குதலின் அருமை விளக்கிநின்றது.

இது, நேரசை முதலாகிய கட்டளைக்கலித்துறை. (க)

வைகலந்தழூவிலைவேலீசற்கும்வாசவற்கும்வாசப்பூமேன்
மெய்கலந்தநால்வேதவிரிஞ்சனுக்குமேலாவீற்றிருப்பர்மாதோ
பைகலந்தபாம்பணைமேற்றிருவரங்கப்பெருநகருட்பள்ளிகொள்ளுங்
கைகலந்தநேமியான்றிருநாமத்தொருநாமங்கற்றோர்தாமே.

(இ - ள்.) திரு அரங்கப் பெரு நகருள் - திருவரங்கம் பெரியகோயி லில், பை கலந்த - படம் பொருந்திய, பாம்பு அணைமேல் - சேஷசயனத் தின்மீது, பள்ளி கொள்ளும் - பள்ளிகொண்டருளுகின்ற, கை கலந்த நேமியான் - கையிற் பொருந்திய திருவாழியையுடைய எம்பெருமானது, திரு நாமத்து - (ஆயிரந்) திருநாமங்களுள், ஒரு நாமம் - ஒருதிருநாமத்தை, கற்றார் - உச்சரித்தவர்கள், - வை கலந்த - கூர்மை பொருந்திய, மூ இலை - மூன்று இலைவடிவமான தலையையுடைய, வேல் - சூலாயுதத்தையுடைய, ஈசற்கும் - பரமசிவனுக்கும், வாசவற்கும் - தேவேந்திரனுக்கும், வாசம் பூமேல் - வாசனையையுடைய தாமரைமலரில் தோன்றிய, மெய் கலந்த - உண்மைபொருந்திய, நால் வேதம் - நான்கு வேதங்களையுமுடைய, விரிஞ் சனுக்கும் - பிரமதேவனுக்கும், மேல்ஆ - மேன்மையாக, வீற்றிருப்பர் - (பரமபதத்தில்) மகிழ்ந்திருப்பார்கள்; (எ - று.)

எம்பெருமானது திருநாமத்தின் மகிமை கூறியவாறு. எம்பெருமா னது திருநாமத்தைக் கற்றார்க்கு நித்தியவிபூதியாகிய பரமபதங் கிடைத் தல் திண்ணமாதலால், லீலாவிபூதிக்கு ஈடங்கிய ஈசன் முதலானார்க்கும் உயர்ந்த பதவியில் வீற்றிருப்பர் அன்றோவென்க. பள்ளிகொள்ளுதல் - யோக நித்திரை செய்தல். மூவிலைவேல் - முத்தலைச்சூலம். கைகலந்த நேமியான்- "கைகலந்தவாழியான்" என்பர் நம்மாழ்வார். கைகலந்தநேமி - 'திருக்கை யிலே வேர்விழுந்த திருவாழி' மெய்கலந்த நால்வேதம் - யாவர்க்கும் சிற ந்த பிரமாணமான நூல் என்றபடி.

இது, முதல் நான்குங் காய்ச்சீரும், மற்றவை மாச்சீருமாகிய அறுசீ ராசிரியவிருத்தம். (ச)

கற்றாரெனினும் பதினாலுலகுங் கண்டாரெனினுந் தண்டாமிகுபற்
றற்றாரெனினுந் திருமாலடியாரல்லாதவர் வீடில்லாதவரே
பொற்றாமரையாள்கணவன்றுயிலும் பொற்கோயிலையேபுகழ்வார்பணிவார்
மற்றாரெனினும்பெற்றாரவரே வானோர்திருமா மணிமண்டபமே.

(இ - ள்.) கற்றார் எனினும் - (கற்றற்கு உரிய நூல்களையெல்லாங்) கற் றவர்களேயாயினும், பதினாலு உலகும் - பதினான்கு லோகங்களையும், கண்டார் எனினும் - கண்டவர்களேயாயினும், தண்டா-நீங்குதலரிய, மிகு பற்று-மிகுந்த(இருவகைப்)பற்றுக்களும், அற்றார் எனினும் - நீங்கியவர்களே யாயினும், திரு மால் அடியார் அல்லாதவர் - எம்பெருமானது அடியவர்க ளல்லாதவர்கள், வீடு இல்லாதவரே - மோக்ஷமில்லாதவர்களே யாவர்; பொன் தாமரையாள் கணவன் - பொற்றாமரைமலரில் வீற்றிருக்கின்ற திரு மகளது கணவனாகிய அவ்வெம்பெருமான், துயிலும் - பள்ளிகொண்டருளு கின்ற,பொன் கோயிலையே - அழகிய திருவரங்கத்தையே, புகழ்வார் பணி வார் - துதித்து வணங்குபவர்கள், மற்றார் எனினும் - மற்றவர்களே யாயி னும்[கீழ்க்கூறிய கற்றல் காணுதல் அறுதல்முதலிய குணங்கள் இல்லாதவ ரேயாயினும்], அவரே—, வானோர் - நித்தியசூரிக ளுறையுமிடமான, திரு மா மணி மண்டபம் - முத்திமண்டபத்தை, பெற்றார் - அடைந்தவராவர்,

நூல்களைக்கற்றல் முதலிய சிறப்புக்களையுடையராயினும் திருமாலுக்கு அடிமைப்படாதார் முத்தியடையார்; அவையில்லாதவராயினும் திருவரங்கம் பெரியகோயிலைப் புகழ்தல் பணிதல் செய்தவரே முத்தியடைவரென்பதாம். திருமால்-திருமகளையுடைய மால்: ஸ்ரியஃபதி; மால்-விஷ்ணு; அன்றிக்கே, திருமகளிடத்தே மால் [வேட்கை] கொண்டவன். 'திருமால்' என்றது, புருஷகார பூதையாகிய பெரியபிராட்டியோடு கூடிய சேர்த்தியே உத்தேச்ய மென்றவாறு; "இஷ்டா நிஷ்டப்ராப்தி பரிஹாரங்கள் இரண்டும் பண்ணுவான் ஈஸ்வரனே யாயிருக்க, பெரிய பிராட்டியாராலே இவனுக்குப் பேறாகையாகிறது - இவனுடைய அபராதத்தைப் பாராதே ரக்ஷிக்கும்படி இவள் புருஷகாரமானாலொழிய ஈஸ்வரன் இவன்காரியஞ் செய்யான் என்றபடி", "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது, அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்னும் ஆன்றோர் வாக்கியங்கள் நோக்கத்தக்கன.

இருவகைப்பற்று-தானல்லாத உடம்பை யானென்றுந் தன்னோடியைபில்லாத பொருளை எனதென்றுங் கருதுகின்ற அகங்கார மமகாரங்கள். அவை அறுதல் - ஆசிரியர்பாற் பெற்ற உறுதிமொழிகளானும், யோகப்பயிற்சியானும். பதினாலுலகம் - கீழேழு மேலேழு ஆக உலகம் பதினான்கு. பதினான்கு உலகங்களையுங் காணுதல் - தாம் இருந்த விடத்தி லிருந்தே யோகப் பயிற்சியினாலுண்டான அறிவு விசேடத்தால் அறிதல்; அன்றி, அணிமா முதலிய சித்திமகிமையால் தாம் நினைத்தவிடங்களிற் சென்று அறிதல் என்க. திருமாமணி மண்டபம்—'நாநாரத்நங்களாலே சமைந்த ஸ்தலங்களை யுடைத்தாய், அநேகமாயிரம் ரத்நஸ்தம்பங்களாலே அலங்க்ருதமாய், உபயவிபூதியி லுள்ளாரும் ஒருமூலையிலே அடங்கும்படி இடமுடைத்தாய்' ஸ்ரீவைகுண்ட நாட்டிலேயுள்ளது மற்று ஆர் என்றும் பிரிக்கலாம். பெற்றார்-காலவழுவமைதி; தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாய்ச் சொல்லப்பட்டது; நிச்சயமாகப் பெறுவரென்க.

இது, எல்லாச் சீர்களும் மாச்சீர்களாகிய எண்சீராசிரிய விருத்தம். (ரு)

மண்டலமும்விண்டலமுநின்றவட குன்றமும் வளைந்தமலையுங் கடலுமூ, தண்டமுமகண்டமுமயின்றவர் துயின்றரு ளரும்பதிவிரும்பினைவிற், கொண்டல்குமுறுங்குடகிழிந்துமதகுந்தி யகில்கொண்டுநுரைமண்டிவருநீர், தெண்டிரைதொறுந் தரளமுங்கனகமுஞ் சிதறுதென்றிருவரங்கநகரே.

(இ - ள்.) மண் தலமும் - மண்ணுலகத்தையும், விண் தலமும் - விண்ணுலகத்தையும், நின்ற - (மண்ணுலகத்தினிடையே) நின்ற, வடகுன்றமும் - மகாமேருமலையையும், வளைந்த மலையும் - (அதனைச்) சூழ்ந்துநின்ற மற்றை மலைகளையும், கடலும் - கடல்களையும், முது அண்டமும் - (இவையெல்லாவற்றையுந் தன்னுள் அடக்கிய) பழைய அண்டங்களையும், அகண்டமும் -(அவற்றிலுள்ளசராசரங்கள்எல்லாவற்றையும், அயின்றவர் - (பிரளயகாலத்தில்) அமுதுசெய்தருளிய எம்பெருமான், துயின்றருள் - பள்ளிகொண்டருளுகி

ன்ற, அரு பதி - அடைதற்கரிய திவ்யதேசம் (எதுவென்று அறிய), விரும்பி—, வினவின் - கேட்டால், — கொண்டல் குமுறும் - மேகங்கள் படிந்து முழங்கப் பெற்ற, குடகு - குடகுமலையினின்று, இழிந்து - பெருகி, மதகு - நீர்மதகுகளை, உந்தி - தள்ளிக்கொண்டு, அகில் கொண்டு - அகிற்கட்டைகளை வாரிக்கொண்டு, நுரை மண்டி - நுரைமிகுந்து, வரும் - வருகின்ற, நீர் - காவேரிநீரானது, தெள் திரை தொறும் - தெளிந்த அலைகள்தோறும், தவளமும் - முத்துக்களையும், கனகமும் - பொன்னையும், சிதறு - சிந்துகின்ற, தென் திருஅரங்கம் நகரே - அழகிய ஸ்ரீரங்கமென்னும் நகரமே யாகும்; (எ - று.)

வளைந்த மலை - பூமியைக் கோட்டைபோலச் சூழ்ந்துநின்ற சக்கரவாளகிரி யென்றும், கடல் - பெரும்புறக்கடலென்றுங் கொள்ளலாம். கொண்டல் - நீர்கொண்ட காளமேகம். குடகு - ஸஹ்யகிரி. அகில் - மற்றைமலைபடு பொருள்களுக்கும் உபலக்ஷணம். இதில் ப்ராஸ மென்னுஞ் சொல்லணி காண்க.

இது, முதலைந்துங் கூவிளங்காய்ச்சீர்களும், ஆறாவது தேமாச்சீரும், ஏழாவது புளிமாச்சீருமாகிய எழுசீராசிரியச்சந்தவிருத்தம். தந்ததன தந்ததன தந்ததன தந்ததன தந்ததன தந்த தனன எனச் சந்தக்குழிப்புக் காண்க. (௬)

[புயவகுப்பு.]

(முதலடி)

நருகதிர்வழங்கு தகடுபடுசெம்பொ னவமணிகுயின்ற
தொடியணியணிந்து ககனவிலிடுநீலவெற்பொத்திருந்தன
நறியபுதுமன்ற றிசைமுழுதுமண்ட நறவுகுதிகொண்ட
துளவணியலங்கன் மதுகரமொருகோடிசுற்றப்புனைந்தன
நளினமடமங்கை குவலயமடந்தை சனகனதனங்கு
பொதுவர்மகளென்றிவ் வனிதையர்தனபாரமொத்தக்குழைந்தன
நதிபதிசுழன்று கதறிநுரைசிந்த வரவகடுரிஞ்சி
யலறவலமந்து வடவரையுடறேயநட்டுக்கடைந்தன

(இரண்டாமடி)

இகலியிருகுன்றி லிருசுடரெழுந்து பொருவதெனவிம்ப
மதிமுகமிலங்கு மிருகுழையிருபாடலைப்பச்சிறந்தன
இணையறநிமிர்ந்து வலியொடுதிரண்டு புகழொடுபரந்து
புழுகொடுமளைந்து கலவையினணிசேறுதுற்றுக்கமழ்ந்தன
எதிரொருவரின்றி யகிலவுலகுந்த னடிதொழவிருந்த
விரணியன்மடங்க முரணியவரைமார்பமொற்றிப்பிளந்தன
எறிகடல்கலங்கி முறையிடவெகுண்டு நிசிசரரிலங்கை
யரசொடுமலங்க வொருசிலையிருகால்வளைத்துச்சிவந்தன

(மூன்றாமடி)

மிருகளவினின்ற விளவுகனிசிந்தி மடியவிடுகன்று
குணிலெனவெறிந்து பறவையினைகல்வாய்கிழித்துப்பகிர்ந்தன
வெறிபடுகுருந்தை முறிபடவடர்ந்துகுடநடமகிழ்ந்து
குரவைகள்பிணைந்து பொருதொழிலெருதேழுசெற்றுத்தணிந்தன
வெடிபடமுழங்கி யெழுமுகிலுமண்ட ரொடுநிரைதியங்க
வெறிதிவலைகண்டு தடவரைகுடையாவெடுத்துச்சுமந்தன
விழிவடவைபொங்க வெதிர்பொரநடந்த களிறுளம்வெருண்டு
பிளிறிடமுனிந்து புகர்முகவிருகோடுபற்றிப்பிடுங்கின

(நான்காமடி)

அகலிடமுழும்ப ருலகமுநடுங்கி யபயமடியெங்க
ளபயமெனவந்து விழுதொறுமிடையூறகற்றிப்புரந்தன
அருகுறவிளங்கு மெறிதிகிரிசங்கம் வெயிலொருமருங்கு
நிலவொருமருங்கு மெதிரெதிர்கதிர்வீசவிட்டுப்பொலிந்தன
அருமறைதுணிந்த பொருண்முடிவையின்சொலமுதொழுகுகின்ற
தமிழினில்விளம்பி யருளியசடகோபர்சொற்பெற்றுயர்ந்தன
அரவணைவிரும்பி யறிதுயிலமர்ந்த வணிதிருவரங்கர்
மணிதிகழ்முகுந்த ரழகியமணவாளர்கொற்றப்புயங்களே.

(இ - ள்.) நகு கதிர் வழங்கு - விளங்குகின்ற ஒளியை வீசுகின்ற, செம்பொன் படி தகடு - செம்பொன்மயமான தகட்டினாற் (செய்யப்பட்டு), நவமணி குயின்ற - நவரத்தினங்களும் இழைத்துள்ள, தொடி அணி - தொடியென்னும் ஆபரணத்தை, அணிந்து - தரித்து, ககனம் வில் இடும் - ஆகாயத்தே தோன்றுகின்ற இந்திரவில் இடப்பட்ட, நீல வெற்பு - கரியமலைகளை, ஒத்து இருந்தன—; நறிய புது மன்றல் - நல்ல புதிய வாசனையானது, திசை முழுதும் - திக்குகளி லெல்லாம், அண்ட - சேர்ந்து பரவும்படி, நறவு குதி கொண்ட - தேன் பெருகுதலைத் தன்னிடத்தே கொண்ட, துளவு - திருத்துழாயினாலாகிய, அணி அலங்கல் - அழகிய மாலையை, ஒரு கோடி மதுகரம் சுற்ற - ஒருகோடி [மிகப்பல] வண்டுகள் சூழ்ந்து மொய்க்கும்படி, புனைந்தன - சூடின; நளினம் மட மங்கை - தாமரைமலரில் வீற்றிருக்கின்ற அழகிய பெரிய பிராட்டியும், குவலயம் மடந்தை - பூமிப்பிராட்டியும், சனகனது அணங்கு - ஜாநகிப்பிராட்டியும், பொதுவர் மகள் - நப்பின்னைப்பிராட்டியும், என்ற - என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, இ வனிதையர் - இந்தத்தேவியரது, தனபாரம் - பருத்த கொங்கைகள், மொத்த - (தம்மேல்) நெருக்குதலால், குழைந்தன - நெகிழ்ந்தன; நதி பதி - திருப்பாற்கடலானது, சுழன்று - சுழற்சியடைந்து, கதறி - பேரொலிசெய்து, நுரை சிந்த - நுரைகளைச் சிந்தவும்,—அரவு - வாசுகியானது, அகடு உரிஞ்சி - உடல் தேய்ந்து, அலற - கதறவும்,—வட வரை - மந்தரமலை, அல மந்து - வருந்தி, உடல் தேய - உடம்பு தேய்வடையவும், நட்டு - (அம்மலையை மத்தாக) நாட்டி, கடைந்தன—;

இரு சுடர் - சந்திர சூரியர்கள், இகலி - தம்முள்ளே மாறுபட்டு, இரு குன்றில் - இரண்டு மலைகளில், எழுந்து - தோன்றி, பொருவது என - போர்செய்வது போல, விம்பம் மதி முகம் இலங்கும் - சந்திரபிம்பம் போன்ற முகத்தின் இருபக்கங்களிலும் விளங்குகின்ற, இரு குழை - இரண்டு குண்டலங்களும், இரு பாடு அலைப்ப - இரண்டுபக்கங்களில் அசையும்படி, சிறந்தன—; இணை அற - (தனக்குத் தானேயன்றி வேறு) ஒப்பில்லாமல், நிமிர்ந்து- உயர்ந்து, வலியொடு-வலிமையுடனே, திரண்டு - திரட்சிபெற்று, புகழொடு-கீர்த்தியுடனே, பரந்து - பரவி, புழுகொடும் - புழுகுடனே, அளைந்து - கலந்து, கலவையின் அணி சேறு தூற்று - அழகிய கலவைச்சந்தனச் சேறு மிகுதியாகப் பூசப்பெற்று, கமழ்ந்தன - நறுமணம் வீசின; எதிர் ஒருவர் இன்றி - (தனக்கு) ஒருவரும் எதிரில்லாமல், அகில உலகும் - எல்லாவுலகங்களும், தன் அடி தொழ - தனது பாதங்களையே வணங்கும்படி, இருந்த - இறுமாந்திருந்த, இரணியன் - இரணியாசுரன், மடங்க - அழியும்படி, முரணிய வரை மார்பம் - (அவனது) வலிய மலைபோலும் மார்பை, ஒற்றி பிளந்தன - (நகங்களினால்) இடந்து கீண்டன; எறி கடல் -அலையெறிகின்ற கடல், கலங்கி—, முறை யிட - முறையிடவும்,—நிசிசரர் - இராக்கதர்கள், இலங்கை அரசொடு - இலங்கைக்குத்தலைவனாகிய இராவணனுடனே, மலங்க - கலங்கவும், வெகுண்டு - கோபித்து, ஒரு சிலை - ஒப்பற்ற கோதண்டத்தை, இரு கால் - இரண்டுதரம், வளைத்து—, சிவந்தன—;

மிகு களவின் - மிக்கவஞ்சனையுடனே, நின்ற - (தன்னைக்) கொல்லும்படி நின்ற, விளவு - விளாமரமானது, கனி சிந்தி - (தனது) பழங்களைச் சிதறி, மடிய - மடிந்துவிழும்படி, விடு கன்று-(கம்சனால்) ஏவப்பட்ட மாயக் கன்றை, குணில் என - குறுந்தடியாகக் கொண்டு, எறிந்து - (அதன்மேல்) வீசி, பறவையின் - பகாசுரனது, அகல் வாய் - அகன்ற வாயை, கிழித்து பகிர்ந்தன - (இரண்டு படும்படி) கிழித்துப் பிளந்தன; வெறி படு குருந்தை - வாசனைவீசுகின்ற (மலர்களையுடைய) குருந்தமரத்தை, முறி பட - முறிந்துவிழும்படி, அடர்ந்து - அழித்து, குடநடம் மகிழ்ந்து - மனமகிழ்ந்து குடக்கூத்தாடி,—குரவைகள் பிணைந்து - குரவைக்கூத்தாடி,—பொரு தொழில் - போர்செய்கின்ற தொழிலையுடைய, எருது எழு - ஏழெருதுகளை, செற்று - தழுவி யழித்து, தணிந்தன - சினந் தணிந்தன; எழு முகிலும் - ஏழுமேகங்களும், வெடிபட - பேரொலியுண்டாக, முழங்கி - இடித்து,நிரை அண்டரொடு தியங்க - பசுக்களும் (அவற்றைக் காக்கின்ற) இடையர்களுந் திகைக்கும்படி, எறி - வீசிப்பெய்த, திவலை - நீர்த்துளிகளை, கண்டு—,தட வரை - பெரிய கோவர்த்தனகிரியை, குடை ஆ - கொற்றக் குடையாக, எடுத்து—, சுமந்தன - தரித்தன; விழி - கண்களில், வடவை பொங்க - படபாமுகாக்கினிபோலுந் தீப்பொறி பறக்கும்படி, எதிர் - எதிரில், பொர நடந்த - (தன்னோடு) பொருதற்கு வந்த, களிறு - (குவலயாபீடமென்னும் கம்சனது) பட்டத்துயானை, உளம் வெகுண்டு - மனங் கோபித்து, பிளிறிட - பேரொலி செய்ய, முனிந்து- கோபித்து, புகர் முகம் இரு கோடு - செம்புள்ளிகளையுடைய (அதனது) முகத்தின்கண்ணேயுள்ள இரண்டுதந்தங்களையும், பற்றி பிடுங்கின - பிடித்துப் பறித்தன;

அகல் இடமும் - அகன்ற நிலவுலகத்தவரும், உம்பர் உலகமும் - தேவலோகத்தவரும், நடுங்கி - பயந்து, 'அடியேங்கள் - அடியவராகிய யாங்கள், அபயம் அபயம் - அடைக்கலம் அடைக்கலம்', என - என்று சொல்லி, வந்து விழுதொறும் - வந்து விழுந்து வணங்கும்பொழுதெல்லாம், இடையூறு அகற்றி - (அவர்களது) துன்பத்தைப் போக்கி, புரந்தன - (அவர்களைப்) பாதுகாத்தன; அருகு உற விளங்கும் - (இரண்டு) பக்கங்களிலும் மிக்கு விளங்குகின்ற, எறி திகிரி சங்கம் - (பகைவர்மீது) வீசியெறியப்படுகின்ற சக்கரமுஞ் சங்கமும், வெயில் ஒரு மருங்கும் - வெயில் ஒருபக்கத்திலும், நிலவு ஒரு மருங்கும் - நிலவு ஒருபக்கத்திலுமாக, எதிர் எதிர் - எதிருக்கெதிரே, கதிர் வீச - ஒளியை வீசும்படி, விட்டு பொலிந்தன - ஒளிவிட்டு விளங்கின; அரு மறை - அறிதற்கரிய வடமொழி வேதங்களில், துணிந்த - நிச்சயித்துச் சொல்லப்பட்ட, பொருள் முடிவை - தத்துவார்த்தங்களின் சித்தாந்தத்தை, இன் சொல் - இனிய சொற்களையுடைய, அமுது ஒழுகுகின்ற - அமிருதம்போன்ற இனிமை மிக்க, தமிழினில்-செந்தமிழ்ப்பாஷையில், விளம்பி அருளிய-திருவாய்மலர்ந்தருளிய, சடகோபர்-நம்மாழ்வாரது, சொல் - பாசுரங்களை, பெற்று—, உயர்ந்தன—; (எவையென்றால்),—அர அணை - ஆதிசேஷசயனத்தில், விரும்பி—, அறிதுயில் அமர்ந்த - யோகநித்திரை செய்தருளுகின்ற, அணி திரு அரங்கர் - அழகிய ஸ்ரீரங்கநாதரும், மணி திகழ் முகுந்தர் - நீலமணிபோலவிளங்குகின்ற முகுந்தனென்னுந் திருநாமமுடையவருமாகிய, அழகியமணவாளர் - அழகிய மணவாளரது, கொற்றம் புயங்கள்-வெற்றியையுடைய திருத்தோள்களாம்.

பிரபந்தத்தலைவனது தோள்களைப் பலபடியாக வருணித்துக் கூறுதல், புயவகுப்பாம்.

தொடி - தோள்வளை. பலநிறமுடைய இந்திரதனுசு - பன்னிறமணிகள் பதித்த தொடியணிக்கும், நீலவெற்பு - கரியபெரியதிருத்தோள்களுக்கும் உவமை. நீல வெற்பு - இந்திரநீலரத்தினமயமான மலையென்றுமாம். அலங்கல் - தொங்குவது; தொங்கியசையும் மார்பின்மாலைக்குத் தொழிலாகுபெயர். மதுகரம் - தேனைச்சேர்ப்பது. குவலயம் - பூமண்டலம். சனகனது அணங்கு - ஜநகராஜன் வளர்த்த மகள். பொதுவர் மகள் - ஆயர்மகள். பொதுவர் - குறிஞ்சிநிலத்துக்கும் மருதநிலத்துக்கும் நடுவிடமான முல்லைநிலத்தில் உள்ளவர்; 'இடையர்' என்னும் பெயர்க்குங் காரணம் இதுவே. நதிபதி - நதிகளுக்குத் தலைவன். அகடு - நடுவுடல். மந்தரம் எங்குள்ளதென்றால், வடக்கிலுள்ளதெனவேண்டுதலின், அதனை 'வடவரை' என்றார்.

இரண்டுகாதுகளிலும் அணிந்துள்ள குண்டலங்கட்கு - இரண்டுமலைகளின்மீது ஏககாலத்தில் எழுந்து போர்செய்யும் சூரியசந்திரரை உவமை கூறியது, இல்பொருளுவமை. புழுகு - கஸ்தூரி; புனுகுமாம். கலவை - பலவகை வாசனைப்பண்டங்களுங் கலந்த சந்தனம். எதிர் - ஒப்பும், பகையையும். இரணியன் - ஹிரண்யன்; பொன்னிறமானவன். இராமபிரான் வானரசேனையோடு செல்லுகையில் கடலிற் செல்லும்படி வருணன் வழி

விடாமையால் கடலை ஆக்நேயாஸ்திரத்தினால் வற்றச்செய்து விடுவதாகச் சினந்து வில்வளைத்தமையும், பிறகு இலங்கையிற் சென்று இராவணனை வம்சநாசமாம்படி கொல்வதற்காக வில்வளைத்தமையும் பற்றி, 'எறிகடல் கலங்கி முறையிட நிசிசரர் இலங்கையரசொடுமலங்க ஒருசிலை இருகால் வளைத்துச் சிவந்தன' என்றார். இனி, ஒருசிலை இருகால் வளைத்து - ஒப்பற்ற தமது கோதண்டத்தை இரண்டு கோடியையும் ஒன்றுசேரும்படி நன்றாக வளைத்து எனினுமாம். நிசிசரர் - இரவிற் சஞ்சரிப்பவரென இராக்கதர்க்குக் காரணக்குறி. இலங்கையரசு - லங்காராஜன். சிலை - கோதண்டம். 'எற்றிப்பிளந்தன' என்றும் பாடம்.

குடநடம்-குடமெடுத்தாடுங் கூத்து; இது, பிராமணர் ஐசுவரியம் விஞ்சினால் யாகாதிகள் பண்ணுமாறுபோல இடையர்க்கு ஐசுவரியம் மிகுந்தால் செருக்குக்குப் போக்குவிட்டாடுவதொரு கூத்து; அதாவது - தலையிலே அடுக்குக்குடங்களிருக்க, இரண்டு தோள்களிலும் குடங்களிருக்க, இரண்டு கைகளிலும் குடங்களை யேந்தி ஆகாயத்தில் எறிவதும் ஏற்பதுமாய் ஆடுவதொரு கூத்தாகும். குரவை - கைகோத்தாடுவது; "குரவைக் கூத்தே கைகோத்தாடல்" என்பது, திவாகரம்: இதற்கு வடமொழியில் 'ராஸம்' என்று பெயர்: பல நாட்டியப்பெண்கள் வட்டமாகநின்று சித்திரமான தாளலயங்களுடன் மெதுவாகவும் உன்னதமாகவுங் கூத்தாடுதல், இதன் இலக்கணம். 'குரவை யென்பது - காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது; "குரவையென்பது கூறுங்காலைச், செய்தோர் செய்த காமமும் விறலு, மெய்தக்கூறு மியல்பிற் றென்ப" எனவும், "குரவையென்ப தெழுவர்மங்கையர், செந்நிலைமண்டலக் கடகக்கைகோத்து, அந்நிலைகொட்ப நின்றாடலாகும்" எனவும் சொன்னாராதலின்' என்பது—சிலப்பதிகாரத்து அடியார்க்குநல்லாருரை. எழுமுகில் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் என்பன. வடவையென்பது-கடலிடத்துள்ள படையென்னும் பெண்குதிரையின் முகத்தில் தோன்றி மழைமுதலியவற்றால் மிக்குவரும் நீரை வற்றச்செய்வதொரு தீ. களிறு - ஆண்யானை; "வேழக் குரித்தே விதந்து களிறென்றல்."

அபயம் - அஞ்சவேண்டாவென்று சொல்லிக் காக்கத்தக்க பொருள்; அச்சத்தால் இருமுறை அடுக்கிற்று. நடுங்குதற்குக் காரணம் - அரக்கர் அசுரர் முதலிய பகைவர்கள் செய்யுந் துன்பங்களும், பிறவித்துன்பங்களும். திகிரி சங்க மென்றதற் கேற்ப, வெயிலையும் நிலவையும் முறையே கூறியது, முறைநிரனிறையணி: திகிரி வெயிலையும் சங்கம் நிலவையும் எதிரெதிராக வீசு மென்க. மணிதிகழ் - கௌஸ்துபமணி விளங்குகின்ற வென்றுமாம். முகுந்தர் - (தமது அடியார்க்கு) முத்தியின்பத்தையும், இவ்வுலக வின்பத்தையுங் கொடுப்பவர்.

இது, ஒன்று மூன்று ஐந்து ஏழு ஒன்பது பன்னிரண்டாஞ் சீர்கள் கருவிளச்சீர்களும், இரண்டு நான்கு ஆறு எட்டாஞ் சீர்கள் புளிமாச்சீர்களும், பத்தாஞ்சீர் புளிமாங்காய்ச்சீரும், பதினோராஞ்சீர் தேமாச்சீருமாக வந்தது

காலடியாகவும், அஃது நான்குபெற்றது ஓர் அடியாகவும் வந்த கழிநெடிலடி நான்கு கொண்ட நாற்பத்தெண்சீராசிரியவண்ணவிருத்தம். 'தனதன தனந்த தனதன தனந்த தனதன தனந்த தனதன தனந்த தனதன தன தான தத்தத் தனந்த' என்பது சந்தக்குழிப்பாம். குற்றெழுத்து மிக்குப்பயிலுதலால், இது - குறுஞ்சீர்வண்ணமாம்; "குறுஞ்சீர்வண்ணம் குற்றெழுத்துப்பயிலும்" என்றது காண்க. (எ)

புயநான் குடையானைப் பொன்னரங்கத் தானை
யயனாந் திருவுந்தி யானை—வியனாம்
பரகதிக்குக் காதலாய்ப் பாடினேன் கண்டீர்
நரகதிக்குக் காணும லான்.

(இ - ள்.) புயம் நான்கு உடையானை - நான்கு திருக்கைகளை யுடையவனும், அயன் ஆம் திரு உந்தியானை - பிரமதேவன்தோன்றிய அழகிய நாபியையுடையவனுமாகிய, பொன் அரங்கத்தானை - அழகிய திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனை—,வியன் ஆம்-பெருமை பொருந்திய, பர கதிக்கு-பரமபதத்தை அடைவதற்கு, காதல் ஆய் - விருப்பங்கொண்டு, நரக திக்கு காணாமல் - நரகத்தின் திசையையுங் காணவொண்ணாதபடி, நான்—, பாடினேன் - பாடல்பாடித் துதித்தேன்;.(எ - று.)

யான் பாடல்பாடித் துதித்ததனால், நரகத்தையடையாமல் பரமபதஞ்சேர்வேனென்பது திண்ணமென்றவாறு. அயன் - அஜன்; திருமாலினிடத்தினின்று தோன்றியவன்; (அ - திருமால்.) பரகதி - மற்றெல்லாப் பதவிகளினும்உயர்ந்த பதவி. கண்டீர்-அசை; தேற்றப்பொருளதாகவுமாம். திக்கு - பக்கம். பின்னிரண்டடிகளில் முதலெழுத்து மாத்திரம் வேறுபட்டு இரண்டு மூன்று முதலிய சில எழுத்துக்கள் ஒன்றுபட்டு நிற்கப் பொருள் வேறுபட்டு வந்தது, திரிபு என்னுஞ் சொல்லணியாம்.

இது, முற்கூறியது போன்ற இருவிகற்பநேரிசைவெண்பா. (அ)

நானந்தவைகுந்தநாடெய்திவாழிலென் ஞாலத்தன்றி
யீனந்தவாதநிரயத்துவீழிலென் யானடைந்தேன்
கோனந்தன்மைந்தனைநான்முகன்றந்தையைக்கோயிலச்சு
தானந்தனையெனக்காராவமுதையரங்கனையே.

(இ - ள்.) கோன் நந்தன் மைந்தனை - (இடையர்) தலைவராகிய நந்தகோபரது திருமகனும், நான்முகன் தந்தையை-பிரமதேவனது தாதையும், கோயில் - திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற, அச்சுத அனந்தனை - அச்யுதன் அநந்தன் என்னுந் திருநாமங்களை யுடையவனும், எனக்கு—, ஆரா அமுதை - தெவிட்டாத அமிருதம்போன்றவனுமாகிய, அரங்கனை—, யான் அடைந்தேன் - யான் வேறு புகலிடமின்றித் தஞ்சமாக அடைந்தேன்; (இனி), நான்—, அந்த வைகுந்தநாடு - அந்த ஸ்ரீவைகுண்டலோகத்தை, எய்தி-அடைந்து, வாழில்-வாழ்ந்துபேரின்பமடைந்தால், என் - என்ன? ஞாலத்து அன்றி - இவ்வுலகத்திலே யல்லாமல், ஈனம் தவாத -

இழிவு நீங்காத [மிக்க இழிவுடைய], நிரயத்து - நரகலோகத்தில், வீழில் - விழுந்து பெருந்துன்பமடைந்தால், என் - என்ன? (எ - று.)

தேவாதிதேவனான சருவேசுவரனைச் சரணமடைந்தேன்; இனி எனக்குப் பேராநந்தமுடையமுத்திப்பேறு கிடைத்தாலென்ன? எல்லையில்லாத பெருந்துன்பமுடைய தீக்கதிகள்பலவும் வந்து தப்பவொண்ணாதபடி வளைத்துக்கொண்டாலென்ன? இவற்றை ஒன்றாக நினைப்பேனோ வென்று தமது மனவுறுதியை எடுத்துக்கூறியவாறு.

அந்த - சுட்டு, உலகறிபொருளின் மேலது. ஈனந் தவாத நிரயமெனவே, பலவகை யிழிவும் நிறைந்த நரக மென்றபடி. அச்சுதன் - வடசொற்றிரிபு. அச்யுதனென்பதற்கு - அழிவில்லாதவனென்றும், தன்னைச் சரணமாகப் பற்றினவரை நழுவவிடாமற் காப்பவனென்றும், அநந்தனென்பதற்கு - திருக்கல்யாணகுணங்களுக்கு ஓரெல்லையில்லாதவ னென்றும், அழிவில்லாதவனென்றும் பொருள். அச்சுதாநந்தன்-வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி. ஆராமை - மிக நுகர்ந்தவளவிலும் வெறுப்புத்தாராது இன்னும் வேண்டும்படியா யிருத்தல்.

"இன்பந்தரு பெருவீடு வந்தெய்திலெ னெண்ணிறந்த, துன்பந்தரு நிரயம்பல சூழிலென் றொல்லுலகின், மன்பல் லுயிர்கட் கிறையவன் மாயனென மொழிந்த, வன்ப னனக னிராமாநுச னென்னை யாண்டனனே" என்பதனோடு இக்கவியை ஒப்பிடுக. இச்செய்யுளிலும் திரிபு காண்க.

இது, நேரசை முதலதாகிவந்த கட்டளைக்கலித்துறை. (௯)

அரவினடித்தானு முரவிலொடித்தானு
மடவிகடந்தானும் புடவியிடந்தானுங்
குரவைபிணைத்தானும் பரவையணைத்தானுங்
கோசலைபெற்றானும் வீசலையுற்றானு
முரனையறுத்தானுங் கரனையொறுத்தானு
முத்தியளித்தானு மத்திவிளித்தானும்
பரமபதத்தானுஞ் சரமவிதத்தானும்
பாயல்வடத்தானுங் கோயிலிடத்தானே.

(இ - ள்.) அரவில் நடித்தானும் - (காளியனென்னும்) நாகத்தின் மேல் நர்த்தநஞ் செய்தவனும், உரம் வில் ஒடித்தானும் - வலிமைபொருந்திய (சிவனது) வில்லை ஒடித்தவனும், அடவி கடந்தானும்-காட்டை நடந்து கடந்தவனும், புடவி இடந்தானும் - பூமியைக் கோட்டாற் குத்தி யெடுத்தவனும், குரவைபிணைத்தானும்-குரவைக்கூத்தாடினவனும், பரவை அணைத்தானும் - கடலை அணைகட்டியவனும், கோசலை பெற்றானும் - கௌசல்யையாற் பெறப்பட்டவனும், வீசு அலை உற்றானும் - வீசுகின்ற திருப்பாற்கடலி னலையிற் பொருந்தியவனும், முரனை அறுத்தானும்-முரனென்னும் அசுரனை அழித்தவனும், கரனை ஒறுத்தானும் - கரனென்னும் அரக்கனை அழித்தவனும், முத்தி அளித்தானும் -(தன் அடியார்கட்கு) மோக்ஷமருளுகின்றவனும், அத்தி

விளித்தானும்-கஜேந்திராழ்வானால் (ஆதிமூலமேயென்று கூவி) அழைக்கப் பட்டவனும், பரமபதத்தானும் - பரமபதத்தில் எழுந்தருளி யிருப்பவனும், சரம விதத்தானும் - சரமோபாயத்தை [பிரபத்தியை]த் தன்னை யடையும் வழியாகவுடையவனும், பாயல் வடத்தானும் - ஆலிலையைச் சயனமாகக்கொண்டவனும்,—கோயில் இடத்தானே - திருவரங்கத்தை இடமாகவுடைய எம்பெருமானே யாவன்; (எ - று.)

அரவினடித்ததும், குரவைபிணைத்ததும், முரனையறுத்ததும்-கிருஷ்ணாவதாரத்தி லெனவும்;உரவிலொடித்ததும், அடவிகடந்ததும், பரவையணைத்ததும், கோசலைபெற்றதும், கரனையொறுத்ததும்-ராமாவதாரத்திலெனவும்; புடவியிடந்தது - வராகாவதாரத்தி லெனவும்; வீசலையுற்றது - வியூகநிலையி லெனவும்; அத்தி விளித்தது - கஜேந்திரமோக்ஷத்திலெனவும்; பரமபதத்தானென்றது-பரத்துவநிலையி லெனவும் ; பாயல்வடத்தானென்றது - பிரளய காலத்திலெனவும்;கோயிலிடத்தானென்றது-அர்ச்சாவதாரத்திலெனவும்; முத்தியளித்தலும், சரமவிதத்தானாதலும் - எல்லாநிலையி லெனவும் அறிக. பரவை - பரந்திருப்பது; ஐ - வினைமுதற்பொருள்விகுதி. கோசலை - வடசொற்றிரிபு; (உத்தர)கோசலதேசத்தரசன்மகளென்று பொருள். அன்பால் நினைவார்க்கு விரைந்து முத்தி யருளுதலால், அளித்தானென இறந்தகாலத்தாற் கூறினார். அத்தி - ஹஸ்தி; ஹஸ்தத்தையுடையது: ஹஸ்தம் - கை, துதிக்கை. வடமென்னும் மரத்தின்பெயர், அதன் இலைக்கு முதலாகுபெயர். இச்செய்யுளில் மடக்கு என்னுஞ் சொல்லணி காண்க.

இது, ஒன்று மூன்று ஐந்து ஏழு - மாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறு எட்டு - புளிமாங்காய்ச்சீர்களுமாகிய எண்சீராசிரியவிருத்தம். (௧௦)

தானே தனக்கொத்ததாட்டாமரைக்குச்சரண்புகுந்தா
ளானே னினியுன்னருளறியே னெனதாருயிரே
தேனே யென்றீவினைக்கோர்மருந்தே பெருந்தேவர்க்கெல்லாங்
கோனே யரங்கத்தரவணைமேற்பள்ளிகொண்டவனே.

(இ - ள்.) எனது—, அரு உயிரே - அரிய உயிருக்கொப்பானவனே! தேனே - தேனுக்கொப்பானவனே ! என் தீவினைக்கு - எனதுபாவத்தைப் போக்குவதற்கு, ஓர் மருந்தே - ஒரு மருந்துபோல்பவனே ! பெருந் தேவர்க்கு எல்லாம் - பெரியதேவர்களுக்கெல்லாம், கோனே - தலைவனே! அரங்கத்து அரவணைமேல் பள்ளிகொண்டவனே—!(யான்),—தானே தனக்கு ஒத்த - (வேறுஉவமையில்லாமையால்) தனக்குத் தானே நிகராகிய, தாள் தாமரைக்கு- (உனது) திருவடித் தாமரைகளுக்கு, சரண் புகுந்து - அடைக்கல மடைந்து, ஆள் ஆனேன் - அடிமையாயினேன்; இனி - இனிமேல், உன் அருள் - உனது திருவருள் இருந்து நடத்தும்படியை, அறியேன் - (இன்னதென்று) அறிகின்றிலேன் ; (எ - று.)

உயிர்க்கும் உயிராயிருத்தலால் 'ஆருயிரே' என்றும், அழியாவின்பந் தருதலால் 'தேனே' என்றும், தீவினையை வேரோடறுத்தலால் 'தீவினைக் கோர் மருந்தே' என்றும், தேவாதிதேவனாதலால் 'பெருந்தேவர்க்கெல்லாங்

கோனே' என்றுங் கூறினர். "என்னையு மென்னுடைமையையு முன்சக்கர ப்பொறி யொற்றிக்கொண்டு, நின்னருளே புரிந்திருந்தே னினியுன் திருக் குறிப்பே" என்றார் பெரியாரும். 'பெருந்தேவர்' என்றது, பிரமருத்திரேந் திராதியரை.

இது, நேர்முதலாக வந்த கட்டளைக்கலித்துறை. (கக)

[மேகவிடுதூது.]

கொண்டல்கா ளும்மைக் குறித்தே தொழுகின்றே
னண்டர்கா ணாவரங்கத் தம்மானைக்—கண்டு
மனத்துளவத் தைப்படுமென் மையலெல்லாஞ் சொல்லிப்
புனத்துளவத் தைக்கொணரீர் போய்.

(இ - ள்.) கொண்டல்காள் - (நீர் கொண்ட) காளமேகங்களே!—உம் மைக் குறித்தே—, தொழுகின்றேன் -வணங்குகின்றேன்; அண்டர் காணா- தேவர்களுங் காணுதற்கரிய, அரங்கத்து - திருவரங்கத்தில், போய்—, அம் மானை - எம்பெருமானை, கண்டு—,மனத்துள் - மனத்தில், அவத்தைப்படும்- துன்பப்படுகின்ற, என் - எனது, மையல் எல்லாம் - வேட்கைமயக்கத்தை யெல்லாம், சொல்லி—, புனம் துளவத்தை - வனத்தில் வளர்கின்ற திருத் துழாய்மாலையை, கொணரீர் - வாங்கிக்கொண்டு வாருங்கள்; (எ - று.)

ஓர் உத்தமபுருஷன் பரிவாரத்துடன் வேட்டையாடுதற்குப் புறப்பட்டு வனத்துக்குச் சென்றவனாய், ஓர்உத்தமகன்னிகையும் தோழியருடன் பூக் கொய்து விளையாடுதற்கென்று பூஞ்சோலையிற் சேர்ந்தவளவிலே, ஒவ் வொருநிமித்தத்தால் தோழியர் பிரிய அக்கன்னிகை அங்குத் தனித்துநின்ற சமயத்திலே, ஒவ்வொருநிமித்தத்தாற் பரிவாரங்கள் பிரியத் தனிப்பட்டவ னாய் அப்புருஷன் அங்குவந்துசேர, இருவரும் ஊழ்வினைவசத்தால் இங்ங னம் தற்செயலாய் ஓரிடத்திலே சந்தித்து ஒருவரையொருவர் கண்டு காதல் கொண்டு காந்தருவவிவாகக்கிரமத்தினாற் கூடி உடனே பிரிய, பின்பு மற் றுஞ் சில களவுப்புணர்ச்சிக்கு உரிய வகைகளால் அத்தலைமகளது கூட்டுற வைப் பெற்ற தலைமகன், பின்பு அவளை வெளிப்படையாகத் தான் மணஞ் செய்துகொள்ளுதலின்நிமித்தம் பொருள்தேடிவருதற்பொருட்டுக் கார்கால த்தில்மீண்டுவருவதாகக் காலங்குறித்துச்செல்ல, அத்தலைவனைப் பிரிந்த தலைவி, அப்பிரிவுத்துயரை யாற்றமாட்டாது பலவாறு வருந்தும்போது, இன்னது செய்வதென்று அறியாது திகைத்து "வானமேநோக்கும் மை யாக்கும்" என்றபடி அண்ணாந்து வானத்தைநோக்குமளவிலே, அங்குச் செல்லுகின்ற மேகங்கள் கட்புலனாக, அவற்றைப் பார்க்குமிடத்து அவை நிறம் முதலியவற்றால் எம்பெருமானுக்குப் போலியாய் விளங்கக் கண்டு இவை நமக்கும் நமதுதலைவர்க்கும் இனியனவாமென்று கொண்டு அவற்றை நோக்கி 'எனது நிலைமைகளை எனது தலைவரான திருவரங்கநாதன்பக்கல் சொல்லி அதற்கு அவர் அருளிச்செய்கின்ற திருத்துழாய்மாலையை வாங்கி மீண்டுவந்து எனக்குத் தருமாறு நீங்கள் தூதாகவேண்டும்' என வேண்டு கின்றாள். "சூட்டோதிமஞ் சென்று சொல்லாதென்காதலைத் தும்பியிசைப்

பாட்டோதி மங்கையரும்பணியார் பண்கென்மழைக்காக், கோட்டோதிம மெடுத்தார் சோலைமாமலைக்கோவலனர், மாட்டோதிமஞ்சினங்காளுரைப் பீர்மறுவாசகமே" என்பர் அழகர்அந்தாதியிலும். "இயம்புகின்ற காலத்து எகி னம் கிள்ளை, பயம்பெறு மேகம் பூவை பாங்கி—நயந்தகுயில், பேதை நெஞ் சம் தென்றல் பிரமரம் ஈரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" என்ற இரத்தினச்சுருக்கத்தால், தூதுக்கு உரியவை இன்னவையெனக் காண்க. பிரிந்ததலைவன் வந்திடுமென்று ஆறியிருக்கவொண்ணுதே அவன் வரவுக்கு விரைந்து ஆள்விடும்படியாயிற்று ஆற்றுமைமிகுதி. நீங்கள் அவ் வாறு தூதுசென்று தலைவரது திருத்துழாய்மாலையை வாங்கிவருமளவும் ஆறியிருப்பே னென்பது குறிப்பு. தன்னுலியன்றவளவும் வெளிப்புலப் படாது அடக்கினமை தோன்ற, 'மனத்துளவத்தைப்பட மென்மையல்' என்றுள்.

தோத்திரப்பிரபந்தங்களில் அகப்பொருட்கிளவித்துறைகளை இடை யிடையே கூறுதல் கவிசமயமாதலை இலக்கியங்கள் கொண்டு உணர்க. சிருங்காரரசப்பிரதானமான அகப்பொருட்கிளவித்துறைகளை ஞானநூலா கிய தோத்திரப்பிரபந்தங்களிற் கூறுதற்குக் காரணம், கடுத்தின்னுதானைக் கட்டிபூசிக் கடுத்தின்பிப்பார்போலச் சிற்றின்பங்கூறும் வகையாற் பேரின் பத்தைக் காட்டிநாட்டுதல் என்பர். இங்ஙனம் வெளிப்படைப்பொருளால் அந்யாபதேசமாகக் கூறுகின்ற சிற்றின்பத்துறைச் செய்யுள்கட்கெல்லாம் ஸ்வாபதேசமாகப் பேரின்பத்தின்பாற்படுத்தும் உள்ளுறைபொருள் உண் டென்பதையும் உணர்க. அன்றியும், இங்குக்கூறியது, உலகவாழ்க்கைச் சிற்றின்பமன்று; எம்பெருமானைச் சேரவேண்டுமென்று அவன்பக்கலிலே யுண்டாகின்ற அபேக்ஷையையே கூறியது. லோகநாயகனுடைய சேர்க் கையை அபேக்ஷிக்கின்ற பேரின்பக்காதலானது, வேதாந்தநிர்ணயத்தின் படி அன்புசெலுத்தவேண்டிய விடத்தில் அன்புசெலுத்தியதாதலால், சிற் றின்பக்காதல் போலன்றி, சகலபாப நிவ்ருத்திக்கும் வீடுபேற்றுக்குமே காரணமாம். கண்ணபிரான்பக்கல் கொண்ட காமத்தால் கோபஸ்திரீகள் முத்திபெற்றனரென்று புராணங்கூறுதலுங் காண்க.

ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமான் மறைந்த வளவிலே அவனது நிரந்தரானுபவத்தைப் பெற விரும்பிய ஐயங்கார், தமது நிலைமையை அப்பெருமான் சந்நிதியில் விண்ணப்பஞ்செய்து அவளளிக் குந்திருத்துழாய்மாலையைத் தம்மிடம்கொண்டுவந்து கொடுக்கும்படி குணஞ் செயல்களில் அவனோடொத்தவரான பாகவதர்களைப் பிரார்த்தித்தல், இத ற்கு உள்ளுறைபொருள். உரியகாலத்தில் எம்பெருமானது குணக்கட லிலே படிந்து அதில் நீர்மையை உட்கொண்டு ஸாரூப்யத்தால் அவன்திரு மேனியையொக்கும் வடிவுபெற்று உயிர்களை உய்வித்தற்காகப் பலவிடங்க ளிற் சஞ்சாரம்பண்ணி ஆங்காங்குக் கைம்மாறுகருதாதே கருணைமழை பொழிந்து நன்மைவிளைத்துப் பிறரைவாழ்வித்தலே பேருக ஒழுகி உலக மும் உறுதிப்பொருள்களும் நடத்தற்கு ஏதுவாய் இன்றியமையாமைபெற்று விஷ்ணுபதத்தைச்சார்ந்து தென்திருவரங்கத்திற் சென்றுசேர்தற்குப் பிர

யாணப்பட்ட பாகவதர்களை, உரியகாலத்திற் கடலிலேபடிந்து அதன்நீரை உட்கொண்டு மின்னலோடுகூடியநீலநிறத்தால் திருமகளை மார்பிற்கொண்ட திருமாலின் திருமேனியை ஒத்து உயிர்களை உய்விக்குமாறு பலவிடங்களில்திரிந்து கைம்மாறுகருதாது மழைபொழிந்து பயன்விளைத்து உலகத்தைவாழ்வித்தலே பேறாகஒழுகி வான்சிறப்பிற்கூறியபடி உலகமும் உறுதிப்பொருள்களும் நடத்தற்கு ஏதுவாய் இன்றியமையாததாகி, விஷ்ணுபதமெனப்படுகிற வானத்தைச் சார்ந்து திருவரங்கத்தைக்குறித்துச்செல்லும் மேகங்களனைத்தும்.

இவ்வாறே மற்றைஅகப்பொருட்கிளவித்துறைச் செய்யுள்கட்கும் ஏற்றபடி உள்ளுறை பொருள்களை உய்த்துணர்ந்துகொள்க. விரிப்பிற் பெருகும்.

அம்மான் - தலைவன். அவத்தை - அவஸ்தா, துளவம் - துளஸீ; வடசொற் சிதைவுகள். பின்னிரண்டடி - தீரிபணியாம்.

இது, முன்னர்க் கூறியது போன்ற நேரிசைவெண்பா. (கஉ)

போயவனியிற்சிலபுறச்சமயநாடும்
பேயறிவைவிட்டெழுபிறப்பையுமறுப்பீ
ராயனையனந்தனையனந்தசயனத்தெம்
மாயனையரங்கனைவணங்கிமருவீரே.

(இ - ள்.) ஆயனை - திருவாய்ப்பாடியில் இடையர்மனையில் வளர்ந்தவனும், அனந்தனை - அநந்தனென்னுந் திருநாமமுடையவனும், அனந்தசயனத்து - திருவனந்தாழ்வானாகிய திருவணையிற் பள்ளிகொண்டருளுகின்ற, எம் மாயனை-எமது மாயவனுமாகிய, அரங்கனை-ஸ்ரீரங்கநாதனை, வணங்கி மருவீர் - சேர்ந்து வணங்குங்கள்; (அங்ஙனம் வணங்குவீராயின்),— அவனியில் - உலகத்தில், போய்—, சில புறச்சமயம் - வேறு சிலமதங்களை, நாடும் - தேடித்திரிகின்ற, பேய் அறிவை - பேய்த்தன்மையான [கெட்ட] அறிவை,விட்டு—, எழு பிறப்பையும் - எழுவகைப்பிறவிகளையும், அறுப்பீர் - போக்குவீர்; (எ - று.)

இது, திருவரங்கநாதனைத் திருவடிதொழுதமாத்திரத்தில் சற்சமயம் இன்னதென்று உண்மையறியாது தடுமாறுகின்ற திரிபுணர்ச்சியொழிந்து வினைப்பயன் தொடரும் எழுவகைப்பிறப்புக்களும் அற்று முத்தி பெறுவீரென்று உலகத்தார்க்கு நல்லறிவு கூறியது.

புறச்சமயம் - தேவதாந்தரங்களை உண்மைத்தெய்வமாகநம்பின வேதத்துக்குப் புறம்பாகிய சமயங்கள். எழுபிறப்பாவன—“மக்கள் விலங்கு பறவை யூர்வன, நீருட் டிரிவன பருப்பதம் பாதவ, மெனவிவை யெழுபிறப் பாகுமென்ப.” ஆயன்-இடைச்சாதியில்வளர்ந்தவன். அநந்தன்-தேசம்காலம் பொருள் என்னும் மூவகையிலும் எல்லையில்லாதவன்; அதாவது - எல்லாத் தேசங்களிலும் எல்லாக்காலங்களிலும் எல்லாப்பொருள்களிலும் இருப்பவனென்பது கருத்து. மாயன் - மாயையையுடையவன்; மாயையாவது - கூடாததையுங் கூட்டுவிக்குந் திறம். சற்சமயமாகிய ஸ்ரீவைஷ்ணவசமயமன்றி மற்றைச்சமயங்களைப் பற்றிச் செல்லும் அறிவு உண்மையுணர்தற்கு இடமற்றதாதலின், அதனை, 'பேயறிவு' என்றார்.

இது, முதல்மூன்றுங் கூவிளங்காய்ச்சீர்களும், ஈற்றது தேமாச்சீருமாகிய கலிவிருத்தம். (கங)

மருவுதந்தையுங்குருவுமெந்தையு மருள்கெடுப்பதுமருள்கொடுப்பது
முருகுநெஞ்சமும்பெருகுதஞ்சமு முரியஞானமும்பெரியவானமுந்
திருவரங்கனாிருவரங்கனர் செங்கண்மாயனாரெங்களாயனா
ரருண்முகுந்தனர்திருவைகுந்தனா ரமலநாதனர்கமலபாதமே.

(இ - ள்.) மருவு-விரும்பிவளர்க்கின்ற, தந்தையும்—, குருவும் - ஆசிரியனும், எந்தையும்-எமதுதெய்வமும், மருள் கெடுப்பதும்- அஞ்ஞானத்தைக் கெடுக்குந்தன்மையுடையதும், அருள் கொடுப்பதும் - கருணையை அளிக்குந்தன்மையுடையதும், உருகு நெஞ்சமும் - (அன்பினற்) கரைந்து உருகுகின்ற மனமும், பெருகு தஞ்சமும் - சிறந்ததாகிய பற்றுக்கோடும், உரிய ஞானமும் - (பேரின்பமடைதற்கு) உரிய தத்துவஞானமும், பெரிய வானமும் - சிறந்த பரமபதமும், (எல்லாம்),—இருவர் அங்கனர் - பிரமருத்திரர்களைத் தமது அங்கத்தி லுடையவரும், செய் கண் மாயனர் - சிவந்த திருக்கண்களையுடைய மாயவரும், எங்கள் ஆயனர் - எங்களது ஆயனரும், அருள் முகுந்தனர் - அருளையுடைய முகுந்தனென்னுந் திருநாமமுடையவரும், திரு வைகுந்தனர் - ஸ்ரீவைகுண்டநாதரும், அமலம் நாதனர் - குற்றமற்ற தலைவருமாகிய, திரு அரங்கனர் -ஸ்ரீரங்கநாதரது, கமலம் பாதமே - தாமரைமலர்போலுந் திருவடிகளே; (எ - று.)

எம்பெருமானது திருவடிகளே தமக்கு எல்லாவகைச்சுற்றமுமா மென்று தமதுகருத்தை வெளியிட்டனர்; "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத்தாய்தந்தையு மவரேயினியாவாரே" என்றார் நம்மாழ்வாரும். மருவுதந்தை - கர்மங்கட்குத் தக்கபடி எடுக்கும் பிறவிகள் தோறும் உடம்பெடுத்தற்குக் காரணமான பிதா. எந்தை - பரமபிதா. குரு- அஞ்ஞானவிருளைப் போக்குபவன்; 'கு' - இருள். தஞ்சம் - கதியற்றவராற் சரணமாக அடையப்படுபொருள். ஆர்விகுதி, சிறப்புப்பொருளது. கேசவனென்னுந் திருநாமத்தின் பொருள்பற்றி, 'இருவரங்கனர்' என்றார்: "பிறைதங்குசடையானை வலத்தே வைத்துப் பிரமனைத் தன்னுந்தியிலே தோற்றுவித்து" என்றது காண்க.

இது, முதல் மூன்று ஐந்து ஏழாஞ்சீர்கள் மாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறு எட்டாஞ்சீர்கள் கூவிளச்சீர்களுமான எண்சீராசிரியவிருத்தம். (கச)

பாதியா யழுகியகால் கையரேனும்
பழிதொழிலு மிழிகுலமும் படைத்தா ரேனு
மாதியா யரவணையா யென்ப ராகி
லவரன்றே யாம்வணங்கு மடிக ளாவார்
சாதியா லொழுக்கத்தான் மிக்கோ ரேனுஞ்
சதுர்மறையால் வேள்வியாற் றக்கோ ரேனும்
போதினான் முகன்பணியப் பள்ளி கொள்வான்
பொன்னரங்கம் போற்றாதார் புலையர் தாமே.

(இ - ள்.) பாதியாய் - பாதியளவினதாய்க் குறைந்து, அழுகிய - அழுகிப்போன, கால் கையர் எனும் - கால்களையுங் கைகளையும் உடையவரே யாயினும், பழி தொழிலும் - பழிக்கப்படுகின்ற செய்கைகளையும், இழி குலமும் - இழிந்த குலத்தையும், படைத்தார் எனும் - உடையவர்களேயாயினும்,—ஆதியாய் -(எல்லாப்பொருளுக்கும்) முதன்மையானவனே! அரவணையாய் - சேஷசயனமுடையவனே! என்பர் ஆகில் - என்று (ஒருகால்சொல்லித்) துதிப்பாராயின், அவர் அன்றோ - அவர்களன்றே, யாம் வணங்கும் - யாமெல்லாம் வணங்குந்தன்மையையுடைய, அடிகள் ஆவார் - பெரியோராவர்; சாதியால் - குலத்தாலும், ஒழுக்கத்தால் - (அக்குலத்துக்கு உரிய) நல்லொழுக்கங்களாலும், மிக்கோர் எனும் - உயர்ந்தவரேயாயினும், சதுர் மறையால் - நான்குவேதங்களாலும், வேள்வியால் - யாகங்களாலும், தக்கோர் எனும் - சிறந்தவரேயாயினும்,—போதில் நான்முகன் - தாமரைமலரில் தோன்றிய பிரமன், பணிய - வணங்கும்படி, பள்ளிகொள்வான் - கண்வளர்ந்தருளுபவனது, பொன் அரங்கம் - திருவரங்கத்தை, போற்றாதார் - வணங்கித் துதியாதவர்கள், புலையர்தாமே - (கர்ம)சண்டாளரேயாவர்; (எ - று.)

எம்பெருமான்பக்கல் தொண்டுபூண்டொழுகுவதே மேன்மைக்குக் காரணம்; உயர்குலப்பிறப்பன்று: அவ்வாறு தொண்டு பூண்டொழுகாமல் நிற்பதே தாழ்ச்சிக்குக் காரணம்; இழிகுலப்பிறப்பன்று. ஆகையால், ஜந்மவ்ருத்தாதிகளைச் [பிறவியையும் ஒழுக்கத்தையும்] சிறிதும் பாராட்ட வேண்டா என்பதாம். "பழுதிலாவொழுகலாற்றுப் பலசதுப்பேதிமார்கள், இழிகுலத்தவர்களேலு மெம்மடியார்களாகில், தொழுமினீர் கொடுமின் கொண்மினென்று நின்னோடு மொக்க, வழிபடவருளினாய்போல் மதிள்திருவரங்கத்தானே," "அமரவோரங்கமாறும்வேதமோர்நான்கு மோதித், தமர்களிற்றலைவராய சாதியந்தணர்களேனும், நுமர்களைப்பழிப்பராகில் நொடிப்பதோரளவி லாங்கே, யவர்கள்தாம் புலையர்போலு மரங்கமாநகருளானே" என்பவை தொண்டரடிப்பொடியாழ்வார் பாசுரம். "இதுதனக்கு [பாகவதாபசாரத்துக்கு] அதிகாரிநியம மில்லை; 'தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேனும்' என்கையாலே. இவ்விடத்திலே வைநதேய வ்ருத்தாந்தத்தையும் பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தையையும் ஸ்மரிப்பது. ஜ்ஞாநாநுஷ்டாநங்களை யொழிந்தாலும் பேற்றுக்கு அவர்கள்பக்கல் ஸம்பந்தமே யமைகிறாப்போலே அவையுண்டானாலும் இழவுக்கு அவர்கள்பக்கல் அபசாரமே போரும்; இதில் ஜந்ம வ்ருத்தாதி நியம மில்லை. இந்த அர்த்தம் கைஶிக வ்ருத்தாந்தத்திலும் உபரிசரவஸு வ்ருத்தாந்தத்திலும் பரக்கக்காணலாம். ப்ராஹ்மண்யம் விலைச்செல்லுகிறது - வேதாத்யயநமுகத்தாலே பகவல்லாபஹேது வென்று; அதுதானே இழவுக்கு உறுப்பாகில் த்யாஜ்யமாமிறே. ஜந்மவ்ருத்தங்களினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் பேற்றுக்கும் இழவுக்கும் அப்ரயோஜகம்; ப்ரயோஜகம் பகவத்ஸம்பந்தமும், தஸம்பந்தமும்" என்ற ஸ்ரீவசநபூஷணவாக்யங்கள் இங்கு அறியத்தக்கன. அடிகளென்பது, அடியெ

ன்னும் அடியாப்பிறந்து உயர்வுப்பொருளுணர்த்தி நின்றதோர் சொல். ஆதியிற் பிரமனது திருவாராதனையிலிருந்ததனால், 'நான்முகன்பணியப் பள்ளி கொள்வான்' என்றார்; "அரங்கமென்பர் நான்முகத்தயன் பணிந்த கோயிலே" என்பர் திருமழிசைப்பிரானும்.

இது,முதல் இரண்டு ஐந்து ஆறாஞ்சீர்கள் காய்ச்சீர்களும்,மூன்று நான்கு ஏழு எட்டாஞ்சீர்கள் மாச்சீர்களுமாகிய எண்சீராசிரியவிருத்தம். (௩௫)

புலையாம்பிறவிபிறந்தென்செய்தோம்பொன்னிபொன்கொழிக்கு
மலையார்திருவரங்கத்தெம்பிரானமதன்னையொடுந்
தொலையாதகானங்கடந்தவந்நாட்டடந்தோறும்புல்லாய்ச்
சிலையாய்க்கிடந்திலமேநெஞ்சமேகழறீண்டுகைக்கே.

(இ - ள்.) நெஞ்சமே - மனமே!—புலை ஆம் - இழிகுணமுடையதாகிய, பிறவி-இப்பிறப்பில், பிறந்து - தோன்றி, என் செய்தோம் - யாது பயனடைந்தோம்? பொன்னி - காவேரிநதி, பொன் கொழிக்கும் - பொன்னை அலைத்துத் தள்ளுகின்ற, அலை-அலைகள், ஆர் - வந்துபுரளுகின்ற, திருஅரங்கத்து - ஸ்ரீரங்கத்திலெழுந்தருளியுள்ள, எம் பிரான் - நம்பெருமாள், (ஸ்ரீராமாவதாரகாலத்தில்), நமது அன்னையொடும் - நமது தாயாகிய சீதாபிராட்டியுடனே, தொலையாத- கடப்பதற்கரிய,கானம் - காட்டை, கடந்த அ நாள் - நடந்து கடந்த அப்பொழுது, தடம்தோறும் - அக்காட்டுவழிகளி லெல்லாம், கழல் தீண்டுகைக்கு - (அவரது) திருவடிகள் மேற்படும்படி, புல் ஆய் - புல்லாகியும், சிலை ஆய் - கல்லாகியும், கிடந்திலமே - கிடவாமற்போனேமே! (எ - று.)

என்றது, அப்பிரானது திருவடிதீண்டும் எப்பொருளாகவாவது நான் பிறந்திருந்தால் அத்திருவடிகளின் பரிசத்தால் பலபிறப்பெடுத்துத் தாபத்திரயத்தால் அலையாதபடி அப்பொழுதே முத்திப்பேறுவாய்த்திருக்குமென்பது குறிப்பு. கழல் தீண்டப்பெற்றார்க்கு மீண்டும் பிறவிநேராதென்ற துணிபுபற்றி, இவ்வாறு கூறுகின்றார். "செம்பவள வாயான் றிருவேங்கடமென்னு, மெம்பெருமான் பொன்மலைமே லேதேனு மாவேனே" என்றார் குலசேகரனாரும். நமது அன்னை - லோகமாதாவாகிய சீதாபிராட்டி.

இது நிரையசை முதலதான கட்டளைக்கலித்துறை. (௩௬)

தீண்டாவழும்புஞ்செந்நீருஞ்சீயுநரம்புஞ்செறிதசையும்
வேண்டாநாற்றமிகுமுடலைவீணேசுமந்துமெலிவேனை
நீண்டாய்தூண்டாவிளக்கொளியாய்நின்றாயொன்றாயடியாரை
யாண்டாய்காண்டாவனமெரித்தவரங்காவடியேற்கிரங்காயே.

(இ - ள்.) தீண்டா - தொடப்படாத [அருவருப்பைத் தருவதாய் அசுத்தமான], வழும்பும் - நிணமும், செந்நீரும் - இரத்தமும், சீயும்—, நரம்பும்—, செறி தசையும் - (இடையிடையே) நெருங்கிய சதையும், வேண்டா நாற்றம் - விரும்பப்படாத துர்க்கந்தமும், மிகும் - மிகுந்திருக்கின்ற, உட

லை - இக்கடைப்பட்ட உடலை, வீணே - பயனில்லாமல், சுமந்து - தரித்து, மெலிவேனோ - வருந்துவேனோ? நீண்டாய் - (திரிவிக்கிரமாவதாரத்தில்) உயர்ந்து வளர்ந்தவனே! தூண்டா விளக்கு ஒளியாய் - தூண்டுதல் வேண்டாமல் தானேயெரிகின்ற தீபத்தினது ஒளிபோன்றவனே! ஒன்றாய் நின்றாய் - ஒப்பற்றதொரு பரம்பொருளாய் [அத்விதீயமாய்] நின்றவனே! அடியாரை - தொண்டர்களை, ஆண்டாய் - அடிமைகொண்டவனே! காண்டாவனம் எரித்த - காண்டவவனத்தை எரிக்கச்செய்த, அரங்கா—!—அடியேற்கு - அடியேனுக்கு, இரங்காய் - திருவுள்ள மிரங்கியருளவேண்டும்.

மிகவும்இழிவாகிய பிறவியை ஒழித்து முத்தியளிக்கவேண்டுமென்று வேண்டியவாறு. முன்னிரண்டடி, உடலின் அருவருத்தற்குஉரிய தாழ்வை விளக்கும். இங்குக்கூறப்பட்ட வழும்பு முதலியவற்றாலாகியதே உடம்பாதலால், இவற்றுள் ஒன்றாயினும் சுத்தமுடைய பொருள் உண்டோ? என்பது கருத்து. ("குடருங் கொழுவுங் குருதியு மென்புந், தொடரு நரம்பொடு தோலும்—மிடையிடையே, வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்று, ளெத்திறத்தா ளீர்ங்கோதையாள்", "என்பினை நரம்பிற்பின்னி யுதிரந்தோய்த் திறைச்சிமெத்திப், புன்புறந்தோலைப்போர்த்து மயிர்புறம்பொலியவேய்ந்திட், டொன்பதுவாயிலாக்கி யூன்பயில்குரம்பைசெய்தான், மன்பெருந்தச்சனல்லன் மயங்கிர்மருளவென்றான்" என்பன, உடலின் இழிவைவிளக்குவன.)

நாற்றமென்பது இருவகைக்கும் பொதுவாதலால், தீநாற்றத்தை வேண்டாநாற்றமென்றார். 'தூண்டாவிளக்கொளியாய்' என்றது-நித்தியமாய் ஸ்வயம்பிரகாசமான ஞானத்தைக் குணமாகவும் ஸ்வரூபமாகவும் உடையவனே யென்றபடி; "நந்தா விளக்கே யளத்தற்கரியாய்" என்றார் திருமங்கையாழ்வாரும். கிருஷ்ணனும் அருச்சுனனும் பூம்பந்தேறிட்டு விளையாடச் செய்தே, அக்கினிபகவான் மிகப்பசித்துவந்து இந்திரனது காவற்காடாய் யாவர்க்கும் அழிக்கவொண்ணாதபடியா யிருக்கின்ற காண்டவவன மென்னும் பூந்தோப்பை எனக்குவிருந்திடவேண்டுமென்று வேண்ட, கிருஷ்ணார்ச்சுனர்கள் அங்கேபுக் கொதுங்கியிருக்கின்ற அசுரர்முதலியவர்களை அழித்தருளவேண்டுமென்னும்நோக்கத்தால் நீஅதனைப்புசியென்றுஇசைந்து அளித்தனராதலால், 'காண்டாவனமெரித்த வரங்கா' என்றார்; "காண்டா வனமென்பதொர் காடமரர்க் கரையன்னது கண்டவனிற்க முனே, மூண்டாரழலுண்ண முனிந்ததுவும்" என்றார் திருமங்கையாரும். காண்டாவென்று நீட்டலாய் வகரங் கடைக்குறைதலாய்க் கிடக்கிறது.

இது, மூன்றும் ஆறுங் காய்ச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாகிய அறுசீராசிரியவிருத்தம். (கஎ)

[தவம்.]

காயிலைதின்றுங்கானிலுறைந்துங்கதிதேடித்
தீயிடைநின்றும்பூவலம்வந்துந்திரிவீர்கா
டாயினுமன்பன்பூமகணன்பன்றடநாகப்
பாயன்முகுந்தன்கோயிலரங்கம்பணிவீரே.

(இ - ள்.) காய் இலை தின்றும் - பலங்களையும் சாகங்களையும் பக்ஷித்தும், கானில் உறைந்தும் - வனத்தில் வாசஞ்செய்தும், தீயிடை நின்றும் - பஞ்சாக்கிநிமத்தியிற் பொருந்தியும், பூ வலம் வந்தும் - பூமிப்பிரதக்ஷிணஞ் செய்தும், கதி தேடி - நற்கதியடைய விரும்பி, திரிவீர்காள் - தவஞ்செய்து திரிபவர்களே !—(இனி அவ்வாறு வருந்தித் தவஞ்செய்யவேண்டா); தாயினும் அன்பன் - (உயிர்களிடத்துப்) பெற்றதாயினும் அன்புடையவனும், பூ மகள் நண்பன் - திருமகளுக்கும் நிலமகளுக்குங் கணவனும், தட நாகம் பாயன் - பெரிய சர்ப்பசயனத்தை யுடையவனுமாகிய, முகுந்தன் - எம்பெருமானது, கோயில் அரங்கம் - திருவரங்கம் பெரியகோயிலை, பணிவீர் - வணங்குங்கள்; (எ - று.)

பகவத்ப்ராப்திக்கு விரோதியான சரீரசம்பந்தாதிகளை அறுத்துக்கழித்து எம்பெருமானைப் பெறவேண்டுமென்று விரும்பி, "தொன்னெறியை வேண்டுவோர் வீழ்கனியு மூழிலையு, மென்னு மிவையே நுகர்ந் துடலந் தாம் வருந்தித், துன்னு மிலைக்குரம்பைத் துஞ்சியும் வெஞ்சுடரோன், மன்னு மழனுகர்ந்தும் வண்டடத்தி னுட்கிடந்து, மின்னதோர் தன்மையராய்" என்கிறபடியே மனம் பொறிவழிபோகாது நிற்றற்பொருட்டு நீர்பருகியும், காற்றுநுகர்ந்தும், காய் கனி கிழங்கு சருகு வருக்கங்களை உண்டும் விரதங்களான் உண்டிசுருக்கலும், கோடைகாலத்தில் வெயில்நிலையிலும் பஞ்சாக்கிமத்தியிலும் நிற்றலும், மாரிக்காலத்தும் பனிக்காலத்தும் நீர்நிலையிற் பாசியேறநிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால்வருந்துன்பங்களைப்பொறுத்து, இவ்வாறு சரீரத்தையொறுத்து வருந்தவேண்டா; அடியார்கள்பக்கல் மிக்க அருளுடையவனாகிய எம்பெருமான் புருஷகார பூதைகளான பிராட்டிமாரோடு வந்து திருவனந்தாழ்வானிற் பள்ளிகொண்டருளுகின்ற திருவரங்கத்தைச் சென்று சேரவே, சகலவிரோதிகளும் போய் அவனைப்பெறலாம்: சடக்கென அத்தேசத்தைச்சென்றுசேருங்கோளென்று பரோபதேசம் பண்ணுகிறார்; "காயோடு நீடு கனியுண்டு வீசுகடுங்கா லுகர்ந்து நெடுங்கால மைந்து, தீயோடு நின்று தவஞ்செய்ய வேண்டா திருமார்பனைச் சிந்தையுள் வைத்து மென்பீர், * * * தில்லைத்திருச்சித்திரகூடஞ் சென்று சேர்மின்களே" என்றார் திருமங்கையாரும். பஞ்சாக்கினிகளாவன - தவஞ்செய்வோனைச்சுற்றி நாற்றிசையிலும் மூட்டப்பெற்ற அக்கினிகள் நான்கும், சூரியனாகிய அக்கினியொன்றும். பூமகள்-இரட்டுறமொழிதல்.

இது, முதலும் மூன்றுங் கூவிளச்சீர்களும், இரண்டும் நான்குந் தேமாச்சீர்களும், ஐந்து புளிமாங்காய்ச்சீருமாகிய கலிநிலைத்துறை. (௧௫)

வீரரங்காகியவைவரைமாற்றிவிடவரவின்
போரரங்காகநடித்தபொற்றாள்பற்றிப்பொன்னிநன்னீர்ச்
சீரரங்காநின்றொழும்பனென்றேசிந்தைசெய்யிலது
கூரரங்காணெஞ்சமேவஞ்சமாயக்கொடுவினைக்கே.

(இ - ள்.) வீரர் ஆகிய - வலிமையுள்ளவரான, ஐவரை - ஐம்பொறிகளை, மாற்றி - (தத்தமக்குரிய புலன்களின்மேற் செல்லாதபடி) அடக்கி,—போர்-

போர்செய்யுந்தன்மையையுடைய, விடம்அரவு - விஷத்தையுடைய(காளிய னென்னும்) நாகத்தை,இன் அரங்குஆக-இனியநடனசாலையாகக் கொண்டு, நடித்த-(அதன்படத்தின்மேலேறிக்) கூத்தாடியருளிய,பொன்தாள்-(நம்பெருமானது) அழகியதிருவடிகளை, பற்றி-(சரணமாக) அடைந்து,—'பொன்னி நல் நீர் - காவேரிநதியினது நல்ல நீரால் சூழப்பட்ட, சீர் அரங்கா - ஸ்ரீரங்கத்தி லெழுந்தருளியிருப்பவனே!—நின் தொழும்பன்-(யான்) உனது அடியேன்,' என்று—, சிந்தை செய்யில் - மனத்தில் நினைத்தால், அதுவே - அந்நினைப்புத்தானே,—நெஞ்சமே - மனமே! வஞ்சம் மாயம் கொடு வினைக்கு-மிக்க வஞ்சனையையுடைய கொடிய இருவினைகளை அறுப்பதற்கு, கூர் அரம் - கூரிய வாளாகும்; காண் - (இதனை நீ) அறிவாயாக; (எ - று.)

ஐம்பொறிகளை யடக்கி எம்பெருமானது திருவடிகளையே தஞ்சமாகப்பற்றித் தாஸோஹம் பாவனை செய்தால், எல்லாத்தீவினைகளும் தீர்ந்து முத்திபெறலா மென்பதாம். சித் அசித் ஈசுவரன் என்ற தத்வம் மூன்றில் சித் எனப்படுகிற ஜீவாத்மாவுக்கு ஈச்வரனெனப்படுகிற பரமாத்மா நியாமகனும் தாரகனுமாய்த் தலைவனாதலும், அப்பரமாத்மாவுக்கு ஜீவாத்மா நியாம்யமும் தார்யமுமாய் அடிமையாதலும் முதலிய மிக்கவேறுபாடுகளைச் சாஸ்திரஞானத்தினால் பகுத்தறிந்து, தன்னை எம்பெருமானுக்கு அடிமையென்று எண்ணி அந்தச் சருவேசுவரனுக்கு ஆட்பட்டவனுக்கே அப்பெருமான் அருள்புரிவனென்பது கருத்து. சர்வேச்வரனது திருவடிகளை வணங்காமல் தானே சருவேசுவரனென்று சொன்ன இரணியனை அப்பெருமான் நிக்கிரகித்ததும், சர்வேச்வரனுக்கு அடிமையென்று தன்னையெண்ணிய இரணியபுத்திரனான பிரகலாதனை அப்பெருமான் அநுக்கிரகித்ததும் பிரசித்தம். பஞ்சேந்திரியங்கள் வெல்லுதற்கரியன வென்பார் 'வீராகிய ஐவர்'என்றார். ஐவர் - தொகைக்குறிப்பு. மெய் வாய் கண் மூக்கு செவியென்னும் பஞ்சேந்திரியங்களை ஐவரென உயர்திணையாக்கூறியது, செறலினால் வந்த திணைவழுவமைதி. அங்கு - அசை. காவிரிநீர்க்கு நன்மையாவது - தன்னில் ஒருகால் மூழ்கியவரையும் அவர்வினையனைத்தையும் போக்கி ஸ்ரீவிரஜாநதியில் மூழ்குமாறு செய்விக்கும் ஆற்றலுடைமை. ஏ - தேற்றம். அரம் - வாள்விசேஷம். வஞ்ச மாயம் - ஒருபொருட்பன்மொழி.

எம்பெருமானைச் சரணமடைதலை அரமென்றதற்கேற்பக் கொடுவினைகளைச் செடியென்னாமையால், ஏகதேசவுருவகவணி. இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி காண்க.

இது, நேரசைமுதலதாகிய கட்டளைக்கலித்துறை. (கஉ)

கேசவனை யேசெவிகள் கேட்க திருவரங்கத்
தீசனையே சென்னி யிறைஞ்சிடுக—நேசமுடன்
கண்ணனையே காண்கவிரு கண்ணிணர்கொள் காயாம்பூ
வண்ணனையே வாழ்த்துகவென் வாய்.

(இ - ள்.) என் - எனது, செவிகள்- காதுகள், கேசவனையே—,கேட்க- கேட்பனவாக; சென்னி - முடி, திருவரங்கத்து ஈசனையே - ஸ்ரீரங்கநாத

னையே, இறைஞ்சிடுக - வணங்குவதாக; இரு கண் - இரண்டு கண்களும், நேசமுடன் - பக்தியுடனே, கண்ணனையே—, காண்க - காண்பனவாக; வாய்—, இணர் கொள் - கொத்தாக மலர்ந்த, காயாம்பூ வண்ணனையே - காயாமலர்போலுந் திருநிறமுடையவனையே, வாழ்த்துக - வாழ்த்துவதாக.

ஆத்மாக்களெல்லாம் இறகொடிந்தபட்சிபோல மூலப்பிரகிருதியிலே கிடந்து நோவுபடாநிற்கையில், அதனைக்கண்டு எம்பெருமான் தனது திருவுள்ளத்திற் கழிபேரிரக்கங்கொண்டு அவ்வுயிர்கள் தன்னையடைந்து உய்ய வேண்டுமென்று திருவுள்ளம்பற்றி, கை கால் முதலிய உறுப்புக்களை யமைத்துச் சேதநர்களைப்படைத்தனனாதலின் அவ்வாறு தோன்றியதன் பயனை இனியாவது பெறுவோமென்று 'கேசவனையே செவிகள்கேட்க' என்பது முதலியனவாக வேண்டிக்கொள்ளுகின்றன ரென்க. அருமையான மனிதப் பிறப்பை யெடுத்ததற்குப் பயன் பரதேவதையான எம்பெருமானை மனத்தினால் நினைத்தலும், வாக்கினால் துதித்தலும், கைகளாற் பூசித்தலும், கால்களாற் பிரதக்ஷிணஞ்செய்தலும், தலையினால் வணங்குதலும், கண்களால் தரிசித்தலும், செவிகளால் அவன்புகழ்கேட்டலும், மூக்கினால் அவனதுநிர்மாலியமான பத்திரபுஷ்பாதிகளின் திவ்வியகந்தத்தை மோந்துநுகர்தலுமே உரியனவென்க. "அம்பரமு மட்புலனு முண்டுமிழ்ந்த மாயோனுருவமல்லாற், கட்புலனும் வேற்றுருவங் காணற்க - புட்புறத்து, மூர்த்திபுகழே முகப்பதல்லான் மற்றொருவர், கீர்த்தி செவிமடுத்துக் கேளற்க - நீர்த்தரங்கப், பூவெடுத்த வெண்கோட்டுப் புண்ணியனை யல்லாதென், னாவெடுத்து வேறு நவிலற்க - கோவெடுத்த, கங்கை யுலவுங் கழலினுற் கல்லாதென், செங்கை தலைமிசை போய்ச் சேரற்க-பங்கயத்தா, டாக்குந் திருத்துழாய்த் தாமமண மல்லாதென், மூக்கும் பிறிதுமண மோவற்க - மாக்கடல்போ, லஞ்சனவண்ண னடிக்கமல மல்லாதென், நெஞ்சமு மொன்றை நினையற்க" என்னும்படியான மனத்துணிவுடையராதலின், இவ்வாறு கூறினர். "வாழ்த்துக வாய் காண்ககண் கேட்கசெவி மகுடந், தாழ்த்து வணங்குமின்கள் தண்மலராற் - சூழ்த்த, துழாய் மன்னுநீண்முடி என்தொல்லைமால் தன்னை, வழாவண்கைகூப்பி மதித்து," "வாயவனையல்லது வாழ்த்தாது கையுலகந், தாயவனையல்லது தான்தொழா - பேய்முலைநஞ், சூணாகவுண்டானுருவொடு பேரல்லாற், காணாகண் கேளாசெவி," "புள்ளூரும்பொன் மலையைக் காணாதார் கண்ணென்றுங் கண்ணல்ல கண்டாமே", "கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லான் மற்றுங் கேட்பரோ" என்பது முதலிய பெரியார்பாசுரங்கள் இங்குக் கருதத்தக்கன.

கேசவன் - பிரமனையும் உருத்திரனையுந் தனது அங்கத்திற் கொண்டவனென்றும், அழகிய மயிர்முடியை யுடையவனென்றும், கேசியென்னும் அசுரனைக் கொன்றவனென்றும் பொருள்படும். காயா - ஓர்மரம். காயாம்பூ- மரப்பெயர்முன் இனமென்மை தோன்றிற்று. வண்ணம் - வர்ணம்.

"பேசவரிற் றென்னரங்கன் பேரெல்லாம் பேசுகவாய், கேசவனைக் காண்கவிழி கேட்கசெவி - யீசனாருண்டியூர்தோற முழன்றிரவாமற் றவிர்த்தான், கண்டியூர் கூப்புக வென்கை" என்பதனோடு இதனை ஒப்பிடுக.

இது, இருவிகற்பத்தால் வந்து நாளென்னும் வாய்பாட்டான் முடிந்த நேரிசைவெண்பா. (உ0)

[தலைவனைப்பிரிந்த தலைவி கடலைநோக்கி இரங்கிக்கூறுதல்.]

வாயினிரங்கினையாரமெறிந்தனைவால்வளைசிந்தினைதண்
பாயலையுந்தினைமாலையடைந்தனைபாரிலுறங்கிலையாற்
கோயிலரங்கனைமாகனகந்திகழ்கோகனகம்பொலியு
மாயிழைநண்பனைநீயும்விரும்பினையாகுநெடுங்கடலே.

(இ - ள்.) நெடுங் கடலே - பெரிய சமுத்திரமே!—(நீ என்போலவே), வாயின் இரங்கினை - வாயினால் இரங்குகின்றாய்; ஆரம் எறிந்தனை - ஹாரத்தை எறிகின்றாய்; வால் வளை சிந்தினை - வெள்ளிய வளைகளைச் சிந்துகின்றாய்; தண் பாயலை உந்தினை—; மாலை அடைந்தனை—; பாரில் - பூமியில், உறங்கிலை-உறங்குகின்றாயில்லை;ஆல்-ஆகையால்,நீயும்—,மா-பெருமைபொருந்திய, கனகம் - பொன்மயமாகி, திகழ் - விளங்குகின்ற, கோகனகம் - செந்தாமரைமலரில், பொலியும் - வீற்றிருக்கின்ற, ஆயிழை - ஆராய்ந்தெடுத்தணிந்த ஆபரணங்களை யுடைய திருமகளது, நண்பனை - கணவனாகிய, கோயில் அரங்கனை—, விரும்பினைஆகும் - விரும்பினாயாகவேண்டும்;(எ-று.)

"போக்கெல்லாம்பாலை புணர்தல்நறுங்குறிஞ்சி, ஆக்கஞ்சேரூடலணி மருதம் - நோக்குங்கால், இல்லிருக்கைமுல்லை இரங்கல்நறுநெய்தல்,சொல்லிருக்குமைம்பாற்றுறைகை" என்றபடி இரங்கல் நெய்தல்நிலத்துக்குஉரியதாதலாலும், அந்நெய்தல்நிலந்தான் கடலும் கடல்சார்ந்தஇடமு மாதலாலும், அந்நிலத்திலே தலைமகனைப்பிரிந்து வருந்துகின்ற தலைமகள் தலைமகனைப் பிரிந்த தன்னிடத்துக் காணப்பட்ட வாயினிரங்குதல் வால்வளைசிந்துதல் முதலிய செயல்கள் கடலினிடத்தும் காணப்பட்டதனால், அருகிலுள்ள கடலை முன்னிலைப்படுத்தி இரங்கிக்கூறுகின்றன ளென்க. இத்துறை, "தன்னுட்கையாறெய்திடுகிளவி" எனப்படும்; அதாவது - தமக்குநேர்ந்த துன்பத்தைத் தம்ஆற்றாமையாற் பிறிதொன்றன்மே லிட்டுச் சொல்லுஞ்சொல். இங்ஙனஞ்சொல்லுதலின் பயன் - களவுப்புணர்ச்சியொழுக்கத்திலே நின்று சிறைப்புறத்தானாகிய தலைமகன் கேட்பின் விரைவில் வெளிப்படையாகவந்து இத்தலைமகளை மணம்புரிந்துகொள்வன்; தோழிகேட்பின் தலைவனுக்குச்சொல்லி விரைவில் மணம்புரிந்துகொள்ளச் செய்வள்; யாரும் கேளாராயின் தலைவி தானேசொல்லி ஆற்றினளாம்.

கடலுக்கு — வாயினிரங்குதல் - பேரொலிசெய்தலும், ஆரமெறிதல் - இரத்நாகரமாதலால் முத்துக்களை வீசுதலும், வால்வளை சிந்துதல் - வெள்ளிய சங்குகளைச் சிந்துதலும், தண்பாயலையுந்துதல் - குளிர்ந்துபாய்கின்ற அலைகளைத் தள்ளுதலும், மாலையடைதல் - பெருமைபெறுதலுங் கருநிறமுடைமையும் ஒழுங்காயிருத்தலும், உறக்கமின்மை - அல்லும் பகலும் அநவரதமும் ஓயாது அலைத்துக்கொண்டிருத்தலும் என்றும்; தலைமகளுக்கு—வாயி னிரங்குதல் - வாயினா லிரங்கிப் புலம்புவதும், ஆரமெறிதல் - முத்துமுதலியவற்றாலாகிய மாலைகளைக் கழற்றி யெறிவதும், வால்

வளை சிந்துதல் - கையிலணிந்த வெள்ளிய சங்குவளையல்களை உடம்புமெலிதலாற் சிந்திவிடுதலும், தண்பாயலை யுந்துதல் - மெத்தென்ற பாயைத் தள்ளிவிடுதலும், மாலையடைதல் - வேட்கைமிகுதியால் மயக்கமடைதலும், உறக்கமின்மை - வேதனைமிகுதியால் இரவுமுழுவதும் நித்திரைபெறாமையும் என்றும் பொருள்கொள்க. சிலேடையை அங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி. "காமுற்றகையறவோடெல்லேயிராப்பகல், நீமுற்றக்கண்டுயிலாய் நெஞ்சுருகியேங்குதியால், தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான்றாள்நயந்த, யாமுற்றதுற்றாயோவாழிகனைகடலே" என்றார் நம்மாழ்வாரும். இது, பிரிவுக்காலத்திற் கடலைநோக்கிப் பெண்பால் இரங்கியது; இங்ஙனமே ஆண்பால் இரங்குதலை, ("போவாய் வருவாய் புரண்டுவிழுந்திரங்கி, நாவாய்குழற நடுங்குறுவாய் - தீவாய், அரவகற்றுமென்போல வார்கலியே நீயும், இரவகற்றிவந்தாய்கொலின்று" என்ற புகழேந்திப்புலவர்வாக்கிற் காண்க.)

கோகனகம் - கோகநத மென்பதன் திரிபு; இதற்கு - சக்கரவாகப் பறவைகள் தன்னிடத்து ஒலிக்கப்பெறுவ தென்றும், கோகமென்னும் நதியினிடத்தே முதலில் தோன்றிய தென்றும் பொருள். ஆயிழை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இழை - நவரத்தினங்களும் இழைத்துச் செய்யப்படுவது. நீயுமென்ற எச்சவும்மையால், என்போலவென்பது பெறப்பட்டது. விரும்பினையாகு மென்றது - விரும்பினை போலு மென்றபடி.

இது, முதலைந்தும் கூவிளச்சீர்களும், ஈற்றுச்சீர் கூவிளங்காய்ச்சீருமாகிய அறுசீராசிரியவிருத்தம். (உக)

[பிரிவாற்றதுவருந்திய தலைமகள் இரங்கல்.]

கடல்வழிவிடநிசிசரர்பொடிபடவிருகண்சிறி
வடகயிலையினெழுவிடைதழுவியதுமறந்தாரோ
வடலரவமணியிலறிதுயிலமருமரங்கேச
ரிடர்கெடவருகிலர்முருகலர்துளவுமிரங்காரே.

(இ - ள்.) அடல் அர அமணியில் - வலிமைபொருந்திய சேஷசயனத்தில், அறி துயில் அமரும் - யோகநித்திரைகொண்டருளுகின்ற, அரங்கேசர்—, இடர் கெட -(எனது) விரகவேதனை தீரும்படி, வருகிலர்-வந்தணைந்தாரில்லை; (அங்ஙனம் அடையாமையேயன்றி),முருகு அலர் துளவும் - வாசனைவீசுகின்ற திருத்துழாய்மாலையையும், இரங்கார் - இரங்கித்தந்தாருமில்லை; (ஆகையால், முன்பு ஸ்ரீராமாவதாரத்திற் சீதைக்காக), கடல்—, வழி விட - (அஞ்சி) வழியை விடவும், நிசிசரர் - (இராவணன் முதலிய) அரக்கர்கள், பொடிபட - பொடியாகவும், இரு கண் சிறி - (தனது) இரண்டு கண்களுஞ் (சிவக்கும்படி) சீற்றங்கொண்டு, — (ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் நப்பின்னைக்காக), வட கயிலையின் - வடக்கின்கணுள்ள கைலாசமலைபோன்ற, எழு விடை - எழுவிருஷபங்களையும், தழுவியது- தழுவி நெரித்ததை, மறந்தாரோ - மறந்துவிட்டாரோ? (எ - று.)

இயற்கைப்புணர்ச்சி முதலிய வகைகளால் தலைவியைக் களவிற்கூடிநின்ற தலைவன் அங்குப்பழியெழுந்ததென்று தோழியால் விலக்கப்பட்ட

பின்னர் அப்பழியடங்கச் சிலநாள் ஒருவழிப்பிரிந்துறைதலுண்டு; அது, ஒருவழித்தணத்தலெனப்படும். அன்றி, களவுப்புணர்ச்சி பெற்ற தலைமகன் தோழியால் வரைவுகடாக்கப்பட்டுத் தலைமகளை வரைந்துகொள்ளுதற்கு வேண்டியபொருள் தேடுதற்பொருட்டும் பிரிவன்; அது, வரைபொருட்பிரிதலெனப்படும். அங்ஙனம் தலைமகன்பிரிந்த சமயங்களில், அப்பிரிவையாற்றாத தலைவி, நெஞ்சொடுகூறலாகத் தன்னிலேதான் இரங்குதலும், மனமொத்த தன்உயிர்த்தோழியோடு இரங்குதலுஞ் செய்வள். இங்ஙனம் இச்செய்யுட்குத் துறைப்போக்கு உணர்க. தலைவனைப்பிரிந்து தவிக்கின்ற நிலையிலே தலைவனது தாரும் பெறாது வருந்தி இரங்கி இங்ஙனங் கூறினளென்க. இதன் மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமைநீங்குதல். பிரிந்த நிலையிலே தலைவனதுமாலை கிடைக்கப் பெற்றால் அதுகொண்டேனும் ஒருவாறு ஆறியிருக்குங் கருத்தினளாதலின், அதனைக் கொடுத்தனுப்பாமைபற்றியுங் குறைகூறினள். தலைவனோடு சம்பந்தம்பெற்ற பொருள் யாதாயினும் இதற்குப் பரிகாரமாமென்பது, இதனாற்போந்த பொருள். அவனது பிரசாதமான திருத்துழாய் தான்கொண்ட நோய் தணித்தற்கு ஏற்ற பசுமருந்தாகிய சஞ்சீவிமூலிகை என்றவாறு.

எனது தலைவர் என்னை மறவாராயின், சநகர்மகளுக்கும் ஆயர்மகளுக்கும் இரங்கியதுபோலவே என்பக்கலிலும் இரங்கியருளுவரென்க. முன்பு சீதாபிராட்டியினிடத்து ஆராதஅன்பினால் அவள்பிரிவை ஆற்றமாட்டாது அவளைக்கூடுதற்பொருட்டுத் தன்னிலுந் தாழ்ந்தவனாகிய ஒருவனைத் தலையால்வணங்கிக் கடலையடைத்தலாகிய செயற்கருஞ் செயலைச் செய்தவரும், நப்பின்னைப்பிராட்டியை மணஞ்செய்துகொள்ளும் விருப்பினால் ஓர்இடையனது அடங்காத எழுஎருதுகளை வலியடக்கித் தழுவினவருமாகிய தலைவர் என்திறத்து இவ்வாறுஉபேட்சித்திருப்பது அவரதுநடுவுநிலைக்குப் பெரியதோரிழுக்காமென்பது, குறிப்பு. 'கடல்வழிவிட' என்றது-கடலில் மலைகளைக்கொண்டு சேதுபந்தஞ்செய்த அருமையையும், அதற்குக் கடல் இடங்கொடுக்கும்படி அதனைச்சினந்த பெருமையையுங் குறித்தற்கு. இருகண்சிறி-இருகாற்சீற்றங்கொண்டெனவுமாம். 'அடலரவமளியிலறிதுயிலமரு மரங்கேசர்' என்றது - "பாம்பணையார்க்குந் தம்பாம்புபோல், நாவுமிரண்டுளவாய்த்து நாணிலியேனுக்கே" என்றதன் கருத்தை உட்கொண்டது. முருகலர்தல் - தேனொழுகுதலுமாம். துளவு - அதனாலாகிய மாலைக்குக் கருவியாகுபெயர். கயிலை, விடை - வடமொழிச்சிதைவுகள். கயிலை - வெண்மை பெருமை வலிமைகளால் விடைக்கு உவமை. ஓகாரம் - இரக்கம்.

இது, முதல்நான்குங் கருவிளச்சீர்களும், ஈற்றது தேமாங்காய்ச்சீருமாகிய கலிநிலைவண்ணத்துறை. 'தனதன தனதன தனதன தனதன தந்தான' என்பது, இதன்வாய்பாடு. (உஉ)

இரங்கத் தனித்தனியே யெய்துகின்ற துன்பத்
தரங்கத்தை யேதாற் றடுப்பீ—ரரங்கர்க்குக்
கஞ்சசங் திருப்பாதங் கார்மேனி யென்றவர்பா
னெஞ்சங் திருப்பாத நீர்.

(இ - ள்.) அரங்கர்க்கு—, திரு பாதம் - திருவடிகள், கஞ்சம்- தாமரை மலர்போலும்; மேனி - திருமேனி, கார் - காளமேகம்போலும், என்று—; அவர்பால் - அவ்வெம்பெருமான்பக்கல், நெஞ்சம் - மனத்தை, திருப்பாத- (தீநெறிக்கட் செல்லவொண்ணாது) திருப்பிச் செலுத்தாத, நீர் - நீங்கள், (இந்த ஸம்ஸாரஸாகரத்தில்), இரங்க - தளர்ந்து வருந்தும்படி, தனி தனியே எய்துகின்ற - ஒன்றன்மேலொன்றாக ஓயாமல் ஓடிவந்தடைகின்ற, துன்பம் தரங்கத்தை - துன்பங்களாகிய அலைகளை, எதால் - வேறு எதனை (ப்புணையாக)க் கொண்டு, தடுப்பீர்-தடைசெய்து [கடந்து] உய்வீர்; (எ-று.)

உங்கட்கு உய்ய வேறொரு விரகில்லையே யென்று இரங்கியவாறு. கண்டவர் மனத்தைக் கவரும் பேரழகும் நம்பிச்சரணமடைந்தார்க்குப் பெரும்பயனளித்தலு முடைய எம்பெருமானைக் கதியென்று பற்றாதார்க்கு இடையறாதுவந்துவருத்துகின்ற கடல்போன்ற சமுசாரகிலேசங்கள் ஒழிய மாட்டா என்பதாம். எம்பெருமான் திருவடிகளே பிறவிப்பெருங்கடலுக்குப் புணையாகுமென்பது கருத்து.

காரண காரியத் தொடர்ச்சியாய் ஒழிவின்றிவருதலால், துன்பத்தரங்க மென்றார். கஞ்சம் - நீரில் முளைப்பது. கஞ்சம், கார் என்பன - பெயர்ப்பய னிலைகள். பால் - ஏழனுருபு. திருப்பாத வென்பது, திருப்புதலின் அருமை குறித்து நின்றது. உலகியல்பை நினையாது இறைவனடியையே நினைப்பார்க்குப் பிறவியறுதலும், இவ்வாறன்றி மாறநினைப்பார்க்கு அஃது அருமையு மாகிய இரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன. "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா, ரிறைவ னடிசேரா தார்" என்றார் திருவள்ளுவரும்.

இது, இரண்டாங்கவிபோன்ற இருவிகற்பநேரிசைவெண்பா. (௨௩)

[இரங்கல்.]

நீரிருக்கமடமங்கைமீர்கிளிகடாமிருக்கமதுகரமெலா
நிறைந்திருக்கமடவன்னமுன்னநிரையாயிருக்கவுரையாமல்யா
னாரிருக்கிலுமென்னெஞ்சமல்லதொருவஞ்சமற்றதுணையில்லையென்
றாதரத்தினொடுதூதுவிட்டபிழையாரிடத்துரைசெய்தாறுவேன்
சீரிருக்குமறைமுடிவுதேடரியதிருவரங்கரைவணங்கியே
திருத்துழாய்தரில்விரும்பியேகொடுதிரும்பியேவருதலின்றியே
வாரிருக்குமுலைமலர்மடந்தையுறைமார்பிலேபெரியதோளிலே
மயங்கியின்புறமுயங்கியென்னையுமறந்துதன்னையுமறந்ததே.

(இ-ள்.) மட மங்கைமீர்-பேதைமைக்குணத்தையுடைய தோழிகளே!— முன்னம் - எதிரில், நீர் இருக்க - நீங்களெல்லாரும் இருக்கவும், கிளிகள் இருக்க - கிளிகளெல்லாம் இருக்கவும், மதுகரம் எலாம் நிறைந்துஇருக்க- வண்டுகளெல்லாம் நிறைந்திருக்கவும், மட அன்னம் - அழகிய அன்னங்களெல்லாம், நிரை ஆய் இருக்க - திரளாக இருக்கவும், உரையாமல் - (இவர்களொருவரையும் நம்பித் தூதாகச்) சொல்லியனுப்பாமல், யான்—, ஆர் இருக்கிலும் - வேறே யார் இருந்தாலும், என் நெஞ்சம் அல்லது -

எனது மனத்தையன்றிக்கே, ஒரு வஞ்சம் அற்ற துணை - வஞ்சனையில்லாத தொரு (வேறு) துணை, இல்லை என்று - இல்லையென்றெண்ணி, ஆதரத்தி னொடு - அன்போடு, தூது விட்ட-(அம்மனத்தைத் திருவரங்கநாதர்பக்கல்) தூதாக அனுப்பியதனு லுண்டான, பிழை - தவற்றை, யாரிடத்து—, உரை செய்து - சொல்லி, ஆறுவேன் - மனந்தணிவேன்; (அம்மனம் என்செய்த தென்னில்),—சீர் இருக்கும் - சிறப்புப்பொருந்திய, மறை முடிவு - வேதா ந்தங்களும், தேடு அரிய - தேடிக்கண்டறிய வொண்ணாத, திருவரங்கரை—, வணங்கி - (கண்டு) வணங்கி, (என் குறையைச் சொல்லி), விரும்பி - (அவர்) திருவுள்ளமுவந்து, திருத்துழாய் தரில் - திருத்துழாய்மாலையைத் தந்தருளி னால், கொடு - (அதனை) வாங்கிக்கொண்டு, திரும்பி வருதல் இன்றியே - திரும்பிவருத லில்லாமலே, வார் இருக்கும் - கச்சுப்பொருந்திய, முலை - தனங்களையுடைய, மலர் மடந்தை - தாமரைமலரில்வாழும் பெரியபிராட்டி யார், உறை - வீற்றிருக்கின்ற, மார்பிலே - திருமார்பிலும், பெரிய தோளி லே - பெரிய திருத்தோள்களிலும், மயங்கி -(வேட்கைமிகுதியால்) மயக்கங் கொண்டு, இன்புற - இன்பமுண்டாக, முயங்கி - தழுவிக்கொண்டு, என் னையும் மறந்து—, தன்னையும் மறந்தது - (தூதாகப்போன) தன்னையும் மற ந்துவிட்டது; (எ - று.)

இது, நெஞ்சத்தைத் தூதுவிடுத்த தலைமகள், அது மீண்டுவாராததாகத் தோழிமாரை நோக்கி இரங்கிக் கூறியது.

சுகதுக்கங்களில் எனக்குத் துணையாயிருந்து உதவுகின்ற பாங்கியர்க ளாகிய உங்களைத் தூதனுப்பலாமென்று பார்த்தாலோ நீங்கள் என்னோ டொத்த பருவமுடைய இளமகளிராதலால், அத்தலைவரழகில் ஈடுபட்டு ஆழ்ந்திடுவீரேயன்றி என்காதலை அவரிடம் சொல்லி மறுமொழிகொண்டு மீண்டுவருவீரல்லீர். கிளியைத் தூதனுப்பலாமென்றாலோ அதனை மன்மத னது குதிரையாகக் கூறுவராதலின், அதுவும் எனக்கு இணங்கிவாராது; மேலும், அது சொல்லியதேசொல்லும் இயல்புடைய தன்றோ? வண்டோ வெனின் மன்மதனது வில்லின் நாணாதலால், அதுவும் என்திறத்து அன் புடையதாகாது. அன்னப்பறவை சிரமம்பொறுததும் மந்தகதியுடையதும் இனியவிடத்து வீற்றிருந்து கிடைத்தஇரையை யுண்டு பிரிவுத்துயரறியாது தானுந் தன்துணையும் கூடி வாழ்ந்து களித்திருப்பதும் தன்நலம்பேணு வதும் நட்புப்பிரிக்குங் குணமுடையது மாதலால், அது அந்தப்போகத்தை விட்டு எனக்காக அவ்வளவுதூரம் வருந்திச் சென்று விரைவில் என்நிலை மையைத் தலைவர்க்குச் சொல்லி நேரில்மீண்டுவந்து அவர்சொல்லை எனக் குச் சொல்லமாட்டாது. ஆதலின், அப்பொருள்களுள் எதனிடத்தும் நம் க்கைகொள்ளாமல் "நெஞ்சையொளித்தொரு வஞ்சக மில்லை" என்றபடி எனதுநெஞ்சினிடத்து நம்பிக்கைகொண்டு அதனைத் தலைவர்பால் தூதனு ப்பி அது மீண்டுவராமையால், இதனை யாரிடத்துக் கூறியாறுவே னென்று இரங்கின ளென்க. "குருத்தத்தை மாரன்குரகதமாமென்றே, வருத்தத் தை யங்குரைக்கமாட்டேன்—கருத்துற்ற, மாதண்டலைவாய் மதுகரத்துக் கும் மவன்றன், கோதண்டநாணென்று கூறேன்நான்—பொற்கால், வெறி ப்பதுமவீட்டன்னம் வெண்பாலுநீரும், பிறிப்பதுபோல் நட்புப்பிறிக்கும்—;

குறிப்பறிந்து காதலா லுள்ளக்கவலை யதுகேட்க,வோதலாகாதென்று உரையாடே—ஞதலா, லுள்ளே புழுங்குவ தன்றி யொருவருக்கும் விள்ளேன்" என்னுந் திருநறையூர்நம்பிமேகவிடுதூதும் ஒப்பு நோக்கத்தக்கது.

மடமை - அறிந்தும் அறியாதுபோலிருக்குந் தன்மை; இது - நாணம், அச்சம், பயிர்ப்பு முதலிய பெண்குணங்கள் பலவற்றிற்கும் உபலக்ஷணம். இனி, இளமையும், அழகுமாம். 'எலாம்' என்பதைப் பிறவிடத்துங் கூட்டுக. மறைமுடிவு - உபநிஷத்துக்கள். விரும்பியே கொடு - மகிழ்ந்து பெற்றுக் கொண் டென்றுமாம். கொடு - கொண்டு என்பதன் விகாரம். தன்னையும் மறந்து - பரவசமாயிற் றென்றபடி. எனக்குநேரும் இன்பதுன்பங்களை என்னோடு ஒக்கஉண்டு என்னுள்ளே உறைந்து என்னினும் வேறுகாததான என்நெஞ்சமே எனக்குத் துணையாகப்பெறாத யான் வேறு யாரை வெறுப்பே னென்பது குறிப்பு.

இது, முதல் மூன்று ஐந்தாஞ்சீர்கள் மாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறாஞ்சீர்கள் கூவிளங்காய்ச்சீர்களும், ஏழாஞ்சீர் விளச்சீருமாய் வந்தது அரையடியாகவும், அஃது இரட்டிகொண்டது ஓரடியாகவும் வந்த பதினான்கு சீராசிரியவிருத்தம். (உச)

[வண்டு.]

மறக்குமோ காவின் மதுவருந்தி யப்பாற்
பறக்குமோ சன்னிதிமுன் பாமோ—சிறக்கத்
தருவரங்கள் கேட்குமோ தாழ்க்குமோ நெஞ்சே
திருவரங்கர் பாற்போன தேன்.

(இ - ள்.) நெஞ்சே—! திருவரங்கர்பால்-ஸ்ரீரங்கநாதரிடத்து, போன-தூதுசென்ற, தேன்-வண்டு,—காவில்-(இடையிலுள்ள)சோலைகளில் (தங்கி), மது அருந்தி - (அங்குள்ள) தேனைப் பருகி, மறக்குமோ - (என்னை) மறந்து விடுமோ? (அன்றிக்கே), அப்பால் பறக்குமோ - (அச்சோலைகளுக்கு) அப்புறத்தே பறந்து செல்லுமோ? சன்னிதி முன்பு ஆமோ-(அங்ஙனஞ்சென்று) கோயிலின்முன்னே சேருமோ? (சேர்ந்து), சிறக்க - (எனக்குச்)சிறப்புண்டாக, தரு - (அவர்) அருளுகின்ற, வரங்கள் - வரங்களை, கேட்குமோ—? (அன்றிக்கே), தாழ்க்குமோ - தாமதித்து நிற்குமோ?(அறியேன்!) (எ - று.)

இது, தலைமகன்பக்கல் வண்டைத் தூதுவிடுத்த தலைமகள், அது திரும்பி வாராமையால் அதன்நிலைமையை ஐயுற்றுத் தன்நெஞ்சோடு கூறியது. "வாயான் மலர்கோதி வாவிதொறு மேயுமோ, மேயாம லப்பால் விரையுமோ - மாயன், திருமோகூர் வாயின்று சேருமோ நாளை, வருமோ கூர்வா யன்னம் வாழ்ந்து" என்பதோடு ஒப்பிடுக. மதுவருந்துதல் உடனே மறந்து விடுதற்கு ஏதுவாதலால், அதனை முற்கூறினர். ஓகாரங்கள் - ஐயப்பொருளன. வரம் - வேண்டுவனகோடல். தேன் - வண்டின் சாதிபேதங்களில் ஒன்று; இது, நல்லமணத்தே செல்லும்.

இது, முன்பு கூறியதுபோன்ற நேரிசைவெண்பா. (உரு)

[அம்மானை.]

தேனமருஞ் சோலைத் திருவரங்க ரெப்பொருளு
மானவர்தா மாண்பெண் ணலியலர்கா ணம்மானை
யானவர்தா மாண்பெண் ணலியலரே யாமாகிற்
சானகியைக் கொள்வரோ தாரமா யம்மானை
தாரமாய்க் கொண்டதுமோர் சாபத்தா லம்மானை.

(இ - ள்.) தேன் அமரும் சோலை - வண்டுகள் விரும்பி நெருங்குகின்ற சோலைகளையுடைய, திருவரங்கர்—, எ பொருளும் ஆனவர்தாம் - எல்லாப்பொருள்களுமானவரே; (ஆயினும்), ஆண் பெண் அலி அலர் காண் - ஆணும் பெண்ணும் அலியும் அல்லாதவரே; அம்மானை—; ஆனவர்தாம் - (அங்ஙனம்) எல்லாப்பொருள்களுமாகிய அவர், ஆண் பெண் அலி அலரே ஆம் ஆகில் - ஆணும் பெண்ணும் அலியு மல்லாதவரே யாவ ரானல், சானகியை - சீதையை, தாரம் ஆ கொள்வரோ - மனைவியாகக் கொள்வாரோ? அம்மானை—; தாரம் ஆ கொண்டதும் - (அங்ஙனம்) மனைவியாகக் கொண்டதும், ஓர் சாபத்தால் - ஒரு சாபத்தினல்; அம்மானை—; (எ - று.)

மூன்றுமங்கையர் அம்மானையாடும்போது பிரபந்தத்தலைவனது தன்மையை வார்த்தையாடுவது, அம்மானையென்னும் உறுப்பின் இலக்கணம்.

தேன் - இங்கே வண்டின் பொதுப்பெயர். இனி, தேனமர்தல் - மதுப் பெருகுதலுமாம். தாம், காண் - தேற்றம். முதலடி - "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்றபடி எம்பெருமான் ஸர்வவ்யாபி யென்பதை விளக்கும். ஆண் பெண்ணலியலரென்றதுக்குக் கருத்து - எம்பெருமானேடு ஒவ்வாமைக்குப் பெண் அலிகளோடு ஆண்களோடு வாசியில்லை யென்பது; புருஷோத்தமனென்றபடி: உலகத்திற்காணப்படுகின்ற ஆணும் பெண்ணு மலியு மல்லாத ஒருபொருள் சூனியமன்றோவென்னில்:—ஆண்பெண்ணலியல தென்னுமல் 'அலர்' என அன்மையைத் துணிந்தபொருளின்மேலேற்றிச் சிறப்புப்பற்றி வந்த உயர்திணைப்பன்மையீற்றாற் கூறியதுதானே உலகத்திற்காணப்படுகின்ற ஆணின்தன்மையரு மல்லர், பெண்ணின்தன்மையருமல்லர், அலியின் தன்மையரு மல்லர்; ஸ்த்ரீபுந்நபும்ஸகாதிஸர்வவஸ்துவிலக்ஷணர் புருஷோத்தமரென்று நன்கு காட்டாநின்றதென்க. "ஆணல்லன் பெண்ணல்ல னல்லாவலியு மல்லன்" என்ற ஆழ்வார்பாசுரசம்பந்தமாகப் பட்டர் திருவாய் மலர்ந்தருளிய உபந்யாசம் இங்குக்கருதத்தக்கது. "சாபமே சபித்தல் வில்லாம்" என்பது நிகண்டாதலின், சாபமென்பதற்கு - சபிப்பென்றும் வில்லென்றும் பொருள்கொண்டு, பிருகுமுனிவரதுசாபத்தாலென்றும், சிவபிரானதுவில்லை முறித்ததனு லென்றுங் கருத்துக்கொள்க.

இச்செய்யுளில் 'ஆண்பெண்ணலியலர்' முதலாக எடுத்துக்கூறிய சொற்றொடர்களின் சாதுரியத்தையும் ஆழ்ந்தபொருள் நுணுக்கத்தையும் சிலேடைப்பொருளின் நயத்தையுங் கருதாது ஆசிரியர்மீது அழுக்காற்றினுற் குற்றங்கூறுவது சிறிது பொருத்தமில்லாததொழியு மென்க.

இது, நான்கு அடிகளால் தனித்து வந்து ஈற்றடி எண்சீராய் மிக்கு ஏனையடிகள் அளவடிகளாய் நின்ற கலித்தாழிசை. (உகூ)

[பிரிவாற்றாத தலைவியைக் கண்ட நற்றாய் இரங்கல்.]

மானையெய்தவரின்னமென்மட மானையெய்திலர்நேமியான்
மாலைதந்தவர்பைந்துழாய்மது மாலைதந்திலரிந்திரன்
சோனைமாரிவிலக்கிவிட்டவர் சொரிகண்மாரிவிலக்கிலார்
சுரர்களுக்கமுதங்கொடுத்தவர் சோதிவாயமுதங்கொடார்
தானையைவர்கொடிக்களித்தவர் தானைகொண்டதளிக்கிலார்
சங்கரற்கிரவைத்தடுத்தவர் தையலுக்கிரவைத்தடா
ரானைமுன்வருமன்புளார்முலை யானைமுன்வருமன்பிலா
ரணியரங்கர்நடத்துநீதி யநீதியாகவிருந்ததே.

(இ - ள்.) (முன்பு சீதைக்காக), மானை - (மாயையால் வந்த மாரீசனாகிய) மானை, எய்தவர் - (அம்பினால்) எய்தவர், இன்னம் - இன்னமும், என் மட மானை - எனது இளைய மான்போன்ற பார்வையையுடைய மகளை, எய்திலர் - அடைந்தாரில்லை; (முன்பு பாரதயுத்தத்தில்), நேமியால் - சக்கரத்தால், (சூரியனை மறைத்து), மாலை தந்தவர் - அந்திப்பொழுதைச் செய்தவர், (என் மகளுக்கு), பைந் துழாய் மது மாலை - தேனினையுடைய பசிய திருத்துழாய்மாலையை, தந்திலர் - தந்தாரில்லை; (முன்பு கோவர்த்தனத்தைக் குடையாகப் பிடித்து), இந்திரன் சோனை மாரி - இந்திரனால் விடாது பெய்விக்கப்பட்ட பெருமழையை, விலக்கிவிட்டவர் - தடுத்தருளியவர், சொரி கண் மாரி - (என் மகள்) கண்களினின்றும் பெய்கின்ற கண்ணீர்மழையை, விலக்கிலார்-தடுத்தாரில்லை; (முன்பு பாற்கடல்கடைந்து), சுரர்களுக்கு-தேவர்களுக்கு, அமுதம்- அமிருதத்தை, கொடுத்தவர்—, (என் மகளுக்கு), சோதி வாய் அமுதம் - ஒளிபொருந்திய (தமது) திருவாய்மலரிடத்துள்ளதாகிய அதராமிருதத்தை, கொடார் - கொடுத்தாரில்லை; ஐவர் கொடிக்கு - (துரியோதனன் தம்பியால் துகிலுரியப்பட்ட) பாண்டவர்மனைவியாகிய திரௌபதிக்கு, தானை அளித்தவர் - துகிலை (மேன்மேல் மாளாது வளரும்படி) அருளியவர், (என்மகளுக்கு), தானை கொண்டது - தாங்கொண்ட துகிலை, அளிக்கிலார்-கொடுத்தருளினாரில்லை; சங்கரற்கு-உருத்திரனுக்கு, இரவை- பிச்சையெடுத்தலை, தடுத்தவர் - போக்கியருளியவர், தையலுக்கு-(என்) மகளுக்கு, இரவை - (நெடிதூழிகாலமாய்த் தோன்றிவளர்கின்ற) இராப்பொழுதை, தடார் - (அங்ஙனம் வளரவொட்டாது) தடுத்தாரில்லை; ஆனை முன் வரும்- கஜேந்திராழ்வானுக்கு எதிரில் வந்து பாதுகாத்தருளிய,அன்பு உளார்-அன்புடையவர், முலை யானை முன் வரும்- (என்மகளது)தனங்களாகிய யானைகளுக்குமுன்னே வந்து தோன்றுகின்ற, அன்பு இலார் - அன்பில்லாதவராயிருந்தார்; (ஆகையால்), அணி அரங்கர்-அழகிய ரங்கநாதர், நடத்தும் நீதி- நடத்துகின்ற முறைமையெல்லாம், அநீதி ஆக - முறைமையல்லாததாக, இருந்தது—; (எ - று.)

இது, தலைமகனோடு புணர்ந்து பிரிந்த தலைமகள் பிரிவாற்றாமையாற் படுகிற பலவகைத்துன்பங்களையுங் கண்டு ஆற்றாளான நற்றாய் தன் ஆற்றாமைமிகுதியால் இரங்கிக் கூறியது.

விரகவேதனையால் துகில்நெகிழ்ந்துபோகின்றமை பற்றி, தானைகொண்டதென்றார். தகையல்-அழகு; அஃதுடையாளுக்கு ஆகுபெயர். கொங்கைகளுக்கு யானையின்கோடுகளையும் மஸ்தகங்களையும் உவமையாகக்கூறுவது மரபாதலால், முலையானை யென்றார். இனி, 'தானைகொண்ட தளிக்கிலார்' என்பதில் தானையென்பதனைத் தான் ஐ எனப்பிரித்துத் தான் விரகவேதனையையுண்டாக்கிக் கவர்ந்துகொண்ட அழகை மீட்டும் வந்து புணர்ந்து அளிக்கில ரென்றும், 'ஆனைமுன்வரு மன்புளார்' என்னுமிடத்தில் மன்புள்ளார் எனப் பிரித்துக் கஜேந்திராழ்வான்முன்னே விரைந்துவருகின்ற பெரிய கருடனை யுடையவ ரென்றும், 'முலையானைமுன்' என்பதை முலையால் நைமுன் எனப்பிரித்துத் தனங்களால் வருந்துமுன்னே யென்றும் பொருள் கொள்ளலாம்.

இச்செய்யுளில் எய்தவர் எய்திலார் முதலாகக் கூறப்பட்டவை எதிர்மறையும் உடன்பாடுமாய்ச் சிலசொற்றொடர்கள் சொல்லாலும் சிலசொற்றொடர்கள் சொல்லாலும் பொருளாலும் மறுதலைப்படத் தொடுக்கப்பட்டதனால், முரண்தொடை; "சொல்லினும் பொருளினும் முரணுதல் முரணே" என்றது காண்க. அழகரந்தாதி - அ௩, திருவேங்கடத்தந்தாதி - அ௩ - ஆம் செய்யுள்களும் நோக்கத்தக்கன.

"மாத்துளவத், தாரானை வேட்கையெல்லாந் தந்தானை மும்மதமும், வாரானை யன்றழைக்க வந்தானைக்— காரான, மெய்யானை யன்பருக்கு மெய்த்தானைக் கண்கைகால், செய்யானை வேலையணைசெய்தானை—வையமெலாம், பெற்றானைக் காணப்பெறாதானைக் கன்மழைக்குக், கற்றானைக் காத்தவொரு கல்லானை—யற்றார்க்கு, வாய்ந்தானைச் செம்பவள வாயானை மாமுடியப், பாய்ந்தானை யாடரவப் பாயானை" என்னும் திருநறையூர்நம்பி மேகவிடுதூதும் ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது. அடிதோறும் வந்தசொற்களே மீண்டும் வந்ததனால், மடக்கு.

இது, முதல் மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறு ஏழாஞ் சீர்கள் கூவிளச்சீர்களுமாய் வந்தது அரையடியாகவும், அஃது இரட்டிகொண்டது ஓரடியாகவும் வந்த பதினான்குசீராசிரியவிருத்தம். (உஎ)

இருளினும்வெளியினுமருளினுந்தெருளினு
 மின்பமேயடையினுந்துன்பமேமிடையினு
மொருவர்முன்புகழினுமிருவர்பின்பிகழினு
 முனிறந்தழியினும்யான்மறந்தொழிவனோ
சுருதிநின்றேலிடுங்கரதலந்நாலொடுந்
 துவளுநூன்மார்பமும்பவளவாய்மூரலுந்
திருவரங்கேசர்தஞ்சுருள்கருங்கேசமுஞ்
 செய்யநீண்முடியுமத்துய்யசேவடியுமே.

(இ - ள்.) இருளினும் - இருட்பொழுதிலும், வெளியினும் - பகற்பொழுதிலும், மருளினும் - (மாயைவசத்தால்) மயங்குங்காலத்தும், தெருளினும் - (அங்ஙனம் மயங்காது) தெளிந்திருக்குங்காலத்தும், இன்பமே அடை

யினும் - இன்பந்தானே வந்து சேர்ந்தாலும், துன்பமே மிடையினும் - துன்பந்தானே மிக்கு நெருங்கி வந்தாலும், ஒருவர் முன் புகழினும் - ஒருத்தர் முன்னேவந்துநின்று புகழ்ந்தாலும், இருவர் பின்பு இகழினும் - பலர் பின்னேநின்று இகழ்ந்தாலும், ஊன் இறந்து அழியினும் - உடம்பு அழிந்து ஒழிந்தாலும்,—யான்—,—திருவரங்கேசர்தம்-ஸ்ரீரங்கநாதரது,சுருதிநின்று ஒலிடும் - நான்கு வேதங்களும் புகழ்ந்துநின்று முறையிடுகின்ற, கரதலம் நாலொடும் - நான்கு திருக்கைகளையும், துவளும் நூல் மார்பமும் - முப்புரிநூ லசைந்து விளங்குகின்ற திருமார்பையும், பவளம் வாய் மூரலும்-பவழம் போலச் சிவந்த திருவாய்மலரினது புன்சிரிப்பையும்,சுருள் கருங் கேசமும்-சுருண்ட கரிய மயிர் முடியையும், செய்ய நீள் முடியும் - செவ்விதாகிய [அழகிய]நீண்ட திருமுடியையும், தூய்ய சேவடியும் - தூய்மையான சிவந்த திருவடிகளையும், மறந்து ஒழிவனோ - மறந்து போவேனோ? [மறவேன்].

ஸர்வதேசஸ ஸர்வகால ஸர்வ அவஸ்தைகளிலும் எம்பெருமானது திருவுருவத்தை மறவே னென்பதாம். "என்வாய்முதலப்பனை யென்றுமறப்பனோ", "மறப்பனோ வினியா னென்மணியையே" என்று நம்மாழ்வார்பாசுரம். 'ஒருவர்முன்புகழினும் இருவர்பின்பு இகழினும்' என்றதனால், ஒருவர் ஒருத்தனை முன்னேநின்று புகழ்ந்தால், பலர் அவனை இகழ்வரென்ற உலகவியற்கையை வெளியிட்டார். இருவரென்பது, ஒன்றின்மேற்பட்டவ ரென்னும் பொருள்பட நின்றது. பின்பு இகழ்தல் - புறங்கூறுதல். சேவடியை இறுதியில் வைத்துக்கூறியது, எம்பெருமானது எந்தத் திருவவயவத்தை மறப்பினும் பிறவிப்பெருங்கடலுக்குப் புணையாகிய திருவடிகளை மறவேனென்னுந் துணிவு குறித்தற்கு. இத்திருவடிக்குத் தூய்மையாவது - தன்னையடைந்தவரைப் பிறவிக்கடலுள் அழுந்தாதபடி குறிக்கொண்டு பாதுகாத்துப் பரிசுத்தமாகிய முத்தியென்னும் அக்கரையிற் கொண்டுசேர்க்குந் திறம்.

இது, எல்லாச்சீரும் விளச்சீராகிய எண்சீராசிரியவிருத்தம். (உஅ)

சேவடியான் மூவடிமண் டென்னரங்கத் தம்மானீ
மாவலிபால் வாங்கியநாண் மண்ணுலகோ—மூவுலகும்
வீசுங்கா லோவலிய வெவ்வினையே னெஞ்சமோ
பேசுங்கா லேதோ பெரிது.

(இ - ள்.) தென் அரங்கத்து அம்மான்-அழகிய ரங்கநாதனே!—நீ—, சேவடியால்-சிவந்த திருவடிகளால், மூ அடி மண் - மூன்றடிநிலத்தை, மாவலிபால் - மகாபலிசக்கரவர்த்திபக்கல், வாங்கிய நாள் - வேண்டியிரந்து உலகனைத்தும் ஈரடியா லொடுக்கி யளந்த பொழுது,—மண் உலகோ - நிலவுலகமோ,(அந்நிலவுலகத்தைத் தன்னுள் அடக்கியளந்த), மூவுலகும் வீசும் காலோ - மூன்றுலோகத்திலும் பரவிய திருவடியோ, வலிய வெம் வினையேன் நெஞ்சமோ - (அத்திருவடிகளைத் தன்னுளடக்கிய) வன்மையாகிய கொடியவினைகளையுடைய எனது மனமோ, பேசும்கால்-சொல்லுமிடத்து, ஏதோ - எதுவோ, பெரிது - பெரியது ? (எ - று.)

எம்பெருமானது திருவடிகள் உலகங்களையெல்லாம் தனதுஈரடிக்குள் அடக்கியமையால் மிகப்பெரியன: அவற்றை எனதுநெஞ்சு தன்னுள் அடக்கிக்கொண்டிருத்தலால், என்நெஞ்சே அத்திருவடிகளினும் பெரிய தென்பதாம்; யான் பக்திவசப்படுதலாலாகும் மெய்ப்பாடுகளிற் குறைவுற்ற கொடுவினையேனாயினும் எம்பெருமானது திருவடிகளை எப்பொழுதும் மனத்திற்கொண்டு தியானிக்கின்றே னென்பது, கருத்து. இங்கு, ஆதேயமாகிய [நெஞ்சமென்னும் ஆதாரத்தி லிருப்பதாகிய] திருவடிகளினும் அதற்கு ஆதாரமாகிய நெஞ்சத்திற்குப் பெருமை கூறியதனால், இது-மிகுதியணியின்பாற்படும்; இதனை வடநூலார் அதிகாலங்கார மென்பர். "புவியு மிருவிசும்பும் நின்னகத்த நீ என், செவியின்வழி புகுந்து என்னுள்ளாய் - அவிவின்றி, யான்பெரியன் நீபெரியை யென்பதனை யார் அறிவார், ஊன்பெருகு நேமியாய்! உள்ளு" என்ற அருளிச்செயல், இங்கு நோக்கத்தக்கது.

இது, பிறப்பென்னும் வாய்பாட்டான் முடிந்த இருவிகற்ப நேரிசை வெண்பா. (உக)

[நாரைவிடுதூது.]

பெருவரங்கேசவனல்லா தருள்செயும்பேரிலவே
றொருவரங்கேசற்றுமோதாரென்காதலையோடியெங்குங்
கருவரங்கேசலிக்கத்திரிவோர்க்குக்கருணைசெய்யுந்
திருவரங்கேசற்குநீசொல்லவேண்டுஞ்செழுங்குருகே.

(இ - ள்.) செழுங் குருகே - செழுமையான நாரையே!—பெருவரம்-பெரியவரங்களை, அருள்செயும் பேர்-கொடுத்தருளுகின்றவர், கேசவன் அல்லாது-கேசவனேயல்லாமல், (வேறு) இலை-வேறொருவரும் இல்லை; அங்கே-அவ்வெம்பெருமானிடத்தே, ஓடி-விரைந்துசென்று, என்காதலை-எனதுவிருப்பத்தை, வேறு ஒருவர்—, சற்றும் ஓதார் - சிறிதுஞ் சொல்லார்; (ஆகையால்),— எங்கும் - எவ்விடத்தும் [எல்லாப் பிறப்புக்களிலும்], கரு அரங்கே - கருப்பத்தினிடத்தே, சலிக்க - துன்பமுண்டாக, திரிவோர்க்கு-மாறிமாறிப்பிறந்திறந்து அலைபவர்களுக்கு, கருணைசெய்யும் - அருள்செய்கின்ற, திருவரங்கேசற்கு—, நீ—, (விரைந்து சென்று என்காதலை), சொல்ல வேண்டும்—; (எ - று.)

இது, தலைவனைப் பிரிந்த தலைவி அப்பிரிவாற்றாது வருந்தும்போது அன்னம் இரங்குமிடம் நெய்தல்நில மாதலால், அந்நிலத்தில் குருகென்னும் பறவைகள் கழிக்கரையில் இரைதேடுவதற்கு வர, அவற்றை நோக்கி 'எனது நிலைமைகளை எனதுதலைவனான திருவரங்கநாதன்பக்கல் சென்று சொல்வார் ஒருவரும் இலர்; நீ சென்று சொல்லவேண்டும்' என்று வேண்டிய துறை.

வேண்டியதை யளிப்பவனும் ஸ்ரீரங்கநாதனே; அவ்வெம்பெருமானிடத்து என் அன்பை அறிவிக்கத்தக்கவனும் நீயே யென்பதாம். மூன்றாமடி-எம்பெருமான் நிர்ஹேதுகமாக உயிர்களின் மீது பாராட்டும் கருணையின்

ஏற்றத்தை விளக்கும். முதலெழுத்துத்தவிர இரண்டுமுதலிய சிலஎழுத்துக்கள் ஒன்றிநிற்கப் பொருள்வேறுபட்டுவந்ததனால், திரிபு என்னுஞ் சொல்லணியாம். வேறு - மத்திமதீபம். கரு - கர்ப்பமென்பதன் விகாரம். அரங்கு - சிறுவீடு.

இது, நிரையசைமுதலாக வந்த கட்டளைக்கலித்துறை. (கூ0)

[இரங்கல்.]

குருகுறங்குகானலே கருநிறங்கொள்பானலே
 கொடியிருண்டஞாழலே நெடியகண்டனீழலே
பொருதரங்கவேலையே நிருதரங்கமாலையே
 போதயின்றகம்புளே யேதையின்றியம்புகேன்
திருவரங்கரிணையிலா வொருபுயங்கவணையிலே
 திகழ்வலக்கைகீழதா முகிழ்மலர்க்கண்வளர்வதோர்
கருணைநம்புவதனமு மருணவிம்பவதரமுங்
 காவிகொண்டமேனியு மாவிகொண்டுபோனவே.

(இ - ள்.) குருகு உறங்கு கானலே - நாரைகள் தங்குவதற்கிடமாகிய கடற்கரைச்சோலையே! கரு நிறம் கொள் பானலே - கரியநிறத்தைக் கொண்ட கருங்குவளையே! கொடி இருண்ட ஞாழலே - (தன்னைக் கொள் கொம்பாகப் பற்றிச் சுற்றியிருக்கின்ற) கொடிகளால் இருண்டிருக்கின்ற குங்குமமரமே! நெடிய கண்டல் நீழலே - நீண்ட தாழையின் நிழலே! பொரு தரங்கம் வேலையே - மோதுகின்ற அலைகளையுடைய கடலே! நிருதர் அங்கம் மாலையே - அரக்கரது உருவம்போன்ற கருநிறத்தையுடைய அந்திப்பொழுதே! போது அயின்ற கம்புளே - மலர்களை (உணவாகக்கொண்டு) உண்கின்ற நீர்வாழ்பறவையே!—ஏதை இன்று இயம்புகேன்-இப்பொழுது (யான்) என்னவென்று (எடுத்துச்) சொல்லப்போகிறேன்! திரு அரங்கர்-ஸ்ரீரங்கநாதர், இணை இலா - ஒப்பில்லாத, ஒரு புயங்கம் அணையிலே-ஒரு சேஷசயனத்திலே, திகழ் வலக்கை - விளங்குகின்ற வலத் திருக்கையை, கீழதா - (தலையின்) கீழிடத்ததாகக்கொண்டு, முகிழ் மலர் கண் வளர்வது - அரும்பி மலர்ந்த தாமரைபோன்ற திருக்கண்கள் அறிதுயில் செய்யப்பெற்ற, ஓர் - ஒப்பில்லாத, கருணை நம்பு வதனமும் - அருளால் விரும்பப்படுகின்ற திருமுகமண்டலமும், அருண விம்ப அதரமும் - சிவந்த கொவ்வைப்பழம் போன்ற திருவதரமும், காவி கொண்ட மேனியும் - கருங்குவளைமலர் போன்ற திருமேனியும், ஆவி - (எனது) உயிரை, கொண்டு போன - கொள்ளைகொண்டு போயின; (எ - று.)

இரங்குதல் நெய்தற்றிணைக் குரியதாதலால், இக்கவி, அந்நெய்தலில் தலைவனைப்பிரிந்து தனியேயிருந்து வருந்துகிற தலைமகள் ஆண்டுள்ள பொருள்களை நோக்கி இரங்கிக்கூறியது இது.

'குருகுறங்குகானல், பொருதரங்கவேலை' என்பதனால் நிலமுதற்பொருளும், 'நிருதரங்கமாலை' என்றதனால் காலமுதற்பொருளும், 'பானலே

ஞாழலே' என்பன முதலியவற்றால் கருப்பொருளும், 'ஏதையின்று இயம்பு கேன்...ஆவிகொண்டுபோனவே' என்பதனால் உரிப்பொருளும் கூறப்பட்டமை காண்க.

குருகு - மற்றை நீர்வாழ்பறவைகளுக்கும் உபலக்ஷணம். கம் - நீர்; கம் புள்-சம்பங்கோழி. இயற்கையாய் உயிர்கண்மேல் உளதாகின்ற நிர்ஹேதுக கிருபை திருமுகத்தே நன்றாக விளங்குவதென்பார், 'கருணை நம்பு வதனம்' என்றார். விம்பம் - பிம்பம். அதரம் - கீழுதடு. கொண்ட - உவமவுருபு; "யாழ்கொண்ட விமிழிசை" என்பதிற் போல. "ஞாயிறு திங்க ளறிவே நாணே, கடலே கானல் விலங்கே மரனே, புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே, யவையல பிறவு நுவலிய நெறியாற், சொல்லுநபோலவுங் கேட்குந போலவுஞ், சொல்லியாங் கமையு மென்மனார் புலவர்" என்னுஞ் சூத்திரத்தால் அஃறிணைப்பொருள்கள் கேட்பனபோலச் சொல்லப்பட்டன.

இது, முதல் மூன்று ஐந்து ஏழாஞ்சீர்கள் விளங்காய்ச்சீர்களும், இரண்டு நான்கு ஆறு எட்டாஞ்சீர்கள் விளச்சீர்களுமாகிய எண்சீராசிரியவிருத்தம்; பன்னிருசீரேனினும் அமையும். (௯௧)

* போனகம்பதினாலுபுவனந்திருப்பள்ளிபொறியரவணைப்பாற்கடல்
பூமடந்தையுநிலமடந்தையுந்தேவியர் புராதனமறைக்குமெட்டா
வானகம்பேரின்பமுடன்வீற்றிருக்குமிடம் வாகனம்வயினதேயன்
மலர்வந்தநான்முகன்றிருமைந்தனவன்மைந்தன் மதிகுடிவாசவன்முதற்
றேனகுந்தொடைமௌலிமுப்பத்துமுக்கோடிதேவருனதேவல்செய்வோர்
திங்களும்பரிதியுஞ்சங்கமுந்திகிரியுந் திரிவனவுநிற்பனவுமா
மேனைமன்னுயிர்முழுதும்விளையாடநீவகுத்திட்டபலமாயையதனா
லெழிலரங்கந்துயிலுமெம்பிரானின்பெருமையாவரேவாழ்த்துவாரே.

(இ - ள்.) எழில் அரங்கம் - திருவரங்கத்தே, துயிலும் - பள்ளிகொள்கின்ற, எம் பிரான் - எமது தலைவனே!—(உனக்கு), போனகம்-உணவு, பதினாலு புவனம்- பதினான்கு உலகங்கள்; திரு பள்ளி-அழகிய சயனம், பொறி அர அணை பால் கடல் - புள்ளிகளையுடைய ஆதிசேஷனாகிய சயனத்தையுடைய திருப்பாற்கடல்; தேவியர்- மனைவியர், பூமடந்தையும் நிலமடந்தையும்—; பேரின்பமுடன்—, வீற்றிருக்கும் - எழுந்தருளியிருக்கின்ற, இடம் —, புராதனம்மறைக்கும் - பழமையாகிய [அநாதியாகிய] வேதங்களுக்கும், எட்டா - அறியவொண்ணாத, வானகம் - பரமபதம்; வாகனம்—, வயினதேயன் - கருடன்; திரு மைந்தன் - அழகிய குமாரன், மலர் வந்த நான்முகன்-நாபீகமலத்தில் தோன்றிய பிரமதேவன்; அவன் மைந்தன்-அப்பிரம

* "காந்தஸ்தே புருஷோத்தம: பணிபதிச் ஶய்யாஸநம் வாஹநம், வேதாத்மா விஹகேஶ்வரோ யவநிகா மாயா ஜகந்மோஹிநீ - ப்ரஹ்மேஶாதி ஸுரவ்ரஜஸ்ஸ தயிதஸ்த்வத்தாஸதாஸீஜந: ஶ்ரீரித்யேவச நாம தே பகவதி! ப்ரூம: கதம் த்வாம் வயம்" என்னும் ஆளவந்தார்ஸ்ரீஸூக்தியின் கருத்தைக்கொண்டு, ரங்கநாதன்விஷயமாக இப்பாடல் இருக்கின்றதென அறிக.

தேவனது மகன் [பேரன்], மதி சூடி - பிறையை முடியிற்சூடிய உருத்திரன்; உனது ஏவல் செய்வோர் - உனது குற்றேவல்களைச் செய்பவர்கள், வாசவன் முதல் - இந்திரன் முதலிய, தேன் நகும் தொடை மௌலி - தேனோடு மலர்கின்ற பூமாலையைச் சூடிய முடியையுடைய, முப்பத்து முக்கோடி தேவர்-முப்பத்துமூன்றுகோடி தேவர்கள்; சங்கமும் திகிரியும்-சங்கசக்கரங்கள், திங்களும் பரிதியும் - சந்திர சூரியர்கள்; நீ—, விளையாட - விளையாட்டாக, வகுத்திட்ட - ஏற்படுத்திய, பல மாயை - பலவாகிய மாயைப்பொருள்கள், திரிவனவும் - சஞ்சரிப்பனவும், நிற்பனவும் - (சஞ்சரியாமல்) நிலையாக நிற்பவைகளும், ஆம் - ஆகிய, ஏனை மன் உயிர் முழுதும் - மற்றை நிலைபொருந்திய உயிர்களெல்லாம் ; அதனால் - ஆகையால்,—நின் பெருமை- உனது பெருமையை, யாவரே - எவர்தாம், வாழ்த்துவார் - வாழ்த்த வல்லவர் ? [எவர்க்கும் வாழ்த்தலரி தென்றபடி]; (எ - று.)

இதில், ஒருவாறு எம்பெருமானது ஸ்வரூபரூபகுண விபூதிகள் சொல்லப்பட்டிருத்தல் காண்க. "போதின்மங்கை பூதலக்கிழத்தி தேவியன்றியும், போதுதங்கு நான்முகன் மகன் அவன்மகன்சொலில், மாதுதங்கு கூறன்" என்பது, திருமழிசையாழ்வார்பாசுரம். வயினதேயன் - விநதையின் மகன். திரிவன, நிற்பன என்பவை - முறையே சரமென்றும், அசரமென்றும்; ஜங்கமமென்றும், ஸ்தாவரமென்றும்; இயங்குதிணைப்பொருளென்றும், நிலைத்திணைப்பொருளென்றுங் கூறப்படும். "பொங்கர வென்பது மெல்லணை யூர்தி வெம் புள்ளரசு, பங்கய மின்னொடு பார்மகள் தேவி படைப்பவன் சேய், கிங்கரர் விண்ணவர் சாதகநாடிறை கேழலொன்று, யங்கணெம்புவி யெல்லா மிடந்த வரங்கருக்கே" என்றார் திருவரங்கத்துமாலையிலும். முப்பத்து முக்கோடி தேவர் - ஆதித்தியர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், வசுக்கள் எண்மரும், மருத்துவர் இருவருமாகிய முப்பத்து மூவரையுந் தலைவராகவுடைய தேவர்கள்; "எண்மர் பதினொருவ ரீராறுவ ரோரிருவர், வண்ண மலரேந்தி வைகலு - மெண்ணி, நறுமாலையாற் பரவி யோவாதெப்போதுந், திருமாலைக் கைதொழுவர் சென்று" என்றார் பொய்கையாழ்வாரும்.

எம்பெருமான் எல்லாவற்றிலும் நிரம்பி யாதொரு குறைவு மின்றியிருப்பவனாதலால், அவன் உலகங்களைப்படைத்தல் யாதுபயனைக்கருதியோ? என்று ஐயப்பாடுதோன்ற வினவினார்க்கு, ஐசுவர்யவீர்யபராக்கிரமங்களால் நிரம்பி இந்நாளில முழுவதையும் தனிச்செங்கோல் செலுத்தும் மண்டலாதிபதி கேவலம் விநோதத்தின்பொருட்டுப் பந்து முதலியவற்றைச் செய்துகொள்ளுதல்போலவே எம்பெருமானும் கேவலம் விளையாட்டின்பொருட்டே உலகங்களைப் படைப்பனென்று வேதாந்தங்களில் அறுதியிடப்பட்டிருத்தல் காண்க எனச் சமாதானங் கூறியவாறு.

இது, பெரும்பாலும் முதல் ஐந்தாஞ் சீர்கள் விளச்சீர்களும், இரண்டு மூன்று நான்காஞ் சீர்கள் காய்ச்சீர்களும், ஆறு ஏழாஞ் சீர்கள் மாச்சீர்களுமாய் வந்தது அரையடியாகவும், அஃது இரட்டி கொண்டது ஓரடி யாகவும் உள்ள பதினான்குசீராசிரியவிருத்தம். (கூஉ)

[பிரிவாற்றாது வருந்துந் தலைவி யிரங்கல்.]

வாழுமவுலித்துழாய்மணமு மகரக்குழைதோய்விழியருளு
மலர்ந்தபவளத்திருநகையு மார்பிலணிந்தமணிச்சுடருந்
தாழுமுளரித்திருநாபித் தடத்துளடங்குமனைத்துயிருஞ்
சரணகமலத்துமைகேள்வன் சடையிற்புனலுங்காணேனு
லாழமுடையகருங்கடலி னகடுகிழியச்சுழித்தோடி
யலைக்குங்குடகாவிரிநாப்ப ணைவாயரவிற்றுயிலமுதை
யேழுபிறப்பிலடியவரை யெழுதாப்பெரியபெருமானை
யெழுதவரியபெருமானென் றெண்ணாதெழுதியிருந்தேனே.

(இ - ள்.) வாழும் - (திவ்வியமங்களஸ்வரூபமாக) வாழ்கின்ற, மவுலி - திருமுடியிற் சூடிய, துழாய் - திருத்துழாயில், மணமும் - நறுநாற்றத்தையும், மகரம் குழை தோய் - (காதிலணிந்த) மகரகுண்டலங்களை அளாவுகின்ற, விழி - திருக்கண்களில், அருளும் - திருவருளையும், மலர்ந்த பவளம் திரு நகையும் - பவழம்போலச் சிவந்த திருவாய்மலரில் அழகிய புன்சிரிப்பையும், மார்பில் அணிந்த மணி சுடரும் - திருமார்பிற் சாத்திய கௌஸ்துப மணியில் ஒளியையும், தாழும் முளரி திரு நாபி தடத்துள் - ஆழ்ந்த அழகிய நாபீகமலத்தினிடத்தில், அடங்கும் - அடங்கியிருக்கின்ற, அனைத்து உயிரும் - எல்லாவுயிர்களையும், சரண கமலத்து - திருவடித்தாமரைமலர்களில், உமை கேள்வன் சடையில் புனலும் - பார்வதியின் கணவனாகிய பரமசிவனது (கபர்த்தமென்னுஞ்) சடையில் தங்குகின்ற கங்கைநீரையும், காணேன் - காண்கிறேனில்லை; ஆல் - ஆகையால், ஆழம் உடைய—, கருங்கடலின் - கரிய கடலினது, அகடு - நடுவிடம், கிழிய - பிளவுறும்படி, சுழித்து - சுழித்துக் கொண்டு, ஓடி - விசையாக ஓடி, அலைக்கும் - அலைக்கின்ற, குட(க்கு) காவிரி - மேற்றிசையினின்றும் வருகின்ற காவேரிநதியினது, நாப்பண் - நடுவில், ஐ வாய் அரவில் - ஐந்தலை நாகத்தில், துயில் - கண்வளர்கின்ற, அமுதை - அமிருதம்போலினியவனும்,—அடியவரை - தன்னடியார்களை, ஏழுபிறப்பில் - எழுவகைப்பிறவித்தொகையுள், எழுதா - எழுதாத [சேர்க்காத], பெரிய பெருமானை - பெரியபெருமாளுமாகிய அரங்கநாதனை, எழுத அரிய பெருமான் என்று - எழுதுதற்கரிய (கட்டழகுடைய) எம்பெருமானென்று, எண்ணாது - நினையாமல், எழுதி - (என்பேதைமைத்தன்மையாற் சித்திரத்தில்) தீட்டி, இருந்தேன் - வாளா போயினேன்; (எ - று.)

இது, எம்பெருமானைப் பிரிந்து வருந்தி அப்பெருமானது திருவுருவத்தைச் சித்திரத்தில் எழுதியேனுந் தனது துயரத்தை ஒருவாறு தணியக்கருதி அவ்வாறு எழுதியதனுள் அவ்வுருவம்முழுவதும் அமையாமையாற் கருதிய பயன்கைகூடப்பெறாத தலைமகளது கூற்று; எழுதரிதென்னுந் துறை.

எம்பெருமானது திருவுருவத்தை எழுதத்தொடங்கி, திருத்துழாய்மாலையோடுகூடிய திருமுடி திருக்கண்கள் திருப்பவளம் திருமார்பத்திற் கௌஸ்துபரத்நம் நாபீபத்மம் சரணகமலம் முதலிய வடிவங்களை எழுதுகை

யில், துளசிமாலையின் நறுமணத்தையும், திருக்கண்களின் திருவருளையும், திருப்பவளத்தின் மந்தஹாஸத்தையும், கௌஸ்துபரத்நத்தின் ஒளியையும், நாபீகமலத்தில் உயிர்கள்யாவும் அடங்கியிருப்பதையும், திருவடிகளில் கங்கையடங்கியிருப்பதையும் எழுதுவது அரிதாதல் காண்க. சித்திரத்தில் உருவம்மாத்திரம் எழுதப்படுமேயன்றி, அதன் குணஞ் செயல் முதலியன எழுதப்படாவாம்.

மகரக்குழை - முதலையின் வடிவமாகச் செய்த குண்டலம். காதளவும் நீண்ட கண்ணென்பார், 'குழைதோய்விழி' என்றார். பவளம் - உவமவாகு பெயர். தன் அடியவரது பிறப்பை ஒழித்தலால், 'பிறப்பி லடியவரை யெழுதாப்பெரியபெருமான்' எனப்பட்டான். மனத்திற்குத்திருப்தியுண்டாகுமளவும் அவித்தவித்து எழுதுதற்குரிய சித்திரத்திலும் எழுதவொண்ணாத பெருமானென அழகின்பெருமை கூறியவாறு.

இது, மூன்று ஆறுஞ்சீர்கள் காய்ச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாய் வந்தது அரையடியாகவும், அஃது இரட்டிகொண்டது ஓரடியாகவும் வந்த பன்னிருசீராசிரியவிருத்தம். (௩௩)

[இதுவும் அது.]

இருங்குங்குமத்தோளரங்கேசர்முன்னாளிலங்காபுரங்காவலன் காலினால்வீழ், கருங்குன்றுபோன்மண்முகங்குத்திவீழக் கண்டாரெனக்கின்றுதண்டாரளித்தான், மருங்கெங்கும்வம்போதுவார்வாயடங்கும் வாடைக்குநிலமங்கையாடைக்குநோகே, னெருங்குந்தனஞ்சந்தனம்பூசலாகு நீளாதிராமையன்மீளாதிராதே.

(இ - ள்.) முன்நாள் - முற்காலத்தில் [இராமாவதாரத்தில்], இலங்காபுரம் காவலன் - இலங்கைநகருக்கரசனாகிய இராவணன், காலினால் வீழ் கருங் குன்றுபோல்-பெருங்காற்றினால் விழுகின்ற கரிய பெரிய மலைபோல, மண் முகம் குத்தி வீழ - மண்ணை முகத்தாற் குத்தி [தலைகவிழ்ந்து] விழும்படி, கண்டார் - செய்தவராகிய, இரு குங்குமம் தோள் - குங்குமமணிந்த பெரியதோள்களையுடைய, அரங்கேசர்—, இன்று-இன்றைக்கு, எனக்கு—, தண் தார் - குளிர்ந்த திருத்துழாய் மாலையை, அளித்தால் - அருள்செய்வாராயின்,— மருங்கு எங்கும் - சுற்றுப்பக்கங்களெல்லாம் (இருந்து), வம்பு ஓதுவார் - வம்பளக்கின்ற மகளிரது, வாய்—, அடங்கும்—; வாடைக்கும்-வாடைக் காற்றுக்கும், நில மங்கை ஆடைக்கும் - நிலமகளது ஆடையாகிய கடலுக்கும், நோகேன் - வருந்தேன்; நெருக்கும் தனம் - நெருங்கிய கொங்கைகளில், சந்தனம் பூசல் ஆகும்—; இரா - இராப்பொழுது, நீளாது - நீடியாது; மையல் - காதல்நோயும், மீளாது இராது-நீங்காமலிராது [நீங்கும்].

தலைவனைப் பிரிந்து தவிக்கின்ற நிலையிலே வாடை கடல் முதலியவற்றிற்கு ஆற்றாத தலைவி தாரும் பெறுதவருந்தி இங்ஙனங் கூறினளென்க. இதன் மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல். தலைவனைப் பிரிந்து வருந்தும் நிலையில் தலைவி அத்தலைவன் சாத்திய மாலை கிடைக்கப்

பெற்றால் அதனை அவனாகவே பாவித்து உடம்பில் ஒற்றிக்கொண்டு அவனைத் தழுவியணைத்தவள்போன்று மகிழ்வுறக்கருதின ளாதலால், 'எம்பெருமான் தனது மாலையைத் தந்தானாயின், அப்போது தமக்குத்தோன்றியபடியெல் லாம் வம்பளக்கின்ற மகளிர்வாயும் அடங்கும்; காமோத்தீபகப் பொருள்க ளாகிய வாடை முதலியனவும் என்னை வருத்தமாட்டா; யான் இனிதிருப் பேன்' என்றனளென்பதாம். தனது தளர்ச்சியை ஊரலர் முதலியவற்றால் அறிந்த செவிலித்தாயர் முதலியோர் அதற்குத் தக்க பரிகாரமொன்றுஞ் செய்யாது முனிந்து கூறும் வார்த்தைகள் தன்வருத்தத்தை மிகுவித்தல் பற்றி, 'மருங்கெங்கும் வம்போதுவார் வாயடங்கும்' என்றாள். வம்பு ஓது தல் - வீணே நிந்தித்துப் பேசுதல்; நிட்டூரவார்த்தைகளைக் கூறுதல். துணை வரோடு கூடியுள்ளார்க்கு இன்பஞ்செய்யும் தென்றலும் கடலும் அவரைப் பிரிந்தார்க்குத் துன்பஞ்செய்யு மென்றல் வெளிப்படை. "ஊழிபலவோரிர வாயிற்றோ வென்னும்", "ஊழியிற் பெரிதால் நாழிகையென்னும்," "இது ஓர்கங்கு லாயிரமூழிகளே" என்றபடி கூடியநிலையில் ஒருகணமாகக்கழிகிற இரவு பிரிந்தநிலையில் அநேகயுககாலமாக நீட்டித்துத் தோன்றுகின்றமை பற்றி, 'நீளாதிரா' என்றாள்; "நீடிரவொன்று அஞ்சுகம் தத்தை விளக்கும்" என்ற திருவேங்கடத்தந்தாதியும் காண்க.

காவினால் வீழ் கருங்குன்று - இல்பொருளுவமை; இனி, ஆதிசேஷனு க்கும் வாயுவுக்கும் பகைமை நேர்ந்தபொழுது வாயுவினாற் கொணர்ந்து தள்ளப்பட்ட மேருசிகரமென உள்பொருளுவமையுமாம். வாடை-வடக்கி னின்று வருங் காற்று; வடக்கிற்செல்லுங் காற்றெனத் தென்றலுமாம். பூமியைச் சூழ்ந்த கடலை அதற்கு ஆடையென்பது மரபு; இதனை 'அப்திமே கலா' என்னும் பூமியின் வடமொழிப் பெயரானு முணர்க. மீளாதிராது - இரண்டெதிர்மறை உடன்பாடு உணர்த்திற்று.

இது, எல்லாச்சீரும் புளிமாச்சீராகிய எண்சீராசிரியவிருத்தம். (௯௪)

தேடுகின்றனையைம்பொறிகளுக்கிரைதேடியுங்கிடையாமல்
வாடுகின்றனைவீடுசென்றென்றினிமருவுவைமடநெஞ்சே
யாடுகின்றிலையழுகிலைதொழுகிலையரங்கனைக்கரங்கூப்பிப்
பாடுகின்றிலைநினைகிலைபதின்மர்தம்பாடலின்படியாயே.

(இ - ள்.) மட(மை) நெஞ்சே-அறியாமையையுடைய மனமே! அரங்க னை—, கரம் கூப்பி - கைகூப்பி, தொழுகிலை - வணங்குகின்றாயில்லை: (அங் ஙனம் வணங்கிப் பேரானந்தத்தால்), ஆடுகின்றிலை - நர்த்தனஞ்செய்கின்றா யில்லை; அழுகிலை -(கண்ணீர்விட்டு) அழுகிறாயில்லை; பதின்மர்தம் பாடலின் படியாய் - ஆழ்வார்கள் பதின்மரது பாசுரத்தின்படியே, பாடுகின்றிலை- பாடித்துதிக்கின்றாயில்லை; நினைகிலை-தியானஞ்செய்கின்றாயுமில்லை; (இவை யேயுமன்றி),—ஐம்பொறிகளுக்கு-பஞ்சேந்திரியங்களுக்கும்இரை-உணவை, தேடுகின்றனை-தேடுகின்றாய்; தேடியும் - (அவ்வாறு)தேடியும், கிடையாமல்- (இரை)அகப்படாமையால், வாடுகின்றனை-வருந்துகின்றாய்;(ஆகையால் நீ), இனி—, என்று - என்றைக்கு, வீடு சென்று மருவுவை - பரமபதம்போய்ச் சேர்வாய்? (எ - று.)

எம்பெருமானைத் தியானித்து ஆனந்தக்கூத்தாடுதல் முதலிய நற்றொழில்கள் ஒன்றும் செய்யாமல் ஐம்பொறிகளின் வசப்பட்டு வாடும் தமது மனத்திற்கு இனியேனும் விஷயாந்தரங்களிற் செல்லுதலைவிட்டு அரங்கனைத்தொழுதல் முதலியன செய்து வீடுபெறுவாயென அறிவுறுத்தியபடி.

"ஆடிப்பாடியரங்கவோவென்றழைக்குந்தொண்டர்" என்றபடி ஆடிப்பாடித் தொழுதல் தொண்டர்களின் செயலாத லறிக. அரங்கநாதனுக்கு 'பதின்மர்பாடும் பெருமாள்' என ஒருவிருது இருத்தல் கருதத்தக்கது. இசை - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமாகிய புலன்கள். நினைதல் ஒழிந்த ஆடுதல் முதலிய தொழில்கள் மெய்மொழிகளதாயினும், இவற்றிற்கெல்லாம் மூலகாரணம் மனமாதலால், அதன் தொழிலாகக் கூறினர்.

இது, முதற்சீர் தேமாச்சீரும், ஈற்றுச்சீர் புளிமாங்காய்ச்சீரும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய அறுசீராசிரியவிருத்தம். (௩௫)

ஆயினைமனையைச்சேயினைப்பிதாவையனத்தினைத்தனத்தினைவிரும்பும்
பேயினைமறந்துநோயினைமூப்பைப்பிறப்பினையிறப்பினைத்துடைப்பீ
ராயனைமுளரிவாயனையெங்களமலனைக்கமலனைப்பயந்த
தாயனைநெடியமாயனைவடபாற்றரங்கனையரங்கனைத் தொழுமே.

(இ - ள்.) ஆயினை - தாயையும், மனையை - மனைவியையும், சேயினை - மக்களையும், பிதாவை - தந்தையையும், அனத்தினை - சோற்றையும், தனத்தினை - பொருளையும், விரும்பும் - விரும்புகின்ற, பேயினை - அறியாமைக் குணத்தை, மறந்து - விட்டொழிந்து, நோயினை - வியாதியையும், மூப்பை - கிழத்தனத்தையும், பிறப்பினை - ஜநநத்தையும், இறப்பினை - மரணத்தையும், துடைப்பீர் - ஒழிக்க விரும்புபவர்களே!—ஆயனை - திருவாய்ப்பாடியில் வளர்ந்தவனும், முளரிவாயனை-செந்தாமரைமலர்போன்ற திருவாயையுடையவனும், அமலனை - குற்றமற்றவனும், கமலனை பயந்த-நாபிகமலத்துப் பிரமதேவனைப் பெற்ற, தாயனை-தாயானவனும், நெடிய-மிகுந்த, மாயனை - மாயையையுடையவனும், வடம் பால் தரங்கனை - ஆலிலையிலும் பாற்கடலிலும் பள்ளிகொள்பவனுமாகிய, எங்கள் அரங்கனை—,தொழும் - வணங்குங்கள்.

மனைவிமக்களை நினைந்து பிறப்புக்களில் உழல்வதை விட்டு நற்கதிபெற விரும்பினால் ஸ்ரீரங்கநாதனை வணங்குவதொன்றுமேசெய்யவேண்டுமென்று உலகத்தோர்க்கு நல்லறிவு கூறியவாறு. பேய் - பேய்க்குணம்; ஆகுபெயர். தரங்கம் - ஆகுபெயர். தொழும் - உம்மீற்று முன்னிலையேவற்பன்மைமுற்று; உம்மீறு முன்னிலைக்கு வருதல், புதியனபுகுதல். இனி, நீவிர் தொழும்; தொழுவீரேல் துடைப்பீரெனவுங் கூட்டி முடிக்கலாம்.

இது, இரண்டு நான்கு எழாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய எழுசீராசிரியவிருத்தம். (௩௬)

தொழப்பெறுதந்தவாரணத்தந்தமே
தொட்டிறுத்ததும்வாரணத்தந்தமே
வழுத்துதாண்முன்புவனங்கடந்ததே
மலர்ந்தவுந்திபுவனங்கடந்ததே

யொழித்ததுங்குழைச்சங்கரன்சாபமே
யொசித்ததுங்குழைச்சங்கரன்சாபமே
யழித்ததும்பொருதானவரங்கமே
யரிதனூரினிதானவரங்கமே.

(இ - ள்.) தொழ பெருது - (எம்பெருமானை வணங்கி அவன்பெருமையை இவ்வளவிற்றென்று முற்றும்) அறியமாட்டாதது, அந்த ஆரணத்து அந்தமே - அப்படிப்பட்ட வேதாந்தமே; தொட்டு இறுத்ததும் - கையால் தொட்டு முறிக்கப்பட்டதுவும், வாரணம் தந்தமே- குவலயாபீடமென்னும் யானையின் கோடுதானே; வழுத்து தாள் - (யாவராலும்) புகழப்படுகின்ற திருவடி, முன்பு - முன்காலத்தில் [ராமாவதாரத்தில்], வனம் - காட்டை, கடந்தது - நடந்துகடந்தது; மலர்ந்த உந்தி - மலர்ந்த நாபீகமலம், புவனங்கள்- எல்லாவுலகங்களையும், தந்தது - படைத்தது; ஒழித்ததும்- போக்கியருளப்பட்டதும், குழை சங்கு அரன் சாபமே- சங்கினாலாகிய குண்டலத்தையுடைய சிவனது சாபமே; ஒசித்ததும் - முறித்ததும், குழை சங்கரன் சாபமே- வளையுந்தன்மையையுடைய சிவனது வில்லே; அழித்ததும்-அழிக்கப்பட்டதும்,பொரு தானவர் அங்கமே-போர்செய்கிற அசுரரது உடம்பே; அரிதன் ஊர் - அப்பெருமானது திருப்பதி, இனிது ஆன அரங்கமே—; ()

"சங்கவெண்டோ டுடையவன்" என்றார் ஞானசம்பந்தரும். 'ஒசித்ததுங் குழைச்சங்கரன் சாபமே' என்னுமிடத்து, குழைச்சு அங்கு அரன் எனப்பிரித்து, குழைச்சு என்பதைக் குழைத்து என்பதன் போலியாக்கொண்டு, அங்கு - மிதிலாநகரத்தில், குழைச்சு - வளைத்து, ஒசித்ததும் - முறித்ததும், சிவனது வில்லே யென்றும் பொருள் கொள்ளலாம். சாபம் - பிரமகபாலங் கையைவிட்டு நீங்காமை. "சாபமே சபித்தல் வில்லாம்" என்ற நிகண்டின்படி இங்கு இருபொருள்கொள்ளப்பட்டது. அரி-ஹரி;அடியார்களின் அருந்துயரைப் போக்குபவர்: அன்றிக்கே, தேவர்களுக்குப் பகைவர்களாகிய அசுரர் அரக்கர் முதலியோரை அழிப்பவர்.

இஃது, அடிதோறுந் தனித்தனியே வந்த இறுதிமுற்றுமடக்கு.

இது, முதற்கண் மாச்சீர்பெற்று நாற்சீரான்வந்தது அரையடியாகவும் அஃது இரட்டி கொண்டது ஓரடியாகவும், அவ்வடி நான்குகொண்டு, அரையடிக்கு நிரையசைமுதலாயின் ஒற்றொழித்துப் பன்னிரண்டு எழுத்தும் நேரசைமுதலாயிற் பதினொன்றும் பெற்று வந்த கட்டளைக்கலிப்பா. (௩௭)

அரங்க மாளிகைக் கருங்கடல் வண்ணனை
ஆலிமா முகிலை வாலி காலனை
இந்த ளூருறை யெந்தைபெம் மானை
ஈச னான்முகன் வாசவன் றலைவனை
உள்ளுவா ருள்ளத் துள்ளுறை சோதியை
ஊரக நின்றரு ளீரகத் தடிகளை
எவ்வுண் மாயனைத் தெய்வநா யகனை
ஏர்மலி சிகரத்து நீர்மலை யாதியை

ஐவா யரவி லறிதுயி லமலனை
ஒருகால் மொழியினு மொழிகுவை நெஞ்சே
ஓதநீர் ஞாலத் துழலும்
ஔவியப் பிறப்பி லழுந்தி வாடுவதே.

(இ - ள்.) நெஞ்சே—!—அரங்க மாளிகை-திருவரங்கம்பெரியகோயிலி லெழுந்தருளியிருக்கின்ற, கருங் கடல் வண்ணனை - கரிய கடல்போலுந் திருநிறமுடையவனை, ஆலி மா முகிலை - திருவாலியில் எழுந்தருளியிருக்கிற கரிய மேகம்போன்றவனை, வாலி காலனை - வாலிக்கு யமனாயிருந்தவனை, இந்தளூர் உறை - திருவிந்தளூரி லெழுந்தருளியிருக்கின்ற, எந்தை பெம்மானை - எந் தந்தையாகிய பெருமானை, ஈசன் நான்முகன் வாசவன் தலைவனை - சிவன் பிரமன் இந்திரன் இவர்களுக்கு இறைவனானவனை, உள்ளுவார் உள்ளத்துள் உறை சோதியை-அன்பால்நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் (அவர்நினைந்த வடிவோடு விரைந்து சென்று) தங்குகின்ற ஒளியுருவமானவனை, ஊரகம் நின்று அருள் நீரகத்து அடிகளை - திருவூரகத்திலும் திருநீரகத்திலும் எழுந்தருளியிருக்கின்ற சுவாமியை, எவ்வுள் மாயனை - திருவெவ்வுளூரி லெழுந்தருளியிருக்கின்ற மாயவனை, தெய்வம் நாயகனை - தேவர்தலைவனை, ஏர் மலி சிகரத்து நீர்மலை ஆதியை - அழகு மிக்க சிகரத்தையுடைய திருநீர்மலையிலெழுந்தருளியிருக்கின்ற முதல்வனை, ஐ வாய் அரவில் அறி துயில் அமலனை - ஐந்தலை நாகத்தில் யோகநித்திரை செய்தருளுகின்ற குற்றமற்றவனை, ஒரு கால் மொழியினும் - நீ ஒருதரம் (திருநாமத்தைச்) சொல்லித் துதித்தாலும், ஓதம் நீர் ஞாலத்து - குளிர்ச்சியையுடைய கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தில், உழலும்-அலைந்து வருந்துகின்ற, ஔவியம் பிறப்பில் - பொறாமையையுடைய பிறவிக்கடலில், அழுந்தி - முழுகி, வாடுவது - வாட்டமடைவதை, ஒழிகுவை - நீங்குவாய்.

இதனால், எம்பெருமானது திருநாம ஸங்கீர்த்தனத்தின் மகிமையை வெளியிட்டவாறு. ஆலி, இந்தளூ ரென்பவை - சோழநாட்டுத் திருப்பதிகள். ஊரகம் முதலியன - தொண்டைநாட்டுத் திருப்பதிகள். ஊரகமும், நீரகமும் கச்சியுட் சேர்ந்தவை. "அழுன்று, பொரு வாலி காலன் பரகாலன் போற்றும், திருவாலிமாயன்" என்றார் நூற்றெட்டுத்திருப்பதியந்தாதியிலும். ஔவியமென்பது - அவா வெகுளி இன்னாச்சொல் முதலிய தீக்குணங்களுக்கும் உபலக்ஷணம்.

இது, உயிர்வருக்கமோனை.

இது, ஈற்றயலடி முச்சீரடியும், மற்றையடிகளெல்லாம் நாற்சீரடிகளுமாய் வந்ததனால், நேரிசையாசிரியப்பா. (௩௰௫)

[இரங்கல்.]

வாடியோடவனசமன்ன விருகண்வெள்ளமருவிபோன்
மருவியோடமதனன்வாளி யுருவியோடவாடையூ
டாடியோடவன்றிலோசை செவியிலோடவண்டுழா
யாசையோடுமெங்கள்பேதை யாவியோடனீதியோ

மோடியோடவங்கிவெப்பு மங்கியோடவைங்கரன்
முடுகியோடமுருகனோட முக்கணீசன்மக்களைத்
தேடியோடவாணனா யிரம்புயங்கள்குருதிநீர்
சிந்தியோடநேமிதொட்ட திருவரங்கராசரே.

(இ - ள்.) மோடி ஓட - துர்க்கை ஓடவும், அங்கி-அக்கினியும், வெப்பு-ஜ்வரமும், மங்கி ஓட - வலியழிந்து ஓடவும், ஐங் கரன் - ஐந்து கைகளையுடைய விநாயகன், முடுகி ஓட - விரைந்து ஓடவும், முருகன்-அவன் தம்பியாகிய சுப்பிரமணியன், ஓட - ஓடவும், முக்கண் ஈசன் - மூன்று கண்களையுடைய சிவன், மக்களை - தன்பிள்ளைகளை, தேடி - தேடிக்கொண்டு, ஓட - ஓடவும், வாணன் - பாணாசுரனது ஆயிரம் புயங்கள் - ஆயிரங் கைகளும், குருதி நீர் சிந்தி ஓட - ரக்த வெள்ளத்திற் சிதறியோடவும், நேமி தொட்ட-சக்கரத்தைப் பிரயோகித்த, திருவரங்கராசரே - ஸ்ரீரங்கநாதரே !—வனசம் அன்ன - தாமரைமலர்போன்ற, இரு கண்-இரண்டுகண்களும், வாடி ஓட - வாடிப்போகவும், வெள்ளம் - (அக்கண்களினின்றுபெருகுகின்ற) கண்ணீர்ப்பெருக்கு, அருவிபோல் - மலையருவிபோல, மருவி ஓட - வழிந்தோடவும், மதனன் வாளி - மன்மதனது புஷ்பபாணங்கள், உருவி ஓட - உள்ளே தைத்து ஊடுருவிச் செல்லவும், வாடை - வாடைக்காற்று, ஊடு ஆடி ஓட - இடையே நுழைந்து செல்லவும், அன்றில் ஓசை - அன்றிற்பறவை கூவுகின்ற ஒலி, செவியில் ஓட - காதுகளினுட்புகவும், வள் துழாய் ஆசையோடும் - வளப்பம்பொருந்திய திருத்துழாய்மாலையினிடத்துள்ள ஆசையுடனே, எங்கள் பேதை - எங்கள் பெண்ணாகிய இவள், ஆவி ஓடல் - உயிர் நீங்கப்பெறுதல், நீதியோ-(உமக்கு) நியாயமாகுமோ? [ஆகாதென்றபடி]; (எ-று.)

இது, பிரிவாற்றாதுவருந்துந் தலைவியின் நிலையைக் கண்ட செவிலி தலைவனைநோக்கி இரங்கிக் கூறியது; தோழி இரங்கியதென்பாருமுளர்.

உஷையைப் பிரத்யும்நனுக்கு மணஞ்செய்விக்கக் கருதிச் செயற்கரிய பெருங்காரியத்தைச் செய்த நீர், எங்கள் பெண்ணை மணந்துகொள்ளுதற்கு வேண்டிய செயலைத் தேடாது உபேட்சித்தல் சிறிதுந் தக்கதன் றென்பதாம்: திருவரங்கராசருக்குக் கொடுத்துள்ள அடைமொழி இவ்வாறு ஒருகருத்தை உட்கொண்டிருத்தலால், கருத்துடையடைமொழியணியாம். 'ஓட' என்ற சொல் ஒருபொருளிற் பலமுறை வந்தது - சொற்பொருட்பின்வருநிலையணியாம்: இவ்வாறு இரண்டணிகள் எள்ளும் அரிசியும் போலச்சேர்ந்துவந்தது, சேர்வையணி யெனப்படும்.

"மோடியோடிலச்சையாய சாபமெய்தி முக்கணான், கூடுசேனை மக்களோடு கொண்டு மண்டி வெஞ்சமத், தோட வாண னாயிரங் கரங்கழித்த வாதிமால்," "வண்டுலாவுகோதைமாதர் காரணத்தினால் வெகுண், டிண்ட வாண னீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள், முண்டநீறன் மக்கள் வெப்பு மோடி யங்கி யோடிடக், கண்டு நாணி வாணனுக் கிரங்கினா னெம்மாயனே," "கார்த்திகையானுங் கரிமுகத்தானுங் கனலு முக்கண், மூர்த்தியு மோடியும் வெப்பு முதுகிட்டு மூவுலகும், பூத்தவனே யென்று போற்றிட வாணன் பிழைபொறுத்த, தீர்த்தன்" என்றார் பெரியார்களும்.

இது, முதலாறுசீரும் மாச்சீர்களும், ஏழாஞ்சீரொன்று விளச்சீருமாய் வந்தது அரையடியாகவும், அது இரட்டிகொண்டது ஓரடியாகவும் உள்ள பதினன்குசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம். (௩௧)

சருகருந்தியைம்பொறிவருந்தருந் தவர்களண்டர்குஞ்சரமுகன்குகன், பரிதிசந்திரன்சிவனயன்புரந் தரனிரந்தரம்பரவுமெந்தையூர், குருகைதஞ்சைதென்கணபுரங்குறுங்குடிகுடந்தைவண்டுவரையிந்தளூர், திருவைகுந்தமஞ்சனசிலம்பயிந்திரபுரஞ்செழுந்திருவரங்கமே.

(இ - ள்.) சருகு அருந்தி - உலர்ந்த இலைகளைப் புசித்து, ஐம்பொறி வருந்து - பஞ்சேந்திரியங்களும் வருந்துகின்ற. அருந் தவர்கள் - (பிறரால்) செய்தற்கரிய தவத்தையுடைய முனிவர்களும், அண்டர் - தேவர்களும், குஞ்சரமுகன்-யானைமுகத்தையுடைய விநாயகனும், குகன்-முருகனும், பரிதி - சூரியனும், சந்திரன் - சந்திரனும், சிவன் - சிவனும், அயன் - பிரமனும், புரந்தரன் - இந்திரனும், நிரந்தரம் - இடைவிடாமல் [எக்காலத்தும்], பரவும் - புகழ்ந்து வணங்குகின்ற, எந்தை-எம்பெருமானது, ஊர்-திருப்பதி,— குருகை - திருக்குருகூரும், தஞ்சை - திருத்தஞ்சைநகரும், தென் கணபுரம் - அழகிய திருக்கண்ணபுரமும், குறுங்குடி - திருக்குறுங்குடியும், குடந்தை - திருக்குடந்தையும், வண் துவரை - வளப்பம் பொருந்திய திருத்துவாரகையும், இந்தளூர்-திருவிந்தளூரும், திரு வைகுந்தம்- ஸ்ரீவைகுண்டமும், அஞ்சன சிலம்பு - திருவேங்கடமலையும், அயிந்திரபுரம் - திருவயிந்திரபுரமும், செழு -செழுமையான, திரு அரங்கமே-ஸ்ரீரங்கமுமேயாம்;(எ-று.) —என்றது, மற்றைத் திருப்பதிகளுக்கும் உபலக்ஷணம்.

தஞ்சை-தஞ்சாவூரென்பதன் மரூஉ. துவரை - த்வாரகா வென்னும் வடமொழியின் சிதைவு. திருவைகுந்தம் - பாண்டியநாட்டகத்துத் திருக்குருகையைச் சார்ந்த நவதிருப்பதிகளுள் ஒன்று; அன்றிக்கே, பரமபதமுமாம். அஞ்சனசிலம்பு - திருமாலிருஞ்சோலைமலையுமாம். அயிந்திரபுரம் - அஹீந்த்ரபுரம்.

இது, பிரபந்தங்களுக்கு உரிய ஊர் என்னுந் துறையின் பாற்படும்.

இது, ஒன்று மூன்று ஐந்து ஏழாஞ்சீர்கள் புளிமாச்சீர்களும், மற்றை நான்கும் கூவிளச்சீர்களுமாகிய எண்சீராசிரியச்சந்தவிருத்தம். 'தனன தந்தன தனன தந்தன தனன தந்தன தனன தந்தன' எனச் சந்தக்குழிப்புக் காண்க. (௩௨)

திருவரங்கன் திருக்கோயில் சேர்ந்துமது திருக்கோயி
றருவரென்றும் வைகுந்தந் தயங்கொளிசேர் வைகுந்த
மொருமருங்கி னந்துடையா ரொழிந்தொர்சன னந்துடையார்
மருவமறந் திருப்பீரே வணங்கமறந் திருப்பீரே.

(இ - ள்.) வணங்க - (எம்பெருமானை) வணங்குதற்கு, மறந்திருப்பீரே - மறந்திருப்பவர்களே !—(நீங்கள்),—திரு அரங்கம் திரு கோயில் - திருவரங்

கம் பெரியகோயிலை, சேர்ந்து - அடைந்து, உமது - உங்களது, திருக்கு - மாறுபாடு, ஒயில் - ஒழிந்தால்,—ஒரு மருங்கில் சங்கு உடையார் - ஒரு [இடது]பக்கத்திற் சங்கத்தையுடைய அவ்வரங்கநாதர், என்றும் - எந்நாளும், வைகும் - (தாம்) வீற்றிருக்கின்ற, தம் - தமது, தயங்கு ஒளி சேர் - விளங்குகின்ற ஒளி பொருந்திய, வைகுந்தம் - பரமபதத்தை, தருவர் - கொடுத்தருளுவர்; ஒழிந்தோர் - அவரொழிந்த மற்றைத்தேவர்கள், சனனம் துடையார் - பிறப்பைப் போக்கமாட்டார்கள்; (ஆகையால்), மருவ - (அந்த எம்பெருமானையே) சென்று - சேரும்படி, மறம் - (உங்கள்) மாறுபாட்டை, திருப்பீர் - மாற்றுங்கள்; (எ - று.)

திருவரங்கம் பெரியகோயிலை யடைந்து உங்கள் மாறுபாட்டை யொழிப்பீராயின் எம்பெருமான் உங்கள் பிறவிப்பிணியை யறுத்து முத்தியளிப்பனென்பதாம்.

திருக்கு - அகங்கார மமகாரங்கள். ஒழிந்தொர் - ஒழிந்தோ ரென்பதன் குறுக்கல். ஒழிந்தோர் சனனந் துடையார் - திருமாலை யொழிந்த மற்றைத் தேவர்கள் தம்மைச்சரணமடைந்தவரது பிறப்பை யறுக்கும் ஆற்றலில்லாதவ ரென்க; இனி, இதற்கு - அவ்வெம்பெருமான் திருவரங்கத்தை யடைந்தவரல்லாதவரது பிறவியைத் துடையா ரென்றுமாம்.

இது, அடிதோறுந் தனித்தனியே வந்த இறுதிமுற்று மடக்கு.

இது, விளங்காய்ச்சீரும் மாங்காய்ச்சீரும் விரவிவந்த கொச்சகக்கலிப்பா. (சக)

[சிந்து.]

திருப்பொற்பாவைக்குக் கஞ்சம்பொன்னாக்கிய
சித்தரேஞ்சுத்தக் காயாமலரென
வுருப்பொற்பான திருவரங்கேசனா
ரூரகத்துநின்றார் சென்றிறைஞ்சினோ
மிருப்புப்பாடகங் காட்டினர்யாமவர்க்
கிரும்பையாடக மாக்கினெமீயத்தை
நருக்கிவெள்ளிய தாகவுருக்குவோ
நமதுவித்தைக் கழுதேயருமையே.

(இ - ள்.) திரு - அழகிய, பொன்பாவைக்கு - பொற்பதுமை செய்தற்கு [அழகிய திருமகளுக்கு], கஞ்சம் பொன் ஆக்கிய - வெண்கலத்தைப் பொன்னாகச்செய்து கொடுத்த [பொற்றாமரைமலரைச் செய்துகொடுத்த], சித்தரேம் - சித்தர்கள் (யாங்கள்); சுத்த காயா மலர் என - தூயதாகிய காயாம்பூப்போல, உரும் பொற்பு ஆன - வடிவழகு பொலிவுபெற்ற, திரு அரங்கேசனார்—, ஊரகத்து நின்றார் - ஊரினிடத்தில் நின்றார் [திருவூரகமென்னும் திருப்பதியில் நின்றதிருக்கோலமா யெழுந்தருளியிருந்தார்]; சென்று இறைஞ்சினோம் - (அங்குச்) சென்று (அவரை) வணங்கினோம்; (அப்பொழுது அவர்), இருப்பு பாடகம் காட்டினர் - இரும்பினாலாகியதொரு பாடகமென்னுங் காலணியைக் காண்பித்தார் [பாடகமென்னுங்

திருப்பதியைத் தாம்வீற்றிருக்குமிடமாகத் தெரிவித்தார்]; யாம்—, அவர்க்கு —, இரும்பை ஆடகம் ஆக்கினெம் - இரும்பைப் பொன்னாகச்செய்து தந்தோம் [பெரிய (காளியனென்னும்பாம்பின்) படத்தை நடிக்குமிடமாகச் செய்தோம்]; ஈயத்தை உருக்கி—, வெள்ளியது ஆக - வெள்ளியாக [வெண்மையையுடையதாக], உருக்குவேம்—; (இதுவெல்லாம் அருமையன்று); நமது வித்தைக்கு—, அமுதே - உணவு [முத்தியுலகம்], அருமையே-கிடைத்தற்கரிய தாமே? [அரியதன்று என்பதாம்]; (எ - று.)

இரசவாதிகள் தமதுதிறமையை ஒருதலைவனுக்கு எடுத்துக்கூறுவதாகச் செய்யுள்செய்தல், சித்து என்னும் உறுப்பின் இலக்கணமாம்; இரசவாதமாவது - ஒருலோஹத்தை மற்றொருலோஹமாக மாற்றுதல்.

சித்தரென்பவர் - இரும்புமுதலிய தாழ்வான லோஹங்களைப் பொன்முதலிய உயர்ந்த லோஹங்களாகச் செய்யும் வல்லமையுள்ளவர். எம்பெருமானைச்சரணமடைந்தோர் தாம் அப்பிரானையடைதற்குமுன்பிருந்த தாழ்வான நிலையினின்று மாறி உயர்ச்சிபெறுவரென்பது, இங்குக்கருதத்தக்கது. இச்செய்யுள் - சிலேடையாக மற்றோர்பொருள் தருகின்ற நயம் பாராட்டத்தக்கது. அடுத்த செய்யுளிலும் இங்ஙனமே காண்க.

கஞ்சம் - வெண்கலத்தைக் குறிக்கும்போது காம்ஸ்யமென்னும் வடமொழியின் சிதைவு. சித்தர்-சித்திபெற்றவர். ஊரகம்-உலகளந்தபெருமான் கோவில். பாடகம் - பாண்டவதூதர் சந்நிதி. பாடகம் - காலணியைக் குறிக்கும்போது பாதகடகமென்னும் வடசொல்லின் மரூஉ. ஆடகம் - பொன்னைக் குறிக்கும்போது ஹாடகமென்னும் வடமொழியின் விகாரம்; நால்வகைப் பொன்களில் ஒன்று. உள்ளுறை பொருளில் ஆடு அகமென வினைத்தொகை. வித்தை - வித்யை.

இது, முப்பத்தேழாங் கவி போன்ற கட்டளைக்கலிப்பா. (சஉ)

[இதுவும் அது.]

அரும்பித்தளையவிழ்நாண்மாலைமார்பனரங்கனெங்கள்
பெரும்பித்தளையும்பிறப்பறுத்தாண்டபிரான்சித்தரேந்
தரும்பித்தளையுந்தராவும்பொன்னாக்கித்தருவெமப்பா
திரும்பித்தளையினுநெய்பாலமுதினுஞ்சிந்தனையே.

(இ - ள்.) அரும்பி-(முன்னர்) அரும்பாகி, தளை அவிழ் - (பின்பு) முறுக்குவிரிந்து மலர்ந்த, நாள் மாலை - அன்றலர்ந்த பூமாலையையணிந்த, மார்பன் - திருமார்பையுடையவனும், எங்கள் - எங்களது, பெரும் பித்து அனையும் பிறப்பு - பெருமயக்கம்பொருந்திய பிறவியை, அறுத்து - போக்கி, ஆண்ட - அடிமைகொண்ட, பிரான் - தலைவனுமாகிய அரங்கநாதனது, சித்தரேம் - சித்தர்கள் (யாங்கள்); தரும் - தரப்பட்ட, பித்தளையும் - பித்தளையையும், [தரும் பித்தளையும் - (திருமாலுக்குப்) பித்துத்தருகின்ற திருமகளையும்,] தராவும் - தராவையும் [பூமிதேவியையும்], பொன் ஆக்கி தருவெம் - பொன்னாகச்செய்துகொடுப்போம்; அப்பா—! (அங்ஙனமாகவும்

எங்களுக்கு), சிந்தனை - மனம், அளையினும் - வெண்ணெயிலும், நெய் - நெய்யிலும், பால் அமுதினும்-பால்தயிர்களிலும், திரும்பித்து—; (எ - று.)

இச்செய்யுளில், சிலேடை யென்னும் பொருளணியோடு, நிரீபு என்னுஞ் சொல்லணியும் அமைந்திருத்தல் காண்க. தாரா - ஒருவகை லோஹம். பொன்னென்பது - வெண்பொன் கரும்பொன் முதலாக எல்லாவுலோகங்களுக்கும் பொதுப்பெயராகவும் வருதலால், பித்தளையையுந் தாராவையும் பொன்னுக்குவேமென்றார். தரும்பித்தள்-பித்துத்தருமவள்; "பித்தர் பனிமலர் மேற்பாவைக்கு" என்றார் திருமங்கையாழ்வாரும். திருமகளைப் பொன்னுக்குதல் - பொன்னென்னும் பெயருடையவ ளாக்கல்: நிலமகளைப் பொன்னுக்குதல் - பொன்னை யுடையவளாக [வசுமதியாக]ச் செய்தல். தாரா - ஆகாரவீற்றுவடமொழி ஈறுதிரியாது நின்றது. அப்பா - இங்கே சித்தர்கள் வழங்குவதோர் சொல்விழுக்காடு; "தெரிசித்து நேசமுடன் பூசித்துந் திரிகின்ற சித்த ரப்பா" என்றார் இரட்டையரும். திரும்பிற் றென்பது, எதுகைநோக்கி மரூஉவாய் நின்றது. இச்செய்யுளில் எங்கட்கு வெண்ணெய் முதலிய சிறு பொருள்களைக் கொடுப்பீராயின் மிகப்பெரிய தொழில்களைச் செய்து தருவோ மென்று தோன்றுதல் காண்க.

இது, நிரையசை முதலதான கட்டளைக்கலித்துறை. (சங)

சிந்திக்கத் தித்திக்குஞ் செவ்வாய் துவர்த்துப்பாம்
புந்திக்கு ளேயின் புளிமேவு—நந்தங்
கருவரங்கங் கைத்தழலுங் காவிரியி னூடே
திருவரங்கத் தேவளருந் தேன்.

(இ - ள்.) காவிரியின் ஊடு - திருக்காவேரியின் நடுவில், திருவரங்கத்து—, வளரும் - திருக்கண்வளர்ந்தருளுகின்ற, தேன் - (இன்பஞ்செய்தலால்) தேன்போன்ற கடவுள்,—சிந்திக்க-மனத்தினால் நினைத்துத் தியானஞ் செய்யும் பொழுது, தித்திக்கும் - இனித்திருக்கும்; செவ் வாய் துவர் துப்பு ஆம் - மிகச் சிவந்த பவழம் போன்ற வாயோடு கூடியிருக்கும்; புந்திக்குளே - அறிவினுள்ளே, இன்பு உளி - நினைக்கநினைக்க இன்பந்தந்து, மேவும் - பொருந்தும்; நந்தம் - நமது, கரு அரங்கம் - கர்ப்பமாகிய சிறு வீட்டை, கைத்து அழலும் - கோபித்து ஒழிக்கும்; (எ - று.)

திருவரங்கத்தே வளரும் தேன் - ஸ்ரீரங்கத்தில் ஆதிசேஷசயனத்தில் யோகநித்திரை செய்தருளுகின்ற திருவரங்கநாதனென்க. உலகத்திலுள்ள தேன் இன்சுவை யொன்றையே உடையது; திருவரங்கத்தே வளருந் தேன் தித்திப்பு முதலிய அறுவகைச் சுவையையு முடைய தெனை வியந்தவாறு. எம்பெருமான் பேரின்ப மயமானவ னாதலின், அவனைத் தேன் என உருவகஞ் செய்தனர்.

உளி - உள்ளி. இதனுள் தித்திப்பு, துவர்ப்பு, உப்பு, புளிப்பு, கைப்பு, கார்ப்பு என்னும் அறுசுவையுஞ் சொல்லால் அடுக்கி வந்தது காண்க; இது, அரதனமாலையணி; இதனை வடநூலார் ரத்நாவளி யென்பர். பின்னிரண்டடி - நிரீபு என்னுஞ் சொல்லணியாம்.

இது, நாளென்னும் வாய்பாட்டான் முடிந்த இருவிகற்ப நேரிசை வெண்பா. (சச)

தேனந்துசோலையரங்கேசர்சேவடிமேல்விசயன்
றானந்தநாளையிற்சாத்தியமாலையுந்தாள்விளக்கும்
வானந்தருங்கங்கைநன்னீருஞ்சென்னியில்வைக்கப்பெற்ற
வானந்தந்தானல்லவோமுக்கண்ணன்மன்றுளாடுவதே.

(இ - ள்.) தேன் நந்து சோலை - தேன் மிக்குப்பெருகுகின்ற பூஞ்சோலைகளையுடைய, அரங்கேசர் - ரங்கநாதரது, சேவடிமேல் - சிவந்த திருவடிகளின்மேல், விசயன் - அருச்சுனன், அந்த நாளையில் - பதினெண்காநாட்பாரதப் போரில், சாத்திய - அருச்சனைசெய்த, மாலையும் - பூமாலையையும், தாள் விளக்கும் - (உலகமளந்தகாலத்துப் பிரமன் தனது கைக் கமண்டல தீர்த்தத்தால்) ஸ்ரீபாதத்தை விளக்கிச்சேர்த்த, வானம் தரும் கங்கை நல் நீரும் - ஆகாசகங்கையின் புண்ணியதீர்த்தத்தையும், சென்னியில் வைக்கப்பெற்ற - (தனது) முடியில் தரிக்கப்பெற்ற, ஆனந்தம் தான் அல்லவோ-பெருமகிழ்ச்சியாலன்றோ? முக்கண்ணன் - திரிநேத்திரனாகிய பரமசிவன், மன்றுள் - சபையில், ஆடுவது - நடனஞ்செய்வது ; (எ - று.)

சிவபெருமான் ஆனந்ததாண்டவஞ் செய்வதற்குக் கவி இவ்வாறு ஒரு காரணங் கற்பித்துக் கூறினர் ; ஏதுத்தற்குறிப்பேற்றவணி ; இதனால், சிவபெருமான் பரமபாகவதர்களுள் ஒருவனென்பதும், பகவத் பிரசாதம் அவனடியார்க்கு மகிழ்ச்சியை விளைக்குமென்பதும் போதரும்.

இங்கு எம்பெருமானது திருவடியின் சம்பந்தமான பத்திரபுஷ்பங்களும் தீர்த்தமும் சிவனைப் பரிசுத்தனாக்கிக் களிப்புடன் தாண்டவமாடச் செய்தன வென்க.

விசயன் - மிக்கஜயமுடையவன். பாரதயுத்தத்திற் பதினெண்காநாளில் அருச்சுனன் ஒரு அஸ்திரத்தைப் பெறவேண்டிச் சிவனை அருச்சிக்க விரும்ப, கண்ணன் அவனிளைப்பை ஆற்றுகைக்காக 'மலர்களை நமது காலிலே இடு' என்று அருளிச்செய்ய, அவனும் கண்ணனது திருவடிகளிலே இட்டு அருச்சிக்க, அன்றிரவிற் பரமசிவன் அம்மாலையைத் தலையில் தரித்துக்கொண்டு வந்து தோன்றி அஸ்திரத்தைக் கொடுத்துப்போயின னென்க. பிரமன் திரிவிக்கிரமாவதார காலத்தில் தனது உலகத்துச் சென்ற ஸ்ரீ பாதத்தில் தீர்த்தஞ் சேர்த்த நீர் சிலநாள் தேவலோகத்துத் தங்கியிருந்து பின்னர்ப் பகீரதன் கொணர்ந்தபொழுது உருத்திரமூர்த்தியாற் சிரசில்வகிக்கப் பட்டதனால், 'தாள்விளக்கும் வானந்தருங் கங்கை நன்னீர்' எனப்பட்டது. "தீர்த்த னுலகளந்த சேவடிமேற் பூந்தாமஞ், சேர்த்தி யவையே சிவன்முடிமேற் றான்கண்டு, பார்த்தன் றெளிந்தொழிந்த பைந்துழா யான்பெருமை, பேர்த்து மொருவராற் பேசக் கிடந்ததே," "குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர் பெய்து, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி—கறைகொண்ட, கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினா, னண்டத்தான் சேவடியை யாங்கு" என்றார் பெரியார்களும்.

இது கிளையளை முதலதான கட்டளைக்கலித்துறை. (சரு)

[தலைமகளது உருவெளிப்பாடு கண்ட தலைமகன் இரங்குதல்.]

ஆடும்படநாகணை மேலணையு மமலன் கமலத்தவனுஞ் சிவனு, நாடுந்திருமாறுயில் கோயிலின்வாய் நறைவார்பொழிலூடுறைவார ளகக், காடுங்குழையைச்சாடுங்குவளைக் கண்ணுங்குதலைப்பண்ணுங் கரியின், கோடுந்தரளத்தோடும்புருவக் கோதண்டமுமே மூதண்ட முமே.

(இ - ள்.) ஆடும் - எடுத்தாடுகின்ற, படம் - படங்களையுடைய, நாகணை மேல் - சேஷசயனத்தின்மேல், அணையும் - பள்ளிகொண்டருளுகின்ற, அமலன் - குற்றமற்றவனாகிய,—கமலத்தவனும் - பிரமனும், சிவனும்—, நாடும் - (எந்நாளும்) ஆராய்ந்து வணங்குகின்ற, திருமால் - எம்பெருமான், துயில் - திருக்கண்வளர்கின்ற, கோயிலின்வாய்-திருவரங்கம்பெரியகோயிலில், நறை வார் பொழிலூடு - தேனொழுகுகின்ற சோலையினிடத்தில், உறைவார் - தங்கு கின்ற மாதரது, அளகம் காடும் - கூந்தற்கற்றையும், குழையை சாடும் - காதை மோதுகின்ற, குவளை கண்ணும் - கருங்குவளைமலர்போன்ற கண் களும், குதலை பண்ணும்-இசைப்பாட்டுப்போலினிய மழலைச்சொல்லும், கரி யின் கோடும் - யானைத்தந்தம்போன்ற தனங்களும், தரளம் தோடும் - முத்தினாலாகிய தோடென்னுங் காதணியும், புருவம் கோதண்டமுமே - வில்லுப்போன்ற [வளைந்த] புருவங்களுமாகிய இவையே, மூதண்டமும் - பழமையான அண்டகோளமுழுவதும் (காணப்படுகின்றன); (எ - று.)

இது, தான் முன்னர்ப் பொழிலிடத்துக் கண்டு காதலித்த தலைமகளது மேனியின் எழிலை உருவெளித்தோற்றத்திலே கண்ட தலைமகன் இரங்கிக் கூறியது. ஒரு பொருளினிடத்து ஆசையினால் இடைவிடாது கருத்தைச் செலுத்த, அந்தப் பாவனையின் ஊற்றத்தால் அப்பொருள் கண்ணுக்கு எதி ரில் தோன்றியதுபோலக் காணப்படுதல் இயல்பு. தலைவனது கண்பார்வை செல்லுமிடமெங்கும் தன்னால் விரும்பப்பட்ட தலைமகளது அவயவங்களே தோன்றுகின்றனவென்க.

நாகணை - நாகவணையென்பதன் தொகுத்தல் விகாரம். அமலனாகிய திருமாலென்க. அளகம் - கடைகுழன்ற கூந்தல்; மிகுதிபற்றி, காடென் றார். குழை - காதிற்கு ஆகுபெயர். குழையைச் சாடும் குவளைக்கண் - காத ளவும் நீண்ட கண் என்றபடி. குதலை - நிரம்பா மென்சொல். தரளத் தோடு மென்பதற்கு - முத்துப்போன்ற பற்களுடனே யென்றுமாம்.

இது, ஐந்தாங்கவி போன்ற எண்சீராசிரியவிருத்தம். (சசு)

[கைக்கிளை.]

அண்டமுழுதுண்டவருமிழ்ந்தவரிடந்தவரளந்தவர்வளர்ந்தரு ளுமா, சண்டபணவைந்தலையனந்தசயனந்திகழ்தருந்திருவரங்கர்வ ரைமேற், கண்டதொருகொம்பதிலிரண்டுமகரங்களொருகஞ்சமிரு வெஞ்சிலைமணங், கொண்டதொருகொண்டலிருகெண்டையொரு தொண்டையிருகும்பமொருசெம்பணிலமே.

(இ - ள்.) அண்டம் முழுது - எல்லா வண்டங்களையும், உண்டவர் - (பிரளயகாலத்தில்) திருவயிற்றிற் கொண்டவரும், உமிழ்ந்தவர் - (பிரளயம் நீங்கியபின்பு மீண்டும்) வெளிப்படுத்தியவரும், இடந்தவர் - (வராகாவதாரத்திற்) கோட்டாற் குத்தியெடுத்தவரும், அளந்தவர் - (திரிவிக்கிரமாவதாரத்தில்) அளந்தருளியவருமாகிய, மா - பெரிய, சண்டம் - கொடிய, பணம் - படங்களையுடைய, ஐந் தலை - ஐந்துமுடிகளையுடைய, அனந்த சயனம்-திருவனந்தாழ்வானாகிய திருப்பள்ளிமெத்தையில், வளர்ந்தருளும் - திருக்கண் வளர்ந்தருளுகின்ற, திகழ்தரும் - விளங்குகின்ற, திருவரங்கர் - ஸ்ரீரங்கநாதரது, வரைமேல் - மலையின்மேல், கண்டது - காணப்பட்டதாகிய, ஒரு கொம்பு - இளவஞ்சிக்கொம்பொன்று (உண்டு); அதில்—, இரண்டு மகரங்கள்-இரண்டுமுதலைகளும், ஒரு கஞ்சம்-ஒருதாமரைமலரும், இருவெஞ்சிலை-இரண்டு வளைந்த விற்களும், மணம் கொண்டது - வாசனைகொண்டதாகிய, ஒரு கொண்டல் - ஒரு நீர்கொண்ட மேகமும், இரு கெண்டை - இரண்டு கெண்டைமீன்களும், ஒரு தொண்டை - ஒரு கொவ்வைக்கனியும், இரு கும்பம் - இரண்டு குடங்களும், ஒரு செம் பணிலம் - அழகியதொரு சங்கமும், (உண்டு); (எ - று.)

இது, தலைவன் தலைவியைக்கண்டு அவளதெழிலை வியந்துரைத்தது.

அளந்தவராகிய அரங்கரென்க. மலையினிடத்தேகாணப்பட்டாளொரு ஒல்கியொசிகின்ற தலைவியது மேனியிடத்தே இரண்டுமகரகுண்டலங்களும், ஒப்பற்ற முகமும், இரண்டுபுருவங்களும், பூவின்மணங்கொண்டதொரு கூந்தலும், இரண்டு கண்களும், ஒப்பற்ற அதரமும், இரண்டு தனங்களும், ஒப்பற்ற கழுத்தும் உள்ளனவென்பதை மறைத்து உவமைப்பொருளாக ஆரோபித்துக் கூறினமையின், இது உருவகவுயர்வுநவிற்சியணி.

ஒருகொம்பு - தலைமகளின் உருவத்துக்கும், இரண்டு மகரங்கள் - இரண்டு குண்டலங்களுக்கும், கஞ்சம் - முகத்துக்கும், இருவெஞ்சிலை - இரண்டு புருவங்களுக்கும், மணங்கொண்டதொரு கொண்டல் - இயற்கை நறுமணம் செயற்கை நறுமணங்களையுடைய கூந்தலுக்கும், இருகெண்டை - இரண்டு கண்களுக்கும், தொண்டை - அதரத்திற்கும், இருகும்பம் - இரண்டு தனங்களுக்கும், செம்பணிலம் - சிவந்தகழுத்துக்கும் உவமையாதல் காண்க. இதில் திருவரங்கராகிய மரதகக்குன்றின்பக்கல் இத்தகைய அவயவச்சிறப்புக்களையுடைய திருமகளாகிய ஒருபூங்கொம்பு காணப்பட்டதென்னும் பொருளும் உள்ளுறையாய்த் தோன்றுமாறு அறிக. புணர்ச்சி குறிஞ்சி நிலத்துக்கண்ணதாகலின், 'அரங்கர்வரைமேற் கண்டதொரு கொம்பு' என்றார்.

இது, ஆறுங்கவி போன்ற எழுசீராசிரியச்சந்தவிருத்தம். (சஎ)

[இரங்கல்.]

செம்பொன்னரங்கத்தரங்கர்ச்சீதளசந்திரவாவிசூழ்
கம்புளுடன்பயினுரைகாள்காதலையென்சொலியாறுவேன்
வெம்பனிவந்ததுவந்தபின்வேனிலும்வந்ததுவேனில்போய்ப்
பைம்புயல்வந்ததுசென்றநம்பாதகர்வந்திலர்காணுமே.

(இ - ள்.) செம் பொன் - சிவந்த பொன்மயமாகிய, அரங்கம் - திருவரங்கத்திலுள்ள, தரங்கம் நீர் - அலைகளோடு கூடிய நீரையுடைய, சீதள சந்திர வாவி - குளிர்ந்த சந்திரபுஷ்கரிணியில், சூழ் - திரண்டுள்ள, கம்புளுடன் - நீர்ப்பறவைகளுடன், பயில் - பழகுகின்ற, நாரைகாள் - நாரைகளே! காதலை - (என்) காமநோயை, என் சொலி - என்னவென்று சொல்லி, ஆறுவேன் - தணிவேன்? வெம் பனி - கொடிய பனிக்காலம், வந்தது—; வந்த பின் - (அது) கழிந்தபின்பு, வேனிலும் - வெயிற்காலமும், வந்தது—; வேனில் போய் - வெயிற்காலங் கழிந்தபின், பைம் புயல் - பசிய கார்காலம், வந்தது—; (அங்ஙனம் வந்தபின்பும்), சென்ற - விட்டுப்பிரிந்துபோன, நம் - நமது, பாதகர்—, வந்திலர் - வந்தாரில்லை; (எ - று.)

இது, பனிக்காலத்தில் வருவதாகக் காலங்குறித்துச்சென்ற தலைமகன் கார்காலத்தளவும் வாராமையாற் பிரிவாற்றாத நெய்தனிலத்துத் தலைமகள் வருந்தி அந்நிலத்துப் பறவைகளை நோக்கி இரங்கிக் கூறியது. இப்படிப்பட்ட கார்காலத்தில் யான் எங்ஙனம் தலைவனைப் பிரிந்து உயிர் வாழ்வது? எனத் தலைவி இரங்கியவாறு.

கரையிற் சந்திரன் நின்று தவஞ்செய்து தன்குறைதீர்ந்ததனால், சந்திர புஷ்கரிணி யெனப் பெயர். வாவி - வாபீ என்னும் வடமொழியின் சிதைவு. பனி, வேனில், புயல் என்பன - அவ்வக்காலத்துக்கு ஆகுபெயர். மார்கழியுந் தையுமாகிய முன்பனிக்காலமும் மாசியும் பங்குனியுமாகிய பின்பனிக்காலமும் அடங்க 'பனி' என்றும், சித்திரையும் வைகாசியுமாகிய இளவேனிற்காலமும் ஆனியும் ஆடியுமாகிய முதுவேனிற்காலமும் அடங்க 'வேனில்' என்றும் பொதுவாக்கூறினர். பாதகர் - தீவினையுடையவர்; இரக்கஞ்சிறிதுமின்றிப் பிரிந்துபோனதேயுமன்றிக் குறியிட்டகாலத்தே மீண்டும்வாராமை பற்றி, பாதகரென்றார்; இனி, வருத்தமுறுத்துபவரென்றும் பொருள்கொள்ளலாம். காணும் - முன்னிலைப்பன்மையசைச்சொல்.

இது, எல்லாச்சீருங் கூவிளச்சீர்களாகிய அறுசீராசிரியவிருத்தம். (சஅ)

[சம்பிரதம்.]

காணாதபுதுமைபல காட்டுவன் கட்செவிகளெட்டையுமெடுத்
தாட்டுவன் கடல்பருகுவன் பெரியகனகவரையைச் சிறியகடுகினில
டைத்துவைப்பன், வீணாரவாரமூதண்டமுறவிளைவிப்ப னிரவுபகன்
மாறுவென் விண்ணையுமறைப்பனெழுமண்ணையுமெடுப்பனிவைவிளை
யாடும்வித்தையன்று, ஞானகனைப்பள்ளியிற்றிருவரங்கத்து நெடி
தூழிதுயிலும்பிரா னெற்றிக்கணனவனை நான்முகனை வாசவனை நிமி
ருமிருசுடரைமுதலாச், சேணாடர்யாவரையுமடிமைகொண்டவரவர்
சிரத்திற்பொறித்துவிட்ட திருச்சக்கரப்பொறியிலாதவொருகடவு
ளைத்தேடியினிமுன்விடுவனே.

(இ - ள்.) காணாத - (இதுவரையிலுங்) கண்டிராத, புதுமை பல - பல அற்புதச்செய்கைகளை, காட்டுவன் - காண்பிப்பேன்; கட்செவிகள் எட்டை

யும் - அஷ்டநாகங்களையும், எடுத்து ஆட்டுவென் - படமெடுத்து ஆடச்செய் வேன்; கடல் - எழுகடல்களையும், பருகுவன்-குடிப்பேன்; பெரிய—, கனக வரையை - பொன்மயமான மேருமலையை, சிறிய—, கடுகினில் - கடுகினுள் ளே, அடைத்து வைப்பன் - அடங்கும்படி சேர்த்துவைப்பேன்; வீண் ஆரவா ரம் - வீணான பேரொலியை, முது அண்டம் உற - பழைய அண்டங்களி லெல்லாம் பொருந்தும்படி, விளைவிப்பன் - உண்டாக்குவேன்; இரவு பகல் மாறுவென் - இரவைப் பகலாகவும் பகலை இரவாகவும் மாறச்செய்வேன்; விண்ணையும் - ஆகாயமுழுவதையும், மறைப்பன் - மறைப்பேன்; எழு மண்ணையும் - ஏழு உலகங்களையும், எடுப்பன் - எடுப்பேன்; இவை-இவைக ளெல்லாம், விளையாடும் வித்தை அன்று - விளையாட்டாகச்செய்யுஞ் சிறந்த தொரு ஜாலவித்தையல்ல; இனி—, திருவரங்கத்து—, நீள் நாகணை பள்ளியில்-நீண்ட ஆதிசேஷனாகிய திருப்பள்ளிமெத்தையின்மேல், நெடிது ஊழி - நெடியபலஊழிகாலமாய், துயிலும் - திருக்கண்வளர்கின்ற, பிரான் - எம்பெருமான், நெறிக்கண் ஆனவனை - நெற்றியில் நெருப்புக்கண்ணையுடைய சிவனையும், நான்முகனை - பிரமனையும், வாசவனை - இந்திரனையும், திமிரும்- விளங்குகின்ற, இரு சுடரை - சந்திர சூரியர்களையும், முதலா - முதலான, சேணுடர் யாவரையும் - தேவர்களனைவரையும், அடிமை கொண்டு-(தமக்கு) அடிமையாகக் கொண்டு, அவர் அவர் சிரத்தில் - அவ்வத்தேவர்களது தலைக ளில், பொறித்துவிட்ட-அடையாளஞ்செய்துவைத்த, திரு சக்கரம் பொறி - அழகிய சக்கரமுத்திரை, இலாத-உடைத்தாகாத, ஒரு கடவுளை-ஒருதெய்வ த்தை, தேடி - தேடிக்கொண்டுவந்து, முன் விடுவென் - முன்னேவிடுவேன்.

இந்திரஜாலம் முதலிய மாயவித்தை வல்லவர் தமது சிறப்பைத் தாமே எடுத்துக் கூறுவதாகச் செய்யுள் செய்வது, சம்பிரதம் என்னும் உறுப்பாம்.

என்றது, எம்பெருமானது சக்கரப்பொறியில்லாத ஒரு தேவதாந்த ரம் எவ்வுலகிலுமில்லையாதலால், அப்படிப்பட்ட தேவரைத் தேடிக்கொணர் தல் அருமை யென்பது தோன்ற, இனித் தேடிமுன்விடுவேனென அரு மை அறிவித்ததெனக் கொள்க. இனி, அங்ஙனம் திருமாலினது சக்கரப் பொறி யில்லாத தெய்வத்தை முன்னே துறந்துவிடுவே னென்னும் பொ ருளும் இங்குத் தோன்றும்.

கட்செவி - கண்களையே காதுகளாகவும் உடையது; 'சக்ஷுஃச்ர வா:' என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. அஷ்டமகா நாகங்க ளாவன—வாசுகி, அநந்தன், தக்ஷகன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன்; இவை, முறையே கிழக்குமுதலிய எட்டுத் திக்குக்களிலும் நின்று ஆதிசேஷனுக்குத்துணையாய்ப் பூமியைத் தாங்குவன. எடுத்து-தூக்கியென்றுமாம். ஆரவாரம்-ஆரவாரவமென்ற வடமொழியின் சிதைவு. ஊழி - யுகம். சேணுடர் - உயர்ந்த சுவர்க்கலோகத்தி லுள்ளவர். திருச்சக்கரப்பொறி - ஸ்ரீசக்கராங்கம். சம்பிரதம் - ஜாலவித்தை.

இது, பெரும்பாலும் முதலைந்துசீர்களுங் காய்ச்சீர்களும், மற்றையிரண் டும் மாச்சீர்களுமாய் வந்தது அரையடியாகவும், அஃதுஇரட்டிகொண்டது ஓரடியாகவும் நின்ற பதினான்குசீராசிரியவிருத்தம். (சக)

[இடமணித்தென்றுதல்.]

முன்னமேழ்புரவியாரிரவிகாய்வெயிலினன்
முத்தரும்பியகலாமுழுமதித்திருமுகத்
தன்னமேயின்னமோர்காவதம்போதுமே
லகலுமிப்பாலையப்பாலரைக்காவத
மென்னையாளுடையவன்றுயிலராவமளியு
மிலகுபொற்கோயிலுமிந்துவின்பொய்கையும்
புன்னைவாய்நீழலும்புரிசையும்மதுகரம்
பூவிரித்துறையுமக்காவிரித்துறையுமே.

(இ - ள்.) முன்னம் - எதிரில், ஏழ் புரவி ஆர் இரவி - ஏழுகுதிரைகள் பூண்ட (தேரினையுடைய)சூரியன், காய்-எறிக்கின்ற, வெயிலினால்—, முத்து அரும்பிய - முத்துப்போலும் வேர்வை பொடித்த, கலா முழு மதி - கலைகள் நிறைந்த பூர்ணசந்திரன்போன்ற, திரு முகத்து - அழகிய முகத்தையுடைய, அன்னமே - (நடையால்) அன்னம்போன்றவளே!—இன்னம் ஓர் காவதம் - இன்னமொரு காததூரவழி, போதும் ஏல் - போவோமாயின், இ பாலை அகலும்-இந்தப்பாலைநிலம் நீங்கும்; அப்பால் - அதுநீங்கினபின்பு, என்னை ஆளுடையவன் - என்னை அடிமையாகக் கொண்ட எம்பெருமான், துயில் - அறிதுயிலமர்கின்ற, அரா அமளியும் - சர்ப்பசயனமும், இலகு பொன் கோயிலும் - விளங்குகின்ற பொன்மயமான திருக்கோயிலும், இந்துவின் பொய்கையும் - சந்திரபுஷ்கரிணியும், புன்னை வாய் நீழலும் - புன்னைமரத்தினது வாய்ப்பாகிய நிழலும், புரிசையும் - மதில்களும், மதுகரம் - வண்டுகள், பூ விரித்து உறையும் - மலர்களை விரித்துப் படிந்து தேனுண்ணுகின்ற, அ காவிரி துறையும் - அந்தக் காவேரிதீரமும், அரை காவதம் - அரைக்காததூரமே; (எ - று.)

எனவே, அவ்வளவும் நீ தளராமல் வரவேண்டு மென்றபடி. இது, தலைமகளை உடன்கொண்டுபோகின்ற தலைமகன், அவள் இடைவழியிற் பாலைநிலத்திற் செல்லும்போது வெயிலால் மிகவும்வருந்தி இளைப்புற்றது நோக்கி, அவளுக்கு வழிநடையிளைப்புத் தோன்றுதிருத்தற்பொருட்டு அவளைத் தான்போகுமிடத்தின் அணிமை கூறி ஆற்றியது. "கொடுங்கடஞ்சூழ்ந்த குழைமுகமாதர்க்குத், தடங்கிடங்கு சூழ் தன்னகர் காட்டியது" என்ற கொளுவையுங் காண்க.

தலைமகனும் தலைமகளும் தாம் விட்டுப்பிரியாது ஒருவர்க்கொருவர் தனிநிழலாயிருக்கையாலே இவர்களுக்குக் கொடிய இந்தப்பாலைநிலத்தின் கொடுமையா லுண்டாகும் இளைப்பு இல்லையே யாகிலும் பொழுது போக்குக்காகத் தலைவன் தலைவியை நோக்கி இங்ஙனங் கூறினதென்றலு முண்டு. நீர்வளமுள்ள மருதநிலத்து வாழும் அன்னப்பறவை போன்ற இத்தலைவிக்கு இந்தக் கொடியபாலை வருத்தத்தை விளைக்குமென்பது தோன்ற, 'இரவிகாய் வெயிலினன் முத்தரும்பிய கலாமுழுமதித் திருமுகத்தன்னம்' என்றான்; அப்பால் அரைக்காவதம் சென்றவாறே அங்கு அன்

னத்துக்கு உவப்பாகிய சந்திரபுஷ்கரிணி காவிரியாற்றுத்துறை முதலியன உளவாகக் கூறியதுங் காண்க. இவ்வாறு கூறியதனால், பாலைநிலத்தால் வந்த வெம்மையையும் போக்கி நமக்கு ஏகஷகமு மான தேசங்காண் அது; இந்தப் பாலைநிலமேயன்றி இன்னமும் சிலபாலைவனமும் கடக்கலா மென்பது தொனிக்குமாறு காண்க.

காவிரித்துறையும் புரிசையும் கோயிலும் புன்னைநீழலும் இந்துவின் பொய்கையும் அராவமளியுந் தோன்றுமென்று முறைப்படுத்தி யுரைக்க; பாடக்ரமத்திலும் அர்த்தக்ரமம் வலியுடைத்தென்பது நியாயமாதலால். புன்னைமரம் சந்திரபுஷ்கரிணியின்கரையிலுள்ளது; இந்தவிருக்ஷத்தைப்பற்றிஸ்ரீ பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் மிகவும் பாராட்டி அருளிச்செய்திருத்தல் காண்க. சூரியனது தேர்க்குதிரைகள் ஏழென்னுந்தொகையின வென்பாரும், ஏழெனப் பெயர்பெற்ற குதிரையொன்றே யென்பாரும், எழுகுதிரைகளுண்டு அவற்றுள் ஏழெனப்பெயர்பெற்றதொன் றென்பாரும் உளர். முன்னங்காய் வெயில் - எதிர்வெயில்.

இது, எல்லாச்சீரும் விளச்சீர்களாகிய எண்சீராசிரியவிருத்தம். (ருO)

[தோழி தலைமகனது இரவுக்குறி விலக்கல்.]

துறைமதியாமலிக்கான்யாறுநீந்திச்சுரங்கடத்த
னிறைமதியாளர்க்கொழுக்கமன்று னெடுமாலரங்கத்
திறைமதியாவருமாராவமிர்தன்னவிந்துநுதற்
குறைமதியாள்பொருட்டாற்கங்குல்வாரலெங்கொற்றவனே.

(இ - ள்.) எம் கொற்றவனே - எமது தலைவனே!—துறை மதியாமல் - செல்லும் வழியை நன்றாகஆராயாமல், இ கான் யாறு நீந்தி - இக்காட்டாற்றை நீந்திக் கடந்து, சுரம் கடத்தல் - கொடியகாடுகளைத் தாண்டிவருதல், நிறை மதியாளர்க்கு - நிறைந்த அறிவினை யாளுந்தன்மையுடையார்க்கு, ஒழுக்கம் அன்று-நல்லொழுக்கமன்று; ஆல் - ஆகையால்,—அரங்கத்து இறை - அரங்கநாதராகிய, நெடு மால் - நீண்ட திருமால், மதியா - (திருப்பாற்கடலைத் தேவர்களோடு) கடையாமலே, வரும் - தோன்றின, ஆரா அமிர்து அன்ன - தெவிட்டாத அமிருதத்தை யொத்த, இந்து நுதல் குறை மதியாள்பொருட்டால் - பிறைச்சந்திரன்போன்ற நெற்றியையுடைய இவள் நிமித்தமாக, கங்குல் - இராத்திரியில், வாரல் - வருதலை (இனி)ஒழிவாயாக.

இயற்கைப்புணர்ச்சிபெற்ற தலைமகன் பின்பு தலைமகளது தோழியினுதவியைக்கொண்டு தலைமகளைப் பகலிலும்இரவிலும் களவுநெறியில் ஏகாந்தத்திலே சந்தித்தல் இயல்பு; அது, பகற்குறி இரவுக்குறி எனப்படும். தலைமகனது வேண்டுகோளின்படி ஒருநாள் இரவிற் குறிப்பிட்டதொரு சோலையினிடத்தே அத்தலைமகனையும் தலைமகளையும் சந்திக்கச்செய்த தோழி,பின்பும் அக்களவொழுக்கத்தையே வேண்டிய தலைமகனுக்கு, அவன் வரும் நெறியின் அருமையையும், அதுகருதித் தாங்கள் அஞ்சுதலையுங் குறித்து 'நீ எந்தஇடத்திலும் எந்தப்பொழுதிலும் அஞ்சாது வரக்கூடிய

தேகபலம் மனோபலம் தந்திரம் முதலியவற்றை யுடையாயாயினும், நினது வரவு எங்கட்குத் துன்பமாகத் தோன்றுமாதலால், இனி இவ்விருளிடை இங்ஙனம் வரற்பாலையல்லை' என்று விலக்குதல், இச்செய்யுளிற் குறித்த அகப்பொருள் துறை. இது, 'ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி' எனப்படும். (ஆறு-வழி, கிளவி. பேச்சு.) தலைவன்வரும் வழி மிகவும்இன்னாது, நீருடையது, கல்லுடையது, முள்ளுடையது, ஏற்றிழிவுடையது, கள்ளர் புலி கரடி யானை பாம்பு முதலிய கொடியபிராணிகளை யுடையது என்று கவலுங் கவற்சியாற் சொல்லுவதென்க. இதில், மெய்ப்பாடு - அச்சம். இதன்பயன் - வெளிப்படையாக வந்து மணஞ்செய்துகொள்ளுதலை வற்புறுத்துதல். ஐவகை நிலங்களுள் மலையும் மலைசார்ந்தஇடமும் குறிஞ்சியாமென்பதும், "புணர்தல் நறுங்குறிஞ்சி" என்றபடி புணர்ச்சி குறிஞ்சித்திணைக்குரிய பொருளென்பதும், "குறிஞ்சி, கூதிர் யாம மென்மனார் புலவர்" என்றபடி பெரும்பொழுதினுட் சரத்காலமும் சிறுபொழுதினுள் நள்ளிரவும் குறிஞ்சிக்குஉரிய காலமென்பதும் அறியத்தக்கன. "உள்ளமஞ்சாய் வலியாய் வலியார்க்குமுபாயம்வல்லாய், கள்ள மஞ்சாயுதங் கைவருமாயினுங் கங்குலினில், வள்ளமஞ்சார்பொழில் வேங்கடக்குன்றினில் வீழருவிப்,பள்ளமஞ்சாரல் வழிவரில் வாடு மிப்பாவையுமே" என்ற திருவேங்கடத்தந்தாதியையும் காண்க.

துறைமதித்தல் - இது செல்லுந் துறை, இது செல்ல வொண்ணாத் துறையென ஆராய்தல். திருப்பாற்கடல் கடைந்தகாலத்து அதினின்று தோன்றிய தேவாமிருதத்தினும் மேலானவ ளென்பார், 'மதியாவருமாரா வமிர்து' என்றனர். வாரல் - வா என்னும் பகுதியிற் பிறந்த எதிர்மறைவியங்கோள். நிரிபணி.

இது, நிரையசை முதலதான கட்டளைக்கலித்துறை. (௬௧)

[மறம்.]

கொற்றவன்றன்றிருமுகத்தைக்கொணர்ந்ததூதா
குறையுடலுக்கோமறவர்கொம்பைக்கேட்டா
யற்றவர்சேர்திருவரங்கப்பெருமாடோழ
னவதரித்ததிருக்குலமென்றறியாய்போலு
மற்றதுதான்றிருமுகமேயானலந்த
வாய்செவிகண்மூக்கெங்கே மன்னர்மன்னன்
பெற்றவிளவரசானாலின்கொம்பைப்
பிறந்தகுலத்துக்கேற்கப்பேசுவாயே.

(இ - ள்.) கொற்றவன்தன்-வெற்றியையுடைய வேந்தனது, திருமுகத்தை—, கொணர்ந்த - கொண்டுவந்த, தூதா-தூதனே!—குறை உடலுக்கோ- (முகமில்லாத) முண்டத்துக்கோ, மறவர் கொம்பை - வேடர்களாகிய எங்களது பூங்கொம்பை, கேட்டாய் - (மணஞ்செய்து தரும்படி) கேட்டாய்; (எங்கள் குலம்), அற்றவர் சேர் - இருவகைப்பற்றுமற்று முற்றத்துறந்த முனிவர்களெல்லாம் அடைக்கலமடைகின்ற, திருவரங்கப்பெருமாள் - திரு

வரங்கத்திலெழுந்தருளியிருக்கின்ற நம்பெருமாளது, தோழன் - நண்பனாகிய குகப்பெருமாள், அவதரித்த - திருவவதாரஞ் செய்த, திரு குலம் என்று-மேன்மையான குலமென்று, அறியாய்போலும் - (நீ) அறிந்திலைபோலும்; அது-நீ கொணர்ந்தது, திருமுகமே ஆனால்—, அந்த-அதன் உறுப்பாகிய, வாய் செவி கண் மூக்கு எங்கே—? மன்னர் மன்னன் பெற்ற-அரசர்க்கரசனாகிய சக்கரவர்த்தி பெற்ற, இள அரசு ஆனால் - இளைய அரசானால், பிறந்த குலத்துக்கு ஏற்க-அதுதான் பிறந்தகுலத்திற்குப் பொருந்த, ஆலின் கொம்பை-ஆலமரத்தின் கொம்பை,பேசுவாய்-மணம்பேசுவாயாக; (எ-று.)

தமதுமகளை மணம்பேசும்படி அரசரால் அனுப்பப்பட்ட தூதனைநோக்கி மறவர்கள் மணம்மறுத்து அவ்வரசரை இகழ்ந்து பேசினதாகச் செய்யுள் செய்வது, மறம்என்னும் உறுப்புக்கு இலக்கணமாம். இதனை மகட்பாற்காஞ்சி யென்னும் துறையின் இனமாகக் கூறுவர். மகட்பாற்காஞ்சியென்பது-புறப்பொருள்திணை பன்னிரண்டனுள் காஞ்சித்திணைக்கு உரிய பலதுறைகளில் ஒன்று. அதாவது - நின்மகளை எனக்குத்தருக வென்று சொல்லும் அரசனோடு மாறுபடுவது; "ஏந்திழையாட்டருகென்னும், வேந்தனோடு வேறு நின்றன்று—அளியகழல்வேந்தரம்மாவரிவை, யெளியளென்றெள்ளியுரைப்பிற் - குளியாவோ, பண்போற்கிளவிப்பல்வளையாள் வாண்முகத்த, கண்போற் பகழி கடிது" என்ற புறப்பொருள்வெண்பாவைக் காண்க. "மணித்தாரரசன்றன்னோலையைத்தூதுவன்வாய்வழியே, திணித்தாசழியச்சிதைமின் றலையையெந்தீவினையைத், துணித்தான் குருகைப்பிரான் றமிழாற் சுருதிப் பொருளைப், பணித்தான் பணியன்றெனிற் கொள்ளுங்கொள்ளு மெம்பாவையையே" என்னுஞ் சடகோபரந்தாதிச் செய்யுள் கருதத்தக்கது.

திருவரங்கநாதனுக்கே உரிமை பூண்பவளான தமதுமகளை மணம்பேசும்படி ஓர்அரசனால் ஓலைகொடுத்துஅனுப்பப்பட்டதூதன் அவ்வரசன்கட்டளைப்படி தம்பக்கல்வந்துஓலைகொடுத்துச் சிலவார்த்தைகூறிமணம்பேசுவானாக, அம்மகட்குஉரியார் மிகக்கோபங்கொண்டு அந்தமணப்பேச்சை மறுத்து அவ்வரசனைக்குறித்துப் பரிகசித்துக் கூறினரென்க. திருவரங்கநாதனுக்கே அடிமைபூண்ட எமதுஉயிர் பிறிதொரு கடவுளர்க்கேனும் மானிடர்க்கேனும் உரிமைபூணாது என்று, அங்ஙனம் பிறர்க்கு ஆட்படுத்த முயல்வாரைநோக்கி ஐயங்கார் கடிந்து கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள்.

ஓலையைத் திருமுகமென்பது,குழூஉக்குறி. மறவர்கொம்பென்றது,தம்மைப் பிறர்போற்கூறிய படர்க்கை; இடவழுவமைதி. கொம்பு-பூங்கொம்பு போன்ற பெண்ணுக்கு உவமவாகுபெயர். அற்றவர்சேரென்பதற்கு - வேறு புகலிடமில்லாதவர்களாய் யாவருமடைகின்ற வென்றும் பொருள்கொள்ளலாம். குகன் தோழனானது, ஸ்ரீராமாவதாரத்தில். போலும்-ஒப்பில்போலி. மற்று - வினைமாற்று. அரசென்னும் பண்புப்பெயர், அரசனுக்கு ஆகுபெயர். திருமுகமென்பதில் அழகியமுகமென்றும்,கொம்பென்பதில் மரத்தின்கொம்பென்றும், அரசென்பதில் அரசமரமென்றும் பொருள்கொள்ளக்கிடத்தலால், இங்ஙனங் கூறினர்.

**இது, பதினைந்தாங் கலிபோன்ற எண்சீராசிரியவிருத்தம். (ருஉ)**

[இதுவும் அது.]

பேசவந்ததூதசெல்லரித்தவோலைசெல்லுமோ
பெருவரங்களருளரங்கர்பின்னைகேள்வர்தாளிலே
பாசம்வைத்தமறவர்பெண்ணைநேசம்வைத்துமுன்னமே
பட்டமன்னர்பட்டதெங்கள்பதிபுகுந்துபாரடா
வாசலுக்கிடும்படல்கவித்துவந்தகவிகைமா
மகுடகோடிதினையளக்கவைத்தகாலுநாழியும்
வீசுசாமரங்குடிற்றொடுத்தகற்றைசுற்றிலும்
வேலியிட்டதவர்களிட்டவில்லும்வாளும்வேலுமே.

(இ - ள்.) பேச-(எங்கள்பெண்ணை மணம்) பேசுவதற்கு, வந்த—, தூத-தூதனே!—செல் அரித்த - செல்லினால் அரிக்கப்பட்ட, ஓலை—, செல்லுமோ—? பெரு வரங்கள் - பெரிய வரங்களை, அருள் - (தம் அடியார்கட்கு) அருளுகின்ற, அரங்கர் - திருவரங்கநாதரும், பின்னை கேள்வர் - நப்பின்னையின் கணவரு மாகிய நம்பெருமாளது, தாளிலே - திருவடிகளிலே, பாசம் வைத்த - அன்பு வைத்த, மறவர் பெண்ணை - வேடர்களாகிய எங்களது மகளை, நேசம் வைத்து - விரும்பி, முன்னமே - முன்னாட்களிலே, பட்டம் மன்னர் - பட்டந்தரித்த அரசர்கள், பட்டது - பட்ட பாடுகளை, எங்கள் பதி புகுந்து - எங்களூரினுள் வந்து, பார்அடா—; வாசலுக்கு இடும் படல் - (எங்கள் வீட்டு) வாசலில் வைத்து மூடும் படல், கவித்து வந்த - (அவர்கள்) பிடித்துவந்த, கவிகை - குடைகளாம்; தினை - தினையரிசிகளை, அளக்க - அளக்கும்படியாக, வைத்த—, காலும் - மரக்கால்களும், நாழியும் - படியும் முதலிய அளவுகருவிகள், மா மகுடம் கோடி - (அவர்கள்தரித்துவந்த) பெரிய கிரீடங்களின் கூட்டமாம்; குடில் தொடுத்த - (எங்கள்) குடிசைக்குமேல் மூடுகின்ற, கற்றை—, வீசு சாமரம் - (அவர்களுக்கு) வீசிவந்த சாமரங்களாம்; சுற்றிலும் - (எங்கள்வீட்டின்) நாற்புறத்திலும், வேலி இட்டது - வேலியாகப் போகட்டது, அவர்கள் இட்ட - அவர்கள் (தோல்வியடைந்து) போகட்டுப்போன, வில்லும் வாளும் வேலுமே—(ஆகும்);(எ-று.)

இவ்வாறு கூறியது, உன்னை யேவிய அரசனுக்கும் இக்கதியே நேருமென்று குறித்தற்கு. "எல்லாம் வெகுண்டார்முன் தோன்றாக்கெடும்" ஆதலால், மிக்ககோபாவேசத்தால் இங்ஙனம் கொடுமைகூறின ரென்க.

செல் - கறையான். மறவர் தாம் எழுத்தறியாதவ ராதலால், எழுத்தெழுதிய ஓலையை 'செல்லரித்தவோலை' என்றார். செல்லுதல் - பயன்படவழங்குதல். 'நேசம்வைத்து' என்பது, ஒருசொல்நீர்மைத்தாய் 'பெண்ணை' என்பதற்குப் பயனிலையாய் நின்றது. வாசல் - வாயிலென்பதன் மரூஉ. படல் - தட்டி. கவிகை - கவிந்திருப்பது. கற்றை - விழல்தொகுதி போல்வன.

இது, எழாஞ்சீரும் ஈற்றுச்சீரும் விளச்சீர்களும், மற்றையவெல்லாம் மாச்சீர்களுமாகிய பதினான்குசீராசிரியவிருத்தம். (ருஉ)

வேலையுல கிற்பிறக்கும் வேலையொழிந் தோமில்லை
மாலையரங் கேசனைநா மாலையினுங்—காலையினு
முன்னினைந் தோமில்லை யுடலெடுத்த வன்றுமுத
லென்னினைந் தோநெஞ்சே யிருந்து.

(இ - ள்.) நெஞ்சே—!—நாம்—, வேலை உலகில் - கடல்சூழ்ந்த இந்த நிலவுலகத்தில், பிறக்கும் வேலை - பிறக்குந் தொழிலை, ஒழிந்தோம் இல்லை - நீங்கிற்றிலோம்; மாலை அரங்கேசனை - ரங்கநாதனாகிய திருமாலை, மாலையினும் காலையினும் - காலையும் மாலையும், உன்னி - தியானித்து, நைந்தோம் இல்லை - மனம்நெகிழ்கிற்றிலோம்; உடல் எடுத்த அன்றுமுதல் - இவ்வுடம்பெடுத்த அந்நாள்முதல், இருந்து என் நினைந்தோம் - வேறு என்ன பெரிய காரியத்தை எண்ணியிருந்தோம்? (எ - று.)

நமது பிறப்புத்தொழிலை நீக்குதற்குக் கடவராகிய திருவரங்கநாதரது மகிமையை உணர்ந்து அவரையே காலைமாலைகளில் தியானிப்பது நமதுகடமையாயிருக்க, அதுசெய்யாது இதுவரை பழுதே பலபகலும் போயினவென்றுஅஞ்சி அதுகுறித்துஅநுதாபங்கொண்டு கழிவிரக்கத்தாற்கூறியது இது.

வேலையுலகிற் பிறக்கும் வேலை யொழியாமைக்குக் காரணத்தை, காலை மாலைகளில் ஸ்ரீரங்கநாதனைத்தியானியாமல் வீண்பொழுது போக்கினமை யெனப் பின்மூன்றடிகளில் விளக்கினர்; தொடர்நிலைச்செய்யுட்குறியணியின்பாற்படும். மடக்குஎன்னுஞ் சொல்லணியும் இதிற் காணத்தக்கது. இனி, நா எனப் பிரித்து - நாவினால், உன்னி - துதித்து என்றுமாம். பிறப்பென்னும்வாய்பாட்டான்முடிந்த இருவிகற்பநேரிசைவெண்பா (௫௪)

[இயலிடங்கூறல்.]

இரும்புவனம்விரும்புவனமணியரங்கர் பணியரங்கரிமயநண்ப, வருங்கொடியின்மருங்கொடியின் மனங்குழைக்குங்கனங்குழைக்கு மனங்கன்சாபக், கரும்புருவம் பொரும்புருவ முத்தநகையொத்தனகைகாந்தள்பூந்தேன், மருங்குழலுங் கருங்குழலு முருதுவளையிருகுவளை மழைக்கண்டாமே.

(இ - ள்.) இரும் புவனம் - பெரிய உலகங்கள் முழுவதையும், விரும்பு - (உணவாக) விரும்பி அமுதுசெய்த, வனம் அணி - வனமாலையை அணிந்த, அரங்கர் - அரங்கநாதரும், பணி அரங்கர் - ஆதிசேஷனைப் பள்ளிகொள்ளுமிடமாக வுடையவரு மாகிய நம்பெருமாளது, இமயம் - இமயமலைபோன்ற மலையினிடத்துள்ள, நண்ப - தோழனே!—கனங் குழைக்கு - (யான் கண்ட) கனமாகிய காதணியையுடைய பெண்ணுக்கு, வரும் கொடியின் - வளர்கின்ற பூங்கொடிபோன்ற, மருங்கு-இடையானது, ஒடியின் - (தான்) ஒல்கினால், மனம் - (ஆடவர்களது) நெஞ்சத்தை, குழைக்கும் - தளரச்செய்யும்; புருவம் - புருவங்கள், அனங்கன் - மன்மதனது, சாபம் - வில்லாகிய, கரும்பு - கரும்பினது, உருவம் - வடிவத்தோடு, பொரும் - போர்செய்யும்

[ஒத்திருக்கு மென்றபடி]; நகை - பற்கள், முத்தம் ஒத்தன - முத்துக்களைப் போன்றனவாகும்; கை - கைகள், காந்தள் - காந்தள்மலர்போலும்; கருங்குழல் - கரிய கூந்தல், பூ தேன் மருங்கு உழலும் - மலர்களில் மொய்க்கின்ற வண்டுகள் பக்கங்களிற் சுழலப்பெறும்; மழை கண் - குளிர்ச்சியை யுடைய கண்கள், முருகு வளை இரு குவளை - வாசனை மிக்குப்பொருந்திய இரண்டு நீலோற்பலமலரை ஒப்பன; (எ - று.)

கலந்துபிரிந்த தலைமகன் பின்பு தனதுதோழனைத் துணையாகக்கொண்டு மீண்டும் அத்தலைமகளைச் சந்தித்தல் முறைமை; அது, 'பாங்கற்கூட்டம்' எனப்படும். அதற்கு உரிய துறைகள் பலவற்றில் 'இயலிடங்கூறல்' என்னுந் துறை இச்செய்யுளிற் கூறியது. அஃதாவது - முதலிற் கலந்துபிரிந்த தலைமகன், பின்பு தன்னையடுத்துத் தன்மெலிவைக் கண்டு 'நீ இவ்வாறு தற்குக் காரணம் என்னோ?' என்று வினவிய பாங்கனுக்கு, 'யான் ஒருத்தி வலையில் அகப்பட்டேன்' என்று உற்றதுகூற, அதுகேட்ட பாங்கன் 'நினது ஒழுக்கம் தக்கதன்று' என்று சிலகூறியபின்பும் தலைமகன் தெளிவுபெறாது வருந்தவே, பாங்கன் இரக்கங்கொண்டு 'நின்னாற்காணப்பட்ட வடிவம் எத்தன்மைத்து?' என்று வினவ, அதுகேட்ட தலைமகன் மகிழ்ச்சிகொண்டு 'என்னாற்காணப்பட்ட வடிவுக்கு இய லிவை' என்று கூறுதல்.

இனி, இரும்புவனம்விரும்புவனமணியரங்க ரென்பதற்கு - பெரிய உலகத்தவர் யாவராலும் விரும்பப்படுகின்ற வனப்பையுடைய நீலமணிபோலும் நிறத்தினையுடைய அரங்கரென்றும், பணியரங்க ரென்பதற்கு - காளியனென்னும் பாம்பைக் கூத்தாடுமிடமாகக் கொண்டவ ரென்றுமாம். இமயம் - பனிமலை. கனங்குழைக்கும், கருங்குழலும், உம்மை - இசைநிறை.

இது, நான்காங் கலி போன்ற அறுசீராசிரியவிருத்தம். (ருரு)

[இதுவும் அது.]

மழைபிறைசிலைவேல்வள்ளையெள்ளிலவின் மலர்முல்லைமதிவளைகழையாழ்
வாரிசங்கெளிறுதத்தைவாய்கலசமணிவடபத்திரமெறும்பூ
ரழகுநீர்த்தரங்கந்துடிசுழிபரவமரம்பைஞெண்டிளவராலமை
யணிதராசிணைகந்துகந்துகிர்தரளமம்புயமரங்கநாடனையார்
குழனுதல்புருவம்விலோசனங்காதுநாசிவாய்நகைமுகங்கண்டங்
குலவுதோண்முன்கையங்கைமெல்விரல்கள்கூருகிர்கொங்கைகண்வயிற
விழைதருமுரோமம்வரையிடையுந்திவிரும்புமல்குற்றொடைமுழந்தாண்
மிளிர்கணைக்கால்கள்புறவடிபரடுமென்குதிவிரனகந்தாளே.

(இ - ள்.) அரங்க நாடு அனையார் - திருவரங்கமாகிய திருநாட்டையொக்கின்ற (யான் கண்ட) மாதராது, குழல் - கூந்தலும், நுதல் - நெற்றியும், புருவம் - புருவங்களும், விலோசனம் - கண்களும், காது - காதுகளும், நாசி - மூக்கும், வாய் - வாயும், நகை - பற்களும், முகம் - முகமும், கண்டம் - கழுத்தும், குலவு தோள் - விளங்குகின்ற தோள்களும், முன்

கை - முன்னங்கைகளும், அங்கை - அகங்கைகளும், மெல் விரல்கள்-மெல்லிய விரல்களும், கூர் உகிர் - கூரிய நகங்களும், கொங்கை - தனங்களும், கண் - முலைக்கண்களும், வயிறு - வயிறும், விழைதரும் - விரும்பப்படுகின்ற, உரோமம் - மயிரொழுக்கும், வரை-வயிற்றின் மடிப்புக்களும், இடை-இடுப்பும், உந்தி - நாபியும், விரும்பும் - விரும்பப்படுகின்ற, அல்குல்-அல்குலும், தொடை - தொடைகளும், முழந்தாள் - முழங்கால்களும், மிளிர் - ஒளி செய்கின்ற, கணைக்கால்கள் - கணைக்கால்களும், புறம் அடி - புறங்கால்களும், பரடு - காற்பரடுகளும், மெல் குதி - மெல்லிய குதிகால்களும், விரல் - விரல்களும், நகம் - நகங்களும், தாள் - பாதங்களும், (ஆகிய இவ்வவயவங்கள் முறையே),—மழை - மேகமும், பிறை - பிறைச்சந்திரனும், சிலை-விற்களும், வேல் - வேல்களும், வள்ளை-வள்ளையிலைகளும், எள் (மலர்)-எள்ளுப்பூக்களும், இலவின் மலர்-இலவம்பூக்களும், முல்லை (மலர்)-முல்லைப்பூக்களும், மதி-பூர்ணசந்திரனும், வளை - சங்கமும், கழை - மூங்கில்களும், யாழ் - வீணையும், வாரிசம் - தாமரைமலர்களும், கெளிறு - கெளிறென்னும் மீன்களும், தத்தை வாய் - கிளியின் வாய்களும், கலசம் - குடங்களும், மணி - நீலமணியும், வட பத்திரம் - ஆலிலையும், எறும்பு ஊர் அழகு - எறும்பு ஊருகின்ற ஒழுங்கும், நீர் தரங்கம் - நீரின் அலைகளும், துடி - உடுக்கையும், சுழி - நீர்ச்சுழியும், அரவம் - பாம்பின் படமும், அரம்பை - வாழைமரங்களும், ஞெண்டு - நண்டுகளும், இள வரால் - இளைய வரால் மீன்களும், ஆமை - ஆமைகளும், அணி தராசு இணை - அழகிய இரண்டு தராசுதட்டுகளும், கந்துகம் - பந்துகளும், துகிர் - பவழங்களும், தரளம் - முத்துக்களும், அம்புயம் - தாமரைமலர்களும், (ஆகிய இவற்றை ஒக்கும்).

எனவே, கருங்குழல் காளமேகத்தையும், நெற்றி பாதிமதியையும், புருவம் வில்லையும், கண் வேலையும், காது வள்ளையிலையையும், மூக்கு எள்ளுப்பூவையும், அதரம் இலவம்பூவையும், தந்தம் முல்லைமலரையும், முகம் பூர்ணசந்திரனையும், கண்டம் சங்கையும், தோள் இளமூங்கிலையும், முன்னங்கை வீணையையும், உள்ளங்கை தாமரைமலரையும், கைவிரல் கெளிற்றுமீனையும், கைந்நகம் கிளிமூக்கையும், கொங்கை கும்பத்தையும், கொங்கைக்கண் நீலமணியையும், வயிறு ஆலிலையையும், அதனிடத்துஉள்ள மயிரொழுக்கு எறும்பொழுக்கையும், வயிற்றுமடிப்பு அலையையும், இடை உடுக்கையையும், கொப்பூழ் நீர்ச்சுழியையும், அல்குல் பாம்பின்படத்தையும், தொடை வாழையையும், முழங்கால் நண்டையும், கணைக்கால் வரால்மீனையும், புறங்கால் ஆமையையும், காற்பரடு தராசுதட்டையும், குதிகால் பந்தையும், கால்விரல் - பவழத்தையும், கால்நகம் முத்தையும், பாதங்கள் தாமரைமலரையும் போலுமெனப் பெயர்ப்பயனிலையும் எழுவாயுமாக வந்த முறைநிரனிறைப்பொருள்கோள்.

இதனுள் கேசாதிபாதபரியந்தம் முப்பத்திரண்டு அவயவங்களும் அவற்றின் உபமானங்களோடு காண்க. மழை - காளமேகம். பிறை-குறைந்தமதி. வள்ளை - அதன் இலைக்கு ஆகுபெயர். மலரை முன்னும் பின்னுங் கூட்டுக. மதி-நிறைந்த சந்திரன். வாரிஜம், அம்புஜம்-நீரில் தோன்றுவது. கெளிறு,

வரால் - மீனின்வகைகள். அரவம் - ஆகுபெயர். ஞெண்டு - போலி. அரங்க நாடனையா றென்றது - கிரதிசய இன்பத்தைத் தருபவ றென்றற்கு. மூன்கை - இலக்கணப்போலி.

இது, இரண்டு நான்கு ஏழாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாய் வந்தது அரையடியாகவும், அஃது இரட்டிகொண்டது ஓரடியாகவும் வந்த பதினுன்குசீராசிரியவிருத்தம். (ருசு)

[கைக்கிளை.]

தாளிரண்டும் பாரொன்றுந் தார்வாடும் வேர்வாடும்
வாளிரண்டுங் காதிரண்டில் வந்திமைக்கும்—கோளிரண்டு
மைவகைப் பூத மமைத்தருள ரங்கர்
மைவளர் சோலை மலையிற்
றெய்வ மல்லளித் திருவுரு வினளே.

(இ - ள்.) தாள் இரண்டும் - இரண்டுகால்களும், பார் ஒன்றும்-பூமியிற் பொருந்தும்;தார்-பூமாலை,வாடும்—;வேர்வு ஆடும்-வியர்வை அரும்பும்; வாள் இரண்டும் - வாள்போலும் இரண்டுகண்களும், காது இரண்டில் வந்து - இரண்டுகாதுகளிலுஞ் சென்று மீண்டுவந்து, இமைக்கும்—; (ஆகையால்), கோள் இரண்டும்-இராகு கேதுக்களென்னுங் கிரகங்களையும்,ஐவகை பூதம் (உம்) - நிலம் நீர் தீ காற்று விசும்பென்னும் பஞ்சபூதங்களையும், அமைத்து அருள்-படைத்துக் காக்கின்ற, அரங்கர்-அரங்கநாதரது, மை வளர் - மேகங்கள் தவழ்கின்ற,சோலைமலையில்-சோலைகளையுடைய மலையினிடத்தே யுள்ளவளாகிய, இ திரு உருவினள் - அழகிய வடிவத்தையுடைய இம்மகள், தெய்வம் அல்லள் - தெய்வமகளல்லள் [மானுடமகளே]; (எ - று.)

இது, பொழில்விளையாட்டு விருப்பால் ஆயம்நீங்க அதன்கண் தமியளாய்நின்ற தலைமகளை வேட்டைவிருப்பால் இளையார் நீங்கத் தமியனாய் வந்த தலைமகன் தனியிடத்திற் கண்டவுடனே இம்மகள் தெய்வமகளோ மானுடமாதரோ வென் றைஐயுற்று நின்று பிறகு இவ்வகைக்குறிகண்டு தெய்வமல்லள், மக்களுள்ளா ளெனத் தெளிந்தது. எனவே, தெய்வமல்லளாதற்குக் காரணம் - இனையன குறியே, வேற்றுமையில்லையென்பது கருத்து: "பாயும் விடையரன் றில்லையன்னாள் படைக்கண் ணிமைக்குந், தோயு நிலத்தடி தூமலர் வாடுந் துயரமெய்தி,யாயுமனனே யணங்கல்ல ளம்மா மூலைசுமந்து, தேயு மருங்குற் பெரும்பணைத்தோ ளிச் சிறுநுதலே" என்றார் திருக்கோவையாரிலும். இது, தெளிதலென்னுந் துறையாம். இது, தலைவன்தலைவியர்களுள் ஒருவருள்ளக்கருத்தை ஒருவர் அறியாத ஒருதலைக்காம மாதலால், கைக்கிளையாயிற்று.

வாள் - உவமவாகுபெயர். காதளவும் நீண்ட கண்களாதலால், 'வாளிரண்டுங் காதிரண்டில் வந்திமைக்கும்'என்றார். கால் நிலந்தோய்தலும், மாலை வாடுதலும், வேர்வை யுண்டாதலும், கண்ணிமைத்தலும் தேவர்களுக்கு

இல்லையென அறிக; "கண்ணிமைத்தலா லடிகள் காசினியிற் றோய்தலால், வண்ண மலர்மாலை வாடுதலா-லெண்ணி, நறுந்தாமரைவிரும்பு நன்னுதலே யன்று, வறிந்தா னவளன்றன்னை யாங்கு" என்றார் புகழேந்தியும். கோள் - க்ரஹமென்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. இராகு கேதுக்களைக் கூறியது, மற்றைக்கிரகங்களுக்கும் உபலக்ஷணம். முற்றும்மையைப் பூதமென்பதனோடுங் கூட்டுக. திருவென்பது-கண்டாரால் விரும்பப்படுந் தன்மை நோக்கம்; என்றது-அழகு. இனி, திருவுருவினள் - திருமகள்போலும் வடிவத்தவ ளென்றுமாம்.

இது, முதல் மூன்று அடிகளும் வெண்பாவடிகளாய், மற்றைய இரண்டும் ஆசிரியவடிகளாய், அவற்றுள்ளும் ஈற்றயலடி முச்சீரதாய் வந்து துணிதலை நுதலிய ஒருதலைக்காம முணர்த்தியதனால், கைக்கிளைமருட்பா. (௫௭)

[ஊசல்.]

உருமாறிப்பலபிறப்பும்பிறந்துஞ்செத்து
  மூசலாடுவதடியேனொழியும்வண்ணங்
கருமாயத்தென்னெஞ்சைப்பலகையாக்கிக்
  கருணையெனும்பாசத்தைக்கயிறுப்பூட்டி
மருமாலைத்துளவசையவாடிரூசன்
  மணிமகரக்குழையசையவாடிரூச
திருமாதுபுவிமாதோடாடிரூச
  றிருவரங்கராசரேயாடிரூசல்.

(இ - ள்.) உரு மாறி - உருவம் மாறிமாறி, பல பிறப்பும் - பலவகைப் பட்ட பிறவிகளிலும், பிறந்தும்—, செத்தும்—, ஊசல் ஆடுவது - ஊஞ்சல் போல அலைவதனை, அடியேன்—, ஒழியும் வண்ணம் - நீங்கும்படி, கரு மாயத்து - மிக்க வஞ்சனையையுடைய, என் நெஞ்சை - எனது மனத்தை, பலகை ஆக்கி - ஊசற்பலகையாக்கொண்டு, கருணை எனும்-(நினது) அருளென்கிற, பாசத்தை—, கயிறு ஆ பூட்டி - ஊஞ்சற்கயிறாக மாட்டி, மரு மாலை துளவு அசைய - வாசனையையுடைய திருத்துழாய்மாலை அசையும்படி, ஊசல் ஆடிர் - ஊசலாடுவீராக; மணி மகரம் குழை - இரத்தினத்தாலாகிய மகரகுண்டலங்கள், அசைய—, ஊசல் ஆடிர்—; திருமாது புவிமாதோடு-பெரியபிராட்டியாரோடும் பூமிப்பிராட்டியாரோடும், ஊசல் ஆடிர்—; திருவரங்கராசரே—! ஊசல் ஆடிர்—; (எ - று.)

யான் பிறப்புநீங்கிப் பரமபதமடையும்படி தேவரீர் அருள்கூர்ந்து எனது மனத்தில் எஞ்ஞான்றும் இடைவிடாது தங்கியிருக்கவேண்டு மென்பதாம். அன்பால் நினைவாராது உள்ளக்கமலம் எம்பெருமானுக்குத் தங்குமிடமாதலால் 'நெஞ்சைப்பலகையாக்கி' என்றும், கடவுளது திருவருள் அவ்வுள்ளத்தைக் கட்டித் தம்வயப்படுத்துதலால் 'கருணையெனும் பாசத்தைக் கயிறுப்பூட்டி' என்றுங் கூறினர். "பொருளலா விடயத்தைப் பொருளென்றெண்ணிப் போவதுமீள்வதுமா யெப்பொழுது மாடு, மருளுலா மனவூசல்

சுத்தஞ் செய்து மாறாது வளர்பத்தி வடத்தைப் பூட்டி, யிருளைநேர் குழனி லப்பெண் ணலர்மேன் மங்கை யிருவரொடு மேயதன்மேலேறி வீறு, மருளி ஞன் மெள்ளவசைந்தாடி ரூச லாதிவடமலைமாய ராடி ரூசல்"என்றார் திரு வேங்கடக் கலம்பகத்தும். இச்செய்யுளில் எம்பெருமான் ஊசலாடத் தாம் ஊசலாடுவது நீங்குமெனக் கூறிய நயம் கருதத்தக்கது. ஊசலாடுதல்தொ ழில் எம்பெருமானைச்சேர அத்தொழில் சேதனராகிய தம்மை விட்டுநீங்கு தலைக் கூறியது - முறையிற்படர்ச்சியணியின்பாற்படும்; இது, வடமொழி யில் பர்யாயாலங்காரம் எனப்படும். இதற்கு உருவகவணி அங்கமாக நின்றது.

இஃது, ஊசல்: அஃதாவது - ஆசிரியவிருத்தத்தாலாதல், கலித்தாழிசை யாலாதல் 'ஆடிரூசல், ஆடாமோவூசல்' என முடிவுகூறக் கூறுவது.

இது, பதினேழாங் கவிபோன்ற ஆசிரியவிருத்தம். (௯௮)

ஊசல்வடம்போ லூர்சகடம்போலொழியாமே
நாசவுடம்போடாவிசுழன்றேநலிவேனோ
வாசவனும்போதாசனனுங்கூர்மழுவோனு
நேசமுடன்சூழ்கோயிலரங்கநெடியோனே.

(இ - ள்.) வாசவனும் - இந்திரனும், போது ஆசனனும் - தாமரை மலரைத் தங்குமிடமாகவுடைய பிரமனும், கூர் மழுவோனும் - கூர்மையாகிய மழுவாயுதத்தையுடைய உருத்திரனும், நேசமுடன் - பக்தியுடனே, சூழ் - சூழ்ந்துவழிபடுகின்ற, கோயில் அரங்கம் - திருவரங்கம் பெரிய கோயிலி லெழுந்தருளியிருக்கின்ற, நெடியோனே—, (அடியேன்), ஊசல் வடம் போல் - ஊஞ்சற்கயிறுபோலவும், ஊர் சகடம்போல் - செல்லுகின்ற வண்டி யின் உருளைபோலவும், ஒழியாமே - ஓய்வில்லாதபடி, நாசம் உடம்போடு - அழியுந்தன்மையையுடைய உடம்புடனே, ஆவி சுழன்றே - உயிர் அலையப் பெற்றே, நலிவேனோ - வருந்தக்கடவேனோ ? (எ - று.)

ஓடி யோடி வருவதும் போவதுமா யிருத்தலால் ஊசல் வடத்தையும், மாறிமாறி உருண்டுகொண்டே யிருத்தலால் ஊர்சகடத்தையும் உவமைகூறி னார். சகடம் - உருளைக்கு ஆகுபெயர். நெடியோன் - பெரிய பெருமாள்.

இது, பதினெட்டாங் கவிபோன்ற கலிநிலைத்துறை. (௯௯)

[தழை]

நேசத்தழைக்குமதயானைமுன்புநின்றோனரங்கம்
பேசத்தழைக்குமென்னன்பனையாய்பெருங்கற்பகத்தின்
வாசத்தழைக்குநறுந்தழைகாணிதுமந்தத்தென்றல்
வீசத்தழைக்குந்தழைபோற்கெடாதுவிலையில்லையே.

(இ - ள்.) நேசத்து - அன்பினாலே, அழைக்கும் - (ஆதிமூலமே யென்று) அழைத்த, மதயானை முன்பு - மதத்தையுடைய கஜேந்திராழ்வான்முன்னே, நின்றோன் - வந்துநின்று காத்தருளின எம்பெருமானது, அரங்கம் - ஸ்ரீரங் கத்தை, பேச - சொல்லுந்தோறும் சொல்லுந்தோறும், தழைக்கும் - மகிழ்

கின்ற, என் - எனது, அன்பு-அன்பை, அனையாய்-ஒத்திருப்பவளே!—இது-இத்தழை, பெருங் கற்பகத்தின் - பெரிய கல்பகவிருக்ஷத்தினது, வாசம் தழைக்கும் - வாசனையையுடைய தழையினும், நறுந் தழை காண் - நறுநாற்றம் மிக்க தழையேகாண்; (இது), மந்தம் தென்றல் - இளந் தென்றற்காற்று, வீச - வீசுதலால், தழைக்கும் - தழைக்கின்ற, தழைபோல் - (மற்றை மரங்களின்) தழையைப்போல, கெடாது - (பின்பு) வாடிப்போகாது; (அதுவேயுமன்றி), விலை இல்லை - (இத்தழைக்கு) விலையும் இவ்வளவென்று ஓர் அறுதி இல்லை; (ஆதலால், இதனை நீ ஏற்றுக்கொள்வாயாக); (எ - று.)

இத்துறை, தலைமகளைக் குறைநயப்பித்துச் சேட்படைகூறத் துணியாநின்ற தோழியிடைத் தலைமகன் தழைகொண்டு சென்று 'இத்தழையை வாங்கிக்கொண்டு என்குறைமுடித்தருளுவீராம்' என்றுவேண்டிக் கையுறையாகக் கொடுக்க, அதனை அரிதின் ஏற்றுக்கொண்ட தோழி, தலைமகளிடஞ் சென்று அவள்குறிப்பறிந்து 'இத்தழை நமக்கு எளிய தொன்றன்று; இதனை ஏற்றுக்கொள்வாயாக' எனத் தலைமகளைத் தழையேற்பித்தது.

இது, நேரசை முதலாக நின்ற கட்டளைக்கலித்துறை. (௯௰)

[முத்தம்.]

விலையானதிலையென்றுநீதந்தமுத்தம்
வேய்தந்தமுத்தாகில்வெற்பாவியப்பா
லிலையார்புனற்பள்ளிநாராயணன்பா
லெந்தாயரங்காவிரங்காயெனப்போய்த்
தலையாலிரக்கும் பணிப்பாய்சுமக்குந்
தன்றாதையவர்தாமரைத்தாள்விளக்கு
மலையாறுசூடும் புராணங்கள்பாடு
மாடும் பொடிப்பூசியானந்தமாயே.

(இ - ள்.) வெற்பா-மலைநாடனே!—விலையானது இலை என்று-இதற்கு விலையில்லையென்றுசொல்லி, நீ தந்த முத்தம் - நீ கொடுத்த முத்தானது, வேய் தந்த முத்து ஆகில் - மூங்கில்பெற்ற முத்தானால், (அது), வியப்பு - அதிசயிக்கும்படி, ஆல்இலை - வடபத்திரத்தில், ஆர் புனல் - நிறைந்த பிரளயநீரில், பள்ளி - பள்ளிகொண்டருளுதலையுடைய, நாராயணன்பால் - ஸ்ரீமந்நாராயணனிடத்தில், போய்—, 'எந்தாய் - எனது தலைவனே! அரங்கா—! இரங்காய் - இரங்கியருளவேண்டும்,' என-என்று பிரார்த்தித்து, தலையால் - பிரமகபாலத்தைக்கொண்டு, இரக்கும் - பிச்சையெடுக்கும்; பணிப்பாய் சுமக்கும் - (அந்நாராயணனது) பாயாகிய பாம்பைச் சுமந்துகொண்டிருக்கும்; தன் தாதை - தன்னுடைய தகப்பனாகிய பிரமன், அவர் தாமரை தாள் விளக்கும் - அந்நாராயணனது திருவடித்தாமரைகளைத் திருமஞ்சனஞ்செய்ததனாலுண்டான ஸ்ரீபாததீர்த்தமாகிய, அலை ஆறு - அலைகின்ற நதியை [கங்கையை], சூடும் - தலைமேல் தரிக்கும்; புராணங்கள் - புராணங்களை, பாடும்—; ஆனந்தமாய் - (இங்ஙனம் இரந்து சுமந்து சூடிப்

பாடுதலாலுண்டான) பேரானந்தத்தால், பொடி பூசி - விபூதியை அணிந்து கொண்டு, ஆடும் - நர்த்தனஞ்செய்யும்; (எ - று.)

இது, முத்தைக் கையுறையாகக் கொண்டுசென்ற தலைமகனைத் தோழி தன்சாதுரியத்தால் அதன் சிறப்பின்மை கூறி மறுத்தது.

இத்தன்மையொன்றும் இல்லாமையால், அம்முத்தமன்று என்றவாறு. இதன்கருத்து - வேய்தந்தமுத்த மென்றது உருத்திரனையாதலால், அவன் விஷ்ணுவினிடத்தே செய்ததனை விநோதமாக விவரித்தா ரென்பர்.

வேதங்கள் பிரளயகாலத்தில் தமக்கு ஆபத்து ஒன்றும் இல்லாதிருக்க வேண்டுமென்று பிரார்த்தித்தபடி, சிவபிரானது கருணையினால் அவை மூங்கிலாக வந்து பிறக்க, அவற்றில் தான் முத்தாகத் தோன்றினனாதலால், சிவபிரானை இங்கு 'வேய்தந்தமுத்து' என்றார். (மூங்கில் முத்துப்பிறக்குமிடங்கள் இருபதில் ஒன்று; "தந்தி வராகமருப் பிப்பி பூகந் தழைகதலி, நந்துசலஞ்சல மீன்றலை கொக்கு நளின மின்னார், கந்தரஞ் சாலி கழை கன்னலாவின்பல் கட்செவி கா ரிந்து வுடும்பு, கரா முத்தமீனு மிருபதுமே" என்றது காண்க.)

ஸர்வேச்வரன் எல்லாவுலகங்களையுந் தன்ஒருவயிற்றி லடக்கிக்கொண்டு சிறியவடிவத்தோடு சிறியதோராலிலையிற் பள்ளிகொண்டருளுதலால் 'வியப்பாலிலையார் புறைப்பள்ளி நாராயணன்' என்றும், உருத்திரன் நாகாபரணனாதலால் 'பணிப்பாய் சுமக்கும்' என்றும், அவன் விஷ்ணுவிஷயமாகப் பல புராணங்களைப்பாடியிருத்தலால் 'புராணங்கள்பாடும்' என்றுங் கூறினார். முன்னும் "சாத்திய மாலையுந் தாள்விளக்கும் வானந்தருங் கங்கைநன்னீருஞ் சென்னியில் வைக்கப்பெற்ற, வானந்தந்தா னல்லவோ முக்கணான் மன்றுளாடுவதே" என்றார்.

இது, நான்கும் எட்டும் மாச்சீர்களும், மற்றவை காய்ச்சீர்களுமாகிய எண்சீராசிரியவிருத்தம். (கூக)

[தவம்.]

ஆனந்தமாயரங்கற்கேயுயிர்களடிமையென்னு
ஞானந்தனாலைம்பொறிவாசல்சாத்திநற்றாளைப்பற்றி
யீனந்தரும்பற்றுமற்றென்றும்யானெனதென்னுமபி
மானந்தவிர்ந்திருப்பார்க்கிதுபோலில்லைமாதவமே.

(இ - ள்.) அரங்கற்கே-திருவரங்கநாதனுக்கே, உயிர்கள்-எல்லாஆத்துமாக்களும், அடிமை என்னும் - அடிமையென்று அறிகின்ற, ஞானந்தனால்-தத்துவஞானமாகிய கதவினாலே, ஐம் பொறி வாசல் - (மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும்) பஞ்சேந்திரியங்களாகிய வாயில்களை, சாத்தி - அடைத்து [ஐம்புலன்வழியே செல்லவொட்டாமல் மனத்தை அடக்கிவைத்து], நல் தாளை-(அவனது) நல்ல திருவடிகளை, பற்றி-சரணமாக அடைந்து, ஈனம் தரும் - இழிவைத்தருகின்ற, பற்றும்-ஆசைகளும், அற்று - நீங்கப்பெற்று, யான் எனது என்னும் அபிமானம்-அகங்கார மமகாரங்கள், தவிர்ந்து-

நீங்கப்பெற்று, என்றும் - எந்நாளும், ஆனந்தம் ஆய் - பேரானந்தமடைந்து, இருப்பார்க்கு - இருப்பவர்களுக்கு, இதுபோல் - இங்ஙன மிருத்தல்போன்ற, மா தவம் - பெரிய தவம், இல்லை - வேறுஇல்லை; (எ - று.)

தவத்தை விலக்கிப் பகவத்தியானத்தை வற்புறுத்துதல், தவம் என்னும் உறுப்பின் இலக்கணம்.

'ஆத்மா எம்பெருமானுக்கே யடிமை' என்ற ஸ்வஸ்வரூபத்தை யுணர்ந்து, ஐம்புலன்களிற் செல்லாமல் எம்பெருமானிடத்து மனம்வைத்து அகப்பற்றுப் புறப்பற்றுக்களை யொழிதலே மிகச்சிறந்த தவ மென்பதாம். "நெறிவாசல்தானேயாய் நின்றானை யைந்து,பொறிவாசல் போர்க்கதவஞ் சார்த்தி - யறிவான்" என்றார் பூதத்தாரும். பொறிவாசல் சாத்தி யென்றதற்கேற்ப, ஞானமாகிய கதவு எனப்பட்டது. "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்" என்ற திருக்குறள் இங்குக் கருதத்தக்கது. பிறவிப்பிணிக்கு மருந்தாகலின், நற்றா ளென்றார். அபிமானம் - செருக்கு.

இது, நேர் முதலாகிய கட்டளைக்கலித்துறை. (கூஉ)

[இதுவுமது.]

மாதவங்களென்றோதவங்களின் மருவுசீவனெனன்றொருவநீபெரும்
பூதமல்லையிந்திரியமல்லையைம் புலனுமல்லைநற்புந்தியல்லைகாண்
சீதரன்பரந்தாமன்வாமனன் றிருவரங்கனுக்கடிமை நீ யுனக்
கேதுமில்லையென் றறி யறிந்தபின் னீதின்மாதவமில்லையெங்குமே.

(இ - ள்.) மா தவங்கள் என்று - பெரிய தவங்க ளென்று, ஓது - சொல்லப்படுகின்ற, அவங்களில் - வீண்தொழில்களில், மருவு - பொருந்துகின்ற, சீவன் என்ற - ஆத்துமாவென்கின்ற, ஒருவ - ஒருத்தனே!—நீ—, பெரும் பூதம் அல்லை - பெரிய பஞ்சபூதங்களு மல்லாய்; இந்திரியம் அல்லை- பஞ்சேந்திரியங்களு மல்லாய்; ஐம்புலனும் அல்லை - பஞ்சதந்மாத்திரைகளு மல்லாய்; நல் புந்தி அல்லை காண் - நல்ல அறிவு மல்லாய்காண்: (பின்னை என்னையென்றால்),—நீ—, சீதரன் - திருமகளைத் (திருமார்பில்) தரிப்பவனும், பரம் தாமன் - பரமபதத்தை யுடையவனும், வாமனன்- (மாவலியின் செருக்கை அடக்குவதற்கு) வாமநாவதாரஞ் செய்தவனுமாகிய, திருவரங்கனுக்கு—, அடிமை - அடியவன்; உனக்கு—, ஏதும் - யாதொரு சுவதந்திரமும், இல்லை—, என்று அறி—; அறிந்த பின் - (அங்ஙனம்) அறிந்தால், ஈதின் - இதுபோன்ற, மா தவம்—, எங்கும் இல்லை—; (எ - று.)

இதனால், தம்மனத்துக்குத் தாமே உபதேசிக்கும் முகத்தால், ஜீவாத்மஸ்வரூபம் இத்தன்மையதென்று விளக்குகின்றன ரென்க. எளிதிற் பயன் கொடாது துன்பந்தருவன வாதலால், 'தவங்களென்றோ தவங்கள்' என்றார். என்றொருவ - தொகுத்தல். ஐந்தைப் பூத இந்திரியங்களோடுங் கூட்டுக. அறிந்தபின் - பின்னீற் றெதிர்கால வினையெச்சம்.

இது, முதல் மூன்று ஐந்து ஏழாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாகிய எண்சீராசிரியவிருத்தம். (கூங)

[தலைவி இரங்கல்.]

எங்காந்தளங்கைநல்லீ ரென்செய்கே னிரண்டேந்திழையார்
தங்காந்தனென்றறிந்தாலுநில்லாது தரைக்குநெய்க்கு
மங்காந்தசெம்பவளத்தெம்பிரானரங்கன்புயங்கள்
செங்காந்தமால்வரையோ விரும்போவென்றன்சிந்தனையே.

(இ - ள்.) எம் - எமது (தோழியராகிய), காந்தள் அம் கை நல்லீர் - காந்தள்மலர்போலும் அழகியகைகளையுடைய நல்லமகளிர்களே!—இரண்டு ஏந்திழையார்தம் காந்தன் என்று - தரித்த ஆபரணங்களையுடைய (திருமகள் நிலமகளென்னும்) இரண்டு பிராட்டிமார்களிடத்து ஆசைகொண்ட கணவனென்று, அறிந்தாலும்—, (என் மனம்), நில்லாது - (விரும்பிப் பின்செல்லாமல்) தரித்து நிற்காது; என் செய்கேன் - (யான்) என்ன செய்வேன்? தரைக்கும் - உலகங்களை உண்ணுதற்கும், நெய்க்கும் - நெய்யைப் பருகுதற்கும், அங்காந்த - திறந்த, செம் பவளத்து - சிவந்த பவழம்போன்ற திருவாயையுடைய, எம் பிரான் - எமது பெருமானாகிய, அரங்கன் - ரங்கநாதனது, புயங்கள் - திருத்தோள்கள், செங் காந்தம் மால் வரையோ - அழகிய காந்தத்தாலாகிய பெரிய மலைகளோ? என்தன் சிந்தனை - எனது மனம், இரும்போ—? (எ - று.)

இது, தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடிப் பிரிந்த தலைமகள், அப்பிரிவுத்துயரை யாற்றி யடக்கும் வல்லமையிலளாகி, தனதுநிலைமையை அன்புடைத்தோழியர்க்கு வெளிப்படையாக உரைத்தது. தன் விருப்பத்தை நிறைவேற்றுதற்பொருட்டுத் தோழியரைக் கொண்டாடி யழைப்பவளாய், 'எங்காந்தளங்கைநல்லீர்' என்று புனைந்துரைத்து விளித்தாள். 'செம்பவளத்தெம்பிரான்' என்றது அவரது திவ்வியசௌந்தரியத்திலே தான்கொண்ட ஈடுபாட்டினால்.

தரைக்கு அங்காந்தது - பிரளயகாலத்தில் உலகங்களை வயிற்றில் வைத்துக் காக்கும்பொருட்டு. நெய்க்கு அங்காந்தது - கிருஷ்ணாவதாரத்தில். இருவர் மனைவியருள ரென்று அறிந்தும் அப்பிரானது தோள்கள் இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறுபோலத் தன்மனத்தைத் திரும்ப வொண்ணாமற் கவர்ந்ததனால், இவ்வாறு கூறினாள்; ஐயத்தற்குறிப்பேற்றவுவமை.

இக் கட்டளைக்கலித்துறை, நேரசை முதலாக வந்தது. (கச)

[களி.]

சிந்தையிற்குடிகொண்டிருந்து திருக்கறுத்தடிமைக்கொளுந்
திருவரங்கர் பொருப்புயர்ந்த திருப்புயம்புகழ்களியரேம்
புந்திமிக்கதுவந்துபுக்கது போதமாதர்களெழுவர்தம்
பூசையேமகபூசையென்றது புதுமையன்றிதுபுத்தர்கா
ளந்தரத்திமையோரருந்து மருந்தும்வெள்ளையதன்றியே
யரியசாதிகொளாதமானிட ரகலிடத்தினிலில்லையே
மந்திரத்தினிலாததேவதை வானகத்தினிமில்லையே
வடிவிலாதவையண்டகோளம் வளைந்தவைப்பதிலில்லையே.

(இ - ள்.) புத்தர்காள் - புத்தர்களே!—(நாங்கள்), சிந்தையில் - (அன்பால் நினைவாரது) உள்ளத்தில், குடிகொண்டு இருந்து-(சென்று நீங்காது) தங்கியிருந்து, திருக்கு அறுத்து - (அவர்களது) குற்றங்களைப் போக்கி, அடிமை கொளும் - ஆட்கொள்ளுகின்ற, திரு அரங்கர் - ஸ்ரீரங்கநாதரது, பொருப்பு - மலைபோல, உயர்ந்த—, திரு புயம் - திருத்தோள்களை, புகழ்-துதிக்கின்ற, களியரேம் - கட்குடியராவோம்; புந்தி மிக்கது - மனம் மிகமகிழ்தற்குக் காரணமாகிய களிப்பு, போத-மிகுதியாய், வந்து புக்கது - வந்து நேர்ந்தது; மாதர்கள் எழுவர்தம் - ஸப்தமாதாக்களுடைய, பூசையே-பூஜைதானே, மக பூசை என்றது இது - யாகத்திற் செய்யப்படும் பூஜையென்ற இத்தன்மை, புதுமை அன்று - புதியதொன்றன்று; அந்தரத்து - சுவர்க்கலோகத்தி லுள்ள, இமையோர் - தேவர்கள், அருந்தும் - பருகுகின்ற, மருந்தும் - அமிருதமும், வெள்ளை-வெள்ளைதான்; அது அன்றியே-அதுவுமல்லாமல், அரிய - அருமையான, சாதி-சாதிகளை, கொளாத-உடைத்தாகாத, மானிடர் - மனிதர்கள், அகல் இடத்தினில் - பரந்த பூமியில், (எங்கும்), இல்லையே—; மந்திரத்தின் இலாத - மந்திரத்துக்கு வசப்படாத, தேவதை - தெய்வம், வானகத்தினில் - தேவலோகத்திலும், இல்லையே—; வடிவு இலாதவை - உருவமில்லாத பொருள்கள், அண்டகோளம் வளைந்த-அண்டகோளத்துக்கு உட்பட்ட, வைப்பதில் - இடத்தில், இல்லையே—.

கட்குடியர் அக்கள்ளைச் சிறப்பித்துக்கூறுவதாகச் செய்யுள்செய்வது, களி யென்னும் உறுப்புக்கு இலக்கணமாம்.

புத்தசமயத்தார் கட்குடியைவிலக்குதலை முக்கியதருமமாகக் கொண்டவராதலால், அவர்களை விளித்துக்கூறுகின்றார். இனி, முதலடிக்கு - திருவரங்கநாதனது மலைபோன்ற திருத்தோள்களைப் பாடித் துதித்துப் பக்திமிகுதியாற் கூத்தாடுகின்ற களிப்புடையராவோ மென்றுமாம். கட்குடியர் தூர்க்கபூசைசெய்தல் இயல்பாதலின்,அதனைப் பெருமைப்படுத்திக்கூறினர்.

கட்குடித்தலையுங் குடியென்பராதலின் 'சிந்தையிற் குடிகொண்டிருந்து' என்றும், களியரென்பதற்குக் கட்குடியரென்றும் பொருளாதலால் 'களியரேம்' என்றும், அமிருதமுங் கள்ளும் வெண்ணிற வொற்றுமை யுடைமையால் 'இமையோ ரருந்து மருந்தும் வெள்ளை' என்றும், சாதி மந்திரம் வடிவு என்பன கள்ளுக்கும் பெயராதலால் அதை உட்கொள்ளாத மனிதர்கள் பூமியிலில்லை யென்றும்,அதுகொள்ளாததேவர்கள் வானுலகத்திலில்லை யென்றும், அதுபெறாத பொருள்கள் அண்டமுழுவதிலுமில்லை யென்றுங் களியென்னு முறுப்பிற்குப்பொருந்தச் சிலேடையாக்கூறினரெனக்காண்க. பொருப்புயர்ந்த- மலையினும் உயர்ந்த வென்றுமாம். மாதர்களெழுவர்-அபிராமி, மாயேசுவரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, காளி. மக பூசை - மஹாபூஜையென்பதன் திரிபாகக் கொண்டு, சிறந்த பூசை யென்றுமாம். மானிடரென்பது - மாநுஷ சப்த பவம்.

இது, முதல் மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாய் வந்தது அரையடியாகவும், அஃது இரட்டிகொண்டது ஓரடியாகவும் வந்த பதினொன்சீராசிரியவிருத்தம். (கூ௫)

இல்லறமெனத் துறவறமெனச்
சொல்லறம்பிற துணையன்றெனப்
பவக்கடலுட் டுவக்கறுப்பான்
காவிரியிடைப் பூவிரிபொழிற்
சிலமந்திகள் சினைதாவப்
பலதெங்கின் பழக்குலையுதிர
வடர்கமுகின் மிடறொடிதரத்
தேமாங்கனி சிதறுபுவிழ
முடப்பலவின் குடக்கனியுக
வரம்பைக்கனி வரம்பிற்புக
வயன்மருங்கின் மலர்ப்பொய்கையுட்
டுயில்வலம்புரி துண்ணெனவுறத்
தாஅட்டாமரைத் தவிசுறைதரு
குரூஉட்டோதிமம் பேஎட்டெனெழ
மயிற்சேவன் மனங்களிப்பக்
குயிற்பெடைக் குலமொளிப்ப
மழைமுகிலென முழவதிர்தரு
திருவரங்கப் பெருநகரு
ளரவணைமிசை யறிதுயிலமர்ந்
தருள்புரி
திருநாரணனைச் சேர்ந்தனஞ்
சரணாரவிந்தந் தஞ்சமென் றிரந்தே.

(இ - ள்.) இல்லறம் என - இல்லறமென்றும், துறவறம் என - துறவறமென்றும், சொல் அறம் - (இருவகையாகச்) சொல்லப்படுகின்ற அறமும், பிற - மற்றைப் பொருளின்பங்களும், துணை அன்று என - துணையல்லவென்று எண்ணி, பவம் கடலுள் - பிறவிக்கடலினுள்ளே, துவக்கு - கட்டுப்பட்டிருத்தலை, அறுப்பான் - நீக்கும்பொருட்டு,—காவிரியிடை - உபயகாவேரிமத்தியில், பூ விரி பொழில் - மலர்களலர்கின்ற சோலைகளில், சில மந்திகள் - சில பெண்குரங்குகள், சினை - மரக்கிளைகளில், தாவ - தாவிப்பாய, (அதனால்), பல தெங்கின் - பல தென்னமரங்களில், பழம் குலை - முதிர்ந்த காய்களின் குலைகள், உதிர - உதிரவும்,—அடர் கமுகின் - நெருங்கின பாக்குமரங்களினது, மிடறு - கண்டம், ஒடிதர - ஒடியவும்,— தே மா கனி - தேன் மாம்பழங்கள், சிதறுபு விழ - சிதறிவிழவும்,—முடம் பலவின் - வளைந்த பலாமரத்தினது, குடம் கனி - குடம்போன்ற பழங்கள், உக - சிந்தவும்,—அரம்பை கனி - வாழைப்பழங்கள், வரம்பில் புக - வயல்வரப்புக்களில் விழவும்,—வயல் மருங்கின் - கழனிகளி னருகிலுள்ள, மலர் பொய்கையுள் - பூக்கள் நிறைந்த தடாகத்தில், துயில் - தூங்குகின்ற, வலம்புரி - வலம்புரிச்

சங்கங்கள், துன்னனவு உற- நெருக்கிட்டலறவும்,—தாள் தாமரை தவிசு-நாளத்தையுடைய தாமரை மலராகிய இருப்பிடத்தில், உறைதரு - தங்குகின்ற, சூட்டு ஓதிமம் - உச்சியையுடைய அன்னப்பறவைகள், பேட்டுடன் - (தம் தமது) பேடைகளுடன், எழ - எழுந்திருப்பவும்,—மயில் சேவல்-பெண்மயில்களும் ஆண்மயில்களும், மனம் களிப்ப - மனமகிழ்ந்து கூத்தாடவும்,—குயில் பேடை குலம் - ஆண்குயில்கள் பெண்குயில்களின் கூட்டம், ஒளிப்ப - மனம்வருந்தி மறையவும்,—மழை முகில் என - மழைபெய்கின்ற மேகம்போல, முழவு - வாத்தியங்கள், அதிர்தரு - ஒலிக்கின்ற,—திரு அரங்கம் பெரு நகருள் - திருவரங்கமென்கிற பெரிய திருநகரத்தில், அரவணைமிசை - சேஷசயனத்தின்மேல், அறி துயில் அமர்ந்து அருள்புரி - யோகநித்திரை செய்தருளுகின்ற, திருநாரணனை-ஸ்ரீமந்நாராயணனை, சரண அரவிந்தம் - (அவனது) திருவடித்தாமரைகளே, தஞ்சம் என்று - அடைக்கலமென்று சொல்லி, இரந்து - பிரார்த்தித்து, சேர்ந்தனம - அடைந்தோம், (யாம்); (எ - று.)

காவிரியிடைத் திருவரங்கப்பெருநகருள் அரவணைமிசை அறிதுயிலமர்ந்தருள்புரி திருநாரணனைப் பவக்கடலுள் துவக்கறுப்பான் சேர்ந்தனமென்க. இல்லறமாவது - இல்வாழ்க்கைநிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கண் நின்று, அதற்குத்துணையாகிய கற்புடைமனைவியோடுஞ் செய்யப்படுவதாகிய அறம். துறவறமாவது - மேற்கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி அறிவுடையராய்ப் பிறப்பினையஞ்சி வீடுபேற்றின்பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாகிய அறம். அறம் பொருளின்பமென உடனெண்ணப்பட்ட மூன்றனுள் அறத்தை முன்னர்ப் பிரித்து இல்லறந் துறவறமென்னும் இருவகை நிலையாற் கூறப்பட்டதனால், ஏனைப் பொருளும் இன்பமும் 'பிற' என்னப் பட்டன. பவம் - வடசொல். இங்குக் கூறிய வருணனை, "காய்மாண்ட தெங்கின்பழம்வீழக் கமுகினெற்றிப், பூமாண்டதீந்தேன்றொடைகீறி வருக்கைபோழ்ந்து, தேமாங்கனிசிதறி வாழைப்பழங்கள்சிந்து, மேமாங்கதநாடு" என்னுஞ் சிந்தாமணிச்செய்யுள் போன்றது.

மந்தி, பேடு, பேடை - பெண்பெயர்கள். "குரங்கு முசுவு மூகமு மந்தி," ("புள்ளு மூரிய வப்பெயர்க் கென்ப,") "பேடையும் பெடையு நாடி னொன்றும்" என்பன காண்க. கமுகு - க்ரமுகமென்னும் வடசொல்லின் சிதைவு. சிதறுபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். சேவல் - ஆண்பெயர். "சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணு, மாயிருந் தூவி மயிலலங் கடையே" என்றார் தொல்காப்பியனா ராதலின், சேவலென்னும் பெயர் மயிலுக்கு வருதல்,புதியனபுகுதல். மழைக்காலத்தில் மயிலினம் மகிழ்தலும், குயிலினம் வருந்துதலும் இயல்பு. மயிலுங்குயிலும் முழவொலியை மழையொலியென மயங்கினவென்க; மயக்கவணி. 'தஞ்சமென் றறிந்து' என்றும் பாடம்.

இது, இருசீரடி பத்தொன்பது கொண்டு தனிச்சொற்பெற்று அகவற் சுரிதகத்தான் முடிந்த குறளடி வஞ்சிப்பா: அருள்புரி யென்பது, தனிச் சொல்; ஈற்றிரண்டடியும், நேரிசையாசிரியச்சுரிதகம். (௬௬)

**இரவியையிரவின்மதியினை மதியுளிறையினையிறையுமெண்ணரிய, கரவனைக்கரவின்முனிவனைமுனிவர்கருத்தனைக் கருத்தனைத்துடைத் தாள், பரமனைப்பரமபதத்தனைப்பதத்துட் பாரனைப்பாரதத்தூது, மரவனையரவினரங்கனை யரங்கத்தடிகளையடிகள்சேவியுமே.**

(இ - ள்.) இரவியை - சூரியனானவனை, இரவின் மதியினை - இராத்திரியில் விளங்குகின்ற சந்திரனானவனை, மதியுள் இறையினை - அறிவிலுறைகின்ற தலைவனை, இறையும் எண்ணரிய கரவனை - சிறிதும் நினைத்தற்குமரிய மாயையையுடையவனை, கரவு இல் முனிவனை - கபடமில்லாத முனிவனு யிருப்பவனை, முனிவர் கருத்தனை - முனிவர்களது உள்ளத்தி லுறைபவனை, கருத்தனை துடைத்து ஆள் பரமனை - (தன்னையடைந்தவர்களது) பிறப்பைப் போக்கியருளுகின்ற உயர்ந்தவனை, பரமபதத்தனை - பரமபதத்தையுடையவனை, பதத்துள் பாரனை - திருவடியினின்றும் பூமியை யுண்டாக்கினவனை, பாரம் நத்து ஊதும் அரவனை - பெரியபாஞ்சசன்னியத்தை ஊதுகின்ற ஓசையையுடையவனை, அரவின் அரங்கனை - பாம்பை இடமாக வுடையவனை, அரங்கத்து அடிகளை - திருவரங்கத்தி லெழுந்தருளியிருக்கின்ற ஸ்வாமியை, அடிகள் சேவியும் - திருவடிதொழுங்கள்; (எ - று.)

இச்செய்யுளில் ஒருசொல்லைப்பற்றி முன்வந்த ஒருசொல்லை விட்டிட்டு இவ்வாறு ஒருதொடர்புபடுத்திக்கூறியது - ஒருவகை ஏகாவளியலங்காரம். முனிவன் என்றது - உலகங்களின் படைப்பளிப்பழிப்புக்களை மநநம் பண்ணுபவன்; "முனியே நான்முகனே" என்றார் ஆழ்வாரும். இனி, கரவின் முனிவனை யென்பதற்கு-முதலையினிடத்துக் கோபத்தையுடையவனை யென்றும், முனிவர் கருத்தனை யென்பதற்கு - முனிவர்கள் தலைவனை யென்றும் உரைக்கலாம். எம்பெருமானது திருவடியினின்று பூமிஉதித்த தென்று வேத மோதுதலால், 'பதத்துட் பாரனை' என்றார்; திரிவிக்கிரமாவதார கதையை யுட்கொண்டு, ஒருதிருவடியுளடக்கிய பூமியையுடையவனென்று மாம். 'பாரதத்தூதவரவனை' என்னும் பாடத்துக்கு-பரதகுலத்தில் தோன்றிய பாண்டவர்க்குத் தூதனாய்த் துரியோதனனிடத்து வந்தவனை யென்று உரைக்க. 'பாரனைத்தோது மரவனை' என்றும் பாடம். அரவம் - ரவம். அடிகள் சேவியும்-பெரியோர்களே! சேவியு மெனவுமாம். இப்பொருளில், அடிகளென்பது - அடியென்னும் பகுதியிற் பிறந்து உயர்வுப்பொருளுணர்த்தி நின்ற படர்க்கைச்சொல்.

இதற்கு யாப்பிலக்கணம், நகூ-ஆங் கவியிற் கூறியது கொள்க. (கூஎ)

[தலைவி யிரங்கல்.]

சேவிக்கவாழ்விக்குமெங்கோனரங்கன்றிருக்கோயில்சூழ்
காவிற்கலந்தாசைதந்தேகினார்நெஞ்சுகன்னெஞ்சமோ
வாவிப்புறத்தன்னமேயின்னமேதோவரக்கண்டிலேன்
பாவிக்கனேகந்தனிக்காலமிந்தப்பனிக்காலமே.

(இ - ள்.) வாவிப்புறத்து அன்னமே - தடாகங்களினிடத்தே சஞ்சரிக்கின்ற அன்னப்பறவையே!—சேவிக்க - (தன்னைக்கண்டு) வணங்க, (அவர்

களை), வாழ்விக்கும்- (இம்மை மறுமை வீடுகளிற் சிறந்து) வாழ்விக்கின்ற, எம் கோன் -எமது தலைவனாகிய, அரங்கன் -ஸ்ரீரங்கநாதனது, திரு கோயில் - அழகிய கோயிலை, சூழ் - சூழ்ந்த, காவில் - சோலையில், கலந்து - கூடியிருந்து, ஆசை தந்து - ஆசைகாட்டி, ஏகினார் - சென்றவராது, நெஞ்சு - மனம், கல் நெஞ்சமோ - கல்லினாலாகிய நெஞ்சோ? இன்னம் - இன்னமும் [பனிக்காலம் வந்த பின்னும்], ஏதோ-என்னகாரணத்தாலோ, வர கண்டிலேன் - மீண்டுவரக் கண்டேனில்லை; பாவிக்கு - தீவினையேனாகிய எனக்கு, இந்த பனி காலம்—, அனேகம் தனி காலம் - தனியேயிருக்கின்ற நெடுங்கால மாகவாயிற்று; (எ - று.)

இது, தலைமகன் புணர்ந்து தணந்துவர நீட்டித்த நிலைமைக்கண் தலைமகள் நெய்தனிலத்து அன்னத்தோடு கூறி இரங்கியது.

கணவனைப் பிரிதற்கேற்ற தீவினையுடைமையால்,தலைவி தன்னை 'பாவியேன்' என்று பழித்துக் கூறுகின்றாள். கணவனைப் பிரிந்த நிலையில் ஒவ்வொரு நொடிப்பொழுதும் பலயுகங்கள் போலு மாதலால், 'அனேகந் தனிக்கால மிந்தப்பனிக்காலம்' என்றாள்; "பலபல வூழிகளாயிடு மன்றி யோர் நாழிகையைப் பலபல கூறிட்ட கூறாயிடும்...,...அம்மவாழி யிப்பாயிருளே" என்றார் நம்மாழ்வாரும்.

இது, முதல் நான்குசீரும் காய்ச்சீர்களும், ஈற்றுச்சீரொன்று மாங்கனிச்சீருமாகிய கலிநிலைத்துறை. (கூஅ)

[குறம்.]

காலமுணர்ந்தகுறத்திநான் கருதினையொன்றதுசொல்லுவேன்
பாலகனுச்சியிலெண்ணெய்வார் பழகியதோர்கலைகொண்டுவா
கோலமலர்க்கையின்மங்கைநின் கொங்கைமுகக்குறிநன்றுகாண்
ஞாலமுவந்திடநாளையே நண்ணுவைநம்பெருமாளையே.

(இ - ள்.) நான்—, காலம்- முக்காலத்து விருத்தாந்தங்களையும், உணர்ந்த - அறிந்து சொல்லவல்ல, குறத்தி - குறவர்மகள்; ஒன்று கருதினை - (நீ மனத்தில்) யாதொன்று நினைத்தாயோ, அது-அதனை,சொல்லுவேன்—: பாலகன் - (என்) சிறுகுழந்தையது, உச்சியில்- தலையில், எண்ணெய் வார் - எண்ணெய் வாரு; பழகியது ஓர் கலை - பழையதொரு சீலையை, கொண்டு வா - கொண்டுவந்து கொடு; கோலம் மலர் கையின் - அழகிய மலர்போலுங் கைகளையுடைய, மங்கை - பெண்ணே! நின் - உன்னுடைய, கொங்கை முகம் குறி - முலைக்கண்களின் குறியானது, நன்று-நன்றாயிருக்கிறது; (ஆகையால்), ஞாலம் உவந்திட - உலகமுழுவதும் மகிழும்படி, நாளையே - நாளைக்கே, நம்பெருமாளை—, நண்ணுவை - சேர்வாய்; (எ - று.)

தலைமகனைக் கண்டு காமுற்று மயங்கிநிற்கும் நிலைமைக்கண் தன்னிடம் வந்த குறிகண்டறிந்து கூறவல்ல குறத்தியாகிய கட்டுவிச்சியைத் தலைவி குறிவினவக் குறத்தி குறிதேர்ந்து நல்வரவு கூறுவதாகச் செய்யுள்செய்வது, குறம் என்னும் உறுப்பின் இலக்கணமாம்.

தலைமகளைக் களவொழுக்கத்தாற் புணர்ந்து பிரிந்து ஆற்றாது மெலிந்து வருந்திய தலைமகளைக் கண்ட செவிலித்தாய், இவள்நோய்க்குக் காரணம் இன்னதென்று அறியாமல் நிமித்தங்கண்டுகூறவல்லகட்டுவிச்சியை அழைத்து வினவ, அவள் குறியிலக்கணப்படி சிறுமுறத்திலே சிலநெற்குறிகண்டு அதனால் உண்மையுணர்ந்து கூறுகின்றாள். காலமுணர்ந்த குறத்தி நான் - முக்காலவரலாறுகளையும் முன்னறிந்துகூறவல்ல குறத்தி யானென்று தனது சிறப்பை வெளியிட்டனள்.

"எந்தவிதங்களு மறி குறமகளு னிங்கெதிர்வந் தினியென திதமொழிகே, ளந்தமுறந்தனி னவமணி கொடுவா வன்பிலணிந்திட வழகியகலைதா, கந்தமிகுந்ததனந்தனிற் குறியே கண்டன ளின்றலர் கமழ்குழன்மடவாய், வந்தெவருந்தொழ வடமலைதனில்வாழ் வண்டுளவன் தின மருவுவ னுனையே" என்ற திருவேங்கடக் கலம்பகச் செய்யுள் இங்கு ஒப்புநோக்கத் தக்கது.

காலம் - ஆகுபெயர். பாலகன் - கப்பிரத்தியயம், இரங்கற்பாடுணர்த்திற்று இனி, மூன்றுமடிக்கு, நினது கைகளிலும் கொங்கைகளிலும் முகத்திலு முள்ள குறி நன்றென்றும், கைக்குறியினும் கொங்கைமுகத்தின்குறி நன்றென்றும் பொருள்கொள்ளலாம். 'மலர்க்குழல்' என்றும் பாடம். ஞாலமுவத்தல் - ஒத்த தலைமகனுக்குந் தலைமகளுக்குங் கூட்டம் நேர்தலால். தான் குறிசொல்வதற்கு வெகுமதி யாகத் தன்பாலகனுச்சியில் எண்ணெய் வார்க்குமாறும் பழைய வஸ்திரமொன்றைத் தனக்குக் கொடுக்குமாறும் குறத்தி கேட்கின்றன ளென்க.

இது, எல்லாச்சீரும் விளச்சீராகிய அறுசீராசிரிய விருத்தம். (௬௯)

[மேகவிடுதூது.]

பெருமாலையார்க்குரைப்பேனுமக்கேவிண்டுபேசினல்லாற்
கருமாலையாயெழுங்கார்க்குலங்காள்தொண்டர்காற்பொடிதன்
றிருமாலைகொண்டதிருமாலரங்கர்தந்தெய்வத்துழாய்
மருமாலைவாங்கிவம்மினந்திமாலைவருமுன்னமே.

(இ - ள்.) கரு மாலையாய் எழும் கார் குலங்காள் - கரியதொரு வரிசையாய் ஆகாயத்தே எழுகின்ற மேகங்களது கூட்டங்களே!—பெரு மாலை - (எனது) பெரிய மயக்கத்தை, உமக்கே - உங்களுக்கே, விண்டு பேசின் அல்லால் - விவரித்துச்சொன்னாலல்லாமல், யார்க்கு - வேறே யாவர்க்கு, உரைப்பேன்-எடுத்துச்சொல்லுவேன்? (நீங்கள் போய்), தொண்டர் கால் பொடி தன் - தொண்டரடிப்பொடியாழ்வா ரருளிச்செய்த, திருமாலை - திருமாலை யென்னுந் திவ்வியப்பிரபந்தமாகிய மாலையை, கொண்ட - கொண்டருளிய, திரு மால் அரங்கர்தம் - திருமாலாகிய ரங்கநாதரது, தெய்வம் துழாய் மரு மாலை - திவ்வியமான நறுமணம்பொருந்திய திருத்துழாய்மாலையை, அந்தி மாலை வருமுன்னம் - அந்திப்பொழுது வருதற்குமுன்னே, வாங்கி வம்மின் - வாங்கிக்கொண்டு வாருங்கள்; (எ - று.)

தலைவனைப் பிரிந்து தனித்து வருந்துந் தலைவி, இங்ஙனஞ் சொல்லித் தலைவனிடத்து மேகங்களைத் தூதுசெல்லுமாறு வேண்டுகின்றாள்.

புண்ணிற்புளிப்பெய்தாற்போல இந்நிலையில் அந்திமாலை வருமாயின் யான் இறந்து படுவேன்: அது வருவதற்குமுன்னமே எனது தலைவன் அணிந்த மாலையை எனக்குக்கொணர்ந்துகொடுத்தால்மாத்திரமே யான் அதுகொண்டு சிறிது ஆறியிருப்பேனென்றாள்; தொண்டரடிப்பொடியாழ்வார் "இந்திரலோகமாளு மச்சுவை பெறினும் வேண்டேன்" என்று 'பரமபதம் கிடைப்பதானாலும் அதிலும் எனக்கு நசையில்லை; பச்சை மாமலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்க ணச்சுதா! அமரரேறே ஆயர்தம் கொழுந்தே! என்னும் இச்சுவையே யான் வேண்டுவது' என்றுஅறுதியிட்டுத் திருவரங்கநாதனையன்றி வேறெத்தேவரையும் கடைக் கணியாது அப்பிரான்திறத்தில் திருமாலை யென்னுந் திவ்வியப்பிரபந்தத்தை யருளிச்செய்தன ராதல்பற்றி, 'தொண்டர்காற்பொடிதன் திருமாலைகொண்ட திருமாலரங்கர்' என்றார். தொண்டர் காற் பொடி - பக்தாங்க்ரிரேணு. திருமாலை கொண்ட திருமால் என்னு மிடத்தில், சொன்னயம் பாராட்டற்பாலது. "பாவோநாந்யத்ரகச்சதி [எனது சிந்தை ஸ்ரீராமனைத்தவிர வேறொருதெய்வத்தினிடத்திற் செல்லாது" என்ற சிறிய திருவடியும், "அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே" என்ற தொண்டரடிப்பொடியாழ்வாரும், "என்னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக்காணாவே" என்ற திருப்பாணாழ்வாரும் தம்மில் ஒப்பரென்ற காரணம்பற்றி, ஸ்ரீரங்கந்திருக்கோயிலில் இம்மூவர்க்கும் ஒருங்கே சந்நிதியமைக்கப்பட்டுள்ள தென்பர். தொண்டர்காற்பொடிதன் திருமாலை - செய்யுட்கிழமைப் பொருளில் வந்த ஆறாம்வேற்றுமைத்தொகை. வம்மின் - வா என்னும் முதனிலையடியாப் பிறந்த ஏவற்பன்மைமுற்று. அந்தி - ஸந்த்யா என்னும் வடமொழியின் சிதைவு.

இது, நிரையசை முதலாகிய கட்டளைக்கலித்துறை. (௭௧)

முன்னம் பிறந்த பிறப்போ முடிவில்லை
பின்னம் பிறப்பிக்க வெண்ணாதே—தென்னரங்க
மேவிக் கிடந்தானே வீற்றிருக்கு நின்பதத்தென்
னாவிக் கிடந்தா னருள்.

(இ - ள்.) தென் அரங்கம் மேவி கிடந்தானே - அழகிய திருவரங்கத்தில் திருவுள்ளமுவந்து திருப்பள்ளிகொண்டருளுபவனே!—(யான்), முன்னம் பிறந்த பிறப்போ-முன்னேபிறந்த பிறவிகளுக்கோ வென்றால், முடிவு இல்லை-இவ்வள வென்று ஓரளவில்லை; (ஆகையால்), இன்னம்-இனிமேலும், பிறப்பிக்க-பிறவியெடுக்கும்படி, எண்ணாதே-திருவுள்ளத்திற் கொள்ளாமல், வீற்றிருக்கும் - ஒப்பில்லாத சிறப்போ டிருக்கின்ற, நின் பதத்து - உனது பரமபதத்தில், என் ஆவிக்கு - எனது உயிர்க்கு, இடம்-இடத்தை, அருள்-தந்தருள்வாய்; (எ - று.)

பலபிறப்பெடுத்து உழன்று வருந்திய என்னை இனிமேற் பிறப்பற்று முத்திபெறுமாறு அருள்செய்யவேண்டு மென்று வேண்டுகின்றவாறு.

'வீற்றிருக்க' என்றும் பாடம். பதத்து - திருவடிநிழலி லென்றுமாம்; திருவடியே வீடாயிருக்கு மாதலால், 'நின்பதத்து' என்றது ஏற்கும்.

இது, மலரென்னும் வாய்பாடுபட முடிந்த நேரிசைவெண்பா. (எக)

[இரங்கல்: மடக்கு.]

அரும்புன்னாகத்தடங்காவே யவாவென்னாகத்தடங்காவே
 யம்போருகக்கண்பொருந்தேனே யழுநீருகக்கண்பொருந்தேனே
பரம்புங்கடலூர்நாவாயே பாவிக்கடலூர்நாவாயே
 பார்மீதுயரமறியலையே படுமென்றுயரமறியலையே
கருங்கட்கயலேமாசுறவே கரைவேற்கயலேமாசுறவே
 கண்டற்போதுகுவாலுகமே கங்குற்போதுகுவாலுகமே
குரும்பைதழைக்குங்கரும்பனையே குயில்வந்தழைக்குங்கரும்பனையே
 குருகீர்நந்தமரங்கரையே கொணரீர்நந்தமரங்கரையே.

(இ - ள்.) அரும் புன்னாகம் தடம் காவே - அரிய பெரிய புன்னைமரச் சோலையே! அவா - ஆசை, என் ஆகத்து அடங்காவே - எனது மனத்தில் அடங்குகிறதில்லை; அம்போருகம் கண் பொரும் தேனே - தாமரைமலரினிடத்துப் பொருந்திய வண்டே! அழு நீர் உக - அழுகின்ற கண்ணீ ரருதொழுக, கண் பொருந்தேனே-கண்ணுறங்குகிறேனில்லை; பரம்பும் கடல் ஊர் நாவாயே - பரவிய கடலி லோடுகின்ற மரக்கலமே! பாவிக்கு - பாவியேனுக்கு, ஊர் நா வாயே - (அலர்தூற்றுகின்ற) ஊராரது நாவும் வாயும்,அடல் - பகைமையாகும்; பார்மீது உயர மறி அலையே - கரையின்மேல் உயர்ந்து மடங்கி விழுகின்ற அலையே! படும் என் துயரம் அறியலையே-யான்படுகின்ற துன்பத்தைக் கண்டறிகின்றாயல்லையே;கருங் கண் கயலே-கண்களையுடைய கயல்மீனே ! மா சுறவே - பெரிய சுறாமீனே ! கரைவேற்கு - இங்ஙனம் வருந்துகின்ற எனக்கு, மாசு உறவே - குற்றமுள்ள உறவினரும், அயலே - அயலாரேயாவர்; கண்டல் போது உகு வாலுகமே - தாழைமலர்கள் சிந்துகின்ற வெண்மணற்குன்றே! கங்குல் போது குவால் உகமே - இராப்பொழுது திரண்ட அநேகம்யுகங்களேயாகும் ; குரும்பை தழைக்கும் கரும் பனையே - குரும்பைகள் தழைக்கின்ற கரிய பனைமரமே ! குயில் - குயிலானது, வந்து—, கரும்பனை - கருப்புவில்லையுடைய மன்மதனை, அழைக்கும்-அழையாநின்றது; குருகீர் - நாரைகளே! நந்து அமர் அம் கரையே - சங்குகள்பொருந்திய அழகிய கரையே ! நந்தம் அரங்கரை - நமது அரங்கநாதரை, கொணரீர் - கொண்டுவாருங்கள்; (எ - று.)

இது, பிரிந்துறைகின்ற நெய்தனிலத்துத்தலைமகள் ஆங்குள்ளபொருள்களை நோக்கித் தான்படும் வருத்தங் கூறி இரங்கியது.

அஃறிணைப்பொருள்களை விளிகேளாமரபின கேட்பனபோலக் கூறப்பட்டன; மரபுவழுவமைதி. அம்போருகம் - நீரில்முளைப்பது. கண் - ஏழனுருபு. ஊர், உறவு-

ஆகுபெயர்கள். உறவினரெல்லாம் தான்படும் வருத்தத்திற்கு இரங்காது ஊரவர்போலத் தூற்றுதலால், 'கரைவேற்கயலே மாசுறவே' என்றாள். விரகிகளுக்கு இரவு நீட்டித்ததுபோலத் தோன்றி வருத்துதலால், 'கங்குற்போது குவாலுகமே' எனப்பட்டது. குரும்பை - இளங்காய். குயிலொலி காமோத்தீபகமா யிருத்தலால், 'குயில்வந்தழைக்குங் கரும்பனே' யென்றாள்.

இதற்குச் செய்யு ளிலக்கணம், ௩௩ - ஆங் கவியிற் கூறியது. (௭௨)

கரைபொரு தொழுகுங் காவிரி யாறே
யாற்றிடைக் கிடப்பதோ ரைந்தலை யரவே
யரவஞ் சுமப்பதோ ரஞ்சன மலையே
யம்மலை பூத்ததோ ரரவிந்த வனமே
யரவிந்த மலர்தொறு மதிசய முளவே
கடல்விளிம் புடுத்த கண்ணகன் ஞால
முடன்முழு தளந்த தொருதா மரையே
வகிரிளம் பிறையான் வார்சடை தேங்கப்
பகிரதி கான்றதோர் பங்கே ருகமே
யாவையும் யாரையும் படைக்க நான்முகக்
கோவை யீன்றதோர் கோக னகமே
திருமகட் கினிய திருமனை யாகிப்
பருமணி யிமைப்பதோர் பதும மலரே
சடைத்தலை தாழ்த்துச் சங்கர னிரப்ப
முடைத்தலை தவிர்த்ததோர் முளரிமா மலரே
யாங்குமண் டோதரி யணிந்தமங் கலநாண்
வாங்கவில் வாங்கிய வனசமு மொன்றே
விரிந்தபுக ழிலங்கை வேந்தற்குத் தென்றிசை
புரிந்தருண் மலர்ந்ததோர் புண்ட ரீகமே
மண்டிணி ஞாலமும் வானமு முட்பட
வண்டமுண் டுமிழ்ந்ததோ ரம்போ ருகமே
கடைசிவந் தகன்று கருமணி விளங்கி
யிடைசில வரிபரந் தினியவாய் நெடியவா
யின்பந் தழீஇய விருபெருங் கமலந்
துன்பந் தழீஇய தொண்ட னேனையு
முவப்புட னொருகா னோக்கிப்
பவக்கடல் கடக்கும் பரிசுபண் ணினவே.

(இ - ள்.) கரை பொருது ஒழுகும் - இருகரைகளையும் மோதிப் பெருகுகின்ற, காவிரி யாறு - காவேரிநதி (ஒன்றுஉண்டு); யாற்றிடை கிடப்பது - அவ்வாற்றினிடையே பொருந்தியிருப்பதாகிய, ஓர் ஐந் தலை அரவு - ஐந்து தலைகளையுடையதொரு நாகம் (உண்டு); அரவம் சுமப்பது - அத் திருவனந்

தாழ்வான் தாங்குவதாகிய, ஓர் அஞ்சன மலை - மைம்மலையொன்று [நம் பெருமாள்], (உண்டு); அம்மலை பூத்தது - அந்தநீலமலையினிடத்தே மலர்ந்த தாகிய, ஓர் அரவிந்த வனம் - ஒரு தாமரைமலர்க்காடு [திருவவயவங்கள்], (உண்டு); அரவிந்தமலர்தொறும் - அத்தாமரைமலர்கள்தோறும், அதிசயம் உள - ஒவ்வொரு வியப்பு உண்டு; (அஃதென்னவெனில்),—ஒரு தாமரை-ஒரு தாமரைமலர் [இடத்திருவடி], கடல் விளிம்பு உடுத்த-கடலாற் சுற்றிலுஞ் சூழப்பட்ட, கண் அகல் ஞாலம் முழுது - இடமகன்ற பூமிமுழுவதையும், உடன் - ஒருசேர, அளந்தது—; ஓர் பங்கேருகம் - ஒருதாமரைமலர் [வலத் திருவடி], வகிர் இளம் பிறையான் - துண்டமாகிய இளம்பிறைச் சந்திரனை முடியிலுடைய உருத்திரனது, வார் சடை-நீண்ட சடையில், தேங்க-நிறைந்து தங்கும்படி, பகிரதி - கங்காநதியை, கான்றது - வெளியுமிழ்ந்தது; ஓர் கோகனகம் - ஒருதாமரைமலர் [திருநாபி], யாவையும் - எல்லா அஃறிணைப் பொருள்களையும், யாரையும் - எல்லா உயர்திணைப்பொருள்களையும், படைக்க - படைக்கும்படி, நான்முகம் கோவை - பிரமதேவனை, ஈன்றது - உண்டாக்கிற்று; ஓர் பதுமமலர் - ஒரு தாமரைப்பூ[திருமார்பு], திருமகட்கு - பெரியபிராட்டிக்கு, இனிய-வசித்தற்கினியதான, திருமனை ஆகி-அழகிய இடமாய், பரு மணி இமைப்பது - பருத்த கௌஸ்துபரத்தினம் விளங்கப்பெற்றது; ஓர் முளரி மா மலர் - ஒரு அழகிய தாமரைமலர் [வலத் திருக்கை], சங்கரன்-சிவபிரான், சடை தலை தாழ்த்து - சடையினையுடைய தலையினால் வணங்கி, இரப்ப-யாசிக்க, முடை தலை தவிர்த்தது-(அவன்கையி லொட்டிய) முடைநாற்றத்தையுடைய பிரமகபாலத்தை ஒழித்தது; வனசமும் ஒன்று - ஒரு தாமரைமலர் [இடத்திருக்கை], ஆங்கு - அவ்விடத்தில் [இலங்கையில்], மண்டோதரி - மண்டோதரியென்பவள், அணிந்த - (கழுத்தில்) தரித்திருந்த, மங்கல நாண்-மாங்கல்யசூத்திரத்தை, வாங்க - இழக்கும்படி, வில் வாங்கியது - கோதண்டத்தை வளைத்தது; ஓர் புண்டரீகம் - ஒரு தாமரைமலர் [திருமுகமண்டலம்], விரிந்த புகழ்-பரவிய கீர்த்தியையுடைய, இலங்கை வேந்தற்கு - இலங்கைக்கரசனாகிய விபீஷணாழ்வானுக்காக, தென் திசை புரிந்து - தெற்குத்திக்கை நோக்கி, அருள் மலர்ந்தது - எப்பொழுதும் அருளோடு மலர்ந்திருந்தது; ஓர் அம்போருகம் - ஒரு தாமரைமலர் [திருப்பவளம்], மண் திணி ஞாலமும் - மண்ணுலகமாகிய பூமியும், வானமும் - தேவலோகமும், உட்பட - அடங்கும்படி, அண்டம் - அண்ட முழுவதையும், உண்டு - (பிரளயகாலத்தில்) உட்கொண்டு, (மீண்டும்), உமிழ்ந்தது-(பிரளயம்நீங்கியவுடன்) வெளியேஉமிழ்ந்தது; கடை சிவந்து-நுனி சிவந்தனவாகி, அகன்று - விசாலமாய், கரு மணி விளங்கி - இடையே கரிய கண்மணி விளங்கப்பெற்று, இடை சில அரி பரந்து - இடையிலே சில ரேகைகள் பரவப்பெற்று, இனியஆய்-இனியனவாகியும், நெடியஆய் - நீண்டனவாகியும், இன்பம் தழீஇய - இன்பம்நிறைந்த, இரு பெருங் கமலம் - இரண்டு பெரிய தாமரைமலர்கள் [திருக்கண்கள்], துன்பம் தழீஇய - துன்பம்நிறைந்த, தொண்டனேனையும் -அடியவனாகிய என்னையும், உவப்புடன் - மகிழ்ச்சியுடனே, ஒருகால் நோக்கி - ஒருதரங் கடாக்ஷித்து, பவம் கடல் கடக்கும் பரிசு-(கடத்தற்கரிய)பிறவியாகியகடலைக் கடக்கும்படி, பண்ணின—;(எ-று.)

ஸ்ரீகாவேரிநதியினிடையி லுள்ள தீவாகிய ஸ்ரீரங்கமென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எம்பெருமான் ஆதிசேஷபர்யங்கத்தின்மேற்பள்ளிகொண்டு அடியேனைக்கடாட்சித்து உய்யுமாறு செய்தன னென்பதாம். "அமலங்களாக விழிக்குமைம்புலனு மவன்மூர்த்தி" என்றவாறு எம்பெருமானது திருவருள் நோக்கமே உய்தற்கு ஏதுவாத லறிக. ("ஜாயமாநம்ஹிபுருஷம் யம்பஸ்யேத் மதுஸூதந:-ஸாத்விகஸ்ஸதுவிஜ்ஞேயஸ்ஸவைமோக்ஷார்த்தஸாதக:" என்றதும் இங்குக் கருதத்தக்கது.) "மாமுதலடிப்போ தொன்று கவிழ்த்தலர்த்தி, மண்முழுது மகப்படுத்து, ஒண்சுடரடிப்போதொன்று விண்செலீஇ, நான்முகப்புத்தேள் நாடுவியந்துவப்ப, வானவர் முறை முறை வழிபட நெறீஇத், தாமரைக்காடு மலர்க்கண்ணொடு கனிவாயுடைய,...முடிதோளாயிரந் தழைத்த, நெடியோய்க் கல்ல தடியதோ வுலகே" என்ற பாசுரம் இங்கு ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது. "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடி நீண்டவப், பெரியவாய கண்க ளென்னைப் பேதைமைசெய்தனவே" என்றார் திருப்பாணாழ்வாரும். இதனுள் பத்துத்தாமரையும் ஒன்பது அதிசயமுங் காண்க.

முதலேந்தடிகளில் ஒருசொல்லைப் பற்றி ஒன்றை விடுதலாகிய ஏகாவளியலங்காரம் காண்க. அரவிந்தம், தாமரை, பங்கேருகம், கோகநகம், பதுமமலர், முளரி, வனசம், புண்டரீகம், அம்போருகம், கமலம் என்ற தாமரையின் பரியாயமொழிகளாகப் பத்துப்பதங்கள் வந்திருப்பது - பொருட்பின்வருநிலையணி.

பகிரதி - பாகீரதியென்பதன் விகாரம். பகீரதனென்னுஞ் சூரியகுலத்தரசனால் தேவலோகத்தினின்றும் பூமிக்குக் கொணரப்பட்ட தென்பது பொருள். பங்கேருஹம்-சேற்றில் முளைப்பது; பங்கம் - சேறு. கோகனகம்-கோகநத மென்பதன் விகாரம்; சக்கரவாகப்பறவைகள் கூடிக் குலாவுவதற்கு இடமாயிருப்பதென்றும், கோக மென்னும் நதியில் மிகுதியாய்த் தோன்றுவதென்றும் பொருள். ஆங்கு - அப்பொழுது [ஸ்ரீராமாவதாரத்தில்] என்றுமாம். மண்டோதரி - மந்தோதரி; இராவணன் மனைவி: சிறியவயிறுடையாளென்பது பொருள். இவள், பஞ்சகன்னிகைகளில் ஒருத்தி; (மற்றையோர் - அஹல்யா, திரௌபதி, சீதை, தாரை.) மங்கலநாண்வாங்குதல்-அமங்கலியாதல். வநஜம் - நீரில் முளைப்பது.

இது, ஈற்றயலடி முச்சீரடியும், மற்றை யடிகளெல்லாம் நாற்சீரடிகளுமாக வந்த நேரிசையாசிரியப்பா. (எஉ)

[தலைவியிரங்கல்.]

பண்கொண்டவேயூதுசெவ்வாயரங்கேசர்பைம்பொன்னிநாட்
டெண்கொண்டபேராசைதந்தார்மறந்தார்கொலிசைவண்டுகாள்
விண்கொண்டமலைமீதுவிண்மாரிபொழிகின்றவிசைபோலவென்
கண்கொண்டமலைமீதுகண்மாரிபொழிகின்றகார்காலமே.

(இ - ள்.) இசை வண்டுகாள் - இசைபாடுகின்ற வண்டுகளே!—பண்கொண்ட - இசைகளைக்கொண்ட, வேய்-வேய்ங்குழலை, ஊது- (திருவங்குவ

தாரத்தில்) ஊதிய, செம் வாய் - சிவந்த வாயினையுடைய, அரங்கேசர்-ரங்க நாதரது, பைம் பொன்னி நாடு - குளிர்ந்த காவிரிசூழ்ந்த நாட்டில், எண் கொண்ட பேராசை-எண்ணமுழுவதுங் கொண்ட மிக்க ஆசையை, தந்தார்-தந்து சென்றவர்,—விண் கொண்ட-ஆகாயத்தை அளாவிய, மலைமீது-மலையின்மேல், விண் மாரி பொழிகின்ற - வானம் மழையைப் பெய்கின்ற, விசை போல - வேகம்போல, என் - எனது, கண் கொண்ட - கண்பொருந்திய, மலைமீது - மலைகளின் [முலைகளின்] மேலே, கண் மாரி பொழிகின்ற-கண்ணீர்மழையைச் சொரிகின்ற, கார் காலம் - மழைக்காலத்தை, மறந்தார் கொல் - மறந்தாரோ? (எ - று.)—மறவாராயின், முன்னமே வந்திருப்பரென்றபடி.

இது, புணர்ந்து பருவங்குறித்துப் பிரிந்து சென்ற தலைமகன், தான் குறித்த கார்காலம் வந்தவிடத்தும் வாராமலிருக்க, அதனால் வருத்தங் கொண்ட தலைவி, வண்டுகளை முன்னிலைப்படுத்தி இரங்கிக் கூறியது. இசைவண்டுகாள் என்பதற்கு - புகழையுடைய வண்டுகளே யென்று பொருள்கொண்டு, நீங்கள் இதுவரையில் என்போல்வார்பலர்க்குத் தூது சென்று நன்மைசெய்து புகழ்படைத்ததுபோல இப்பொழுதும் எனதுநிலைமையை எனதுதலைவர்க்கு உரைத்து எனக்கு இன்பமுண்டாக்கி இன்னமும் புகழ்படைப்பீரா மென்று கூறுதலு மொன்று.

தன்பாற்சிறிதும்இரக்கமின்றிப் பிரிந்துசென்ற தலைவரது பெயரைவெளிப்படையாகச் சொல்லவும் விருப்பங்கொள்ளாமல் 'ஆசைதந்தார்' எனச் சுட்டிக்கூறினள். கார்காலத்தில் வானம் மலைமீது மழையைப்பொழிவது போலவே, எனது தலைவன் தான் குறித்துச்சென்ற பருவம் வந்தும் வாராதது கண்டு எனது கண்களும் இக்காலத்து முலைமலைமேல் மழைபொழிகின்றனவென்பது, பின்னிரண்டடிகளிற் போந்த பொருள். "முலைமலைமேனின்றும் ஆறுகளாய், மழைக்கண்ணநீர் திருமால் கொடியானென்று வார்கின்றதே" என்றார், நம்மாழ்வாரும்.

இதற்கு யாப்பிலக்கணம், சுஅ - ஆங் கவியிற் கூறியதே. (எச)

[கைக்கிளை.]

காரகமோநம்வடதிருவேங்கடக்கார்வரையோ
நீரகமோநெடுவானகமோதுயினீடுபணிப்
பேரகமோதென்றிருவரங்கப்பெருங்கோயிலென்னு
மூரகமோவிடந்தண்காவினின்றவொருவருக்கே.

(இ - ள்.) தண் காவில் நின்ற-குளிர்ச்சிபொருந்திய சோலையில் நின்ற, ஒருவருக்கு—[யான்கண்ட தலைமகளுக்கு], இடம் - வசித்தற்கிடமாவது,— காரகமோ - மேகமண்டலமோ? நம் - நமது, வட திருவேங்கடம் - வடக்கின்கண் உள்ள திருவேங்கடமென்னும், கார் வரையோ-பெரிய மலையோ? நீரகமோ - நீரினிடமோ? நெடு வானகமோ - பெரிய தேவலோகமோ? துயில் நீடு பணி பேர் அகமோ - தூக்கம்மிக்க பாம்புகளின் பெரியஇடமா

கிய நாகலோகமோ ? தென் திருவரங்கம் பெருங் கோயில் என்னும் ஊரக மோ-அழகிய திருவரங்கம் பெரியகோயிலென்கிற ஊரினிடமோ? (எ - று.)

இது, தலைமகளைக் கண்ணுற்ற தலைமகன், இங்ஙனந் தோன்றுகின்ற இவள் தெய்வமோ?அன்றி மக்களுள்ளாளோ?வென்று ஐயுற்றது. "போதோ விசும்போ புனலோ பணிகளது பதியோ, யாதோ வறிகுவ தேது மரிதி யமன் விடுத்த,தூதோ வனங்கன் றுணையோ வினையிலி தொல்லைத் தில்லை, மாதோ மடமயிலோவெனநின் றவர்வாழ்பதியே" என்றார்கோவையாரிலும். "ஊரும் பேருங் கெடுதியும் பிறவும், நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித், தோழியைக் குறையுறும் பகுதியும்" என்றபடி தலைவியும் தோழியும் ஒருங் கிருந்த சமயம் நோக்கித் தலைவன் அங்குச்சென்று தன்கருத்தைக்குறிப்பிப் பதற்கு ஒருவியாஜமாக ஊர்வினவியது இது. "பதியொடு பிறவினுய் மொழி பல மொழிந்து, மதியுடம்படுக்க மன்னனை வலித்தது" என்பதுங் காண்க.

மின்னற்கொடி போன்றமையாற் காரகமோ வென்றும், வரையரமக ளிர்போன்றமையால் வடதிருவேங்கடக்கார்வரையோ வென்றும், நீரர மகளிர் போன்றமையால் நீரகமோவென்றும், வானரமகளிர் போன்றமை யால் வானகமோ வென்றும், நாககன்னியர் போன்றமையால் துயில்நீடு பணிப்பேரகமோ வென்றும், மானுடமாதர்போன்றமையால் தென்றிருவர ங்கப் பெருங்கோயிலென்னு மூரகமோ வென்றும் விகற்பித்துக் கூறினன். காரகம், நீரகம், பேரகம், ஊரகம் என்பன தொண்டைநாட்டுத் திருப்பதி கள்இருபத்திரண்டிற் சேர்ந்துள்ள திருப்பதிகட்குத் திருநாமங்களாதலால், தண்காவினின்ற ஒருவர்க்கு அத்திருப்பதிகளுள் எதேனுமொன்றுதானோ இடம்? என்ற மற்றொரு பொருளும் இங்குக் கொள்ளத்தக்கது. இப்பொரு ளில் ஊரக [ஆதிசேஷன்] சம்பந்தமுள்ளது ஊரகம் ஆதலால், திருவரங்கத் திருப்பதிக்கும் ஊரகத்திற்கும் அபேதமாக 'திருவரங்கப்பெருங்கோயிலெ ன்னு மூரகமோ' என்றுரென்க.

இனி, தலைமகள் கூற்றாய், காரகம்முதலியன திருப்பதிகளாகவுமாம்.
இது, நேரசை யாதியதாகிய கட்டளைக்கலித்துறை. (எ௫)

ஒருநயம் பேசுவன், றிருவரங் கேசர்தாண்
மருவுமின் னாசமாங், கருமவன் பாசமே.

(இ - ள்.) (உலகத்தீரே)!—ஒருநயம் பேசுவன்-ஒரு நல்வார்த்தை சொ ல்வேன்: (கேளுங்கள் ; அது எதுவென்றால்),—திருவரங்கேசர் தாள் மருவு மின் - ஸ்ரீரங்கநாதரது திருவடிகளைச் சேருங்கள் (என்பதே); (அதனாலு ண்டாகும் பயனென்னை யெனின்),—கருமம் வல் பாசம் நாசமாம் - வினை களாகிய வலியபந்தங்கள் அழிந்துபோய்விடும்[மோக்ஷமுண்டாகும்]; (எ-று.)

ஸ்ரீரங்கநாதனது திருவடிகளைப் பற்றுங்கோள் ; உமது இருவினையும் நீங்கி நீவிர் நற்கதிபெறுவீரென்று உலகத்தோர்க்கு உபதேசித்தவாறு. இங்கு இருவினைபோதற்கு எம்பெருமானதுதிருவடியைப்பற்றுகை சாதனமாமெ னின், ஆகாது; ப்ரபந்நாதிகாரிக்கு இஃது அதிகாரி விசேஷணமாம். எம் பெருமானது நிர்ஹேதுக கடாக்ஷமல்லது மற்றொன்றை உபாயமாகக்

சொன்னது - அரசன்பக்கல் ராஜ்யத்தைப் பெறுதற்கு எலிமிச்சம்பழமீதலை உபாயமாகக்கொள்ளுதல்போலு மென்க. விரிக்கிற் பெருகும். நல்வினையும் பிறப்பிற்கு ஏதுவாதலால், 'கருமவன்பாசம்' எனப் பொதுப்படக்கூறினர். வினையைப் பாசமாக உருவகப்படுத்தியது, தம்இஷ்டப்படி எவ்வழியும்செல்ல வொட்டாது பிணிப்புண்ணப்பண்ணுதலால்.

இது-இருசீரும் விளச்சீராகிய குறளடிநான்குகொண்ட வஞ்சித்துறை. (எசு)

[தலைவி யிரங்கல்.]

பாசமாமடியர்பா னேசமாமடிகளும்
 பைம்பொனாராடையுஞ் செம்பொன்மாமேனியு
மாசையாமலருளாள் வாசமாரகலமு
 மஞ்சலென்றருள்செயுங் கஞ்சமுங்கருணையின்
றேசுலாவதனமும் மாசிலாமுறுவலுஞ்
 சீரிதாயெழுதுகத் தூரிநாமமுமெனக்
கீசனார்திருவரங் கேசனார்திகிரியு
 மிலகுவெண்சங்குமே யுலகமெங்கெங்குமே.

(இ - ள்.) உலகம் எங்கு எங்கும் - எல்லாவுலகங்களிலும் எல்லாவிடமும்,—எனக்கு ஈசனார் - எனக்குத் தலைவராகிய, திரு அரங்கேசனார் - ஸ்ரீரங்கநாதரது, பாசம் ஆம் அடியர்பால் - (தம்பக்கல்) அன்புள்ள அடியார்களிடத்தில், நேசம் ஆம் - கருணையுள்ள, அடிகளும் - திருவடிகளும், பைம் பொன் ஆர் ஆடையும் - பசும்பொன்மயமான பீதாம்பரமும், செம் பொன் மா மேனியும் - செவ்விதாய் அழகிய பெரிய [கரிய] திருமேனியும், ஆசை ஆம் மலர் உளாள் - (மிக்க) காதலை யுடைய தாமரைப்பூவி லுறைகின்ற திருமகளுக்கு, வாசம் ஆர் - தங்குமிடமாகப் பொருந்திய, அகலமும் - திருமார்பும், அஞ்சல் என்று அருள் செயும் - (தன்னையடைந்தாரை) அஞ்சற்க வென்றுசொல்லிப் பாதுகாக்கின்ற, கஞ்சமும்-தாமரைமலர்போன்ற அபய ஹஸ்தமும், கருணையின் தேசு உலா-அருளினது ஒளி விளங்குகின்ற, வதனமும் - திருமுகமண்டலமும், மாசு இலா முறுவலும் - மறுவில்லாத புன்சிரிப்பும், சீரிது ஆய் எழுது கத்தூரி நாமமும் - சிறப்பினையுடைத்தாம்படி கஸ்தூரியால் எழுதப்பட்ட திருநாமமும் [திலகமும்], திகிரியும் - சக்கரமும், இலகு வெள் சங்குமே - விளங்குகின்ற வெண்மையாகிய சங்கமுமேயாகும்; (எ - று.)

தலைவனைக்கூடிப்பிரிந்த தலைமகள் எப்போதும் தலைவனைக்குறித்தே சிந்தித்துக்கொண்டிருத்தல்பற்றிச் சிந்தனையின் மிகுதியால் அத்தலைவனது உருவம் எங்குந்தோன்ற,உண்மையில் தலைமகனே யென்றெண்ணி முயங்கப் புக, அஃது மெய்ப்புலனாகாது நிற்கவே, ஆற்றளாகிய தலைவி இரங்கிக்கூறியது, இது.

திருவடிகள் தம்மையடைந்தார்க்கு முத்தியளித்தல்பற்றி, 'பாசமாமடியர்பானேசமாமடிகளும்'என்றார். திருவடிகள் முதலியன மனத்தைக் கவர்தல்பற்றிப் பாராட்டிக்கூறப்பட்டன.

'நாயன்தே! ஆஸநபத்மத்திலே அழுத்தியிட்ட திருவடித்தாமரைகளும் அஞ்சலென்றகையும் கவித்தமுடியும் முறுவல்பூரித்த சிவந்ததிருமுகமண்டலமும் திருநுதலில் கஸ்தூரித்திருநாமமும் பரமபதத்திலே கண்டிலேனாகில் ஒரு மூலையடியிலே முறித்துக்கொண்டு குதித்து மீண்டுவருவேன்' என்பது, இந்நூலாசிரியரின் ஆசார்யரான ஸ்ரீபட்டர்வார்த்தை. அடிகள் முதலியன பலவிடங்களிலிருப்பதாகக் கூறியது - சிறப்பணியின்பாற்படும்.

'மார்பகலம்' என்னும் பாடத்துக்கு, அகலமாகிய மார் பென்க.

இது, எல்லாச்சீரும் விளச்சீராகிய எண்சீராசிரியவிருத்தம். (எஎ)

[தலைவன் இடமணித்து என்றல்.]

எங்கணுநிறைந்துறையுமெம்பிரான்
கொங்கணுகிவண்டுமுரல்கோயில்சூ
ழுங்கள்வரையெங்கள்வரையொன்றியே
மங்கையுனகொங்கைகளைமானுமே.

(இ - ள்.) எங்கணும் - எல்லாவிடத்திலும், நிறைந்து உறையும் - அந்தரியாமியாய்த் தங்கி வசிக்கின்ற, எம்பிரான் - நம்பெருமாளது, வண்டு - வண்டுகள், கொங்கு அணுகி - தேனுக்காக நெருங்கி, முரல் - ஆரவாரிக்கின்ற, கோயில் - திருவரங்கத்தை, சூழ் - சூழ்ந்த, உங்கள் வரை - உங்களது மலையும், எங்கள் வரை - எங்களது மலையும், ஒன்றி - நெருங்கி, மங்கை - பெண்ணே! உன கொங்கைகளை - உனது தனங்களை, மானும் - ஒத்திருக்கும்; (எ - று.)

இது, பிரியக் கருதிய தலைமகன், தலைமகள் அதற்கு உடம்படுவது காரணமாக, அவளைத் தன் ஊரினணிமை கூறி வற்புறுத்தியது.

எம்பிரானது கோயிலென இயையும். மங்கை - அண்மைவிளி. வரை ஒன்றிக் கொங்கைகளை மானுமென்றது, கொங்கைகள் ஒன்றுக்கொன்று மிகநெருங்கியிருக்குமாறு போல, உனது இடமும் எமது இடமும், மிகவும் அணித் தென்றபடி. இதனால், கொங்கைகளது மிக்க வண்மையும், பருமையுந் தொனிக்கின்றது. மகளிர்க்குத் தனங்கள்நெருங்கியிருத்தல், உத்தம விலக்கணம். எம்பெருமான் எல்லாப்பொருள்களிலும் அந்தர்யாமியாக வாழ்வனென்று சொல்லுமிடத்து அவ்வப்பொருள்களிலுள்ள குற்ற நற்றங்களும் அவ்வெம்பெருமானைப்பற்றுவோ? என்னின், பற்றாது; ஒருடம்பினிடத்தே வாழும் ஆத்மாவுக்கு அவ்வுடம்பைப் பற்றிவரும் இளமை முதுமை முதலியன பற்றாதவாறுபோல வென்க.

இது, முதலிரண்டு கூவிளங்காய்ச்சீர்களும், ஈற்றது கூவிளச்சீருமாகிய சிந்தடி நான்கு கொண்ட வஞ்சிவிருத்தம். (எஅ)

[இரங்கல்.]

மானூர்கேசன்மேலார்மாலாய்வாழ்கோயிற்
றேனூர்காவிற்பூவாராயுந்தேனேபோ
னானபோகத்தின்பங்கண்டார்நான்வாடப்
போனார்வாராதேதோவோதாய்போதாவே.

(இ - ள்.) போதாவே-பெருநாரையே!—மான் ஆர் கேசன்-கங்கைமகள் பொருந்திய சடைமுடியினையுடைய உருத்திரன் முதலிய, மேலார் - தேவர்கள், மால் ஆய் - பேரன்புகொண்டு, வாழ் - வந்து தங்குகின்ற, கோயில் - திருவரங்கத்தில், தேன் ஆர் காவில் - தேன் நிறைந்த சோலையில், பூ ஆராயும் - மலர்கள் தோறும் ஆராய்ந்து இனிதாய்த் தேனுண்கின்ற, தேனே போல் - வண்டுகளைப்போல,—நானா போகத்து இன்பம் - பலவகைப்பட்ட போகசுகங்களை, கண்டார் - அனுபவித்தவரும், நான் வாட போனார்-நான் வாட்டமடையும்படி பிரிந்துபோனவருமாகிய தலைவர், வாராது - மீண்டும் வாராமை, ஏதோ - யாது காரணத்தாலோ? ஓதாய் - சொல்லு ; (எ - று.)

தலைமகளைப் புணர்ந்து பிரிந்து சென்ற தலைமகன் வெகுகாலமாகியும் மீண்டுவாராமை கண்டு, தலைவி, நாரையை நோக்கி யிரங்கிக் கூறியது, இது. 'பூவாராயுந் தேனேபோல் நானாபோகத் தின்பங்கண்டார்...போனார் வாராதேதோ'என்றதனால், அத்தலைவர் உத்தமஜாதிஸ்திரீகளாகிய பத்மினிகளிருக்குமிடமெல்லாஞ் சென்று அன்னாருடைய இன்பத்திற் பழகியவராதலின் இப்போது எந்தமங்கையின் இன்பத்தில் மூழ்கியிருக்கின்றாரோ? என்றும், பலமகளிரது இன்பந்துய்த்தவ ராதலின் என்னொருத்தியின்பத்திற் கருத்தைச்செலுத்தாது என்னை வருந்தும்படி விட்டுப் பிரிந்துசென்றாரென்றும் இரங்கிக்கூறியவாறு.

கேசம் - மயிர்: அதனையுடையவன் கேசன். மேலா ரென்பதற்கு - மேலுலகத்தவ ரென்றும், மேன்மையையுடையவ ரென்றுங் கொள்க. போதா - பெருநாரை.

இது, முதல் நான்குந் தேமாச்சீர்களும், ஈற்றது தேமாங்காய்ச்சீருமாகிய கலிநிலைத்துறை. (எகூ)

[மதங்கு: மடக்கு.]

போதவெனக்கெளிதானார்போதவனுக்கரிதானார்
நாதரரங்கர்திருத்தா ணாடியரங்கினடக்கி
ேனாதுமதங்கிநடித்தா லுள்ளமதங்கியரக்காம்
வேதமறைந்திடவல்லீர் விரையமறைந்துவிடீரே.

(இ - ள்.) வேதம் அறைந்திட வல்லீர் - வேதமோத வல்லவர்காள்!— போத எனக்கு எளிது ஆனார் - அடியனாகிய எனக்கு மிகவும்எளிமையானவரும்,போதவனுக்கு அரிதுஆனார் - தாமரைமலரில் தோன்றிய பிரமனுக்கு அருமையானவருமாகிய, நாதர் அரங்கர்-ரங்கநாதரது, திரு தாள் - திருவடிகளை, நாடி - சேவிக்க விரும்பி, அரங்கில் - அங்குள்ள சபையில், நடக்கின்-(நீங்கள்) செல்லுமிடத்து,(அங்கு), ஓதும் மதங்கி - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற மதங்கியானவள், நடித்தால் - நடனஞ்செய்தால், உள்ளமது - (அதனைக்காண்பவரது) மனமானது, அங்கி அரக்கு ஆம் - நெருப்பிலிட்ட அரக்குப்போலக் கரைந்துஉருகிப்போம்; (ஆகையால்), விரைய மறைந்துவிடீர் - விரைவாக மறைந்துசெல்லுங்கள்; (எ - று.)

மதங்குஎன்றும், மதங்கமென்றும், மதங்கியாரென்றும் வழங்குவர். இரண்டுகைகளிலும்வாளையெடுத்துச் சுழற்றிக்கொண்டு தானும் சுழன்று ஆடுவாளோரிளமாதின் அழகுமிகுதியை ஒருவன் பாராட்டிக்கூறுவதாகச் செய்யுள்செய்வது, இதன் இலக்கணம். அங்ஙனம் ஆடுபவள், மதங்கி யெனப்படுவள். மதங்கி - ஆடல் பாடல் வல்ல பதினாறுவயதுப்பெண்.

'போதவெனக்கெளிதானார் போதவனுக்கரிதானார்'—"பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய வித்தகன்" என்றார் ஆழ்வாரும். அரங்கு - நடன மண்டபம். அங்கியரக்கு - நெகிழ்ந்து கரைந்து உருகுதலில் உவமம். அங்கி = அக்கி; வடசொற்சிதைவு. 'வினையைமறந்துவிடீர்'என்னும் பாடத்துக்கு-நீங்கள் செய்யும் வைதிககருமங்களை மறந்துவிடுங்க ளென்க.

இது, எல்லாச்சீரும் மாச்சீர்களாகிய அறுசீரடியாசிரியவிருத்தம். (அO)

[பாண்.]

விடாதுபூமடந்தைமார் விரும்பவாயர்மாதர்தோள்
வியந்துமுன்னயந்தவர்க்கு விற்குமெங்கள்கொங்கைதா
னடாததன்றுபாணவின்ன மங்ஙனன்றியிங்ஙன
மரங்கரனபுகூரவின்ப மாகவல்லவல்லவே
யெடாதிருக்கின்வாய்திறக்கு மெங்களையனுச்சிதோ
யெண்ணெய்பட்டமெய்யிலிட்ட முத்துமுத்தரீயமும்
படாமுகந்திறந்தசைந்து மழலைவாயின்மணமறாப்
பசுநரம்புபுடைபரந்து பால்சுரந்தமுலையுமே.

(இ - ள்.) பாண - பாணனே!—பூமடந்தைமார் - திருமகளும் நிலமகளும், விடாது-சிறிதும் விட்டுப்பிரியாமல், விரும்ப - விரும்பிக் கூடியிருக்கவும், (அவர்களைவிட்டு), ஆயர் மாதர் தோள் - இடைப்பெண்ணான நப்பின்னையினது தோள்களை, முன் - முன்னே [கிருஷ்ணாவதாரத்தில்], வியந்து-அதிசயித்து, நயந்தவர்க்கு - விரும்பிக் கூடிய தலைவர்க்கு, விற்கும் எங்கள் கொங்கை - விலைக்கு விற்கின்ற எங்களது தனம், அடாதது அன்று - தகாதது அன்று; இன்னம் - இன்னமும், அங்ஙன் அன்றி - அவ்வாறல்லாமல், இங்ஙனம் - இவ்வாறு, எடாது இருக்கின் - எடுத்துப் பால்கொடாதிருந்தால், வாய் திறக்கும் - வாய்திறந்தழுகின்ற, எங்கள் ஐயன் - எங்கள் குழந்தையினது, உச்சி தோய் - உச்சியிற் பொருந்திய, எண்ணெய் பட்ட - எண்ணெய் படப்பெற்ற, மெய்யில் - எங்கள்உடம்பில், இட்ட-இடப்பட்ட, முத்தும் - முத்துமாலையும், உத்தரீயமும் - மேலாடையும்,படாம் முகம் திறந்து-(அக்குழந்தையால்) மேலாடை சிறிது வாங்கப்பட்டு, அசைந்து—,மழலை வாயின் மணம் அறா - மழலைச்சொற்களையுடைய (அக்குழந்தை) வாயினது வாசனை நீங்கப் பெறாமல், பசு நரம்பு புடை பரந்து - பச்சைநரம்புகள் புறத்தே பரவப்பெற்று, பால் சுரந்த - பாலைச் சுரக்கின்ற, முலையும் -தனங்களும், அரங்கர்—, அன்பு கூர - அன்பு மிகும்படி, இன்பமாக வல்ல அல்லவே - இன்பமாகத்தக்கனவேயாகும்; (எ - று.)

பரத்தையைப் புணர்தற்பொருட்டுத் தலைமகளைப் பிரிந்து சென்ற தலைமகனால் தலைமகளது கருத்தை அறிந்து அவளைச்சமாதானப்படுத்தி அவளிடம் தான் வரும்படி பேசிவருமாறு அனுப்பப்பட்ட பாணனுக்குத் தலைவி வெகுண்டுகூறியது இது; 'பாணனோடுவெகுண்டுரைத்தல்' என்னுந் துறை. ஸ்ரீ பூமி தேவிகள் மனைவியராய் அமைந்திருக்க, ஓரிடைப்பெண்ணை மணந்த தலைமகன் தான் முன்னர்க் கூடிய எங்களை இப்போது இழிவாக நினைப்பது அத்தலைமகனுக்குச் சிறிதுந்தக்கதன்றென்று வெகுண்டு கூறினளென்க.

பூமடந்தை யென்பதற்கு - இரட்டுறமொழிதலால், தாமரைப்பூவிலுள்ள ஸ்ரீதேவியென்றும், பூ வடசொல்லாய்ப் பூதேவியென்றுங் கொள்க; "போதின்மங்கை பூதலக்கிழத்தி தேவி," "ஆயனாகி யாயர்மங்கை வேயதோள்விரும்பினாய்" என்று திருமழிசைப்பிரான்பாசுரம். "வாயு மனைவியர் பூ மங்கையர்களெம்பிராற்கு" என்றார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியிலும். பாணன் - பாடுபவன். அங்ஙனன்றி யிங்ஙன மென்பதற்கு - அவ்விடத்திலே யல்லாமல் இவ்விடத்தில் வந்தென்றுமாம். அல்லவேயென்பது, தேற்றப்பொருளுணர்த்தி நின்றது. குழந்தையை ஐயனென்றது, உவகை பற்றிய மரபுவழுவமைதி. உச்சி - நடுத்தலை. படாம் - படமென்னும் வடசொல்லின் விகாரம்; கச்சுமாம். இனி, படாமுகந்திறந்தென்பதற்கு-சாயாத முகந்திறந்தென்று உரைத்து, பால்சுரந்த வென்பதனோடு கூட்டவுமாம். 'எங்கைகொங்கை' என்னும் பாடத்துக்கு, தோழி கூறியதென்க.

இதற்குச் செய்யுளிலக்கணம், ௩க - ஆங் கவியிற் கூறியது. (அக)

[தலைமகளிளமைக்குச் செவிலியிரங்கல்.]

முலைகொண்டபான்மணம்வாய்மாறிற்றில்லை யம்மொய்குழலோ
வலைகொண்டதின்னமென்கையணையே யலையாழிவற்றச்
சிலைகொண்டசெங்கையரங்கேசர்தாள்கொண்டதேசமெல்லாம்
விலைகொண்டவாள்விழியாள்சென்றவாறெங்ஙன்வெஞ்சுரமே.

(இ - ள்.) (இச்சிறுமகளுக்கு).இன்னம்—,முலை கொண்ட பால் மணம்-தாய்முலையிற் கொண்ட பாலினது வாசனை, வாய் மாறிற்று இல்லை - வாயினின்றும் நீங்கிற்றில்லை; அம் மொய் குழலோ - அழகிய நெருங்கிய கூந்தலோ, அலை கொண்டது - அலைந்துகொண்டே யிருக்கின்றது [மயிர் முடி கூடிற்றில்லை]; என் கை அணையே-என்கையே படுக்குமிடமாயிருக்கின்றது; (இங்ஙனமிருக்கவும்),—அலைஆழி வற்ற-அலைகளையுடைய கடல்வற்றிப்போம்படி, சிலை கொண்ட-(ஆக்நேயாஸ்திரத்தை விடுத்தற்குக்) கோதண்டத்தையெடுத்த, செங் கை - சிவந்த திருக்கையையுடைய, அரங்கேசர் - ரங்கநாதரது, தாள் - திருவடியால், கொண்ட - அளந்துகொள்ளப்பட்ட, தேசம் எல்லாம் - உலகமுழுவதையும், விலை கொண்ட-தனக்கு விலையாகக் கொண்ட, வாள் விழியாள் - வாள்போன்ற [கூரிய] கண்களையுடைய இவள், வெம் சுரம் - கொடிய பாலைநிலவழியில், சென்ற ஆறு - (தலைவன் இருக்குமிடத்தை நோக்கிப்) போன வகை, எங்ஙன் - எவ்வாறோ? (எ - று.)

களவுப்புணர்ச்சிக்கண் தலைவி தலைமகனைப்புணர்ந்து பின்னர் அவனுடன்போக்கிற் சென்றனளாக, அதனையறிந்த செவிலி 'பேதைப்பருவத்தளான இவட்குத் தலைவனுடன் போக்கிற்கு இசையும் முதக்குறைவு வந்தவாறு என்னோ!' என்று இரங்கிக்கூறியது, இது. இதனை நற்றாய்வார்த்தையாகக் கொள்வாரு முளர். தலைவி யௌவநபருவத்தை யடைந்திருந்தும் இவள்தாய்மார்க்கு அன்புமிகுதியால் இவளது மிக்க இளமையே தோற்றுவதென்க. தலைமகனை வசப்படுத்துவது முலையழகாலேயாதல் மயிர்முடியழகாலேயாதல் சொற்சாதுரியத்தாலேயாதல் கூடுவதாயிருக்க,முலையும்அரும்பாதே குழலும்முடிகூடாதே சொல்லுங்குதலையாயுள்ள இந்தப்பேதைக்கு இப்படி தலைவனிடம் அன்புண்டானவாறு என்கொல்? என்று அதிசயப்பட்டனளென்க. "முலையோ முழுமுற்றும்போந்தில மொய்பூங்குழல் குறிய, கலையோவரையில்லை நாவோகுழறும் கடன்மண்ணெல்லாம், விலையோவெனமிளிருங் கணிவள் பரமே பெருமான், மலையோ திருவேங்கடமென்று கற்கின்றவாசகமே" என்ற நம்மாழ்வார்பாசுரம் இங்கு நோக்கத்தக்கது.

"வாயிற் பல்லுமெழுந்தில மயிரும் முடிகூடிற்றில, சாய்விலாத குறுந்தலைச் சிலபிள்ளைகளோ டிணங்கித், தீயிணக்கிணங் காடிவந்திவ டன்னன்ன செம்மைசொல்லி, மாயன் மாமணிவண்ணன்மே லிவண் மாலுறுகின்றாளே" என்றார் பெரியாழ்வாரும். "அடியளந்தான் றாஅய தெல்லாம்" என்றாற்போல,'அரங்கேசர் தாள்கொண்ட தேசமெல்லாம்' என்றாள்

இது, கிரையசை முதற் கட்டளைக் கலித்துறை. (அஉ)

[தலைமகன் தலைமகளது இயல்கூறல்.]

வெஞ்சமங்கருதுங் கஞ்சனுமெருதும்
 வேழமும்பரியும் வீழமுன்பொருதார்
தஞ்சமென்றவருக் கஞ்சலென்றருளுந்
 தாயிலன்புடையார் கோயிலின்புடையார்
மஞ்சுவண்டினமுந் துஞ்சுதண்டலைவாய்
 வல்லியொன்றதிலே யெல்லியுந்திகழுங்
கஞ்சமுண்டதிலே நஞ்சமுண்டதிலே
 கள்ளமுண்டதுவென் னுள்ளமுண்டதுவே.

(இ - ள்.) வெம் சமம் கருதும் - கொடிய போரை விரும்புகின்ற, கஞ்சனும் - கம்ஸனும், எருதும் - (அவனாற் கொல்லும்படி யேவப்பட்ட) எருதினுருவங் கொண்டுவந்த அரிஷ்டாசுரனும், வேழமும் - (குவலயாபீடமென்னும்) பட்டத்துயானையும், பரியும் - குதிரைவடிவாய்வந்த (கேசியென்னும்) அசுரனும், வீழ - இறந்துவிழும்படி, முன் - முன்னே [கிருஷ்ணாவதாரத்திற் குழந்தைப்பருவத்தில்], பொருதார் - போர்செய்தவரும், தஞ்சம் என்றவருக்கு - அடைக்கல மென்றுகூறி வந்து சரணமடைந்தவர்களுக்கு, அஞ்சல் என்று அருளும் - அஞ்சற்கவென்று சொல்லி [அபயப்பிரதானஞ்செய்து] காக்கின்ற, தாயில் அன்புடையார் - (உயிர்களிடத்துத்) தாயினும்

அன்பினையுடையவருமாகிய நம்பெருமாளது, கோயிலின் புடை - பெரிய கோயிலின் புறத்தில், ஆர் - பொருந்திய, மஞ்சு வண்டு இனமும் துஞ்சு தண்டலைவாய் - மேகக்கூட்டங்களும் வண்டுக்கூட்டங்களுந் தங்குகின்ற சோலையினிடத்தில், வல்லி ஒன்று (உண்டு)-கொம்பொன்று [மகள் ஒருத்தி] உண்டு; அதிலே - அதனிடத்திலே, எல்லியும் திகழும் கஞ்சம்-இராக்காலத்தும் குவியாமல் மலர்ந்து விளங்குகின்ற தாமரைமலர் [முகம்], உண்டு—; அதிலே,— நஞ்சம் - விஷம் [கண்கள்], உண்டு—; அதிலே—, கள்ளம் - கள்ளத்தனம், உண்டு—; அது—, என் உள்ளம் - என்மனத்தை, உண்டது - கவர்ந்தது; (எ - று.)

இது, தெய்வப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன், தன்னை எதிர்ப்பட்டு நோக்கி 'நீ இவ்வாறு மெலிவுறுதற்குக் காரணமென்னோ?' என்று வினவின பாங்கனுக்கு, 'நேற்றுத் திருவரங்கங்கோயிற் சோலையிற் சென்றேன்; அவ்விடத்து ஒருகொடிபோலவாளது விழிநோக்கால் இவ்வாறுயினேன்' எனத் தனக்கு உற்றது உரைத்தது.

'வல்லியொன்று'என்பது முதல்'கள்ளமுண்டு'என்றதுவரையில் உபமேயப்பொருள்களை உபமானப்பொருள்களாகவே மறைத்துக் கூறியது, உருவகவுயர்வுநவிற்சியணி; வடநூலார் ரூபகாதிசயோக்தி யென்பர். ப்ராஸமென்னுஞ் சொல்லணியும் இச்செய்யுளி லுள்ளது.

இது, முதல் மூன்று ஐந்து எழாஞ்சீர்கள் கூவிளச்சீர்களும், மற்றை நான்கும் புளிமாச்சீர்களுமாகிய எண்சீராசிரியவிருத்தம். (அக)

[தலைவி யிரங்கல்.]

உண்டுமிழ்வாசமுடன் றண்டலைமாருதம்வந்
துலவியசாளரமுங் குலவியவாணிலவும்
விண்டலர்பூவணையும் மென்பனிநீர்புழுகும்
வேனிலிலும்முதிரா வேனிலுமாகியவா
லண்டர்தொழும்பெருமா ளம்புயமின்பெருமா
ளருமறையின்பெருமா ளழகியநம்பெருமாள்
புண்டரிகங்கமழுந் தண்டுறையோதிமமே
புன்னைகள்சிந்தலரே யின்னமும்வந்திலரே.

(இ - ள்.) புண்டரிகம் கமழும் - தாமரைமலர்மணம் நாறுகின்ற, தண் துறை - குளிர்ந்த தடாகத்தினிடத்தே யுள்ள, ஓதிமமே - அன்னமே!—புன்னைகள் சிந்து அலரே - புன்னைமரங்கள் சொரிகின்ற பூவே!—உண்டு உமிழ் வாசமுடன் - உட்கொண்டு வெளிவீசுகின்ற வாசனையோடு, தண்டலை மாருதம்-பூஞ்சோலையின்கண் உள்ள இளங்காற்று, வந்து உலவிய - வந்து வீசுகின்ற, சாளரமும் - பலகணிகளும், குலவிய வாள் நிலவும் - விளங்குகின்ற நிலாவினொளியும், விண்டு அலர் பூ அணையும் - விரிந்துமலர்கின்ற புஷ்பசயனமும், மெல் பனிநீர் புழுகும் - குளிர்ந்த பனிநீரும் கஸ்தூரிப்புழுகும், வேனிலிலும் - இருவகைவேனிற்காலத்துள்ளும், முதிரா வேனிலும்-(இவற்

றையுடைய) இளவேனிற்காலமும், ஆகிய - ஆயின; இன்னமும் - அங்ஙன மாகவும், அண்டர் தொழும் பெருமாள்-தேவர்கள்வணங்குகின்ற சுவாமியும், அம்புயம் மின் பெருமாள் - தாமரைமலரிலுள்ள மின்னற்கொடிபோன்ற திருமகளுக்குத் தலைவரும், அரு மறை இன் பெருமாள்-அறிதற்கரிய வேதங்களாற் புகழப்படுகின்ற இனிய பெருமையையுடையவருமாகிய, அழகிய நம்பெருமாள் - நமது அழகியமணவாளப்பெருமாள், வந்திலரே - வந்தாரில்லையே; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இதற்குத் துறை முன்னர்க் கூறப்பட்டது.

பனிநீர் - ஓர்வகை வாசனைநீர். முதிராவேனிலு மாகிய என்றது - இளவேனிற்பருவங் கழிந்து முதுவேனிற்பருவமும் வந்த தென்றபடி.

இது, முதல் மூன்று ஐந்து ஏழாஞ் சீர்கள் விளச்சீர்களும், மற்றை நான்கும் கூவிளங்காய்ச்சீர்களு மாகிய எண்சீராசிரியவிருத்தம். (அச)

[தலைவனைப்பிரிந்த தலைவி தென்றற்கு வருந்தி யிரங்கல்.]

இன்னிசைவேயினர்மன்னியகோயிலையெய்தார்போற்
பொன்னினைவாலவர்போனவிடத்தினிற்போகாதோ
மின்னியமுகிற்றுளியென்றென்மேலெலாம்
வன்னியின்பொறிகளைவழங்குஞ்வாடையே.

(இ - ள்.) மின்னிய முகில் துளி என்று - மின்னுகின்ற மேகங்களின் மழைநீர்த்துளியென்று பெயர்வைத்து, என் மேல் எலாம் - என்னுடம்பு முழுவதும், வன்னியின் பொறிகளை-நெருப்புப்பொறிகளை, வழங்கும்-வீசுகின்ற, வாடை - வாடைக்காற்றானது,—இன் இசை வேயினர்-இனிய இசையினையுடைய வேய்ங்குழலையுடைய நம்பெருமாள், மன்னிய - எழுந்தருளியிருக்கின்ற, கோயிலை - திருவரங்கத்தை, எய்தார்போல் - அடையாதவர் போல, பொன் நினைவால் - பொருள்தேடும் நினைவினால், அவர் - அத்தலைவர்,போன—,இடத்தினில்—, போகாதோ-போகின்றதில்லையோ? (எ - று.)

தலைவனைப் பிரிந்து அப்பிரிவுத்துயரை யாற்றாத தலைவி தென்றல்வரவுக்கு ஒருசார் வருந்தி இரங்கிக்கூறிய வார்த்தை இது. எல்லாவுயிர்கட்கும் இயற்கையிற்குளிர்ச்சியைச்செய்யுந்தன்மையதும்மழைநீர்த்துளியைவீசுவதுமான தென்றற்காற்று தலைவனைக்கூடியிருக்குமிநிலையில் மேல்வீசும்போது அமிருதம்போல இனிமையாயிருந்து அதுதானே தணந்திருக்குஞ் சமயத்தில் வீசும்போது விஷம்போல மிக்கவருத்தத்தைச்செய்கின்றது. அதுவேயுமன்றி, தாபசாந்தியான மழைநீர்த்துளியும் தாபத்தைத் தணியாமல் வெவ்விய தழலாகத் தோற்றி விரகவேதனையை மிகுவிப்பதாகி மிக்கவெப்பஞ் செய்ய, அதனால் மிகவருந்திய தலைமகள் அவற்றைக்குறித்து வெறுத்துக் கூறினளென்க.

கோயிலை அடைந்தவர்க்கு மீண்டும் விரைவில் வாராதிருத்தல் இயல்பன்றாதலால் எய்தார்போ லென்றும், வாடை போகுமாயின் அவரும் என்னைப்போலவே பிரிவாற்றாமையால் வருந்தி விரைந்து வந்திருப்பரென்னுங்

கருத்தாற் போகாதோ வென்றும், மழைத்துளிகள் தணந்திருக்கின்ற தனக்கு அனற்பொறிபோல வெப்பத்தையுண்டாக்குதலால் முகிற்றுளியென்று வன்னியின் பொறிகளை வழங்கு மென்றுந் தலைவி கூறினள். முகிற்றுளியென்று வன்னியின் பொறிகளை வழங்கு மென்ற தொடரில் - உண்மையில் வன்னியின் பொறிகளா யிருக்க அவற்றிற்கு முகிற்றுளியென்று வாடை பேர்வைத்து மறைத்திருக்கின்ற தெனக் கூறியது, கைதவாபநுதியென்னு மலங்காரம். எய்தார்போ லென்பதற்கு - மீண்டும் வாராதவர்போன் றென்றுமாம். எல்லாமென்பது, ஈண்டு 'மேனியெல்லாம் பசலையாயிற்று' என்பதிற்போல ஒருபொருளின் பலவிட முணர்த்திற்று.

இது, நான்கடியாய், முதலிரண்டடியும் - முதல்நான்குசீரும் கூவிளச்சீர்களும் ஈற்றுச்சீர் தேமாங்காய்ச்சீருமாய் வந்த நெடிலடிகளாய், பின்னிரண்டடியும்-மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும் மற்றைமூன்றுசீர்களும் விளச்சீர்களுமாய்வந்த அளவடிகளாய், முன்னிரண்டடியும் ஓரோசையாய், ஏனையடிகள் வேறோசையாய் வந்த வேற்றொலிவெண்டுறை. (அ௯)

[காலமயக்கு.]

வாடையாயிருபனியுமாய்வேனிலாய்வந்ததுகாரென்றே
பேடைமாமயிற்சாயலாயன்பர்மேற்பிழைகருதிடல்செம்பொ
னாடைநாயகன்றிருமகணாயகனரங்கநாயகனேறு
மோடைமாவிதுமதமிதுபிளிறியவொலியிதுமழையன்றே.

(இ - ள்.) பேடை மா மயில் சாயலாய் - அழகிய மயிற்பேடுபோன்ற சாயலையுடையவளே!—'வாடை ஆய் - கூதிர்காலம் கழிந்து, இரு பனியும் ஆய் - (முன்பனி பின்பனியென்னும்) இரண்டு பனிக்காலங்களும் கழிந்து, வேனில் ஆய் - (இளவேனில் முதுவேனில் என்னும் இரண்டு) வேனிற்காலங்களும் கழிந்து, கார் வந்தது - மழைக்காலமும் வந்தது,' என்றே - என்று எண்ணியே, அன்பர்மேல் - அன்பினையுடைய தலைவர்மீது, பிழை கருதிடல் - குற்றம்நினைக்காதே; இது—, செம் பொன் ஆடை நாயகன் - செம்பொன்மயமான பீதாம்பரத்தையுடைய தலைவனும், திருமகள் நாயகன் - ஸ்ரீயஃபதியுமாகிய, அரங்க நாயகன்—, ஏறும் - ஏறிநடத்துகின்ற, ஓடை மா - முகபடாத்தையுடைய யானை; இது—, மதம் - (அவ்யானையின்) மதநீர்ப்பெருக்கு; இது—, பிளிறிய ஒலி-(அவ்யானை) வீரிடுகின்ற ஓசை; (ஆகையால்), மழை அன்று - (இது) கார்காலமன்று ; (எ - று.)

கார்காலத்து மீண்டுவருவதாகக் காலங்குறித்துத் தலைவியைப்பிரிந்து சென்ற தலைமகன் அக்கார்காலம் வந்தவளவிலும் தான் வாராதொழியவே, அக்காலவரவை நோக்கி வருந்துகின்ற தலைவியைத் தோழி, 'இது, அவன் சொல்லிப்போன கார்காலம் வந்ததன்று ; வானத்திற் கறுத்துச்செல்வது மேகமன்று, திருமால் ஊர்ந்துசெல்லும் மதக்களிறாகும் ; வானத்தினின்று நீர்சொரிவது அக்களிற்றின் மதநீராம்; பேரிடிபோலத் தோன்றும் ஒலி அம்மதக்களிற்றின் பிளிறலாம்' என்று காலத்தை மாறுபடக்கூறி ஆற்றுவித்தனளென்க. "காரெனக் கலங்கு மேரெழிற் கண்ணிக்கு, இன்றனைத் தோழி

யன்றென்று மறந்தது" என்பது காண்க. இது, 'பருவமன்றென்றுகூறல்' என்றும் வழங்கும். இத்துறை - திருக்கோவையாரில் 'காலமறைத்துரைத்தல்' என்றும், தஞ்சைவாணன்கோவையில் 'இருளைவம்பென்றல்' என்றும், தணிகைப்புராணத்துக் களவுப்படலத்தில்'ஆயிடைத்தோழியழிந்தியற்பழித்தல்' என்றும் கூறப்பட்டுள்ளது.

"பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்பவாதலால்,இது, பொய்ம்மைக்குற்றத்தின்பாற்படாது; அங்கு 'குற்றந்தீர்ந்த நன்மைதருதலாவது - பெருந்தீங்கையாயினும் மரணத்தையாயினும் அடையநின்றதோர் உயிர் தான் கூறுஞ் சொற்களின் பொய்ம்மையால் அத்துன்பத்தினின்று நீங்கி இன்பமடைதல்' என்றபடி இங்குப் பிரிவாற்றாமையால் தலைமகளுக்கு உண்டாகும் அபாயத்தைப் புனைந்துரையால் ஒழித்தவாறு காண்க.

இருபனி யென்பதி லுள்ள இரண்டை வேனிலோடுங் கூட்டுக. முகபடாத்தையுடைய மாவெனவே, யானையாயிற்று. ஓடை கூறியது, மேகத்தி லுள்ள மின்னலைக் கருதி.

இது, முதற்சீர் தேமாச்சீரும், ஈற்றுச்சீர் காய்ச்சீரும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய அறுசீராசிரியவிருத்தம். (அசு)

[தழை.]

மழைபோன்மரகதம்போலெம்பிரான்வளர்கோயிலன்னீர்
பிழைபோமிவர்க்கிதையாருரைப்பா ரிவர்பின்வந்தெய்த
தழைபோயுறைத்தவருத்தம்பொறாமைகொல்சங்கரன்பா
லுழைபோயொதுங்கமுயல்போய்மதிபுக்கொளித்ததுவே.

(இ - ள்.) மழைபோல் - கார்மேகம்போலும், மரகதம்போல் - நீலமணிபோலும், எம்பிரான் - நம்பெருமான், வளர் - திருக்கண்வளர்ந்தருளுகின்ற, கோயில் - திருவரங்கத்தை, அன்னீர்-ஒத்திருப்பவர்களே!—பிழைபோம் இவர்க்கு - தவறுசெய்துபோன இத்தலைவருக்கு, இதை - இவ்வரலாற்றை, யார் உரைப்பார் - யாவர் சொல்லுபவர்? [எவருமில்லை]; (அவ்வரலாறு என்னையெனின்),—இவர்—, பின் வந்து எய்த-தொடர்ந்துவந்து பிரயோகித்த,தழை-தழையானது, போய் உறைத்த-சென்று பட்ட, வருத்தம்-வருத்தத்தை, பொறாமைகொல் - பொறுக்கமாட்டாமையினாலன்றோ, சங்கரன்பால் - சிவனிடத்தில், உழை - மானானது, போய் ஒதுங்க - சென்று ஒளிக்க,—முயல் - முயலானது, போய்—, மதி புக்கு - சந்திரனிடத்திற் சேர்ந்து, ஒளித்தது - மறைந்திட்டது; (எ - று.)

இயற்கைப்புணர்ச்சியும் பாங்கற்கூட்டம் அல்லது இடந்தலைப்பாடும் நிகழ்ந்தபின்பு தோழிக்குத் தன்கருத்தைப் புலப்படுத்தி அவள்மூலமாகத் தலைமகளைச்சேர்தலாகிய தோழியிற்கூட்டத்திற் கருத்துவைத்த தலைமகன் அத்தோழியைத் தனியேகண்டு தன்கருத்தை வெளிப்படையாக விரையக் கூறி யிரவாமல் குறிப்பாகக் கூறக்கருதித் தலைமகளும் தோழியும் ஒருங்கு

நிற்குஞ் செவ்வி நோக்கித் தழையுங்கண்ணியுமாகிய கையுறைகளை யேந்திச் சென்று அவர்களைநோக்கி வேட்டைக்குவந்தவன்போலச் சிலமொழிகளைப் புகல, தலைவியின்மனநிலையை யறிதற்பொருட்டு அத்தலைமகனது நிலையைத் தோழி தலைமகளோடு நகைத்துக் கூறியது, இது. தழை - மலர்களை யிடையிட்டுத் தளிர்களாற் செய்வதோ ருடைவிசேடம்: இங்ஙனந்தொடுத்த தழையை ஆடையாக உடுத்துக்கொள்ளுதல், குறிஞ்சிநிலத்துமகளிரியல்பு.

அங்குவந்த தலைமகன் 'இங்கு யானெய்த மான் வந்த துண்டோ?' என்று வினவினனாக,தோழி 'கையில் தழையைவைத்துக்கொண்டு இவர் வேட்டையாடுபவர்போல வினவுகின்றாரே! இவர் இவ்வாறு வம்புக்காக வினவுவது பிழையென்று இவரிடத்து யார்சொல்வது? இவர் இத்தழையைக்கொண்டு எய்ததனால்தான் கானகத்திலுள்ள மான் அவ்வருத்தம்பொறாது சங்கரனிடம்போய்ச்சேர்ந்தது; அவ்வாறே முயலொன்று சந்திரனிடத்துப் போய்ச்சேர்ந்தது' எனப் பரிகசித்துக்கூறுகின்றனளென்க. இதனை, தலைமகள் தோழியர்க்கு உரைத்ததாகக் கொள்வாருமுளர். "பித்தினர் போலப் பல தொடுத்தார் பிறங்கெக்கலைக்கும், வித்தினர்போல விடையும் விடுத்தனர் மெய்ம்மையுளம், பொத்தினர்போல வுரைக்கொத்தவில்லினரல்லர் பொற்பூங், கொத்தினர் யாவர்கொல் சேயருமல்லாக் குறிப்பினரே", "மின்னே தழைகொண்டு வேழமெய்தா ரந்த வேழம்வந்து, பின்னே பிணைபிரியுங்கலையானது பேசி வின்னங், கொன்னேபுகழுங் குறுமுயலாகவுங் கூடுங்கொல்லோ, வென்னே யுலகிலிவனையொப்பாரில்லை யேவினுக்கே" என்ற பாடல்கள் இங்குக் கருதத்தக்கன.

அன்னீர்-அன்னாரென்பதன் விளி. பிழைபோம்இவர்க்கு என்பதற்கு, குற்றமற்ற இவர்க்கு என்றும், தவறானவழியிலே வந்துவிட்ட இவர்க்கு என்றும் பொருள் கொள்க. சந்திரனிடத்துள்ள களங்கத்தை முயலென்பது, கவிமரபு.

இது, நிரையசைமுதலதான கட்டளைக்கலித்துறை. (அஎ)

[தலைவி யிரங்கல்.]

ஒளிக்குமிரு சுடர்க்கவளம் விழுங்கும் பேழ்வா
யுருமுழக்கத் திந்திரவி லோடை நெற்றித்
துளிக்குமழை மதக்கொண்மூக் களிற்றை மின்னற்
றோட்டிமா ருதப்பாகர் துரக்குங் கால
மளிக்குலமுங் களிக்குமயிற் குலமும் பாடி
யாடுபொழிற் றிருவரங்க ரணையாக் கால
மிளிக்குமலைக் கருங்கடலு மொறுக்குங் காலம்
வினையேற்கு விழிகடுயின் மேவாக் காலம்.

(இ - ள்.) ஒளிக்கும் - விளங்குகின்ற, இரு சுடர் - சூரிய சந்திரர்களாகிய, கவளம் - கபளங்களை, விழுங்கும் - விழுங்குகின்ற, பேழ் வாய் - பிளவுபட்ட வாயையும், உரும் முழக்கத்து - இடியாகிய முழக்கத்தையும், இந்திர

வில் ஓடை நெற்றி - இந்திரதனுசாகிய முகபடாத்தையணிந்த நெற்றியை யும், துளிக்கும் மழை மதம் - பெய்கின்ற மழைநீராகிய மதநீரையுமுடைய, கொண்மூ களிற்றை - மேகமாகிய யானையை, மின்னல் தோட்டி - மின் னலாகிய அங்குசத்தால், மாருதம் பாகர் - காற்றாகிய பாகர்கள், தாக்கும்- செலுத்துகின்ற, காலம்—;அளி குலமும்-வண்டுகளின்கூட்டமும்,களிக்கும் மயில் குலமும் - களிக்கின்றமயில்களின்கூட்டங்களும், பாடி ஆடு - முறை யே பாடியாடுகின்ற, பொழில்-சோலையையுடைய, திருவரங்கர்-ஸ்ரீரங்கநா தர், அணையா - வந்து சேராத, காலம்—;(அதனால்), விளிக்கும் அலை கருங் கடலும் - ஆரவாரஞ் செய்கின்ற அலைகளையுடைய கரியகடலும், ஒறுக்கும்- நோய்செய்கின்ற, காலம்—; வினையேற்கு - தீவினையையுடைய எனக்கு, விழிகள் - கண்கள், துயில்மேவா - தூக்கம்பொருந்தாத, காலம்—; (எ - று.)

பருவங்குறித்துச்சென்ற தலைமகன் கார்காலம் வந்தவளவிலும் மீண்டு வாராமை, தலைவி அக்கார்காலத்தைக்கண்டு இரங்கிக்கூறியது, இது. இத் தன்மைய கார்காலத்தில் எனது அரங்கநாயகர் அணைவராகில், கடலும் ஒறுக்கவேண்டுவதில்லை; கண்ணும் உறங்காமை வேண்டுவதில்லை யென்ற வாறு.

முன்னிரண்டடிகளில் உருவகவணி காண்க. மூன்றாமடி—நர்த்தனஞ் செய்பவர் ஆடப் பாடகர் பாடத் தாம் அவ்வின்பத்தைக் கண்டுகளிக்கின்றா ரேயன்றி, எனது துன்பத்தைக் காண்கின்றில ரென்ற குறிப்பு. கவளம் - வடசொற்றிரிபு, உணவுத்திரளை. தோட்டி - மாவெட்டி. பாகர் - யானை யோட்டுபவர். மேகம் தான் சூரியசந்திரர்களை மறைத்தலால், 'ஒளிக்குமிரு சுடர்க்கவளம் விழுங்கும் பேழ்வாய்'என்ற அடைமொழி கொடுத்துக் கூறப் பட்டது. காற்று மேகங்களைச்செலுத்துதலால், பாகராக உருவகப்படுத்தப் பட்டது. கடலொலிக்கு வருந்தலுங் கண்ணுறங்காமையுங் கணவனைப்பிரிந் தார்க்கு இயல்பென்க.

இதற்குக் கவியிலக்கணம் கடு - ஆங் கவியிற் கூறியதே. (அஅ)

[தலைவி யிரங்கல்.]

மேவலர்வாழ்தென்னிலங்கைமலங்க வொருகா லிருகால்விற் குனித்தெய், யேவலர்வாழ்திருவரங்கத்தெமையிருத்திப்போனவர் நாட்டில்லைபோலும், கோவலர்வாய்க்குழலோசைக்காநிரைகள்செவி யேற்குங்குறும்புன்மாலைப், பூவலரின்மணம்பரப்பியிளவேனில்வர வந்தபொதியத்தென்றல்.

(இ - ள்.) இளவேனில் வர - இளவேனிற்காலம் வர, (அப்பொழுது), கோவலர் வாய் குழல் ஓசைக்கு - இடையர்கள் வாயினாலூதுகின்ற வேய்ங் குழலினது ஒலிக்கு, ஆ நிரைகள் - பசுக்கூட்டங்கள், செவி ஏற்கும் - காது கொடுக்கின்ற[கேட்கின்ற],குறும் புன் மாலை-சிறிய புல்லிய மாலைப்பொழு தில்,பூ அலரின் மணம் பரப்பி-மலர்ந்த மலர்களின் வாசனையை வீசிக்கொ ண்டு, வந்த—,பொதியம் தென்றல்-மலயமலையினின்றும் வருகின்ற தென் றற்காற்று,—மேவலர் வாழ் - பகைவர்கள் [அரக்கர்கள்] வாழ்கின்ற, தென்

இலங்கை - தெற்கிலுள்ள இலங்காபட்டணம், மலங்க - கலங்கும்படி, ஒரு கால்-ஒருதரம், வில் இரு கால் - கோதண்டத்தின் இரண்டுகோடிகளையும், குனித்து - வளைத்து, எய் - எய்த, ஏ வலர் - அம்பில்வல்ல நம்பெருமான், வாழ் - வாழ்கின்ற,திருவரங்கத்து-ஸ்ரீரங்கத்தில், எமை - என்னை, இருத்தி-தனியேவிட்டு, போனவர் - பிரிந்துசென்றவர் (போன), நாடு - நாட்டில், இல்லைபோலும்—;(எ - று.)

தலைமகனைப் பிரிந்த தலைமகள் இளவேனிற்காலம் வரக்கண்டு இரங்கிக்கூறியது, இது.

இந்த இளந்தென்றற் காற்று அங்கு இருக்குமாயின்,எனதுதலைவர் உடனேவந்திருப்பரென்றபடி. மேவலர் - விரும்பாதவர். ஒருகால் - காலினுலென்றுமாம். கோவலர் - கோபாலரென்பதன் சிதைவு; பசுக்களைக் காப்பவரென்று பொருள்: இனி, பசுக்களைக்காத்தலில் வல்லவ ரென்றுமாம்.

இதற்கு யாப்பிலக்கணம் ச - ஆம் கவியிற் கூறியது கொள்க. (அக)

[தோழி யிரங்கல்.]

தென்றலைக்குங்குமச்சேற்றைப்பொறாள்சிறியாள்பெரிய
குன்றலைக்குந்துடிக்கும்மென்செய்வா டுயராலழைத்த
வன்றலைக்குஞ்சரங்காத்தா யிலங்கைமலங்கவளைத்
தன்றலைக்குஞ்சரத்தா யரங்காவண்டராதிபனே.

(இ - ள்.) துயரால் - (முதலை கவர்ந்த) வருத்தத்தால், அழைத்த - (ஆதிமூலமே யென்று) கூப்பிட்ட, வல் தலை குஞ்சரம் - வலிய தலையையுடைய கஜேந்திராழ்வானை,காத்தாய்-பாதுகாத்தவனே! இலங்கை—, மலங்க -கலங்கும்படி, வளைத்து- (வில்லை) வளைத்து,அன்று - அந்நாளில் [ஸ்ரீராமாவதாரத்தில்], அலைக்கும்- அலையச்செய்த, சரத்தாய் - அம்புகளையுடையவனே! அரங்கா - அரங்கனே ! அண்டர்ஆதிபனே-தேவர்தலைவனே !—சிறியாள் - சிறிய என்மகள், தென்றலை - தென்காற்றையும், குங்குமம் சேற்றை - குங்குமப்பூவோடு கலந்தசந்தனக்குழம்பையும், பொறாள்- பொறுக்கமாட்டாள்; பெரிய குன்று அலைக்கும் - நீண்டு உயர்ந்த நெருங்கிய அலைகளுக்கும், துடிக்கும் - வருந்துவாள்; என் செய்வாள் - என்ன பரிகாரஞ்செய்யமாட்டுவாள் ; (எ - று.)

தலைமகளை ஒருவழித்தணந்த தலைமகன் மீண்டுவந்து சிறைப்புறமாக நிற்றலை யறிந்த தோழி, தலைமகள் தென்றல் முதலியவற்றிற்கு ஆற்றாது ஒருபடியாலும் தேறுதலின்றி மிகவருந்துதலைத் தலைமகன் கேட்பக் கூறுவது, இது.தலைமகளாற்றாமைகண்டு வருந்துந் தோழி தன்னாற்றாமையாலே தலைமகளை யுட்கொண்டு விளித்து முன்னிலைப்படுத்தியதென்றுங் கொள்ளலாம். இதனைச் செவிலியிரங்கலாகக் கொள்வாரு முளர்.

இலங்கை - ஆகுபெயர். ஆதிபன்-அதிபனென்பதன் விகாரம். அண்டராதிப னென்பதற்கு - நித்தியசூரிகளுக்குத் தலைவ னென்றும்; இடையர்க

ளுக்குத் தலைவனென்றுங் கொள்ளலாம். வண் தார அதிப னெனப் பிரித்து, வளப்பம்பொருந்திய நிலமகளுக்குத் தலைவ னென்றுமாம்.

இது, நேரசை முதலதாகிய கட்டளைக்கலித்துறை. (௩௦)

[தலைவிகூற்று.]

அண்டர்போற்றுந் திருவரங்கேசனு
  ரணியரங்கத் திருமுற்றமெய்தினாற்
பண்டுபோன வளையாழிவாங்குவேன்
  பாலியாது பராமுகம்பண்ணினாற்
றண்டும்வாளுஞ் சிலையுமிருக்கவே
  சங்குமாழியுந் தாருமென்பேனவை
தொண்டருக்கொற்றி வைத்தோமென்றோதினாற்
  றுளவமாலையைத் தொட்டுப்பறிப்பனே.

(இ - ள்.) அண்டர் போற்றும் - தேவர்களெல்லாம் வணங்கித் துதிக்கின்ற, திருவரங்கேசனார் - ஸ்ரீரங்கநாதரது, அணி அரங்கம் திரு முற்றம் - அழகிய அரங்கமாகிய திருமுன்றிலை, எய்தினால் - (யான்) அடைந்தால்,— பண்டு போன - முன்னே கவர்ந்துகொண்டு போன, வளை ஆழி - சங்குவளையையும் மோதிரத்தையும், வாங்குவேன் - (மீளவும்) பெற்றுக்கொள்வேன்; (அவர்), பாலியாது - (அவற்றைக்) கொடுத்தருளாமல், பராமுகம் பண்ணினால் - அலட்சியஞ் செய்தால், (அவ்வளையாழிகளுக்கு ஈடாக), தண்டும் வாளும் சிலையும் இருக்கவே - (உமது பஞ்சாயுதங்களுக்குள்) கதையும் வாளும் வில்லு மிருக்கவே, சங்கும் ஆழியும் - சங்கையுஞ் சக்கரத்தையும், தாரும் என்பேன் - கொடுமென்று சொல்வேன்; அவை - அவற்றை, தொண்டருக்கு - அடியார்களுக்கு, ஒற்றி வைத்தோம் - ஈடாக வைத்துவிட்டோம் [திருவிலச்சினையிட்டு வைத்துவிட்டோம்], என்று ஓதினால் - என்று சொன்னால், துளவ மாலையை - திருத்துழாய்மாலையை, தொட்டு பறிப்பேன் - திருமேனி தீண்டிப் பிடுங்கிக்கொள்வேன்; (எ - று.)

தலைவனைப் பிரிந்து தலைவி அப்பிரிவாற்றாமையால் மெலிந்தனளாக, அவ்வுடன்மெலிவைக்கண்டு தோழியர்முதலியோர் காரணம் இன்னதென உணராது வெவ்வேறாகச் சங்கித்து அவ்வவற்றிற்கு ஏற்ப வெவ்வேறான செய்கைகளைச் செய்யத்தொடங்க, தலைவி அத்தொழில்களை விலக்கி "மற்றிருந்தீர்கட் கறியலாகா மாதவ னென்பதோ ரன்புதன்னை, யுற்றிருந்தேனுக் குரைப்பதெல்லா மூமையரோடு செவிடர் வார்த்தை, பெற்றிருந்தாளையொழியவேபோய்ப்பேர்த்தொருதாயில்வளர்ந்த நம்பி, மற்பொருதாமற்களமடைந்த மதுரைப்புறத்தென்னை யுய்த்திடுமின்" என்றாற்போலச் சொல்லி அறத்தொடு நின்று, பிறகு தான் அங்குச்சென்றாற் செய்யுந்தொழிலை இதனால் தெரிவிக்கின்றன ளென்க.

தலைவனைத் தணந்த தலைவிக்கு அப்பிரிவாற்றாமையால் உடம்பு மெலிதலால் வளையும் மோதிரமுங் கழன்று விழுந்துவிடுதலாலும், மீண்டுந் தலை

வளைப்புணர்ந்தால் அவை கழலவொண்ணாதபடி உடம்பு தனிர்ந்து பூரித்து விலோலும், 'பண்டு போன வளையாழி வாங்குவேன்' என்றான். பராமுகம் பண்ணுதல் - முகந்திரும்பிப்பார்த்தலுஞ் செய்யாது அசட்டை பண்ணுதல்.

இது, கட்டளைக்கலிப்பா; இலக்கணம் முன்னர்க் கூறப்பட்டது. (௧௧)

தொட்டுண்டதயிர்வெண்ணெய்க் கன்றாய்ச்சியுரலோடுசூழ்ந்துகட்டக்
கட்டுண்டுகழலவிரகறியாமலிருந்தழுதகள்வன்யாரே
கட்டுண்டானரங்கனெனக்கட்டுரைப்பாராணுலுங்கங்கைசூடி
மட்டுண்டகொன்றையான்மலர்மேலானறிவரியவடிவனன்றே.

(இ - ள்.) தொட்டு உண்ட - எடுத்துப்புசித்த, தயிர் வெண்ணெய்க்கு - தயிர்க்கும் வெண்ணெய்க்குமாக, அன்று - அந்நாளில் [கிருஷ்ணாவதாரத்தில்], ஆய்ச்சி - இடைச்சி [யசோதை], உரலோடு சூழ்ந்து கட்ட - உரலோடு பிடித்துச் சுற்றிக் (கடைகயிற்றால்) கட்டிவிட, கட்டுண்டு - கட்டப்பட்டு, கழல-விலகிப்போக,விரகு - உபாயத்தை, அறியாமல் - தெரியாமல், இருந்து அழுத - (அங்கேயே) அழுதுகொண்டிருந்த,கள்வன் - கள்ளத்தனமுடையவன், யாரே - யார்? [நம்பெருமாளன்றோ]; அரங்கன்—, கட்டுண்டான் என- கட்டுப்பட்டானென்று, கட்டுரைப்பார் ஆனாலும் - உறுதிப்பட (இழித்து)ச் சொல்லுவாரானாலும், (அவன்), கங்கை சூடி - கங்காநதியைச் சடையில் தரித்து, மட்டு உண்ட கொன்றையான் - வாசனையைக்கொண்ட [தேன் நிறைந்த] கொன்றைப்பூமாலையையுடைய உருத்திரனும், மலர் மேலான் - தாமரைப்பூவில் தங்குகின்ற பிரமனும், அறிவு அரிய - அறிதற்கரிய, வடிவன் அன்றே - வடிவத்தை யுடையவனன்றோ? (எ - று.)

இப்பாட்டில், தங்களில்தோழமையாயிருப்பா ரிருவர்மகளிரது பேச்சாலே, ஒருத்தி பரத்வத்தை அநுசந்திக்க, ஒருத்தி சௌலப்பியத்தை அநுசந்தித்து இவனது தாழ்வுகளைச் சொல்ல, 'அப்படி தாழ்வுகள்செய்தானாயினும் எல்லார்க்கும் மேலானவனன்றே இப்படிசெய்கிறான்' என்று இருவர் பேச்சாலுமாக, எம்பெருமானுடைய பரத்வத்தையும் சௌலப்பியத்தையும் பேசுகிறார்; "வண்ணக் கருங்குழ லாய்ச்சியால் மொத்துண்டு, கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான் காணேடீ, கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும், மெண்ணற் கரிய னிமையோர்க்குஞ் சாழலே" என்றார் திருமங்கையாழ்வாரும். இவ்வாறு இரண்டுபிராட்டிமார்தசை ஏககாலத்தில் கூடுவது எம்பெருமான்திருவருளினா லாகு மென்று பெரியோர்கூறுவர்.

இதற்கு யாப்பிலக்கணம் ச - ஆங் கவியிற் கூறியதே. (௧௨)

வடிபாதபவக்கடலும்வந்துமூல மாயைகடந்தப்பாற்போய்வைகுந்தஞ்சேர்ந், தடியார்கள்குழாங்கூடியுனதடிக்கீழடிமைசெயுமக் காலமெக்காலந்தான், கொடியாடுமணிமாடவயோத்திமூதூர் குடிதுறந்துதிருவரங்கக்கோயில்கொண்ட, நெடியோனேயடியேனுன்முயற்சியின்றி நின்னருளேபார்த்திருப்பனீசனேனே.

(இ - ள்.) கொடி ஆடும் - துவசங்கள் அசைகின்ற, மணி மாடம்- இரத்தினங்களிழைத்த மாளிகைகளையுடைய,அயோத்தி முதுஊர்-திருவயோத்தியென்கிற பழையநகரத்தில், குடி-தங்குதலை, துறந்து - விட்டு, திருவரங்கம்-ஸ்ரீரங்கத்தை, கோயில் கொண்ட - இருப்பிடமாகக்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற, நெடியோனே-பெரியோனே!—வடியாத பவம் கடலும் - வற்றிப்போகாத பிறவிப்பெருங்கடலும், வடிந்து-வற்றப்பெற்று, மூல மாயை கடந்து - மூலப்பிரகிருதியைத் தாண்டி, அப்பால் போய் - அதற்கப்புறஞ் சென்று, வைகுந்தம் சேர்ந்து - ஸ்ரீவைகுண்ட மடைந்து, அடியார்கள் குழாம் கூடி - தொண்டர்களது கூட்டத்தோடு சேர்ந்து, உனது அடிக்கீழ்-உன்னுடைய திருவடியின்கீழ், அடிமை செயும் - கைங்கரியஞ் செய்திருக்கின்ற,அக்காலம்—, எக்காலந்தான்- எப்பொழுதோ? அடியேன் - (உனது) அடியவனும், நீசனேன்- கடைப்பட்டவனுமாகிய, நான்—, முயற்சி இன்றி-பிரயத்தனஞ் சிறிது மில்லாமல், நின் அருளே-உனது திருவருளையே,பார்த்திருப்பன் - எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்; (எ - று.)

எம்பெருமானது திருவருணோக்கம் பதிதலால் இருவினைகள் நீங்கி அவைகாரணமாகத்தோன்றும் பிறவியற, பின்பு இந்தப்பிரகிருதிமண்டலத்தைக் கடந்துபோய் ஸ்ரீவைகுண்டமாநகரில் அடியார்கள் குழாங்களுடன் சேர்ந்துஎம்பெருமானுக்குத்திருத்தொண்டுபுரியவேண்டுங்காலம்எப்போது கிட்டுமோ? என்று அக்காலத்தைப்பார்த்திருக் கின்றனரென்க. "அடியார் குழாங்களையுடன்கூடுவதென்றுகொலோ," "என்றுகொல் சேர்வதந்தோ அரன் நான்முக னேத்துஞ் செய்யகின்திருப்பாதத்தை" என்றார் நம்மாழ்வாரும். சூரியகுலத்துத்தோன்றிய இக்ஷ்வாகுசக்கரவர்த்தி பிரமதேவனைக் குறித்துப் பலநாள்பெருந்தவஞ்செய்ய,அப்பிரமன் அத்தவத்திற்கு மகிழ்ந்து தான்பலகாலமாய் ஆராதித்துவந்த எம்பெருமானை விமானத்துடன் பிரசாதித்தருள, திருவயோத்தி சேர்ந்து அவ்விக்ஷ்வாகுவினாலும் பின்னுள்ள அக்குலத்தரசர்களாலுந் திருவாராதநஞ் செய்யப்பட்டுவந்த நம்பெருமாள், ஸ்ரீராமபிரானால் இராவணவதம்முடிந்து திருவபிடேகம்செய்துகொண்டகாலத்தில் விபீஷணாழ்வானுக்குக் கொடுத்தருளப்பட்டுத் திருவரங்கஞ் சேர்ந்ததனால், 'அயோத்திமுதூர் குடிதுறந்து திருவரங்கங் கோயில்கொண்ட நெடியோன்' என்றார்.

இதற்குச் செய்யுளிலக்கணம் கடு - ஆங் கவியிற் கூறியதே. (௬௩)

நீசச்சமணர்க்குஞ்சூனியவாதர்க்குநீதியற்ற
பூசற்பவுத்தர்க்குஞ்சைவர்க்கும்யார்க்கும்புகலுகின்றே
னாசப்படாவுயிரெல்லாமுதற்றந்தநாதன்கண்டீ
ராசற்றசீரரங்கத்தாதிமூலத்தரும்பொருளே.

(இ - ள்.) நீசம் சமணர்க்கும் சூனியவாதர்க்கும் - கீழ்மையையுடைய சமணர்களுக்கும் நாஸ்திகவாதிகளுக்கும், நீதி அற்ற பூசல் பவுத்தர்க்கும் சைவர்க்கும் - நியாயமல்லாத வாதஞ்செய்கிற பௌத்தர்களுக்கும் சைவர்களுக்கும், யார்க்கும் - மற்றைப் புறச்சமயத்தவர் யாவர்க்கும், புகலுகின்

றேன் - சொல்லுகின்றேன்;—நாசம் படா உயிர் எல்லாம் - அழிவில்லாத சிவன்களையெல்லாம், முதல் தந்த - ஆதியிற் படைத்த, நாதன் - தலைவன், ஆசு அற்ற - குற்றமில்லாத, சீர் அரங்கத்து - ஸ்ரீரங்கத்தி லெழுந்தருளி யிருக்கின்ற, ஆதி மூலத்து - ஆதிமூலமாகிய, அரும் பொருளே - அறிதற்கரிய பரவஸ்துவே: கண்டீர் - அறியுங்கள்; (எ - று.)

சமணர் - ஜைநர்: இவர்கள் - காரியகாரணரூபத்தால் இந்த உலகம் நித்யாநித்யமாயும் பிந்நாபிந்நமாயும் ஸத்யாஸத்யமாயுமிருக்கு மென்றும், ஆத்மாக்கள் இருவினைப்பயனால் வரும் தேகத்தின் பரிமாணங்களையுடையனவா மென்றும், மலதாரணம் அஹிம்ஸை முதலிய செயல்களாலும் ஆத்மஜ்ஞாநத்தினாலும் இந்த ப்ரக்ருதியை விட்டு நீங்கி மேலுலகத்தை யடைகையே மோக்ஷமென்றும் இவ்வாறாகத் தமக்குத் தோற்றியபடியே வேத விருத்தங்களான விஷயங்களைத் தமது வாயில் வந்தபடியே பரக்கச்சொல்வார்கள். சமணர் - க்ஷபணர்; இவர்கள் - பௌத்தர்களை ஒருபுடை யொத்தலும் ஒவ்வாமையு முடையவர். சூனியவாதர் - சூனியமே தத்வமென்றிருக்கிற மாத்யமிகர்; இவர்கள் - ப்ரமாணமும் ப்ரமேயமும் [ப்ரமாணத்தினால் அறியப்படும் பொருளும்] ப்ரமாதாவும் [ப்ரமாணத்தையறிபவனும்] ஆகிய இவையுண்டென்றறிவது மதிமயக்கத்தின் செயலே யென்றும், ஸத்துமன்றாய் அஸத்துமன்றாய் ஸதஸத்துமன்றாய் ஸதஸத்விலக்ஷணமுமன்றாய் இந் நான்கு எல்லையையும் கடந்திருப்பதொன்றே தத்வமென்றும், சூந்யத்திலே சூந்யமென்று அறிகையே மோக்ஷமென்றும் பிதற்றுவார்கள். மறுபிறப்பும் இருவினைப்பயனுங் கடவுளும் இல்லையென்று வாதஞ்செய்வர். இவர்களும் பௌத்தமதத்தைச் சேர்ந்தவர்களெனினும் இவர்களுடைய மதத்தின் கொடுமையைப்பற்றி இவர்களைத் தனியே பிரித்துக்கூறின ரென்க. இவ்வாறே "தர்க்கச்சமணரும் சாக்கியப்பேய்களும் தாழ்சடையோன், சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும்" என்று திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்திருத்தலுங் காண்க. பௌத்தர் - வைபாஷிகன் ஸௌத்ராந்திகன் யோகாசாரன் மாத்யமிகன் என நால்வகைப்படுவர்: இந்நால்வருள் மாத்யமிகனைச் சூனியவாதியென்று முற்கூறியதனால், 'பூசற்பவுத்தர்' என்றது-மற்றை மூவரையுங் காட்டும். இவர்களுள், வைபாஷிகன் - பரமாணுத்திரளின் வடிவாய்க் கட்புலனாவதே உலகமென்றும், அவ்வுலகத்தைப்பற்றித் தோன்றும் உணர்வு க்ஷணிகமென்றும், உணர்வுக்குப் புலனாகும் பொருள்களெல்லாம் ஒரு நொடிப்பொழுதிற்குள்ளே தோற்றக்கேடுகளைப் பெறுமென்றும், எல்லாம் க்ஷணிகமென்று உண்டாகின்ற விஜ்ஞாநத்தின் தொடர்ச்சியே ஆத்மாவென்றும், இதில் நிலையானதென்ற எண்ணமே ஸம்ஸாரம் நிலையிலதென்ற எண்ணமே மோக்ஷ மென்றுங் கூறுபவன்: ஸௌத்ராந்திகன் - பொருள்கள் யாவும் உணர்விலே தங்களுடைய வடிவைப் படைத்துத் தாங்கள் உடனே நசித்துவிட அவ்வுணர்வினாலுண்டான ஆகாரத்தினாலேயே அவ்வப்பொருள்கள் அநுமாநிக்கப்படுகின்றன வென்றும், ஆகவே பொருள்களின் பன்மையே பலவகை ஞானங்கள் தோன்றுவதற்குக் காரணமென்றும், அநுமாநத்தினால் உலகம் சித்திக்குமென்றும், அவ்வுலகத்தைக் குறித்த ஞானமும் க்ஷணிகம், அந்த க்ஷணிகவிஜ்ஞாநமே ஆத்மா, இதில் ஸ்திர

மென்ற புத்தியே ஸம்ஸாரம், அஸ்திரமென்ற புத்தியே மோக்ஷமென்றுக் கூறுபவன். யோகாசாரன் - ஞானமென்ற ஒன்றேயுள்ளது என்றும், அந்த ஞானமே பலவடிவங்களைப் பெற்றுப் பலபண்டங்கள்போலத் தோன்றுகின்றதென்றும், அந்த ஞானம் க்ஷணிகமென்றுஅறிகையே மோக்ஷமென்றுஞ் சொல்லுபவன். சைவர் - தன்னை ஈஶ்வரனென்று மயங்கி உலகமெல்லாம் வணங்கவேண்டுமென்று விரும்பி அதற்குத்தகப் பகவானுடைய கட்டளையைப்பெற்று மோகசாஸ்திரங்களைப் பிரசாரஞ்செய்த ருத்ரனுடைய ஆகமத்தையே முக்கியமாகக்கொண்ட பாசுபதர்.

"ஒன்றுந்தேவு முலகு முயிரும் மற்றும் யாதுமில்லா, வன்று நான்முகன்றன்னொடு தேவருலகோ டுயிர் படைத்தான்" "இலிங்கத்திட்ட புராணத்தீருஞ் சமணருஞ் சாக்கியரும், வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந் தெய்வமுமாகி நின்றான், மலிந்துசெந்நெற்கவரிவீசுந் திருக்குருகூரதனுள், பொலிந்துநின்றபிரான் கண்டீ ரொன்றும் பொய்யில்லை போற்றுமினே" என்றார் நம்மாழ்வாரும்.

நீசத்துவம் - வேதத்துக்குப் புறம்பாயிருத்தலும், காணப்படும் பொருள்களெல்லாங் க்ஷணிகமென்பதும் முதலாயின. பௌத்தர் - புத்தனைத் தெய்வமாகக் கொண்டவர்; சைவர் - சிவனைத் தெய்வமாகக்கொண்டவர்; தத்திதாந்தவடமொழிகள். 'மன்னுயிர்' என்றாற்போல, 'நாசப்படாவுயிர்' என்றார். ஆதிமூலம் - முதற்பொருள்களுக்கெல்லாம் முதற்பொருள்.

இது, நேரசைமுதலாக வந்த கட்டளைக்கலித்துறை. (௯௪)

அரும்புண்ட ரீகத் தடியிணைக்கென் னெஞ்ச
மிரும்புண்ட நீராவ தென்றோ—விரும்பி
யறந்திருந்துங் கோயி லரங்கா வுனைநான்
மறந்திருந்து மேற்பிறவா மல்.

(இ - ள்.) விரும்பி அறம் திருந்தும் கோயில் அரங்கா - எல்லாத்தருமங்களுந் திருத்தமாகச்செய்யப்படுகின்ற திருவரங்கம் பெரியகோயிலில் திருவுள்ளமுகந்து எழுந்தருளியிருப்பவனே!—உனை - உன்னை, நான்—, மறந்திருந்தும் - மறந்திருந்தாலும், மேல் பிறவாமல் - இனிப் பிறவியெடாதபடி, அரும் புண்டரீகத்து அடி இணைக்கு - பெறுதற்கரிய தாமரைமலர் போன்ற(உன்னுடைய) உபயதிருவடிகளுக்கு, என் நெஞ்சம் - எனதுமனம், இரும்பு உண்ட நீராவது - (பழுக்கக்காய்ச்சிய) இரும்பு உட்கொண்ட நீர் போல மீண்டுவாராமல் லயமடைவது, என்றோ - எந்நாளோ? (எ - று.)

இனிப் பிறவியுண்டாகாதவாறு, பழுக்கக்காய்ந்த இரும்பில் நீர் சென்று லயிப்பதுபோல என்நெஞ்சம் உனது திருவடித்தாமரைகளில் லயிப்பது எந்நாளோ? என்று எம்பெருமானது திருவடிகளில் தமது மனம் பதியுங்காலத்தை வேண்டுகின்றனரென்க. பழுக்கக்காய்ச்சிய இரும்பில் நீரைவார்த்தால் அந்நீர் அவ்விரும்பிற்சென்று லயப்பட்டு மீண்டும் வெளிப்படாது; இது மீளாமைக்கு உவமைகூறப்படுதலை, "இரும்புண்டநீர் மீள்கினு மென்று

ழையிற், கரும்புண்டசொன்மீன்கிலன்காணுதியால்" என்ற கம்பராமாயணச் செய்யுளிலுங் காண்க. "நெடுவேங்கடத்தா, னீர விரும்புண்டசீகப்பொற் பாதங்க ளென்னுயிரைத், தீர விரும்புண்ட நீராக்குமா றுள்ளஞ் சேர்க்தனவே" என்பர் திருவேங்கடத்தந்தாதியிலும். "தீர விரும்புண்ட நீரது போல வென்னாருயிரை யாரப்பருக வெனக் காராவமு தானயே," "இரும்பனன்றுண்டநீர்போ லெம்பெருமானுக்கு என்ற, னரும்பெறலன்பு புக்கிட்டடிமைபூண்டுய்ந்துபோனேன்" என்பன பெரியோர்பாசுரங்கள்.

நாளென்னும்வாய்பாட்டால்முடிந்த இருவிகற்பநேரிசைவெண்பா.(சு௫)

பிறவியெனுங் கடலழுந்திப் பிணிபசியோ டிந்திரியச்
சுறவநுங்கக் கொடுவினையின் சுழலகப்பட் டுழல்வேனோ
வறமுடையா யென்னப்பா வரங்காவென் னாருயிருக்
குறவுடையா யடியேனை யுயக்கொள்வ தொருநாளே.

(இ - ள்.) அறம் உடையாய் - எல்லாத் தருமங்களையு முடையவனே! என் அப்பா - எனதுசுவாமியே! அரங்கா—! என் ஆருயிருக்கு-எனது அரிய ஆத்துமாவுக்கு, உறவு உடையாய்-உறவினனானவனே!—பிறவி எனும் கடல்-பிறப்பென்கிற பெரிய கடலில், அழுந்தி - மூழ்கி, பிணி பசியோடு இந்திரியம் - நோயும் பசியும் பஞ்சேந்திரியங்களுமாகிய, சுறவம் - சுறாமீன்கள், நுங்க - விழுங்கும்படி, கொடு வினையின் சுழல் - கொடிய இருவினைகளாகிய நீர்ச்சுழியில், அகப்பட்டு - உட்பட்டுச் சிக்கிக்கொண்டு, உழல்வேனோ - சுழலக்கடவேனோ? அடியேனை—, உய கொள்வது - உஜ்ஜீவிக்கும்படி ஆட்கொள்வதாகிய, ஒரு நாளே - ஒருதினமும் (உளதாகுமோ) ? (எ - று.)

கரைகாணவொண்ணாதிருத்தலால் பிறவியைக் கடலாகவும், கடலில் வீழ்ந்தவரைச் சுறாமீன்கள் கொத்தித் தின்பதுபோலப் பிணி பசி முதலியவை பிறவியிலுழல்கின்ற ஆத்மாவை வருத்துதலால் அப்பிணி பசி முதலியவற்றைச் சுறாமீன்களாகவும், சுழலிலகப்பட்டவர் அச்சுழலினின்று தப்புதலரிதாவதுபோல இருவினையி லகப்பட்டவன் அதனினின்று மீளுத லரிதாதலால் இருவினைகளைச் சுழலாகவும் உருவகஞ்செய்தனர்; உருவகவணி. இதனால், திருமாலாகிய தோணியொன்றே, பிறவிக்கடலினின்று மீண்டு கரையேறுதற்கு ஏற்ற உபாயமா மென்றவாறு.

"ஸம்ஸாரார்ணவ மக்நாநாம் விஷயாக்ராந்த சேதஸாம் - விஷ்ணு போதம்விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்," "துன்பக்கடல் புக்கு வைகுந்தனென்பதோர் தோணி பெறாதுழல்கின்றான்" என்பன காண்க. "சென்மந் தரங்கங் கருமஞ் சுழிபிணி சேவினங்கு, சென் மந்த ரங்கதிர் பொன்கோள்கண் மாரி திண்கூற்றசனி, சென்மந்த ரங்கவற்றுள் விழுவோர் கரைசேர்க்கும் வங்கஞ்,சென் மந் தாங் கவின்றோளா ரரங்கர் திருப்பதமே" என்பர் திருவரங்கத்தந்தாதியிலும். "ஒன்று சொல்லி யொருத்தனில் நிற்கிலாத வோரைவர்வன்கயவரை,யென்று யான் வெல்கிற்ப னுன் திருவருளில்லையேல்" என்றார் நம்மாழ்வார்.

**இது, எல்லாச்சீருங் காய்ச்சீர்களாகிய கொச்சகக்கலிப்பா. (சுசு)**

ஒருபொருளல்லே னிருவினையுடையே
னுனதுதொண்டெனுந்துறைகுளித்துன்
பெருகுதண்ணளியின் பாசந்தொட்டிழிந்து
பெரியதோர்முத்தியான்பெற்றேன்
றிருவுமாமணியுஞ் சங்கமுமேந்திச்
செய்யதாமரைபலபூத்துக்
கருநிறமுடைத்தாய் நதிபொருதரங்கங்
கலந்ததோர்கருணைவாரிதியே.

(இ - ள்.) திருவும் - ஸ்ரீமகாலக்ஷ்மியையும் [நிதிகளையும்], மா மணியும் - அழகிய கௌஸ்துபரத்தினத்தையும் [பெரிய ரத்தினங்களையும்], சங்கமும்-பாஞ்சசன்னியத்தையும் [சங்குகளையும்], ஏந்தி - தரித்து, செய்ய தாமரை பல பூத்து - சிவந்த பல தாமரைமலர்போன்ற திருவவயவங்கள் விளங்கப்பெற்று [பலசெந்தாமரைமலர் பூக்கப்பெற்று], கரு நிறம் உடைத்தாய் - கறுத்தநிறத்தையுடையதாய், தரங்கம் பொரு நதி கலந்தது - அலைமோதுகின்ற காவேரியாற்றினிடஞ் சேர்ந்ததாகிய [அலைமோதுகின்ற நதிகள் சேரப்பெற்றதாகிய], ஓர் - ஒப்பற்ற, கருணை வாரிதியே - அருட்கடலே!— ஒரு பொருள் அல்லேன்-ஒருபொருளாக மதிக்கப்படாதவனும் [செல்வஞ் சிறிதுமில்லாதவனும்], இருவினை உடையேன் -(நல்வினை தீவினையென்னும்) இரண்டுவினைகளையு முடையவனும் [மிக்க முயற்சியையுடையேனும்] ஆகிய, யான்—, உனது—, தொண்டு எனும் - கைங்கரியமாகிய, துறை - வழியில் [இறங்குமிடத்தில்], குளித்து - பிரவேசித்து [மூழ்கி], உன் - உனது, பெருகு தண் அளியின் - மிக்க குளிர்ந்த திருவருளாகிய, பாசம் - கயிற்றை, தொட்டு - பிடித்துக்கொண்டு, இழிந்து-இறங்கி, பெரியது ஓர் முத்தி - பெரியதொரு பரமபதத்தை [பெரியதோர் முத்து - சிறந்ததொரு முத்தை], பெற்றேன்—; (எ - று.)

ஒன்றுக்கும் பற்றாதவனாய் இருவினைகளையுமுடைய யான் உனக்கு அடிமைபூண்டு உனது தண்ணளியையே பற்றாசாகக்கொண்டு முத்தியைப் பெற்றேனென்பதாம். இதில், நிதிகளையும் இரத்தினங்களையும் சங்கத்தையுமுடையதாய்ப் பலதாமரைமலர்கள் மலரப்பெற்று நதிகள் வந்துசேர்தற்கு இடமாகிய கடலிலே, வறியவனாகிய யான் பெருமுயற்சியோடு பெருங்கயிற்றைப் பற்றிக்கொண்டு முத்துக்குளிக்குந்துறையில் இறங்கிக் குளித்து முத்துக்களைப் பெற்றேனென்ற ஒருபொருளும் தொனிக்கின்றது. **சுருங்கச்சொல்லலணி**; இதற்கு உருவகவணி அங்கமாய் நின்றது.

இருவினையுடையேனென்பதற்கு - பிறத்தலு மிறத்தலுமாகிய இரண்டு தொழில்களையு முடையே னென்றுமாம். முத்தி - முத்தென ஈறுதிரிந்தது; பக்தி - பத்து, ஸந்தி - சந்து என்றாற்போல. வாரிதி - நீர்தங்குமிடம். நீர் நிரம்பிய கடல்போலக் கிருபை நிறைந்தவ ரென்றற்குக் கருணைவாரிதியே யென்றார். பெற்றேன் என இறந்தகாலத்தாற் கூறியது, துணிவுபற்றிய காலவழுவமைதி.

இதற்குச் செய்யுளிலக்கணம், ௩௧ - ஆங் கவியிற் கூறப்பட்டது. (௩௭)

வாரியரங்கம்வருதிருப்பாவைக்குமண்மகட்குஞ்
சீரியரங்கண்வளர்திருக்கோலமுந்தென்றிருக்கா
வேரியரங்கவிமானமுங்கோயிலுமேவித்தொழார்
பூரியரங்கவர்கண்ணிரண்டாவனபுண்ணிரண்டே.

(இ - ள்.) வாரி அரங்கம் வரு-திருப்பாற்கடலினிடத்தினின்றுந் தோன்றிய, திருப்பாவைக்கும் - திருமகளுக்கும், (வாரி அரங்கம் வரு) - கடலாற் சூழப்பட்ட, மண்மகட்கும் - நிலமகளுக்கும், சீரியர் - சிறந்தகணவராகிய நம்பெருமாள், அம் கண் வளர் - அழகாகத் திருக்கண்வளர்ந்தருளுகின்ற, திரு கோலமும் - திருக்கோலத்தையும், தென் திரு காவேரி-அழகிய திருக்காவேரியின் மத்தியிலுள்ள,அரங்க விமானமும் - ஸ்ரீரங்கவிமானத்தையும், கோயிலும் - பெரியகோயிலையும், மேவி தொழார் - விரும்பி வணங்காதவர்கள்,—பூரியர் - கீழ்மக்களாவர்; அங்கு அவர் கண் இரண்டு ஆவன - அத்தன்மையையுடைய அவர்களது இரண்டுகண்களும், புண் இரண்டே - இரண்டு புண்களேயாகும் [கண்களல்லவாம்]; (எ - று.)

உரைமெழுக்கிற் பொன்போல ஆத்துமாக்கள் மூலப்ரக்ருதியிலேயொட்டிக்கொண்டு இறகொடிந்த பட்சிபோலே கரணகளேபரங்களின்றி நலிவுபடுவதைக் கண்டு எம்பெருமான் ஒருகருணைகொண்டு இவர்கட்குக் கண் கை கால் முதலிய உறுப்புக்களைத் தந்து தன்னையறிந்து கரைமரஞ்சேரும்படி சாஸ்திரங்களையும் அளித்தனனாதலால், அவ்வாறுதந்த பயனைப் பெறாதவர்களது கண்கள் கண்களல்ல,புண்ணாகு மென்பதாம்; "பூணாரமார்பனைப் புள்ளூரும் பொன்மலையைக், காணாதார்கண்ணென்றுங்கண்ணல்லகண்டாயே" என்றார் திருமங்கையாழ்வாரும். கண்ணைக்கூறியது, மற்றைய உறுப்புக்கட்கும் உபலக்ஷணம். இச்செய்யுளில், திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. கண்படைத்தபயன் பெறாததனால், 'கண்ணிரண்டாவன புண்ணிரண்டே' என்றார். இதனை "கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு, புண்ணுடையர் கல்லா தவர்" என்பதனோடு ஒப்பிடுக.

வாரி - நீர்; கடலுக்கு இலக்கணை. 'வாரியரங்கம்வரு' என்பது, இரட்டுறமொழிதலாய்ப் பொருளுரைத்து மண்மகளோடுஞ் சேர்க்கப்பட்டது.

இது, நேரசை யாதியான கட்டளைக்கலித்துறை. (கூ௮)

புண்ணா ருடற்பிறவி போதுமெனக் கும்முனக்கு
மெண்ணா திருந்த தினிப்போதுங்—கண்ணா
குழற்காளாய் தென்னரங்கக் கோயிலாய் நின்பொற்
கழற்காளாய் நின்றேனைக் கா.

(இ - ள்.) கண்ணா - கிருஷ்ணனே! குழல் காளாய் - வேய்க்குழலையுடைய காளைபோன்றவனே! தென் அரங்கம் கோயிலாய்-தென்திருவரங்கக்கோயிலையுடையவனே!—இனி—, எனக்கும்—,புண் ஆர் உடல் பிறவி - மாமிசம்நிறைந்த உடம்பையெடுத்துப் பிறக்கும் ஜன்மம், போதும்—; உனக்கும்—, எண்ணாது இருந்தது-(என்னை) நினையாமலேயிருந்தது,போதும்—;

(இனியாயினும்),நின் பொன் கழற்கு - உனது அழகியதிருவடிகளுக்கு,ஆள் ஆய் நின்றேனை - அடிமையாய்நின்ற என்னை, கா - ரக்ஷித்தருள்; (எ - று.)

எல்லையில்லாதகாலமாக உன்னைநினையாமலே பிறந்துபிறந்து இளைத்துப்போனேன்: இது என்மீது பெருங்குற்றமே; நான் நினைக்குமாறு நிர்ஹேதுகமான திருவருளினாற் செய்யவேண்டியவன் நீயே யாதலால், இத்தனைகாலமாக அடியேனைப்பற்றித் திருவுள்ளத்துக்கொள்ளாமல் வீணே பொழுதுபோக்கியது உனதுகுற்றமே;இவ்விஷயத்தைக்குறித்து இப்போது தர்க்கித்துக்கொண்டிருத்தலிற் பயனில்லை: உனதுதிருவருளினால் உன்திருவடித்தொண்டனாய் நிற்கும் அடியேனை இனியாவது கைகழுவவிடாமற் பாதுகாக்கவேண்டு மென்பதாம்: "அக்கரை யென்னு மனத்தக்கடலுளழுந்தி யுன்பேரருளால்,இக்கரையேறியிளைத்திருந்தேனை யஞ்சே லென்று கைகவியாய்" என்றார் பெரியாரும். காளாய் - காளையென்பதன் விளி. காளை-இளவெருது; உவமவாகுபெயர்: உவமை - நடைக்கும், காம்பீரியத்துக்கும், வலிமைக்கும்.

இது, நாவென்னும் வாய்பாட்டான் முடிந்த இருவிகற்பநேரிசை வெண்பா. (௧௧)

காவிரிவாய்ப்பாம்பணைமேற் கருமுகில்போற் கண்வளருங் கருணைவள்ளல், பூவிரியுந்துழாயரங்கர்பொன்னடியேதஞ்சமெனப்பொருந்திவாழ்வார்,யாவரினுமிழிகுலத்தோராறுலு மவர்கண்டீ ரிமையாநாட்டத், தேவரினு முனிவரினுஞ் சிவனயனென்றிருவரினுஞ் சிறியோரே.

(இ - ள்.) காவிரிவாய்-உபயகாவேரிமத்தியில்,பாம்பு அணைமேல்-சேஷசயனத்தில், கரு முகில்போல் - காளமேகம்போல, கண்வளரும்-திருக்கண் வளர்ந்தருளுகின்ற, கருணை வள்ளல்-திருவருளையுடைய வரையாதுகொடுப்பவராகிய, பூ விரியும் துழாய் அரங்கர் - பொலிவுமிக்க திருத்துழாய்மாலையையுடைய ரங்கநாதரது,பொன் அடியே-அழகிய திருவடிகளையே, தஞ்சம் என - அடைக்கலமாகக்கொண்டு, பொருந்தி - சரணமடைந்து, வாழ்வார்-வாழ்பவர்கள்,—யாவரினும் இழி குலத்தோர் ஆறுலும் - எல்லோரினும் தாழ்ந்த குலத்தில் தோன்றியவராயினும், அவர் கண்டீர் - அவரன்றோ, இமையாநாட்டம் தேவரினும் - இமையாதகண்களையுடைய தேவர்களினும், முனிவரினும் - முனிவர்களினும், சிவன் அயன் என்ற இருவரினும்-சிவனும் பிரமனுமென்கிறஇரண்டுபேரினும்,சிறியோரே - சிறப்பினையுடையோராவர்.

எம்பெருமானது திருவடிகளே தஞ்சமென்ற உறுதியையுடைய சாத்துவிகர்கள் அகங்காரமமகாரங்கள் மண்டிநிற்கப்பெற்றதேவர் முதலியோரினும் உயர்ந்தவராவரென்றவாறு.

இதற்குச் செய்யுளிலக்கணம், ௪௫ - ஆங் கவியிற் கூறியதே. (௪௦௦)

மழைமுகிலெனவேபணாமுகந்திகழ்
வரியரவணையேறிவாழரங்கர்த
மெழில்பெறுமிருதாளிலேகலம்பக
மெனுமொருதமிழ்மாலைதானணிந்தனன்
குழலிசையளிமேவுகூரம்வந்தருள்
குருபரனிருபாதபோதடைந்தவ
னழகியமணவாளதாசனென்பவ
னடியவரடிசூடிவாழுமன்பனே.

(இ - ள்.) பணா முகம் திகழ் - படங்களோடுகூடிய (ஆயிர) முகங்கள் விளங்குகின்ற, வரி அரவு அணை - புள்ளிகளையுடைய திருவனந்தாழ்வானாகிய சயனத்தில், மழை முகில் என - கார்காலத்து மேகம்போல, ஏறி வாழ் - பள்ளி கொண்டருளுகின்ற, அரங்கர்தம் - ரங்கநாதரது, எழில் பெறும் - அழகு பெற்ற, இரு தாளிலே - உபயதிருவடிகளிலே, கலம்பகம் எனும் - கலம்பக மென்கிற, ஒரு தமிழ்மாலை - தமிழாலாகிய தொருமாலையை [பிரபந்தத்தை], அணிந்தனன் - சூடினான்; (யாரென்னின்),—குழல் இசை அளி மேவு - வேய்ங்குழலினிசைபோலும் பாட்டிசையையுடைய வண்டுகள் விரும்பிமொய்க்கின்ற, கூரம் - கூரமென்னும்பதியில், வந்தருள் - திருவவதரித்த, குரு பரன் - சிறந்த ஆசாரியராகிய ஆழ்வானது, இரு பாத போது - உபயதிருவடித்தாமரைகளை, அடைந்தவன் - அடைந்தவனும், அடியவர் அடி சூடி வாழும் - அடியார்களது திருவடிகளை(த் தலைமேல் வைக்கும் மாலையாகக்கொண்டு) சூடிவாழ்கின்ற, அன்பன் - பக்தனுமாகிய, அழகிய மணவாள தாசன் என்பவன் - அழகியமணவாளதாச னென்கிற திவ்வியகவி பிள்ளைப்பெருமாளையங்கார்; (எ - று.)

இது, தன்னைப் பிறன்போலும் பதிகங் கூறியது; வடநூலாரும், சடகோபர் சம்பந்தர் முதலாயினாரும், திவாகரரும், பதினெண்கீழ்க்கணக்குச்செய்தாரும் முன்னாகப் பின்னாகத் தாமே பதிகங் கூறுமாறு காண்க.

'குருபரனிருபாதபோதடைந்தவன்' என்பதற்கு - கூரத்தாழ்வானது உபயபாதங்களாகிய பராசரபட்டர் வேதவியாசபட்டர் என்னும் இரண்டு திருக்குமாரர்களை ஆசிரியராக அடைந்தவ னென்றவாறு: குருபரன் - பரம குரு, தனது குருக்களுக்குக் குரு.

இது முதலும் ஐந்தும் கருவிளச்சீர்களும், இரண்டும் ஆறும் புளிமாங்காய்ச்சீர்களும், மூன்றும் ஏழும் தேமாச்சீர்களும், நான்கும் எட்டும் கூவிளச்சீர்களுமாகிய எண்சீராசிரியவண்ணவிருத்தம்.

திருவரங்கக்கலம்பகம் முற்றிற்று.

---

# திருவரங்கக்கலம்பகச் செய்யுண்முதற்குறிப்பகராதி.

ஸ்ரீ

# திருவேங்கடமாலை.

'திரு' என்னும் பலபொருளொருசொல் - வடமொழியிலே 'ஸ்ரீ' என்பதுபோலத் தமிழிலே தேவர்கள் அடியார்கள் ஞானநூல்கள் மந்திரங்கள் புண்ணியஸ்தலங்கள் புண்ணியதீர்த்தங்கள் முதலிய மேன்மையையுடைய பலபொருள்களுக்கும் விசேஷணபதமாகி, அவற்றிற்குமுன்னே மகிமைப் பொருளைக் காட்டி வரும்; ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீபக்திசாரர் ஸ்ரீராமாயணம் ஸ்ரீஅஷ்டாக்ஷரம் ஸ்ரீரங்கம் ஸ்ரீகைரவிணி ஸ்ரீபாதம் எனவும், திருமால் திருமழிசைப்பிரான் திருவாய்மொழி திருவெட்டெழுத்து திருவரங்கம் திருவல்லிக்கேணி திருவடி எனவும் வழங்குமாற்றால் அறிக. இனி, இதனை, ஸ்ரீ என்பதன் சிதை வென்பாரும் உளர். இது, வேங்கடத்துக்கு அடைமொழி ; மாலைக்கு அடைமொழியாகவுமாம்.

வேங்கடம் என்பது - திருமாலினது திவ்வியதேசங்கள் நூற்றெட்டனுள் ஒன்றும், வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதலதும், 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று சிறப்பாக எடுத்துக் கூறப்படுகின்ற மூன்று ஸ்தலங்களுள் இடையது மாகிய தலம். தன்னை அடைந்தவர்களது பாவமனைத்தையும் ஒழிப்பதனால், 'வேங்கடம்' எனப் பெயர் பெற்றது ; வடசொல். வேம் - பாவம், கடம் - எரித்தல் எனப் பொருள் காண்க. இதனை, "அத்திருமலைக்குச் சீரார் வேங்கடாசல மெனும்பேர், வைத்தனரதுவே தென்னில் வேமென வழங்கெழுத்தே, கொத்துறு பவத்தைக் கூறுங் கடவெனக் கூறிரண்டாஞ், சுத்தவக்கரங் கொளுத்தப்படு மெனச் சொல்வர் மேலோர்", "வெங்கொடும்பவங்களெல்லாம் வெந்திடச் செய்வதால் நல், மங்கலம் பொருந்துஞ் சீர் வேங்கடமலை யான தென்று" என்னும் புராணச்செய்யுட்களாலும் அறிக. ஸ்ரீசைலத்தின் மேற்கிலுள்ள நந்தகபுரமென்னும் ஊரில் புரந்தரனென்னும் பிராமணோத்தமனது குமாரனாகிய மாதவனென்பவன் தன்மனைவியாகிய சந்திரரேகையென்பவளோடு பூஞ்சோலையிற் சென்று விளையாடிக்கொண்டிருக்கையில் குந்திரியென்பாளொரு சண்டாள கன்னிகையின் கட்டழகைக் கண்டு [illegible] அவளைக் கூடி மனையாளைத் துறந்து அப்புலைமங்கையுடனே சென்[illegible] நுகர்ந்தும் கட்குடித்தும் கைப்பொருள் முழுவதையும் இழந்து பின்பு வழிபறித்தல் உயிர்க்கொலை முதலிய கொடுந்தொழில் புரிந்து பொருள்சேர்த்து அவளுக்குக்கொடுத்து வந்து முடிவில் வறியவனாகிப் பலவகைநோய்களையும் அடைந்து அவளால் அகற்றப்பட்டவனாய்ப் பல பாவமுந் தொடரப் பித்தன்போல அலைந்து திரிந்து இத்திருமலையை அடைந்த மாத்திரத்தில் தனது தீவினையெல்லாம் சாம்பலாகப்பெற்று முன்னைய பிரமதேஜஸைப் பொருந்தி நல்லறிவுகொண்டு திருமாலைச் சேவித்து வழிபட்டுப் பரமபதமடைந்ததனால் இதற்கு 'வேங்கடாசலம்' என்னும் பெயர் நிகழ்ந்ததென்று

வடமொழியிலே ப்ரஹ்மாண்ட புராணத்திலும், பவிஷ்யோத்தரபுராணத்திலும் கூறப்படுதல் காண்க. அன்றி, 'வேம் என்பது - அழிவின்மை, கடம் என்பது - ஐசுவரியம். அழிவில்லாத ஐசுவரியங்களைத் (தன்னையடைந்தார்க்குத்) தருதலால், வேங்கடமெனப் பெயர் கொண்டது' என்று வராகபுராணத்திற் சொல்லப்பட்டவாறும் உணர்க. இனி, தமிழ்மொழியாகவே கொண்டால், வெவ்விய காடுகளை யுடைய தெனப் பொருள்படு மென்க.

திரு என்பதற்கு - மேன்மையான என்று பொருள்கொண்டால் திருவேங்கடம் என்ற தொடர் - பண்புத்தொகையும், மேன்மையையுடைய என்று பொருள்கொண்டால் இரண்டாம்வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்க தொகையுமாம். வேங்கடமாலை என்ற தொடர் - வேங்கடத்தினது சம்பந்தமான மாலை யென்று விரித்து வேங்கடத்தின்விஷயமான பிரபந்தமென்று பொருள்கொண்டு ஆறும்வேற்றுமைத்தொகையாகவும், வேங்கடத்தைப்பற்றிய மாலையென்று விரித்துப் பொருள்கொண்டு இரண்டாம்வேற்றுமைஉருபும்பொருளும்தொக்கதொகையாகவும் உரைக்கத்தக்கது. மாலா என்ற வடமொழி, மாலையென விகாரப்பட்டது; "ஆவீறு ஐயும்." மலர்கள் கொண்டு தொடுக்கப்பட்ட பூமாலைபோலச் சொற்கள்கொண்டு தொடுக்கப்பட்ட பாமாலையாகிய பிரபந்த மென்க; எனவே, மாலையென்பது - உவமையாகுபெயராம். மாலையென்பது - பலவகைப்பிரபந்தங்களுள் ஒன்று. அதன் இலக்கணம் - ஒருவிஷயத்தைக்குறித்துப் பலசெய்யுள் கூறுவது. ஸ்ரீநிவாஸனென்று வடமொழியிலும், அலர்மேல்மங்கையுறைமார்ப னென்று தென்மொழியிலும் திருநாமங்கூறப்படுகின்ற திருவேங்கடமுடையானது திருவடிகளிலே சூட்டும் திருமாலை போலுதலால்.திருவேங்கடமாலை எனப்பட்டது; " அடிசூட்டலாகு மந்தாமம்," "செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை", "கற்றினம்மேய்த்த கழலிணைக்கீழ், முற்ற திருமாலை பாடுந்சீர்" என்றார் பெரியாரும். இங்கு வேங்கடமென்பது - அத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானையுங் குறிக்கும்; உபலக்ஷணம். 'தேசயரான பெருமாளைச் சொன்னதெல்லாம் உபஸர்ஜநகோடியிலே யாய் அத்தேசமே யாய்த்து, இத்திருமாலைக்கு விஷயம்.'

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் "விருந்தேதானும் புதுவது கிளந்த யாப்பின்மேற்றே" என்பதனால், 'விருந்துதானும், பழங்கதைமேலதன்றிப் புதிதாகத் தாம்வேண்டியவாற்றால்தொடுக்கப்படும் தொடர்நிலை மேலது' என்றுகூறினமையின்,இம்மாலை அங்ஙனம்கூறிய விருந்தாமென்று உணர்க. இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார்.

நூலின் புறமாக முதலிற் கூறப்பட்ட காப்புச்செய்யுள் இரண்டும், அவையடக்கச் செய்யுள் ஒன்றும், நூலின் இறுதியிற் கூறப்பட்ட "ஆதிதிருவேங்கடமென் றுயிரம்போ னிடமென், றோதிய வெண்பா வொருநூறுங்-கோதில், குணவாளபட்ட ரிருகோகனகத்தாள் சேர், மணவாள தாசன் றன் வாக்கு" என்ற சிறப்புப்பாயிரச்செய்யுளொன்றும் நீங்கலாக நூறு செய்யுளுடையது, இந்நூல். வெண்பாவினால் அமைந்தது. இந்நூற்செய்யுள்

களெல்லாம் - முன்னிரண்டடியில் திருவேங்கடத்தின் சிறப்பையும், பின்னிரண்டடியில் திருவேங்கடமுடையானது சிறப்பையுங் கூறி 'ஹரி' என்னுந் துறை யமைய 'திருவேங்கடமென்பது திருமாலின் திருப்பதி' என்னும் வாய்பாடு பொருந்த இயற்றப்பட்டுள்ளன. இந்நூலின் பிற்பாதியாகிய ஐம்பது செய்யுள்களின் முன்னிரண்டடிகள் - இத்தன்மையோடு சிலேடையென்னும் அலங்காரமு முடையன. இந்நூற் செய்யுள்க ளெல்லாவற்றிலும் பின்னிரண்டடிகள் - பெரும்பாலும் திரிபு என்னுஞ் சொல்லணியும், சிறுபான்மை யமகம் என்னுஞ் சொல்லணியும் அமையக் கூறப்பட்டுள்ளன.

## காப்பு.

காப்பு - காத்தல். அது, இங்கு, காக்கின்ற கடவுளின் விஷயமான வணக்கத்தைக் குறிக்கும். ஆகவே, கவி தமக்குநேரிடத்தக்க இடையூறுகளை நீக்கித் தமது எண்ணத்தை முடிக்கவல்லதோர் கடவுளின் விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது கருத்து. இக்காப்புச்செய்யுள், ஆழ்வார்கள் பன்னிருவருட் பிரதானரான நம்மாழ்வாரைப் பற்றியது. ஸ்ரீவைஷ்ணவ சமயத்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இக்காப்புச்செய்யுள், விஷ்ணு பக்தர்களிற் சிறந்த ஆழ்வாரைக் குறித்த தாதலால், வழிபடுகடவுள்வணக்கமாம். தம்தமது மதத்துக்கு உரிய கடவுளை வணங்குதலே யன்றி அக்கடவுளின் அடியார்களை வணங்குதலும் வழிபடுகடவுள்வணக்கத்தின்பாற்படுமென அறிக. அவ்வாழ்வாரால் வெளியிடப்பட்ட திவ்வியப்பிரபந்தங்களின் சொற் பொருட் கருத்துக்க ளமைய அப்பிரபந்தங்கள்போலச் செய்யப்படுவது இப்பிரபந்த மென்பதுபற்றி, இந்நூலின் இக்காப்புச்செய்யுளை எற்புடைக்கடவுள்வணக்கமென்று அறிதிற்கொள்ளவும் அமையும்.

திண்பார் புகழுந் திருவேங் கடமாலை
வெண்பாவா னூறும் விளம்புதற்குக்—கண்பாராய்
நாராய ணாவடியே னாடுந் தமிழ்வேத
பாராய ணாசடகோ பா.

(இதன்பொருள்.) நாராயணா-நாராயணனே! அடியேன் நாடும்-உனது அடியவனாகிய என்னால் மிகவும்விரும்பப்படுகிற, தமிழ்வேதபாராயணா-தமிழ் வேதங்களாகிய திவ்வியப்பிரபந்தங்களைக் கூறியருளியவனே! சடகோபா-சடகோப னென்னுந் திருநாமமுடையவனே!——திண் பார் புகழும் - வலிய பூலோகத்திலுள்ளவர்கள் எல்லாராலும் புகழப்படுகின்ற, திருவேங்கடம் - திருவேங்கடமென்னுந் திருப்பதியின் விஷயமான, மாலை - மாலையென்னும் பிரபந்தரூபமாக, நூறும்-நூறுசெய்யுள்களையும், வெண்பாவால் - வெண்பாவென்னும் யாப்பினால், விளம்புதற்கு - (அடியேன்) சொல்லும்படி, கண் பாராய் - கிருபைசெய்தருள்வாய்; (என்றவாறு.)

அடியேன் - அடிமை யென்னும் பண்பி னடியாகப் பிறந்த தன்மை யொருமைக் குறிப்பு வினையாலணையும்பெயர். 'அடியேனுடும்' என்றது -

தமிழ்வேதத்துக்கும், தமிழ்வேதபாராயணனுக்கும் அடைமொழியாகத் தக்கது. இந்த அடைமொழியினால், இந்நூலாசிரியர்க்குத் திவ்வியப்பிரபந்தங்களினிடத்திலும் ஆழ்வாரிடத்திலு முள்ள அன்பு விளங்கும்.

திருமாலடியார்களிற் சிறந்த ஆழ்வார்கள் பன்னிருவருள் ஐந்தாமவராகிய நம்மாழ்வார், மற்றையாழ்வார்கள்போல லௌகிகவிஷயஞானம் நடையாடுகையில் எம்பெருமானருளால் ஒருகாலவிசேஷத்தில் தத்துவஞானாதிகள் தோன்றப்பெற்று அந்தப்பகவானை அனுபவிப்ப தன்றி, திருத்துழாய் பரிமளத்துடனே அங்குரிப்பதுபோல இயற்கையிலேயே விலக்ஷணமான ஞானபக்திகளையுடைய ராதலால், மிகுந்த ஏற்றமுள்ளவராய்த் தத்துவ ஞானப்பிரவர்த்தநத்தில் பிரதம ஆசாரிய ராகக் கொள்ளப்படுவர். இவரைப் பகவானுடையஅம்சமென்று பாத்மபுராணம் கூறுகின்றதனால், 'நாராயணன்' என்று எம்பெருமான்திருநாமத்தினால் விளித்தார். இவர்க்கு இருப்பிடமான திருப்புளியமரம், எம்பெருமானுக்குத் திருப்பள்ளிமெத்தையான ஆதிசேஷ[illegible] அம்சமென்று பிரமாண்டபுராணத்திற்கூறப்பட்டிருக்கிறது.

நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகளுள் பாண்டிய நாட்டுத் திருப்பதி பதினெட்டில் ஒன்றும் தாமிரபர்ணிநதிதீரத்திலுள்ளதுமான திருக்குருகூரென்கிற திவ்வியதேசத்திலே காரியென்பவர்க்கு உடையநங்கையாரது திருவயிற்றிலே திருவவதரித்த இவர் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால்குடித்தல் முதலிய குழந்தைச்செய்கை யொன்றையுங் கொள்ளாமலே வாட்டமின்றிப் பரிபூர்ணராயிருக்கிற ஆச்சரியத்தைத் தாய்தந்தையர்கண்டு இவரை அத்திருப்பதியிலுள்ள திருமாலின் திருக்கோயிலுள் கொண்டுபோய் விட, இவர் அங்குஇருந்த ஒரு புளியமரத்தின்கீழ்ச் சென்று வீற்றிருந்து பதினாறுபிராயமளவும் கண்திறவாமல் மௌனமாய் எழுந்தருளியிருந்த பின்பு, மதுரகவிகள் இவ்வாழ்வாருடைய மகிமையை அறிந்து வந்து அடைந்து அடிமைத்தொழில் செய்துவருகையில், ஆழ்வார் இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்ற நான்கு வேதங்களின் சாரார்த்தங்கள் முறையே அமையத் திருவிருத்தம் திருவாசிரியம் திருவாய்மொழி பெரியதிருவந்தாதி என்ற நான்கு பிரபந்தங்களை அருளிச்செய்து உலகத்தை உய்வித்தனரென்ற வரலாறு அறிக; அத்தன்மைபற்றி, 'தமிழ்வேதபாராயணா' என்று விளித்தார். பாராயணம் - நியமத்தோடு ஓதுதல். ஸம்ஸ்கிருத வேதங்கள் போலவே தமிழ்வேதங்களும் எவராலும் இயற்றப்படாமல் நித்தியமாயுள்ளவை யென்றும், அந்த வடமொழி வேதங்கள் ஆதிகாலத்தில் பிரமனது வாக்கினின்று வெளிப்பட்டமாத்திரத்தைக்கொண்டு "முன்னந் திசைமுகனைத் தான்படைக்க மற்றவனும், முன்னம்படைத்தனன் நான்மறைகள்" என்று அவ்வேதங்களை அவன் படைத்தானென்ன உபசாரமாகச் சொல்வது போலவே, ஆழ்வாருடைய திருவாய்மலரினின்று ஆதியில் இத்தென்மொழி வேதங்கள் வெளிப்பட்ட மாத்திரத்தைக்கொண்டு "வேதந் தமிழ்செய்த மாறன் சடகோபன்" என்று இவ்வேதங்களை இவர் இயற்றியதாகச் சொல்லுதல் உபசார வழக்கென்றும் சித்தாந்த மென்பது, 'தமிழ்வேத

பாராயணு' என்ற சொல்லின் ஆற்றலால் விளங்கும். இனி, பாராயணம் என்ற வடசொல்லுக்கு - முழுவதும் என்று ஒருபொருளுள்ளதனால், தமிழ் வேதங்களெல்லாவற்றையும் வெளியிட்டவ ரென்றும் பொருள் கொள்ள லாம்; பிற்காலத்தில் அர்ச்சாவிக்கிரகரூபியாயிருந்த இவ்வாழ்வாரை நாத முனிகள் தக்கபடி உபாசிக்க, அவர்க்கு ஆழ்வார் பிரசன்னராய்த் தமது நான்கு திவ்வியப் பிரபந்தங்களையும் மற்றுமுள்ள ஆழ்வார்கள் அருளிச் செய்த வேதப்பொருளமைந்த திவ்வியப்பிரபந்தங்க ளெல்லாவற்றையும் சொல்லியருளின ரென்கிற வரலாறு காண்க.

கர்ப்பத்தி லிருக்கும்பொழுது ஞானமுடையனவாயிருக்கின்ற குழந்தை களைப் பிறந்தவுடனே தனதுஸ்பர்சத்தால் அஜ்ஞாநத்துக்குஉள்ளாக்கி அழு தல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சட மென்னும் வாயு, இவ்வாழ்வார் அவதரித்தபொழுது இவரையும் தொடு தற்கு வர, அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒறுத்து ஓட்டி யொழித்ததனால், சடகோபரென்று இவர்க்குத் திருநாமமாயிற்று. மாறன், பராங்குசன், நம்மாழ்வார் முதலிய திருநாமங்களும் இவர்க்கு உண்டு.

நாராயணன், பாராயணன், சடகோபன் என்ற வடமொழிப் பெயர் கள், ஈறுகெட்டு ஈற்றயல் நீண்டு விளியேற்றன. பார் - இடவாகுபெயர். பார் என்பது - இங்கு மற்றையுலகங்களுக்கும் உபலக்ஷண மென்றுவது, பார் என்ற சிறப்புப்பெயர் பொதுப்பட உலகமென்ற மாத்திரமாய் நின்ற தென்றுவது கொள்க; "வேங்கடமே, வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு," "உலகுக்கெல்லாம், தேசமாய்த் திகழும் மலைத் திருவேங்கடம்" என்ப வாதலின். 'வெண்பாவாநூறும்' என்ற பாடத்துக்கு - வெண்பா வாகிய நூறுகவியையு மென்க. கண்பார்த்தல் - கடாக்ஷித்தருளுதல்; ஆய்- ஏவலொருமை வினைமுற்று விகுதி. (௪)

இதுவும் அது.

இது, திருவேங்கடமுடையானைக் குறித்தது.

மூலமே யென்றகரி முன்வந் திடர்தொலைத்து
நீலமே கம்போல நின்றானைப்—பாலாய
வேலைநடு விற்றுயிலும் வித்தகனை வேங்கடத்து
மாலையன்றிப் பாடாதென் வாய்.

(இ - ள்.) மூலமே என்ற - ஆதிமூலமே யென்று முறையிட்ட, கரி முன் - கஜேந்திராழ்வானுடைய முன்னிலையிலே, வந்து - எழுந்தருளி, இடர் தொலைத்து - (அதற்கு முதலையினாலுண்டான) துன்பத்தை நீக்கி, நீல மேகம்போல நின்றானை - நீலநிறமுள்ள மேகம் போலக் காட்சிதந்து நின்றருளியவனும், பால் ஆய வேலை நடுவில் துயிலும் வித்தகனை -பால்மய மான கடலின் நடுவில் யோகநித்திரைகொண்டருளுகிற ஞானசொரூபியு

மாகிய, வேங்கடத்து மாலை - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிற திருமாலை. அன்றி - அல்லாமல், (வேறொருகடவுளை), என் வாய் பாடாது - எனது வாயானது பாடித்துதியாது; (எ - று.)

ஆசீர்வாதம் நமஸ்காரம் வஸ்துநிர்த்தேசம் என்று வடமொழியிலும், வாழ்த்து வணக்கம் வருபொருளுரைத்தல் என்று தமிழிலுங் கூறப்படுகிற மூன்றுவகை மங்களங்களுள் வருபொருளுரைத்த லென்னும் வஸ்துநிர்த்தேசரூபமான மங்களமாகும், இச்செய்யுள். "தேவு மற்றறியேன்," "வேறொன்றும் நானறியேன்" என்றாற்போல, 'மாலையன்றிப் பாடாதுஎன் வாய்' என்று தமது உறுதியான கொள்கையை வெளியிட்டார்; மறந்தும் புறந்தொழா மாந்தராதலால் பரதேவதையாகிய நாராயணனை வழிபடுதலே யன்றி க்ஷுத்ரதேவதைகளாகிய பிறதேவதைகளை வழிபடாமை ஸ்ரீவைஷ்ணவர்க்குச் சிறந்தலக்ஷணமென்க. எம்பெருமானைப்பாடுவதே யன்றித் தனிகர்களான மனிதர்களுட்பட மற்றெவரையும் பாடாது என்வா யென்பதும் இதன் தேர்ந்தகருத்தாகலாம். "சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ, என்னாவி லின்கவி யாதொருவர்க்குங் கொடுக்கிலேன், தென்னா தெனா வென்று வண்டு முரல் திருவேங்கடத்து, என்னானை யென்னப்ப னெம்பெருமா னுளனாகவே" என்று ஆழ்வார் அருளிச்செய்தமை அறிக. ஒருகால் யான் பாடக்கருதினாலும் என்வாய் பாடாது; அது எம்பெருமானையே பாடப்பழகியதும் பிறரைப்பாடப்பழகாததும் ஆதலால் என்னுங் கருத்து அமைய, 'பாடாது என்வாய்' என வாயின்மேல் ஏற்றிக் கூறினார்; இதனை, "பொய்ம்மைமொழி புகன்றறியேம் புகல மன மெண்ணுகினும், மெய்ம்மையலது உரையா நா வேதாவில் பயிற்சியால்" என்ற நைடதத்தோடு ஒப்பிடுக.

நின்றான், வித்தகன், மால் என்ற மூன்றும் - ஒருபொருளின்மேல் வந்த பலபெயர்கள். இவற்றில், முந்தின இரண்டையும் விசேடணமாகவும், பிந்தினதை விசேடியமாகவும் கொள்க. தனக்கு அடிமைப்பட்ட உயிர்களைப் பாதுகாத்தலில் எம்பெருமானுக்கு உள்ள மிக்க ஆதரமும், அந்த எம்பெருமான் எப்பொழுதும் இடைவிடாமல் லோகரக்ஷணசிந்தனை செய்துகொண்டிருத்தலும், அப்பெருமான் அடியார்களுக்கு எளிதில் அருள்செய்தற்பொருட்டுத் திருவேங்கடத்தில் எழுந்தருளியிருத்தலும் தோன்றக் கூறினார்.

கஜேந்திராழ்வான் ஆதிமூலமே யென்று பொதுப்படக் கூப்பிட்டபொழுது எம்பெருமானல்லாத பிறதேவரெல்லோரும் தாம்தாம் அச்சொல்லுக்குப் பொருளல்லமென்று கருதி யொழிய, அதற்கு உரிய திருமால் தானேவந்து அருள் செய்தன னென நூல்கள் கூறும். ஒரு விலங்கினாலே மற்றொரு விலங்குக்கு நேர்ந்த துன்பத்தைத் தான் இருந்தவிடத்திலிருந்தே தீர்ப்பது சர்வசக்தனான எம்பெருமானுக்கு மிகவும் எளியதாயினும் அப்பெருமான் அங்ஙனஞ்செய்யாமல் தனதுபேரருளினால்

அனைரகுலையத் தலைகுலைய மடுக்கரைக்கே வந்து உதவின மகாகுணத்தில் ஈடுபட்டு, அதனை இங்ஙனம் முதலிற் கூறினர். இவ்வரலாற்றில், திருமாலே பரம்பொருளாந்தன்மை வெளியாம்.

'பாலாய வேலை நடுவில் துயிலும் வித்தகன்' என்றது, பரத்வம் வியூகம் விபவம் அர்ச்சை அந்தர்யாமித்வம் என்ற எம்பெருமானது ஐவகை நிலைகளுள் வியூகநிலையை உணர்த்தும். பாலாயவேலை - திருப்பாற்கடல். ஆய, ய் - இறந்தகால இடைநிலை. (௨)

---

## அவையடக்கம்.

அவையடக்கமாவது-கற்றோர்சபைமுன் கவி தன்னைப்பற்றித் தாழ்த்திக் கூறுதல். அவை - ஸபா என்ற வடசொல்லின் சிதைவு. அடக்கம் - தொழிற்பெயர் ; அடங்கு - பகுதி, அம் - விகுதி, வலித்தல் - விகாரம்.

ஆழ்வார்கள் செந்தமிழை யாதரித்த வேங்கடமென்
றாழ்வான புன்சொல்லுந் தாங்குமா—லேழ்பாரும்
வெல்லுங் கதிர்மணியும் வெம்பரலுஞ் செஞ்சாந்தும்
புல்லும் பொறுத்தமையே போல்.

(இ - ள்.) ஏழ் பாரும் - ஏழு உலகங்களையும், வெல்லும் - (தமக்கு) விலையாகக் கொள்ளும்படியான, கதிர் மணியும் - ஒளியையுடைய இரத்தினங்களையும், வெம் பரலும் - வெவ்விய பருக்கைக்கற்களையும், செம் சாந்தும் - சிவந்த சந்தன மரங்களையும், புல்லும் - புற்களையும், பொறுத்தமையே போல் - தான் தரிக்கின்ற தன்மையே போல,—ஆழ்வார்கள் செந் தமிழை ஆதரித்த வேங்கடம் - ஆழ்வார்கள் அருளிச்செய்த செவ்வியதமிழ்ப் பாசுரங்களை அன்புடன் ஏற்றுக்கொண்ட திருவேங்கடமலையானது, என் தாழ்வு ஆன புல் சொல்லும் தாங்கும் - என்னுடைய மிகவும் இழிவாகிய பாடல்களையும் ஏற்றுக்கொள்ளும் ; (எ - று.)—ஆல் - ஈற்றசை ; தேற்றப் பொருளதுமாம்.

மிகச்சிறந்த இரத்தினங்களோடு ஒப்ப மிகவும் இழிவான பருக்கைக் கற்களையும், சிறந்த சந்தனமரங்களோடு ஒப்பச் சிறப்பில்லாத புற்களையும் திருவேங்கடமலை தன்மேற் கொள்ளும் இயல்பின தாதலால், அவ்வாறே அம்மலை ஆழ்வார்களுடைய மிகச்சிறந்ததமிழ்ப்பாசுரங்களோடொப்ப எனது மிகத்தாழ்ந்த பாடல்களையும் அங்கீகரிக்கும் என்னுந் துணிவுபற்றி, யான் இப்பிரபந்தம் பாடத்தொடங்கினேன் என்பதாம். உபமான உபமேயங்களில் முறைநிரனிறை இருத்தல் காண்க.

பகவானுடைய திவ்விய மங்கள குணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவ ராதலால், இவர்களுக்கு, ஆழ்வார் என்று திருநாமம். ஸ்ரீவைஷ்ணவமதத்திற் சிறந்தமெய்யடியார்களென்று கொண்டாடப்படுகின்ற ஆழ்வார்கள் பன்னிருவர்; அவராவார்—

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், (அவரதுசிஷ்யரான) மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், (அவர்வளர்த்த திருமகளாரான) ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என இவர். இவர்களில் தொண்டரடிப்பொடியாழ்வாரும் மதுரகவியாழ்வாரும் தவிர்ந்த மற்றைப்பதின்மரும் திருவேங்கடத்தைப் பாடினரென அறிக. 'ஏழ் பாரும் வெல்லுங் கதிர்' என்பதற்கு - எல்லாவுலகங்களிலுஞ் சென்று பரவி இருளை வென்று அகற்றும் ஒளியையுடைய என்று உரைப்பினும் அமையும். ஏழ்பாரும் வெல்லும் - ஏழுஉலகங்களிலும் (எல்லாஇரத்தினங் களினும்) மேம்பட்ட என்றுமாம். தமிழ், சொல்-பாடல்களுக்குக் கருவியாகு பெயர். தாழ்வான, புல் - ஒருபொருட்பன்மொழி. ஏழ்பார் - கீழேழும் மேலேழும் ஆக ஈரேழுலக மென்க. செந் தமிழ் - சுத்தமான தமிழ்.

---

## நூல்.

க. பொன்னு மணியும் பொலிந்தோங்கிப் பார்மகட்கு
மின்னு மணிமுடியாம் வேங்கடமே—மன்னும்
பரமபத நாட்டினன் பையரவின் சூட்டிற்
சிரமபத நாட்டினன் சேர்வு.

(இ - ள்.) பொன்னும்—, மணியும் - நவரத்தினங்களும், பொலிந்து - (தன்மீது) விளங்கப்பெற்று, ஓங்கி - தான் உயர்ந்திருத்தலால், பார்மகட்கு மின்னும் மணி முடி ஆம் - பூமிப்பிராட்டிக்கு விளங்குகின்ற இரத்தினகிரீடம்போலிருக்கிற, வேங்கடம்-திருவேங்கடமலையானது,—மன்னும் - நிலைபெற்ற, பரமபதம் நாட்டினன் - பரமபதமென்னுந் திருநாட்டையுடையவனும், பை அரவின் சூட்டில் - படத்தையுடைய(காளியனென்னும்)பாம்பினது முடியிலே, சிரம பதம் நாட்டினன் - ஆட்டப்பயிற்சியையுடைய திருவடிகளை நிறுத்தி நடனஞ்செய்தவனு மாகிய எம்பெருமான், சேர்வு - (திருவுள்ளமுவந்து)சேர்ந்திருக்குமிடமாம்; (எ - று.)—ஆம் - உவமவுருபு.

வேங்கடம் சேர்வு எனமுடிக்க; இம்முடிபு,இந்நூற்செய்யுளெல்லாவற்றுக்கும் ஒக்கும். ஏ - ஈற்றசை; பிரிநிலையாகக்கொள்ளின், இத்திருப்பதி எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மற்றையெல்லாத்திவ்வியதேசங்களினும் மிகவும் பாங்கான வாசஸ்தானமென்னுங் கருத்து அமையும்; அங்ஙனம்சிறப்புடையதாதல், புராணங்களினாலும் விளங்கும். முன்னிரண்டடி-வடிவுபற்றி வந்த உவமையணி. பரமபதம் என்றும் அழிவில்லாது நித்தியமாயிருத்தலால், அதற்கு, 'மன்னும்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. பரமபதம்-சிறந்த ஸ்தானம். பரமபத நாடு-பரமபதமாகியநாடு;இருபெயரொட்டு.

வருந்துதலென்னும் பொருளைத் தருகின்ற ச்ரமம் என்னும் வடசொல்லின் திரிபாகிய சிரமம் என்பது - "சிலைக்குரு விறற்குருகுலகுமாருக்கு

வரு சிரமகிலை காண்மி னெனவே" என்ற வில்லிபுத்தூரார் பாரதச் செய்யுளில் படைக்கலப்பயிற்சி யென்னும் பொருளில் வந்தது போல, இங்கு நடனப்பயிற்சி யென்னும் பொருளில் வந்தது. கண்ணன் காளியனுடைய முடியின்மேல் ஏறி நர்த்தநஞ்செய்தருளும்போது ஐந்துதலைகளையுடைய அந்நாகம் எந்தெந்தப்படத்தைத் தூக்குகின்றதோ அந்தந்தப்படத்தைத் துவைத்து நர்த்தனஞ்செய்து நின்று அப்பாம்பின்வலிமையை யடக்கி அதனை மூர்ச்சையடையச் செய்கையில் பலவகை நடனத்திறங்களைச் செய்து காட்டியமை தோன்ற, 'சிரமபதநாட்டினான்' என்றார்; அத்தன்மையை, 'சுவாமிநர்த்தனமுறைமையில் வட்டமாய்ச்சுற்றுவது முதலானபிராந்திகதிகளினாலும், ஒருபக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்துக்குப் போவது முதலான ரேசககதிகளினாலும், பாதத்தை முன்னீட்டிவைப்பதாகிய தண்டபாதகதியினாலும், அந்தச் சர்ப்பராசன் நசுங்கி யிருந்த உரத்தையுங் கக்கினான்' என்ற விஷ்ணுபுராணவாக்கியத்தால் நன்கு அறிக. "கானகமாமடுவிற் காளிய னுச்சியிலே, தூயநடம்பயிலுஞ் சுந்தர", "காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டவ, னீண்முடி யைந்திலு நின்று நடஞ்செய்து, மீள வவனுக் கருள் செய்த வித்தகன்" என்ற ஆழ்வாரருளிச்செயல்களையுங் காண்க. இனி, சிரமபதம் நாட்டினான் என்பதற்கு - வருத்தத்தன்மையை உண்டாக்கியவ னென்றும், சிரமத்தை நீக்குகின்ற திருவடியை நிறுத்தியவ னென்றும், மற்றுஞ் சிலவாறும் நலிந்துபொருள்கொள்ளுகின்ற உரைகளெல்லாம் சிறவாமை காண்க. நாட்டினான் - தனது திருவடிபதிந்தசுழும்பு என்றும் நிலையாக இருக்கும்படி அழுந்தவைத்தவன்; 'ஓ சர்ப்பராசனே! நீ கருடனுக்குப் பயப்படவேண்டாம்; உன்சிரசில் என்திருவடி பொறித்த வடு இருத்தலைக் கண்டு உன்னை அவன் ஒன்றுஞ் செய்யமாட்டான்' என்று கண்ணன் காளியனுக்கு வரமளித்தமை காண்க.

சேர்வு - தொழிலாகுபெயர். 'சேர்பு' என்றும் பாடம். நாட்டினான் என்பது - மூன்றாமடியில் நாடு என்னும் பெயரினடியாகப் பிறந்த குறிப்புவினையா லணையும் பெயரும், நான்காமடியில் நாட்டு என்னும் பிறவினைப் பகுதியடியாப் பிறந்த தெரிநிலைவினையாலணையும்பெயருமாம்; முந்தினதில், இன் - சாரியை; பிந்தினதில், இன் - இறந்தகாலவிடைநிலை.

எல்லா நூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டுவது மரபாதலால், 'பொன்' என்று தொடங்கினார். மங்கலச் சொற்கள் இன்னவென்பதை "சீர் மணி பரிதி யானை திரு நில முலகு திங்கள், கார் மலை சொல்லெழுத்துக் கங்கை நீர் கடல் பூத்தேர் பொன், ஏருறு மிவைமூவாறு மிதிற் பரியாயப்பேரும், ஆரு மங்கலச்சொற் செய்யுளாய்ந்து முன்வைக்க நன்றாம்" என்ற நிகண்டினால் அறிக. (க)

உ. சோதிமதி வந்துதவழ் சோலைமலை யோடிரண்டாய்
மேதினியாள் கொங்கைநிகர் வேங்கடமே—போதி
லிருப்பாற் கடலா னிபமூர்ந்தார்க் கெட்டாத்
திருப்பாற் கடலான் சிலம்பு.

(இ - ள்.) சோதி மதி வந்து தவழ் - ஒளிநிறைந்த சந்திரன் வந்துதவழப்பெற்ற [மிகவும்உயர்ந்த], சோலைமலையோடு - திருமாலிருஞ்சோலைமலையோடு சேர்ந்து, இரண்டு ஆய் - இரண்டாகி, மேதினியாள் கொங்கை நிகர்-பூமிப்பிராட்டியினது இரண்டுதனங்கள் போல்கின்ற, வேங்கடமே—, —போதில் இருப்பாற்கு-தாமரைமலரில் இருப்பவனான பிரமதேவனுக்கும், அடல் ஆன் இபம் ஊர்ந்தார்க்கு - வலிமையையுடைய ருஷபத்தையும் ஐராவதயானையையும் (முறையே வாகனமாகக்கொண்டு) ஏறிச்செலுத்துபவரான சிவபிரானுக்கும் தேவேந்திரனுக்கும், எட்டா - எட்டாத, திருபால் கடலான் - திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டிருப்பவனான திருமாலினது, சிலம்பு - திருமலை; (எ - று.)

'சோதிமதிவந்துதவழ் சோலைமலை' என்றது, தொடர்புயர்வுநவிற்சியணி. 'சோலைமலையோ டிரண்டாய் மேதினியாள் கொங்கை நிகர் வேங்கடம்' என்றது, உவமையணி. சிறப்பும் உயர்வு முள்ள வடக்குத் திருமலையாகிய திருவேங்கடமும், தெற்குத்திருமலையாகிய திருமாலிருஞ்சோலைமலையும், பூமியாகிய பெண்ணின் இரண்டு தனங்களாக வருணிக்கப்பட்டன. பருத்த வடிவத்தையும், மிக்க வலிமையையும், பூமிதேவியின் நாயகனான திருமால் விரும்புமிட மாதலையும் விளக்கும் உவமை. திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரியதிருமடலில் "தென்னனுயர்பொருப்பும் தெய்வ வடமலையும், என்னு மிவையே முலையா வடிவமைந்த, அன்ன நடைய அணங்கு" என்றதை அடியொற்றியது, இவ்வருணனை. அதன் வியாக்கியானத்தில், 'மேரு மந்தராதிகளைச் சொல்லாதே திருமலைகளைச் சொல்லுவானென்னென்னில்,—முலைகளாகின்றன, காந்தன் விரும்பி விடாதே படுகாடுகிடக்குமவையாய்த்து; ஸர்வேச்வரன் விரும்பி நித்யவாசம்பண்ணுமிடங்களிறே இரண்டு திருமலைகளும்' என்ற வாக்கியம் இங்கு உணரத்தக்கது. "பொதியமு மிமயமும் புணர்முலை யாக" என்ற பெருங்கதையோடும், "கொங்கையே பரங்குன்றமுங் கொடுங்குன்றும்" என்ற திருவிளையாடற்புராணத்தோடும் இதனை ஒப்பிடுக. மிகப்பலவான சோலைகளை யுடையதாதலால், சோலைமலையென்று திருநாமம்; 'வநகிரி' என்று வடமொழிப்பெயர்; "ஆயிரம் பூம்பொழிலுமுடை மாலிருஞ் சோலையதே" என்றார் பெரியாழ்வாரும். இத்திருமலை, பாண்டியநாட்டி லுள்ளது.

"பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கு அரிய, வித்தகன்" என்றபடி எம்பெருமான் அன்புமிக்க அடியார்கட்கு எளியவனாவனேயன்றி அகங்காரத்தோடு 'நாம் தேவர்' என்கிற அமரர்கட்கு எளியவனல்லனென்பது, பின்னிரண்டடியில் விளக்கப்பட்டது. எட்டாமை - மனத்தினால் நினைத்தற்கும், மொழியினால் சொல்லுதற்கும், மெய்யினால் சேர்தற்கும் இயலாதபடி இருத்தல். எட்டாஎன்றது, திருப்பாற்கடலானுக்கு அடைமொழி. ஆன் என்ற பொதுப்பெயர் - இங்கு, பசுவின் ஆணின்மேல் நின்றது. போது - சிறப்பாய்த் தாமரையைக் குறித்தது. (உ)

௩. மாலைக்கோ வித்திரியும் வையகத்தோர் தம்பிறவி
வேலைக்கோர் வங்கமாம் வேங்கடமே—சோலைத்
தருமா தரைநட்டான் றண்முல்லை யாயர்
தருமா தரைநட்டான் சார்பு.

(இ - ள்.) மாலை - மயக்கத்தை, கோலி - தம்மிடத்திலே கொண்டு, திரியும் - (பலவிடங்களிலும்) அலைகின்ற, வையகத்தோர்தம் - நிலவுலகத்திலுள்ளாருடைய, பிறவி-பிறப்பாகிய, வேலைக்கு-கடலுக்கு, ஓர் வங்கம் ஆம்-ஒரு மரக்கலம்போன்ற, வேங்கடமே——,——சோலை தரு - (தேவேந்திரனது நந்தனவனமென்னும்) பூஞ்சோலையி லுள்ள பாரிசாத விருட்சத்தை, மா தரை நட்டான் - பெரிய பூமியிற் கொணர்ந்து நாட்டியவனும், தண் - (நீர்வளத்தாற்) குளிர்ச்சியான, முல்லை-முல்லைநிலத்தில் வசிக்கின்ற, ஆயர்-இடையர்கள், தரும் - பெற்ற, மாதரை - பெண்களை [கோபஸ்திரீகளை], நட்டான் - விரும்பிக் கூடியவனு மாகிய திருமால், சார்பு - (திருவுள்ளமுவந்து) சார்ந்திருக்கு மிடமாம்; (எ - று.)—கடற்கு - கடல்கடத்தற்கு.

மால் - மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை முதலியன. கோலி என்ற இறந்தகாலவினையெச்சத்தில், கோல் - வினைப்பகுதி. மாலைக் கோலித் திரியும் வையகத்தோர் என்பதற்கு - எம்பெருமானை நாடித் திவ்விய தேசயாத்திரை செய்கின்ற நிலவுலகத்தா ரென்றும் பொருள்கொள்ளலாம். காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி மேன்மேல் வருதலாலும், அச்சந்தருதலாலும், கடத்தற்கு அரிதாதலாலும், பிறப்புக் கட லெனப்பட்டது. கடலிலிறங்கியவர் அக்கடலைக் கடந்து அக்கரை சேர்தற்கு மரக்கலம் சருவியாவதுபோலப் பிறப்பில்அகப்பட்டவர் அதனையொழித்துமுத்தி பெறுதற்குத் திருவேங்கடமலை சாதனமாகு மென்க. எனவே, வேங்கடம் தன்னையடைந்தார்க்கு வினையொழித்து வீடுதரவல்ல தென்றதாம்.

சத்தியபாமையின் பொருட்டுக் கண்ணன் தேவலோகத்திலிருந்து பாரிஜாத தருவைத் துவாரகைக்குக் கொணர்ந்து நாட்டின வரலாறும், கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளியபொழுது தன்னிடங்காதல்கொண்ட பல கோபகன்னிகைகளைத் தானும் காதலித்து அவர்களோடு கூடிக் குலாவினமையும், பாகவதத்திற் பிரசித்தம். முல்லை - காடும், காடுசார்ந்த இடமும். ஆயர் - பசுக்களுக்கு உரியவர். நட்டான் - இறந்தகாலவினையாலணையும்பெயர்; முறையே நடு, நள் - பகுதிகள். சார்பு - தொழிலாகுபெயர்.

இச்செய்யுளின் பின்னிரண்டடியில் யமகம் அமைந்திருத்தல் காண்க.

௪. நாலு திசைமுகமு நண்ணுதலா லொண்கமல
மேலுறலால் வேதாவாம் வேங்கடமே—சாலுறையு
மண்மயக்கந் தேற்றுவித்தான் மாற்றுதல்போ லாரியனு
லுண்மயக்கந் தேற்றுவித்தா னூர்.

(இ - ள்.) நாலு திசை முகமும் நண்ணுதலால் - நான்கு திசைகளையும் நோக்கிய நான்கு முகங்கள் பொருந்தியிருத்தலால் [நான்குதிக்கினிடங்களி

லுள்ளாராலும் விரும்பி வந்து சேவிக்கப்படுதலால்], ஒள் கமலம் மேல் உறலால் - பிரகாசமான தாமரைமலரின்மேல் தோன்றியதனால் [சிறந்த புண்ணியதீர்த்தங்கள் தன்மேல் தங்கப்பெறுதலால்], வேதா ஆம் - பிரமனைப் போன்ற, வேங்கடமே——, ——சால் உறையும் மண் மயம் கம் - பாத்திரத்திற் பொருந்திய மண்ணோடுகலந்த நீரை, தேற்று வித்தால் மாற்றுதல் போல் - தேற்றாங்கொட்டையைக்கொண்டு அத்தன்மையை மாற்றித்தெளியச்செய்தல் போல, ஆரியனால் - ஆசாரியனைக்கொண்டு, உள் மயக்கம் தேற்றுவித்தான் - (எனது) மனத்தின் தடுமாற்றத்தைத் தெளியச்செய்தவனான திருமாலினது, ஊர் - வாசஸ்தானமாம்; (எ - று.)

முன்னிரண்டடி - பிரமனுக்கும் வேங்கடத்துக்கும் செம்மொழிச்சிலேடைபற்றிவந்த உவமையணி. (செம்மொழிச் சிலேடையாவது - சொற்கள் வெவ்வேறு வகையாகப் பிரிக்கப்படாமல் பலபொருள்படுவது.) நாற்புறமும் நோக்கிய நான்குமுகமுடையவனாய்த் திசைமுகனென்றும் நான்முகனென்றும் பெயர்பெறுதலும் திருமாலினது திருநாபித் தாமரைமலரினின்று தோன்றியமையும் பிரமனுக்கும், எத்திசையிலுள்ளோராலும் தொழுது ஏத்திறைஞ்சப்படுதலும் அநேக புண்ணியதீர்த்தங்களை யுடைமையும் திருவேங்கடத்துக்கும் அமையும். சால் - நீர்கொள்ளும் மட்பாத்திரம். தேற்றாமரத்தின் விதையைத் தேய்த்து அத்தேய்வையை நன்றாகக்குழம்பிய நீரிற் கரைத்தால் அந்நீர் கலக்கந்தெளிதல், இயல்பு. ஞானம் அநுட்டானம் இவை நன்றாகவேயுடையனான நல்லாசிரியன் நேர்ந்து தத்துவஞானோபதேசஞ்செய்து மனத்தைத் தெளிவித்தல் எம்பெருமானது திருவருளின் வாய்ப்பினாலன்றி அமையாதாதலின், அதனை அப்பெருமான்மேல் ஏற்றி, 'மண்கலந்தநீரைத்தேற்றாங்கொட்டையைக்கொண்டுதெளிவித்தாற்போல, மயங்கிய மனத்தை ஆசிரியனைக்கொண்டு தெளிவித்தவன்' என்றார்; உயிர்கட்கு ஆவனசெய்தல் இறைவனது செயலென்க. குழம்பிய நீர் - கலங்கிய மனத்துக்கும், தேற்றாம்வித்து - ஆசிரியனுக்கும் உவமையாம். ம்ருண்மயம் என்ற வடசொல், மண்மயம் என விகாரப்பட்டது. கம், ஆரியன் - வடசொற்கள். தேற்றுவித்தால், ஆரியனால் என்றவற்றில்— 'ஆல்' உருபு - கருவிப்பொருளது. (௪)

௫. பாணிபிறை கொன்றை பணிசூடி மானேந்தி
வேணியரனைப்பொருவும் வேங்கடமே—யாணிநிறப்
பீதாம் பரனார் பிரமர்வா ழண்டங்கண்
மீதாம் பரனார் விருப்பு.

(இ - ள்.) பாணி - நீரையும், பிறை - சந்திரனையும், கொன்றை - கொன்றையையும், பணி - பாம்பையும், சூடி - மேற்கொள்ளுதலாலும், மான் ஏந்தி - மானைத் தரித்தலாலும், வேணி அரனை பொருவும் - சடைமுடியையுடைய சிவபிரானைப் போல்கின்ற, வேங்கடமே——, ——ஆணி நிறம் பீதம் பரனார் - ஆணிப்பொன்னிறமுள்ள பீதாம்பரமென்னும் பொற்பட்டாடையை யுடுத்தவரும், பிரமர் வாழ் அண்டங்கள் மீது ஆம் பரனார் -

பிரமதேவர் வாழ்கின்ற அண்டங்களுக்கு மேலாகிய பரமபதத்தில் எழுந்தருளியிருக்கிறவரும் ஆகிய திருமால், விருப்பு - திருவுள்ளமுவந்து வந்து எழுந்தருளித் தங்கியிருக்குமிடம் ; (எ - று.)

சிவபிரானுக்கும் திருவேங்கடத்துக்கும் செம்மொழிச்சிலேடையுவமை. சிவபிரான் பகீரதனது வேண்டுகோளினால் கங்கையை முடிமீதுகொண்டமையும், தக்ஷமுனிவனது சாபத்தினால் க்ஷயமடைபவனாய்க் கலைகுறைந்து வந்து சரணமடைந்த சந்திரனை முடியின்மீது கொண்டு வரமளித்துப் பாதுகாத்தமையும், கொன்றைமலரை அன்போடு சூடிக்கொள்ளுதலும், தாருகவனமுனிவர்களாலேவப்பட்டுத் தன்னைக்கொல்லவந்த நாகங்களையும் மானையும் வலியடக்கி நாகங்களை ஆபரணமாகக்கொண்டு மானை இடக்கையிலேந்தினமையும் காண்க. திருவேங்கடமலையும் திவ்வியதீர்த்தங்களும் கொன்றைமரங்களும் நாகங்களும் மான்களும் இருத்தலும், மிகவுயர்ந்த அம்மலையின் முடியின்மேல் சந்திரன்வருதலும், இயல்பு. சிவபிரானுக்கு வேணியையுடைமை கூறியதற்கு ஏற்ப, வேங்கடத்துக்கு அடர்ந்தவனத்தொகுதியையுடைமை கொள்க. ஆணிப்பொன் - மாற்றுக்குறைவற்ற பொன். பீதாம்பரமென்பது-பீத அம்பரம் எனப்பிரிந்து, பொன்னிறமான ஆடையெனப் பொருள்படும்; தீர்க்கசந்தி. அண்டங்கள் அநந்தமென்றும், அவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பிரமன் உளனென்றும், அவ்வண்டங்களுக்கெல்லாம் மேலுள்ளதான பரமபதத்தில் எம்பெருமான் எழுந்தருளியிருக்கின்றனனென்றும், அந்நிலை ஐந்துவகை நிலையுள் பரத்துவமெனப்படுமென்றும் அறிக. 'ஆர்' என்னும் பலர்பால் விகுதி, இரண்டிடத்தும் உயர்வுப்பொருளில் வந்தது. பிரமர் - பொருட்பன்மை; உயர்வுப்பன்மையன்று. விருப்பு-முதனிலைதிரிந்த தொழிலாகுபெயர். (ரு)

கூ. மாலாய்ச் சசிதழுவி வச்சிரமேந் திப்புகர்மா
மேலாய்ப் புரந்தரனும் வேங்கடமே—நாலாய்க்
கிளர்வாகு மந்தரத்தான் கேட்டமரர் வேட்டுத்
தளர்வாகு மந்தரத்தான் சார்பு.

(இ - ள்.) மால் ஆய் - மால்என்னும் ஒரு பெயரைக் கொண்டு [பெருமையையுடையதாய்], சசி தழுவி - இந்திராணியைக் கூடி [சந்திரன் தன் மீது பொருந்தப்பெற்று], வச்சிரம் ஏந்தி - வச்சிராயுதத்தைக் கைக்கொண்டு [வச்சிர ரத்தினக் கற்களைத் தன்மேலுடையதாய்], புகர் மா மேல் ஆய்-(உத்தமவிலக்கணமாகிய) செம்புள்ளிகளையுடைய (ஐராவதமென்னும்) யானைமேல் ஏறுதலால் [செம்புள்ளிகளையுடையயானைகள் தன்மேல்தங்கப்பெறுதலால்], புரந்தரன் ஆம் - இந்திரனை யொத்த, வேங்கடமே—,—நால் ஆய் கிளர் - நான்காய்விளங்குகின்ற, வாகு மந்தரத்தான் - மந்தரமலைபோன்றதோள்களையுடையவனும், அமரர் - தேவர்கள், கேட்டு - (தனது சிறப்பைக்) கேள்வியுற்று, வேட்டு - (தாம்தாம் சென்றுசேர) விரும்பி, தளர்வு ஆகும் - (தமக்கு அது எளிதிற்கிடைத்திடாமையால் தாம்) தளர்ச்சியடைதற்குக் காரணமான,

அந்தரத்தான்-(பரமாகாசமெனப்படுகின்ற) பரமபதத்தை யுடையவனாகிய திருமால், சார்பு - சார்ந்திருக்கு மிடம்; (எ - று.)

இந்திரனுக்கும் திருவேங்கடத்துக்கும் செம்மொழிச்சிலேடையுவமை. மாலென்பது - இந்திரனுக்கு ஒருபெயராதல், "வாசவன் அமரர்கோன்மால் முகிலூர்தி" என்ற திவாகரத்தாலும் விளங்கும். மாலாய்ச் சசிதழுவி என்பதற்கு - ஆசைகொண்டு இந்திராணியை யணைத்து என்றும் பொருள்கொள்ளலாம். வடமொழித்திரிபாகிய சசி யென்பது - சந்திரனைக் குறிக்கையில், முயல்வடிவத்தையுடையதென்று காரணப்பொருள்படும்; சசம் - முயல்: சந்திரனிடத்துக் காணப்படுகின்ற களங்கத்தை முயலென்றல், ஒருவகைக் கவிமரபு. வஜ்ரம் என்ற வடசொல், வச்சிரமெனத் திரிந்தது. செம்புள்ளிகளையுடைமை யானைக்கு நல்லிலக்கணமாதலை, "தீயுமிழ் சிறுகணுஞ் செம்புகருமுடைத்தாய்" என்ற அரசயானையிலக்கணத்தினாலும் அறிக. புரந்தரன் - வடசொல்; (பகைவர்களுடைய)நகரங்களையழிப்பவ னென்று காரணப்பொருள்படும்: புரம் - பட்டணம். நால் - நான்கு என்பதன் விகாரம். வாகு - பாஹு என்ற வடசொல்லின் திரிபு. அழித்தற்குஅரிய வலிமையும் பருமையும் பற்றி, தோளுக்கு மலை உவமைகூறப்படும். எட்டுக்குலமலைகளுள் ஒன்றாய் மிகப்பெரியதும் வலியதுமாதல்பற்றி, மந்தரத்தை யெடுத்துக்கூறினர். அதனை உவமைகூறியதனால், அம்மலை பாற்கடலைக் கடைந்தமைபோல இத்தோள்கள் பகைவருடைய போர்க்கடலை எளிதிற் கடக்கவல்லன வென்க. வேட்டு, வேள் - பகுதி. பரமபதம் தேவர்க்கும் செல்லுதற்குஎளியதன்றென்பது, 'கேட்டமரர் வேட்டுத் தளர்வாகு மந்தரம்' என்றதன் கருத்து. (சு)

எ. வள்ளிபுணர்ந் தாறுமுக மன்னிமயின் மேற்கொளலால்
வெள்ளிலைவேல் வேள்போலும் வேங்கடமே—யுள்ளினரைத்
தங்கமலப் பார்வையான் றன்னடியார் மேல்வைக்குஞ்
செங்கமலப் பார்வையான் சேர்வு.

(இ - ள்.) வள்ளி புணர்ந்து - வள்ளிநாயகியோடு கூடி [வள்ளிக்கொடிகள் பொருந்தப்பெற்று], ஆறு முகம் மன்னி - ஆறு முகம் அமையப்பெற்று [நதிகள் தன்னிடத்திலே அமையப்பெற்றதாய்], மயில் மேல் கொளலால் - மயிலை வாகனமாகக்கொண்டு அதன்மேல் ஏறுதலால் [மயில்களைத் தன் மேற்கொண்டிருத்தலால்], வெள் இலை வேல் வேள் போலும் - வெள்ளிய இலைவடிவமாகிய வேலாயுதத்தையுடைய முருகக் கடவுளை யொக்கின்ற, வேங்கடமே——,——உள்ளினரை - (தன்னைத்) தியானித்த அடியார்களை, மலம் பார் - (காம வெகுளி மயக்கங்களாகிய) மும்மலங்கள் பொருந்திய உலகத்தில், தங்க வையான் - இருக்கவைக்காமல் தனது பரமபதத்திற் சேர்த்துக்கொள்பவனும், தன் அடியார்மேல் வைக்கும் - தனது அடியார்களிடத்து வைக்கின்ற, செம் கமலம் பார்வையான் - செந்தாமரைமலர் போன்ற திருக்கண்களின் நோக்கத்தை யுடையவனு மாகிய திருமால், சேர்வு - சேருமிடம்; (எ - று.)

சுப்பிரமணியனுக்கும் வேங்கடத்துக்கும் செம்மொழிச்சிலேடைபற்றி வந்த உவமை. வள்ளி - சுப்பிரமணியனது மனைவியர் இருவருள் ஒருத்தி. (மற்றொருத்தியின் பெயர் - தேவயானை.) வள்ளிக்கிழங்கின் கொடியை மிகுதியாகவுடைமையால் வள்ளிமலை யென்று பெயர்பெற்ற கிரியில் வள்ளிக்கொடிகளுள்ள இடத்திற் பிறத்தலால், இவளுக்கு, வள்ளி யென்று பெயர். 'ஆறுமுகமன்னி' என்பதற்கு-(திருவேங்கடத்துக்குச் சேருங்கால்) சண்முகதீர்த்தமென்னும் திவ்யதீர்த்தம் பொருந்தி என்றும் பொருள் கொள்ளலாம். மூன்றாமடியில், வையான் வைக்கும் என வந்தது, முரண் தொடை; "மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே" என்றது காண்க. (எ)

அ. புள்ளரவ நீரரவம் போர்மா வரவமறா
வெள்ளரவ வெற்பாகும் வேங்கடமே—யொள்ளரியாய்
மாகனகம் பத்திஞர் வாய்கண்கை யுந்திபதங்
கோகனகம் பத்திஞர் குன்று.

(இ - ள்.) புள் அரவம் - பறவைகளின் ஒலியும், நீர் அரவம் - அருவி நீர்பெருகிய ஒலியும், போர் மா அரவம் - போர்செய்கின்ற யானை முதலிய விலங்குகளின் ஓசையும், அறா - நீங்காததாய், வெள் அரவ வெற்பு ஆகும் - சுத்தமான அரவவெற்பென்று ஒருபெயர்பெற்ற, வேங்கடமே——,—— ஒள் அரி ஆய்-விளங்குகின்ற சிங்கவடிவமாய், மா கன கம்பத்திஞர்-ஓங்கிய பருத்த தூணினின்று தோன்றியவரும் , வாய் கண் கை உந்தி பதம் - வாய் ஒன்றும் கண்கள் இரண்டும் கைகள்நான்கும் நாபிஒன்றும் பாதம்இரண்டும் ஆகிய, கோகனகம் பத்திஞர் - பத்துத்தாமரைமலர்களையுடையவருமாகிய திருமாலினது, குன்று - திருமலை ; (எ - று.)

அரவம்என்பது-ஓசையென்னும்பொருளில் ரவம்என்ற வடமொழி முதலில்அகரம்பெற்றதும்,பாம்பென்ற பொருளில் அரா என்னும் தென்மொழி குறுகி அம்சாரியை பெற்றதுமாம். சேஷகிரியென்பதன் பரியாயநாமமாக அப்பொருளில்திருவேங்கடமலைக்கு அரவவெற்புஎன்று ஒருபெயர்வழங்கும்; அப்பெயர்க்கு - புள்ளரவம் முதலிய பலவகையரவங்கள் [ஒலிகள்] நீங்காததாய் அரவவெற்பாகுமென்று வேறொருவகைக்காரணங் கற்பித்துக் கூறினது, நிருக்தியலங்காரம்; தமிழில் பிரிநிலைநவிற்சியணி யெனப்படும்: அதன் இலக்கணம்-பெயர்களுக்கு உறுப்பாற்றலால் மற்றொருபொருளைத்தந்துரைத்தல். திருமால் நரசிங்கவடிவமாய்த் தூணினின்று வெளிப்பட்டு இரணியனைக்கொன்று பிரகலாதனைப் பாதுகாத்தமை, பிரசித்தம். அரி-ஹரி; சிங்கம்; (யானை முதலியவற்றை) அழிப்பது. ஸ்தம்பம், கோகநதம் என்ற வடசொற்கள் - கம்பம், கோகநகம் என விகாரப்பட்டன. வாய்முதலியவற்றுக்குத் தாமரைமலர் மென்மையழகுகளில் உவமம். ஆய்என்ற வினையெச்சம், கம்பத்திஞர் என்ற குறிப்புவினையாலணையும்பெயரில் தொக்குநின்ற 'தோன்றியவர்' என்பதைக் கொள்ளும். பரமபதநாதனது கட்டளையின்படி அவனுக்குப் பலவகைக்கைங்கரியங்களைச் செய்யும் ஆதிசேஷனே இம்மலையுரு

வானதனாலும், மேருமலையினிடமிருந்து ஆதிசேஷனுடனே வாயுவினால் இம்மலை கொணரப்பட்டதனாலும், இதற்கு 'சேஷகிரி' என்று பெயர் வாய்த்தது. (அ)

கூ. தூய்யசெம்பொற் கோயிற் சுடரெறிப்பக் கண்முகிழ்த்து
வெய்யவன்றேர் மாவிடறும் வேங்கடமே—யையிருநூ
றானமுகப் பாம்பணையா ரானிரைப்பி னூதிவருங்
கானமுகப் பாம்பணையார் காப்பு.

(இ - ள்.) தூய்ய - சுத்தமான [மாசற்ற], செம் பொன்-சிவந்தபொன் மயமான, கோயில் - திருக்கோயிலினது, சுடர் - காந்தி, எறிப்ப - வீசுதலால், வெய்யவன் தேர் மா - சூரியனுடைய தேரிற் கட்டிய குதிரைகள், கண் முகிழ்த்து - கண்கள் மூடப்பெற்று, இடறும் - (அதனால்) கால் இடறுதற்குக் காரணமாகின்ற, வேங்கடமே——,——ஐ இரு நூறு ஆன முகம் பாம்பு அணையார் - ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேஷனைத் திருப்பள்ளி மெத்தையாகவுடையவரும், ஆன் நிரை பின் ஊதி வரும் - பசுக்கூட்டத்தின்பின்னே ஊதிக்கொண்டுவருகின்ற, கானம் - சங்கீதம், உகப்பு ஆம் - (எல்லாப்பிராணிகட்கும்) ஆநந்தகரமாம்படியான, பணையார் - வேய்ங்குழலையுடையவருமாகிய திருமால், காப்பு-(உயிர்களைப்) பாதுகாத்தருளும் இடம் ; (எ - று.)

முன்னிரண்டடி - அதிசயோக்தி. திருவேங்கடமலையிலுள்ள பொன்மயமான திருக்கோயிலின் ஒளி மிகுதியாகவீசுதலால்சூரியன்தேர்க்குதிரைகள் கண்கூச்சமடைந்து கண்விழிக்கமாட்டாமல் கண்மூடிக்கொண்டு அம்மலையின் உயர்வினால் அதிற்காலிடறுமென வருணித்தது,பொற்கோயிலின் சிறப்பையும் மலையின் உயர்வையும் விளக்கியவாறாம். தூய்ய - தூய் என்னும் பண்பினடி முதல்குறுகிற்று. ஐயிருநூறு - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். பலவிடங்களிற்பரவிமேய்கிற பசுக்கூட்டங்களை ஒருங்குசேர்த்தற்பொருட்டும், அவற்றை மகிழ்வித்தற்பொருட்டும் கண்ணன் வேணுகானஞ்செய்தபொழுது அவ்வின்னிசையைச் செவியுற்று அனைத்துயிர்களும் அளவற்ற ஆனந்தத்தை யடைந்தமை, பிரசித்தம். கோயில் - கோ + இல்; கடவுளின் இடம் : வகரம்பெறாது யகரம்பெற்றது, இலக்கணப்போலி. பணை - மூங்கிலின் பெயர், குழலுக்குக் கருவியாகுபெயராய் நின்றது. கானம் - வடசொல். (கூ)

கo. மாண்டுபிறக் குந்துயர்போய் வைகுந்தம் புக்கவரு
மீண்டுதொழுக் காதலிக்கும் வேங்கடமே—பாண்டுமக
னேறிரதப் பாகனா ரேத்துமடி யார்நாவி
லூறிரதப் பாகனா ரூர்.

(இ - ள்.) மாண்டு - இறந்து, பிறக்கும் துயர் போய் - (மறுபடிஇவ்வுலகிற்) பிறப்பெடுத்தலா லாகிற துன்பம் நீங்கி,வைகுந்தம் புக்கவரும்- ஸ்ரீவை

குண்டலோகத்தை யடைந்தவர்களும், மீண்டு தொழ காதலிக்கும் -(அங்கு நின்று) மீண்டுவந்து வணங்க ஆசைப்படும்படியான, வேங்கடமே——,—— பாண்டுமகன் ஏறு இரதம் பாகனார்-பாண்டுவினது குமாரனான அருச்சுனன் ஏறிய தேரைச் செலுத்தும் சாரதியானவரும்,ஏத்தும் அடியார் நாவில்-(தம்மைத்) துதிசெய்கின்ற அடியார்களுடைய நாக்கிலே, ஊறு - மேன்மேற்சுரக்கின்ற, இரதம் பாகு அனார் - சுவையுள்ள சர்க்கரைப்பாகு போன்றவரும் ஆகிய திருமாலினது, ஊர் ——; (எ - று.)

ஒருபிறப்பின்முடிவிலேகருமமனைத்தும்தொலைந்து முத்திபெற்றவர்க்கு மீண்டும்பிறத்தல் இல்லை யென்றும், முத்திபெற்றவர் மீண்டு இவ்வுலகில்வருதல்இல்லையென்றும்அறிக அங்ஙனம் இவ்வுலகினின்று பிறப்புத்துயரமொழிந்து மீளாவுலகமாகிய பரமபதத்தை யடைந்தவரும் திருவேங்கடத்தின் சிறப்பையும் திருவேங்கடமுடையான் பேரானந்தருந் தன்மையையும் கருதி அங்குநின்று மீண்டு இங்குவந்து தொழவிரும்புவரென வேங்கடத்தின் மகிமையை விளக்கியவாறும். வைகுந்தம் - வடமொழித்திரிபு. பாண்டுமகன் - பாண்டவன்; பொதுப்பெயர் இங்குச் சிறப்புப்பொருளின்மேல்நின்றது. மகாபாரதயுத்தத்திற் கண்ணன் திருவருளால் அருச்சுனனுக்குத் தேரூர்ந்து அதனால் பார்த்தசாரதியென்று ஒருதிருநாமம்பெற்றமை,பிரசித்தம். இரதம்என்பது - தேர்என்றபொருளில ரதமென்ற வடசொல்லின் விகாரமும், இனிமைஎன்ற பொருளில் ரஸமென்றவடசொல்லின் விகாரமுமாம். அடியார்கள் நாப்படைத்தபயன்பெற அதுகொண்டு துதிக்கத் துதிக்க எம்பெருமான் ஆராவமுதமாய் மேன்மேல் இனியனாகிச்சுவைமயமாயுள்ளவனென்பது, 'ஏத்துமடியார்நாவிலூறுஇரதப்பாகுஅனார்' என்பதன் கருத்து; "அமுதம்பொதி யின்சுவைக் கரும்பினைக் கனியை"என்றார் திருமங்கையாழ்வாரும். (௧௦)

௧௧. கோலியொரு நான்கு குலமறையு நாற்றிசையும்
வேலியென நின்றேத்தும் வேங்கடமே—வாலிதனை
நண்பாவை யாதரித்தான் ஞானமுத லாழ்வார்கள்
வெண்பாவை யாதரித்தான் வெற்பு.

(இ - ள்.) ஒரு நான்கு குலம் மறையும் - ஒப்பற்ற சிறப்புள்ள நான்கு வேதங்களும், நால் திசையும் - நான்கு பக்கங்களிலும், வேலி என கோலி நின்று - வேலிபோலச் சூழ்ந்து, ஏத்தும் - துதிக்கப்பெற்ற, வேங்கடமே ——,——வாலிதனை நண்பு ஆவையாது அரித்தான் - வாலியை நண்பனாகக் கொள்ளாமல் [பகையாகக்கொண்டு] கொன்றிட்டவனும், ஞானம் முதலாழ்வார்கள் வெண்பாவை ஆதரித்தான் - தத்துவஞானத்தையுடைய முதலாழ்வார்கள் மூவரும் இயற்றிய வெண்பாவினாலாகிய பிரபந்தங்களை அன்போடு ஏற்றுக்கொண்டவனுமான திருமாலினுடைய, வெற்பு-மலை; (எ-று.)

வேங்கடம் வேதப்பிரதிபாத்தியமாய் மகிமைபெறுந் தன்மை, முன்னிரண்டடியில் விளக்கப்பட்டது. நாற்றிசையும் என்பதற்கு - நான்குதிக்கிலுள்

ளாரும் என்று உரைப்பாரும் உளர். வாலீ என்ற வடசொல் வாலியென ஈமீறு இகாரமாயிற்று. இப்பெயர் - வாலில் வலிமையுடையவ னென்றும், வாலினின்று பிறந்தவனென்றும் காரணப்பொருள் படும். இவன்-இந்திரன் மகன்; சுக்கிரீவனது தமையன்; கிஷ்கிந்தாநகரத்தையாண்ட வாநரராசன்; தன்னையெதிர்த்தாரது வலிமையிற் பாதி தன்னிடம் வந்து கூடும்படி வரம் பெற்றவன்; இராவணனை ஒருகால் வென்று பின்பு அவனது வேண்டுகோ ளின்படி அவனோடு அக்கினிசாக்ஷியாக நண்புகொண்டவன். இராமபிரான் வனவாசஞ்செய்கையில் இராவணன் சீதையை யெடுத்துக்கொண்டுபோன பின்பு அப்பிராட்டியைத் தேடிக்கொண்டு இலக்குமணனுடனே செல்லு கையில் வழியிலெதிர்ப்பட்ட அநுமான்மூலமாகச் சுக்கிரீவனோடு நண்பு கொண்டு அவன்வேண்டுகோளின்படி அவனது தமையனும் வாநரராசனு மான வாலியைத்தந்திரமாகக்கொன்று சுக்கிரீவனுக்குக்கிஷ்கிந்தையில்முடி சூட்டிவைத்தபின் அவனதுஉதவியால் இராவணாதியரைக் கொன்று பிராட் டியை மீட்டன னென வரலாறு அறிக. வாலி முன்னமே இராவணனுடன் அக்கினிசாட்சியாகநட்புக்கொண்டிருந்ததுபற்றிஅவனை இராமபிரான்உதவி யாகக்கொண்டால் இராவணாதிதுஷ்டர்களைத்தொலைக்க வகையில்லாமை யால்,வாலியைநண்பாகக்கொள்ளாமல்சரணமடைந்தசுக்கிரீவனதுவேண்டு கோளின்படி அவ்வாலியை வதைத்திட்டா னென்க; வாலியை நண்பா வை யாது அரித்ததற்கு மற்றுஞ்சிலகாரணமும் கூறப்படும். ஆ - ஆக: விகாரம்.

முதலாழ்வார்கள் - பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார். இவர்கள்மூவரும் மற்றையாழ்வார்களுக்கெல்லாம்முன்னே திருவவதரித்தத னாலும், பின்புஉண்டாகும்பிரபந்தங்களுக்கெல்லாம்இலக்கணமாம்படிஆதி யில் திருவந்தாதிதிவ்வியப்பிரபந்தங்களைத் திருவாய்மலர்ந்தருளியதனாலும், முதலாழ்வார்க ளென்று பெயர்பெற்றனர். ("மற்றுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து, நற்றமிழால் நூல்செய்து நாட்டையுய்த்த—பெற்றி மையோ, ரென்று முதலாழ்வார்களென்னும்பெயரிவர்க்கு, நின்றதுலகத்தே நிகழ்ந்து" என்ற உபதேசரத்தினமாலையையுங் காண்க.) இம்மூவரும் நூறு நூறுவெண்பாக்களினாற்பாடிய திவ்வியப்பிரபந்தங்கள்,முறையே முதல்திரு வந்தாதி,இரண்டாந்திருவந்தாதி, மூன்றாந்திருவந்தாதி யெனப் பெயர்பெ றும். வெண்பா - அதனாலாகிய பிரபந்தத்துக்குக் கருவியாகுபெயர். தலை மைபற்றி, முதலாழ்வார்கள்வெண்பாவையாதரித்தமையை எடுத்துக்கூறி னார்; அன்றியும், அவர்கள் நூற்றெட்டுத்திருப்பதிகளுள்ளும் திருவேங்கடத் தை மிகுதியாகப் பாராட்டிக்கூறியமையுங் காண்க. (கக)

கஉ. தெள்ளியதோர் வீடருளுஞ் சீர்கேட்டுப் பொன்மலையும்
வெள்ளிமலை யும்பணியும் வேங்கடமே—புள்ளின்
கொடிவா கனத்தான் குளிர்ந்திருண்ட காரின்
வடிவாக னத்தான் வரை.

(இ - ள்.) தெள்ளியது ஓர் வீடு அருளும் சீர் கேட்டு - தெளிவுள்ள தான ஒப்பற்ற பரமபதத்தைக் கொடுத்தருளுகிற சிறப்பைக் கேள்விப்பட்டு,

பொன் மலையும் வெள்ளிமலையும் பணியும்-பொன்மலையான மகாமேருவும் வெள்ளிமலையான கைலாசமும் வணங்கப்பெற்ற, வேங்கடமே——,—— புள்ளின் கொடி வாகனத்தான்-'பக்ஷிராசனாகிய கருடனது வடிவமெழுதிய கொடியையும் அக்கருடனாகிய வாகனத்தையு முடையவனும், குளிர்ந்து இருண்ட காரின் வடிவு ஆகன் - குளிர்ச்சியுள்ளதாய்க் கறுத்துள்ள மேகத்தினதுவடிவம்போன்ற திருமேனியையுடையவனும், சத்தான்- (பாஞ்சசந்நியமென்னுஞ்)சங்கத்தையுடையவனுமாகிய திருமாலினது,வரை-மலை; (எ-று.)

கர்மபந்தத்தொடர்ச்சியின்றி ஞானாநந்தங்களையேதருந்தன்மையதான முத்தியுலகைத் தன்னையடைந்தார்க்குத் தந்தருளும் மகிமை திருவேங்கடமலைக்கு இருத்தலை அதன்புகழினாற்செவியுற்று அறிந்து, அத்தன்மையில்லாதனவான பொன்மலையும் வெள்ளிமலையும் தமதுதாழ்வையும் அம்மலையின் உயர்வையும்நோக்கிஅதற்குத்தாம்கீழ்ப்படிந்து அதனைவணங்கிக்கிடக்குமென்க. பொன்மலைக்கும் வெள்ளிமலைக்கும் 'நாம் பொன்மயமாகவும் வெள்ளிமயமாகவும் இருக்கிறோம்' என்ற இறுமாப்பு ஒழிதற்குக் காரணமாயிற்று, வேங்கடத்தின் வீடளிக்குந்திறமென்க. வீடு - (பற்றுக்களை) விட்டு அடையுமிடம்; முக்தி. புள் - இங்குப் பொதுப்பெயர் சிறப்புப்பொருளின்மேலது. காண்பவர்கண்களுக்குக் காணுமளவிலே குளிர்ச்சியைத் தந்து அவர்களுடையஎல்லாச்சிரமங்களையும் பரிகரிக்குந் திருமேனியின் தோற்றமுடையானென்பார், 'குளிர்ந்திருண்ட காரின்வடிவாகன்' என்றார். ஆகம் - மேனி; அதனையுடையவன் - ஆகன். (கஉ)

கஈ. எப்பூ தலமு மிறைஞ்சித் திசைநோக்கி
மெய்ப்பூ சனைபுரியும் வேங்கடமே—கொப்பூ
ழிலகுமுண்ட கந்தரத்தா னீன்றளிக்கு மீரே
ழுலகுமுண்ட கந்தரத்தா னூர்.

(இ - ள்.) எ பூதலமும் - நிலவுலகத்தில் எவ்விடத்திலுள்ளவரும், திசை நோக்கி - திக்குநோக்கி, இறைஞ்சி - வணங்கி, மெய் பூசனை புரியும்- உண்மையான பூசையைச் செய்யப்பெற்ற, வேங்கடமே——,——கொப்பூழ் - திருநாபியில், இலகும் - தோன்றி விளங்கிய, முண்டகம் - தாமரைமலர், தர - அளிக்க, தான் ஈன்று-தான்பெற்று, அளிக்கும்-பாதுகாக்கிற, ஈரேழ் உலகும் - பதினான்குலோகங்களையும், உண்ட - அமுதுசெய்த, கந்தரத்தான் - கண்டத்தையுடைய திருமாலினது, ஊர்——; (எ - று.)

உலகத்தில் எத்திசையிலுள்ளாரும் திருவேங்கடத்தின் மகிமையைக் கருதி அத்திருப்பதியிருக்கின்ற திசையை நோக்கி வணங்கி வழிபடுவரெனஅத்தலத்தின் சிறப்பை விளக்கியவாறு. பூதலம் - இடவாகுபெயர். "பந்திக் கமலத் தடஞ்சூ ழரங்கர் படைப்பழிப்புச், சிந்தித்திடுவது மில்லைகண்டீ ரத் திசைமுகனேடு, உந்திக் கமலம் விரிந்தால் விரியு முகக்கடையில், முந்திக் குவியி லுடனே குவியு மிம்மூதண்டமே' என்பது சித்தாந்த மாதலால், 'கொப்பூழிலகு முண்டகந் தரத் தானீன்று' என்றார். பிரமன் முதலான

சகலதேவர்களுமுட்பட யாவும் அழிந்துபோகின்ற யுகாந்தகாலத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணு அண்டங்களையெல்லாம் தன்வயிற்றில் வைத்து அடக்கிக்கொண்டு யோகநித்திரை செய்தருளுகின்றன னென்பது, நூற்கொள்கை. எல்லாவற்றையும் படைத்துக்காத்து அழிக்கின்ற முழுமுதற்கடவுள் திருமாலே யென்ற ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தம், பின்னிரண்டடியில் விளக்கப்பட்டது. கந்தரம் - வடசொல்; தலையைத் தரிப்பதென்று காரணப்பொருள்படும்; கம் - தலை. (கங)

கச. நோவினையு நோயினையு நோய்செய் வினையினையும்
வீவினையுந் தீர்த்தருளும் வேங்கடமே—மூவினைசெய்
மூவடிவாய்ப் பச்சென்றான் முன்னா ளகலிகைக்குச்
சேவடிவாய்ப் பச்சென்றான் சேர்பு.

(இ-ள்.) நோவினையும் - (பிறத்தலாலாகின்ற) துன்பத்தையும், நோயினையும் - (வாழும்நாளில் வருத்தஞ்செய்கிற) வியாதிகளையும், வீவினையும் - மரணவேதனையையும், நோய் செய் வினையினையும் - எல்லாத்துன்பங்களையும் உண்டாக்குகிற காரணமான கருமங்களையும், தீர்த்து அருளும்-(தன்னையடைந்தவர்க்கு) நீக்கியருளுகின்ற, வேங்கடமே——,——மூ வினை செய்-(படைத்தல் காத்தல் அழித்தல் என்னும்) மூன்றுதொழில்களைச் செய்கின்ற, மூ வடிவு ஆய் - (அயன் அரி அரன் என்னும்) திரிமூர்த்திகளின்வடிவமாய், பச்சென்றான் - (அவற்றுள் தானானவடிவத்தில்) பசுமைநிறத்தையுடையவனும், முன் நாள் - முற்காலத்தில், அகலிகைக்கு - அகலிகையென்னும் பெண்ணுக்கு, சே அடி வாய்ப்ப - சிவந்த தனது திருவடி சித்தியளிக்கும்படி, சென்றான்-நடந்தருளியவனுமாகிய திருமால், சேர்பு - சேருமிடம்; (எ-று.)

பிறக்குங்காலத்தும் வளர்ந்து உயிர்வாழுங் காலத்தும் இறக்குங்காலத்தும் உண்டாகிற பலவகைத்துன்பங்களும், அவற்றிற்கெல்லாம் காரணமான கருமங்களும் தன்னையடைந்தார்க்கு இனி இல்லையாம்படி தன்மகிமையாற் செய்யுந்தரத்தது திருவேங்கடமென்க.

இனி, நோவு - மனோவியாதி; அதாவது - மனக்கிலேசம் என்றும், நோய் - தேகவியாதி யென்றும் உரைத்தலு முண்டு 'நோய்செய்வினை' என்றதில் நோய் என்றது, பசி தாகம் பயம் கோபம் முதுமை துன்பம் முதலிய பலவகை உடற்குற்றங்களையும் பொதுப்பட உணர்த்து மென்க. நோவு, நோய், வீவு - தொழிற்பெயர்கள்.

அகலிகை - அஹல்யா என்ற வடசொல்லின் திரிபு; அப்பெயர் - அழகில்லாமை யில்லாதவ ளென்று பொருள்படும்: மிக்க அழகுள்ளவ ளென்று கருத்து; ஹல்யம் - அழகின்மை. இவள், கௌதமமுனிவனது மனைவி. அவளது கல்வடிவமான சாபம் இராமபிரானது திருவடித்தூள் பட்டமாத்திரத்தில் தீர்ந்த தன்மை இராமாயணத்திற் பிரசித்தம். (கச)

கரு. பித்துமல டூமைமுடம் பேய்குருடு கூன்செவிடு
மெய்த்துயர்நோய் தீர்த்தருளும் வேங்கடமே—பத்தருக்கு
வந்ததுக்கங் காப்பான் மலருந் தியினுலகந்
தந்ததுக்கங் காப்பான் றலம்.

(இ - ள்.) பித்து - பைத்தியம்பிடித்தலும், மலடு-பிள்ளைப்பேறில்லாக் குறையும், ஊமை - பேசாமையும், முடம்-கைகால்களின் குறைவும், பேய் - பேய்பிடித்தலும், குருடு - கண்தெரியாமையும், கூன் - உடல்வளைதலும், செவிடு - காதுகேளாமையும் ஆகிய உடற்குற்றங்களையும், மெய் துயர் நோய்-மற்றும் வருத்தத்தைத்தருகின்ற வியாதிகளையும், தீர்த்து அருளும்-(தன்னையடைந்தார்க்கு)நீக்கியருளுகின்றவேங்கடமே ——, —— பத்தருக்கு வந்த துக்கம் காப்பான்-தன் அடியார்களுக்கு வந்த துன்பங்களை நீக்கி (அவற்றினின்று அவர்களைப்) பாதுகாப்பவனும், மலர் உந்தியின் [உந்திமலரின்]- தனது நாபித்தாமரைமலரினின்று, உலகம் தந்து - உலகத்தை உண்டாக்கி, அதுக்கு - அவ்வுலகத்தையுண்ணும்பொருட்டு, அங்காப்பான் - வாய்திறப்பவனுமாகிய திருமாலினது, தலம் - இடமாம்; (எ - று.)

திருவேங்கடமலையினது வரப்பிரசாதசக்தி, முன்னிரண்டடியில் விளக்கப்பட்டது. முதலடி-பெயர்ச்செவ்வெண். பக்தர், துக்கம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. காத்தல் - தடுத்தல், பரிகரித்தல். உந்தியின் - ஐந்தனுருபு, நீக்கம். உலகம்-சாதியொருமை; ஆனதுபற்றி, 'அதுக்கு' என ஒருமையாக் கூறினர். அங்காப்பான், அங்கா-பகுதி. மலருந்தியின் உலகந் தந்து அதுக்கு அங்காப்பான்- உலகத்தைப் படைப்பவனும், அளிப்பவனும், அழிப்பவனும் அவனே யென்றபடி. (கரு)

கசு. வாடப் பசித்த வரியுழுவை வாலாட்டி
மேடத்தைப் பார்த்துறுக்கும் வேங்கடமே—கூடத்துக்
கம்பவள மாவென்றான் காசினிக்கும் வெண்ணெய்க்குஞ்
செம்பவள மாவென்றான் சேர்வு.

(இ - ள்.) வாட - வாட்டமுண்டாம்படி, பசித்த - பசியடைந்துள்ள, வரி உழுவை - உடற்கோடுகளையுடைய புலிகள், மேடத்தை பார்த்து - (வானத்திற் செல்லுகின்ற ஆட்டின்வடிவமான) மேஷராசியைப் பார்த்து, வால் ஆட்டி உறுக்கும் - (அந்த ஆட்டைக் கொன்றுதின்னக் கருதித்) தன்வாலையசைத்துக்கொண்டு கோபித்து அதனோடுமாறுபடுதற்கு இடமான, வேங்கடமே ——, —— கூடத்து - யானைச்சாலையில், கம்பம் - தறியிற் கட்டிவைக்கத் தக்க, வளம் மா-மதக்கொழுமையையுடைய(குவலயாபீடமென்ற)யானையை, வென்றான் - கொன்று சயித்தவனும், காசினிக்கும் - (யுகாந்தகாலத்தில்) உலகத்தை உண்ணுதற்காகவும், வெண்ணெய்க்கும்-(கிருஷ்ணாவதாரத்தில்) வெண்ணெயை உண்ணுதற்காகவும், செம் பவளம் ஆ என்றான் - சிவந்த பவழம்போன்ற தனது திருவாய்மலரை ஆவென்று திறந்தவனுமாகிய திருமால், சேர்வு - சேர்ந்திருக்குமிடம்; (எ - று.)

பசித்த புலி ஆட்டுக்கடாவை நோக்கி அதனைக்கொல்லச் சீறிமுயலுதல், இயல்பு; திருவேங்கடமலையிலுள்ள புலி வானத்து மேஷராசியைப் பார்த்து உறுக்குமென மலையின் உயர்ச்சியை உணர்த்தியபடியாம். இது, தொடர்புயர்வுநவிற்சியணி. புலி குறிஞ்சிநிலத்து விலங்காதலால், அதனை யெடுத்துக்கூறினர். இனி வருஞ் செய்யுள்களில் இதுபோல வருகின்ற வருணனைகளுக்கெல்லாம் இங்ஙனமே கண்டுகொள்க. 'மேடத்தைப்பார்த்திருக்கும் வேங்கடமே' என்ற பாடத்திற்கு - புலியானது அடுத்துவரும் தனது ஆகாரத்திற்கும் வலிமைக்குந் தகுந்ததாகிய விருஷபராசியை எதிர்நோக்கிக்கொண்டு அவ்வகை வலிமையில்லாத மேஷராசியைக் கண்டு உபேக்ஷித்திருக்குமென்று பொருள். வாலாட்டுதல், கோபக்குறி. மேஷம் - வடசொல். மேஷராசி, சித்திரைமாதத்துக்கு உரியது. கூடத்து என்பதற்கு - வஞ்சனையாகக் கொல்லுந்தன்மையுள்ள என்றும், கம்பம் என்பதற்கு - அசையுந்தன்மையதான என்றும் பொருள் கொள்ளலாம்; கூடம், கம்பம் - வடசொற்கள். "யானை, யறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என்றபடி தீராக்கோபமுடையதாய் அக்கோபத்தைமறைத்துவைக்கவேண்டியகாலத்தேமறைத்துவைத்து வெளிப்படுத்தவேண்டிய காலத்தே வெளிப்படுத்தலும், "தூங்குங் களிறு" என்றபடி எப்பொழுதும் அசைதலும் யானையின் இயல்பு.

காசினி - பூமி; காச்யபீ என்ற வடசொல் திரிந்தது; இது-இங்கு மற்ற உலகங்களுக்கும் உபலக்ஷணம். பவளம் - வாய்க்கு, நிறம்பற்றிய உவமையாகுபெயர்; திருப்பவளமென்கிற வழக்கும் உண்டு. (கசு)

கஎ. தாவிவரும் வானரங்க டண்குவட்டிற் கற்கடக
மேவிவரக் கண்டோடும் வேங்கடமே—காவிரிசூழ்
பொற்றிருவ ரங்கத்தான் போதன் சிவனென்னு
மற்றிருவ ரங்கத்தான் வாழ்வு.

(இ - ள்.) தாவி வரும் - தாவிக்கொண்டேவருகின்ற, வானரங்கள்-குரங்குகள், தண் குவட்டில் - குளிர்ச்சியான சிகரத்தில், கற்கடகம் மேவி வர- (நண்டுவடிவமான) கர்க்கடகராசி பொருந்திவர, கண்டு-(அதனைப்)பார்த்து, ஓடும் - அஞ்சியோடுதற்கு இடமான, வேங்கடமே ——,——காவிரி சூழ் - காவேரிநதி சூழ்ந்த, பொன் திரு அரங்கத்தான் - அழகிய திருவரங்க மென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருப்பவனும், போதன் சிவன் என்னும் மற்று இருவர் அங்கத்தான் - (திரிமூர்த்திகளுள்) பிரமன் சிவன் என்னும் மற்றை யிருவரையுந் தனது அங்கத்தில் உடையவனுமாகிய திருமால், வாழ்வு - எழுந்தருளியிருக்குமிடம்; (எ - று.)

வாநரம் என்ற வடசொல் - கொஞ்சங்குறைய மனிதர்போல்வதென்று காரணப்பொருள்படும். கர்க்கடகம் - வடசொல். கர்க்கடகராசி, ஆடிமாதத்துக்கு உரியது. திருவரங்கம் - ஸ்ரீரங்கம்; திருமால்திருப்பதிகளெல்லாவற்றுள்ளும் இது தலைமையான தாதலால், இதனை யெடுத்துக்கூறினர். பொற்றிருவரங்கம் - பொன்மயமான மதில்முதலியவற்றையுடைய திருவா

ங்கமுமாம்; "செம்பொன்மதிலேழுடுத்த திருவரங்கப் பெருங்கோயி, லாணிப்பொற்றகடுரிஞ்சுமணிக்கதவ நீள்வாயில்" என்பர் திருவரங்கக்கலம்பகத்தும். போது-பூ; இங்குத் தாமரைமலர்; அதில் தோன்றியவன், போதன். சிவம் - சுபம்: அதனைச் செய்பவன், சிவன். பிரமனைத் தனது திருநாபியிலும், சிவனைத் தனது திருமேனியின் வலப்புறத்திலும் திருமால் கொண்டுள்ளான்; இத்தன்மை, "பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப், பிரமனைத் தன்னுந்தியிலே தோற்றுவித்துக், கறைதங்கு வேற்றடங்கண் திருவை மார்பிற் கலந்தவன்", "வலத்தனன் திரிபுரமெரித்தவன் இடம்பெறத் துந்தித், தலத்தெழு திசைமுகன்" என்ற ஆழ்வாரருளிச்செயல்களாலும் விளங்கும்: 'கேசவன்' என்ற திருநாமம் இப்பொருள் கொண்டதே. வாழ்வு என்ற சொல்லின் ஆற்றலால், திருவேங்கடம் திருமாலின் திருவுள்ளத்துக்கு மிகப்பாங்காயிருத்தல் விளங்கும். (கஎ)

கஅ. ஒண்சிந்து ரத்தைவெறுத் தூடும் பிடிவேழம்
விண்சிங்கங் கண்டணைக்கும் வேங்கடமே—யெண்சிந்தைக்
கோரா விருந்தா னொருநாள் விதுரனுக்கு
வாரா விருந்தான் வரை.

(இ - ள்.) ஒள் சிந்துரத்தை - ஒளியுள்ளதாகிய ஆண்யானையை, வெறுத்து—, ஊடும் - பிணங்குகின்ற, பிடி வேழம் - பெண்யானையானது, விண் சிங்கம் கண்டு - வானத்தில்வருகின்ற சிங்கவடிவமான சிங்கராசியைப் பார்த்து, அணைக்கும் - (அச்சங்கொண்டு ஆண்யானையைத் தானே வலியச்சென்று) தழுவுதற்கு இடமான, வேங்கடமே—, —எண் சிந்தைக்கு ஓரா இருந்தான்-(உலகத்தாருடைய) எண்ணுகின்ற மனத்துக்கு அறியப்படாமல் இருந்தவனும், ஒரு நாள் - ஒருநாளில், விதுரனுக்கு—, வாரா விருந்தான் - வருதற்குஅரிய விருந்தினனாய் வந்தவனு மாகிய திருமாலினது, வரை - திருமலையாம்; (எ - று.)

ஊடுதலாவது - ஆண்பாலோடு பெண்பால் அன்புவகையாற்சிறிதுமாறுபடுதல்; பிரணயகலகம். இங்ஙனம் வலியக்கொள்ளுங் கோபம் இன்பத்தை மிகுவிப்பதுஎன்னுங் கோட்பாட்டை "ஊடுதல் காமத்திற்கு இன்பம்" என்ற திருக்குறளினாலும் அறிக. பிடி - யானையின் பெண்மைப்பெயர்; இதன் ஆண்மைப்பெயர் - களிறு. களிற்றினிடத்து ஏதோ ஒரு குற்றத்தைக் கற்பித்து அதுகாரணமாக அதனிடம் வெறுப்புக்காட்டிப் பிடி ஊடிவிலகிநிற்குமளவில், சிங்கராசியைக் கண்டதனால் அஞ்சி அவ்வச்சமிகுதியால் ஊடலை மறந்து தானே ஓடி ஆண்யானையைப் பற்றுக்கோடாகக் கொண்டு அதனை வலியத்தழுவிய தென்க. ஸிந்தூரம், ஸிம்ஹம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. சிங்கராசி, ஆவணிமாதத்துக்கு உரியது. 'எண் சிந்தைக்கு ஓரா இருந்தான்' என்றதனால், எம்பெருமானது சொரூபம் எவர்க்கும்மனத்தினாற் சிந்தித்து முற்றும் அறியமுடியாத தென விளங்கும். விதுரன் - திருதராட்டிரனுக்கும் பாண்டுவுக்கும் தம்பிமுறையாகிறவன்; விசித்திரவீரி

யன் மனைவியாகிய அம்பிகையால் ஏவியனுப்பப்பட்ட தாதியினிடம் வியாச முனிவனருளாற் பிறந்தவன்; பாண்டவர்க்கும் துரியோதனாதியர்க்கும் சிற்றப்பன். கண்ணன் பாண்டவர்க்காகத் துரியோதனாதியரிடம் தூதுபேசுபவனாய் அத்தினபுரிக்குப்போனபோது அங்குவேறுயாருடையவீட்டிற்கும்செல்லாமல் ஞானபக்திகளிற்சிறந்த விதுரனுடைய திருமாளிகையினுட் புக்கு, அங்கு அவனால் மிக்கஅன்புடன் அமைக்கப்பட்ட விருந்துணவை அமுது செய்தருளினனென்பது பிரசித்தம். விருந்து - புதுமை; விருந்தான் - புதியனாய்ச் செல்பவன். வாரா-ஈறுகெட்டஎதிர்மறைப் பெயரெச்சம். (கரு)

ககூ. மாதுமடக் கன்னிகழை வந்தணுகிக் கம்பத்தின்
மீதுநடிப் பாளொக்கும் வேங்கடமே—யூதுகுழற்
பாலன்பா லாக்குவித்தான் பஞ்சவர்க்கா நூற்றுவரைக்
காலன்பா லாக்குவித்தான் காப்பு.

(இ - ள்.) மாது மடம் கன்னி - அழகையும் மடமையையு முடைய இளம்பெண்வடிவமான கந்யாராசி, கழை வந்து அணுக - மூங்கிலுக்குநேராக வந்து பொருந்தும்போது, கம்பத்தின் மீது நடிப்பாள் ஒக்கும் - (நாட்டிய) கழைக்கோலின்மேல் ஏறிக்கூத்தாடும்மங்கையை ஒத்தற்கு இடமான, வேங்கடமே—, —ஊது குழற்பால் அன்பால் - (தான்) ஊதுகின்ற வேய்ங்குழலின் இனிய இசையினிடத்து அன்பினால், ஆ குவித்தான் - பசுக்கள் தன்னைச்சுற்றிவந்து ஒருங்குதிரளும்படி செய்தவனும், பஞ்சவர்க்கு ஆ - பஞ்சபாண்டவர்களுக்காக, நூற்றுவரை காலன்பால் ஆக்குவித்தான் - துரியோதனாதியர் நூறு பேரையும் யமனிடத்திற் சேர்ப்பித்தவனு மாகிய திருமால், காப்பு - (உயிர்களைப்) பாதுகாக்கும் இடம்; (எ - று.)

அம்மலையிலுள்ள மூங்கிலுக்குமேல்பெண்வடிவமான கந்யாராசி வரும்போது கழைக்கூத்திபோலுமெனக. மூங்கிலின்உயர்ச்சியை இங்ஙனங்கூறியதனால், மலையின்வளத்தை எடுத்துக்காட்டியவாறு. கந்யாஎன்றவடசொல், கன்னியென விகாரப்பட்டது. கந்யாராசி, புரட்டாசிமாதத்துக்கு உரியது. கண்ணன் குழலூதுகையில் அதன்இசையின்இனிமைக்குமகிழ்ந்து பசுக்கள் யாவும் அப்பெருமானைச் சூழ வந்து திரளும். குழற்பால், பால் - ஏழனுருபு. ஊது குழல் பாலன் பால் ஆ குவித்தான் என்று பிரித்து, குழலூதுகின்ற இடைச்சிறுவனானவனும் பால்கறக்கும் பசுக்களை ஒருங்குதிரளச்செய்தவனும் என்று உரைப்பாரும் உளர். பஞ்சவர் - ஐவர்; பஞ்ச என்னும் வடமொழியெண்ணுப்பெயரினடியாப் பிறந்த பெயர். பஞ்சவர், நூற்றுவர் - தொகைக்குறிப்பு. காலன்-பிராணிகளின் ஆயுட்காலத்தைவரையறுப்பவன், கண்ணபிரான், தனக்கு உயிர்நிகரான பாண்டவர்களைப் பாதுகாத்தற் பொருட்டு, அவர்கட்கு பங்காளிகளும் பகையாளிகளு மான துரியோதனாதியரனைவரும் மகாபாரதயுத்தத்தில் வேரோடுஅழியும்படி பலவகையுதவி புரிந்தமை, பிரசித்தம்; காலன்பா லாக்குவித்தான் - வீமனைக்கொண்டு கொல்வித்தான். ஆக்குவித்தான் என்பதில், கு வி என்ற இரண்டும் - இணைந்துவந்த பிறவினைவிகுதிகள். (ககூ)

உ௦. மன்னு குடிக்குறவர் வானூர் துலாத்திடையே
மின்னு மணிநிறுக்கும் வேங்கடமே—யென்னு
ளரவிந்தப் போதகத்தா னன்பா லழைத்த
கரவிந்தப் போதகத்தாள் காப்பு.

(இ - ள்.) மன்னு குடி குறவர் - (குறிஞ்சிநிலத்து) நிலைபெற்ற குடிகளாகிய குறவர்கள், வான் ஊர் துலாத்து இடையே - வானத்திற்செல்லுகிற (நிறைகோல்வடிவமான) துலாராசியினிடத்திலே, மின்னும் மணி நிறுக்கும் - பிரகாசிக்கிற இரத்தினங்களை வைத்துநிறுத்து எடையறிதற்கு இடமான, வேங்கடமே—,—என் உள் அரவிந்தம் போது அகத்தான் - அடியேனுடைய மனமாகிய தாமரைமலரினிடத்தில் எழுந்தருளியிருப்பவனும், அன்பால் அழைத்த - பக்திகொண்டு (ஆதிமூலமே யென்று) கூப்பிட்ட, கரம் விந்தம் போதகத்தான் - துதிக்கையையுடைய விந்தியமலையைப் போன்ற யானையையுடையவனுமாகிய திருமால், காப்பு - (உயிர்களைப்) பாதுகாக்கும் இடம்; (எ - று.)

துலாத்து, அத்து - சாரியை. துலாராசி, ஐப்பசிமாதத்துக்கு உரியது. மணிகள், மலையி லுள்ளவை. "மலர்மிசை யேகினான்" என்றபடி எம்பெருமான் அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தில் அவர்நினைந்தவடிவோடு விரைந்து சென்று வீற்றிருத்தலால், 'என்உள் அரவிந்தப்போதகத்தான்' என்றார். 'அன்பால் அழைத்த போதகத்தான்' என்பது, வடமொழிநடை; கஜேந்திராழ்வானால் அன்போடு அழைக்கப்பட்டவ னென்பது கருத்து. விந்தியகிரி முன்ஒருகால் மகாமேருகிரியோடு மாறுபட்டு மிகப்பெரியதாய் ஓங்கிவளர்ந்தமைபற்றி, அதனை, யானையின் பருமைக்கும் வலிமைக்கும் உவமையெடுத்துக்கூறினார். அரவிந்தம், போதகம் - வடசொற்கள். விந்தம் - வடசொல்திரிபு. பத்துப்பிராயத்துயானைக்குட்டியைப் போதக மென்பர்; அச்சிறப்புப்பெயர் - இங்குப் பொதுப்பட யானையென்ற மாத்திரமாய் நின்றது. (உ௦)

உக. கொல்லைக் குறவர் குளிர்மதிமா னைக்ககன
வில்லைக் குனித்தெய்யும் வேங்கடமே—கல்லை
யரிவைவடி வாக்கினா னன்னமாய் வேத
விரிவைவடி வாக்கினான் வெற்பு.

(இ - ள்.) கொல்லை - தினைக்கொல்லையைக் காக்கின்ற, குறவர் - குறவர்கள், குளிர் மதி மானை-குளிர்ந்தசந்திரனிடத்து உள்ள (களங்கத்தோற்றமாகிய)மான்வடிவை, (தினைப்பயிரை மேயவருகின்ற மானென்று எண்ணி), ககனம் வில்லை குனித்து எய்யும் - வானத்திற்காணப்படுகிற வில்வடிவமான தநுராசியைக் கைவில்லாகக்கொண்டு வளைத்து அதுகொண்டு அம்புஎய்ய முயலுதற்கு இடமான, வேங்கடமே—,—கல்லை அரிவை வடிவு ஆக்கினான் - (சாபத்தால்) கல்வடிவமாய்க்கிடந்த அகலிகையைப்பெண்வடிவமாகச் செய்தவனும், அன்னம் ஆய் - அன்னப்பறவையின்வடிவங்கொண்டு, வேதம்

விரிவை வடி - மிகப்பரந்ததான வேதத்தை (ப் பிரமனுக்கு)த் தெளிவாகக் கூறியருளிய, வாக்கினன் - திருவாக்கையுடையவனுமாகிய திருமாலினது, வெற்பு - திருமலை; (எ - று.)

சந்திரனிடத்துஉள்ள களங்கத்தை மானென்று கூறுவார் கொள்கை, இங்குக் கொள்ளப்பட்டது. 'ககனவில்லைக் குனித்து எய்யும்' என்பதற்கு-வானத்திற்காணப்படுகிற இந்திரதனுசை வளைத்து அம்பெய்ய முயலும் என்று உரைப்பாரும் உளர்; முன்னும் பின்னும் உள்ள செய்யுள்களிலெல்லாம் பன்னிரண்டுமாசங்களுக்கு உரிய இராசிகளையே கூறிவருகிற சந்தர்பத்தை நோக்கின்,அங்ஙனம்உரைத்தல் இவ்விடத்துக்குப் பொருந்தாமை தெற்றென விளங்கும். தநுரிராசி, மார்கழிமாதத்துக்கு உரியது. அரிவை என்பது - இங்குப் பருவப்பெயராகாமல் பெண்என்ற மாத்திரமாய் நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபதுமுதல் இருபத்தைந்தளவும். பாலையும் நீரையுங் கலந்துவைத்தால் நீரைப்பிரித்துப் பாலையே உட்கொள்ளும் இயல்பின தான அன்னப்பறவை ஸாராஸாரவிவேக முடைமைக்கு உவமைகூறப்படுமாதலின், அத்தன்மையதான அன்னப்பறவையின் வடிவைக் கொண்டு அஸாரத்தைக் கழித்து ஸாரத்தை யுணர்த்தியருளினனென்பது, 'வடி'என்ற சொல்லின் ஆற்றலால் விளங்கும்; வடித்தல்-தேர்ந்தெடுத்துக்கொடுத்தல். வாக் - வடசொல்; சொல்என்னும் பொருளது: வாய்க்கு இலக்கணை. வேதம் அநந்தமாதலால், 'வேதவிரிவு' எனப்பட்டது.

உஉ. தேனேறித் தேன்வைக்குந் திண்கழைமேல் விண்மகர
மீனேறி வேள்கொடியாம் வேங்கடமே—வானேறித்
தீமுகனா கத்திருப்பார் சேவடிக்கா ளானவரைக்
காமுகனா கத்திருப்பார் காப்பு.

(இ - ள்.) தேன் - வண்டுகள், ஏறி - உயரப்பறந்து சென்று சேர்ந்து, தேன் வைக்கும் - தேனைச் சேர்த்துவைக்கப்பெற்ற, திண் கழைமேல்-வலிய மூங்கிலின்மேல், விண் மகரம் மீன் ஏறி - வானத்திற்செல்லுகிற சுறாமீன் வடிவமான மகராராசி வந்துதங்குகையில், வேள் கொடி ஆம் - மன்மதனது துவசம்போலத் தோன்றப்பெற்ற, வேங்கடமே——,——வான்-பரமபதத்தில், தீ முகன் நாகத்து - விஷாக்கினியைச் சொரியும் முகங்களையுடைய ஆதிசேஷன்மீது, ஏறி இருப்பார் - ஏறிவீற்றிருப்பவரும், சே அடிக்கு ஆள் ஆனவரை-(தமது)சிவந்ததிருவடிகளுக்கு அடிமைப்பட்டவர்களை, காமுகன் ஆக திருப்பார் - காமமுடையவனாகச் செல்லவிடாதவரும் ஆகிய திருமால், காப்பு - (உயிர்களைப்) பாதுகாக்கும் இடம்; (எ - று.)

மன்மதன் சுறாமீன்வடிவத்தைக் கொண்ட கொடியையுடையவனென அறிக; அவனுக்கு வடமொழியில் 'மகரத்வஜன்' என்றும், தென்மொழியில் 'சுறவக்கொடியோன்' என்றும் பெயர்கள் உண்டு. 'தேனேறித் தேன் வைக்குந் திண்கழை' என்று அம்மலையின்மூங்கிலை அடைமொழிகொடுத்துச் சிறப்பித்ததனால், அம்மலையின்வளத்தைவிளக்கியவாறும், வானத்தையளாவி

மிகஓங்கிவளர்ந்துள்ள மூங்கிலுக்கு நேராக வருகிற மகரராசி, மன்மதனது துவசதண்டத்தின்மேற் காணப்படுகின்ற சுறுமீன்வடிவம் போலுமெனக். மகரராசி, தைமாதத்துக்கு உரியது. வேள் - (ஆண்பாற்கும் பெண்பாற்கும்) விருப்பத்தை விளைப்பவன்; காமதேவன்: அன்றி,விரும்பப்படும் மிக்க அழகையுடையவன். வேள் என்ற வினைப்பகுதி-விரும்புதலென்று பொருள் தரும்; அது இங்குப் பெயர்த்தன்மைப்பட்டது.

வான் நாகத்து ஏறியிருப்பாரென இயையும். வான்ஏறி நாகத்துஇருப்பார் என்றே இயைத்துப் பொருள்கொண்டால், பரமபதத்திலிருப்பு வந்தேறி யென்னும்படி யுள்ளது திருவேங்கடத்தில் நிலைத்திருக்கின்ற இருப்பு என்று கருத்து விளங்கும். 'தீமுகன்' என்றது, நாகத்துக்கு இயற்கை யடைமொழி. முகன் - முகம் என்பதன் போலி. "சென்றாற் குடையாம் இருந்தாற் சிங்காசனமாம்,......திருமாற்கு அரவு" என்றபடி திருவனந்தாழ்வான் எம்பெருமான் வீற்றிருத்தற்கு இடமாகுமாறு திவ்வியசிங்காசனமாய்அமைதலால், 'நாகத்துஇருப்பார்'என்றார். தமக்குஅடிமைப்பட்டவர்களைப் பின்பு காமம் முதலிய தீநெறியில் மனஞ்செலுத்தவிடாதபடி குறிக்கொண்டு தம்வழிப்படுத்தி யாளுபவ ரென்பது, 'சேவடிக்குஆளானவரைக் காமுகனாகத் திருப்பார்' என்றதன் கருத்து. 'ஆளானவரை' என்ற பன்மைக்கு ஏற்ப, 'காமுகராக' என்னாது 'காமுகனாக' எனஒருமையாகக்கூறியது, பன்மையொருமைமயக்கம்; தனித்தனி காமுகனாக வெனக. இது, திரிபுநயத்தை நோக்கியது. 'ஆளானவெலை' என்றும் பாடம். காமுகன்-வடசொல்.

உங. ஒண்கொம்பிற் றேனிரு ளூர்பிறைக்கோட் டாலுடைந்து
விண்கும்ப வாய்நிறைக்கும் வேங்கடமே—வண்கும்ப
கம்பத்தா னைக்கடுத்தார் காரரக்கர் போர்மாளக்
கம்பத்தா னைக்கடுத்தார் காப்பு.

(இ - ள்.) ஒள் - ஓங்கிவிளங்குகின்ற, கொம்பில் — மரக்கொம்புகளிற் கட்டப்பட்டுள்ள, தேன் இருல் - தேன்கூண்டு, ஊர் பிறை கோட்டால் உடைந்து - (வானத்திற்) செல்லுகிற பிறைச்சந்திரனதுவளைந்தவடிவமாகிய கொம்பு படுதலால் உடைந்து, விண் கும்பம் வாய் நிறைக்கும் - வானத்திலுள்ள குடவடிவமான கும்பராசியின் வாயளவும் (தேனைச் சொரிந்து) நிறைத்தற்கு இடமான, வேங்கடமே——,——வள் கும்பம் - (இயல்பிற்) கொழுமையுள்ள மத்தகத்தையுடையதும், கம்பத்து - (முதலைவௌவியதனாலாகிய) நடுக்கத்தையுடையதுமாகிய, ஆனைக்கு - கஜேந்திராழ்வானுக்கு, அடுத்தார் - அருகில் ஓடிவந்து அபயமளித்தவரும், கார் அரக்கர் போர் மாள - கருநிறமுடைய இராக்கதர்கள் போரில் இறக்க, கம் பத்தானை கடுத்தார் - பத்துத்தலைகளையுடையவனை இராவணனைக் கோபித்து அழித்தவருமாகிய திருமால், காப்பு - (உயிர்களைப்)பாதுகாக்கும் இடம்; (எ - று.)

பிறைக்கோட்டால் என்பதற்கு - வளைந்தவடிவமுடைய பிறையினது நுனி படுதலால் என்றுஉரைப்பினும் அமையும். கும்பராசி, மாசிமாதத்துக்கு

உரியது. திருவேங்கடமலையிலுள்ள கொம்பு கும்பராசிக்கு மேலுள்ள தென்றும், தன்மீது பிறைச்சந்திரன் படப்பெறுவ தென்றும் கூறியதனால், அதனது உயர்வை விளக்கி மலைவளத்தை வருணித்தபடியாம். கும்பம் - குடம்; இரண்டுகுடம் கவிழ்த்தாற்போன்ற யானைத்தலையிலுறுப்புக்குப் பெயராக வழங்கும். அடுத்தல் - சமீபித்தல். ரக்ஷஸ் என்ற வடசொல், அரக்கரெனச் சிதைந்தது. கம் - தலை; வடசொல். (உ௩)

உ௪. கூனலிள வெண்குருகு கோனேரி யில்விசும்பூர்
மீனநிழ லைக்கொத்தும் வேங்கடமே—கானகத்துப்
பொன்னா ருழையெய்தார் பூங்கழலே தஞ்சமெனா
வுன்னா ருழையெய்தா ரூர்.

(இ - ள்.) கூனல் இள வெள் குருகு - (கழுத்து)வளைவையுடைய இளமையான வெண்ணிறமுள்ள குருகென்னும் நீர்ப்பறவை, கோனேரியில் - கோனேரிதீர்த்தத்தில், விசும்புஊர்மீனம் நிழலை-வானத்திற் செல்லுகின்ற மீன்வடிவமான மீனராசியினது நிழல் தெரிய அதனை, கொத்தும் - (அந்நீரிற்செல்லுகிற உண்மையான மீனென்றே கருதி உண்ணும்பொருட்டுமூக்கினாற்) குத்துதற்கு இடமான, வேங்கடமே——,——கான் அகத்து-தண்டகாரணியத்திலே, பொன் ஆர் உழை - பொன்னிறமாய்ப் பொருந்திய (மாரீசனாகிய) மாயமானை, எய்தார் - அம்புஎய்து வீழ்த்தியவரும், பூ கழலே தஞ்சம் என உன்னாருழை எய்தார் - தமது திருவடித்தாமரை மலர்களையே சரணமென்று நினையாதவரிடத்திற் சென்றுசேராதவரு மாகிய திருமாலினது, ஊர் - திருப்பதி ; (எ - று.)

கூன் நல் எனப்பிரித்து, வளைவுள்ள அழகிய என்றும் பொருளுரைக்கலாம். குருகு - நாரை, கொக்கு. கோன் ஏரி - வடமொழியில், ஸ்வாமிபுஷ்கரிணி யென்று வழங்கும். திருவேங்கடமலையின்மேல் திருக்கோயிலுக்கு அருகிலுள்ள பிரதானமான திவ்வியதீர்த்தம் இது. மீனராசி, பங்குனி மாதத்துக்கு உரியது. கொத்துதலெனினும், குத்துதலெனினும் ஒக்கும். மீனராசியின் நிழலை மீனென்று மயங்கியதாகக் கூறியது, மயக்கவணி. சீதையைக் கவர்ந்து செல்லக் கருதிய இராவணனது தூண்டுதலால் அவனுக்கு மாமன்முறையுள்ள மாரீசனென்ற ராக்ஷசன் மாயையாற் பொன்மானுருவங்கொண்டு தண்டகாரணியத்திற் பஞ்சவடியிலேசீதையினெதிரிற் சென்று உலாவுகையில், அப்பிராட்டியின் வேண்டுகோளின்படி அவனைப் பிடித்தற்குத்தொடர்ந்துசென்றஇராமபிரான், நெடுந்தூரம்ஓட்டங்காட்டிய அம்மானை மாயமானென்று அறிந்தவளவிலே அதன்மேல் அம்புஎய்துவீழ்த்தின னென்பது பிரசித்தம். ஆருழை - வினைத்தொகை; பண்புத்தொகையாகக் கொண்டால், (பெறுதற்கு) அரிய மானென்று பொருள்படும். எய்தார் என்பது - மூன்றாமடியில் எய் என்னும் பகுதியின்மேற் பிறந்த உடன்பாட்டு இறந்தகாலவினையாலணையும்பெயரும்,நான்காமடியில்எய்துஎன்னும் பகுதியின்மேற் பிறந்த எதிர்மறை வினையாலணையும் பெயருமாம். கழலே தஞ்சமென வுன்னாருழை யெய்தார்-தமக்கு அடிமைபூணாதவரிடத்தில் அன்

போடு சென்றுசேராதவர்; எனவே, கழலேதஞ்சமென்று உன்னுவாரிடத்து எய்துபவ ரென்பது அருத்தாபத்தியால் விளங்கும். (உச)

உரு. மண்மூலந் தாவென்று மந்திகடு வற்குரைப்ப
விண்மூலங் கேட்டேங்கும் வேங்கடமே—யொண்மூல
வேதத் திருக்குழையார் வெய்யோ னிரண்டனைய
சீதத் திருக்குழையார் சேர்வு.

(இ - ள்.) மண் மூலம் தா என்று மந்தி கடுவற்கு உரைப்ப - 'மண்ணிலிருக்கிற கிழங்கை (உண்ணுதற்காகப் பெயர்த்தெடுத்துக்) கொடு' என்னும் பொருளில் 'மூலம்தா' என்றுபெண்குரங்குஆண்குரங்கைநோக்கிச்சொல்ல, விண் மூலம் - வானத்திலுள்ள மூலநட்சத்திரம், கேட்டு - (அச்சொல்லைக்) கேட்டு, ஏங்கும்-(தன்னைப்பிடித்துக்கொடுக்கச் சொன்னதாகக் கருதி) அஞ்சிக் கலங்குதற்கு இடமான, வேங்கடமே——,——ஒள் - (எல்லாப்பிரமாணங்களிலும்) சிறந்தபிரமாணமாக வுள்ளவையும், மூலம் - (எல்லாநூல்களுக்கும்) முதல்நூலாகவுள்ளவையுமான, வேதத்து-வேதங்களின், இருக்கு - மந்திரங்களை, உழையார் - தமக்கு இடமாகக் கொண்டு அவற்றில் (பொருள் வடிவமாகப்) பொதிந்திருப்பவரும், வெய்யோன் இரண்டு அனைய- சூரியமண்டலம் இரண்டு உளவாயின் அவற்றைப் போன்ற [மிகவிளங்குகிற], சீதம் திரு குழையார் - குளிர்ந்த ஒளியுள்ள சிறந்த திவ்வியகுண்டலங்களை யணிந்தவருமான திருமால், சேர்வு - சேர்ந்து தங்குமிடம்; (எ - று.)

மந்தி 'மூலந்தா' என்று வேண்டியதனால், அதனிடத்து மிக்கஅன்பு கொண்ட கடுவன் தன்னைப்பிடித்து மந்தியின்கையிற் கொடுத்துவிடுமேயென்று மூலநக்ஷத்திரம் அஞ்சு மென்க. இவ்வர்ணனையில், அம்மலை வானத்து நட்சத்திரவீதிக்கு அருகாம்படி ஓங்கிய தென்பதனோடு, அம்மலைக்குரங்கு தேவகணமும்அஞ்சத்தக்க வலிமையுடையதென்பதும் விளங்கும். மண்மூலம் என்றவிடத்து 'வண்மூலம்' என்றும் பாடம் உண்டு; அது சிறக்கும்: செழிப்பான மூலமென்க. மந்தி - குரங்கின் பெண்மைப்பெயர். கடுவன்-அதன் ஆண்மைப்பெயர்: கடுமையுடையது. 'மூலம்' என்ற பெயர்கொண்டு சமத்காரங் கற்பிக்கப்பட்டது. இருக்கு - ருக் என்ற வடசொல்லின் விகாரம். 'வெய்யோனிரண்டனைய' என்றது, இல்பொருளுவமை. (உரு)

உசு. நாலவிட்ட பொன்னூச னன்னுதலா ருந்துதொறு
மேலவிட்டந் தொட்டிழியும் வேங்கடமே—யாலமிட்ட
பொற்புக் களங்கறுத்தார் போர்சரிய வாணன்றோள்
வெற்புக்க ளங்கறுத்தார் வீடு.

(இ - ள்.) நால விட்ட-தொங்கவிடப்பட்டுள்ள, பொன் ஊசல் - பொன்னினாலாகிய ஊஞ்சல், நல் நுதலார் உந்துதொறும் - அழகிய நெற்றியையுடைய மகளிர் வீசித்தள்ளியாட்டுந்தோறும், மேல் அவிட்டம் தொட்டு இழியும் - வானத்திலுள்ள அவிட்ட நக்ஷத்திரத்தின்மீது பட்டு இறங்குதற்கு இடமான, வேங்கடமே—,—ஆலம் இட்ட - விஷத்தை உட்கொண்ட,

பொற்பு களம் - பொலிவையுடைய கண்டம், கறுத்தார் - கருநிறமடைந்தவரான சிவபிரான், போர் சரிய - யுத்தத்திலே பின்னிட, வாணன் தோள் வெற்புக்கள் - பாணாசுரனுடைய தோள்களாகிய மலைகளை, அங்கு - அப்பொழுது [அல்லது அப்போர்க்களத்தில்], அறுத்தார் - துணித்தவரான திருமாலினது, வீடு - வசிக்குமிடம்; (எ - று.)—எதுகையமைதி நோக்கி, அவிட்டத்தைக் கூறினர்.

முன்னிரண்டடியில் திருவேங்கடத்தின் உயர்வும், பின்னிரண்டடியில் திருவேங்கடமுடையானது பரத்வமும் குறிக்கப்பட்டன. நுதல் - புருவமுமாம். ஹாலம், பாணன் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. பொற்பு - பொலிவையுணர்த்தும் உரிச்சொல். களம் - வடசொல். கருமை யென்ற பண்பினடியாகிய கருஎன்பது, கறு என விகாரப்பட்டு வினைத்தன்மையடையும். திருமாலின் கட்டளைப்படியே தேவர்கள் அசுரர்களைத் துணைக்கொண்டு திருப்பாற்கடல் கடைகையில் அதனினின்று எழுந்ததோர் அதிபயங்கரமான பெருவிஷத்தைக் கண்டமாத்திரத்தில் அதன் கொடுமையைப் பொறுக்கமாட்டாத தேவர்களின் வேண்டுகோளினாலும், திருமாலின் கட்டளையினாலும், அவ்விஷத்தைச் சிவபிரான் அமுதுசெய்து கண்டத்தில் நிறுத்தியதனால், அப்பெருமானது கண்டம் கருநிறமடைந்ததென அறிக.

உஎ. பானிறங்கொ டெங்கினிளம் பாளைவிரி யச்சுனையின்
மீனினங்கொக் கென்றொளிக்கும் வேங்கடமே—வானிமிர்ந்த
வெள்ளத்துக் கப்பாலான் மெய்ப்பரம யோகியர்த
முள்ளத்துக் கப்பாலா னூர்.

(இ - ள்.) பால் நிறம் கொள் - வெண்மைநிறத்தைக் கொண்ட, தெங்கின் இள பாளை - தென்னமரத்தினது இளமையான பாளை, விரிய-மலர, (அதுகண்டு), சுனையின் மீன் இனம் - சுனைநீரிலுள்ள மீன்கூட்டங்கள், கொக்கு என்று- (அதனைக்) கொக்கென்று கருதி, ஒளிக்கும் - அஞ்சி மறைதற்கு இடமான, வேங்கடமே—,—வான் நிமிர்ந்த- வானத்தையுங் கடந்து பொங்கி மேலெழுந்த, வெள்ளத்து - பிரளயப்பெருங்கடல்வெள்ளத்திலே, கப்பு ஆலான் - கிளைகளையுடையதோர் ஆலமரத்தினது இலையிற் பள்ளிகொண்டிருப்பவனும், மெய் பரம யோகியர்தம் உள்ளத்துக்கு அப்பாலான்- உண்மையான சிறந்த யோகப்பயிற்சியையுடைய மகான்களுடைய மனத்துக்கும் முழுவதும் எட்டாமல் கடந்துள்ளவனுமான திருமாலினது, ஊர்- திருப்பதி; (எ - று.)

முன்னிரண்டடி - மயக்கவணி. கொக்கு மீனைக்குத்தியுண்ணுந் தன்மையதாதலால், அதற்கு அஞ்சியொளித்தல், மீனுக்கு இயல்பு. சுனை-மலையிலுள்ள நீரூற்றுடைய குளம். எல்லாம் அழிந்துபோகின்ற யுகாந்தகாலத்தில் கடல் பொங்கி உலகங்களை மூடிக்கொள்ள, எங்கும் ஏகார்ணவமான அந்த மகாப்பிரளயசமுத்திரத்தில் ஓர் ஆலமரம் தோன்ற, ஸ்ரீமகாவிஷ்ணு சிறுகுழந்தை வடிவமாய ஆதிசேஷாம்சமான அம்மரத்தின் இலையொன்றன் மீது பள்ளிகொண்டு தனது மாயாசொரூபமான யோகநித்திரையைக்

கைக்கொண்டு திருக்கண்வளர்ந்தருளுகின்றனனென அறிக. கப்பு-ஆலமரத்துக்கு அடைமொழி. இச்சொல்லுக்கு-கவர் என்றும் பொருளுண்டு; அதாவது-கிளைபிரியுமிடம். மெய் என்ற அடைமொழி, யோகியரது பொய்யொழுக்க மின்மையை உணர்த்தும். மனமொழி மெய்களைக் கடந்தவனாதலால், 'மெய்ப்பரமயோகியர்த முள்ளத்துக்கு அப்பாலான்' என்றார். (உஎ)

உ௮. கொம்பணியுந் தேமாங் குயில்கருடன் போற்கூவ
வெம்பணிகள் புற்றடையும் வேங்கடமே—வம்பணியும்
விண்ணினைந்து காப்பார் மிசைவைத்தார் பத்தரைத்த
முண்ணினைந்து காப்பா ருவப்பு.

(இ - ள்.) கொம்பு அணியும் தே மா குயில் - கிளைகள் அழகியனவாகப் பெற்ற இனிய மாமரத்தின்மேல் இருக்கிற குயிலென்னும்பறவை, கருடன் போல் கூவ - (அத்தேமாமரத்தின் இனியதளிரை நிரம்பஉண்டதனாலாகிய கொழுமைவளத்தால் பக்ஷிராஜனான) கருடன்போலக் கூவி யொலிசெய்ய, (அதுகேட்டு), வெம் பணிகள் புற்று அடையும் - (கருடனுக்கு அஞ்சும் இயல்பினவான) கொடியபாம்புகள் அஞ்சிப் புற்றினுள்ளே நுழைதற்கு இடமான, வேங்கடமே——,——வம்பு அணியும் - வாசனையை மிகுதியாகக் கொண்ட, விண்ணின் ஐந்து கா-தேவலோகத்திலுள்ள பஞ்சதருக்களுள் ஒன்றை, பார் மிசை வைத்தார்-(சத்தியபாமைக்காக) நிலவுலகத்திற் கொணர்ந்துநாட்டியவரும், பத்தரை-தமது அடியார்களை, தம் உள் நினைந்து காப்பார்-தமது உள்ளத்தில் நினைத்துக் குறிக்கொண்டு பாதுகாப்பவருமாகிய திருமால்,உவப்பு-திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கும் இடம்; (எ - று.)

சிறியோரும் கொழுமைவாய்ந்தால் பெரியோர்போலக் கம்பீரமாகக் குரல் வாய்விடுதல், இயல்பு; அவ்வாறே பறவைகளிலொன்றான குயில் பறவைக்கரசனான கருடன்போலக் கூவ என்றார். திருமாலுக்கு வாகனமான கருடன் திருமலையிற் பயிலுந்தோறும் அதன் குரலைச் செவியுற்ற பழக்கத்தால் குயில் கருடன்போலக் கூவுமென்க. 'கொம்பணியுந்தேமா' என்ற அடைமொழி, குயிற்குக் கொழுமைவாய்ந்ததன் காரணத்தை விளக்கிற்று. தேமா - தேன்போல் இனிய காய்கனிகளையுடைய ஒருவகை மாமரம். தேன் + மா = தேமா; தேன்மொழி மெலிவர இறுதியழிந்தது. மாங்குயில் - மரப்பெயர் முன்னர் இனமெல்லெழுத்து வரப்பெற்றது. 'கருடன்பேர்கூவ' என்று பாடமோதி, தங்கட்கு அரசனான கருடனது திருநாமத்தை உச்சரிக்க என்று உரைப்பாருமுளர். ஐந்து தேவதருக்கள்-சந்தானம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம், அரிசந்தனம் என்பன. இவை, இந்திரனது நந்தனவனத்தி லுள்ளன. உவப்பு - தொழிலாகுபெயர். (உ௮)

உகூ. தெங்கிளநீர் வீழச் சிதறுமணி யைக்கரிகள்
வெங்கனலென் றஞ்சிப்போம் வேங்கடமே—பைங்கழையின்
மாண்டாரைப் பண்டழைத்தார் மாமறையோன் பாற்றோன்றி
மாண்டாரைப் பண்டழைத்தார் வாழ்வு.

(இ - ள்.) தெங்கு - தென்னமரத்தினது, இளநீர் - இளநீர்க்காய்கள், வீழ - விழுதலால், சிதறும் - சிதறுகின்ற, மணியை - இரத்தினங்களை, கரி கள் - யானைகள், வெம் கனல் என்று - வெவ்விய நெருப்பு என்று கருதி, அஞ்சி போம் - அச்சங்கொண்டு விலகிச் செல்லுதற்கு இடமான, வேங்கட மே——,——பைங் கழையின் - பசிய வேய்ங்குழலின், மாண் தாரை பண் - மாட்சிமைப்பட்ட ஒழுங்கான கீதம், தழைத்தார் - செழிக்க ஊதின வரும், மா மறையோன்பால் தோன்றி மாண்டாரை - சிறந்த ஓர் அந்தண னிடத்திற் பிறந்துஇறந்த மக்களை, பண்டு - முன்பு [கிருஷ்ணவதாரத்தில்], அழைத்தார் - மீட்டு அழைத்து வந்தவரு மாகிய திருமால், வாழ்வு - வாழுமிடம் ; (எ - று.)

இளநீர் - தெங்கின் இளங்காய். இரத்தினங்கள், அம்மலையி லுள்ள வை. முன்னும் "பொன்னு மணியும் பொலிந்தோங்கி" என்றார். சிவந்து மிகவிளங்குகிற ஒளியினால் இரத்தினங்கள் நெருப்பென்று கருதப்பட்டன; மயக்கவணி. தீக்கு அஞ்சி விலகுதல், யானையின் இயல்பு. கழை - மூங் கில்; வேய்ங்குழலுக்குக் கருவியாகுபெயர். பண் - இசை. அதற்கு மாட்சி- செவிக்கு இனியதாதல்; ஒழுங்கு - இலக்கணம் அமைதல். வாழ்வு - தொ ழிலாகுபெயர்.

"மீளாப்பதம்புக்க பாலரை நீயன்று மீட்டது" என்பர் திருவரங்கத்து மாலையிலும். "பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும், இறைப்பொழுதிற் கொணர்ந்துகொடுத் தொருப்படுத்த வுறைப்பனூர்" என்ற பெரியாழ்வார் திருமொழியையுங் காண்க. (௨௧)

௩௦. அங்கயலின் மேக மதிரப் பெரும்பாந்தள்
வெங்கயமென் றங்காக்கும் வேங்கடமே—பங்கயனோ
டம்புவ னங்கடந்தா ரம்புயத்து மங்கையொடு
வெம்புவ னங்கடந்தார் வெற்பு.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்து, அயலில் - அருகிலே, மேகம் - மேகங் கள், அதிர - இடிமுழங்க, பெரும் பாந்தள் - (அம்முழக்கத்தைக் கேட்ட) பெரிய மலைப்பாம்புகள், வெம் கயம் என்று-வெவ்விய மதயானைகள் பிளிறிக் கொண்டுவருகின்றன வென்றுகருதி, அங்காக்கும்-(அவற்றைவிழுங்குதற்கு) வாய்திறத்தற்கு இடமான, வேங்கடமே——,——பங்கயனோடு - பிரமனு டனே, அம் புவனங்கள் - அழகிய உலகங்களை, தந்தார் - (தமது திருநாபிக் கமலத்தினின்று) தோன்றுவித்தவரும், அம்புயத்து மங்கையொடு - தாமரை மலரில் வீற்றிருக்கிற என்றும்மாறாத இளமைப்பருவத்தையுடைய திருமக ளினது அவதாரமான சீதாதேவியுடனே, வெம்பு வனம் கடந்தார் - வெப் பங்கொண்ட காட்டைக் கடந்துசென்றவரும் ஆகிய திருமாலினது, வெ ற்பு - திருமலை ; (எ - று.)

இதுவும், மயக்கவணி. வேங்கடமலையிலுள்ள பெரிய மலைப்பாம்புகள் யானையை விழுங்குந்தரத்தன வென்று மலைவளத்தைவருணித்தவாறு.கஜம்,

பங்கஜம், அம்புஜம் என்ற வடசொற்களின் ஜகரம் யகரமாகத் திரிந்தது. பங்கஜம் - சேற்றில்முளைப்பது; அம்புஜம் - நீரில்தோன்றுவது; இரண்டும்-தாமரைக்குக் காரணவிடுகுறி; அதன் மலர்க்கு முதலாகுபெயர். மேகம், புவநம், வநம் - வடசொற்கள். திருமால் இராமபிரானாகத் திருவவதரித்த போது அதற்கு ஏற்பத் திருமகள் சீதையாகத் திருவவதரித்தனள். பித்ரு வாக்யபரிபாலநத்திற்காக இராமபிரான் ஜாநகியுடன் பதினான்குவருஷம் வனத்திற்சென்று வசிப்பவனாகித் தண்டகாரணியமுதலியவற்றைக் கடந்து இலங்கையளவும்போய் மீண்டமை பிரசித்தம். வெம்புஎன்ற அடைமொழி, வனத்தின் கொடுமையை விளக்கும். (௯௦)

௯௧. திங்களிறு மாந்துலவத் தீம்பாற் கவளமென்று
வெங்களிறு கைநீட்டும் வேங்கடமே—பொங்கமரி
லார்த்த வலம்புரியா ராட்பட்டார் செய்தபிழை
பார்த்த வலம்புரியார் பற்று.

(இ - ள்.) திங்கள் - சந்திரன், இறுமாந்து - செருக்கி [கலைநிறைதலாற் களித்து என்றபடி], உலவ - அருகிலே வானத்திற்சஞ்சரிக்க, (அதனை), தீம் பால்கவளம் என்று-இனியபாலினாற்கலந்த உணவுத்திரளை யென்றுஎண்ணி, வெம் களிறு கை நீட்டும் - வெவ்விய மதயானை (அதனை உண்ணும்பொருட் டுப் பற்றுதற்காகத்) துதிக்கையை நீட்டுதற்கு இடமான, வேங்கடமே——, ——பொங்கு அமரில் - உக்கிரமான போரிலே, ஆர்த்த - முழக்கின, வலம் புரியார் - (பாஞ்சஜந்யமென்னும்) வலம்புரிச்சங்கையுடையவரும், ஆள் பட் டார் செய்த பிழை பார்த்து அவலம் புரியார் - (தமக்கு) அடிமைப்பட்டவர் கள்செய்த குற்றத்தைக்கண்டு (அதற்குஏற்ப அவர்கட்குத்)துன்பத்தைச்செய் யாதவரு மாகிய திருமால், பற்று - விரும்பித் தமதுஇடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்குமிடம்; (எ - று.)

இதுவும்-மயக்கவணி. பாற்கவளத்தை விரும்புதல்,யானையின் இயல்பு. இறுமாந்து, இறுமா - பகுதி. கவளம் - கபளமென்ற வடசொல் திரிந்தது. மகாபாரதயுத்தத்திலும், மற்றும் பல யுத்தங்களிலும் கண்ணபிரான் தனது திவ்யசங்கத்தை வாயில்வைத்து ஊதி முழக்கி, அதன் ஒலிகேட்டஅளவிற் பகைவர் அஞ்சி நடுங்கி யழியும்படி செய்தமை, பிரசித்தம்; "நிருபர் மயங்கி வீழ்தர வெண்சங்கமு முழக்கி" என்ற வில்லிபுத்தூரார் பாரதத்தையும், "அரங்கர்சங்கோசையிலண்டமெல்லாம்,வெருட்கொண்டிடர்படமோகித்து வீழ்ந்தனர்" என்ற திருவரங்கத்துமாலையையுங் காண்க. தனக்குஅடிமைப் பட்டவர் பிழைசெய்தால் அதனைப் பொறுத்தலும், குற்றமாகப் பாராட் டாது விடுதலே யன்றிக் குணமாகக் கொள்ளுதலும், எம்பெருமானுக்குஇய ல்பு; "தன்னடியார்திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்குமேல், என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தா ரென்பர் போலும், மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்க்கண்வை த்த, என்னுடைய திருவரங்கர்க் கன்றியு மற்றொருவர்க் காளாவரே" என்ற பெரியாழ்வார் திருமொழிப் பாசுரம் காண்க. அப்பாசுரத்து வியாக்கியா

நத்தில் 'செய்தாரேல் நன்று செய்தார்' என்ற இடத்தில் 'நாம் உண்டு என்றும், ஒரு பிரமாணம் உண்டு என்றும், நாம்பொறுப்போம் என்றும் நினைத்துச் செய்தார்களாகில் அழகிதாகச் செய்தார்கள்; ஒரு தருமாதருமமும் பரலோகமும் இல்லை யென்று செய்தார்களன்றே; பிராமாதிகத்துக்கு நாம் உளோம் என்றன்றே செய்தது?' என்று எம்பெருமான் திருவுள்ளமாக உரைத்ததும் உணரத்தக்கது. பற்று - பற்றப்படும் இடம்; செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்ட பெயர். (௩௧)

௩௨. அம்புலியின் வாழ்மா னதிருங் குரற்பகுவாய்
வெம்புலியைக் கண்டேங்கும் வேங்கடமே—நம்புமெனை
வீங்கூத்தைக் கண்டிருப்பார் விண்ணோர் நரர்பிறந்து
சாங்கூத்தைக் கண்டிருப்பார் சார்பு.

(இ - ள்.) அம்புலியின் வாழ் மான - சந்திரனிடத்தில் வாழ்கின்ற மான், அதிரும் குரல் பகு வாய் வெம் புலியை கண்டு ஏங்கும்-கர்ச்சிக்கின்ற குரலையும் திறந்த வாயையு முடைய கொடிய புலியைப் பார்த்துப் பயப்படுதற்குக் காரணமான, வேங்கடமே——,——நம்பும் எனை - (தம்மையே சரணமென்று) நம்பிய என்னை, வீங்கு ஊத்தைக்கண் இருப்பார் - மிக்க அசுத்தமான பிறப்பிலே திரும்பிச் செல்ல விடாதவரும், விண்ணோர் நரர் பிறந்து சாம் கூத்தை கண்டு இருப்பார் - தேவர்களும் மனிதர்களும் பிறந்து இறக்கின்றமை யாகிய கூத்தைப் பார்த்துக்கொண்டிருப்பவரு மாகிய திருமால், சார்பு - சார்ந்துள்ள இடம்; (எ - று.)

சந்திரமண்டலத்திற் காணப்படுகின்ற களங்கவடிவத்தை மானென்பாரது கொள்கைபற்றி, இவ்வருணனை கற்பிக்கப்பட்டது. அருகிற் புலியைக் கண்டால் அஞ்சுதல் மானின் இயல்பாதலின், இங்ஙனங் கூறினர். இதில், மலையினுயர்வு விளங்கும். கொடியஜந்துக்கள் அகப்பட்ட பிராணிகளையெல்லாம் வௌவித்தின்னும்பொருட்டு எப்பொழுதும் வாய்திறந்திருத்தல் இயல்பாதலின், 'பகுவாய்' என்ற அடைமொழி புலிக்குக் கொடுக்கப்பட்டது. தமக்கு அடிமைப்பட்ட என்னை மறுபடி பிறப்பெடுக்கவேண்டாதபடி கருமமொழித்து முத்தியிற் சேர்த்துக்கொள்வர் கருணாநிதியான எம்பெருமானென்ற துணிவு தமக்கு இருத்தல்பற்றி, 'நம்புமெனை வீங்கூத்தைக்கண் திருப்பார்' என்றார். எனை - என்னை; தொகுத்தல். ஊத்தைக்கண், கண் - ஏழனுருபு. "உலகம் யாவையுந் தாமுள வாக்கலும், நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா, அலகிலா விளையாட்டுடையா ரவர், தலைவ ரன்னவர்க்கே சரணங்களே" என்றபடி உயிர்களைப் படைத்தலும் காத்தலும் அழித்தலும் எம்பெருமானுக்குத் திருவிளையாட்டாதலால், 'விண்ணோர் நரர் பிறந்து சாங்கூத்தைக் கண்டிருப்பார்' என்றார். கூத்தாடிகள் அரங்கில் வெளிப்பட்டுத் தம்தமது வேடத்திற்கு ஏற்பச் சிறிதுபொழுது ஆடியொழிதல் போல,பிராணிகள் உலகில் பிறப்பெடுத்துப் புடைபெயர்ந்து அழியுமென்க. நரர் - வடசொல். இருப்பார் - உவந்திருப்பவர்; தாம் பிறப்பு இறப்பு இன்றி என்றும் ஒருபடிப்பட இருப்பவர்; பொழுதுபோக்காகக் கண்டுகொ

ண்டிருப்பவர். திருப்பார் - எதிர்மறை; இருப்பார் - உடன்பாடு. மனிதராகப்பிறந்து செய்த நல்வினையால் மறுமையில் தேவராகத்தோன்றினும் அவர்க்கும் அந்நல்வினைமுடிவில் அத்தேவவடிவம் நீங்க மறுபிறப்பு நேர்தல் இயல்பு; அதுவே இங்குச் சாதலாகக் குறிக்கப்பட்டது. பகுவாய் - வினைத்தொகை; பகக பகுகிற பகும் வாய் என விரியும். (௩௨)

௩௩. கண்ணால் வெடித்த கழைமுத்தங் கார்துளைத்து
விண்ணாலி யோடுதிரும் வேங்கடமே—யெண்ணார்
கலங்கவரு மஞ்சனையார் கான்முளையை யூர்ந்தார்
சலங்கவரு மஞ்சனையார் சார்பு.

(இ - ள்.) கண்ணால் - கணுக்களிலே, வெடித்த—, கழை - மூங்கில்களினின்று வெளிச்சிதறிய, முத்தம் - முத்துக்கள், கார் துளைத்து - மேகத்தைத் தொளைசெய்து, விண் ஆலியோடு உதிரும் - அந்தமேகத்தினின்று வெளிப்படுகிற மழைநீர்க்கட்டியுடனே கீழ்ச்சிந்துதற்கு இடமான, வேங்கடமே—,—எண்ணார் கலங்க வரும் - பகைவர்கள் உறுதிநிலைகலங்கும்படி செல்லுகின்ற, அஞ்சனையார் கான்முளையை - அஞ்சனாதேவியினது புத்திரனை அநுமானை, ஊர்ந்தார் - வாகனமாகக்கொண்டு ஏறிநடத்தியவரும், சலம் கவரும் மஞ்சு அனையார் - நீரைநிரம்பமொண்டுகொண்ட காளமேகத்தைப் போன்றவருமாகிய திருமால், சார்பு - சார்ந்துள்ள இடம்; (எ - று.)

சிறந்தசாதிமூங்கில் முற்றினபொழுது அதன்கணுக்கள் வெடிக்க அவற்றினின்று முத்துப் பிறக்குமென்றல், கவிமரபு. அங்ஙனம் திருவேங்கடமலையின்மீது உள்ள மூங்கிலினின்று சிதறிய முத்து அருகிலுள்ள மேகத்தின்மீது தெறித்துஅதனைத் தொளைபடுத்தி அத்துளையின்வழியாக அம்மேகத்தினின்று விழும் ஆலாங்கட்டியுடனே தானும் கீழ்விழும் என அம்மலையின் உயர்வை வருணித்தவாறு. கண்ணால் என்பதில்'ஆல்' என்னும் மூன்றனுருபு ஏழனுருபின்பொருளில் வந்தது, உருபுமயக்கம். கேசரியென்னும் வாநரவீரனதுமனைவியான அஞ்சனையென்பவளிடத்தில் வாயுதேவனால் உதித்தவன் அநுமான்; ஆதலால், அவனுக்கு, ஆஞ்சநேயன் என்று ஒருபெயர் வழங்கும். 'எண்ணார்கலங்கவரும்' என்ற அடைமொழி, அந்த அநுமானுடைய பலபராக்கிரமங்களின் தோற்றத்தை விளக்கும். எண்ணார் - ஒருபொருளாகமதியாதவர்; எதிர்மறை வினையாலணையும்பெயர். இங்கு 'எண்ணார்' என்றது, இராக்கதர்களை. அஞ்சனையார் - உயர்வுப்பன்மை. கால் முளை - சந்ததியில் தோன்றியவன்; பிள்ளைக்குக் காரணக்குறி. இராமபிரான் அநுமானை வாகனமாகக்கொண்டு அவன்மேல் ஏறிப் போர்க்குச் சென்றமை, பிரசித்தம். நீர்கொண்டமேகம் - எம்பெருமானது திருமேனிக்கு, நிறத்திலும் அழகிலும் குளிர்ந்த தோற்றத்திலும் உவமம்; கைம்மாறுகருதாது கருணைமழைபொழிந்து உதவுங் குணத்தில் உவமமென்னவுமாம். (௩௩)

௩௪. செல்லுக்கு மேற்செல்லுந் திண்ணியவேய் வாசவனார்
வில்லுக்கு வாளியாம் வேங்கடமே—யெல்லுக்கு
ளந்தகா ரம்படைத்தா ராரழல்வா யம்பினால்
வெந்தகா ரம்படைத்தார் வெற்பு.

(இ - ள்.) செல்லுக்கு மேல் செல்லும் - மேகத்திற்குமேலாக வளர்ந்து செல்லுகின்ற, திண்ணிய வேய் - வலிமையையுடைய மூங்கில், வாசவனார் வில்லுக்கு வாளி ஆம் - (வானத்தில்தோன்றுகிற) இந்திரதனுசுக்கு அம்பு போன்றிருக்கப்பெற்ற, வேங்கடமே—,—எல்லுக்குள் - பகற்பொழுதினுள்ளே, அந்தகாரம் படைத்தார் - இருளை உண்டாக்கினவரும், ஆர் அழல் வாய் அம்பினால் - நிறைந்த அக்கினியை வாயிலுடைய அஸ்திரத்தினால் [ஆக்நேயாஸ்திரத்தினால்], வெந்த - தவிப்படைந்த, கார் அம்பு - கருநிறமான கடலை, அடைத்தார் - அணைகட்டி அணைத்தவருமான திருமாலினது, வெற்பு - திருமலை ; (எ - று.)

திருவேங்கடமலையின்மீது மேகமண்டலத்தையளாவி ஓங்கிவளர்ந்துள்ள மூங்கில், வானத்தில்தோன்றும் இந்திரவில்லில் தொடுத்தற்கு அமைந்த அம்புபோலு மென்க ; தற்குறிப்பேற்ற உவமையணி. செல் - (வானத்திற்) செல்வது என்று பொருள்படுங் காரணக்குறி. திண்ணிய - திண்மையென்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். வாசவனார் - உயர்வுப்பன்மை. செல்லுக்கு என்பதில் நான்கனுருபு ஐந்தனுருபிற்குரிய எல்லைப்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். வில்லுக்கு என்பதில், நான்கனுருபு - தகுதிப்பொருளது. அந்தகாரம் - வடசொல். அம்பு என்ற சொல் இரண்டனுள், பிந்தினது வடமொழி. அம்பு - நீர்; கடலுக்கு இலக்கணை. ஆர்அழல் - தணித்தற்குஅரிய நெருப்புமாம் ; அருமை கருமை என்ற பண்புப்பெயர்கள், ஆர் கார் என விகாரப்படும். வாய் - நுனி. இனி, அழல்வாயம்பு - நெருப்புவாய்ந்த அம்பு எனினுமாம் ; வாயம்பு - வினைத்தொகை. (௩௪)

௩௫. பொன்கமழுங் கற்பகத்தின் பூங்கா வணத்துக்கு
மென்கமுகங் காலாகும் வேங்கடமே—நன்கமரு
மூரத் திகிரியா ரூதுந் திகிரியார்
வீரத் திகிரியார் வெற்பு.

(இ - ள்.) மெல் கமுகு - காட்சிக்கு இனிய பாக்குமரங்கள், பொன் கமழும் கற்பகத்தின் பூ காவணத்துக்கு - பொன்மயமானதும் வாசனைவீசுவது மான மேலுலகத்துக் கற்பகச்சோலையாகிய பொலிவுபெற்ற பந்தலுக்கு, அம் கால் ஆகும்-அழகியகால்கள் நாட்டியவைபோன்றிருக்கப்பெற்ற, வேங்கடமே—,——நன்கு அமரும் - நன்றாகப்பொருந்திய, ஊர் அத்தி கிரியார் - அத்திகிரியென்னுந் திருப்பதியையுடையவரும், ஊதும் திகிரியார் - ஊதிஇசைக்கின்ற வேய்ங்குழலையுடையவரும், வீரம் திகிரியார் - பகையழிக்குந்திறமுள்ள (சுதரிசனமென்னுஞ்) சக்கராயுதத்தை யுடையவரும் ஆகிய திருமாலினது, வெற்பு - திருமலை ; (எ - று.)

பொன்னுலகத்திலுள்ளவை யாவும் பொன்மயமானவை யென்ற கருத்தினால், கற்பகத்துக்கு 'பொன்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. கல்பகம் என்ற வடமொழி - வேண்டுவோர்க்கு வேண்டுபவற்றைக் கல்பிப்பது என்று பொருள்படும்; கல்பித்தல் - உண்டாக்குதல். கமுகு - க்ரமுகம்

வணம் - திருமேனி.



என்றவடசொல்லின் சிதைவு. பாக்குமரங்கள்மேலுலகத்துநந்தனவனத்தை யளாவிவளர்ந்துள்ளன வென்று, மலையின் உயர்வையும் வளத்தையும் உணர்த்தியவாறும். கால் - பந்தற்கால். அத்திகிரி - காஞ்சீபுரியிலுள்ள பெருமாள்கோவி லென்னும் பிரதானமான தலம். திகிரி - மூங்கில்; வேய்ங்குழலை யுணர்த்தும்போது, கருவியாகுபெயர். பின்னிரண்டடியில் 'திகிரி' என மூன்று முறை வந்தது, சொற்பின்வருநிலையணி. (௩௫)

௩௬. தண்ணிலைக்கண் மூங்கிற் றலைதொடுத்த தேனிறால்
விண்ணிலைக்கண் ணாடியாம் வேங்கடமே—யுண்ணிலைக்குஞ்
சோதி வணங்கரியார் தூயசன காதியரு
மோதி வணங்கரியா ரூர்.

(இ - ள்.) தண் இலை கண் மூங்கில் தலை - குளிர்ந்தஇலைகளையும் கணுக்களையுமுடைய மூங்கிலின் உச்சியிலே, தொடுத்த - கட்டிய, தேன் இறால் - தேன்கூடு, விண் நிலை கண்ணாடி ஆம் - தேவருலகத்துநிலைக்கண்ணாடிபோல விளங்கப்பெற்ற, வேங்கடமே——,——உள் நிலைக்கும் - அன்பருள்ளத்தில் நிலைபெற்றிருக்கின்ற, சோதி - ஒளிவடிவமானவரும், வணம் கரியார் - திருமேனிநிறம் கருமையுள்ளவரும், தூய சனக ஆதியரும் ஓதி வணங்கு அரியார் - (திரிகரண) சுத்தியையுடைய ஸநகர்முதலிய மகாயோகிகளும் துதித்து வணங்குதற்கு அருமையானவரு மாகிய திருமாலினது, ஊர் - திருப்பதி; (எ - று.)

விண் நிலைக்கண்ணாடி - தேவர்கள் தம் அழகுகாண்டற்கு நிறுவிய கண்ணாடி. தேனிறாலுக்கும் நிலைக்கண்ணாடிக்கும் ஒப்புமை, வடிவத்தோற்றம் பற்றியது. ஆம் - உவமவுருபு. வணம் - வர்ணம் என்ற வடசொல்லின் திரிபாகிய வண்ணம் என்பதன் தொகுத்தல். ஸநகாதியர் - ஸநகர், ஸநந்தநர், ஸநத்குமாரர், ஸநத்ஸுஜாதர் என்னும் நால்வர்; இவர்கள், பிரமனது குமாரர். வணங்கு - முதனிலைத்தொழிற்பெயர்; நான்காம் வேற்றுமைத் தொகை. (௩௬)

௩௭. தண்கமுகின் பாளை தடங்கதிரின் செல்வனுக்கு
வெண்கவரி போலசையும் வேங்கடமே—யொண்கடல்சூழ்
வண்டுவரை நாட்டினன் மத்தாக வாரிதியுட்
பண்டுவரை நாட்டினன் பற்று.

(இ - ள்.) தண் கமுகின் பாளை - குளிர்ந்த பாக்குமரத்தின் (வெண்ணிறமான) பாளைகள், தட கதிரின் செல்வனுக்கு - மிக்க ஒளிகளைச் செல்வமாக வுடையவனான சூரியனுக்கு, வெள் கவரி போல் - (உபசாரமாக இருபுறத்தும் அசைக்கப்படுகின்ற) வெண்சாமரம்போல, அசையும் - அசையப்பெற்ற, வேங்கடமே——,——ஒள் கடல் சூழ் - பெரிய கடலினாற் சூழப்பட்ட, வள் துவரை - வளப்பமுள்ள துவாரகையாகிய, நாட்டினன் - நாட்டையுடையவனும், பண்டு - முற்காலத்தில், வாரிதியுள் - கடலிலே, வரை - மந்தரமலையை, மத்து ஆக நாட்டினன் - கடைகருவியாக இட்டவனுமாகிய திருமால், பற்று - விரும்பி வாழுமிடம்; (எ - று.)

கமுகம்பாளையை வெண்சாமரம்போலசையுமென்றது,நிறமும் வடிவும் பற்றியது ; உயர்வுமிகுதியால், சூரியனுக்கு வெண்சாமர மென்றார். கண்ண பிரான் வடமதுரையில் வசிக்கையில்,பகைவர் பலர் ஒருங்கு போர்க்குவந்து சூழ்தலைநோக்கி, அச்சமயத்தில் தனது நகரத்துக்குடிகள் அழியாதபடி காக்கக் கருதி, மேல்கடலினிடையே துவாரகை யென்றத்வீபத்தை நிருமித்து, அங்கு இச்சனங்களையெல்லாம் குடியேற்றித் தானும் அவ்விடத்துக்குளெழுந்தருளின தன்மையை, 'ஒண்கடல்சூழ் வண்டுவரைநாட்டினன்' என்று குறித்தார். த்வாரகா மத்தம் என்ற வடசொற்கள், துவரை மத்து எனச் சிதைந்தன. வாரிதி - நீர் தங்குமிடம்; வடசொல்; இங்கே பாற்கடலுக்கு வழங்கப்பட்டது. பண்டு - இடைச்சொல். தூர்வாசமுனிசாபத்தால் இந்திரனது செல்வமனைத்தும் கடலில்ஒளித்துவிட்ட சமயம்பார்த்து வந்துபோர்செய்த அசுரர்க்குத் தோற்றதேவர்கள் திருமாலைச்சரணமடைந்தபோது அப்பெருமான் அவர்கட்குஅபயமளித்து மந்தரமலையைமத்தாகக்கொண்டு பாற்கடல் கடையும்படி கட்டளையிட, அங்ஙனமே தேவர்கள் அம்மலையை அக்கடலில் மத்தாக நாட்டிக் கடைவாராயினர்; அத்தன்மையை வெுதற்கருத்தாவின் வினையாக எம்பெருமான்மேலேற்றி 'மத்தாக வாரிதியுள் பண்டு வரைநாட்டினன்' என்றார். (௩௭)

௩௮. அங்கதிருங் கான்யாற் றடர்திவலை யானனைந்து
வெங்கதிருந் தண்கதிராம் வேங்கடமே—செங்கதிர்வேற்
சேந்தனத்த மைந்தான் றிருத்தாதை விற்கிளையாள்
பூந்தனத்த மைந்தான் பொருப்பு.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்து, அதிரும் - ஆரவாரிக்கின்ற, கான்யாறு - காட்டாறுகளின், அடர் திவலையால் - மிக்க நீர்த்துளிகள் தன்மேல் தெறித்தலினால், நனைந்து—, வெம் கதிரும் - இயல்பில் உஷ்ணகிரணங்களை யுடையவனான சூரியனும், தண் கதிர் ஆம் - குளிர்ந்த கிரணங்களை யுடையவனாதற்குக் காரணமாகின்ற, வேங்கடமே——,——செம் கதிர் - சிவந்த ஒளியையுடைய, வேல் - வேலாயுதத்தையுடைய, சேந்தன் - சுப்பிரமணியனுக்கும், அத்தம் ஐந்தான் - ஐந்துகைகளையுடையவனான விநாயகனுக்கும், திரு தாதை - சிறந்த தந்தையான சிவபிரானுடைய, விற்கு - வில்லுக்கு, இளையாள் - இளையவளான சீதையினது, பூ தனத்து - அழகிய கொங்கைகளிலே, அமைந்தான் - விரும்பிப் பொருந்தியவனான திருமாலினது, பொருப்பு - திருமலை; (எ - று.)

தண்கதிர் ஆம் - சீதகிரணனான சந்திரன் போல்கின்ற என்க. சூரியமண்டலத்தின்மீது கான்யாற்றுத்திவலை தெறிக்கும்படி யுள்ளதென்றதனால் அத்திருமலையின் உயர்வும், மிகப் பெரிய வடிவமுடைய சூரியமண்டலத்தைக் கான்யாற்றுத்திவலைகள் குளிரச்செய்கின்றன வென்றதனால் அந்நீர்த்திவலைகளின் மிகுதியும், மிக்க குளிர்ச்சி தருந்தன்மையும் தோன்றும். வெங்கதிர், தண்கதிர் - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைகள். ஓரடியில் இவ்வாறு மாறுபட்ட சொற்கள் வந்தது, தொடை

முரண். நான்குதிருக்கைகளோடு யானைவடிவத்துக்கு உரியதான துதிக்கையுமாக ஐந்துகைகளை யுடைமையால், விநாயகன், 'அத்த மைந்தான்' எனப்பட்டான். ஹஸ்தம் என்ற வடசொல், அத்தம் எனத் திரிந்தது. சிவபிரானுக்கு விநாயகன் மூத்தகுமாரனும், முருகன் இளையகுமாரனு மாவர். தாதை - தாத என்ற வடசொல்லின் விகாரம்.

'சிவன் விற்கிளையாள்' என்றதிற் குறித்த வரலாறு:—விசுவகருமனால் நிருமிக்கப்பட்ட இரண்டு விற்களில் ஒன்றை ஸ்ரீமகாவிஷ்ணுவும், மற்றொன்றைப் பரமசிவனும் எடுத்துக்கொண்டு தேவர்களின் வேண்டுகோளின்படி தம்மிற் போர்செய்கையில், சிவபிரான் எடுத்த வில் சிறிதுமுறியவே, போர் நிறுத்தப்பட்டது; அவ்வில்லை அப்பெருமான் நிமிகுலத்துத் தேவராதனென்னும் மகாராசனிடம் ஒப்பிக்க, அவ்வரசன் அதனை வெகுசாக்கிரதையாகப் பாதுகாத்துவந்தான் பின்பு அக்குலத்தில் தோன்றிய ஜநகனென்னும்அரசன் யாகசாலைஅமைத்தற்காகப் பூமியைஉழுதபொழுது அவ்வுழுபடைச்சாலில் தோன்றிய லக்ஷ்மியம்சமான பெண்ணை அவ்வரசன் தனது மகளாகக்கொண்டு சீதையென்று பெயரிட்டு வளர்த்து 'அச்சிவதநுசையெடுத்து வளைத்து நாணேற்றுபவனுக்கே இம்மகளை மணஞ்செய்துகொடுப்பேன்'என்று அதனைக் கன்னியாசுல்கமாக நியமிக்க, பற்பலர்முயன்றுமுடியாதபின்,விஷ்ணுவினது திருவவதாரமான ஸ்ரீராமன் அவ்வில்லை யெடுத்து வளைத்து நாணேற்றி அப்பெண்ணை மணஞ்செய்துகொண்டான். இங்ஙனம் நிமிகுலத்தில் சிவதநுசு முன்பு வந்துசேர, பின்பு சீதை வந்து சேர்ந்ததனால், அவள், சிவபிரானது வில்லுக்கு இளையவளெனப்பட்டனள். இளையாள் - பின்தோன்றினவள். இனி, சிவபிரானது வில்லுக்கு இளைக்ாதவளென்றுபொருளுரைப்பாரும் உளர்; சீதை தோழிகளோடு பந்துவிளையாடிக்கொண்டிருக்கையில் அப்பந்து அங்குவைக்கப்பட்டிருந்த சிவதநுசின் கீழ்ப் போய்விழ, அவள் அவ்வில்லை இடக்கையால் தூக்கிப் பந்தை யெடுத்துக்கொண்டன ளென்று ஒருவரலாறு வழங்குதல் காண்க.முந்தினபொருளில், இளையாள் என்பது - இளமையென்னும் பண்பினடியாப்பிறந்த உடன்பாட்டுக்குறிப்பு வினையாலணையும்பெயரும், பிந்தினபொருளில் இளையென்னும் வினைப்பகுதி யடியாப் பிறந்த எதிர்மறைத் தெரிநிலை வினையாலணையும்பெயருமாம். இனி, வில் கிளையாள் என்று பதம்பிரித்து, சிவபிரானது வில் வந்துசேர்ந்த குடும்பத்தில் தோன்றியவளென்று உரைப்பாரும்உளர்; கிளை - உறவினம். விற்கிளையாள் பூந்தனத்து அமைந்தான் - "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா," "மலரான்தனத்துள்ளான்" என்றாற் போலக் கொள்க. (௩௨)

௩௩. சேணுலவு திங்களெனுஞ் சித்தசவேள் வெண்குடைக்கு
வேணுவொரு காம்பாகும் வேங்கடமே—கோணுமனத்
தென்னையா ளாகத்தா னின்னருள்செய் தான்கமல
மின்னையா ளாகத்தான் வெற்பு.

(இ - ள்.) சேண் உலவு - வானத்திற் சஞ்சரிக்கின்ற, திங்கள் எனும் - சந்திரனாகிய, சித்தச வேள் வெள் குடைக்கு - சித்தஜனான மன்மதனது

வெண்கொற்றக்குடைக்கு, வேணு - மூங்கில், ஒரு காம்பு ஆகும் - காம்பு போல் அமையப்பெற்ற,வேங்கடமே——,——கோணும்மனத்து என்னை-செவ்வைப்படாத மனத்தை யுடைய என்னை, ஆள் ஆக - (செவ்வைப்பட்டுத் தனக்கு) அடிமையாகும்படி, தான் இன் அருள் செய்தான்-தானாக இனிய கருணையைச் செய்தருளியவனும், கமலம் மின்னை - செந்தாமரைமலரில் வாழ்கின்ற மின்னல்போல விளங்குகிற திருமகளை, ஆள் - கொண்ட, ஆகத்தான் - திருமார்பையுடையவனுமாகிய திருமாலினது, வெற்பு - திருமலை; (எ - று.)

மன்மதன் - காமத்துக்கு உரிய தேவன். வெண்ணிறமாய் வட்டவடிவங்கொண்டு விளங்குகின்ற பூர்ணசந்திரமண்டலம், காதலைவளர்க்குந் தன்மைய தாதலால், மன்மதனது வெண்கொற்றக்குடை யென்று கூறப்படும்; "ஆலைக்கரும்பு சிலை ஐங்கணை பூ நாண் சுரும்பு, மாலைக்கிளி புரவி மாருதம் தேர் - வேலை, கடிமுரசங் கங்குல் களிறு குயில் காளம், கொடி மகரம் திங்கள் குடை" என்ற இரத்தினச் சுருக்கத்தையுங் காண்க. திருவேங்கடமலையின்மீது வானத்தையளாவி ஓங்கிவளர்ந்துள்ள மூங்கில் சந்திரமண்டலமாகிய குடைக்கு ஏற்ப இட்ட காம்பு போலு மென்று, அம்மூங்கிலின் உயரத்தோடு வலிமையையும் பருமையையும் விளக்கியவாறும். சித்தஜன் - மனத்தினின்று தோன்றியவன்; திருமாலினது திருவுள்ளத்தினின்று மன்மதன் ஆதியில் தோன்றியதனாலும், ஆசைவடிவமான காமன் யாவர்மனத்தையும் இடமாகக்கொண்டு அங்குநின்று எழுதலாலும், சித்தஜ னென்று ஒருபெயர் பெறுவன். குமரவேளை விலக்குதற்கு, 'சித்தசவேள்' என்றார். வேணு - வடசொல். கோணும் மனம் - வக்கிரத் தன்மையையுடைய மனம்;அதாவது-தீநெறியிற்செல்லும் மனம். இங்ஙனம் செவ்வையில்லாத மனத்தையுடைய யான் ஆட்கொள்ளப்படுதற்கு உரியனல்லே னாயினும் என்னைத் தனது காரணமின்றியெழுங் கருணையால் திருத்திப் பணிகொண்டருளியவன் என்பார், 'கோணுமனத் தென்னை யாளாகத் தான் இன்னருள்செய்தான்'என்றார். கமலமின்னையாளாகத்தான்-திருமகளைத் தனது திருமார்பில் வீற்றிருக்க வைத்துக்கொண்டவன். (௩௯)

௯0. தேவருடை யைந்தருவின் செந்தே னிறால்கிழிய
மீவருடை பாய்கின்ற வேங்கடமே—மூவடிமண்
போயிரந்தா ரத்தர் புனையு மொருபதினா
றாயிரந்தா ரத்த ரகம்.

(இ - ள்.) தேவருடை - தேவர்களுடைய, ஐந் தருவின் - ஐவகைக் கற்பக விருட்சங்களிற் கட்டிய, செம் தேன் இறால் - செவ்விய தேன்கூடு, கிழிய - கிழிபடும்படி, மீ வருடை பாய்கின்ற - தன்மேலுள்ள வரையாடுகள் தாவிப் பாயப்பெற்ற, வேங்கடமே——,——மூ அடி மண் - மூன்றடி நிலத்தை, போய் இரந்தார்-(மகாபலிசக்கரவர்த்தியி னிடத்திற்) சென்று யாசித்தவரும், அத்தர் - (எல்லாவுயிர்கட்குந்) தந்தையாகின்றவரும், புனையும் - அலங்காரம் பெற்ற, ஒரு பதினாறாயிரம் தாரத்தர் - ஒப்பற்ற பதினாறாயிரம் மனைவியரையுடையவருமாகிய திருமாலினது, அகம் - இருப்பிடம்; (எ-று.)

திருமலையின் உயர்ச்சியோடு அம்மலையிலுள்ள ஆட்டின் கொழுமையும் விளங்கும். இந்திரன் முதலிய அனைவரையும் வென்று மூவுலகையும் தன் வசப்படுத்திச் செருக்கி உலகத்தை வருத்திய மகாபலியென்னும் அசுரராசனது கர்வத்தைப் பங்கஞ் செய்யும் பொருட்டுத் தேவர்களின் வேண்டுகோளின்படி திருமால் குள்ளவடிவமான வாமநாவதாரங்கொண்டு, அவ்வசுரன் யாகஞ் செய்துகொண்டிருக்கையிற் சென்று தன் காலடியால் மூவடி மண் வேண்டி, அது கொடுத்தற்கு அவன் இசைந்தவுடனே திரிவிக்கிரமாவதாரஞ்செய்து, ஓரடியால் மண்ணையும் மற்றோரடியால் விண்ணையும் அளந்து, மூன்றாமடிக்கு ஈடாக அவனது முடியில் தனது அடியை வைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்தி யடக்கினனென்ற வரலாறு பிரசித்தம். கண்ணபிரான் இளமையில் திருவாய்ப்பாடியில் வளரும்போது தன்னிடம் காதல்கொண்ட பதினாறாயிரம்கோபஸ்திரீகளோடுகூடிவிளையாடினமையும், கண்ணன் நரகாசுரனைச் சங்கரித்தபின்பு அவனால் மந்தரபருவதசிகரமான மணிபருவதத்திற் சிறை வைக்கப்பட்டிருந்த தேவ சித்த கந்தருவாதி கன்னிகைகள் பதினாறாயிரம் பேரையும் பதினாறாயிரம் வடிவமெடுத்து விவாகஞ்செய்துகொண்டு அவர்களோடு தனித்தனி கூடி வாழ்ந்துவந்தமையும் பற்றி, 'பதினாறாயிரந் தாரத்தர்' என்றார். 'புனையும்' என்றது, அம்மங்கையருடைய இயற்கையழகோடு ஆடையாபரணாதிகளாகிய செயற்கையழகையும் விளக்கும். 'புனையும்' என்ற இடத்து 'புணரும்' என்றும் பாடமுண்டு. அத்தர் - மைந்தரைத் தந்தை அன்போடு பாதுகாப்பதுபோல எல்லாவுயிர்களையும் அன்போடு பாதுகாத்தருள்பவர்; பிராணிகளின் உற்பத்திக்குக் காரணமானவர். 'போயிரந்தாரத்தார்' என்றும், 'ஆயிரந்தாரத்தார்' என்றும் பாடமோதுவாருமுளர்; அப்பொழுது, அத்தார் புனையும் என்று எடுத்து, அழகிய மணமாலையைத் தரித்த என்று பொருள் கொள்க; மற்றது ஒக்கும். (சo)

சக. வன்குறிஞ்சி மாதர்பால் வானோர் மருந்துக்கு
மென்குறிஞ்சித் தேன்மாறும் வேங்கடமே—நன்குறிஞ்சிப்
பேய்த்தநஞ்சு வைத்தார் பிறர்க்கமுதீந் தீசனுக்கு
வாய்த்தநஞ்சு வைத்தார் வரை.

(இ - ள்.) வல் குறிஞ்சி மாதர்பால் - வலிய குறிஞ்சிநிலத்து மகளிராகிய குறத்தியரிடத்து, வானோர் தேவர்கள், மருந்துக்கு-அமிருதத்துக்கு, மெல் குறிஞ்சி தேன் மாறும் - குறிஞ்சிமரத்திற் கட்டிய இனிய தேனைப் பண்டமாற்றலாற் கொள்ளப்பெற்ற, வேங்கடமே——,——பேய் தநம் - பேய்மகளாகிய பூதனையினது முலையை, நன்கு உறிஞ்சி சுவைத்தார் - நன்றாக உறிஞ்சிப் பால்குடித்தவரும், பிறர்க்கு அமுது ஈந்து - மற்றைத்தேவர்களுக்கு அமிருதத்தைக் கொடுத்து, ஈசனுக்கு - சிவனுக்கு, வாய்த்த நஞ்சு வைத்தார் - பொருந்தின விஷத்தை உண்ணவைத்தவருமாகிய திருமாலினது, வரை - திருமலை; (எ - று.)

தம்மிடத்து மிகுதியாகவுள்ள பண்டத்தை விலையாகக் கொடுத்து அதற்கு ஈடாகத் தமக்கு வேண்டிய அருமையான பொருளை வாங்கிக்கொள்ளுகிற பண்டமாற்றுமுறைப்படி மேலுலகத்திலுள்ள தேவர்கள் திருவேங்கடமலையின்மீது உள்ள குறிஞ்சிநிலத்து மகளிரிடம் அமிருதங் கொடுத்து அதற்கு ஈடாகத் தேன் பெற்றுக்கொள்கின்றனரென்ற இதில், தேவலோகத்துக்கு மிக்கசமீபமாயிருக்கும்படி இத்திருமலை ஓங்கியுயர்ந்துள்ள தென்பதும், தேவர்களுடைய சஞ்சாரம் இம்மலையில் நிகழ்கின்ற தென்பதும் விளங்குதலோடு, அமிருதத்தை யுண்பவரான தேவர்கள் அதனை வெறுத்து ஒழித்து அதனினும் இனிய தென்று விரும்பிப் பெற்றுக்கொள்ளும்படி யுள்ளது அந்நிலத்துத் தேனினது மிக்கசுவை யென்பதும் தோன்றும். மலையும், மலைசார்ந்த இடமும் - குறிஞ்சிநிலம். அந்நிலம், குறிஞ்சிமரத்தை யுடைமையால், அப்பெயர் பெற்றது.

திருமால், திருப்பாற்கடல்கடைகையில் அதனினின்று உண்டான பல பொருள்களுள் விஷத்தைச் சிவபிரானுக்குக் கொடுத்து உண்ணச்சொல்லி, அதனால் அப்பிரானுக்கு வெப்பமுண்டாகாமல் தணிந்திருக்கும்பொருட்டு உடனே சந்திரனையுங் கொடுத்து அதனைச் சிரமேற்கொள்வித்து, தேவர்கட்கெல்லாம் அமிருதத்தையும், அவர்களில் இந்திரன்முதலிய சிலர்க்கு மற்றுஞ் சிலபொருள்களையுந் தந்து, தான் சில பொருள்களைக் கொண்டருளின னென்ற வரலாறுபற்றி, 'பிறர்க்கு அமுதீந்து ஈசனுக்கு வாய்த்தநஞ்சு வைத்தார்' என்றார்; "வெருவு மாலமும் பிறையும் வெவ்விடையவற்கீந்து" என்றார் கம்பரும். சிவபிரானாகிய பாத்திரத்தைக்கொண்டு திருமால் தானே தனது திவ்வியசக்தியால் விஷத்தை அமுதுசெய்தன னென்பர். வாய்த்த - தகுதிக்கு ஏற்ற என்றபடி. உறிஞ்சி, உறிஞ்சு - பகுதி. நன்கு - பண்புப்பெயர்; கு - விகுதி. (சக)

சஉ. வாவுகவின் மந்திநுகர் மாங்கனிக்குக் கற்பகத்தின்
மேவுகவி கைநீட்டும் வேங்கடமே—தாவுகடல்
வேவவிலங் கைக்கொண்டார் வீடணனை வைத்தொழிந்தார்
சாவவிலங் கைக்கொண்டார் சார்பு.

(இ - ள்.) வாவு - தாவிச்செல்லும் இயல்புள்ள, கவின் மந்தி - அழகிய பெண்குரங்கு, நுகர் - (கைக்கொண்டு)உண்கின்ற, மா கனிக்கு - மாம்பழத்துக்கு, கற்பகத்தில் மேவு கவி கை நீட்டும் - கற்பகவிருக்ஷத்திற் பொருந்திய ஆண்குரங்கு கைநீட்டப்பெற்ற, வேங்கடமே—, —தாவு கடல் வேவ - அலைபொங்கி யெழு மியல்புள்ள கடல் கொதிப்படையும்படியும், ஒள் தார் வீடணனை இலங்கைக்கு வைத்து - பிரகாசமான ஆரத்தை யணிந்த விபீஷணனை இலங்காபுரிக்கு (அரசனாக) வைத்து, ஒழிந்தார் சாவ - அவனல்லாத அரக்கர் பலரும் இறக்கும்படியும், வில் அம் கை கொண்டார் - (கோதண்டமென்னும்) தமது வில்லை அழகியகையில் ஏந்தியவராகிய திருமால், சார்பு - சாருமிடம்; (எ - று.)

மேலுலகத்துக் கற்பகச்சோலையிலுள்ள குரங்கு திருவேங்கடமலையின் மாஞ்சோலையிலுள்ள குரங்கை நோக்கிப் பழங்கேட்கும்படி திருவேங்கடமலையும் அம்மலையில் வளம்பெற்ற சோலைகளும் ஓங்கியுயர்ந்துள்ளன வென்ற பொருளோடு, கற்பகச்சோலையிலிருந்து வேண்டியவைபெற்று உண்ணும் அக்குரங்கு அவ்விடத்துப் பழங்களினும் மிகஇனியதென்று விரும்பிக் கைநீட்டி இரக்கும்படி யுள்ளது திருவேங்கடமலைச்சோலையின் மாம் பழத்துச் சுவை மிகுதி யென்ற கருத்தும், இதில் தோன்றும். அணைகட்டுதற்கு இடங்கொடாத சமுத்திரராசனைச் செருக்கடக்கும்பொருட்டு அவன் மீது ஆக்நேயாஸ்திரத்தைப் பிரயோகித்தற்காக ஒருமுறையும், சாதுவான விபீஷணனை யொழிந்த இராவணன் முதலிய கொடிய அரக்கர் அனைவரையும் அழித்தற்காக அம்பு எய்தற்கு மற்றொருமுறையும் வில்லையெடுத்து வளைத்தன னென்பார், 'தாவுகடல் வேவ இலங்கைக் கொண்டார் வீடணனை வைத் தொழிந்தார் சாவ விலங்கைக்கொண்டார்' என்றார். இதனை "கடல்வழிவிட நிசிசரர் பொடிபட விருகண்சீறி" என்றாற்போலக் கொள்க. இராமபிரான், போர்செய்து இராவணாதியரைத் தொலைத்தற்பொருட்டு வாநரசேனையோடு புறப்பட்டுத் தென்கடற்கரை சேர்கையில், தன்னை வந்து சரணமடைந்த இராவணனது தம்பியான விபீஷணனுக்கு அபயமளித்து அப்பொழுதே அவனுக்கு இலங்காபுரியி னரசாட்சியை முன்னதாகவே அளித்து முடிசூட்டிவைத்துப் பின்பு சேதுபந்தனஞ் செய்து கடல் கடந்து இலங்கைபுக்கு அரக்கர்களை அழித்தபின் முன்சங்கற்பித்தபடி மீட்டும் இலங்கையில் விபீஷணனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வித்தன னென்பது, 'இலங்கைக்கு வீடணனை வைத்து ஒழிந்தார் சாவ வில் அங்கைக் கொண்டார்' என்றதனால் விளக்கப்பட்டது. வீடணன்-விபீஷணன் என்ற வடசொல்லின் விகாரம்; அப்பெயர் - (பகைவர்க்கு) மிகப்பயங்கரனானவ னென்று பொருள்படும்.

கவி - கபி யென்ற வடசொல்லின் திரிபு. 'வேக,' 'சாக' என்ற பாடங்களுக்கு, கு - சாரியை யென்க. (சஉ)

சங. வெள்ளியகன் மீதே விடர்முளைத்த செங்காந்தள்
வெள்ளி யகல்விளக்காம் வேங்கடமே—வெள்ளியெனும்
வேதியனாட் டங்கெடுத்தார் மேதினியைப் பாதலமென்
றோதியனாட் டங்கெடுத்தா ரூர்.

(இ - ள்.) வெள்ளிய கல்மீதே - வெண்ணிறமான வட்டப்பளிங்குக் கல்லின்மேலே, விடர் முளைத்த - அக்கற்பிளப்பிலே முளைத்தெழுந்த, செம் காந்தள் - செந்நிறமான காந்தளின்மலர், வெள்ளி அகல் விளக்கு ஆம் - வெள்ளியினாலாகிய தகழியில் ஏற்றப்பட்ட விளக்குப் போலத் தோன்றப் பெற்ற, வேங்கடமே——,——வெள்ளி எனும் வேதியன் - சுக்கிரனென்னும் அந்தணனது, நாட்டம் - கண்ணை, கெடுத்தார் - போக்கினவரும், மேதினியை - பூமியை, பாதலம் என்று ஓது இயல் நாடு அங்கு எடுத்தார் -

பாதாளமென்று பெயர்சொல்லப்படுகிற இயல்பையுடைய உலகமாகிய அவ்விடத்தினின்று எடுத்தவருமான திருமாலினது, ஊர் - திருப்பதி; (எ - று.)

பளிங்கு வட்டத்து நடுப்பிளப்பில் முளைத்தெழுந்த காந்தட்செடியின் சிவந்த மலருக்கு, வெள்ளித்தகழியில் ஏற்றிய விளக்கு உவமை கூறப்பட்டது; வடிவுவமை. வெள்ளிய - வெண்மையென்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; இ - சாரியை. வெள்ளி - வெண்ணிறமுடையது; இ - பெயர்விகுதி. அந்நிறமுடைமைபற்றியே, சுக்கிரனுக்கு வெள்ளியென்று பெயர். விடர் - கற்பிளப்பு. காந்தள் - மலர்க்கு முதலாகுபெயர். 'செங்காந்தள்' என்பதில், செம்மை - ஆகுபெயர்ப்பொருளுக்கு ஏற்ற அடைமொழி. வேதியன் - வேதம்வல்லவன். நாட்டம் - நாடுதற்குக் கருவியானது ; அம் - கருவிப்பொருள்விகுதி ; பகுதி இடையொற்று இரட்டியது, விரித்தல். மேதினீ - வடசொல்; (திருமாலாற் கொல்லப்பட்ட மதுகைடபரது) மேதசினால் [உடற்கொழுப்பினால்] நனைந்தது. என்று காரணப்பொருள். தேசமென்னும் பொருள்தருகிற 'நாடு' என்ற சொல், இலக்கணையால், லோகமென்றபொருளில் உபயோகிக்கப்பட்டது.

வெள்ளியெனும் வேதியன் நாட்டங்கெடுத்தார் "மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில், தக்கதிதன்றென்று தானம்விலக்கிய, சுக்கிரன் கண்ணைத் துரும்பாற் கிளறிய, சக்கரக் கையன்" என்ற பெரியாழ்வார் திருமொழியையுங் காண்க.

'ஓதிய நாட்டங்கு' என்று பாடமாயின், ஓதப்பட்ட அந்நாட்டினின்று என்று பொருள்கொள்க; அப்பொழுது, அதற்குஏற்ப மூன்றுமடியிலும்'வேதியநாட்டம்' என்று பாடங்கொள்ளவேண்டும்: அத்தொடரில் வேதியன் என்ற உயர்திணைப்பெயரின் ஈற்றுனகரம் வருமொழிப் புணர்ச்சியில் "சிலவிகாரமா முயர்திணை" என்றதனாற் கெட்ட தென்க. இனி, திரிபு யமகங்களிலே பொருள்நோக்கில் நகரவேறுபாடு காணப்படினும் அதனை அமைதியாகக் கொள்ளல் மரபு; அதற்குக்காரணம், வரிவடிவில் மிக்க வேறுபாடு இருப்பினும் ஒலிவடிவில் மிக்கவேறுபாடு இல்லாமை. (௪௩)

௪௪. அல்லிமலர்க் காந்தளின்மே லாடுஞ் சுரும்பினங்கண்
மெல்லியர்கள் கைக்கழங்காம் வேங்கடமே—மல்லினரைப்
பண்டறைந்த வன்புடையார் பார்த்தனுக்குத் தத்துவநூல்
விண்டறைந்த வன்புடையார் வெற்பு.

(இ - ள்.) அல்லி - அகவிதழ்கள் நிறைந்ததான, மலர் காந்தளின் மேல் - செங்காந்தள் மலரின்மேல், ஆடும் - அசைந்தசைந்து மொய்த்து எழுகின்ற, சுரும்பு இனங்கள் - வண்டுகளின் கூட்டங்கள், மெல்லியர்கள் கை கழங்கு ஆம் - மகளிர்களாற் கையிற்கொண்டு ஆடப்படுகின்ற கழற்காய் போன்றிருக்கப்பெற்ற, வேங்கடமே—,—பண்டு-முன்பு, மல்லினரை - மற்போர்வீரர்களை, அறைந்த - தாக்கியழித்த, வன்பு உடையார் - வலிமை கெடாதவரும், பார்த்தனுக்கு - அருச்சுனனுக்கு, தத்துவம் நூல் - தத்துவ

சாஸ்திரமாகிய கீதையை, விண்டு அறைந்த - வெளியிட்டுக் கூறியருளிய, அன்பு உடையார் - அன்பையுடையவருமாகிய திருமாலினது, வெற்பு - திருமலை ; (எ - று.)

மெல்லியர்-மென்மையான தன்மையையுடையவர். மகளிரது சிவந்த கை - செங்காந்தளுக்கும், திரண்டுஉருண்ட கழற்சிக்காய்-வண்டுக்கும், மகளிர் கைகளிற்கொண்டு ஆடும்போது அக்காய்கள் அக்கைகளின்மேல் எழுந்தெழுந்து ஆடி மீண்டும் அவற்றில்விழுதல் - காந்தள்மலரின்மேல் வண்டு விழுந்து எழுந்தெழுந்து மொய்த்தற்கும் உவமை; வடிவுந் தொழிலும் பற்றியது. ஆம் - உவமவுருபு. மெல்லியர், இ - சாரியை. மல்லினர் - மல்லர்: இன் - சாரியை. மற்போராவது - படைக்கலமின்றி உடல்வலிமைகொண்டு பலவகையாகச் செய்யும் போர். 'பண்டு' என்றது, கிருஷ்ணாவதாரத்தை.

பார்த்தனுக்குத் தத்துவநூல் ஓதியது:—மகாபாரதயுத்தத்தில் முதல் நாட்போர்த்தொடக்கத்தில் எதிர்வந்துநின்ற வீரர்களெல்லாம் பாட்டனும் அண்ணன் தம்பிமாரும் மாமனும் உறவினரும் கல்விபயிற்றிய ஆசாரியரும் மனங்கலந்த நண்பருமாகவே யிருக்கக் கண்டு "உற்றாரையெல்லாம் உடன்கொன்று அரசாளப், பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம்" என்றெண்ணிப் போர்புரியேனென்று காண்டீவம்கைந்நெகிழத் தேர்த்தட்டின்மீதே திகைத்துநின்ற அருச்சுனனுக்குக் கண்ணன் தத்துவோபதேசஞ் செய்து தனதுவிசுவரூபத்தைக்காட்டி அவனதுமயக்கத்தை ஓட்டி அவனைப் போர்புரியுமாறு உடன்படுத்தினன் என்பதாம். அப்பொழுது உபதேசித்த தத்துவப்பொருளே, ஸ்ரீபகவத்கீதையென வழங்கப்படுகின்ற நூலாம். தத்துவம் - வடசொல் ; உண்மைப்பொருள். தத்துவநூல் - ஜீவாத்மா பரமாத்மா இவர்கட்குஉள்ள சம்பந்தம், கர்மம், பிறப்பு, முத்தி முதலியவற்றின் உண்மையான தன்மையை உரைத்த சாஸ்திரம். பார்த்தன் - அருச்சுனன் ; பிருதையின் மகன் : பிருதை - குந்தி.

விண்டு, விள் - பகுதி. உடையார் என்ற சொல் இரண்டனுள், முந்தினது - உடையென்னும் வினைப்பகுதியின்மேற் பிறந்த எதிர்மறைத்தெரிநிலைவினையாலணையும்பெயரும், பிந்தினது - உடைமை யென்னும் பண்பினடியாப் பிறந்த உடன்பாட்டுக்குறிப்புவினையாலணையும்பெயருமாம். இரண்டு அடியிலும் உடையவரென்றே பொருள்கொள்ளுதல், திரிபிலக்கணத்துக்கு ஒவ்வாது. அல்லி யென்பதன் எதிர்மொழி - புல்லி ; அது, புறவிதழைக் குறிக்கும். (சச)

சரு. காந்த ளிரவலர்போற் கையேற்பக் கொன்றைகொடை
வேந்தனெனப் பொன்சொரியும் வேங்கடமே—பூந்துளவின்
கான்மடங்கா மார்வத்தார் காண விரும்பினர்மே
லூன்மடங்கா மார்வத்தார் நாடு.

(இ - ள்.) காந்தள் - செங்காந்தள்மலர், இரவலர் போல் கை ஏற்ப - யாசகர் யாசித்தற்கு ஏற்கின்ற கை போன்று இருப்ப, கொன்றை - கொன்

றைமரம், கொடை வேந்தன் என பொன் சொரியும்- ஈகைக்குணமுடைய அரசன் (அந்த யாசகர்கையிற்) பொன்னைச் சொரிவதுபோல (க் காந்தள் மலரின்மேல்) பொன்னிறமான தன்மலர்களைச் சொரிதற்கு இடமான, வேங்கடமே—,—பூ துளவின்-அழகிய திருத்துழாயினது, கான் - வாசனை, மடங்கா - மாறாத, மார்வத்தார் - திருமார்பையுடையவரும், காண விரும்பினர்மேல் - (தம்மைச்) சேவிக்க விரும்பின மெய்யடியார்களிடத்து, நால் மடங்கு ஆம் ஆர்வத்தார் பலமடங்கு அதிகமாக வைக்கும் அன்பையுடையவருமாகிய திருமாலினது, நாடு - திவ்வியதேசம் ; (எ - று.)

முன்னிரண்டடி - வடிவுபற்றிவந்த உவமையணி. கைபோலும் மலரை 'கை' என்றும், பொன்போலும்மலரை 'பொன்' என்றுங் கூறியது, உவமையாகுபெயர். கொடை - 'ஐ' விகுதி பெற்ற தொழிற்பெயர். இரவலர் - இரத்தலில் வல்லவர்; விடாது இரப்பவரென்க. பூந்துளவின் கான்மடங்கா மார்வத்தார்-மிக்கபரிமளத்தையுடைய திருத்துழாய்மலையைத் திருமார்பில் எப்பொழுதும் சாத்தியுள்ளவர். நான்மடங்கு என்பதில், நான்கு என்பது-பலவென்னும் பொருளின்மேல் நின்றது ; இனி, தம்மிடத்து அடியார்கள் ஒருபங்குஅன்புவைத்தால் அவர்கள்பக்கல்தாம் அவ்வன்பினளவுக்கு நான்கு பங்காக அன்புவைப்பவரென்றும் பொருளாம். (சரு)

சகூ. நாகத்தின் மேற்குறவர் நன்கெறிந்த மாணிக்க
மேகத்தின் மின்புரையும் வேங்கடமே—மாகத்தின்
மாத்தாண்ட மண்டலத்தார் வாயுண் டுமிழ்ந்தளந்து
காத்தாண்ட மண்டலத்தார் காப்பு.

(இ - ள்.) நாகத்தின்மேல் - யானையின்மேல், குறவர் - குறிஞ்சிநில மாக்கள், நன்கு எறிந்த - நன்றாக வீசியெறிந்த, மாணிக்கம்-மாணிக்கமென்னும் இரத்தினங்கள், மேகத்தின் மின் புரையும் - மேகத்தினிடத்துக் காணப்படுகிற மின்னல்போல விளங்குதற்கு இடமான, வேங்கடமே——, ——மா கத்தின்-பெரிய வானத்தில் விளங்குகின்ற, மாத்தாண்ட மண்டலத்தார் - சூரியமண்டலத்தில் எழுந்தருளியிருப்பவரும், வாய் உண்டு - (யுகாந்தகாலத்தில்) வாயினாலே உட்கொண்டு, உமிழ்ந்து - (பிரளயம் நீங்கின பொழுது மீண்டும்) வெளிப்படுத்தி, அளந்து - (திரிவிக்கிரமாவதாரத்தில் திருவடியால்) அளந்து, காத்து -(தாமான நிலையிலே) பாதுகாத்து,ஆண்ட-(ஸ்ரீராமாவதாரத்தில்) அரசாளப்பட்ட, மண் தலத்தார் - பூமியையுடையவரும் ஆகிய திருமால், காப்பு - (உயிர்களைப்) பாதுகாக்குமிடம்; (எ - று.)

கருநிறமுள்ள பெரிய மதயானைக்குக் காளமேகமும், செந்நிறமுடைய தாய் விளங்குகின்ற மாணிக்கத்துக்கு மின்னலும் உவமை யெனக் காண்க. மாணிக்கம் என்ற வடசொல், திரிந்தது. புரையும் - உவமவுருபு. மாகம் - மஹாகம் என்ற வடசொல்லின் விகாரம். மார்த்தாண்டமண்டலம் என்ற வடமொழித்தொடர், விகாரப்பட்டது. எம்பெருமான் திவ்வியமானஉருவத்துடன் சூரியமண்டலத்தில் எழுந்தருளியிருத்தல்பற்றி, 'மாகத்தின் மாத்

தாண்டமண்டலத்தார்' என்றார். ஆண்ட என்பதற்கு - மனைவியாக ஆட்கொள்ளப்பட்ட என்றும் பொருளுரைக்கலாம்; பூமிதேவியாதல் காண்க. "பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்ட, பேராளன்" என்ற திருநெடுந்தாண்டகம் இங்குக் காணத்தக்கது. (சகூ)

சஎ. செம்பதும ராகச் சிலைசூழ் பெரும்பாந்தள்
வெம்பரிதி யூர்கோளாம் வேங்கடமே—யும்பருல
கோதத்தி னப்புறத்தா னோரா லிலைதுயின்றான்
வேதத்தி னப்புறத்தான் வெற்பு.

(இ - ள்.) செம் - செந்நிறமான, பதுமராகம் சிலை - பதுமராகக்கல்லை, சூழ் - சுற்றிக்கொண்ட, பெரு பாந்தள் - பெரிய மலைப்பாம்பு, வெம் பரிதி ஊர்கோள் ஆம் - வெவ்விய சூரியமண்டலத்தைச் சுற்றிக் காணப்படும் பரிவேஷம் போன்று தோன்றப் பெற்ற, வேங்கடமே—,—ஓதத்தின் அப்பு - பிரளயசமுத்திரத்தின் நீர்வெள்ளம், உலகு உம்பர் உற - எல்லாவுலகங்களையுங் கவிந்து அவற்றின்மேற் சென்று பரவ, தான் ஓர் ஆல் இலை துயின்றான் - (அப்பெருங்கடலில்) ஓர் ஆலிலையின்மேல் தான் யோகநித்திரை கொள்கின்றவனும், வேதத்தின் அப்புறத்தான் - வேதங்களுக்கு எட்டாமல் அப்பாற்பட்டவனுமான திருமாலினது, வெற்பு - திருமலை; (எ - று.)

பத்மராகம் - வடசொல்; செந்தாமரைமலர்போலச் செந்நிறமுடையதென்று பொருள்படும்; இது, நவரத்தினங்களுள் ஒன்று. செந்நிறமுள்ளதாக மிகவிளங்குகிற பதுமராகரத்தினத்துக்கு-அங்ஙனம் விளங்குகிற சூரியமண்டலமும், அவ்விரத்தினத்தைச் சுற்றிக்கொண்ட பெரும்பாம்புக்கு - சிற்சிலசமயங்களில் சூரியமண்டலத்தைச் சுற்றி அருகிற்காணப்படுகிற ஊர்கோள்வட்டமும் உவமைகூறப்பட்டன. பரிதி - வடசொல். ஊர்கோள் - ஊர்ந்துகொள்வது எனப் பொருள்படும் காரணக்குறி; ஊர்தல் - வளைதல். உம்பருலகு உற என்றுஎடுத்து, மேலுள்ள தேவலோகங்களுக்கும் மேலே பொருந்த என்று உரைத்தலும் ஒன்று. இனி, தேவலோகமுமுட்பட யாவும் கடல்வெள்ளத்தினுள்ளே அகப்பட எனினும் அமையும். வேதங்கட்கும் எட்டாதபடியுள்ளது எம்பெருமானதுஸ்வரூபமென்பது, வேதங்களினாலேயே விளங்குகின்றது. (சஎ)

சஅ. கோலமணிப் பாறையிற்பாய் கோடரங்கள் செங்கதிரோன்
மேலனுமன் பாய்ந்தனைய வேங்கடமே—நாலுமறை
யாய்ந்தபர தத்துவந்தா னானான் குடமாடல்
வாய்ந்தபர தத்துவந்தான் வாழ்வு.

(இ - ள்.) கோலம் - அழகிய, மணி பாறையில் - மாணிக்கப்பாறையின்மேல், பாய் - பாய்கின்ற, கோடரங்கள் - குரங்குகள், செங் கதிரோன் மேல் அனுமன் பாய்ந்து அனைய - சிவந்த சூரியமண்டலத்தின்மேல் அநுமான் பாய்ந்தாற்போலத் தோன்றுதற்கு இடமான, வேங்கடமே—,

——நாலு மறை - நான்குவேதங்களாலும், ஆய்ந்த-ஆராய்ந்துகூறப்பட்ட, பர தத்துவம் - (எல்லாவற்றுக்கும்) மேலான உண்மைப்பொருள், தான் ஆனான் - தானேயானவனும், குடம் ஆடல் வாய்ந்த பரதத்து - குடமெடுத்து ஆடுதல் பொருந்தின கூத்தைச் செய்வதிலே, உவந்தான் - திருவுள்ள முகந்தவனுமாகிய திருமால், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)——மணி - செம்மணி.

சுமேருபர்வதத்தில் கேசரியென்ற வாநரவீரனது மனையாளான அஞ்சனாதேவி வாயுதேவனது அநுக்கிரகத்தால் ஒருகுமாரனைப்பெற்றுக் கனிகள்கொணர்தற்குக் காட்டிற்குச் செல்ல, அக்குமாரன் பசிபொறுக்கமாட்டாமல் காலையிலுதித்த ஆதித்தபிம்பத்தைக் கனியெனக்கருதிக் கவர்வான் எழுந்து, தந்தையாகியவாயுவினது உதவிகொண்டு அச்சூரியமண்டலத்தின் மீது பாய்ந்தனனென்ற வரலாறு, இங்கு அறியத்தக்கது. "செழுமலர்த்திருவனையதாய் செழுங்கனிநாடிப், பழுவமுற்றிடப் பசியினாற்பதைபதைத்திரங்கி, யழுதரற்றிய பாலக னன்னை முன்னுரைத்த, பழம் நமக்கிதுவாமென ப்பரிதிமேற் பாய்ந்தான்" என்றார் ஒட்டக்கூத்தரும். அப்பொழுது சூரியனைப்பிடிக்கவந்த இராகு இவ்வாநரனைக் கண்டு அஞ்சியோடி இந்திரனிடம் முறையிட, இந்திரன் சினங்கொண்டு வந்து வச்சிராயுதத்தால் மெல்லப் புடைக்க, அக்குரங்கு கன்னத்தில் அடிபட்டுக் கன்னம் சிதையப் பெற்றதனால், அதற்கு, பிறகு 'ஹநுமாந்' என்ற பெயர் இந்திரனால் வைக்கப்பட்டது. ஹநுமாந் என்ற வடசொல்-கன்னத்தில் விசேஷமுடையவனென்று பொருள்படும்; ஹநு - கன்னம், மாந் - உடைமைப்பொருள் காட்டும் வடமொழிப்பெயர்விகுதி. அப்பெயர், அனுமன் என விகாரப்பட்டது. செந்நிறமாக விளங்கும் சூரியமண்டலத்தின்மீது பாய்ந்த அநுமானென்னும் தெய்வக்குரங்கை, செந்நிறமான மாணிக்கப் பாறையின்மேற் பாயும் குரங்குகட்கு உவமைகூறினார்.

நாலு - நான்கு ஈறுகெட்டு னகரம்லகரமாய் உகரச்சாரியை பெற்றது. பரதத்வம் - பரம்பொருள். குடமாடல் வாய்ந்த பரதம்-குடக்கூத்து; அதாவது-இடையர்கள் செல்வச்செருக்கினால் தமதுமகிழ்ச்சிக்குப் போக்குவீடாகக் குடங்களையெடுத்து மேலேயெறிந்து மீண்டும்ஏந்தி ஆடுவதொரு கூத்து. பஞ்சலோகங்களாலும் மண்ணாலுங்குடங் கொண்டு ஆடுவதென்பர். கண்ணபிரானுக்கு அக்கூத்தில் மிகவும்பிரியமாதலை "குடங்களெடுத் தேறவிட்டுக் கூத்தாடவல்ல எங்கோவே" என்ற பெரியாழ்வார் திருமொழியினாலும் உணர்க. இப்பாசுரத்தின் வியாக்கியாநத்தில் 'பிராமணர் ஐசுவரியம் விஞ்சினால் யாகாதிகள் பண்ணுமாபோலே இடையர் ஐசுவரியம் விஞ்சினால் செருக்குக்குப் போக்குவிட்டு ஆடுவதொரு கூத்தாய்த்து, குடக்கூத்தாவது,' 'இடையர்க்கு ஐசுவரியந்தானாவது - கோஸம்ருத்தியிறே: அந்த ஸம்ருத்தி குறைவறவுள்ளது தனக்கே யாகையாலே, அத்தால் வந்த செருக்குக்குப் போக்குவிட்டுக் குடக்கூத்தாடினபடி சொல்லுகிறது; தலையிலே அடுக்குக்குடமிருக்க, இரண்டுதோள்களிலும் குடங்களிருக்க, இரண்டுகையிலும் குடங்களையேந்தி ஆகாசத்திலேயெறிந்து ஆடுவதொரு கூத்தாய்த்து, குடக்

கூத்தாவது ' என்ற வாக்கியங்கள் இங்கு உணரத்தக்கன. குடம் - தயிர்த் தாழி. "குடத்தால் குன்றெடுத்தோ னாடல்," "நீணிலமளந்தோ னாடிய குடம்" என்றார் பிறரும். பரதம் - வடசொல்; பாவம், ரஸம், தாளம் இம் மூன்றையு முடைமைபற்றி, பரதமென்று நாட்டியத்துக்குப் பெயரென்பர்.

சகூ. கொம்பினிறால் வாங்கநிமிர் குஞ்சரக்கை யம்புலிமேல்
வெம்பியெழுங் கோளரவாம் வேங்கடமே—தும்பிபல
போர்காது மீர்ந்தார் புனையரக்கி மூக்கினொடு
வார்காது மீர்ந்தார் வரை.

(இ - ள்.) கொம்பின் - மரக்கொம்பிற்கட்டிய, இறால் - தேன்கூட்டை, வாங்க - எடுத்தற்கு, நிமிர் - உயரத்தூக்கிய, குஞ்சரம் கை - யானையினுடைய துதிக்கை, அம்புலிமேல் வெம்பி எழும் கோள் அரவு ஆம் - சந்திர மண்டலத்தைப் பற்றுதற்கு அதன்மேல் கறுக்கொண்டு எழுகின்ற கரும் பாம்புவடிவமான (இராகுவென்னும்) கிரகம்போலத் தோன்றப்பெற்ற, வேங்கடமே—,—தும்பி பல போர் காதும் - பல வண்டுகள் நெருங்கி மொய்த்து ஒன்றோடு ஒன்று தாக்கப்பெற்ற, ஈர் தார் - (தேனினால்) குளிர்ந்த மலர்மாலையை, புனை - தரித்த, அரக்கி-சூர்ப்பணகையினது, மூக்கினொடு - மூக்கையும், வார் காதும் - நீண்ட காதையும், ஈர்ந்தார் - அறுத்தவராகிய திருமாலினது, வரை - திருமலை; (எ - று.)

இறாலுக்குச் சந்திரனும், அதன்மீது எடுத்த யானைத்துதிக்கைக்குச் சந்திரன்மீது எழும் இராகுவென்னும் பாம்பும் வடிவில் உவமம். குஞ்சரம் - வடசொல்; காட்டுப்புதர்களிற் சஞ்சரிப்பது என்றும், துதிக்கையையுடையது என்றும் காரணப்பொருள்படுவது. கிரகணகாலத்திற் சூரியனை மறைக்கின்ற சந்திரன்சாயையும், சந்திரனை மறைக்கின்ற பூமியின்சாயையும் இராகுகேதுக்களென்னும் பாம்புவடிவமான கிரகங்களெனப்படும். பாற்கடல் கடைகையில் உண்டான அமிருதகலசத்தை யெடுத்துக்கொண்ட திருமால் மிகவும்அழகிய மோகினியென்னும் பெண்வடிவத்தால் அசுரர்களைமயக்கித் தேவர்களுக்கே அமிருதத்தைப் பங்கிட்டுக்கொடுத்துவருகையில், இராகுவென்னும் ஓரசுரன் தான்இருத்தற்குஉரிய அசுரர்கூட்டத்தை விட்டு வஞ்சனையாகத் தேவர்கூட்டத்தினிடையிலே புக்குக் கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனைச் சூரியசந்திரர் குறிப்பித்த மாத்திரத்தில் எம்பெருமான் அவனை அகப்பையால் அடித்துத் தலைவேறு உடல்வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர்நீங்காத அந்தத் தலையும் உடம்பும் விஷ்ணுவின் அனுக்கிரகத்தால் இராகுகேதுக்களென்ற இரண்டு கிரகங்களாகிச் சூரியன்முதலிய எழுகிரகங்களோடு சேர்ந்து கரும்பாம்பு செம்பாம்புவடிவுபெற்று, தம் மேற்கோள்சொன்ன சூரிய சந்திரர்க்குப் பகையாய்ச் சிற்சிலகாலத்தில் அவர்களைப்பிடித்துக்கொள்கின்றன வென்பது, புராணவரலாறு.

மலர்களின் தேனை யுண்ணுதற்பொருட்டுப் பல வண்டுகள் நெருங்கி மொய்க்கும்போது, நான்முன்னே நான்முன்னே யென்று ஒன்றன்மே

லொன்றாக விழுமென்பது, 'தும்பிபல போர்காதும்' என்பதன் கருத்து; இது, தார்க்கு அடைமொழி; அரக்கிக்கு அடைமொழியாகக்கொண்டு, பலயானைகளோடு போர்செய்யும் வலிமையுடைய என்று பொருள்கொள்ளவும் இடமுண்டு. ஈர்ந் தார் - குளிர்ச்சியாகிய மாலை யெனக் கொண்டால் பண்புத் தொகையும், குளிர்ச்சியையுடைய மாலையெனக் கொண்டால் இரண்டனுருபும் பொருளுந் தொக்கதொகையுமாம். ஈர் + தார் = ஈர்ந்தார்; "யரழமுன்னர்" என்னுஞ் சூத்திர விதி. சூர்ப்பணகை இராமலக்ஷ்மணரிடம் வரும்பொழுது அழகியவடிவங்கொண்டு ஆடையாபரணாதிகளால் தன்னையலங்கரித்து வந்தமை தோன்ற, 'தும்பிபல போர்காது மீர்ந்தார் புனையரக்கி' என்றார்; "அறலோதிப், பூ முரலும் வண்டு மிவை பூசலிடுமோசை" என்ற கம்பராமாயணத்தையுங் காண்க.

சூர்ப்பணகையை அங்கபங்கப்படுத்தியது இராமபிரானது திருத்தம்பியான இளையபெருமாளினது செய்கையாயினும், அதனைப் பெருமான் மேல் ஏற்றிச்சொன்னது, இராமபிரானது கருத்திற்கு ஏற்ப அவன் கட்டளையிட்டபடி இவன்செய்தன னாதலின் ஏவுதற்கருத்தாவின் வினையாதல்பற்றி யென்க. அன்றியும், இளையபெருமாளும் திருமாலினது திருவவதாரமே யாதலால், அங்ஙனஞ் சொல்லத் தட்டில்லை. மற்றும், "ராமஸ்ய தக்ஷிணோபாஹு:" என்றபடி இராமனுக்கு இலக்குமணன் வலத்திருக்கையெனப்படுதலால், அங்ஙனம் கையாகிறஇலக்குமணனது செயலை இராமன் மேல் ஒற்றுமைநயம்பற்றி ஏற்றிச்சொல்லுதல் தகுதியே. "அரக்கிமூக்கை நீக்கிக் கரனோடுதூடணன்தனுயிரை வாங்கி" என்று குலசேகராழ்வாரும், "தன் சீதைக்கு, நேராவ னென்றோர் நிசாசரிதான் வந்தாளைக், கூரார்ந்த வாளாற் கொடிமூக்குங் காதிரண்டும், ஈராவிடுத் தவட்குமூத்தோனை வெந்நரகஞ், சேராவகையே சிலைகுனித்தான்" என்று திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்தமையுங் காண்க. 'தம்முடைய கையாலேயிறே தண்டிப்பது; ......தம்முடைய தோளாயிருக்கிற இளையபெருமாளை இடுவித்துத் தண்டிப்பித்தார்' என்ற வியாக்கியானவாக்கியமும் உணரத்தக்கது. (சகூ)

௫௦. வண்மைதிகழ் வெண்பளிங்கு வட்டத்திற் கண்டுயின்மான்
விண்மதியின் மானேய்க்கும் வேங்கடமே—யொண்மதியா
னூலைத்தா மோதரனார் நோக்கவரி யார்துளவ
மாலைத்தா மோதரனார் வாழ்வு.

(இ - ள்.) வண்மை திகழ் - அழகியதாக விளங்குகின்ற, வெள் பளிங்கு வட்டத்தில் - வெண்ணிறமான வட்டவடிவுள்ள பளிக்குப்பாறையில், கண் துயில் - படுத்துத்தூங்குகிற, மான்—, விண் மதியின் மான் ஏய்க்கும்-வானத்துச் சந்திரமண்டலத்தின் நடுவிலே காணப்படுகிற மான்வடிவத்தை யொத்திருக்கப்பெற்ற, வேங்கடமே—,—ஒள் மதியால்-சிறந்த புத்தியினால்[தமது புத்திவிசேஷத்தால்], நூலை தாம் ஓது - பல நூல்களைத் தாம்ஓதிய, அரனார்-சிவபெருமானாலும், நோக்க அரியார்-கட்புலனாகக்கண்டு தரிசிக்க முடியாத

வரும், துளவம் மாலை - திருத்துழாய்மாலையையணிந்த, தாமோதரனுர்-தாமோதரனென்ற ஒருதிருநாம முடையவருமாகிய திருமால், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

பளிங்குவட்டத்துக்குச் சந்திரமண்டலமும், அதனிடையே அசையாது துயில்கிற மானுக்குச் சந்திரமண்டலத்தின் நடுவிலே அசைவின்றிக்காணப்படுகிற மான்வடிவமும் உவமை; வடிவுபற்றியது. பளிங்கு-ஸ்படிகம். வ்ருத்த மென்னும் வடமொழி, வட்டமெனச் சிதைந்தது. எய்க்கும் - உவமவுருபு. மதி - அறிவைக் குறிக்கையில், வடசொல். தாம் - அசை. ஓதுதல் - கற்றலும், கற்பித்தலும், நூலியற்றலும். தாமோதர என்ற வடசொல் - தாம + உதர எனப் பிரிந்து, (வெண்ணெய் களவாடினதற்கு ஒருதண்டனையாக யசோதையாற் கட்டப்பட்ட)கயிற்றை வயிற்றிலுடையவனென்று காரணப் பொருள்படும்; தாமம் - கயிறு, உதரம் - வயிறு. (ருo)

சிலேடைகள்.

ருக. காதலிற்றுச் சார்தவர்க்குங் காமியத்தைச் சார்ந்தவர்க்கும்
வேதனைக்கூற் றைத்தவிர்க்கும் வேங்கடமே—போதகத்தை
மோதி மருப்பொசித்தார் முன்பதினா றாயிரவ
ரோதி மருப்பொசித்தா ரூர்.

(இ - ள்.) காதல் இற்று சார் தவர்க்கும் - (பிரபஞ்சவாழ்வில்) ஆசை (முழுவதும்) ஒழிந்து (தன்னிடம்வந்து)சேர்ந்த முனிவர்களுக்கும், வேதனை கூற்றை தவிர்க்கும் - பிரமனையும் யமனையும் விலக்குகின்ற: காமியத்தை சார்ந்தவர்க்கும் - பிரபஞ்சவாழ்வுகளை விரும்பியவர்களுக்கும், வேதனை கூற்றை தவிர்க்கும் - துன்பங்களின்வகைகளை ஒழிக்கின்ற: வேங்கடமே—, —போதகத்தை - யானையை, மோதி - தாக்கி, மருப்பு ஒசித்தார் - அதன் தந்தங்களை முறித்தவரும், முன் - முற்காலத்தில் [கிருஷ்ணாவதாரத்தில்], பதினாறாயிரவர் - பதினாறாயிரம் இளமங்கையருடைய, ஓதி - கூந்தலின், மரு - நறுமணத்தை, பொசித்தார் - மோந்து நுகர்ந்தவருமான திருமாலினது, ஊர் - வாசஸ்தாநமாம்; (எ - று.)

'வேதனைக்கூற்றைத்தவிர்க்கும்'என்ற தொடர்-வெவ்வேறுவகையாகப் பிரியாது ஒருவகையாகவே பிரிந்து இருபொருள்பட்டதனால், செம்மொழிச் சிலேடை; இது, வடமொழியில் அபிந்நபதச்லேஷா எனப்படும்:பிறவும் இங்ஙனம் வருவன காண்க. காதலிற்றுச்சார்தவராவார் - எல்லாவகைப்பற்றுக்களையும் முற்றத்துறந்து முத்திபெறுதற்பொருட்டுத் திருவேங்கடமுடையானை வந்து சரணமடைகிற முனிவர்கள்: அவர்கட்குப் பிரமனையும் யமனையும் விலக்குகின்ற என்றது - பிரமனால்வரும் பிறப்பையும், யமனால்வரும் இறப்பையும் போக்கி முத்தியளிக்கிற மகிமையையுடையஎன்றபடி.வேதன் என்றது - அவனது காரியமான ஜநநத்துக்கும், கூற்று என்றது - அவனது காரியமான மரணத்துக்கும் இலக்கணை. காமியத்தைச் சார்ந்தவராவார் - அழியுந்தன்மையனவான இம்மைமறுமைப்பேறுகளை விரும்பி வந்து சேர்ப

வர்கள். அவர்கட்குத் துன்பவகைகளை ஒழிக்கின்ற என்றது - "பித்து மல மேமை மூடம் பேய் குருடு கூன் செவிடு, மெய்த்துயர்நோய் தீர்த்தருளும் வேங்கடமே" என்றவாறு அவர்களுடைய உடற்குற்றங்களையும் நோய்களையும் மகப்பேறின்மைமுதலிய மநோவியாதிகளையும் நீக்கி அவர்கள்வேண்டிய பயன்களை அவர்கட்கு வேண்டியவாறே உண்டாகச்செய்கின்ற சிறப்பையுடைய என்றபடி. பற்றற்றுவந்தவர்க்கும் பற்றுறுதுவந்தவர்க்கும் சமமாக இடையூறகற்றியருள்கின்ற வேங்கடமெனச் சொல்நயத்தாற் சமத்காரந் தோன்றக் கூறியவாறு காண்க.

கண்ணபிரான் இளமையில் திருவாய்ப்பாடியில்வளரும்போது தன்னிடங் காதல்கொண்ட பதினாறாயிரம் கோபஸ்த்ரீகளோடுகூடி இன்பம்நுகர்ந்தமையும், கண்ணன் நரகாசுரனைச் சங்கரித்தபின்பு அவனாற் சிறைவைக்கப் பட்டிருந்த தேவசித்தகந்தருவாதி கன்னிகைகள் பதினாறாயிரம் பேரையும் பதினாறாயிரம் வடிவமெடுத்து விவாகஞ்செய்துகொண்டு அவர்களோடுகூடி இன்பம்நுகர்ந்தமையும் பற்றி, 'பதினாறாயிரவரோதி மருப்பொசித்தார்'என்றார். 'ஓதிமருப்பொசித்தார்' என்றது - அவர்களுடைய கூந்தலில் உத்தம இலக்கணமாக இயற்கையில் அமைந்துள்ள நறுமணத்தையும், நறுநெய்பூசி நன்மலர்சூடுதலாற் செயற்கையில்அமைந்த நறுமணத்தையும் உட்கொண்டு உளங்களித்தவ ரென்றபடி. ஐம்பொறிகளாலும் அனுபவிக்கும் இன்ப வகைகளுள் இங்கு மூக்கினாற் புலம்நுகர்ந்ததைக் கூறியது, பிறவாறு இன்பம் நுகர்ந்ததற்கும் உபலக்ஷணம்.

உம்மைகள் - எண்ணுப்பொருளன. இற்று என்ற வினையெச்சத்தில், இறு என்ற குறிவினைப்பகுதி இடைஒற்றுஇரட்டி இறந்தகாலங் காட்டிற்று. சார்தவர் - வினைத்தொகை. தவர் - தவஞ்செய்பவர். 'காதலித்துச்சார்ந்தவர்' என்று பாடமோதி, (பரமபதத்தைப்பெற) விரும்பித் தன்னைவந்தடைந்தவர் என்று உரைப்பாரும் உளர். காம்யம் - வடசொல்; விரும்பப்படும் பொருள். வேதன் - வேதங்களை ஓதியவன்; அன்றி, வேதா என்னும் வடசொல்லின் விகார மெனக்கொண்டால், விதிக்குங் கடவு ளென்று ஆகும்; விதித்தல் - படைத்தல். கூற்று - (உடலையும் உயிரையும் வெவ்வேறு) கூறாக்குபவன். இரண்டாம் பொருளில் வேதநா என்ற வடசொல் வேதனையென விகாரப்பட்டது. கூற்றை என்றது - கூறுஎன்பதன் இரண்டாம் வேற்றுமை விரி. 'தவிர்க்கும் வேங்கடம்' என்றதில், நிலைமொழியிறுதியில் நின்ற மகரவொற்று - வகரத்தின்முன் வந்ததனால், மகரக்குறுக்கம்; மாத்திரை - கால். போதகம்-வடசொல். போதகத்தை மோதி மருப்பொசித்தார்- போதகத்தை மருப்புஒசித்துமோதினார் என விகுதிபிரித்துக் கூட்டலுமாம். முன் - காலமுன்; இதனை, மத்திமதீபமாக முன்நின்ற 'ஒசித்தார்' என்பதனோடும் இயைக்கலாம். ஒசித்தார், பொசித்தார் - உயர்வுப்பன்மை. பதினாறாயிரவர் - எண்ணடியாப்பிறந்தபெயர்; இங்கே, தொகைக்குறிப்பு. ஓதி - பெண்மயிர். பொசித்தல் = புஜித்தல். புசித்தல், உண்ணல், நுகர்தல், துய்த்தல்என்பன - ஒருபொருளன. 'ஊர்' என்றது - திருமாலுக்குத் திருவேங்கடம் இயல்பிலுரியதாதலை விளக்கும். (௫௧)

ருஉ. கேள்வித் துறவோருங் கேடறவில் வாழ்வோரும்
வேள்விக் கினமாற்றும் வேங்கடமே—மூள்வித்து
முன்பா ரதமுடித்தார் மொய்வேந்தர் வந்தவிய
வன்பா ரதமுடித்தார் வாழ்வு.

(இ - ள்.) கேள்வி துறவோரும் - ஞானக்கேள்விகளையுடைய துறவிகளும், வேள் விக்கினம் மாற்றும் - மன்மதனால் வரும் இடையூற்றை நீக்குதற்கு இடமான: கேடு அற இல் வாழ்வோரும் - தீங்கில்லாமல் இல்லறவொழுக்கத்தில் வாழ்பவர்களும், வேள்விக்கு இனம் ஆற்றும் - யாகத்துக்கு இனமான நற்செயல்களைச்செய்தற்குஇடமான:வேங்கடமே—,—முன்பு ஆ-முற்காலத்தில், ரதம் முடி தார் மொய் வேந்தர் வந்து அவிய - தேரையும் கிரீடத்தையும் மாலையையும் உடைய வலிய அரசர்கள் வந்து(பொருது)இறக்கும்படி, வல் பாரதம் - கொடிய பாரதயுத்தத்தை, மூள்வித்து முடித்தார் - மூட்டிநிறைவேற்றியவராகிய திருமாலின், வாழ்வு - வாசஸ்தாநம் ; (எ-று.)

'வேள்விக்கினமாற்றும்' என்ற தொடர் - வெவ்வேறுவகையாகப் பிரிந்து இருபொருள்பட்டதனால், பிரிமொழிச்சிலேடை; இது, வடமொழியில் பிந்நபதச்லேஷா எனப்படும் : பிறவும் இங்ஙனம் வருவன காண்க. கேள்வித்துறவோர்-'ஞானம் அநுட்டானம் இவை நன்றாகவேயுடையனான குரு' வினிடத்து உபதேசமொழிகளைக் கேட்டுஉணர்ந்து பற்றுக்களைத்துறந்தவரென்றபடி. முத்தியளித்தற்குஉரிய முதற்பொருளை உணர்வதற்கு ஏற்ற உபாயங்களான கேள்வி விமர்சம் பாவனை என்ற மூன்றனுள் முதலதும், மற்றை இரண்டற்குங் காரணமுமான கேள்வியையுடைமை கூறப்பட்டது. கேள்வி யெனினும், சிரவண மெனினும் ஒக்கும். துறவோர் - துறவையுடையோர் ; துறவாவது - புறமாகிய செல்வத்தினிடத்தும் அகமாகிய உடம்பினிடத்தும் உளதாகிய பற்றை விடுதல். அவர்கள் வேள் விக்கின மாற்றுதல் -எக்காரணத்தாலும் காமஅவாவைக்கொள்ளாமை. கேடு - துன்பமும், குற்றமும். இல்வாழ்வோர் வேள்விக்கு இனம் ஆற்றுதல் - பிரமயஜ்ஞம், தேவயஜ்ஞம், மநுஷ்யயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், பூதயஜ்ஞம் என்ற பஞ்சமகாயஜ்ஞங்களைத் தவறாதுசெய்தல் ; (பிரமயஜ்ஞம் - வேதமோதுதல். தேவயஜ்ஞம் - ஓமம்வளர்த்தல். மநுஷ்யயஜ்ஞம் - விருந்தினரை உபசரித்தல். பித்ருயஜ்ஞம் - தர்ப்பணஞ்செய்தல். பூதயஜ்ஞம் - பலியீதல்.) இவை இல்லறத்தார்க்குஉரிய ஐம்பெருவேள்வி யெனப்படும். துறவறத்தாரும் இல்லறத்தாரும் சமமாக அவரவர் தொழிலைச் செய்யப்பெற்ற வேங்கட மெனச் சொல்நயத்தாற் சமத்காரந்தோன்றக் கூறியவாறு காண்க.

துஷ்டர்களையெல்லாம்சங்கரித்துப்பூமிபாரநிவிருத்திசெய்தற்பொருட்டுத் திருவவதரித்த கண்ணபிரான் அதற்கு உபயோகமாகப் பாண்டவர்க்குத் துணைநின்று பலபடியாகஉதவிப் பாரதயுத்தத்தை ஆதியோடந்தமாகநடத்தி முடித்தமை, மகாபாரதத்திற் பிரசித்தம். சூதுபோரில் இழந்த இராச்சியத்தை மீளவும் மோதுபோர்செய்து பெறுவதில் தருமபுத்திரனுக்கு உபேக்ஷையுண்டானபொழுதெல்லாம் அங்ஙனம் வெறுப்புக்கொள்ளாதவண்ணம்

பலவாறுபோதித்துப் போர்தொடங்கும்படி தூண்டியும்,பின்பு போர்த்தொடக்கத்தில் "உற்றாரையெல்லா முடன்கொன் றரசாளப், பெற்றாலும்வேண்டேன் பெருஞ்செல்வம்" என்றுசொல்லிப் போரொழிந்த அருச்சுனனுக்குக் கீதையைஉபதேசித்து அவனைப்போர்புரிய உடன்படுத்தியும் கண்ணபிரானே பாரதப்போரை மூட்டியவனாதல் காண்க.

கேள்வி - கேட்டல்: ' வி 'விகுதி பெற்றதொழிற்பெயர். இல் - வீடு, இல்லறம். வேள் - (ஆடவர்க்கும் மகளிர்க்கும்) விருப்பத்தை விளைக்குந் தேவன்; அல்லது, விரும்பப்படும் அழகையுடையவன்: காமனென்ற வடமொழிப்பெயரும் இவ்விருபொருள்படும். விக்ரம் - வடசொல். மாற்றும் வேங்கடம், ஆற்றும் வேங்கடம் - பெயரெச்சம், இடப்பெயர் கொண்டது. ' முன்பா ' என்றது - அவிய, மூள்வித்து, முடித்தார் என்றவற்றோடு இயையும். முன்பு, பு - சாரியை. ஆ - ஆக என்பதன் விகாரம். ரதம் - வடசொல். சிந்தாமணியில், ' ரவிகுலதிலகன் ' என வடமொழியிற்பிறந்தவண்ணமே தற்சமமாகக் கூறினாற்போல, இங்கு இரதமெனத் திரியாமல் ரதமென்றே கூறினர். ' ரதவேந்தர் ' என்றது - அதிரத மகாரத சமரத அர்த்தரத வீர ரென்றவாறு. முடிவேந்தர் - கிரீடாதிபதிகளான அரசர். தார் என்றது, இங்கு - அடையாளப்பூமாலையோடு போர்ப்பூமாலையையுங் குறிக்கும். பாரதம் - பரதவமிசத்தாருள் நிகழும் போர். வாழ்வு என்ற சொல்லின் ஆற்றலால், திருவேங்கடம் திருமாலின் திருவுள்ளத்துக்கு மிகப்பாங்காயிருத்தல் விளங்கும். (௫௨)

௫௩. பொய்யாம் வினையேனைப் போல்வாரு மன்பருஞ்செய்
மெய்யாம் வழுத்தேயும் வேங்கடமே—செய்யா
டனத்துவசப் பொற்புள்ளார் தானவரை மோதுஞ்
சினத்துவசப் பொற்புள்ளார் சேர்வு.

(இ - ள்.) பொய் ஆம் வினையேனை போல்வாரும் - பொய்கலந்ததொழிலையுடைய என்னைப் போன்ற நீசர்களும், செய் - செய்த, மெய் ஆம் வழு - சரீரசம்பந்தத்தாலாகிய குற்றங்கள் [கருமங்கள்], தேயும் - நீங்குதற்கு இடமான: அன்பரும் - உள்ளன்புடைய அடியார்களும், செய்-செய்கின்ற, மெய் ஆம் வழுத்து - உண்மையான தோத்திரங்கள், ஏயும் - பொருந்தப்பெற்ற: வேங்கடமே—,—செய்யாள் தனத்து வசம் - திருமகளினது தனத்துக்கு வசப்பட்ட, பொற்பு உள்ளார் - அழகையுடையவரும், தானவரை மோதும் - அசுரர்களைத் தாக்குகின்ற, சினம்-கோபத்தையுடைய, துவசம்-கொடியான, பொன் புள்ளார்-பொன்னிறமான கருடனென்னும் பறவையையுடையவருமாகிய திருமால், சேர்வு - (திருவுள்ளமுவந்து) சேருமிடம்; (எ - று.)

பொய்யாம்வினை - உள்ளன்பின்றி அகமொன்று புறமொன்றாக வெளிவேடங்கொண்டு செய்யும் வஞ்சனைச்செயல், ' பொய்யாம் வினையேனைப் போல்வார் ' என்று தம்மைத் தாம் இழித்துக்கூறினர், விநயத்தால். மெய்யாம் வழுத்து - மனப்பூர்வமாகச் செய்யுந் தோத்திரம். போலியன்பரும்

உண்மையன்பரும் ஒருநிகராகஇருக்கப்பெற்ற வேங்கடமெனச் சொல்நயத் தாற் சமத்காரந்தோன்றக் கூறியவாறுகாண்க. முன்னிரண்டடியில் 'பொய் யாம்', 'மெய்யாம்' என மாறுபட்ட சொற்கள் வந்தது, முரண்தொடை.

'செய்யாள் தனத்துவசம்' என்றது - பொற்புள்ளார்க்கு அடைமொழி. இத்தொடர் - திருமகளினது திருமேனியழகில் திருமால் ஈடுபடுதலையும், அத்திருமகளை ஈடுபடுத்தவல்ல திருமாலின் திவ்வியசௌந்தரியத்தையும் விளக்கும். துவசப்பொற்புள்ளார் - பக்ஷிராஜனான கருடனை வாகனமுங் கொடியுமாக உடையவர். கருடாழ்வானது திருத்தோளின்மேல்ஏறித் திரு மால் அசுரசேனையோடு போர்செய்யும்பொழுது, அக்கருடனும் எதிர்க்கிற அசுரர்மீது கோபம்மூண்டு தன்சிறகுகளினாலும் மூக்கினாலும் கால்களினா லும் அவர்களைத் தாக்கியழித்தல் இயல்பு.

வழுத்து - முதனிலைத்தொழிற்பெயர். செய்யாள்-செந்நிறமுடையவள்; செம்மையென்னும்பண்புப்பகுதி ஈறுபோய் முன்நின்றமகரம்யகரமாத்திரிந் தது. ஸ்தநம், வசம், தாநவர், த்வஜம் - வடசொற்கள். தாநவர் - (காசியப முனிவனது மனைவியருள்) தநுஎன்பவளிடம் பிறந்தவர்: தத்திதாந்தநாமம். "பொற்பே பொலிவு" என்ற தொல்காப்பியத்து உரியியற்சூத்திரத்தால், பொற்புஎன்பது - உரிச்சொல்லென அறிக. 'சேர்பு' என்றும் பாடமுண்டு.

ருச. கோடலிலா வுள்ளத்துக் கோதி லடியவரும்
வேடருமங் கைவரைவெல் வேங்கடமே—மூடர்
மனமா மனைக்கொன்றார் வன்கஞ்ச னென்னுஞ்
சினமா மனைக்கொன்றார் சேர்பு.

(இ - ள்.) கோடல் இலா - கோணுதலில்லாத [நேர்வழிப்பட்ட], உள் ளத்து-மனத்தையுடைய, கோது இல் - குற்றமில்லாத, அடியவரும்-அடியார் களும், அங்கு ஐவரை வெல் - அவ்விடத்துப் பஞ்சேந்திரியங்களை வெல்லு தற்கு இடமான : வேடரும் - வேடர்களும், அம் கை வரை வெல் - அழகிய துதிக்கையையுடைய மலைபோன்றயானையை வெல்லுதற்குஇடமான:வேங் கடமே—,—மூடர் மனம் ஆம் மனைக்கு ஒன்றார் - மூடர்களுடைய உள்ள மாகிய வீட்டில் வந்து பொருந்தாதவரும், வல் கஞ்சன் என்னும் சினம் மாமனை கொன்றார்-கொடிய கம்சனென்கிற கோபத்தையுடைய மாமனைக் கொன்றவருமாகிய திருமால், சேர்பு - சேருமிடம்; (எ - று.)

'அங்கு' என்பது-அசையுமாம். ஐம்பொறிகளை 'ஐவர்' என உயர்திணை யாற்கூறியது, இழிபுபற்றிய திணைவழுவமைதி. ஐந்து என்னும் எண்ணி னடியாப்பிறந்த ஐவரென்ற பெயர் - இங்கே தொகைக்குறிப்பு. 'கைவரை' என்றார், யானையை ; 'கைம்மலை' என்றாற்போல. மூடர், மநஸ் - வடசொற் கள். 'மூடர் மனமாம் மனைக்கு ஒன்றார்' என்றது - "மலர்மிசையேகினான்" என்றபடி, அன்புகொண்டு தியானிக்கின்ற அறிவுடையாரது உள்ளக்கமல த்தைத் தாம் உகக்குமிடமாகக்கொண்டு அங்கு அவர்நினைத்தவடிவத்துடன் விரைந்து சென்று வீற்றிருக்குந் தன்மையரென்ற எதிர்மறைப்பொருளை

நன்குவிளக்கும். மனைக்கு என்ற நான்கனுருபு ஏழனுருபின் பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். கஞ்சன் - வடசொற் சிதைவு.

மாயன் - இங்கு, தாயுடன்பிறந்தவன். கம்ஸன்-கண்ணனது தாயான தேவகிக்குத் தமையனாதலால், கண்ணனுக்கு மாமனாவன். தன்னைக்கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் யசோதையினிடம் ஒளித்துவளர்தல் முதலிய விருத்தாந்தங்களை நாரதர்சொல்லக்கேட்டுக் கம்சன் அதிககோபங்கொண்டு கிருஷ்ணனைக் கொல்ல நிச்சயித்து வில்விழாவென்கிற வியாஜம் வைத்துக் கண்ணனை மதுரைக்கு வரவழைத்துப் பலவகையில் வதைக்க வழிதேடுகையில், கம்சசபையில் கிருஷ்ணபகவான் வேகமாகஎழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின்மேலேறி அவனது கிரீடம் கழன்று கீழேவிழும்படி அவனைத் தலைமயிர் பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான் விழுந்து அவனைக் கொன்று ஒழித்தன னென்பது, இங்குக் குறித்த வரலாறு. (௫௪)

௫௫. மொய்வதன மங்கையர்கண் முன்கையும் யோகியர்கண்
மெய்வயது மஞ்சுகமார் வேங்கடமே—பெய்வளையார்
பாற்றிருப்பா தஞ்சிவந்தார் பற்றினார் புன்பிறப்பை
மாற்றிருப்பா தஞ்சிவந்தார் வாழ்வு.

(இ-ள்.) மொய்-(அழகு) மிக்க, வதனம் - முகத்தையுடைய, மங்கையர்கள்-மகளிரது, முன் கையும் - முன்னங்கையும், அம் சுகம் ஆர்-அழகிய கிளி (உணவுண்ணுதற்கு) இடமாகப்பெற்ற; யோகியர்கள் மெய் வயதும் - யோகநிட்டையிலிருக்கின்ற முனிவர்களுடைய உடம்பின் ஆயுளும், அஞ்சு உகம் ஆர்-ஐந்துயுகமாகப் பொருந்தப்பெற்ற: வேங்கடமே—,— பெய் வளையார் பால் திருப்பாது-அணிந்த வளையல்களையுடைய மகளிர்பக்கல் (மனத்தைச்) செலுத்தாமல், அஞ்சி-அச்சங்கொண்டு, வந்தார் பற்றினார் - தம்மிடம் வந்து சரணமடைந்தவர்களுடைய, புல் பிறப்பை - இழிவான சன்மத்தை, மாற்று-நீக்குகின்ற, இரு பாதம் - தமது இரண்டு திருவடிகளும், சிவந்தார் - சிவந்திருக்கப்பெற்றவரான திருமால், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

'மொய்தவனம்' என்பதற்கு - (தாமரைமலரென்று மயங்கி வண்டுகள்) மொய்க்கப்பெற்ற முகமென்று உரைத்தலும் ஒன்று. மங்கையர்-இளமகளிர்; மங்கைப்பருவத்துக்கு வயதெல்லை - பன்னிரண்டுமுதற் பதின்மூன்றளவும். வயஸ்,வதநம், சுகம், பாதம்-வடசொற்கள். அஞ்சு - ஐந்தென்பதன் முழுப்போலி. திருவேங்கடமலையிலுள்ள மகளிர்கையிற் கிளியைவைத்துக்கொண்டு அதற்குஉணவூட்டி அதனோடுகொஞ்சிவிளையாடுதலும், அங்குள்ள யோகிகள் அவ்யோகபலத்தால் நீடூழிகாலம் வாழ்தலும், இங்குக்குறிக்கப்பட்டன. யுகமென்பது,உகமெனவிகாரப்பட்டது. ஆர்தல்-உண்ணுதலும், பொருந்தலும். பெய்வளை - வினைத்தொகை. வந்தார்-முற்றெச்சம். இருபாதம் என்ற தொடர் 'இருப்பாதம்' என வருமொழி முதல்வலி மிக்கது, திரிபுநயம் நோக்கியென்க. இதனைச் சிறுபான்மை எதுகைநயத்தின்பொருட்டு'ஒருக்கால்'என வருதல்போலக் கொள்க: அன்றி, முற்றியலுகரவீறுகிய எண்ணுப்பெயரின்

முன் வலிமிகாமை காண்க. 'செம்' என்ற பண்படிப்பகுதி வினைத்தன்மைப் படும்போது 'சிவ' என விகாரப்படும். பாதம்சிவக்திருத்தல், உத்தமஇலக்கணம். புன்பிறப்பு என்றது, கர்மசம்பந்த முடைமைபற்றி. பிறப்பைமாற்றுதல்-மீளவும்பிறக்கவேண்டாதபடி முத்திதருதல். திருப்புதலென்றவினைக்கு மனத்தையென்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது, அவாய்நிலையால்; (அவாய்நிலையாவது-ஒருசொல் மற்றொருசொல்லை வேண்டிநிற்றல்.) (௫௫)

௫௬. இல்லக் குறத்தியரும் யாக்கைநிலை வேட்டவரு
மெல்லக் கிழங்கெடுக்கும் வேங்கடமே—நல்ல
புதுப்பூவை வண்ணத்தான் போர்முகத்துச் செவ்வாய்
மதுப்பூவை வண்ணத்தான் வாழ்வு.

(இ - ள்.) இல்லம் குறத்தியரும் - (தமக்குஉரிய) வீட்டில் இருக்கின்ற குறப்பெண்களும், மெல்ல கிழங்கு எடுக்கும் - மென்றுதின்னும்பொருட்டுக் கிழங்குகளைத் தோண்டி எடுக்கப்பெற்ற:யாக்கை நிலை வேட்டவரும் - உடம்பு (அழிதலின்றி நெடுநாள்) நிலைத்திருத்தலை விரும்பிய சித்தர்களும், மெல்ல கிழம் கெடுக்கும் - மெதுவாக [நாளடைவில்] முதுமைப்பருவத்தை ஒழிக்கப்பெற்ற : வேங்கடமே—,—நல்ல புது பூவை வண்ணத்தான்-சிறந்த புதிய [அன்றுமலர்ந்த]காயாம்பூப்போன்ற கரியதிருநிறத்தையுடையவனும், போர்முகத்து - யுத்தகளத்தில், செம் வாய் மது பூ வை - சிவந்த தனது திருவாயாகிய தேனையுடைய தாமரைமலரில் வைத்துஊதுகின்ற, வள் நத்தான் - மேன்மையுள்ள (ஸ்ரீபாஞ்சஜந்ய மென்னுந் திவ்விய) சங்கத்தை யுடையவனுமாகிய திருமால், வாழ்வு - வாழுமிடம் ; (எ - று.)

இல்லம், அம் - சாரியை. குறத்தியர் - குறிஞ்சிநிலத்துமகளிர் ; குறவரென்பதன் பெண்பால். யாக்கை - (எலும்பு நரம்பு முதலியவற்றால்) கட்டப்பட்டதெனப் பொருள்படுங் காரணப்பெயர் ; யா - பகுதி ; யாத்தல் - கட்டுதல் : ஐ - செயப்படுபொருள்விகுதி, கு - சாரியை, க் - சந்தி. நிலை - நிற்றல் : 'ஐ' விகுதிபெற்ற தொழிற்பெயர். வேட்டவரென்ற இறந்தகால வினையாலணையும்பெயரில், வேள்-பகுதி. 'மெல்ல' என்றது-முந்தியபொருளில், மெல்என்ற வினைப்பகுதியடியாப் பிறந்த எதிர்காலச்செயவெனெச்சமும் ; பிந்தினபொருளில், மென்மைஎன்ற பண்பினடியாப் பிறந்த குறிப்பு வினையெச்சமுமாம். பூவை யென்ற செடியின்பெயர், இங்கு அதன் மலர்க்கு முதலாகுபெயர். வாயாகிய பூ என்றது - உருவகம். வாய்க்குத் தாமரைமலர் உவமை - செம்மையும் மென்மையும் அழகும் பற்றி. உபமானமாகிய பூவிற்கு ' மது ' என்ற அடைமொழி கொடுத்ததற்கு ஏற்ப, உபமேயமாகிய வாய்க்குச் சுவையினிமைகொள்க. வை-வினைத்தொகை. வர்ணமென்ற வடமொழி வண்ணமெனச் சிதைந்தது. வள்நத்து - பண்புத்தொகை. திருமால் போர்க்களத்தில் பகைவரை அஞ்சுவித்தற்காகவும், தனது வெற்றிக்கு அறிகுறியாகவும் சங்கத்தைவாயில்வைத்து முழக்குதல் இயல்பு. மது-வடசொல்.

ருஎ. தேனியலுங் கூந்தலார் செங்கரமு மாதவத்தோர்
மேனியுமை யம்பொழியும் வேங்கடமே—ஞானியர்க
டாங்குறியெட் டக்கரத்தார் தாளுரன்மேல் வைத்துவெண்
தாங்குறியெட் டக்கரத்தார் சார்பு. [ணெய்

(இ - ள்.) தேன் இயலும் கூந்தலார்-(சூடிய மலர்களினின்று சொரிகின்ற)தேன்பொருந்திய கூந்தலையுடைய மகளிரது, செம் கரமும்-சிவந்தகைகளும், ஐயம் பொழியும் - (இரப்பவர்க்கு மிகுதியாகப்) பிச்சையிடப்பெற்ற: மா தவத்தோர் மேனியும் - சிறந்ததவத்தையுடைய முனிவர்களதுஉடம்பும், ஐ அம்பு ஒழியும் - (மன்மதனது) பஞ்சபாணம் பொருந்தாதிருக்கப்பெற்ற: வேங்கடமே—,—ஞானியர்கள் குறி- (தத்துவ) ஞானமுடையவர்கள் குறிக்கொண்டு தியானிக்கின்ற, எட்டு அக்கரத்தார் - அஷ்டாக்ஷரமகாமந்திரத்துக்கு உரியவரும், உரல்மேல்தாள் வைத்து-உரலின்மேற்காலைவைத்துஏறி, வெண்ணெய்தாங்கு உறி எட்டு - வெண்ணெய் வைத்துள்ள உறியை எட்டிப்பிடித்த, அ கரத்தார் - அழகிய கையை யுடையவருமாகிய திருமால், சார்பு-(திருவுள்ளமுவந்து) சார்ந்திருக்குமிடம் ; (எ - று.)—தாம் - அசை.

தேன்இயலும்கூந்தல்-நல்லமணத்தேசெல்லும் இயல்புள்ள தேனென்னும் உத்தமசாதிவண்டுகள் இயற்கைநறுமணத்தின்பொருட்டும் செயற்கைநறுமணத்தின்பொருட்டும்மிகுதியாகமொய்க்கப்பெற்ற கூந்தலெனினுமாம். மாதவத்தோர் மேனி ஐயம்பொழிதலாவது - அவர்கள் காமவசப்படாதிருத்தல் ; மன்மதபாணம் அவர்களுடம்பைத் துளைத்துவருத்தமாட்டாதனவாயினவென்க. ஐ அம்பு - தாமரைமலர், அசோகமலர், மாமலர், முல்லைமலர், நீலோற்பலமலர் என்ற ஐந்துபூக்களும் மன்மதனுக்குப் பாணங்களாம். ஜ்ஞாநீ என்ற வடசொல், 'ஞானி' என விகாரப்பட்டது. குறி - வினைத்தொகை. எட்டக்கரம்-திருவெட்டெழுத்தாகிய பெரியதிருமந்திரம். அக்ஷரமென்ற வடசொல், அக்கரமென விகாரப்பட்டது. கரம் - வடசொல். 'அம்' என்பதுபோல 'அ'என்பதும் அழகிய என்னும்பொருளதாதலை, பத்துப்பாட்டுநச்சினார்க்கினியருரையிற் காண்க. "பொத்தவுரலைக்கவிழ்த்ததன்மேலேறித்,தித்தித்தபாலுந் தடாவினில்வெண்ணெயும், மெத்தத்திருவயிறாரவிழுங்கிய, வப்பன்" என்ற பெரியாழ்வார்திருமொழியும், "தந்த முறியி லவர் வைத்த தயிர்பால்வெண்ணெ யெட்டாமற், குந்தி யுரலின்மிசை யேறி" என்ற வில்லிபுத்தூரார்வாக்கும், இங்கு ஒப்புநோக்கத்தக்கன. 'சார்வு' என்றும் பாடம். (ருஎ)

ருஅ. காணையிலார் சொற்கேட்ட கந்தருவ ருந்தவரும்
வீணையிரா கத்தைவிடும் வேங்கடமே—கோணை
யிருங்குண்டை யோட்டினு னேற்பொழித்தான் கூனி
மருங்குண்டை யோட்டினான் வாழ்வு.

(இ - ள்.) காண் ஐயிலார் சொல் கேட்ட - பார்க்கின்ற வேல்போன்ற கண்களையுடைய மகளிர் பேசுகின்ற சொற்களைச் செவியுற்ற,கந்தருவரும்-

கந்தர்வரென்னுந் தேவசாதியாரும், வீணை இராகத்தை விடும் - (அச்சொற்களின் இனிமைக்குமுன் தாம் பாடும் இசையின்இனிமை சிறவாதென்னுங் கருத்தினால்) வீணையில் இசைவாசித்தலை ஒழியப்பெற்ற: தவரும் - தவவொழுக்கத்தையுடைய முனிவர்களும், வீணே இராகத்தை விடும் - பயனில்செய்கைகளையும் ஆசையையும் துறக்கப்பெற்ற: வேங்கடமே—,—கோணை இருகுண்டை - வலிமையையுடைய பெரியஎருதை வாகனமாகவுடைய, ஓட்டினான் - (கையிற்) கபாலமேந்தியவனான சிவபிரானது, ஏற்பு - இரத்தல்தொழிலை, ஒழித்தான் - நீக்கியருளியவனும், கூனிமருங்கு உண்டை ஓட்டினான்- (கிருஷ்ணாவதாரத்திற்) கூனியினிடத்து உள்ள உண்டையைப் போக்கியவனுமான திருமால், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

காணையி லெனவே, கண்ணாயிற்று. கண்ணுக்கு வேல் உவமை - கூரிய வடிவுபற்றியேயன்றி, ஆடவரை ஆசைநோய்ப்படுத்தி வருத்துதல்பற்றியுமாம். காணையிலார் என்றது - அம்மலையில்வாழும் மகளிரது கண்ணழகின் சிறப்பை விளக்கும். அயிலென்பது ' ஐயில் ' என முதற்போலி. கந்தர்வர்-எப்பொழுதும் கையில் வீணைவைத்துக்கொண்டு இசைபாடித்திரியுந் தேவசாதியார். வீணா, ராகம் - வடசொற்கள். இரண்டாம்பொருளில், வீண் ஐ இராகத்தை விடும் எனப் பிரித்து - பயனற்ற ஐம்புலவாசைகளை ஒழிக்கப்பெற்ற என்று உரைத்தலும் ஒன்று.

கோணை - முசுப்பெனப்படுகிற முதுகின்வளைவுமாம். இருங்குண்டை-பண்புத்தொகை ; இருமை - பெருமை. குண்டை - ரிஷபம். ஓட்டினான் - ஓடு என்னும் பெயரினடியாகப் பிறந்த ஆண்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர் ; ஓடு-மண்டையோடு. இனி, 'குண்டை யோட்டினான்' என்பதற்கு-ரிஷபத்தை ஏறிச் செலுத்தியவனென்று உரைத்தல் திரிபிலக்கணத்துக்குப் பொருந்தாதாம்; நான்காம் அடியில் 'ஓட்டினான்' என்பது - ஓடச்செய்தவனென்னும் பொருளதாதல் காண்க. ஏற்பு - ஏற்றல் ; ' பு ' விகுதி பெற்ற தொழிற்பெயர் : ஏல் - பகுதி.

கூனி - கூனையுடையவள் ; இவள் - நைகவக்ரையென்னும் பெயருடையவள்; இவளது கூனை நிமிர்த்தது, கிருஷ்ணாவதாரத்தில். 'கூனிமருங் குண்டை' என்றது - அவளுடம்பிலுள்ள கோணலையும், முதுகுவளைவையுங் குறிக்கும். உண்டை = உருண்டை. இனி, 'கூனிமருங்கு உண்டை யோட்டினான்' என்பதற்கு - இராமாவதாரத்தில் மந்தரையென்னுங்கூனியின் முதுகின்புறத்திலே வில்லினால் மண்ணுண்டையைச் செலுத்தியவன் என்றும் உரைக்கலாம் ; " கொண்டை கொண்ட கோதைமீது தேனுலாவு கூனிகூன், உண்டை கொண்டரங்க வோட்டி யுண்மகிழ்ந்த நாதன்," " கூனே சிதைய வுண்டைவில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா" என்ற ஆழ்வார் அருளிச்செயல்கள் இங்கு அறியத்தக்கன. (௫௮)

௫௯. முந்நூன் மறையவர்நா மூதரம்பை மாரினடு
மெய்ந்நூ லலங்கவரும் வேங்கடமே—பொய்ந்நூலா
லச்சமயக் கத்தினா ராதரிக்கத் தெய்வங்கள்
வச்சமயக் கத்தினார் வாழ்வு.

(இ - ள்.) முந்நூல் - முப்புரிநூலைத் தரித்த, மறையவர் - பிராமணர்களுடைய, நா-நாவானது, மெய் நூல் நலம்கவரும்- (பொருள்களின்) உண்மையைச் சொல்லுகிற தத்துவசாஸ்திரங்களின் நற்பொருள்களை (ஓதி)க்கிரகித்தற்கு இடமான : மூது அரம்பைமாரின் நடு - பழமையான தேவமாதர்களினுடைய இடையானது, மெய் நூல் நலங்கவரும் - (தனதுவடிவத்தின் நுண்மையால்) பஞ்சுநூல் (தனக்கு ஒப்பாகமாட்டாது) கெடும்படி பொருந்திய : வேங்கடமே—,—பொய் நூலால் - பொய்ம்மையைக்கூறுகிற சாஸ்திரங்களைக் கொண்டு, அ சமயம் கத்தினர் - அந்தந்த மதக்கோட்பாடுகளைப் பிதற்றுந் தன்மையுள்ளவர்கள், ஆதரிக்க-விரும்பிக்கொண்டாடும்படி, தெய்வங்கள் வச்ச - பலதெய்வங்களை உண்டாக்கிவைத்த, மயக்கத்தினர்-மாயையை யுடையவரான திருமால், வாழ்வு - வாழுமிடம் ; (எ - று.)

வடமும், வடத்தினுள் புரியும், புரியினுள் இழையும் மும்மூன்று யிருத்தல்பற்றி, உபவீதத்துக்கு 'முந்நூல்'என்று பெயர். "நூலே கரக முக்கோல் மணையே, ஆயுங்காலை யந்தணர்க் குரிய"என்ற தொல்காப்பியவிதிபற்றி,முந்நூல் மறையவர்க்கு அடைமொழியாக்கப்பட்டது. வேதங்களை ஓதுதலோடு ஓதுவித்தற்கும் உரியவர் அந்தணரேயாதலால், அவர் 'மறையவர்' எனப்பட்டனர். சிலசாதியார்க்கும் பெண்பாலார்க்கும் ஓதுவிக்கவும் ஓதவும் கேட்கவும் ஆகாதென்று மறுக்கப்படுதல் பற்றியும், ஓதியுணர்ந்த குருவினிடம் உபதேசங்கேட்டாலன்றித் தெரிதற்குஅரிய மறைந்தபொருளையுடைமைபற்றியும், 'மறை' என்று பெயர். மூதரம்பைமார் - முதுமையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டது. அரம்பை - ரம்பாஎன்னும் வடசொல்லின் விகாரம். அரம்பைமார் - ரம்பை முதலியோர்; மார்-பலர்பாற்பெயர்விகுதி. தமக்கு உரிய தேவலோகத்தினும் திருவேங்கடம் வசித்தற்கு இனியதாதல் பற்றியும், அம்மலை உயர்ச்சியால் தங்களுலகத்துக்கு அருகிலாதல்பற்றியும், திருவேங்கடமுடையானைச் சேவித்தற்பொருட்டும், தேவமாதர்கள் அங்கு வந்து தங்குதலால், அவர்கள் அம்மலைக்கு உரியபொருளாகச் சொல்லப்பட்டனர். அவர்களிடை நூலினும்நுண்ணிதென்பது கருத்து. நடு-இடையுறுப்பு.

கத்தினர் - கத்து என்னும் முதனிலைத் தொழிற்பெயரின்மேற் பிறந்த பலர்பாற்குறிப்புவினையாலணையும்பெயர்; இன் - சாரியை. ஸமயம்,தைவம்- வடசொற்கள். வச்ச - வைத்த என்பதன் மூழுப்போலி. மயக்கம் - பிறரை மயங்கச்செய்வது; அம் - கருத்தாப்பொருள்விகுதி. "வணங்குந் துறைகள் பலபல வாக்கி மதிவிகற்பாற், பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி யவையவை தோறு, அணங்கும் பலபலவாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்" என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி, எம்பெருமான் ரஜோகுணதமோகுணங்களால் மிக்கவர் கருமகதியால் தன்பக்கல் வாராது வெவ்வேறு துணிவுகொள்ளும் படி தனது அமிசத்தாற் பலபலதெய்வங்களையும், பலபல மதக்கோட்பாடுகளையும், பல உபாசனை விதங்களையும் அமைத்துவைத்த விசித்திரசக்தியை வெளியிட்டார். சிவபிரான் ஜிநன் புத்தன் முதலியோர் திருமாலினதுரூப பேதமாதலையும், அவரவரைத்தலைமையாகக்கொள்ளும் மதங்கள் ஒவ்வொரு சமயத்தில் அத்திருமாலினாலேயே வெளியிடப்பட்டனவாதலையும் அறிக.

'மூன்றான்மறையவரு மூதரம்பைமாரு நடு' என்ற பாடத்துக்கு-மறையவர் நடுவுநிலைமையாகத் தத்துவநூல்களின் நற்பொருள்களைக் கிரகிக்கிற எனவும், அரம்பையர் இடையின்வடிவினால் பஞ்சுநூல் கெடும்படிவருகின்ற எனவும் உரைக்க. (௫௯)

௬௦. ஓதுமறை யோர்புறமு முள்ளுங் கலையினரு
மேதையக லாவிருக்கும் வேங்கடமே—கோதைகுழல்
சுற்றாத தாரணியார் தூயதிருத் தாளூன்றப்
பற்றாத தாரணியார் பற்று.

(இ - ள்.) ஓதும் - வேதமோதுகின்ற, மறையோர்-அந்தணர்களுடைய, புறமும் - உடம்பும், அரு கலையின் மேதை அகலா இருக்கும் - பெறுதற்கு அரிய மான்தோல் நீங்காதிருக்கப்பெற்ற: உள்ளும் - (அவர்களுடைய) மனமும், கலையின் அருமேதை அகலா இருக்கும் - சாஸ்திரங்களின் நுட்பமான அறிவு பரந்திருக்கப்பெற்ற: வேங்கடமே—,—கோதை குழல் சுற்றாததார் அணியார்-ஆண்டாள் தனதுகூந்தலில் சூடாத மாலையை அன்புடன் அணிந்துகொள்ளாதவரும், தூய திரு தாள் ஊன்ற பற்றாத தாரணியார்-பரிசுத்தமான சிறந்த தமதுபாதங்களில் ஒன்றை ஊன்றியளத்தற்கு இடம்போதாத நிலவுலகத்தையுடையவருமாகிய திருமால்,பற்று-விரும்பிவாழுமிடம்;(எ-று.)

வேதமோதுகிற பிராமணப்பிரமசாரிகள் மான்தோலுபவீதந் தரித்தல், மரபு; ("முப்புரிநூலொடு மானுரியிலங்கும், மார்பினி னிருபிறப் பொருமாணாகி" என்ற திருவெழுகூற்றிருக்கையுங் காண்க.) புறம் - புறத்து உறுப்பு. உள் - அகத்து உறுப்பு. நூல் என்ற பொருளில், கலை என்பது - கலா என்ற வடசொல்லின்விகாரமும், அறிவு என்ற பொருளில் மேதைஎன்பது-மேதா என்ற வடசொல்லின் விகாரமுமாம். அகலாஎன்பது - அகலாம லென்னும் பொருளில் ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சமும்; அகன்றென்னும் பொருளில் செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட் டிறந்தகால வினையெச்சமுமாம். அகலுதல் - நீங்குதலும், பரத்தலும். வேதாத்தியயனஞ் செய்பவரது புறமும் உள்ளும் ஒருநிகராக வுள்ளன வெனச் சொல்நயத்தாற் சமத்காரந் தோன்றியவாறு காண்க.

'கோதை குழல் சுற்றாத தார்அணியார்' என்றது - ஆண்டாள் தனது கூந்தலிற் சூடிக்கொடுத்த மாலையையே திருவுள்ளமுகந்து அணிபவர் என்றவாறு. ஆண்டாள் சூடிக்கொடுத்த திருமாலையை விட்டு வேறு திருமாலையை அமைத்துப் பெரியாழ்வார் எம்பெருமானுக்குச்சமர்ப்பிக்க, அதனைப் பெருமான் 'இந்த மாலை கோதைமணம் பெறவில்லை' என்று வெறுத்தனனென வரலாறு கூறுதலும் உண்டு. கோதையென்பது - உயர்திணைப்பெயராதலின், அதன்முன் வலிமிகவில்லை.

'தாளூன்றப் பற்றாத தாரணியார்' என்றது - உலகமளந்தசமயத்தில் நிலவுலகத்தினும் திருவடிபரந்துநின்றதாதலின். அப்பொழுது காலளவிற்கு உலகம் இடம் போதாமையை "மண்ணும் விண்ணும் என்காற்களவின்மை

காண்மினென்பா னொத்து வான் நிமிர்ந்த" என்ற திருவிருத்தத்தாலும், "நின்றகால் மண்ணெலாம் நிரப்பி யப்புறம், சென்று பாவிற்றிலை சிறிது பாரொனு", "உலகெலா முள்ளடி யடக்கி" என்ற கம்பராமாயணத்தாலும் அறிக. 'தூயதிருத்தாளொன்றப் பற்றாத தாரணியார்' என்றது - வடமொழி நடை; அன்றியும், இங்ஙனம் கூறியதில் தமக்கு உரிய பொருளைத் தமக்கு உரியதாக்கிக்கொண்டவர் என்ற கருத்துத் தோன்றும். தாரணி - தரணி யென்ற வடசொல்லின் விகாரம். 'பற்றாத தாரணியார் பற்று' என்ற அடி யில் முரண்தொடை யிருத்தல் காண்க. (கூ0)

கூக. நன்முலைபோல் வெண்ணகையார் நாயகர்மேல் வைத்தநெஞ்சு
மென்முலையுங் கற்புரஞ்சேர் வேங்கடமே—முன்மலைந்து
தோற்றமா ரீசனார் தோற்றிமா யம்புரியச்
சீற்றமா ரீசனார் சேர்வு.

(இ - ள்.) நல் முலை போல் வெள் நகையார் - அழகிய முல்லையரும்பு போன்ற வெண்மையானபற்களையுடைய மகளிர், நாயகர்மேல் வைத்த-தம் தம் கணவரிடத்திற் செலுத்திய, நெஞ்சும் - மனமும், கற்பு உரம் சேர் - பதி விரதாதருமத்தின் வலிமை பொருந்தப்பெற்ற; மெல் முலையும் - (அம்மகளி ருடைய) மென்மையான தனங்களும், கற்புரம் சேர்-பச்சைக்கற்பூரம் பூசப் பெற்ற; வேங்கடமே—,—முன் மலைந்து தோற்ற மாரீசனார்-முன்பு எதிர்த் துத் தோற்றோடின மாரீசன், தோற்றி மாயம் புரிய - மீண்டும்வந்து மாயை செய்ய, சீற்றம் ஆர் - (அவனிடத்துக்) கோபங்கொண்ட, ஈசனார் - (எல்லா வற்றுக்குந்) தலைவரான திருமால், சேர்வு - சேர்ந்திருக்கு மிடம்; (எ - று.)

எதுகைநயம்நோக்கி, முல்லை யென்பது, 'முலை' என இடைக்குறை விகார மடைந்தது; ("முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ" எனக் கலித்தொகையிலும், "முலையேயணிந்த முகிழ்நகையீர்" என மது ரைக்கலம்பகத்திலும், "அம்முலைக் கொடியா ரலர்தூற்றவே" எனத் திரு வேங்கடக் கலம்பகத்திலும், "பயிற்சியும் வனமுலைப்பாலே" என அழகர் கலம்பகத்திலும் காண்க.) முல்லை - அதன் அரும்புக்கு முதலாகுபெயர். பல்லுக்கு முல்லையரும்பு உவமை - அழகிய வடிவிற்கும்,வெண்மைக்குமாம்; நாயகர் - தற்சம வடசொல். கற்பாவது - கணவனைத் தெய்வமெனக் கொ ண்டு ஒழுகும் ஒழுக்கம். திருக்குறளில் "கற்பென்னுந் திண்மை" என்றாற் போல, 'கற்பு உரம்' என்றார். உரம் - கலங்காத நிலைமை. கர்ப்பூரமென்ற வடசொல், கற்புரமென விகாரப்பட்டது. திருவேங்கடத்தில்வாழும் மாதர் களது உள்ளும் புறமும் ஒத்துள்ளனவெனச் சொல்லொப்புமையாற் சமத் காரந்தோன்றக் கூறியவாறு காண்க.

மாரீசன் - தாடகையின் மகனும், சுபாகுவின் உடன் பிறந்தவனும், மாயையில் மிகவல்லவனுமான ஓர்அரக்கன். இராவணனுக்கு மாமன்முறை பூண்டவன்; விசுவாமித்திரமுனிவர் தமது யாகத்தைப் பாதுகாத்தற்பொரு ட்டு ஸ்ரீராமலக்ஷ்மணர்களை அழைத்துச்செல்லும் வழியிடையே தாடகை

வந்து எதிர்த்து இராமனாற் கொல்லப்பட்டு இறந்தபின், மாரீசன் சுபாகுவி னுடனும் மற்றும்பல அரக்கருடனும் வந்து விசுவாமித்திரருடைய வேள்வி யை அழிக்கத்தொடங்கியபொழுது, இராமபிரான் அம்புகளால் அரக்கரைக் கொன்று ஓர் அஸ்திரத்தாற் சுபாகுவை வதைத்து மற்றோர் அஸ்திரத்தால் மாரீசனைக் கடலிலே தள்ளிவிட்டார். இங்ஙனம் தப்பிப்பிழைத்த இவன் சிலகாலங்கழித்து, இராமன் தண்டகாரணியம் புகுந்தபொழுது பழைய வைரத்தால் வேறு இரண்டு அரக்கருடனே மான்வேடம்பூண்டு இராமனைத் தன் கொம்புகளால் முட்டிக் கொல்லக் கருதி நெருங்குகையில் இராமன் எய்தஅம்புகளால் உடன்வந்த அரக்கர் இறக்க, இவன்மாத்திரம் தப்பியோடி உய்ந்து இலங்கைசேர்ந்தனன். இவ்வாறு ஒருமுறைக்கு இருமுறை எதிர்த் துத்தோற்றுத் தப்பிப்பிழைத்தமைபற்றி, 'முன்மலைந்துதோற்ற மாரீசனார்' என்றார். 'ஆர்' விகுதி - மாயையில் அவனுக்குஉள்ள சிறப்பை நோக்கினது. பின்பு சீதையைக் கவர்ந்துசெல்லக் கருதிய இராவணனது தூண்டுதலால் மாரீசன் மாயையாற் பொன்மானுருவங் கொண்டு தண்டகாரணியத்திற் பஞ்சவடியிலே சீதையின் எதிரிற் சென்று உலாவுகையில், அப்பிராட்டியின் வேண்டுகோளின்படி அதனைப் பிடித்தற்குத் தொடர்ந்து சென்ற இராம பிரான் நெடுந்தூரம் ஓட்டங்காட்டிய அம்மானை மாயமானென்று அறிந்த வளவிலே அதன்மேல் அம்பெய்து வீழ்த்தினனென்ற வரலாறு இங்குக்குறி க்கப்பட்டது. கொன்ற என்ற பொருளில்' 'சீற்றம் ஆர்' என்றது - காரியத் தைக் காரணமாக உபசரித்தவாறு. மாயம் - மாயா என்ற வடசொல்லின் விகாரம். ஈசன்-வடசொல்: ஐசுவரியமுடையவன். 'தோற்றமாயம்புரிய' என்று பாடமோதி, மாரீசன்—, ஆர் தோற்றம் - பொருந்திய தோற்றத் தையுடைய, மாயம்-மாயையை, புரிய - செய்ய என்று உரைத்தலும் ஒன்று; மெய்த்தோற்றம்போன்ற பொய்த்தோற்றத்தைக் கொள்ள ; என்க. (சுக)

சு௨. கூறுங் கிளிமொழியார் கொங்கையென்றுங் கண்ணென்றும்
வீறு மருப்பிணைசேர் வேங்கடமே—நாறுந்
துளவமலர்க் கண்ணியார் தொண்டாய்த் தமக்கன்
புளவமலர்க் கண்ணியா ரூர்.

(இ - ள்.) கூறும் கிளிமொழியார் கொங்கை என்று - (கொஞ்சிப்)பேசு கின்ற கிளியின் சொற்போன்ற இன்சொற்களையுடைய மகளிரது தனங்க ளென்று, வீறு-பெருமையுற்ற, மருப்பு இணையும் - இரட்டையான யானைத் தந்தங்களும்: கண் என்று - (அவர்களுடைய) கண்களின் நோக்கமென்று, வீறு மரு - சிறப்புப்பொருந்திய, பிணையும் - பெண்மானும்: சேர் - பொருந் திய, வேங்கடமே—,——நாறும் துளவம் மலர் கண்ணியார் - பரிமளம் வீசு கின்ற திருத்துழாய் மலர்களாலாகிய மாலையை யுடையவரும், தொண்டு ஆய் - (தமக்கு) அடிமையாகி, தமக்கு அன்பு உள - தம்பக்கல் பக்தியுள்ள, அமலர்க்கு - குற்றமற்ற அடியார்களுக்கு, அண்ணியார் - சமீபிக்கின்றவரு மாகிய திருமாலினது, ஊர் - வாசஸ்தானம்; (எ - று.)

'கொங்கை யென்று வீறு மருப்பிணை' என்பதற்கு - கொங்கையாகிய யானைத்தந்த மென்றும், 'கண்ணென்று வீறுமருப்பிணை' என்பதற்கு - கண் பார்வையாகிய பெண்மான் பார்வை யென்றும் உருவகமாகக் கருத்துக் கொள்க; அன்றி, கொங்கைபோன்று யானைத் தந்தமும், கண்போன்று பெண்மான்விழியும் பொருந்திய என, எதிர்நிலையுவமையாகக் கருத்துக் கொள்ளினுமாம். கிளி - அதன்சொல்லுக்கும், பிணை - அதன் நோக்கத்துக்கும் முதலாகுபெயர். மரு - மருவு என்பதன் விகாரம். பிணை - பெண்மைப் பெயர். துளவம் - துளஸீ என்ற வடசொல்லின் சிதைவு. திருத்துழாய் மலர் மாலை, திருமாலுக்கு உரியது. துளவமலர்க்கண்ணி - துளவினாலும் மலர் களினாலுமாகிய மாலையுமாம். 'தமக்கு' என்பதை மத்திமதீபமாக 'தொண் டாய்' என்பதனோடுங் கூட்டுக. உள =உள்ள: தொகுத்தல். ந + மலம் + அர் - அமலர்; பரிசுத்தர்; வடமொழிச்சந்தி. அண்ணியார் - அண் என்னும் வினைப் பகுதியினடியாப் பிறந்த இறந்தகாலவினையாலணையும்பெயர்: 'இன்' என்ற இடைநிலை ஈறுதொக்கது. அன்போடு தமக்குத்தொண்டுபூண்ட தூயோரது உள்ளத்தில் உவந்து வந்தெழுந்தருளி யிருத்தலுமன்றி, அவர்கட்குக் கட்புல னாய் அருகில் தோன்றிநின்று ஆவனசெய்தலு முடையரென்பது, 'தொண் டாய்த் தமக்கன்புள வமலர்க் கண்ணியார்' என்பதன் கருத்து. (௬௨)

௬௩. மாதரம்பொன் மேனி வடிவு மவர்குறங்கு
மீதரம்பை யைப்பழிக்கும் வேங்கடமே—பூதமைந்தின்
பம்பரமா காயத்தார் பாடினால் வீடருளு
நம்பரமா காயத்தார் நாடு.

(இ - ள்.) மாதர் - மகளிரது, அம் பொன் மேனி வடிவும் - அழகிய பொன்னிறமான உடம்பின் தோற்றமும், மீது அரம்பையை பழிக்கும் - மேலுலகத்திலுள்ள ரம்பை யென்னுந் தேவமாதை இழிவு படுத்தப்பெற்ற: அவர் குறங்கும் - அம்மகளிரது தொடையும், மீது அரம்பையை பழிக்கும் - மேன்மையுள்ள [செழித்த] வாழைத்தண்டை வெல்லப்பெற்ற: வேங்கடமே —,—பூதம் ஐந்தின் - பஞ்சபூதங்களினாலாகிய, பம்பரம் - சுழல்கிற பம்பரம் போல விரைவில்நிலைமாறுவதான, மா காயத்தார் - பெரிய உடம்பையுடைய சனங்கள், பாடினால் - துதித்தால், வீடு அருளும் - (அவர்கட்கு) முத்தியை அளிக்கின்ற, நம் பரம ஆகாயத்தார் - நமது தலைவரும் பரமாகாசமெனப்படு கின்ற பரமபதத்தை யுடையவருமான திருமாலினது, நாடு-ஊர்; (எ - று.)

திருவேங்கடமலையில் வாழும் மகளிர் அரம்பை யென்னும் தேவமாதி னும் மேம்பட்ட வடிவழகையும், வாழைமரத்தண்டினும் அழகிதாகத்திரண்டு உருண்டு செய்ப்பமைந்த தொடையையும் உடைய ரென்றவாறு. மாதர் - விரும்பப்படும் அழகுடையோர். அரம்பை யென்பது - இருபொருளிலும் ரம்பா என்ற வடசொல்லின் விகாரம். பழிக்கும் என்பது - உவமையுருபு மாம். பூதம் ஐந்து - நிலம், நீர், தீ, காற்று, வானம். காயம், பரமாகாசம் - வடசொற்கள். மாகாயம் - ஸ்தூலசரீரம். வீடு - (பற்றுக்களை) விட்டு

அடையு மிடம்; இச்சொல் - 'முக்தி' என்னும் வடசொல்லின் பொருள் கொண்டது. பரமாகாசம் - சிறந்த வெளியிடம். (௬௩)

௬௪. கோள்கரவு கற்றவிழிக் கோதையர்கள் பொற்றாளும்
வேள்கரமு மம்பஞ்சார் வேங்கடமே—நீள்கரனார்
தூடணனார் முத்தலையார் துஞ்சவெய்து துஞ்சாரைக்
கூடணனார் முத்தலையார் குன்று.

(இ - ள்.) கோள்-(ஆடவரை) வருத்துந்தன்மையையும், கரவு-(அவர்கள் மனத்தை) வஞ்சனையாகக் கவருந் தன்மையையும், கற்ற - பயின்ற, விழி - கண்களையுடைய, கோதையர்கள் - மகளிரது,பொன் தாளும் - அழகியபாதமும், அம் பஞ்சு ஆர் - அழகிய செம்பஞ்சுக்குழம்பு ஊட்டப்பெற்ற: வேள் கரமும் - மன்மதனது கையும், அம்பு அஞ்சு ஆர் - பஞ்சபாணங்கள் பொருந்தப்பெற்ற: வேங்கடமே—,—நீள் - பெரிய, கரனார் - கரனும், தூடணனார்- தூஷணனும், முத்தலையார் - திரிசிரசும், துஞ்ச-இறக்கும்படி, எய்து-அம்பு செலுத்தி, துஞ்சாரை கூடு - உறங்காதவரான இலக்குமணனைச் சேர்ந்த, அணனார்-தமையனாராகவுள்ளவரும், முத்து அலையார் - முத்துக்களையுடைய கடலிற்பள்ளிகொள்ளுகின்ற வருமான திருமாலினது, குன்று-மலை; (எ-று.)

கோள் கரவு - உம்மைத்தொகை. கரவு - கரத்தல்; தொழிற்பெயர். கோதையர் - மாலைபோல் மென்மையான தன்மையுடையார்; கோதை - மாலை; கள் - விகுதிமேல்விகுதி. கரம் - வடசொல். "கண் களவுகொள்ளுஞ் சிறுநோக்கம்," "யான் நோக்குங் காலை நிலன் நோக்கும் நோக்காக்கால், தான்நோக்கி மெல்லநகும்" என்றபடி காதலன் தன்னைநோக்கும்பொழுது தான் எதிர்நோக்காது நாணித் தலைவணங்கி நிலத்தை நோக்கியும், அவன் தன்னை நோக்காத பொழுது தான் அவனை உற்றுநோக்கியும் வருகிற விழியென்பார், 'கரவு கற்ற விழி' என்றார். அதற்குக் கோள் கற்றலாவது - காதற்குறிப்பை வெளிப்படுத்துகின்ற நோக்கினாலும், பொதுநோக்கின் அழகினாலும் ஆடவர்க்கு வேட்கைநோயை விளைத்தல்.

வடிவின்பருமையோடு தொழிலின்மிகுதியும் உடைமை தோன்ற, 'நீள் கரன்' என்றார். கரனார், தூடணனார், முத்தலையார் என்ற உயர்வுப்பன்மைகள், அவர்களுடைய வலிமைத்திறத்தை விளக்கும். கரனென்ற வடசொல் - கொடியவனென்றும், தூஷண னென்ற வடசொல் - எப்பொழுதும் பிறரைத் தூஷிப்பவ னென்றும் பொருள்படும். முத்தலையார் - மூன்றுதலைகளையுடையவனென்று பொருள்படும்; த்ரிசிரஸ் என்ற வடசொல்லின் பொருள் கொண்டது. கரன் - இராவணனுக்குத் தாய்வழி யுறவில் தம்பிமுறையில் நிற்கின்ற ஓர் அரக்கன் ; தண்டகாரணியத்திலே சூர்ப்பணகை வசிப்பதற்கென்று குறித்த ஜநஸ்தாந மென்னு மிடத்தில் அவட்குப் பாது காவலாக இராவணனால் நியமித்து வைக்கப்பட்ட பெரிய அரக்கர்சேனைக்கு முதல் தலைவன். இலக்குமணனால்மூக்கறுக்கப்பட்டவுடனே இராமலக்குமணரிடம் கறுக்கொண்டு சென்ற சூர்ப்பணகை, கரன்காலில் விழுந்துமுறையிட, அது

கேட்டு அவன் பெருங்கோபங்கொண்டு, மிகப்பெரியசேனையோடும் அறுபது லட்சம் படைவீரர்களோடும் சேனைத்தலைவர் பதினால்வரோடும் தூஷணன் திரிசிரஸ் என்னும் முக்கிய சேனாதிபதிகளோடும் புறப்பட்டு வந்து போர் தொடங்குகையில், இராமன் லக்ஷ்மணனைச் சீதைக்குக் காவலாகப் பர்ண சாலையில் நிறுத்தித் தான் தனியேசென்று எதிர்த்துப் பெரும்போர்செய்து அவ்வரக்கரையெல்லாம் துணித்து வெற்றிகொண்டு மீண்டு பர்ணசாலையிற் காவல்செய்துநின்ற இலக்குமணனைச் சார்ந்தனனென்ற வரலாறு, இங்கே குறிக்கப்பட்டது.

இறக்க என்ற பொருளில் 'துஞ்ச' என்றல் - மங்கலவழக்கு; மீளவும் எழுந்திராத பெருந்தூக்கங் கொள்ள வென்க. இராமன் வனவாசஞ்செய்த பதினான்கு வருடத்திலும் இலக்குமணன் தூங்காது அல்லும் பகலும் அநவரதமும் இராமனுக்கும் சீதைக்கும் பாதுகாவலாய்விழித்தபடியேயிருந்தன னாதலால், அவனுக்கு 'துஞ்சார்' என ஒருபெயர் கூறினர். அணனார் = அண்ணனார்: தொகுத்தல். துஞ்சார் - இளையபெருமாள். அண்ணனார் - பெருமாள். திருப்பாற்கடலிலும் பிரளயப் பெருங்கடலிலும் திருமால் பள்ளிகொள்ளுதல்பற்றி, 'அலையார்' என்றார். அலை - கடலுக்குச் சினையாகு பெயர். முத்து - முக்தா என்ற வடசொல்லின் விகாரம்; (சிப்பியினின்று) விடுபட்டதெனப் பொருள்படும். (கூச)

கூரு. கோங்கைக்கோ டேறிக் குலுக்குமரி யுங்கரியும்
வேங்கைக்கோ டாதரிக்கும் வேங்கடமே—பூங்கைக்குண்
மெய்த்தவளச் சங்கெடுத்தார் மேகலைவிட் டங்கைதலை
வைத்தவளச் சங்கெடுத்தார் வாழ்வு.

(இ - ள்.) கோங்கை - கோங்குமரத்தை, கோடு ஏறி குலுக்கும் - கிளைகளின்மேலேறி மிகஅசைக்கின்ற, அரியும் - குரங்கும், வேங்கை கோடு ஆதரிக்கும் - (அங்கிருந்து அருகிலுள்ள) வேங்கைமரத்தின்கிளையை விரும்பித் தாவிப் பிடிக்கப்பெற்ற: கரியும் - யானைகளும், வேங்கைக்கு ஓடாது அரிக்கும் - புலிகளுக்கு அஞ்சியோடாமல் (எதிர்த்துநின்றுபொருது அவற்றை) அழிக்கப்பெற்ற: வேங்கடமே—,—பூ கைக்குள் - அழகிய திருக்கையினிடத்து, மெய் தவளம் சங்கு எடுத்தார் - உருவம் வெண்மையான சங்கத்தை ஏந்தியவரும், மேகலை விட்டு அம் கை தலை வைத்தவள் அச்சம் கெடுத்தார் - தனது ஆடையைப் பற்றுதலை விட்டு அழகியகைகளைத் தன்தலைமேல் வைத்துக் கூப்பி வணங்கினவளான திரௌபதியினது பயத்தைப் போக்கியவருமான திருமால், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

மரக்கிளைகளிலேறிக் குலுக்குதலும், ஒருமரத்திலிருந்து மற்றொருமரத்தை விரும்பித்தாவுதலும், குரங்கினியல்பு. கோங்கைக்குலுக்குமென இயையும். ஹரி, கரீ என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. ஹரி - (பிறர்கைப் பொருளைக்) கவர்வதெனக் காரணப்பொருள்படும். கரம் - கை; இங்கே, துதிக்கை; அதனையுடையது கரீ எனக் காண்க. கரி என்பதற்கு - கருமை

யுடையதெனத் தமிழ்வகையாற் காரணப்பொருள்கூறுதல் பொருந்தாது, வடசொல் லாதலின். வேங்கை-ஓர்மரமும், புலியும். வேங்கடமலையிலுள்ள யானைகள் புலிகட்கு அஞ்சியோடாது எதிர்நின்றுபொருது அவற்றைஅழிப் பனவென அவற்றின்கொழுமையை விளக்கியவாறு. அரித்தல் - ஹரித்தல்.

த்வளம் - வடசொல். துரியோதனன் சொன்னபடி துச்சாதனன் திரௌபதியைச் சபையிற் கொணர்ந்து துகிலுரியத் தொடங்கியபோது அவள் கைகளால் தனது ஆடையை இறுகப்பற்றிக்கொண்டே எம்பெரு மானைக் கூவியழைத்தபொழுது, அப்பெருமான் அருள்செய்யாது தாழ்த்து நின்று பின்பு துச்சாதனன் வலியஇழுக்கையில் ஆடையினின்று கைந்நெ கிழ அவள் இருகைகளையும் தலைமேல்வைத்துக் கூப்பி வணங்கித் துதித்த வுடனே எம்பெருமான் அவளுடைய ஆடை மேன்மேல்வளருமாறு அருள் செய்து மானங்காத்தன னாதலால், 'மேகலைவிட் டங்கை தலைவைத்தவ ளச்சங்கெடுத்தார்' என்றார். எம்பெருமானைச் சரணமடைவார்க்கு ஸ்வாதந்தி ரியம் சிறிதும் இருக்கக்கூடா தென்பதும், தன் முயற்சி உள்ளவளவும் பெ ருமான் கருணைபுரியா னென்பதும், இங்கு விளங்கும். மேகலை - எட்டுக் கோவை இடையணியுமாம். (சுரு)

சுசு. மாவிற் குயிலு மயிலு மொளிசெய்ய
மேவிப் புயறவழும் வேங்கடமே—யாவிக்கு
ளானவரு டந்தடுத்தா ரானிரைக்காக் குன்றேந்தி
வானவரு டந்தடுத்தார் வாழ்வு.

(இ - ள்.) மாவில் - மாமரத்தில், குயிலும் - குயில்களும், ஒளி செய்ய- ஒளித்துக்கொள்ளும்படியும்: (அங்கு), மயிலும் - மயில்களும், ஒளி செய்ய - பிரகாசமடையும்படியும்: மேவி - பொருந்தி, புயல் - மேகம், தவழும் - சஞ்சரிக்கப்பெற்ற, வேங்கடமே—,—ஆன அருள் தந்து - பொருந்தின கருணையைச் செய்து, ஆவிக்குள் அடுத்தார் - (எனது) உயிரினுள் சேர்ந்தவரும், ஆன் நிரைக்கு ஆ - பசுக்கூட்டங்களைக் காக்கும்பொருட்டு, குன்று ஏந்தி - (கோவர்த்தன) கிரியை எடுத்துக் குடையாகப்பிடித்து, வான வருடம் தடுத்தார்-மேகங்களின்மழையை (ஆநிரையின்மேலும் ஆயர்களின்மேலும் விழாமல்) தடுத்தவருமான திருமால், வாழ்வு - வாழுமிடம் ; (எ - று.)

வசந்தகாலத்திற் களிப்புக்கொண்டு இனிதாகக்கூவி விளங்குந்தன்மை யனவான குயில்கள் மேகங்களின் வருகையைக் கண்டு கொண்டாட்ட மொழிந்து வருந்திப் பதுங்குதலும், மயில்கள் மேகங்களின்வருகையைக் கண்டவுடனே மகிழ்ச்சியடைந்து கூத்தாடிக்கொண்டு விளங்குதலும் இயல் பாதலால், 'குயிலும் மயிலும் ஒளிசெய்யப் புயல் மேவித்தவழும்' என்றார். ஒன்றுக்கொன்று எதிரான தன்மையுடைய குயிலும் மயிலும் புயல்வருகை யில் ஒருநிகரான தன்மையை அடைகின்றன வென்று 'ஒளிசெய்ய' என்ற சொல்லின் ஒற்றுமையாற் சமத்காரந்தோன்றக் கூறியவாறு. 'மாவில்'என் றதனால், இவ்விரண்டுக்கும் மாமரம் தங்குமிடமாதல் அறிக. ஒளி - மறை

தலும், விளக்கமும்: முந்தினபொருளில் முதனிலைத்தொழிற்பெயர், பிந்தினபொருளில் பண்பு உணர்த்தும் பெயர். செய்ய என்ற வினையெச்சம் - இங்குக் காரியப்பொருளதாதலால், எதிர்காலம். ஆவிக்குள் - எல்லாவுயிர்களினுள்ளும் என்றுமாம்; என்றது, அந்தரியாமித்துவங் கூறியவாறும். ஆவி - மனமுமாம். வான்என்ற ஆகாயத்தின் பெயர் - இடவாகுபெயராய், மேகத்தைக் குறிக்கும்; அம் - சாரியை. வருடம் - வர்ஷமென்ற வடசொல்லின் விகாரம். (சுசு)

சுஎ. கானோடருவி கனகமுமுத் துந்தள்ளி
மீனோ வெனக்கொழிக்கும் வேங்கடமே—வானோர்கண்
மேகனய னங்கொண்டார் வேணியரன் காண்பரியார்
காகனய னங்கொண்டார் காப்பு.

(இ - ள்.) கான் ஓடு அருவி - காடுகளின்வழியாக ஒடிவருகின்ற நீர்ப்பெருக்குக்கள், கனகமும் முத்தும் தள்ளி-பொன்னையும் முத்தையும் அலைத்தெறிந்து, மீனோ என கொழிக்கும் - நக்ஷத்திரங்களோவென்று (காண்கின்றவர்கள்) சொல்லும்படி (பக்கங்களில்) ஒதுக்கப்பெற்ற: (அவ்வருவிகள்),மீநோவு எனக்குஒழிக்கும்-மிகுதியான (பிறவித்)துன்பத்தை எனக்குப்போக்குதற்கு இடமான: வேங்கடமே—,--வானோர்கள் - மேலுலகில் வசிப்பவர்களான தேவர்களும், மேகன் - மேகத்தைவாகனமாகவுடையவனான இந்திரனும், அயன் - பிரமனும், அம் கொண்டு ஆர் வேணி அரன் - நீரை [கங்காநதியின்வெள்ளத்தைத்] தரித்துப் பொருந்திய (கபர்த்தமென்னும்) சடைமுடியையுடைய சிவபிரானும், காண்பு அரியார் - காணவொண்ணாதவரும், காகன் நயனம்கொண்டார் - காகாசுரனுடைய கண்ணைப் பறித்தவருமான திருமால்,காப்பு-(எழுந்தருளிநின்று உயிர்களைப்) பாதுகாக்குமிடம்;(எ-று.)

மீன் ஓ என கொழிக்கும் என்பதற்கு-மீன்கள் ஓவென்று அலறித்துள்ளும்படி கொழிக்குமென்று உரைப்பாருமுளர். மலையருவிகள் அங்கு உண்டாகிற பொன்னையும் முத்துக்களையும் தள்ளிக் கொழித்து வருதல் இயல்பு. கான் - கானந மென்ற வடசொல்லின் விகாரம். கநகம் - வடசொல். திருவேங்கடமலையி லுள்ள அருவிகளின் வடிவமான பாபவிநாசம் ஆகாசகங்கை முதலிய புண்ணியதீர்த்தங்கள் தம்மிடம் நீராடுகிறவர்களுடைய பிறவித்துன்பங்களையெல்லாம் போக்கவல்ல மகிமையுடையன வாதலால், 'அருவி மீநோவு எனக்குஒழிக்கும்' என்றார். பொதுநகரத்துக்கும் சிறப்புனகரத்துக்கும் வரிவடிவில் மிக்கவேறுபாடு இருப்பினும் ஒலிவடிவில் மிக்கவேறுபாடு இல்லாமையால்,சிலேடை யமகம் திரிபு இவற்றில் நகரனகரங்களை அபேதமாகக்கொண்டு அமைத்தல் மரபாதல்பற்றி, 'மீனோவென' எனப்பட்டது. மேகம், அஜன், வேணீ, ஹரன், காகன், நயநம்-வடசொற்கள். அஜன்—அ-திருமாலினின்று, ஜன்-தோன்றினவன்; ஹரன் - சங்காரக்கடவுள். அங்கு ஒள்தார்வேணி எனப்பிரித்து, ஒள்தார் என்பதற்கு - பிரகாசமான (கொன்றை) மாலையைத் தரித்த என்றுஉரைத்து, அங்கு என்பதை அசையாகக் கொள்ளுதலும் ஒன்று.

"சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட, அத்திரமே கொண்டெறிய வனைத்துலகுந் திரிந்தோடி, வித்தகனே யிராமாவோ நின்னபயமென்றழைப்ப, அத்திரமே யதன் கண்ணை யறுத்தது மோரடையாளம்" என்ற பெரியாழ்வார் திருமொழி - நான்காமடிக்கு மேற்கோள். (கூஎ)

கூஅ. கண்டடைந்த வானவருங் காந்தட் குலமலரும்
விண்டவிர்ந்து நிற்கின்ற வேங்கடமே—தொண்டருக்கு
வைகுந்த நாட்டான் மருவுருவ மீந்துவைக்கும்
வைகுந்த நாட்டான் வரை.

(இ - ள்.) கண்டு - (அத்திருமலையின் அழகைக்) கண்டு, அடைந்த - (அதனிடத்தில்) வந்துசேர்ந்த, வானவரும் - தேவர்களும், விண் தவிர்ந்து நிற்கின்ற - (மிகவும்இனிமையான அவ்விடத்தை விட்டுச்செல்ல மனமில்லாமையால்) தேவலோகத்தைநீங்கிநிற்றற்குக் காரணமான: குலம் காந்தள்மலரும் - சிறந்தசாதிக் காந்தட்செடிகளின் மலர்களும், விண்டு அவிர்ந்து நிற்கின்ற-இதழ்விரிந்து மலர்ந்து விளங்கி நிற்றற்கு இடமான; வேங்கடமே—, —தொண்டருக்கு-தன்அடியார்களுக்கு,வை குந்தம் நாட்டான்-கூரியசூலாயுதத்தை (யமன்)நாட்டாதபடி (அருள்) செய்பவனும், மருவு உருவம் ஈந்து-பொருந்திய தனது உருவத்தை (அவ்வடியார்கட்கு)க் கொடுத்து, வைக்கும் வைகுந்தம் நாட்டான் - (அவர்களை) ஸ்ரீவைகுண்டமென்னுந் தனதுதேசத்தில் நிலையாகவைப்பவனுமான திருமாலினது, வரை - திருமலை; (எ - று.)

'கண்டுஅடைந்த வானவரும் விண்தவிர்ந்து நிற்கின்ற' என்றதனால், புண்ணிய லோகமாய்ச் சுகானுபவத்துக்கேயுரிய தேவலோகத்தினும் திருவேங்கடம் மிக இனிய வாசஸ்தானமாகு மென்பதனோடு தேவர்கட்குப் புகலிடமாகுமது வென்பதும் விளங்கும். காந்தள்மலரைக் கூறினது, மற்றைக் குறிஞ்சிநிலத்து மலர்களுக்கெல்லாம் உபலக்ஷணம். குலம் - கூட்டமுமாம். விண்டு - வாய்விண்டு; விள் - பகுதி.

தன்அடியார்செய்த தீயகருமங்களையெல்லாம் தீர்த்தருளுதலால் அவர்கட்கு யமதண்டனை யில்லாதபடி செய்பவனென்பது, 'தொண்டருக்கு வைகுந்தநாட்டான்' என்பதன் கருத்து. யமனுக்கும் அந்தராத்மாவாய் நின்று தொழில்செய்பவன் திருமாலேயாதலால், அவனதுதொழிலைத் திருமாலின் மேலேற்றிக் கூறினர். "வையே கூர்மை" என்ற தொல்காப்பியஉரியியற் சூத்திரத்தால், வை என்பது - கூர்மையுணர்த்துகையில், உரிச்சொல்லெனஅறிக. குந்தம் - வடசொல்: வேல், ஈட்டி, சூலம். நாட்டான் - நாட்டு என்னும் வினைப்பகுதியின்மேற் பிறந்த எதிர்மறைத்தெரிநிலைவினையாலணையும் பெயர். எம்பெருமான் தனதுவடிவம்போன்ற வடிவத்தைத் தன் அடியார்கட்குக் கொடுத்தலாகிய ஸாரூப்யநிலை 'மருவுருவமீந்து' என்றதனாலும், தான்வசிக்கிற உலகத்தைத் தன் அடியார்கட்கு வாசஸ்தானமாகத் தருதலாகிய ஸாலோக்யநிலை 'வைக்கும் வைகுந்தநாட்டான்' என்றதனாலும் கூறப்

பட்டன. வைக்கும்வைகுந்தநாட்டான் - வைகுந்தநாட்டில் வைப்பவன் என விகுதி பிரித்துக் கூட்டுக. நாட்டான் - நாடு என்ற இடப்பெயரின்மேற் பிறந்த உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணையும்பெயர்.

'மருவுருவமீந்துவைக்கும்' என்றவிடத்து 'மருதினிடையே தவழும்' என்றும் பாடமுண்டு; அதற்கு - மருதமரங்களின்நடுவிலே தவழ்ந்துசென்ற என்று பொருள்; இது, நாட்டானுக்கு அடைமொழி. (கூஅ)

கூகூ. வாழும் புலியினொடு வானூர் தினகரனும்
வேழங்க ளும்வலஞ்செய் வேங்கடமே—யூழின்கட்
சற்று யினுமினியான் சாரா வகையருளு
நற்று யினுமினியா னாடு.

(இ - ள்.) வாழ் - (கற்பகாலமளவும் அழிவின்றி) வாழ்கின்ற, அம்புலியினொடு - சந்திரனுடனே, வான் ஊர் தினகரனும் - ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற சூரியனும், வலம் செய் - பிரதக்ஷிணஞ் செய்யப்பெற்ற: வேழங்களும் - யானைகளும், வலம் செய் - வலிமை கொள்ளப்பெற்ற; வேங்கடமே—,—இனி - இனிமேல், யான்—, ஊழின்கண்-கருமவசத்திலே, சற்று ஆயினும் சாரா வகை - சிறிதும் பொருந்தாதபடி, அருளும் - (எனக்குக்) கருணைசெய்த, நல் தாயினும் இனியான் - நல்ல தாயைக்காட்டிலும் இனியவனான திருமாலினது, நாடு - திவ்வியதேசம்; (எ - று.)

நாள்தோறும் கிழக்கில்உதித்து மேற்கில் அஸ்தமித்துவருகின்ற சந்திர சூரியர்களின் சஞ்சாரம், பூமியில் உயர்ந்து தோன்றுகிற திருவேங்கடமலையைப் பிரதக்ஷிணஞ் செய்தல் போலத் தோன்றுதலாலும், தேவாதிதேவனான திருமால் எழுந்தருளியிருக்கிற திருவேங்கடமலையைச் சந்திரசூரியாதி தேவர்கள் எப்பொழுதும் பிரதக்ஷிணஞ்செய்தல் மரபாதலாலும், 'அம்புலியினொடு தினகரனும் வலஞ்செய்' என்றார். வலஞ்செய்தல் - வலப்புறத்தாற் சுற்றிவருதல். 'வாழ்', 'வானூர்' என்ற அடைமொழிகள் - அம்புலி, தினகரன் என்ற இருவர்க்கும் பொருந்தும். தினகரன் என்ற வடசொல் - பகலைச் செய்பவனென்று பொருள்படும். குறிஞ்சிநிலத்துப் பெருவிலங்காகிய யானைகள் அம்மலையின் வளத்தால் மிக்ககொழுமைகொண்டு ஒன்றோடொன்றுபொருதும் பிறவற்றோடுபொருதும் தம்வலிமையையும் வெற்றியையுங் காட்டுதல் தோன்ற, 'வேழங்களும் வலஞ்செய்' என்றனரென்க. வலம்-பலமென்ற வடசொல்லின் விகாரம்.

ஊழாவது - இருவினைப்பயன் செய்த உயிரையே சென்று அடைதற்கு ஏதுவாகிய நியதி. எனது கருமங்களை யெல்லாம் ஒழித்து எனக்கு முத்தியையருளும் பேரன்புடைய கடவுளென்பது, பிற்பாதியின் கருத்து. சற்று, இனி - இடைச்சொற்கள். நல்தாய் - பெற்றதாய். தான்பெற்ற குழந்தைகட்கு ஆவனவெல்லாம்செய்யும் இயல்பு தோன்ற, 'நல்தாய்'என்றார். (கூகூ)

எ௦. தாட்கமலப் பூஞ்சுனைக்குஞ் சாயகங்கள் கொய்துதிரி
வேட்கும் வடிவில்லா வேங்கடமே—வாட்கலிய
னாவியப்பாம் பாட்டினார் நச்சுமடு வைக்கலக்கித்
தாவியப்பாம் பாட்டினார் சார்பு.

(இ - ள்.) தாள் - நாளத்தோடு கூடிய, கமலம் - தாமரையையுடைய, பூ - அழகிய, சுனைக்கும் - சுனைகளுக்கும், வடிவு இல்லா - நீர்குறைதல் இல்லாத; சாயகங்கள் கொய்து திரி வேட்கும் -(தனக்கு அம்புகளாகிற)மலர்களைப் பறித்துக்கொண்டு திரிகிற மன்மதனுக்கும், வடிவு இல்லா - உருவம் இல்லாத : வேங்கடமே—,—வாள் - வாட்படையை ஏந்திய, கலியன் - திருமங்கையாழ்வாருடைய, நா - நாவினின்றுவருகிற, வியப்பு ஆம் பாட்டினார் - அதிசயிக்கத்தக்க பாடல்களையுடையவரும், தாவி - குதித்து, நஞ்சு மடுவை கலக்கி - விஷத்தையுடைய மடுவைக் கலங்கச்செய்து, அ பாம்பு ஆட்டினார் - அந்த(க் காளியனென்னும்) பாம்பை ஆட்டினவருமான திருமால், சார்பு - சார்ந்திருக்குமிடம் ; (எ - று.)

சுனை - நீரூற்றுள்ள மலைக்குளம். அதற்கு வடிவுஇல்லையென வேங்கடத்தின் நீர்வளச்சிறப்பை உணர்த்தியவாறும். வடிவு - வடிதல்; 'வு' விகுதி பெற்றதொழிற்பெயர். சிவபிரானது நெற்றிக்கண்ணின் நெருப்புக்கு இரையாய் அங்கம் இழந்து அநங்கனான மன்மதன், தனக்கு அம்புகளாகின்ற தாமரைமலர் அசோகமலர் மாமலர் முல்லைமலர் நீலோற்பலமலர் என்பன அம்மலையிற் செழித்திருத்தலால் அவற்றைப் பறித்தெடுத்துக்கொள்ளுதற் பொருட்டு அங்குத் திரிகின்றனனென்பார் 'சாயகங்கள்கொய்துதிரி வேட்கும் வடிவில்லா' என்றார். கொய்து என்ற வினையினால், 'சாயகங்கள்' என்றது, மலர்களென விளங்கும். கமலம், ஸாயகம் - வடசொற்கள்.

திவ்யமான பாசுரங்களைத் திருமங்கையாழ்வார்பாடும்படி அருள்செய்தவர் திருமாலாதலாலும், திருவேங்கடமுடையான் திருமங்கையாழ்வாரது பாடல் பெற்றவராதலாலும், 'கலியன் நாவியப்பாம் பாட்டினார்' என்றார். சோழமண்டலத்தில்திருமங்கையென்னும்நாட்டில்சோழராசனுக்குச்சேனைத்தலைமைபூணும்பரம்பரையில் தோன்றி நீலனென்னும்இயற்பெயர்பெற்ற இவர், தம்குடிக்குஏற்ப இளமையிலேயே படைக்கலத்தேர்ச்சிபெற்று அவ்வரசனுக்குச் சேனாதிபதியாய்அமர்ந்து வலக்கையில்வாளையும் இடக்கையில் கேடகத்தையும் ஏந்திச்சென்று பகைவரோடுபொருதுவென்று பரகாலனென்றுபெயர்பெற்ற பராக்கிரமம் தோன்ற,'வாட்கலியன்' என்றார். "மாயோனைவாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்", "தென்னரங்கன்றனை வழிபறித்தவாளன்" என்றபடி இவர் எம்பெருமானை வழிபறித்தபோது கையிற்கொண்டவாளைக்காட்டி அச்சுறுத்தி அப்பெருமானிடம் மந்திரோபதேசம்பெற்றமை தோன்ற, 'வாட்கலியன்' என்றருமாம். சோழராசன்கட்டளைப்படி மங்கைநாட்டுக்கு அரசனாகிய இவர் குமுதவல்லியென்னும் கட்டழகியை மணஞ்செய்துகொள்ளுதற்பொருட்டு அவள்சொற்படி நாள்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்வித்துவருகையில்,பொருள்

முழுவதும் செலவாய் விட்டதனால் வழிபறித்தாகிலும் பொருள் தேடிப் பாகவததததியாராதநத்தைத் தடையற நடத்தத் துணிந்து வழிச்செல்வோ ரைக்கொள்ளையடித்துவரும்போது ஸ்ரீமந்நாராயணன் இவரையாட்கொள் ளக்கருதித் தான் ஒருபிராமணவேடங்கொண்டு பல அணிகலங்களைப்பூண்டு மணவாளக்கோலமாய் மனைவியுடன் இவரெதிரில் எழுந்தருள, இவர் கண்டு களித்து ஆயுதபாணியாய்ப் பரிவாரத்துடன் சென்று அவர்களை வளைந்து வஸ்திராபரணங்களையெல்லாம் அபகரிக்கையில், அம்மணமகன் காலில் அணிந்துள்ள மோதிரமொன்றைக் கழற்றமுடியாமையால் அதனையும் விடாமற் பற்களாலே கடித்துவாங்க, அம்மிடுக்கை நோக்கி எம்பெருமான் இவர்க்கு 'கலியன்' என்று ஒருபெயர்கூறினனென்றும்; பின்புஇவர்பறித்த பொருள்களையெல்லாம் சுமையாகக்கட்டிவைத்து எடுக்கத்தொடங்குகை யில், அப்பொருட்குவை இடம்விட்டுப் பெயராதிருக்கக் கண்டு அதிசயித்து அவ்வந்தணனை நோக்கி 'நீ என்ன மந்திரவாதம் பண்ணினாய்? சொல்'என்று விடாதுதொடர்ந்து நெருக்க, அப்பொழுது அந்த அழகியமணவாளன், 'அம் மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம்; வாரும்' என்று இவரை அருகில் அழைத்து அஷ்டாக்ஷர மகா மந்திரத்தை இவர் செவியில் உபதேசித்தருளி உடனே கருடாரூடனாய்த் திருமகளோடு இவர்முன் சேவை சாதிக்க, அத் திருவுருவத்தைத்தரிசித்ததனாலும், முன்பு காலாழிவாங்கியபொழுது பகவா னுடைய திருவடியில் வாய்வைத்ததனாலும் இவர் அஜ்ஞானம் ஒழிந்து தத் துவஞானம் பெற்றுக் கவிபாட வல்லவராய், பெரிய திருமொழி, திருக் குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரியதிருமடல் என்ற ஆறு திவ்வியப்பிரபந்தங்களைத் திருவாய் மலர்ந்தருளினரென்றும் வரலாறு அறிக. 'வியப்பாம்' என்ற அடைமொழி- அப்பாசுரங்களின் அருமைபெருமைகளை உணர்த்தும்.

மடு - ஆற்றினுட்பள்ளம். 'அப்பாம்பு' எனச்சுட்டினது, கதையை உட் கொண்டு. அன்றி, அகரச்சுட்டு - கொடுமையிற் பிரசித்தியை விளக்குவது மாம். ஆட்டினார் - ஆட்டிவருத்தியவர்; பிறவினை யிறந்தகாலத் தெரிநிலை வினையாலணையும்பெயர். இனி, பாம்புஆட்டினார் - பாம்பின்மேற் கூத்தாட் டையுடையவ ரெனினுமாம்; இப்பொருளில், இச்சொல் - குறிப்புவினையா லணையும்பெயர்: இன் - சாரியை. ஆட்டு - ஆடுதல்; ஆடு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். கண்ணன் காளியனுடைய முடியின்மேல் ஏறி நர்த் தநஞ்செய்தருளும்போது ஐந்துதலைகளையுடைய அந்நாகம் எந்தெந்தப்படத் தைத் தூக்குகின்றதோ அந்தந்தப்படத்தைத் துவைத்து நர்த்தநஞ்செய்து நின்று அப்பாம்பின் வலிமையை யடக்கி அதனை மூர்ச்சையடையச் செய் கையில் பலவகை நடனத்திறங்களைச் செய்து காட்டியமை தோன்ற, 'பாம் பாட்டினார்' என்றனரென்க. (எ௦)

எக. ஆயுந் துறவறத்தை யண்டினமுத் தண்டினரும்
வேயுங் கிளைவிட்ட வேங்கடமே—தோயுந்
தயிர்க்காத்தாங் கட்டுண்டார் தாரணியிற் றந்த
வுயிர்க்காத்தாங் கட்டுண்டா ரூர்.

(இ - ள்.) ஆயும் - (சிறந்ததென்று நூல்களினால்) ஆராய்ந்து கூறப்பட்ட, துறவு அறத்தை - சந்நியாசாச்சிரமத்தை, அண்டின - பொருந்திய, முத் தண்டினரும் - திரிதண்டத்தையேந்திய முனிவர்களும், கிளை விட்ட - சுற்றத்தாரைப் பற்றறக் கைவிடுதற்கிடமான: வேயும்-மூங்கில்களும், கிளை விட்ட - கிளைகளை வெளிவிட்டுச் செழித்து வளர்தற்கிடமான: வேங்கடமே—,—தோயும் தயிர்க்கு ஆ - தோய்ந்ததயிரைக் களவுசெய்து உண்டதற்காக, தாம் கட்டுண்டார் - தாம் கட்டுப்பட்டவரும், தாரணியில் - உலகத்தில், தந்த - (தம்மாற்) படைக்கப்பட்ட, உயிர் - உயிர்களை, காத்து - பாதுகாத்து, ஆங்கு - அதன்பின்பு, அட்டு - அழித்து, உண்டார் - விழுங்கியவருமான திருமாலினது, ஊர்—; (எ - று.)

மூன்று மூங்கில்களை ஒருங்குசேர்த்துக் கட்டினதாகிய திரிதண்டத்தைக் கையிற்கொள்ளுதல், வைஷ்ணவசந்யாசிகளின் இயல்பு. துறவிகள் முக்கோல்பிடித்தல் காமம்வெகுளி மயக்கமென்னும் முப்பகையையும் மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்னும் ஈஷணாத்திரயங்களையும் வென்று அடக்கியதற்கும், சித் அசித் ஈசுவரன் என்னும் தத்துவத்திரயத்தைக் கைப்பற்றினமைக்கும் அறிகுறியாகுமென்பர். ஆயுந்துறவறம் - தத்துவப்பொருளை ஆராய்தற்கு உரிய துறவறமுமாம்: துறவறம் - பற்றுக்களைத் துறந்து செய்யும் ஒழுக்கம். தண்டு-தண்டமென்ற வடசொல்லின் விகாரம். 'முத்தண்டினர் கிளைவிட்ட' என்றதனால், அவர்களுடைய ஒழுக்கச்சிறப்பை உணர்த்தியவாறு. வேய்க்குக் கிளைவிடுதல் - கப்புவிடுதல்.

ஆ - விகாரம். கட்டுண்டார் என்பதில், உண் என்ற துணைவினை - செயப்பாட்டுவினைப்பொருளை யுணர்த்தும். கண்ணன் இளமைப்பிராயத்தில் திருவாய்ப்பாடியிலுள்ள ஆயர்மனைகளிற் சென்று அவர்களுடைய பால் தயிர் வெண்ணெய் முதலியவற்றைக் களவுசெய்து உண்டமையை ஆய்ச்சியர் சொல்ல அறிந்த யசோதை அக்குற்றத்துக்கு ஒருதண்டனையாகக் கண்ணனை வயிற்றிற் கயிற்றினாற் கட்டி உரலோடு பிணித்துவைத்தனளென்பது அறிக. நித்தியமான உயிர்களை 'தந்தவுயிர்' என்றது, அவற்றிற்கு உடலுறுப்புக்களைத் தந்தமை பற்றி யென்க. திரிமூர்த்தி சொரூபியாய் நின்று படைத்தல் காத்தல் அழித்தல் செய்பவரும், பிரளயகாலத்தில் அனைத்துயிரையும் வயிற்றினுள் வைத்துப்பாதுகாப்பவரும் திருமாலேயாதலால், 'தாரணியில் தந்த வுயிர்க் காத்து ஆங்கு அட்டு உண்டார்' என்றார். உயிர் காத்து என இரண்டாம் வேற்றுமைத் தொகையில் வலிமிகாமல் வரவேண்டிய தொடர், திரிபுநயம்நோக்கி 'உயிர்க்காத்து' என வலிமிக்கது; இது, விரித்தலென்னுஞ் செய்யுள்விகாரத்தின்பாற் படும். (எக)

எஉ. தொண்டொடுமெய் யன்புடையார் தூய்மனமுஞ் சந்தனமும்
விண்டொடுபொற் பாம்பணைசேர் வேங்கடமே—தண்டொடு [வாள்
கோலமருங் கார்முகத்தார் கோடாழி யார்குழையின்
கோலமருங் கார்முகத்தார் குன்று.

(இ - ள்.) தொண்டொடு - பணிவிடை செய்தலுடனே, மெய் அன்பு உடையார் - உண்மையான பக்தியை யுடைய அடியார்களது, தூய் மனமும் - பரிசுத்தமான உள்ளமும், விண்டொடு பொன் பாம்பு அணை சேர் - திருமாலுடனே அழகிய ஆதிசேஷ சயநத்தைத் தியானிக்கப் பெற்ற: சந்தனமும் - சந்தனமரங்களும், விண் தொடு பொற்பு ஆம் பணை சேர் - (உயர்ச்சியால்) ஆகாயத்தை அளாவிய பொலிவான கிளைகள் பொருந்தப்பெற்ற: வேங்கடமே—,—தண்டொடு - கதாயுதத்துடனே, வாள் - வாளாயுதத்தையும், கோல் அமரும் கார்முகத்து - அம்புகள் பொருந்திய வில்லையும், ஆர் கோடு - ஒலிக்கின்ற சங்கத்தையும், ஆழியார் - சக்கரத்தையும் உடையவரும், குழையின் கோலம் மருங்கு ஆர் முகத்தார் - குண்டலங்களின் அழகு (இரண்டு) பக்கங்களிலும் பொருந்திய திருமுகத்தை யுடையவருமான திருமாலினது, குன்று - திருமலை; (எ - று.)

தொண்டு - கைங்கரியம். மெய்யன்பு - மனப்பூர்வமாகிய பக்தி. ஆதிசேஷனாகிய சயனத்திற் பள்ளிகொண்டிருக்கின்ற திருமாலை அடியார்கள் உள்ளத்திற்கொண்டு தியானிக்கின்றனரென்க. விஷ்ணு என்ற வடசொல், விண்டு எனச் சிதைந்தது. சேர்தல்-இடைவிடாது நினைத்தலாதலை, திருக்குறளில் "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்" என்றவிடத்துப் பரிமேலழகருரையாலும் அறிக. கிளைகளுக்கும் வானத்துக்கும் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கூறினது, தொடர்புயர்வுநவிற்சியணி; இது, கிளைகளின் மிக்கஉயர்வை விளக்கும். பொற்பு - உரிச்சொல்.

திருமாலின் பஞ்சாயுதங்களுள், கதை கௌமோதகி யென்றும், வாள் நந்தக மென்றும், வில் சார்ங்க மென்றும், சங்கம் பாஞ்சஜந்ய மென்றும், சக்கரம் சுதர்சநமென்றும் பெயர்பெறும். கார்முகம் - வடசொல்; கர்மத்தில் [அதாவது (போர்த்) தொழிலில்] வல்லதென்று பொருள்படும். ஆர்கோடு - வினைத்தொகை; ஆர்த்தல் - ஒலித்தல். கோடு, வளை என்பன - பரியாய நாமம். ஆழி - (பகைவரை) அழிப்பது; அல்லது, வட்டவடிவமானது. ஆர்முகம் - வினைத்தொகை; ஆர்தல் - பொருந்துதல்.

இச்செய்யுளின் பின்னிரண்டடியில் யமகம் அமைந்திருத்தல் காண்க.

எ௩. கிட்டுநெறி யோகியருங் கிள்ளைகளுந் தங்கூடு
விட்டுமறு கூடடையும் வேங்கடமே—யெட்டுமத
மாவென்று வந்தான் வரநாளை வாவின்று
போவென் றுவந்தான் பொருப்பு.

(இ - ள்.) கிட்டும் நெறி யோகியரும் - (முத்தியை) விரைவிற் சேரும் உபாயமான யோகத்திற் பயில்கிற முனிவர்களும், தம் கூடு விட்டு மறு கூடு அடையும் - தமது சரீரத்தை விட்டு வேறு சரீரத்திற் புகப்பெற்ற: கிள்ளைகளும் - கிளிகளும், தம் கூடு விட்டு மறுகு ஊடு அடையும் - தாம்வசிக்கிற கூண்டை விட்டு நீங்கி வீதிகளிற் சேரப்பெற்ற: வேங்கடமே—,—மதம் எட்டு மா வென்று வந்தான் - மதம்பிடித்த அஷ்டதிக்கஜங்களைச் சயித்து

வந்தவனான இராவணன், வர - (தன் எதிரிற் போருக்கு) வர, (அவனை உடனே எளிதில் வென்று), இன்று போ நாளை வா என்று - 'இன்று போய் நாளைக்கு வா' என்று சொல்லி, உவந்தான் - (அவனிடத்து) அன்புகாட்டிய வனான திருமாலினது, பொருப்பு - திருமலை; (எ - று.)

நெறி - மார்க்கம். யோகியர் தம் கூடுவிட்டு மறுகூடு அடைதல் - தம் உயிர் தம்உடம்பைவிட்டுநீங்கி வேறோருடம்பினுட் புக்குத் தொழில்செய்யு மாறு செய்தல்; இது, பரகாயப்பிரவேச மென்னுஞ் சித்தி. பறவைகள் வசிக் குங் கூடுபோல உயிர் தங்குமிடமாதலாலும், உயிர்கூடுமிட மாதல்பற்றியும், உடம்பு 'கூடு' என்று பெயர்பெறும். கிள்ளை - பெயர்த்திரிசொல். மறுகூடு, ஊடு - ஏழனுருபு. அடைதல் - உட்புகுதலும், சேர்தலும்.

இராவணன் திக்விஜயகாலத்தில் இந்திரன் முதலிய தேவர்களோடு பொருகையில் ஐராவதம் முதலிய திக்கஜங்களை யெதிர்த்து அவற்றின் தந் தங்களை ஒடித்து அவற்றை வலிதொலைத்தனனென அறிக. இராமபிரான், முதல்நாட்போரில் தன்சேனை முழுவதும் படைக்கலமனைத்தும் அழியத் தனியனாய் அகப்பட்ட இராவணனது எளிமையை நோக்கி இரங்கி மேலும் போர்செய்யாது நிறுத்தி 'இன்றுபோய் நாளை நின்படையொடு வா' என்று கூறி விட்டனனென்பது வரலாறு; "ஆளையா வுனக் கமைந்தன மாருத மறைந்த, பூளையாயின கண்டனை யின்றுபோய்நீ போர்க்கு, நாளைவாவென நல்கினன் நாகிளங் கமுகின், வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்" என்ற கம்பராமாயணச்செய்யுள் இங்கே காணத்தக்கது. இங்ஙனம் பகைவ னிடத்து அருள்கொண்டு அவனைவிடுதல், தழிஞ்சி யென்னும் புறப்பொருள் துறையாம்; அது, வலியிழந்தவர்மேற் போர்க்குச் செல்லாமல் அவர்க்கு உதவிசெய்து தழுவுவது. இதனால், இராமபிரானது காம்பீரியம், கருணை, அறத்தின்வழிநிற்றல் முதலிய திருக்கலியாணகுணங்கள் விளங்கும்.

'மதமா' எனவே, யானையாயிற்று; விலங்கின் பொதுப்பெயராகிய 'மா' என்பது-'மதம்' என்றஅடைமொழியால், சிறப்பாய் யானையை உணர்த்திற் றென்க. எட்டுமதமா - ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்ச நம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம் எனப் பெயர் பெறும்; இவற் றைக் கிழக்கு முதலாக முறையே கொள்க. நாளை, இன்று என்பன முறை யே எதிர்காலத்தையும் நிகழ்காலத்தையுங் காட்டும் இடைச்சொற்கள். மூன்றாமடியில் உவந்தான் எனப் பதம்பிரித்துக் களிப்புக்கொண்டவ னென்று பொருளுரைத்து, நான்காமடியில் வந்தான் என்று பதம்பிரித்துப் போரொழிந்து மீண்டானென்று பொருளுரைப்பினும் அமையும். (எங)

எச. மட்டுவளர் சாரலினு மாதவத்தோர் சிந்தையினும்
விட்டு மதிவிளங்கும் வேங்கடமே—கட்டுசடை
நீர்க்கங்கை யேற்று னிரப்பொழித்தா னிள்குறளாய்ப்
பார்க்கங்கை யேற்றான் பதி.

(இ - ள்.) மட்டு வளர் சாரலினும்-(மலர்களினின்றும் கூண்டுகளினின் றும்) தேன் பெருகிவழியப்பெற்ற (அம்மலையின்) பக்கங்களிலும், மதி விட்டு

விளங்கும் - சந்திரன் (ஒளியை) வீசி விளங்கப்பெற்ற: மா தவத்தோர் சிந்தையினும் - பெருந்தவத்தையுடைய முனிவர்களது மனத்திலும், விட்டு மதி விளங்கும்-திருமாலை விஷயமாகக் கொண்ட ஞானச்சுடர் விளங்கப்பெற்ற: வேங்கடமே—,—கட்டு சடை - தொகுத்துக் கட்டிய சடையில், நீர் கங்கை - கங்கைநீரையுடைய, ஏற்றான் - ரிஷபவாகனனான சிவபிரானது, இரப்பு - யாசித்தலை, ஒழித்தான் - நீக்கியருளியவனும், நீள் குறள் ஆய்-(பின்பு) நீண்டு வளருந்தன்மையுள்ள வாமநவடிவங்கொண்டு, பார்க்கு - உலகத்தைப் பெறும்பொருட்டு, அம் கை ஏற்றான்-அழகிய கையில் (மகாபலி தந்தநீரை) ஏற்றுக்கொண்டவனுமான திருமாலினது, பதி - திவ்வியதேசம்; (எ - று.)

பதி - திருப்பதி. மட்டு வளர் சாரல் - மலர்களின் நறுமணம் வீசப்பெற்ற மலைப்பக்கமுமாம். சாரல் - சார்தல்; மலையைச் சார்ந்த பக்கத்துக்குத் தொழிலாகுபெயர். சாரலிற் சந்திரன் விளங்குமென அம்மலையின் உயர்வை விளக்கியவாறு. மதி - சந்திரனென்னும் பொருளில், (பலராலும்) மதிக்கப்படுவதென்று காரணப்பொருள்படும்; அறிவைக் குறிக்கையில், வடசொல். விஷ்ணுஎன்ற வடசொல், விட்டுஎன விகாரப்பட்டது.

ஏற்றான் என்றது - மூன்றுமடியில் ஏறு என்ற பெயரின்மேற் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயரும், நான்காமடியில் ஏல் என்ற வினைப் பகுதியின்மேற் பிறந்த இறந்தகாலத் தெரிநிலை வினையாலணையும் பெயருமாம். ஏறு - பசுவின் ஆண்மைப்பெயர். நீள் குறள் - இனி நீளுங் குறள் என எதிர்கால வினைத்தொகை. குறள் - குறுகிய வடிவம். 'நீள்குறள்' என்றது, "ஆலமர்வித்தி னருங்குறளானான்" என்றபடி மிகப்பெரிய திரிவிக்கிரம வடிவத்தை உட்கொண்ட மிகச்சிறிய வாமநவடிவ மென்க. பார் - பார்க்கப்படுவது, அல்லது பருமையுடையது எனக் காரணப்பொருள்படும். (எச)

எரு. புக்கவரு மாதவரும் பூமதுவுண் வண்டினமு
மெய்க்கவசம் பூண்டிருக்கும் வேங்கடமே—யொக்கவெனை
யன்பதினா லாண்டா ரரிவையொடுங் கானுறைந்த
வன்பதினா லாண்டார் வரை.

(இ - ள்.) புக்க-அங்கு வருகின்ற, அரு மா தவரும்-அரிய பெரிய தவத்தையுடைய முனிவர்களும், மெய் கவசம் பூண்டு இருக்கும் - சத்தியமாகிய கவசத்தைத் தரித்திருக்கப்பெற்ற: பூ மது உண் வண்டு இனமும் - மலர்களிலுள்ள தேனைக் குடிக்கின்ற வண்டுகளின் கூட்டமும், மெய்க்கு அவசம் பூண்டு இருக்கும் -(அம்மதுபானத்தாலாகிய மயக்கத்தால் தமது) உடம்பில் தம்வசம் தப்பிப் பரவசமாந்தன்மையைக் கொண்டிருக்கப்பெற்ற: வேங்கடமே—;—ஒக்க -(தமது மெய்யடியாரை) ஒப்ப, எனை -(அடிமைத்திறமில்லாத) என்னையும், அன்பு அதினால் ஆண்டார் - அன்பினால் ஆட்கொண்டவரும், அரிவையொடும் - சீதாபிராட்டியுடனே, கான் உறைந்த - வனத்தில் வசித்த, வல் பதினால் ஆண்டார் - கொடிய பதினான்கு வருடங்களையுடையவருமான திருமாலினது, வரை - திருமலை; (எ - று.)

கவசம் - இரும்பு முதலியவற்றாலாகின்ற உடம்பின்மேற் சட்டை; அது உடம்பைப் பாதுகாப்பது போலச் சத்தியம் உயிரைப் பாதுகாத்தலால், 'மெய்க்கவசம்' எனப்பட்டது. முனிவர்கட்கு வாய்மையுடைமை இன்றியமையாத ஒழுக்கமாதலால், 'புக்க அருமாதவர் மெய்க்கவசம்பூண்டிருக்கும் வேங்கடம்' எனப்பட்டது. கவசம், மது, அவசம் - வடசொற்கள். மெய்க்கு என்பதில் நான்கனுருபு ஏழனுருபின் பொருளில் வந்தது, உருபுமயக்கம். அ + வசம் = அவசம். வடமொழிச்சந்தி. புக்க அருமாதவர், மெய்க்கு அவசம் பூண்டு இருக்கும் - பரம்பொருளை அனுபவிக்கும் ஆனந்தமிகுதியால் தம் உடம்பு தம்வசமழிந்து பரவசமாகப்பெற்ற என்றும்; மலர்களில் மதுவை யுண்ட வண்டினம், மெய்க்கவசம் பூண்டு இருக்கும் - (அம்மலர்களின்தாதுக்கள் மேற்படிதலால்) உடம்புக்குக் கவசம்பூண்டிருக்கப்பெற்ற என்றும் உரைப்பாரும் உளர்.

'அன்பதினால்' என்பதில், 'அது' என்பது - பகுதிப்பொருள் விகுதி; இன் - சாரியை. ஆண்டார் என்பது - மூன்றாமடியில் ஆள் என்னும் வினைப் பகுதியின்மேற் பிறந்த இறந்தகாலத்தெரிநிலை வினையாலணையும்பெயரும், நான்காமடியில் ஆண்டுஎன்னும் பெயரின்மேற்பிறந்த குறிப்புவினையாலணை யும்பெயருமாம். அரிவையென்பது - இங்குப் பருவப்பெயராகாமல் பெண்ணென்ற மாத்திரமாய் நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபது முதல் இருபத்தைந்தளவும். அரிவையொடும், உம்-இசைநிறை. 'வன்பதினொலாண்டு' என்றது, கொடியவனத்தில் வசிக்குங் காலம் கழித்தற்கு அரிதாதலாலும், அவ்வனவாசகாலத்திற் பிரானுக்கும் பிராட்டிக்கும் பலஇடையூறுகள் நேர்ந்ததனாலுமென்க. இராமபிரான் தனது சிறியதாயான கைகேயிக்குத் தனதுதந்தையாகிய தசரதன் கொடுத்திருந்த வரங்களை நிறைவேற்றுதற்பொருட்டு அக்கைகேயியின் மகனான பரதனுக்கு உரியதாம்படி இராச்சியத்தைக் கைவிட்டுச் சீதையுடனே சென்று பதினான்கு வருடகாலம் வனவாசஞ் செய்தமை பிரசித்தம். 'அரிவையொடும் கானுறைந்த வன் பதினொலாண்டார்' என்றது, வடமொழிநடை; கொடிய கானில் அரிவையுடனே பதினாலாண்டு உறைந்தவரென்க. (எரு)

எசு. தக்கமறை யோர்நாவுந் தண்சார லின்புடையு
மிக்க மனுவளையும் வேங்கடமே—யக்கரவம்
பூண்டார்க்கு மாறுடைத்தார் பொங்கோத நீரடைத்து
மீண்டார்க்கு மாறுடைத்தார் வெற்பு.

(இ - ள்.) தக்க மறையோர் நாவும் - தகுதியையுடைய அந்தணர்களின் நாக்கும், மிக்க மனு அளையும் - சிறந்த மந்திரம் (உச்சாரணத்தாற்) பொருந்தப்பெற்ற: தண் சாரலின் புடையும் - குளிர்ந்த அம்மலைச்சாரல்களின் பக்கங்களும், மிக்க மனு வளையும் - மிகுதியான மனிதர்கள் பிரதக்ஷிணஞ்செய்யப்பெற்ற: வேங்கடமே—,—அக்கு அரவம் பூண்டார்க்கு - எலும்புமாலையையும் சர்ப்பங்களையும் ஆபரணமாகத்தரித்த சிவபிரானுக்கு, மால் துடைத்தார் - (பிரமகத்திதோஷத்தாலாகிய) மயக்கத்தைப் போக்கியருளியவரும்,

பொங்கு ஓதம் நீர் - பொங்குகிற அலைகளையுடைய கடலை, அடைத்து-அணை கட்டி மறித்து, மீண்டு - பின்பு, ஆர்க்கும் ஆறு - ஆரவாரிக்கும்படி, உடைத்தார்-(அத்திருவணையை) உடைத்தருளினவருமான திருமாலினது; வெற்பு- திருமலை; (எ - று.)

மனு - காசியபமுனிவரது மனைவியருள் ஒருத்தி; இச்சொல் - இங்கு இலக்கணையாய், அவளினிடமாகத் தோன்றிய மனிதர்களை உணர்த்திற்று. வளைதல் - சூழ்தல். அச்கு - ருத்திராக்ஷமாலையுமாம். அக்கரவம் பூண்டார்க்கு மால் துடைத்தார் - சிவபிரானது கையில் ஒட்டிய கபாலத்தை விடுவித்தவர்; அன்றி, சிவபிரானுக்கு அஜ்ஞானமயக்கம் நீங்குமாறு தத்துவஞானத்தை உபதேசித்தவ ரெனினுமாம்.

இராமபிரான் இராவணனாதியரை அழித்தற்பொருட்டு இலங்கைக்குச் செல்லவேண்டி அதற்கும் இந்தப்பூமிக்கும் இடையிலுள்ள கடலில் வானரங்களைக்கொண்டு மலைகளால் அணைகட்டி அதன்வழியாக இலங்கைபுக்கு அரக்கரைத்தொலைத்து மீளுகையில், இராக்கதராசதானியான இலங்கையிலுள்ளார்க்கும் இப்பூமியிலுள்ள மனிதர்க்கும் போக்குவரவு இல்லாமலிருத்தற்பொருட்டும், கடலிடையே மரக்கலமியங்குதற்பொருட்டும் அச்சேதுவை உடைத்தன ரென்ற வரலாற்றை இங்கு அறிக. (எசு)

எஎ. நீடு கொடுமுடியு நீதிநெறி வேதியர்கள்
வீடு மகமருவும் வேங்கடமே—கோடுங்
கருத்துளவ மாலையார் காணாமை னின்ற
மருத்துளவ மாலையார் வாழ்வு.

(இ - ள்.) நீடு கொடுமுடியும் - உயர்ந்த அம்மலைச் சிகரங்களும், மகம் மருவும் - (வானத்திற்செல்லும்) மகநட்சத்திரம் பொருந்தப்பெற்ற; நீதி நெறி வேதியர்கள் வீடும் - நியாயமார்க்கத்தில் நடக்கின்ற அந்தணர்களுடைய கிருகங்களும், மகம் மருவும் - யாகங்கள் பொருந்தப்பெற்ற; வேங்கடமே—,—கோடும் கருத்துள் - நேர்மைதவறிய மனத்தில், அவம் மாலையார் - வீண்எண்ணங்களின் வரிசைகளை யுடையவர்கள் [அடிமைக்கருத்தில்லாதவர்கள்], காணாமல் - (தமதுசொரூபத்தைக்) காணவொண்ணாதபடி, நின்ற - (அவர்கட்குப் புலப்படாது) நின்ற, மரு துளவம் மாலையார் - நறுமண முள்ள திருத்துழாய் மாலையை யுடையவரான திருமால், வாழ்வு - எழுந்தருளி யிருக்குமிடம்; (எ - று.)

நீடு கொடுமுடி - வினைத்தொகை. மலைச்சிகரத்தைக் கொடுமுடியென்றல், மேல்வளைந்திருத்தலால்; கொடுமை-வளைவு. 'கொடுமுடி மகம்மருவும்' என்றது, அம்மலைச்சிகரங்களின் மிக்கஉயர்வை விளக்கும் தொடர்புயர்வு நவிற்சியணி. மகம் என்றது, மற்றை நக்ஷத்திரங்களுக்கும், கிரகங்களுக்கும் உபலக்ஷணம். வேதியர் - வேதம் வல்லவர்; கள் - விகுதிமேல்விகுதி. 'அவர்கள்வீடு மக மருவும்' எனப் பிரித்து, அவர்கள் வீடு புத்திரபாக்கியம் பொருந்தப்பெற்ற என்று உரைப்பினும் அமையும்.

அந்தர்யாமியாகிய கடவுள், உள்ளன்புடைய ஞானிகளுக்குப் புலப்படுவனேயன்றி மனத்தூய்மையில்லாத அஜ்ஞாநமயக்கமுடையார்க்குப் புலனாகானென்பது, பின்னிரண்டடியில் விளங்கும். 'அவ மாலையார்' என்பதற்கு - வீணானமயக்கத்தை யுடையவர்களென்று உரைப்பாருமுளர். மால் - மயக்கம்: ஐ - சாரியை. 'மாலையான்' என்று பாடமோதி, வீணெண்ணங்களின் தொடர்ச்சியையுடைய நான் என்று உரைப்பர் ஒருசாரார். (எஎ)

எஅ. சீதங்கொள் சாரலினுஞ் சீர்மறையோ ரில்லிடத்தும்
வேதங்க ளால்வளரும் வேங்கடமே—போதன்
சிரித்துப் புரந்துடைத்தான் றேவரொடு மண்டம்
விரித்துப் புரந்துடைத்தான் வெற்பு.

(இ - ள்.) சீதம் கொள் சாரலினும் - குளிர்ச்சியைப் பெற்ற அம்மலைப் பக்கங்களிலும், வே தம் கணால் வளரும் - மூங்கில்கள் தம்முடைய கணுக்களோடு வளரப்பெற்ற: சீர் மறையோர் இல் இடத்தும் - சிறந்த அந்தணர்களுடைய வீடுகளிலும், வேதங்கள் நால் வளரும் - நான்குவேதங்களும் (ஓதப்பட்டு) வளர்தற்கு இடமான: வேங்கடமே—,—போதன் - பிரமனும், சிரித்து புரம் துடைத்தான் - நகைத்துத் திரிபுரத்தைஅழித்தவனான சிவனும், தேவரொடும - மற்றைத் தேவர்களும் ஆகிய அனைவருடனே, அண்டம் - அண்டகோளங்களை, விரித்து - வெளிப்படுத்தி[படைத்து], புரந்து - காத்து, உடைத்தான் - அழிக்குந்தன்மையனான திருமாலினது, வெற்பு - திருமலை.

வே - வேய் என்பதன் விகாரம். கணால் - கண்ணால்: தொகுத்தல்; கண் - கணு: இதில் ஆல் என்னும் மூன்றனுருபு, உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. சீர் - ஸ்ரீ என்னும் வடமொழியின் சிதை வென்பர். வேதம் என்ற சொல் - (நன்மைதீமைகளை விதிவிலக்குக்களால்)அறிவிப்பது என்று பொருள்படும்; வித் - அறிவித்தல். வேதங்கள் நால் - இருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்பன. நால் - நான்கு என்பதன் விகாரம்.

பிரம ருத்தி ரேந்திராதி தேவர்களுடனே எல்லா அண்டங்களையும் படைத்துக் காத்து அழிப்பவன் திருமாலென்பது, பிற்பாதியில் விளங்கும். உடைத்தானென்பதில், இடைநிலை காலமுணர்த்தாது தன்மையுணர்த்தும். போதன் - திருமாலின் நாபித்தாமரைமலரில் தோன்றியவன்; போது - பூ.

எகூ. நன்கோடு போலுமுலை நாரியருஞ் சண்பகத்தின்
மென்கோடுங் கற்பகஞ்சேர் வேங்கடமே—வன்கோடு
கூரிருவ ராகனூர் கோகனகை பூமியென்னு
மோரிருவ ராகனு ரூர்.

(இ - ள்.) நல் கோடு போலும் முலை நாரியரும் - அழகியயானைத்தந்தத்தைப்போன்ற தனங்களையுடைய மாதர்களும், கற்பு அகம் சேர் - பதிவிரதா தருமம் மனத்தில் அமையப்பெற்ற: சண்பகத்தின் மெல் கோடும் - சண்பக மரத்தினது அழகிய கிளைகளும், கற்பகம் சேர் - (மிக்கஉயர்ச்சியால் தேவ

லோகத்துக்) கற்பகவிருட்சத்தை அளாவப்பெற்ற: வேங்கடமே—,—வல் கோடு கூர் இரு வராகனுர் - வலிய கொம்பு [கோரதந்தம்] கூர்மையாக இருக்கப்பெற்ற பெரிய பன்றி வடிவமானவரும், கோகனகை பூமி என்னும் ஓர் இருவர் ஆகனுர் - ஸ்ரீதேவியும் பூதேவியும் என்னும் ஒப்பற்ற இருவரையுந் தழுவும் திருமார்பை யுடையவருமான திருமாலினது, ஊர் - திருப்பதி.

கோடு - மலைச்சிகரமுமாம். நாரி, சண்பகம், கற்பகம் - நாரீ, சம்பகம், கல்பகம் என்ற வடசொற்களின் விகாரம். சண்பகத்தின்கிளைக்கு மென்மை, கண்ணுக்கு இனிமை. அகம் உள்ளுறுப்பு; அந்தஃகரணம் கல்பகம் - வேண்டுவார்க்கு வேண்டும் பொருள்களைக் கல்பிப்பது; இது, தேவதரு. கோடு - வாயின் இருபுறத்தும் வளைந்து வெளித்தோன்றும் எயிறு. கோகநகை - தாமரைமலரில் வாழ்பவள்; கோகநதா என்ற வடசொல் கோகநகை யென விகாரப்படும். ஆகம்-மார்பு; அதனையுடையவன், ஆகன்; அதன்மேல் 'ஆர்' என்ற பலர்பால்விகுதி உயர்வுபற்றி வந்தது. (எகூ)

அ0. கோடஞ்சுங் கோதையர்கள் கொங்கையினுங் குஞ்சரத்தும்
வேடன் சரந்துரக்கும் வேங்கடமே—சேடனெனு
மோர்பன் னகத்திடந்தா னுற்று னிரணியனைக்
கூர்பன் னகத்திடந்தான் குன்று.

(இ - ள்.) கோடு அஞ்சும் - மலைச்சிகரம் (ஒப்புமைக்கு எதிர்நிற்க மாட்டாமல்) அஞ்சும்படியான, கோதையர்கள் கொங்கையினும்-மாதர்களுடைய தனங்களிலும், வேள் தன் சரம் துரக்கும் - மன்மதன் தனது புஷ்ப பாணத்தைச் செலுத்தப்பெற்ற: குஞ்சரத்தும் - யானைகளின்மீதும், வேடன் சரம் துரக்கும் - வேட்டுவன் அம்புகள் செலுத்தப்பெற்ற: வேங்கடமே—, —சேடன் எனும் - ஆதிசேஷனென்கிற, ஓர் பன்னகத்து இடம் - ஒப்பற்றதொரு பாம்பினிடத்தில், உற்றுன்-பொருந்தியவனும், இரணியனை-இரணியாசுரனை, கூர் பல் நகத்து இடந்தான் - கூரிய பல கைந்நகங்களினுல் (மார்பைப்) பிளந்தவனுமான திருமாலினது, குன்று - திருமலை; (எ - று.)

கோடு - யானைத் தந்தமுமாம். 'அஞ்சும்' என்பதை உவமவுருபாகவுங் கொள்ளலாம். சேஷன் என்ற வடசொல்-(பிரளயகாலத்திலும் அழிவின்றி) மிச்சமாய் நிற்பவ னென்றும், பந்நகம் என்ற வடசொல் - பத் ந கம் என்று பிரிந்து கால்களால் நடவாதது [மார்பினுல் ஊர்வது] என்றும், ஹிரண்யன் என்ற வடசொல் - பொன்னிறமானவ னென்றும் காரணப்பொருள்படும். "சென்ருற் குடையாம் இருந்தாற் சிங்காசனமாம், நின்ருல் மரவடியாம் நீள்கடலுள் - என்றும், புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும், அணையாம் திருமாற்கு அரவு" என்றபடி ஆதிசேஷனுல் அநேகவித கைங்கரியஞ் செய்யப்பெறுபவ னென்பது தோன்ற, 'சேடனெனு மோர் பன்னகத்திடம் தான்உற்ருன்' என்ருர். தான் - அசை. இடந்தான் என்பதில், இட - பகுதி; இடத்தல் - கிளுதல். (அ0)

அக. நாரியர்தங் கூந்தலினு நாலு மருவியினும்
வேரினறுஞ் சாந்தொழுகும் வேங்கடமே—பாரினுளா
ரற்பசுவர்க் கத்தா ரறிவரியார் முன்மேய்த்த
நற்பசு வர்க்கத்தார் நாடு.

(இ - ள்.) நாரியர்தம் கூந்தலினும் - மாதர்களுடைய கூந்தலினின்றும், வேரி நறு சாந்து ஒழுகும் - வாசனையையுடைய நல்லமயிர்ச்சாந்து ஒழுகப்பெற்ற; நாலும் அருவியினும் - கீழ்நோக்கி வருகின்ற நீரருவிகளிலும், வேரின் அறும் சாந்து ஒழுகும் - வேரோடும்அற்ற சந்தனமரங்கள் அடித்துக்கொண்டு ஓடிவரப்பெற்ற; வேங்கடமே—,—பாரின் உளார் - பூமியிலுள்ளவர்களாலும், அற்ப சுவர்க்கத்தார் - இழிவாகிய சுவர்க்கலோகத்திலுள்ளவர்களாலும், அறிவு அரியார் - அறியமுடியாதவரும், முன் - முன்பு [கிருஷ்ணாவதாரத்தில்], மேய்த்த—, நல் பசு வர்க்கத்தார்-நல்லபசுக்களின் தொகுதியையுடையவருமான திருமாலினது, நாடு-திவ்வியதேசம்; (எ-று.)

'வேரினறுஞ்சாந்து' என்ற தொடரின் முதற்பொருளில் சிறப்பு ணகரத்தைப் பொது நகரமாக அமைத்துக்கொள்ளவேண்டும்; பொது நகரமும் சிறப்புணகரமும் ஒலிவடிவில் அபேதமாயிருத்தல்பற்றி, இவ்வாறு புணர்த்தினார். இங்ஙனமே வரும் மற்றைப்பாடல்களும் காண்க. மயிர்ச்சாந்து - மயிரிற் பூசப்படும் வாசனைக்கலவை; வாசனைத்தைலமுமாம். நாலும் என்ற எதிர்காலப் பெயரெச்சத்தில், நால் - வினைப்பகுதி. மலையருவி வெள்ளத்தின் விசையால் அங்குள்ள சந்தனம் முதலிய மரங்கள் வேரோடு அறுத்துத் தள்ளப்பட்டு வருதல் இயல்பு. பாரினுளார்-மனிதர். சுவர்க்கத்தார்-தேவர். சிற்றின்பத்தையேயுடையதான சுவர்க்கம் நிரதிசயப்பேரின்பத்தையுடைய பரமபதத்தை நோக்க எளிமைப்படுதலால், 'அற்பம்' எனப்பட்டது. அல்ப ஸ்வர்க்கம், பசுவர்க்கம் - வடசொற்றொடர்கள். கண்ணன் திருவாய்ப்பாடியில் வளர்ந்தபொழுது தான் வளர்கிற குலத்திற்கு ஏற்ப ஆநிரை மேய்த்தமை பிரசித்தம். (அக)

அஉ. மாதரார் கண்ணு மலைச்சார லுங்காமர்
வேதமாற் கஞ்செறியும் வேங்கடமே—பாதமாம்
போதைப் படத்துவைத்தார் போர்வளைய மாற்றரசர்
வாதைப் படத்துவைத்தார் வாழ்வு.

(இ - ள்.) மாதரார் கண்ணும் - மகளிர்களுடைய கண்களும், காமர் வேதம் மார்க்கம் செறியும் - காமநூல்வழியைப் பொருந்தப்பெற்ற; மலை சாரலும் - மலைப்பக்கங்களும், காமர் வே தமால் கம் செறியும் - அழகிய மூங்கில்கள் தமது உருவத்தால் வானத்தை நெருங்கப்பெற்ற; வேங்கடமே—,—பாதம் ஆம் போதை - (தமது) திருவடிகளாகிய தாமரைமலர்களை, படத்து வைத்தார் - (காளியனென்னும் பாம்பின்) படத்தில் ஊன்றவைத்தவரும், போர் - யுத்தத்தில், மாறு அரசர் வளைய - பகையரசர்கள் வளைந்துகொள்ள,

(அவர்களை), வாதை பட துவைத்தார் - துன்பப்படுமாறு அழித்தவருமான திருமால், வாழ்வு - எழுந்தருளியிருக்குமிடம்; (எ - று.)

"மாதர் காதல்" என்ற தொல்காப்பிய உரியியற் சூத்திரத்தால், மாதர் என்பது - ஆசையென்னும்பொருளை யுணர்த்தும் உரிச்சொல்லாதல் அறிக. மாதரார் - விரும்பப்படும் அழகுடையார். காமர்-காமன்; மன்மதன்: உயர்வுப்பன்மை: அவனுடைய வேதமென்றது, காமசாஸ்திரத்தை. மாதர்கண்கள் காமவேதமார்க்கம் செறிதலாவது - பார்வையழகால் ஆடவரைக் காமவசப்படுத்துதல். மார்க்கம் என்ற வடசொல், சிலேடைநயம்நோக்கி மாற்கம் என விகாரப்பட்டது. தமால் - தம்மால்; தொகுத்தல். கம் - வடசொல்.

பாதமாம் போது - உருவகம். திருவடிக்குத் தாமரையுவமை, செம்மை மென்மை அழகுகளில். 'பாதத்தைப்படத்துவைத்தார்'என்றது, காளியன் முடியில் தமதுதிருவடிபதிந்த தழும்பு என்றுமழியாதாக இருக்கும்படி அழுத்தவைத்தவரென்ற பொருளை விளக்கும்; 'ஓ சர்ப்பராசனே ! நீ கருடனுக்குப் பயப்படவேண்டாம்; உன் சிரசில் என் திருவடி பொறித்த வடு இருத்தலைக் கண்டு உன்னை அவன் ஒன்றும் செய்யமாட்டான்' என்று கண்ணன் காளியனுக்கு வரமளித்தமை காண்க. இந்நூலின் முதற்செய்யுளில்"பையரவின்சூட்டிற் சிரமபதநாட்டினான்" என்றதிலும் இக்கருத்து அமைந்துளது. 'போர்' என்றது - பாரதயுத்தம் முதலியவற்றையும், 'மாற்றரசர்' என்றது-துரியோதனாதியர் முதலியோரையுங் குறிக்கும். 'போர்விளைய' என்ற பாடத்துக்கு - போர் உண்டாக என்க. மாற்றரசர் - மாறுபாட்டையுடைய. அரசர். பாதா என்ற வடமொழி, வாதையென விகாரப்பட்டது. (அ௨)

அ௩. எத்திக்குங் காம்பு மெயினருமா ரத்தினையே
வித்திக் கதிர்விளைக்கும் வேங்கடமே—தித்திக்குங்
காரிமா றன்பாவார் காதலித்தார் தம்பிறவி
வாரிமா றன்பாவார் வாழ்வு.

(இ - ள்.) எதிக்கும்-(அம்மலையின்) எல்லாப்பக்கங்களிலும்,—காம்பும்-மூங்கில்களும், ஆரத்தினையே வித்தி கதிர் விளைக்கும்-முத்துக்களையே உண்டாக்கி ஒளியைவீசப்பெற்ற; எயினரும்-வேடர்களும், ஆர தினையே வித்தி கதிர் விளைக்கும் - மிகுதியாகத் தினையையே விதைத்துக் கதிர்களை விளையச்செய்தற்கிடமான: வேங்கடமே—,—தித்திக்கும் - இனிமையான, காரி மாறன் பாவார் - காரியென்பவரது திருக்குமாரரான நம்மாழ்வாருடைய பாசுரத்தைப் பெற்றவரும், காதலித்தார்தம் - (தம்மை) விரும்பின அடியார்களுடைய, பிறவி வாரி - பிறப்பாகிய கடல், மாறு - நீங்குதற்குக் காரணமான, அன்பு ஆவார் - அருளின் மயமாகுபவருமான திருமால், வாழ்வு - எழுந்தருளியிருக்குமிடம்; (எ - று.)

'எத்திக்கும்' என்பதை, சிலேடைப்பொருளிரண்டுக்குங் கூட்டுக. சிறந்த சாதிமூங்கில் முற்றினபொழுது அதன் கணுக்கள் வெடிக்க அவற்றினின்று நல்லமுத்துப் பிறக்குமென்றல்,கவிமரபு.(முத்துப்பிறக்கு மிடங்கள்

இன்னவையென்பதை, "தந்தி வராகமருப் பிப்பி பூகந் தழைகதலி, நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளின மின்னார், கந்தரஞ் சாலி கழை கன்னலா வின்பல் கட்செவி கார், இந்து வுடும்பு கரா முத்தமீனுமிருபதுமே" என்பதனால் அறிக.) ஆரம் - ஹாரம் என்ற வடசொல்லின் விகாரம். தினை - ஒரு வகைத்தானியம். ஏ - இசைநிறை. தினைவித்திக் கதிர்விளைத்தல் - தினைப் பயிரிடுதல்.

பாண்டிய நாட்டில் தாமிரபர்ணி நதிதீரத்தி லுள்ள திருக்குருகூரிலே வேளாள வருணத்தவரான திருவழுதி வளநாட ரென்பவரது சந்ததியில் காரியென்பவர்க்கு உடையநங்கையாரது திருவயிற்றிலே அவதரித்தவராதலால், நம்மாழ்வார், 'காரிமாறன்' எனப்பட்டனர். இவர் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால்குடித்தல் முதலிய லோகவியாபாரம் ஒன்றுமின்றி உலகநடைக்கு மாறாக இருந்ததனால், இவர்க்கு மாற னென்று திருநாமமாயிற்று. வலிய வினைகளுக்கு மாறாக இருத்தலாலும், பாண்டிய நாட்டில் தலைமையாகத் தோன்றியதனாலும் வந்த பெய ரென்றலும் உண்டு; மாறன்பா - திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு திவ்வியப்பிரபந்தங்கள். காதலித்தார் - காதலென்னும் பெயரினடியாகப் பிறந்த தெரிநிலை வினையாலணையும் பெயர். வாரி - வடசொல்: நீர்; கடலுக்கு இலக்கணை. காரணகாரியத் தொடர்ச்சியாய் எல்லைகாண வொண்ணாது மாறிமாறி வருதலாலும், அச்சந்தருதலாலும், கடத்தற் கரிதாதலாலும், பிறப்பு, கடலெனப்பட்டது. மாறு என்ற வினைத்தொகை, இங்குக் காரியப்பொருளில் வந்தது. (அரு)

அசு. பாரோடு கான்யாறும் பல்களிறு நந்தவனம்
வேரோ டலைத்தீர்க்கும் வேங்கடமே—காரோதஞ்
சுட்டகரு விற்படையார் தொண்டரைமீண் டேழுவகைப்
பட்டகரு விற்படையார் பற்று.

(இ - ள்.) பார் ஓடு கான் யாறும் - (அம்மலையினின்று) பூமியைநோக்கி ஓடிவருகிற காட்டாறுகளும், நம் தவனம் வேர் ஓடலை தீர்க்கும்-நமது தாகம் நிலைத்திருத்தலை நீக்கப்பெற்ற: பல் களிறும் - பல மதயானைகளும், நந்தவனம் வேரோடு அலைத்து ஈர்க்கும்-பூந்தோட்டத்திலுள்ள மரங்களை வேருடன் அசைத்து இழுக்கப்பெற்ற: வேங்கடமே—,—கார் ஓதம் சுட்ட - கருநிறமான கடலை வெதும்பச்செய்த,கரு வில் படையார் - பெரிய வில்லாகிய ஆயுதத்தை யுடையவரும், தொண்டரை - (தமது) அடியார்களை, மீண்டு - மறுபடி, எழு வகை பட்ட கருவில் படையார் - எழுவகைப்பட்ட பிறப்பில் தோன்றச் செய்யாதவரு மான திருமால், பற்று - விரும்பி யெழுந்தருளியிருக்குமிடம்; (எ - று.)

ஓடு-வினைத்தொகை. தவனம் - தபநமென்ற வடசொல்லின் விகாரம். நந்தவனம் - ஆனந்தத்தை விளைக்குஞ் சோலை. காட்டாறுகள், வனம்நந்தகாடுகள் வளர, வேர் ஓடலை தீர்க்கும் - (அருகில் வருவாரது உடம்பில்) வேர்

வையோடுதலை (த் தனது தண்மையால்) ஒழிக்கப்பெற்ற என்று உரைத்தலும் ஒன்று. வனம் நந்த - காடுகள் அழிய எனினுமாம். நந்தல் - அழிதலும், வளர்தலும். வேர்ஓடலைத்தீர்க்கும் - சிரமஹரமாயிருக்கும் என்றபடி. இனி, காட்டாறுகள் பூந்தோட்டம் வேரூன்றுதலை யொழிக்கு மென்றும், யானைகள் நந்தவனமென்னும் இந்திரனது பூஞ்சோலையை வேருடன் அசைத்து இழுக்கு மென்றும் உரைத்தலுமாம்; இவ்வுரைக்கு, நந்தநவன மென்பது நந்தவனமென விகாரப்பட்ட தென்க.

விற்படை - இருபெய ரொட்டுப் பண்புத்தொகை. இராமனது வில், கோதண்ட மெனப்படும். அடியார்கட்கு மீளவும் பிறப்பில்லாதபடி கரும மொழித்து முத்தியளிப்பவரென்பது கருத்து. கரு - கர்ப்பமென்னும் வடசொல்லின் சிதைவு. எழுவகைப்பிறப்பு - தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. படையார் என்பது - மூன்றமடியில் படையென்னும் பெயரின்மேற் பிறந்த உடன்பாட்டுக் குறிப்புவினையாலணையும்பெயரும், நான்காமடியில் படையென்னும் வினைப்பகுதியின்மேற் பிறந்த எதிர்மறைத் தெரிநிலை வினையாலணையும் பெயருமாம். (அச)

அரு. நன்காமர் வண்டினமு நால்வாய் மதகரியு
மென்கா மரமுழக்கும் வேங்கடமே—புன்காம
மேவார் கழலா ரெனதுளத்தி லென்றலைவை
பூவார் கழலார் பொருப்பு.

(இ - ள்.) காமர் நல் வண்டு இனமும் - அழகிய சிறந்த சாதி வண்டுகளின் கூட்டமும், மெல் காமரம் முழக்கும் - இனிமையான இசையை வாய்விட்டுப் பாடப்பெற்ற; நால்வாய் மதம் கரியும் - தொங்குகிற வாயையுடைய மதயானைகளும், மெல் கா மரம் உழக்கும் - அழகிய சோலைகளிலுள்ள மரங்களைப் பெயர்த்து அசைக்கப்பெற்ற; வேங்கடமே—,—புல் காமம் மேவார் - (தமது அடியார்களை) இழிவான காமவழியிற் செல்ல விடாதவரும், எனது உளத்தில் கழலார் - (அடியவனுன) என்னுடைய மனத்தினின்று நீங்காதவரும், என் தலை வை பூ ஆர் கழலார் - அடியேனுடைய தலையின்மேல் வைத்த தாமரைமலர் போன்ற திருவடிகளை யுடையவருமான திருமாலினது, பொருப்பு - திருமலை; (எ - று.)

நல்வண்டு - நல்ல மணத்தே செல்லும் வண்டு. மென்மை - செவிக்கு இனிமை. காமரம் - பண். முழக்கும் - முழங்கு மென்பதன் பிறவினை. நால்வாய் - வினைத்தொகை; நான்றவாய், நால்கிற வாய், நாலும் வாய் என விரியும்; நால் - வினைப்பகுதி: நாலுதல் - தொங்குதல். கரம் - கை; இங்கே துதிக்கை: அதனையுடையது கரீ என வடமொழிக் காரணக்குறி. அது, கரியென ஈயீறு இகரமாய் நின்றது. இதற்கு - கருமையுடையதெனத் தமிழ் வகையாற் காரணப்பொருள் கூறலாகாது, வடசொல்லாதலின். மென்மை - கண்ணுக்கு இனிமை; குளிர்ச்சியுமாம். கா - பாதுகாத்தற்கு உரியது. உழக்கும், உழக்கு - பகுதி; உழக்குதல் - கலக்குதல், வருத்தல்; இதனை உழ என்னும் தன்வினைப்பகுதி 'கு' என்னும் விகுதி பெற்ற பிறவினை யென்னலாம்.

புல்காமம் ஏவார்-தமது அடியார்களை இழிந்த சிற்றின்பவழியிற் செல்ல விடாமல் உயர்ந்த பேரின்பநெறியிற் செலுத்துபவ ரென்க. மேவார் எனப் பதம் பிரித்து உரைத்தல் மோனைத்தொடைக்குப் பொருந்தாது. "மலர் மிசையேகினான்" என்றபடி அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்திற் கடவுள் அவர் நினைந்த வடிவத்தோடு சென்று வீற்றிருத்தலால், 'கழலா ரெனதுளத்தில்' என்றார். 'பூவார்கழல்' என்பது - திருவேங்கட முடையானது திருவடிக்குச் சிறப்பாக வழங்கும். கழலார் என்பது - மூன்றாமடியில் கழல் என்னும் வினைப்பகுதியின்மேற் பிறந்த எதிர்மறைத் தெரிநிலை வினையாலணையும் பெயரும், நான்காமடியில் கழல் என்ற பெயரின்மேற் பிறந்த உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணையும் பெயருமாம். (அ௫)

அ௬. பாம்புங் குளிர்சந்தின் பக்கத்தி னிற்கின்ற
வேம்பு மருத்துவக்கும் வேங்கடமே—காம்புகர
மானவரை நன்குடையா ராளாய்த் தொழுதேத்து
மானவரை நன்குடையார் வாழ்வு.

(இ - ள்.) பாம்பும் - பாம்புகளும், மருத்து உவக்கும் - காற்றை விரும்பி உணவாகக் கொள்ளப்பெற்ற: குளிர்சந்தின் பக்கத்தில் நிற்கின்ற வேம்பும் - குளிர்ந்த சந்தனமரங்களின் அருகிலே நிற்கின்ற வேப்பமரங்களும், மரு துவக்கும் - (அவற்றின் சேர்க்கையால்) நறுமணம் வீசத்தொடங்கப்பெற்ற: வேங்கடமே—,—கரம் காம்பு ஆன - தமது கையையே காம்பாகக்கொண்ட, வரை நல் குடையார் - கோவர்த்தந கிரியாகிய நல்ல குடையையுடையவரும், ஆள் ஆய் தொழுது எத்தும் மானவரை நன்கு உடையார் - (தமக்குத்) தொண்டராய் வணங்கித்துதிக்கின்ற மனிதர்களை மிகுதியாகவுடையவருமான திருமால், வாழ்வு - வாழுமிடம்; (எ-று.)

பாம்பு வாதாசந மாதலால், 'மருத்துஉவக்கும்' என்றார்; அது இம்மலையினின்று வீசுகின்ற நறுமணமுள்ள குளிர்ந்தகாற்றை நல்லுணவாக விரும்பியேற்று உட்கொள்ளு மென்க. சந்தின்பக்கத்தில் நிற்கின்ற வேம்பும் மருத்துவக்கும்—"சந்தனத்தைச் சார் தருவும் தக்கமணங் கமழு" மென்க. துவக்கும், துவக்கு - பகுதி; துவக்குதல் - தொடங்குதல்.

'காம்புகரமான வரை நன்குடையார்'—"செப்பாடுடையதிருமாலவன் தன்செந்தாமரைக்கைவிரலைந்தினையுங், கப்பாகமடுத்து மணிநெடுந்தோள் காம்பாகக்கொடுத்துக் கவித்த மலை, .....கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையே" என்ற பெரியாழ்வார்திருமொழியை அறிக. நன்குடை-எத்தனை மழைக்குஞ் சலியாத குடை; மிகப்பல ஆயர்களையும் ஆக்களையும் வருந்தாதபடி பாதுகாத்த குடை; பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் எட்டிமேயலாம்படி புல்முதலிய உணவுகளைக் கொடுத்த குடை. மாநவர் - காசியபமுனிவனது மனைவியருள் மநுவென்பவளது மரபில் தோன்றியவர்; வடமொழித் தத்திதாந்தநாமம். (அ௬)

அஎ. சாரு மருவிதவழ் சாரலுஞ்செஞ் சந்தனத்தின்
வேரு மரவமறு வேங்கடமே—நேரு
மதுகையிட வர்க்கறுத்தார் மாமலரோன் சாப
மதுகையிட வர்க்கறுத்தார் வாழ்வு.

(இ-ள்.) சாரும் அருவி தவழ் சாரலும் - பொருந்திய நீரருவிகள் பெருகப்பெற்ற மலைப்பக்கங்களும், அரவம் அறு - ஓசை நீங்காதிருக்கப் பெற்ற: செம் சந்தனத்தின் வேரும் - செந்நிறமான சந்தனமரங்களின் வேரும், அரவம் அறு-பாம்புகள் நீங்காதிருக்கப்பெற்ற: வேங்கடமே—,— நேரும் - எதிர்த்த, மது கையிடவர் - மது கைடபன் என்னும் அசுரர்களை, கறுத்தார் - கோபித்துஅழித்தவரும், மா மலரோன் சாபம் - சிறந்த (திரு நாபித்)தாமரைமலரில் தோன்றிய பிரமனது சாபத்தை, மதுகை இடவர்க்கு அறுத்தார் - வலிமையுள்ள ருஷபத்தையுடையவராகிய சிவபிரானுக்கு நீக்கி னவருமான திருமால், வாழ்வு - வாழுமிடம் ; (எ - று.)

அரவம் - ஒலியென்னும் பொருளில், ரவம் என்ற வடசொல்லின்விகாரம். மதுகைடப ரென்பவர், ஆதிசிருஷ்டிகாலத்தில் தோன்றினவர். மகா பலசாலிகளான இவ்வசுரரிருவரும் செருக்கிக் கடலில் இழிந்து திருமாலை யெதிர்த்துப் பெரும்போர்புரிய,இவர்களை அப்பெருமான் துடையால் இடுக் கிக் கீழேதள்ளிக் கால்களால் மிதித்துத் துவைத்து வதைத்தனனென வர லாறு உணர்க.

மதுகைடபர் என்ற வடமொழித்தொடர், யமகநயத்திற்காக மதுகையி டவரென விகாரப்பட்டது. இத்தொடர், உயர்திணையும்மைத்தொகையாத லால், பன்மைவிகுதிபெற்றது. மதுகைடவர்க்கறுத்தார் - உயர்திணைப்பெய ரின்முன் வலிமிக்கது, இரண்டாம்வேற்றுமைத்தொகை யாதலால் ; "இயல் பின் விகாரம்." கருஎன்ற பண்படி கறுஎன விகாரப்பட்டு வினைத்தன்மை யடையும்போது கோபித்தலென்னும்பொருளையும் உணர்த்துதலை "கறுப் பும் சிவப்பும் வெகுளிப்பொருள" என்ற தொல்காப்பியத்தால் அறிக.

மலரோன்சாபம் இடவர்க்குஅறுத்தார்-பிரமனிட்டசாபத்தாற் கையை விட்டு நீங்காமல் ஒட்டிக்கொண்ட பிரமகபாலத்தை யேந்திச சிவபிரான் உலகமெங்கும் அலைந்து இரத்தலைத் திருமால் தவிர்த்தருளினன். (திருக் கண்டியூரில் எழுந்தருளியிருக்கின்ற திருமாலின் திருநாமம்,'அரன்சாபந்தீர் த்த பெருமாள்' என வழங்கும். "பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணு, முண்டியான் சாபந்தீர்த்த வொருவன்" என்றார் திருமங் கையாழ்வாரும்.) சாபம் மதுகை - சாப வலிமையை, இடவர்க்கு அறுத்தார் என்றலும் ஒன்று. இனி, மலரோன்சாபமது - அந்தப்பிரமனது சாபத்தை, இடவர்க்கு - சிவனுக்கு, கை-கையினின்று, அறுத்தார் - தவிர்த்தவர் என்று உரைப்பாருமுளர். 'மாமரையோன்' என்றும், 'மாமறையோன்' என்றும் பாடங்களுண்டு. சாபம் - வடசொல். ருஷபம் என்ற வடசொல், இடப மென விகாரப்பட்டது ; அதனையுடையவர், இடவ ரென்க. (அஎ)

அஅ. மண்மட்டுத் தாழ்சுனையும் வட்டச் சிலாதலமும்
விண்மட்டுத் தாமரைசேர் வேங்கடமே—யெண்மட்டுப்
பாதமுன்னி னைந்தார் பரமபதஞ் சேர்கவென்று
போதமுன்னி னைந்தார் பொருப்பு.

(இ - ள்.) மண் மட்டு தாழ் சுனையும் - தரையளவும் ஆழ்ந்துள்ள சுனைகளும், விள் - மலர்ந்த, மட்டு - தேனையுடைய, தாமரை - தாமரைமலர், சேர் - பொருந்தப்பெற்ற: வட்டம் சிலாதலமும் - வட்டவடிவமான கல்லினிடமும், விண்மட்டு - மேலுலகத்தினளவும், தாம் - தாவுகிற, மரை-மான், சேர் - பொருந்தப்பெற்ற: வேங்கடமே—,—பாதம் - (தமது) திருவடியை, எள் மட்டு உன்னி - எள்ளளவேனும் தியானித்து, நைந்தார் - மனமுருகினவர்கள், பரமபதம் சேர்க - பரமபதம் அடையக்கடவர், என்று—, போதம்-தமது அறிவினால் [தமது திருவுள்ளத்தில்], முன் - முன்பு [அநாதிகாலமாக], நினைந்தார் - எண்ணியருளிய திருமாலினது, பொருப்பு - திருமலை; (எ - று.)

விள் - வினைத்தொகை. வட்டச்சிலாதலம் மரை சேர் - "வண்மைதிகழ் வெண்பளிங்கு வட்டத்திற் கண்டுயில் மான்" என்றார், ரு0-ஆஞ் செய்யுளிலும். சிலாதலம் - வடமொழித்தொடர். தாம் - தாவும் என்னுஞ் செய்யுமெனெச்சத்து ஈற்றுயிர்மெய் சென்றது. எள் - மிக்க சிறுமைக்கு எடுத்துக்காட்டிய அளவை. "சாண விரும்பினர்மேல் நான் மடங்காம் ஆர்வத்தார்" என்றபடி அடியவரது பக்தியினளவினும் பலமடங்கு அதிகமான பரமகாருணியத்தையுடைய கடவுளாதலால், தமது திருவடியை எள்ளளவேனும் சிந்தித்து உருகியவர் பரமபதஞ்சேர்வாராக வென்று திருவுள்ளம்பற்றும் இயல்பினரென்க. முன்னியென்றும் பதம்பிரித்து உரைக்கலாம். 'பாதமுன்னி நைந்தார்,' 'போதமுன்னினைந்தார்' என்றவிடத்து நகரவேறுபாடு திரிபு நயத்தின்பொருட்டுக் கொள்ளப்பட்டிலது. பரமபதம் - சிறந்தஇடம். போத எனப் பதம்பிரித்து, மிகுதியாக என்றலும் ஒன்று. முன் - அவர் எண்ணுவதற்கு முன்னமே யென்றுமாம். போத முன் - அவர்கள் வருவதற்கு முன் என்றுமாம். (அஅ)

அகூ. போதா விருசுடரும் போதுதற்கு மோதுதற்கும்
வேதாவி னன்முடியா வேங்கடமே—மாதாவின்
வீங்குதனத் தூக்கினியான் விம்மியழா தாட்கொண்டான்
றூங்குதனத் தூக்கினியான் சார்பு.

(இ - ள்.) போதா - (கற்பகாலமளவும்) அழியாத, இரு சுடரும் - சூரிய சந்திரர் இருவரும், போதுதற்கும் - (ஆகாயவீதியிலே) செல்லுவதற்கும், வேதாவினால் முடியா - மூங்கில்கள் அளாவி வளர்தலால் இயலாத : ஓதுதற்கும் - (தனது மகிமையைச்) சொல்லுவதற்கும், வேதாவினால் முடியா - (நான்கு முகமுடைய) பிரமனாலும் நிறைவேறாத: வேங்கடமே—,—மாதாவின் - தாயினது, வீங்கு தனத்துக்கு - பருத்த தனங்களை யுண்ணுதற்

பொருட்டு, இனி யான் விம்மி அழாது - இனிமேல் நான் ஏங்கி யழாதபடி, ஆள்கொண்டான்-(என்னை) அடிமைகொண்டவனும், தாங்கு தன் நத்துக்கு இனியான் - கையி லேந்தியுள்ள தனது (பாஞ்சஜந்ய மென்னுஞ்) சங்கத்துக்கு இனியவனுமான திருமால், சார்பு - சார்ந்திருக்குமிடம்; (எ - று.)

போதா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்: போது - பகுதி. இதற்கு- (அல்லும் பகலும் அநவரதமும் சஞ்சாரம்) ஒழியாத என்று உரைப்பினுமாம். சுடர் - ஒளி, சோதி. தாவினல் - தாவு என்ற முதனிலைத் தொழிற் பெயரின் மூன்றும்வேற்றுமை விரி; இன் - சாரியை ; இதனை எதிர்கால வினையெச்சமாகக்கொள்ளின் சிறவாது. முடிதல் - இயலுதலும், முற்றுதலும். வேதா, மாதா - வடசொற்கள்.

இனி எனக்குப் பிறப்பில்லாதபடி அடிமைகொண்டவ னென்பது, மூன்றுமடியின் கருத்து. 'விம்மி தனம்' என்றது, வெறுப்பைக் காட்டும். நந்து என்பது நத்தென மென்றொடர் வன்றொடராயிற்று. 'நத்துக்கு இனியான்' என்றது, அதனை எப்பொழுதும் கைவிடாமையும், வேண்டும்பொழுதெல்லாம் வாய்வைத்துக் கொள்ளுதலும் முதலியனபற்றி. இச்சிறப்பை வெளியிட்டு ஆண்டாள் "சந்திரமண்டலம்போல் தாமோதரன் கையில் அந்தரமொன்றின்றி யேறி யவன்செவியில், மந்திரங்கொள்வாயே போலும் வலம்புரியே, இந்திரனு முன்னோடு செல்வத்துக்கேலானே" என்றும், "உன்னோ டுடனே யொருகடலில் வாழ்வாரை, இன்னாரினையாரென் றெண்ணுவாரில்லைகாண், மன்னாகிநின்ற மதுசூதன்வாயமுதம், பன்னாளு முண்கின்றாய் பாஞ்சசன்னியமே" என்றும், "உண்பதுசொல்லி லுலகளந்தான் வாயமுதம், கண்படைகொள்ளிற் கடல்வண்ணன் கைத்தலத்தே, பெண்படையா ருன்மேற் பெரும்பூசல் சாற்றுகின்றார், பண்பல செய்கின்றாய் பாஞ்சசன்னியமே" என்றும், "பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும், வாய்ந்த பெருஞ் சுற்றமாக்கி"க்கூறியமை காண்க. இனி, தாங்கு தனத்துக்கு இனியான் என்று எடுத்து,கைகளில் நிரம்பக்கொண்டு செலுத்திய காணிக்கைப் பொருளுக்கு இனியவனென்று உரைப்பினும் அமையும்;' அடியார்கள் பிரார்த்தனையாகக் கொடுக்கும் பொருளைக் கைம்மாறாகப் பெற்றுக்கொண்டு அவர்கட்கு வேண்டும் பயனை யளித்தல், திருவேங்கட முடையானது சங்கல்பம். (அக)

கூ0. பேய்க்குமொரு பேய்போன்று பித்தாய்த் திரிவோர்க்கும்
வேய்க்குமணி முத்திவரும் வேங்கடமே—வாய்க்கமுதூர்
வண்மைப்பே ராயிரந்தான் மன்னினன் மாவலிபாற்
றண்மைப்பே ராயிரந்தான் சார்பு.

(இ - ள்.) பேய்க்கும் ஒரு பேய் போன்று பித்து ஆய் திரிவோர்க்கும் - பேயின் கண்ணுக்கும் ஒருபேய்போலத் தோன்றுமாறு பெரும் பைத்தியங் கொண்டு திரிகிறவர்களுக்கும், அணி முத்தி வரும் - (அங்குவந்த மாத்திரத்தால்) அழகியமோக்ஷம் சித்திக்கும்படியான: வேய்க்கும் - மூங்கில்களிலும், மணி முத்து இவரும் - அழகிய முத்துக்கள் மிகுதியாகத் தோன்றப்பெற்ற:

வேங்கடமே—,—வாய்க்கு அமுது ஊர் - (உச்சரிப்பவருடைய) வாய்க்கு அமிருதம்போன்ற இனிமை சுரக்கிற, வண்மை பேர் ஆயிரம்-வளமான ஆயிரந்திருநாமங்கள், மன்னினான்-பொருந்தியவனும், மாவலிபால் - மகாபலியினிடத்து, தண்மை பேர் ஆய் இரந்தான்-எளியவனாய் (மூன்றுஅடிநிலத்தை) யாசித்தவனுமான திருமால், சார்பு - சாருமிடம்; (எ - று.)—தான்-அசை.

பேய்க்குமொருபேய்போன்று - பெரும்பேய்போல என்றபடி. அங்ஙனம் பித்தாய்த்திரிவோர்க்கும் வேங்கடமலைக்கு வந்தமாத்திரத்தில் முத்தி சித்தித்தலை, இந்நூலுரைத்தொடக்கத்திற் காட்டிய மாதவனென்னும் அந்தணனது வரலாற்றினாலும் அறிக. இனி, "பேயரே யெனக்கு யாவரும் யானுமோர், பேயனே எவர்க்கும் இதுபேசியென், ஆயனே யரங்காவென் றழைக்கின்றேன், பேயனாயொழிந்தே னெம்பிரானுக்கே", "அரங்கனுக் கடியார்களாகி யவருக்கே, பித்தராமவர் பித்தரல்லர்கள் மற்றையார் முற்றும்பித்தரே" என்றபடி பேயாழ்வார்போன்று உலகநடையிற் கலவாமல் பகவத்பாகவத விஷயங்களிற் பக்திப்பித்துக்கொண்டு திரிகின்ற அடியார்களுக்கு முக்தி கைவருவதற்கு இடமான என்று உரைப்பினும் அமையும். முக்திஎன்ற வடசொல் - பற்றுக்களைவிட்டு அடையு மிடமெனப் பொருள்படும். பேய்க்கு என்பதில் நான்கனுருபு ஏழனுருபின் பொருளில் வந்தது, உருபுமயக்கம்.

பேர்க்கு வண்மை - உச்சரித்தமாத்திரத்தில் அருவினைதொலைத்து நற்பயன்பலவும் அளிக்குந்திறம்; அதனை, "குலந்தரும் செல்வந்தந்திடும் அடியார்படு துயராயினவெல்லாம், நிலந்தரஞ்செய்யும் நீள்விசும்பருளும் அருளொடு பெருநிலமளிக்கும், வலந்தரும் மற்றுந்தந்திடும் பெற்றதாயினு மாயின செய்யும், நலந்தருஞ் சொல்லை நான் கண்டுகொண்டேன் நாராயணா வென்னு நாமம்" என்று திருமங்கையாழ்வார் வெளியிட்டுள்ளார். பேர்ஆயிரம் - ஸஹஸ்ரநாமம். மூவலி - வடசொற்சிதைவு. தண்மைப்பேராய் - யாசகனாய், எளிய வாமநனாய். (௯௦)

௯௧. வாழ்க்கைமனை நீத்தவரும் வாளரியு மாதங்க
வேட்கை மறந்திகழும் வேங்கடமே—தோட்கைவிழ
மாகவந்த னைக்கழித்தார் வாழிலங்கைப் பாதகரை
லோகவந்த னைக்கழித்தா ரூர்.

(இ - ள்.) மனை வாழ்க்கை நீத்தவரும் - இல்லறவாழ்வைத் துறந்த முனிவர்களும், மாது அங்கம் வேள் கைமறந்து இகழும் - மாதர்களின் உடம்பினிடத்துக் காதலை முற்றும் ஒழித்து அதனை இகழப்பெற்ற; வாள் அரியும்- கொடியசிங்கங்களும், மாதங்கவேட்கை மறம் திகழும்-யானையைக் கொல்ல வேண்டுமென்னும் விருப்பத்தோடு வீரம் விளங்கப்பெற்ற: வேங்கடமே—, —மா கவந்தனை-பெரிய கபந்தனென்னும் அரக்கனை, தோள் கை விழ கழித்தார் - தோள்களோடு கூடிய கைகள் அற்று விழும்படி வெட்டித் தள்ளினவரும், இலங்கை வாழ் பாதகரை - இலங்காபுரியில் வாழ்ந்த பாவிகளான

ராவணன் முதலியோரை, லோகவந்தனைக்கு அழித்தார்-உலகத்தார் தம்மை வழிபட்டதற்கு இரங்கிக் கொன்றவருமான திருமாலினது, ஊர்-திருப்பதி.

மாது அங்க வேள் கைமறந்து இகழும் - பெண்ணாசையை அறக்கைவிட்ட என்றபடி. மா தங்கம் வேள் கைமறந்து இகழும் எனக்கொண்டு, மிக்க பொன்னாசையை அறத்தொலைத்த வென உரைப்பினுமாம். கைமறந்து என்பதில், கை என்பது - தனியே பொருளொன்று முணர்த்தாமல் வினைக்குமுன் வந்த தமிழுபசர்க்கம்; கைவிடுதல், கைகூடுதல் என்பவற்றிலும் இது. வாள் அரி - ஒளியையுடைய சிங்கமுமாம். ஹரி - வடசொல்; யானை முதலிய விலங்குகளை அரிப்பது: அரித்தல் - அழித்தல். மாதங்கம் என்ற வடசொல் - யானையைக் குறிக்கும்போது மதங்க முனிவரிடத்தினின்று ஆதியில் உண்டானதெனக் காரணப்பொருள்படும்.

கவந்தன் - தநுஎன்னும் யக்ஷனதுமகன்; இவன் ஸ்தூலசிரஸ்என்னும் முனிவரது சாபத்தால் அரக்கனாகிப் பிரமனருளால் தீர்க்காயுசு பெற்றுத் தேவேந்திரனோடு எதிர்த்து அவனதுவச்சிராயுதத்தாற் புடைபட்டுத் தனது தலை வயிற்றில் அழுந்தியமைபற்றிக் கவந்தம் போலத் தோற்ற முடையனாயிருந்ததனால், இப்பெயர் பெற்றான். கபந்தம் என்ற வடசொல்லுக்கு - தலையற்றதும் தொழிலுடன் கூடியதுமான உடலென்பது பொருள். "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" என்பதற்கு ஏற்ப, இங்கே 'லோகவந்தனைக்கு' என்பதற்கு - தண்டகாரணியவாசிகளான மகாமுனிவர்களுடைய வேண்டுகோளினா லென்க. வந்தனைக்கு - உருபுமயக்கம். (௯௧)

௯௨. கூட்டு தவத்தவருங் கோளரிக ளின்றொகையும்
வேட்டு வரம்பொழியும் வேங்கடமே—மோட்டுமதத்
தந்திக் கமலத்தார் தாம்பெறாஉம் வீடளித்தா
ருந்திக் கமலத்தா ரூர்.

(இ - ள்.) கூட்டு தவத்தவரும் - மேன்மேற் செய்துசேர்த்த தவத்தையுடைய முனிவர்களும், (அப்பெருந்தவத்தின் சித்தியால்), வேட்டு வரம் பொழியும் - விரும்பி [அன்புடனே] (தம்மிடம் வேண்டுவார் வேண்டிய) வரங்களை மிகுதியாகக்கொடுத்தற்கிடமான; கோள் அரிகளின் தொகையும் - வலிமையுள்ள சிங்கங்களின் தொகுதியும், வேட்டுவர் அம்பு ஒழியும் - வேடர்கள் எய்கிற பாணங்கள் (தம்மேற்படாதபடி தந்திரமாக அவற்றிற்கு) விலகப்பெற்ற: வேங்கடமே—,—மோடு மதம் தந்திக்கு - உயர்ச்சியையுடைய மதயானைக்கு, அமலத்தார்தாம் பெறாஉம் வீடு அளித்தார்-நிர்மலரான ஞானிகள் பெறுதற்கு உரிய முத்தியைக் கொடுத்தருளியவரும், உந்தி கமலத்தார்-திருநாபித்தாமரையையுடையவருமான திருமாலினது, ஊர் - திருப்பதி.

கூட்டு - பிறவினை வினைத்தொகை. வேட்டுவர் - வேடுஎன்னுந் தொழிலையுடையார்; வேடு - மிருகபக்ஷிகளைப் பிடித்துவருத்துதல். வேட்டுவரம்பு ஒழியும் - வேடர்களுடைய அம்புகள் பட்டதனால் அழியப்பெற்ற எனினுமாம். தந்தீ என்ற வடசொல் - தந்தத்தை யுடையதென்று காரணப்

பொருள்படும். அமலத்தார் - காமம் வெகுளி மயக்க மென்னும் மலங்க ளில்லாதவர்; மலம் - குற்றம். தாம் - அசை. பெறாஉம் - செய்யுளோ சைகுன்றுதவிடத்தில் இன்னிசைதருதற்பொருட்டுக் குறில் நெடிலாய் நீண்டு அளபெடுத்தது. (கூஉ)

கூங. வஞ்ச மடித்திருப்பார் வாக்குங் கலைக்கோடும்
விஞ்ச மடித்திருக்கார் வேங்கடமே—கஞ்சப்
பிரமாநந் தத்தான் பிரபஞ்ச மாய்த்த
பரமாநந் தத்தான் பதி.

(இ - ள்.) வஞ்சம் மடித்து இருப்பார் வாக்கும் - வஞ்சனையையொழித் திருக்கின்ற அந்தணர்களுடைய வாயும், விஞ்ச-மிகுதியாக, மடித்த இருக்கு ஆர் - மடித்து மடித்துச் சொல்லப்படுகின்ற வேதங்கள் நிரம்பப்பெற்ற: கலை கோடும் - கலைமான்கொம்பும், விஞ்ச - மிகுதியாக, மடி திருக்கு ஆர்- வளைவோடுகூடிய முறுக்குப் பொருந்தப்பெற்ற: வேங்கடமே—,—கஞ்சம் பிரமா நந்த - (தனது நாபித்) தாமரைமலரில் தோன்றிய பிரமனும் அழிய, தான்—, பிரபஞ்சம் மாய்த்த - (கல்பாந்தகாலத்தில்) உலகங்களை அழித்த, பரம ஆநந்தத்தான் - எல்லா ஆனந்தங்களிலும் மேலான பேரானந்தத்தை யுடையவனான திருமாலினது, பதி - ஊர் ; (எ - று.)

வஞ்சம் அடித்து என்றும் பதம் பிரிக்கலாம் ; அடித்தல் - ஒழித்தல். வாக்-வடசொல். மடித்த இருக்கு என்பது, மடித்திருக்கு எனப் பெயரெச்ச வீறு தொக்கது; வேட்டகம், புக்ககம், வந்துழி என்றவற்றிற் போல. க்ரமம், ஜடை, கநம் முதலிய சிலவகைகளால் வேதச்சொற்கள் மடித்து மடித்துச் சொல்லப்படுதலால், 'மடித்திருக்கு' எனப்பட்டது. ருக் என்ற வடமொழி, இருக்கு என விகாரப்பட்டது; இது, நான்குவேதங்களில் ஒன்றற்குப் பெய ராதலேயன்றி எல்லாவேதங்களுக்கும் பொதுப்பெயராகவும் வழங்கும். கஞ்சம் என்ற வடசொல்-நீரில் தோன்றியதென்று காரணப் பொருள்படும்; தாமரைக்குக் காரணவிடுகுறி. ப்ரஹ்மா, ப்ரபஞ்சம், பரமாநந்தம் - வட சொற்கள். பரமாநந்தம் - தீர்க்கசந்தி பெற்றது. பரமாநந்தத்தான் - பரம பதத்து நிரதிசய இன்பத்தைத் தனது அடியார்க்குத் தருபவன். (கூங)

கூச. சேலஞ்சுங் கண்மடவார் தேங்குழலுங் கோங்கினமு
மேலஞ்சு வர்க்கமார் வேங்கடமே—கோலஞ்சேர்
மாரிலலங் காரத்தார் மற்றும்பல் பூணணிந்த
காரிலலங் காரத்தார் காப்பு.

(இ - ள்.) சேல் அஞ்சும் கண் - சேல் மீன்கள் (ஒப்புமைக்கு முன் நிற்கமாட்டாமல்) அஞ்சி விலகத்தக்க கண்களையுடைய, மடவார் - மாதர் களின், தேம் குழலும் - நறுமணமுள்ள கூந்தலும், மேல் அஞ்சு வர்க்கம் ஆர் - மேன்மையான ஐந்துவகை பொருந்தப்பெற்ற: கோங்கு இனமும் - கோங்குமரங்களின் தொகுதியும், மேல் அம் சுவர்க்கம் ஆர் - (மிக்கஉயர்ச்சி யால்) மேலேயுள்ள அழகிய சுவர்க்கலோகத்தை அளாவப்பெற்ற: வேங்

கடமே—,—கோலம் சேர் மாரில் அலங்கு ஆரத்தார் - அழகு பொருந்திய திருமார்பில் அசைகின்ற ஆரங்களை யுடையவரும், மற்றும் பல் பூண் அணிந்த - (அவ்வாரம் மாத்திரமே யன்றி) மற்றும் பல ஆபரணங்களைத் தரித்த, காரில் அலங்காரத்தார் - காளமேகம் போன்ற அழகுடையவருமான திருமால், காப்பு - (உயிர்களைப்) பாதுகாக்கு மிடம்; (எ - று.)

சேலஞ்சுங்கண்-பிறழ்ச்சியிலும் அழகிலும் சேலைவென்றகண். மடவார்-மடமையை யுடையவர்; மடமை - இளமை, அல்லது மகளிர்க்கு உரியதான பேதைமைக்குணம். அஞ்சு வர்க்கம் - முடி, குழல், கொண்டை, பனிச்சை, சுருள் என்னும் மயிர்முடியின் வகைகள்: மயிரை உச்சியில் முடித்தல், முடி. சுருட்டி முடித்தல், குழல். மயிரை முடிந்துவிடுதல், கொண்டை. பின்னிவிடுதல், பனிச்சை. பின்னே செருகல், சுருள். வர்க்கம், ஸ்வர்க்கம், ஹாரம், அலங்காரம் - வடசொற்கள். அலங்கு ஆரம் - வினைத்தொகை. ஆரம்-பொன் மணி மலர்களா லாகிய மாலை. திருமாலின் திருமேனிக்குக் காளமேகம் நிறத்தில் உவமம். (௯௪)

௯௫. கொய்யு மலர்ச்சோலைக் கொக்கும் பிணியாளர்
மெய்யும் வடுத்தவிரும் வேங்கடமே—வையுஞ்
சனனாந் தகனார் தலையிலிதோள் சாய்த்த
சினனாந் தகனார் சிலம்பு.

(இ - ள்.) கொய்யும் மலர் சோலை கொக்கும் - பறித்தற்கு உரிய மலர்களையுடைய சோலையிலுள்ள மாமரமும், வடுத்து அவிரும் - பிஞ்சுவிட்டு விளங்கப்பெற்ற; பிணியாளர் மெய்யும்- நோயாளிகளுடைய உடம்பும், வடு தவிரும் - (அங்கு வந்தமாத்திரத்தால்) உடற்குற்றமாகிய அந்நோய் நீங்கப்பெற்ற; வேங்கடமே—,—வையும் சனன அந்தகனார்-(உயிர்கள்) வருந்துதற்குக் காரணமான பிறப்பை (அடியார்க்கு) ஒழிப்பவரும், தலை இலி தோள் சாய்த்த - கபந்தனுடைய தோள்களை வெட்டித்தள்ளின, சினன் - கோபத்தையுடைய, நாந்தகனார் - நந்தகமென்னும் வாட்படையையுடையவருமான திருமாலினது, சிலம்பு - திருமலை ; (எ - று.)

மாமரத்தை 'கொக்கு' என்பது - துளுவநாட்டார் வழங்குந் திசைச்சொல். வடுத்தல்-இளங்காய் அரும்பல். வையும்என்ற பெயரெச்சம்-காரியப்பொருளது. ஜநநாந்தகன் - பிறப்புக்கு யமனாகவுள்ளவன்; பிறப்பையொழித்து முத்தி யருள்பவ னென்றபடி; தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். தலையிலி - தலையில்லாதவன் ; தலை வெளித்தெரியாது வயிற்றினுள் அடங்கியமைபற்றி, கவந்தன் தலையிலி யெனப்பட்டான். சினன்-சினம் என்பதன் இறுதிப்போலி. நந்தகமென்ற வடசொல், நாந்தகமென விகாரப்பட்டது. பிணியாளர் மெய் வடுத்தவிர்தல் - "பித்து மலை மை முடம் பேய் குருடு கூன் செவிடு, மெய்த்துயர் நோய் தீர்த்தருளும் வேங்கடமே" என முன்னர்க் கூறப்பட்டது. (௯௫)

சுசு. நேர்க்கவலை நோயினரு நீடுசிலை வேடுவரும்
வேர்க்கவலை மூலங்கல் வேங்கடமே—கார்க்கடன்மேற்
றாண்டுங்கா லத்திறப்பார் தம்மைவிழுங் கிக்கனிவாய்
மீண்டுங்கா லத்திறப்பார் வெற்பு.

(இ - ள்.) நேர் கவலை நோயினரும் - மிகுதியான கவலையைத் தருகிற நோயையுடையவர்களும், (அந்நோய் நீங்குதற்பொருட்டு), வேர்க்க - (பக்தி மிகுதியால் தம் உடல்) வியர்வையடைய, அலை மூலம் கல்-திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டருளுகிற ஆதிமூலப்பொருளைத் துதிக்கப்பெற்ற; நீடு சிலை வேடுவரும் - நீண்ட வில்லையுடைய வேடர்களும், வேர் கவலை மூலம் கல் - வேரோடு கவலைக் கிழங்கைத் தோண்டப்பெற்ற: வேங்கடமே—,—கார் கடல்-கருநிறமுடையதான கடல், மேல் தாண்டும் - பொங்கி மேலெழுந்து பரவுகிற, காலத்து-பிரளயகாலத்தில், இறப்பார்தம்மை விழுங்கி - இறக்கிற உயிர்களையெல்லாம் உட்கொண்டு தமது திருவயிற்றினுள் வைத்து, மீண்டும் கால -(பிரளயம் நீங்கியபொழுது) மீளவும் (அவற்றை) வெளிப்படுத்துமாறு, கனி வாய் திறப்பார் - கொவ்வைப்பழம்போற் சிவந்த (தமது) திருவாயைத் திறந்தருள்பவரான திருமாலினது, வெற்பு - திருமலை; (எ - று.)

கவலை - கவற்சி; கிலேசம்: 'ஐ' விகுதி பெற்ற தொழிற்பெயர். வேர்த்தல்-பக்திமிகுதியாலாகும் மெய்ப்பாடு. அலை - கடலுக்குச் சினையாகுபெயர். மூலம்-முதற்பொருள். கற்றல்- திருநாமங்களை இடைவிடாமல் உருவிட்டு ஜபித்தல். குறிஞ்சிநிலக் கருப்பொருளாகிய கவலையென்னுங் கொடியின்கிழங்கு, அந்நிலத்துமாக்கட்கு உணவாவதற்கு உரியது. இறப்பார் என்ற உயர்திணை, அஃறிணைக்கும் உபலக்ஷணம். கால - செயவெனெச்சம். (சுசு)

சுஎ. தண்டா மரைச்சுனையிற் சாதகமும் வேடுவரும்
விண்டாரை நாடுகின்ற வேங்கடமே—தொண்டாக்கி
யேவத் தனக்குடையா ரென்னைமுன் னாளெடுத்த
கோவத் தனக்குடையார் குன்று.

(இ - ள்.) தண் தாமரை சுனையில் - குளிர்ந்த தாமரையை யுடைய சுனையில் வாழ்கின்ற, சாதகமும் - சாதகமென்னும் பறவையும், விண் தாரை நாடுகின்ற - மேகத்தின் மழைத்தாரையை விரும்பி உணவாகக்கொள்ளப் பெற்ற; வேடுவரும் - வேடர்களும், விண்டாரை நாடுகின்ற -(உடற்கொழுப்பினாற் போர் செய்தற்குப்) பகைத்தவரைத் தேடப்பெற்ற: வேங்கடமே—, —தொண்டு ஆக்கி ஏவ - தாசனாக்கி அடிமைகொள்ளுமாறு, என்னை தனக்கு உடையார் - என்னைத் தமக்கு உடைமையாக்கிக்கொண்டவரும், முன் நாள் எடுத்த கோவத்தனம் குடையார்-முன்னாளில் [கிருஷ்ணாவதாரத்தில்] எடுத்துப் பிடித்த கோவர்த்தநமலையாகிய குடையையுடையவருமான திருமாலினது, குன்று - திருமலை; (எ - று.)

மேகத்தினின்று தரையில் விழுந்த நீர் சாதகப்புள்ளுக்கு விஷமாகுதலால், அப்பறவை அந்நீரை உட்கொள்ளாது மேகத்தினின்றுவிழும் மழைத்

தாரையை நாவில் ஏற்றுப்பருகும். விண்டார்-இறந்தகாலவினையாலணையும் பெயர்; விள் - பகுதி; விள்ளுதல் - மனம் மாறுபடுதல். தனக்கு உடையார்- ஒருமைப் பன்மை மயக்கம். ஏவ - குற்றேவல் செய்யுமாறு கட்டளையிட. கோவர்த்தநம் என்ற வடமொழிப் பெயர் - பசுக்களை வளர்ப்பதென்று பொருள்படும். எடுத்த கோவத்தனக் குடையார் - கோவர்த்தநகிரியைக் குடையாக எடுத்துப் பிடித்தவர். (௬௭)

௬௮. வாழரியுஞ் சந்தனந்தோய் மாருதமுந் தாக்குதலால்
வேழ மருப்புகுதும் வேங்கடமே—நீழலமர்
பஞ்சவடி காட்டினன் பாரளப்பான் போலெவர்க்குங்
கஞ்சவடி காட்டினன் காப்பு.

(இ - ள்.) வாழ் அரியும் - (வலிமைகொண்டு) வாழ்கின்ற சிங்கங்களும், தாக்குதலால் - மோதியடித்தலால், வேழம் மருப்பு உகுதும் - யானைகளின் தந்தம்சிந்தப்பெற்ற; சந்தனம்தோய்மாருதமும்-சந்தனமரத்தின்மேற்பட்டு வருகிற காற்றும், தாக்குதலால் - மேற்படுதலால், வேழம் மரு புகுதும் - மூங்கில்களும் நறுமணம் பொருந்தப்பெற்ற;வேங்கடமே—,—நீழல் அமர்- நிழல் பொருந்திய, பஞ்சவடி காட்டினன் - பஞ்சவடியென்னுங் காட்டிடத் தில் வசித்தவனும், பார் அளப்பான் போல் - உலகங்களை அளப்பவன்போல, எவர்க்கும் - எல்லோர்க்கும், கஞ்சம் அடி - தாமரைமலர்போன்ற திரு வடியை, காட்டினன் - காட்சிதந்தருளியவனு மான திருமால், காப்பு - (உயிர்களைப்) பாதுகாக்குமிடம் ; (எ - று.)

'சந்தனந்தோய்மாருதந் தாக்குதலால் வேழம்மருப்புகுதும்' என்றதை அ௬-ஆம் பாட்டில் "குளிர்சந்தின் பக்கத்தில் நிற்கின்ற வேம்பும் மருத்துவ வக்கும்" என்பதனோடு ஒப்பிடுக. மாருதம் - வடசொல். உகுதும், புகுதும் என்றவற்றில், து - சாரியை. பஞ்சவடி - ஐந்து ஆலமரங்களின் தொகுதி; அதனையுடைய இடத்துக்கு ஆகுபெயர்: இது, தண்டகாரணியத்தில் அக ண்டகோதாவரிக் கரையில் நாசிகாதிரியம்பகத்துக்குச் சமீபத்தி லுள்ளது. இராமபிரான் வனவாசஞ்செய்கையில் அகஸ்தியமுனிவர் சொன்னபடி இவ் விடத்தில் நெடுநாள்வசித்தனன். பஞ்சவடிக்காட்டினன் என வரற்பாலது, திரிபுநயம் நோக்கிக் ககரவொற்றுத் தொக்கது. காட்டினன் என்பது - மூன்றாமடியில் காடுஎன்ற பெயரின்மேற் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயரும், நான்காமடியில் காட்டு என்ற பிறவினைப் பகுதியின்மேற் பிறந்த இறந்தகாலத் தெரிநிலை வினையாலணையும் பெயருமாம். (௬௮)

௬௯. எவ்விடமு மாறுந்தோய்ந் தெல்லோரும் பல்பாம்பும்
வெவ்விடமு நீங்கியெழும் வேங்கடமே—தெவ்விடையே
முட்டவனை யத்தனையா னாதிமறை நான்மார்க்கம்
விட்டவனை கத்தனையான் வெற்பு.

(இ - ள்.) எல்லோரும்—, எ இடமும் - (அம்மலையில்) பலவிடத்தும் உள்ள, ஆறு - நதிகளில், தோய்ந்து-முழுகி, (அம்மாத்திரத்தால்,) வெம் இட

ரின் நீங்கி எழும் - கொடிய (பிறவித்) துன்பத்தினின்று நீங்கி எழப்பெற்ற: பல் பாம்பும் - பலபாம்புகளும், வெம் விடரின் நீங்கி எழும் - வெவ்வியமலை வெடிப்புக்களினின்று புறப்பட்டு மேலெழுந்து வரப்பெற்ற: வேங்கடமே —,—தெவ் விடை எழ் அட்டவன் - பகைமையையுடைய எழு எருதுகளை வலியழித்துவென்றவனும், நாகத்து அணையான்-ஆதிசேஷனாகிய சயநத்தை யுடையவனும், ஆதி மறை நூல் மார்க்கம் விட்டவன் ஆகத்து அணையான்- பழமையான வேதசாஸ்திரங்களிற்கூறிய நன்னெறியை விலகினவனுடைய மனத்திற் சேராதவனுமாகிய திருமாலினது, வெற்பு - திருமலை; (எ - று.)

'ஆறு தோய்ந்து இடரின் நீங்கி யெழும்' எனவே, அங்குள்ள ஆறுகள் தம்மிடத்து ஒருகால் மூழ்கினவளவிலே வினைத்துன்பங்களை யெல்லாம் தீர்க்கும் மகிமையுடையனவென்று விளங்கும். வெவ்-வெம்மையென்ற பண்புப்பெயர் ஈறுபோய் முன்நின்ற மகரமெய் வகரமாயிற்று. எல்லோர் - எல்லார் என்பதன் ரகர வீற்றயல் ஆகாரம் ஓவாயிற்று. தெவ் - பகைமையுணர்த்தும் உரிச்சொல்; "தெவ்வுப் பகையாகும்" என்பது, தொல்காப்பியம்.

விடையேழடர்த்த விவரம்:—கண்ணன் நப்பின்னைப் பிராட்டியைத் திருமணஞ் செய்துகொள்ளுதற்காக, அவளது தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி, யாவர்க்கும் அடங்காத அசுராவிஷ்டமான எழெருதுகளையும் எழுதிருவுருக்கொண்டு சென்று வலியடக்கித்தழுவின னென்பதாம். விடை-வ்ருஷம் என்ற வடசொல்லின் சிதைவு. நாகம் என்ற வடசொல் - கால்களால் நடவாததென்றும், மலைகளில் அல்லது மரங்களில் வாழ்வதென்றும் காரணப்பொருள் படும். வேத சாஸ்திரங்களிற் கூறியபடி நடவாதவரை உபேட்சித்தல், திருமாலின் இயல்பு. அணையான் என்பது - மூன்றுமடியில் அணையென்னும் பெயரின்மேற் பிறந்த உடன்பாட்டுக்குறிப்பு வினையாலணையும்பெயரும், நான்காமடியில் அணையென்னும் வினைப்பகுதியின்மேற் பிறந்த எதிர்மறைத் தெரிநிலை வினையாலணையும் பெயருமாம். (கூகூ)

க00. பாடு மதுகரமூர் பச்சைத் தழைக்குடிலின்
வேடு மணமருவும் வேங்கடமே—நீடு
மகரால யங்கடந்தார் வாழ்வசுதே வர்க்கு
மகரால யங்கடந்தார் வாழ்வு.

(இ - ள்.) பாடும் மதுகரமும் - இசைபாடுவதுபோல ஒலிக்கின்றவண்டுகளும், மணம் மருவும் - (மலர்களின்) நறுமணம் பொருந்தப்பெற்ற: பச்சை தழை குடிலின் - பசுமையான தழைகளால் அமைக்கப்பட்ட குடிசைகளில், வேடும் - வேடர்களும், மணம் மருவும் - கலியாணம் செய்யப்பெற்ற: வேங்கடமே—,—நீடு - நீண்ட, மகராலயம் - கடலை, கடந்தார் - தாண்டியவரும், வாழ் வசுதேவர்க்கு மகர் - வாழ்வையுடைய வசுதேவர்க்குப் புதல்வரானவரும், ஆலயங்கள் தந்தார் - கோயில்களைத் தந்தருளியவருமான திருமால், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

மதுகரம் - வடசொல் ; தேனைச் சேர்ப்பதென்று காரணப்பொருள் படும். பச்சை - ஐவிகுதிபெற்ற பண்புப்பெயர்: பசு என்ற பண்படி தன்

ெறற்று இரட்டிற்று. வேடு-சாதிப்பெயர். வேடர்கள் குடிசைகளில் அடிக்கடி மணம் நிகழ்கின்றன வென்க. மகராலயம் என்ற வடசொல் - மகர ஆலயம் என்று பிரிந்து, மகரங்களுக்கு இடமான தென்று பொருள்படும்; மகரம் - சுறாமீன். கடல் கடந்தது, இராமாவதாரத்தில் இலங்கைக்குச் செல்லுதற்பொருட்டு. வசுதேவர் - கண்ணனைப்பெற்ற தந்தை. மகர்-மகன் என்பதன் உயர்வுப்பன்மை. ஆலயங்கள்தந்தார் - பலவிடங்களிற் கோயில் கொண்டு எழுந்தருளியிருந்து சேதநர்க்குச் சேவைசாதிப்பவர். (௧00)

ஆதிதிரு வேங்கடமென் றாயிரம்பே ரானிடமென்
றோதிய வெண்பா வொருநூறுங்—கோதில்
குணவாள பட்டரிரு கோகனகத் தாள்சேர்
மணவாள தாசன்றன் வாக்கு.

(இ - ள்.) ஆதி திருவேங்கடம் என்று - சிறப்புள்ள திருவேங்கடமென்றும், ஆயிரம் பேரான் இடம் என்று - ஆயிரந்திருநாமங்களை யுடையவனான திருமாலினது இடமென்றும், ஓதிய - சொன்ன, வெண்பா ஒரு நூறும் - நூறு வெண்பாக்களும்,—கோது இல் - குற்றமில்லாத, குணம் ஆள - நற்குணங்களை யுடையவரான, பட்டர் - பராசரபட்டரென்னும் ஆசாரியருடைய, இரு கோகனகம் தாள் - தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளை, சேர் - சரணமாக அடைந்த, மணவாளதாசன்தன் - அழகியமணவாள தாசனுடைய, வாக்கு - வாய்மொழியாம்; (எ - று.)

'ஆதிதிருவேங்கடம்' என்றது - இந்நூற் செய்யுள்களின் முன்னிரண்டடியின் வாய்பாட்டையும், 'ஆயிரம்பேரா னிடம்' என்றது - பின்னிரண்டடியின் வாய்பாட்டையுங் குறிக்கும். குணவாளர்+பட்டர்=குணவாள பட்டர்; உயர்திணைப் பெயரீறு கெட்டது. கோகநதம் என்ற வடசொல் - சக்கரவாகப் பறவைகள் தன்னிடம் விளையாடப் பெறுவதென்று காரணப் பொருள்படும்; கோகம் - சக்கரவாகம். தாசன்றன், தன் - சாரியை.

இச்செய்யுள், நூலாசிரியர் தாமே தம்மைப்பிறன்போலும் பதிகங்கூறியது; பிரயோகவிவேகநூலார், 'இது, தன்னைப் பிறன்போலும் நாந்தி கூறுகின்றது','வடநூலார் தாமே பதிகமும் உரையும் செய்வார்,' 'இனிச் சம்பந்தர் சடகோபர் முதலாயினாரும் திவாகரரும் பதினெண்கீழ்க்கணக்குச்செய்தாரும் முன்னாகப் பின்னாகப் பதிகங்கூறுவதும் காண்க' என்றவை காண்க.

திருவேங்கடமாலை முற்றிற்று.



# திருவேங்கடமாலைச் செய்யுண்முதற்குறிப்பகராதி.





# திருவேங்கடத்தந்தாதி.

'திரு' என்னும் பலபொருளொருசொல் - வடமொழியிலே 'ஸ்ரீ' என்பதுபோல, தமிழிலே தேவர்கள் அடியார்கள் ஞானநூல்கள் மந்திரங்கள் புண்ணிய ஸ்தலங்கள் புண்ணியதீர்த்தங்கள் முதலிய மேன்மையையுடைய பலபொருள்கட்கும் விசேஷணபதமாகி, அவற்றிற்குமுன்னே மகிமைப்பொருளைக் காட்டிநிற்கும்; ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீபக்திசாரர் ஸ்ரீராமாயணம் ஸ்ரீ அஷ்டாக்ஷரம் ஸ்ரீரங்கம் ஸ்ரீகைரவிணி ஸ்ரீபாதம் எனவும், திருமால் திருமழிசைப்பிரான் திருவாய்மொழி திருவெட்டெழுத்து திருவரங்கம் திருவல்லிக்கேணி திருவடி எனவும் வழங்குமாற்றால் அறிக. இது, வேங்கடத்துக்கு அடைமொழி; அந்தாதிக்கு அடைமொழியாகவுமாம்.

வேங்கடம்என்பது - திருமாலின் திவ்வியதேசங்கள் நூற்றெட்டனுள் ஒன்றும், வடநாட்டுத்திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதலதும், 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று சிறப்பாகஎடுத்துக்கூறப்படுகிற மூன்று தலங்களுள் இடையது மாகிய தலம். தன்னையடைந்தவர்களுடைய பாவமனைத்தையும் ஒழிப்பதனால், 'வேங்கடம்' எனப் பெயர்பெற்றது; வடசொல். வேம் - பாவம், கடம் - எரித்தல் எனப் பொருள் காண்க. (இதனை "அத்திருமலைக்குச் சீரார் வேங்கடாசல மெனும்பேர், வைத்தன ரதுவே தென்னில் வேமெனவழங்கெழுத்தே, கொத்துறுபவத்தைக் கூறும் கடவெனக்கூ றிண்டாஞ், சுத்தவக்கரங் கொளுத்தப்படு மெனச் சொல்வர் மேலோர்". "வெங்கொடும்பவங்களெல்லாம் வெந்திடச்செய்வதால் நல், மங்கலம் பொருந்துஞ் சீர்வேங்கடமலையான தென்று" என்னும் புராணச் செய்யுள்களாலும் அறிக.) ஸ்ரீசைலத்தின் மேற்கிலுள்ள நந்தனபுர மென்னும் ஊரில் புரந்தரனென்னும் பிராமணோத்தமனது குமாரனாகிய மாதவனென்பவன் தன்மனைவியாகிய சந்திரரேகையென்பவளோடு பூஞ்சோலையிற்சென்று விளையாடிக்கொண்டிருக்கையில் மாலினியென்பாளொருசண்டாளகன்னிகையின் கட்டழகைக் கண்டு காமுற்று அவளோடு சேர்ந்து மனையாளைத்துறந்து அப்புலைமங்கையுடனேசென்று புலால்நுகர்ந்தும் கட்குடித்தும் கைப்பொருள்முழுவதையும் இழந்து பின்பு வழிபறித்தல் உயிர்க்கொலை முதலிய கொடுந்தொழில்புரிந்து பொருள்சேர்த்து அவட்குக்கொடுத்துவந்து முடிவில் வறியவனாகிப் பலநோய்களையும்அடைந்து அவளால் அகற்றப்பட்டவனாய்ப் பலபாவமுந்தொடரப் பித்தன்போலஅலைந்துதிரிந்து இத்திருமலையை அடைந்தமாத்திரத்தில் தனது தீவினையெல்லாம் சாம்பலாகப் பெற்று முன்னையபிரமதேஜஸைப்பொருந்தி நல்லறிவுகொண்டு திருமாலைச்சேவித்து வழிபட்டுப் பரமபதமடைந்தனனாதலால் இதற்கு 'வேங்கடாசலம்' என்னும் பெயர் நிகழ்ந்தது என்று வடமொழியில் ப்ரஹ்மாண்டபுராணத்திலும் பவிஷ்யோத்தர புராணத்திலும் கூறப்படுதல் காண்க. அன்றி, 'வேம் என்பது - அழிவின்மை, கடம் என்பது - ஐசுவரியம்; அழிவில்லாத ஐசுவரியங்களைத் (தன்னையடைந்தார்க்குத்) தருதலால் வேங்கடமெனப் பெயர்கொண்டது' என்று வராகபுராணத்திற் சொல்லப்பட்டவாறும் உணர்க.

திருஎன்பதற்கு - மேன்மையான என்று பொருள்கொண்டால் திருவேங்கடம்என்ற தொடர் பண்புத்தொகையும்,மேன்மையையுடைய என்று பொருள்கொண்டால் இரண்டாம்வேற்றுமை யுருபும்பயனுமுடன் தொக்க தொகையு மாம். வேங்கடத்தந்தாதி என்ற தொடர் - வேங்கடத்தினது சம்பந்தமான அந்தாதி யென்று விரித்து வேங்கடத்தின்விஷயமாக அந்தாதித்தொடையாற்பாடப்பட்ட தொருநூலென்று பொருள்கொண்டு ஆறும் வேற்றுமைத்தொகையாகவும், வேங்கடத்தைப்பற்றிய அந்தாதியென்று விரித்துப் பொருள்கொண்டு இரண்டாம்வேற்றுமையுருபும் பொருளுந்தொக்க தொகையாகவும் உரைக்கத்தக்கது. வேங்கடத்தந்தாதி யென்ற தொடரில் அத்துச்சாரியையின்முதல்அகரம் மவ்வீறுஒற்றழிந்துநின்ற அகரத்தின்முன் கெட்டது. அத்துச்சாரியையின் ஈற்றுஉகரம் உயிர்வர ஒழிந்தது.

அந்தாதி - அந்தத்தை ஆதியாக வுடையது: அன்மொழித்தொகை; வடமொழித்தொடர், தீர்க்கசந்தி: அந்த ஆதி எனப் பிரிக்க. அந்தாதியாவது - முன்னின்றசெய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ்செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது; இங்ஙனம் பாடும் நூலினது ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல், மண்டலித்த லெனப்படும். இது, தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றும். பதிற்றந்தாதி நூற்றந்தாதி என்ற வகைகளில் இந்நூல் நூற்றந்தாதியாம். அதாவது - நூறுவெண்பாவினாலேனும் நூறுகட்டளைக்கலித்துறையினாலேனும் அந்தாதித்தொடையாற் கூறுவது. இந்நூல், அந்தாதித்தொடையா லமைந்த நூறு கட்டளைக்கலித்துறைகளையுடையது. சொற்றொடர்நிலைச்செய்யுள், பொருட்டொடர்நிலைச்செய்யுள் என்ற வகையில் இது சொற்றொடர்நிலை; "செய்யுளந்தாதி சொற்றொடர்நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும்.

எனவே, திருவேங்கடத்தைப்பற்றிப் பாடியதொரு பிரபந்த மென்பது பொருள்; திருவேங்கடத்தில் எழுந்தருளி யிருக்கின்றவரும் ஸ்ரீநிவாஸன் என்று வடமொழியிலும் அலர்மேல் மங்கையுறைமார்பன் என்று தென்மொழியிலும் திருநாமங் கூறப்படுபவருமான எம்பெருமானைக் குறித்துப் பாடியதொரு நூ லென்பது கருத்து.

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் "விருந்தேதானும், புதுவதுகிளந்த யாப்பின்மேற்றே" என்பதனால், "விருந்துதானும் பழங்கதை மேலதன்றிப் புதிதாகத் தாம் வேண்டியவாற்றால் தொடுக்கப்படுந் தொடர்நிலைமேலது" என்று கூறினமையின், இந்நூல், அங்ஙனங்கூறிய விருந்தாம் என்று உணர்க. அச்சூத்திரவுரையில் அந்தாதியும் கலம்பகமும் முதலாயின உதாரணங் காட்டப்பட்டுள்ளவாறுங் காண்க. இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார். இப்பிரபந்தம், தோத்திரரூபமானது.

இந்நூலிலுள்ள கலித்துறைகள் யாவும் பெரும்பாலும் திரிபு என்னுஞ் சொல்லணியையும், சிறுபான்மை யமகம் என்னுஞ் சொல்லணியையும் உடையன. திரிபாவது - ஒவ்வோரடியிலும் முதலெழுத்து மாத்திரம் வேறு

பட்டிருக்க, இரண்டுமுதலிய பலஎழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறு படுவது; இதனையும் யமகவகையில் அடக்குவர் ஒருசாரார். யமகமாவது - பலஅடிகளிலாயினும் ஓரடியிற் பலஇடங்களிலாயினும் வந்த எழுத்துத்தொடர்களே மீண்டும்வந்து பொருள்வேறுபடுவது; இது, தமிழில் மடக்குஎனப்படும். இந்நூற்செய்யுள்களிற் சிறுபான்மை காணப்படுகிற யமகங்கள், பல அடிகளில் வந்தவை.

---

## சிறப்புப்பாயிரம்.

இக்கரையந்திரத்துட்பட்டதென்னவிருவினையுட்
புக்கரைமாநொடியுந்தரியாதுழல்புன்பிறப்பா
மெக்கரைநீக்கிப்படித்தாரையந்தவிருவிரசைக்
கக்கரைசேர்க்குமணவாளதாசனருங்கவியே.

(இதன்பொருள்.) மணவாளதாசன் - அழகியமணவாளதாசரது, அருங்கவி - அருமையான பாடல்களானவை,— படித்தாரை - (தம்மை) ஓதினவர்களை,—இக்கு - கரும்பானது, அரை யந்திரத்துள் பட்டது என்ன - (தன்னுள் அகப்பட்ட பொருளை) நசுக்குகின்ற ஆலையென்னும் யந்திரத்தினுள்ளே அகப்பட்டுக் கொண்டாற்போல, இரு வினையுள் புக்கு - (நல்வினை தீவினைகளாகிய) இருவகை வினைகளினுள்ளே (ஆன்மா) அகப்பட்டுக்கொண்டு, அரை மா நொடியும் தரியாது - அரைமாநொடி யென்னுஞ் சிறிதளவு பொழுதேனுங் கவலையற்று நிற்காமல், உழல் - அலைந்துதிரிதற்கு இடமாகிற, புல் பிறப்பு ஆம் - இழிவான பிறப்புக்களாகிய, எக்கரை - மணல்மேட்டை, நீக்கி - கடக்கச்செய்து,—அந்த இரு விரசைக்கு அக்கரை சேர்க்கும் - அந்தப் பெரிய விரஜாநதிக்கு அக்கரையிலுள்ள பரமபதத்திற் சேர்த்துவிடும்; (என்றவாறு.)

மணவாளதாசனருங்கவி, படித்தாரை, புன்பிறப்பாம் எக்கரை நீக்கி விரசைக்கு அக்கரை சேர்க்கும் என அந்வயங் காண்க. அழகிய மணவாள தாசரால் இயற்றப்பட்ட திருவேங்கடத்தந்தாதிச் செய்யுள்களைப் படித்தவர்கள் ஒழித்தற்குஅரிய பிறப்பை யொழித்துப் பிரகிருதிசம்பந்தமற்று விரஜாநதியில் நீராடிப் பரமபதஞ் சேர்வரென இந்நூற்பயன் கூறு முகத்தால், இந்நூலின் சிறப்பையும், இந்நூலாசிரியரது தெய்வப்புலமையையும் தெரிவித்தவாறும். அநந்தகோடிபிரமாண்டங்களடங்கிய மூலப்பிரகிருதிக்கு அப்புறத்தே விரஜாநதிக்கு அப்பால் ஸ்ரீமந்நாராயண னெழுந்தருளியிருக்கும் பரமபதம் உள்ள தாதலால், 'அந்தஇருவிரசைக்கு அக்கரைசேர்க்கும்' எனப்பட்டது. 'இக்கரை...............உழல்' என்றது, பிறப்புக்கு அடைமொழி. உயிர் இருவினையுள் அகப்பட்டுத் தன்வசமின்றிப் பரவசமாய் வீடுபெறாது வருந்துதற்கு, கரும்பு ஆலையிலகப்பட்டு நொருங்கிச்சிதைதலை உவமைகூறினார். நல்வினையும் பிறத்தற்குஏதுவாதலால் அதனையுஞ்சேர்த்து 'இருவினையுட்புக்கு' என்றார்; "இருள்சே ரிருவினையுஞ் சேரா இறைவன், பொருள்

சேர் புகழ்புரிந்தார்மாட்டு" என்றார் திருவள்ளுவனாரும். தேவசன்மம் நல்வினைப்பயனாற் பெரிதும் இன்பநுகருமாறு நேர்வதாயினும் அத்தேவர்களும் நல்வினைமுடிந்தவளவிலே அவ்வுடம்புஒழிய மீளவும் இவ்வுலகத்திற் கருமவசத்திற்குஏற்ப வேறுபிறவிகொள்பவராதலும், உயிரைப்பந்தப்படுத்துவதில் பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலப் புண்ணியசன்மமும் பாவசன்மமும் சமமேயாதலும், எல்லாக்கருமங்களையும் முற்றும்ஒழித்தவர்களே சிற்றின்பத்துக்கும் பெருந்துன்பத்துக்குமே இடமான எழுவகைப் பிறப்புக்களிலும் புகுதாமற் பேரின்பத்துக்கேஇடமான மீளாவுலகமாகிய முத்தியிற் சேர்ந்து மீளவும்பிறத்தலிலராவ ரென்பதும் உணர்க.

மா என்பது - எண்ணலளவைகளில் ஒன்று; அது, இருபதில் ஒன்று. அதிற்பாதி, அரைமா. நொடி - மனிதர் இயல்பாக ஒருமுறை கைந்நொடித்தற்கு வேண்டும் பொழுது; ஒருமாத்திரைப்பொழுது; உம் - இழிவுசிறப்பு. பிறப்புக் கடத்தற்கு அரிதென்பது தோன்ற, அதற்கு மணல்மேடு உவமை கூறப்பட்டது. எக்கர் = எக்கல்: ஈற்றுப்போலி. யந்திரம் யமன் யதி யது யஜ்ஞம் யஜுர் என்ற வடசொற்கள்-தமிழில் எந்திரம் எமன் எதி எது எச்சம் எசுர் என்று விகாரப்பட்டுவருதல்போல, யக்ஷர் என்ற வடசொல் எக்கர் என்றுவிகாரப்பட்டதெனக்கொண்டு, 'புன்பிறப்பாமெக்கரை நீக்கி' என்பதற்கு - இழிந்தபிறப்புக்களாகிய யக்ஷர்களை [பூதகணங்களை] விலக்கியென்று பொருளுரைத்தலு மொன்று. தன்னில்மூழ்குபவர் ரஜோகுணம் தீரப்பெறு மிட மாதலால், விரஜா என்று பெயர். இக்ஷு, யந்த்ரம், விரஜா என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. கவி - வடசொல்; பாடுபவனதுபெயராகிய இது, இலக்கணையாய்,அவனாற்பாடப்பட்ட பாடல்களின்மேல் நிற்கும்; கர்த்தாவாகுபெயர். என்ன - உவமவுருபு. இருவினை-இரண்டு+வினை. இருவிரசை - இருமை+விரசை: இருமையென்ற பண்பு, பெருமையின்மேலது. 'இக்கரையந்திரத்துட் பட்டதென்ன விருவினையுட்புக் கரைமாநொடியுந்தரியா துழல்' என்றது, உவமையணி. 'புன்பிறப்பாம் எக்கரை நீக்கி' என்றது, உருவகவணி. படித்தாரை எக்கரை நீக்கி - இரண்டுசெயப்படுபொருள் வந்த வினை. அந்த என்ற சேய்மைச்சுட்டு - பிரசித்தியையும், மேன்மையையுங் குறிக்கும். அக்கரை - அந்தக்கரை:(எதிர்மொழி - இக்கரை.)

ஒருபெயரின் ஒரு பகுதியைக்கொண்டு அப்பெயர்முழுவதையுங் குறிப்பதொரு மரபுபற்றி, அழகியமணவாளதாசரை 'மணவாளதாசன்' என்றார். 'மணவாளதாசனருங்கவி' என்றவிடத்துத் தொக்குநின்ற ஆறனுருபு-செய்யுட்கிழமைப்பொருளில் வந்தது; 'கபிலரகவல்', 'கம்பராமாயணம்' என்ற விடங்களிற் போல: (வேங்கடத்தந்தாதி என்றவிடத்துத் தொக்குநின்ற ஆறனுருபின்பொருளோடு இப்பொருளுக்கு உள்ளவேறுபாடு கருதத்தக்கது; அங்கு ஆறனுருபு - விஷயமாக வுடைமையாகிய சம்பந்தப்பொருளில் வந்தது: 'விஷ்ணுபுராணம்,' 'விநாயகரகவல்' என்றவற்றிற்போல.)

இக்கவி - அபியுக்தரி லொருவர் செய்ததென்பர். இது, வைஷ்ணவ சம்பிரதாயத்தில் தனியன் எனப்படும். (நூலினுள்அடங்காது தனியே பாயிரமாய்நிற்றல்பற்றியது, அப்பெயர்; 'அன்'விகுதி - உயர்வுப்பொருளது.)

## காப்பு.

காப்பு காத்தல்; அது, இங்கு, காக்கின்ற கடவுளின் விஷயமான வணக்கத்தைக் குறிக்கும்: ஆகவே, கவி தமக்குநேரிடத்தக்கஇடையூறுகளை நீக்கித் தமதுஎண்ணத்தைமுடிக்கவல்ல தலைமைப்பொருளின் விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது கருத்து. இக்காப்புச்செய்யுள், ஆழ்வார்கள் பன்னிருவருட் பிரதானரான நம்மாழ்வாரைப் பற்றியது. ஸ்ரீவைஷ்ணவ சமயத்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இக்காப்புச்செய்யுள், விஷ்ணுபக்தர்களிற்சிறந்த ஆழ்வாரைக்குறித்ததாதலால், வழிபடுகடவுள்வணக்கமாம். தம்தமது மதத்துக்கு உரிய கடவுளை வணங்குதலேயன்றி அக்கடவுளின் அடியார்களை வணங்குதலும் வழிபடுகடவுள்வணக்கத்தின் பாற்படு மென அறிக. அவ்வாழ்வாரால் வெளியிடப்பட்ட திவ்வியப்பிரபந்தங்களின் சொற்பொருட்கருத்துக்களமைய அம்முதனூலுக்கு வழிநூல்போலச் செய்யப்படுவது இப்பிரபந்த மென்பதுபற்றி, இந்நூலின் இக்காப்புச்செய்யுளை எற்புடைக்கடவுள்வணக்க மென்று அரிதிற்கொள்ளவும் அமையும்.

நல்லவந்தாதிதிருவேங்கடவற்குநான்விளம்பச்
சொல்லவந்தாதின்வழுபொருட்சோர்வறச்சொல்வித்தருள்
பல்லவந்தாதிசைவண்டார்குருகைப்பரசமயம்
வெல்லவந்தாதிமறைதமிழாற்செய்தவித்தகனே.

(இ - ள்.) பல்லவம் - (சோலைகளிலுள்ள மரங்களின்) தளிர்களிலும், தாது - பூந்துகளிலும், இசை வண்டு ஆர் - (நறுமணத்தையுட்கொள்ளும் பொருட்டு) இசைபாடுகிற வண்டுகள் மொய்க்கப்பெற்ற, குருகை - திருக்குருகூரென்னுந்திருப்பதியிலே, பரசமயம் வெல்ல வந்து - (ஸ்ரீவைஷ்ணவ மதமல்லாத) அயல்மதங்களை வெல்லுமாறு திருவவதரித்து, ஆதி மறை தமிழால் செய்த - பழமையான வடமொழிவேதங்களைத் தமிழ்ப்பாஷையினால் (திவ்வியப்பிரபந்தங்களாகச்)செய்தருளிய, வித்தகனே - ஞானசொரூபியாயுள்ளவனே!—நல்ல அந்தாதி - நல்ல அந்தாதியென்னும் பிரபந்தத்தை, திருவேங்கடவற்கு - திருவேங்கடமுடையான்விஷயமாக, நான் விளம்ப - நான் பாடுமாறு, சொல் அவம் - சொற்குற்றங்களும், தாதின் வழு - வினைப்பகுதிகளின்குற்றங்களும், பொருள் சோர்வு - பொருட்குற்றங்களும், அறசிறிதுமில்லாதபடி, சொல்வித்து அருள் - சொல்வித்தருள்வாய்; (எ - று.)

சொற்குற்றம் பொருட்குற்ற மின்றிக் கவிபாடுமாறு எனக்கு நல்ல கவனசக்தியை அருள்புரிக வென்று பிரார்த்தித்தார். "என்னாவிலின்கவி யா னொருவர்க்குங் கொடுக்கிலேன், தென்னாதெனாவென்று வண்டுமுரல் திருவேங்கடத்து, என்னானை யென்னப்ப னெம்பெருமா னுளனாகவே" என்று நம்மாழ்வார் அறுதியிட்டு ஆதிமறை தமிழாற் செய்த வித்தகராதலால், தாம் திருவேங்கடமுடையான் விஷயமாகத் தமிழ்நூல்செய்தற்கு அவ்வாழ்வாரருளை வேண்டினரென்க.

குருகை - பாண்டிநாட்டுத் திருமால்திருப்பதி பதினெட்டில் ஒன்று. 'பல்லவந்தாதிசைவண்டார்' என்ற அடைமொழி, ஆழ்வாரது திருவவதார ஸ்தலமான அத்திருக்குருகூரினது வளத்தை விளக்கும். தாது-பூந்தாது, மகரந்தப்பொடி. ஆழ்வார் தமதுபிரபந்தங்களிற்கூறிய தத்துவார்த்தங்களைக்கொண்டு பிறமதங்களாகிய யானைகளைச் செருக்கடக்கி அவற்றிற்குத் தாம் மாவெட்டியென்னுங்கருவிபோன்றவராய்ப் பராங்குசரென்று ஒரு திருநாமம்பெறுதல் தோன்ற 'பரசமயம்வெல்ல வந்து' என்றும், வேதம் அபௌருஷேயமும் நித்யமுமாய்ச் செய்யாமொழி யெனப்படுகிற சிறப்புத் தோன்ற 'ஆதிமறை' என்றும், ஆழ்வார் இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்ற நான்குவேதங்களின் சாரார்த்தங்கள் முறையே அமையத் திருவிருத்தம் திருவாசிரியம் திருவாய்மொழி பெரியதிருவந்தாதி என்ற நான்குதிவ்வியப்பிரபந்தங்களைத் திருவாய்மலர்ந்தருளி உலகத்தைஉய்வித்தமைதோன்ற 'மறை தமிழாற்செய்த' என்றும், ஆழ்வார் அஜ்ஞானத்துக்குக்காரணமான சடமென்னும்வாயுவை ஒறுத்தோட்டிச் சடகோபரென்ற பெயர்பெற்றுப் பிறந்தபொழுதே தொடங்கித் தத்துவஞானவிளக்கம் என்றுங்குறைவற விளங்கப்பெற்ற ஞானக்கனி யாதல் தோன்ற 'வித்தகனே' என்றும் கூறினார். பின்பு 'தாதின்வழு' என்று முதனிலைக்குற்றங்களைத் தனியே எடுத்துக்கூறுதலால், முன்பு 'சொல்லும்' என்றது, அவையொழிந்த மற்றைச் சொற்குற்றங்களின்மேல் நிற்கும். தாது-வினைப்பகுதியைக்குறிக்கும்போது, வடசொல். விண்டுவின், சம்புவின், இந்துவின் என்றாற்போல வடமொழிக் குற்றியலுகரம் உயிர்வரக் கெடாது தாதுவின் என வரற்பாலது, இங்குத் திரிபுநயம்நோக்கி, உயிர்வரினுக்குறள்மெய்விட்டோடி 'தாதின்' என நின்றது. பல்லவம், பரசமயம், ஆதி - வடசொற்கள். விளம்புதல்-சொல்லுதல். ஆர்தல் - தங்குதல். ஆர் குருகை - வினைத்தொகை.

---

## நூல்.

க. திருவேங்கடத்துநிலைபெற்றுநின்றனசிற்றன்னையாற்
றருவேங்கடத்துத்தரைமேனடந்தனதாழ்பிறப்பி
னுருவேங்கடத்துக்குளத்தேயிருந்தனவுற்றழைக்க
வருவேங்கடத்தும்பியஞ்சலென்றோடினமால்கழலே.

(இ - ள்.) கடம் - மதத்தையுடைய, தும்பி - யானையாகிய கஜேந்திராழ்வான், உற்று - (முதலையினாற் பற்றப்பட்டுத்) துன்பமுற்று, அழைக்க - (ஆதிமூலமே யென்று) கூப்பிட, (அதனைத் துன்பந்தீர்த்துப் பாதுகாத்தற் பொருட்டு), வருவேம் அஞ்சல் என்று ஓடின - '(யாம் இதோ) வருகிறோம் (நீ)அஞ்சவேண்டா' என்று (அபயவார்த்தை) சொல்லிக்கொண்டு (தனது இருப்பிடமான ஸ்ரீவைகுண்டத்திலிருந்து அவ்யானையினிடத்துக்கு) விரைந்து சென்ற, மால் - திருமாலினது, கழல்-திருவடிகள்,—திருவேங்கடத்து-திருவேங்கடமலையில், நிலை பெற்று நின்றன-நிலையாக நின்றுள்ளன; சிறு

அன்னையால் - சிறியதாயாகிய கைகேயியின் கட்டளையால், தரு வேம் கடத்து தரைமேல் நடந்தன - மரங்கள் வேகப்பெற்ற கடுஞ்சுரத்து நிலத்தின் மேல் நடந்துசென்றன; தாழ் பிறப்பின் உருவேங்கள் - இழிந்தபிறப்பின் வடிவத்தையுடைய எங்களது, தத்துக்கு - ஆபத்தை நீக்குதற்பொருட்டு, உளத்தே இருந்தன - (எங்கள்)மனத்திலே வந்து எழுந்தருளியிருந்தன; (எ - று.)—ஏ - ஈற்றசை.

இது, பாதவகுப்பு என்னும் பிரபந்தத்துறைகூறியவாறும்: இந்நூலின் எஈ - ஆஞ் செய்யுளும் காண்க. பாதவகுப்பு - பிரபந்தத் தலைவனது திருவடிகளின் சிறப்புக்களைக்கூறுவது; (இங்ஙனமே புயவகுப்பும் உண்டு: அது, பிரபந்தநாயகனது தோள்களின் சிறப்பைக் கூறுவது; இந்நூலின் கூ-ஆஞ் செய்யுளை நோக்குக.) "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்றபடி சரணமடைகிற உயிர்கட்கெல்லாம் உஜ்ஜீவநகாரமாயிருப்பது திருமாலின் திருவடியாதலால், நூலின்தொடக்கத்தில் அதன் ஏற்றத்தை எடுத்துக்கூறின ரென்க.

திருவேங்கடத்தில் எம்பெருமான் நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருத்தலால்,'திருவேங்கடத்து நிலைபெற்றுநின்றன'என்றார். சீதாகல்யாணத்தின்பிறகு தசரதசக்ரவர்த்தி இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய யத்தனிக்கையில், மந்தரைசூழ்ச்சியால் மனங்கலக்கப்பட்ட கைகேயி தன் கொழுநரான தசரதரை நோக்கி முன்பு அவர் தனக்குக்கொடுத்திருந்தஇரண்டுவரங்களுக்குப் பயனாகத் தன்மகனான பரதனுக்குப் பட்டங்கட்டவும் கௌசல்யைமகனான இராமனைப் பதினான்குவருஷம் வனஞ்செலுத்தவும் வேண்டுமென்றுசொல்லி வற்புறுத்த, அதுகேட்டுவருந்தின தசரதர் சத்தியவாதியாதலால்,முன்புஅவட்குவரங்கொடுத்திருந்தசொல்லைத்தவறமாட்டாமலும்,இராமன்பக்கல்தமக்குஉள்ளமிக்கஅன்பினால் அவ்வரத்தைநிறைவேற்றுமாறு அவனைவனத்துக்குச்செல்லச்சொல்லவும் மாட்டாமலும் கலங்கி வாய் திறவாதிருக்கிறசமயத்தில், கைகேயி இராமனை வரவழைத்து 'பிள்ளாய்! உங்கள்தந்தை பரதனுக்கு நாடுகொடுத்துப் பதினான்குவருடம் உன்னைக் காடேறப்போகச்சொல்லுகிறார்'என்றுசொல்ல, அச்சொல்லைத்தலைமேற்கொண்டு அந்தமாற்றாந்தாயின்வார்த்தையையும், அவட்குத்தனதுதந்தைகொடுத்திருந்த வரங்களையும் தவறாது நிறைவேற்றி மாத்ருபித்ருவாக்யபரிபாலனஞ் செய்தலினிமித்தம் இராமபிரான் இலக்குமணனோடும்சீதையோடும் அயோத்தியைவிட்டுநீங்கி நடந்துவனவாசஞ்சென்றன னென்றவரலாறுபற்றி,'சிற்றன்னையால் தருவேம் கடத்துத் தரைமேல் நடந்தன' என்றார்; "தொத்தலர்பூஞ்சுரிகுழற் கைகேசிசொல்லால் தொன்னகரந்துறந்து துறைக்கங்கைதன்னைப், பத்தியுடைக்குகன்கடத்த வனம்போய்ப்புக்கு," "கூற்றுத்தாய்சொல்லக் கொடியவனம்போன, சீற்றமிலாதான்" என்றார் ஆழ்வார்களும். இராமபிரான் திருமாலின் திருவவதார மாதலால், அப்பெருமானது செய்கை இங்குத் திருமாலின்செய்கையாக ஒற்றுமைநயம்பற்றிக் கூறப்பட்டது; இதனை, இதுபோல வருமிடங்கட்கெல்லாங் கொள்க. பரத்வம் வியூகம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சை என்ற ஐந்தும் எம்பெருமானது

ஐவகை நிலைகளாம். அவற்றில், இங்கு 'திருவேங்கடத்து நிலைபெற்று நின்றன' என்றது, அர்ச்சாவதாரத்தை; அதாவது - விக்கிரகரூபத்தில் ஆவிர்ப்பவித்தல். 'சிற்றன்னையால் தருவேங்கடத்துத் தரைமேல் நடந்தன' என்றது, விபவத்தை; அது, ராமகிருஷ்ணாதி அவதாரங்கள். 'தாழ்பிறப்பினுருவேங்கள் தத்துக்கு உளத்தேயிருந்தன' என்றது, அந்தர்யாமித்வத்தை; அது - சராசரப்பொருள்களெல்லாவற்றினுள்ளும் எள்ளினுள் எண்ணெய்போல மறைந்துவசித்தலையும், அடியார்கள்மனத்தில் வீற்றிருத்தலையும் குறிக்கும். 'உற்றழைக்கவருவேங்கடத்தும்பி யஞ்சலென்றோடின மால்கழல்' என்றது, பரத்வத்தோடு சௌலப்யத்தையுங் காட்டும்; பரத்வமாவது - பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை: சௌலப்யம் - அடியவர்க்கு எளியனாதல். வியூகம் மேல்வருமிடத்துக் காண்க; அது, திருப்பாற்கடலில் எழுந்தருளியிருக்கும் நிலை.

'தருவேம்' என்ற அடைமொழி, காட்டின் கொடுமையை விளக்கும். தரு - வடசொல். வேம் - வேகும் என்ற செய்யுமெனெச்சத்து ஈற்று உயிர்மெய் சென்றது. தரை - தரா என்ற வடசொல்லின் விகாரம். ரூபமென்ற வடமொழி, உரு வெனச் சிதைந்தது. தாழ்பிறப்பின் உருவேங்கள் - இழிவானபிறப்புக்களிற் பிறத்தலையுடைய நாங்கள் என்றபடி. உருவேம் - உரு என்ற பெயர்ச்சொல்லின்மேற் பிறந்த தன்மைப்பன்மைக் குறிப்புவினையாலணையும்பெயர்; கள் - விகுதிமேல்விகுதி. தன்னைப்போன்ற அடியார்களையுங் கூட்டிக்கொண்டு உளப்பாட்டுத் தன்மைப்பன்மையாக 'தாழ்பிறப்பினுருவேங்கள்' என்றார். தத்துக்கு என்ற நான்கனுருபு - பகைப்பொருளது; "துன்பத்திற்கி யாரே துணையாவார்" என்றவிடத்துப் போல. "மலர்மிசையேகினான்" என்றபடி அன்பால் நினைபவரது உள்ளக்கமலத்தின்கண் எம்பெருமான் அவர்நினைந்தவடிவோடு விரைந்து சென்று சேர்தலால், 'உளத்தேயிருந்தன' என்றார். உற்று - துன்புற்று; உறுஎன்ற பகுதியின் சம்பந்தமுள்ள ஊறு இடையூறு என்ற சொற்களை நோக்குக. வருவேம் - தனித்தன்மைப்பன்மை. கடம்-வடசொல்; இந்த யானைக்கன்னத்தின்பெயர், அதனினின்றுவழியும் மதநீர்க்கு இடவாகுபெயராம். தும்பி என்பதை இயல்பாக வந்த அண்மைவிளியாகவுங் கொள்ளலாம். அஞ்சல் - எதிர்மறையொருமையேவல். ஓடின - பெயரெச்சம், மாலுக்கு அடைமொழி. இதனைப் பலவின்பால்முற்றாகக்கொண்டு உரைத்தலும் ஒன்று; இங்ஙனங்கொள்ளுமிடத்து, 'வருவேம் கடத்தும்பி யஞ்சல்' என்றதைக் கழலின் வார்த்தையாக் கூறுதல், உபசாரவழக்காம். மால் - பெருமை, அடியார்கள்பக்கல் அன்பு, திருமகளிடத்துக் காதல், மாயை, கருநிறம் இவற்றையுடையவன். 'கழல்' - பால்பகா அஃறிணைப்பெயராதலால், 'நின்றன' முதலிய பலவின்பால்முற்றுக்களைக் கொண்டன. ஒரு விலங்கினாலே மற்றொருவிலங்கிற்கு நேர்ந்த துன்பத்தைத் தான் இருந்தவிடத்தி லிருந்தே தீர்ப்பது ஸர்வசக்தனான எம்பெருமானுக்கு மிகவும்எளிதாயினும் அப்பெருமான் அங்ஙனஞ்செய்யாமல் தனதுபேரருளினால் அரைகுலையத் தலைகுலைய மடுக்கரைக்கே வந்து

உதவின மகாகுணத்தில் ஈடுபட்டு, 'உற்றழைக்க வருவேம் கடத்தும்பி அஞ்சலென்றோடின மால்கழல்' என்றார். உற்றழைக்க வருவேங்கடத்தும்பி யஞ்சலென்றோடின மால்—"முன் தவித்து ஆனை வாவென வந்தான்" என்பர் அழகரந்தாதியிலும்.

நின்றன, நடந்தன, இருந்தன, ஓடின என்ற யாறுபட்ட சொற்கள் நான்கையும் நான்கடிகளிலும் நிறுத்தினது, முரண்தொடை யென்னும் செய்யுளிலக்கணத்தின்பாற்படும். நிற்றல் முதலிய செயல்களை இடவேறு பாட்டினாலும் காலவேறுபாட்டினாலும் 'மால்கழல்' என்ற ஒருபொருளுக் கே ஏற்றியுரைத்தது முரண்விளைந்தழிவணியாதலும், 'மால்கழல்' என்பது ஈற்றில்நின்று 'நின்றன' 'நடந்தன' 'இருந்தன' என்னுஞ் சொற்களோடு இயைதல் கடைநிலை விளக்காதலும் அறியத்தக்கவை. எல்லாநூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக்கூறவேண்டுவது மரபாதலால், 'திரு' என்று தொடங்கினார். கீழ்க் காப்புச்செய்யுளை 'நல்ல' என்று தொடங்கினதும் இதன்பாற்படும். (௧)

௨. மாலைமதிக்குஞ்சியீசனும்போதனும்வாசவனு
நூலைமதிக்குமுனிவருந்தேவருநோக்கியந்தி
காலைமதிக்குள்வைத்தேத்துந்திருமலைகைம்மலையால்
வேலைமதிக்கும்பெருமானுறைதிருவேங்கடமே.

(இ - ள்.) மாலை - அந்திமாலைப்பொழுதில் விளங்குகின்ற, மதி-பிறைச் சந்திரனைத் தரித்த, குஞ்சி - தலைமயிர்முடியையுடைய, ஈசனும் - சிவபிரா னும், போதனும் - பிரமதேவனும், வாசவனும் - தேவேந்திரனும், நூலை மதிக்கும் முனிவரும் - சாஸ்திரங்களை ஆராய்ந்தறிகிற முனிவர்களும், தே வரும் - தேவர்களும், அந்தி - மாலைப்பொழுதிலும், காலை - காலைப்பொழு திலும், நோக்கி - தரிசித்து, மதிக்குள் வைத்து - தமது அறிவில் வைத்து [மனத்திற்கொண்டு தியானித்து], ஏத்தும் - துதிக்கப்பெற்ற, திரு மலை - சிறந்த மலை, (எதுவென்றால்,—)கை மலையால் வேலை மதிக்கும் பெருமான் உறை திருவேங்கடமே - (தனது) கைகளாகிய மலைகளைக்கொண்டு திருப் பாற்கடலைக் கடைந்த திருமால் எழுந்தருளியிருக்கிற திருவேங்கடமலையே யாம்; (எ - று.)

இச்செய்யுள், ஊர் அல்லது பதி எனப்படுகிற பிரபந்தத்துறை அமை யக் கூறியது; 'இன்னசிறப்புடையது பிரபந்தத்தலைவனது வாழிடம்' என்ற வாய்பாடுபொருந்தக் கூறுதல், இதன் இலக்கணமாம். திருவேங்கடமுடை யான் தேவாதிதேவனான திருமாலாதலால், மற்றைத் தேவர் முனிவர் முத லியயாவரும் அவனெழுந்தருளியிருக்கிறஅவ்விடத்தைச் சந்தியாகாலமிரண் டிலும் தரிசித்துத் தியானித்துத் துதித்து வழிபடுவரென்க. இங்ஙனஞ்சிறப் புடைய மலையாதல்பற்றித் திருமலையென்று தென்மொழியிலும், ஸ்ரீசைல மென்று வடமொழியிலும் திருவேங்கடத்துக்குச் சிறப்பாகப்பெயர்வழங்கும்.

மாலைமதி யெனவே பிறையாயிற்று; கொன்றைமாலையையும் சந்திரனையுந் தரித்த சடைமுடி யென்று உரைப்பாருமுளர்: மாலைபோல மதியையணிந்த முடி யெனினுமாம். சந்திரன் தக்ஷமுனிவனது புத்திரிகளாகிய அசுவிநிமுதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் மணஞ்செய்துகொண்டு அவர்களுள் உரோகிணியென்பவளிடத்து மிகவுங்காதல்கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங் கூடிவாழ்ந்திருக்க, மற்றைமகளிரின் வருத்தத்தை நோக்கி முனிவன் அவனை 'க்ஷயமடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தாற் சந்திரன் பதினைந்துகலைகளுங்குறைந்து மற்றைக்கலையொன்றையும் இழப்பதற்குமுன்னம் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அருள்கூர்ந்து அவ்வொற்றைக்கலையைத் தன்தலையிலணிந்து மீண்டுங் கலைகள் வளர்ந்துவரும்படி அநுக்கிரகித்தனனென்ற வரலாறுபற்றி, 'மாலைமதிக் குஞ்சியீசன்' என்றார். திருப்பாற்கடல் கடைகையில் அதனினின்று உண்டான பலபொருள்களுடனே விஷமும் சந்திரனும் தோன்ற, திருமால் அவற்றில் விஷத்தைச் சிவபிரானுக்குக் கொடுத்து உண்ணச்சொல்லி அதனால் அப்பிரானுக்கு வெப்பமுண்டாகாமல் தணிந்திருக்கும்பொருட்டு உடனே சந்திரனையுங்கொடுக்க, அதனை அப்பெருமான் சிரமேற்கொண்டனனென்றும் வரலாறு கூறப்படும்.

மதி - (பலராலும் நன்கு) மதிக்கப்படுவதெனப் பொருள்படுங் காரணக்குறி. குஞ்சி - ஆண்மயிர். (குடுமி சிகை பங்கி என்பனவும் இது. ஐம்பால் ஓதி கூந்தல் கோதை என்பன, பெண்பால்மயிரின்பெயர்.) ஈசன், வாஸவன், தேவர், மதி (அறிவு), வேலா - வடசொற்கள். ஈசன் - ஐசுவரியமுடையவன். போது - பூ; இங்குச் சிறப்பாய்த் தாமரைமலரைக் குறித்தது. திருமாலினது நாபித்தாமரைமலரில் தோன்றியதனால், பிரமனுக்குப் போதன் என்று பெயர். போதம் - அறிவு; வடசொல்; அதனையுடையவன் போதனென்று காரணப்பெயராக உரைத்தலுமொன்று. வாஸவன் என்ற பெயர் - அஷ்டவசுக்களுக்குத் தலைவனென்றும், ஐசுவரியமுடையவனென்றும் காரணப்பொருள்படும்; வசு - தேவர்களிலொருபகுப்பினரும், செல்வமுமாம். தேவர் - விண்ணுலகத்தில் வாழ்பவர். அந்தி - ஸந்த்யா என்ற வடசொல்லின் சிதைவு. காலைச்சந்திக்கும் மாலைச்சந்திக்கும் பொதுவான இது, இங்குச் சிறப்பாய் மாலைச்சந்தியின்மேல் நின்றது.

(கைம்மலையால் வேலைமதிக்கும் பெருமான் - "தானவரும்பருள்ளாய், ஈருருநின்று கடைந்தது" என்ற திருவரங்கத்துமாலையையும், "தாமரைக் கைந்நோவ, ஆழிகடைந்து"என்ற கம்பராமாயணத்தையுங் காண்க.) வேலை மதித்த வரலாற்றால், தன்சிரமம் பாராமல் தன்னைச் சரணமடைந்தாரைப் பரிபாலிக்கும் பகவானது கருணை வெளியாம். கைம்மலை யென்பதை முன் பின்னாகத்தொக்க உவமைத்தொகை யெனக்கொண்டு, கைம்மலையால் என்பதற்கு - மலைகள்போன்ற கைகள்கொண்டென்று கருத்துக்காண்க; தனது கைவசப்படுத்தின மந்தரகிரியால் என்று பொருள்கொள்ளுதலும் அமையும். பெருமான் - பெருமையையுடையவன்; மான் - பெயர்விகுதி. ஈற்றுஏகாரம்-

பிரிகிலே; அதனால், இத்திருப்பதி எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மற்றையெல்லாத் திவ்வியதேசங்களினும் மிகப்பாங்கான வாஸஸ்தாநமென்னுங்கருத்து அமையும்: அங்ஙனஞ்சிறப்புடையதாதல், புராணங்களினாலும் விளங்கும். (உ)

௩. வேங்கடமாலையவியாமதிவிளக்கேற்றியங்க
மாங்கடமாலையமாக்கிவைத்தோமவன்சேவடிக்கே
தீங்கடமாலைக்கவிபுனைந்தோமிதிற்சீரியதே
யாங்கடமாலையிராவதமேறியிருக்குமதே.

(இ-ள்.) அங்கம்ஆம்கடம்ஆலயம்ஆக்கி-உறுப்புக்களையுடையதான (எமது) உடம்பைத் திருக்கோயிலாகஅமைத்து, அவியா மதிவிளக்கு ஏற்றி-கெடாத அறிவாகிய திருவிளக்கை (அங்கு) ஏற்றி, வேங்கடம் மாலை வைத்தோம்-திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிறதிருமாலை (அவ்வுடம்பினுள் அந்தக்கரணமாகிற மனமாகிய கர்ப்பகிருகத்தில்) எழுந்தருளப்பண்ணி வைத்தோம்; தீங்கு அட - (எமது) பிறவித்துன்பங்களை (அப்பெருமான்) அழிக்குமாறு, அவன் சேஅடிக்கே கவி மாலை புனைந்தோம் - அப்பரமனுடைய செவ்விய திருவடிகளிலே பாமாலையாகியபூமாலையைத்தொடுத்துச்சாத்தினோம்; யாம்—, கடம் மால் ஐயிராவதம் ஏறி இருக்கும் அது - மதமயக்கத்தையுடைய ஐராவதமென்னுந் தேவலோகத்துஅரசயானையின்மேல் (தேவராசனாய்) ஏறி வீற்றிருக்கப் பெறுவோமாயின் அதுவும், இதின் சீரியதே - இதைக்காட்டிலும் சிறந்ததாமோ? [ஆகாது என்றபடி]; (எ - று.)—ஏ - ஈற்றசை.

பேரின்பத்துக்கு இடமாகுமாறு எம்பெருமானை மனத்திற்கொண்டு தியானித்து அறிவுமுழுதையும் அவன்பக்கலிலேசெலுத்தி அவனதுசொரூபத்தையுணர்ந்து அவன்மேற்பாமாலைபாடி இங்ஙனம் எல்லாக்காரணங்களாலும் அவனைவழிபடுதலினும், சிற்றின்பத்துக்கேஇடமான தேவேந்திரபதவி சிறிதும்சிறவாது என்பதாம். 'இதின் சீரியதே' என்பதற்கு - இதுபோலச் சிறந்ததாகாதென்றும் பொருள்கொள்ளலாம். 'இன்' என்ற ஐந்தனுருபு - முந்தினஉரைக்கு உறழ்பொருவென்னும்எல்லைப்பொருளதும், இவ்வுரைக்கு உவமப்பொருவென்னும் ஒப்புப்பொருளதுமாம். இங்ஙனங்கூறியதனால், பகவத்கைங்கரியத்தில்இவ்வாசிரியர்க்கு அன்புமிக்கிருத்தல் நன்குவிளங்கும்.

'அன்பேதகளியா ஆர்வமேநெய்யாக, இன்புருகுசிந்தை யிடுதிரியா—நன்புருகி, ஞானச்சுடர்விளக்கேற்றினேன் நாரணற்கு", "மார்வமென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தைநாட்டி", "புனையுங் கண்ணி யெனதுடைய வாசகஞ்செய்மாலையே," "செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன்சொன்மாலை" என்ற ஆழ்வார்களருளிச்செயல்களை அடியொற்றி, 'அங்கமாங்கடமாலயமாக்கி அவியாமதிவிளக்கேற்றி வேங்கடமாலைவைத்தோம், அவன்சேவடிக்கே மாலைக்கவிபுனைந்தோம்' என்றார். காற்றினால் அவியுந் தன்மையதாய்ப் புறவிருளையே யொழிக்கின்ற சாதாரண விளக்கினும் எவ்வாற்றாலும்நிலைகுலையாது அகவிருளையொழிக்கிற ஞானமா

கிய சுடர்விளக்கிற்கு உள்ள விசேடந் தோன்ற, 'அவியாமதிவிளக்கு' எனப் பட்டது; வேற்றுமையணி. அங்கமாங்கடமாலயமாக்கி—முகம் கை கால் முதலிய அவயவங்களோடுகூடிய உடம்பைக் கோபுரம் மதில் வாயில் முத லிய உறுப்புக்களோடுகூடிய கோயிலாகவும், அவ்வுடம்பின் அகத்துறுப்பா கிய மனத்தை அக்கோயிலினுள்ளே எம்பெருமானை யெழுந்தருளப்பண்ணு மிடமாகவுங் கருதுக. முதல்மூன்றடிகள், உருவகவணியின்பாற்படும்.

விளக்கு - (பொருள்களை) விளங்கச்செய்வது என்று பொருள்படுங் காரணக்குறி. அங்கம், கடம், ஆலயம், மாலா, ஐராவதம் - வடசொற்கள். கடம் - பானை; பலவகைப்பண்டங்கள் நிறைந்ததொரு கொள்கலம் போலு தலால், கடமென்பது - உடம்புக்கு உவமையாகுபெயராக வழங்கும். ஆலே யம், ஐயிராவதம் என்ற போலிகள், திரிபுநயம்பற்றியன. ஐராவதம்-இந்திர னது வெள்ளையானை; நான்கு தந்தங்களையுடையது. வைத்தோம், புனைந் தோம், யாம் - தனித்தன்மைப்பன்மைகள். சேவடி - செம்மை + அடி. திரு வடி சிவந்திருத்தல், உத்தமவிலக்கணம். சீரியதே, ஏ - எதிர்மறை. மால் - மயக்கம். (௩)

௪. இருக்காரணஞ்சொல்லுமெப்பொருளின்பமுமெப்பொருட்குங்
கருக்காரணமுநற்றாயுநற்றந்தையுங்கஞ்சச்செல்வப்
பெருக்காரணங்கின்றலைவனுமாதிப்பெருந்தெய்வமு
மருக்காரணவும்பொழில்வடவேங்கடமாயவனே.

(இ - ள்.) இருக்கு ஆரணம் சொல்லும் - ருக் முதலிய வேதங்களாற் சொல்லப்படுகின்ற, எ பொருள் இன்பமும் - எல்லாவகைப் பொருள்களும் எல்லாவகையானந்தங்களும், எ பொருட்கும் கரு காரணமும் - எவ்வகைப் பொருள்களுக்கும் உற்பத்திகாரணமும், நல் தாயும் - நல்ல தாயும், நல் தந் தையும் - நல்ல தந்தையும், கஞ்சம் செல்வம்பெருக்கு ஆர் அணங்கின் தலை வனும் - செந்தாமரைமலரில் வீற்றிருப்பவளும் ஐசுவரியசமிருத்தி நிரம்பிய வளுமான திருமகளின் கணவனும், ஆதி பெரு தெய்வமும் - (எல்லாத்தெய் வங்கட்கும்) முதன்மையான பெருமையையுடைய தெய்வமும், (ஆகியஅனை த்தும்), மரு கார் அணவும் பொழில் வட வேங்கடம் மாயவனே - வாசனை யை யுடையனவும் மேகமண்டலத்தை யளாவுவனவு மான சோலைகளை யுடைய வடக்கின்கண் உள்ள திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிற திருமாலேயாம்; (எ - று.)

நான்குவேதங்களுள் இருக்குவேதம் முதல தாகையால், அதனைத் தலை மையாக எடுத்து 'இருக்காரணம்' என்றார். 'மெய்ப்பொருளின்பமும்' என்ற பாடத்துக்கு - உண்மைப் பொருளாகிய ஆநந்தஸ்வரூபமு மென்று பொருள்காண்க. 'எப்பொருள்' என்பதில், எகரவினா - எஞ்சாமைப்பொரு ளது; உம்மை - முற்றும்மை. நற்றாய் - "தாயொக்கு மன்பின்" என்ற படி மக்களிடத்து அன்பிற்சிறந்த தாய். நற்றந்தை - "உயர்மிக்க தந்தை," "சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே" என்றபடி பிள்ளையின் உயர்ச்சி

மிருதிக்குக்காரணமான தந்தை. தம்மக்கட்கு ஆவன வெல்லாவற்றையும் அன்போடுசெய்துமுடித்து மகிழ்கிற தாய்தந்தையர்போல, எம்பெருமான் தன்அடியார்க்கு ஆவனவெல்லாம் அன்போடுசெய்து மகிழ்வனென்க. திருமழிசைப்பிரான் "அத்தனாகி யன்னையாகி" என்றாற்போல, 'நற்றாயு நற்றந்தையும் மாயவனே' என்றார். 'ஹிதமேப்ரவர்த்திப்பிக்கும் பிதாவுமாய், ப்ரியமேப்ரவர்த்திப்பிக்கும் மாதாவுமாய், பிதாசெய்யும்உபகாரத்தை மாதாசெய்யமாட்டாள்; மாதாசெய்யும் உபகாரத்தைப் பிதா செய்யமாட்டான்: இரண்டுவகைப்பட்ட உபகாரத்தையும் அவன்தானே செய்யவல்லனாயிருக்கை; "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதாச மாதவ:" என்றும், "உலகுக்கோர் முந்தைத்தாய்தந்தை" என்றும் சொல்லக்கடவதிறே' என்ற வியாக்கியானவாக்கியங்கள் இங்கு நோக்கத்தக்கன. இது, ஸர்வவித பந்துவுமாயிருத்தற்கு உபலக்ஷணம்; "எம்பிரானெந்தை யென்னுடைச்சுற்றம்" என்றார் திருமங்கையாழ்வார்.

ருக், சர்ப்பம், சஞ்ஜம், தைவம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. ஆரணம், காரணம், ஆதி - வடசொற்கள். கஞ்சம் - நீரில் தோன்றுவது: கம்-நீர். காரணவும்பொழில் - சோலையின் உயர்வைவிளக்குந் தொடர்புயர்வு நவிற்சியணி. 'வடவேங்கடம்'என்றது, இயற்கைவிளக்கவந்த அடைமொழி புணர்த்தது; அடைமொழி இனம்விலக்கவந்ததன்று. வேங்கடம் தமிழ்நாட்டிற்கு வடவெல்லையென்பதுதோன்ற 'வடவேங்கடம்' என்றதாகவுங்கொள்ளலாம். மாயவன் - மாயையை யுடையவன்; மாயையாவது - செய்தற்கு அரியனசெய்யுந் திறம்: பிரபஞ்சகாரணமான மூலப்பிரகிருதியுமாம்; ஆச்சரியகரமான குணங்களுஞ் செயல்களு மென்னலுமாம். (ச)

ரு. மாயவன் கண்ணன் மணிவண்ணன் கேசவன் மண்ணும்விண்ணுந்
தாயவன் கண்ணன் கமலமொப்பான் சரத்தாலிலங்கைத்
தீயவன் கண்ணன் சிரமறுத்தான் றிருவேங்கடத்துத்
தூயவன் கண்ணன் புடையார்க்குவைகுந்தந் தூரமன்றே.

(இ - ள்.) மாயவன் - மாயையையுடையவனும், கண்ணன் - கிருஷ்ணாவதாரஞ்செய்தவனும், மணிவண்ணன் - நீலமணிபோன்ற நிறமுள்ளவனும், கேசவன் - கேசவனென்னுந் திருநாமமுடையவனும், மண்ணும் விண்ணும் தாயவன் - நிலவுலகத்தையும் மேலுலகத்தையும் அளந்தவனும், கண் நல் கமலம் ஒப்பான் - கண்கள் நல்லசெந்தாமரைமலர்போ லிருக்கப்பெற்றவனும், இலங்கை தீய வன்கண்ணன் சிரம் சரத்தால் அறுத்தான் - இலங்காபுரியில் வாழ்ந்த கொடிய தறுகண்மை யுடையவனை இராவணனது தலைகளைத் தனது அம்பினால் துணித்திட்டவனுமாகிய, திருவேங்கடத்து தூயவன் கண் - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிற பரிசுத்தமூர்த்தியான எம்பெருமான்பக்கல், அன்பு உடையார்க்கு - பக்திப்பெருமை யுடையவர்களான பாகவதர்களுக்கு, வைகுந்தம் - முத்தியுலகமாகிய ஸ்ரீவைகுண்டமெனப்படுகிற பரமபதம், தூரம் அன்று - சேய்மையிலுள்ளதன்று [மிக்கசமீபத்திலுள்ள தென்றபடி]; (எ - று.)—ஈற்றுஎகாரம் - தேற்றம்.

திருவேங்கடமுடையானிடம் பக்திசெய்தொழுகுவார்க்கு மிகஎளிதில் தவறாத முத்தி சித்திக்கு மென்பதாம். 'மாயவன்' முதலியன - ஒருபொருளின்மேல்வந்த பலபெயர்கள். கண்ணன் - க்ருஷ்ணன் என்ற வடசொல்லின் சிதைவு; அப்பெயர் - கருநிறமுடையவ னென்றும், (யாவர்மனத்தையும்)இழுப்பவ னென்றும், (எல்லாவற்றையுஞ்)செய்பவ னென்றும், மற்றுஞ் சிலவகையாகவும் பொருள்படும். மணிஎன்பது - நவமணிகட்கும் பொதுப் பெயராகவும்,நீலமணிக்குச் சிறப்புப்பெயராகவும் வழங்கும். வர்ணம் என்ற வடசொல், வண்ண மெனச் சிதைந்தது. கேசவன்என்ற திருநாமத்துக்கு- பிரமனையும் சிவனையும் தன் அங்கத்திற் கொண்டவ னென்றும் (க - பிரமன், ஈச - சிவன்), கேசியென்னும் அசுரனைக் கொன்றவ னென்றும், மயிர்முடி யழகுடையவ னென்றும் (கேசம் - மயிர்) பொருள்கொள்ளலாம். மண்ணும் விண்ணுந் தாவியது, திரிவிக்கிரமாவதாரத்தில். இவ்வாலாற்றால், கொடியவரை யடக்குதற்கு வேண்டிய தந்திரம் வல்லவ னென்றவாறு.

கண் நன்கமலமொப்பான் - புண்டரீகாக்ஷன். நன் கமலம் - நீர்வளம் மிக்க தடாகத்தில் அன்றுஅலர்ந்த செழித்த செந்தாமரைமலர். இலங்கையரசனாய் நல்லோர்க்கெல்லாம் பொல்லாங்குசெய்துவந்த இராவணனைத் திருமால் இராமாவதாரத்தில் தலைதுணித்து அழித்திட்டமை, பிரசித்தம். தாயவன்—தா - பகுதி; இதுவே தாவு என உகரம்பெற்று வழங்குவது; ய் - இடைநிலை, அ - சாரியை. வன்கண்மை - எதற்கும் தான் அஞ்சாமை; அனைவரையுந் தான் அஞ்சுவித்தல்; கண்ணோட்டமில்லாத கொடுந்தன்மை. லங்கா, சிரஸ், வைகுண்டம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. இலங்கை - கடல்சூழ்ந்த தீவு. தூரம் - வடசொல். (ரு)

சு. தூரவிரும்புண்டரிக்குமிக்காயத்தைச்சூழ்பிணிகா
ணேரவிரும்புண்டரர்க்கருள்வானெடுவேங்கடத்தா
னீரவிரும்புண்டரீகப்பொற்பாதங்களென்னுயிரைத்
தீரவிரும்புண்டநீராக்குமாறுள்ளஞ்சேர்ந்தனவே.

(இ - ள்.) நேர் அவிரும் புண்டரர்க்கு அருள்வான் -(குறைக்காகவன்றி) நேர்மையாகவிளங்குகிற திருமண்காப்பையுடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அருள்செய்பவனாகிய, நெடு வேங்கடத்தான் - நெடிய திருவேங்கடமலையிலெழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய, ஈரம் இரும் புண்டரீகம் பொன் பாதங்கள்-குளிர்ச்சியான பெரிய செந்தாமரையலர்போன்ற பொலிவுபெற்ற திருவடிகள்,—என் உயிரை - எனது உயிரை, தீர - முழுவதும், இரும்பு உண்ட நீர் ஆக்கும் ஆறு-(காய்ந்த) இரும்பு உட்கொண்ட நீர் போலாக்கும்படி[தம்மிடத்து லயப்படுத்தும்படி], உள்ளம் சேர்ந்தன - என் மனத்திற் சேர்ந்துவிட்டன; (ஆதலால்), புண் தரிக்கும் இ காயத்தை சூழ் பிணிகாள் - மாமிசத்தைக்கொண்ட (எனது) இந்த உடம்பைச சூழ்ந்துள்ள நோய்களே! தூரம் இரும் - (நீங்கள் என்உடலைவிட்டுத்) தூரத்திற் போய்ப் பிழையுங்கள்; (எ - று.)

நான் இடைவிடாது எம்பெருமானது திருவடிகளைத் தியானஞ்செய்யத்தொடங்கிக் கருமமனைத்துந் தொலையுமாறு அவனது கருணைக்கு இலக்காகிவிட்டேனாதலால் இனி என்னைக் கருமத்தினால்வருவனவான வியாதிகளால் ஒன்றும் நலிவுசெய்யமுடியாது என்ற துணிவுகொண்டு, நோய்களை விளித்து,நீங்கள் விரைந்தோடிப்போங்க ளென்று அச்சுறுத்திப்பேசுகிறார். “நெய்க்குடத்தைப்பற்றியேறுமெறும்புகள்போல் நிரந்தெங்கும், கைக்கொண்டுநிற்கின்றநோய்காள் காலம்பெறவுய்யப்போமின்,மெய்க்கொண்டுவந்து புகுந்து வேதப்பிரானார் கிடந்தார், பைக்கொண்டபாம்பணையோடும் பண்டன்று பட்டினங்காப்பே” என்பதுமுதலாகக்கூறும் ஆழ்வாரருளிச்செயலை அடியொற்றியது, இச்செய்யுள்; ‘வ்யாதிகளைப் பார்த்து, ‘பண்டைத்தேகமும் ஆத்மாவும் என்றிருக்கவேண்டா:அவன் உகந்தருளினநிலங்களிற்பண்ணும் விருப்பத்தையெல்லாம் என்தேகத்திலும் ஆத்மாவிலும் பண்ணிக்கொண்டு வந்துபுகுந்தான்; நீங்கள் உஜ்ஜீவிக்கவேண்டியிருந்தீராகில், போகப்பாருங்கோள்’ என்கிறார்’ என்ற வியாக்கியாநவாக்கியம் இங்குங் கொள்ளத்தக்கது. இந்நூலின் ௭௪ - ஆஞ் செய்யுளும் இப்பொருளுடையதே.

புண்டரம் - நெற்றிக்குறி. நேர் அவிரும் புண்டரம் - திர்யக்புண்டரமாகவன்றி ஊர்த்துவபுண்டரமாக மேல்நோக்கி யிடுந் திருமண்; அதனையுடையவர், ஸ்ரீவைஷ்ணவர்: “நீறுசெவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்” என்பது காண்க. இனி,‘நேரவிரும்புண்டரற்கு அருள்வான்’ என்று பாடங்கொண்டு, அதற்கு - (குறுக்காகவடிவம்அமையப்பெற்றிருத்தலால் திர்யக்என்றுகூறப்படுகிற விலங்கின்சாதிக்கு உரிய குணஞ்செயல்களைக் கொள்ளாது ராமலக்ஷ்மணரிடத்தும் சீதையினிடத்தும்) நேர்மையான குணஞ்செயல்களோடு ஒழுகிய கழுகாகிய சடாயுவுக்கு அருள்செய்தவனென்று உரைத்தலும் ஒன்று; புண்டரமென்பது கழுகென்னும் பொருளில் வருதலை “வரும்புண்டரம் வாளியின்மார்புருவிப், பெரும்புண்திறவாவகை பேருதிநீ, இரும்புண்டநீர்மீள்கினு மென்னுழையிற், கரும்புண்டசொல்மீள்கிலள் காணுதியால்” எனக் கம்பராமாயணத்திலுங் காண்க: “இருந்தபுண்டரமே கங்கம் எருவையே பவணையோடு, கருஞ்சிறை யுவண மைந்துங் கழுகென்ப சகுந்தமும் பேர்” என்ற நிகண்டும் நோக்கத்தக்கது.

விலங்கினமாகிய கழுகுசாதியில் தோன்றிய சடாயுவை ‘புண்டரன்’ என உயர்திணையாகக்கூறுதல் ஒக்குமோவெனின்,—உயர்திணை அஃறிணையென்ற பகுப்பிற்குக் காரணம் முறையே அறிவின் நிறைவும் குறைவுமேயாதலால், அவ்வறிவிற்குறைவின்றி ஐம்பொறியறிவோடு பகுத்தறிவையுங்கொண்டு மனிதர்போலவே தொழில்திறமமைந்த அருணபுத்திரனான தெய்வக்கழுகை உயர்திணையின்பாற்படுத்துதல் ஒக்குமென்க; வாநரசாதியாகிய அநுமான் வாலி சுக்கிரீவன் முதலியோரையும்,கரடியாகிய ஜாம்பவானையும், பறவையரசான கருடனையும் உயர்திணையாகவழங்குதல் காண்க. ‘புண்டரர்க்கு’ என்ற பாடத்துக்கும் உயர்வுப்பன்மையாக இப்பொருள்

கொள்ளலாம்; ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் சடாயு 'பெரியவுடையார்' என்று மேம்படுத்தி வழங்கப்படுவர்.

புண்டரீகமென்பது வெண்டாமரையின் பெயரென வடமொழி நிகண்டுகளிற் கூறப்பட்டிருப்பினும் அது இங்குத் திருமாலின் திருவடிகட்கு உவமையாகவந்ததனால், செந்தாமரையை யுணர்த்திற்று. திருவடிக்குத்தாமரைமலருவமை - செம்மை மென்மை யழகுகட்கு என்க. பழுக்கக்காய்ச்சிய இருமபில் நீரைவார்த்தால் அந்நீர் அவ்விரும்பிற்சென்று லயப்பட்டு மீண்டும் வெளிப்படாது; இது மீளாமைக்கு உவமைகூறப்படுதலே, மேற்காட்டிய "வரும்புண்டாம்" என்ற கம்பராமாயணச்செய்யுளின் பின்னிரண்டடிகளிலுங் காண்க; காய்ந்தஇரும்பு அக்காய்ச்சல்தீர நீரை முற்றும் உட்கொள்ளுதல்போல, எம்பெருமான் திருவடிகள் என்உயிரைத் தம்மிடத்துலயப்படுத்திக்கொள்ளுமாறு அன்போடு என்மனத்திற் சேர்ந்திட்டன வென்ற இது, "போரவிட்டிட் டென்னை நீ புறம்போக்கலுற்றாற் பின்னை யான், ஆரைக் கொண் டெத்தை யந்தோ எனதென்பதென் யானென்பதென், தீரவிரும் புண்டநீரதுபோல வென்னாருயிரை, யாரப்பருக வெனக் காராவமுதானாயே" என்ற திருவாய்மொழிப்பாசுரத்தை அடியொற்றியது.

தூர இரும் என்பது, "தூற்றுதே நூரவிடல்"என்றாற்போல நின்றது. இரும் - 'உம்'விகுதி பெற்ற ஏவற்பன்மைமுற்று. 'புண்தரிக்கும்' என்ற அடைமொழி, காயத்தின்அசுத்தியை விளக்கும். காயம், புண்டரம், பாதம் - வடசொற்கள். அருள்வான் என்பதில், வகரவிடைநிலை-காலமுணர்த்தாது தன்மையுணர்த்திற்று. நெடுமை - உயர்ச்சி. (சு)

எ. சேர்ந்துகவிக்கும்முடிகவித்தாய் சிறியேனிதயஞ்
சார்ந்துகவிக்கும்வரமளித்தாய் கொண்டறண்டலைமே
லூர்ந்துகவிக்கும்வடமலையாய் பஞ்சொழுக்கியபால்
வார்ந்துகவிக்கும்பொழுதிலஞ் சேலென் றுவந்தருளே.

(இ - ள்.) சேர்ந்து-(கிட்கிந்தைநகரத்தைச்)சார்ந்து [அல்லது அடுத்து நண்புபூண்டு], கவிக்கும் - குரங்கினமான சுக்கிரீவனுக்கும், முடி கவித்தாய் - மகுடாபிஷேகஞ் செய்தவனே! சிறியேன் இதயம் சார்ந்து - (அறிவொழுக்கங்களிற்) சிறியவனான எனது மனத்திற் சேர்ந்துநின்று, உகவிக்கும் வரம் அளித்தாய் - மகிழ்விக்கின்ற வரங்களை (எனக்கு)க் கொடுத்தருள்பவனே! கொண்டல் தண்டலைமேல் ஊர்ந்து கவிக்கும் - மேகங்கள் சோலைகளின்மேல் தவழ்ந்து கவிந்துகொள்ளப்பெற்ற, வட மலையாய் - வடக்கிலுள்ள திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவனே!—பஞ்சு ஒழுக்கிய பால் வார்ந்து உக - பஞ்சைப் பாலில்நனைத்து அதுகொண்டுபிழிந்து ஒழுகவிட்ட பாலும் (கண்டம்அடைத்ததனால் உள்ளேயிறங்கிச்செல்லமாட்டாது கடைவாயினின்று) வழிந்துபெருக, விக்கும் பொழுதில்-விக்கலெடுக்கின்ற அந்திமதசை (எனக்கு) நேரும்பொழுதில், அஞ்சேல் என்று வந்து அருள் - 'அஞ்சாதே' என்று (அபயவார்த்தை)சொல்லிக்கொண்டு (என்முன்)எழுந்தருளி (எனக்கு) நற்கதியருள்வாய்; (எ - று.)

"எனைக்கைக்கொள் உடல், கைக்குஞ்சரமதனைசயி லஞ்சேலென்றென் கண்முன்வந்தே," "பொறியைந்தழியுமக்காலத் திரங்கா யரங்கா வடியே னுன்னடைக்கலமே" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். "எய்ப்பென்னைவந்துநலியும்போ தங்கேது நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக்கிப்போதேசொல்லிவைத்தே னரங்கத்தரவணைப்பள்ளியானே," "சாமிடத்தென்னைக் குறிக்கொள்கண்டாய் சங்கொடு சக்கரமேந்தினனே" என்ற பெரியாழ்வார்திருமொழி இதற்கு மூலம். பஞ்சுஒழுக்கியபால் வார்ந்துஉக—"பா லுண்கடைவாய்படுமுன்னே"என்றார் பட்டணத்துப்பிள்ளையும்; இதனை "வாயிலட்டிய கஞ்சியும் மீண்டே, கடைவழி வார" என்ற பெரியாழ்வாரருளிச்செயலோடொப்பிடுக. விக்கும்பொழுதில்—"நாச்செற்று விக்குள்மேல்வாராமுன்" என்றார் திருவள்ளுவரும்.

கவி-கபி யென்ற வடசொல்லின் விகாரம். கவிக்கும் என்ற உம்மை - இழிவுசிறப்பு; எதிர்காலத்தழுவியஎச்சமாகக்கொண்டு, பின்பு விபீஷணனுக்கு இலங்கையில்முடிசூட்டியதையும் அமைத்துக்கொள்ளலாம். சேர்ந்து கவிக்கும் முடி கவித்தாய் என்பதிலுள்ள சொல்நயங் காண்க; "கவித்தானைமன்னற்கு நட்பாய் முடிகவித்தான்" என்பர் அழகரந்தாதியிலும். கவிக்கும் முடி, மகரவொற்று - விரித்தல்விகாரம். இதயம் - ஹ்ருதயம் என்ற வடசொல்லின் சிதைவு. உகவித்தல் - உகத்தல் என்பதன் பிறவினை; வி - பிறவினைவிகுதி. இரண்டாமடியில், கவிக்கும் என்று பதம்பிரித்து, நின்மேற் கவிசொல்லுகைக்கும் வரங்கொடுத்தா யென்று உரைப்பாருமுளர். கொண்டல் - நீர்கொண்டமேகம்; தொழிலாகுபெயர். தண்டலையென்பது - தண்தலை என்று பிரிந்து, குளிர்ச்சியான இடத்தையுடையது என்று பொருள்படும்; பண்புத்தொகையன்மொழி. கவித்தல் - மூடுதல். (எ)

அ. வந்திக்கவந்தனைகொள்ளென் றுகந்தனுமாதவருஞ்
சிந்திக்கவந்தனை வேங்கடநாத பல்சீவன்றின்னு
முந்திக்கவந்தனைச்செற்றுயுனக்குரித்தாயபின்னும்
புந்திக்கவந்தனைச்செய்தைவர்வேட்கைபொருமென்னையே.

(இ - ள்.) 'வந்திக்க - (அடியோம்) வணங்க, வந்தனை கொள் - அவ்வணக்கத்தை அங்கீகரிப்பாய்', என்று - என்று பிரார்த்தித்து, கந்தனும் - முருகக்கடவுளும், மாதவரும் - பெருந்தவமுடையவரான முனிவர்களும், சிந்திக்க - தியானிக்க, வந்தனை-(அவர்கட்குப்) பிரதியக்ஷமாக வந்துதோன்றினாய்; வேங்கடம் நாத - திருவேங்கடமலைக்குத் தலைவனே! பல் சீவன் தின்னும் உந்தி - பலபிராணிகளையுந்தின்கிற வயிற்றையுடைய, கவந்தனை - கவந்தனென்னும் அரக்கனை, செற்றாய் - கொன்றவனே! உனக்கு உரித்து ஆய பின்னும் - (எனது உயிர்) உனக்குஉரியதானபின்பும், ஐவர் வேட்கை - பஞ்சஇந்திரியங்களின்சம்பந்தமான ஆசை, புந்திக்கு அவம்தனை செய்து - (எனது)அறிவுக்கு அபாயத்தைச்செய்து, என்னை பொரும்-என்னைத்தாக்கி வருத்தும்: [இது என்ன அநீதி! என்றபடி]; (எ - று.)—ஏற்றுஏகாரம் - இரக்கத்தைக் காட்டும்.

என்னை என்பதற்கு-என்ன தகுதியின்மை யென்று பொருள்கொண்டு, பொரும் என்பதற்கு 'என்னை' என்ற செயப்படுபொருள் வருவித்தலு மொன்று. யான் உனக்கு அடிமைப்பட்டபின்பும் என் அறிவைக்கெடுத்து என்னை ஐம்பொறியாசை நலியலாமோ? நலியாதபடி அருள்செய்யவேண்டும் என்பது குறிப்பு; "உண்டுகேட்டுற்றுமோந்துப்பார்க்கு மைவர்க்கே, தொண்டுபடலாமோ வுன்தொண்டனேன்" என்பர் நூற்றெட்டுத்திருப்பதியந்தாதியிலும். மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளை 'ஐவர்' என உயர்திணையாக்கூறியது, இழிப்புப்பற்றிய திணைவழுவமைதி; தொல்காப்பியவுரையில் நச்சினார்க்கினியர் "தாம்வந்தார் தொண்டனார்' என்பது, உயர்சொல் குறிப்புநிலையின் இழிபு விளக்கிற்று' என்றது, இங்கு உணரத்தக்கது. ஐவர்வேட்கை - ஐம்பொறிகளின்வழியாகச் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புலன்களையும் வேண்டியபடியெல்லாம் அநுபவிக்கவிரும்பும் ஆசை.

கவந்தன் - தநுவென்னும் யக்ஷனது மகன்; இவன் - ஸ்தூலசிரஸ்என்னும்முனிவனது சாபத்தால் அரக்கனாகிப் பிரமனருளால் தீர்க்காயுள்பெற்றுத் தேவேந்திரனோடெதிர்த்து அவனதுவச்சிராயுதத்தாற் புடைபட்டுத் தனது தலை வயிற்றிலழுந்தியமைபற்றிக் கவந்தம்போலுந் தோற்றமுடையனானதனால், இப்பெயர் பெற்றான். கபந்தமென்ற வடசொல்லுக்கு - தலையற்றதும் தொழிலுடன்கூடியதுமான உடலென்பது பொருள்.

வந்தரா, ஸ்கந்தன், நாதன், ஜீவன்-வடசொற்கள். புந்தி-புத்தியென்ற வடசொல்லின் மெலித்தல்விகாரம். கொள்ளுதல் - ஏற்றுக்கொள்ளுதல். உந்தி - நாபி; வயிற்றுக்கு இலக்கணை. உனக்கு உரித்தாயபின்னும், உம் - உயர்வுசிறப்பு. அவம் - தீங்கு; அதன்மேல், தன் - சாரியை, ஐ - இரண்டனுருபு. (அ)

[தலைவனைப்பிரிந்துவருந்தி மாலைப்பொழுதுக்கும் அன்றிற்குரலுக்கும் ஆற்றாத தலைவிக்குத் தோழி இரங்கல்.]

கூ. பொருதரங்கத்தும்வடத்துமனந்தபுரத்துமன்பர்
கருதரங்கத்துந்துயில்வேங்கடவ கண்பார்த்தருள்வாய்
நிருதரங்கத்துநிறம்போல்வருமந்திநேரத்தன்றி
லொருதரங்கத்தும்பொழுதும்பொறுளென்னொருவல்லியே.

(இ - ள்.) பொரு தரங்கத்தும் - மோதுகின்ற அலைகளையுடைய திருப்பாற்கடலிலும், வடத்தும் - ஆலிலையிலும், அனந்தபுரத்தும்-திருவனந்தபுரமென்னுந் திவ்வியதேசத்திலும், அன்பர் கருது அரங்கத்தும் - அடியார்கள் தியானிக்கின்ற திருவரங்கமென்னுந் திருப்பதியிலும், துயில் - பள்ளிகொண்டு யோகநித்திரை செய்தருள்கின்ற, வேங்கடவ - திருவேங்கடமுடையானே!—நிருதர் அங்கத்து நிறம் போல் வரும்-இராக்கதர்களுடையஉடம்பின்நிறம்போல (இருண்டு கறுத்துப் பயங்கரமாய்) வருகிற, அந்தி நேரத்து - அந்திமாலைப்பொழுதில், அன்றில் ஒரு தரம் கத்தும் பொழுதும் - அன்றிற்

பறவை ஒருகரம்சுத்துகிற பொழுதளவேனும், என் ஒரு வல்லி பொறுள் - என்னுடைய தனித்த பூங்கொடிபோன்ற இம்மங்கை சகிக்கமாட்டாள்; (ஆதலால்), கண்பார்த்து அருள்வாய்-(இவள்பக்கல்) கடாக்ஷம்வைத்து அருள் செய்வாயாக; (எ - று.)

கீழ் எட்டுப்பாசுரங்களில் திருவேங்கடமுடையானுடைய பலவகைப் பிரபாவங்களைக் கூறி அப்பெருமானது திவ்யசௌந்தரியத்தில் ஈடுபட்டு அவனது உத்தமபுருஷத்தன்மையைக் கருதியதனாலே, அப்பொழுதே அவனைக்கிட்டவேண்டும்படியான ஆசை யுண்டாய்,அங்ஙனம் அவனைக்கிட்டப் பெறாமையாலே, ஐயங்கார் ஆற்றாமைமீதூர்ந்து தளர்ந்தார்; அத்தளர்ச்சியாலே தாமான தன்மை குலைந்து ஆண்பெண்ணும்படியான நிலைமை தோன்றி ஒருபிராட்டிநிலையை யடைந்தார்; ஆண் பெண்ணுதல் கூடுமோ வெனில்,—"கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினாய்," "வாராக வாமனனே யரங்கா வட்டநேமிவலவா ராகவா உன்வடிவு கண்டால் மன்மதனும் மடவாராக ஆதரஞ்செய்வன்" என்பவாதலாலே, இதுகூடும்: தண்டகாரணியவாசிகளான முனிவர்கள் இராமபிரானது சௌந்தரியாதிசயத்தில் ஈடுபட்டுத் தாம் பெண்தன்மையைப்பெறவிரும்பி மற்றொருபிறப்பில் ஆயர்மங்கையராய்க் கண்ணனைக் கூடினரென்ற ஐதிஹ்யமும் உணர்க. "கண்ணனுக்கே யாமது காமம் அறம்பொருள்வீ டிதற்கென்றுரைத்தான், வாமனன் சீலன் இராமானுசன் இந்த மண்மிசையே" என்பதன் பொருளும் அறியற்பாலது. ("பெண்டிரும் ஆண்மைவெஃகிப் பேதுறு முலையினாள்,"⋯"வாண்மதர் மழைக்கணோக்கி..........ஆண்விருப்புற்று நின்றார் அவ்வனைத்தோளினானே" எனப் பெண் ஆணாதும் இடமும் உண்டு.) அங்ஙனம் ஆண் பெண்ணாகிலும் சாதாரணப்பெண்மையையேயன்றி எம்பெருமானுக்கு உரியவளாகும் ஒருபிராட்டியின் நிலைமையை அடையுமாறு எங்ஙனமெனில்,—பரமாத்மாவினது தலைமையும், ஜீவாத்மாவினது அடிமையும், ஜீவாத்மா பரமாத்மாவுக்கே உரியதாயிருக்கையும், புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்குமுன் உலகமுழுவதும் பெண்தன்மையதாதலும்,ஜீவாத்மாவினது ஸ்வாதந்திரியமின்மையும்,பாரதந்திரியமும், தாம் எம்பெருமானது சேர்க்கையால் இன்பத்தையும் பிரிவினால் துன்பத்தையும் அடைதலும், அவனையே தாம் கரணங்களெல்லாவற்றாலும் அநுபவித்து ஆனந்தித்தலும் முதலிய காரணங்களால், தம்மைப் பிராட்டிமாரோடொக்கச் சொல்லத் தட்டில்லை. தோழிநிலைமையும் தாயார்நிலைமையும் முதலியன ஆகிறபடி எங்ஙனேயென்னில்,—தாம் விரும்பிய பொருளின் வரம்பின்மையால் அங்ஙனமாகு மென்க.

தோத்திரப்பிரபந்தங்களில் அகப்பொருட்கிளவித்துறைகளை இடையிடையேகூறுதல் கவிசமயமாதலை இலக்கியங்கள்கொண்டு உணர்க. சிருங்காரசப்பிரதானமான அகப்பொருட்கிளவித்துறைகளை ஞானநூலாகிய தோத்திரப்பிரபந்தங்களிற்கூறுதற்குக் காரணம், கடுத்தின்னாதானைக் கட்டி பூசிக் கடுத்தின்பிப்பார் போல, சிற்றின்பங்கூறும்வகையாற் பேரின்பத்

லைதக் காட்டி நாட்டுசெல் என்பர். இங்ஙனம் வெளிப்படைப்பொருளால் அந்யாபதேசமாகக்கூறுகிற சிற்றின்பத்துறைச்செய்யுள்கட்கெல்லாம் ஸ்வாபதேசமாகப் பேரின்பத்தின்பாற்படுத்தும் உள்ளுறைபொருள் உண்டென்பதையும் உணர்க. அன்றியும், இங்குக்கூறியது, உலகவாழ்க்கைச் சிற்றின்பமன்று: "நான்கினுங் கண்ணனுக்கே ஆமது காமம்" என்றபடி எம்பெருமானைச் சேரவேண்டுமென்று அவன்பக்கலிலேயுண்டாகின்ற அபேக்ஷையையே கூறியது. "கோவிந்தா எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்தன்னோடு, உற்றோமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம், மற்றை நங்காமங்கள் மாற்று" என்றபடி லோகநாயகனுடைய சேர்க்கையை அபேக்ஷிக்கின்ற பேரின்பக்காதல் வேதாந்தநிர்ணயத்தின்படி அன்புசெலுத்தவேண்டிய இடத்தில் அன்புசெலுத்திய தாதலால், சிற்றின்பக்காதல்போலன்றி, சகலபாபநிவ்ருத்திக்கும் வீடுபேற்றுக்குமே காரணமாம். கண்ணபிரான்பக்கற்கொண்ட காமத்தால் கோபஸ்திரீகள் முத்திபெற்றனரென்று புராணங்கூறுதலுங் காண்க.

ஓர்உத்தமபுருஷன் பரிவாரத்துடன் வேட்டையாடுதற்குப் புறப்பட்டு வனத்துக்குச் சென்றவனாய், ஓர்உத்தமகன்னிகையும் தோழியருடன் பூக்கொய்துவிளையாடுதற்கென்று பூஞ்சோலையிற் சேர்ந்தவளவிலே, ஒவ்வொரு வியாஜத்தால் தோழியர் பிரிய அக்கன்னிகை அங்குத் தனித்துநின்ற சமயத்திலே, ஒவ்வொருவியாஜத்தாற் பரிவாரங்கள் பிரியத் தனிப்பட்டவனாய் அப்புருஷன் அங்குவந்துசேர, இருவரும் ஊழ்வினைவசத்தால் இங்ஙனம் தற்செயலாய் ஓரிடத்திலே சந்தித்து ஒருவரையொருவர் கண்டு காதல்கொண்டு காந்தருவவிவாகக்கிரமத்தாற் கூடி உடனே பிரிய, பின்பு மற்றுஞ்சில களவுப்புணர்ச்சிக்குஉரிய வகைகளால் அத்தலைமகனது கூட்டுறவைப் பெற்று, பிறகு பிரிந்து, அப்பிரிந்தநிலையிலே பிரிவுத்துயரையாற்றாமல் விரகதாபத்தால் வருந்துகிற தலைமகளது தளர்ச்சிநிலையைக் கண்ட தோழி தானுந் தளர்ந்து பாவனையால் தலைமகனை எதிரிற்கொண்டு முன்னிலைப்படுத்தித் தன்னிலேயுரைத்தது, இது. அன்றி, தோழி தலைமகனை எதிர்ப்பட்டுத் தலைமகளது ஆற்றாமையை அவனுக்குக்கூறியுணர்த்துவதெனினுமாம். இதனை, மாலைப்பொழுதுகண்டு இரங்கிய செவிலித்தாயின் வார்த்தையாக உரைத்தலும் ஒன்று

அன்றிலென்பது, ஒருபறவை. அது,எப்பொழுதும் ஆணும்பெண்ணும் இணைபிரியாது நிற்கும். கணப்பொழுது ஒன்றை ஒன்று விட்டுப்பிரிந்தாலும் அத்துயரத்தைப்பொறாமல் ஒன்றையொன்று இரண்டுமூன்றுதரம் கத்திக் கூவி அதன்பின்பும் தன்துணையைக் கூடாவிடின் உடனே இறந்துபடும். இதனை வடநூலார் க்ரௌஞ்சம் என்பர். எப்பொழுதும் இணையாகவுள்ள அந்த அன்றிற்பறவையும், அது இருட்பொழுதிற் பார்வைகுறைந்து துணையையிழந்து நலிந்து எழுந்து பறந்து வருந்துதலும், ஆணும்பெண்ணுமான அன்றில் இணைபிரியாமல் நெருங்கி ஒன்றோடொன்று வாயலகைக் கோத்துக்கொண்டு உறங்கும்பொழுது அவ்வுறக்கத்திலே வாயலகு தன்னில்நெகிழ்ந்தவளவிலே துயிலுணர்ந்து அப்பிரிவைப்பொறாமல் மெலிந்து பெருந்

தொனியாகக்கத்துகிற மிகஇரங்கத்தக்க சிறுகுரலும் காமோத்தீபகமாய்ப் பிரிவாற்றாமைத்துயரை வளர்த்துப் பிரிந்தகாமுகரை வருத்து மென்றல், கவிமரபு. மாலைப்பொழுது கலவிக்குஉரிய காலமான இரவின் தொடக்க மாதலால், அதுவும் பிரிந்தார்க்குத் துயர்க்கு ஏதுவாம்.

கவலையின்றிப் பலவிடத்தும் இனிதுகண்ணுறங்குகிற நீ இவ்விளமகள் துயில்பெறாது வருந்துதலை மாற்றவேண்டாவோ?என்ற குறிப்புத் தோன்ற 'பொருதரங்கத்தும் வடத்தும் அனந்தபுரத்தும் அன்பர்கருதரங்கத்தும் துயில் வேங்கடவ கண்பார்த்தருள்வாய்'என்றாள். கண்பார்த்தருளல் - கண்ணோட்டங்கொண்டு மீளவும்வந்து இவளை வெளிப்படையாகமணஞ்செய்து கொள்ளுதல். 'ஒரு' என்றது - தனிமையையும், 'வல்லி' என்றது - துயர் பொறுக்கமாட்டாத மெல்லியலா ளென்பதையுங் காட்டும். ஆலிலையிற்கண் வளர்தல், பிரளயப்பெருங்கடலில். திருவனந்தபுரம்-மலைநாட்டுத்திருப்பதி பதின்மூன்றில் ஒன்று. அரங்கம்-சோழநாட்டுத்திருப்பதிநாற்பதில் ஒன்று; நூற்றெட்டுத்திவ்வியதேசங்களுள் தலைமைபூண்டது.

தரங்கம், வடம், அநந்தபுரம், ரங்கம், அங்கம், வல்லீ - வடசொற்கள். நிருதர் - நைருதரென்ற வடசொல்லின் விகாரம்; நிருருதியென்ற தென் மேற்குத்திக்குப்பாலகனது மரபின ரென்பது பொருள். 'பொரு தரங்கம்' என்பதை அடையடுத்தசினையாகுபெய ரென்றாவது, வினைத்தொகையன் மொழி யென்றாவது கொள்க. வடம் என்ற ஆலமரத்தின் பெயர் - அதன் இலைக்கு முதலாகுபெயர். அரங்குஎன்ற சொல்லுக்கு உள்ளிடமென்று ஒரு பொருளுள்ளதனால், 'அன்பர்கருதரங்கத்து' என்பதற்கு-மெய்யன்புடைய ரான அடியார்கள் தியானிக்கின்ற மனத்திலும் என்றும் பொருள்கொள்ள லாம். நான்காமடியில், உம் - இழிவுசிறப்பு. வல்லி - கொடி; பெண்ணுக்கு உவமையாகுபெயர்: மெல்லியதாய் ஒல்கியொசியும் வடிவில் உவமம். 'கண்பா ர்த்தருளாய்' என்பதும் பாடம்.

திருவேங்கடமுடையான் ஒருகால் ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்கானபொழுதே அவனைக்கிட்டி முத்தியின்பமனுபவிக்கும்படியான ஆசைகொண்ட அவரை அப்பெருமான் அப்பொழுதே சேர்த்துக்கொள் ளாது மறைய, அதனாலுண்டான துயரத்தால் ஐயங்கார் லௌகிகபதார்த் தங்களைக்குறித்து வருந்த, அதுகண்ட அன்பர்கள் அவருடைய அத்தன்மை யை எம்பெருமான்பக்கல் விண்ணப்பஞ்செய்து, இனி இவரை வருந்தாத படி விரைவிற்சேர்த்துக்கொள்ளவேண்டு மென்று பிரார்த்தித்தல், இதற்கு உள்ளுறைபொருள்; விவரம் கேட்டுஉணர்க. (கூ)

[தலைவனைப்பிரிந்த தலைவி கடலோடு புலம்பல்.]

கo. ஒருமாதவனியொருமாதுசெல்வியுடனுறைய
வருமாதவனின்மகுடம்வில்வீசவடமலைமேற்
கருமாதவன்கண்ணனின்பாற்றிருநெடுங்கண்வளர்கைக்
கருமாதவமென்னசெய்தாய் பணியெனக்கம்புதியே.

(இ - ள்.) அம்புதியே-கடலே!—ஒரு மாது அவனி - ஒருமனைவியான பூதேவியும், ஒருமாது செல்வி - மற்றொருமனைவியான ஸ்ரீதேவியும், உடன் உறைய - (தன்னைவிட்டுப்பிரியாது எப்பொழுதும்) தன்னுடன் இருக்கவும், வரும் ஆதவனின் மகுடம் வில் வீச - உதயமாகிவருகின்ற சூரியன்போலக் கிரீடமானது ஒளியைவீசவும், வடமலைமேல் கரு மாதவன் கண்ணன்-வடக்கின்கணுள்ளதிருவேங்கடமலையின்மீதுவாழ்கிற கரியதிருமேனியையுடைய மாதவனென்றும் கிருஷ்ணனென்றுந் திருநாமங்களையுடைய திருமால், நின்பால் திரு நெடுங் கண் வளர்கைக்கு - உன்னிடத்திலே அழகிய நீண்ட திருக்கண்களை மூடி நித்திரைசெய்தற்காக, அரு மா தவம் என்ன செய்தாய் - (நீ) அரிய பெரிய எவ்வகைத்தவத்தைச் செய்தாய்? எனக்கு பணி - எனக்குச் சொல்வாய் ; (எ - று.)

"போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி, ஆக்கஞ்சேரூடல் அணிமருதம்-நோக்குங்கால், இல்லிருக்கை முல்லை இரங்கல் நறுநெய்தல், சொல்லிருக்குமைம்பால்தொகை" என்றபடி இரங்கல் நெய்தல்நிலத்துக்கு உரியதாதலாலும், அந்நெய்தனிலந்தான் கடலும் கடல்சார்ந்தஇடமு மாதலாலும், அந்நிலத்திலே தலைமகனைப்பிரிந்து வருந்துகின்ற தலைமகள் அருகிலுள்ள கடலை முன்னிலைப்படுத்தி, 'திருமால் எப்பொழுதும் உன்னிடத்திலேபொருந்தி இனிதுகண்துயிலுமாறு நீ என்ன தவஞ்செய்தாய்? சொல்' என்று இரங்கிக்கூறினளென்க. நீ அதனைச்சொல்லினையாயின், அவனோடு ஓரோசமயத்துக் கூட்டுறவுபெற்றுப் பின்பு பிரிந்துவருந்துகின்ற யானும் அவ்வகைத்தவத்தைச்செய்து அப்பெருமான் என்றும் என்னைவிட்டுப்பிரியாது என்பக்கல் இனிதுகண்துயிலும்படி பெறுவேனென்பது, குறிப்பு. "மாலுங்கருங்கடலே யென்னோற்றாய் வையகமுண், டாலினிலைத்துயின்ற வாழியான்—கோலக், கருமேனிச்செங்கண்மால் கண்படையு ளென்றுந், திருமேனி நீ தீண்டப்பெற்று" என்ற ஆழ்வாரருளிச்செயலை அடியொற்றியது இது. தலைமகனோடுகூடியுறைகின்ற தலைவியரைக் கண்டு பொறாமைகொள்ளுதல், தலைவனைப்பிரிந்துறைகின்ற தலைவியரியல்பு: அக்குறிப்பு இப்பாட்டில் 'ஒருமாதவனி யொருமாதுசெல்வி யுடனுறைய' என்றவார்த்தையில் தோன்றுதல் காண்க ; ஸ்ரீதேவியும் பூதேவியும் போலத் தானும் எம்பெருமானுக்குஉரிய ஒருபிராட்டிநிலையைப் பெறுமாறு வேண்டினளென்பதும் அவ்வார்த்தையிற் புலனும். "உவர்க்குங்கருங்கடல்நீருள்ளான்" என்னும்படி திருமால் கடல்கள்தோறுங் கண்வளர்ந்தருளு மென்று ஒருபிரமாணசித்தியுண்டாகையாலே, திருப்பாற்கடலையேயன்றி இக்கருங்கடலையே இங்ஙனம் வினவினளென்க. 'வருமாதவனின் மகுடம் வில்வீச' என்றது, திருமுடியும் கிரீடமும் சேர்ந்த சேர்த்தியாலாகிய செயற்கையழகில் தலைவி ஈடுபட்டதைக் காட்டும்.

உறைய, வீசக் கண்வளர்கைக்கு என்று இயையும். உறைய, வீச-வினைச்செயவெண். மாது - விரும்பப்படும் அழகுடைய பெண். அவநி, ஆதபன், மகுடம், மாதவன், மஹாதபஸ், அம்புதி - வடசொற்கள். அவநி-(அரசாற்)

பாதுகாக்கப்படுவது; அவசம் - க்ஷணம். செல்வி - எல்லாச்செல்வங்கட்கும் உரியவள், திருமகள். ஆதபன் - நன்றாகத் தபிப்பவன். மாதவன்-ஸ்ரீயஃபதி; மா - இலக்குமிக்கு, தவன் - கணவன்: இத்திருநாமம்-(சந்திரவம்சத்தில்)மதுவென்றஅரசனது மரபில் (கண்ணனாகத்) திருவவதரித்தவ னென்றும் பொருள்படும்; அப்பொழுது, தத்திதாந்தநாமம்: மது - யதுவின் மூத்த குமாரன். அம்புதி - நீர்தங்குமிடம்; அம்பு - நீர். கண்ணனென்ற திருநாமத்துக்கு - கண்ணழகுடையவ னென்றும், கண்ணோட்டமுடையவனென்றும் பொருள்கொள்ளலாம். பணி - வினைப்பகுதியாமின ஏவலொருமையாய்நின்றது. இச்செய்யுளின் பின்னிரண்டடிகளில் முதலெழுத்துக்கள் ஒத்துவந்தது, யமகவகையின்பாற்படும். முன்னிரண்டடி - திரிபு.

எம்பெருமான் ஐயங்கார்க்கு ஒருகால் காட்சிதந்து மறைய, அப்பெருமானது இடைவிடாச்சேர்க்கையை விரும்பிய ஐயங்கார் அங்ஙனம் அவனது நிரந்தரஸம்ச்லேஷத்தைப் பெற்றுநின்ற ஆழ்ந்தகருத்துடைய மகான்களை நோக்கி 'நீங்கள் நிரந்தராநுபவம்பெறுமவகையை எனக்குக் கூறுவீராக' என்று வேண்டுதல், இதற்கு உள்ளுறைபொருள்; விவரம் உய்த்துணர்க. (கo)

கக. அம்பரந்தாமரைபூத்தலர்ந்தன்னவவயவரை
அம்பரந்தாமரையஞ்சனவெற்பரையாடகமாம்
அம்பரந்தாமரைசூழ்ந்தாரைவாழ்த்திலரைப்புலனும்
அம்பரந்தாமரைபோற்றிரிவாரையகனெஞ்சமே.

(இ - ள்.) அம்பரம் - கடலினிடத்து, தாமரை பூத்து அலர்ந்து அன்ன - செந்தாமரைமலர்கள் தோன்றி மலர்ந்தாற் போன்ற, அவயவரை - திருமேனியுறுப்புக்களை யுடையவரும், அம் பரந்தாமரை - அழகிய பரமபதத்துக்கு உரியவரும், ஆடகம் ஆம் அம்பரம் தாம் அரை சூழ்ந்தாரை - பொன்மயமான ஆடையை [பீதாம்பரத்தை]த் தாம் இடையில் உடுத்துள்ளவருமாகிய, அஞ்சனவெற்பரை - திருவேங்கடமுடையானை, வாழ்த்திலர் - துதியாதவர்களாய், ஐம்புலன் ஆம் அம்பரம் - ஐம்புலன்களாகிய வெட்டவெளியிலே, தாமரை போல் திரிவாரை - தாவுகின்ற மான்கள்போலத் துள்ளியோடித் திரிபவர்களான கீழ்மக்களை, நெஞ்சமே அகல் - மனமே! விட்டுநீங்குவாயாக; (எ - று.)

பேரின்பத்துக்குஉரிய பகவத்விஷயத்திற் செல்லாமல் சிற்றின்பத்துக்கு உரிய விஷயாந்தரங்களிலே வரம்பின்றி ஓடி உழன்று அலைகின்ற பேதையரோடு கூட்டுறவுகொள்ளலாகாதென்று தமமனத்துக்கு அறிவுறுத்துகிறவகையாற் பிறர்க்கு உணர்த்துகின்றாரென்க. கடல் - கரிய திருமேனிக்கும், அதில்தோன்றிமலர்ந்த செந்தாமரைமலர்கள் - கண் கை கால் முகம் வாய் உந்தி என்ற அவயவங்கட்கும் உவமையாகுதலால், 'அம்பரந் தாமரை பூத்தலர்ந்தன்ன அவயவர்' என்றார். அம்பரம்-மேகமெனினுமாம்; "கருமுகில தாமரைக்காடு பூத்து" என்றார் கம்பரும். பரந்தாமர் என்ற

பெயர் - எல்லாப்பதவிகட்கும்மேலான இடத்தையுடையவரென்றும், எல்லாவொளிகளினுஞ்சிறந்த ஒளியையுடையவரென்றும் பொருள்படும்; தாமம் - இடமும், ஒளியும். கேசரியென்னும் வாநரசிரேஷ்டனது மனைவியாகிய அஞ்சநாதேவி திருவேங்கடமலையை அடைந்து பலகாலம் தவம்புரிந்து அநுமானாகியபுத்திரனைப் பெற்றதனால், இம்மலை, அஞ்சநாசலமென்று ஒரு பெயர்பெற்றதெனப் புராணங்கள் கூறுகின்றன. ஆடகமாம் அம்பரம் - பொற்பட்டாடை. மூன்றாமடியில், தாம் - அசை. சூழ்தல் - சுற்றிலும்தரித்தல். எம்பெருமானைவாழ்த்துதல் மிக்கஅன்பின்செயலாதலை, பெரியாழ்வார் பல்லாண்டுபாடியதுகொண்டும் உணர்க.

"அம்பரம் கூறையும் கடலும் ஆகாயமும்" என்ற திவாகரம், இங்கு உணரத்தக்கது. தாமரை - தாமரஸ மென்ற வடசொல்லின் விகாரம். அவயவம், பரந்தாமர், ஹாடகம், அம்பரம் - வடசொற்கள். அவயவரை, தாமரை, வெற்பரை, சூழ்ந்தாரை என்பன - ஒருபொருளின்மேல்வந்த பலபெயர்கள். விசேஷணம் விசேஷ்யம் என்ற இரண்டிலும் வேற்றுமையுருபு விரித்தது, வடமொழிநடை. அஞ்சனவெற்பர் - விசேஷ்யம்; மற்றவை - விசேஷணங்கள். அரை என்ற எண்ணலளவுப்பெயர் - உடம்பின் நடுவிலுள்ள உறுப்புக்கு ஆகுபெயராம். வாழ்த்திலர் - எதிர்மறைப்பலர்பால் முற்றெச்சம். ஐம்புலவின்பங்களினாசைக்கு எல்லையில்லை யென்பது தோன்ற, 'ஐம்புலனுமம்பரம்' என்றார். தா மரை - வினைத்தொகை; தாம் மரை யென்று பிரித்து, தாம் என்பதைத் தாவும் என்ற செய்யுமெனெச்சத்து ஈற்றுஉயிர்மெய்சென்றதாகவுங் கொள்ளலாம். ஐம்புலன் - ஐம்புலங்களாலாகிற, நாமம் - அச்சம், பரந்து - மிகப்பெற்று, ஆ - ஐயோ! மரைபோல் திரிவாரை என்று பொருள்கூறுதல், க்லிஷ்டகற்பனை [நலிந்துபொருள்கொள்ளுதல்] என்னுங் குற்றத்தின்பாற் படுமென விடுக்க.

இச்செய்யுளில் நான்கடிகளிலும் முதலெழுத்துக்கள் சில ஒன்றிநின்று வெவ்வேறுபொருள்விளைத்தல், இடையிட்டுவந்த முதல் முற்றுமடக்கு எனப்படும் யமகமாம்; மேல் உ௦, ௩க, ௩௬, சஎ, ௫எ, எஉ, அ௬ - ஆஞ் செய்யுள்களிலும் இது காண்க. செய்யுளடிகளினிறுதியில் சந்தி அசித்தியமென்பது இலக்கணநூலார் துணிபாதலின், நின்ற அடியின் ஈற்றோடு வருமடியின் முதல் சேருமிடத்துப் புணர்ச்சி கொள்ளப்பட்டிலது, யமகவமைப்பின் பொருட்டு; இதனை, இங்ஙனம் வருமிடங்கட்கெல்லாங் கொள்க. (கக)

[தலைவி தோழியர்க்கு அறத்தோடுநிற்றல்.]

கஉ. நெஞ்சுகந்தத்தையுமக்குரைத்தே னிற்றைநீடிரவொன்
றஞ்சுகந்தத்தைவிளைக்குமென்னாசையதா மிதழ்சொல்
கிஞ்சுகந்தத்தையனையீ ரிங்கென்னைக்கெடாதுவிடும்
விஞ்சுகந்தத்தைவிளைக்குந்துழாயண்ணல்வேங்கடத்தே.

(இ - ள்.) இதழ் - வாயிதழும், சொல் - சொல்லும், (முறையே), கிஞ்சுகம் - முருக்கமலரையும், தத்தை - கிளிகொஞ்சிப்பேசும் பேச்சையும்,

அனையீர் - ஒத்திருக்கப்பெற்றவர்களே!—நெஞ்சு உகந்தத்தை-(என்) மனம் விரும்பியதை, உமக்கு உரைத்தேன்-உங்கட்குச் சொல்லுகின்றேன்:—இற்றை நீடு இரவு ஒன்று - இன்றைத்தினத்து நீண்ட இராத்திரி யொன்றுமே, அஞ்சு உகம் - ஐந்துயுகமாக வளர்ந்து, தத்தை விளைக்கும் - துன்பத்தை மிகுவிக்கின்றது; அது என் ஆசை ஆம் - அது யான்கொண்ட காதலின் காரியமாம்; இங்கு என்னை கெடாது - (இனி நீங்கள்) என்னை இங்கேயே (வைத்திருந்து) கெடுத்திடாமல், விஞ்சு கந்தத்தை விளைக்கும் துழாய் அண்ணல் வேங்கடத்தே விடும்-மிக்க நறுமணத்தைவீசுகின்ற திருத்துழாய்மாலையைத் தரித்த தலைவனுடைய திருவேங்கடமலையினிடத்தே(என்னைக் கொண்டுபோய்ச்) சேர்த்திடுங்கள்; (எ - று.)

தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடிப் பிரிந்த தலைமகள் அப்பிரிவுத் துயரை ஆற்றியடக்கும் வல்லமையிலளாகித் தனதுநிலைமையை அன்புடைத் தோழியர்க்கு வெளிப்படையாகவுரைத்து 'இனி நான் பிழைத்திருக்கவேண்டில், என்னை நீங்கள் அத்தலைவன்முன்னிலையிற் கொண்டுபோய்ச்சேர்த்திடுங்கள்' என்றுவேண்டுகின்றாளென்க. என்மனத்திலுள்ளதை என்மனத்தோடொத்த உயிர்ப்பாங்கியரான உங்கட்குமாத்திரமே அந்தரங்கமாகச் சொல்லுகின்றேன் : என்பக்கல் அன்பிலரான பிறர் அறியவேண்டா என்பது, 'நெஞ்சுகந்தத்தை யுமக்குரைத்தேன்' என்றதன் குறிப்பு. "ஊழிபலவோரிரவாயிற்றோவென்னும்," "ஊழியிற்பெரிதால்நாழிகையென்னும்ஒண்சுடர்துயின்றதாலென்னும்", "இது ஓர் கங்கு லாயிரமூழிகளே" என்றபடி கூடியநிலையில் ஒருகணமாகக்கழிகிற இரவு பிரிந்தநிலையில்அநேகயுககாலமாக நீட்டித்துத்தோன்றுகின்றமைபற்றி, 'நீடிரவொன்று அஞ்சுகந்தத்தை விளைக்கும்'என்றாள்.'இற்றைநீடிரவு'என்றதனால், தலைவனைப்பிரிந்து அப்பிரிவுத்துயரையாற்றாமல் பகலினும் இரவில்மிகவருந்தி அரிதிற்சிலநாள்கழித்த தலைவி அவ்வருத்தம் நாளுக்குநாள் மிகுதலால் இரவும் ஒருநாளைக்கொருநாள் மிகநீட்டித்ததாகத்தோன்றக் கண்டு,முன்பு ஒருநாளாயும் ஒருமாதமாயும் ஒருவருடமாயும் ஒருயுகமாயும் படிப்படியாகவளர்ந்துதோன்றி வருத்திவந்த இரவு இன்றைக்குப்பலயுகங்களாகத்தொன்றிவருத்துகின்றது என்று ஒருநாளிரவிற் கூறினளாம். தன்விருப்பத்தை நிறைவேற்றுதற்பொருட்டுத் தோழியரைக் கொண்டாடியழைப்பவளாய், 'இதழ்சொல் கிஞ்சுகந் தத்தையனையீர்' என்று புனைந்துரைத்து விளித்தாள். தான் இனி ஒருபொழுதேனும்இங்குஇருந்துபிழைக்கும்வகையிலளானமை தோன்ற, 'இங்குஎன்னைக் கெடாது' என்றாள். தலைவன்தானாகவருமளவும் பார்த்து ஆறியிருக்கின்ற இயல்பை இழந்து அவனுள்ளவிடத்தேசென்று அவன்முகத்தைக் கண்டு பிழைக்கலாமென்றும், அவன்கண்ணெதிரிற்சென்றுநின்றால் அவன்கண்ணோட்டத்தைப்பெறலா மென்றுங் கருதி விரைவில் அங்குச்செல்லவிரும்பிய தலைவி, தனக்குக் கால்நடைதாராதபடி வலியழிவுமிக்கதனால் தான் அங்குச்சென்று சேரமாட்டாது, தன்கண்வட்டத்திலேநின்று தன்நிலையை நோக்கிக் கால்நடைதளராததோழியரைத் தன்னை அங்குக்கொண்டுபோய் விடுமாறு வேண்டினள்; நீங்கள் என்குறிப்பறிந்து என்துயர்தீர்த்திலிரா

யினும் நான் வெளிப்படையாச்சொல்லுகிறேன், அதன்படியாயினுஞ் செய்யுங்க ளென்றாள். "மதுரைப்புறத் தென்னையுய்த்திடுமின்," "ஆணையால் நீரென்னைக்காக்கவேண்டி லாய்ப்பாடிக்கேயென்னையுய்த்திடுமின்" என்பவை முதலாகிய அருளிச்செயல்களைக் காண்க.

உகந்தது என்ற வினையாலணையும்பெயர், இரண்டனுருபையேற்கையில் இடையிலே தகரவொற்று விரிந்து உகந்தத்தை யென்று நின்றது. அஞ்சு=ஐந்து; முழுப்போலி. தந்து - துன்பம். கெடாது - இங்குப் பிறவினை; இழவாமல் எனினுமாம். கிம்சுகம் என்ற பலாச மரத்தின்பெயர் - அதன்பூவுக்கும், தத்தை என்ற கிளியின்பெயர் - அதன்மொழிக்கும் முதலாகுபெயராம். பலாசமலர் - உதட்டுக்குச் செம்மை மென்மை அழகுகளிலும், கிளிமொழி-சொல்லுக்கு இனிமையிலும் உவமம். இதழ் சொல் கிஞ்சுகம் தத்தை அனையீர் என்றது, இதழ் கிஞ்சுகத்தையும்,சொல் தத்தையையும் அனையீர் என முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப் பொருள்கோள்.

எம்பெருமானை இடையீடின்றிச்சேரப்பெறாத நிலையில் காலவிளம்பம் பொறுக்கமாட்டாமையாற் காலம்நீட்டித்ததாகத் தோன்ற வருந்துகிற ஐயங்கார் தமதுஅன்பர்களைநோக்கி 'இனி யான் எம்பெருமானது நிரந்தராநுபவம் பெற்று உய்யுமாறு என்னை நீங்கள் அவனுகந்தருளின திருப்பதியிற் கொண்டுபோய்ச் சேர்த்திடுங்கள்' என்று வேண்டுதல், இதற்கு உள்ளுறைபொருள்; விவரம் கண்டுகொள்க. (கஉ)

கந. வேங்கடத்தாரையுமீடேற்றநின்றருள்வித்தகரைத்
தீங்கடத்தாரைப்புனைந்தேத்திலீர் சிறியீர் பிறவி
தாங்கடத்தாரைக்கடத்துமென்றேத்துதிர் தாழ்கயத்து
ளாங்கடத்தாரைவிலங்குமன்றேசொல்லிற்றையமற்றே.

(இ - ள்.) சிறியீர் - (அறிவொழுக்கங்களிற்) சிறியவர்களே! - ஆரையும் ஈடேற்ற - எல்லாரையும் (பிறவிப்பெருங்கடலினின்று)கரையேற்றிப்பாதுகாத்தற்பொருட்டு, வேங்கடத்து நின்றருள் - திருவேங்கடமலையில் நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கின்ற, வித்தகரை - ஞானசொரூபியான எம்பெருமானை, தீங்கு அட தாரை புனைந்து ஏத்திலீர் - (உங்கள்) பிறவித்துன்பங்களை (அவன) அழிக்குமாறு (அவனுக்குப் பிரியமான திருத்துழாய் முதலிய) மாலைகளைச் சாத்தித் துதிக்கின்றீரில்லை; (மற்று), பிறவி தாம் கடத்தாரை - (தங்கள்) பிறவியைத் தாங்கள் விலக்கிக்கொள்ள மாட்டாத சிறுதெய்வங்களை, கடத்தும் என்று ஏத்துதிர் - ('எங்களைத் துன்பத்தினின்று) ஈடேற்றுவீராக' என்றுசொல்லிப் பிரார்த்தித்துத் துதிக்கிறீர்கள்; தாழ் கயத்துள் ஆம் - ஆழ்ந்த தடாகத்திலே (முதலைவாயில்) அகப்பட்டுக்கொண்ட, கடம் தாரை விலங்கும் அன்றே - மதநீர்ப்பெருக்கையுடைய மிருகசாதியாகிய யானையுமல்லவோ, ஐயம் அற்று சொல்லிற்று - சந்தேகந்தீர்ந்து (ஸ்ரீமந்நாராயணனை ஆதிமூலமே யென்று கூப்பிட்டு) உண்மைப் பொருளை யுணர்த்திற்று; (எ - று.)

தேவதாந்தரங்களை வழிபடுதலை விட்டுப் பரதேவதையை வழிபட்டுக் கஜேந்திராழ்வான்போலத் துயர்தீர்ந்து முத்திபெறுவீ ரென்றபடி. ஸ்ரீமகாவிஷ்ணுவே பிரஹ்மருத்ரேந்த்ராதி தேவர்கட்கெல்லாம் முதற்பெருந்தேவனென்ற மறைபொருள், அப்பெருமானைக் கஜேந்திராழ்வான் மற்றையபெயர்களாற்குறியாமல் ஆதிமூலமேயென்று குறித்து விளித்ததனால் இனிது வெளியாயிற்று என்பது, இறுதிவாக்கியத்தின் கருத்து. "தான் மூலமென்பது அறிவித்திடான், அக்கரவு அம்புவிமேல் வேழமே வெளியாக்கியதே" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். பகுத்தறிவிற்குறைவுள்ள இயல்பினதான ஐயறிவுயிராகிய விலங்குக்கு இருந்த விவேகந்தானும் ஆறறிவுயிராய்ப் பகுத்தறிவுநிரம்புதற்கு உரியரான உங்கட்கு இல்லையாயிற்றே யென்று ஏசுவார், 'சிறியீர்' என்று விளித்தார். யாற்றுநீர்ப்பெருக்கு முதலியவற்றைத் தான் கடக்கமாட்டாதவன் பிறரை அதுகடத்துவது உண்டோ? தமது பிறவித்துன்பத்தை விலக்கிக்கொள்ள மாட்டாத தேவதாந்தரங்களை நீங்கள் உங்கள் துன்பத்தையொழித்துப் பிறவிக்கடல் கடத்துமாறு வேண்டுதல் பேதைமையன்றோ? வீழ்வார்க்கு வீழ்வார் துணையாவரோ? என்று உறுத்திக் கூறுவார், 'பிறவிதாங்கடத்தாரைக் கடத்துமென் றேத்துதிர்' என்றார். "வந்தவினை தீர்க்க வகையறியார் வேளூரார், எந்தவினை தீர்ப்பா ரிவர்" என்பர் பிறரும். ("இறைவ னிவனென வறியா திதரதேவ ரிணையடியைப் பணிந்துதிரி யேழையிர் நா, னறைவ னிதுதிட மாதிமூலமேயென்று அஞ்சிறகண்மதயானை யழைத்தபோ தஞ், சிறைவணசத்திருமுகப் புள்ளூர்ந்து வந்து செகமறியும்படியளித்த தேவதேவன், நறைவனவஞ்சனகிரிமாலல்லனோகாண் நாடியவற்கொருமுதல் கதிநண்ணுவீரே" என்ற திருவேங்கடக்கலம்பகமுங் காண்க.

வேங்கடத்து நின்றருள் என்றும், கயத்துளாம்விலங்கு என்றும், இயையும். தாரா - வடசொல். (கரு)

கசு. ஐயா துவந்தனை நாயேனையஞ்சனவெற்பவென்றுங்
கையா துவந்தனை நின்னையல்லாற்கண்ணுதன்முதலோர்
பொய்யா துவந்தனையார்முகங்காட்டினும்போற்றியுரை
செய்யா துவந்தனைபண்ணுது வாக்குமென்சென்னியுமே.

(இ - ள்.) ஐயா - ஐயனே! அஞ்சன வெற்ப - அஞ்சநாத்ரி என்னும் ஒருபெயரையுடைய திருவேங்கடத்தி லெழுந்தருளியிருக்கின்றவனே! துவந்தனை - இருவினைத்தொடர்புடையேனாகிய, நாயேனை - நாய்போற்கடைப்பட்டவனான என்னை, என்றும் கையாது - எக்காலத்தும் வெறுத்திடாதபடி, உவந்தனை - மகிழ்ந்து அடியவனாக அங்கீகரித்தாய்; நின்னை அல்லால் - (இங்ஙனம் அடியேனை ஆட்கொண்டருளிய தேவாதிதேவனான) உன்னை(த் துதித்தலும் வணங்குதலும்) அல்லாமல்,—கண்நுதல் முதலோர்- சிவன்முதலிய தேவர்கள், பொய்யாது வந்து - மெய்யாகவே (என்முன்) வந்து பிரதியக்ஷமாகி, அனையார் முகம் காட்டினும் - அவர்களுடைய முகத்தை வலியக் காட்டினாலும், என் வாக்கும் சென்னியும் போற்றி உரை செய்யாது வந்த

னைபண்ணாது - என துவாயும்தலையும்(முறையே அவர்களைத்) துதித்து உரைத்தல் செய்யாது வணங்காது ; (எ - று.)

"மறந்தும்புறந்தொழாமாந்தர்" என்றபடி தேவதாந்தரபஜநஞ் செய்யாமையில் தமக்குஉள்ள உறுதியை வெளியிட்டார். அனையார் முகங்காட்டினும் என்பதற்கு - பெற்றதாயார்(போல அன்பொழுகும் இனிய) முகத்தைக் காட்டினாலும் என்று உரைத்தலும் உண்டு: அனையார் = அன்னையார். போற்றியுரைசெய்யாது வந்தனைபண்ணாது வாக்கும் சென்னியும் என்பது, போற்றியுரைசெய்யாது வாக்கு, வந்தனைபண்ணாது சென்னிஎன முறையே சென்றுஇயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். 'வாக்கு மென் சென்னியும்' என்றவிடத்து இடைநின்ற 'என்' என்றது முன்நின்ற 'வாக்கு' என்றதனோடும், பின்நின்ற'சென்னி'என்பதனோடும் சென்றுஇயைதல், மத்திமதீபம் [இடைநிலைவிளக்கு]. மனம் மொழி மெய் என்னுந் திரிகரணங்களுள் மொழிமெய்கள் தேவதாந்தரவழிபாடு செய்யாமையைக் கூறவே, அவற்றின்தொழிற்குக் காரணமான மனம் அவர்களைக்கருதாதென்பதும் பெறப்படும்; "உலகமுண்ட, திருக்கந்தரத்தனை யல்லா தெண்ணேனொருதெய்வத்தையே" என்பர் அழகரந்தாதியில். ஐயா - ஆர்யன் என்ற வடசொல் பிராகிருதபாஷையில் அய்யன்என்று விகாரப்பட்டுத் தமிழிற் போலிவகையால் ஐய னென்று வழங்கி ஈறுகெட்டு ஈற்றயல் நீண்டு விளியேற்றது. த்வந்த்வம் என்ற வடமொழி, துவந்த மென்று விகாரப்பட்டது; (தொந்தமெனச்சிதைந்தும் வழங்கும்;) இரட்டையென்பது,பொருள்;இங்கு இருவினையின்மேல நின்றது: அதனையுடையவன், துவந்தன்; அதன்மேல் ஐ - இரண்டனுருபு. கண்ணுதல் - நெருப்புக்கண்ணை நெற்றியி லுடையவன் ; வேற்றுமைத்தொகை யன்மொழி. அனையார் என்பது அவர் என்று பொருள்படும்போது, அகரச்சுட்டு - பகுதி;ன் ஐ - சாரியைகள், ஆர் - பலர் பால்விகுதி. முகங்காட்டினும் என்ற உம்மையால், முகங்காட்டாதபோது வழிபடுதலின்மை தெற்றென விளங்கும். செய்யாது, பண்ணாது-எதிர்மறையொன்றன்பால்முற்றுக்கள். வாக்-வடசொல். 'நின்னையல்லால்' என்பது, 'போற்றியுரைசெய்யாது,' 'வந்தனைபண்ணாது' என்பவற்றோடு இயையும்.

[தலைவனைப்பிரிந்ததலைவியின் ஆற்றமைகண்ட செவிலித்தாய் இரங்கல்.]

கரு. சென்னியிலங்கைகுவிக்கு முயிர்க்குந் திகைக்கு நின்னை
யுன்னியிலங்கையிற்கண் ணுறங்கா ளுயர்வீடணனை
மன்னியிலங்கையில்வாழ்கென்றவேங்கடவாண மற்றோர்
கன்னியிலங் கைக்கினின்பேர்கருணைக்கடலல்லவே.

(இ - ள்.) உயர் - (அறிவொழுக்கங்களினால்) உயர்ந்த, வீடணனை - விபீஷணனை, மன்னி இலங்கையில் வாழ்க என்ற - 'நிலைபெற்று இலங்காபுரியில் அரசனாய் வாழ்வாயாக' என்றுசொல்லி முடிசூட்டி அநுக்கிரகித்த, வேங்கட வாண - திருவேங்கடமலையில் வாழ்பவனே!—(உன்னைக்கூடிப் பிரிந்த இந்தஎமதுமகள்), நின்னை உன்னி சென்னியில் அம் கை குவிக்கும்- (தான் வேண்டியதைப்பெறுதற்தாக)உன்னைக்குறித்துத் தன்தலையின்மேல்

அழகியகைகளைக்கூப்பிவைத்துத் தொழுவாள்; உயிர்க்கும் - (தன்னுடைய துயரம் பொறுக்க மாட்டாமையால்) பெருமூச்சுவிடுவாள்; திகைக்கும் -(பரிகார மொன்றும் பெறாமையால்) மோகித்துக்கிடப்பாள்; (நின்னை உன்னி) - உன்னையே சிந்தித்தலால், இலங்கு ஐயில் கண் உறங்காள் - பிரகாசிக்கின்ற வேலாயுதம்போன்ற கண்களை மூடித் துயில்கொள்ளாள்; மற்று ஓர் கன்னி இலம்-(நாங்கள் இவளையன்றி) வேறொருபெண்ணை உடையோமல்லோம்; (ஆதலால்), கைக்கின் நின் பேர் கருணைக்கடல் அல்ல - (எங்கள்ஏகபுத்திரியான இவள்பக்கல் இரங்கி இவளை அங்கீகரியாமல் நீ) வெறுத்து விடுவையானால் நினதுபெயர் தயாசிந்து என்பது தகுதியுடையதாகாது; (எ - று.) —ஈற்றுஏகாரம் - தேற்றம்.

தலைமகனோடு கூடிப்பிரிந்த தலைமகள் பிரிவாற்றாமையாற்படுகிற பலவகைத்துன்பங்களையுங் கண்டு ஆற்றமாட்டாளான செவிலித்தாய் தன்ஆற்றாமைமிகுதியால் அத்தலைமகனை எதிரில்நிற்கின்றவாறுபோலப் பாவித்து அவனைவிளித்து அவன்முன்னிலையிலே இவளுடையநிலைமைகளையெல்லாஞ் சொல்லி இவள்பக்கல்இரங்கவேண்டுமென்றுவேண்டிய பாசுரம், இது. இதனை நற்றாயிரங்கலென்றலு மூண்டு. நம்மாழ்வார் திருவாய்மொழியில் "கங்குலும்பகலும்" என்றதொடக்கத்துத் திருப்பதிகத்தில் "கங்குலும்பகலுங் கண்டுயிலறியாள்", "இவள்திறத்து என்செய்கின்றாயே", "வெவ்வுயிர்த்துயிர்த்துருகும்", "சிந்திக்குந் திசைக்குந் தேறுங் கைகூப்பும்" என்று அருளிச்செய்தமை காண்க. ரஜோகுண தமோகுணங்களால் மிக்குத் தீயனவே செய்யுங்கொடியஅரக்கர்கோஷ்டியில் ஒருவனாயிருந்தும் சத்வகுணமேமிக்கு நல்லனவேசெய்யுமியல்பினனான விபீஷணனது ஞானசீலங்களின் மேன்மை தோன்ற, 'உயர் வீடணன்' என்றார். இராமபிரான் இராவணாதியரை அழித்தற்பொருட்டுப் பெரியவாநரசேனையைச் சித்தப்படுத்திக்கொண்டு புறப்பட்டுக் கடற்கரைசேர்ந்தவளவில், இராவணன்தம்பியான விபீஷணன் தான்சொன்னநல்லறிவைக்கொள்ளாத தமையனை விட்டுவந்து இராமபிரானைச் சரணமடைய, அப்பெருமாள் அவனுக்கு அபயமளித்து அப்பொழுதே அவனை இலங்கைக்குஅரச னென முடிசூட்டி அவனால் இலங்கையின் நிலைமையையறிந்து அவனுடனே கடல்கடந்து இலங்கைசார்ந்து அங்குப் பெரும்போர்புரிந்து இராவணனைச் சேனையோடும் புத்திரமித்திராதியரோடும் கொன்று, முன்சொன்னபடி விபீஷணனை இலங்கையரசனாக்கிச் சீதையை மீட்டுக்கொண்டு மீண்டன னென்ற வரலாறுபற்றி, 'வீடணனை மன்னியிலங்கையில்வாழ்கென்ற வேங்கடவாண'என்றாள். இவ்விளியினால், பகைவர்கோட்டியிற்சேர்ந்த வலிய ஓர் ஆண்மகனை நின்னைச்சரணமடைந்தவனென்றமாத்திரம்பற்றி ஆட்கொண்டு வாழ்வளித்த நீ உனது உறவைப் பெற்று உன்னையன்றி வேறுகதியில்லாளாகிய மெல்லியலாளான இப்பெண்மகள்பக்கல் இரக்கங்கொண்டு இவளைப் பரிபாலிக்கவேண்டாவோ? என்ற குறிப்புத் தோன்றும். நினது கருணைக்கடல் என்ற பெயர் பொருளுள்ளதாம்படி இவளிடத்துக் கண்ணோட்டஞ்செய்தருளுதல் கடமை யென்பாள் 'கைக்கின் நின்பேர் கருணைக்கடலல்லவே' என்றாள்.

அங்கை - அகங்கையுமாம்; "அகமுனர்ச்செவிகைவரி னிடையன கெடும்" என்பது விதி. குவிக்கும், உயிர்க்கும், திகைக்கும் - செய்யுமென்முற்றுக்கள் பெண்பாலுக்கு வந்தன. திகைத்தல்-அறிவழிதல். 'நின்னையுன்னி' என்பது, மத்திமதீபமாகக்கொண்டு முன்னும் பின்னுங் கூட்டப்பட்டது. ஐயில்=அயில்; திரிபுநயத்தின்பொருட்டுவந்த முதற்போலி. அயிற்கண் - உவமத்தொகை. மகளிர்கண்ணுக்கு வேல்உவமை, கூரியவடிவிலும் ஆடவர்க்கு நோய்செய்தலிலு மென்க. 'கண்ணுறங்காது' என்ற பாடத்துக்கு - இவளுடைய கண்கள் உறங்காவென்க; சாதியொருமை. விபீஷணன், கந்யா, கருணா என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. விபீஷணன் என்ற பெயர் - (பகைவர்க்கு) மிகவும்பயங்கர னென்றும் நல்லோர்க்குச் சாந்த மூர்த்தியாய்ப் பயங்கரனல்லாதவ னென்றும் காரணப்பொருள் படும். வாண, பேர் - வாழ்ந, பெயர் என்பவற்றின் மரூஉ. இன்மை-இல்லாமை யெனக் கொண்டால் செயப்படுபொருள்குன்றியவினையும்; உடையதாகாமை யெனக்கொண்டால் செயப்படுபொருள்குன்றாதவினையுமாம்; 'கன்னியிலம்' என்ற விடத்து, இன்மை-செயப்படுபொருள் குன்றாததாய்நின்றது. அல்ல என்ற எதிர்மறைப்பலவின்பால்முற்று, (வேறு இல்லை உண்டு என்பன போல) இருதிணையைம்பால் மூவிடத்துக்கும் பொதுப்படவழங்குதலைஇலக்கியங்களிற் காண்க; இது, புதியனபுகுதல்.

எம்பெருமானது பூர்ணாநுபவத்தைப் பெறாதபோது பலவாறு வருந்துகிற ஐயங்காரது நிலைமைகளை அவர்பக்கல்அன்புடையரான அறிவுடையாளர் அப்பெருமானதுசந்நிதியில்விண்ணப்பஞ்செய்து, இவர்பக்கல்திருவருள் புரிகவென்றுபிரார்த்தித்தல், இதற்கு உள்ளுறைபொருள். 'அயிற்கண்உறங்காள்' என்றது, அவரது கூரியஞானம் சங்கோசமடையாத தன்மையைக் குறிக்கும். 'உயர்வீடணனை மன்னியிலங்கையில் வாழ்கென்றவேங்கடவாண' என்றது, எம்பெருமானது சரணாகதரக்ஷணத்வத்தில் ஈடுபாட்டினால். இந்த ஐயங்கார்போல ஆத்மஸ்வரூபபூர்த்தியுடைய அடியாரைப் பெறுதலரிதென்பார், 'மற்றோர்கன்னி யிலம்' என்றாரென்க. விவரம் சம்பிரதாயம்வல்லார் வாய்க் கேட்டுஉணர்க. (கரு)

கசு. கடமாமலையின்மருப்பொசித்தாய்க்குக்கவிநடத்தத்
தடமாமலைவற்றவாளிதொட்டாய்க் கென்றனிநெஞ்சமே
வடமாமலையுந்திருப்பாற்கடலும்வைகுந்தமும்போ
லிடமாமலைவற்றாநின்றுங்கிடந்துமிருப்பதற்கே.

(இ - ள்.) கடம் - மதத்லதையுடைய, மா - பெரிய, மலையின் - மலைபோன்ற (குவலயாபீடமென்னும்) யானையினது, மருப்பு - தந்தங்களை, ஒசித்தாய்க்கு - ஒடித்திட்டவனும்,—கவி நடத்த - வாநரசேனைகளை நடத்தியழைத்துக்கொண்டு (இலங்கைக்குச்) செல்லுதற்பொருட்டு, தடம் ஆம் அலை வற்ற - பெரிதான கடல் வற்றுமாறு, வாளி தொட்டாய்க்கு - ஆக்நேயாஸ்திரத்தைப் பிரயோகித்தவனுமான உனக்கு,—வட மா மலையும் திருப்பாற்கடலும் வைகுந்தமும் போல்-வடக்கின்கணுள்ள சிறந்ததிருமலையான திரு

வேங்கடமலையும் திருப்பாற்கடலும் ஸ்ரீவைகுண்டமும் (நிற்றற்கும் கிடத்தற்கும் இருத்தற்கும் தனித்தனிஇடமாதல்)போல,—என் தனி நெஞ்சமே-எனது மனமொன்றுதானே, அலைவு அற்று நின்றும் கிடந்தும் இருப்பதற்கு இடம் ஆம் - ஸ்திரமாக நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருத்தல் சயநத்திருக்கோலமாக எழுந்தருளியிருத்தல் வீற்றிருந்ததிருக்கோலமாக எழுந்தருளியிருத்தல் என்ற மூன்றுக்கும் ஒருங்கேஉரிய இடமாம்; (எ-று.)

நின்றதிருக்கோலமாகவும் கிடந்ததிருக்கோலமாகவும்வீற்றிருந்ததிருக்கோலமாகவும் எம்பெருமானை அடியேன் அன்போடு தியானித்தல்பற்றி அப்பெருமான் நான்நினைத்தபடியெல்லாம் எனது மனத்தில் வந்து எழுந்தருளியிருக்கின்றனனென்பது தோன்ற, இங்ஙனங் கூறினர். ("நிற்பதும் மொர்வெற்பகத் திருப்பு விண் கிடப்பதும்,நற்பெருந்திரைக்கடலுள் நானிலாதமுன்னெலாம், அற்புதன் னனந்தசயன னாதிபூதன் மாதவன், நிற்பதும் மிருப்பதுங் கிடப்பதும் மென்னெஞ்சுளே," "கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும், புல்லென்றொழிந்தனகொ லேபாவம் - வெல்ல, நெடியான் நிறங்கரியான் உள்புகுந்துநீங்கான், அடியேனதுள்ளத்தகம்" என்ற ஆழ்வார்களருளிச்செயல்களை அடியொற்றியது. இது. 'அத்திருப்பதிகளைக் காற்கடைக்கொண்டு அவ்விடங்களில் நின்றும் இருந்தும் கிடந்தும் செய்தருளின நன்மையெல்லாம் என்நெஞ்சிலேஆய்த்து. நிஹீநாக்ரேஸரனான என்னை விஷயீகரித்தவாறே திருமலையில்நிலையும் மாறி என்நெஞ்சிலே நின்றருளினான்; தன் திருவடிகளில் போக்யதையை எனக்கு அறிவித்த பின்பு பரமபதத்திலிருப்பைமாறிஎன்நெஞ்சிலேபோகஸ்தாநமாயிருந்தான்; ......திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபடியைக்காட்டி என்னுடைய ஸாம்ஸாரிகமானதாபத்தைத்தீர்த்தபின்பு திருப்பாற்கடலிற்கிடையைமாறி என்நெஞ்சிலே கண்வளர்ந்தருளித் தன்விடாய்தீர்ந்தான்; இப்படி என்பக்கல்பண்ணின வியாமோகம் என்னால்மறக்கலாயிருக்கிறதில்லை யென்கிறார்' என்ற வியாக்கியானவாக்கியங்கள் இவ்விடத்துக்கும் பொருந்தும். "பருப்பதம் தாம்மன்னிநிற்பது பாற்கடல் பள்ளிகொள்வது, இருப்பது அந்தாமம் பண்டு இப்போதெலாம் இளஞாயிறன்ன, உருப்பதம்தாமதர்க்கியாமலன்பர்க்குதவழகர், திருப்பதம் தாமரைபோல்வார் உகப்பது என்சிந்தனையே" என்ற அழகரந்தாதிச்செய்யுளோடு இதனை ஒப்பிடுக.) திருவேங்கடத்திலே நின்றதிருக்கோலமாகவும், திருப்பாற்கடலிலே கிடந்ததிருக்கோலமாகவும், வைகுந்தத்திலே வீற்றிருந்ததிருக்கோலமாகவும் எம்பெருமான் எழுந்தருளியிருத்தலை முறையே சென்று இயைந்து குறித்தலால், பின்னிரண்டடி - முறைநிரனிறைப்பொருள்கோளின்பாற்படும்.

தனிநெஞ்சம்-ஒப்பற்ற மனமெனினுமாம்: திருவேங்கடம்முதலிய மூன்று திவ்வியதேசங்கள்போல நிற்றல் கிடத்தல் இருத்தல் என்ற மூன்றில் ஒவ்வொன்றற்கே உரியதாதலன்றி நெஞ்சம் அம்மூன்றற்கும் தான் ஒன்றே உரியதாதல்பற்றி 'தனிநெஞ்சம்' என்று சிறப்பித்துக்கூறியதாகக் கொள்க; இது வேற்றுமையணியின்பாற்படும். மூன்றுமடியில், மா-அழகுமாம். கடம்

மாமலை - மதசலத்தையுடைய பெரியமலை; எனவே, யானையாயிற்று. இங்கு, மலையென்பதை உவமையாகுபெய ரென்னலாம். வலியபெரியவடிவிலும், மதவருவிசொரிதலிலும் யானைக்கு மலை உவமை. அலை - கடலுக்குச் சினையாகுபெயர். (கசு)

கஎ. இருப்பதனந்தனிலெண்ணலில்வைகுந்தத்தென்பர்வெள்ளிப்
பருப்பதனந்தண்மலரோனறிகிலர் பாரளந்த
திருப்பதனந்தன்மதலைநிற்குந்திருவேங்கடமென்
பொருப்பதனந்தறவிர்ந்துயிர்காடொழப்போதுமினே.

(இ - ள்.) உயிர்காள் - சேதநர்களே !— "இருப்பது - (எம்பெருமான் தனது தலைமை தோன்ற) அரசுவீற்றிருக்கின்றது, எண்ணல் இல் வைகுந்தத்து - (இன்னதன்மையதென்று) சிந்தித்தற்கும்இயலாத ஸ்ரீவைகுண்டத்தில், அனந்தனில் - ஆதிசேஷனாகிய திவ்வியசிங்காதனத்தின்மீது,' என்பர் - என்றுசொல்வர் (மெய்யுணர்ந்த ஆன்றோர்); (அத்திருக்கோலத்தை), வெள்ளி பருப்பதன் - வெள்ளிமலையாகிய கைலாசத்தி லிருப்பவனான சிவனும்,அம் தண் மலரோன்-அழகிய குளிர்ந்த (அத்திருமாலின் நாபித்) தாமரைமலரில்தோன்றியவனான பிரமனும், அறிகிலர் - கண்டறியுந் தரமுடையாரல்லர்; (அதுநிற்க):—பார் அளந்த திரு பதன் - உலகங்களை அளந்த திருவடிகளை யுடையவனும்,நந்தன் மதலை-நந்தகோபன்வளர்த்தகுமாரனுமான திருமால், நிற்கும் - (யாவரையும் ஈடேற்றுதற்கு அடியவர்க்கெளியனாய்) நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருக்குமிடமான, திருவேங்கடம் என் பொருப்புஅது-திருவேங்கடமென்ற மலையை, அனந்தல் தவிர்ந்து தொழ-சோம்பலொழிந்து வணங்குதற்கு, போதுமின் - வாருங்கள்; (எ - று.)

திருப்பதியாத்திரைசென்று திருவேங்கடமுடையானைச்சேவித்து வாழ்வுபெறுதற்கு அனைவரையும் உடனழைக்கிறார்; தம்மைப்போலவே உலகத்தாரும்உய்யவேண்டுமென்னும் பரசமிருத்தி யுடையவராதலால்."சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள் - என்றும், புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும், அணையாம் திருமாற்கு அரவு" என்றபடி ஆதிசேஷன் திருமாலுக்குப் பலவகைக் கைங்கரியங்கள் புரிதலால், 'இருப்ப தனந்தனில்' எனப்பட்டது; "தண் அநந்தசிங்காதன" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். மீளாவுலகமாகிய பரமபதம் சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத் தாதலின், 'எண்ணலில் வைகுந்தம்' எனப்பட்டது; "முந்தமறையினின்றல்லாதெத்தேவர்க்கு முன்னவரிது, அந்தமிலது அரங்கன்மேவு வைகுந்தமானதுவே" என்றார் திருவரங்கத்துமாலையிலும். திரிமூர்த்திகளில் மற்றையிருமூர்த்தியரும் அறிகில ரெனவே, பிறர்அறியாமை சொல்லவேண்டாதாயிற்று; "பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய வித்தகன்" என்பதுங் காண்க.

நந்தன் - கண்ணனை வளர்த்த தந்தை. வசுதேவனும் தேவகியும் கம்சனாற் சிறையிலிருத்தப்பட்டு வடமதுரையில் தளைபூண்டிருக்கையில், திருமால் தேவகியினிடம் எட்டாவதுகருப்பத்திற் கண்ணனாய் அவதரிக்க, அக்

குழந்தையைக் கம்சன் கொல்லக்கூடு மென்ற அச்சத்தால், தாய்தந்தையர் அத்தெய்வக்குழவியின் அநுமதி பெற்று அந்தச்சிசுவை அது பிறந்தநடுராத்திரியிலேயே திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்க்கெல்லாந்தலைவனான நந்தகோபனது திருமாளிகையிலே இரகசியமாகக் கொண்டுசேர்த்துவிட்டு, அங்கு அப்பொழுது அவன்மனைவியான யசோதைக்கு மாயையின் அம்சமாய்ப் பிறந்திருந்த தொரு பெண்குழந்தையை எடுத்துக்கொண்டுவந்து விட, அதுமுதற் கம்சனைக் கொல்லுகிறவரையிற் கண்ணபிரான் அக்கோகுலத்திலேயே நந்தகோபன்குமாரனாய் யசோதைவளர்க்க வளர்ந்தருளின னென்று உணர்க.

அநந்தன் என்ற வடசொல் - ந அந்த என்று பிரிந்து, பிரளயத்திலும் அழிவில்லாதவ னென்று காரணப்பொருள்படும். பருப்பதம்-பர்வதமென்ற வடசொல்லின் சிதைவு. பொருப்பது என்பதில், 'அது' என்பது - பகுதிப்பொருள்விகுதி. (கஎ)

கஅ. போதாரவிந்தவரையும்புகாவண்டபுற்புதத்தின்
மீதாரவிந்தவினைதீர்க்கவேண்டும் விண்மண்ணுக்கெல்லா
மாதார விந்தளந்தேன்பாடும்வேங்கடத்தப்ப நின்பொற்
பாதாரவிந்தமல்லாலடியேற்கொருபற்றில்லையே.

(இ - ள்.) விண் மண்ணுக்கு எல்லாம் ஆதார - விண்ணுலகத்துக்கும் மண்ணுலகத்துக்கும் மற்றெல்லாவுலகங்கட்கும் ஆதாரமாயுள்ளவனே! தேன் இந்தளம் பாடும் வேங்கடத்து அப்ப - வண்டுகள் இந்தளமென்னும் பண்ணைப்பாடுதற்கிடமான (சோலைகள்சூழ்ந்த) திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிற சுவாமீ!—நின் பொன் பாத அரவிந்தம் அல்லால் - உனது பொலிவுபெற்ற திருவடித்தாமரைமலரே யன்றி, அடியேற்கு ஒரு பற்று இல்லை-தாசனான எனக்கு வேறொருபற்றுக்கோடு இல்லை; போதார் அவிந்த வரையும் புகா - பிரமர்கள் அழியுமளவும் ஒடுங்குதலில்லாத [பிரமன் அழியும்போது உடனழியும் இயல்பினவான], அண்ட புற்புதத்தின் - நீர்க்குமிழிகள்போன்ற அண்டகோளங்களுக்கு, மீது - மேலேயுள்ளதான பரமபதத்தில், ஆர - (யான்சென்று) சேருமாறு, இந்தவினை தீர்க்கவேண்டும் - (என்னால் ஈட்டப்பட்ட) இக்கருமங்களையெல்லாம் (நீயே) ஒழித்தருளவேண்டும்.

'போதார்'என்பதற்கு, ஏழ் உ - ஆம்பாட்டில் "போதன்"என்றதற்குக் கூறிய காரணப்பொருளைக் கொள்க. அண்டங்கள் அநந்த மென்றும், அவை ஒவ்வொன்றற்கும் ஒவ்வொருபிரமனுள னென்றும், அவையெல்லாம் ஆதியிற் பிரமனுடன் தோன்றி அந்தத்திற் பிரமனுடனே யொடுங்கு மென்றும், இப்படிப்பட்ட அநந்தகோடி பிரமாண்டங்க ளடங்கிய மூலப்பிரகிருதிக்கு மேலுள்ளது எம்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற முத்தியுலகமாகிய பரமபத மென்றும் உணர்க. "பிரமர்வாழண்டங்கள்மீதாம் பரனூர்" என்றார் திருவேங்கடமாலையிலும். அண்டங்கள் நீரிற்குமிழிபோலத் தோன்றியழியும் இயல்பின வாதலால், 'அண்ட புற்புதம்' எனப்பட்டன; ("ஆழிப்பிராண டிக்கீழுற்பவித்தழியும், பரவையின்மொக்குளேப்போற் பலகோடிபகிரண

டமே" என்ற திருவரங்கத்தந்தாதியையும், "வாரித்தலமுங் குலபூதரங்களும் வானு முள்ளே,பாரித்துவைத்த விவ்வண்டங்கள்யாவும் படைக்கமுன்னுள், வேரிப்பசுந்தண்டுழாயரங்கேசர் விபூதியிலே, மூரிப்புனலிற் குமிழிகள்போல முளைத்தனவே" என்ற திருவரங்கத்துமாலையையுங் காண்க.) 'புற்புதம்' என்பதற்கு ஏற்ப,'புகா' எனப்பட்டது; தான்தோன்றியவிடத்திலேயே புக்குஒடுங்குதல் நீர்க்குமிழியின் இயல்பாதல் காண்க. "நிலமிசை நீடுவாழ்வார்" என்றாற்போல,'அண்டபுற்புதத்தின் மீதுஆர'என்றார். அழியுமியல்பினவான எல்லாவுலகங்கட்கும் மேலாயது அழியாவியல்பினதான வீட்டுலகமென்க. விந்தம் வினை என்று பதம்பிரித்து, விந்தியமலைபோன்ற வினைத்தொகுதி யெனினுமாம்.

எல்லாவுலகங்கட்குங் கீழே எம்பெருமான் ஆதிகூர்மரூபியாயிருந்துகொண்டு அவற்றையெல்லாம் தாங்குதலும், பிரளயகாலத்தில் அனைத்துலகத்தையும் அப்பெருமான் வயிற்றில்வைத்திருந்து பாதுகாத்தலும், பகவானது திவ்வியசக்தியின்உதவியினாலன்றி யாதொருபொருளும் எங்குமிலை பெறாமையும் பற்றி, 'விண்மண்ணுக்கெல்லாம் ஆதார' என்றார்; "தலமேழுக்கு மாதாரா"என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். ஸ்வாமீ என்று வடமொழியிலும், அப்பன் என்று தென்மொழியிலும் திருவேங்கடமுடையானுக்குத் திருநாமம் வழங்கும். பற்று - புகலிடம், கதி, ரக்ஷகம். அண்டபுத்புதம்,, பாதாரவிந்தம் - முன்பின்னாகத் தொக்க உவமைத்தொகை; வடமொழித்தொடர். (கம)

[தலைவனைப் பிரிந்த தலைவியின் வருத்தங் கண்டு ஆற்றளான தோழி சந்திரனைநோக்கி இரங்கிக்கூறல்.]

கக. பற்றியிராமற்கலைபோய்வெளுத்துடல்பாதியிரா
வற்றியிராப்பகனின்கண்பனிமல்கிமாசடைந்து
நிற்றி யிராகமொழிச்சியைப்போனெடுவேங்கடத்துள்
வெற்றியிராமனைவேட்டாய்கொனீயுஞ்சொல்வெண்மதியே.

(இ - ள்.) வெள் மதியே - வெண்ணிறமான சந்திரனே!—பற்றி இராமல் - (ஓரிடத்திலே) நிலைத்துத்தங்கியிராமல் (எங்கும்உழன்றுகொண்டு), கலை போய் - ஒளிமழுங்கப்பெற்று அல்லது உடல்மெலிதலால் ஆடைசோரப்பெற்று [கலைகள் குறைந்து நீங்கப்பெற்று],வெளுத்து - நிறம்வெளுத்து, உடல் பாதி இரா வற்றி - வடிவம்(முன்புஇருந்தவளவிற்)பாதியும்இராதபடி தேயப்பெற்று, இரா பகல் - இரவிலும் பகலிலும், நின் கண் பனி மல்கி - உனதுகண்கள் நீர்நிரம்பப்பெற்று [உன்னிடத்துப் பனிநிரம்பப்பெற்று], மாசு அடைந்து - (நீராடாது தரையிற்புரளுதலால் உடம்பில்) தூசிபடியப்பெற்று [களங்கமுற்று], இராகம் மொழிச்சியை போல் நிற்றி - இசைப்பாட்டுப்போ லினிய சொற்களையுடையவளான இத்தலைமகளைப் போன்று நிற்கிறாய்; (அவள்போலவே), நீயும்—, நெடு வேங்கடத்துள் வெற்றி இராமனை வேட்டாய் கொல் - உயர்ந்த திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்

கிற சயத்தையுடைய இராமனாய் அவதரித்தவனான திருமாலை விரும்பினை யோ? சொல் - சொல்வாய்; (எ - று.)

"நைவாயவெம்மேபோல் நாண்மதியே நீயிந்நாள், மைவானிருளகற் றாய் மாழாந்து தேம்புதியால், ஐவாயரவணைமே லாழிப்பெருமானார், மெய் வாசகங்கேட் டுன்மெய்ந்நீர்மைதோற்றாயே" என்ற திருவாய்மொழியைத் தழுவியது இது. அது, தலைவிகூற்று; இது, அவ்வாறே தோழிகூற்றாகநிகழ்ந் தது. இத்துறை, தன்னுட்கையாறெய்திடுகிளவி யெனப்படும்; அதாவது - தமக்குநேர்ந்ததுன்பத்தைத் தம்ஆற்றாமையாற் பிறிதொன்றன்மேலிட்டுச் சொல்லுஞ் சொல். இது தலைவி தோழி என்னும் இருவர்க்கும் உரியதென் பதை, இறையனாரகப்பொருளுரைகொண்டும் உணர்க. (ஆயின், தம்முட் கையாறெய்திடுகிளவி யென்று பன்மையாற்சொல்லாது தன்னுட்கையா றெய்திடுகிளவி யென ஒருமையாற்சொல்லியது எற்றிற்கோ வெனின்,— தோழி தலைமகள் என இருவரையும் வேறுபடுத்திக்கருதாது ஒருவராகக் கருதற்பொருட்டாக ஒருமையாற்புணர்த்தா ரென்க.) இங்ஙனஞ்சொல் லுதலின் பயன், களவுப்புணர்ச்சியொழுக்கத்திலேநின்று சிறைப்புறத்தா னாகிய தலைமகன் கேட்டு விரைவில் வெளிப்படையாகவந்து இத்தலைமகளை மணஞ்செய்து கூடுபவனாதல். தோழிக்குத் தலைவிபக்கலுள்ள பேரன்பினால் அவள் தலைவனைப்பிரிந்துவருந்துகின்றபொழுது கட்புலனாகும்பொருளெல் லாம் அவள்போலவேவருந்துகின்றனவாகத் தோன்றுதலால், சந்திரனை நோக்கி 'நீயும் வேட்கைநோயால் ஈடுபடுகின்றனையோ?' என்றாள்.

இச்செய்யுளில் சிலேடையுவமையணி காண்க; அதாவது - சொற் பொதுமைகாரணமாக வரும் ஒப்புமை. உபமானமாகிய தலைவிக்கு—பற்றி யிராமை - விரகதாபத்தால் ஓரிடத்து நிலைகொள்ளாமை; கலைபோதல் - ஒளிகுறைதல்: அல்லது, உடல்மெலிய ஆடைசோர்தல்; வெளுத்தல்-மேனி நிறம்மாறுதல்; உடல்பாதியிராவறுதல் - உடம்புமெலிதல்; இராப்பகல் கண் பனிமல்குதல் - அல்லும்பகலும் அநவரதமும் கண்ணீர்பெருகப் புலம் புதல்; மாசடைதல்-பிரிந்தகாலத்தில் உடல்மாசுதீரநீராடுதலின்றித்தரையிற் புரளுதலால் உடம்பில்தூசிபடிந்திருத்தல். உபமேயமாகிய சந்திரனுக்கு— பற்றியிராமை - ஒருபொழுதேனும் அசைவற்று ஓரிடத்துநில்லாமல் வான வீதியில் எப்பொழுதுஞ் சஞ்சரித்தல்; கலைபோதல் - கிருஷ்ணபக்ஷத்தில் நாளடைவிலே கலைகுறைதல்; (கலை-சந்திரன்பங்கு.) வெளுத்தல்-இயற்கை நிறம்; உடல்பாதியிராவறுதல் - கிருஷ்ணபக்ஷத்தில் தேய்தலால்; இராப் பகல் கண் பனி மல்குதல் - எப்பொழுதும் பனிபோலக்குளிர்ந்தகிரணங் களைத் தன்னிடத்திலே யுடையவனாதல். சந்திரனுக்கு வடமொழியில் 'ஹிமகரன்' என ஒருபெயர்வழங்குதலுங் காண்க. மாசுஅடைதல் - களங்க முடைமை. இது, செம்மொழிச்சிலேடை; சொற்கள் வெவ்வேறுவகையாகப் பிரியாது ஒருவகையாகவே பிரிந்து இருபொருள்பட்டதனால்.

முதலடியிறுதியில், இரா என்பது - இராமல் என்பதன் விகாரம்: ஈறு கெட்டஎதிர்மறைவினையெச்சம். பாதி - பகுதி யென்பதன் மரூஉ. ராகம்,

ராமன் - வடசொற்கள். மொழிச்சி - பெண்பாற் பெயர். ராமன் என்ற திருநாமம் - தனது திருமேனியழகினாலும் நற்குணநற்செய்கைகளாலும் யாவரையும் தன்பக்கல் மனங்களித்திருக்கச்செய்பவ னென்று காரணப்பொருள்படும். "ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்" என்றபடி இராமமூர்த்தி சௌந்தரியாதி கலியாணகுண கணபரிபூர்ணனான உத்தமநாயகனாதலால், அவனை யெடுத்துக்கூறினாள்.

எம்பெருமானோடுபூர்ணாநுபவத்தைப்பெறாமையால் ஐயங்கார் வருந்தி ஒருநிலைகொள்ளாது ஒளிகுறைய நிறம்மாறி உடல்மெலிந்து இரவும்பகலும் கண்ணீர்பெருகக் கீழ்விழுந்துபுரண்டு மாசுபடிய நின்ற நிலையைக் கண்ட அன்பர்கள் அவர்பக்கல் தமக்குஉள்ள அன்புமிகுதியால் தம்கண்ணெதிர்ப் படுகின்ற பொருள்களையெல்லாம் எம்பெருமானைப்பிரிந்துவருந்துகின்றனவாகக்கொண்டு சந்திரனைநோக்கி 'நீயும் இவர்போலப் பகவத்விச்லேஷத்தால் நோவுபடுகின்றனையோ?' என்று வினவுகின்றன ரென இதற்கு உள்ளுறைபொருள் காண்க; விவரம் தானே விளங்கும். (கக)

உ0. மதியாதவன்கதிர்மின்மினிபோலொளிர்வைகுந்தந்தா
மதியாதவன்றரவாழ்ந்திருப்பீர் வடவேங்கடவன்
மதியாதவன்கடத்துட்டயிர்வாய்வைத்தமாயப்பிரான்
மதியாதவனுரங்கீண்டான்கழல்சென்னிவைத்திருமே.

(இ - ள்.) கடத்துள் - குடத்தில் வைத்திருந்த, மதியாத வல் தயிர் - கடையாத கட்டித்தயிரை, வாய்வைத்த-(கிருஷ்ணாவதாரத்திற்களவுசெய்து) உண்டருளிய, மாயம்பிரான்-மாயையையுடைய பெருமானும், மதியாதவன் உரம் கீண்டான் - (தன்னை)மதியாதவனான இரணியாசுரனுடைய மார்பை (க் கைந்நகத்தால்) இடந்தவனுமான, வட வேங்கடவன் - வடக்கின்கணுள்ள திருவேங்கடமலையை யுடையானது, கழல் - திருவடிகளில்,சென்னி வைத்திரும்-தலையைவைத்து வணங்குங்கள்; (அங்ஙனம் வணங்குவீராயின் அதன்பயனாக),—மதி ஆதவன் கதிர் மின்மினி போல் ஒளிர் வைகுந்தம் - சந்திரன்சூரியன்என்ற இருசுடர்களின்ஒளியும்(தனதுபேரொளியின்முன்) மின்மினிப்பூச்சிபோலாகும்படி (திவ்வியதேஜோமயமாய்) விளங்குகின்ற ஸ்ரீவைகுண்டத்தை, தாமதியாது அவன் தர - காலதாமதஞ்செய்யாமல் அப்பெருமான் (உங்கட்குக்) கொடுத்தருள, வாழ்ந்து இருப்பீர்-(பெற்று நீங்கள் அங்கு என்றும்) நிலையாக வாழ்வீர்கள்; (எ - று.)

"சரணமாகுந் தனதா ளடைந்தார்க்கெல்லாம், மரணமானால் வைகுந்தங்கொடுக்கும் பிரான்" என்ப வாதலால், 'தாமதியாது தர' என்பதற்கு - இப்பிறப்பின்முடிவிலேகொடுக்க என்று பொருள்கொள்க. மின்மினி-இருளில்மின்னுவதொரு பறக்கும்பூச்சி. வன்மையைக்கடத்துக்கும்அடைமொழியாக்கலாம். 'அவன்' என்ற சுட்டுப்பெயர் 'வடவேங்கடவன்' என்ற இயற்பெயரின்முன் வந்தது, செய்யுளாதலின்; "செய்யுட்கு எற்புழி" என்பர் நன்னூலாரும். (உ0)

உக. இருபதுமந்தரத்தோளுமிலங்கைக்கிறைவன்சென்னி
யொருபதுமந்தரத்தேயறுத்தோ னப்ப னுந்திமுன்னா
டருபதுமந்தரவந்தனநான்முகன்றான்முதலா
வருபதுமந்தரமொத்தபல்சீவனும்வையமுமே.

(இ - ள்.) இலங்கைக்கு இறைவன் - இலங்காபுரிக்குஅரசனான இரா வணனுடைய, இருபது மந்தரம் தோளும் - மந்தரமலைபோன்ற இருபது தோள்களையும், சென்னி ஒருபதும் - பத்துத்தலைகளையும், அந்தரத்தே அறுத்தோன் - ஆகாயத்தே அறுத்திட்டவனான, அப்பன் - திருவேங்கடமுடையானுடைய, உந்தி முன் நாள் தரு பதுமம் - திருநாபி ஆதிகாலத்திற்பூத்த தாமரைமலர் தர - படைக்க,—நான்முகன் தான் முதல் ஆ வரு - பிரமன் முதலாக வருகின்ற. பதுமம் தரம் ஒத்த-பதுமமென்னும் தொகையளவின வான, பல் சீவனும் - பலபிராணிவர்க்கங்களும், வையமும் - உலகங்களும், வந்தன - தோன்றின; (எ - று.)

"ஒருநாலுமுகத்தவனோ டுலகீன்ற வென்பரதன், திருநாபிமலர்ந்ததல்லால் திருவுளத்தி லுணராயால்" என்றார் திருவரங்கக்கலம்பகத்தும். குலபர்வதங்களிலொன்றாய்ப் பாற்கடலைக்கடைந்த மலையாகிய மந்தரம், போரிற் பகைவர்சேனைக்கடல்கலக்கவல்ல வலிய பெரியதோள்களுக்கு உவமை கூறப்பட்டது. இறைவன் - இறைமையென்றபண்பினடியாப்பிறந்தபெயர்; வ் - பெயரிடைநிலை. இராவணனது தோள்களும் தலைகளும் ஆகாயத்தை யளாவிவளர்ந்துள்ளன வாதலால், அவற்றை 'அந்தரத்தேயறுத்தோன்' என்றார். 'அந்தரத்தே யறுத்தோன்'என்பதற்கு-(உடம்பினின்று)வேறுபடும்படி அறுத்திட்டவ னென்றும், (போரின்)இடையிலே அறுத்திட்டவ னென்றும் பொருள்கொள்ளலாம்; அந்தரம் - ஆகாயம். வேறுபாடு, இடை. பத்மம், ஜீவன் - வடசொற்கள். நான்முகன் - நான்குதிசையையும் நோக்கிய நான்குமுக முடையவன். தான் - அசை. பதுமமென்பது - ஒரு பெருந்தொகை; அது, கோடியினாற் பெருக்கிய கோடி. ஒன்று, பத்து, நூறு. ஆயிரம், பதினாயிரம், நூறாயிரம் [லக்ஷம்], பத்துலக்ஷம், நூறுலக்ஷம் [கோடி], பத்துக்கோடி, நூறுகோடி, ஆயிரங்கோடி, பதினாயிரங்கோடி, லக்ஷங்கோடி, பத்துலக்ஷங்கோடி,நூறுலக்ஷங்கோடி என முறையே எண்வகுப்புக் காண்க: இங்ஙனம் ஒன்றுமுதற் பதினைந்தாவதுதானமான நூறுலக்ஷங்கோடியே பதுமமென வழங்கும்; (100000000000000). கோடாகோடி யெனவும் படும். இங்குப் பதுமமென்றது, பெருந்தொகை யென்றவாறும். வையம் - (பொருள்களை)வைக்கும் இடம். (உக)

உஉ. வையமடங்கலுமோர்துகள் வாரியொருதிவலை
செய்யமடங்கல்சிறுபொறிமாருதஞ்சிற்றுயிர்ப்பு
துய்யமடங்கலிலாகாயந்தான்விரற்றோன் றும்வெளி
வெய்யமடங்கல்வடிவானவேங்கடவேதியற்கே.

(இ - ள்.) வெய்ய மடங்கல் வடிவு ஆன - பயங்கரமான நரசிங்கவடிவமாகிய, வேங்கட வேதியற்கு - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவ

னும் வேதங்களினால்எடுத்துரைக்கப்படுபவனுமான எம்பெருமானுக்கு,— (ஐம்பெரும்பூதங்களில்), வையம் அடங்கலும் - பூமிமுழுவதும், ஓர் துகள் - ஒருதூசியாம்: வாரி - ஜலம்முழுவதும், ஒரு திவலை - ஒரு நீர்த்துளியாம்; செய்ய மடங்கல் - செந்நிறமான அக்கினிமுழுவதும், சிறு பொறி - சிறிய ஓர்அனற்பொறியாம்; மாருதம் - காற்றுமுழுவதும், சிறு உயிர்ப்பு - சிறிய ஒருமூச்சாம்; தூய்ய மடங்கல் இல் ஆகாயம் தான்-சுத்தமானதும் மடங்குதலில்லாது பரந்ததுமான ஆகாயம்முழுவதும், விரல் தோன்றும் வெளி - விரல்களினிடையே தோன்றுகின்ற சிறிய வெளியிடமாம்; (எ - று.)

இரணியனைச் சங்கரித்தற்பொருட்டு நரசிங்கவடிவங்கொண்ட திருமால் விசுவரூபமாய்வளர்ந்த வடிவத்தின் பெருமையை யெடுத்துக்கூறுவார், அப்பெருவடிவுக்குமுன் பஞ்சமகாபூதங்கள் மிகச்சிறுபொருளாகத்தோன்றுதலை விளக்கினார். மற்றநான்குபூதங்களும் தன்னுள் ஒடுங்கப்பெற்றுநிற்கும் பெருமைதோன்ற, ஆகாயத்திற்கு 'மடங்கலில்'என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. தான்-அசை. வாரி, மாருதம், ஆகாசம் - வடசொற்கள். மடங்கல் - (பிடரிமயிர்) மடங்குதலையுடைய தென ஆண்சிங்கத்துக்குக் காரணக்குறி; தொழிலாகுபெயரென்றுவது, அல் - கருத்தாப்பொருள்விகுதியென்றுவது இலக்கணங் காண்க. வேதியன் - வேதவேத்யன், வேதப்ரதிபாத்யன். 'அடங்கலும்' என்பதை எல்லாப்பூதங்கட்கும் எடுத்துக் கூட்டுக. தூய்ய என்ற குறிப்புப்பெயரெச்சத்தில், தூய்மையென்ற பண்புப்பகுதியின் ஈறு போய் முதல்நெடில் குறுகிற்று.

இச்செய்யுளில், பஞ்சபூதங்களும் முறைபிறழாமற் சொல்லப்பட்டது, அரதனமாலையணி; வடநூலார் ரத்நாவளியலங்கார மென்பர்: சொல்லும் பொருள்களை முறைவழுவாதுவரச்சொல்லுதல், இதன் இலக்கணம். (உஉ)

உ௩. வேதாவடமலைவெங்காலன்கையில்விடுவித்தென்னை
மாதாவடமலைகொங்கையுண்ணுதருண் மண்ணளந்த
பாதா வடமலைமேற்றுயின்றாய் கடற்பார்மகட்கு
நாதா வடமலையா யலர்மேன்மங்கைநாயகனே.

(இ - ள்.) மண் அளந்த பாதா - பூமியை யளந்த திருவடியை யுடையவனே! அலைமேல் வடம் துயின்றாய் - பிரளயப்பெருங்கடலில் ஆலிலையின்மீது பள்ளிகொண்டு யோகநித்திரைசெய்பவனே! கடல் பார் மகட்கு நாதா - கடல்சூழ்ந்த நிலவுலகத்தின் அதிதேவதையான பூமிப்பிராட்டிக்குத் தலைவனே! வட மலையாய் - வடக்கிலுள்ள திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவனே! அலர்மேல் மங்கை நாயகனே - அலர்மேல்மங்கைப் பிராட்டிக்குக் கணவனே!—என்னை—, வேதா வடம் அலை வெம் காலன் கையில் விடுவித்து-பிரமனும் பாசத்தாற்கட்டிவருத்துகிற கொடிய யமனும் என்கிற இவர்களது கைகளினின்று விடுதல்பண்ணி,மாதா வடம் அலைகொங்கை உண்ணாது-(யான் இனி) ஒருதாயினது ஆரங்கள்புரளப்பெற்ற தனங்களின் பாலை உண்ணாதபடி, அருள் - கருணைசெய்வாய்; (எ - று.)

படைத்தற்கடவுளான பிரமனது கைவசத்தினின்று விடுவித்தலாவது- பிறப்புத்துன்பமில்லாதபடி செய்தல். பிராணிகளையழிப்பவனான யமனது கைவசத்தினின்று விடுவித்தலாவது - மரணவேதனையும் நரகத்துன்பமுமில்லாதபடி செய்தல். மாதாகொங்கை யுண்ணாதருளுதலாவது - மீளவும் பிறப்பில்லாதபடி செய்தல். எனக்குஜநநமரணதுக்கங்களைப்போக்கி யான் மீண்டும் ஒருபிறப்பெடுக்கவேண்டாதபடி எனதுகருமங்களையெல்லாந்தொலைத்து மீளாவுலகமாகியமுத்தியைஎனக்குத்தந்தருளவேண்டுமென்றபொருளை இங்ஙனம் வேறுவகையாற்கூறினது, பிறிதினவிற்சியணி. வேதாஎன்றவடமொழிப்பெயர் - விதித்தற்கடவுளென்றும், காலன் என்ற வடமொழிப்பெயர் - (பிராணிகளின்) ஆயுட்காலத்தைக் கணக்கிடுபவனென்றும் காரணப்பொருள்படும். வடம் - கயிற்றுவடிவமான யமனாயுதம். வடம் மலை என்றும் பதம்பிரிக்கலாம்: மலைதல் - பொருதல். கையில்—இல் - ஐந்தனுருபு, நீக்கம். வடம் - மணிவடம். அலர்மேல்மங்கை என்றது, திருவேங்கடமுடையானது தேவியாரின் திருநாமம்; "அகலகில்லேனிறையுமென் றலர்மேன் மங்கை யுறைமார்பா, ........திருவேங்கடத்தானே" என்ற திருவாய்மொழியைக் காண்க: தாமரைமலரின்மேல் வாழ்கின்றவ ளென்பது பொருள்; பத்மாவதீ என்ற வடமொழித்திருநாமமும் இப்பொருள்படுவதே. 'பார்மகட்கு நாதா' என்பதற்கு - பூமிதேவியின் பெண்ணான [பூமியினின்று தோன்றியவளான] சீதாபிராட்டிக்குக் கொழுநனே யென்றும் உரைக்கலாம். (உங)

உச. நாயகராத்திரியுஞ்சிலதேவர்க்குநாணிலைகொ
றாயகராத்திரிமூலமெனாமுனந்துத்திப்பணிப்
பாயகராத்திரிமேனியம்மான் பைம்பொன்வேங்கடவன்
றீயகராத்திரிசக்கரத்தாற்கொன்றசீர்கண்டுமே.

(இ - ள்.) தூய கராத்திரி - பரிசுத்தமான யானை, மூலம் எனா முனம்- ஆதிமூலமேயென்றுகூப்பிடுதற்குமுன்னமே [கூப்பிட்டவுடனே வெகுவிரைவில் என்றபடி], துத்தி பணி பாயகம் ராத்திரி மேனி அம்மான் பைம்பொன் வேங்கடவன் - புள்ளிகளையுடைய படமுள்ள ஆதிசேஷனாகிய சயநத்தையும் இருள்போலுங் கரியதிருமேனியையுமுடைய தலைவனும் பசும்பொன்விளையுந்திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவனுமான எம்பெருமான், தீய கரா - (அந்தயானையைக்கௌவியிருந்த) கொடிய முதலையை, திரி சக்கரத்தால் கொன்ற - சுழற்றிவிட்ட சக்கராயுதத்தினாற் கொன்ற, சீர் - சிறப்பை, கண்டும் - பார்த்திருந்தும்,—நாயகர் ஆ திரியும் சில தேவர்க்கு நாண் இலைகொல் - கடவுளரென்றுதிரிகின்ற வேறுசில தேவர்களுக்கு வெட்கமில்லையோ? (எ - று.)

திருமாலே பரம்பொரு ளென்ற உண்மையை இங்ஙனங் காரணங்காட்டி வெளியிட்டார். கஜேந்திராழ்வான் இன்னதெய்வமென்று பெயர் குறியாது 'ஆதிமூலமே!' என்று பொதுப்படக்கூப்பிட்டபொழுது திருமாலல்லாத பிறதேவரெல்லாரும் தாம்தாம் அச்சொல்லுக்குப்பொருளல்லரென்று கருதி யொழிய, அதற்குஉரிய அத்திருமால்தானே வந்து அருள்

செய்தமை கருதத்தக்கது; "அழைத்தது செவியிற்கேட்டும் அயனரனாதியா யோர், புழைக்கைவெங்கரிமுன் காப்பப் புகுந்தில ராதியாகித், தழைத்த காரணனேயென்றதனிப்பெயர்ப்பொருள் யாமல்லோம், இழைத்தகாரியம் யாமாவோ மென்செய்துமாலின் றென்றார்" என்ற ஸ்ரீபாகவதத்தையுங் காண்க. "கானேந்துதாமரைவாவியுளானை கராவினையர்ந்து, ஊனேந்திமூலமென்றோதியநாட்சென்றுதவுகையால், தேனேந்துசோலையரங்கனல்லால்தெய்வமில்லையென்றே, மானேந்துகையன் மழுவேந்திறு ளிக்தமாநிலத்தே", "மத்தக் கரியைக் கராப்பற்றிநின்றதொர் வாவியுள்ளே, சித்தந்தெளிந்து முறையிடும்போது செழுந்துளவக், கொத்துக்கிளர்முடிக் கோவிந்தவென்றது கூப்பிட்டதோ, செத்துக்கிடந்தனவோ கெடுவீருங்கள்தெய்வங்களே", "வெங்கண்வேழமூலமென்ன வந்த நுங்கள்தேவனே" என்று இவ்வாசிரியர் பிறவிடங்களிற் கூறியவை இங்கு ஒப்புநோக்கத்தக்கன.

மூலமென்றவுடனேகொன்றவென விரைவுகுறித்தற்பொருளில் 'மூல மெனுமுனம் கொன்ற' எனக் காரணத்தின்முன் காரியம் நிகழ்ந்ததாகக் கூறினது, மிகையுயர்வுநவிற்சியணி. ஆக, இல்லை, என்று, முன்னம் என்பன—ஆ, இலை, எனு, முனம் என்று தொகுத்தல்விகார மடைந்தன. பரம்பொருளுணர்ச்சி கைகூடப்பெற்றதனால், 'தூயகராத்திரி' என்று சிறப்பித்துக்கூறினர். கராத்திரி - தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர்; கர அத்ரி என்றுபிரிந்து, துதிக்கையையுடையமலை யென்றுபொருள்படும்: எனவே, யானையாயிற்று; 'கைம்மலை' என்பது, இப்பொருள்கொண்ட தமிழ்ப் பெயர்; பிறகுறிப்பு. பணம் - படம்; அதனையுடையது பணீ என வடமொழிக்காரணக்குறி; இது ஈயீறு இகரமாய்ப் பணியென நின்றது. பாய் அகம்-பாயின்இடம். ராத்ரி, க்ராஹம், சக்ரம், ஸ்ரீ என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. ராத்திரிமேனி-"இருளன்னமாமேனி." ராத்திரி இருளுக்குக் காலவாகுபெயர். அம்மான் - அந்த மகான். பொன் குறிஞ்சிநிலத்துக் கருப்பொருள்களுள் ஒன்றாதலின், 'பைம்பொன்வேங்கடம்' எனப்பட்டது; "பொன்னுமணியும் பொலிந்தோங்கிப் பார்மகட்கு, மின்னுமணிமுடியாம் வேங்கடமே" என்றார் திருவேங்கடமாலையிலும். தீய கரா - கொண்டது விடாத மூர்க்ககுணமுடைய முதலை. கண்டும், உம் - உயர்வுசிறப்பு. (உச)

உரு. கண்டவனந்தரங்காலெரிநீர்வையங்காத்தவைமீண்
டுண்டவனந்தரங்கத்துறைவா னுயர்தந்தைதமர்
விண்டவனந்தரமேலவன் வேங்கடமாலடிமை
கொண்டவனந்தரத்தும்பேர்நினைக்கவுங்கூற்றஞ்சுமே.

(இ - ள்.) அந்தரம் - ஆகாயம், கால் - காற்று, எரி - நெருப்பு, நீர் - ஜலம், வையம் - பூமி, (என்ற ஐம்பெரும்பூதங்களையும்), கண்டவன் - படைத்தவனும், அவை - அவற்றை, காத்து, பாதுகாத்து, மீண்டு - பின்பு [கற்பாந்தகாலத்தில்], உண்டவன் - உட்கொண்டு தன்வயிற்றில் வைத்தருளியவனும், அம் தரங்கத்து உறைவான் - அழகிய (திருப்பாற்)கடலிற் பள்ளிகொண்டிருப்பவனும், உயர் தந்தை தமர் விண்டவன் - சிறந்த தந்தையும்

மற்றையுறவினரும் இல்லாதவனும், அந்தரம் மேலவன் - பரமபதத்தி லெழுந்தருளியிருப்பவனும், (ஆகிய), வேங்கடம் மால் - திருவேங்கடமலையில் வாழ்கின்ற திருமாலுக்கு, அடிமை கொண்ட அனந்தரத்து - (நீங்கள்) அடிமைசெய்தலை மேற்கொண்டபின்பு, உம் பேர் நினைக்கவும் கூற்று அஞ்சும்- உங்கள்பெயரை நினைத்தற்கும் யமன் அஞ்சுவான்; (எ-று.)—ஈற்றுஏகாரம்- தேற்றம்.

அனைவரையும் அஞ்சுவிப்பவனான யமன் திருமாலடியார்க்கு அஞ்சுவன்: ஆதலால், நீங்கள் எம்பெருமானுக்கு அடிமைபூண்டு உய்யக்கடவீர் என்று உலகத்தார்க்கு உபதேசித்தபடியாம். "நரகந்தரம்புவி யிம்மூன்றிடத்துநனிமருவு, நரகந்தரங்கித்து வெங்காலற்கஞ்சுவர் நாயகவா,நரகந்தரம் புட்பிட ரேறரங்கர் நல்லாய்க்குலத்தி,நரகந்தரங்கமுற்று ரடியார்க்கு நமனஞ்சுமே" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். அடியார்கள் பிறவுயிர்கள்போலக் கருமபந்தமுடையவரல்ல ராகுதலால், கர்மிகளைத் தண்டிப்பவனான யமனுக்கு அஞ்சாராக, அவர்களைக்குறித்து அவன் அஞ்சுவ னென்க. திருமாலடியார்க்கு யமன் அஞ்சுதலை "திறம்பேன்மின் கண்டீர் திருவடி தன்னாமம், மறந்தும் புறந்தொழா மாந்த - ரிறைஞ்சியுஞ், சாதுவராய்ப் போதுமின்க ளென்றான் நமனுந் தன், தூதுவரைக் கூவிச்செவிக்கு" என்ற அருளிச்செயலினாலும் அறிக. "ஒருகாலத்தில்,பாசத்தைக் கையிலெடுத்துக் கொண்டு பிராணிகளைக் கொண்டுவரும்படி புறப்பட்ட தன்சேவகனை யமதருமராசனானவன் அந்தரங்கத்தில் அழைத்து 'ஓ படனே! நீ உன்தொழிலை நடத்திவருகையில் ஸ்ரீமதுசூதநனை ஆசிரயித்தவரைத் தொடாதே, விட்டுவிடு; நான் மற்றவர்கட்குப்பிரபுவேயல்லது வைஷ்ணவர்கட்குப்பிரபுவல்லேன்... ....'கமலநயன! வாசுதேவ! விஷ்ணுவே! தரணிதர! அச்சுத! சங்கசக்ரபாணி! நீ அடியேங்களுக்குச் சரணமாகவேண்டும்' என்று எவர்கள் சொல்லிக்கொண்டேயிருப்பார்களோ, அப்படிப்பட்டமகாபரிசுத்தபுருஷரை ஓபடனே! நீ கண்ணெடுத்துப்பாராமல் தூர ஓடிப்போ; விகாரநாசாதிகளில்லாமல் சத்தியஞாநாநந்தமயனாய்ப் பிரகாசிக்கின்ற அந்த எம்பெருமான் எவனுடைய இருதயகமலத்தில் வாசஞ்செய்துகொண் டிருப்பனோ, அந்தமகாபுருஷனுடைய கடாக்ஷம் பிரஸரிக்கு மிடங்களிலெல்லாம் நீ செல்லத்தக்கவனல்லை: நானும் செல்லத்தக்கவனல்லேன்; பதறிச்சென்றால், அவ்வெம்பெருமானுடைய திருவாழியின் தேஜோவிசேஷத்தினாலே பதராக்கப்படுவோம்; அந்தமகாபுருஷன் ஸ்ரீவைகுண்ட திவ்வியலோகத்துக்குஎழுந்தருளத்தக்கவன்'என்றுகூறினன்" என்ற வரலாற்றை ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் யமகிங்கரசம்வாதரூபமான வைஷ்ணவப்பிரபாவத்திற் பரக்கக் காணலாம்.

படைத்தல் காத்தல் ஒடுக்குதல் என்னும்முத்தொழிலையுஞ் செய்தருள்பவன் திருமாலே யென்பதை, 'கண்டவன்...காத்து அவை மீண்டு உண்டவன்'என்று விளக்கினார். கண்டவன்என்பது - செய்தவனென்னும் பொருளதாதலை, "முற்பகற் கண்டான் பிறன்கேடு" என்றவிடத்துங் காண்க; உண்டாக்கிப் பார்த்தவ னென்க. அந்தரங் காலெரி நீர் வையம் என்ற ஐம்பூத

முறைமை, உற்பத்திக்கிரமம்பற்றியது; ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பூமியும் உண்டானதாக வேதம் ஓதும். அந்தரங்கத்து உறைவான் என்று எடுத்து, (அடியார்களுடைய) உள்ளத்தில் வாழ்பவனெனினும் அமையும். சீவகசிந்தாமணியில் "உயர்தந்தை" என்றவிடத்து ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'பிள்ளையுயர்ச்சிமிகுதிக்குக் காரணமான தந்தை' என உரைத்துள்ளார். தமர்-கிளைப்பெயர். பரமாத்மாவாகிய எம்பெருமான் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநத்தின்பொருட்டுத் தனது இச்சையினால் இராமகிருஷ்ணாதி அவதாரங்கள் கொள்ளும்போதன்றி இயல்பிலே ஜீவாத்மாக்கள்போலக் கருமவசத்தாலாகும் பிறப்பையும் தந்தை தாய் மக்கள் தம்பி தமையன் முதலிய சுற்றத்தவரையு முடையவனல்லனென்பது, 'தந்தை தமர் விண்டவன்' என்பதன் கருத்து.

'உயரத்தமமர்விண்டவன்' என்ற பாடத்துக்கு—உயர் அத்தம் - சிறந்த அர்த்தத்தை[பரமார்த்தமாகிய ஞானப்பொருளடங்கிய கீதையை], அமர்-பாரதயுத்தத்தில், விண்டவன் - (அருச்சுனனுக்குத்) திருவாய்மலர்ந்தருளியவன் என்று பொருள் காண்க. அதன்விவரம்:—மகாபாரதயுத்தத்தில் முதல் நாட்போர்த்தொடக்கத்தில் எதிர்வந்துநின்ற வீரர்களெல்லாரும் பாட்டனும் அண்ணன்தம்பிமாரும் மாமனும் உறவினரும் கல்விபயிற்றிய ஆசாரியரும் மனங்கலந்தநண்பரு மாகவே யிருக்கக் கண்டு "உற்றாரையெல்லாம் உடன்கொன்று அரசாளப், பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம்" என்றெண்ணிப் போர்புரியேனென்று காண்டீவம்கைநெகிழத் தேர்த்தட்டின்மீதே திகைத்துநின்ற அருச்சுனனுக்குக் கண்ணன் தத்துவோபதேசஞ்செய்து தனதுவிசுவரூபத்தைக்காட்டி அவனதுமயக்கத்தை ஓட்டி அவனைப் போர்புரியுமாறு உடன்படுத்தினன் என்பதாம். அப்பொழுது உபதேசித்த தத்துவப்பொருளே ஸ்ரீபகவத்கீதையென வழங்கப்படுகின்ற நூலாம். அர்த்தம், ஸமரம் என்ற வடசொற்கள் - அத்தம், அமர் என்று விகாரப்பட்டன.

நம் தாம் மேலவன் என்று பதம்பிரித்து, ஜீவாத்மாக்களாகிய நம்முடைய தகுதிக்கெல்லாம் மேம்பட்ட நிலைமையுடையவனென்று உரைத்தலுமொன்று. மால் அடிமைகொண்ட அநந்தரத்து என்பது, திருமால் ஆட்கொண்டபின்பு என்றும் பொருள்படும். கூற்று - (பிராணிகளின் உடலையும் உயிரையும் வெவ்வேறு) கூறுக்குந் தேவன். கூற்று அஞ்சும் - செய்யுமென் முற்று ஆண்பாலுக்கு வந்தது. (உரு)

உசு. அஞ்சக்கரவடமூலத்தன்போதனறிவரிய
செஞ்சக்கரவடவேங்கடநாதனைத்தேசத்துள்ளீர்
நெஞ்சக்கரவடநீக்கியின்றேதொழு நீண்மறலி
துஞ்சக்கரவடம்வீசுமக்காலந்தொழற்கரிதே.

(இ - ள்.) தேசத்து உள்ளீர் - நாட்டிலுள்ளவர்களே!—அஞ்சு அக்கரம் வடம் மூலத்தன் - பஞ்சாக்ஷரமந்திரத்துக்குஉரியவனும் ஆலமரத்தினடியில்

வீற்றிருந்தவனுமான சிவபிரானும், போதன் - பிரமதேவனும், அறிவு அரிய- அறிதற்கு அரியவனான, செம் சக்கரம் வட வேங்கடம் நாதனே - சிவந்தசக்கராயுதத்தையேந்திய வடதிருவேங்கடமுடையானை, நெஞ்சம் கரவடம் நீக்கி இன்றேதொழும்-மனத்திலுள்ளவஞ்சனையையொழித்து இப்பொழுதே(நீங்கள்) வணங்குங்கள்; (ஏனென்றால்,—) நீள் மறலி - பெரியவடிவமுடைய யமன், துஞ்ச - (நீங்கள்) இறக்கும்படி, கரம் வடம் வீசும் அ காலம் - தன்கையிற் கொண்ட பாசாயுதத்தை (உங்கள்மேல்)வீசும் அந்தஅந்திமகாலத்தில், தொழற்கு அரிது - வணங்குதற்கு இயலாது; (எ-று.)—ஈற்றுஏகாரம்-தேற்றம்.

"ஒற்றைவிடையனும் நான்முகனும் உன்னையறியாப் பெருமையோனே," "பெண்ணுலாஞ்சடையினானும் பிரமனு முன்னைக்காண்பான், எண்ணிலாவூழியூழி தவஞ்செய்தார்வெள்கிநிற்ப" என்றஆழ்வார்களருளிச்செயல்களைப் பின்பற்றி 'வடமூலத்தன் போத னறிவரிய நாதன்' என்றும், "எய்ப்பென்னைவந்துநலியும்போ தங்கேது நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன்" என்ற ஆழ்வாரருளிச்செயலைப் பின்பற்றி 'இன்றேதொழும் மறலிவடம்வீசுமக்காலம் தொழற்கரிது' என்றும் கூறினர். முன்னொருகாலத்திற் சிவபிரான் தக்ஷிணாமூர்த்தியென்னுங்குருவடிவமாய்க் கைலாசகிரியில் தென்சிகரத்திலே கல்லாலமரத்தின் கீழ்வீற்றிருந்து பிரமபுத்திரரான ஸநகர் ஸநந்தநர் ஸநத்குமாரர் ஸநத்ஸுஜாதர் என்ற முனிவர்நால்வர்க்கும் ஞானோபதேசஞ்செய்தனனாதலால், 'வடமூலத்தன்' எனப்பட்டான்; "ஆலநிழற்கீழறநெறியை நால்வர்க்கு, மேலையுகத்துரைத்தான் மெய்த்தவத்தோன்--ஞால, மளந்தானை யாழிக்கிடந்தானை யால்மேல், வளர்ந்தானைத் தான்வணங்குமாறு," "ஆலமரநீழ லறநால்வர்க்கன்றுரைத்த,ஆலமமர்கண்டத்தரன்"என்றார்பெரியாரும். இங்குக் கூறிய நால்வர்-அகஸ்த்ய புலஸ்த்ய தக்ஷ மார்க்கண்டேய ரென்றலுமுண்டு.

அக்ஷரம், வடமூலம், சக்ரம், தேசம், கரம், காலம் - வடசொற்கள். கரவடம் - கபடம். மறல் - கொடுமை: அதனையுடையவன், மறலி; இ - பெயர்விகுதி. துஞ்சுதல் - தூங்குதல். இறத்தலைத் துஞ்சுதலென்பது, மங்கலவழக்கு; மீளஎழுந்திராத பெருந்தூக்கமென்க. தொழற்குஅரிது என்றவிடத்து, நான்கனுருபு - கருத்தாப்பொருளில் வந்தது. (௨௬)

௨௭. தொழும்பாலமரர்தொழும்வேங்கடவன் சுடர்நயனக்
கொழும்பாலனையொருகூறுடையா னந்தகோபனில்லத்
தழும்பாலனாகியகாலத்துப்பேய்ச்சியருந்துநஞ்சைச்
செழும்பாலமுதென்றுவந்தாற்கென்பாடல்சிறக்குமன்றே.

(இ - ள்.) சுடர் நயனம் கொழும் பாலனை - நெருப்புக்கண்ணைக் கொழுமையுள்ள நெற்றியி லுடையனான சிவபிரானை, ஒரு கூறு உடையான் - (தனது திருமேனியில்) ஒருபாகத்திலே [வலப்பக்கத்திலே]கொண்டவனும், நந்தகோபன் இல்லத்து - நந்தகோபனுடைய திருமாளிகையில், அழும் பாலன் ஆகிய காலத்து - அழுகின்ற குழந்தையாய்த் தான்

வளர்ந்தகாலத்தில், பேய்ச்சி அருந்து - பேய்மகளாகிய பூதனை ஊட்டிய, நஞ்சை - விஷத்தை, செழும் பால் அமுது என்று உவந்தான்-செழித்த பாலாகியஉணவென்று விரும்பி யுட்கொண்டவனுமான, தொழும்பால் அமரர் தொழும் வேங்கடவற்கு - அடிமைத்தன்மையால் தேவர்கள் வணங்கப்பெற்ற திருவேங்கடமலையின் தலைவனுக்கு,—என் பாடல் சிறக்கும் அன்றே- என்னுடைய கவியும் சிறந்ததாகுமன்றோ? (எ - று.)—அன்றே - தேற்றம்.

தமோகுணதேவதையாகையால் உக்கிரமூர்த்தியான விஷகண்டனைத் தனது திருமேனியில் ஒருபக்கத்திலே ஏற்றுக்கொண்டருளியவனும், வஞ்சனையிற்சிறந்தபூதனை உண்பித்த விஷத்தை அமுதுபோல உட்கொண்டவனுமாகிய திருமால், அவ்வாறே,யான்பாடும் இழிவானசெய்யுள்களையும் குற்றம் பாராது இனியனவாக அங்கீகரிப்பன் என்பதாம். சுடர்நயனக்கொழும்பாலனையொருகூறுடையான், பேய்ச்சியருந்துநஞ்சைச்செழும்பாலமுதென்றுவந்தான் என்ற விசேஷணங்கள் ஒருகருத்தை யுட்கொண்டனவாதலால், கருத்துடையடைமொழியணி. 'உவந்தாற்கு' என்பதிலுள்ள நான்கனுருபு, பிரித்து 'வேங்கடவன்' என்பதனோடு கூட்டப்பட்டது. சுடர்நயனக்கொழும்பாலனை யொருகூறுடையான்—"வலத்தனன் திரிபுரமெரித்தவன்", "பிறைதங்குசடையானை வலத்தேவைத்து" என்றார் ஆழ்வார்களும். அமரர்- "அயர்வறுமமரர்களதிபதி"என்ற திருவாய்மொழியிற் போல நித்தியசூரிகளெனினுமாம்.

இச்செய்யுள், எம்பெருமானது திருவருட்சிறப்பைக் கூறு முகத்தால் அவையடக்கங் கூறியவாறும்.

நயநம், பாலம், பாலன் - வடசொற்கள். பாலமுது - இருபெயரொட்டுப்பண்புத்தொகை;ஒருபொருட்பன்மொழியுமாம். அழும்பாலன்-சிறுகுழந்தை யென்றபடி; இன்னகாரணமென்று உணரவொண்ணாதபடியும் எளிதிற் சமாதானப்படுத்தமுடியாதபடியும் அழுதல், சிறுகுழந்தையினியல்பு. (உஎ)

உஅ. சிறக்கும்பதந்தருவார்திருவேங்கடச்செல்வர்செய்ய
நிறக்கும்பதந்தொழுதுய்யவெண்ணீர் நெறியிற்பிழைத்து
மறக்கும்பதந்தியுஞ்சேலுமசுணமும்வண்டினமும்
பறக்கும்பதங்கமும்போலைவராற்கெடும்பாதகரே.

(இ - ள்.) மறம் கும்பம் தந்தியும் - கோபகுணத்தையும் மஸ்தகத்தையுமுடைய யானையும், சேலும் - மீனும், அசுணமும் - அசுணமென்ற பறவையும், வண்டு இனமும் - வண்டுவகைகளும், பறக்கும் பதங்கமும் - பறக்கின்ற விட்டிற்பறவையும், போல்—, நெறியின் பிழைத்து - நன்னெறியினின்றுதவறி, ஐவரால் கெடும் - பஞ்சேந்திரியங்களால் அழிந்துபோகின்ற, பாதகரே - தீவினையுடையவர்களே!—(நீங்கள்), சிறக்கும் பதம் தருவார் - (எல்லாப்பதவிகளினுஞ்) சிறந்த பரமபதத்தைத் (தம்அடியார்க்குத்) தந்தருள்பவரும், திருவேங்கடம் செல்வர் - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கின்றவரும் எல்லாச்செல்வங்கட்கும் உரியதலைவருமான எம்பெருமானு

டைய, செய்ய நிறக்கும் பதம் - சிவந்த நிறமமைந்த திருவடிகளை, தொழுது - வணங்கி, உய்ய - ஈடேறுமாறு, எண்ணீர் - நினையுங்கள் ; (எ - று.)

ஐம்பொறிகட்கு உரியசப்தஸ்பர்ச ரஸரூப கந்தமென்னும் ஐம்புலன்களிலாசையாற் கெடுதற்கு, யானைமுதலியஐந்துபிராணிகள் உவமைகூறப்பட்டன. அதன்விவரம் - யானை பரிசத்தால்அழியும்: எங்ஙனமெனின்,—யானை பிடிக்கும்வேடச்சாதியர் யானைக்காட்டிற்சென்று அங்கு ஒருபெரும்பள்ளம் பறித்து அதன்இப்புறத்தில் தாம்பழக்கியபெண்யானையை நிறுத்திவைக்க, அப்புறத்திலுள்ள ஆண்யானை அதனோடுசேரும் விருப்பத்தால் ஓடிவருகையில் அப்படுகுழியில்வீழ்ந்து மேலேறமாட்டாது அகப்பட்டுக்கொள்ள, அதனை அவ்வெயினர்கள் பின்பு தந்திரமாக விலங்கிட்டு மேலேற்றித் தம் வசப்படுத்திக்கொள்வர்; இது, மெய்யென்னும் பொறிக்குஉரிய ஊற்றின்பத்திலாசையால்அழிந்தது. மீன் ரசத்தால்அழியும்; எங்ஙனமெனின்,—செம்படவர் மீன்பிடித்தற்பொருட்டு நீர்நிலையிலிட்ட தூண்டிலில் வைத்துள்ள தசையை யுண்ணவேண்டுமென்னும் அவாவினால் மீன்விரைந்துவந்து அதில் வாய்வைத்து, அத்தூண்டில்முள் தன்வாயில்மாட்டிக்கொள்ளுதலால் மீளமாட்டாதாக, அதனை வலைஞர் எடுத்துப் பறியிற்போகட்டுக்கொள்வர்; இது, வாய்என்னும்பொறிக்கு உரிய சுவையின்பத்திலாசையால் அழிந்தது. அசுணம் சப்தத்தால் அழியும்; எங்ஙனமெனின்,—இசையறிவிலங்காகிய அசுணமென்னும் குறிஞ்சிநிலப்பறவையைப் பிடிக்கக்கருதிய அந்நிலத்துமக்கள் செழுமையுள்ள மலைச்சாரலிலே நிலாவிளங்கும் மாலைப்பொழுதில் வேய்ங்குழல்முதலியவற்றால் இனியஇசைபாட, அச்சங்கீதத்தைக்கேட்டு ஆனந்தமடையவிரும்பி அப்பறவைகள் அருகில்வந்து அவ்வின்னிசையைச் செவியிலேற்றுப் பரவசப்பட்டிருக்கிறசமயத்தில் அக்கொலையாளர் பறைகொட்ட அக்கொடியஓசையைக்கேட்டவுடன் அப்பறவைகள் இறந்துபடும். அவற்றை அவர் எடுத்துச்செல்வர்; இது, செவியென்னும்பொறிக்கு உரிய ஓசையின்பத்திலாசையால் அழிந்தது. வண்டு கந்தத்தால் அழியும்; எங்ஙனமெனின்,— வண்டுகள் மலர்களின் நறுமணத்தை அவாவித் தாமரைமுதலிய பெருமலர்களினிடையே புக்கிருக்கும்போது அவை குவிந்துகொள்ள, அங்கு அகப்பட்டு வருந்தும்; அன்றியும், சண்பகமலரின் நறுமணத்தையும் அதன்நறுந்தேனையும் நுகரும் அவாவினால் அதனை அணுகிமொய்த்து அதன் உஷ்ணம் தாக்கப் பொறாது இறந்துபடும்; மற்றும், நறுமணவிருப்பினால் தேனிலேமொய்த்து அதனை மிகுதியாகஉண்டு மயங்கி மீளமாட்டாது சிக்கியழிதலும் உண்டு; இது, மூக்கு என்னும் பொறிக்கு உரிய நாற்றவின்பத்திலாசையால் அழிந்தது. விட்டில் ரூபத்தால் அழியும்; எங்ஙனமெனின்,— விட்டிற்பறவை விளக்கொளியைக் கண்டவுடனே அதனிடத்து அவாவோடு ஓடிவந்து விழுந்து இறக்கும்; இது, கண்ணென்னும் பொறிக்கு உரிய ஒளியின்பத்திலாசையால் அழிந்தது. ஐம்புல நுகர்ச்சியில் ஒவ்வொன்றால் அழிகின்ற யானை முதலிய ஐந்து பிராணிகளையும், ஐம்புலன்களையும் ஒருங்கு நுகரத்தொடங்கி அழிகின்ற பாவிகட்கு உவமைகூறினார். "மணியிசைக்காலந்திமொச் செவியான்மாயும் மகிழ்புணர்ச்சிக்காக

இபம் மண்ணிறசிக்கும், கனில்விளக்கைக்கண்டு விட்டில் வீழ்ந்துபொன்றும் கடுந்தூண்டிற்கவ்வி மச்சம் வாயான்மாளும், அணுகி யளி நாசியிற் செண்பகமோந்தெய்க்கும் ஐம்பொறியுமுடைய நா னலேந்திடாமல், இணையிலுபதேசத்தால் திருத்திக்காக்கைக்கு எழிற்குருவா யுதித்தனையே யெம்பிரானே," "அழுக்குடைப்புலன்வழி யிழுக்கத்திறெழுகி, வளைவாய்த் தூண்டிலினுள் ளிரைவிழுங்கும், பன்மீன்போலவும், மின்னுறுவிளக்கத்து விட்டில்போலவு, மாசையாம்பரிசத்தி யானைபோலவு, மோசையின்விளிந்த புள்ளுப்போலவும், வீசியமணத்தின் வண்டுபோலவு, முறுவதுணராச் செறுவுழிச் சேர்ந்தனை" என்பவை இங்குக் காணத்தக்கன. அசுணமென்பது ஒருவகைமிருக மென்றும், அது மானில் ஒருவகை யென்றும், அது வேடர்கள்பாடும்இனிய இசையைக்கேட்டு ஆனந்தமடையவிரும்பி அருகில்ஓடிவந்து அவ்வின்னிசையைச் செவியிலேற்றுப் பரவசப்பட்டுநிற்கையில் அவர்களாற் கவர்ந்துகொள்ளப்பட்டு அழியு மென்றுங் கூறுதலு முண்டு.

பதம், கும்பதந்தீ, பதங்கம், பாதகம் - வடசொற்கள். செல்வர் - இம்மைமறுமைவீடுகளில் அனுபவிக்கப்படுஞ் செல்வங்கட்கெல்லாம் உரியதலைவர். திருவேங்கடச்செல்வர் செய்யசிறக்கும்பதம் தொழுது நெறியிற்பிழைத்து [சன்மார்க்கத்தில் வாழ்ந்து] உய்ய எண்ணீர்: (அவர் உங்கட்குச்) சிறக்கும்பதந்தருவார் என்றுகூட்டிப் பொருள்கொள்ளினுமாம். பிழைத்துஎன்றவிடத்து 'பிறழ்ந்து' என்றும் பாடமுண்டு. "யானை, யறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என்றபடி தீராக்கோபமுடைய தாதலால், 'மறம்' அதற்கு அடைமொழியாக்கப்பட்டது. கும்பம் - யானைத்தலையிற் குடங்கவிழ்த்தாற்போலுள்ள உறுப்பு. தந்தமுடையது தந்தீ எனக் காரணக்குறி (உஅ)

உகூ. பாதமராவுறைபாதாளத்தூடுபகிரண்டத்துப்
போதமராயிரம்பொன்முடியோங்கப்பொலிந்துநின்றாய்
நீதமரானவர்க்கெவ்வாறுவேங்கடநின்றருளு
நாதமராமரமெய்தாய் முன்கோவனடந்ததுவே.

(இ - ள்.) வேங்கடம் நின்று அருளும் நாத - திருவேங்கடமலையில் நின்ற திருக்கோலமாக எழுந்தருளியிருந்து (எல்லாவுயிர்கட்கும்) அருள்புரிகின்ற தலைவனே! மராமரம் எய்தாய் - ஏழு மராமரங்களை அம்பெய்து துளைத்தவனே!—பாதம்-திருவடிகள், அரா உறை பாதாளத்தூடு-பாம்புகள் வசிக்கின்ற பாதாளலோகத்திலும், போது அமர் ஆயிரம் பொன் முடி - (சூட்டிய) மலர்கள் பொருந்திய அழகிய ஆயிரந்திருமுடிகள், பகிர் அண்டத்து - இவ்வண்டகோளத்தின் மேன்முகட்டுக்கு வெளியிலும், ஓங்க - வளர்ந்துதோன்ற, பொலிந்து நின்றாய் - (விசுவரூபத்தில்) விளங்கிநின்றவனே, நீ—, முன் - முற்காலத்தில், தமர் ஆனவர்க்கு - நினது அடியார்களான முதலாழ்வார்கட்குக் காட்சிகொடுத்தற்பொருட்டு, கோவல் நடந்தது - திருக்கோவலூரில் (அவர்களிருந்தவிடத்துக்கு) நடந்துசென்றது, எ ஆறு - எங்ஙனமோ ? (எ - று.)

இச்செய்யுளின்கருத்தை அஉ-ஆஞ் செய்யுளின் கருத்தோடு ஒப்பிடுக. ("அன்றையிலும் வையமகன்றதோ வல்லவென்று, குன்றெடுத்து நீதிருத்திக்கொண்டாயோ—என்றும், அடைந்தாரைக் காக்கு மகளங்கா துங்கா, நடந்தாயே நாலாறடி" என்பதும் இதுபோன்றகருத்துக்கொண்டதே.) இச்செய்யுளில் ஆதாரமாகிய கோவலூரினும் ஆதேயமாகிய திருமாலுக்குப் பெருமைகூறியிருப்பது, பெருமையணியின்பாற்படும்: உலகுநிறைய உயர்ந்தோங்கினவன் உலகின் ஒருபகுதியில் நடந்தானென்று குறித்திருப்பது, முரண்விளைந்தழிவணி; இது திருமாலின் சொல்லொணுமகிமையைவிளக்கும்.

திருக்கோவலூர் - நடுநாட்டிலுள்ள திருமால்திருப்பதியிரண்டில் ஒன்றும், தென்பெண்ணையாற்றின்தென்கரையிலுள்ளதுமான ஒருதிவ்யதேசம்.

பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் என்ற முதலாழ்வார் மூவரும், ஓடித்திரியும் யோகிகளாய், செஞ்சொற்கவிகளுமாகி, தம்மில்ஒருவரையொருவர்அறியாமல் தனித்தனியே பலவிடத்தும் சஞ்சரித்து வருகையில், ஒருநாள் சூரியாஸ்தமனமானபின் பொய்கையாழ்வார் திருக்கோவலூரையடைந்து அங்கு மிருகண்டுமுனிவரது திருமாளிகையிற் சென்று அதனது இடைகழியிற் சயனித்துக்கொண்டிருந்தார். பின்னர் பூதத்தாழ்வாரும் அவ்விடத்திலே சென்று சேர, பொய்கையாழ்வார் 'இவ்விடம் ஒருவர் படுக்கலாம்: இருவர் இருக்கலாம்' என்று சொன்னபின், அவ்வாறே அவ்விருவரும் அங்கு இருந்தனர். அதன்பிறகு பேயாழ்வாரும் அவ்விடத்தை அடைந்திட, முன்னையிருவரும் 'இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்' என்றுகூற, அங்ஙனமே அம்மூவரும் அவ்விடத்திலே நின்றுகொண்டு எம்பெருமானுடையதிருக்கலியாணகுணங்களை ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டும் கேட்டுக்கொண்டும் மகிழ்ந்திருந்தனர். அவர்களை ஆட்கொண்டு அவர்களால் உலகத்தை உய்விக்கவேண்டுமென்று நினைத்து அம்மூவரையும் ஓரிடத்திற் சேர்த்த திரிவிக்கிரமமூர்த்தி, அவர்களை அநுக்கிரகிக்கும்பொருட்டு அப்பொழுது பேரிருளையும் பெருமழையையும் உண்டாக்கித் தான் சென்று அவர்களுடன்நின்று பெருவடிவுகொண்டு பொறுக்கவொண்ணுத அதிக நெருக்கத்தைச் செய்தருளினுன். அவர்கள் 'முன் இல்லாதநெருக்கம் இப்பொழுது உண்டானது என்னே? பிறர் எவரேனும் இந்தஇடைகழியிற் புகுந்தவர் உண்டோ?' என்று சங்கிக்கையில், பொய்கையாழ்வார் பூமியாகிய தகழியில் கடல்நீரை நெய்யாகக்கொண்டு சூரியனை விளக்காக ஏற்ற, பூதத்தாழ்வார் அன்பாகியதகழியில் ஆர்வத்தை நெய்யாகவும் சிந்தையைத் திரியாகவுங் கொண்டு ஞானதீபத்தை ஏற்ற, இவ்விரண்டன் ஒளியாலும் இருள் அற்றதனால், பேயாழ்வார் பெருமானைத் தாம் கண்டமை கூறியவளவிலே, மூவரும் எம்பெருமானுடைய சொரூபத்தைக் கண்ணாரக்கண்டு சேவித்து அனுபவித்து ஆனந்தமடைந்து, அப்பெருங்களிப்பு உள்ளடங்காமையால் அதனைப் பிரபந்தமுகமாகவெளியிட்டு உலகத்தாரைவாழ்விக்கக்கருதி, பொய்கையாழ்வார் "வையந் தகளியா" என்று தொடங்கி முதல் திருவந்தாதியைப் பாடியருள,

பூதத்தாழ்வார் "அன்பே தகளியா" என்று தொடங்கி இரண்டாந்திருவந்தாதியை அருளிச்செய்ய,பேயாழ்வார்"திருக்கண்டேன்" என்று தொடங்கி மூன்றாந்திருவந்தாதியைத் திருவாய்மலர்ந்தருளினார் என்பது,இங்கு அறிய வேண்டிய வரலாறு. பாதம், பாதாளம், பஹிரண்டம் - வடசொற்கள். ஆயிரமென்றது, எண்ணிறந்த பலவென்றமாத்திரமாய் நின்றது. (௨௯)

௩௦. நடைக்கலங்காரமடவார்விழிக்குநகைக்குச்செவ்வாய்க்
கிடைக்கலங்காரமுலைக்கிச்சையானிவனென்றெண்ணிப்
படைக்கலங்காணத்துரந்தேநமன்றமர்பற்றுமன்றைக்
கடைக்கலங்காணப்பனே யலர்மேன்மங்கையங்கத்தனே.

(இ - ள்.) அப்பனே - ஸ்வாமீ! அலர்மேல் மங்கை அங்கத்தனே - அலர்மேன்மங்கைப்பிராட்டியைத் திருமேனியில் [திருமார்பில்] உடையவனே!— அலங்காரம் மடவார் - (இயற்கையும் செயற்கையுமான) அழகுகளையுடைய இளமங்கையரது, நடைக்கு - நடையழகுக்கும், விழிக்கு - கண்ணழகுக்கும், நகைக்கு - புன்சிரிப்பினழகுக்கும், செம் வாய்க்கு - சிவந்த வாயினழகுக்கும், இடைக்கு - இடையினழகுக்கும், அலங்கு ஆரம் முலைக்கு - புரளுகின்ற ஆரங்களை யணிந்த தனங்களினழகுக்கும், இச்சை ஆன - விரும்பியீடுபட்ட, இவன்—, என்று—, எண்ணி - (என்னை) நினைத்து, நமன் தமர் - யமதூதர்கள், படைக்கலம் - ஆயுதங்களை, காண-(யான்)கண்டு அஞ்சும்படி, துரந்து - (என்மீது) செலுத்தி [பிரயோகித்து], பற்றும் -(என்னைப்) பிடித்துக்கொண்டுபோகும், அன்றைக்கு - அந்த அந்திமகாலத்தில் என்னைப்பாதுகாத்தற்பொருட்டு, அடைக்கலம் காண்-(நான் இன்றைக்கே உனக்கு) அடைக்கலப்பொருளாகிறேன்காண்; (எ-று.)—காண் - தேற்றம்.

"வம்புலாங்கூந்தல்மனைவியைத் துறந்து பிறர்பொருள் தாரமென்றிவற்றை, நம்பினா ரிறந்தால் நமன்தமர்பற்றி யெற்றிவைத் தெரியெழுகின்ற, செம்பினாலியன்றபாவையைப் பாவீ தழுவென மொழிவதற்கஞ்சி, நம்பனே வந்துன்திருவடி யடைந்தேன்", "வஞ்சவுருவி னமன்றமர்கள் வலிந்து நலிந்தென்னைப் பற்றும்போது,அஞ்சலமென் றென்னைக் காக்கவேண்டும்" என்ற அருளிச்செயல்களை அடியொற்றி இதுகூறினார். அடைக்கலம் - பாதுகாக்கப்படுதற்கு உரியதாகும் பொருள். எனக்கு நீ அடைக்கல மென்றுங்கொள்ளலாம்; அப்பொழுது, அடைக்கல மென்பது - சரணமடையப்படுபொருள்: அதாவது - ரக்ஷக னென்ற பொருளை யுணர்த்தும்.

அலங்காரம்,ஹாரம், இச்சா,அங்கம் - வடசொற்கள். மடவார்-மடமையையுடையவர்:மடமை-இளமை; மாதர்க்குஅணிகலமான பேதைமையென்னுங் குணமுமாம். ஆரம் - பொன்மணிகளாலாகிய மார்பின்மாலை. படைக்கலம் - போர்க்கருவி. நமன் - யமன் என்ற வடசொல்லின் சிதைவு. (௩௦)

௩௧. அங்கமலைக்கும்வினையாலலமரவோ வுனக்கும்
அங்கமலைக்குமடிமைப்பட்டே னரவானபரி-
அங்கமலைக்குடையா யக்கராவுடனன்றமர்செய்
அங்கமலைக்குமுன்னின்றருள்வேங்கடத்தற்புதனே.

(இ - ள்.) அரவு ஆன - ஆதிசேஷனாகிய, பரியங்க - கட்டிலையுடையவனே! மலை குடையாய் - கோவர்த்தன மலையைக் குடையாகக்கொண்டு பிடித்தவனே! அ கராவுடன் - அந்த முதலையுடனே, அன்று - அக்காலத்தில், அமர் செய் - போர்செய்த, அங்கம் மலைக்கு - அவயவங்களையுடைய மலைபோன்றதான யானைக்கு, முன் - எதிரில், நின்று - சென்று நின்று, அருள்-(அதனைப்) பாதுகாத்தருளிய, வேங்கடத்து அற்புதனே - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கின்ற ஆச்சரியகரமான குணஞ்செயல்களையுடையவனே!—அங்கம் அலைக்கும் வினையால் அலமாவோ - உடம்பை வருத்துகிற தீவினையினால் வருந்துதற்காகவோ, உனக்கும் அம் கமலைக்கும் அடிமைப்பட்டேன் - உனக்கும் (உனது மனைவியான) அழகிய திருமகளுக்கும் அடிமைப்பட்டேன், (யான்) ? (எ - று.)

கருணாநிதியானஉனக்கும் புருஷகாரபூதையான பெரியபிராட்டிக்கும் யான் அடிமைப்பட்டபின்னரும் வினையினால்வருந்துதல் ஏலா தாதலால், அங்ஙனம்வருந்தாதபடி எனக்கு அருள்புரியவேண்டுமென்பதாம்.

கமலை - கமலா என்ற வடசொல் ஆவீறுஐயாயிற்று; தாமரைமலரில் வாழ்பவள். பர்யங்கம் - வடசொல்; படுக்கை. அ கரா - தேவலனென்னும்முனிவனது சாபம்பெற்ற ஹூஹூஎன்ற கந்தருவனாகிய முதலை. அங்க மலை - துதிக்கை முதலிய உறுப்புக்களையுடைய மலை; எனவே, யானையாயிற்று. இனி, அமர் செய் அங்கு - போர்செய்த அவ்விடத்தில் [நீர்நிலையில்], அ மலைக்கு-அந்த மலைபோன்ற யானைக்கு என்று உரைகூறுதலு மொன்று; இப்பொருளுக்கு, அம்மலையென்பது அமலை யெனத் தொக்க தென்க. முன் - இடமுன். அத்புதன் - வடசொல்.

இரண்டாமடியினிறுதியில் பரியங்கம் என்ற ஒருசொல்லைப் பரி அங்கம் என்றுபிரித்துப் பிரயோகித்தது, யமக நயத்தின்பொருட்டு. (அதற்கு அறிகுறியாக மூலத்தில் இரண்டாமடியீற்றில் (-) இக்குறி இடப்பட்டது.) இங்ஙனம் சொல்லணிக்காகப் பிரித்துக்காட்டியிருந்தாலும் பொருள்நோக்கும்பொழுது பரியங்க வென்று சேர்த்துப் படித்துக்கொள்க. பர்யங்கம் என்ற வடசொல் பகுபதமாதலும், அது பிரிக்குமிடத்துப் பரி அங்கம் என்று பிரிதலுங் காண்க. (ருக)

ருஉ. அற்பரதத்துமடவார்கலவியுமாங்கவர்க
ணற்பரதத்துநடிப்பதும்பாடலுநச்சிநிற்பார்
நிற்பரதத்துக்கதிர்தோயும்வேங்கடநின்றருளுஞ்
சிற்பரதத்துவன்றாளடைந்தேன் முத்திசித்திக்கவே.

(இ - ள்.) அற்ப ரதத்து - சிற்றின்பத்தையேயுடைய, மடவார் - இளமகளிரது, கலவியும் - சேர்க்கையையும், அவர்கள் - அவ்விளமங்கையர், நல் பரதத்து நடிப்பதும் - நல்ல பரதசாஸ்திரமுறைப்படி நர்த்தநஞ்செய்வதையும், பாடலும் - (அவர்கள்) பாடுகின்ற இசைப்பாட்டையும், நச்சி நிற்பார்-விரும்பிநிற்கின்ற பேதையர், நிற்ப - நிற்க, (நான் அவர்களோடுசேராமல்),

—முத்தி சித்திக்க - பரமபதம்(எனக்கு)வாய்க்கும்படி,--ரதத்து கதிர் தோயும் வேங்கடம் நின்று அருளும் சித் பர தத்துவன் தாள் அடைந்தேன்-தேரின்மேல்வருகிற சூரியன் தவழப்பெற்ற திருவேங்கடமலையில் நின்றதிருக்கோலமாய் எழுந்தருளியிருந்து கருணைசெய்கிற ஞானமயமான பரதத்வப் பொருளாகிய திருமாலினது திருவடிகளைச் சரணமடைந்தேன்; (எ - று.)

"நூலினேரிடையார்திறத்தே நிற்கும், ஞாலந்தன்னொடுங் கூடுவதில்லையான்,ஆலியா வழையா வரங்கா வென்று, மாலெழுந்தொழிந்தே னென்றன்மாலுக்கே" என்றபடி, விஷயாந்தரப்ரவணரோடு சேர்ந்து கெடாமல் பகவத்விஷயத்தில் ஈடுபட்டு வாழ்வுபெறுபவனானே னென்பதாம்.

அல்பரஸம், பரதம், ரதம், சித்பரதத்வம், முக்தி-வடசொற்கள். பாவம் ரஸம் தாளம் என்ற மூன்றையு முடைமைபற்றி, இம்மூன்றுசொற்களின் முதலெழுத்துக்குறிப்புக்கள் தொடர்ந்து பரத மென்று நாட்டியத்திற்குப் பெயராயிற் றென்பர். சீவகசிந்தாமணியில் 'ராசமாபுரி', 'ரவிகுலதிலகன்' என்றவை போல, இங்கு 'ரதம்' என்பது, "ரவ்விற்கு அம்முதலா முக்குறிலும்,....... .மொழிமுதலாகிமுன்வருமே" என்றபடி முதலில் இகரம்பெறாது நின்றது. முக்தி - பற்றுக்களை விட்டு அடையுமிடம்; வீடு என்ற தமிழ்ப் பெயரும் இப்பொருள் கொண்டதே. கலவி - கலத்தல்; 'வி'விகுதி பெற்ற தொழிற்பெயர். பாடல் - சங்கீதம். ரதத்துக் கதிர் - ஒற்றைத்தனியாழித் தேரையுடைய சூரியன். 'கதிர்தோயும் வேங்கடம்' என்றது, மலையின் உயர்வை விளக்குந் தொடர்புயர்வுநவிற்சியணி. பரதத்வன் - எல்லாப்பொருளுக்கும் மேம்பட்ட மெய்ம்மைப்பொருளாயுள்ளவன். சித்பரதத்வன்-உணர்ச்சியுடையதாதலால் 'சித்' எனப்படுகிற ஜீவாத்மாவென்னுந் தத்வத்தைக் காட்டிலும் மேம்பட்ட பரமாத்மதத்வமாயுள்ளவன் என்றுமாம். ஆங்கு - அசை. (௯௨)

௯௩. சித்திக்குவித்ததுவோவிதுவோவென்றுதேடிப்பொய்நூல்
கத்திக்குவித்தபல்புத்தகத்தீர் கட்டுரைக்கவம்மி
னத்திக்குவித்தனையும்முண்டவேங்கடத்தச்சுதனே
முத்திக்குவித்தகனென்றேசுருதிமுறையிடுமே.

(இ - ள்.) சித்திக்கு வித்து - வீடுபேற்றிற்கு மூலம். அதுவோ - அப்பொருளோ, இதுவோ - இப்பொருளோ, என்று தேடி - என்று ஆராயத் தொடங்கி, பொய் நூல் கத்தி - பொய்யான பரசமயநூல்களைத் தொண்டைநோகக் கதறிப்படித்து, குவித்த - தொகுத்த, பல் புத்தகத்தீர் - பல புத்தகங்களையுடையவர்களே!—கட்டுஉரைக்க வம்மின் -(மோக்ஷசாதநமான பரம்பொருள் இன்னதென்ற உண்மைப்பொருளை யான்) உறுதியாகச்சொல்ல (அதுகேட்டு)உய்யவாருங்கள்:—'அத்தி கு இத்தனையும் உண்ட - கடல் சூழ்ந்த உலகமுழுவதையும் (பிரளயகாலத்தில்) உட்கொண்டருளிய, வேங்கடத்து அச்சுதனே - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கின்ற திருமாலே, முத்திக்கு வித்தகன் - வீடுபேற்றுக்குச்சாதநமான ஞானசொரூபி,'

என்றே—, சுருதி முறையிடும் - வேதங்கள் பலமுறை வற்புறுத்திக்கூறி முழங்குகின்றன; (எ - று.)

"பரந்ததெய்வமும் பல்லுலகும் படைத் தன்றுடனேவிழுங்கிக், கரந்துமிழ்ந்து கடந்திடந்தது கண்டுந் தெளியகில்லீர், சிரங்களாலமரர்வணங்குந் திருக்குருகூரதனுட், பரன்திறமன்றிப் பல்லுலகீர் தெய்வம்மற்றில்லை பேசுமினே" என்றாற்போன்ற பாசுரங்களின் வாய்பாட்டைக் கொண்டது, இச்செய்யுள். 'கத்தி' என்ற வினையின் ஆற்றலாலும், பொய்ந்நூல்களை யோதியதெல்லாம் வீணென்பது விளங்கும். கட்டுரைக்க வம்மின் என்பதற்கு-நமக்கு வல்லமையுண்டானால் எம்மோடு வாதஞ்செய்ய வாருங்க ளென்று சொற்போர்க்குப் பிறரை வலியஅறைகூவியழைக்கின்றதாக வுரைத்தலுமொன்று; இங்ஙனம் அழைத்தற்குக் காரணம், தாம் தவறாது பரமதநிரஸநம்பண்ணி ஸ்வமதஸ்தாபநஞ்செய்து வாதப்போரில்வெல்லலா மென்னுந் துணி வென்க. பிரளயகாலத்தில் எல்லாத்தெய்வங்களையும் வயிற்றில் வைத்துப் பாதுகாத்த தேவாதிதேவ னென்பது தோன்ற, 'அத்திக்குவித்தனையும்முண்ட வேங்கடத்தச்சுதன்' என்றார்; இது, முத்திக்குவித்தகனாதற்கு உரியவ னென்ற கருத்தை விளக்குதலால், கருத்துடையடைமொழியணி. சரணமடைந்தவர்களைக் கைவிடாதவ னென்றும் அழிவில்லாதவ னென்றும் பொருள்படுகிற 'அச்யுதன்' என்ற திருநாமத்தாற் குறித்ததும் இச்சந்தர்ப்பத்திற்கு ஏற்கும்.

வித்தி, புஸ்தகம், அப்தி, அச்யுதன், ச்ருதி என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. அப்தியென்பது - நீர்தங்குமிட மென்றும் (அப்-நீர்), ச்ருதி என்பது-(எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்யக்கிரமத்திலே கர்ணபரம்பரையாகக்) கேள்வியில் வழங்குவ தென்றும் காரணப்பொருள் பெறும். கு - வடசொல். வித்து - விதை; இங்குக் காரண மென்றபடி. இத்தனையும் - இவ்வளவும். இத்தனையும்முண்ட, மகரவொற்று - விரித்தல். (௩௩)

௩௪. முறையிடத்தேசமிலங்கைசெற்றான் முதுவேங்கடத்து
ளிறை யிடத்தேசங்குடையா னினியென்னையாண்டிலனே
றறையிடத்தேயுழலெல்லாப்பிறவிதமக்குமள
வுறையிடத்தேய்ந்திடுமிவ்வந்திவானத்துடுக்குலமே.

(இ - ள்.) தேசம் முறையிட - உலகத்தவர்பலரும் குறைகூறிவேண்ட, இலங்கை செற்றான் - இலங்கையிலுள்ள அரக்கர்களை அழித்தவனும், இடத்தே சங்கு உடையான் - இடக்கையிலே சங்கத்தை யுடையவனுமாகிய, முது வேங்கடத்துள் இறை-பழமையான திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிற பெருமான், இனி என்னை ஆண்டிலன் எல் - அவனை நான் சரணமடைந்தபின்பும் என்னை ஆட்கொள்ளாது விடுவனானால்,—தறையிடத்தே உழல் எல்லாப் பிறவிதமக்கும் - நிலவுலகத்திலே யான் மாறிமாறிப்பிறந்து திரியும் பலவகைப்பட்ட பிறப்புக்களுக்கெல்லாம், அளவு உறை இட - உறையிட்டுத் தொகைசெய்தற்கு, இ அந்தி வானத்து உடு குலம் தேய்ந்தி

மும் - மாலைப்பொழுதிலே வானத்தில்விளங்குகின்ற இந்த நக்ஷத்திரக்கூட்ட மெல்லாம் (போதாது) குறைந்திடும் ; (எ - று.)

இறைவன் என்னை ஆட்கொள்ளாவிட்டால், இன்னமும் அளவிறந்த பலசன்மங்களெடுத்து உழன்றுவருந்துவேனென்றபடி. உறையிடுதலாவது-பொருள்களைக் கணக்கிடும்போது ஞாபகத்தின்பொருட்டு ஒவ்வொருபெருந்தொகைக்கு ஒன்றாக இடுவதோர் இலக்கக்குறிப்பு. இந்த நக்ஷத்திரங்களின்தொகை எனதுபிறவிகளின்தொகைக்கு உறையிடவும் போதாதென்று அப்பிறப்புக்களின் வரம்பின்மையை விளக்கியவாறும். "இராமன்கை, யம்பினுதவும் படைத்தலைவரவரை நோக்கி னிவ்வரக்கர், கம்பின்மூலையா யுறையிடவும் போதார் கணக்குவரம்புண்டோ"என்ற கம்பராமாயணமும், "அன்றுபட்டவர்க் குறையிடப் போதுமோ வநேகநாளினும் பட்டார்" என்ற வில்லிபுத்தூரார் பாரதமும் இங்கு நோக்கத்தக்கவை.

தேசம், இலங்கை - இடவாகுபெயர்கள். இறை - இறைவன்; பண்பாகுபெயர். 'இனி' - எதிர்காலங்குறிப்பதோர் இடைச்சொல். தரா என்ற வடசொல்லின் விகாரமான தரையென்பது இங்கு எதுகைநோக்கித் தறையென்று விகாரப்பட்டது. தறையிடத்து எய் உழல் என்று பதம் பிரித்து, மண்ணுலகத்திற் பொருந்தியுழலுதற்கு இடமான என்று உரைத்தலுமொன்று. (௯௪)

௯௫. உடுக்குமுடைக்குமுணவுக்குமேயுழல்வீ ரினிநீ
ரெடுக்குமுடைக்குரம்பைக்கென்செய்வீ ரிழிமும்மதமு
மிடுக்குமுடைக்குஞ்சரந்தொட்டவேங்கடவெற்பரண்ட
வடுக்குமுடைக்குமவரடிகாண்மினனைவருமே.

(இ - ள்.) உடுக்கும் உடைக்கும் உணவுக்குமே உழல்வீர் - உடுத்துக்கொள்ளும் ஆடையையும் உண்ணும் உணவையும் தேடிப்பெறுதற்காகவே அலைகின்றவர்களே!—இனி நீர் எடுக்கும் - இனிமேலும் நீங்கள் எடுக்கவேண்டிய, முடை குரம்பைக்கு - முடைநாற்றத்தையுடைய உடம்புகளை [பிறப்புக்களை] யொழிப்பதற்கு, என் செய்வீர் - என்ன உபாயஞ் செய்வீர்கள்? இழி மும் மதமும் - ஒழுகுகின்ற மூன்றுவகைமதஜலங்களையும், மிடுக்கும் - வலிமையையும், உடை - உடைய, குஞ்சரம் - யானையை [கஜேந்திராழ்வானை], தொட்ட - (தாம் அதற்கு அபயப்ரதாநஞ்செய்தற்கு அறிகுறியாகத் தமது திருக்கையை அதன்தலைமேல்வைத்துத்)தொட்டருளிய, வேங்கட வெற்பர் - திருவேங்கடமலையை யுடையவரும், அண்டம் அடுக்கும் உடைக்கும் அவர் - அண்டகோளங்களின் வரிசைகளையெல்லாம் (சங்காரகாலத்தில்) அழிக்கின்றவருமான எம்பெருமானுடைய, அடி - திருவடிகளை, அனைவரும் காண்மின் - நீங்களெல்லாரும் தரிசியுங்கள்; (எ - று.)

தரிசித்தால் இனிப் பிறவியெடாது முத்திபெற்று உய்வீரென்பது, குறிப்பு. உடை - உடுக்கப்படுவது. முடை - புலால்நாற்றம். குரம்பை - சிறுகுடிசை; உயிர் சிலநாள்தங்குஞ் சிறுகுடிசை போலுதலால், உடல், குரம்

பை யெனப்பட்டது: உவமையாகுபெயர். "ஊனிடைச்சுவர்வைத்து என்பு தூண்நாட்டி உரோமம்வேய்ந்து ஒன்பதுவாசல், தானுடைக்குரம்பை" என்றார் திருமங்கையாழ்வாரும். மும்மதம் - கன்னமிரண்டும் குறியொன்றுமாகிய மூன்றிடத்தினின்றும் பெருகுவன; கர்ணமதம் கபோலமதம் பீஜமதம் என்றலும் உண்டு. குஞ்சரந் தொட்ட வேங்கடவெற்பர்— "ஆடியசிரசின் மீதில் அரிமலர்க்கையை வைத்து, வாடினை துயரமெய்தி மனமொருமித்து நம்மை, நாடினை யினியோர்நாளு நாசமேவாரதென்று, நீடியவுடலைக்கையால் தடவின னெடியமாலும்" என்னுங் கஜேந்திரமோக்ஷமும் காண்க. காண்மின் அனைவரும் என்றது, முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி; காண்மின் அனைவிரும் என்பது, வழாநிலையாம். (௫௫)

௫௬. வருமஞ்சனவனொருவனையேயுன்னிவாழ்த்துந் தொண்டீர்
கருமஞ்சனனங்களைந்துய்யவேண்டிற் கருதிற்றெல்லாந்
தருமஞ்சனவெற்பன்றாட்டாமரையைச்சதுமுகத்தோன்
றிருமஞ்சனஞ்செய்புனல்காணுமீசன்சிரம்வைத்ததே.

(இ - ள்.) தொண்டீர் - அடியார்களே!—கருமம் சனனம் களைந்து உய்ய வேண்டில் - ஊழ்வினையினாலாகிற பிறப்புக்களை (நீங்கள்) ஒழித்து [மீளாவுலகமாகிய முத்திபெற்று] வாழவேண்டுவீராயின், வரு மஞ்சு அனவன் ஒருவனையே உன்னி வாழ்த்தும் -(மழைபொழிய)வருகிற நீர்கொண்ட காளமேகத்தைப் போன்றவனான ஒப்பற்ற திருமாலையே தியானித்துத் துதியுங்கள்: கருதிற்று எல்லாம் தரும் - (அடியார்கள்) நினைத்த பொருள்களையெல்லாம் (அவர்கட்குக்) கொடுத்தருள்கிற, அஞ்சன வெற்பன் - திருவேங்கடமுடையானாகிய அந்தஸ்ரீமந்நாராயணனுடைய, தாள் தாமரையை - தாமரைமலர்போன்ற திருவடியை, சதுமுகத்தோன் - நான்குமுகங்களையுடையவனான பிரமன், திருமஞ்சனம் செய் - திருமஞ்சனஞ்செய்த, புனல் காணும் - தீர்த்தமன்றோ, ஈசன் சிரம் வைத்தது - சிவபிரான் தலையில் தரித்தது? (எ - று.)

திருமால் உலகமளந்தகாலத்தில் மேலே சத்தியலோகத்துச்சென்ற அப்பிரானது திருவடியைப் பிரமன் தன்கைக்கமண்டலதீர்த்தத்தாற் கழுவி விளக்க, அந்தஸ்ரீபாததீர்த்தமாகப்பெருகிய கங்காநதியைச் சிவபிரான் தனதுமுடியிலேற்றுக்கொண்டு பின்பு பூமியில்விட்டன னென்பது, இங்கு அறியவேண்டியகதை. ("குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர்பெய்து, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்திக்—கறைகொண்ட, கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினான்,அண்டத்தான்சேவடியையாங்கு," "சதுமுகன்கையிற் சதுப்புயன்றாளிற் சங்கரன்சடையினிற் றங்கிக், கதிர்முகமணிகொண் டிழிபுனற்கங்கை"என்றஆழ்வார்களருளிச்செயல்களையும், "அண்டகோளகைப்புறத்ததா யகில மன் றளந்த, புண்டரீக மென் பதத்திடைப் பிறந்து பூமகனார், கொண்ட தீர்த்தமா யான்கொளப் பகிரதன்கொணர, மண்டலத்துவந்தடைந்த திம்மாநதிமைந்த"என்ற கம்பராமாயணத்தையும்,

"உலகந்தாய வுயரடிநின்றிழிந்து, அலரின்மேலவ னங்கைதவழ்ந்து பொற், றிலகவாணுதல்பங்கன்றிரள்சடை, சுலவிவீழ்ந்தது தூநதி யிங்ஙனே" என்ற பாகவதத்தையுங் காண்க.) 'திரிமூர்த்திகளில் ஒருமூர்த்தி திருவடியைநீட்ட, மற்றொருமூர்த்தி அங்கு ஸ்ரீபாததீர்த்தம் சேர்க்க, வேறொருமூர்த்தி அத்திருவடித்தீர்த்தத்தைச் சிரமேற்கொண்டு புனிதனாயினன்: இவர்களிற் பெரியோன் யாவன்? நீங்களே ஆராய்ந்தறிந்து சொல்லுங்கள்' என்று உலகத்தாரைநோக்கி உரைத்துப் பரம்பொருள் இன்னதென்று காரணபூர்வமாக அறுதியிடுகின்றகருத்து அமைய, 'அஞ்சனவெற்பன் றாட்டாமரையைச் சதுமுகத்தோன்திருமஞ்சனஞ்செய்புனல்காணுமீசன்சிரம் வைத்ததே' என்றார். ("தன்றாதை யவர்தாமரைத்தாள்விளக்கும் அலையாறு சூடும்," "செங்கண்மால்கழல்மஞ்சனம் விழுந் தொட்டி சங்கரன்தலைகளே", "மங்கைபாகன் சடையில் வைத்த கங்கை யார் பதத்து நீர்" என இவ்வாசிரியர் பிறவிடங்களிற் கூறியனவுங் காண்க. "கேசவனார் சேடகிரிமாயர்க் கைந்துமுகத், தீச னதிபத்த னிதுசரதம் - நேசமிகச், சங்கங்கையேந்துமவர் தாட்புனலென்றே தினமு,மங்கங்கை சென்னிவைத்தானால்" என்ற திருவேங்கடக்கலம்பகச்செய்யுள், இதனைஅடியொற்றியதுபோலும்.)

தம்நெஞ்சார எம்பெருமானுக்கு அடிமைப்படாத உயிர்களும் இயல்பில் அப்பெருமானுக்கு அடிமையே யாதலால், 'தொண்டீர்' என்று விளித்தார். அனைவன்-அன்னவன் என்பதன் தொகுத்தல். ஒருவன்-அத்விதீயன். கர்மம், ஜநநம், சதுர்முகம், மஜ்ஜநம், சிரஸ் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. கருதிற்று - ஒன்றன்பா லிறந்தகால வினையாலணையும்பெயர்; சாதியொருமை. கருதிற்று எல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். காணும் என்ற ஏவற்பன்மை முற்று, தேற்றப்பொருள்பட நின்றது. புனல்காணுமீசன் சிரம்வைத்தது என்று பிரித்து உரைத்து, தொண்டீர் என்பதற்கு-சிவனடியார்களே யென்று பொருள்கொள்வாரு முளர். (௯௬)

௯௭. சிரந்தடிவானிவனோவென்றயன்வெய்யதீயசொல்லக்
கரந்தடிவான்றலைகவ்வப்பித்தேறலிற்கண்ணுதலோ
னிரந்தடிவீழத்துயர்தீர்த்தவேங்கடத்தெந்தைகண்டீர்
புரந்தடியேனைத்தன்பொன்னடிக்கீழ்வைக்கும்புண்ணியனே.

(இ - ள்.) 'சிரம் தடிவான் இவனோ - (எனது) தலையைக் கொய்பவன் இவனோ?' என்று—, அயன் - பிரமன், வெய்ய தீய சொல்ல - கொடிய தீச்சொற்களைக் கூறி யிகழ, கரம் - (சிவபிரானது)கை, தடி வான் தலை கவ்வ - தசையையுடைய பெரிய (பிரமனது) தலையைக் கொய்திட (அதுபற்றி), பித்து ஏறலின் - பைத்தியங்கொண்டதனால், கண் நுதலோன் - நெருப்புக்கண்ணை நெற்றியிலுடையவனான அச்சிவபிரான், இரந்து அடி வீழ - பிச்சையேற்றுவந்து திருவடிகளில் விழுந்து வணங்க, துயர் தீர்த்த - (அவனது) துன்பத்தைப் போக்கியருளிய, வேங்கடத்து எந்தை கண்டீர்-திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானன்றோ, அடியேனை - தாசனான என்னை, புரந்து - பாதுகாத்து, தன் பொன் அடி கீழ் வைக்கும் -

தன்னுடைய அழகிய திருவடியில் வைத்தருளும், புண்ணியன் - பரிசுத்த மூர்த்தியாவான்; (எ - று.)

ஒருகாலத்திலே, பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்துதலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்றுகருதி, அவனது சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக்கொள்ளுதலும், அவன் 'இதற்கு என் செய்வது?' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந்தொலையப் பிச்சையெடுக்கவேண்டும்: என்றைக்குக் கபாலம் நிறையுமோ, அன்றைக்கே இது கையை விட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பலதலங்களிலுஞ் சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்சிரமத்தையடைந்து அங்குஎழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது, அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையை விட்டு அகன்றது என்ற வரலாறு, இங்கு அறியத்தக்கது. இவ்வரலாற்றுமுகத்தால், எம்பெருமானுடைய பரத்வத்தை வெளியிட்டு அப்படிப்பட்ட ஸர்வேச்வரனே யான்வழிபடுங்கடவு ளென்றார். ("பிண்டியார்மண்டையேந்திப் பிறர்மனைதிரிதந்துண்ணு, முண்டியான்சாபந்தீர்த்த வொருவனூர்,......, மண்டினாருய்யலல்லால் மற்றையார்க்குய்யலாமே" என்பது, திருமங்கையாழ்வார் பாசுரம். "அஞ்சக்கரத் தலைக்கங்கைய னேற்றலுமஞ்சிறைய, அஞ்சக் கரத்தலைக் குண்டிகையான் மண்டை யங்கைவிட்டே, அஞ்சக் கரத்தலைச் செய்து பித்தேக வருளரங்கன், அஞ்சக்கரத்தலைவன் றுளலான் மற்றரணில்லையே" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். "வையத்தார் வானத்தார் மழுவாளிக் சன்றளித்த, ஐயத்தாற் சிறிதையந் தவிர்ந்தாரு முளரையா" எனக் கம்பர்கூறியதுங் காண்க) பிரமன்தலையைச் சிவன் கொய்யவந்தபோது பிரமன் அவனை இகழ்ந்துபேசியதை முதலடியில் விளக்கினார்.

அஜன் என்ற வடசொல் - திருமாலிடத்தினின்று தோன்றியவ னென்று பொருள்படும்; அ-திருமால். ஈய - பலவின்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். கண்டீர் என்ற முன்னிலைப்பன்மை யிறந்தகாலமுற்று, இடைச்சொல்தன்மைப்பட்டுத் தேற்றப்பொரு ளுணர்த்தும். தடிதல் - துணித்தல். தடி - தசை. எந்தை - எமது சுவாமி. அடிக்கீழ், கீழ் - ஏழனுருபு. (௩௭)

௩௮. புண்ணியங்காமம்பொருள்வீடுபூதலத்தோர்க்களிப்பா
னெண்ணியங்காமன் றிருத்தாதைநிற்குமிடமென்பரா
னண்ணியங்காமன்பரைக்கலங்காத்திருநாட்டிருத்தி
மண்ணியங்காமற்பிறப்பறுத்தாளும்வடமலையே.

(இ - ள்.) நண்ணி - விரும்பி, அங்கு - அவ்விடத்து [தன்னிடத்து], ஆம் - வந்துசேர்கின்ற, அன்பரை - பக்தர்களை, கலங்கா திருநாடு இருத்தி- (எக்காலத்தும்) நிலைகலங்குதலில்லாத சிறந்த இடமாகிய பரமபதத்திலே

இருக்கவைத்து, மண் இயங்காமல் - (மீண்டும்) நிலவுலகத்தில்உழலாதபடி, பிறப்பு அறுத்து - (அவர்களுடைய) பிறப்பை யொழித்து, ஆளும் - (அவர்களை) ஆட்கொள்ளுகின்ற, வட மலை - வடக்கின்கண்உள்ள திருமலையாகிய திருவேங்கடத்தை,—அம் காமன் திரு தாதை - அழகியமன்மதனது சிறந்த தந்தையான திருமால், புண்ணியம் காமம் பொருள் வீடு - அறம் இன்பம் பொருள் வீடு என்ற நான்கு உறுதிப்பொருள்களையும், பூதலத்தோர்க்கு அளிப்பான் - நிலவுலகத்தில்வாழ்கிற சனங்கட்குக் கொடுத்தருள, எண்ணி-நினைத்து, நிற்கும் - எழுந்தருளிநிற்கிற, இடம்—, என்பர் - என்றுசொல்வர்,(ஆன்றோர்); (எ-று.)—ஆல் - ஈற்றசை; (செய்யுளிறுதியில் நிற்பதேயன்றிச் செய்யுளடியினிறுதியிலும் பயனிலையினீற்றிலும் நிற்கிற இடைச்சொல்லும் பொருள்தராதாயின் ஈற்றசை யெனப்படும்.)

இச்செய்யுள் - இடம் அல்லது பதி என்னுந் துறையின்பாற் படும்.

திருவேங்கடத்தையடைந்து எம்பெருமானைச்சேவித்தவர் தாம்வேண்டியபடி இம்மைமறுமைகளில் அறம்பொருளின்பங்களைப் பெறுதலன்றிப் பின்பு கருமமொழியப் பிறப்பற்று மீளாவுலகமாகிய முத்தியையும் பெற்று வாழ்வ ரென்பது கருத்து; ''திருவேங்கடம் நங்கட்குச், சமன்கொள்வீடு தருந் தடங்குன்றமே,'' ''குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவ, னன்றுஞாலமளந்தபிரான் பரன்,சென்றுசேர்திருவேங்கடமாமலை, யொன்றுமே தொழ நம்வினையோயுமே'' என்ற அருளிச்செயல் இங்குக் கருதத்தக்கது.

சதுர்வித புருஷார்த்தங்களைத் தருமம் அர்த்தம் காமம் மோக்ஷம் என முறைப்படுத்தி நிறுத்துவது மரபாயினும், இங்குச் செய்யுள்நோக்கி முறை பிறழ வைத்தார்; அன்றியும், அறம்போலவே இன்பமும் பொருளின் பயனாதலால், சாதநமான பொருளைச் சாத்தியமான அறம் இன்பம் என்பவற்றின்பின் வைத்தன ரென்று காரணங்காணலாம்.கண்ணபிரானது மனைவியும் திருமகளின் திருவவதாரமுமான ருக்மிணிப்பிராட்டியினிடம் மன்மதன் பிரத்யும்நனென்னுங்குமாரனாகத் தோன்றியதுபற்றி, திருமால் 'காமன்தாதை'எனப்படுவன். காமன் - (எல்லாவுயிர்கட்கும்)சிற்றின்பவிருப்பத்தை விளைப்பவன்; (யாவராலும்) காமிக்கப்படும் [விரும்பப்படும்] கட்டழகுடையவன். இங்கு 'காமன்திருத்தாதை'என்றது,காமனுக்குரியமகன் என்றபடி. ''சிறுகாலையிலா நிலையோதிரியா, குறுகா நெடுகா குணம்வேறுபடா, உறுகால்கிளர்பூதமெலா முகினும், மறுகாநெறி''என்றபடி பரமபதம் என்றும் ஒருதன்மைத்தாயிருத்தல் தோன்ற 'கலங்காத் திருநாடு' எனப்பட்டது;''கலங்காப் பெருநகரம்'' என்றார் பேயாழ்வாரும்; புக்கவர் கலக்கம்ஒழியப்பெறுகிற திருநா டெனினுமாம். கலங்கா-ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்; ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சமாகக்கொண்டு, கலங்கா(மல்) - கலங்காதபடி திருநாட்டிலிருத்தி யென்று உரைப்பாருமுளர்.

'என்பர்'என்ற முற்றுக்கு எற்றபடி தோன்றா எழுவாய் வருவிக்கப்பட்டது. செய்யுளாதலின்,'அங்கு'எனச் சுட்டுப்பெயர் 'வடமலை'என்ற இயற்பெயர்க்கு முன் வந்தது. இயங்குதல் - உலாவுதல். (௬௫)

௩௯. வடமலையப்பன்னகஞ்சேர்ந்தவ னிடைமங்கைகொங்கை
வடமலையப்பன்னரும்போகந்துய்த்தவன் மாயன் கண்ணன்
வடமலையப்பன்னருள்போற்றியைவர்மயக்குகர
வடமலையப்பன்னிருநாமநாவின் மலக்குவனே.

(இ - ள்.) வடம் - (பிரளயப்பெருங்கடலில்) ஆலிலையிலும், அலை அ பன்னகம் - (திருப்பாற்) கடலில் (ஆதிசேஷனாகிய) அந்தப்பாம்பினிடத்திலும், சேர்ந்தவன் - படுத்துக்கண்வளர்ந்தவனும், இடை மங்கை கொங்கை வடம் அலைய - இடையர்சாதிப்பெண்ணான நப்பின்னைப்பிராட்டியினது தனங்களில் அணிந்த ஆரங்கள் அசையும்படி, பன் அரும் போகம் துய்த்தவன் - சொல்வதற்குஅரிய[அளவிறந்த] இன்பத்தை யனுபவித்தவனும், மாயன் - அற்புதசக்தியுள்ளவனும், கண்ணன் - கிருஷ்ணாவதாரஞ்செய்தவனுமான, வடமலை அப்பன் - திருவேங்கடமுடையானது, அருள் - திருவருளை, போற்றி - துதித்து,— ஐவர் மயக்கு கரவடம் அலைய - பஞ்சேந்திரியங்கள் (மனத்தை) மயங்கச்செய்கிற வஞ்சனை ஒழியுமாறு, பன்னிரு நாமம் - (அப் பெருமானுடைய) பன்னிரண்டு திருப்பெயர்களையும், நாவின் மலக்குவன் - நாவினால் விடாமற்சொல்வேன், (யான்); (எ - று.)

துவாதசநாமம் - கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதநன், திரிவிக்கிரமன், வாமநன், ஸ்ரீதரன், ஹ்ருஷீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பன. நாவின் மலக்குதல் - நாவினால் இடைவிடாது உச்சரித்து அடிப்படுத்துதல்; பயிற்றுதல். 'அலை' என்பதை மத்தியமதீபமாக 'வடம்' என்பதனோடுங் கூட்டுக. அப் பன்னகம், அகரச்சுட்டு பிரசித்தியைக் காட்டும். பந்நகம் என்ற வடசொல் - பத் நகம் என்றுபிரிந்து, கால்களால் நடவாதது என்று காரணப்பொருள்படும். இடை - சாதிப்பெயர். பன்-பன்னுதற்கு; முதனிலைத்தொழிற்பெயர்: நான்காம்வேற்றுமைத்தொகை. போகம், நாமம் - வடசொற்கள். அலைய - நிலைகுலைய.

இது, யமகச்செய்யுள். (௩௯)

௪0. மலங்கத்தனத்தையுழன்றீட்டிமங்கையர்மார்பில்வட
மலங்கத்தனத்தையணையநிற்பீ ரப்பன்வேங்கடத்து
ளிலங்கத்த னத்தைமகன்றேரினின்றெதிரேற்றமன்னர்
கலங்கத்தனத்தைக்குறித்தானைமேவக்கருதுமினே.

(இ - ள்.) மலங்க - மனங்கலங்க, தனத்தை - செல்வத்தை, உழன்று ஈட்டி - (பலவிடத்தும்) அலைந்து சேர்த்து, மங்கையர் மார்பில் வடம் அலங்க - இளமகளிரது மார்பிலணிந்துள்ள ஆரங்கள் புரளும்படி, தனத்தை அணைய - (அவர்களது) கொங்கையைத் தழுவ, நிற்பீர் - முயன்று நிற்பவர்களே!— அப்பன் - ஸ்வாமியும், வேங்கடத்துள் இலங்கு அத்தன் - திருவேங்கடமலையில் எழுந்தருளிவிளங்குகின்ற தலைவனும், அத்தை மகன் தேரில் நின்று - அத்தைமுறையான குந்தியின் குமாரனாகிய அருச்சுனனது தேரில் (பாகனாய்) நின்று, எதிர் ஏற்ற மன்னர் கலங்க தன்நத்தை குறித்தானை-

எதிரிற் பகைத்து வந்துநின்ற அரசர்கள் நடுக்கும்படி தனது (பாஞ்சசந்ய மென்னுஞ்) சங்கத்தை ஊதிமுழக்கினவனுமான எம்பெருமானை, மேவ - சரணமடைய, கருதுமின் - நினையுங்கள்; (எ - று.)

என்று உலகத்தார்க்கு இதோபதேசஞ் செய்தபடியாம். கண்ணபிரானது தந்தையான வசுதேவனுக்கு உடன்பிறந்தவளாதலால், குந்தி, கண்ணனுக்கு அத்தையாவள். அருச்சுனனது வேண்டுகோளின்படி கண்ணன் திருவருளால் மகாபாரதயுத்தத்தில் அவனுக்குத் தேரூர்ந்து பார்த்தசாரதி யென்று பெயர்பெற்றமை, பிரசித்தம். அப்பொழுது கண்ணன் தனதுசங்கொலியாற் பகைவரை அஞ்சுவித்து அழித்தனன்; "தருணவாணிருபர் மயங்கிவீழ்தர வெண்சங்கமு முழக்கி" என்பது பாரதம். ஈட்டுதல் சம்பாதித்துத்தொகுத்தல்.

இச்செய்யுளின் முன்னிரண்டடி - யமகம்; பின்னிரண்டடி-திரிபு.(சo)

சக. கருத்தாதரிக்குமடியேனைத்தள்ளக்கருதிக்கொலோ
திருத்தாதரிக்குமைவர்க்கிரையாக்கினை செண்பகத்தின்
மருத்தாதரிக்குமருவியறுவடவேங்கடத்து
வொருத்தா தரிக்கும்படியெங்ஙனேயினியுன்னைவிட்டே.

(இ - ள்.) செண்பகத்தின் - சண்பகமலர்களினுடைய, மரு - வாசனையுள்ள, தாது - மகரந்தப்பொடிகளை, அரிக்கும் - அரித்துக்கொண்டுவருகிற, அருவி - நீரருவிகள், அறு - எந்நாளும்இடைவிடாதுபெருகப்பெற்ற, வடவேங்கடத்துள் - வடக்கின்கணுள்ள திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கின்ற, ஒருத்தா - ஒப்பற்றகடவுளே!—கருத்து ஆதரிக்கும் - மனத்தில் (உன்னையே) விரும்புகின்ற, அடியேனை - தாசனான என்னை, தள்ள - (உன் பக்கல் சேர்த்துக்கொள்ளாது) தள்ளிவிட, கருதிக்கொல்ஓ - எண்ணியோ, திருத்தாது - (ஆட்கொண்டு) சீர்திருத்தாமல், அரிக்கும் ஐவர்க்கு இரை ஆக்கினை - கெடுக்கின்ற பஞ்சேந்திரியங்களுக்கு (என்னை) உணவாக்கிவிட்டாய்; இனி உன்னை விட்டு தரிக்கும் படி எங்ஙனே - இனி (நான்) உன்னையின்றி உய்யும்வகை எவ்வாறோ? (எ - று.)

இங்ஙனம் தனது அநந்யகதித்வத்தை[அதாவது - திருவேங்கடமுடையானையன்றி வேறொருரக்ஷகனை யின்றியிருப்பதை] வெளியிட்டார். 'செண்பகத்தின்மருத்தாதரிக்குமருவியறு' என்றது, மலைவளத்தை யுணர்த்தும். கருதிக்கொலோ, கொல் - அசை. இரையாக்கினை - இலக்காக்கினை யென்றபடி. சம்பகமென்றவடசொல்லின்விகாரமான சண்பக மென்பது,மோனைத்தொடையின்பொருட்டு, செண்பகம் என்று விகாரப்பட்டது. இந்த மரத்தின்பெயர் - இங்குப் பூவுக்கு முதலாகுபெயர். ஒருத்தன் - ஏகமூர்த்தி.

சஉ. உன்னைக்கரியமிடற்றனயன்முதலும்பரெல்லாம்
பொன்னைக்கரியொத்தபோதுமொவ்வார் புகழ்க்கோசலையா
மன்னைக்கரியமுத்தே யப்பனே யுன்னையன்றிப்பின்னை
முன்னைக்கரியளித்தாய்க்குவமானமொழியில்லையே.

(இ - ள்.) புகழ் - கீர்த்தியையுடைய, கோசலை ஆம் - கௌசல்யையாகிய, அன்னைக்கு - தாய்க்கு, அரிய முத்தே-அருமையான முத்துப்போன்ற குமாரனே! அப்பனே - திருவேங்கடமுடையானே!—கரி பொன்னை ஒத்த போதும் - கரியானது பொன்னை யொத்தபோதிலும், கரிய மிடற்றன் அயன் முதல் உம்பர் எல்லாம் உன்னை ஒவ்வார் – நீலகண்டனான சிவன் பிரமன் முதலிய தேவர்களனைவரும் உன்னை யொக்கமாட்டார்கள் ; (ஆதலால்),—முன்னை கரி அளித்தாய்க்கு - முன்பு கஜேந்திராழ்வானைப் பாதுகாத்தவனான உனக்கு, உன்னை அன்றி பின்னை உவமானம் மொழி இல்லை - உன்னையே உபமானமாகக்கூறுவதன்றி வேறோர்உபமானங் கூறும்வகை இல்லை ; (எ - று.)—ஏற்றுமேகாரம் - தேற்றம்.

"தன்னொப்பா ரில்லப்பன்", "ஒத்தாரை மிக்காரை யிலையாய மாமாயா", "ஈடுமெடுப்புமிலீசன்"என்ற திருவாய்மொழியையும், "தனக்குவமையில்லாதான்" என்ற திருக்குறளையுங் காண்க. கரியமிடற்றன் - நஞ்சுண்டதனாற் கறுத்த கழுத்தையுடையவன். உம்பர்என்ற மேலிடத்தின்பெயர்-அங்குள்ள தேவர்க்கு இடவாகுபெயராம்; இதில், உகரச்சுட்டு - மேலிடத்தைக் குறித்தது: இதன் எதிர்மொழி - இம்பர் [இவ்விடம்], அம்பர் என்பன. புகழ் -"என்னநோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்," "செம்மலைப் பயந்த நற்றாய் செய்தவ முடையள்" என்றபடி நற்குணநற்செய்கைகளிற் சிறந்த புருஷோத்தமனான இராமபிரானைப் பெற்றதனா லாகிய கீர்த்தி. கோசலை-கௌஸல்யா என்ற வடசொல்லின் விகாரம்; கோசலதேசத்தரசனது மக ளென்பது பொருள்: தத்திதாந்தநாமம். கோசலம் - உத்தரகோசலம் தக்ஷிணகோசலம் என இரண்டு பிரிவுள்ளது; அவற்றில் தக்ஷிணகோசலத்தரசன் மகள் இவள்: (தசரதன், உத்தரகோசலத்து அரசாண்டவன்.) முத்துப்போ லருமையான மகனை 'முத்து' என்றது, உவமையாகுபெயர். உபசாரவழக்கு; தெளிவுக்கும் நீர்மைக்கும் குளிர்ச்சிக்கும் முத்து உவமைகூறப்படும்: மேலும் (௬௨-ஆங் கவியில்) "பாவையிரங்கு மசோதைக்கு முத்து" என்பர். 'பின்' என்ற இடைச்சொல் - வேறு என்ற பொருளில் வந்தது. முன் - காலமுன். இவற்றில், ஐ - சாரியை. பின்னை முன்னை என்ற மாறுபட்ட சொற்கள் தொடர்ந்து வந்தது, தொடைமுரணிசைப்பாற்படும். (௪௨)

௪௩. இல்லைக்கண்டீரின்பந் துன்பங்கண்டீர் கண்டவேந்திழையார்
சொல்லைக்கண்டீரமுதென்னுந்தொண்டீர் தொல்லசுரனிறங்
கல்லைக்கண்டீரவத்தைத் திருவேங்கடக்காவலனை
மல்லைக்கண்டீர்தரத்தேய்த்தானை வாழ்த்துமின்வாழுகைக்கே.

(இ - ள்.) கண்ட-கண்ணுக்கு இலக்காகிய, ஏந்து இழையார் - தரித்த ஆபரணங்களையுடைய மகளிரது, சொல்லை - சொற்களை,கண்டு ஈர் அமுது என்னும் - (இனிமையினால்) கற்கண்டு என்றும் குளிர்ந்தஅமிருதம் என்றும் சொல்லுகிற,தொண்டீர்-(அவர்கட்குத்)தொண்டுபூண்டொழுகுபவர்களே!— இன்பம் இல்லை கண்டீர் - (அவ்வாறுஒழுகுதலில் உண்மையான) இன்பம்

இல்லையென்று அறிவீர்கள்; துன்பம் கண்டீர் - பலவகைத்துன்பமே உண்டென்றும் அறிவீர்கள்; வாழுகைக்கு - (இனி நீங்கள்) பேரின்பவாழ்வு பெறுகைக்காக,— தொல் - பழமையான, அசுரன் - இரணியாசுரனுடைய, நிறம் - மார்பை, கல் - கீண்ட, ஐ கண்டீரவத்தை - அழகிய சிங்கமூர்த்தியானவனும், மல்லை - மல்லர்களை, கண் தீர்தர தேய்த்தானை - கண்கெடும்படி சிதைத்தவனுமான, திருவேங்கடம் காவலனை - திருவேங்கடமுடையானை, வாழ்த்துமின் - பல்லாண்டுபோடித் துதியுங்கள்; (எ - று.)

முதலடியில் இரண்டிடத்து உள்ள 'கண்டீர்' என்ற சொல் - தேற்றமுமுணர்த்திற்று. கண்ட - பார்த்த. ஏந்து இழையார் - செயற்கையழகினால் மேனிமினுக்குபவர் என்றபடி. 'தொல்லசுரன்' என்றது, நெடுங்காலமாக அழிக்கப்படாது கொழுத்துச் செருக்கித்திரிந்த தேவசத்துரு என்றவாறு. கல் ஐக்கண்டீரவம் - வினைத்தொகை; கல்லுதல் - இடந்தல். கண்டீரவம் என்ற வடசொல் - மிடற்றில்தொனியுடையதென்று பொருள்படும்; கண்டம் - கழுத்து, ரவம் - ஓசை. திருவேங்கடக்காவலன் - திருவேங்கடமலைக்குத் தலைவன். காவலன் - அரசன்; இது, கா வலன் என்று பிரிந்து காத்தலில்வல்லவனென்றும், காவல் அன் என்று பிரிந்து காத்தற்றொழிலையுடையவனென்றும் பொருள்படும். மல் - மற்போர்; ஆயுதங்கொண்டன்றித் தேகபலங்கொண்டு செய்யும் போர்: அதனையுடையவர்க்கு ஆகுபெயர். கண் தீர்தர என்பதற்கு - கண்ணோட்டமில்லாமலென்று பொருள்கொளினுமாம். இனி, கை கால் தலை என்பனபோல, கண்என்பதை உபசர்க்கமென்றலும் ஒன்று. (சரு)

சச. கைத்தனுமோடிசைவெற்பெனக்காணவெவ்வாணனென்னு
மத்தனுமோடிகல்செய்வனென்றேவந்துவையுறுவே
லத்தனுமோடியுமங்கியுமோடவென்னப்பனுக்குப்
பித்தனுமோடினனங்கத்துத்தானென்றும்பெண்ணனென்றே.

(இ - ள்.) கை தனு - கையிலேந்திய வில்லானது, மோடு இசை வெற்பு என காண - உயர்ச்சிபொருந்திய மலைபோலத் தோன்ற, வெவ் வாணன் என்னும் மத்தன் - கொடிய பாணாசுரனென்கின்ற உன்மத்தன், உமோடு இகல் செய்வன் என்றே வந்து - 'உம்முடனே போர்செய்வேன்' என்று வீரவாதங்கூறிக்கொண்டே (கண்ணபிரானுடன் போர்க்கு) வந்தபோது,—என் அப்பனுக்கு - எம்பிரானாகிய அத்திருவேங்கடமுடையானுக்கு முன், வை உறு வேல் அத்தனும் - கூர்மைமிக்க வேலாயுதத்தை யேந்திய கையையுடையவனான முருகக்கடவுளும், மோடியும் - துர்க்கையும், அங்கியும் - அக்கினியும், ஓட - தோற்றோட, பித்தனும் - பித்தனாகிய சிவனும், அங்கத்து தான் என்றும் பெண்ணன் என்று ஓடினன் - உடம்பில் தான் எப்பொழுதும் பெண்ணையுடையவனென்றுசொல்லிக்கொண்டு ஓடினான்; (எ - று.)

"மோடி யோட வங்கி வெப்பு மங்கியோட வைங்கரன், முடுகியோட முருகனோட முக்கணீசன் மக்களைத், தேடியோட வாணனாயிரம்புயங்கள்

குருதிநீர், சிந்தியோட நேமி தொட்ட திருவரங்கராசரே" என்றார் திருவரங்கக்கலம்பகத்திலும்.

'பெண்ணென்றாற் பேயு மிரங்கும்' ஆதலின், எதிர்த்துப்பொருகின்ற கண்ணபிரான் தன்னையழியாமல் உயிரோடு விட்டிடுமாறு அப்பெருமானுக்கு இரக்கமுண்டாதற்பொருட்டுச் சிவபிரான் 'அங்கத்துத் தான் பெண்ணன்' என்று சொல்லிக்கொண்டு ஓடினனென்க. 'அங்கத்துத் தான் என்றும் பெண்ணன்' என்ற தொடரில் - உடம்பில் (ஒருபாதி) தான் எப்போதும் பெண்வடிவையுடையவனான நபும்ஸகனென்ற பொருளும் தொனிக்கும்: ஒருசார் ஆணுறுப்பும் ஒருசார் பெண்ணுறுப்பும் விரவி ஒருவகையாயினும் நிரம்பாமல் நிற்றல் பேடியின் இலக்கணமாதல் காண்க; தான் ஆண்மை நிரம்பாதவனென்று தெரிவித்துக்கொண்டு ஓடினனென்பது போதரும். முருகன் வேற்படையிற் சிறந்தவனாய் வேலனென்று ஒருபெயர் பெறுதலால், 'வையுறுவேல் அத்தன்' எனப்பட்டான்; இவன், சிவபிரானது இளையகுமாரன்: (மூத்தவன் - விநாயகன்.) துர்க்கை - பார்வதியின் அம்சமானவள். 'உம்மோடு' என்ற முன்னிலைப்பன்மை, கண்ணபிரானுடன் சென்ற பலராமன் பிரத்யும்நன் முதலாயினாரை உளப்படுத்தியது.

மத்தன் - கொழுத்தவன்: புலன்வேறுபட்டவன்; வடசொல். வந்து= வர: எச்சத்திரிபு; "சொல்திரியினும் பொருள்திரியா வினைக்குறை" என்பது நன்னூல். அத்தம் - கை; ஹஸ்த மென்ற வடசொல்லின் விகாரம்; அதனையுடையவன், அத்தன். பித்தன் - மதிமயங்கியவன் ; செய்வன தவிர்வன அறியாதவன் ; தமோகுணதேவதை. உம் - இறந்ததுதழுவியது. (சச)

சரு. பெண்ணாக்குவிக்கச்சிலைமேலொருதுகள்பெய்தபொற்றா
ளண்ணாக்குவிக்கலெழும்போதெனக்கருள்வாய் பழிப்பு
நண்ணாக்குவிக்கச்சிளமுலைப்பூமகணாயகனே
யெண்ணாக்குவிக்கக்குழலூதும்வேங்கடத்தென்கண்ணனே.

(இ - ள்.) பழிப்பு நண்ணா - யாதொருநிந்தையையும் அடையாத, குவி கச்சு இள முலை பூ மகள் - குவிதலையுடையனவும் கச்சணிந்தனவும் என்றும்இளமையாருதனவுமான தனங்களையுடையவளும் செந்தாமரைமலரில் வாழ்பவளுமாகிய திருமகளுக்கு, நாயகனே - கணவனே! எண் ஆ குவிக்க- பேரெண்ணையுடைய [மிகப்பலவான] பசுக்களை ஒருங்குசேர்த்தற்பொருட்டு, குழல் ஊதும் - புள்ளாங்குழலை ஊதியருளிய, வேங்கடத்து என் கண்ணனே-திருவேங்கடமலையில்எழுந்தருளியிருக்கிற எனதுகண்ணபிரானே! —பெண் ஆக்குவிக்க சிலை மேல் ஒரு துகள் பெய்த பொன் தாள் - (ஒரு கல்லை அகல்யையென்னும்) பெண்ணாகச் செய்விக்குமாறு அக்கல்லின்மேல் ஒருதூளியை யிட்ட (நினது) அழகிய திருவடிகளை, அண்ணாக்கு விக்கல் எழும்போது எனக்கு அருள்வாய் - உள்நாக்கிலிருந்து விக்குள் உண்டாகும் போது [அந்திமகாலத்தில்] அடியேனுக்குத் தந்தருள்வாய்; (எ - று)

'திருவடியே வீடாயிருக்கும்' என்ற கோட்பாடுபற்றி, 'தாள் எனக்கு அருள்வாய்' என்றனரென்க. நினது திருவடியை என்மீது வைத்தருள்வாயென்றும், என்னை நினது திருவடியிற் சேர்த்தருள்வா யென்றுங் கொள்ளலாம். முதலடியினால், மிகவலிய கல்லையும் மிகமெல்லிய பெண்ணாக்கவல்லதெனத் திருவடியின் சிறப்பை விளக்கினர்.

பலவிடங்களிற் பாவிமேய்கின்ற பசுக்கூட்டங்களை ஒருங்குசேர்த்தற் பொருட்டும் அவற்றை மகிழ்வித்தற்பொருட்டும் கண்ணன் வேய்ங்குழலூதினமை, பிரசித்தம். "பூவிற்குத் தாமரையே"என்றபடி எல்லாமலர்களிலும் தாமரை சிறத்தலால், அது வாளா 'பூ' எனப்பட்டது; "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" என்றார் பிறரும்: (பொறி-இலக்குமி.) இரட்டுறமொழிதலென்னும் உத்தியால், பூமகள் என்பதற்கு - பூமிதேவியென்றும் பொருள் கொள்ளலாம்; ("வாயுமனைவியர் பூமங்கையர்" என்பர் நூற்றெட்டுத்திருப்பதியந்தாதியிலும்;) இப்பொருளில், பூ - வடசொல். குவி-முதனிலைத்தொழிற்பெயர்; இரண்டாம்வேற்றுமையுருபும்பயனுந்தொக்கதொகை; குவிகிற என்று பொருளுரைத்து, வினைத்தொகை யென்ன லாகாது; வினைத்தொகையில் 'குவிக்கச்சு' என வருமொழிமுதல்வலி மிகா தாதலின். கச்சு-கஞ்சுக மென்ற வடசொல்லின் சிதைவு. எண் - தொகை; இங்குப் பெருந்தொகை. இனி, எண்-நன்குமதிக்கத்தக்க, ஆ - பசுக்க ளெனினுமாம். (சரு)

சசு. கண்ணனையேனெஞ்சுருகேனவைகொண்டென் கண்ணுநெஞ்சு
புண்ணனையேன்கல்லனையேனென்றாலும்பொற்பூங்கமலத் [ம்
தண்ணனையேநல்லசார்வாகவேங்கடஞ்சார்ந்துமணி
வண்ணனையேயடைந்தேற்கில்லையோதொல்லைவைகுந்தமே.

(இ - ள்.) கண் நனையேன் - (பக்திமிகுதியாலாகிற ஆநந்தக்கண்ணீரினாற்) கண்கள் நனையப்பெறுகிறேனில்லை; நெஞ்சு உருகேன் - மனமுருகப் பெறுகிறேனில்லை; அவை கொண்டு - அக்கண் நனையாமையையும் நெஞ்சுருகாமையையுங் கொண்டு, என் கண்ணும் நெஞ்சும் புண் அனையேன் கல் அனையேன் - எனது கண்ணும் மனமும் (முறையே)புண்களுக்குஒப்பானவனாயினேன் கல்லுக்கு ஒப்பானவனாயினேன்; என்றாலும் - இங்ஙனம் ஆனாலும்,—பொன் பூ கமலம் தண் அனையே நல்ல சார்வு ஆக - அழகிய செந்தாமரைப்பூவில்வீற்றிருக்கின்ற தண்ணளியையுடைய தாயான பெரியபிராட்டியாரையே நல்லதுணையாகக்கொண்டு, வேங்கடம் சார்ந்து மணி வண்ணனையே அடைந்தேற்கு - திருவேங்கடமலையை யடைந்து (அங்குஎழுந்தருளியிருக்கிற)நீலமணிபோலுந் திருநிறமுடையவனான எம்பெருமானையே சரண்புக்கவனாகிய எனக்கு, தொல்லை வைகுந்தம் இல்லையோ-அநாதியான பரமபதம் கிடையாமற்போகுமோ? [போகாது: நிச்சயமாய்க் கிடைக்கும் என்றபடி]; (எ - று.)

பக்திவசப்படுதலாலாகும்மெய்ப்பாடுகளிற் குறைவுற்றிருந்தாலும், பிராட்டிபுருஷகாரமாகப் பெருமாள்பக்கல் சரண்புக்கது பழுதுபடாது பரகதி

பெறுவிக்கு மென்பதாம். 'கண்ணும் நெஞ்சும் புண்ணனையேன் கல்லனையேன்' என்ற தொடர் - கண் புண்அனையேன், நெஞ்சு கல்அனையேன் என முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். பகவத் விஷயத்தில் ஈடுபட்டு ஆநந்தபாஷ்பம்பெருகதலான கண்களின் இழிவுதோன்ற அவற்றை 'புண்' என்றும், அவ்விஷயத்தில் இளகாத மனத்தை 'கல்' என்றுங் கூறினர். நவைகொண்டு என்று பதம்பிரித்து, (கண்நனையாமையும் நெஞ்சு உருகாமையுமாகிய) குற்றங்களைக் கொண்டு என்றலு மொன்று. மூன்றுமடியில், அனை-அன்னையென்பதன் தொகுத்தல். நல்ல சார்வு - பரகதிக்கு உற்றதுணை. (௪௬)

௪௭. வைகுந்தமாயவிழிமாதர்வேட்கையைமாற்றியென்னை
வைகுந்தமாயவினைநீக்கியமுத்தர்மாட்டிருத்தி
வைகுந்தமாயவொசித்தாய் வடதிருவேங்கடவா
வைகுந்தமாயவனே மாசிலாதவென்மாமணியே.

(இ - ள்.) குந்தம் மாய ஒசித்தாய் - குருந்தமரம் அழியும்படி முறித்திட்டவனே! வட திருவேங்கடவா - வடக்கின்கணுள்ள திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவனே! வைகுந்தம் மாயவனே - ஸ்ரீவைகுண்டத்துக்குத் தலைவனான திருமாலே! மாசு இலாத - குற்றமில்லாத, என் மா மணியே - எனது தலைவனான சிறந்த மாணிக்கம்போன்றவனே!—வை குந்தம் ஆய விழி மாதர் வேட்கையை மாற்றி - கூரிய வேற்படை போன்ற கண்களையுடைய மகளிர்பக்கல் (உண்டாகிற) ஆசையை (எனக்கு) ஒழித்து, என்னை—, வைகும் தம் ஆயம் வினை நீக்கிய முத்தர்மாட்டு இருத்திவை - தங்கிய தமது தொகுதியான கருமத்தைப் போக்கிய முக்தர்களில் ஒருவனாக இருக்கச்செய்துவைத்தருள்வாய்; (எ - று.)

குந்தம் - வடசொல். ஆய - உவமவுருபு; இத்தெரிநிலைப்பெயரெச்சத்தில், ய் - இறந்தகாலஇடைநிலை. முக்தர் - முத்திபெற்றவர்; வடசொல். மாணிக்கம் - ஒளிக்கும், பெறற்கருமைக்கும் உவமை. என்மாமணியே— "என்தன் மாணிக்கமே" என்பது திருவிருத்தம். (௪௭)

[பிரிவாற்றாத தலைவியின் துயர்கண்ட செவிலித்தாய் இரங்கல்.]

௪௮. மணியாழிவண்ணனுகந்தாரைத்தன்வடிவாக்குமென்றே [ம்
துணியாழியமறைசொல்லுந்தொண்டீரதுதோன்றக்கண்டோ
பணியாழின்மென்மொழிமாலாகிப்பள்ளிகொள்ளாமற்சங்கோ
டணியாழிநீங்கநின்றாள் வேங்கடேசனையாதரித்தே.

(இ - ள்.) தொண்டீர் - அன்பர்களே!—'மணி ஆழி வண்ணன் - நீலமணியும் கடலும் போன்ற திருநிறமுடையவனான திருமால், உகந்தாரை - தன்னை விரும்பினவர்களை, தன் வடிவு ஆக்கும் - தன்னைப்போன்ற வடிவமுடையவராகச் செய்துவிடுவான்,' என்றே—, துணி ஆழிய மறை சொல்லும் - (பொருள்களைத்) துணிந்துகூறுவதும் ஆழ்ந்தபொருளுள்ளதுமான வேதம் சொல்லும்: அது தோன்ற கண்டோம்-அத்தன்மை இங்குக் கட்புல

ஞகத் தெரியப் பார்த்தோம்; (எங்ஙனமெனின்,--) பணி யாழின் மெல் மொழி - நுனிவிளைந்த வீணையின் இசைபோன்ற மென்மையானசொற்களை யுடைய இப்பெண், — வேங்கடேசனை ஆதரித்து - திருவேங்கடமுடையா ஞன அத்திருமாலை விரும்பி,(அவனைப்போலவே), மால் ஆகி பள்ளி கொள் ளாமல் சங்கோடு அணி ஆழி நீங்கி நின்ருள்—; (எ - று.)

திருமால் தன்னையுகந்தவரைத் தன்வடிவாக்குதலாவது - தனது அன் பர்க்குத் தான் முத்திநிலையில்தந்தருள்கிற ஸாலோக்யம் ஸாமீப்யம் ஸாரூப் யம் ஸாயுஜ்யம் என்ற நான்கு நிலைமைகளில் ஸாரூப்யநிலையினுல் அவர்க ளைத் தன்வடிவுபோன்ற வடிவமுடையவராகச் செய்தல். (ஸாலோக்யம் - கடவுளின்உலகத்தில் வாழ்தல். ஸாமீப்யம் - கடவுளினருகில் வாழ்தல். ஸா ரூப்யம் - கடவுளின் உருவம்போன்ற உருவத்தைப் பெறுதல். ஸாயுஜ்யம் - கடவுளோடு ஒன்றிவாழ்தல்.) தலைமகளுக்கு—மாலாகுதல் - ஆசைமயக்க முடையவளாதல்;பள்ளிகொள்ளாமை-விரகவேதனையால் எப்பொழுதும்படுக் கைகொள்ளாமை;சங்கோடு அணிஆழி நீங்கிநிற்றல்-(பிரிவுத்துயரால் உடல் மெலிந்தமைபற்றிக் கைகளிலணிந்த)சங்கவளைகளும் விரலிலணிந்த மோதி ரமும் கழன்றுவிழப்பெறுதல். திருவேங்கடமுடையானுக்கு—மாலாகுதல் - திருமாலென்னும்பெயருடையனுதல்; பள்ளிகொள்ளாமல்நிற்றல் - சயனத் திருக்கோலமாகவன்றி நின்றதிருக்கோலமாய் எழுந்தருளியிருத்தல்; சங் கோடு அணி ஆழி நீங்கியமை - தனதுசங்கசக்கரங்களைத் தொண்டைமான் சக்கரவர்த்திக்குக் கொடுத்துவிட்டதனுற் சிலகாலம் திருக்கைகளில் திரு வாழி திருச்சங்கு இன்றியிருந்தமை: முன்ஞெருகாலத்தில் திருவேங்கட முடையான் தன்மெய்த்தொண்டஞன தொண்டைமான்சக்கரவர்த்திக்கு அரியபகைவர்களை வெல்லுதற்பொருட்டுத் தனதுசங்கசக்கரங்களைத் தந்த ருளி அதற்குஅடையாளமாகப் பின்பு அவனதுவேண்டுகோளால் அவற்றை அங்கு விக்கிரகரூபத்தில் வெளிப்படையாகக்கைக்கொள்ளாதிருந்தன னென் பதும்; ஸ்ரீபாஷ்யகாரர் சிஷ்யர்களுடன் திவ்யதேசயாத்திரையிலே திருமலைக்கு எழுந்தருளினவளவில், அங்குச் சைவர்கள் திருவேங்கடமுடை யானைத் தங்கள்தெய்வமென்று வழக்குப்பேச, உடையவரும் 'சூலடமருகங் களையும் ஸ்ரீசங்கசக்கரங்களையும் எம்பெருமான்திருமுன்னர் வைப்பது; அவைகளில் அப்பெருமான் எவற்றைத் தரித்தருள்கின்றனனே, அதுகொ ண்டு அவனை இன்னகடவுளென்று நிச்சயித்துக்கொள்வது' என்று அருளிச் செய்ய,அந்தஇராமாநுசன்வார்த்தைக்குஅனைவரும் சம்மதித்து அங்ஙனமே செய்ய, ஸ்ரீநிவாஸன் இளையாழ்வார் திருவுள்ளத்தின்படி திருவாழிதிருச் சங்கு தரித்தபடியைக் கண்டு எல்லாரும் ஆனந்தித்துத் திருவேங்கடமுடை யானைத் திருமாலென்றே நிச்சயித்தன ரென்பதும், இங்கு அறியத்தக்க கதைகள். திருமாலுக்கும் தலைமகளுக்கும் உவமைகாட்டுதற்குப் பொதுத் தன்மையாய்வந்த 'மாலாகிப் பள்ளிகொள்ளாமற் சங்கோடணியாழி நீங்கி நின்ருள்' என்ற தொடர், இங்ஙனம் இருபொருள்பட்டுச் சிலேடைக்கு உபகாரமாகநின்றதனுல், இது, சிலேடைபற்றிவந்த உவமையணியின் பாற் படும்: செம்மொழிச்சிலேடை.

தொண்டரென்றது, தலைவியின் தோழியரை விளித்தது. மறைசொல்லும் அதுதோன்றக் கண்டோம் - பிரதியக்ஷம் அநுமானம் உபமானம் ஆகமம் என்ற பிரமாணங்களில் ஆகமப்பிரமாணத்திற்கண்டவிஷயத்தைப் பிரதியக்ஷத்திற்கண்டோ மென்றபடி. (பிரளயத்தில் உலகத்தை) அழிப்பதுஎன்பதுபற்றியாவது, ஆழ்ந்துள்ளது என்பதுபற்றியாவது ஆழியென்று கடலுக்குப் பெயர்வந்ததென்க. துணிதல்-பொருள்களின்நிலைமையை ஐயந்திரிபறஉள்ளபடி சித்தாந்தஞ்செய்து வெளியிடுதல். ஆழிய - இறந்தகாலப்பெயரெச்சம்; இதில், 'இன்' என்ற இடைநிலை ஈறுதொக்கது. (சிலசாதியார்க்கும் பெண்பாலார்க்கும் ஓதுவிக்கவும் ஓதவும் கேட்கவும் ஆகாதென்று)மறுக்கப்படுதலாலும், (எளிதில் உணரலாகாதபடி) மறைந்த ஆழ்பொருளுடைமையாலும்,மறை யென்று வேதத்திற்குக் காரணக்குறி. பணியாழின்மென்மொழி - அவ்வகைமொழியையுடையபெண்ணுக்கு அடையடுத்த சினையாகுபெயர்; இப்பெயரை அன்மொழித்தொகையென்றல் பொருந்தாது: "ஐந்தொகைமொழிமேற் பிறதொக லன்மொழி" என்றல் இலக்கணமாதலும், யாழின்என்பது ஐந்தாம்வேற்றுமைவிரியாதலுங் காண்க. யாழ்-அதன் இசைக்கு முதலாகுபெயர். பணி-யாழ்க்குஅடைமொழி. பணி-பணிவுள்ள என்று உரைத்து, அதனை மொழிக்கு அடைமொழியாக்குதலு மொன்று. சங்கு - சங்கவளைக்குக் கருவியாகுபெயர். ஆழி - வட்டவடிவமுடையது. வேங்கடேசன் - வேங்கட + ஈசன்; குணசந்திபெற்ற வடமொழித்தொடர்; 'அஆமுன் இஈவரின் இரண்டுங் கெட ஓர் ஏகாரம் தோன்றும்:' திருவேங்கடமலைக்குத் தலைவனென்பது பொருள். ஆதரித்து - ஆதரமென்ற பெயர்ச்சொல்லின் மேற் பிறந்த இறந்தகாலவினையெச்சம்.

எம்பெருமானை நிரந்தராநுபவம்பண்ணவேண்டு மென்று அபேக்ஷை கொண்டு அவ்வா உடனே நிறைவேறப்பெறுமையால் வருந்துகிற ஐயங்காரது நிலைமையை நோக்கிய ஞானிகள்,அன்பர்களைநோக்கி, இவர்க்குஇத்தன்மைகள் எம்பெருமான்அநுக்கிரகித்த ஸாரூப்யபதவியினால் நேர்ந்தன போலு மென்றுஉரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். பணியாழின்மென்மொழி-விநயத்தோடுபேசும் செவிக்குஇனிய செஞ்சொற்களை யுடையவர். மாலாகுதல் - வியாமோகங்கொள்ளுதல். பள்ளிகொள்ளாமை - கவலையற்றிராமை. சங்கோடணியாழி நீங்குதல் - பாதந்திரமாயிருத்தல் முதலிய ஆத்மாலங்காரமானகுணங்கள் நிலைகுலையப்பெறுதல். விவரம்உணர்ந்துகொள்க.

சகூ. ஆதரிக்கப்பட்டவா றுதன்மங்கையரங்கைமலர்
மீதரிக்கப்பட்டநின்னடியேவெள்ள ருவிசெம்பொன்
போதரிக்கப்பட்டஞ்சூழ்வேங்கடவெற்ப போரரக்கர்
தீதரிக்கப்பட்டகானகத் தூடன் றுசென்றதுவே.

(இ - ள்.) வெள் அருவி - வெண்ணிறமான நீரருவிகள், செம் பொன்-சிவந்தபொன்னையும், போது - மலர்களையும், அரிக்க - அரித்துக்கொண்டுவர, பட்டம் சூழ் - நீர்நிலைகள் சூழப்பெற்ற, வேங்கட வெற்ப - திருவேங்கடமலையையுடையவனே!—பட்டம் வாள் நுதல்-பொற்பட்டத்தையணிந்த

பிரகாசமான நெற்றியையுடைய, மங்கையர்-பட்டத்து மனைவியர், ஆதரிக்க-அன்புசெய்யவும், அம் கை மலர் மீ தரிக்க - அழகிய தாமரைமலர்போன்ற தங்கள்கைகளின்மீது தாங்கவும், பட்ட - பெற்ற, நின் அடியே - உனது திருவடியே,—அன்று - அந்நாளில் [இராமாவதாரத்தில்], போர் அரக்கர் தீது அரிக்க - போர்செய்யவல்ல (இராவணன்முதலிய) இராக்கதர்களாலாகிய தீங்கை யழிப்பதற்கு, பட்ட கானகத்தூடு சென்றது - உலர்ந்த காட்டிற் சென்றது! (எ - று.)—ஈற்று ஏகாரம் - இரக்கம்.

பட்டமகிஷிகளால் அன்போடு கைம்மலர்மீதுகொண்டு வருடப்படுவனவான நினது திருவடிகள் துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலநஞ்செய்தற்பொருட்டுக் கொடியவனவாசஞ்செய்தனவே! என்று இரங்கிக்கூறியவாறும். பட்டமங்கையர் என்றது, ஸ்ரீவைகுண்டத்திலும் திருப்பாற்கடலிலும் ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி வீரலக்ஷ்மி விஜயலக்ஷ்மி முதலிய தேவிமாரையும், இராமாவதாரத்திற் சீதாபிராட்டியையும், கிருஷ்ணாவதாரத்தில் ருக்மிணி ஸத்யபாமை ஜாம்பவதி ஸத்யை மித்ரவிந்தை சுசீலை ரோகிணி லக்ஷணை என்ற எட்டுப்பட்டமகிஷிகளையும் குறிக்கும். பட்டகானகம் - நிழலில்லாதபடி மரங்கள் பட்டுப்போகப்பெற்ற கொடுஞ்சுரம்.

வாள் - ஒளியையுணர்த்துகையில், உரிச்சொல். 'வெள்ளருவி செம்பொன்' - முரண்தொடை. அரக்கர் - ரக்ஷஸ் என்ற வடசொல்லின் சிதைவு. அடியென்பது - சாதியொருமையாதலால், சென்றது என்ற ஒருமை முற்றைக் கொண்டது. (சகூ)

[கிளிவிடுதூது.]

௫௦. சென்றவனத்தத்தைமைந்தரைவாழ்வித்துத்தீயமன்னர்
பொன்றவனத்தத்தைச்செய்தபிரான் புகழ்வேங்கடத்து
ணின்றவனத்தத்தையாயுதன் பாதத்தென்னேசமெல்லா
மொன்றவனத்தத்தைகா ளுரையீ ரறமுண்டுமக்கே.

(இ - ள்.) வனம் தத்தைகாள்-அழகிய கிளிகளே!—சென்ற வனத்து - (பன்னிரண்டுவருஷம்) வனவாசஞ்சென்ற காட்டினிடத்து, அத்தை மைந்தரை வாழ்வித்து - தனது அத்தையான குந்தியின் புத்திரர்களாகிய பாண்டவர்களை (த் தீங்கின்றி) வாழச்செய்து, (பின்பு), தீய மன்னர் பொன்ற அனத்தத்தை செய்த - கொடிய (துரியோதனன்முதலிய) அரசர்கள் அழியுமாறு (அவர்கட்குக்) கேட்டை விளைத்த, பிரான் - பிரபுவும், அத்தத்து ஐ ஆயுதன் - திருக்கைகளில் ஐந்துஆயுதங்களை யுடையவனுமான, புகழ் வேங்கடத்துள் நின்றவன்-கீர்த்தியையுடைய திருவேங்கடமலையில் நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருக்கிற எனது தலைவனுடைய, பாதத்து - திருவடிகளில், என் நேசம் எல்லாம் - எனது அன்புமுழுவதையும், ஒன்ற உரையீர் - பொருந்தச் சொல்லுங்கள்: உமக்கு அறம் உண்டு - உங்கட்குப் புண்ணியமுண்டு; (எ - று.)

தலைவனைப்பிரிந்த தலைவி, இங்ஙனஞ்சொல்லி, தலைவனிடத்துக் கிளிகளைத் தூதுசெல்லவேண்டுகிறாள். "இயம்புகின்றகாலத்து எகினம் மயில்

கிள்ளை, பயம்பெறு மேகம் பூவை பாங்கி - நயந்தகுயில், பேதைநெஞ்சம் தென்றல் பிரமரம் ஈரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" என்ற இரத்தினச்சுருக்கத்தால், தூதிற்கு உரியவை இன்னவையெனக் காண்க. பிரிந்ததலைவன்வந்திடுவனென்று ஆறியிருக்கவொண்ணாதே அவன்வரவுக்கு விரைந்து ஆள்விடும்படியாயிற்று, ஆற்றாமைமிகுதி.

"கானகமருங்கில் மேவலன்பணியாற் கடும்பசியுடன் வருங் கடவுண், மானவமுனிவன் தாபமுஞ் சாபவருத்தமு முறுவகை யொழித்தாய்" என்றபடி பாண்டவர் வனவாசஞ்செய்கையில் துரியோதனன் துர்வாசமுனிவனைக் கொண்டு அவர்கட்குச் சாபம்பெறுவித்து அவர்களை அழிக்கமுயன்றபோது அதற்குக் கண்ணபிரான் தக்கபரிகாரஞ்செய்து அவர்களைச் சாபம்பெறாதபடி பாதுகாத்தது முதலிய வரலாறுகள்பற்றி 'சென்றவனத்து அத்தை மைந்தரை வாழ்வித்து' எனப்பட்டது. அவ்வரலாறு வருமாறு:—'சாபத்தாலும் சாபமொழிதன்றல்வளருந் தவத்தாலும்,கோபத்தாலும் பேர்படைத்த கொடிய' துர்வாசமுனிவன் பாண்டவர் வனவாசகாலத்தில் ஒருநாள் பல முனிவர்களோடும் துரியோதனனரண்மனைக்குச்சென்று அறுசுவையமைந்த அருவிருந்துண்டு மகிழ்ந்து'உனக்குவேண்டும்வரம் வேண்டுக'என்ன, அவன் செல்வச்செருக்கினாலும் பாண்டவர்களைஇம்முனிவர்சாபத்துக்குஉட்படுத்த வேண்டு மென்னுங் கருத்தினாலும்'இன்றைக்கு எமதுமனையில் அமுதுசெய்ததுபோலவே நாளைக்குப் பாண்டவர்பக்கல்சென்று அமுதுசெய்யவேண்டுவதே எனக்குத்தரும் வரம்' என்ன, அங்ஙனமே அம்முனிவன் அநேகமுனிவர்களோடு அடுத்தநாள் மத்தியான மானபொழுது பாண்டவர்இருந்த ஆச்சிரமத்துக்கு வந்துசேர்ந்து 'இன்றைக்குஎங்கட்குநல்லுணவு இடவேண்டும்' என்றுசொல்ல, அதற்குமுன்னமே பலமுனிவர்களோடும் வேண்டியவாறு உண்டு சூரியனருளின அக்ஷயபாண்டத்தைக் கழுவிக்கவிழ்த்துவிட்ட பாண்டவர்கள் அம்முனிவர்களை நீராடிவரச் சொல்லியனுப்பிவிட்டு 'இதற்கு என்செய்வது!' என்று மனங்கலங்கித் திரௌபதியுந்தாமுமாகக் கிருஷ்ணனைத் தியானிக்க,அப்பெருமான் உடனே அங்குஎழுந்தருளிப் பாண்டத்தைக் கொணரச்சொல்லி அதிலுள்ளதொரு சோற்றுப்பருக்கையைத் தான்உண்டமாத்திரத்தில், அம்முனிவர்யாவரும் வயிறுநிரம்பிப் பசிதணிந்து தெவிட்டித்தேக்கெறிந்து மிகமகிழ்ந்து பாண்டவர்க்கு ஆசீர்வாதஞ்செய்து போயினர் என்பதாம். மற்றும்,அமித்திரனென்னும்முனிவனுக்கென்றே பழுக்கின்றதொரு நெல்லிப்பழத்தை வனவாசகாலத்தில் திரௌபதியின்விருப்பத்தின்படி அருச்சுனன் அம்பெய்து கொய்து அவட்குக்கொடுக்க, அதுகண்ட அங்குள்ளார் பலரும் 'இதனை அம்முனிவன்காணில் அவன்சாபத்தால் உங்கள்கதி என்னாகுமோ!' என்று இரங்கிச்சொல்ல, அதுகேட்டு அஞ்சிய பஞ்சபாண்டவரும் திரௌபதியும் ' இதற்கு என்செய்வது?' என்று பலவாறு ஆலோசித்து அதற்குப் பரிகாரம் வேறொன்றுங் காணாது கண்ணபிரானைத் தியானிக்க, உடனே அங்குஎழுந்தருளி நிகழ்ந்தசெய்திசொல்லக்கேட்ட அப்பெருமான் 'நீவிர் அறுவரும் நும்நும்மனத்தினுட்கொண்ட கோட்பாட்டை உரைப்பீராயின், இக்கனி மீண்டும் அம்மரக்கிளையிற் போய் ஒட்டிக்கொள்

ளும்' என்று அருளிச்செய்தபடி தருமன்முதலியஅறவரும் தம்தம்கருத்து நிகழ்ச்சியை உண்மையாகச்சொல்ல, ஸ்ரீக்ருஷ்ணபகவானது சங்கல்பத்தின்படியே அப்பழம் அம்மரக்கொம்பிற் சென்று சேர்ந்து பழையபடியிருக்க,பாண்டவர் அபாயத்தினின்று நீங்கின ரென்ற வரலாறு முதலியனவும் இங்குப் பொருந்தும்.

நீயமன்னர் பொன்ற அனத்தத்தைச் செய்தது - மகாபாரதயுத்தத்திற் கண்ணன் பாண்டவர்க்குப் பலவாறு உதவி அவர்களைக்கொண்டு துரியோதனுதி துஷ்டராசர்களைத் தொலைத்தமை. வேங்கடத்துக்குப் புகழ் - "எப்பூதலமும் இறைஞ்சித் திசைநோக்கி மெய்ப்பூசனை புரி"யப்படுந் திறம். "ஆழி வளை வாள் தண்டு வில்" என்ற திருமாலின் பஞ்சாயுதங்களுள் சக்கரம் சுதர்சநமென்றும்,சங்கம் பாஞ்சஜந்யமென்றும், கதை கௌமோதகியென்றும், வாள் நந்தகமென்றும், வில் சார்ங்கமென்றும் பெயர்பெறும். "குலமகட்குத் தெய்வங் கொழுநனே" என்றபடி உயர்குலத்திற்பிறந்தவளான தான் தனது தலைமகனையே தெய்வமாகக்கொண்டு அவனது திருவடிகளிற் பக்திசெய்யுந்திறந் தோன்ற, 'ஐயாயுதன்பாதத்து' என்றாள். ஒன்ற உரையீர் - சமயமறிந்து தக்கபடி சொல்லியுணர்த்துங்கள் என்றவாறு.

எல்லாம் என்பது, இங்குப் பொருட்பன்மை குறியாது எஞ்சாமை குறித்தது. பிரான் - உபகாரகன்.

ஐயங்கார் தமதுஆர்த்தியை ஆசாரியமூலமாக எம்பெருமானுக்குத் தெரிவித்துத் தமதுதுயரந்தணியக்கருதி அவர்களைத் தமக்குப்புருஷகாரமாகும்படி வேண்டுதல், இதற்கு உள்ளுறைபொருள். ஸ்வாபதேசத்தில் 'தூது என்பது, கடகமான ஆசார்யவிஷயத்தை' என்றனர் ஆன்றோர். பிரிந்த தலைவிதலைவரைச் சேர்த்தற்குத் தூதர்போலப் பிரிந்துநின்ற ஜீவாத்மபரமாத்மாக்களைச் சேர்த்தற்கு ஆசாரியர் உரியவராதல் காண்க. தம்மையாதரிப்பவர்பக்கல் அன்புடைமையாலும் அன்பர்கட்கு எளிமையினாலும் எடுப்பார்கைப்பிள்ளையாகிச் செவிக்கினிய செஞ்சொற்களைக் கொஞ்சிப்பேசுந் தன்மையராய் எம்பெருமானது பசுஞ்சாமநிறத்தை ஸாரூப்யத்தாற்பெறும் ஆசாரியரைக் கிளியென்னத்தகும். பறவைகட்கு இரண்டு இறகுகள்போல, ஆசாரியர்க்கு ஞானமும் அநுட்டானமும் உயர்கதிச்செலவுக்கு உறுதுணையென்க. விவரம் நோக்கிக்கொள்க. (ரு0)

[தலைவி, செவிலியர்க்கு அறத்தொடுநிற்றல்.]

ருக. உண்டமருந்துகைக்கும்மன்னைமீர் மதனோரைந்தம்புங்
கொண்டமருந்துகைக்குங்குறுகாமுனங்கொவ்வைச்செவ்வா
யண்டமருந்துகைக்குந்திறந்தானப்பன்போற்பரியு
மெண்டமருந்துகைக்கும்பொடிகாப்பிடுமின்றெனக்கே.

(இ - ள்.) அன்னைமீர் - தாய்மார்களே!—உண்ட மருந்து - உண்ணப்படுகிற அமிருதமும், கைக்கும்-(எனக்குக்)கசக்கும்; மதனும் - மன்மதனும், ஓர் ஐந்து அம்பும் கொண்டு - (தனது) ஒப்பற்ற ஐந்து அம்புகளையுங் கொண்டு, அமர் உந்துகைக்கு குறுகா முனம் - போர்செய்வதற்கு வந்துநெருங்குதற்கு

முன்பு,—இன்று - இப்பொழுதே,—எனக்கு—,—கொவ்வை செவ் வாய் - கோவைப்பழம்போன்ற சிவந்த வாயை, அண்டம் அருந்துகைக்கும் திறந்தான் - (கிருஷ்ணாவதாரத்தில் வெண்ணெய்முதலியன உண்ணுதற்கே யன்றிக் கற்பாந்தகாலத்தில்) அண்டகோளங்களை விழுங்குதற்காகவும் திறந்தவனான, அப்பன் போல் - திருவேங்கடமுடையான் போலவே, பரியும் - (உயிர்கள்பக்கல்) அன்புகொள்ளுகின்ற, எண் தமரும் - மதிக்கத்தக்க அடியார்கள், துகைக்கும் - மிதிக்கின்ற, பொடி - திருவடிப்புழுதியை, காப்பு இடும் - காப்பாக இடுங்கள்; (எ - று.)

குறுகாமுனம் இடும் என இயையும். இரண்டாமடியில் 'உந்துகைக்கும்' என்ற உம்மை, எடுத்து முதலடியில் 'மதன்' என்பதனோடு கூட்டப்பட்டது. நான்காமடியில் 'தமரும்' என்ற உம்மை - அசைநிலை.

திருவேங்கடமுடையானாகிய தலைவனைக் களவொழுக்கத்தாற் கூடிப் பிரிந்த தலைவி அப்பிரிவாற்றாமையாற் பலவாறு நோவுபட, அத்துயரமாத்திரத்தையேகண்ட செவிலித்தாயர் அந்நோயின்காரணமும் அதற்குப்பரிகாரமும் இன்ன வென்று உணராது வேறுபலவகையாக ஆராய்ந்து பரிகாரஞ் செய்யத்தொடங்கியபோது, நோயொன்றும் மருந்தொன்று மாதலாலே அந்நோய் தீராது வளர, அதனையாற்றமாட்டாத அத்தலைவி நாணந்துறந்து தானே தனது நோயையும் நோயின் காரணத்தையும் அந்நோய்தீர்க்கும் மருந்தையும் அம்மருந்தைப் பிரயோகிக்கும் விதத்தையும் உணர்த்துதல், இச்செய்யுளிற் கூறிய விஷயம். இங்ஙனம் களவை வெளிப்படுத்துதலின் காரணம், தன்கருத்தைச் செவிலித்தாயர்மூலமாக நற்றாய்க்கும் அவள்மூலமாகத் தந்தைக்கும் மற்றும்பெரியோர்க்குந் தெரிவித்துத் தன்னை அவனுக்கே விரைவில் வெளிப்படையாக மணஞ்செய்துவைக்கும்படி செய்துகொள்ளும் விருப்பம். ("வாராயினமுலையாளிவள் வானோர்தலைமகனாஞ், சீராயின தெய்வநன்னோயிது தெய்வத்தண்ணந்துழாய்த், தாராயினுந் தழையாயினுந் தண்கொம்பதாயினுங் கீழ்,வேராயினும் நின்றமண்ணாயினுங் கொண்டு வீசுமினே" என்றபடி) தலைவனோடு நேரிலாவது இடையிட்டாவது சம்பந்தம் பெற்ற பொருள் இந்நோய்க்குப் பரிகாரமா மென்பாள், 'அப்பன்போற் பரியுந் தமர் துகைக்கும் பொடி காப்பிடும்' என்றாள். அன்றியும், தன்னைப் போலவே தலைவன்பக்கல் அன்புகொண்டவர்களுடைய சம்பந்தம் தனது நோய்க்குப் பரிகார மென்றுகருதி இங்ஙனங் கூறினளுமாம்; ("தணியும் பொழுதில்லைநீரணங்காடுதிரன்னைமீர், பிணியுமொழிகின்றதில்லை பெருகுமிதுவல்லால், மணியினணிநிறமாயன்தமரடிநீறுகொண், டணியமுயலின் மற்றில்லைகண்டீ ரிவ்வணங்குக்கே" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தையும், அதன்வியாக்கியானங்களில் 'அழகுக்கு ஈடுபட்ட இவளுக்குப் பரிஹாரம், அத்துறையிலகப்பட்டாருடைய அநுபந்தமே யென்றபடி.' 'சௌந்தர்ய சீலாதிகளிலேயாய்த்து இவள் மோகித்தது: நீங்களும், சௌந்தர்யசீலாதிகளிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுவைக்கொண்டு பரிஹரிக்கப் பாருங்கோள் ; பொடிபடத் தீரும்' என்ற வாக்கியங்களையுங் காண்க.

மன்மதனம்பு ஐந்து - தாமரைமலர், மாமலர், அசோகமலர், முல்லைமலர், நீலோற்பலமலர் என்பன. இவற்றின் பெயர் - முறையே உன்மத்தம், மதநம், சம்மோகம், சந்தாபம், வசீகரணம் எனப்படும். இவை செய்யும் அவத்தை - முறையே சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்பன. அவையாவன—சுப்பிரயோகம்-சொல்லும், நினைவும்; விப்பிரயோகம் - வெய்துயிர்த்திரங்கல்; சோகம் - வெதுப்பும், துய்ப்பனவிட்டலும்; மோகம்-அழுங்கலும், மொழிபலபிதற்றலும்; மரணம் - அயர்ப்பும், மயக்கமும். "நினைக்கும்அரவிந்தம் நீள்பசலைமாம்பூ, அனைத்துணவு நீக்கும்அசோகு - வனத்திலுறு, முல்லைகிடைகாட்டும் மாதே முழுநீலம், கொல்லும் மதனம்பின்குணம்" என்ற இரத்தினச்சுருக்கத்தையுங் காண்க. இவற்றில் மூன்றாவதான அசோகமலரின் அவத்தையாகிய துய்ப்பனவிட்டல், 'உண்ட மருந்து கைக்கும்' என வெளியிடப்பட்டது. 'மதன் ஐந்தம்புங்கொண்டு அமர்உந்துகைக்குக் குறுகாமுனம்' என்றது, பிரிந்தாரைக் கொல்லும் ஐந்தாம்அம்பான நீலோற்பலமலருமுட்பட எல்லா அம்புகளையும் மன்மதன் பிரயோகித்தற்குமுன்பு என்றபடி; அவன் மரணவேதனைப் படுத்திக் கொல்லாதமுன் என்றவாறு. 'கொவ்வைச் செவ் வாய்' என்றது, வாயழகில் ஈடுபாடு.

'மருந்து' என்றவிடத்து உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. மதன்-மதநன் என்ற வடசொல்லின் விகாரம்; அது, (பிராணிகளைக்காதலாற்) களிக்கச் செய்பவனென்று பொருள்படும்: 'மந்மதன்' என்பதன் முதற்குறையுமாம். கொவ்வை என்ற கொடியின் பெயர், அதன் பழத்துக்கு முதலாகுபெயர். அண்டமருந்துகைக்கும் என்ற உம்மை - எச்சப்பொருளது. காப்பு - காத்தல்; ரக்ஷக மென்ற பொருளில், தொழிலாகுபெயர்.

எம்பெருமான் ஒருகால்வந்துகாட்சிகொடுத்து மறைய, பின்பு பிரிவாற்றாதுவருந்துகிற ஐயங்கார், தம்பக்கல்பரிவுடைய ஞானிகளை நோக்கி, ("நாதனைநரசிங்கனைநவின்றேத்துவார்க ளுழக்கிய, பாததூளி படுதலா லிவ்வுலகம் பாக்கியஞ்செய்ததே," "தொண்டரடிப்பொடி, யாடநாம்பெறிற்கங்கை நீர்குடைந்தாடும்வேட்கை யென்னாவதே", "தொண்டர்சேவடிச் செழுஞ்சேறு என்சென்னிக் கணிவனே" என்றபடி) அதிபரிசுத்திகரமான பாகவதபாததூளியைக் கொணர்ந்து என்மேல்இட்டு என்னை ரக்ஷிக்கப் பாருங்கள் என்று பிரார்த்தித்தல், இதற்கு உள்ளுறைபொருள். ஆராவமுதான எம்பெருமான்பக்கல் ஈடுபட்டு "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங், கண்ண னெம்பெருமான் என்று" கருதியிருப்பவர்க்குத் தேவாமிருதத்தினினிமையும் ஒருபொருளாகத்தோன்றாதாதலால், 'உண்ட மருந்து கைக்கும்' என்றனளென்க. ("தாயொக்குமன்பின்" என்றபடி) தம்பக்கல் பேரன்புடைமையும், தம்மைக் கொண்டுசெலுத்தவல்ல திறமுடைமையும்பற்றி, ஞானிகள் 'தாயரே!' என விளிக்கப்பட்டனர். மதன் ஓரைந்தம்புங் கொண்டு அமருந்துகைக்குக் குறுகாமுனம் - பேரின்பமயனான சர்வேசுவரன் மறைந்தசமயம்பார்த்துக் காமதேவன் வந்துபுகுந்து என்மனத்தைச் சிற்றின்பவழியிற்செலுத்தாதமுன்பு என்க. ஜீவகாருண்யத்

தில் பகவானும் பாகவதருமே ஒருவர்க்கொருவர் ஒப்பாறு லுண்டன்றி வேறொப்புமை காணப்பெறாமையால், 'அப்பன்போற் பரியு மெண் தமர்' எனப்பட்டனர். பகவானிடத்துப்போலவே பாகவதரிடத்தும் ஐயங்கார்க்கு உள்ள பரமபக்தி இங்கு வெளியாகின்றது. (ருக)

ருஉ. எனக்குப்பணியப்பணியொருகாலிருகாலுநல்க
வுனக்குப்பணி யிங்கிருவேம்பணியிலென்னோர்பணியு
நினக்குப்பணிவித்துக்கொண்டுன்பணிநீபணித்திலையென்
றனக்குப்பணிவெற்பின்மீதோங்கிநின்றதனிச்சுடரே.

(இ - ள்.) பணி வெற்பின்மீது ஓங்கி நின்ற - சேஷகிரியெனப்படுகிற திருவேங்கடமலையின்மேல் உயர்ந்து நின்றதிருக்கோலமாய் எழுந்தருளி யிருக்கிற, தனி சுடரே ஒப்பற்ற ஒளிவடிவமானவனே!—ஒரு கால் பணிய எனக்கு பணி - (தலைவனான உன்னை) ஒருதரம்வணங்குதல் (அடியவனான) எனக்கு உரிய தொழில்; இரு காலும் நல்க உனக்கு பணி - (அடியவனான எனக்கு உனது) இரண்டுதிருவடிகளையுங் கொடுத்தல் (தலைவனான) உனக்கு உரிய தொழில்; இங்கு இருவேம் பணியில் - இவ்வாறுகுறித்த நம்இருவரது வேலைகளில், என் ஓர் பணியும் நினக்கு பணிவித்துக்கொண்டு - (ஒருகால் பணிதலாகிய) எனதுதொழிலைமாத்திரம் (உனக்கு நீ) செய்வித்துக்கொண்டு, உன் பணி என்தனக்கு நீ பணித்திலை - (இருகாலையும்நல்குதலாகிய) உனதுதொழிலை எனக்கு நீ செய்கின்றாயில்லை; (எ - று.)

யான் உன்னை ஒருகால்சரணமடைந்தேனாதலால், நீ எனக்கு முத்தி தந்தருளவேண்டும் என்பதாம். பரமபதநாதனதுகட்டளையின்படி அவனுக்குப் பலவகைக்கைங்கரியங்களைச் செய்யும் ஆதிசேஷனே அப்பெருமான் இனிதுஎழுந்தருளியிருத்தற்கு மலைவடிவமானதனாலும், மேருமலையினிடமிருந்து ஆதிசேஷனுடனே வாயுவினாற்கொணரப்பட்ட மலை யாதலாலும், திருவேங்கடத்துக்கு'சேஷகிரி'என்ற பெயர் வாய்த்தது; 'பணிவெற்பு'என்றது, அதன்பரியாயநாமமாக நின்றது. சூரியன் சந்திரன் அக்கினி முதலிய சோதிகளெல்லாவற்றினும் மேம்பட்ட சோதி யென்பார், 'தனிச்சுடரே' என்றார்; அகவிருளொழிக்கும்ஆதித்த னென்க. சுடர்என்றது, நித்தியமாய் ஸ்வயம்பிரகாசமான ஞானத்தைக் குணமாகவும் சொரூபமாகவும் உடையவ னென்றபடி.

எனக்கு, உனக்கு என்ற நான்கனுருபுகள்-தகுதிப்பொருளன. பணிய, நல்க என்ற செயவெனெச்சங்கள் - தொழிற்பெயர்த்தன்மைப்பட்டு 'பணி' என்ற பெயர்ப்பயனிலைக்கு எழுவாயாய்நின்றன; 'ஒருகால்,இருகால்'என்றவிடத்து முரண்தொடை காண்க. இருவேம்-தன்மைப்பன்மைக்குறிப்புவினையாலணையும்பெயர்; முன்னிலையை உளப்படுத்திய தன்மைப்பன்மை. ('ஒருகால்பணிய' எனத் தென்கலைசம்பிரதாயமே உரைக்கப்பட்ட தென்பர்.) பணிஎன்ற சொல் ஒரேபொருளிற் பலமுறைவந்தது, சொற்பொருட்பின் வருநிலையணி; பணியப்பணி, ஒருகாலிருகாலும் என வந்தவை - பிராசமென்னுஞ் சொல்லணி: இவ்விரண்டுஞ் சேர்ந்துவந்தது, சேர்வையணி.

[தலைவியின் பிரிவாற்றாமை கண்ட செவிலி இரங்கல்.]

ருரு. தனித்தொண்டைமாநிலத்தேபுரிவார்க்கருடாளுடையாய்
தொனித்தொண்டைமாநெடுவாய்பிளந்தாய்துங்கவேங்கடவா
முனித்தொண்டைமான்கையிற்சங்காழிநல்கி யென்மூரற்செவ்வாய்
கனித்தொண்டைமான்கையிற்சங்காழிகோடல்கருமமன்றே. [க்

(இ - ள்.) மால் நிலத்தே - பெரிய நிலவுலகத்திலே, தனி தொண்டை புரிவார்க்கு - ஒப்பற்ற அடிமைத்தொழிலைச் செய்யும் மெய்யடியார்கட்கு, அருள் - தந்தருளுகிற, தாள் உடையாய் - திருவடியை[பரமபதத்தை]யுடையவனே!—தொனி தொண்டை மா - கனைக்கின்ற குரலையுடைய தொண்டையையுடைய குதிரையினது, நெடு வாய் - பெரிய வாயை, பிளந்தாய் - பிளந்தவனே! துங்கம் வேங்கடவா - உயர்ந்த திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவனே!—(நீ), முனி தொண்டைமான் கையில் சங்கு ஆழி நல்கி - ராஜரிஷியான தொண்டைமான்சக்கரவர்த்தியின் கையிலே (நினது)சங்காழிகளை [சங்கசக்கரங்களை]க் கொடுத்தருளி, என் மூரல் செய் வாய் கனி தொண்டை மான் கையில் சங்கு ஆழி கோடல் - புன்சிரிப்புள்ள சிவந்த வாயாகிய தொண்டைப்பழத்தையுடைய மான்போன்றவளான என்மகளது கைகளிலுள்ள சங்குஆழிகளை [சங்குவளையல்களையும் மோதிரங்களையும்] கவர்ந்துகொள்ளுதல், கருமம் அன்று - செய்தக்கசெயலன்று; (எ - று.)

இப்பாட்டுக்குத் துறைவிவரணம், கீழ் கரு - ஆஞ் செய்யுட்குக் கூறியவாறே கொள்க. பின்னிரண்டடியிற்கூறிய விஷயம், கீழ் சஅ - ஆஞ் செய்யுளில் "சங்கோடணியாழி நீங்கி" என்றதற்குக் கூறிய உரைகளால் விளங்கும். தொண்டைமான்சக்கரவர்த்தி க்ஷத்திரியசாதியானாயினும் தவவொழுக்கத்திற்சிறந்து முனிவரையொக்கும்பெருமைவாய்ந்து திருவேங்கடமுடையான்பக்கல் பக்திமேலிட்டு அப்பெருமானை எப்பொழுதுஞ்சேவித்துக்கொண்டு திருமலையிலேயே வாசஞ்செய்திருத்தலை யுணர்ந்த பகையரசர்கள் அவனதுநாட்டைக் கைக்கொள்ள, தொண்டைமான் அதனைத் திருவேங்கடமுடையான்சந்நிதியில் விண்ணப்பஞ்செய்து வணங்கிநிற்க, பெருமான் தனது திவ்வியாயுதங்களாகிய சங்கசக்கரங்களைக் கொடுத்து 'இவற்றைக்கொண்டு, நீ, பகையரசரைத் தவறாது வென்றிடுக' என்று சொல்லியருள, தொண்டைமான் அங்ஙனமே பகைவென்று அரசுபெற்றனனென்ற வரலாற்றை, வேங்கடாசலமாகாத்மியத்திற் பரக்கக் காண்க. தலைவனது பிரிவு தலைவிக்கு மெலிவைவிளைத்து அவள்கையினின்று வளைகளும் விரல்களினின்று மோதிரங்களும் கழன்றுவிழும்படிசெய்தலை அத்தலைவன்மேலேற்றி, 'என்மான்கையிற் சங்காழிகோடல் கருமமன்று' என்றாள்: ("கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரிநீர், செய்ப்புரளவோடுந் திருவரங்கச்செல்வனார்" என்பது நாச்சியார்திருமொழி.) ஒருவரிடத்துப் பொருளைக்கொடுத்தால் மீண்டும் அப்பொருளை அவரிடத்தினின்றே வாங்க வேண்டியதாயிருக்க அப்பொருளை வேறொருவரிடத்தில் வாங்குகின்றாயெனத் தொடர்பின்மையணி தோன்றக் கூறியவாறு. ஈற்றுஏகாரம் - தேற்றத்தோடு இரக்கம்.

தொனி-த்வநி யென்ற வடசொல்லின் விகாரம். தொண்டை - மிடறு. தொண்டைமான் - தொண்டைநாட்டரசன். மூரல் - பற்களுமாம். கனித் தொண்டை - கோவைப்பழம். மான் - அதுபோன்ற பெண்ணுக்கு உவமையாகுபெயர் ; பார்வையில் உவமம்.

எம்பெருமானது பிரிவை யாற்றாது வருந்துகிற ஐயங்காரது நிலைமைகளைக் கண்ட பரிவுடையறிவுடையாளர், அப்பெருமானைநோக்கி 'நினக்கு ஆபரணகோடியிற்சேர்கிற ஆயுதங்களை நின்பக்கல் மெய்யன்புசெய்தவனுக்கு அருள்பவனான நீ இவரது ஆத்மாலங்காரமான பாரதந்திரியம் முதலிய குணங்களை நிலைகுலையச்செய்தல் நீதியன்று' என்று அவனுக்கு இவர் பக்கல் இரக்கமுண்டாகுமாறு விண்ணப்பஞ்செய்தல், இதற்கு உள்ளுறை பொருள் ; பெருக்கம் ஆய்ந்துஉணர்க. முதல் விளி - சிஷ்டபரிபாலநஞ் செய்தலையும், இரண்டாம் விளி - துஷ்டநிக்கிரகஞ்செய்தலையும் விளக்கும்.

"களிகொண்டெமக்கருள் வேங்கடவா வெதிகட்கரசன், அளிகொண்டளித்த வளையாழி வாங்கினை யற்புதமா, நளிகொண்டபூங்குழற்பெண்ணரசாயினநங்கை செங்கை, ஒளிகொண்டவால்வளையாழி கைக்கொள்வதுசிதமன்றே" என்ற திருவேங்கடக்கலம்பகச்செய்யுள், இதனை ஒருசார் அடியொற்றியது. (ருரு)

[பிரிவாற்றாத் தலைவி பிறைகண்டு வருந்தல்.]

ருச. கருமாதவா விருந்தாவனசெய்தென்கருத்திருளைப்
பொருமாதவா விருந்தாவனத்தாய் பொற்சவரியென்னு
மொருமாதவாவிருந்தா வனக்காவுயர்வேங்கடத்தெம்
பெருமா தவாவிருந்தாவனலேயும்பிறைக்கொழுந்தே.

(இ - ள்.) கரு மாதவா - கரியதிருநிறமுள்ள மாதவனென்னுந் திருநாமத்தையுடையவனே! என் கருத்து இருந்து - எனது மனத்தில் வந்து வீற்றிருந்து, ஆவன செய்து - (எனக்கு) ஆகவேண்டிய நன்மைகளைச் செய்து, இருளை பொரும் - அகவிருளாகிய அஜ்ஞாநத்தை மோதியொழித்தற்கு உரிய, ஆதவா - சூரியனாயுள்ளவனே! விருந்தாவனத்தாய் - பிருந்தாவனத்தில் விளையாடினவனே! பொன் சவரி என்னும் - உத்தமகுணமுள்ள சபரியென்கிற, ஒரு மாது - ஒருபெண்ணுக்கு, அவா விருந்தா - விரும்பப்பட்ட விருந்தினனானவனே! வனம் கா உயர்- அழகிய சோலைகள் உயர்ந்திருக்கப் பெற்ற, வேங்கடத்து - திருவேங்கடமலையி லெழுந்தருளியிருக்கிற, எம் பெருமா - எமதுதலைவனே!—பிறை கொழுந்து - இளம்பிறையானது,— தவா - கெடாத, இரு - பெரிய, தாவு-தாவியெரிகின்ற, அனல்-நெருப்பை, ஏயும் - ஒத்துச்சுடுகின்றது; (எ - று.)

இயற்கைப்புணர்ச்சி முதலியவகைகளால் தலைவியைக் களவிற்கூடிநின்ற தலைவன் அங்குப் பழியெழுந்ததென்று தோழியால் விலக்கப்பட்ட பின்னர் அப்பழியடங்கச் சிலநாள் ஒருவழிப்பிரிந்துறைதல், ஒருவழித்தணத்த லெனப்படும். அங்ஙனம் பிரிந்துறைகின்ற சமயத்தில் அப்பிரிவையாற்

ரு துவருந்துகிற தலைவிக்கு "காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி,மாலை மலரு மிந்நோய்" என்றபடி கலவிக்குஉரிய காலத்தின் தொடக்கமான மாலையிலே விரகவேதனை வளர, அப்பொழுது விளங்கிய இளம்பிறையும் பிரிந்தார்க்குத் துயர்க்கேதுவான பொருள்களு ளொன்றாதலால் இவளை இன்னும் அதிகமாக வேதனைப்படுத்த, அத்தாபத்தையாற்றாத அத்தலைவி தனது நினைப்புமிகுதியால் தலைவனைஎதிரில்நிற்கின்றவாறுபோலப்பாவித்து, அங்ஙனம் உருவெளித்தோற்றத்திலே வெளிப்பட்ட அத்தலைவனை முன்னி லைப்படுத்திஇரங்கிக்கூறியது,இது. ஒருவழித்தணந்துவந்த தலைவன் சிறைப் புறமாக அதனையுணர்ந்த தோழி அவனை முன்னிலையாக்கிக்கூறிய தென்று இதற்குத் துறைகொள்ளுதலு மொன்று. மற்றும்,இது, சந்திரோபாலம்பநத் தின்பாற்படும்; அதாவது-விரகநோய்கொண்டதலைவி சந்திரனை நிந்தித்தல். கூடினாரை மகிழ்விக்குந் தன்மையதான பிறை பிரிந்துநிற்கிறஎன்னை இங் ஙனம் தவித்திடாதபடி விரைந்துவந்து வரைந்தருள்வாய் என்பது, குறிப்பு.

விருந்தாவனம் என்பது-கண்ணன்அவதரித்த வடமதுரைக்குச் சிறிது தூரத்தில் யமுநாநதிதீரத்திலுள்ள இடம். கண்ணன்வளர்ந்தஇடமானகோ குலமெனப்படுகிற திருவாய்ப்பாடியிலுள்ள நந்தகோபர்முதலானஆயர்கள், அங்குப் பூதனைவந்துஇறந்தது சகடமொறிவீழ்ந்தது இரட்டைமருதமரம் முறிந்தது முதலியவற்றை உற்பாதங்களெனக்கொண்டு அஞ்சி மஹாவநமெ னப்படுகிற அவ்விடத்தை விட்டுக் கன்றுகாலிமுதலிய எல்லாப்பொருள்க ளோடும் பிருந்தாவனத்திற் சென்று குடியேறினர். நெருஞ்சிற்காடாய்க் கிடந்தஅந்தப்பிருந்தாவனம்,கிருஷ்ணபகவான் குளிர்ந்ததிருவுள்ளத்தோடு அநுக்கிரகித்ததனால், பசுக்கள்முதலானவை விருத்தியடைதற்குஏற்ப மிகச் செழிப்புற்றது. பின்பு அங்கு நெடுநாள் கண்ணன் கன்றுகளையும் பசுக்க ளையும் மேய்த்தல் முதலிய பலதிருவிளையாடல்கள் செய்துகொண்டுவளர்ந் தனனாதலால், 'விருந்தாவனத்தாய்' என்று விளிக்கப்பட்டனன். விருந்தா வனம் - ப்ருந்தாவந மென்ற வடசொல்லின் விகாரம்; நெருஞ்சிக்கா டென்பது பொருள்.

சவரி-ரிசியமூககிரியில் மதங்காச்சிரமத்தில் மதங்கமுனிவரது சிஷ்யர் களுக்கு உபசாரஞ்செய்துகொண்டு வசித்துவந்த துறவறம்பூண்ட ஒருதவப் பெண்.க்ஷத்திரியஜாதிஸ்திரீயினிடம் வைசியசாதிபுருஷனுக்குப்பிறந்த பிரதி லோமசாதியார், சபரரெனப்படுவர்; இச்சாதியாரது தொழில் - தேன்கொ ணர்ந்துவிற்றல். சபரனென்பதன் பெண்பால் - சபரீ; அவ்வடசொல், சவரி யென்று விகாரப்பட்டது. யோகப்பயிற்சியுள்ள அச்சபரி, தான்வசிக்கும் மதங்காச்சிரமத்துக்கு இராமலக்ஷ்மணர் எழுந்தருளுஞ்செய்தியை முன்ன மேஅறிந்து எதிர்நோக்கி,அவ்வனத்திலுள்ள நல்லகனிகளைச் சேர்த்துவைத் துக்கொண்டிருந்து, அவர்கள் அவ்வாச்சிரமத்துக்கு எழுந்தருளியவுடன் அப்பழங்களை அவர்கட்குச் சமர்ப்பித்து உபசரித்து, இராமபிரானருளால் தனதுபிறப்பையொழித்து நற்கதியடைந்தன ளென்பது, இராமாயணவர லாறு;அதுபற்றி, 'பொற்சவரி யென்னும் ஒருமாது அவாவிருந்தா'என்றார்.

ஆவன - பெயர். கருதுவது கருத்து எனக் காரணக்குறி. விருந்தன் = விருந்தினன். விருந்து - புதுமை; பண்புப்பெயர்: புதியனாய்வருபவன், விருந்தன்; 'இன்' சாரியை பெறாது நின்றது. அது ஈறுகெட்டு ஈற்றயல்நீண்டு விளியேற்று 'விருந்தா' என்று ஆயிற்று. கா - காக்கப்படுவது என்பதுபற்றிச் சோலைக்கு வந்த காரணக்குறி. தவா என்ற ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சத்தில், தபுஎன்பதன் மரூஉவான தவு - பகுதி. இருந் தா வனல் - இருமையென்ற பண்புப்பெயர் ஈறுபோய் இனமெலி மிக்கது. தாவனல் - வினைத்தொகை. எயும் - உவமவாசகம். பிறப்பது பிறையெனக் காரணக்குறி; ஐ - கருத்தாப்பொருள்விகுதி: பிற என்ற பகுதியின் ஈற்றுஅகரம் தொக்கது. 'கொழுந்து' என்றது, இளமைகுறித்தது.

பேறுகிடைக்குந் தருணத்தில் மகிழ்ச்சிசெய்வதான ஞானவிளக்கம் உரியகாலத்திற் பேறுகிடையாமையாலே நலிவுசெய்ய, ஐயங்கார் தாம் அடைந்த தாபத்தை எம்பெருமானைக்குறித்து விண்ணப்பஞ்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். இத்தளர்ச்சிநீங்க விரைவில் உன்பக்கல் என்னைச் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்பது, குறிப்பு. பிறைக்கொழுந்து என்றது- ஸ்வாபதேசத்தில், ஞானேதயத்தையாம். பிறவும் நோக்கிக்கொள்க. (ருச)

ருரு. பிறைமாலையாலொருபேதைநைந்தாளந்தப்பேதைக்குநின்
னறைமாலைதாவென்றுமானிடம்பாடியநாவலர்கா
ணிறைமாலையற்றுக்கவிமாலையானினைமீர்திருவெள்
ளறைமாலை வேங்கடத்தேயுறைமாலை யரங்கனையே.

(இ - ள்.) 'பிறை மாலையால் - பிறைச்சந்திரனது தோற்றத்தையுடைய மாலைப்பொழுதினால், ஒரு பேதை நைந்தாள் - (உன்பக்கல் காதல்நோய் கொண்ட) ஒருபெண் மெலிவுற்றாள்: அந்த பேதைக்கு - அப்பெண்ணுக்கு, நின் நறை மாலை தா - உன்னுடைய வாசனையுள்ள பூமாலையைக் கொடு,' என்று—, மானிடம் பாடிய - (அகப்பொருட்டுறையமைத்து) மனிதர்களின் மேற் கவிபாடிய, நாவலர்காள் - புலவர்களே! - (நீங்கள்), நிறை மாலை அற்று - (இங்ஙனம் உங்கள்மனத்தில்) நிறைந்த மயக்கத்தை நீங்கி, கவி மாலையால் - பாமாலைகொண்டு, திருவெள்ளறை மாலை அரங்கனை வேங்கடத்தே உறை மாலையே நினைமீர் - திருவெள்ளறையி லெழுந்தருளியிருக்கிற பெரியோனும் ஸ்ரீரங்கநாதனும் ஆகிய திருவேங்கடமலையிலெழுந்தருளியிருக்கிற எம்பெருமானையே கருதிப் பாடுவீராக; (எ - று.)

பகவத்குணாநுபவத்திலாசையுடைய ஐயங்கார், லௌகிகரைப்பார்த்து, 'நரஸ்துதிபண்ணினால் என்னபயன் உண்டாகும்? வேண்டியபயன்களை வேண்டியவாறே பெறும்படி, என்னேடொப்ப எம்பெருமானை ஸ்தோத்ரம்பண்ணுங்கள்' என்று இதோபதேசஞ் செய்கின்றார். "சொன்னாவில்வாழ் புலவீர் சோறுகூறைக்காக, மன்னாதமானிடரை வாழ்த்துதலால்—என்னாகும், என்னுடனே மாதவனை யேத்தும்" என்ற அருளிச்செயலையுங் காண்க. 'கவி பாடலாகாது' என்ற நிஷேதசாஸ்திரத்துக்கு இலக்கு அஸத்விஷயத்திலா

தலும், 'கவிபாடுதல் புகழ்முதலியபலவற்றைப் பயக்கும்' என்ற விதிசாஸ்திரத்துக்கு இலக்கு ஸத்விஷயத்திலாதலுமாகிய வேறுபாடு காணத்தக்கது.

கவி தனக்குப் பிரபுவின்பக்கல் உள்ள அன்பை, ஒருதலைவி அத்தலைமகனிடத்துக் காதல்கொண்டு வருந்த 'அவள்வருத்தத்தை யாற்றுமாறுநின் தோளிற் சாத்திய மாலையை நீ அவட்குக்கொடு' என்று தூதுசென்ற வித்தகர் பேசுங் கிளவித்துறைவகையாற் பாடி வெளியிடும் இயல்பைக் குறிப்பிட்டு முதலிரண்டடியில் விளித்தார். பிறைமாலையால் - மாலைப்பிறையால் என மொழிமாற்றினுமாம். பேதை - பேதைமையுடைய பெண்ணுக்குப் பண்பாகுபெயர். நறை - தேனுமாம். மாநுஷரென்ற வடசொல்லின் விகாரமான மானிடரென்பது - (காசியபமுனிவனது மனைவியருள்) மநுவென்பவளது மரபினரான மனிதரையுணர்த்தும்; தத்திதாந்தநாமம். இங்கு 'மானிடம்' என்றது, சாதிவாசகமாய் நின்றது; மனிதர்களிலும் உயர்ந்தவர் தாழ்ந்தவரெனப் பகுத்துஉணராது கண்டவரையெல்லாம் ஒருநிகராகப்பாடுபவரென்பது போதரும்: அன்றியும், இழிப்புப்பற்றி அஃறிணையாகக்கூறினரென்றுங் கொள்க; (திருவாய்மொழியில் "வளமுதிக்கு மிம்மானிடத்தைக் கவிபாடியென்" என்றவிடத்து, நம்பிள்ளை 'மநுஷ்யரென்றுசொல்லவும் பாத்தங்காண்கிறிலர் காணும்! அசேதநங்களைச் சொல்லும்படியிலே சொல்லுகிறார். தன்னை மெய்யாகஅறியாதவன் அசித்பிராயனிறே' என்று வியாக்கியானமிட்டமையுங் காண்க.) நாவலர் - கவிபாடுதல்முதலிய நாவின்வல்லமையை யுடையவர். மால் - மயக்கம். கவிமாலை - பிரபந்தம். நினையீர் = பாடீர்; காரணம், காரியமாக உபசரிக்கப்பட்டது. திருவெள்ளறை-சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று. (ருரு)

ருசு. அரங்கங்குடந்தைகுருகூர்குறுங்குடியட்டபுய
கரங்கண்ணமங்கைநறையூர்கடன்மல்லைகச்சிகண்ண
புரங்கண்டியூர்தஞ்சைமாலிருஞ்சோலைபுல்லாணிமெய்யந்
தரங்கப்பரமபதம்வேங்கடேசற்குத்தானங்களே.

(இ - ள்.) அரங்கம் குடந்தை குருகூர் குறுங்குடி அட்டபுயகரம் கண்ணமங்கை நறையூர் கடன்மல்லை கச்சி கண்ணபுரம் கண்டியூர் தஞ்சை மாலிருஞ்சோலை புல்லாணி மெய்யம் தரங்கம் [திருப்பாற்கடல்] பரமபதம் [ஸ்ரீவைகுண்டம்]என்பன, திருவேங்கடமுடையானுக்கு உரியதலங்களாம்.

"ஈரிருபதாஞ்சோழம் ஈரொன்பதாம் பாண்டி, ஓர்பதின்மூன்று மலைநாடு ஓரிரண்டாஞ்-சீர்நடுநாடு, ஆறேழ்தொட்டுத்தொண்டை அவ்வடநா டாறிரண்டு, கூறுதிருநா டொன்றாக் கொள்" என்று வகுக்கப்பட்ட நூற்றெட்டுத்திருமால்திருப்பதிகளுட் சோழநாட்டுத்திருப்பதிகள் நாற்பதிற் சேர்ந்தவை - திருவரங்கம் திருக்குடந்தை திருக்கண்ணமங்கை திருநறையூர் திருக்கண்ணபுரம் திருக்கண்டியூர் திருத்தஞ்சை என்பன. பாண்டியநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டிற் சேர்ந்தவை - திருக்குருகூர் திருக்குறுங்குடி திருமாலிருஞ்சோலைமலை திருப்புல்லாணி திருமெய்யம் என்பன. தொண்டைநாட்டுத்திருப்பதிகள் இருபத்திரண்டிற் சேர்ந்தவை - திருவட்டபுய

காம் திருக்கடன்மல்லை திருக்கச்சி என்பன. வடநாட்டுத்திருப்பதிகள்பன் னிரண்டிற் சேர்ந்தது - திருப்பாற்கடல். திருநாடு - பரமபதம். இச்செய்யு ளில் அரங்கம்முதற் பரமபதம்ஈறுகப் பதினேழுதிவ்வியதேசங்களின்பெய ரை அடைமொழியில்லாதபடி அடக்கிவைத்திருக்கின்ற அழகு அறியத்தக் கது. வேங்கடேசன், ஸ்தாநம் - வடசொற்கள். (ருசு)

ருஎ. தானவனுகமருப்பொசித்தானுக்குத் தானுகந்த
தானவனுகமுடியினின்றுனுக்குத் தாள்வணங்காத்
தானவனுகமிடந்தானுக் காளென்றுதன்னையெண்ணுத்
தானவனுகநினைந்திருப்பாற்கென்றுந்தானவனே.

(இ - ள்.) தானம் - மதத்தையுடைய, அல் - இருள்போன்ற [கருநிற முள்ள], நாகம் - (குவலயாபீடமென்ற) யானையின், மருப்பு - தந்தங்களை, ஒசித்தானுக்கு - ஒடித்தவனும், தான் உகந்தது ஆன - தான் விரும்பிய இடமான, வல் நாகம் - வலிய திருவேங்கடமலையினது, முடியில் - சிகரத் தில், நின்றுனுக்கு - நின்றதிருக்கோலமாக எழுந்தருளியவனும், தாள் வணங்கா - (தனது) திருவடிகளை வணங்காத [தானே தெய்வமென்று செ ருக்கிய], தானவன் - அசுரனுன இரணியனது, ஆகம் - மார்பை, இடந் தானுக்கு - பிளந்தவனுமான எம்பெருமானுக்கு, ஆள் என்று - அடிமை யென்று, தன்னை எண்ணு - தன்னைநினையாமல், தான் அவன் ஆக நினைந் திருப்பாற்கு - (ஜீவாத்மாவாகிய) தானே அப்பரமாத்மாவாக நினைத்திருக் கிற விபரீதஞானிக்கு, என்றும் தான் அவனே - எப்பொழுதும் அப்பெரு மான் பயன்படாதவனேயாவன்; (எ - று.)—அவம் - பயனின்மை; அங்ஙன மாகுபவன், அவன்: ஏ - தேற்றம்.

சித் அசித் ஈசுவரன் என்ற தத்துவம்மூன்றில் சித்எனப்படுகிற ஜீவாத் மாவுக்கு ஈசுவரனெனப்படுகிற பரமாத்மா நியாமகனும் தாரகனுமாய்த் தலைவனுதலும், அப்பரமாத்மாவுக்கு ஜீவாத்மா நியாம்யமும் தார்யமுமாய் அடிமையாதலும் முதலிய மிக்கவேறுபாடுகள் சாஸ்திரப்பிரசித்தமாக இருக்க, அவற்றையெல்லாம்கருதித் தன்னை எம்பெருமானுக்கு ஆளென்று எண்ணுமல், 'உண்மையாகவுள்ள பரமாத்மாவாகிய பொருளொன்றே மா யையாற் பிரபஞ்சமாகக் காணப்படுகின்றதே யன்றி ஜீவாத்மாவென்றுஒரு பொரு ளில்லை' என்று துணிந்துகூறும் அத்வைதி, 'ஜீவாத்மாவென்னும் நான் அப்பரமாத்மா' என்னும்பாவனையுடையனுதலால், 'ஆளென்று தன் னையெண்ணுத் தானவனுக நினைந்திருப்பான்' எனப்பட்டான். அங்ஙனம் ஜீவாத்மபரமாத்மசொரூபங்களைப் பகுத்துணர்ந்து சர்வேசுவரனுக்கு ஆட் படாதவனுக்கு அப்பெருமான் அருள்புரியா னென்பது, 'என்றும் தான் அவனே' என்பதனுல் விளக்கப்பட்டது. சர்வேசுவரனது திருவடிகளை வணங்காமல் தானே சர்வேசுவரனென்று சொன்ன இரணியனை அப்பெ ருமான் நிக்கிரகித்ததும், சர்வேசுவரனுக்குஅடிமையென்று தன்னை யெண் ணிய இரணியபுத்திரனுனபிரகலாதனை அப்பெருமான் அநுக்கிரகித்ததும் பிரசித்தம்; ஆகவே, 'தாள்வணங்காத் தானவனுகமிடந்தானுக்கு' என்ற

விசேஷ்யம் இங்கு ஓர் அபிப்பிராயத்தோடு கூறப்பட்டதாகுதலால், கருத்துடையடைகோளியணி. தான் அவனாக நினைந்திருக்கின்ற ஜீவாத்மாவுக்குப் பரமாத்மா அங்கினைப்பிற்கு ஏற்பத் தான் அவனேயாவன் என ஒருசமத்காரந்தோன்றக் கூறினார்; 'அவன்' என்பதை இருவகைப்பொருள்படவைத்த நயம், இங்குக் கருதத்தக்கது: (இதனை, "கழல்வளையைத் தாமுங் கழல்வளையே யாக்கினரே" என்றாற்போலக் கொள்க.) இது - பிரிநிலைநவிற்சியணியின்பாற்படும்; பெயர்ச்சொற்களுக்கு உறுப்பாற்றலால் வேறொருபொருளைத் தந்துரைத்தல், இதன் இலக்கணம். அவனாக - எம்பெருமான்போல ஸ்வதந்திரனாக என்றுங் கொள்க.

நாகம் - யானையென்ற பொருளில், நகத்தில்வாழ்வதென்று காரணப்பொருள்படும்: நகம் - மலை. திருவேங்கடம் எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மற்றையெல்லாத்திவ்வியதேசங்களினும் மிகப்பாங்கான வாஸஸ்தானமாதலால், 'உகந்ததான நாகம்' எனப்பட்டது; அங்ஙனஞ் சிறப்புடையதாதல், புராணங்களினாலும் விளங்கும். 'நாகமுடியினின்றானுக்கு' என்பதற்கு - காளியனென்னும் பாம்பினது தலையின்மேல்நின்று நடனஞ்செய்தவனுக்கு என்று பொருள்கூறுதல் பொருந்தாது; அங்ஙனங்கொள்ளின், இவ்வகைப்பிரபந்தத்திற் செய்யுள்தோறும் பிரபந்தத்தலைவன்பெயரையேனும் அவனது ஊர்ப்பெயரையேனுங் கூறும் மரபு இச்செய்யுளில் தவறியதாய்விடும்; 'உகந்ததான' என்ற அடைமொழியின் உரிமையையும் உய்த்துணர்க. தானவனென்பது, அசுரனென்றமாத்திரமாய் நின்றது; இரணியன் காசியபமுனிவர் மனைவியருள் திதியென்பவளது மகனாதலின்.

இது, யமகச்செய்யுள். (ருஎ)

ருஅ. தானவராகந்தடிவார் வடமலைத்தண்ணந்துழாய்
ஞானவராகர் தருமண்டம்யாவையு நண்ணியவர்
கானவராகவிரறோறுமத்திக்கனியின்வைகும்
வானவராகவிருப்பாரவற்றுண்மசகங்களே.

(இ - ள்.) தானவர் - அசுரர்களுடைய, ஆகம் - உடம்பை, தடிவார் - துணிப்பவரான, வட மலை தண் அம் துழாய் ஞானம் வராகர் - திருவேங்கடமலையிலெழுந்தருளியிருக்கிற குளிர்ந்த அழகிய திருத்துழாய்மாலையையுடைய ஞானவராகமூர்த்தியான எம்பெருமான், தரும் - படைத்த, அண்டம் யாவையும் - அண்டகோளங்களெல்லாம்,—அவர் கால் நவ ராக விரல் தோறும் - அவருடைய திருவடிகளின் புதிய செந்நிறமாகத்தோன்றுகின்ற விரல்கள்தோறும், அத்தி கனியின் - அத்திப்பழங்கள் (அம்மரத்தில் ஒட்டிக்கிடத்தல்)போல, நண்ணி வைகும் - பொருந்தித் தங்கும்; வானவர் ஆக இருப்பார் - (அவ்வண்டங்களில்)தேவர்களாக விளங்குபவர்கள்,—அவற்றுள் மசகங்களே - அவ்வத்திப்பழங்களில் மொய்த்துக்கிடக்கின்ற கொசுகுகள் போல்வர்; (எ - று.)

"ஆழிப்பிரானடிக்கீ ழுற்பவித்தழியும், பரவையில்மொக்குளைப்போற் பலகோடி பகிரண்டமே" என்றதனாலும், அண்டகோளங்கள் எம்பெரு

மான் திருவடியில் தோன்றுவனவாதல் அறிக. பிரளயப்பெருங்கடலில்மூழ்கி யிருந்த பூமியை மேலேயெடுக்கநினைத்துத் திருமால் பன்றிவடிவுகொண் டருளிக் கோட்டுநுனியாற் பூமியையெடுத்துவந்து பூமிதேவியை இடப்பில் ஏந்திக்கொண்டு அவட்கு ஞானோபதேசஞ்செய்கிற வியாஜத்தால் தத்துவப் பொருள்களை உலகத்துக்குஉணர்த்தியருளியதனால், 'ஞானவராகர்' எனப் பட்டனர்.

தானவர் என்றவடமொழிப்பெயர் -(காசியபமுனிவரது மனைவியருள்) தநுவென்பவளது சந்ததியா ரென்று பொருள்படும்; தத்திதாந்தநாமம். ஜ்ஞாநவராஹர், நவராகம், மசகம் - வடசொற்கள். கனியின், இன் - ஐந்த னுருபு, ஒப்பு. உவமையணி.

இதனால், எம்பெருமானது விராட்ஸ்வரூபத்தின் பெருமையையும், மற்றைத்தேவர்களின் சிறுமையையும் உணர்த்தினர். நால்வகைத்தோற் றத்து எழுவகைப்பிறப்பினுட் சிறந்த தேவர்களை மசகங்க ளென்றதனால், மற்றையுயிர்களின் இழிவு தானே விளங்கும். (ருஅ)

[பாங்கி வெறிவிலக்கிச் செவிலியர்க்கு அறத்தொடுநிற்றல்.]

ருகூ. மசகந்தரமென்னலாய்நிலையாவுடல்வாழுயிரை
யசகந்தரவல்லதோ வன்னைமீ ரண்டமுண்டுமிழ்வா
ரிசகந்தரவண்ணர்வேங்கடவாணரிலங்கையர்கோன்
றெசகந்தரமறுத்தார்திருப்பேர்சொல்லுந்தீங்கறவே.

(இ - ள்.) அன்னைமீர் - தாய்மார்களே!—மசகம் தரம் என்னல் ஆய் - கொசுவுக்குச்சமான மென்று சொல்லத்தக்கதாய், நிலையா - நிலையில்லாத தாகிற, உடல்-உடம்பில், வாழ்-(விதிவசத்திற்குஏற்ப) வாழ்கிற, உயிரை—, அசகம் தர வல்லதோ-ஆட்டின்தலையானது கொடுக்கவல்லதோ? [அன்று என்றபடி]; (இனி நீங்கள்), தீங்கு அற - (இத்தலைவிக்கு நேர்ந்துள்ள) துன் பம் ஒழியுமாறு,—அண்டம் உண்டு உமிழ் வாரிச கந்தர வண்ணர் - அண்ட கோளங்களை (ப்பிரளயகாலத்திலே)வயிற்றினுட்கொண்டு (பிரளயம்நீங்கின வாறே) வெளிப்படுத்தியவரும் தாமரைபூத்ததொருமேகம்போன்ற வடிவ முடையவரும், இலங்கையர்கோன் தெச கந்தரம் அறுத்தார் - இலங்காபுரி யில்வாழ்ந்த இராக்கதர்க்கு அரசனாகிய இராவணனது பத்துத்தலைகளையும் துணித்திட்டவருமான, வேங்கட வாணர் - திருவேங்கடத்துறைவாரது, திரு பேர் - திருநாமங்களை, சொல்லும் - சொல்லுங்கள்; (எ - று.)--தீங்க றச் சொல்லும் என இயையும்.

களவொழுக்கத்தால் தலைமகளைக்கூடிய தலைமகன் பின்பு அவளை வெ ளிப்படையாக மணஞ்செய்துகொள்ளும்பொருட்டுப் பொருள்தேடிவருதற் காக அவளைப் பிரிந்துசெல்ல, அந்நிலையிற் பிரிவாற்றாது மிகவருந்திய தலை மகளைச் செவிலித்தாய்மார் எதிர்ப்பட்டு அவளது வடிவுவேறுபாட்டைநோ க்கி'இவள் இங்ஙனம் மெலிதற்குக்காரணம் என்னோ?'' என்று கவலையுற்றுக் கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவளும் தன்மரபின்படி ஆராய்ந்து 'இவளுக்கு

முருகக்கடவுள் ஆவேசித்ததொழியப் பிறிதொன்றுமில்லை' என்றுகூற, அது கேட்ட செவிலித்தாயர் உடனே தலைமகள்பக்கல்தமக்குள்ளஅன்பின்மிகுதி யால் ஏதேனும் ஒருதெய்வத்தை வழிபட்டாகிலும் இவளை உயிர்த்திருக்கப் பெறில் அதுவே நமக்கு ஆத்மலாப மென்றெண்ணி வழியல்லாவழியிலே யிழிந்து அதற்குப் பரிஹாரமாக வேலனெனப்படுகிற வெறியாட்டாளனை யழைப்பித்து அவனைக்கொண்டு ஆவேசம்ஆவித்து ஆடுபலியிடுதல், கள்ளி றைத்தல், இறைச்சிதூவல், கருஞ்சோறுசெஞ்சோறுவைத்தல் முதலிய கா ரியங்களை இடைவிடாது ஒன்றன்மே லொன்றாகச் செய்யத்தொடங்க, நோயொன்றும் மருந்தொன்று மாதலால் தான்காதலித்த புருஷோத்தம னான தலைமகனது தகுதிக்கு ஏலாத அச்செயல்களை நோக்கித் தலைமகள் மேன்மேல் மிகவருந்த, அவளது துன்பத்தின் மெய்க்காரணத்தை யறிந்த தோழி அச்சமயத்திற் செவிலியரைநோக்கிச் சிலகூறி வெறிவிலக்கித் தலைவி யினது துன்பத்தின் உண்மைக்காரணத்தை யுணர்த்துகின்ற துறை, இது. இதன்மெய்ப்பாடு, பெருமிதத்தைச்சார்ந்த நகை, பயன்-அறத்தொடுநிற்றல்.

ஆடுபலிகொடுத்தல், இவளுடம்பினின்று உயிர்நீங்காதபடிசெய்து மரண வேதனைப்படுகிற இவளைப் பிழைப்பிக்கமாட்டாது என்ற பொருளை 'உடல் வாழுயிரை அசகம் தரவல்லதோ' என்றாள்; தான் கரையேறாதவன் பிற ரைக் கரையேற்றமாட்டாமைபோல, தான் கழுத்தறப்புண்டு இறக்கின்ற ஆடு இவளுயிரைப் பிழைப்பிக்கமாட்டா தென்க: "வீழ்வார்க்கு வீழ்வார் துணை" என்றபடி இறக்கிற ஓர்உயிரோ மற்றோர் இறக்கிற உயிரைக் காத் தற்குத் துணையாகும்! என்றாள். க்ஷுத்ரதேவதையின் ஆவேசத்தால் வரும் நோய்க்குப் பரிஹாரமாகிற இவ்விழிபொருள் பரம்பொருளிலீடுபாட்டினால் வந்த நோய்க்குப் பரிஹாரமாகா தென்றவாறு. அற்பப்பிராணியான மசகத் தை உவமைகூறினது, யாக்கைநிலையில்லாமையை விளக்குதற்கு. அன்னை மீர் - உண்மைக்காரணமுரைக்கப்படுதற்கு உரிமையையும் இவளியல்பிற்கு ஏற்றபடி நன்மைசெய்யும் வாற்சல்யத்தையும் உடையவர்களேயென்றபடி. லோகஸம்ரக்ஷணத்தில் எம்பெருமானுக்குஉள்ள ஆதரத்தையும், அற்புதசக்தி யையும் குறித்தற்கு, 'அண்டமுண்டுமிழ் வேங்கடவாணர் இலங்கையர் கோன்தெசகந்தரமறுத்தார்' என்றார். 'வாரிச கந்தர வண்ணர்' என்றது, தலைவனது திருமேனியழகில் ஈடுபாடு. அத்தன்மையானவரது திருநாமத் தைச் சொல்லு மென்றது, உலகமுழுவதுக்கும்வந்த நோயைப் பரிஹரித்தவ னதுபெயர்தானே இவள்நோயைப்பரிகரித்தற்குத் தக்கதென்றபடி. நம்மா ழ்வார் திருவாய்மொழியில் வெறிவிலக்குத்திருப்பதிகத்தில் "மருந்தாகுமெ ன்றங்கோர் மாயவலவைசொற்கொண்டு நீர், கருஞ்சோறும் மற்றைச்செஞ் சோறும் களனிழைத் தென்பயன், ஒருங்காகவேயுலகேழும்விழுங்கியுமிழ்ந் திட்ட, பெருந்தேவன்பேர்சொல்லகிற்கில் இவளைப்பெறுதிரே" என்றுஅரு ளிச்செய்தமை அறிக. இந்நோய்தீர்த்தற்குத் தலைவனது திருநாமம் தக்கமந் திரமென்க. அம்மந்திரமாகிய மருந்தை இவள்செவியின்வழியாகச் செலுத் துங்க ளென்றாள். திருமாலாகிய தலைமகனால் நேர்ந்த நோய்க்கு அவனது நாமசங்கீர்த்தனமொழிய வேறுபரிகார மில்லை யென்றாள்.

'வாரிசகந்தரவண்ணர்' என்பதற்கு - கீழ் ௧௧-ஆஞ் செய்யுளில் "அம்பரந்தாமரைபூத்தலர்ந்தன்னவயவர்"என்றதற்கு உரைத்தாங்கு உரைக்க. அஜகம், வாரிஜகந்தரவர்ணர், தசகந்தரம் என்ற வடமொழித்தொடர்கள் விகாரப்பட்டன. வாரிஜம் - நீரில்தோன்றுவது : தாமரைக்குக் காரணவிடுகுறி: மலர்க்கு முதலாகுபெயர். கந்தரம் என்பது - மேகமென்ற பொருளில் நீரைஉட்கொண்ட தென்றும், கழுத்தென்றபொருளில் தலையைத்தரிப்ப தென்றும் காரணப்பொருள்பெறும் ; கம் - நீர், தலை. ஓ - எதிர்மறை. வேங்கடவாணர்-திருவேங்கடமலையில் வாழ்பவர். வாழ்நர்என்பது, வாணர் என மருவிற்று. தெசகந்தர மென முதலில் எகரம் பெற்றது, மோனைத்தொடையின்பொருட்டு.

எம்பெருமானது சேர்க்கையைப் பெறாமல் வருந்துகின்ற ஐயங்காரது துயரத்தைக்கண்ட ஞானிகள்,அவர்பக்கல்வைத்தபரிவா லுண்டான கலக்கத்தால், எம்பெருமான் உபாயாந்தரங்களால்அடையத்தக்கவனல்ல னென்பதை மறந்து, தேவதாந்தரபஜநத்தாலாவது இவரது ஆற்றாமையைத்தணிப்பிக்கலாமோவென்று தொடங்கியநிலையில், ஐயங்காரதுதன்மையை அறிந்த அன்பர்கள் விலக்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். ஞானிகள் தாம் அங்ஙனம் வழியல்லாவழியிலே இழிவார்களோ வென்னில்,— ஐயங்கார்பக்கல் தாம்கொண்ட பரிவின் மிகுதி தம்மைக் கலங்கப்பண்ணுகையால், அமரர்க்கங்களாலேயாகிலும் பரிஹரிக்கப்போமோ வென்று முயன்றன ரென்க ;(இதனை, 'அயோத்தியாபுரியிலுள்ள சனங்களெல்லாரும் இராமனுடையக்ஷேமத்தின்பொருட்டு எல்லாத்தேவர்களையும் வணங்கினர்' என்றதனோடு ஒப்பிடுக.) 'அன்னைமீர்'என்று விளித்ததனால், முதியரானநீர் இளையரானஎமது வார்த்தையை உபேக்ஷிக்கலாகாதென்று குறிப்பித்தபடி. 'அண்டமுண்டுமிழ்... திருப்பேர்சொல்லும்' - காக்குங்கடவுளின்நாமோச்சாரணமே துயரனைத்தையுந் தீர்க்கு மென்றதாம். பிறவுங் கண்டுகொள்க.

சுய. தீங்கடமாலத்திமுன்னின்றுகாலிப்பின்சென்றகொண்டல்
வேங்கடமால்கழலேவிரும்பார் விலைமாதர்மல
மாங்கடமால்செயமாலாயவரெச்சிலாகநச்சித்
தாங்கடமாலழிவாரிருந்தாலுஞ்சவப்பண்டமே.

(இ - ள்.) தீங்கு அட - (முதலையினாலாகிய) தீமையை அழிக்குமாறு, மால் அத்தி முன் நின்று - (கஜேந்திராழ்வானாகிய)பெரியயானையின் எதிரிலே வந்துநின்று, காலி பின் சென்ற - (கிருஷ்ணாவதாரத்தில்) பசுக்களை மேய்த்தற்பொருட்டு அவற்றின்பின்னேபோன, கொண்டல் - நீர்கொண்ட காளமேகம்போன்றவனுடைய, வேங்கடம் மால் - திருவேங்கடமலையி லெழுந்தருளியிருக்கின்ற திருமாலினது, கழலே - திருவடிகளையே, விரும்பார் - விரும்பாதவர்களாய்,—விலை மாதர் - வேசையருடைய, மலம் ஆம் கடம் - அசுத்தம்நிறைந்த பாண்டம் போன்ற உடம்பு, மால் செய - மயக்கத்தைச் செய்ய, மால் ஆய் - (அவர்கள்பக்கல்) மோகங்கொண்டு,அவர் எச்சில்ஆகம் நச்சி - அவர்களுடைய எச்சிலாகிய உடம்பை விரும்பி, தாங்கள் தமால்

அழிவார் - தாங்கள் தங்கள் குணக்கேட்டினாலேயே அழிபவர்கள்,—இருந்தாலும் - (இறவாமல் உலகத்தில்) உயிர்வாழ்ந்திருந்தாலும், சவம் பண்டமே - பிணமாகிய பொருளே யாவர்; (எ - று.)

பகவத்விஷயத்தில் ஈடுபடாது விஷயாந்தரத்தில் ஈடுபட்டவர்களுடைய சன்மம் வீண் என்பதாம். மனிதசன்மமெடுத்ததன்பயனான நற்கதிப்பேற்றை அவர்கள் அடையாமையால், அவர்களுயிர்வாழ்க்கை பழுதெனப்பட்டது. விலைமாதர் - விலைகொடுப்பவர்யாவர்க்கும் தம்நலத்தை விற்கும் பொதுமகளிர். மலம் ஆம் கடம் மால் செய மாலாய் அவராகம் நச்சி— "ஊறியுவர்த்தக்கவொன்பதுவாய்ப்புலனுங், கோதிக்குழம்பலைக்குங்கும்பத்தைப் - பேதை, பெருந்தோளி பெய்வளா யென்னும் மீப்போர்த்த, கருந்தோலாற் கண்விளக்கப்பட்டு" என்ற நாலடியாரைக் காண்க. எச்சிலாவது - உண்டொஞ்சியது; (எஞ்சு - பகுதி, இல் - பெயர்விகுதி,வலித்தல் - விகாரம்.) விலைமாதருடம்பு, பலரும்விரும்பி நுகர்ந்துவிட்டதாதலால், 'எச்சிலாகம்' எனப்பட்டது. "நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை, நிலைகலக்கிக் கீழிடுவானும்— நிலையினும், மேன்மே லுயர்த்து நிறுப்பானும் தன்னைத், தலையாகச் செய்வானும் தான்" என்றபடி தம்தம் உயர்வுதாழ்வுகட்கு அவரவருடையசெயலே காரண மாதலால், 'தாங்கள் தமால்அழிவார்' என்றார். கொண்டல் - எம்பெருமானுக்கு, நிறத்திலன்றி,குளிர்ச்சி கைம்மாறுகருதாது கருணைமழைபொழிதல் தாபந்தீர்த்தல் முதலிய குணங்களாலும் உவமை.

அத்தி-ஹஸ்தீயென்ற வடசொல்லின் விகாரம்; ஹஸ்தம்-கை: இங்கே, துதிக்கை; அதனையுடையது ஹஸ்தீ எனக் காரணக்குறி. முதலடியில், 'முன்நின்று பின்சென்ற' என்றவிடத்து முரண்தொடை காண்க. (கூ0)

கூக. பண்டையிருக்குமறியாப்பரமபதத்தடியா
ரண்டையிருக்கும்படிவைக்குமப்பனை யண்டத்துக்குந்
தண்டையிருக்குமலர்ந்தசெவ்வாயனைத் தாள்வணங்கா
மண்டையிருக்கும்விடுமோ சனனமரணமுமே.

(இ - ள்.) பண்டை இருக்கும் அறியா - பழமையான வேதங்களும் முழுதும்அறியமாட்டாத, பரம பதத்து - (தனதுஉலகமாகிய) ஸ்ரீவைகுண்டத்தில்,அடியார் அண்டை இருக்கும்படி-(நித்தியமுக்தர்களாகிய)அடியார்களின் அருகில் இருக்கும்படி,வைக்கும் - (தன்னைச்சரணமடைந்தவர்களை) வைத்தருளுகின்ற, அப்பனை - திருவேங்கடமுடையானும், அண்டத்துக்கும் தண் தயிருக்கும் மலர்ந்த செவ் வாயனை - (பிரளயகாலத்தில்) உலகங்களை விழுங்குதற்கும் (கிருஷ்ணாவதாரத்திலே) குளிர்ச்சியான தயிரை யுண்ணுதற்கும் திறந்த சிவந்த திருவாய்மலரை யுடையவனுமான எம்பெருமானை, தாள் வணங்கா - திருவடிதொழாத, மண்டையிருக்கும் - தலையையுடையவர்களாகிய உங்களுக்கும், சனனம் மரணமும் விடுமோ - பிறப்பும் இறப்பும் நீங்குமோ? [நீங்கா என்றபடி] ; (எ - று.)

வேதம் ஒருகாலத்தில் தோன்றியதன்றி நித்தியமாதலால், 'பண்டை யிருக்கு' எனப்பட்டது. பண்டு - பழமைகுறிக்கும் இடைச்சொல். பண்டை - ஐயீற்றுடைக் குற்றுகரம். உம் - உயர்வுசிறப்பு. தயிர் - தையிர் என இடைப்போலிபெற்றது, திரிபுநயத்தின்பொருட்டு. 'மலர்ந்த' என்ற வினையின் ஆற்றலால், வாய், மல ரெனப்பட்டது. மண்டையிர் - முன்னிலைப்பன்மைக் குறிப்பு வினையாலணையும்பெயர்; இர் - விகுதி; அப்பெயரின்மேல், உ - சாரியை, கு - நான்கனுருபு; உம் - இழிவுசிறப்பு. "கோளில்பொறியிற் குணமிலவே யெண்குணத்தான், தாளை வணங்காத் தலை" என்றபடி இறைவனது திருவடிகளை வணங்காத தலை பயன்படாதாதலின், அதனது இழிவு தோன்ற, தலையோட்டைக்குறிக்கிற 'பண்டை' என்ற சொல்லாற் குறித்தார். ஓ - எதிர்மறை. பரம பதம்-(எல்லாப்பதவிகளினும்) மேலான ஸ்தானம்; வடமொழித்தொடர். (௬௧)

௬௨. மரணங்கடக்குஞ்சரநீங்கவாழ்வித்துவல்லரக்கர்
முரணங்கடக்குஞ்சரவேங்கடவ கண்மூடியந்தக்
கரணங்கடக்குஞ்சரமத்துநீதருகைக்கெனக்குன்
சரணங்கடக்குஞ்சரண்வேறிலை தந்துதாங்கிக்கொள்ளே.

(இ - ள்.) கடம் குஞ்சரம் - மதத்தையுடைய யானை, மரணம் நீங்க - (முதலையினால்) இறத்தலை யொழியும்படி, வாழ்வித்து - (அக்கஜேந்திராழ்வானை) உயிர்வாழச்செய்து, வல் அரக்கர் முரண் அங்கு அடக்கும் - வலிய இராக்கதர்களுடையபலத்தை அக்காலத்தில்[ஸ்ரீராமாவதாரத்தில்]அடக்கிவிட்ட, சர - அம்புகளையுடையவனே! வேங்கடவ - திருவேங்கடமுடையானே!—கண் மூடி - கண்கள் இருண்டு, அந்தக்கரணம் கடக்கும் - மனம் அழியும்படியான, சரமத்து - (எனது) அந்திமதசையில், நீ எனக்கு தருகைக்கு - நீ எனக்கு அளித்தற்கு,உன் சரணம் கடக்கும் சரண் வேறு இலை- உனது திருவடியன்றி வேறுரக்ஷகம் இல்லை; தந்து தாங்கிக்கொள்-(அதனை) அளித்து (என்னை) ஏற்றுக்கொள்; (எ - று.)

அங்கு - அவ்விடத்தி லெனினுமாம். அந்தக்கரணம் - வடசொல்; அகத்துறுப்பு. சரமம், சரணம் - வடசொற்கள். சரண் - சரணமென்ற வடசொல்லின் விகாரம். எனக்கு உன்சரணங்கடக்குஞ் சரண் வேறு இலை— "உன்சரணல்லாற் சரணில்லை" என்றார் குலசேகராழ்வாரும். (௬௨)

௬௩. தாங்கடலாழிவளைதண்டுவாள்வில்லிற்றானவரை
யீங்கடவீசிக்குறித்தடித்துத்துணித்தெய்துவெல்லும்
பூங்கடல்வண்ணனிலைகிடைவந்ததுபோக்கிருப்பு
வேங்கடம்வேலையயோத்திவெங்கானகம்விண்ணுலகே.

(இ - ள்.) தாங்கு - (தனது திருக்கைகளில்) ஏந்திய, அடல் - வலிமையையுடைய, ஆழி - சக்கரமும், வளை - சங்கமும், தண்டு-கதையும்,வாள்-வாளும், வில்லின் - வில்லும்ஆகிய பஞ்சாயுதத்தால், (முறையே), தானவரை - அசுரர்களை, ஈங்கு - இவ்வுலகத்தில், அட - அழிக்குமாறு,வீசி - சுழற்றிவீசி

யும், குறித்து - ஊதிமுழக்கியும், அடித்து - அடித்தும், துணித்து - அறுத்தும், எய்து - அம்பெய்தும், வெல்லும் - சயிக்குந்தன்மையுள்ள, பூ கடல் வண்ணன் - அழகிய கடல்போன்ற திருநிறமுடைய திருமால், நிலை-நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கிற இடமும், கிடை - பள்ளிகொள்கிற இடமும், வந்தது - வந்துதிருவவதரித்த இடமும், போக்கு-நடந்துசென்ற இடமும், இருப்பு - வீற்றிருக்கின்ற இடமும், (முறையே), வேங்கடம் - திருவேங்கடமலையும், வேலை - திருப்பாற்கடலும், அயோத்தி - அயோத்யாபுரியும், வெம் கானகம் - வெவ்விய காடும்,விண் உலகு - பரமபதமுமாம்.

ஆழியின்வீசி, வளையிற்குறித்து, தண்டின் அடித்து, வாளின் துணித்து, வில்லின்எய்து என முதலடியோடு இரண்டாமடியும்; நிலைவேங்கடம், கிடைவேலை,வந்தது அயோத்தி,போக்குக்கானகம்,இருப்புவிண்ணுலகு என மூன்றாமடியோடு நான்காமடியும் முறைநிரனிறைப்பொருள்கோளாதல் காண்க. இச்செய்யுளில், முன்னிரண்டடியும், பின்னிரண்டடியும் - தனித்தனி கிரமாலங்காரம் ; (மேல் ௮0-ஆஞ் செய்யுளில் நான்கடிகளிலுந் தொடர்ந்துவருகிற கிரமாலங்காரத்தோடு இதற்குள்ள வேறுபாட்டைஉணர்க.) வந்தது - இராமனாய்த் திருவவதரித்தது. இராமாவதாரத்திற் பதினான்கு வருடம் வனவாசஞ்சென்றதும், கிருஷ்ணாவதாரத்திற் கன்றுகாலிகளைமேய்த்தற்பொருட்டு வனத்திற்சென்றதும், 'போக்கு வெங்கானகம்' என்றதற்கு விஷயம்.

தண்டு - தண்டமென்ற வடசொல்லின் விகாரம். பூங்கடல்வண்ணன் - தாமரைமலர் பூக்கப்பெற்றதொரு கடல்போன்ற வடிவமுடையானுமாம்; "அம்பரந்தாமரை பூத்தலர்ந்தன்ன வவயவர்" என்றாற் போல. கிடை - கிடக்குமிடம். அயோத்யா என்ற வடசொல் - (பகைவராற்)போர்செய்து வெல்லமுடியாததென்று காரணப்பொருள்படும். (௯௩)

௯௪. உலகந்தரவுந்திபூத்திலையேற் சுடரோரிரண்டு
மிலகந்தரமும்புவியுமெங்கே யயனீசனெங்கே
பலகந்தரமுமுணவுமெங்கே பல்லுயிர்களெங்கே
திலகந்தரணிக்கெனநின்றவேங்கடச்சீதரனே.

(இ - ள்.) தரணிக்கு திலகம் என நின்ற - பூமிக்குத் திலகம்போல அழகுசெய்துநின்ற,வேங்கடம்- திருவேங்கடமலையிலெழுந்தருளியிருக்கிற, சீதரனே - திருமாலே!—(நீ), உலகம் தர - உலகங்களைப் படைக்க, உந்தி பூத்திலை எல் - திருநாபித்தாமரை மலர்ந்திராயாயின்,—சுடர் ஓர் இரண்டும் - (சூரியசந்திராதிய)இருசுடர்களும், இலகு அந்தரமும்-அவைவிளங்குமிடமான ஆகாயமும், புவியும் - பூமியும், எங்கே - எவ்விடத்தே தோன்றும்? அயன் ஈசன் எங்கே - பிரமனும் சிவனும் எவ்விடத்தே தோன்றுவர்? பல கந்தரமும் உணவும் எங்கே - பலமேகங்களும் (அவற்றாலாகிற)உணவுகளும் எவ்விடத்தே தோன்றும்? பல் உயிர்கள் எங்கே - பலவகைப்பிராணிவர்க்கங்கள் எங்கே தோன்றும்? (எ - று.)

சராசரப்பொருள்கள்யாவும் உளவாகா என்பதாம். "உண்டிறக்கும்புவனங்களை மீளவுமிழ்ந்திலையேற், பண்டிறக்கும்பதுமத்தோன்புரந்தரன்பைந்தழல்போற், கண்டிறக்குஞ்சங்கரன் முதலோர்களைக் கண்டவரார், திண்டிறக்குஞ்சாரஞ்சேர் சோலைமாமலைச் சீதரனே" என்ற அழகரந்தாதிச்செய்யுளோடு இச்செய்யுளை ஒப்பிடுக. "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்,துப்பாயதூஉ மழை" என்றபடி பிராணிகளின் பசிதாகங்களைநீக்கும் உணவுக்கெல்லாம் மேகம் ஏதுவாதலால்,அக்காரணகாரியமுறைப்படி'கந்தரமுமுணவும்' என்றார். ஈற்றடி—"திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே" என்ற திருவாய்மொழிபடியை அடியொற்றியது; 'ஸ்த்ரீகளுக்குப் பூரணமான ஆபரணம்போலே யாய்த்து, பூமிக்குத் திருமலை' என்று அங்கு வியாக்கியானமிட்டனர் நம்பிள்ளை. திலகம் - நெற்றிப்பொட்டு; அது நெற்றிக்கு அழகுசெய்வதுபோல, பூமிக்கு அழகுசெய்வது திருவேங்கட மென்க.

உலகம் - லோக மென்ற வடசொல்லின் விகாரம்; (இதனைத் தமிழ்மொழியேயா மென்பர், ஆசிரியர் நச்சினார்க்கினியர்.) அந்தரம், புவி, தரணி, ஸ்ரீதரன் - வடசொற்கள். தரணி - (பொருள்களைத்) தரிப்பது. ஸ்ரீதரன் - திருமகளை (மார்பில்) தரிப்பவன். (௬௪)

௬௫. சீவார்கழலையிரண்டையுஞ்செப்பென்றுதீங்குளவி
னுவார்கழலைப்பயில்செங்கையார்நலம்பேணுமைவ
ராவார்கழலையிரண்டாமவத்தையினன்றெனக்குன்
பூவார்கழலையருளப்பனே யண்டபூரணனே.

(இ - ள்.) அப்பனே-திருவேங்கடமுடையானே! அண்ட பூரணனே - அண்டமுழுவதிலும் வியாபித்து நிறைந்திருப்பவனே!—கழலை பயில் செம் கையார் - கழற்சிக்காயையாடுகிற சிவந்த கைகளையுடையவர்களான மகளிரது, சீ வார் கழலை இரண்டையும் - சீ ஒழுகுகின்ற கழலைக்கட்டியாகிய தனமிரண்டையும், செப்பு என்று - கிண்ணங்களென்று புனைந்துரைத்து, தீங்கு உள வினவார் - (அவர்களிடத்து) உள்ளனவான தீமைகளை விசாரித்தறியாதவர்களாய், நலம் பேணும் - (அவர்களுடைய) இன்பத்தை விரும்புகிற, ஐவர் ஆவார் - பஞ்சேந்திரியங்கள், கழல் - (தம்தமது ஆற்றல்) ஒழியப்பெறுகிற, ஐ இரண்டு ஆம் அவத்தையின் அன்று - பத்தாம்அவத்தையாகிய மரணம் நேர்கிற அந்நாளில், எனக்கு—, உன் பூ ஆர் கழலை - உனது தாமரைமலர்போன்ற திருவடிகளை, அருள் - தந்தருள்; (எ - று.)

"ஈச்சிறகன்னதோர் தோலறினும் வேண்டுமே, காக்கை கடிவதோர் கோல்" என்பவாதலால், மார்பில்திரண்டெழுந்து பால்பெருகுந்தனங்களை அருவருப்புத்தோன்ற 'சீ வார் கழலை யிரண்டு' என்றார்; ("சிலந்திபோலக் கிளைத்துமுன்னெழுந்து,திரண்டுவிம்மிச் சீப்பாய்ந்தேறி,யுகிராற்கீற வுலர்ந்துள்ளுருகி, நகுவார்க்கிடமாய் நான்றுவற்றும், முலையைப் பார்த்து முளரிமொட்டென்றுங்குலையுங் காமக்குருடர்" என்றார் பிறரும்.) உள-பலவின்பாற்பெயர். வினவார் - எதிர்மறைப்பலர்பால்முற்றெச்சம்; வினவல்-உசாவுதல். இனி, தீங்கு உள வினவார் என்பதற்கு - தீமைவிளக்கின்ற சொற்

களையுடையவரென்று உரைத்து, மகளிர்க்கு அடைமொழியாக்குதலு மொன்று. இனைன்று எடுத்தால் பரிகாசவார்த்தையென்றும், இன்னா என்பதன் தொகுத்தலெனக்கொண்டால் இனியவையல்லாத செயல்களென்றும் பொருள்படுமாதலால், அவற்றையுடையவரெனினுமாம். தீம் குளம் வினைவார் என்று பிரித்து இனிமையான வெல்லம்போன்ற சொற்களையுடையவரென்றும், தீங்கு உளவின் ஆவார் என்று பிரித்துக் கொடியவஞ்சனையிற் பொருந்துபவரென்றும் உரைக்கவும்படும். 'தீங்குழலினாவார்' என்ற பாடத்துக்கு—தீம் - இனிமையான, குழலின் - புள்ளாங்குழலினிசைபோன்ற, நாவார் - நாவினாற்பேசுஞ்சொற்களையுடையவர் என்று பொருள் காண்க. கழல் என்ற கொடியின்பெயர் - அதன்காய்க்கு முதலாகுபெயர். 'கழலைப் பயில்செங்கையார்' என்றது - கவலையின்றி விளையாடுபவரென்றும், தம் விளையாட்டினால் ஆடவரை வசீகரிப்பவரென்றும் கூறியவாறும்.

'ஐவராவார்' என்றவிடத்து,'ஆவார்'என்றது-முதல்வேற்றுமைச்சொல்லுருபாய்நின்றது. நினைவு பேச்சு இரங்கல் வெய்துயிர்த்தல் வெதுப்பு துய்ப்பனவெவிட்டல் அழுங்கல் மொழிபலபிதற்றல் மிகுமயக்கு இறப்பு என்ற மன்மதபாணாவஸ்தை பத்தில் ஈற்றதாதல்கொண்டு, இறத்தல் 'ஐயிரண்டாமவத்தை' எனப்பட்டது. மன்மதாவஸ்தை பத்து - காட்சி அவா சிந்தனை அயர்ச்சி அரற்றல் நாணொழிதல் திகைத்தல் மோகம் மூர்ச்சை இறந்துபடுதல் எனக் கூறவும்படும். ஐயிரண்டு - பண்புத்தொகை. அவத்தை - அவஸ்தா என்ற வடசொல்லின் விகாரம். அண்டபூர்ணன் - வடமொழித்தொடர்.

பூவார்கழல் என்றவிடத்து, 'ஆர்' என்றது - உவமவாசகமாய் நின்றது; ஆர்தல் - பொருந்துதல்: இனி, 'பூவார்கழல்'என்றதொடர்-(அடியார்கள் அருச்சித்தஇட்ட) மலர்களால் எப்பொழுதும் நிறைந்துள்ள திருவடிகளென்றும் பொருள்படும்: "வானவர்வானவர்கோனொடுஞ், சிந்துபூமகிழுந் திருவேங்கடம்" என்றபடி பரமபதத்திலுள்ளார் பூமாரிசொரியு மிட மாதலாற் புஷ்பமண்டபமெனப்படுகிற திருமலையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானது திருவடிகள், அப்பரமபதவாசிகள் அர்ச்சிக்கின்ற அப்ராக்ருத புஷ்பங்களும்,தேவர்கள் அர்ச்சிக்கின்ற கற்பகமலர்களும், முனிவர்கள் அர்ச்சிக்கின்ற கோட்டுப்பூ முதலியனவும், தொண்டைமான்சக்கரவர்த்தி அர்ச்சித்த ஸ்வர்ணபுஷ்பங்களும், குரவைநம்பி அர்ச்சித்த மண்பூவும் பொருந்தப்பெறுதலால், 'பூவார்கழல்' என்று சிறப்பாக வழங்கப்படும்; "தேவாசுரர்கள் முனிக்கணங்கள் விரும்புந் திருவேங்கடத்தானே, பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறு புணராயே" என்ற திருவாய்மொழியையும், வேங்கடமே........பூவார்கழலார்பொருப்பு" என்ற திருவேங்கடமாலையையும், இந்நூலின் எ0 - ஆஞ் செய்யுளையுங் காண்க. (சுரு)

சுசு. பூரணனாரணன்பொன்னுலகாளிபுராரிகொடி
வாரணனாரணன்வாழ்த்தும்பிரான் வடவேங்கடத்துக்
காரணனாரணங்காணவிறைவிகணவன் மண்ணேழ்
பாரணனாரணனென்பார்க்குநீங்கும்பழுதவமே.

(இ - ள்.) பூரணன்-எங்குநிறைந்தவன்: ஆரணன்-பிரமனும், பொன் உலகு ஆளி-பொன்மயமான சுவர்க்கலோகத்தை அரசாள்பவனான இந்திரனும், புர அரி - திரிபுரசங்காரஞ்செய்தவனான சிவனும், கொடி வாரணன்-துவசத்திற் கோழிவடிவையுடையவனான சுப்பிரமணியனும், ஆர் அணன் - (அவனுக்குப்)பொருந்திய தமையனான விநாயகனும்,வாழ்த்தும்-பல்லாண்டு பாடித் துதிக்கிற, பிரான்-பிரபு: வட வேங்கடத்து-வடக்கின்கணுள்ள திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிற, காரணன்-(அனைத்துக்குங்) காரணமானவன்: ஆறு-(தன்னை) விட்டுநீங்காத, இறைவி-தலைவியாகிய, ஆர் அணங்கு-அருமையான திருமகளுக்கு,கணவன்—; மண் எழ் பாரணன்-ஏழுவகையுலகங்களையும் உண்டவன் : நாரணன் - நாராயணன்: என்பார்க்கு-என்று (எம்பெருமானுடைய குணஞ்செயல்களையும் மகிமையையும் திருநாமத்தையுங்)கருதிச் சொல்பவர்க்கு, பழுது அவம் நீங்கும்-(அவர்கள் முன்புசெய்த) தீவினைகளெல்லாம் பயன்தராதனவாய் ஒழியும் ; (எ - று.)

ஆரணம் - வேதம் ; அதனை ஓதுபவன் - ஆரணன். ஆளி, இ - கருத்தாப்பொருள்விகுதி. புராரி - புர + அரி ; தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர்: திரிபுரத்துக்குச் சத்துரு. கொடிவாரணன் - கோழிக்கொடியோன்; "கொடிக்கோழிகொண்டான்" என்றார் நம்மாழ்வாரும். ஆர் அணன் - வினைத்தொகை ; அணன் - அண்ணன்: தொகுத்தல். காரணன்-ஆதிமூலப்பொருள். அணங்கு - மகளிரிற் சிறந்தவள், தெய்வப்பெண். ஆறுமை - நீங்காமை. "அகலகில்லேனிறையுமென்று அலர்மேன்மங்கையுறை மார்பா,......திருவேங்கடத்தானே"என்றபடி திருமகள் திருமாலை ஒருபொழுதும்விட்டுப்பிரியாமையால், 'ஆறுவிறைவி'எனப்பட்டாள். இறைவி-தேவி. மண்எழ் - பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் மகர்லோகம் ஜநலோகம் தபோலோகம் சத்தியலோகம் என்ற மேலேழுலகங்களும், அதலம் விதலம் ஸுதலம் தராதலம் ரஸாதலம் மகாதலம் பாதாலம் என்ற கீழேழுலகங்களும் ஆகிய ஈரேழுலகங்கள்; மண் என்ற பூமியின்பெயர், இங்கு உலகமென்ற மாத்திரமாய் நின்றது : சிறப்புப்பெயர், பொதுப்பொருளின்மேலது. பழுது - எழுவாய். 'ஆரணங்காணுவிறைவி' என்று பாடமோதி, வேதங்களும் கண்டறியமாட்டாத திருமக ளென்பாரு முளர். (கூகூ)

கூஎ. பழுத்தெட்டிபோன்றநடுச்செல்வர்பின்சென்றுபல்செருக்காற்
கொழுத்தெட்டினையளவெண்ணமற்றீர் குவடேறிமந்தி
கழுத்தெட்டியண்டர்பதிநோக்கும்வேங்கடக்காவலனை
யெழுத்தெட்டினாலெண்ணியேத்தீர் பரகதியேறுதற்கே.

(இ - ள்.) பழுத்த எட்டி போன்ற - பழுத்தஎட்டிமரம்போன்ற[பிறர்க்குப்பயன்படாத], நடு செல்வர் பின் - (பரம்பரையாக அமைந்த செல்வமன்றி) இடையிலேவந்தசெல்வத்தை யுடையவர்களின்பின்னே, சென்று - தொடர்ந்துசென்றும், பல் செருக்கால் கொழுத்து - பலவகைச்செருக்குக் களிறாற் கொழுத்தவர்களாகியும், எள் தினை அளவு எண்ணம் அற்றீர் - எள்ளளவு தினையளவேனும் (கடவுளைப்பற்றின) சிந்தனை யில்லாதவர்களே!—

(இனியாயினும் நீங்கள் பழுதே பலபகலும்போக்காமல்), பா கதி ஏறுதற்கு - (எல்லாவுலகங்கட்கும்) மேலுள்ளதான பரமபதத்தில் ஏறிச்சென்றுசேர்தற்பொருட்டு,—மந்தி குவடு ஏறி கழுத்து எட்டி அண்டர் பதி நோக்கும் வேங்கடம் காவலனை - பெண்குரங்குகள் சிகரத்திலேறிக் கழுத்தைத்தூக்கி மேலுள்ள தேவலோகத்தை எட்டிப்பார்க்கப்பெற்ற திருவேங்கடமலையில்எழுந்தருளியிருக்கிற ஸ்வாமியை, எழுத்து எட்டினால் எண்ணி ஏத்தீர் - அஷ்டாக்ஷரமகாமந்திரத்தைக்கொண்டு தியானித்துத் துதியுங்கள் ; (எ - று.)

பழுத்தஎட்டியென்பது பழுத்தெட்டி யெனப் பெயரெச்சவீறு தொகுத்தல்விகார மடைந்தது. தொன்றுதொட்டு வறியராயிருந்து இடையே செல்வங்கிடைக்கப்பெற்றவர் அச்செல்வத்தினருமையைக்கருதிப் பிறர்க்கு உதவாது லோபிகளாயிருத்தலும், 'அற்பன் பணம்படைத்தால் அர்த்தராத்திரியிற் குடைபிடிப்பான்' என்றபடி பிறரைமதியாத இறுமாப்புடையராயிருத்தலும் பெரும்பான்மை யாதலால், அந்தச்செல்வரை எடுத்துக்கூறினார். பிறர்க்குஉதவாமைபற்றி,அவர்க்கு,பழுத்தஎட்டி உவமைகூறப்பட்டது; ("ஈயாதபுல்ல ரிருந்தென்ன போயென்ன எட்டிமரம்,காயாதிருந்தென்ன காய்த்துப் பலனென்ன" என்பர் பிறரும்.) செல்வர்பின்செல்லுதல், தாம் அவராற் செல்வம்பெறலாமென்னும் நசையினால். எள் தினை என்ற தானியங்கள், சிறுமைக்கு அளவையாக எடுத்துக்காட்டப்பட்டன. குவடு - மரக்கிளையுமாம். மந்தி - குரங்கின் பெண்மைப்பெயர்; ஆண்மைப்பெயர் - கடுவன். 'குவடேறி மந்தி கழுத்தெட்டி யண்டர்பதி நோக்கும் வேங்கடம்' என்றது, மலையின் உயர்வை விளக்கும் தொடர்புயர்வுநவிற்சியணி. இவ்வருணனைகூறியது,அங்குச்சேர்கிறஅனைத்துயிரும் உயர்கதியைப்பெறுமென்ற குறிப்பு. எழுத்துஎட்டு - எட்டுஎழுத்துக்களையுடைய பெரியதிருமந்திரம். எழுத்தெட்டினா லெண்ணியேத்தீர் பாகதியேறுதற்கே—"எட்டெழுத்து மோதுவார்கள் வல்லர் வானமாளவே" என்பது பெரியார்பாசுரம். (கூஎ)

கூஅ. ஏறுகடாவுவ ரன்னங்கடாவுவ ரீரிருகோட்
டேறுகடாமழையோங்கல்கடாவுவ ரோடருவி
யாறுகடாதவமுதெனப்பாயவரிகமுகந்
தாறுகடாவும்வடவேங்கடவரைத்தாழ்ந்தவரே.

(இ - ள்.) ஓடு அருவி ஆறு - நதிகளாகவிரைந்துசெல்லுகின்ற நீரருவிகள், கடாத அமுது என - கடுக்காத[இன்சுவையுடைய] அமிருதம் போல, பாய - பாய்ந்துவர, (அவற்றிற்கு அஞ்சி), அரி - குரங்குகள், கமுகம் தாறுகள் தாவும் - பாக்குமரக்குலைகளின்மேல் தாவியேறப்பெற்ற, வடவேங்கடவரை - வடக்கின்கணுள்ள திருவேங்கடமலையி லெழுந்தருளியிருக்கிற பெருமானை, தாழ்ந்தவர் - வணங்கினவர்கள்,—ஏறு கடாவுவர் - ருஷபத்தை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்துவர்; அன்னம் கடாவுவர் - அன்னப்பறவையை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்துவர் ; ஈர் இரு கோடு - நான்கு தந்தங்களையுடையதும், ஊறு கடாம் மழை - மேன்மேற்சுரக்கின்ற மதநீர்ப்

பெருக்கையுடையதுமான, ஓங்கல் - மலைபோன்ற (ஐராவத) யானையை, கடாவுவர் - ஏறிநடத்துவர்; (எ - று.)

திருவேங்கடமுடையானை வணங்கினவர் அதன்பயனாக மறுமையில் ருத்திரபதவி பிரமபதவி இந்திரபதவிகளை யடைவ ரென்பதாம். ருத்திர பதவி முதலியவற்றை யடைவ ரென்ற பொருளை 'ஏறுகடாவுவர்' என்பது முதலியசொற்களாற் குறித்தது, பிறிதினவிற்சியணியின்பாற்படும். ருஷபம் சிவனுக்கும், அன்னப்பறவை பிரமனுக்கும், ஐராவதயானை இந்திரனுக்கும் வாகனமாம். 'ஊறுசடாமழை யோங்கல்' எனவே யானையென்றும், 'ஈரிரு கோட்டோங்கல்' எனவே ஐராவதயானை யென்றும் ஆயிற்று. ஐராவதம், இரு புறத்தும் இரட்டைத்தந்த முடையது.

ஏறு - பசுவின் ஆண்மைப்பெயர். அன்னம் - ஹம்ஸ மென்ற வடசொல் லின் சிதைவு. ஈரிருகோடு - பண்புத்தொகைப்பன்மொழித்தொடர். கடாம்- கடமென்பதன் விகாரம். ஓங்கல் - உயர்ச்சி; மலைக்குத் தொழிலாகுபெயர்: அல் - கருத்தாப்பொருள்விகுதியென்றுங் கொள்ளலாம்; யானைக்கு உவமை யாகுபெயர். கடாத - இன்னாச்சுவை பயவாத; கடு - பகுதி. தாபந்தவிர்த் துக் களிப்பையளிக்கும் மலையென்று பின்னிரண்டடிகளால் விளங்கும். ()

கூகூ. தாழ்ந்தவருக்கந்தருவொக்குமோ பலதாரகையுஞ்
சூழ்ந்தவருக்கன்சுடரொக்குமோ தொல்லரக்கரென்று
வாழ்ந்தவருக்கங்களைந்தான்வடமலைமாலடிக்கீழ்
வீழ்ந்தவருக்கன்பருக்கொப்பரோ வண்டர்மெய்த்தவரே.

(இ - ள்.) தாழ்ந்த - இழிவான, அருக்கம் - எருக்கஞ்செடியானது, தரு ஒக்குமோ - பெரிய மரத்துக்கு ஒப்பாகுமோ? பல தாரகையும் - பல நக்ஷத்திரங்களும், சூழ்ந்த அருக்கன்சுடர் ஒக்குமோ - சுற்றிலும் பரவுகின்ற சூரியனது ஒளிக்கு ஒப்பாகுமோ? (ஒப்பாகா: அவைபோல), அண்டர் - தேவர்களும், மெய்த்தவர் - உண்மையான தவத்தையுடைய முனிவர்களும்,— தொல் அரக்கர் என்று வாழ்ந்த வருக்கம் களைந்தான் - பழமையான இராக் கதர்களென்று பிரசித்திபெற்று வாழ்ந்த கூட்டங்களையெல்லாம் வேரோ டழித்தவனான, வட மலை மால் - திருவேங்கடத்துறைவானது, அடிக்கீழ் - திருவடிகளில், வீழ்ந்தவருக்கு - வீழ்ந்துவணங்கின அடியார்கட்கு, அன்ப ருக்கு - அன்பு பூண்டொழுகுபவர்க்கு, ஒப்பரோ - ஒப்பாவரோ? [ஆகார் என்றபடி]; (எ - று.)

பாகவதர்க்கு அடிமைபூண்பவர் தேவரிஷிகணங்களினும் மேம்பட்டவ ரென அவர்கள்மகிமையை எடுத்துக்கூறியவாறாம். முதலிரண்டுவாக்கியங் கள் - உபமானம்; மூன்றாவதுவாக்கியம் - உபமேயம்: உபமானஉபமேயவாக் கியங்களினிடையில் உவமவுருபுகொடாமற் கூறினமையால், எடுத்துக்காட் டுவமையணி.

அர்க்கம், தரு, தாரகா, அர்க்கன், வர்க்கம் - வடசொற்கள். ஓகாரங் கள் - எதிர்மறை. மெய்த் தவம் - பழுதுபடாத தவம்; கூடாவொழுக்க

மொழிந்த தவம். அண்டம் - வானம், மேலுலகம்; அதிலுள்ளவர், அண்டர். சூழ்ந்த - திரண்டனவாயினும் எனினுமாம். (சுகூ)

எ௦. மெய்த்தவம்போருகவெஞ்சொலிராமன்வில்வாங்கிவளைத்
துய்த்தவம்போருகநாலுஞ்செய்தோருயர்வேங்கடத்து
வைத்தவம்போருகப்பூவார்கழலைமறைமனுநூல்
பொய்த்தவம்போருகவார்காமம்வேட்டுப்புரளுவரே.

(இ - ள்.) மெய் தவம் - உண்மையாகச்செய்த தவம், போர் - யுத்தத்தில், உக - பழுதுபட்டொழியுமாறு, வெம் சொல் இராமன் வில் வாங்கி வளைத்து உய்த்த அம்போர் - கடுஞ்சொற்களைப்பேசிவந்த பரசுராமனுடைய வில்லை (அவன்கையினின்று தம்கையில்) வாங்கி வளைத்து எய்த அம்பையுடையவரும், உகம் நாலும் செய்தோர் - நான்குயுகங்களையுஞ் செய்தவருமான திருமால், உயர் வேங்கடத்து வைத்த - உயர்ந்த திருவேங்கடமலையில் வைத்துநின்ற, அம்போருகம் பூ ஆர் கழலை - தாமரைமலர்போன்ற திருவடிகளை, மறை மனு நூல் பொய்த்த வம்போர் - வேதங்களையும் மநுதர்மசாஸ்திரத்தையும் பொய்யென்றுகூறுகிற வம்புப்பேச்சையுடையவர்கள், உகவார் - விரும்பாதவர்களாய், காமம் வேட்டு புரளுவர் - சிற்றின்பத்தை விரும்பிப் புரண்டுவருந்துவர்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - கழிவிரக்கம்: அந்தோ! என்றபடி.

சீதாகலியாணத்தின்பின் தசரதசக்கரவர்த்தி திருக்குமாரர்களுடனே மிதிலையினின்று அயோத்திக்கு மீண்டுவருகையில், பரசுராமன் வலியச்சென்று எதிர்த்து 'முன்பு ஹரிஹரயுத்தத்தில் இற்றுப்போன சிவதநுசை முறித்த திறத்தை அறிந்தோம்! அதுபற்றிச் செருக்கடையவேண்டா: இந்த ஸ்ரீ மகாவிஷ்ணுதநுசை வளை, பார்ப்போம்' என்று அலட்சியமாகச்சொல்லித் தான் கையிற்கொணர்ந்த ஒருவில்லைத் தசரதராமன்கையிற் கொடுக்க, அப்பெருமான் உடனே அதனைவாங்கி எளிதில்வளைத்து நாணேற்றி அம்புதொடுத்து 'இந்தப்பாணத்துக்கு இலக்கு என்?' என்று வினவ, பரசுராமன் அதற்கு இலக்காகத் தனது தபோபலம் முழுவதையுங் கொடுக்க, அவன் க்ஷத்திரியவம்சத்தைக் கருவறுத்தவனாயிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம் பூண்டவனுமா யிருத்தல்பற்றி அவனைக் கொல்லாமல் அவனது தவத்தைக் கவர்ந்தமாத்திரத்தோடு ஸ்ரீராமன் விட்டருளின னென்ற வரலாறு, இங்கு முதல்விசேஷணத்திற் குறிக்கப்பட்டது. "என்வில்வலிகண்டுபோ வென்றெதிர்வந்தான், தன்வில்லினோடுந் தவத்தை யெதிர்வாங்கி" என்றார் பெரியாழ்வாரும். விஷ்ணுவின் தசாவதாரங்களில் ஆறாமவதாரமான பரசுராமனும் ஏழாமவதாரமான தசரதராமனும் ஒருவரோடொருவர் பொருதலும், அவர்களில் ஒருவர்மற்றொருவரைவெல்லுதலும் பொருந்துமோ? எனின்,— துஷ்டர்களாய்க் கொழுத்துத்திரிந்த அரசர்களைக் கொல்லுதற்பொருட்டுப் பரசுராமனிடத்தில் ஆவேசித்திருந்த விஷ்ணுசக்தி அக்காரியம் முடிந்த பின்பு அவ்விஷ்ணுவின் அவதாரமான தசரதராமனாற் கவர்ந்துகொள்ளப்பட்ட தாதலிற் பொருந்து மென்க. இதனால், ஆவேசாவதாரத்தினும் அம்சாவதாரத்துக்கு உள்ள ஏற்றம் விளங்கும். வெஞ்சொல் - "இற்றொடிய

நிலையின் றிற மறிவென் னினி யா னுன், பொற்றோள்வலிநிலை சோதனைபுரி வா னசையுடையேன், செற்றேடிய திறடோளுறு தினவுஞ் சிறிதுடையேன்,மற்றோர்பொருளிலை யிங்கிதென்வ?வென் றன னுரமேவான்'' என்றது முதலாகக் காண்க. 'வெஞ்சொலிராமன்' எனவே, பரசுராமனுவன்; தசரதராமன் பிறர் கடுஞ்சொற்கூறினுலும் தான் கடுஞ்சொற்கூறுதலின்றி எப்பொழுதும் இன்சொல்லே பேசுபவ னென்பது பிரசித்தம்: [வால்மீகிராமாயணம்,அயோத்தியாகாண்டம், க - க0.] பரசுராமன், பிறப்பிலேயே கோபமூர்த்தியாதலால், வெஞ்சொல்லுக்கு உரியன்.

யுகம் நான்கு - கிருதயுதம், திரேதாயுகம்,துவாபரயுகம், கலியுகம் என்பன. காலம்நித்தியமாயிருக்கவும், 'உகநாலுஞ் செய்தோர்'என்றது, காலத்துக்குநியாமகன் கடவு ளென்ற கருத்துப்பற்றி;அன்றியும்,காலத்தின் அளவு பகவானது சிருஷ்டிக்குஉட்பட்ட சூரியசந்திராதியரால் நிகழ்தலுங்காண்க. உய்த்த அம்போர் = அம்புய்த்தோர். உகம்-யுகமென்ற வடசொல்லின் விகாரம். நான்குஎன்பது, ஈற்றுஉயிர்மெய்கெட்டு னகரமெய் லகரமாய் நால் என நின்றது. அம்போருஹம் என்ற வடசொல் - நீரிற்பிறப்பதென்று காரணப்பொருள்பெறும்; அம்பஸ் - ஜலம். மனுநூல் - மநுவென்னும்அரசனாற் செய்யப்பட்ட அறநூல். வம்போர் - வம்பர்; நேரில்லார். (எ0)

எக. புரண்டுதிக்கும்முடற்கேயிதஞ்செய்பொருளாக்கையினு
லிரண்டுதிக்குந்தடுமாறுநெஞ்சே யினியெய்துவம்வா
திரண்டுதிக்கும்மரன்வேளயனூர்முதற்றேவரெல்லாஞ்
சரண்டுதிக்கும்படிமேனின்றவேங்கடத்தாமத்தையே.

(இ - ள்.) புரண்டு உதிக்கும் - நிலைநில்லாது மாறிமாறித்தோன்றுந் தன்மையுள்ள, உடற்கே - உடம்புக்கே, இதம் செய் - நன்மையைச் செய்கிற, பொருள்-செல்வத்தை, ஆக்கையின் - சம்பாதித்தற்காக, நால் இரண்டு திக்கும் தடுமாறும் - எட்டுத் திசைகளிலும் திரிந்துஉழலுகின்ற, நெஞ்சே - (எனது)மனமே!—இனி—,—திக்கும் அரன் - (நெற்றிக்கண்ணின் நெருப்பினுல்) எரிக்குந்தன்மையுள்ள சிவனும், வேள் - சுப்பிரமணியனும், அயனூர் - பிரமதேவரும், முதல் - முதலிய, தேவர் எல்லாம் - தேவர்களெல்லாரும், திரண்டு - ஒருங்குகூடி, சரண் துதிக்கும்படி - (தனது) திருவடிகளைத் தோத்திரஞ்செய்யும்படி, வேங்கடம் மேல் நின்ற - திருவேங்கடமலையின் மேல் நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருக்கிற, தாமத்தை - ஒளிவடிவமுள்ள கடவுளை, எய்துவம் - அடைவோம் : வா—; (எ - று.)

புரண்டு உதித்தல் - இறப்பதும் மீண்டும் பிறப்பது மாதல். யாக்கை நிலையாமையை விளக்குவார், 'புரண்டுஉதிக்கும் உடல்' என்றார். எய்துதல் - இடைவிடாது நினைத்தல்; (''மாணடி சேர்ந்தார்'' என்றவிடத்தில், 'சேர்தல்' போல.) மனத்தை வசப்படுத்தினு லன்றி நன்முயற்சி இனிது நிறைவேறு தாதலால், அதனை முன்னிலைப்படுத்தி அறிவுறுத்துகிறார். திரண்டு துதிக்கும்படி என இயையும். திக்கும் என்பது, திக்கும் எனக் குறுக்கலெ

ன்னுஞ் செய்யுள்விகாரமடைந்தது; ("திருத்தார் நன்றென்றேன் தீயேன்" என்றதில் 'தீயேன்' என்பது 'தியேன்' என்றும், "பரிதியொ டணிமதிபனி வரைதிசைநில, மெரிதீயொ டெனவிணை வியல்வினர் செலவினர்" என்றவிடத்து 'தீ' என்பது 'தி' என்றுங் குறுகினமை காண்க.) அரன் பேன் அயனார் முதல் தேவர்எல்லாம் சரண் துதிக்கும்படி மேல்நின்ற வேங்கடத்தாமம்— "நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனு மிந்திரனுஞ், சேலேய் கண்ணார்பலர் சூழ விரும்புந் திருவேங்கடத்தானே", "நிகரி லமரர் முனிக்கணங்கள் விரும்புந் திருவேங்கடத்தானே"என்பன திருவாய்மொழி. (எக)

[பிரிவாற்றாத தலைவி, தோழியரைநோக்கி இரங்கிக்கூறல்.]

எஉ. தாமத்தளைவெண்ணெயுண்டவந்நாளிடைத்தாயர்பிணி
தாமத்தளையுவந்தார் வேங்கடாதிபர் தாமரைப்பூந்
தாமத்தளைமணியோடணிமார்பினற்றண்ணந்துழாய்த்
தாமத்தளைவதென்றோ மடவீரென்றடமுலையே.

(இ - ள்.) மடவீர் - மடமையையுடையவர்களே!—மத்து அளை வெண்ணெய் - மத்துக்கொண்டு கடைந்தெடுக்கப்பட்ட வெண்ணெயை, தாம் உண்ட - தாம் (களவுசெய்து) விழுங்கிய, அ நாளிடை - அந்த நாளிலே [கிருஷ்ணாவதாரஞ்செய்துவளர்ந்தஇளம்பருவத்திலே],தாயர்பிணி-வளர்த்த தாயாரான யசோதைப்பிராட்டி கட்டின, தாமம் தளை - கயிற்றினாலாகிய கட்டை, உவந்தார் - விரும்பி யேற்றுக்கொண்டவரான, வேங்கட அதிபர் - திருவேங்கடமுடையானுடைய, தாமரை பூ தாமத்தளை மணியோடு அணி மார்பில் - தாமரைமலரை இடமாகவுடையளான திருமகளையும் (கௌஸ்துப மென்னும்) இரத்தினத்தையும் அணிந்த திருமார்பில் (தரித்த), நல் தண் அம் துழாய் தாமத்து - சிறந்த குளிர்ந்த அழகிய திருத்துழாய்மாலையில், என் தட முலை அளைவது - எனது பெரிய தனங்கள் பொருந்துவது, என்றோ - எந்நாளோ? (எ - று.)

தலைவனைப்பிரிந்த தலைவி, இனித் தலைவனதுசேர்க்கை நேர்வது எக்காலமோ வென்று இரங்கிக் கூறினள்.

கண்ணன் இளம்பிராயத்தில் திருவாய்ப்பாடியிலுள்ள ஆயர்மனைகளிற் சென்று அவர்களுடைய பால் தயிர் வெண்ணெய் முதலியவற்றைக் களவு செய்து உண்டமையை ஆய்ச்சியர்சொல்ல அறிந்த யசோதை அக்குற்றத்துக்கு ஒருதண்டனையாகக் கண்ணனை வயிற்றிற் கயிற்றினாற்கட்டி உரலோடு பிணித்துவைத்தனள் என்ற வரலாறு, முதல்விசேஷணத்திற் குறிக்கப்பட்டது. "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரியவித்தகன்" என்றபடி தேவாதிதேவனான சர்வேசுவரன் திருவருளினால் இங்ஙனம் எளிமைபூண்டு கட்டுப்பட்டதாகிய சௌலப்யகுணாதிசயத்தில் ஈடுபட்டு 'தளையுவந்தார்' என்றார். அப்பொழுது முதலில் யசோதை கட்டத்தொடங்கிய கயிறு சிறிதளவுபோதாதாம்படி கண்ணன் இடைபருத்துக்காட்டி, அது கண்டு அத்தாய் இடையர்வீடுகளிலுள்ள தாம்புகளையெல்லாங் கொணர்ந்து

சேர்த்து ஒன்றாகமுடிந்து கட்டப்புகுந்தோறும் அதுவும் போதாதாம்படி அத்திருமகன் வளர்ந்துவந்து, பின்பு அவள் கைசலித்து மெய்வேர்த்துக் கண்பிசைந்து வருந்தக் கண்டு உடல்சிறுத்துக் கட்டுண்டனன் என்ற விவரமும், 'உவந்தார்' என்றதனாற் குறிப்பிக்கப்படும்.

தாயர் - உயர்வுப்பன்மை. நாள் இடைத்தாயர் என்றும் பிரிக்கலாம். திருமால் திருமகளை வலத்திருமார்பிலும், கௌஸ்துபமென்னும் திவ்வியரத்தினத்தை இடத்திருமார்பிலுந் தரித்துள்ளான். மடமை - மகளிர்க்குச் சிறந்த பேதைமையென்னுங் குணம்; அது, நாணம் முதலிய மற்றைப்பெண் குணங்கட்கும் உபலக்ஷணம்: இளமையுமாம்.

எம்பெருமானதுபிரிவையாற்றாத ஐயங்கார், 'எனதுபக்தி அப்பெருமானோடுசேர்ந்து இனிமையைநுகர்தற்குப் பாங்காவது எக்காலமோ' என்று, தம்பக்கல் பரிவுள்ள அன்பர்களை நோக்கிக் கூறுதல், இதற்கு உள்ளுறை பொருள். அப்ரஸ்துதத்தில் 'முலை'என்றது, ஸ்வாபதேசத்தில் பக்தியாம். மகளிருறுப்பாய்ச்சிறக்கின்ற இது,அடியார்க்கு இலக்கணமாய்ச் சிறக்கின்ற அதனைக் குறிப்பிக்கும். தலைவனைச்சேர்ந்து அநுபவித்தற்கு உபகரணமாதல் இரண்டுக்கும் உண்டு. 'தடமுலை' என்றது, பக்குவமாய் முதிர்ந்த பக்தியென்றவாறு: பரமபக்தியென்க. ஸ்வாபதேசத்தில், துழாய் - இனிமை. விஸ்தாரம் ஆய்ந்து உணர்க.

இது, யமகச்செய்யுள். (எஉ)

எங. தடவிகடத்தலைவேழமுன்னின்றன சாடுதைத்துப்
புடவிகடத்தலையீரேழளந்தன பூந்திருவோ
டடவிகடத்தலைவேட்டன வேங்கடத்தப்பன் புள்ளைக்
கடவி கடத்தலைநெய்யுண்டமாதவன் கான்மலரே.

(இ - ள்.) புள்ளை கடவி - (கருடப்)பறவையை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்துபவனும், கடத்தலை - குடத்தில்வைத்திருந்த, நெய் - நெய்யை, உண்ட - அமுதுசெய்த, மாதவன் - மதுகுலத்துத் தோன்றியவனுமான, வேங்கடத்து அப்பன் - திருவேங்கடமுடையானுடைய, கால் மலர் - தாமரைமலர்போன்ற திருவடிகள்,— தட - பெரிய, விகடம் தலை - (கும்பஸ்தலங்களையுடைமையால் மேடுபள்ளங்கொண்டு) மாறுபாடுற்ற தலையையுடைய, வேழம் முன் - (கஜேந்திராழ்வானாகிய) யானையின்முன்னிலையில், நின்றன - சென்றுநின்றன; சாடு உதைத்து - சகடாசுரனை உதைத்துத் தள்ளி, தத்து அலை புடவிகள் ஈர் ஏழ் அளந்தன - பாய்ந்துவருகின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்த பூமி முதலிய உலகங்கள் பதினான்கையும் அளந்தன; பூ திருவோடு - தாமரைமலரில்வாழ்கின்ற திருமகளின் அவதாரமான சீதாபிராட்டியுடனே, அடவி கடத்தலை வேட்டன - வனத்தைக்கடப்பதை விரும்பி நடந்தன; (எ - று.)

இது, இந்நூலின் முதற்செய்யுள் போன்ற பாதவகுப்பு.

பூலோகத்தையளந்ததில் அதன்கீழுலகங்களேழும், மேலுலகத்தையளந்ததில் புவர்லோகம்முதலிய ஆறும் அடங்குதலால், 'புடவிகளீரேழளந்தன' என்றார். திருமால்இராமனுத்திருவவதரித்தபோது திருமகள் சீதையாகவும், அப்பெருமான் கண்ணனுத்திருவவதரித்தபோது அப்பிராட்டிருக்மிணியாகவும் அவதரித்தன ளென்று புராணங் கூறுதலால், 'பூந்திரு' என்றது - ஜாநகியைக் குறித்தது. தாய்தந்தையர்சொற் காத்தற்பொருட்டு வனவாசஞ்செய்தலேயன்றித் தண்டகாரணியங்கடந்து இராவணவதத்தின்பொருட்டு இலங்கைக்குச் செல்லவேண்டுமென்னும் உத்தேசமும் இராமபிரானுக்கு இருத்தலால், 'அடவிகடத்தலை வேட்டன' என்றார்; பெருமானது விருப்பத்தை அவனதுதிருவடியின்மேலேற்றிக் கூறினது, உபசாரவழக்கு.

சாடு - சகடமென்பதன் விகாரம். 'தத்துஅலை' என்பது - வினைத்தொகையன்மொழியாய், கடலின்மேல் நின்றது. கடவி, இ - கருத்தாப்பொருள்விகுதி: சங்கேந்தி, உலகாளி, குடமாடி என்ற பெயர்களிற் போல. கடம் - வடசொல்; தலை - ஏழனுருபு. (எங)

எச. கானகமுண்டதிற்போ மென்னினீங்கிக்கடும்பிணிகா
டேனகமுண்டகத்தாள்வேங்கடேசனைச்சென்றிரக்கும்
போனகமுண்டவெண்ணீற்றனயனொடும்பூமியொடும்
வானகமுண்டபெருமானையின்றென்மனமுண்டதே.

(இ - ள்.) சென்று இரக்கும் போனகம் - (பலவிடங்களிலுஞ்)சென்று யாசித்துப்பெறும் பிச்சையுணவைக் கொள்கிற, முண்டம் - (பிரம)கபாலத்தையேந்திய, வெள் நீற்றன் - வெண்ணிறமாகிய விபூதியைத் தரித்தவனான சிவனும், அயனொடும் - பிரமனும் ஆகிய இருமூர்த்திகளோடும், பூமியொடும் வானகம்-நிலவுலகத்தையும் மேலுலகங்களையும் (ஆகியஅனைத்தையும்), உண்ட - (பிரளயகாலத்தில்) உட்கொண்டருளிய, பெருமானை - பெருமையையுடையவனை, தேன் அகம் முண்டகம் தாள் வேங்கட ஈசனை-தேனைத் தனதுஅகத்தேயுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளையுடைய திருவேங்கடமுடையானை, இன்று - இப்பொழுது, என் மனம் உண்டது - எனது மனம் உட்கொண்டது: (ஆதலால்), கடும் பிணிகாள் - கொடியநோய்களே! (நீங்கள்), என்னின் நீங்கி - என்னைவிட்டு நீங்கி, கானகம் உண்டு அதில் போம் - காடு உளது அதிற் செல்லுங்கள்; (எ - று.)

இச்செய்யுள், கீழ் கூ-ஆஞ்செய்யுள்போலவே வியாதிகளை முன்னிலைப்படுத்திக்கூறியது. இதனை, "ஓங்காரவட்டத்து மாசுணப்பாயி லுலோகமுண்ட, பூங்கார் விழிக்குப் புலப்பட்டதா லெப்பொழுது மென்னை, நீங்காதிடர்செயுந்தீவினைகா ளினிநின்று நின்று, தேங்காது நீரு மக்கானிடத்தே சென்றுசேர்மின்களே" என்ற திருவரங்கத்துமாலைச்செய்யுளோடு ஒப்பிடுக. எம்பெருமான் எல்லாநோய்க்கும் மருந்தாவ னென்பது போதரும். 'நீற்றனயனொடும் பூமியொடும் வானகமுண்ட பெருமானை மனமுண்டது' என்றவிடத்துச் சிறியஆதாரத்திற் பெரிய ஆதேயம் அடங்கியதாகச் சொன்னது,

பெருமையணியின்பாற்படும்; "சூழ்ந்ததனிற்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ, .....சூழ்ந்ததனிற்பெரியவென்னவா" என்பது நம்மாழ்வார் பாசுரம். 'கானகமுண்டதிற்போம்' என்ற முன்வாக்கியத்தை 'பெருமானையென் மனமுண்டது' என்றபின்வாக்கியம் சாதித்துநிற்பது, தொடர்நிலைச்செய்யுட்குறியணி. நீங்கி அதிற்போம் என்றவிடத்து, 'கானகமுண்டு' என்ற வாக்கியம் இடைப்பிறவரலாய் நின்றது. அகம் - உள்ளிடம். (எச)

எரு. மனந்தலைவாக்குறவெண்ணிவணங்கிவழுத்துந்தொண்ட
ரினந்தலைப்பெய்தன னீதன்றியேயிமையோருமெங்க
டனந்தலைவாவெனும்வேங்கடவாண தடங்கடலு
ளனந்தலைநாகணையா யறியேனன்புஞானமுமே.

(இ - ள்.) இமையோரும் - தேவர்களும், 'எங்கள் தனம் - எங்கட்குச் செல்வம்போன்றவனே! (எங்கள்) தலைவா - எங்கள்தலைவனே!' எனும் - என்று துதிக்கப்பெற்ற, வேங்கட வாண - திருவேங்கடமுடையானே! தட கடலுள் - பெரிய (திருப்பாற்)கடலில், நனந் தலை நாக அணையாய் - பரந்த இடமுள்ள ஆதிசேஷனாகிய சயனத்தை யுடையவனே!—மனம் தலை வாக்கு - மனமும் தலையும் வாக்கும் ஆகிய திரிகரணங்களாலும், உற - தகுதியாக, (முறையே), எண்ணி வணங்கி வழுத்தும் - (உன்னைத்) தியானித்து நமஸ்கரித்துத் துதிக்கின்ற, தொண்டர் - (உனது) அடியார்களுடைய, இனம் - கூட்டத்தோடு, தலைப்பெய்தனன் - சேர்ந்தேன்; ஈது அன்றியே - இதுவேயல்லாமல், அன்பும் ஞானமும் அறியேன் - ஞானபக்திகளின் தன்மையை (அடியேன்) அறிகிறேனில்லை; (எ - று.)

அன்புஞானங்களை அறியேனாயினும், அவற்றையறிந்து திரிகரணத்தாலும் நின்னைவழிபடுகிற மெய்யடியார்களோடு சேர்ந்தேனாதலால், அச்சம்பந்தத்தையே வியாஜமாகக்கொண்டு என்னைக் காத்தருளவேண்டு மென்பதாம். முதலடியில் மனத்தினால் எண்ணி, தலையினால் வணங்கி, வாக்கினால் வழுத்தும் என முறையே சென்று இயைதல், முறைநிரனிறைப்பொருள்கோள். உற - மனம்முதலியவற்றைப்பெற்றதன்பயன்சித்திக்க என்றபடி. தலைப்பெய்தல் - ஒருசொல்; இதில், தலைஎன்பது - தமிழுபசர்க்கம்: பெயர்க்கும்வினைக்கும் முன் அடையாய்நின்று பொருள்தராதும் அப்பெயர்வினைப்பொருளை வேறுபடுத்தியும் வரும் இடைச்சொல் வடமொழியில் உபசர்க்கமெனப்படும்; கைகூடல், தலைப்பிரிதல், கண்தீர்தல், மேற்கொள்ளல், பரிமாறல், பாதுகாத்தல் என்றவற்றில்—கை, தலை, கண், மேல், பரி, பாது என்பன - தமிழுபசர்க்கமாம். ஈது - சுட்டுநீண்டது. ஈதன்றியே, ஏ - பிரிநிலை.

இமையோர் - கண்இமையாதவர்; எதிர்மறை வினையாலணையும்பெயர்: எதிர்மறைஆகாரம் புணர்ந்துகெட்டது. விகுதிமுதல்ஆகாரம் ஓகாரமாயிற்று. இமையோர் - ஞானசங்கோசமில்லாத நித்தியசூரிகளுமாம். உம் - உயர்வுசிறப்பு. அதனால், பிறர்துதித்தல் தானே பெறப்படும். தனம் - அண்மைவிளியாதலின், இயல்பு. ஆபத்துக்காலத்தில் உதவுதல்பற்றியும், விருப்

பத்துக்கிடமாதல்பற்றியும், 'எங்கள்தனம்' என்றார். "கறங்காழி நாலெட்டிலக்கமியோசனை கட்செவியின், பிறங்காக மும்மையிலக்க மியோசனை பேருலகு, லிறங்காழிமேகமெனவேயாக்கத்திலெந்தையகி, லுறங்காகமீளமைந்தைம்பதினாயிரமோசனையே" என்பது நூல்துணிபாதலால், 'நடங்கடலுள் நன்நீதலைநாகணையாய்' என்றார். ஆசிரியர் நச்சினார்க்கினியர் பத்துப் பாட்டுள் முல்லைப்பாட்டில் "நனந்தலை யுலகம்" என்றதற்கு 'அகலத்தை இடத்தேயுடைய உலகம்' என்றும், மதுரைக்காஞ்சியில் "நாளங்காடிநனந் தலை" என்றதற்கு 'அகற்சியையுடைத்தாகிய இடத்தினையுடைய நாட்காலத்துக்கடை' என்றும் உரைத்தமை உணர்க. தொல்காப்பியத்து "நனவே களனும் அகலமுஞ் செய்யும்" என்ற உரிச்சொல்லியற்சூத்திரத்தால், நன வென்னும் உரிச்சொல் அகலமென்னும் பொருளை யுணர்த்துதல் காண்க. நாகவணைஎன்பது நாகணை யெனத் தொகுத்தல்விகாரப்பட்டது;"நஞ்சுபதி கொண்ட வளநாகணை" எனச் சீவகசிந்தாமணியிலும், "நச்சுநாகணைக் கிடந்த நாதன்" எனத் திருச்சந்தவிருத்தத்திலும், "நாராயணனே மணிவண்ணா நாகணையாய்" எனச் சிறியதிருமடலிலுங் காண்க. காரியகாரண முறைபற்றி, 'அன்புஞானமும்' என்றார். மனோ வாக் காய மென்ற முறை பிறழக்கூறினார், செய்யுளாதலின்: யமகநயத்தின்பொருட்டென்க. மெய் யென்னுமிடத்துத் தலையைக் கூறினது, உத்தம அங்கமாதலின். (எரு)

எகூ. ஞானக்கண்டாகனவொக்கும்பவந்துடைநஞ்சிருக்குந்
தானக்கண்டாகனற்சோதியென்றேத்துவன்றாலமுடன்
வானக்கண்டாகனவண்ணாவென்றோதொலிவந்தடையா
வீனக்கண்டாகனற்கீந்தான்பரகதியென்னப்பனே.

(இ - ள்.) 'நஞ்சு இருக்கும் - விஷம் தங்குகின்ற, தானம் - இடமாகிய, கண்டா - கழுத்தையுடையவனே ! கனல் சோதி - அனற்பிழம்பின் வடிவமானவனே! ஞானம் கண் தா - (எனக்கு) ஞானமாகிய கண்ணைக் கொடு ; கனவு ஒக்கும் பவம் துடை - கனாத்தோற்றத்துக்குஒப்பான பிறப்பை (எனக்கு) ஒழித்தருள்வாய்,' என்று - என்றுசொல்லி, ஏத்து - (சிவபிரானைத்) துதிக்கிற, வல் தாலமுடன் - வலிய நாவினுடன் (கூடி), வானக்கண் தா கனம் வண்ணா என்று ஓது ஒலி வந்து அடையா-'வானத்தில்தாவிச்செல்லுகிற மேகம்போன்ற நிறத்தையுடையவனே!' என்று (திருமாலைத்) துதித்துச்சொல்லும் ஓசை தன் (செவிகளில்) வந்துநுழையப்பெறாத, ஈனம் கண்டாகனற்கு - இழிவையுடைய கண்டாகர்ணனென்னும் பூதகணநாதனுக்கும், என் அப்பன் - எனதுதலைவனான திருவேங்கடமுடையான், பரகதி ஈந்தான் - பரமபதத்தைத் தந்தருளினன் ; (எ - று.)

தாலமுடன் அடையா என்று இயையும்."எந்தைவானவர்க்கும்,வணங்கரியா னன்றிக் காப்பாரில்லாமை விண்மண்ணறியும், வணங் கரியானவர் வாணன் கண்டாகனன் மார்க்கண்டனே" என்றபடி ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருளென்று சாதித்தற்குச் சாக்ஷியாகிற திவ்யசரித்திரங்களுள் முதலிற் சிவபக்தியோடு விஷ்ணுத்வேஷமும் மேலிட்டிருந்த கண்டாகர்

ணன் பின்பு சிவனால் முத்திபெறமாட்டாது கண்ணபிரானாற் பெற்றனனென்ற வரலாறு சிறத்தலால், அதனை இங்கு எடுத்துக்காட்டினர். 'திருமாலினிடத்து இத்துணைக்காலமாக மனப்பதிவில்லாது பெரும்பாதகராய் மாறுபாடுகொண்டிருந்த நாம் இப்பொழுது அப்பிரானைச் சரண்புக்கால் அவன் காப்பனோ? காவானோ?' என்று ஐயுறுவாரது சந்தேகத்தைப் போக்கக் கூறியதாக இச்செய்யுட்குச் சங்கதி காணலாம். ("பாதகக்கண்டாகன்னனெனுமியக்கன் பத்தியற்றுன்பெரும்புகழைக்கேளோமென்று, காதிரண்டிற் சத்தமிகு மணியைக் கட்டிக் கணப்பொழுதுமோயாமலசைத்திருக்கத், தீதாகினேந்தானென்றுன் மனத்தெண்ணமற் சிந்தையினான் மறவாமல் தியானித்தானென்று, எதமற வவனுக்குமவன்தம்பிக்கு மிரங்கி முத்தியளித்தனையே யெம்பிரானே" என்றார் பின்னோரும்.)

தத்துவப்பொருள்களை உள்ளபடிகாணுதற்குக் கருவியாதலால், ஞானம் 'கண்' எனப்பட்டது. காண்பது கண் எனக் காரணக்குறி. 'கனவொக்கும் பவம்' என்றது, சொப்பனத்திலேகாணப்பட்ட பொருள்போலப் பிரபஞ்சவாழ்க்கை சிறிதும்நிலைபேறின்றி அழியுந்தன்மையதாதலால்; "கண்டகனவின் பொருள்போல யாவும்பொய்" என்பது திருவரங்கத்தந்தாதி. பிறப்பையொழித்தருளுதலாவது - இனிப் பிறவியில்லாதபடி மீளாவுலகமாகிய முத்தியை யளித்தல்.

திருப்பாற்கடல்கடைகையில் அதனினின்றுஎழுந்ததோர் அதிபயங்கரமான பெருவிஷத்தைக் கண்டமாத்திரத்தில் அதன்கொடுமையைப் பொறுக்கமாட்டாமல் அஞ்சியோடிச் சரணமடைந்த தேவர்களின் வேண்டுகோளினால் அவ்விஷத்தைச் சிவபிரான் அமுதுசெய்து கண்டத்தில் நிறுத்தி அனைவரையும் பாதுகாத்தருளினனென்றும், தாம்தாம் கடவுளென்னுங் கருத்துக்கொண்டு ஒருவர்க்கொருவர் பகைமைபூண்டு போர்தொடங்கிய பிரமவிஷ்ணுக்களின் மாறுபாட்டை யொழித்தற்பொருட்டுப் பரமசிவன் அவ்விருவர்க்குநடுவில்ஒருபெரியசோதிமலைவடிவமாய்த் தோன்றிநின்றனனென்றும் சைவபுராணங்களிற் கூறப்படுகிற வரலாறுகளை யுட்கொண்டு சைவர்கள் சிவனைத் துதிக்கிற மரபின்படி மகாசைவனாயிருந்த கண்டாகர்ணன் 'நஞ்சிருக்குந்தானக்கண்டா, கனற்சோதி' என்று எத்தினனென்றார். 'கனச்சோதி' என்ற பாடமும்-திரண்டசோதிவடிவானவனே யெனப் பொருள்படும். 'விஷகண்டா! தழல்வண்ணா!' என்று கடுஞ்சொற்களால் துதிப்பவன் 'முகில்வண்ணா!' என்ற செவிக்கினியசொல்லைக் கேட்கவும் மாட்டாதவனாயினனெனக் கண்டாகர்ணனது இழிவை விளக்கியவாறு; இங்கு "காணிலும்முருப்பொலார்செவிக்கினாதகீர்த்தியார், பேணிலும்வரந்தரமிடுக்கிலாததேவரை, யாணமென்றடைந்துவாழுமாதர்காளெம்மாதிபாற், பேணிநும்பிறப்பெனும்பிணக்கறுக்ககிற்றிரே" என்ற திருச்சந்தவிருத்தம் கருதத்தக்கது.

தாடையைக்குறிக்கிற 'தாலு' என்ற வடசொல், தமிழில் நாவென்ற பொருளில் வருதலை "தமிழிலே தாலை நாட்டி" எனக் கம்பராமாயணச்சிறப்புப்பாயிரத்திலுங் காண்க. தாலம், அம்-சாரியை. தாகனம்-வினைத்தொகை;

கீழ் கக-ஆஞ்செய்யுளின் ஈற்றடியில் "தாமரை" என்றது போல. 'வானக் கண்தா' என்றது, மேகத்துக்கு அடைமொழி; மேகவண்ணனுக்கு அடைமொழியாகக் கொண்டால், உலகளந்தவரலாற்றைக் குறிக்கும். (எசு)

எஎ. என்னப்பனாகத்துப்பொன்னூலன் வேங்கடத்தெந்தை துயின்
மன்னப்பனாகத்துக்கஞ்சலென்றான் பன்மணிசிதறி
மின்னப்பனாகத்துப்பாய்ந்தான் கதையன்றி வெவ்வினைகள்
துன்னப்பனாகத்துப்பொய்ந்நூல்புகா வென்றுளைச்செவிக்கே.

(இ - ள்.) என் அப்பன் - எனது ஸ்வாமியும், ஆகத்து பொன் நூலன் - திருமார்பிலே பொன்னினாலாகிய பூணூலைத் தரித்தவனும், துயில் மன் அப்பன் - சயனித்துத் துயில்பொருந்துதற்கிடமாகிற கடலையுடையவனும், நாகத்துக்கு அஞ்சல் என்றான் - ('ஆதிமூலமே' என்ற) யானைக்கு 'அஞ்சாதே' என்று சொல்லி அபயமளித்து(அதனை)ப் பாதுகாத்தவனும், பல் மணி சிதறி மின்ன-(பலமுடிகளிலுமுள்ள)பலமாணிக்கங்கள் தெறித்து மின்னல்போல விளங்கும்படி, பல் நாகத்து பாய்ந்தான் - பற்களையுடைய (காளியனென்னும்) பாம்பின்மீது வலியப்பாய்ந்திட்டவனுமான, வேங்கடத்து எந்தை - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானுடைய, கதை அன்றி - திவ்வியசரித்திரங்கள் என்காதுகளிற் செல்லுமேயல்லாமல்,—வெவ் வினைகள் துன்ன - கொடிய தீவினைகள் நெருங்க, பல் நா கத்து - (பரசமயத்தாரது) பலநாக்குக்கள் கத்துதலையுடைய, பொய் நூல் - பொய்யான சமயநூல்களின் பொருள்கள், என் துளை செவிக்கு புகா - எனது செவித்தொளைகளில் நுழையா; (எ - று.)

"மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்றபடி தேவதாந்தரங்களிடத்தில் தமக்குஉள்ள உபேக்ஷையையும், பரதேவதையினிடத்தில் தமக்குஉள்ள அபேக்ஷையையும் இங்ஙனங் கூறி வெளியிட்டார்.

'ஆகத்துப் பொன்நூலன்' என்பது - திருமார்பிலே பொன்னையும் [திருமகளையும்] பூணூலையும் உடையவனென்றும் பொருள்படும். உபவீதத்தைப்போலவே பெரியபிராட்டியையும் எப்பொழுதும் நீங்காது தரிப்பவனென்க. துயில் மன் அப்பன் - அப்பில் துயில்மன்னுபவன்; அப்பு - ஜலம்; இங்கு, பிரளயப்பெருங்கடல்; அப் - வடசொல். நாகத்தின் விஷப்பற்கள், காளி காளாத்திரி யமன் யமதூதி எனப் பெயர்பெறும்.

கத்து - முதனிலைத்தொழிற்பெயர்: இரண்டாம்வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்கதொகை; கத்துகிற என வினைத்தொகையாகக் கொண்டால், கத்துப்பொய்ந்நூல் என வருமொழிமுதல்வலிமிகாது. துளைச்செவிக்கு - உருபுமயக்கம். "கேட்பினுங் கேளாத்தகையவே கேள்வியாற், றோட்கப்படாத செவி" என்றபடி நூற்கேள்வியில்லாதசெவி செவிட்டுச்செவியாதலால், அங்ஙனமன்றிப் பெரியோரிடத்து நுண்ணியபொருளைக் கேட்ட செவி யென்பார், 'துளைச்செவி' என்றார். (எஎ)

[நாரைவிடுதூது.]

எ௫. செவித்தலைவன்னியிற்சூடுண்டவேயிசைதீப்பதும் யான்
றவித்தலைவன்மயலுந் தமர்காப்புந் தமிழ்க்கலியன்
கவித்தலைவன் றிருவேங்கடத்தான்முன்கழறுமின் பொன்
குவித்தலைவந்துந்துகோனேரிவாழுங்குருகினமே.

(இ - ள்.) அலை - அலைகள், பொன் குவித்து வந்து உந்து-பொன்னைக் கொழித்துக்கொண்டுவந்து (கரைகளில்) மோதப்பெற்ற, கோனேரி - கோனேரியில், வாழும்-வாழ்கிற,குருகு இனமே - நாரைகளின்கூட்டங்களே!— வன்னியின் சூடுண்ட வேய் இசை - நெருப்பிற் சுடப்பட்ட மூங்கிலினாலாகிற புள்ளாங்குழலின் இசைப்பாட்டு, செவித்தலை தீப்பதும் - (எனது) காதுகளினிடத்தைச் சுடுவதையும், யான் தவித்து அலை வல் மயலும் - யான் விரகதாபங்கொண்டு வருந்துகிற வலிய (எனது) மோகத்தையும், தமர் காப்பும் (பாங்கியர் செவிலியர் முதலிய) உற்றார் (சைத்யோபசாரஞ்செய்து என்னைப்) பாதுகாக்கும் வகையையும், தமிழ் கலியன் கவி தலைவன் திரு வேங்கடத்தான் முன் கழறுமின் - தமிழ்ப்பாஷையில்தேர்ந்த திருமங்கையாழ்வார் பாடிய பாட்டுக்களுக்குத் தலைவனான திருவேங்கடமுடையானது முன்னிலையிற் (சென்று) சொல்லுங்கள் ; (எ - று.)

தலைவனைப்பிரிந்த தலைவி அப்பிரிவாற்றாது வருந்தும்போது, அங்ஙனம் இரங்குமிடம் நெய்தல்நில மாதலால், திருவேங்கடமலையின் மீதுள்ள கோனேரியெனப்படுகிற ஸ்வாமிபுஷ்கரிணியில் வாழ்கிற குருகென்னும் நீர் வாழ்பறவைகள் அந்நெய்தனிலத்துக்கழிக்கரையில் இரைதேடுதற்குவர அவற்றைநோக்கி'எனதுநிலைமைகளை எனதுதலைவனான திருவேங்கடமுடையான் பக்கல் சொல்லுதற்கு நீங்கள் எனக்குத் தூதாகவேண்டும்' என வேண்டுகிறாள்.

கூடினநிலையில் இன்பஞ்செய்யும் பொருள்கள்யாவும் பிரிந்தநிலையில் துன்பஞ்செய்தல் இயல்பாதலால், வேய்ங்குழலின் இனியசங்கீதம் தன் செவிகளைச் சுடுகிற தென்றாள். இடையர் மாலைப்பொழுதிற் பசுக்களை ஊர்க்கு ஓட்டிவரும்போது ஊதுகிற வேய்ங்குழலின்இசை அம்மாலைப்பொழுதுக்குச்சூசகமாய்க் காமோத்தீபகமாகிப் பிரிந்தாரைவருத்து மென்பதை உணர்க; "தீங்குழலீருமாலோ" என்பது நம்மாழ்வார்பாசுரம். 'வன்னியிற் சூடுண்ட' என்றது, வேய்க்கு அடைமொழி; பதப்படுதற்காக மூங்கிலை நெருப்பிற்காய்ச்சுதல் இயல்பு. வேயிசைக்கு அடைமொழியாக்கொண்டு, நெருப்புப்போலச்சுடுதல்கொண்ட வேய்ங்குழலிசை யெனினுமாம். மயல்-ஆசைநோயாலாகிய மயக்கம். தோழியர்முதலியோர் செய்யுஞ் சீதோபசாரங்கள் விரகதாபத்தைத் தணிக்கமாட்டாமையையு முட்படச் சொல்லுங்க ளென்பாள், 'தமர்காப்புங் கழறுமின்' என்றாள். கோனேரி - கோன்ஏரி; ஸ்வாமி புஷ்கரிணி: திருவேங்கடமலையின்மேல் திருக்கோயிலுக்கு அருகிலுள்ள பிரதானமான திவ்யதீர்த்தம் இது. திருவேங்கடமுடையானுக்கு அருகில் வாழ்கின்றன வாதலால் அவன்சந்நிதியிற் சொல்லுதற்கு உரியனவா மென்று உட்கொண்டு, 'திருவேங்கடத்தான்முன் கழறுமின் கோனேரிவாழுங்

குருகினமே' என்றாள். 'கோனேரிவாழுங் குருகினமே'என விளித்ததனால், அப்பறவைகள்போலத் தானும் திருவேங்கடமுடையான்கருணைக்கு இலக்காகி அவனருகிலே கோனேரிதீரத்தில் வாழ்தலை வேண்டினளாம்.

ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமான் மறைந்தவளவிலே, அவனது நிரந்தராநுபவத்தைப் பெறவிரும்பிய ஐயங்கார் தமது நிலைமையை அப்பெருமான்சந்நிதியில் விண்ணப்பஞ்செய்யும்படி ஆசாரியர்களைப் பிரார்த்தித்தல், இதற்கு உள்ளுறைபொருள். வெண்ணிறமுடையனவாய் இரண்டுஇறகுகளுடன்கூடி எங்குங் கவலையற்றுத்திரிந்து தம்மையேயன்றித் தமதுபரிவாரத்தையும் பாதுகாப்பனவாய்க் கருமமேகண்ணாயிருந்து உத்தேசித்தகாரியத்தைச் சமயம்வாய்க்கும்போது தவறாதுசெய்துமுடித்துக்கொள்வனவான நாரைகளை, சுத்தசத்துவகுணமுடைமையால் உள்ளும்புறமுமொக்க நிர்மலஸ்வபாவராய் ஞானம் ஒழுக்கம் என்ற இரண்டுசாதனங்களுடன்கூடித் திவ்வியதேசங்களிலெல்லாம்கவலையற்றுயாத்திரைசெய்பவராய்த் தம்மையேயன்றித் தம்மையடுத்தவர்களையும் பாதுகாப்பவராய்க் காரியமேகருத்தாயிருந்து அதனை உரியகாலத்தில் தவறாதுசெய்துமுடிக்கவல்ல ஆசாரிய ரென்னத்தகும். 'செவித்தலை வன்னியிற்குண்டவையிசைதீப்பது' என்றது, பிரபத்திமார்க்கத்தில்நிற்கிற தமக்குப் பிரபஞ்சவிஷயங்கள் வெறுப்பைவிளைத்தலைக் கூறியவாறாம். 'யான்தவித்தலை வன்மயல்' என்றது, தாம் அடைந்திருக்கிற மோகாந்தகாரத்தை உணர்த்தும். 'தமர்காப்பு'என்றது, பரிவுடையாரும் ஞானிகளுமான அன்பர்கள் தம்மை ஆதரித்தலை. கோனேரிவாழுங் குருகினம்'— எம்பெருமானது திருக்கலியாணகுணங்களில்மூழ்கி ஆனந்தமடைகிற ஆசாரிய ரென்றபடி. பாகவதர்கள் ஸ்வாமிபுஷ்கரிணியில் நீராட்டஞ்செய்து களிப்பவராதலாலும், அவர்களை 'கோனேரிவாழுங் குருகினம்' என்னலாம். இதனால், திருமலைவாஸத்தில் ஐயங்கார்க்குஉள்ள அபேக்ஷை குறிப்பிக்கப்பட்டதாம்; பெருமாள்திருமொழியில்''வேங்கடத்துக்,கோனேரிவாழுங் குருகாய்ப் பிறப்பேனே'' என்றதும், அதன் வியாக்கியானத்தில் 'வர்த்திக்குமென்கிறவிடத்துக்கு வேறேவாசகசப்தங்கள் உண்டாயிருக்கச்செய்தே 'வாழும்' என்கிற சப்தத்தை இட்டபடியாலே,அங்குத்தைவாஸந்தானே போகரூபமாயிருக்கு மென்கை' என்றதும் அறியத்தக்கவை. விரிப்பிற் பெருகும்.

திருவேங்கடமுடையான் திருமங்கையாழ்வாரது பாடல்பெற்றவனாதலால், 'கலியன்கவித்தலைவன்' என்றார். நான்குவேதங்கட்கு ஆறுஅங்கங்கள்போல, நம்மாழ்வார் அருளிச்செய்த நான்குபிரபந்தங்கட்கு ஆறுஅங்கங்களாகத் திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல்,பெரியதிருமடல் என்ற ஆறுதிவ்வியப்பிரபந்தங்களுள்திருக்குடந்தையின்விஷயமான திருவெழுகூற்றிருக்கையொன்றி லன்றி மற்றைஐந்திலும் திருவேங்கடமுடையான் பாடப்பட்டுள்ளதனால், 'கலியன்கவித்தலைவன்திருவேங்கடத்தான்' என்றல் தகும். ''என்னவிலின்கவி யானொருவர்க்குங்கொடுக்கிலேன், தென்னதெனவென்று வண்டுமுரல் திருவேங்கட

த்து, என்னுனையென்னப்ப னெம்பெருமானுளனுகவே" என நம்மாழ்வார் தமது திவ்யப்பிரபந்தங்களின் தலைவன் திருவேங்கடமுடையானே யென அறுதியிட்டுள்ளதனுல், அவற்றின் அங்கங்களான கலியனது திவ்வியப்பிரபந்தங்கட்கும் திருவேங்கடமுடையானே தலைவனென்னலா மென்பர் ஒருசாரார். கலியன் - மிடுக்குடையவன். சோழமண்டலத்தில் திருமங்கையென்னும்நாட்டிற் சோழராசனுக்குச் சேனைத்தலைமைபூணும் பரம்பரையில்தோன்றி நீலனென்னும்பெயருடையராய்ப் படைக்கலத்தேர்ச்சிபெற்று அவ்வரசனுக்குச் சேனுபதியாகிப் பகைவென்று அம்மன்னன்கட்டளைப்படி மங்கைநாட்டுக்கு அரசராகிய இவர் குமுதவல்லியென்னுங் கட்டழகியை மணஞ்செய்துகொள்ளுதற்பொருட்டு அவள்சொற்படி நாள்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெயவித்துவருகையில், கைப்பொருள் முழுதும் செலவாய்விட்டதனுல், வழிபறித்தாகிலும் பொருள்தேடிப் பாகவத ததீயாராதநத்தைத் தடையறநடத்தத்துணிந்து வழிச்செல்வோரைக் கொள்ளையடித்து வரும்போது, ஸ்ரீமந்நாராயணன் இவரை ஆட்கொள்ளக்கருதித் தாம் ஒருபிராமணவேடங்கொண்டு பல அணிகலங்களைப் பூண்டு மணவாளக்கோலமாய் மனைவியுடனே இவரெதிரில் எழுந்தருள, இவர் கண்டு களித்து ஆயுதபாணியாய்ப் பரிவாரத்துடன்சென்று அவர்களைவளைந்து வஸ்திராபரணங்களையெல்லாம் அபகரிக்கையில், அம்மணமகன் காலிலணிந்துள்ள மோதிரமொன்றைக் கழற்றமுடியாமையால் அதனையும் விடாமற் பற்களாலே கடித்துவாங்க அம்மிடுக்கை நோக்கி எம்பெருமான் இவர்க்கு 'கலியன்' என்று பெயர்கூறினுன். பின் இவர் பறித்தபொருள்களையெல்லாம் சுமையாகக்கட்டிவைத்து எடுக்கத்தொடங்குகையில், அப்பொருட்குவை இடம்விட்டுப்பெயராதிருக்க, கண்டு அதிசயித்து அவ்வந்தணனை நோக்கி 'நீ என்னமந்திரவாதம்பண்ணினுய்? சொல்' என்று விடாதுதொடர்ந்து நெருக்க, அப்பொழுது அந்தஅழகியமணவாளன் 'அம்மந்திரத்தை உமக்குச்சொல்லுகிறேம் வாரும்' என்று இவரை அருகில்அழைத்து அஷ்டாக்ஷரமகாமந்திரத்தை இவர்செவியில் உபதேசித்தருளி உடனே கருடாரூடனுய்த் திருமகளோடு இவர்முன் சேவைசாதிக்க, அத்திருவுருவத்தைத் தரிசித்ததனுலும், முன்பு காலாழிவாங்கியபொழுது பகவானுடைய திருவடியில் வாய்வைத்ததனுலும், இவர் அஜ்ஞாநம் ஒழிந்து தத்துவஞானம்பெற்றுக் கவிபாடவல்லராகிச் சிறந்த ஆறுபிரபந்தங்களைப் பாடினர். இவர் 'நாலுகவிப்பெருமாள்' என்ற பிருது பெறும்படி தமிழ்வல்லராதலால், 'தமிழ்க்கலியன்' எனப்பட்டனர். கலியனது தமிழ்க்கவி யென்று இயைப்பினுமாம். (௭௮)

௭௯. குருகூரரங்கமறைத்தமிழ்மாலைகுலாவுந்தெய்வ
முருகூரரங்கர் வடவேங்கடவர் முன்னுளிலங்கை
வருகூரரங்கந்துணித்தார் சரணங்கள்வல்வினைகட்
கிருகூரரங்கள்கண்டீ ருயிர்காள் சென்றிரவுமினே.

(இ - ள்.) உயிர்காள் - பிராணிகளே!—அங்கம் - (திருமங்கையாழ்வார் அருளிச்செய்த ஆறுபிரபந்தங்களாகிய ஆறு) அங்கங்களையுடைய, குருகூரர் மறை தமிழ் மாலை - நம்மாழ்வார்அருளிச்செய்த நான்குதமிழ்வேதமாகிய

பாமாலைகளில், குலாவும் - பொருந்திய, தெய்வம் முருகு - தெய்வத்தன்மையுள்ள நறுமணம், ஊர் - வீசப்பெற்ற, அரங்கர் - ஸ்ரீரங்கநாதரும், முன் நாள் இலங்கை வரு கூரர் அங்கம் துணித்தார் - முற்காலத்திலே இலங்காபுரியில் வந்துசேர்ந்த கொடியவர்களான இராக்கதர்களுடைய உடம்புகளைச் சேதித்தவருமான, வடவேங்கடவர் - வடதிருவேங்கடமுடையானது, சரணங்கள் - திருவடிகள், வல் வினைகட்கு இரு கூர் அரங்கள் கண்டீர் - வலியஇருவினைகளையும் அறுத்தற்கு இரண்டு கூரிய வாள்விசேடங்களாம்; சென்று இரவுமின் - (எம்பெருமான்பக்கல்)சென்று (உங்கள்வினைகளை அறுக்குமாறு அத்திருவடிகளைப்) பிரார்த்தியுங்கள்; (எ-று)—கண்டீர் - தேற்றம்.

நம்மாழ்வாரது பாடல்களைப் பெற்றவ வென்பது, முதல்விசேடணத்தினால் தேர்ந்த பொருள். பிரபந்தங்களை 'தமிழ்மாலை' என்றதற்கு ஏற்ப, அவற்றின்சம்பந்தம்பெற்றுவிளங்குதலை முருகூர்தலாகக் குறித்தார்: ஊர்தல் - பரத்தல். சிக்ஷை வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்ற ஆறுசாஸ்திரங்களும் நான்கு வேதங்கட்கு அங்கமாதல்போல, நம்மாழ்வாரது நான்குபிரபந்தங்கட்குத் திருமங்கையாழ்வாரது ஆறுபிரபந்தங்களும் அங்க மென்க. 'முன்னா ளிலங்கைவரு கூரரங்கந் துணித்தார்' என்றது- இராமாவதாரத்தில் இராவணன்முதலியராக்ஷசர்களை அழித்ததையேயன்றி, அதற்குமுன்பு இலங்கையில்வாழ்ந்த மாலிமுதலிய பூர்விகராக்ஷசர்களைத் திருமாலின்வடிவமான உபேந்திரமூர்த்தி அழித்திட்டதையுங் குறிக்கும். இருதிறத்தரக்கர்களும் இலங்கையிற்பிறந்தவரன்றி அங்குக்குடியேறினவராதலால், 'இலங்கைவரு கூரர்' எனப்பட்டனர். கூரர் - க்ரூரர் என்ற வடசொல்லின் விகாரம். அரம் - இரும்பு முதலிய வலியபொருள்களை அராவியழிக்குந்தன்மையுள்ள ஒருவகைவாள். இங்கு எம்பெருமான் திருவடிகள் கொடியகருமங்களையொழிப்பனவாதலால், 'வல்வினைகட்கு இருகூரரங்கள்' எனப்பட்டன; உருவகவிசேடம். சரண் நங்கள் என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம். (எகூ)

ரு0. இரணியநாட்டனிரணியனீரைந்தலையன்கஞ்சன்
முரணியகோட்டினகத்திற்சரத்தின்முன்றாளிற்றுஞ்சத்
தரணியிற்குத்தியிடந்தெய்துதைத்தவன் சர்ப்பவெற்ப
னரணியகேழலரிராகவன்கண்ணனுமாகிவந்தே.

(இ - ள்.) சர்ப்ப வெற்பன் - சேஷகிரியென்று ஒருபெயர்பெற்ற திருவேங்கடமலையி லெழுந்தருளியிருப்பவனான திருமால்,—அரணிய - அரண்போல அடுத்தவர்களைக் காக்குந்தன்மையுள்ள, கேழல் - வராகமூர்த்தியும், அரி - சிங்கப்பிரானும், ராகவன் - ஸ்ரீராமனும், கண்ணன் - கிருஷ்ணனும், ஆகி வந்து,—(முறையே),—இரணியநாட்டன் - ஹிரண்யாக்ஷனும், இரணியன் - ஹிரண்யனும், ஈரைந்தலையன் - பத்துத்தலைகளையுடையவனான இராவணனும், கஞ்சன் - கம்ஸனும்,—முரணிய-வலிமையுள்ள,கோட்டின் - கொம்பினாலும், நகத்தின் - நகங்களினாலும், சரத்தின் - அம்புகளாலும், முன் தாளின் - முந்திநீட்டிய காலினாலும், துஞ்ச - இறக்கும்படி,—

(அவர்களை), தரணியில் - பூமியிலே, குத்தி - குத்தியும், இடந்து - பிளந்தும், எய்து - தொடுத்தும், உதைத்தவன் - உதைத்தவனுவன்; (எ - று.)

சேழலாகிவந்து இரணியநாட்டன் துஞ்சக் கோட்டினூற்குத்தியவன், அரியாகிவந்து இரணியன் துஞ்ச நகத்தினூல்இடந்தவன், ராகவனுகிவந்து ஈரைந்தலையன் துஞ்சச் சரத்தினூல்எய்தவன், கண்ணனுகிவந்து கஞ்சன் துஞ்ச மூன்தாளினூல் உதைத்தவன் என நான்கடிகளிலும் முறையே இயைந்து பொருள்படுதலால், நிரனிறையணி.

ஹிரண்யாக்ஷன் என்ற பெயர் - பொன்னிறமான கண்களையுடையவனென்று பொருள்படுதலால், அதன் பரியாயநாமமாக 'இரணியநாட்டன்' என்றூர்; நாட்டம் - கண்: நாடுதற்கருவி. ராகவன்-சூரியகுலத்துப் பிரசித்தி பெற்ற ரகுவென்னும்அரசனது மரபில் தோன்றியவன்; தத்திதாந்தநாமம். ஆகிவந்து - இங்ஙனம் திருவவதரித்து என்றபடி. 'சரத்தின்'என்றவிடத்து, 'கரத்தின்' என்றும் பாடமுண்டு; அப்பொழுது, கரத்தின் - கைகளால், எய்து-அம்புதொடுத்து என்க. அரண்-கோட்டை, மதிள், காவல். அரண்ய என்ற வடசொல், அரணிய என்று விகாரப்பட்ட தெனக்கொண்டு, காட்டிலே (சஞ்சரிக்குந்தன்மையுள்ள) என்று உரைத்தலு மொன்று. சரண்ய என்ற வடசொல் அரணிய என்று விகாரப்பட்டுவந்த தெனக்கொண்டால், ரக்ஷகமான என்று பொருள்படும். (௮௦)

௮௧. வந்தித்திருக்குமறைபோற்றுவேங்கடவாண மல
ருந்தித்திருக்குங்குமமணிமார்ப வுள்வஞ்சனையும்
புந்தித்திருக்கும்வெகுளியுங்காமமும்பொய்யும்விட்டுச்
சிந்தித்திருக்குமதெக்காலம் யானுன்றிருவடியே.

(இ - ள்.) இருக்கு மறை - ருக்முதலிய வேதங்கள், வந்தித்து போற்று - வணங்கித் துதிக்கப்பெற்ற, வேங்கட வாண - திருவேங்கடமலையில் வாழ்பவனே! மலர் உந்தி திரு குங்குமம் அணி மார்ப - திருநாபித்தாமரைமலரையும் திருமகளோடு குங்குமச்சாந்தை யணிந்த திருமார்பையு முடையவனே!—யான்—, உள் வஞ்சனையும் - மனத்திலடங்கிய வஞ்சனைகளையும், புந்தி திருக்கும் - அறிவின் மாறுபாட்டையும்,வெகுளியும் - கோபத்தையும், காமமும் - சிற்றின்பவிருப்பத்தையும், பொய்யும் - பொய்யையும், விட்டு - ஒழித்து, உன் திரு அடி சிந்தித்திருக்குமது - உனது திருவடிகளைத் தியானித்திருப்பது, எ காலம் - எப்பொழுதோ? (எ - று.) (௮௧)

௮௨. திருவடிவைக்கப்புடவிபற்றுதண்டஞ்சென்னிமுட்டுங்
கருவடிவைக்கலந்தாற்று வெண்டிக்குங்கடன்மண்கொள்வான்
பொருவடிவைக்கனலாழிப்பிரான்புனலாழிகட்டப்
பெருவடிவைக்கண்டவப்பனெவ்வாறடிபேர்ப்பதுவே.

(இ - ள்.) பொரு - போர்செய்கின்ற, வடி - (பலவகைப்படைக்கலங்களில்) தேர்ந்தெடுத்த, வை - கூர்மையான, கனல் ஆழி - அக்கினியைச்

சொரிகிற சக்கராயுதத்தையுடைய, பிரான் - தலைவனும், ஆழி கட்ட - சமுத்திரத்தை அணைகட்டிக் கடப்பதற்காக, புனல் பெரு வடிவை கண்ட - (அக்கடலின்) நீர் மிக்கவற்றுதலை அடையும்படி செய்த, அப்பன்-ஸ்வாமியுமான திருவேங்கடமுடையான், (திரிவிக்கிரமாவதாரங்கொண்ட காலத்து), திரு அடி வைக்க புடவி பற்றுது -(அப்பெருமான் தனது) ஒரு திருவடியை வைப்பதற்கே பூமிமுழுவதும் இடம்போதா தாயிற்று; சென்னி அண்டம் முட்டும் - (அப்பெருமானது) திருமுடியோ அண்டகோளத்தின் மேன் முகட்டைத் தாக்கியது; எண் திக்கும் கரு வடிவை கலந்து ஆற்று - எட்டுத்திக்குக்களும் (அவனது) கருநிறமானதிருமேனி பொருந்துதற்கு இடம்போதாவாயின; (இங்ஙனம் பெருவடிவனான அத்திருமால்), கடல் மண் கொள்வான் - கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் (மூன்றடியிடம்) அளந்துகொள்வதற்காக, அடி பேர்ப்பது - திருவடிகளை எடுத்துவைப்பது, எ ஆறு - எப்படியோ?

அளத்தலாவது ஒருவன் நின்றவிடமொழிய மற்றோரிடத்தில் மாறிக்காலிடுத லாதலால், அங்ஙனம் அடிமாறியிடவொண்ணுதபடி நிலவுலகமுழுவதும் ஓரடிக்குள்ளே யடங்குமாறு பெருவடிவுடையவன் மூன்றடிநிலத்தை அளந்துகொள்ளுதற்கு இடம் ஏது? எனத் திரிவிக்கிரமாவதாரஞ்செய்த திருமாலினது வடிவத்தின்பெருமையை வியந்துகூறியவாறும்; பெருமையணி. திருமால் வஞ்சனையால் மாவலியை மூன்றடிநிலம்வேண்டி அதுகொடுக்கஅவன்இசைந்தவுடன் உலகங்களை அளந்துகொண்டன னென்று ஒரு சாரார்கூறும் ஆக்ஷேபத்துக்கு ஒருசமாதானம் இதில் தோன்றும்: சரீரம் இயல்பிலே வளருந்தன்மைய தாதலால், முந்தியவடிவையேகொண்டுஅளந்தில னென்று குறைகூறுதல் அடா தென்க. கலந்து=கலக்க : எச்சத்திரிபு. கொள்வான் - எச்சம். ஈற்றடியில், வடிவு - வடிதல்: தொழிற்பெயர். (அஉ)

அங. பேரானைக்கோட்டினைப்பேர்த்தானை வேங்கடம்பேணுந் துழாய்த், தாரானைப்போதனைத்தந்தானை யெந்தையைச் சாடிறப்பாய்ந், தூரானைமேய்த்துப்புள்ளூர்ந்தானைப் பஞ்சவர்க்குய்த்துநின்ற, தேரானை நான்மறைதேர்ந்தானைத் தேருநுந்தீதறுமே.

(இ - ள்.) பேர் - பெரிய, ஆனை - (குவலயாபீடமென்னும்) யானையினது, கோட்டினை - தந்தங்களை, பேர்த்தானை - பெயர்த்துஎடுத்தவனும்,— வேங்கடம் பேணும் - திருவேங்கடமலையை விரும்பித் தங்குமிடமாகக் கொண்ட, துழாய் தாரானை - திருத்துழாய்மாலையையுடையவனும்,—போதனை தந்தானை - பிரமனைப் படைத்தவனும்,—எந்தையை - எமது தலைவனும்,—சாடு இற பாய்ந்து - சகடாசுரன் முறியும்படி தாவியுதைத்து, ஊர் ஆனை மேய்த்து - ஊரிலுள்ள பசுக்களை மேய்த்து, புள் ஊர்ந்தானை - கருடப்பறவையை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்தியவனும்,—பஞ்சவர்க்கு - பஞ்சபாண்டவரில் ஒருவனான அருச்சுனனுக்கு, உய்த்து நின்ற - செலுத்திநின்ற, தேரானை - தேரையுடையவனும்,—நால் மறை தேர்ந்தானை - நான்குவேதங்களாலும் ஆராயப்பட்டவனுமான திருமாலை, தேரும் (முழு

முதற்கடவுளாக) அறிந்து தியானித்துத் துதியுங்கள்: (அங்ஙனஞ் செய்தால்), நும் தீது அறும் - உங்கள் துன்பங்களெல்லாம் நீங்கும்; (எ - று.)

ஊர் - இங்குத் திருவாய்ப்பாடி. பஞ்சவர்க்கு உய்த்துநின்ற தேரான் - அருச்சுனனுக்குச் சாரதியாய்நின்று தேரோட்டியவன். பஞ்சவர் - ஐவர்; இது, ஐந்துஎன்னும்பொருள்தரும் பஞ்ச என்ற வடமொழியெண்ணுப்பெயரடியாப் பிறந்த பெயர்: இங்கே, பாண்டவர்க்கு, தொகைக்குறிப்பு. இப்பொதுப்பெயர், சிறப்புப்பொருளின்மேலதாய், இங்கு அருச்சுனனைக் குறித்தது. 'தேறும்' என்பதும் பாடம்.

இச்செய்யுளின் அடிகளில், போரானை போர்த்தானை, தாரானை தந்தானை, ஊரானை ஊர்ந்தானை, தேரானை தேர்ந்தானை என்பவை எதிர்மறையும் உடன்பாடுமாய் ஒன்றுக்கொன்று மாறுபடுவதாக மேல்நோக்கில்தோன்றி, பொருளையுணருமிடத்து வேறுவகையாப்பொருள்பட்டு மாறுபாடின்றிமுடிதலால், முரண்விளைந்தழிவணி; வடநூலார் விரோதாபாஸாலங்காரமென்பர். இது, சொல்லால்வந்த முரண்தொடை; "சொல்லினும் பொருளினும் முரணுதல் முரணே" என்றது காண்க. அழகரந்தாதியின் அ௩ - ஆஞ் செய்யுளும் இத்தன்மையதாம்: அது வருமாறு:—"தொலைந்தானை யோதுந் தொலையானை யன்னை சொல்லான் மகுடங், கலைந்தானை ஞானக் கலையானை யாய்ச்சி கலைத்தொட்டிலோ, டலைந்தானைப் பாலினலையானை வாணன்கையற்றுவிழ, மலைந்தானைச் சோலைமலையானை வாழ்த்தென் மடநெஞ்சமே." "மாத்துளவத், தாரானை வேட்கையெலாந்தந்தானை மும்மதமும், வாரானையன்றழைக்க வந்தானைக்—காரான, மெய்யானை யன்பருக்கு மெய்த்தானைக் கண்கைகால். செய்யானை வேலையணைசெய்தானை—வையமெலாம், பெற்றானைக்காணப்பெறுதானைக் கன்மழைக்குக்,கற்றானைக்காத்ததொரு கல்லானை—யற்றார்க்கு, வாய்ந்தானைச் செம்பவளவாயானை மாமுடியப், பாய்ந்தானை யாடரவப்பாயானை" என்ற திருநறையூர் நம்பிமேகவிடுதூதினடிகளையுங் காண்க. (அ௩)

அ௪. அறுகூடுகங்கைதரித்தானயனழைத்தாலுமிச்சை
அறு கூடுமாலடியாரடிக்கே யப்பன்வேங்கடவன்
மறுகூடுமாதரெறிபூணெறிக்குமதிலரங்கன்
மறுகூடுநம்மைமருவாமல்வாழ்விப்பன் மாமனமே.

(இ - ள்.) மா மனமே - சிறந்த (எனது) மனமே!—அறுகு ஊடு கங்கை தரித்தான் - (முடியிற்சூடிய) அறுகம்புற்களினிடையே கங்காநதியைத் தரித்தவனான சிவனும், அயன் - பிரமனும், அழைத்தாலும் - (வலியவந்து உன்னைத் தம்மிடத்துக்கு) அழைத்தாலும், இச்சை அறு - (அவர்கள்பக்கல்) விருப்பங்கொள்ளாதொழிவாய்: மால் அடியார் அடிக்கே கூடு - திருமாலினது அடியார்களின் திருவடிகளிலேயே சேர்வாய்: (அங்ஙனஞ் சேர்ந்தால்),—ஊடு மாதர் எறி பூண் மறுகு எறிக்கும் மதில் அரங்கன் -(தம்கணவரோடு) பிணங்கிய மகளிர் கழற்றியெறிந்த ஆபாணங்கள் (எடுப்பவரில்லாமல்) வீதி

களிலே (கிடந்து) ஒளிவீசப்பெற்றதும் மதிள்கள் சூழ்ந்ததுமான ஸ்ரீரங்கத்தை யுடையவனாகிய, அப்பன் வேங்கடவன் - ஸ்வாமியான திருவேங்கடமுடையான், மறு கூடு மருவாமல் நம்மை வாழ்விப்பன்-(இவ்வுடம்புநீங்கிய பின்) மற்றோருடம்பிற்சேராதபடி நம்மை வாழச்செய்வன் [மீண்டும் பிறப்பில்லாதபடி நமக்கு முத்திதந்து அதில் நம்மை அழிவின்றிப் பேரின்பநுகர்ந்து வாழ்ந்திருக்கச்செய்வன்]; (எ - று.)

சிவபிரான் பிரியங்கொண்டு சூடுபவற்றில் அறுகம்புல்லும் ஒன்றாதலால், 'அறுகூடு தரித்தான்' என்றார்; சிவபூசைக்கு உரிய பத்திரபுஷ்பாதிகளில் அறுகம்புல்லும் ஒன்றாதல் காண்க. இச்சாஎன்ற வடசொல், இச்சையென விகாரப்பட்டது. அடிக்கு - உருபுமயக்கம். ஊடலாவது - இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்குமாறு ஆடவர்மீது மகளிர் கோபித்தல்; இது, பிரணயகலக மெனப்படும். செல்வம் நிரம்பிய மகளிர் அங்ஙனம் கோபங்கொள்ளுகின்றபொழுது தாம் அணிந்துள்ள ஆபரணங்களைக்கழற்றித் தெருவிலெறிதலையும், அனைவரும் செல்வவான்களாதலால் அங்ஙனம் பிறர்கழித்தெறிந்தவற்றை எவரும் விரும்பியெடுத்துக் கொள்ளாராக அவை அங்கங்கேயே கிடந்து விளங்குதலையும், "கொல்லுலைவேற்கணல்லார் கொழுநரோடூடி நீத்த, வில்லுமிழ்கலன்கள்யாவும் மிளிர்சுடரெறிக்குமாற்றால், எல்லியும் பகலுந் தோன்றா திமையவருலகமேய்க்கும், மல்லன்மாவிந்தமென்னும் வளநகர்" என்ற நைடதத்துங் காண்க. ஊடுமாதர்-வினைத்தொகை. பூணப்படுவது பூண் எனக்காரணக்குறி. "செம்பொன் மதிலேழுடுத்த திருவரங்கப் பெருங்கோயில்" என்றபடி ஏழுமதில்கள் சூழப்பெற்ற தாதலால், அச்சிறப்புத் தோன்ற, 'மதிலரங்கம்' என்றார். பறவை தங்குதற்கு இடமாகிற கூடு போல உயிர்தங்குமிட மாதலால், உடல், 'கூடு' எனப்பட்டது; உவமையாகு பெயர்: "கூடுவிட்டிங், காவிதான்போயினபின்பு" என்ற ஒளவையார்பாடலையுங் காண்க. பந்தமோக்ஷங்களுக்கு மனம் காரணமாதலால், 'மாமனம்' எனப்பட்டது; இனி, மனத்தைத் தம்வசப்படுத்துதற் பொருட்டு அதனை 'மாமனமே' எனக் கொண்டாடி விளித்தன ரெனினுமாம். மூன்றாமடி - விறுகோளணி.

தேவதாந்தரபஜநம் பந்தத்துக்கே காரணமாதலால், அவ்வழியிற்செல்வதைவிட்டு மோக்ஷத்தை யடையுமாறு பாகவதபஜநஞ் செய்வாயென்று தம்மனத்துக்கு அறிவுறுத்தினார்.

இச்செய்யுளில் முன்னிரண்டடிகளிலும், பின்னிரண்டடிகளிலும் தனித்தனி யமகம் காண்க; மேல் கூஅ-ஆஞ் செய்யுளும் இது. (வச)

வரு. மாமனங்காந்தவல்வாய்ப்புள்ளையேவமடித்துப்பித்த
ஞமனங்காந்தவன்றோடவெய்தோ னறும்பூங்கொடிக்குத்
தாமனங்காந்தன் றிருவேங்கடத்தெந்தை தாள்களிலென்
றீமனங்காந்தங்கவருசிபோலென்றுசேர்வதுவே.

(இ - ள்.) மாமன் - மாமனான கம்சன், அங்காந்த வல் வாய் புள்ளை ஏவ-திறந்த வலியவாயையுடைய பறவையை [பகாசுரனை] அனுப்ப, மடித்து-

(அதனைக்) கொன்று, பித்தன் நா மன் அம் காந்த அன்று ஓட எய்தோன் - சிவன் (தனது) நாவிற்பொருந்திய நீர் வற்றுமாறு அக்காலத்தில் [பாணாசுர யுத்தத்தில்] ஓடும்படி அம்பெய்தவனும், நறும் பூ கொடிக்கு தாமன் அம் காந்தன் - பரிமளமுள்ள தாமரைமலரில் வாழ்கின்ற கொடிபோன்ற பெண்ணுக்கு [திருமகளுக்கு] இருப்பிடமானவனும் அழகிய கணவனுமான, திருவேங்கடத்து எந்தை - திருவேங்கடமலையிலெழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய, தாள்களில்-திருவடிகளில், என் தீ மனம்-எனது கொடியமனமானது, காந்தம் கவர் ஊசிபோல் சேர்வது - காந்தத்தினாற் கவரப்பட்ட ஊசிபோலச் சேர்ந்துபற்றுவது, என்று - எப்பொழுதோ? (எ - று.)

மாமன் - இங்கே, தாயுடன்பிறந்தவன். மன் அம் - வினைத்தொகை. நாமன்அம் காந்த-நாஉலர. கொடி - உவமையாகுபெயர். பூங்கொடி-மலர்க் கொடிபோன்றவளெனினுமாம். திருமகளைத் திருமார்பில் வைத்துள்ளதனால், 'நறும்பூங்கொடிக்குத்தாமன்' எனப்பட்டான். ஊசி - ஸூசிஎன்ற வடசொல்லின் விகாரம். எந்தைதாள்களில் என்தீமனம் காந்தங்கவரூசி போற்சேர்வது— "இரும்பைக் காந்த மிழுக்கின்ற வாறெனைத், திரும்பிப் பார்க்கவொட்டாமல் திருவடிக், கரும்பைத்தந்து" என்பர் பிறரும். காந்தம் இரும்பைக் கவர்ந்து இழுத்தல், வெளிப்படை. (௮௫)

௮௬. சேருமறுக்கமுநோயுமரணமுந்தீவினையின்
வேருமறுக்கவிருப்பினிற்பீர் வடவேங்கடத்தே
வாருமறுக்கவறியா னெவரையும்வாழவருள்
கூருமறுக்கமலையணிமார்பன் கைக்கோதண்டனே.

(இ - ள்.) சேரும் - (கருமகதியால் வந்து) அடைகின்ற, மறுக்கமும் - மனக்குழப்பங்களையும், நோயும்-வியாதிகளையும், மரணமும்-மரணத்தையும், தீவினையின்வேரும்-கொடியகருமத்தின்மூலத்தையும், அறுக்க-ஒழிப்பதற்கு, விரும்பி நிற்பீர் - விருப்பங்கொண்டு நிற்பவர்களே! (நீங்கள்), வடவேங்கடத்தே வாரும் - வடக்கின்கணுள்ள திருவேங்கடமலையினிடத்தே வாருங்கள்: (அங்கு எழுந்தருளியிருக்கிற), மறு கமலை அணி மார்பன் - (ஸ்ரீவத்ஸமென்னும்) மறுவையும் இலக்குமியையுங் கொண்ட (வலத்திரு) மார்பை யுடையவனும், கை கோதண்டன் - கையில் வில்லை யுடையவனுமான திருமால், எவரையும் மறுக்க அறியான் - (தன்னைச் சரணமடைந்தவர்) எத்தன்மையராயினும் அவரை விலக்கஅறியான்; (எவரையும்) வாழ அருள் கூரும்-தனது அடியவரெல்லாவரையும் இனிதுவாழுமாறு கருணைபுரிவன்; (எ - று.)

அடியார்களின் பிழைகளைப் பாராட்டாது பொறுத்து ஆட்கொண்டருளுதற்குப் புருஷகாரமாகிற திருமகள் எப்பொழுதும் விட்டுப்பிரியாமல் உடனிருக்கப்பெற்றவனாதலால் அனைவரையும் மறாது அருள்செய்வனென்பது தோன்ற, 'மறுக்கவறியான் எவரையும் வாழ அருள்கூரும் கமலையணி மார்பன்' என்றார். இடையிலுள்ள 'எவரையும்' என்றதை மத்திமதீபமாகக் கொண்டு, முன்நின்ற'மறுக்கவறியான்' என்றதனோடும், பின்னிற்கும் 'வாழவருள்கூரும்' என்பதனோடுங் கூட்டுக. மறுக்கம் - தொழிற்பெயர். (௮௬)

அஎ. கோதண்டத்தா னத்தன் வாள்கதைநேமியன் கோலவட [ய
வேதண்டத்தானத்த னின்னிசையான் மண்ணும்விண்ணுமுய்
மூதண்டத்தானத்தவதரித்தானெனின் முத்திவினைத்
தீதண்டத்தானத்தனுவெடுத்தானெனிற்றீநரகே.

(இ - ள்.) கோதண்டத்தான் - வில்லையுடையவனும், நத்தன் - சங்கத்தையுடையவனும், வாள்கதைநேமியன் - வாளையும் கதையையும் சக்கரத்தையுமுடையவனும், கோலம் வட வேதண்டத்தான் அழகிய வடமலையான திருவேங்கடத்தை இடமாகவுடையவனும், அத்தன் - (எல்லாவுயிர்கட்குந்)தலைவனும், இன் இசையான் - இனிமையான வேய்ங்குழலினிசையையுடையவனுமான திருமால், மண்ணும் விண்ணும் உய்ய - நிலவுலகத்திலுள்ள மனிதர்முதலியோரும் மேலுலகத்திலுள்ள தேவர்முதலியோரும் துன்பந்தவிர்ந்துவாழ்தற்காக, மூது அண்டம் தானத்து - பழமையான அண்டத்துக்கு உட்பட்ட இடங்களில், அவதரித்தான் - திருவவதாரஞ்செய்தான், எனில் - என்று (மெய்ம்மையுணர்ந்து) கூறினால், முத்தி - பரமபதம் கிடைக்கும்; (அத்திருமால்), வினை தீது அண்ட - ஊழ்வினையின்தீமை வந்து தொடர, தான் அ தனு எடுத்தான் - தான் அந்தந்தத்தேகத்தையெடுத்துப் பிறந்தான், எனில் - என்று (உண்மையுணராது) கூறினால், தீ நரகே - கொடியநரகமே நேரும்; (எ - று.)

ஜீவாத்மாக்கள் தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவர ரூபங்களாய்ப் பிறப்பது போலக் கருமவசத்தினாலன்றி, பரமாத்மா உபேந்திர மத்ஸ்ய கூர்மாதி அவதாரங்கள்செய்வது துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநத்தின்பொருட்டும் தருமத்தை நிலைநிறுத்துதற்பொருட்டும் அப்பெருமான்கொண்ட இச்சையினாலேயே யாகு மென்ற இவ்வுண்மையை உணர்தல், அவதாரரஹஸ்யஜ்ஞாநமெனப்படும். இந்தஞானத்தையுடையாராய்ப் பகவதவதாரங்களை அவனது சங்கல்பத்தினாலாயவையென்றுகொண்டு அப்பெருமானது அருள் ஆற்றல் அடியவர்க்கெளிமை முதலிய திருக்கல்யாணகுணங்களில் ஈடுபட்டுத் துதிப்பவர் முத்தியையடைவர்; அங்ஙனமன்றி, அவ்வவதாரங்களைக் கருமவசத்தாலாயவையென்றுகொண்டு இகழ்பவர் நரகமடைவர் என்பது, கருத்து. "தராதலத்து, மீனவதாரமுதலானவை வினையின்றி யிச்சை, யானவதாரறிவாரவரே முத்தராமவரே" என்பர் அழகரந்தாதியிலும்.

திருமால் பஞ்சாயுதங்களை யுடைமையை 'கோதண்டத்தான் நத்தன் வாள் கதை நேமியன்' என்று குறித்தார். வேதண்டம் - மலை. இன் இசையான் - கேட்டற்கு இனிய புகழையுடையவனெனினுமாம். மண், விண் - இடவாகுபெயர். (அஎ)

அஅ. நரகமடங்கலுஞ்சென்றெய்த்தபாவிக்குநாரியர்மேல்
விரகமடங்கப்பெய்ஞ்ஞானம்வெளிசெயவீடுபெற
வுரகமடங்கநடித்தபொற்றாளின்றென்னுச்சிவைப்பாய்
வரகமடங்கயலானாய் வடமலைமாதவனே.

(இ - ள்.) வரம் கமடம் கயல் ஆனாய் - சிறந்த ஆமையும் மீனுமாய்த் திருவவதரித்தவனே! வடமலை மாதவனே - திருவேங்கடமலையி லெழுந்தருளியிருக்கிற திருமாலே!—நரகம் அடங்கலும் சென்று எய்த்த பாவிக்கு - (இதுவரையிலும் பலபிறப்புக்கள்பிறந்து பலதீவினைகளைச்செய்து) நரகங்களனைத்திலும் போய் வருந்திய பாவியான எனக்கு, நாரியர்மேல் விரகம் அடங்க - மகளிர்விஷயமாக உண்டாகின்ற ஆசைநோய் தணியவும், மெய்ஞானம் வெளி செய - தத்துவஞானம்தோன்றவும், வீடு பெற - பரமபதம் கிடைக்கவும், உரகம் மடங்க நடித்த பொன் தாள் இன்று என் உச்சி வைப்பாய் - (காளியனென்னும்) பாம்பு தலைமடங்கும்படி (அதன்முடியின்மேலேறி) நடனஞ்செய்த (நினது) அழகியதிருவடிகளை இப்பொழுதே எனது சிரசின்மேல் வைத்தருள்வாய்; (எ - று.)

அடங்கலும் என்றது, எஞ்சாமை குறித்தது. எய்த்தல் - இளைத்தல், மெலிதல். பாவிக்கு - தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. பாபீ, நாரீ, விரஹம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. பாவி - தீவினைசெய்தவன். மெய்ஞ்ஞானம் - பிறப்புவீடுகளையும் அவற்றின்காரணங்களையும் பரமாத்மஜீவாத்மஸ்வரூபங்களையும் விபரீதஐயங்களாலன்றி உண்மையால் உணர்தல். உரகம் என்ற வடசொல் - மார்பினால் (ஊர்ந்து) செல்வதென்று பொருள்படும். பொன் தாள் - பொன்னினாலாகிய கழலென்னும் அணியை அணிந்த திருவடி யெனினுமாம்; இப்பொருளில், பொன் - கருவியாகுபெயர். வர கமடம் - வடமொழித்தொடர்.

கண்ணன் காளியனுடைய முடியின்மேலேறி, ஐந்துதலைகளையுடைய அந்நாகம் எந்தெந்தப் படத்தைத் தூக்குகின்றதோ அந்தந்தப்படத்தைத் துவைத்து அழுத்திநின்று அப்பாம்பின்வலிமையை அடக்கி அதனை மூர்ச்சையடையச்செய்கையில், பலவகைநடனத்திறங்களைச் செய்துகாட்டியமை தோன்ற, 'உரகமடங்க நடித்த பொற்றாள்' என்றார். அத்தன்மையை, 'ஸ்வாமி, நர்த்தநமுறையில் வட்டமாய்ச்சுற்றுவது முதலான பிராந்திகதிகளினாலும், ஒரு பக்கத்திலிருந்து மற்றொருபக்கத்துக்குப் போவது முதலிய ரேசககதிகளினாலும், பாதத்தை முன்நீட்டிவைப்பதாகிய தண்டபாதகதியினாலும், அந்தசர்ப்பராசன் நசுங்கி மிகுந்த உதிரத்தையுங் கக்கினான்' என்ற விஷ்ணுபுராணவாக்கியத்தால் நன்கு அறிக. "கானகமாமடுவிற் காளியனுச்சியிலே, தூயநடம்பயிலுஞ் சுந்தர," "காளியன்பொய்கை கலங்கப்பாய்ந்திட்டவன், நீண்முடியைந்திலு நின்று நடஞ்செய்து" என்ற பெரியாழ்வாரருளிச்செயல்களையுங் காண்க.

முன்னொருகாலத்திற் பிரமதேவன் கண்துயில்கையில், சோமகனென்னும்அசுரன் வேதங்களையெல்லாங் கவர்ந்துகொண்டு கடலினுள் மறைந்து செல்ல, பிரமன்முதலிய தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் ஒரு பெருமீனாகத்திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனைத் தேடிப் பிடித்துக் கொன்று, அவன்கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக் கொணர்ந்து கொடுத்தன னென்றும்; திருப்பாற்கடல் கடைந்தபொழுது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே சென்று அழுந்திவிடாதபடி திருமால் மகாகூர்ம

ரூபத்தைத் தரித்து அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தா னென்றும் கூறப்படுகின்ற வரலாறுகள்பற்றி, 'வராகடைக் கயலானாய்' என்றார். வர என்று தனியே எடுத்து, சிறந்தவனே யென்று கொள்ளினுமாம்; வரன் என்பதன் விளி. (௯௮)

௯௯. மாதிரங்காதன்மனைவாழ்க்கையென்றெண்ணிவான்பொருட்கு
மாதிரங்காதம்பலவளைவீ ரின்னுமைந்தனென்றோர்
மாதிரங்காதபடிவணங்கி ரரிமாவொடுகைம்
மாதிரங்காதமர்செய்கின்றசேடமலையனையே.

(இ - ள்.) காதல் மனை வாழ்க்கை - விருப்பத்துக்குஇடமான மனையாளோடுகூடி இல்லத்துவாழ்தலை, மா திரம் என்று எண்ணி - மிக்கநிலையுள்ளதென்று நினைத்து, (அந்தஇல்லறவாழ்வுக்கு உபயோகமாக), வான் பொருட்கு - மிக்க செல்வத்தை ஈட்டுதற்பொருட்டு, மாதிரம் - திக்குக்கள்தோறும், பல காதம் வளைவீர் - அநேககாததூரம் சுற்றியலைபவர்களே!—இன்னும் மைந்தன் என்று ஓர் மாது இரங்காதபடி - இன்னமும் (உங்களைப்) புத்திரனென்று ஒருபெண் அன்புசெய்யாதபடி [இனியாயினும் பிறப்பற்று முத்திபெறுமாறு], அரிமாவொடு கைம்மா திரங்காது அமர் செய்கின்ற சேடமலையனை வணங்கிர் - சிங்கங்களோடு யானைகள் பின்வாங்காமற்போர் செய்யப்பெற்ற சேஷகிரியெனப்படுகிற திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானை வணங்குங்கள்; (எ - று.)

மீண்டும்பிறப்பில்லாதபடி யென்ற பொருளை'இன்னும்மைந்தனென்று ஓர்மாது இரங்காதபடி' என்று வேறுவகையாற் கூறினது, பிறிதினவிநவிசியணி. 'அரிமாவொடு கைம்மா திரங்காது அமர்செய்கின்ற' என்றது, மலைவளங் கூறியவாறும். கஜேந்திராழ்வானைப் பாதுகாத்தவனும் நரசிங்காவதாரஞ்செய்தவனுமான திருவேங்கட முடையானைச் சார்ந்து அவனதருள் பெற்ற யானைகளாதலால், சிங்கத்துக்கு அஞ்சுகின்றனவில்லை யென்க.

மஹாஸ்திரம், சேஷன் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. வான் - உரிச்சொல். வணங்கிர் - ஏவற்பன்மை. (௯௯)

௧௦௦. மலையினரக்கருடன்றெழுந்தாரென்றுமாமறைநூற்
கலையினரக்கருடனிந்திராதியர்காட்டச்செய்யுங்
கொலையினரக்கருடனேறும்வேங்கடக்குன்றரென்று
னுலையினரக்கருடந்திலரேனுமென்னுள்ளவர்க்கே.

(இ - ள்.) மா மறை நூல் கலையினர் அக்கர் உடன் - சிறந்தவேதசாஸ்திரங்களாகிய கல்வியில் தேர்ந்த பிரமதேவரும் எலும்புமாலையைத்தரித்தவரான சிவபிரானுமாகிய இருமூர்த்திகளுடன், இந்திர ஆதியர் - இந்திரன் முதலிய தேவர்கள், மலையின் அரக்கர் உடன்று எழுந்தார் என்று காட்ட - 'மலைகள்போல இராக்கதர்கள் உக்கிரங்கொண்டு ஓங்கினார்கள்' என்றுசொல்லி முறையிட, செய்யும் கொலையினர் - செய்த (அவ்விராக்கதவதத்தையுடையவரான, அ கருடன் ஏறும் வேங்கடம் குன்றர் - அந்தக்

கருடனாகிய வாகனத்தின்மேல் ஏறியருள்கிற திருவேங்கடமலையை யுடையவர், என்றால் - என்றுசொன்னால், அருள் தந்திலர் ஏனும் என் உள் அவர்க்கு உலையின் அரக்கு - (அவர் என்பக்கல்) கருணைபுரியாராயினும் அவர் விஷயத்தில் என்மனம் உலைக்களத்திலிட்ட அரக்காம் [நெகிழ்ந்து உருகும்].

பகவத்விஷயத்தில் தமக்குஉள்ள பக்திமிகுதியா லாகும் நெஞ்சுருக்கத்தை இதில் வெளியிட்டார். எம்பெருமான் அருள்புரிந்தாலும் புரியாவிட்டாலும் அவன்திறத்தில் அன்புசெலுத்துதல் முமுக்ஷுக்களுக்கு [முத்திபெறவிரும்புவார்க்கு]க் கடமையாதல் காண்க. இச்செய்யுளை, விரகவேதனையுற்ற தலைவியின் கூற்றாகவுங் கொள்ளலாம். அரக்கரெழுந்தாரென்று பிரமருத்திரருடன் இந்திராதியர் காட்ட—"விதியொடு முனிவரும்விண்ணுளோர்களும், மதிவளர்சடைமுடிமழுவலாளனும், அதிசயமுடனுவந்தயவிருந்துழிக், கொதிகொள்வேலரக்கர்தங் கொடுமை கூறினார்"என்ற கம்பராமாயணங் காண்க. அரக்கர்-இராவணன் முதலியோர். பிரமன் திருமாலினிடம் வேதசாஸ்திரங்களை யோதிப் பிறர்க்குவெளியிட்டதனால், அவனை, 'மாமறைநூற்கலையினர்' என்றார். அக்கர் - ருத்திராக்ஷமாலையையுடையவரெனினுமாம். கலையினர், அக்கர் - உயர்வுப்பன்மை. இனி, மா மறை நூல் கலையினர் அக்கருடன் என்பதற்கு - சிறந்த வேதசாஸ்திரங்களில் வல்லவர்களான முனிவர்களும் யக்ஷர்களுமாகிய இவர்களோடு என்றுஉரைத்தலுமொன்று; அவ்வுரைக்கு, யக்ஷரென்ற வடசொல் அக்கரெனச் சிதைந்த தென்க; யசோதை = அசோதைஎன்பதுபோல. யக்ஷர் - பதினெட்டுத்தேவகணங்களுள் ஒருசாரார். யக்ஷராஜனான குபேரனுக்கு இராவணன் பகைவனானதனால், அரக்கரெழுச்சியை முறையிடுதற்கு இயக்கரும் உரியவராவர்.

'அக் கருடன்' எனச் சுட்டினது, பிரசித்தி பற்றி: அழகிய கருடனெனினுமாம். கருடன் - பக்ஷிராஜன்; இவனுக்கு,வைஷ்ணவசம்பிரதாயத்தில் 'பெரியதிருவடி' என்று பெயர் வழங்கும். (கூ0)

[தோழி, தலைமகனை ஏதங்கூறி இரவுவரல் விலக்கல்.]

கூக. உள்ளமஞ்சாய் வலியாய் வலியார்க்குமுபாயம்வல்லாய்
கள்ளமஞ்சாயுதங்கைவருமாயினுங் கங்குலினில்
வெள்ளமஞ்சார்பொழில்வேங்கடக்குன்றினில்வீழருவிப்
பள்ளமஞ்சாரல்வழிவரில்வாடுமிப்பாவையுமே.

(இ - ள்.) (நீ), உள்ளம் அஞ்சாய் - (எதற்கும்) மனம் அஞ்சுகின்றாயில்லை; வலியாய் - வலிமையையுடையாய்; வலியார்க்கும் உபாயம் வல்லாய் - வல்லமையுடையவர்க்கும் உபாயங்கற்பிக்கும்படி உபாயம்வல்லை; கள்ளம் - களவும், அஞ்சு ஆயுதம் - பஞ்சாயுதங்களும், கைவரும் - (உனக்குப்) பழக்கமாயுள்ளன; ஆயினும்—, கங்குலினில் - இரவிலே, வெள்ளம் மஞ்சு ஆர் பொழில் வேங்கடம் குன்றினில் - வெள்ளமாகப் பொழிகின்ற மேகங்கள் தங்குகிற சோலைகளையுடைய திருவேங்கடமலையில், விழ் அருவி பள்ளம் - விழுகிற அருவிப்பெருக்கையுடைய பள்ளங்களோடு கூடிய, அம்

சாரல் வழி - அழகிய மலைப்பக்கத்து வழியாக, வரில் - (நீ) வந்தால், இ பாவையும் வாடும் - (நினது வரவை மகிழ்ச்சியோடு எதிர்பார்ப்பவளான) இப் பெண்ணும் வருந்துவள்; (எ - று.)

இயற்கைப்புணர்ச்சிபெற்ற தலைமகன் பின்பு தலைமகளினது தோழியி னுதவியைக்கொண்டு தலைமகளைப் பகலிலும் இரவிலும் களவுநெறியில் ஏகாந்தத்திலே சந்தித்தல் இயல்பு; அது, பகற்குறி இரவுக்குறி எனப்படும். தலைமகனது வேண்டுகோளின்படி ஒருநாள் இரவிற் குறிப்பிட்டதொரு சோலையினிடத்தே அத்தலைமகனையுந் தலைமகளையுஞ் சந்திக்கச்செய்த தோழி,பின்பும் அக்களவொழுக்கத்தையே வேண்டிய தலைமகனுக்கு,அவன் வருநெறியின் அருமையையும்,அதுகருதித் தாங்கள் அஞ்சுதலையுங்குறித்து 'நீ எந்தஇடத்திலும் எந்தப்பொழுதிலும் அஞ்சாது வரக்கூடிய தேகபலம் மனோபலம் தந்திரம் வஞ்சனை படைக்கலத்தேர்ச்சி இவற்றையுடையாயாயி னும், நின்வரவு எங்கட்குத் துன்பமாகத் தோன்றுதலால், இனி இவ்விரு ளிடை நீ இங்ஙனம் வரற்பாலையல்லை' என்று கூறி விலக்குதல், இச்செய்யு ளிற் குறித்த அகப்பொருள் துறையாம்.; இது, ஆறுபார்த்துற்ற அச்சக் கிளவியின்பாற்படும்; (ஆறு - வழி, கிளவி - பேச்சு:) தலைவன் வரும்வழி மிகவும் இன்னாது, நீருடையது, கல்லுடையது, முள்ளுடையது, ஏற்றிழி வுடையது, கள்ளர் புலி கரடி யானை பாம்பு முதலிய கொடிய பிராணிகளை யுடையது என்று கவலுங் கவற்சியாற் சொல்லுவ தென்க. இதில், மெய்ப் பாடு - அச்சம். இதன் பயன் - வெளிப்படையாகவந்து மணஞ்செய்துகொள் ளுதலை வற்புறுத்துதல். முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை என்ற ஐவகைநிலங்களுள் மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியா மென்பதும், "புணர்தல் நறுங்குறிஞ்சி" என்றபடி புணர்ச்சி குறிஞ்சித்திணைக்குஉரிய பொருளென்பதும், "குறிஞ்சி, கூதிர் யாம மென்மனார் புலவர்" என்ற படி பெரும்பொழுதினுட் சரத்காலமும் சிறுபொழுதினுள் நள்ளிரவும் குறிஞ்சிக்கு உரிய கால மென்பதும் அறியத்தக்கன. "துறைமதியாம லிக் கான்யாறுநீந்திச் சுரங்கடத்தல், நிறைமதியாளர்க் கொழுக்கமன்றால் நெடு மாலரங்கத், திறைமதியாவருமாராவமிர்தன்ன விந்தநுதற், குறைமதியாள் பொருட்டாற் கங்குல்வார லெங்கொற்றவனே" என்ற திருவரங்கக்கலம் பகச்செய்யுளையுங் காண்க.

சாரல் - மலையைச் சார்ந்தது; மலைப்பக்கம்: தொழிலாகு பெயர். 'இப்பாவை' என்றது, தலைமகளை; உம்மையால், தோழி தான்வாடுதலையும் உணர்த்தினளாம்.

அஞ்சாமை, வலிமை, தந்திரம், மாயை, ஐம்படை இவற்றையுடைமை யால் எவ்வகைச்செயலையுஞ் செய்யவல்லவனான சர்வேசுவரன், இருள்போ லப் பொருள்களை உள்ளபடி எளிதிற் காணவொண்ணாது மறைப்பதான மாயையின் பிரசாரத்தையுடைய இந்த இருள்தருமாஞாலத்திலே ஐயங் கார் வாழும்பொழுது அவரது நெஞ்சென்னும் உட்கண்ணுக்கு ஒரோசம யத்து இலக்காகி மறைய, நிரந்தராநுபவத்திலே பிரியமுடையாரான ஐயங் கார், அவ்வளவிலே திருப்திப்படாததோடு, பொங்கும்பரிவுடைய பெரியாழ்

வார்போல, எம்பெருமானுடைய ஸர்வசக்தித்வம் முதலிய திவ்யகுணங்களைக் கருதுதற்குமுன்னே எதிர்ப்பட்ட ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களில் ஈடுபட்டு,'காலாதீதமான வைகுண்டத்திலேயிருக்கின்ற இவ்வரும்பொருள் காலம்நடையாடப்பெற்ற இவ்வுலகத்தில்வந்து புலனாதலால் இதற்குஎன்ன தீங்குவருமோ?" என்று அதிகமானபயசங்கை கொண்டவராக, அந்த அதிசங்கையை ஐயங்காரது அன்பர்கள் எம்பெருமான்பக்கல்விண்ணப்பஞ்செய்து, இனி இவர்க்கு இவ்வகைக்கலக்கமுண்டாகாதபடி இவரைக் காலாதீதமான வைகுண்டத்திற் சேர்த்துக்கொள்ளவேண்டு மென்று விண்ணப்பஞ்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். விவரம் கேட்டுணர்க. இரணியன் இராவணன் முதலியோர் எவ்வளவோ சாமர்த்தியமாக வேண்டிப்பெற்ற வரங்களெல்லாம் ஒவ்வொருவகையால் ஒதுங்கும்படி சூழ்ச்சி செய்து அவர்களை யழித்தமையும், துரியோதனன் முதலியோர் செய்த அளவிறந்தசூழ்ச்சிகட்கெல்லாம் மேம்பட்ட சூழ்ச்சிசெய்து அவர்களைத்தொலைத்தமையும் பற்றி, 'வலியார்க்கு முபாயம் வல்லாய்' என்றார். (கூக)

கூஉ. பாவையிரங்குமசோதைக்குமுத்துப் பதுமச்செல்விக்
கேவையிரண்டன்ன கண்மணிநீல மிருசரணப்
பூவையிரந்தவர்க்கின்பவளம் புல்லசுரர்க்கென்று
மாவையிரந் திருவேங்கடத்தோங்குமரகதமே.

(இ - ள்.) திருவேங்கடத்து ஓங்கும் மரகதம் - திருவேங்கடமலையின் மீது உயர்ந்துதோன்றுகின்ற மரகதரத்தினம்போல விளங்குந் திருமேனி நிறத்தையும் ஒளியையுமுடைய பரம்பொருளானது,— பாவை இரங்கும் அசோதைக்கு - சித்திரப்பிரதிமைகளும் (இவ்வகையழகு எமக்கு இல்லையே யென்று) இரங்கும்படியான [கட்டழகுடைய] யசோதைக்கு, முத்து -(அருமையால்) முத்துப்போலும்; பதுமம் செல்விக்கு - தாமரைமலரில் வீற்றிருக்கின்ற செல்வத்தலைவியான திருமகளுக்கு, இரண்டு ஏவை அன்ன கண் மணி நீலம் - (அருமையால்) இரண்டு அம்புகளைப்போன்ற கண்களிலுள்ள கருவிழிபோலும்; இரு சரணம் பூவை இரந்தவர்க்கு - உபயதிருவடித்தாமரைமலர்களைப் பிரார்த்தித்தவர்கட்கு, இன்ப வளம் - பேரின்பப் பெருக்காம்; புல் அசுரர்க்கு - இழிகுணமுடைய அசுரர்கட்கு, என்றும் - எப்பொழுதும், மா வையிரம் - பெரும்பகையாம்; (எ - று.)

திருவேங்கடத்துஓங்கும் மரகதரத்தினமொன்றே யசோதைத்தாய்க்கு முத்தாகவும், பெரியபிராட்டிக்கு நீலமணியாகவும், அடியார்க்குப் பவளமாகவும், அசுரர்க்கு வைரமாகவும் ஆகின்றது எனச் சொற்போக்கில் ஒருவகை வியப்புத் தோன்றக் கூறியது, பலபடப்புனைவணி. இதில் பஞ்சரத்தினங்களின்பெயர் அமைந்திருப்பது காண்க. யசோதை - கண்ணனை வளர்த்த தாய்; நந்தகோபன் மனைவி. அருமைக்குழந்தையாகிய கண்ணன் அவளால் 'முத்து' என்று பாராட்டப்படுதல்பற்றி, 'யசோதைக்கு முத்து' என்றார். அம்பைக்குறிக்கும் ஓரெழுத்தொருமொழியாகிய 'ஏ' என்ற பெயர்ச்சொல், 'ஐ' என்றஇரண்டனுருபை யேற்கும்போது "ஏமுனிவ்விருமையும்" என்ற

படி வகரவுடம்படுமெய்பெற்று 'ஏவை' எனநின்றது. மணிநீலம் = நீலமணி: கருமணி, கருவிழி. இதுவும், அருமைபாராட்டப்படுதற்கு உவமம். 'இன்ப வளம்' எனவே, பேரின்ப மென்றும்; வளம் - சிறப்பு. அஸுரர் என்ற வட சொல் - தேவர்கட்கு எதிரானவரென்றும் (சுரர்-தேவர்), பாற்கடலினின்று உண்டான சுரையைப் பானஞ்செய்யாதவரென்றும் (சுரை - மது), பகைவருயிரைக் கவர்பவரென்றும் (அஸு - உயிர்) காரணப்பொருள்படும். மா வைரம் - தவறுது அழிப்பவ னென்றபடி. வைரம்என்பது வையிரம் எனப் போலிவிகாரம்பெற்றது, திரிபுநயத்தின்பொருட்டு. மரகதம் - பச்சையிரத் தினம்; நிறமும் ஒளியும்பற்றி, 'மரகதம்' என்றார்: மரகதம்போன்ற எம் பெருமானை மரகத மென்றது, உவமையாகுபெயர். (கூஉ)

கூங. மரகதத்தைக்கடைந்தொப்பித்தவொத்தன வாழ்த்தினர்த
நரகதத்தைத்தள்ளிவைகுந்தநல்கின நப்பின்னையாம்
விரகதத்தைக்குவிடையேழ்தழுவின வேங்கடவன்
குரகதத்தைப்பிளந்தான்றோள்களாகியகுன்றங்களே.

(இ - ள்.) குரகதத்தை பிளந்தான் - குதிரைவடிவாய்வந்த (கேசியென் னும்) அசுரனை வாய்பிளந்தழித்தவனுன, வேங்கடவன்-திருவேங்கடமுடையானுடைய, தோள்கள் ஆகிய - புயங்களாகிய, குன்றங்கள் - மலைகள்[மலைகள்போன்ற தோள்களானவை],—மரகதத்தை கடைந்து ஒப்பித்தது ஒத்தன - மரகதமென்னும் பச்சையிரத்தினத்தைக் கடைந்து ஒப்பனைசெய் தாற் போன்றன ; வாழ்த்தினர்தம் - (தம்மை) வாழ்த்திய மெய்யடியார்களுடைய, நரக தத்தை - நரகத்துன்பங்களை, தள்ளி - ஒழித்து, வைகுந்தம் நல்கின - (அவர்கட்குப்) பரமபதத்தைக் கொடுத்தன ; நப்பின்னை ஆம் - நப்பின்னைப்பிராட்டியாகிய, விரக தத்தைக்கு - ஆசைநோயால் தவிக்கப் பட்டவளான பெண்ணை மணஞ்செய்தற்பொருட்டு, விடை ஏழ் தழுவின - எழுஎருதுகளைத் தழுவி வலியடக்கின ; (எ - று.)

இது, புயவகுப்பு.

நிறமும், ஒளியும், திரண்டுருண்டு செய்ப்புடைமையும்பற்றி, 'மரகதத் தைக்கடைந் தொப்பித்த தொத்தன' என்றார். பின்னையென்பது - அவள் பெயர்; ந - சிறப்புப்பொருளுணர்த்துவதோர் இடைச்சொல் [உபசர்க்கம்]: நச்செள்ளை, நப்பாலத்தன், நக்கீரன் என்றாற்போல; நம்பின்னையென்பதன் விகாரமுமாம். நற்பின்னை யென்பாரு முளர். விரஹதப்தா, வ்ருஷபம் என்ற வடசொற்கள்-விரகதத்தை, விடை என்று விகாரப்பட்டன. விரகம் - காதல் நோயையுடைய, தத்தைக்கு - கிளிபோன்ற [இன்மொழிபேசுகின்ற] பெண் ணுக்கு என்று உரைப்பாரு முளர். கண்ணன் நப்பின்னைப் பிராட்டியைத் திருமணஞ்செய்துகொள்ளுதற்காக, அவள் தந்தை கந்யாசுல்கமாகக்குறித்த படி யாவர்க்கும் அடங்காத அசுராவேசம் பெற்ற எழெருதுகளையும் எழு திருவுருக்கொண்டுசென்று வலியடக்கித் தழுவினதற்கு முன்னமே கண்ண பிரான்பக்கல் காதல்கொண்டிருந்தமை தோன்ற, 'நப்பின்னையாம் விரக தத்தைக்கு விடையேழ்தழுவின' என்றார்.

குரகதம் என்றவடசொல், (ஒற்றைக்) குளம்புகளாற் செல்வதென்று பொருள்படும். பருத்தவடிவமும் வலிமையும் படைக்கலங்களால் அழித்தற்கருமையும்பற்றி, தோள்கள் குன்றங்களெனப்பட்டன. குன்றங்கள் என்ற உபமானப்பொருள், ஒத்தலும் வைகுந்தநல்குதலும் விடையேழ் தழுவுதலுமாகிய செய்கையிற் பயன்படும்பொருட்டு உபமேயமாகிய தோள்களினுருவத்தைக் கொள்ளத் திரிதலால், 'தோள்களாகிய குன்றங்கள்' என்றது-திரிபணி; உருவக மன்று. குன்றங்கள் என்ற ஈற்றில் நின்றசொல், முன்னுள்ள ஒத்தன நல்கின தழுவின என்ற முற்றுக்களோடு முடிந்தது, கடைநிலைத்தீவகம். (கூங)

கூச. குன்றுகளத்தனையுங்கடறாரக்குவித்திலங்கை
சென்றுகளத்தனைவோரையுமாய்த்துத்திருச்சரத்தா
லன்றுகளத்தனையட்டானை யப்பனை யாய்மகடோ
டுன்றுகளத்தனை யேத்தவல்லார்க்கில்லைதுன்பங்களே.

(இ - ள்.) குன்றுகள் அத்தனையும் - மலைகளையெல்லாம், கடல் தூர குவித்து-கடல்தூர்ந்திடும்படி (வாநரங்களைக்கொண்டுகொணர்ந்து) ஒருங்கு சேர்த்து (அணைகட்டி), இலங்கை சென்று - (அதன்வழியாகப்) போய் இலங்காபுரியைச் சார்ந்து, களத்து அனைவோரையும் மாய்த்து - போர்க்களத்தில் அரக்கர்களெல்லாரையுங் கொன்று, திரு சரத்தால் - சிறந்த அம்பினால் [பிரமாஸ்திரத்தால்], அன்று-அந்நாளில், களத்தனை [கள்ளத்தனை]- வஞ்சகனான இராவணனை, அட்டானை - கொன்றவனும், ஆய் மகள் தோள் துன்று களத்தனை - இடைச்சாதிமகளான நப்பின்னையினது கைகளால் தழுவப்பட்ட கழுத்தையுடையவனுமான, அப்பனை - திருவேங்கடமுடையானை, ஏத்த வல்லார்க்கு - துதிக்கவல்லவர்கட்கு, துன்பங்கள் இல்லை - எவ்வகைத்துன்பமும் உளவாகா; (எ - று.)

அனைவர் அனைவோர் எனச் சிறுபான்மை ஈற்றயல்அகரம் ஒகாரமாயிற்று. இராவணன் சீதையை வஞ்சனையாற் கவர்ந்துசென்றதனால்,'கள்ளத்தன்'எனப்பட்டான். களத்தன் - தொகுத்தல்விகாரம். ஆய் - சாதிப்பெயர். தோள் - இங்கே, கை; சீவகசிந்தாமணியில் "தோளுற்றொர் தெய்வந்துணையாய்" என்றவிடத்திற் போல. நான்காமடியில், களம் - வடசொல். (கூச)

கூரு. துன்பங்களையுஞ் சனனங்களையுந் தொலைவுறுபே
ரின்பங்களையுங்கதிகளையுந்தரு மெங்களப்பன்
றன்பங்களையும்படிமூவரைவைத்துத்தாரணியும்
பின்பங்களையுமிழுதுமுண்டானுடைப்பேர்பலவே.

(இ - ள்.) மூவரை - (பிரமன் சிவன் இலக்குமி என்ற) மூன்றுபேரை, தன் பங்கு அளையும்படி - தனது திருமேனியின் பாகங்களிலே பொருந்தும்படி, வைத்து—, தாரணியும் - (கற்பாந்தகாலத்திலே) பூமியையும், பின்பு - பிறகு [கிருஷ்ணாவதாரத்திலே], அங்கு-அவ்விடத்தில் [திருவாய்ப்பாடியில்], அளையும் இழுதும் - தயிரையும் நெய்யையும், உண்டான் - அமுதுசெய்தவ

ஞன, எங்கள் அப்பனுடை - எமது திருவேங்கட முடையானுடைய, பேர் பல - பல திருநாமங்கள்,—துன்பம் களையும் - (தம்மைச் சொன்னவர்களுடைய) கிலேசங்களையொழிக்கும்; சனனம் களையும் - பிறப்பை வேரோடு அழிக்கும்; தொலைவு அறு பேர் இன்பங்களையும் கதிகளையும் தரும் - முடிவில்லாத பேரின்பங்களையும் சிறந்தபதவிகளையும் தரும்; (எ-று.)

இது, திருநாம மகிமை. "குலந்தருஞ் செல்வந்தந்திடு அடியார்படுதுயராயினவெல்லாம், நிலந்தரஞ்செய்யும் நீள்விசும்பருளும் அருளொடுபெருநிலமளிக்கும், வலந்தரும் மற்றுந்தந்திடும் பெற்றதாயினு மாயினசெய்யும், நலந்தருஞ்சொல்லை நான்கண்டுகொண்டேன் நாராயணுவென்னுநாமம்" என்ற பெரியதிருமொழியையுங் காண்க. ஸ்ரீமந்நாராயணன் தனது திருமேனியில் திருநாபியிலே பிரமனையும், வலப்பக்கத்திலே சிவனையும், திருமார்பிலே திருமகளையும் வைத்திருத்தலை, 'தன்பங்களையும்படி மூவரை வைத்து' எனக்குறித்தார்;"பிறைதங்குசடையானை வலத்தேவைத்துப் பிரமனைத்தன்னுந்தியிலே தோற்றுவித்துக், கறைதங்குவேற்றடங்கண் திருவை மார்பிற் கலந்தவன்", "ஏறனைப் பூவனைப் பூமகள்தன்னை, வேறின்றிவிண்தொழத் தன்னுள்வைத்து", "திருவிடமே மார்வம் அயனிடமே கொப்பூழ், ஒருவிடமும் எந்தைபெருமாற்கு அரன்", "ஏறாளு மிறையோனுந் திசைமுகனுந் திருமகளுங், கூறாளுந் தனியுடம்பன்", "சிவனொடு பிரமன் வண்திருமடந்தை சேர் திருவாகம்", "மலர்மகள் நின் ஆகத்தாள் - செய்ய, மறையான் நின் உந்தியான் மாமதிள்மூன்றெய்த, இறையான் நின் ஆகத்திறை" என்ற ஆழ்வார்களருளிச்செயல் பல காண்க. மூவர் - தொகைக்குறிப்பு. தொலைவறு பேரின்பம் - "அந்தமில் பேரின்பம்." 'உண்டானடிப்பேர்பல' என்ற பாடத்துக்கு, எம்பெருமானுடைய திருவடிகளின் திருநாமங்கள் பலவென்க; அடி - தொன்றுதொட்டுவருகிற எனினுமாம். (கூரு)

[தலைவனைப்பிரிந்த தலைவி, கடலைநோக்கி இரங்கிக்கூறல்.]

கூகூ. பலகுவளைக்குட்சிலகஞ்சம்போலும்படிவப்ப
னலகுவளைக்குமுன்னுண்டா னின்மாட்டுநெஞ்சிலனோ
வுலகுவளைக்குங்கடலே நின்கண்முத்துகுத்திரங்கி
யிலகுவளைக்குலஞ்சிந்தித்துஞ்சாயின்றிராமுற்றுமே.

(இ - ள்.) உலகு வளைக்கும் கடலே - உலகத்தைச்சூழ்ந்திருக்கிற கடலே!--நின் கண் முத்து உகுத்து - உனதுகண்களினின்று முத்துப்போன்ற நீர்த்துளிகளைச்சொரிந்து [உன்னிடத்தினின்று முத்துக்களைச் சிந்தி], இரங்கி - புலம்பி [ஒலித்து], இலகு வளை குலம் சிந்தி - விளங்குகின்ற கைவளைகளின் வரிசையைக் கீழேசிந்தி [விளங்குகிற சங்குகளின் கூட்டத்தை வெளியேசிதறி], இன்று இரா முற்றும் - இன்றை யிராப்பொழுது முழுவதும், துஞ்சாய் - தூங்குகின்றாயில்லை [அமைதிகொண்டிருக்கின்றாயில்லை]; (ஆதலால்), பல குவளைக்குள் சில கஞ்சம் போலும் படிவம் அப்பன் - பலநீலோற்பலமலர்களின் இடையிடையே சிலசெந்தாமரைமலர்கள்(பூத்தன)போன்ற திருமேனியையுடைய ஸ்வாமியான, அளைக்கு முன் நல கு உண்டான் -

(கிருஷ்ணாவதாரத்தில்)வெண்ணெயையுண்பதற்குமுன்னே(கர்ப்பாந்தகாலத்திலே) நல்லபூமியை விழுங்கியவனுமான தலைவன், நின்மாட்டும் நணுகிலனோ - (என்னிடத்திற்போலவே) உன்னிடத்திலும் வந்துசேர்ந்திலனோ?

இதற்குத் துறைவிவரம், கீழ் கக - ஆஞ்செய்யுட்குக் கூறியதுகொண்டு உணர்க. அது, தோழிகூற்று; இது, தலைவிகூற்று. இது, கடலைநோக்கித் தன்னைப்பொப்பத் துன்பமுறுவதாகக்கருதிக் கூறியது. இங்ஙனம் தலைவி சொல்லுதலின் பயன் - தலைமகன் கேட்பின், விரைவில் வெளிப்படையாக மணம்புரிந்துகொள்வன்; தோழி கேட்பின், தலைவனுக்குச்சொல்லி விரைவில் மணம்புரிந்துகொள்ளச்செய்வள்; யாரும் கேளாராயின், தலைவிதானே சொல்லி ஆறினளாம். 'நின்மாட்டும்நணுகிலனோ' என்பதற்கு - (இத்தலைவியிடத்திற் போலவே) உன்னிடத்திலும் வந்து சேர்ந்திலனோ? என்று பொருள்கொண்டு, இதனையும் தோழிகூற்றென்றலுமாம். இதுவும், செம்மொழிச்சிலேடையுவமையணி கொண்டது. 'நின்கண் முத்துகுத்து' என்றது முதலிய தொடர்கள் இருபொருள்பட்டமை காண்க. தலைவி வளையல் கழலச் சிந்துதல், பிரிவாற்றாமைத்துயரால் உடல் மிகமெலிந்தது பற்றி.

பல குவளைமலர்கள் - எம்பெருமானது நீலநிறமுள்ள திருமேனிக்கும், அவற்றிடையே சிலசெந்தாமரைமலர்கள்-வாய் கண் கை உந்தி பதம் ஆகிய திருவவயவங்கட்கும் உவமை. குவலயம் என்ற வடசொல்,குவளை என விகாரப்பட்டது. கஞ்ஜம் - வடசொல்: நீரில் தோன்றுவதென்று பொருள்படும்: கம் - நீர். நல - நல்ல என்பதன் தொகுத்தல். கு - வடசொல். நின்மாட்டும், உம் - இறந்தது தழுவிய எச்சம். முத்து - நீர்த்துளியைக் குறிக்கும்போது, உவமையாகுபெயர்.

எம்பெருமானது பிரிவை யாற்றாமல் வருந்துகின்ற ஐயங்கார் தமக்கு உள்ள கலக்கத்தால் தம் கண்ணெதிர்ப்படுகிற பொருள்களையெல்லாம் தம்மைப்போலவே எம்பெருமானதுபிரிவினால் வருந்துகின்றனவாகக்கொண்டு, கடலைநோக்கி 'நீயும் நான்பட்டது படுகின்றனையோ?' என்று வினவுதல், இதற்கு உள்ளுறைபொருள். தம்மைப்போலவே பிறரையும் பாவித்தல், பெரியோரியல்பு. இவர்க்கு, வளைக்குலம் சிந்துதல் - அடிமைக்கு அறிகுறியான ஆத்மகுணங்கள் குலையப்பெறுதல்;பாரதந்திரியம்நீங்கிஸ்வாதந்திரியம் மிகுதல். மற்றவை, முன்கூறியவாற்றால் விளங்கும்.

''காமுற்ற கையறவோ டெல்லே யிராப்பகல், நீமுற்றக் கண்டுயிலாய் நெஞ்சுருகி யேங்குதியால், தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான் தாள்நயந்த, யாமுற்றதுற்றாயோ வாழிகனைகடலே'' என்ற திருவாய்மொழிப்பாசுரத்தைப்பின்பற்றியது, இது.''வாயினிரங்கினை யாரமெறிந்தனை வால்வளை சிந்தினை தண், பாயலையுந்தினை மாலை யடைந்தனை பாரினுறங்கிலையால், கோயிலரங்கனை மாகனகந்திகழ் கோகனகம்பொலியும், ஆயிழைநண்பனை நீயும்விரும்பினையாகு நெடுங்கடலே'' என்றார் திருவரங்கக்கலம்பகத்தும். இவை, பிரிவுக்காலத்திற் கடலைநோக்கிப் பெண்பால் இரங்கியன. (இங்ஙனமே ஆண்பால் இரங்குதலை, ''போவாய் வருவாய் புரண்டுவிழுந் திரங்கி,

காவாய் குழற கடுங்குறவாய் - தீவாய், அரவகற்றுமென்போல வார்கலியே மாதை, யிரவகற்றி வந்தாய்கொ லின்று" என கஎவெண்பாவிற் காண்க.)

[நீட்டித்து வந்த தலைவனோடு தலைவி ஊடிப்பேசுதல்.]

கூஎ. முற்றிலைப்பந்தைக்கழங்கைக்கொண்டோடினை முன்னும்பின்
மற்றிலைதீமை யவைபொறுத்தோந் தொல்லையாலினிளங் [று
கற்றிலைமேற்றுயில்வேங்கடவா வின்றுன்கான்மலரால்
சிற்றிலைத்தீர்த்ததற்குப்பெருவீட்டினைச்செய்தருளே.

(இ - ள்.) தொல்லை-முற்காலத்தில் [பிரளயகாலத்தில்], ஆலின் இளங் கன்று இலைமேல் - இளமையான ஆலங்கன்றினது இளந்தளிரின்மேல், துயில் - பள்ளிகொண்டு யோகநித்திரை செய்த, வேங்கடவா - திருவேங் கடமுடையானே!—முன்னும் - முன்னமும், (நீ எம்முடைய), முற்றிலை - சிறுமுறத்தையும், பந்தை - பந்தையும், கழங்கை-(ஆடுதற்குஉரிய) கழற்காய் களையும், கொண்டு ஓடினை - எடுத்துக்கொண்டு ஓடினாய்: பின்னும் தீமை அற்றிலை - பின்பும் (எம்பக்கல்) தீங்குசெய்தலை ஒழிந்தாயில்லை; அவை பொறுத்தோம் - அப்பொல்லாங்குகளையெல்லாம் யாம் பொறுத்திட்டோம்; இன்று - இப்பொழுது, உன் கால் மலரால் - உனது திருவடித்தாமரையி னால்,சிற்றிலை தீர்த்ததற்கு -(யாம் மணல்கொண்டு விளையாட்டாகஅமைத்த) சிறுவீட்டைச் சிதைத்ததற்கு ஈடாக, பெரு வீட்டினை செய்தருள் - பெரிய தொரு வீட்டை (எமக்கு)க் கட்டிக்கொடுப்பாய்; (எ - று.)

இன்றியமையாததொரு காரியத்தினிமித்தம் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் மீண்டுவருவதாகக் குறித்த பருவத்தில் வாரானாய்க் காரிய வசத்தாற் சிறிதுநீட்டிக்க, அதற்குள்ளே தலைவி'தலைவன்வாராதது, என்னை உபேக்ஷித்து என்னினும் அழகுசிறந்த வேறுபலமகளிர்பக்கல் உறவுகொண் டதனாலாம்' என்று எண்ணிப் பிணங்கி 'இனி அவன் வந்தாலும் நாம் முகங் கொடுப்பதில்லை' என்று நிச்சயித்துத் தனது தோழியரையும் தான்வளர்த்த கிளி பூவை முதலிய பேசும்பறவைகளையும் தன்வழிப்படுத்திவைத்துக்கொ ண்டு ஓரிடத்திலே அவர்களோடு விளையாடுகிற வியாஜத்தாற் பராமுகமா யிருக்க, பின்பு மிக்க அன்போடு வெகுவிரைவாக மீண்டுவந்த தலைவன், பிரணயகோபத்தால் அணுகவொண்ணாதபடி யிருக்கின்ற இவளிருப்பைக் கண்டு வருந்திச் சிந்தித்து அருகிற்சென்று தோழியர்மூலமாக இவளுடைய ஊடலைத் தீர்க்கக் கருதி நோக்கியவிடத்து, அவர்களும் தலைவியின்கோட் பாட்டின்படி தங்களில் ஒருமித்து அவனை அநாதரித்து முகம்மாறி மிக்க கோபங்காட்ட, அவ்வாயிலைப் பெறானாய்க் கிளி பூவை முதலியவற்றைக் கொண்டு ஊடல்தணிக்கப்பார்த்து அவையும் தலைவியின் சங்கேதப்படி தன்னைஉபேக்ஷித்ததனால் அவ்வாயிலையும்பெறாது மிகவருத்தமுற்று,அசேதந மாகையால் தன்னை உபேக்ஷித்துப்போகமாட்டாமல் அங்குக்கிடந்த இவளு டைய விளையாட்டுக்கருவிகளான முற்றிலையும் பந்தையும் கழங்கையும் எடுத்து அவற்றைத் தன்உடம்பின்மேற்படவைத்துத் தழுவியும் அன்போடு நோக்கியும் கண்களில் ஒற்றியும் தலைமேல் வைத்துக்கொண்டு தான் ஒரு

வாறு ஆறித் தனது காதலையும் தலைவிக்குப் புலப்படுத்த, அச்செயல்களை யெல்லாம் அவள் வேறுசில மகளிரைப் பிரிந்த ஆற்றாமையால் இவன்செய்கின்றன வெனக்கொண்டு சீற்றங்காட்டி உறவறப்பேச, முதலில் தலைவி நோக்கையும்பெறாதிருந்த அத்தலைவன், முகம்பார்த்து அவ்வளவு வார்த்தை பேசப்பெற்றதையே தாரகமாகக்கொண்டு, அவ்வார்த்தைகட்கு எற்றவிடைகள்சொல்லுகிறவியாஜத்தாற் பேச்சுவளர்த்திக்கொண்டே மேன்மேல்நெருங்கிக் கிளிபூவைகளோடுகொஞ்சிப்பேசுதல், அருகிற்கிடந்தஅவளதுவிளையாட்டுமரப்பாவையை யெடுத்தல், அவள்கையிலுள்ள பாவையைத் தொட்டுப் பறித்தல், அங்குநில்லாமல் தோழியருடன் அப்பாற்செல்லப்புக்க அவளைக் கைகளால் வழிமறித்துத்தடுத்தல் முதலியன செய்து அவளை ஊடல்தணிக்க முயன்றவிடத்தும் அவள் சினந்தணியாள்போன்று தனது உள்ளக்காதலைப் புலனாகாதபடி மறைத்துக்கொண்டு அவனைப் புறக்கணித்துத் தோழியரோடு மணலிற் சிற்றிலிழைத்து விளையாடாநிற்க, இவனது கடைக்கண் பார்வையை எதேனும் ஒருவிதத்தாற்பெற்றுத் தான் உய்யலாமென்று பார்த்து அவன் இவளமைத்தசிற்றிலைத் தன்கால்களாற்சிதைக்க, அப்பொழுது அவனுடைய முகத்தைப் பார்த்து அவனது கண்ணழகு முதலியவற்றால் நெஞ்சுருகி நிலைகலங்கியவளாயினும் அவள் முற்றின புலவியின் தொடர்ச்சியாற் சிறிது ஊடல்காட்டிப் பேசியது, இது. திருவாய்மொழியில் ஊடற்பாசுரமான "மின்னிடை மடவார்கள்" என்ற திருப்பதிகம் முழுவதும் இச்செய்யுட்கு மூலமாம்.

'பின்னும் அற்றிலை தீமை' என்றது - கிளிபூவைகளோடு கொஞ்சிப் பேசுதல், மரப்பாவையையெடுத்தல், கையிற்பாவைபறித்தல், வழிமறித்தல் முதலியவற்றைக் குறித்தது. 'பொறுத்தோம்' என்றதை, உயர்வுபற்றிவந்த தனித்தன்மைப்பன்மை யென்றாவது,தோழியரையுங்கூட்டிச்சொன்ன உளப்பாட்டுத் தன்மைப்பன்மை யென்றாவது கொள்க. 'ஆலினிலைமேல் துயில் வேங்கடவா' என்றது, பிரமன் முதலிய சகலதேவர்களு முட்பட யாவும் அழிந்துபோகின்ற கல்பாந்தகாலத்திலே ஸ்ரீமகாவிஷ்ணு அண்டங்களை யெல்லாம் தன்வயிற்றில்வைத்து அடக்கிக்கொண்டு சிறுகுழந்தை வடிவமாய்ப் பிரளயப்பெருங்கடலிலே ஆதிசேஷனது அம்சமானதோர் ஆலிலையின்மீது பள்ளிகொண்டு அறிதுயில்செய்தருள்கின்றனனென்ற வரலாறு பற்றி. இங்கு இதுகூறி விளித்தது,நினது செயற்கரியனசெய்யுந்திறம்விசித்திர மென்றவாறும். 'பெருவீட்டினைச் செய்தருள்'என்றது, இனி என்னைப் பிரியாது என்னுடன் என்றுங் கூடியிருந்து சிறந்த இல்வாழ்க்கையின்பத்தைத் தந்தருள்வாயென்று வேண்டுகிற குறிப்பாதலால், இது, ஊடல்தணிகிறநிலைமையில் நிகழ்ந்த பேச்சென்க.

அற்றிலை - முன்னிலை யொருமை யெதிர்மறை யிறந்தகாலமுற்று; அறு - பகுதி. தொல்லை - தொன்மை; 'ஐ' விகுதிபெற்ற பண்புப்பெயர்: இது, பண்பாகுபெயராய், பழையநாளைக் குறித்தது. கன்று + இலை = கற்றிலை ; மென்றொடர்,வேற்றுமையில் வன்றொடராயிற்று. 'கன்று' என்றது, இங்கு, மரத்தின்இளமைப்பெயர்; இளமரம். பிரளயப்பெருங்கடலிற் புதி

தாகத்தோன்றியதோ ராலமரத்தின் இளமையான இலை யென்பார், 'ஆலி னிளங்கற்றிலை' என்றார். சிறுமை + இல் = சிற்றில்; பண்புப்பெயர் ஈறு போய்த் தன்னொற்றுஇரட்டிற்று: இல் - வீடு.

தியானநிலையிலே ஐயங்காரதுஅகக்கண்ணுக்குப்புலனாகிமறைந்த எம்பெருமான் மீளவும்வந்துதோன்றானாக, இவர்தம்மினும்விலக்ஷணரான வேறு பலஅடியார்கள்பக்கல் அன்பினால் தம்மைஉபேக்ஷித்தனனென்று கொண்டு கலங்கி, அக்கலக்கமிகுதியால் 'இனி அவன்தானேவந்தாலும், மீளவும்பிரிந்து வருத்துவனாதலால், யாம்கண்ணெடுத்துப்பார்ப்பதில்லை' என்று பிரணயரோஷங்கொண்டிருக்கிறநிலையில், அடியவரைக்கைவிடாத இயல்புடையனான அப்பெருமான் மீளவும்வந்து அவர்க்குவந்தேறியாயுள்ள பராமுகத்தன்மையைப் போக்கி அவரை அபிமுகராக்கிக்கொள்ளப் பலவகையால் முயன்றபோது, அவர் தமதுமூர்த்திமத்ஸ்தாபந் தோன்ற அப்பெருமானைநோக்கிப் பேசும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். 'முற்றில்' என்றது, கொள்வன தவிர்வன ஆய்ந்துணரவல்ல விவேகத்தை. 'பந்து' என்றது, சரீரத்தை; ஸத்வகுணம் ரஜோகுணம் தமோகுணம் என்கிற மூன்று குணங்களோடு விசித்திரமான கர்மமாகிய கயிறுகொண்டு கட்டி எம்பெருமான் அந்தராத்மாவாயிருந்து செலுத்த விழுந்தும் எழுந்தும் சுழன்றும் உழன்றும் சமயபேதத்தால் விரும்பவும் வெறுக்கவும் படுவதான உடம்பு, செந்நூல் வெண்ணூல் கருநூல்கொண்டு புனையப்பட்டு உரியவர் விளையாட்டாகச்செலுத்த விழுந்தெழுந்து சுழன்றுஉழன்று கூடியநிலையில் விரும்பவும் கூடாதநிலையில் வெறுக்கவும் படுவதான பந்தென்னத் தகும். 'கழங்கு' என்றது, ஐம்பொறிகளை: ஐம்புலநுகர்தற்கருவியான பஞ்சேந்திரியங்கள், சிறுகி அஞ்சாயிருக்கிற விளையாட்டுக்கருவியான கழங்குகளெனப்பட்டன. இவற்றை முன்பு அவன் கொண்டு ஓடியதாவது - இவருடைய விவேகம் முதலியவற்றை முன்னமே அவன் இவர்வசமின்றித் தன்வசப்படுத்திக் கொண்டமை. மற்றும் இவருடைய ஐம்புலன் முதலியவற்றையும் அவன் வலியத் தன்வசப்படுத்திக்கொண்டதை 'பின்னும்அற்றிலை தீமை' என்று குறித்தார். இடையிலே அவன் உபேக்ஷித்துவிட்டதாக இவர் கருதிக் கொண்ட வெறுப்பினால், அந்நன்மையையே 'தீமை' என்றார். 'அவைபொறுத்தோம்' என்றது, நீசெய்கின்ற செயல்கட்கெல்லாம் இலக்காம்படி யாம் பாதந்திரமாயிருந்தோமென்றபடி; பன்மை, தனித்தன்மைப்பன்மை யென்றாவது, அன்பர்களைக்கூட்டிச்சொன்னதென்றாவது கொள்ளத்தக்கது. 'தொல்லையாலினிளங்கற்றிலைமேல்துயில் வேங்கடவா' என்றது, லோகரக்ஷணத்தில் ஜாக்கிரதையுள்ளவனே யென்றபடி. 'இல்' ஆவது, போகாநுபவத்திற்கு உரிய இடம். 'சிற்றில்' என்றது, சிற்றின்பநுகர்ச்சிக்குஉரிய பிரபஞ்சவாழ்க்கையை. உனதுதிருவடிஸ்பரிசத்தால் எனது இவ்வுடல்வாழ்விலாசையை யொழித்ததற்கு ஈடாக மீண்டும் இவ்வகைநிலையிலாவாழ்க்கையைத் தாராமல் பெருவீடானபரமபதத்தைத்தந்தருள்க வென்பது, இறுதிவாக்கியத்தின்கருத்து. இடையிடுள்ள நினது அநுபவமாயின் எமக்கு வேண்டா: நிரந்தராநுபவம் தந்தருள்வதானால் தந்தருள் என்ற போக்கு அமைய 'பெருவீட்டினைச்

செய்தருள்' என்றதனால், இது மகஸ்தாபந்தீர்கிறநிலையில் நிகழ்ந்த பேச் சென்க. இங்குக் குறிப்பாகக்காட்டிய ஸ்வாபதேசார்த்தங்களின் விவரணம், ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயம்வல்லார்வாய்க் கேட்டு உணரத்தக்கது. (கூஎ)

கூஅ. அரும்பாதகன்பொய்யன்காமுகன்கள்வனருள்சிறிதும்
அரும்பாதகன்னெஞ்சனாருச்சினத்தனவாவினின்றுந்
திரும்பாதகன்மத்தனானேற்குச்சேடச்சிலம்பமர்ந்த
திரும்பாதகஞ்சந்தரிலதுகாணுன்றிருவருளே.

(இ - ள்.) அரும் பாதகன் - (போக்குதற்கு) அரிய பாவங்களையுடையவ னும், பொய்யன் - பொய்பேசுபவனும், காமுகன் - சிற்றின்பவிருப்பமுடை யவனும், கள்வன் - களவுசெய்பவனும், அருள் சிறிதும் அரும்பாத கல் நெஞ் சன் - கருணையென்பது சிறிதேனுந்தோன்றப்பெறாத கல்லைப்போன்ற கடின சித்தமுடையவனும், ஆறா சினத்தன் - தணியாக்கோபமுள்ளவனும், அவா வினின்றும் திரும்பாத கன்மத்தன் - ஆசையினின்று மீளாத கருமத்தை யுடையவனும், ஆனேற்கு - ஆகிய எனக்கு, சேடன் சிலம்பு அமர்ந்து அதி ரும் பாத கஞ்சம் தரில் - திருவேங்கடமலையி லெழுந்தருளி (பாததண் டைகள்) ஒலிக்கப்பெற்ற (நினது) திருவடித்தாமரைமலர்களைக் கொடுத் தால், அதுகாண் உன் திரு அருள் - அதுவன்றோ உனது மேலானகருணை யாம் ; (எ - று.)—காண் - தேற்றம்.

தீக்குணந் தீச்செயல்கட்கெல்லாங் கொள்கலமான என்னை உன் திருவடிக்கு ஆளாக்கிக்கொள்ளுதலே நினதுதிருவருட்குச் சிறப்பு என்ப தாம். 'அரும்பாதகன்' என்றது முதலாகத் தமதுதாழ்வை எடுத்துரைத் தார். எம்பெருமானுக்கு இயல்பில் அடிமையாகவுள்ள தமதுஆத்மாவை அங் ஙனம்எண்ணாது ஸ்வதந்திரமென்று எண்ணுதல் அவனுக்கு உரியபொரு ளைக் களவுசெய்த தாகுதலால், அங்ஙனம் அகங்காரமுடையே னென்பார், தம்மை 'கள்வன்'என்றார்; "பண்டேயுன்தொண்டாம் பழவுயிரை யென்ன தென்று, கொண்டேனைக் கள்வனென்று" என்னும் நூற்றெட்டுத்திருப் பதியந்தாதியையுங் காண்க. "அவாவென்ப வெல்லாவுயிர்க்குமெஞ்ஞான்றுந், தவாஅப்பிறப்பீனும்வித்து"என்றபடி அவா கர்மத்துக்கு மூலகாரண மாத லால், 'அவாவினின்றுந் திரும்பாத கன்மம்' எனப்பட்டது. சிலம்பு - மலை. அணியப்பட்ட ஆபரணத்தின் அதிர்ச்சியை அணியும்உறுப்பான திருவடியின் மே லேற்றிச் சொன்னது, இடத்துநிகழ்பொருளின்தொழிலை இடத்தின் மேற் சார்த்திக்கூறிய உபசாரவழக்கு.

காமுகன் - காமமுடையவன். சேஷன் என்ற பெயர் - (பிரளயகாலத் திலும் அழியாது) சேஷித்திருப்பவனென்று காரணப்பொருள்படும்; சேஷி த்தல் - மிச்சப்படுதல். ஈற்றடியில், 'திருப்பாதகஞ்சம்' என்பது மெலித்தல் விகாரம் பெற்றுவந்த தெனக்கொண்டு, சேஷகிரியில் நின்ற திருவடித்தாம ரைமலர்கள் என்று உரைகொள்ளுதலும் உண்டு. (கூஅ)

கூகூ. திருமந்திரமில்லை சங்காழியில்லை திருமணில்லை
தருமந்திரமொன்றுஞ்செய்தறியீர் செம்பொற்றானவனை
மருமந்திரங்கப்பிளந்தான்வடமலைவாரஞ்செல்லீர்
கருமந்திரண்டதையெத்தாற்களையக்கருதுதிரே.

(இ - ள்.) (பேதைச்சனங்களே! உங்கள்பக்கல்), திரு மந்திரம் இல்லை - பெரியதிருமந்திரமெனப்படுகிற திருவஷ்டாக்ஷரமகாமந்திரம் இல்லை; சங்கு ஆழி இல்லை - சங்கசக்கரமுத்திரை இல்லை; திருமண் இல்லை - திருமண்காப்பும் இல்லை; தருமம் திரம் ஒன்றும் செய்து அறியீர் - (எம்பெருமானைச்சரணமடைதலாகியசரணாகதி) தருமத்தை நிலையாகச்சிறிதும்செய்து பயின்றீரில்லை; செம் பொன் தானவனை - சிவந்த பொன்னின்நிறமுள்ள இரணியாசுரனை, மருமம் திரங்க - மார்பு வருந்த, பிளந்தான் - (நரசிங்கமூர்த்தியாய்ப்) பிளந்திட்டவனான எம்பெருமானுடைய, வட மலை வாரம் - திருவேங்கடமலையின் அடிவாரத்திலேனும், செல்லீர் - சென்றீரில்லை; (இத்தன்மையரானநீங்கள்), கருமம் திரண்டதை எத்தால் களைய கருதுதிர் - (உங்கள்) ஊழ்வினை தொகுதிப்பட்டுள்ளதை எவ்வாற்றால் நீக்க நினைக்கிறீர்கள்?

இங்ஙனம் இரங்கிக்கூறியதனால், இனியேனும் நீங்கள் ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமாய்உஜ்ஜீவநோபாயமாகிற திருமந்த்ரோபதேசத்தையும், தப்தசங்கசக்ரமுத்திரைதரிக்கப்பெறுதலாகிய திருவிலச்சினையையும், கேசவாதிதுவாதசநாமங்களை முறையேசொல்லிஉடம்பிற்பன்னிரண்டிடத்தில் திருமணிடுதலாகிய ஊர்த்வபுண்டரத்தையும் நல்லஆசிரியரது அருளாற்பெற்று, பிரபத்திமார்க்கத்தி லிழிந்து, துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநசீலனான எம்பெருமானுடைய திவ்வியதேசத்தைச் சார்ந்து, ஊழ்வினையொழித்து வாழ்வீர்களென்று அவைஷ்ணவர்கட்குக் குறிப்பித்தபடியாம். சங்காழி, திருமண், திருமந்திரம் என்பது முறையாயினும், தலைமைபற்றித் திருமந்திரத்தை முதலில் வைத்து, மந்திரோபதேசத்திற்கு அங்கமாகின்ற தாபத்தையும் புண்டரத்தையும் அதன்பின் நிறுத்தினர். பஞ்சஸம்ஸ்காரங்களில் தாபம் புண்டரம் மந்திரம் என்ற மூன்றைக் கூறினது, நாமம் யாகம் என்ற மற்றையிரண்டற்கும் உபலக்ஷணம்; (நாமம் - அடிமைப்பெயரிடப்பெறுதல். யாகம் - திருவாராதநக்கிரமம் அருளப்பெறுதல்.) 'எல்லாத்தருமங்களையும் பற்றறவிட்டு என்னையொருவனைச் சரணமாக அடை, நான் உன்னை எல்லாத்தீவினைகளினின்றும் விடுவிப்பேன், வருந்தாதே' என்றது ஸ்ரீகீதையிற் கண்ணன் அருளிய முடிவுரையாதல்கொண்டு, தருமம்என்பதற்கு - சரணாகதியென்று உரைக்கப்பட்டது. செம்பொற்றானவன் - செம்பொன்னின் பெயரையுடைய அசுரனெனினுமாம்; பொன் என்ற தென்மொழியும், ஹிரண்யம்என்ற வடமொழியும் பரியாயநாமமாதல் காண்க. பிறப்பு அநாதியாய்வருதலின் உயிரால் அளவின்றியீட்டப்பட்ட வினைகளின் பயன்கள் மலைபோலப் பெருந்தொகுதியாகக் குவிந்துள்ளதனால், 'கருமந் திரண்டது' என்றார்.

ஏது என்ற வினாப்பெயர் 'ஆல்'என்ற மூன்றனுருபை யேற்கும்போது இடையிலே தகரவொற்றுவிரிந்து, எத்தால் என நின்றது. கருதுதிர் என்ற முன்னிலைமுற்று, நிகழ்காலத்தில் வந்தது. (௯௯)

௧00. கருமலையும்மருந்துங்கண்ணுமாவியுங்காப்புமவன்
றருமலையுந்தியபேரின்பவெள்ளமுந்தாய்தந்தையும்
வருமலையுந்திருப்பாலாழியுந்திருவைகுந்தமுந்
திருமலையும்முடையானெனக்கீந்ததிருவடியே.

(இ - ள்.) வரு மலையும்-பொருந்திய திருக்கடல்மல்லை யென்கிற ஸ்தலத்தையும்,திரு பால் ஆழியும்-திருப்பாற்கடலையும், திரு வைகுந்தமும் - பரமபதத்தையும், திருமலையும் - திருவேங்கடமலையையும், உடையான் - (தனக்குத் தங்குமிடமாக) உடையவனான எம்பெருமான், எனக்கு ஈந்த - அடியேனுக்கு அருளிய, திரு அடி - சீர்பாதங்கள்,—(அடியேனுக்கு),—கரு மலையும் மருந்தும்-பிறவிநோயையொழிக்கிற மருந்தும், கண்ணும்—,ஆவியும் - உயிரும், காப்பும் - பாதுகாவலும்,அவன் தரும் அலை உந்திய பேர் இன்ப வெள்ளமும் - அவன் (பரமபதத்தில்) தந்தருளும் அலைகளையெறிகிற பேராநந்தப் பெருக்கும், தாய் தந்தையும் - தாய்தந்தையருமாம்; (எ - று.)

கரு மலையும் மருந்து—"மருந்தாங் கருவல்லிக்கு" என்பர் நூற்றெட்டுத்திருப்பதியந்தாதியிலும். திருவடியை 'மருந்து' என்றதற்கு ஏற்ப, பிறவியை 'நோய்'என்னுததனால்,ஏகதேசவுருவகவணி. இன்றியமையாதனவாய் அருமைபாராட்டப்படுதல்பற்றி 'கண்' என்றும், அங்ஙனம் தாரகமாதல் பற்றி 'உயிர்' என்றுங் கூறப்பட்டன. காப்பு-ரக்ஷகம். வெள்ளமென்றதற்கு ஏற்ப 'அலையுந்திய'என்ற அடைமொழி கொடுத்தது, பேரின்பத்தின்மிகுதியை யுணர்த்தும்; இது, சஞ்சலத்தையொழித்த என்றும் பொருள்படும். அன்புடன் ஆவனசெய்தலில், தாயும் தந்தையுமா மென்க. இச்செய்யுள் - பலபடப்புனைவணி.மூன்றமடியில், மல்லை யென்பது'மலை' எனத் தொகுத்தல்விகாரப்பட்டது. திருக்கடன்மல்லை - தொண்டைநாட்டுத்திருப்பதிகளி லொன்று. வரும் அலையும் என்று எடுத்து, இரண்டுபெயரெச்சங்களையும் திருப்பாற்கடலுக்கு அடைமொழியாக்குதலு மொன்று. வரும் அலை - பிரளயப்பெருங்கடல் எனினுமாம். (௧00)

---

மட்டளைதண்டலைசூழ்வடவேங்கடவாணனுக்குத்
தொட்டளையுண்டபிரானுக்கன்பாம்பட்டர்தூயபொற்று
ளொட்டளையுண்டமணவாளதாசனுகந்துரைத்த
கட்டளைசேர்திருவந்தாதிநூறுகலித்துறையே.

(இ - ள்.) பட்டர் - பட்டரென்ற ஆசாரியருடைய, தூய பொன் தாளுள் - பரிசுத்தமான அழகிய திருவடிகளிலே, தளை யுண்ட - பக்தியினாலாகிய சம்பந்தம்பெற்ற, மணவாளதாசன் - அழகியமணவாளதாசன், உகந்து உரைத்த - விரும்பிப் பாடிய, திரு அந்தாதி - சிறந்த அந்தாதிப்பிரபந்தவடி

வமான, நூறு கட்டளை சேர் கலித்துறை - நூறு கட்டளைக்கலித்துறைச் செய்யுள்களும்,—அளை தொட்டு உண்ட பிரானுக்கு - வெண்ணெயைக் கையினாலெடுத்து அமுதுசெய்த பிரபுவான, மட்டு அளை தண்டலை சூழ் வடவேங்கட வாணனுக்கு - வாசனை நிறைந்த சோலைகள் சூழ்ந்த வடக்கின்கணுள்ள திருவேங்கடமலையில் வாழ்கிற எம்பெருமானுக்கு, அன்பு ஆம்- பிரியமாம்; (எ-று.)

பட்டர் தூயபொற்றாளுள் தளையுண்ட - பட்டரது அந்தரங்கசிஷ்யரான என்றபடி. பட்டர் - கூரத்தாழ்வானுடைய குமாரர், எம்பாருடைய சிஷ்யர்: பண்டிதர்க்கு வழங்குகிற பட்டரென்ற பெயர், இவர்க்குச் சிறப்பாக வழங்கும்; இவர், ஸ்ரீபாஷ்யகாரரால் நாமகரணஞ்செய்தருளப்பெற்றவர். கட்டளைசேர்கலித்துறை - கலிப்பாவின் இனம் மூன்றனுள் ஒன்றான கலித்துறையினும் வேறுபட்டுவருவது; அதன் இலக்கணம்—"முதற்சீர்நான்கும் வெண்டளைபிழையாக், கடையொருசீரும் விளங்காயாகி, நேர்பதினாறே நிரைபதினேழென், றோதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே" எனக் காண்க. மட்டு - தேனுமாம். தாள் உள் தளையுண்ட - தாளினிடத்து மனப் பிணிப்புப் பொருந்திய எனினுமாம்.

இச்செய்யுள், நூலாசிரியர் தாமே தம்மைப் பிறன்போலும் பாயிரங் கூறியது. (பிரயோகவிவேகநூலார் 'இது, தன்னைப் பிறன்போலும் நாந்தி கூறுகின்றது,' 'வடநூலார் தாமே பதிகமும் உரையுஞ் செய்வார்'; 'இனிச் சம்பந்தர் சடகோபர் முதலாயினாரும் தியாகரும் பதினெண்கீழ்க்கணக்குச்செய்தாரும் முன்னாகப்பின்னாகப் பதிகங்கூறுவதுங் காண்க' என்றவை கருதத்தக்கன.) இது, தற்சிறப்புப்பாயிர மெனப்படும்.

திருவேங்கடத்தந்தாதி முற்றிற்று.

---

# திருவேங்கடத்தந்தாதிச்
# செய்யுண்முதற்குறிப்பகராதி.

# அழகரந்தாதி.

அழகரது அந்தாதி என விரியும்; அழகர்விஷயமாக அந்தாதித்தொடையாற் பாடப்பட்டதொரு பிரபந்தமென்பது பொருள். இத்தொடர்மொழியில் தொக்குநின்ற ஆறும்வேற்றுமையுருபின் பொருளாகிய சம்பந்தம், விஷயமாகவுடைமை; விஷ்ணுபுராணம், விநாயகரகவல் என்பவற்றிற்போல. அழகரைப்பற்றிய அந்தாதியென விரித்தால், இரண்டாம்வேற்றுமையுருபும்பொருளுமுடன்தொக்கதொகையாம்.

'அழகர்' என்பது - திருமாலின் திவ்வியதேசங்கள் நூற்றெட்டனுள் பாண்டியநாட்டுத்திருப்பதி பதினெட்டில் ஒன்றும், வநகிரி யென்று வடமொழியிற்கூறப்படுவதும், 'கோயில் திருமலை பெருமாள்கோயில் அழகர்திருமலை' என்று சிறப்பாக எடுத்துக்கூறப்படுகிற நான்குதலங்களுள் ஒன்றும், "இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலையென்னும், பொருப்பிடம் மாயனுக் கென்பர் நல்லோர்" என்றபடி ஆன்றோர்கொண்டாடப்பெற்ற மகிமையுடையதுமான திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானது திருநாமம்; ஸர்வாங்கஸுந்தரரென்னும்படி நிரம்பிய அழகையுடையவராதல்பற்றி வந்தது இப்பெயர். அலங்காரர், சுந்தரபாகு என்றும் அப்பெருமானுக்குத் திருப்பெயர்கள் வழங்கும்.

அந்தாதி - அந்தத்தை ஆதியாக வுடையது: அன்மொழித்தொகை; வடமொழித்தொடர், தீர்க்கசந்தி: அந்த ஆதி எனப் பிரிக்க. அந்தாதியாவது - முன்நின்றசெய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ்செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது; இங்ஙனம் பாடும் நூலினது ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல், மண்டலித்த லெனப்படும். இது, தொண்ணூற்றாறுவகைப்பிரபந்தங்களுள் ஒன்றும். பதிற்றந்தாதி நூற்றந்தாதி என்ற வகைகளில் இந்நூல் நூற்றந்தாதியாம். அதாவது - நூறுவெண்பாவினாலேனும் நூறுகட்டளைக்கலித்துறையினாலேனும் அந்தாதித்தொடையாற் கூறுவது. இந்நூல், அந்தாதித்தொடையா லமைந்த நூறு கட்டளைக்கலித்துறைகளை யுடையது. சொற்றொடர்நிலைச்செய்யுள், பொருட்டொடர்நிலைச்செய்யுள் என்ற வகையில் இது சொற்றொடர்நிலை; "செய்யுளந்தாதி சொற்றொடர்நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் "விருந்தேதானும், புதுவதுகிளந்த யாப்பின்மேற்றே" என்பதனால், "விருந்துதானும் பழங்கதைமேலதன்றிப் புதிதாகத் தாம் வேண்டியவாற்றால் தொடுக்கப்படுந் தொடர்நிலைமேலது" என்று கூறினமையின், இந்நூல், அங்ஙனங்கூறிய விருந்

தாம் என்று உணர்க. அச்சூத்திரவுரையில் அந்தாதியும் கலம்பகமும் முதலாயின உதாரணங்காட்டப்பட்டுள்ளவாறுங் காண்க. இனி, இதனைச்சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார். இப்பிரபந்தம், தோத்திரரூபமானது.

இந்நூலிலுள்ள கவித்துறைகள் யாவும் பெரும்பாலும் திரிபு என்னுஞ் சொல்லணியையும், சிறுபான்மை யமகம் என்னுஞ் சொல்லணியையும் உடையன. திரிபாவது - ஒவ்வோரடியிலும் முதலெழுத்துமாத்திரம் வேறுபட்டிருக்க, இரண்டுமுதலிய பலவெழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபடுவது; இதனையும் யமகவகையில் அடக்குவர் ஒருசாரார். யமகமாவது - பலஅடிகளிலாயினும் ஓரடியிற்பலஇடங்களிலாயினும் வந்த எழுத்துத்தொடர்களே மீண்டும்வந்து பொருள்வேறுபடுவது; இது, தமிழில் 'மடக்கு' எனப்படும். இந்நூற்செய்யுள்களிற் சிறுபான்மை காணப்படுகிற யமகங்கள், பலஅடிகளில் வந்தவை.



## சிறப்புப்பாயிரம்.

திருகவிமங்கைமணவாளவள்ளல்செந்தேன்றுளித்து
முருகவிழ்தென்றிருமாலிருஞ்சோலைமலைமுகுந்தற்
கிருகவின்றாள்களிற்சூடுமந்தாதியினீரைம்பதி
லொருகவிகற்கினுஞானமும்வீடுமுதவிடுமே.

(இதன்பொருள்.) திரு கவி - சிறந்த கவியாகிய, மங்கை மணவாளவள்ளல் - திருமங்கைநாட்டில் திருவவதரித்த அழகியமணவாளதாசரென்னும் வண்மைக்குணமுடையவர், செம் தேன் துளித்து முருகு அவிழ் தென் திருமாலிருஞ்சோலை மலை முகுந்தற்கு - செந்நிறமானதேன்சிந்தி வாசனைவீசப்பெற்ற அழகிய திருமாலிருஞ்சோலைமலையில் திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கிற திருமாலுக்கு, கவின் இரு தாள்களில் சூடும் - அழகிய இரண்டுதிருவடிகளிலே சாத்திய, அந்தாதியின் - இந்த அழகரந்தாதி யென்னும் பிரபந்தமாகிய பாமாலையி லுள்ள, ஈரைம்பதில் - நூறுசெய்யுள்களுள், ஒரு கவி - ஒருசெய்யுளை, கற்கினும் - கற்றாலும், (அக்கற்றவர்க்கு அக்கல்வியானது), ஞானமும் வீடும் உதவிடும் - நல்லுணர்வையும் பரமபதத்தையும் தவறாதுகொடுக்கும்; (என்றவாறு.)—ஈற்றுஏகாரம் - தேற்றம்.

அழகியமணவாளதாசர் இயற்றிய திருமாலிருஞ்சோலைமலையழகரந்தாதிப்பாசுரங்களுள் ஒன்றையோதியுணர்ந்தவரும் ஞானமுடையராய் ஸ்ரீவைகுண்டஞ்சேர்வர் என இந்நூற்பயன்கூறுமுகத்தால், இந்நூலின் சிறப்பையும் இந்நூலாசிரியரது தெய்வப்புலமையையும் தெரிவித்தவாறும். சிறப்புப்பாயிரவிலக்கணங்களுள் ஆக்கியோன்பெயரும், நூற்பெயரும், நுதலியபொருளும், பயனும் இச்செய்யுளில் விளங்குதல் காண்க.

திரு கவி - திவ்வியகவி யென்றபடி. திரு - மேன்மை. கவி - ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நாற்கவிகளைப் பாடுபவன். பொதுவிதிப்படி திருக்கவியென வலிமிகற்பாலது எதுகைநயம்நோக்கி 'திருகவி' என இயல்பாய்

நின்றது; இது, தொகுத்தலென்னுஞ் செய்யுள்விகாரத்தின்பாற் படும். திருகவி,மங்கைமணவாளவள்ளல் என்பன-ஒருபொருளின்மேல்வந்த பலபெயர்கள். மங்கைநாடு, சோழமண்டலத்தின் உட்பகுதிகளுள் ஒன்று; மண்ணியாற்றங்கரையில் திருவாலிதிருநகரியோடே சேர்ந்து அதில்ஏகதேசமென்னலாம்படியிருக்கும் திருக்குறையலூர் முதலிய ஊர்களைத் தன்னிடத்தேகொண்டது: திருமங்கையாழ்வாரும் இதில்திருவவதரித்தவரே. ஒருபெயரின்ஒருபகுதியைக் கொண்டு அப்பெயர் முழுவதையுங் குறிப்பதொரு மரபுபற்றி அழகியமணவாளதாசரை 'மணவாளன்'என்றார்;(இதனை,வடநூலார்,நாமைகதேசேநாமக்ரஹணம் என்பர்.) வள்ளல்-வரையாதுகொடுப்பவன்; உதாரி: வண்மையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர்; அல் - பெயர்விகுதி. மணவாளவள்ளல் - மணவாளனாகிய வள்ளல்என இருபெயரொட்டு. வேண்டுவார் வேண்டியபடியெல்லாம் பலவகைக்கவிகளைத் தட்டுத்தடையின்றிப் பாடித்தருமியல்பின ராதலாலும், எல்லாச்செல்வத்திலுஞ் சிறந்த முத்திச் செல்வத்தைத் தரவல்ல திவ்வியப்பிரபந்தங்களைப் பாடி எல்லாவுயிர்களும் எளிதில் உய்யுமாறு வழங்கியருளியவ ராதலாலும், 'வள்ளல்' எனப்பட்டனர். திரு கவி மங்கை என்பதற்கு - செல்வத்தால் மூடப்பெற்ற [அதாவது - செல்வம்நிறைந்த] மங்கை யென்ற ஊரில் அவதரித்த என்று உரைப்பாருமுளர்; இப்பொருளில், கவிமங்கையென்பது- வினைத்தொகை: செய்வினை, செயப்பாட்டுவினைப்பொருளது. இனி, திருகு அவிஎன்றுபிரித்து, மாறுபாடு [வஞ்சனை] இல்லாத என்று உரைத்து, மணவாளவள்ளலுக்கு அடைமொழியாக்குவர் ஒருசாரார். 'திரு கவிமங்கை மணவாள வள்ளல்' என்ற தொடர் சிறந்த கவநசக்தியாகிய பெண்ணுக்குக் கணவனாகிய உதாரி யென்ற ஒரு பொருள் தொனிக்குமாறு நிற்றலுங் காண்க; கவித்திறத்தைத் தன்வசத்திற் கொண்டு நடத்துபவ னென்றவாறு. மணவாளன் - மணம்+ஆளன் : கலியாணஞ்செய்துகொண்ட புருஷன். வள்ளல் சூடும் என இயையும்.

"ஆயிரம்பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே" என்றபடி மிகப் பெரிய பல சோலைகளை யுடைய மலை யாதலால், "மாலிருஞ்சோலைமலை' என்று திருநாமம்; மால் - பெருமை, இருமை - பெருமை; இவ்விரண்டும் தொடர்ந்து ஒருபொருட்பன்மொழியாய் நின்றன. மால் - உயர்ச்சி; இருமை - பரப்பு என்றுகொண்டு, உயர்ந்து பரந்த சோலைகளை யுடைய மலை யென்றலும் உண்டு. திரு - மேன்மைகுறிக்கும் அடைமொழி. பரதகண்டத்தில் தென்னாடாகிய பாண்டியநாட்டி லுள்ள மலையாதல்பற்றி, 'தென்திருமாலிருஞ்சோலைமலை' எனப்பட்டதாகவும் கொள்ளலாம். வடக்குத் திருமலையாகிய திருவேங்கடத்தோ டொத்த தெற்குத்திருமலை யாதலாலும், 'தென்' என்ற அடைமொழி திருமாலிருஞ்சோலைமலைக்கு ஏற்கும்; அதனை 'வடதிருவேங்கடம்' என்பது காண்க. (தென் என்று - அழகாதல்; தெற்குத்திக்கிலேயான வென்னுதல். மால்என்றும் இருமையென்றும் இரண்டும் பெருமைக்கு வாசகமாய், சோலையினுடைய ஒக்கத்தையும் பரப்பையும் சொல்லுகிறது. இப்படியிருக்கிற சோலைகளை யுடைத்தாகையாலே, மாலிருஞ்சோலையென்று அத்தேசத்துக்கு நிரூபகம்; 'வநகிரியித்தே' என்ற ஸ்ரீமண

வாளமாமுனிகள் வியாக்கியானவாக்கியம் உணரத்தக்கது.) 'செந்தேன்துளி த்துமுருகவிழ்' என்றஅடைமொழி, அம்மலைச்சோலைகளிலுள்ள மலர்களின் செழுமையையும் சிறப்பையும் விளக்கும். முகுந்தன் என்ற வடமொழி-முத்தி யின்பத்தையும், இவ்வுலகவின்பத்தையும் தருபவன் என்று பொருள்பெறும்; மு - முக்தி, கு - பூமி. முகுந்தற்கு என்பதை உருபுமயக்கமாகக்கொண்டு முகுந்தனது என்றலு மொன்று.

இருதாள் - உபய பாதம். இரு கவின் தாள் - இயற்கையழகு, அணிகல மணிவதனலாகுஞ் செயற்கையழகு என்னும் இருவகையழகையு முடைய திருவடி யெனினும் அமையும். சூடும் என்ற வினைச்சொல்லின் ஆற்றலால், அந்தாதி பாமாலை யெனக் கொள்க. ஈரைம்பது - பண்புத்தொகை; இது- ஆகுபெயராய், அத்துணைச்செய்யுளின்மேல்நின்றது. பாடுவோனை யுணர்த் தும் 'கவி'என்ற வடசொல் - ஈற்றடியில், கருத்தாவாகுபெயராய், அவனாற் பாடப்பட்ட பாடலின்மேல் நின்றது. ஒருகவிகற்கினும், உம்-இழிவுசிறப்பு: ஒன்று என்னும் எண்ணின் சிறுமை பற்றியது. ஞானமென்றது - கல்வி யறிவோடு, வீடுபயக்குமுணர்வாகிய தத்துவஞானத்தையுங் குறித்தது;"ஞா னமும் புகழு முண்டாம், வீடியல்வழியதாக்கும்" என்றவிடத்துப் போல. "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாராநெறி" என்றபடி கல்விக்குப் பயன் ஞானமும் அதன் பயன் வீடு மாதலால், அக் காரணகாரியமுறைமை தோன்ற, 'கற்கின் ஞானமும் வீடும் உதவிடும்' என்றார். ஜ்ஞாநம் - வடசொல். ஜ்ஞாநமாவது, முத்தியுணர்வு; மற்றை யறிவு, விஜ்ஞாந மெனப்படும்: இவ்வேறுபாடு, வடநூலிற் கண்டது. வீடு - இருவினைப்பாசபந்தத்தை விட்டு அடையும் இடம்; 'முக்தி' என்ற வடசொ ல்லின் பொருள்கொண்ட பெயர். உதவிடும், 'இடு' என்ற துணைவினை - துணிவு உணர்த்தும்.

இக்கவி அபியுக்தரிலொருவர் செய்த தென்பர். இது, வைஷ்ணவ சம்பிரதாயத்தில் தனியன் எனப்படும். (நூலினுள் அடங்காது தனியே பாயிர மாய்நிற்றல்பற்றியது, அப்பெயர்; 'அன்' விகுதி - உயர்வுப்பொருளது.)



## காப்பு.

காப்பு - காத்தல்; அது, இங்கு, காக்கின்ற கடவுளின் விஷயமான வணக்கத்தைக் குறிக்கும்: ஆகவே, கவி தமக்குநேரிடத்தக்க இடையூறுகளை நீக்கித் தமதெண்ணத்தைமுடிக்கவல்ல தலைமைப்பொருளின் விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது கருத்து. இக்காப்புச்செய்யுள், ஆழ்வார்கள் பன்னிருவருட் பிரதானரான நம்மாழ்வாரைப் பற்றியது. ஸ்ரீவைஷ்ணவ சமயத்தவரான இந்நூலாசிரியராற்கூறப்பட்ட இக்காப்புச்செய்யுள்,விஷ்ணு பக்தர்களிற்சிறந்த ஆழ்வாரைக் குறித்த தாதலால், வழிபடுகடவுள்வணக்க மாம். தம்தமது மதத்துக்கு உரிய கடவுளை வணங்குதலே யன்றி அக்கடவு ளின் அடியார்களை வணங்குதலும் வழிபடுகடவுள்வணக்கத்தின்பாற் படு மென அறிக. ஆழ்வார் திருமாலின்அவதார மாதலாலும், அவரை வணங்கு

தல் வழிபடுகடவுள்வணக்கமேயாம். அவ்வாழ்வாரால் வெளியிடப்பட்ட திவ்வியப்பிரபந்தங்களின் சொற்பொருட்கருத்துக்களமைய அம்முதனூலுக்கு வழிநூல்போலச் செய்யப்படுவது இப்பிரபந்த மென்பதுபற்றி, இந்நூலின் இக்காப்புச்செய்யுளே வழிபடுகடவுள்வணக்க மென்று அறிந்திற் கொள்ளவும் அமையும்.

அங்கத்தமிழ்மறையாயிரம்பாடியளித்துலகோர்
தங்கட்குவீடருளும்புருடோத்தமன் றண்வகுளத்
தொங்கற்பராங்குசன் றாளிணை மாலிருஞ்சோலைமலைச்
சங்கத்தழகரந்தாதிநடாத்தத்தலைக்கொள்வனே.

(இ - ள்.) அங்கம் - (ஆறு) அங்கங்களையுடைய, தமிழ் மறை-தமிழ்வேதமாகிய, ஆயிரம் - ஆயிரம்பாசுரங்களை, பாடி—, அளித்து - (மதுரகவிகள் நாதமுனிகள் முதலிய நல்லோர்களுக்கு உபதேசமுகமாகக்) கொடுத்து, உலகோர்தங்கட்கு வீடு அருளும் - உலகத்தார்க்கு முத்தியைத் தந்தருள்கிற, புருடோத்தமன் - புருஷசிரேஷ்டரும், தண் வகுளம் தொங்கல் - குளிர்ச்சியான மகிழம்பூமாலையைத் தரித்த, பராங்குசன் - பராங்குசனென்னுந்திருநாமமுடையவருமான நம்மாழ்வாருடைய, தாள்இணை-உபயபாதத்தை,— மாலிருஞ்சோலைமலை சங்கத்து அழகர் அந்தாதி நடாத்த தலைக்கொள்வன்- திருமாலிருஞ்சோலைமலையில்எழுந்தருளியிருப்பவரும் தமிழ்ச்சங்கத்துக்குத் தலைவருமாகிய அழகரது விஷயமாக யான்பாடும் அந்தாதிப்பிரபந்தத்தை இடையூறின்றி நடத்துதற்பொருட்டுத் தலைமேற்கொண்டு வணங்குவேன்; (எ - று.)— ஏகாரம் - ஈற்றசை.

"மாறன்பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன், ஆறங்கம் கூற அவதரித்த" என்றபடி ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்ற நான்குவேதங்களுக்கும் சிக்ஷை வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்ற ஆறுசாஸ்திரங்களும் அங்கமாதல்போல, சதுர்வேதசாரமாக நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம் திருவாசிரியம் திருவாய்மொழி பெரியதிருவந்தாதி என்ற நான்குதிவ்வியப்பிரபந்தங்களுக்கும் திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய பெரியதிருமொழி திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம் திருவெழுகூற்றிருக்கை சிறியதிருமடல் பெரியதிருமடல் என்ற ஆறுபிரபந்தங்களும் அங்கமாகுதலால், 'அங்கத்தமிழ்மறை' எனப்பட்டது; "குருகூர ரங்கமறைத்தமிழ்மாலை" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும். (நம்மாழ்வார்பிரபந்தங்கள் வேதமாதலையும், திருமங்கையாழ்வார் பிரபந்தங்கள் அவற்றிற்கு அங்கமாதலையும் ஆசார்யஹ்ருதயம் முதலிய நூல்களிலும், அவற்றின்வியாக்கியானங்களிலும் பரக்கக்காணலாம்.) வேதங்களின் அர்த்தநிர்ணயத்துக்குச் சாஸ்திரங்கள் உபகாரகங்க ளாகையால், அங்க மெனப்படும்; அத்தன்மையை இங்குங் கொள்க. 'தமிழ்மறை யாயிரம்' என்றது, திருவாய்மொழியை. நான்குவேதங்களுள்ளும் ஸாமவேதம் சிறந்ததாதல் போல, சதுர்வேதசாரமான நம்மாழ்வார் பிரபந்தங்கள் நான்கனுள்ளும் ஸாமவேதஸாரமான திருவாய்மொழி பிரதாநமாதலால், அது இங்கு எடுத்

துக்கூறப்பட்டது. தலைமைபற்றி இதனை எடுத்துக்கூறியது, பிறவற்றிற்கும் உபலக்ஷணம். திருவாய்மொழி ஆயிரத்து நூற்றிரண்டு செய்யுள்களாயினும், சொச்சத்தொகையைக்குறியாது பெருந்தொகையை மாத்திரமே குறித்து, 'ஆயிரம்' என்றார்; எம்பெருமானுடைய ஆயிரத்தெட்டுத் திருநாமங்களை 'ஸஹஸ்ரநாமம்' என்றல்போல. நூறுபதிகத்திலுமுள்ள நூறுதிருநாமப்பாட்டுக்களையும் ஒதுக்குமிடத்து ஆயிரத்திரண்டேயாகுமன்றே. ("ஆராதகாதற் குருகூர்ச்சடகோபன், ஓராயிரஞ்சொன்னவவற்றுளிவைபத்தும், சோரார் விடார்கண்டீர் வைகுந்தந்திண்ணனவே", "குருகூர்ச்சடகோபன், கூறினவந்தாதியோராயிரத்துளிப்பத்துங், கூறுதல்வல்லாருளரேற் கூடுவர்வைகுந்தமே", "பண்டலையிற்சொன்ன தமிழாயிரத்திப்பத்தும்வல்லார், விண்டலையில்வீற்றிருந்தாள்வரெம்மாவீடே", "குருகூர்ச்சடகோபன்சொல், கேடிலாயிரத்துள்ளிவைபத்தும், கேடில்வீடுசெய்யுங் கிளர்வார்க்கே" என்றபடி) திருவாய்மொழியோதினவர்கள் முத்திபெறுதலால், 'ஆயிரம்பாடியளித்துலகோர்தங்கட்கு வீடருளும் புருடோத்தமன்' என்றார். ("மாறன்மலரடியே, வீசுபுகழெம்மாவீடு", "அருள்கொண்டாடு மடியவரின்புற, அருளினனவ்வருமறையின்பொருள், அருள்கொண்டாயிரமின்தமிழ்பாடினன், அருள்கண்டீரிவ்வுலகினின்மிக்கதே" என்பவையும் இங்கு உணரத்தக்கன.)

புருஷோத்தமன் என்ற வடமொழிப்பெயர், புருஷ உத்தமன் என்று பிரியும்; குணசந்தி: 'அ ஆ முன் உ ஊ வரின் இரண்டுங்கெட ஓர் ஒகாரம் தோன்றும்.' புருடோத்தமன் - புருடரிற்சிறந்தவன்; உத்தமபுருஷன். பிரபந்நஜநகூடஸ்தராதலால், ஆழ்வார், புருடோத்தம னெனப்பட்டனர். ஆழ்வார் நாராயணாம்ச மாதலால், அவரை, அத்திருமாலின் திருநாமமாகிய 'புருடோத்தமன்' என்ற பெயராற் குறித்தன ரென்றுங் கொள்ளலாம்; "வேதந் தமிழ்செய்த மெய்ப்பொருளே" என்றார் பிறரும். தம்பக்கல் திருவுள்ள முவந்து திருக்குருகூர்ப் பொலிந்துநின்றபிரான் பிரசாதித்த மகிழமலர்மாலையைத் தரித்ததனால், ஆழ்வார்க்கு 'வகுளாபரணர்' என்று ஒரு திருநாமம் வழங்கும். மிகக்களித்துக் கொழுத்துக் செருக்கித் திரிந்து எதிர்த்து வாதப்போர்க்குவரும் பிறமதத்தவராகிய மதயானைகளைத் தமது பிரபந்தங்களிற்கூறிய தத்துவார்த்தங்களைக்கொண்டு செருக்கடக்கிக் கீழ்ப்படுத்தித் தம்வசத்தில் வைத்து நடத்துந் திறமுடையராய் அவற்றிற்கு மாவெட்டியென்னுங் கருவி போலுதலால், நம்மாழ்வார்க்குப் பராங்குச னென்று ஒருதிருநாம மாயிற்றென்க; பர அங்குச என்று பிரிக்க: தீர்க்க சந்திபெற்ற வடமொழித்தொடர். 'அஆமுன் அஆவரின் இரண்டுங்கெட ஓர்ஆகாரம் தோன்றும்'. பரர் - அயலார், அங்குசம் - மாவெட்டி, தோட்டி. சங்கம்-புலவர்கூட்டம். தமிழ்ச்சங்கத்துக்குத் திருமாலிருஞ்சோலைமலையழகர் தலைவராதலை, "தண்டமிழ்ச்சங்கத்தனியிறையவனே," "சுத்தத்தமிழ்ப் புலவர், சங்கத்திருப்பிரியான்" என்ற அழகர்கலம்பகத்தாலும் அறிக.

அங்கம், வகுளம், ஸங்கம் - வடசொற்கள். வகுளமென்ற மகிழமாத்தின்பெயர், இங்கு அதன் மலர்க்குச் சினையாகுபெயராம். தொங்கல் - தொங்குவதென்னும்பொருளதாய், மாலைக்குக் காரணக்குறியாம்; இதில், அல் -

கருத்தாப்பொருள்விகுதி: இனி, தொக்கல் என்பதைத் தொழிலாகு பெயரெனினும் இழுக்காது. தாளிணை தலைக்கொள்வன் என இயையும். சங்கத்து அழகர் என்பதற்கு - இடத்திருக்கையிலே ஸ்ரீபாஞ்சஜந்யமென்னுஞ் சங்கத்தை யேந்திய அழக ரெனினும் அமையும்; "அதிர்குரற் சங்கத் தழகர்" என்ற திருவாய்மொழியையும், 'ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருக்கையிலேயுடையராய் அச்சேர்த்தியழகாலே அதுதன்னையே தமக்குத்திருநாமமாகவுடையவர்' என்ற அதன்வியாக்கியானத்தையும், 'சங்கத்தழகரென்றே திருநாமம்' என்ற அதன் அரும்பதவுரையையுங் காண்க: இப்பொருளில், சங்கம் - ஶங்கமென்ற வடசொல்லின் திரிபு. நடாத்த - நடத்த என்பதன் விகாரம். தலைக்கொள்வன் என்பதில், 'அன்'விகுதி - தன்மையொருமைக்கு வந்தது. தலை - தலைமையான உறுப்பு; உத்தமஅங்கம்.

கைங்கரியசித்திக்குத் திருமாலிருஞ்சோலைமலையை ஆசிரயிக்கவேணுமென்று தமதுநெஞ்சத்துக்கும் உலகத்தார்க்கும் உபதேசமாக "கிளரொளியிளமை" என்ற தொடக்கத்துத் திருவாய்மொழிப்பதிகம் அருளிச்செய்த நம்மாழ்வாருடைய திருவடிகள் அவ்வழகர்விஷயமாக அந்தாதிபாடுதற்குக் காப்பாகக் கொள்ள உரியனவாதல் காண்க. ஆயிரத்தந்தாதி பாடியவாறு திருவருள் நூற்றந்தாதியை நடத்தத் தட்டில்லையன்றே.

இங்ஙனம் வணங்கியதனால், தொடங்கிய தொழில் இனிதுமுடியுமென்பது கருத்து.

---

## நூல்.

க. நீராழிவண்ணனைப் பாலாழிநாதனை நின்மலனைச்
சீராழியங்கைத்திருமகள்கேள்வனைத் தெய்வப்புள்ளூர்
கூராழிமாயனை மாலலங்காரனைக் கொற்றவெய்யோ
னோராழித்தேர்மறைத்தானை யெஞ்ஞான்றுமுரைநெஞ்சமே.

(இ - ள்.) நெஞ்சமே - (எனது)மனமே!—நீர் ஆழி வண்ணனை நீர்மயமான கடல்போலும் [கரிய] திருநிறமுடையவனும், பால் ஆழி நாதனை- திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கிற தலைவனும், நின்மலனை - குற்றமற்றவனும், சீர் ஆழி அம் கை திருமகள் கேள்வனை - சிறந்தமோதிரங்களை (த்திருவிரல்களில்) அணிந்த அழகிய கைகளையுடைய இலக்குமியின் கணவனும், தெய்வம் புள் ஊர் கூர் ஆழி மாயனை - தெய்வத் தன்மையையுடைய சிறந்தபறவையாகிய கருடனை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்துகிறவனும் கூரிய (சுதர்சநமென்னுஞ்) சக்கராயுதத்தை (வலக்கையில்) ஏந்தியவனும் விசித்திரசக்தியை யுடையவனும், கொற்றம் வெய்யோன் ஓர் ஆழி தேர் மறைத்தானை - வெற்றியையுடைய சூரியனது ஒற்றைச்சக்கரத்தையுடைய தேரை (மகாபாரதயுத்தத்தில்)மறைத்திட்டவனுமான, மால் அலங்காரனை- பெருமைபொருந்திய அழகனை, எஞ்ஞான்றும் உரை - எப்பொழுதும் துதிசெய்வாய்; (எ - று.)

"சதிரிளமடவார்தாழ்ச்சியைமதியாது, அதிர்குரற்சங்கத்தழகர்தங்கோயில், மதிதவழ்குடுமிமாலிருஞ்சோலைப், பதியதுவேத்தி யெழுவதுபயனே" என்று நம்மாழ்வார் தம்திருவுள்ளத்தைக்குறித்து உரைத்ததுபோல, இது, இந்நூலாசிரியர் தமதுநெஞ்சைநோக்கி அறிவுணர்த்தியதாம். அழகரைத் துதிப்பதே ஆத்மாவுக்குப் பரமப்ரயோஜந மென்றவாறு. நினைத்தல் பேசுதல் தொழில்செய்தல் என்பன முறையே மனம் மொழி மெய் என்னும் திரிகரணத்தின் செயலாதலால், அவற்றில் வாக்கின்செயலான உரைத்தலை மனத்தின்மேலேற்றி 'உரை நெஞ்சமே' என்றது, ஒருறுப்பின் வினையை மற்றோருறுப்பின்மேலேற்றிக்கூறும் ஒருவகை உபசாரவழக்காம்; வாயினால் துதித்தற்கும் மனத்தின் நினைப்பு இன்றியமையாது வேண்டுதலால், அத்தலைமைபற்றி, இங்ஙனம் புறக்கரணத்தின்செயல் அகக்கரணத்தின் மேலேற்றப்பட்டதென்க. இது பிரபந்தத்தின்தொடக்க மாதலால், நூல்முழுவதையும் பாடித்தலைக்கட்டுதற்குத் தம்மனத்தைப்பலவழிகளிற்செல்லாமல் ஒருவழிப்படுமாறு உடன்படுத்தவேண்டியவராய் 'மாலலங்காரனை எஞ்ஞான்றும் உரை நெஞ்சமே' என்று இங்ஙனம் அதற்கு உபதேசித்தன ரென்க. 'நீராழிவண்ணனை' முதலிய விசேஷணங்களால், அப்பெருமானுடைய பல வகைமகிமைகளையும் இனிமையையும் அந்தநெஞ்சத்துக்கு எடுத்துக்காட்டியபடியாம்.

'நீராழிவண்ணனை' என்பது முதலியன, ஒருபொருளின்மேல்வந்த பலபெயர்கள். விசேஷணம் விசேஷ்யம் என்ற இரண்டிலும் வேற்றுமையுருபை விரித்துரைப்பது, ஒருவகைப்பாஷைநடை; இதனை, அடுத்த செய்யுள்களிலுங் காண்க. 'மாலலங்காரனை' என்பது, விசேஷ்யம். மற்றவை - விசேஷணம். மாலலங்காரன்என்பது-அழகரதுபரியாயநாமங்களில்ஒன்று.

ஆழி என்ற சொல்-முதலடியில் கடலென்ற பொருளிலும், இரண்டாமடியில் மோதிரமென்ற பொருளிலும், மூன்றாமடியில் சக்கராயுத மென்ற பொருளிலும், நான்காமடியில் தேருருளையென்ற பொருளிலும் வந்தது. "சாகரம் தேர்க்கால் சக்கரம் வட்டம், மோதிர மென்ன மொழிந்தவையைந்தும், நேமியு மாழியு மென நிகழ்த்தினரே"என்ற பிங்கலந்தை இங்கு நோக்கத்தக்கது. கடலைக்குறிக்கும்போது ஆழ்ந்துள்ளது ஆழி என்றும் (இ - கருத்தாப்பொருள்விகுதி), சக்ராயுதத்தைக்குறிக்கும்போது பகைவரைஅழிப்பது ஆழி என்றும் (கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்டுப் பகுதிமுதல்நீண்ட பெயர்), மற்றவற்றைக்குறிக்கும்போது வட்டவடிவுடையது என்றும் காரணப்பொருள் காண்க. பரம் வியூகம் விபவம் அந்தரியாமி அர்ச்சை என்னும் எம்பெருமானுடைய ஐந்துநிலைகளுள் திருப்பாற்கடலிலெழுந்தருளியிருக்கிற பெருமான் வியூகமூர்த்தியாவன்.

நீரம் வர்ணம் ஸ்ரீ: என்ற வடசொற்கள், நீர் வண்ணம் சீர் என விகாரப்பட்டன வென்பர்; இவற்றைத் தனியே தமிழ்மொழியென்பாரு முளர். காந்தன், நிர்மலன், தைவம், அலங்காரன் - வடசொற்கள்: நிர்மலன் என்ற திருநாமம், எம்பெருமான் இயல்பிலே யாதொருகுற்றமும் தன்னிடத்தில்

இல்லாதவ னென்னும் பொருளோடு, தனக்குச் சரீரமாக அமைகின்ற சரா சரங்களின் வினைத்தொடர்பு ஒன்றும் தன்னிடம் பொருந்தப்பெறாதவ னென்ற கருத்தையுங் கொண்டது. திருமகள்-செல்வத்துக்குஉரிய தலைவி; பெரியபிராட்டியா ரென்பது, இவளுக்குச் சம்பிரதாயத்திருநாமம். கேள்வன் - கேண்மையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர்; வ் - பெயரிடைநிலை: உறவும் நண்பும் அன்பு முடையவ னென்பது, இதன்பொருள். கருடன் எல்லாப்பறவைகட்கும் அரசனாவதோடு வேதஸ்வரூபியும் பரமபதத்து நித்யசூரிகளில் ஒருவரு மாதலால், 'தெய்வப்புள் என்று சிறப்பித்துக்கூறி' னர். பெரியதிருவடி என்பது, இவரது சம்பிரதாயநாமம். 'தெய்வப்புள் ளூர் கூராழி மாயன்' என்ற சொற்சேர்த்தி "ஆனையின்துயரந்தீரப் புள்ளூர்ந்துசென்றுநின் றாழிதொட்டானை" என்றபடி அதிவிரைவாகக் கருடன்மீதுவந்து சக்கராயுதத்தையேவி முதலையைத் துணித்துக் கஜேந்திராழ்வானைப் பாதுகாத்த வரலாற்றை ஞாபிக்கும். இது, ஆபத்காலத்தில் அடியார்களைத் துயர்தீர்த்துப்பாதுகாத்தற்கு உரிய சிறந்த உபகரணங்களையும் திறமையையும் உடையவனென்பதைக் காட்டும். கொற்றம் - (பகைவரைக்) கொன்று அடைவது என வெற்றிக்குக் காரணக்குறி. சூரியனுக்கு வெற்றி - எங்கும் இருளை இருந்ததுதெரியாதபடி ஒழித்தல். வெய்யோன் - வெம்மையையுடையவன்; உஷ்ணகிரணன். சூரியனதுதேர் ஸம்வத்ஸரரூபமான ஒற்றைச்சக்கரத்தையுடைய தென்று புராணம் கூறும்.

எல்லாநூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக்கூறவேண்டுவது மரபாதலால், 'சீர்' என்று தொடங்கினார்; "சீர் மணி பரிதி யானை திரு நிலம் உலகு திங்கள், கார் மலை சொல் எழுத்துக் கங்கை நீர் கடல் பூத் தேர் பொன்,எருது மிவை மூவாறும் இதன்பரியாயப்பேரும், ஆருமங்கலச்சொல் செய்யு ளாய்ந்து முன்வைக்க நன்றாம்"என்பது காண்க. (க)

உ. உரைமாற்றமுண்டென்பொறியைந்துமுன்னிடத்தன்றியுண்ணு
மிரைமாற்றவேண்டு மிதுவேயென்விண்ணப்ப மென்னப்பனே
யுரைமாற்றளவற்றபொன்னுடுத்தாய் வில்லெடுத்திலங்கை
வரைமாற்றலரைச்செற்றா யழகா கருமாணிக்கமே.

(இ - ள்.) என் அப்பனே - எனது ஸ்வாமீ! உரை மாற்று அளவு அற்ற பொன் உடுத்தாய் - உரைகல்லிலே உரைத்துநோக்கியுணரத்தக்க மாற்றின் அளவுகடந்த [மிகச்சிறந்த] பொன்மயமான ஆடையை [பீதாம்பரத்தை] உடுத்துக்கொண்டுள்ளவனே! வில் எடுத்து இலங்கை வரை மாற்றலரை செற்றாய் - கோதண்டத்தைக் கையிலேந்தி (அதுகொண்டு அம்புதொடுத்துப் பொருது) இலங்காபுரியிலுள்ள மலைபோலும் வலிய பகைவர்களான இராவணாதி ராக்ஷசர்களை அழித்திட்டவனே! அழகா - அழகனே! கருமாணிக்கமே - கருநிறமுடையதொரு மாணிக்கம் இருந்தால் அதுபோன்ற நிறத்தையும் ஒளியையுமுடையவனே!—உரை மாற்றம் உண்டு - (அடியேன் உன்பக்கல்) சொல்லுஞ்சொல் (ஒன்று) உளது; (அது யாதெனில்,—) என் பொறி ஐந்தும் உன்னிடத்து அன்றி உண்ணும் இரை மாற்ற வேண்டும் -

எனதுஐம்பொறிகளும் உன்னிடத்தேயன்றிப் பிறவிடங்களில்அனுபவிக்கிற (விஷயங்களாகிற) ஆஹாரத்தை நீக்கியருளவேண்டும்: இதுவே என் விண்ணப்பம் - அடியேன்செய்யும் விஜ்ஞாபநம் இதுதான்; (எ - று.)

நம்மாழ்வார் தமது பிரதமப்பிரபந்தமான திருவிருத்தத்தின் தொடக்கத்தில் "பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும், இந்நின்றநீர்மையினியாமுறாமையுயிரளிப்பான், எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தாயிமையோர்தலைவா, மெய்ந்நின்றுகேட்டருளாய் அடியேன்செய்யும்விண்ணப்பமே" என்றாற்போலவும், திருவரங்கத்தமுதனார் தாம் இயற்றுகின்ற இராமாநுசநூற்றந்தாதியின் பாயிரமாக "சொல்லின்தொகைகொண்டுனதடிப்போதுக்குத்தொண்டுசெய்யும், நல்லன்ப ரேத்து முன்நாமமெல்லாம் என்றன்னாவினுள்ளே,அல்லும்பகலுமமரும்படிநல்கு அறுசமயம், வெல்லும் பரமவிராமாநுசவிதென்விண்ணப்பமே" என்றாற்போலவும் இந்நூலாசிரியர் பிரபந்தத்தொடக்கத்தில் தமது உள்ளக்கொள்கையை இங்ஙனம் எம்பெருமானை விளித்து அவன்சந்நிதியில் விஞ்ஞாபித்தனர். "வா யவனை அல்லது வாழ்த்தாது கை யுலகந், தாயவனையல்லது தாந்தொழா—பேய்முலைநஞ்சு, ஊணாகவுண்டானுருவொடுபேரல்லால், காணா கண் கேளா செவி," "கேசவனையேசெவிகள்கேட்க திருவரங்கத், தீசனையே சென்னியிறைஞ்சிடுக-நேசமுடன், கண்ணனையே காண்க விருகண் ணிணர்கொள்காயாம்பூ, வண்ணனையேவாழ்த்துகவென்வாய்"என்றபடி மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பஞ்சஇந்திரியங்களுள் கண் எம்பெருமானையே தரிசிப்பதும், செவி அப்பெருமானது வைபவங்களையே கேட்பதும், வாய் அவனையே துதிப்பதும், மூக்கு அவன்சாத்திய திருத்துழாயின் திவ்வியபரிமளத்தையே மோப்பதும், கை கால் தலை முதலிய உறுப்புக்களையுடைய மெய் அவனைத்தொழுதல் வலஞ்செய்தல் வணங்குதல் முதலியன செய்வதுமாக இங்ஙனம் எல்லாப்பொறிகளும் பகவத்விஷயத்தையே தாம்தாம் நுகரும்பொருளாகக் கொண்டு ஈடேறவேண்டு மாதலால்,"கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியுமைம்புலனும், ஒண்டொடிகண்ணே யுள" என்றவாறு சிற்றின்பவிருப்பத்தால் விஷயாந்தரங்களிற்சென்று அழியாதபடி அருள்புரியவேண்டுமென்று பிரார்த்தித்தவாறும். "உண்ணுஞ்சோறுபருகுநீர்தின்னும்வெற்றிலையுமெல்லாங், கண்ணனெம்பெருமா னென்றென்றே," "வாஸுதேவஸ் ஸர்வம்" என்றபடி தாரகபோஷகபோக்யாதிகளெல்லாம் நீயேயாம்படிஅருள்புரியவேண்டுமென்க.

உரை மாற்றம் - எதிர்காலவினைத்தொகை. இரை - உணவு; இங்கு, நுகரப்படும்பொருளென்றமாத்திரமாய் நின்றது: சிறப்புப்பெயர், பொதுப் பொருளின்மேலது; வாய்க்குஉரிய விஷயம் ஐம்பொறிகளுக்குமுரிய விஷயங்களை உணர்த்துதல் காண்க. விண்ணப்பம் - விஜ்ஞாபந மென்ற வடசொல்லின் சிதைவு. மாற்று - பொன்னின் தரம். பொன் - இங்கு, கருவியாகுபெயராய், பொற்பட்டாடையைக் குறித்தது. இலங்கை - லங்கா என்ற வடசொல்லின் விகாரம்; கடல்சூழ்ந்த தீவு: இது, தென்கடலினிடையேயுள்ளது. இலங்கை வரை மாற்றலரைச் செற்றது, ஸ்ரீராமாவதாரத்தில்.

வரைமாற்றலர்-உவமைத்தொகை. 'இலங்கை வரை மாற்றலர்'என்பதற்கு-திரிகூடபருவதத்தின்மேலுள்ள இலங்கையில் வசிக்கிற பகைவர்களென்று உரைப்பாரு முளர். இனி, (தான்திருவவதரித்தஇடமான திருவயோத்தி முதல் தென்கடலிடைத்தீவான) இலங்காபுரியளவும் பகைவர்களை அழித்தவனே யென்று உரைப்பினும் அமையும்: என்றது, இளமையில் தாடகையையும் சுபாகு முதலியோரையும், பின்பு தண்டகாரணியத்தில் விராதன் கரதூஷணதியர் கவந்தன் என்னும் அரக்கர்களையும் அழித்ததையும் உட்கொண்டதாம். மாற்றலர்-மனத்தைமாற்றுதலையுடையவரெனப் பகைவர்க்குக் காரணக்குறி. மாணிக்கம் - மாணிக்யம் என்ற வடசொல்லின் விகாரம். மாணிக்கம் இயல்பிற்செந்நிறமுடையதாதலால், 'கருமாணிக்கம்' என்றது, இல்பொருளுவமையாகக் கற்பித்துக்கூறியதென்க. (உ)

௩. மாணிக்கனகம்புரைமேனிமாலுக்கு வார்சடையோன்
பாணிக்கனகம்பலியொழித்தானுக்குப் பச்சைத்துழா
யாணிக்கனகமுடியலங்காரனுக் கண்டமெல்லாம்
பேணிக் கனகனுக்குப் பித்தரானவர்பித்தரன்றே.

(இ - ள்.) மாணிக்க நகம் - மாணிக்கமயமானதொரு மலையை, புரை-ஒத்த, மேனி - திருமேனியையுடைய, மாலுக்கு - திருமாலும்,—வார் சடையோன் - நீண்ட (கபர்த்தமென்னுஞ்) சடையை யுடையவனான சிவபிரானது. பாணி - கையிலே ஒட்டிக்கொண்ட, கனகம் - பெரிய [அல்லது பாரமான] (பிரம) கபாலத்தைக்கொண்டு இரக்கிற, பலி - பிச்சையை, ஒழித்தானுக்கு - நீக்கியருளியவனும்,—அண்டம் எல்லாம் பேணிக்கு - அண்டகோளங்களெல்லாவற்றையும் விரும்பிப்பாதுகாப்பவனும்,—அனகனுக்கு - தோஷமில்லாதவனுமாகிய,—பச்சை துழாய் - பசுமையான திருத்துழாய் மாலையைத் தரித்த, ஆணி கனகம் முடி அலங்காரனுக்கு - ஆணிப்பொன்னாலாகிய கிரீடத்தையுடைய அழகப்பிரான்விஷயமாக, பித்தர் ஆனவர்-பக்திப்பித்துக்கொண்டவர், பித்தர் அன்றே - (மற்றைவிஷயங்களிற் காதற்பித்துக் கொண்டவர்போல இகழத்தக்கவரல்லர்;(எ - று.)—ஈற்றுஏகாரம்-தேற்றம்.

"மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்பவேங்கியிளைத்துநின்,றெய்த்துக்கும்பிடுநட்டமிட்டெழுந்தாடிப்பாடியிறைஞ்சியென், னத்தனச்சனரங்கனுக்கடியார்களாகியவருக்கே, பித்தராமவர்பித்தரல்லர்கள் மற்றையார் முற்றும்பித்தரே" என்ற பெருமாள்திருமொழிப்பாசுரத்தை அடியொற்றியது இச்செய்யுள். நிலையற்றதும் இகழத்தக்கதுமான சிற்றின்பத்தி லாசைமிகுதியால் பெண் மண் பொன் முதலிய விஷயாந்தரங்களிற் பித்தேறித் திரிபவராய்ப் பகவத்பக்திசெய்யாதவரனைவரும் பித்தரேயன்றி,உரியவிஷயமான எம்பெருமான்திறத்தில் பக்திகாரியமான பித்தேறித் திரியும் ஸ்ரீவைஷ்ணவர்கள் பித்தரல்லர் என்பது இதன்கருத்து. இந்தப் பக்திப்பித்து, நற்கதிக்குக்காரணமான ஞானகாரியம்; மற்றைய காதற்பித்துக்களோ, தீக்கதிகளிற்புகுத்தும் அஜ்ஞானகாரியம் என்ற வேறுபாட்டை உணர்க: என்றது, தாம் இப்பத்திப்பித்துக்கொள்ளவிரும்பிக் கூறியவாறும்.

அந்தாதித்தொடையாக அமைந்த இந்நூலிலே முந்தினசெய்யுளின் இறுதிச்சொல்லான மாணிக்கத்துக்கு அடைமொழியாய்நின்ற கருமையையிச்செய்யுளின் முதற்சொல்லான மாணிக்கத்துக்கும் அடைமொழியாக வருவித்துஇயைத்து, கரியதொருமாணிக்கமயமான மலைபோல நிறங்கொண்டு விளங்குந் திருமேனியையுடைய திருமாலென்க; "கருமாணிக்கக் குன்றத்துத்தாமரைபோல், திருமார்வுகால்கண்கைசெவ்வாயுந்தியானே," "கருமாணிக்கமலைமேல் மணித்தடந் தாமரைக்காடுகள்போல், திருமார்வு வாய் கண் கை யுந்தி காலுடை யாடைகள்செய்யபிரான்" என்றார் திருவாய்மொழியிலும். இனி, நிறத்துக்கன்றி ஒளிக்கும் பெறலருமைக்கும் மாணிக்கமலையை உவமைகூறியதாகக் கொண்டு உரைத்தலும் அமையும்; "திகழும் மணிக்குன்றமே யொத்து நின்றான்" என்பது திருவாய்மொழி. மால்-பெருமை, அடியார்கள்பக்கல் அன்பு, திருமகளிடத்துக் காதல், மாயை, கருநிறம் இவற்றை யுடையவன்.

சிவபெருமான்இரத்தலைத் திருமால் ஒழித்த வரலாற்றுமுகத்தால், எம்பெருமானுடைய பரத்வத்தை வெளியிட்டவாறு.

நகம் என்ற வடமொழி, நடவாதது என்று உறுப்புப்பொருள்பெறும்; அசலம் என்றபடி. புரை - உவமவுருபு. ஆணிப்பொன்-மாற்றறிதற்குக்கொள்ளும் உயர்தரப்பொன்; இதற்குமேலே மாற்றில்லை யென்னும்படியான சிறந்தபொன் என்றும் உரைப்பர். மயிர்முடியப்படுவதென்னுங் காரணத்தால் தலையயுணர்த்துகிற முடியென்ற பெயர், இங்கு இடவாகுபெயராய், அதிலணியுங் கிரீடத்தைக் குறித்தது. அண்டம் - உலகவுருண்டை. காத்தற்றொழிற்கடவுளாதலால், 'அண்டமெல்லாம்பேணி' என்றார். பேணி என்ற பெயரில், இ - கருத்தாப்பொருள்விகுதி. பேணுதல் - மிக்கஅன்போடு குறிக்கொண்டுபாதுகாத்தல். இனி, அண்டங்களையெல்லாம் விரும்பியமுதுசெய்தவ னென்றலுமொன்று; பிரளயகாலத்திலே வயிற்றில்வைத்துக் காத்தவ னென்க. அநகன்-ந + அக; வடமொழிப்புணர்ச்சி: ந - எதிர்மறை குறிக்கும்; அகம்-குற்றம். வேறு இல்லை உண்டு என்பனபோல, அன்று என்பதும் இருதிணையைம்பால் மூவிடத்துக்கும் பொதுவாகவழங்குதலை, இலக்கியங்களிற் காணலாம்; இது, புதியனபுகுதல்: ஆகவே, 'பித்தரானவர் பித்தரன்று' என்ற முடிபு வழுவும் வழுவமைதியு மாகாது வழாநிலையின்பாற்படுமென்க.

பொதுநகரத்துக்கும் சிறப்புணகரத்துக்கும் வரிவடிவில் மிக்கவேறுபாடு இருப்பினும், ஒலிவடிவில் மிக்கவேறுபாடு இல்லாமைபற்றி, திரிபு யமகம் சிலேடை இவற்றில் நகர ணகரங்களை அபேதமாக்கொண்டு அமைத்தல் மரபாதலால், 'மாணிக்கநகம்' என்னவேண்டியவிடத்து 'மாணிக்கணகம்' எனப்பட்டது. (இங்ஙனம் திரிபுநயத்தின்பொருட்டு வரிவடிவின்வேறுபாடு கருதாது ஒலிவடிவொற்றுமையால் ஒன்றுக்குஒன்றாகக் கொள்ளப்பட்ட எழுத்துக்கள்,இப்பதிப்பிலே தடித்தஎழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன.) மேல் உக, சக, ருச, ருரு, அஅ, அகூ - ஆஞ் செய்யுள்களிலும் இது காண்க.

இனி, இச்செய்யுளில் 'மாணிக்ககம்', 'பாணிக்ககம்பலி', 'ஆணிக்ககமுடி,' 'பேணிக்ககனுக்கு' என நான்குஅடிகளிலும் பொதுநகரமான பாடங் கொள்ளுதல் பொருந்துமாறுங் காண்க. (௩)

௪. பித்தரும்பாநின்றநெஞ்சனைவஞ்சனைப்பேருலகோர்
கைத்தரும்பாவியெனுங்கடையேனைக்கடைக்கணியாய்
முத்தரும்பாருந்தொழுமழகா வண்டுமூசுந்துழாய்ப்
புத்தரும்பார்முடியா யடியாரைப்புரப்பவனே.

(இ - ள்.) முத்தரும் - முத்திபெற்றவர்களும், பாரும் - இவ்வுலகத்தவர்களும், தொழும் - வணங்கப்பெற்ற, அழகா - அழகனே!—வண்டு மூசும் - வண்டுகள் மொய்க்கப்பெற்ற, துழாய் - திருத்துழாயின், புது அரும்பு - புதிய [அன்று அரும்பிய] அரும்புகள், ஆர் - பொருந்திய, முடியாய் - திருமுடியையுடையவனே! அடியாரை புரப்பவனே - அடிமைப்பட்டவர்களைப் பாதுகாத்தருள்பவனே!—பித்து அரும்பாநின்றநெஞ்சனை -(விஷயாந்தரங்களிலே) ஆசைப்பித்து உண்டாகின்ற மனத்தையுடையேனும், வஞ்சனை - வஞ்சகமுடையேனும், பேர் உலகோர் கைத்து அரும் பாவி எனும் கடையேனை - பெரியஉலகத்திலுள்ளார்(பலரும்) வெறுத்து'கொடியபாவி (இவன்)' என்று இகழ்தற்கு உரிய கடைப்பட்டவனுமாகிய என்னை, கடைக்கணியாய் - கடாக்ஷித்தருள்வாய்; (எ - று.)

நற்குண நற்செய்கைகள் சிறிதுமின்றித் தீக்குணந் தீச்செயல்களிலே ஊன்றிநின்ற எளியேனுக்கு நீ கடாக்ஷித்தருளினாலன்றி உய்யும்வகையில்லையென்பதாம்.

வஞ்சன் - "பண்டே யுன்தொண்டாம் பழவுயிரை யென்னதென்று, கொண்டேனைக் கள்வனென்று" என்றபடி ஆத்மாபஹாரஞ்செய்த யான் என்றவாறு; இயல்பிலே எம்பெருமானுக்கு அதீநனான தன்னை அங்ஙனம் அடிமையென்று கருதாது ஸ்வதந்திரனென்று எண்ணி அதற்கு ஏற்ப ஒழுகுகின்றேன் என்க. அரும் பாவி - போக்கவொண்ணாத தீவினைகளையுடையவன்; "அரும்பாதகன் பொய்யன் காமுகன் கள்வன்" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும். கடையேன் - அதமனான யான்; தன்மையொருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர். கடைக்கணித்தல் - கடைக்கண்ணால் நோக்குதல்; பெயரின்மேல்வந்த வினை: ஆய் - ஏவலொருமைவிகுதி. 'கடையேனைக் கடைக்கணியாய்' என்றவிடத்துச் சொல்நயம் கருதத்தக்கது. மீளாவுலகமாகிய முத்தியை யடைந்து அங்கு நிரதிசய வாநந்தத்தை யனுபவிப்பவர்களும் அதனைவிட்டுத் தன்னையவாவித்தொழும்படியான அழகன் என, அப்பெருமானுடைய திவ்விய சௌந்தரியாதிசயத்தை எடுத்துக் காட்டியவாறும். (௪)

௫. புரந்தரனுமெனப்பூபதியாகிப்புகர்முகமா
துரந்தரசாளிலென் னல்குரவாகிலென் றொல்புவிக்கு
வரந்தரமாலிருஞ்சோலைநின்றார்க்கென்மனத்தினுள்ளே
நிரந்தரமாயலங்காரர்க்கிங்காட்பட்டுநின்றபின்னே.

(இ - ள்.) தொல்புவிக்கு வரம் தர மாலிருஞ்சோலை நின்றார்க்கு - பழமையான நிலவுலகத்திலே யுள்ளவர்களுக்கு வேண்டும் வரங்களைக் கொடுத் தருளுதற்பொருட்டுத் திருமாலிருஞ் சோலைமலையில் எழுந்தருளி நின்றவராகிய, அலங்காரர்க்கு - அழகருக்கு, இங்கு - இவ்விடத்தில் [இம்மையில்], நிரந்தரம் ஆய் - இடைவிடாமல் [எப்பொழுதும்], என் மனத்தினுள்ளே ஆள் பட்டு நின்ற பின் - என்மனப்பூர்வமாக (யான்) அடிமைப்பட்டுநின்ற பின்பு,—புரந்தரன் ஆம் என பூபதி ஆகி புகர் முகம் மா துரந்து அரசு ஆளில் என் '(இவன்) இந்திரனேயாவன்' என்று (அனைவருஞ்) சொல்லும்படி அரசனாகிச் செம்புள்ளிகளுள்ள முகத்தையுடைய பட்டத்துயானையை ஏறிநடத்தி அரசாண்டாலென்ன? நல்குரவு ஆகில் என் - வறுமைப்பட்டாலென்ன? (எ - று.)

"இன்பந்தரு பெருவீடு வந்தெய்திலென் எண்ணிறந்த, துன்பந்தரு நிரயம் பல சூழிலென் தொல்லுலகில், மன்பல்லுயிர்கட்கிறையவன் மாயனெனமொழிந்த, அன்பனனகனிராமாநுசனென்னையாண்டனனே" என்ற பாசுரத்தை ஒருசார் அடியொற்றியது இச்செய்யுள். அழகர்க்கு யான் அடிமைப்பட்டபின்பு எனக்குச் செல்வமும் வறுமையும் இவ்வுலக வின்பமும் துன்பமும் சமமேயாம்: இவையெவற்றையும் ஒருபொருளாகக் கருதேன் என்று தமது உள்ளக்கிடையின் துணிவை வெளியிட்டவாறும்.

புரந்தரன் என்ற வடமொழிப்பெயர், (பகைவர்களுடைய) நகரங்களை அல்லது உடல்களை அழிப்பவனென்று காரணப்பொருள்பெறும்; புரம் - ஊரும், உடலும். பூபதி-பூமிக்குத் தலைவன்: நிலவுலகத்தையாள்பவன்: வடசொல். யானைக்கு முகத்திற் செம்புள்ளிகளிருத்தல், உத்தமவிலக்கணம்; "தீயுமிழ்சிறுகணுஞ் செம்புகரு முடைத்தாய்" என்றார் பிறரும். 'மா' என்ற விலங்கின் பொதுப்பெயர், 'புகர்முகம்' என்ற அடைமொழியினால், யானையை யுணர்த்திற்று. நல்குரவு - நுகரப்படும்பொருளொன்று மில்லாமை: நல்கூர் என்ற பகுதியின் தொழிற்பெயர். புவிஎன்ற சொல், வடமொழியில் பூ என்ற பெயரின் ஏழாம்வேற்றுமைவிரி யாயினும், தமிழில் வரும்போது பெயர்மாத்திரமாய் வேற்றுமையுருபுகளை யேற்றற்கு இடமாம். (ரு)

௬ நின்றபிராணன்கழலுமுன்னே நெஞ்சமே நினையாய்
சென்றபிராயம்வம்பேசென்றதாற் றிருமங்கைகொங்கை
துன்றபிராமனைச் சுந்தரத்தோளனைத் தோளின்மல்லைக்
கொன்றபிரானை யடைந்தடியாரொடுங்கூடுகைக்கே.

(இ - ள்.) நெஞ்சமே - மனமே!—சென்ற பிராயம் வம்பே சென்றது - (இதுவரை)கழிந்த ஆயுள் (முழுவதும்) வீணேபோய்விட்டது; (இனியாயினும்), நின்ற பிராணன் கழலும் முன்னே - (உடலில்) நின்ற உயிர் (அவ்வுடலைவிட்டு) நீங்குதற்குமுன்னே,—திருமங்கை கொங்கை துன்று அபிராமனை - திருமகளுடைய தனங்களை நெருங்கித்தழுவுகிற அழகனும், சுந்தரம் தோளனை - அழகியதிருத்தோள்களையுடையவனும், தோளின் மல்லை கொ

ன்ற பிரானை - புஜபலத்தால் மல்லர்களைக் கொன்ற உபகாரகனுமான எம்பெருமானை, அடைந்து - சரணமடைந்து, அடியாரொடும் கூடுகைக்கு - (அவனுடைய) அடியவர்களோடுஞ் சேர்வதற்கு, நினையாய் - கருதுவாய்.

ஆல் - ஈற்றசை; செய்யுளினிறுதியில்நிற்பதுமாத்திரமே யன்றி, செய்யுளடியினிறுதியிலும், வினைமுற்றினிறுதியிலும் நிற்கும் இடைச்சொல்லும் பொருள்தராதாயின் ஈற்றசையெனவே படும். இனி, ஆல் - ஆதலால் என்பதன் விகாரமுமாம். சுந்தரத்தோளன் = ஸுந்தரபாஹு. திரு மங்கை - இலக்குமி: திருவாகிய மங்கை என இருபெயரொட்டு; என்றும் மாறாத இளமைப்பருவமுடைமையால், 'மங்கை' எனப்பட்டாள்.

இதுவரை வீணேகழிந்த நாள்களைக்குறித்துக் கழிவிரக்கங்கொள்ளுகிறவளவோடு நில்லாமல், இனி வாழும் நாளுள் ஒருபொழுதேனும் எம்பெருமானைத்தியானித்தாலும் அது பயன்படும் என்பது தாற்பரியம். (௬)

௭. கூடுகைக்குஞ்சரமத்தடியேற்குக்கொடியவஞ்சஞ்
சாடுகைக்குஞ்சரணந்தரவேண்டுந் தடத்தழுந்தி
வாடுகைக்குஞ்சரங்காத்தீர் விண்வாழ்கைக்கும்வாளரக்கர்
வீடுகைக்குஞ்சரங்கோத்தீர் விடைவெற்பின்வித்தகரே.

(இ - ள்.) தடத்து - தடாகத்திலே, அழுந்தி-(முதலையின்வாய்ப்பட்டு) மூழ்கி, வாடு - வாட்டமடைந்த, கை - துதிக்கையையுடைய, குஞ்சரம்-யானையை, காத்தீர் (அங்குச்சென்று) பாதுகாத்தருளியவரே! விண் வாழ்கைக்கும்- வானுலகத்தவர் [தேவர்கள்] வாழும்படியாகவும், வாள் அரக்கர் வீடுகைக்கும் - கொடிய இராக்கதர்கள் அழியும்படியாகவும், சரம் கோத்தீர் - (ஸ்ரீராமாவதாரத்திலே) அம்புகளை (விற்கொண்டு) தொடுத்திட்டவரே! விடை வெற்பின் வித்தகரே - வ்ருஷபகிரியாகிய திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற ஞானஸ்வரூபியே!—கூடு கைக்கும் சரமத்து - உடம்பை (உயிர்) வெறுத்துநீங்கும்படியான அந்திமகாலத்திலே, அடியேற்கு - (நுமக்கு)அடிமைப்பட்டவனான எனக்கு, கொடிய வஞ்சம் சாடுகைக்கு - கொடுமையானவஞ்சனைக்கருத்துக்களை (என்மனத்தில்எழவொட்டாதபடி)அடித்துத்தள்ளுதற்காக, உம் சரணம் தர வேண்டும் - உமது திருவடிகளைத் தந்தருளவேண்டும்; (எ - று.)

உடம்பைவிட்டு உயிர்நீங்கிப்போங்காலத்துக் கர்மவசத்தால் எந்த நினைப்பு உண்டாகிறதோ அந்தப்பிறவி அவ்வுயிர்க்கு அடுத்தபடியாக நேர்கின்றது என்பது நூல்துணிபாதலால், அங்ஙனம் அக்காலத்து அடியேனுக்குத் தீயசிந்தனையெழாதபடி உன்திருவடிகளை என்மனத்திற் பதியவைத்தருளவேண்டு மென்பதாம். இனி, 'கொடிய வஞ்சஞ் சாடுகைக்கு' என்பதற்கு- (யமதூதர்களுடைய) கொடிய வஞ்சனைச்செயல்களை அடித்துத்தள்ளுதற்கு என்று உரைப்பினும் அமையும். சரமத்துத் தரவேண்டும் என இயையும்.

உயிராகிய பறவை வந்துபுகுந்து சிலகாலம் தங்கிப் பின்பு நீங்கிச்செல்லுங் கூடுபோலுதலால், உடம்பு, 'கூடு' எனப்பட்டது; உவமையாகுபெயர்;

"கூடுவிட்டு இங்கு ஆவிதான்போயினபின்பு" என்றார் பிறரும். சரமம் - முடிவு. ஆதிமூலமேயென்று கூவியழைத்து ஓலமிடுதற்கு உபயோகமாகத் துதிக்கைமாத்திரமே வெளிப்பட்டுநிற்க மற்றைஉடம்புமுழுவதும் முதலையின் வாய்ப்பட்ட தென்னுங்கருத்து அமைய'தடத்துஅழுந்திவாடுகைக்குஞ் சரம்' என்றனரென்க; "கைம்மானமதயானையிடர்தீர்த்தகருமுகிலை," "கராமலையத் தளர் கைக்கரி யெய்த்தே, அராவணையிற்றுயில்வோ யென" என்றவற்றோடு இதனை ஒப்பிடுக. விண் - விண்ணவர்க்கு இடவாகுபெயர். ஒரு காலத்திலே தேவர்களெல்லாரும் இராவணன்முதலிய ராக்ஷசர்களின் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் ஸ்ரீமகாவிஷ்ணுவைச் சரணமடைந்து வேண்ட, அப்பிரான் தசரதசக்கரவர்த்திகுமாரனாக ஸ்ரீராமனாய்த் திருவவதரித்து அரக்கர்களனைவரையும் அழித்து நல்லோரைக் காத்தருளினனென்க. வாள் அரக்கர் - வாள்போன்ற அரக்கரென உவமைத்தொகை; கொடுமையால் எப்பொழுதும் பிறர்க்குத்தீங்குசெய்தற்பொருட்டு வாளாயுதத்தையேந்திநிற்கின்ற அரக்கரெனினும் அமையும்.

திருமாலிருஞ்சோலைமலைக்கு 'ருஷபகிரி' யென்று பெயர்வந்ததன்காரணம்:—தருமதேவதை பிரளயகாலத்திலும் தான்அழியாதிருக்கும் உபாயங் கருதித் திருமாலைக்குறித்துத்தவம்புரிந்து வரம்பெற்று மலைவடிவமாகி அந்த அழகப்பிரானைத் தன்மீதுகொண்டு நிலைபெற்றது எனவும், தருமதேவதைக்கு விருஷபவடிவம் உள்ளதனாலும் தருமத்துக்கு விருஷமென்று ஒரு பெயர் உள்ளதனாலும் அம்மலை விருஷபகிரியென்றும் விருஷகிரியென்றும் வழங்கப்பட்ட தெனவும் நூல்கள் கூறும்; "தரும மோருருத்தாங்கி மால் பத்தியின்றலைப்பட், டொருமையோங்கிய மாலிருஞ்சோலை சூழ்நாட்டின், பெருமை யாவரே பேசுவார்" என்ற கூடற்புராணமுங் காண்க. இதுநிற்க: அனந்தகுண பாண்டியனைக் கொல்லுதற்பொருட்டுச் சமணர்கள்செய்த அபிசாரஹோமத்தினின்று தோன்றிய பசுவடிவமான அசுரன் அச்சமணர்கள் விருப்பத்தின்படி பாண்டியராஜனைக் கொல்லுதற்காக மதுரையை அணுகியபொழுது, அவ்வரசனும் அந்நகரத்தாரும் சோமசுந்தரக்கடவுளை வணங்கி முறையிட, அச்சிவபெருமான் தமது சந்நிதானத்திலுள்ள ருஷபவடிவமான நந்தியைநோக்கி 'சமணர்களேவியபசுவை நீபோய் வென்றுவரக்கடவாய்'என்று கட்டளையிட்டவளவில், அவ்விடபம் ஆரவாரித்துக்கொண்டு விரைந்துசென்று அப்பசுவைக்கிட்டித் தனது பேரழகைக் காட்ட, அந்த மாயப்பசு அவ்விடபத்தின்மீது இச்சைகொண்டு ஆசைநோய் மிக்கு வலியொடுங்கி, இறந்துவிழுந்து மலைவடிவமாயிற்று: அதுவே பசுமலை; பின்பு அந்த இடபமும் உலகத்தாரறியுஞ்சான்றாகத் தனது தூலசரீரத்தை இடபமலையாக அங்கே நிறுத்திவிட்டுச் சென்றது என்றலும் உண்டு; "உலகறிகரியாத் தன்பேருருவினை யிடபக்குன்றாக் குலவுற நிறுவி" என்ற பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடற்புராணமும், "வினையறவந்திறைஞ்சு மெழின்மழ விடையை நோக்கி, மனமகிழ்ந்தனிகளோடு மதிதவழுயர்பிஞ்ஞகு, மினிமையிற்கிடத்திநாமமிடபவெற்பென்னப் போந்த, தனுவொடுங்கிடந்த தோங்கத் தண்டலைமலையதாகி," "ஆங்கதுகண்டோரெல்லா மதிசயித் தருளை

வாழ்த்தித், தாங்கருமுவகைகூர்ந்தார்" என்ற வேம்பத்தூரார் திருவிளையாடற்புராணமுங் காண்க.

சிலப்பதிகாரத்திலே இத்திருமலையும் இதிலெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானும் பாராட்டிக்கூறப்பட்டிருத்தலை "திருமால் குன்றத்துச் செல்குவி ராயின், பெருமால் கெடுக்கும் பிலமுண்டாங்கு, விண்ணோ ரேத்தும் வியத்தகு மரபிற், புண்ணிய சரவணம் பவகாரணியோ, டிட்ட சித்தி யெனும்பெயர் போகி, விட்டு நீங்கா விளங்கிய பொய்கை, முட்டாச் சிறப்பின் மூன்றுள வாங்குப், புண்ணிய சரவணம் பொருந்துவி ராயின், விண்ணவர் கோமான் விழுநூ லெய்துவிர், பவகா ரணிபடிந் தாடுவி ராயின், பவகாரணத்திற் பழம்பிறப் பெய்துவிர், இட்ட சித்தி யெய்துவி ராயின், இட்ட சித்தி யெய்துவிர் நீரே, ஆங்கும் பிலம்புக வேண்டுதி ராயின், ஓங்குயர் மலையத் துயர்ந்தோற் றொழுது, சிந்தையி லவன்றன் சேவடி வைத்து, வந்தனை மும்முறை மலைவலஞ் செய்தால், நிலம்பக வீழ்ந்த சிலம்பாற்றகன்றலைப், பொலங்கொடி மின்னிற் புயலைங் கூந்தற், கடிமல ரவிழ்ந்த கன்னிகா ரத்துத், தொடிவளைத் தோளி யொருத்தி தோன்றி, இம்மைக் கின்பமு மறுமைக் கின்பமும், இம்மையு மறுமையு மிரண்டு மின்றியோர், செம்மையி னிற்பதுஞ் செப்புமி னீயிரிவ், வரைத்தாள் வாழ்வேன் வரோத்தமை யென்பேன், உரைத்தாற் குரியே னுரைத்தீ ராயின், திருத்தக் கீர்க்குத் திறந்தேன் கதவெனும், கதவந் திறந்தவள் காட்டிய நன்னெறிப், புதவம் பலவுள போகிடை கழியன, ஒட்டுப் புதவமொன் றுண்டத னும்பர், வட்டிகைப் பூங்கொடி வந்து தோன்றி, இறுதியி லின்ப மெனக்கீங் குரைத்தாற், பெறுதிர் போலுநீர் பேணிய பொருளெனும், உரையீ ராயினு முறுகண் செய்யேன், நெடுவெழிப் புறத்து நீக்குவ னும்மெனும், உரைத்தா ருளரெனி னுரைத்த மூன்றின், கரைப்படுத் தாங்குக் காட்டினள் பெயரும், அருமறை மருங்கி னைந்தினு மெட்டினும், வருமுறை யெழுத்தின் மந்திர மிரண்டும், ஒருமுறை யாக வுளங்கொண் டோதி, வேண்டிய தொன்றின் விரும்பினி ராடிற், காண்டகு மரபின வல்ல மற்றவை, மற்றவை நினையாது மலைமிசை நின்றோன், பொற்று மரைத்தா ளுள்ளம் பொருந்துமின். உள்ளம் பொருந்துவி ராயின் மற்றவன், புள்ளணி நீள்கொடி புணர்நிலை தோன்றும், தோன்றிய பின்னவன் றுணைமலர்த் தாளிணை, என்றுதுயர் கெடுக்கு மின்பமெய்தி, மாண்புடை மரபின் மதுரைக் கேகுமின், காண்டகு பிலத்தின் காட்சியீது" எனக் காண்க.

இனி, 'கொடியவஞ்சச்சாடுகைக்குஞ்சரணம்'என்ற பாடமும் நேரிது. அது, கொடிய வஞ்சம் சாடு உகைக்கும் சரணம் என்று பதம்பிரிந்து, கொடிய வஞ்சனையையுடைய சகடாசுரனை உதைத்து அப்பால்தள்ளிய திருவடிகளை அந்திமகாலத்தில் அடியேனுக்குத் தந்தருளவேணு மென்று இனிது பொருள்படும். ஶகடம் என்ற வடசொல் சாடுஎன்று விகாரப்படுதலை "சாடு சாடுபாதனே" எனத் திருச்சந்தவிருத்தத்திலுங் காண்க; "சாடுதைத்து" என்றார், திருவேங்கடத்தந்தாதியிலும். உகைத்தல் - செலுத்தல். (எ)

[பாங்கி வெறிவிலக்கிச் செவிலியர்க்கு அறத்தோடுநிற்றல்.]

அ. வித்தகரும்பர்க்கரசானவனும்விதியுங்கங்கை
மத்தகரும்பரவும்மலங்காரர் மழைகொண்டகா
ரொத்தகரும்பரஞ்சோதியர் நாமமுரைத்தன்னைமீ
ரித்தகரும்பரதெய்வமுங்கூத்தும்விட்டேத்துமினே.

(இ - ள்.) அன்னைமீர் - தாய்மார்களே!—(நீங்கள்),—இதகரும்-இந்த ஆட்டுக்கடாப்பலியையும்,பர தெய்வமும்-வேறுதெய்வத்தைவழிபடுதலையும், கூத்தும் - வெறியாட்டு ஆடுவித்தலையும், விட்டு - ஒழித்து,— வித்தகர் - ஞானஸ்வரூபியும், உம்பர்க்கு அரசு ஆனவனும் விதியும் கங்கை மத்தகரும் பரவும் அலங்காரர் - தேவராஜனான இந்திரனும் பிரமனும் கங்கையைத்தரித்த சிரசையுடையவரான சிவபெருமானும் துதித்துவணங்கிவழிபடப்பெற்ற அழகரும், மழை கொண்ட கார் ஒத்த கரும் பரஞ் சோதியர் - நீர்கொண்ட காளமேகம்போன்ற கருமையான சிறந்த ஒளியையுடையவருமாகிய எம்பெருமானுடைய, நாமம் - திருநாமங்களை, உரைத்து - சொல்லி, ஏத்துமின் - (அப்பெருமானைத்) துதியுங்கள்; (எ - று.)

கீழ் ஏழுபாசுரங்களில் அழகருடைய பலவகை மகிமைகளைக் கூறி அப்பெருமானது திவ்வியசௌந்தரியத்தில் ஈடுபட்டு அவரது உத்தமபுருஷத்தன்மையைக் கருதியதனாலே, அப்பொழுதே அவரைக்கிட்டவேண்டும் படியான ஆசை யுண்டாய், அங்ஙனம் அவரைக்கிட்டப்பெறாமையாலே, ஐயங்கார் ஆற்றாமைமீதூர்ந்து தளர்ந்தார்; அத்தளர்ச்சியாலே தாமான தன்மை குலைந்து, ஆண்பெண்ணாம்படியானநிலைமை தோன்றி,ஒருபிராட்டி நிலையை அடைந்தார். ஆண் பெண்ணாதல் கூடுமோ வெனில்,—"கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினாய்," "வாராக வாமனனே அரங்கா வட்டநேமிவலவா ராகவா உன்வடிவுகண்டால் மன்மதனும் மடவாராக ஆதரஞ்செய்வன்" என்ப வாதலாலே, இதுகூடும்: தண்டகாரணியவாசிகளான முனிவர்கள் இராமபிரானதுசௌந்தரியாதிசயத்தில் ஈடுபட்டுத் தாம் பெண்தன்மையைப்பெறவிரும்பி மற்றொருபிறப்பில் ஆயர்மங்கையராய்க் கண்ணனைக் கூடினரென்ற ஐதிகியமும் உணர்க. ("பெண்டிரும் ஆண்மைவெஃகிப் பேதுறு முலையினாள்," "வாண்மதர்மழைக்கணோக்கி...........ஆண்விருப்புற்று நின்றார் அவ்வளைத்தோளினாரே" எனப் பெண் ஆணாகும் இடமும் உண்டு.)அங்ஙனம் ஆண் பெண்ணாகிலும் சாதாரணப்பெண்மையையேயன்றி எம்பெருமானுக்குஉரியவளாகும் ஒருபிராட்டியின் நிலைமையை அடையுமாறு எங்ஙனமெனில்,—பரமாத்மாவினது தலைமையும், ஜீவாத்மாவினது அடிமையும், ஜீவாத்மா பரமாத்மாவுக்கே உரியதாயிருக்கையும், புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்குமுன் உலகமுழுதும் பெண்தன்மையதாதலும், ஜீவாத்மாவினது ஸ்வாதந்திரியமின்மையும், பாரதந்திரியமும், தாம் எம்பெருமானது சேர்க்கையால் இன்பத்தையும் பிரிவினால் துன்பத்தையும் அடைதலும், அவனையே தாம் கரணங்களெல்லாவற்றாலும் அனுபவித்து ஆனந்தித்தலும் முதலிய காரணங்க

ளால், தம்மைப் பிராட்டிமாரோடொக்கச் சொல்லத் தட்டில்லை. தோழி நிலைமையும் தாயார்நிலைமையும் முதலியன ஆகின்றபடி எங்ஙனேயென்னில்,—தாம்விரும்பியபொருளின் வரம்பின்மையால் அங்ஙனமாகுமென்க.

தோத்திரப்பிரபந்தங்களில் அகப்பொருட்கிளவித்துறைகளை இடையிடையேகூறுதல் கவிசமயமாதலை, இலக்கியங்கள்கொண்டு உணர்க. சிருங்காரரசப்பிரதானமான அகப்பொருட் கிளவித்துறைகளை ஞானநூலாகிய தோத்திரப்பிரபந்தங்களிற்கூறுதற்குக் காரணம், கடுத்தின்னுதாரைக் கட்டி பூசிக் கடுத்தின்பிப்பார் போல, சிற்றின்பங்கூறும்வகையாற் பேரின்பத்தைக்காட்டி நாட்டுதல் என்பர். இங்ஙனம் வெளிப்படைப்பொருளால் அக்யாபதேசமாகக்கூறுகிற சிற்றின்பத்துறைச்செய்யுள்கட்கெல்லாம் ஸ்வாபதேசமாகப் பேரின்பத்தின்பாற்படுத்தும் உள்ளுறைபொருள் உண்டென்பதையும் உணர்க. அன்றியும், இங்குக் கூறியது, உலகவாழ்க்கைச் சிற்றின்பமன்று: "நான்கினும் கண்ணனுக்கே ஆமது காமம்" என்றபடி எம்பெருமானைச் சேரவேண்டுமென்று அவன்பக்கலிலேயுண்டாகின்ற அபேக்ஷையையே கூறியது. "கோவிந்தா, எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்தன்னோடு, உற்றோமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம், மற்றைநங்காமங்கள் மாற்று" என்றபடி லோகநாயகனுடைய சேர்க்கையை அபேக்ஷிக்கின்ற பேரின்பக்காதலானது- வேதாந்தநிர்ணயத்தின்படி அன்புசெலுத்த வேண்டிய இடத்தில் அன்புசெலுத்திய தாதலால், சிற்றின்பக்காதல்போலன்றி, சகலபாப நிவ்ருத்திக்கும் வீடுபேற்றுக்குமே காரணமாம். கண்ணபிரான்பக்கல் கொண்ட காமத்தால் கோபஸ்திரீகள் முத்திபெற்றனரென்று புராணங்கூறுதலுங் காண்க.

ஓர்உத்தமபுருஷன் பரிவாரத்துடன் வேட்டையாடுதற்குப் புறப்பட்டு வனத்துக்குச் சென்றவனாய், ஓர்உத்தமகன்னிகையும் தோழியருடன் பூக்கொய்துவிளையாடுதற்கென்று பூஞ்சோலையிற் சேர்ந்தவளாகிலே, ஒவ்வொரு நிமித்தத்தால் தோழியர் பிரிய அக்கன்னிகை அங்குத் தனித்துநின்ற சமயத்திலே, ஒவ்வொருநிமித்தத்தால் பரிவாரங்கள் பிரியத் தனிப்பட்டவனாய் அப்புருஷன் அங்கு வந்துசேர, இருவரும் ஊழ்வினைவசத்தால் இங்ஙனம் தற்செயலாய் ஓரிடத்திலே சந்தித்து ஒருவரையொருவர் கண்டு காதல்கொண்டு காந்தருவவிவாகக் கிரமத்தாற் கூடி உடனே பிரிய, பின்பு மற்றுஞ் சில களவுப்புணர்ச்சிக்கு உரிய வகைகளால் அத்தலைமகளது கூட்டுறவைப் பெற்ற தலைமகன், பின்பு அவளை வெளிப்படையாக மணஞ்செய்துகொள்ளுதற்பொருட்டுப் பொருள்தேடிவருதற்காக அவளைப் பிரிந்துசெல்ல, அந்நிலையிற் பிரிவாற்றாது மிகவருந்திய தலைமகளைச் செவிலித்தாய்மார் எதிர்ப்பட்டு அவளது வடிவுவேறுபாட்டை நோக்கி 'இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னோ?' என்று கவலையுற்றுக் கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவளும் தன்மரபின்படி ஆராய்ந்து 'இவளுக்கு முருகக்கடவுள் ஆவேசித்ததொழியப் பிறிதொன்றுமில்லை' என்றுகூற, அதுகேட்ட செவிலித்தாயர், உடனே, தலைமகள்பக்கல் தமக்குஉள்ள அன்பின்மிகுதியால், ஏதேனும்

ஒருதெய்வத்தை வழிபட்டாகிலும் இவளை உயிர்த்திருக்கப்பெறில் அதுவே நமக்கு ஆத்மலாப மென்றெண்ணி, வழியல்லாவழியிலே யிழிந்து, அதற்குப் பரிஹாரமாக வேலனெனப்படுகிற வெறியாட்டாளனை யழைப்பித்து அவனைக்கொண்டு ஆடுபலியிடுதல், கள்ளிறைத்தல், இறைச்சிதூவுதல், கருஞ்சோறு செஞ்சோறு வைத்தல், ஆவேசம் ஆடுவித்தல் முதலிய காரியங்களை இடைவிடாது ஒன்றன்மேலொன்றாகச் செய்யத்தொடங்க, நோயொன்றும் மருந்தொன்று மாதலால், தான்காதலித்த புருஷோத்தமனான தலைமகனது தகுதிக்கு ஏலாத அச்செயல்களை நோக்கித் தலைமகள் மேன்மேல் மிக வருந்த, அவளது துன்பத்தின் மெய்க்காரணத்தை யறிந்த தோழி அச்சமயத்திற் செவிலியரைநோக்கிச் சிலகூறி வெறிவிலக்கித் தலைவியினது துன்பத்தின் உண்மைக்காரணத்தை யுணர்த்துகின்ற துறை, இது.

ஆடுபலிகொடுத்தலானது இவளுடம்பினின்று உயிர்நீங்காதபடிசெய்து மரணவேதனைப்படுகிற இவளைப் பிழைப்பிக்கமாட்டாது என்ற பொருளை உட்கொண்டு, 'இத்தகர் விட்டு' என்றாள். தான் கரையேறாதவன் பிறரைக் கரையேற்றமாட்டாமைபோல, தான் கழுத்தறப்புண்டு இறக்கிற ஆடு இவளுயிரைப் பிழைப்பிக்கமாட்டா தென்க: "வீழ்வார்க்கு வீழ்வார் துணை" என்றபடி, இறக்கிற ஓர்உயிரோ மற்றோர் இறக்கிற உயிரைக் காத்தற்குத் துணையாகும்! என்றவாறு. க்ஷுத்ரதேவதையின் ஆவேசத்தால் வரும் நோய்க்குப் பரிஹாரமாகிற இவ்விழிபொருள் பரம்பொருளிலீடுபாட்டினால் வந்த நோய்க்குப் பரிஹாரமாகாதென்க. அன்னைமீர் - உண்மைக்காரணமுரைக்கப்படுதற்கு உரிமையையும், இவளியல்பிற்கு ஏற்றபடி நன்மைசெய்யும் அன்பையும் உடையவர்களே யென்றபடி. இத்தலைமகள்காதலித்த தேவாதிதேவனான பரதேவதைக்கும் இவர்கள் இப்பொழுது விரும்பிவழிபடுந் தேவதாந்தரத்துக்கும் உள்ள ஏற்றத்தாழ்வு தோன்ற, 'வித்தகர் உம்பர்க்கரசானவனும் விதியும் கங்கைமத்தகரும் பரவும் அலங்காரர்' என்றாள். இவர்கள் வழிபடுங்கடவுளாகிய முருகன் அழகரைப்பரவுங் கங்கைமத்தகனது இளைய குமார னென்பது கருதத்தக்கது. 'மழைகொண்டகாரொத்த கரும் பரஞ்சோதியர்' என்றது, தலைவனது திருமேனியழகில் ஈடுபாடு. அத்தன்மையானவரது திருநாமத்தைச் சொல்லி அவரைத்துதியு மென்றது, அதுவே இவள்நோயைப்பரிஹரித்தற்குத் தக்க தென்றபடியாம். நம்மாழ்வார் திருவாய்மொழியில் வெறிவிலக்குத்திருப்பதிகத்தில் "மருந்தாகுமென்றங்கோர் மாயவலவைசொற்கொண்டு நீர், கருஞ்சோறும் மற்றைச்செஞ்சோறும் களனிழைத் தென்பயன், ஒருங்காகவேயுலகேழும்விழுங்கியுமிழ்ந்திட்ட, பெருந்தேவன்பேர் சொல்லகிற்கில் இவளைப்பெறுதிரே" என்று அருளிச்செய்தமை அறிக. இந்நோய்தீர்த்தற்குத் தலைவனது திருநாமம் தக்கமந்திர மென்க: அம்மந்திரமாகிய மருந்தை இவள்செவியின் வழியாகச் செலுத்துங்க ளென்றாள்; திருமாலாகிய தலைமகனால் நேர்ந்த நோய்க்கு அவனது நாமசங்கீர்த்தனமொழிய வேறுபரிஹார மில்லை யென்பதாம்.

தமதுஞானக்கண்ணுக்குஇலக்கான எம்பெருமான் மறைந்தவளவிலே அவனதுபிரிவைப் பொறாமல் வருந்துகிற ஐயங்காரது துயரத்தைக் கண்ட

ஞானிகள், அவர்பக்கல்வைத்த பரிவா லுண்டான கலக்கத்தால் எம்பெருமான் உபாயாந்தரங்களால் அடையத்தக்கவனல்ல னென்பதை மறந்து, தேவதாந்தரபஜநத்தாலாவது இவரது ஆற்றாமையைத் தணிப்பிக்கலாமோ வென்று தொடங்கியநிலையில் ஐயங்காரதுதன்மையை அறிந்த அன்பர்கள் விலக்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். ஞானிகள் தாம் அங்ஙனம் வழியல்லாவழியிலே இழிவார்களோ வென்னில்,—ஐயங்கார்பக்கல் தாம்கொண்ட பரிவின் மிகுதி தம்மைக் கலங்கப்பண்ணுகையால், அமார்க்கங்களாலேயாகிலும் பரிஹரிக்கப்போமோ வென்று முயன்றனரென்க; (இதனை, 'அயோத்தியாபுரியிலுள்ள சனங்களெல்லாரும் இராமனுடைய க்ஷேமத்தின்பொருட்டு எல்லாத்தேவர்களையும் வணங்கினர்' என்றதனோடு ஒப்பிடுக.) 'அன்னைமீர்' என்று விளித்ததனால், முதியரான நீர் இளையரான எமது வார்த்தையை உபேக்ஷிக்கலாகாதென்று குறிப்பித்தபடி. 'வித்தகர்.........நாமமுரைத்து ஏத்துமின்' - தேவாதிதேவனது நாமோச்சாரணமும் அவனைத்துதித்தலுமே துயரனைத்தையுந் தீர்க்கு மென்றதாம். பிறவுங் கண்டுகொள்க.

பரஞ் சோதியர் - முச்சுடர்களின் ஒளியிலும் மேம்பட்ட ஒளியையுடையவர். தகர் என்ற ஆண்மைப்பெயர் ஆட்டுக்கு உரியதாதலை "மோத்தையுந் தகரு முதளு மப்பரும், யாத்தவெண்ப யாட்டின் கண்ணே" என்ற தொல்காப்பியத்தால் உணர்க.

மேல் சக - ஆஞ்செய்யுளைப்போல இச்செய்யுளையுந் தலைவிவார்த்தையாகக் கொள்ளுதலு மொன்று. (அ)

கூ. ஏத்துமின்பத்தியினாலெட்டெழுத்து மிணையடிக்கே
சாத்துமின்பத்திரத்தண்ணந்துழாய் மதிதாங்கிக்கஞ்சம்
பூத்துமின்பத்திசெய்யும்பச்சைமாமுகில்போலழகர்
காத்துமின்பத்திலிருத்தியும்வைப்பர்கருணைசெய்தே.

(இ - ள்.) இன் பத்தியினால் - இனிமையான பக்தியோடு, எட்டு எழுத்தும் - எட்டெழுத்துக்களையும் [நாராயணநாமத்தை உட்கொண்ட திருவஷ்டாக்ஷரமகாமந்திரத்தை], ஏத்தும் - உச்சரியுங்கள்; தண் அம் துழாய் பத்திரம் - குளிர்ந்த அழகிய துளவிதளங்களை, இணை அடிக்கே சாத்துமின் - (அப்பெருமானுடைய) உபயதிருவடிகளிலே சமர்ப்பியுங்கள்; (இங்ஙனஞ்செய்வீரானால்).—மதி தாங்கி - சந்திரமண்டலத்தை மேலேசுமந்து, கஞ்சம் பூத்து - தாமரைமலர்கள் (தன்னிடத்தே) பூக்கப்பெற்று, மின் பத்தி செய்யும் - மின்னல்கள் ஒழுங்காகத் தோன்றப்பெற்ற, பச்சை மா முகில் போல் - பசுமையான பெரியதொருமேகம் (உண்டானால் அது) போன்ற (திருமேனியையுடைய). அழகர்—, கருணைசெய்து - கிருபைபண்ணி, காத்தும் - (உங்களைப்)பாதுகாத்தும், இன்பத்தில் இருத்தியும் - பேரின்பத்திலே நிலைநிறுத்தியும், வைப்பர் - (பரமபதத்தில்) வைத்தருள்வர்; (எ - று.)

என்று உலகத்தார்க்கு உபதேசித்ததாம். மதி - திருமுகமண்டலத்துக்கும், தாமரைமலர்கள்-கண் கை கால் வாய் உந்தி என்ற அவயவங்களுக்கும்,

மின்னற்பத்தி - அணிந்துள்ள திருவாபரணங்களின் ஒளிக்கும், பச்சைமா முகில் - தன்னைக்கண்டவர் கண்ணும் நெஞ்சும் குளிரும்படி சகல தாபங் களையும் கண்டவுடனே ஆற்றுகின்ற கரியதிருமேனிக்கும் உவமை யெனக் காண்க. 'மதிதாங்கிக் கஞ்சம்பூத்து மின்பத்திசெய்யும் பச்சைமாமுகில் போல்' என்றது, இல்பொருளுவமை. பத்திரம் - (தன்னையிட்டு அருச்சிப்ப வர்க்கு) மங்களத்தைத்தருகின்ற, துழாய்எனினும் அமையும்; பத்ரம் - சுபம். 'இன்பத்தியினால்' என்பதை 'சாத்துமின்' என்பதனோடுங் கூட்டுக.

அடிக்கு - உருபுமயக்கம். மதி - (பலராலும்) நன்கு மதிக்கப்படுவது எனப் பொருள்படுங் காரணக்குறி. கஞ்சம்-நீரில்தோன்றுவது என்று கார ணப்பொருள்படும்; (கம்-நீர்:) இது, தாமரைக்குக் காரணவிடுகுறி; மலர்க்கு முதலாகுபெயர். மின்னுவது மின்என ஏதுப்பெயர். பசுமை கருமை நீலம் என்ற நிறங்களுக்கு உள்ள சிறுவேறுபாட்டைக் கருதாது அபேதமாகக் கூறுதல் கவிசமயமாதலால், காளமேகம் 'பச்சைமுகில்' எனப்பட்டது. (கூ)

கO. செய்தவராகவருந்தியுந்தீர்த்தத்துறைபடிந்துங்
கைதவராகமங்கற்றுமென்னாங் கடற்பார்மருப்பிற்
பெய்தவராகனை மாலலங்காரனைப் பேரிலங்கை
யெய்தவராகவவென்றேத்தநீங்குமிருவினையே.

(இ - ள்.) செய் தவர் ஆக வருந்தியும் - செய்கின்ற தவத்தையுடையவ ராக (உடலும் உள்ளமும்) வருந்தியும், தீர்த்தம் துறை படிந்தும் - புண்ய தீர்த்தங்களின் ஸ்நாநகட்டங்களிலே நீராடியும், கைதவர் ஆகமம் கற்றும்- வஞ்சகர்களான பிறமதத்தவர்களுடைய ஆகமநூல்களை ஓதியுணர்ந்தும், என் ஆம் - யாது பயனுண்டாம்? கடல் பார் மருப்பில் பெய்த வராகனை - கடல்சூழ்ந்தபூமியைக் கோட்டிலேந்திய வராகாவதாரஞ்செய்தவனை, மால் அலங்காரனை - பெருமையுள்ள அழகனை, 'பேர் இலங்கை எய்தவ - பெரிய இலங்காபுரியை அம்பெய்து அழித்தவனே! ராகவ - ரகுகுலத்தில் அவ தரித்தவனே!' என்று ஏத்த - என்று துதிக்க அதனால், இரு வினை நீங்கும் - (நல்வினை தீவினை என்னும்) இருவகைவினைகளும் ஒழியும்; (எ - று.)

அலங்காரனை ஏத்த என்று இயையும். 'என்னாம்' என்றது, யாதொரு நற்பயனையுந் தாராது என்றபடி; வினா, இன்மைகுறித்தது. செய்தவர்-தவஞ் செய்கின்றவர்; இனி, செம்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் முன் னின்ற மகரமெய் யகரமாத்திரிந்த தெனக்கொண்டு, செவ்விய தவத்தை யுடையவரெனினுமாம். பருமையுடையது பார் என்றாவது, பார்க்கப்படு வது பார் என்றாவது காரணப்பொருள் காண்க. இலங்கையென்பது - இட வாகுபெயராய், இலங்கையில் வாழ்ந்த இராக்கதர்களையுங் குறிக்கும். எய் தல் என்ற காரணச்சொல், இங்கு, அதன்காரியமாகிய அழித்தலின்மேல் நின்றது ; உபசாரவழக்கு. எய்தவ - எய்தவன் என்பதன் ஈறுகெட்டவிளி. ராகவ - முதலில் இகரம்பெறாது வடசொல்லாயே நின்றது. ராகவன் - தத்திதாந்தநாமம்; சூரியகுலத்து ரகுவென்பவன் ஈகைமுதலியவற்றில் மிகப்

பிரசித்தி பெற்றவனாதலால், அவன்சம்பந்தமாக ஸ்ரீராமபிரானுக்கு ராகவன் என்று திருநாமம் வழங்கும்.

நல்வினையும் பிறப்பிற்கு ஏதுவாதலால், அதனையும்சேர்த்து 'இருவினை நீங்கும்' என்றார்; "இருள்சேரிருவினையுஞ் சேரா விறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார்மாட்டு" என்றார் திருவள்ளுவனாரும். தேவசன்மம் நல்வினைப் பயனாற் பெரிதும் இன்பநுகருமாறு நேர்வதாயினும் அத்தேவர்களும் நல்வினைமுடிந்தவளவிலே அவ்வுடம்புஒழிய மீளவும் இவ்வுலகத்திற் கருமவசத்திற்குஏற்ப வேறுபிறவி கொள்பவராதலும், உயிரைப் பந்தப்படுத்துவதில் பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலப் புண்ணியசன்மமும் பாவசன்மமும் சமமேயாதலும், எல்லாக்கருமங்களையும் முற்றமொழிந்தவர்களே சிற்றின்பத்துக்கும் பெருந்துன்பத்துக்கும் இடமான எழுவகைப் பிறப்புக்களிலும் புகுதாமல் பேரின்பத்துக்கே இடமான மீளாவுலகமாகிய முத்தியிற் சேர்ந்து மீளவும் பிறத்தலிலாரவரென்பதும் உணர்க. 'இருவினை' என்றதில், இனைத்தென்றறிபொருளில்வரும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

[தலைவியின் ஆற்றாமையைத் தோழி தலைவனுக்குக் கூறல்.]

கக. வினைக்குமருந்தரிக்கும்பிணிமூப்புக்கும்வீகின்றவே
தனைக்குமருந்தன்னதாளழகா செய்யதாமரையங்
கனைக்குமருந்தமுதே யருளாய் நின்னைக்காதலித்து
நினைக்குமருந்ததிதன் னுயிர்வாழ்க்கைநிலைபெறவே.

(இ - ள்.) வினைக்கும் - (தன்னைச் சரணமடைந்தவர்களுடைய) இருவினைகளாகிய நோய்களை ஒழிப்பதற்கும், மருந்து அரிக்கும் பிணி மூப்புக்கும் - (மருந்துகளுக்குத் தாம் வசப்பட்டு அழியாமல்) எவ்வகைமருந்தையும் (தமது ஆற்றலாற்) பயன்படாது அழியும்படிசெய்கிற [மிகக்கொடிய] வியாதிகள் கிழத்தனம் என்னும் இவற்றை ஒழிப்பதற்கும், வீகின்ற வேதனைக்கும் - மரணவேதனையைப் போக்குதற்கும், மருந்து அன்ன - (பிணி பசி மூப்பு மரணத்துன்பங்களை நீக்கவல்ல) தேவாமிருதத்தைப்போன்ற, தாள் - திருவடிகளையுடைய, அழகா - அழகனே! செய்ய தாமரை அங்கனைக்கும் அருந்து அமுதே - செந்தாமரைமலரில் வீற்றிருக்கின்ற அழகியபெண்ணான திருமகளுக்கும் நுகர்தற்கு உரிய அமிருதமாயுள்ளவனே!—நின்னை காதலித்து - உன்னை விரும்பி, நினைக்கும் - (எப்பொழுதும் உன்னையே) நினைத்துள்ள, அருந்ததிதன் - அருந்ததி போன்றவளான இம்மங்கையினுடைய, உயிர் வாழ்க்கை - உயிர்வாழ்வு, நிலை பெற - நிலைபெறும்படி, அருளாய் - கருணைசெய்வாய்; (எ - று.)

களவொழுக்கவகைகளால் தலைமகளைக் கூடிநின்ற தலைமகன் அதனால் ஊரெங்கும் பழிபரவுதலை யறிந்து அப்பழிதூற்றலடங்குமாறு அவளைச் சிலநாள் பிரிந்திருத்தலுண்டு; அது, 'ஒருவழித்தணத்தல்' எனப்படும். அங்ஙனம்அவன்பிரிந்துநின்றநிலையில் தலைமகள் பிரிவுத்துயரையாற்றாது மிக வருந்தாநிற்க, மீண்டுவந்த தலைமகனை நோக்கித் தோழி அத்தலைமகளது

வருத்தமிகுதியைக்கூறியது இது. இங்ஙனங் கூறுதலின் பயன், இவளை நீ வெளிப்படையாக மணஞ்செய்துகொள்ளவேண்டுமென்று உணர்த்துதல். வேறுபரிகாரங்களாற் போக்கவொண்ணாத துன்பங்களுக்கெல்லாம் அமிருதசஞ்சீவிபோன்றுள்ள நீ, இவள் இங்ஙனம் வருந்தக் காணலாமோ? என்பாள், 'வினைக்கும்..........மருந்தன்ன தாளழகா' என்று விளித்தாள். 'செய்யதாமரையங்களைக்கும் அருந்துஅமுதே' என்றது, நீ திருமகளிடத்துத் தலையளிசெய்து அவளை எப்பொழுதும் அகலாது மார்பில் வைத்துக்கொண்டுவாழ்தல் போலவே, இவளிடத்தும் தலையளிசெய்து இவளையும் என்றும் விட்டுப்பிரியாது உடன்கொண்டு வாழவேண்டுமென்று குறிப்பித்தவாறு. நின்னையன்றி வேறொன்றை யறியாத கற்புநலமுடையவளிவளென்பாள், 'நின்னைக்காதலித்துநினைக்கு மருந்ததி' என்றாள். இவளுக்கு நீ அருள்புரியாயாயின், இவள் நினதுபிரிவுத்துயரை ஆற்றாது இறந்துபடுவளென்பது, 'அருந்ததிதன்னுயிர்வாழ்க்கை நிலைபெற அருளாய்' என்றதனாற் புலனாம்.

பிணி - (உடலையும் உள்ளத்தையும்) பிணிப்பது என நோய்க்குக் காரணக்குறி; பிணித்தல் - கட்டுதல்: அஸ்வாதீநப்படுத்துதல், பீடித்தல். வீகின்ற வேதனை - இறக்கின்றகாலத்திலுண்டாகுந் துன்பம். எம்பெருமான் திருவடிகளை வழிபடுவார்க்குப் பிறவித்துயரில்லையாமாறு எல்லாக்கருமங்களும் ஒழிதலால், நோய்த்துன்பமும் முதுமைத்துன்பமும் மரணவேதனையும் இலவாதல்பற்றி, 'வினைக்கும் பிணிமூப்புக்கும் வீகின்ற வேதனைக்கும் மருந்தன்ன தாள்' எனப்பட்டது. அங்கநா என்ற சொல் - அழகிய அங்கங்களையுடையவளென்று பொருள்பெறும். செய்யதாமரையங்களைக்கும், உம்மை - எச்சம். அமுதுபோன்றவளை 'அமுது' என்றது, உபசாரவழக்கு. அருந்ததி - வசிஷ்டமகாமுனிவரது மனைவி; இங்கு, அவள்போன்றகற்புடைய மங்கைக்கு உவமையாகுபெயர். அருந்ததி, பதிவிரதாதருமத்திற் சிறந்தலால், கற்புடைமாதர்க்கு உவமை கூறப்படுவள். ஏனையோரினும் இவட்குச் சிறப்பு, மற்றைய இடங்களில்மாத்திரமே யன்றி நக்ஷத்திரநிலையிலும் கணவனைவிட்டுப் பிரியாது உடனுறைதல்.

அழகப்பிரான் சிற்சிலசமயங்களில் ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்காகின்றபொழுதே அவனைக்கிட்டி முத்தியின்பமனுபவிக்கும்படியான ஆசைகொண்ட அவரை அப்பெருமான் அப்பொழுதே தன்பக்கல் சேர்த்துக்கொள்ளாது மறைய, அதனாலுண்டான துயரத்தால் ஐயங்கார் அவனையே இடைவிடாது சிந்தித்துக்கொண்டு மிகவருந்த, அதுகண்ட அன்பர்கள் அவருடைய அத்தன்மையை எம்பெருமான்பக்கல் விண்ணப்பஞ்செய்து 'இனி இவர்வருந்தாதபடி இவர்க்கு நிரந்தராநுபவந்தந்தருளவேண்டும்' என்று பிரார்த்தித்தல், இதற்கு உள்ளுறைபொருள். "மறந்தும் புறந்தொழாமாந்தர்", "சிந்தைமற்றொன்றின்திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்" என்றபடி முழுமுதற்கடவுளான திருமாலை யன்றிப் பிறப்பிறப்புத் துன்பமுடைய பிறிதொருதெய்வத்தைச் சிறிதும்பொருள்செய்யாத நிறையுடையவர் ஐயங்காரென்பது 'நின்னைக்காதலித்துநினைக்குமருந்ததி' என்ற

தனால் வெளியாம். 'உயிர்வாழ்க்கை நிலைபெற அருளாய்' என்றது, இவரது வாழ்வு நினது திருவருளின்வழிப்பட்டுள்ளது என்றவாறு. விளியிரண்டனுள், முந்தியதன் குறிப்பு - இவரது வினைகளையும் வினைப்பயன்களையும் போக்கியருளவேண்டு மென்பது; இரண்டாவதனால், பெரியபிராட்டியாரைப்போலவே இவரையும் என்றும் உன்னைவிட்டுப்பிரியாதபடி சேர்த்துக் கொள்ளவேண்டு மென்று குறிப்பித்தவாறு. (கக)

கஉ. நிலையாமையான வுடலுமுயிருநினைவுந்தம்மிற்
கலையாமையானங்கலக்குமுன்னே கங்கைவைத்தசடைத்
தலையாமையானனன்றாமரையான்றொழுந்தாளழக
னலையாமையானவன் மாலிருஞ்சோலை யடைநெஞ்சமே.

(இ - ள்.) நெஞ்சமே - மனமே!—நிலையாமை ஆன உடலும் - நிலைத்திராமலழியுந்தன்மையுள்ள உடம்பும், உயிரும்—, நினைவும் - சிந்தனையும், தம்மில் கலையா - தம்நிலையினின்று கலையப்பெற்று [இறந்து], மையானம் கலக்குமுன்னே - சுடுகாட்டை அடைவதற்கு முன்னே,— கங்கை வைத்த சடை தலை ஆம் ஐ ஆனனன் தாமரையான் தொழும் தாள் - கங்காநதியைத்தரித்த சடைமுடியோடுகூடிய தலையையுடைய ஐம்முகனாகிய சிவபிரானும் தாமரைமலரில்தோன்றியவனான பிரமனும் வணங்கப்பெற்ற திருவடிகளையுடைய, அழகன் - அழகனும், அலை ஆமை ஆனவன் - திருப்பாற்கடலிலே கூர்மாவதாரமெடுத்தவனுமாகிய எம்பெருமானுடைய, மாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையை, அடை - சேர்வாய் [விரும்பி உட்கொண்டு தியானிப்பாய் என்றபடி]; (எ - று.)

இதுவும், இந்நூலின் முதற்செய்யுள்போல நெஞ்சைநோக்கி யுரைத்ததாம். "பயனல்லசெய்து பயனில்லை நெஞ்சே, புயன்மழைவண்ணர் புரிந்துறைகோயில், மயன்மிகுபொழில்சூழ்மாலிருஞ்சோலை, அயன்மலையடைவதுகருமமே" என்றார்நம்மாழ்வாரும். கலக்குமுன்னே அடை என இயையும்.

கலையா - செய்யா என்னும்வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம்; இதில், 'ஆ' என்ற விகுதியே காலங்காட்டும். தம்மில் கலையா என்பதற்கு - தமக்குள் [ஒன்றையொன்று] பிரியப்பெற்று என்றலு மொன்று. ஸ்மஶாநம் என்ற வடசொல், மயானம் என்றுவிகாரப்படும்; அது, திரிபுநயம் நோக்கி மையானமென முதற்போலிபெற்றது: "ஐ முதலிடை யொக்கும் சஞயமுன்" என்றார் நன்னூலார். சதாசிவமூர்த்தியாகிய சிவபிரானுக்கு, சத்தியோஜாதம் வாமதேவம் அகோரம் தத்புருஷம் ஈசாநம் என ஐந்துமுகங்க ளுண்டென் றறிக. ஆநநம் - வடசொல். தாமரையான் - திருமாலின் நாபித்தாமரைமலரில் தோன்றியவன். அலையென்பது - சினையாகு பெயராய், அலைகளையுடைய கடலை யுணர்த்திற்று; இப்பொதுப்பெயர் இங்கே சிறப்பாய்ப் பாற்கடலைக் குறித்தது. இங்கு, அடைதல் - இடைவிடா துநினைத்தல்; "மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார்" என்றவிடத்து 'சேர்தல்' என்பது போல.

சூரியகுலத்துப் பகீரதசக்ரவர்த்தி, கபிலமுனிவனது கண்ணின்கோபத் தீக்கு இலக்காகி உடலெரிந்து சாம்பலாய் நற்கதியிழந்த தனது மூதாதையரான சகரபுத்திரர் அறுபதினாயிரவரை நற்கதி பெறுவித்தற்பொருட்டு, நெடுங்காலந் தவஞ்செய்து, கங்காநதியை மேலுலகத்திலிருந்து கீழுலகத்துக்குக்கொணர்கையில் அதனது வெகுவிசையாகப்பெருகிவரும் வெள்ளப் பெருக்கைத் தாங்கும் வல்லமை பூமிக்கு இல்லாமைபற்றிச் சிவபிரானைப் பிரார்த்திக்க, அப்பகீரதனது வேண்டுகோளின்படி பரமசிவன் அந்நதியைத் தனது முடியிலேற்றுச் சிறிதுசிறிதாகப் பூமியில் விட்டனனென்பது, கங்கை தரித்த வரலாறு. (கஉ)

கந. நெஞ்சமுருக்கு முயிருருக்குந் தொல்லைநீள்வினையின்
வஞ்சமுருக்கும் பவமுருக்கும் வண்டுழாயழகர்
கஞ்சமுருக்குமலர்வாய்த்திருநண்பர் கஞ்சனுக்கு
நஞ்ச முருக்குவளையாழியன்னவர் நாமங்களே.

(இ - ள்.) கஞ்சம் - தாமரைமலரில் வீற்றிருக்கின்ற, முருக்கு மலர் வாய் திரு - பலாசம்பூப்போன்ற [சிவந்த] வாயையுடைய திருமகளுக்கு, நண்பர் - மனமொத்த அன்புடைய கொழுநராய் அப்பெரியபிராட்டியாரை என்றும்விட்டுஅகலாதவரும், கஞ்சனுக்கு நஞ்சம் - கம்சனுக்கு விஷமானவரும், உரு குவளை ஆழி அன்னவர் - திருமேனிசிறத்தால் நீலோற்பலமலரையும் கடலையும் போன்றவருமான, வண் துழாய் அழகர் - செழிப்பான திருத்துழாய்மாலையைத் தரித்த அழகருடைய, நாமங்கள் - திருநாமங்கள்,— நெஞ்சம் உருக்கும்-(பக்தியோடு தம்மைஉச்சரிக்கும் அன்பர்களுடைய)மனத்தை(ப் பக்திமிகுதியால்) உருகச்செய்யும்; உயிர் உருக்கும் - (ஆநந்தாதிசயத்தால் அவர்களுடைய) உயிரை நெகிழப்பண்ணும்; தொல்லை நீள் வினையின் வஞ்சம் முருக்கும் - (அவர்களுடைய) தொன்றுதொட்டுவருகிற நீண்ட கருமங்களின் வஞ்சனையை அழிக்கும்; பவம் முருக்கும் - (அவர்களுடைய) பிறப்பை ஒழிக்கும்; (எ - று.)

இது, திருநாமமகிமை கூறியது; "குலந்தரும் செல்வந்தந்திடும் அடியார்படுதுயராயினவெல்லாம், நிலந்தரஞ்செய்யும் நீள்விசும்பருளும் அருளொடுபெருநிலமளிக்கும், வலந்தரும் மற்றுந்தந்திடும் பெற்றதாயினுமாயின செய்யும், நலந்தருஞ்சொல்லைநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னும் நாமம்" என்றார் திருமங்கையாழ்வாரும்.

தொல்லை நீள் வினை - பிறப்பு அநாதியாய்வருதலின் உயிரால்செய்து சேர்க்கப்பட்டுக் காரணகாரியத்தொடர்ச்சியாய் அளவின்றிவருகின்ற கருமங்கள். அவ்வினைகள் தாம் பலிக்குங்காலம்வருமளவும் புலனாகாது உயிரைப்பற்றி மறைந்துநின்று அச்சமயம்வந்தவிடத்துச் சடக்கெனப்பயன் தந்து வெளிப்படுதலால், 'வினையின்வஞ்சம்' எனப்பட்டது. முருக்கும் - முருங்கு மென்பதன் பிறவினை; மெலிவலியானது, பிறவினைக்குறி: முருங்குதல் - அழிதல். பிறப்புக்களுக்குக்காரணங்களாகிற கருமங்களுட்படப்

பிறப்புக்களையொழிக்கு மெனவே, இனிக் கருமவசத்தாற் பிறவாதபடி மீளா வுலகமாகிய முத்தியைத் தரு மென்றவாறும். பவம் - வடசொல். கஞ்சத் திரு என இயையும். முருக்குமலர் வாய் - நிறம்பற்றிய உவமை.

கம்சனைத் தவறாது எளிதில்அழித்தவரென்ற பொருளில், 'கஞ்சனுக்கு நஞ்சம்'என்றார். நஞ்சம்போன்றவரை 'நஞ்சம்' என்றது, உபசாரவழக்கு. உருக்குவளையாழியன்னவர் — "குன்றுமெகொழுமுகில் போற் குவளைகள் போற் குரைகடல்போல், நின்றுசெணமயில்போல் நிறமுடைய நெடுமால்" என்றார் பெரியாழ்வாரும். திருமேனிநிறத்தின் செய்ப்புக்குக் குவளைப்பூ வின்நிறத்தையும், அதன் இருட்சிக்குக் கடலின்நிறத்தையும் நிகரென்பர். குவளை - குவலய மென்ற வடசொல்லின் சிதைவு. குவளை என்று பதம் பிரித்து, கு - பூமியை, வளை - சூழ்ந்துள்ள, ஆழி - கடலை, அன்னவரென்று நலித்துபொருள்கொள்வாரு முளர்.

இனி, 'நஞ்சமுருக்கும்வளையாழியன்னவர்' என்ற பாடத்துக்கு—கஞ் சனுக்குவிஷமாய்த்தோன்றியவரும் (உலகத்தை)வளைந்துள்ள கடலைப்போ ன்றவருமான எம்பெருமான் என்று பொருள்காண்க;உருக்கும்-தோன்றும்; உருத்தல் - தோன்றுதல். வளை ஆழி அன்னவர் - சங்கினையுடைய கடல் போன்றவருமாம். (கரு)

கசு. நாமங்களாவிநழுவுந்தனையுநவின்றவரைத்
தாமங்களாவிமனத்துள்வைப்பார் தண்டலையினகிற்
றாமங்களாவிமணநாறுமாலிருஞ்சோலையன்பர்
சேமங்களாவின்கனியனையார்பதஞ்சேருவரே.

(இ - ள்.) நாமங்கள் - (அழகருடைய) திருநாமங்களை, ஆவி நழுவும் தனையும் நவின்று - உயிர் (உடலைவிட்டு) நீங்குமளவும் [தாம்இறக்குமளவும்] உச்சாரணஞ்செய்து, அவரை - அப்பெருமானை, தாம்—, அங்கு - அவ்விட த்திலே [திருமாலிருஞ்சோலைமலையிலே], அளாவி - அடைந்து பற்றி, மனத்துள் வைப்பார் - தம்மனத்திற்கொண்டு தியானிப்பவர்கள்,—தண்ட லையின் - சோலைகளிலே, ஆவி - குளங்கள், அகில் தூமங்கள் மணம் நாறும்- (தம்மிடத்துநீராடுகிற மாதர்கள் கூந்தல்முதலியவற்றிற்கு ஊட்டிய) அகிற் புகைகளின்நறுமணம்வீசப்பெற்ற, மாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளியிருக்கிற, அன்பர் - (எல்லாவுயிர்களிடத்தும்) அன்பு டையவரும், சேமம் - (அவ்வுயிர்கட்கெல்லாம்) பாதுகாப்பாயுள்ளவரும், களாவின் கனி அனையார் - (திருமேனியின்கருநிறத்தாற்) களாப்பழத்தை யொத்தவருமாகிய அப்பெருமானுடைய, பதம் - திருவடிகளை, சேருவர் - சேர்வார்கள்; (எ - று.)

திருமாலிருஞ்சோலைமலையெம்பெருமானை மனத்திற்கொண்டு தியா னித்து வாக்கினால் அவனதுநாமோச்சாரணஞ்செய்து மெய்யினால் அவனை வணங்கித் தொண்டுபூண்டொழுகுபவராகி இங்ஙனம் திரிகரணங்களாலும் வழிபடும் அடியார்கள், அப்பெருமானுடையதிருவருளால் அவனடியிற்சேர்வ

ரென்பதாம். 'திருவடியே வீடாயிருக்கும்'என்னுங் கொள்கைபற்றி, 'பதஞ் சேருவர்' என்றார். இனி, பதம் - ஸ்தாநமாகிய பரமபதத்தை, சேர்வர் எனினுமாம். அவ்வை, அங்கு எனச் சுட்டுப்பெயர்கள் - அன்பர், திருமாலிருஞ்சோலை என்ற இயற்பெயர்களின் முன் வந்தன; செய்யுளாதலின்: "செய்யுட்கு எற்புழி" என்பது, நன்னூல்.

தாம், அங்கு என்றவற்றை அசையாகவுங் கொள்ளலாம். தண்டலை - தண் தலை என்று பதம்பிரிந்து, குளிர்ச்சியான இடத்தை யுடையது என்று காரணப்பொருள்பெறும்; பண்புத்தொகையன்மொழி. அகில்தூமம், வாவியில் நீராடும் மகளிரது கூந்தல்முதலியவற்றில் முன்பூட்டப்பெற்றது. அவர்கள் நீராடும்போது அந்நறும்புகை சம்பந்தப்பட்டதனால், வாவியின்நீர் அந்தமணம்நாறும் என அகிற்புகையின்பரிமளமிகுதி கூறியவாறு. இனி, 'ஹவிஸ்' என்ற வடசொல்லின் விகாரமான 'அவி' என்பது திரிபுநோக்கி 'ஆவி'என நீட்டல்விகாரம் பெற்றதென்று கொண்டு, சோலைகளிலே அகிற்புகைகளும் (வைதிகர்கள் யாகஞ்செய்கின்ற ஓமாக்கினியினின்று எழுகிற தூமங்களின்) ஹவிர்வாசனையும் நாறுகிற மாலிருஞ்சோலை யென்றலுமொன்று; ஆவிமணம் - மந்திரபூர்வமாக வைதிகாக்கினியில்ஓமஞ்செய்கிற நெய் முதலிய தேவருணவின் பரிமளம்: 'ஆவிமணநாறு மாலிருஞ்சோலை' என்பதை, "மாடுயர்ந்தோமப்புகைகமழுந் தண் திருவல்லவாழ்"என்ற திருவாய்மொழியோடு ஒப்பிடுக. இனி, தூமம் கள் ஆவி என்று பதம்பிரித்து, சோலைகளிலே அகிற்புகையும் தேனும் ஹவிஸ்ஸும் மணம்வீசு மென்னலுமாம். மகாப்பிரளயமாகிய ஆபத்காலத்திலே எல்லாவுயிர்க்கும் தாம் ஓர்அரணாக அவையனைத்தையும் வயிற்றில்வைத்துப் பாதுகாத்தமைபற்றி, எம்பெருமான் 'சேமம்' எனப்பட்டனர்; இனி, சேமம் - இன்பமயமானவ ரெனினுமாம். களாவின்கனி - பெருமானுக்குத் திருமேனிநிறத்தில் உவமம்; "களங் கனிவண்ணா கண்ணனே" என்றார் திருமங்கையாழ்வாரும். (௧௪)

௧௫. சேராதகாதநரகேழ்தலைமுறைசேர்ந்தவர்க்கும்
வாராதகாதம்வசைபிணிபாவ மறிகடன்முன்
றூராதகாதங்கடூர்த்தானை மாலிருஞ்சோலையிற்போ
யாராதகாதலுடன்பணிவீ ரென்னழகனையே.

(இ - ள்.) ஆராத காதலுடன் - அடங்காத [போதுமென்று திருப்தி கொள்ளாத] அன்புடனே,—மாலிருஞ்சோலையில் போய் - திருமாலிருஞ்சோலைமலைக்குச் சென்று,—முன் - முன்பு [ஸ்ரீராமாவதாரத்திலே], மறி கடல் - அலைகள்மடங்கியடிக்கப்பெற்ற கடலிலே, தூராத காதங்கள் தூர்த்தானை - (எவராலும் எந்நாளிலும்) தூர்க்கப்படாத அநேககாததூரமளவும் (குரங்குகளைக்கொண்டு மலைகளைக்கொணர்ந்துபெய்து) நிரப்பி அணைகட்டியவனை, என் அழகனை - எனது தலைவனாகிய அழகப்பெருமானை, பணிவீர் - வணங்குங்கள்; (அங்ஙனம் வணங்கினால்),—ஏழ் தலைமுறை சேர்ந்தவர்க்கும் - (முன்னுவது பின்னுவது) எழுதலைமுறை (உங்களைச்) சேர்ந்தவர்களுக்கும், தகாத நரகு சேரா - தகுதியற்ற [கொடிய]நரகங்கள் தொடர

மாட்டார்; அகாதம் வசை பிணி பாவம் வாராது - ஆழமான [கடப்பதற்கு அரிய] பழிப்பும் நோயும் தீவினையும் நேரிடாது; (எ - று.)

ஒன்பதாஞ்செய்யுள்போல இதுவும் உலகத்தார்க்கு உபதேசித்தது. ஒருசந்ததியிலே ஒருவர் எம்பெருமானைச் சரண்புகுந்தால், அவர்க்கேயன்றி அவரது முன்பின்பரம்பரையோர்க்கும் அதன்நற்பயன் விளையு மென்பது கருத்து: (திருப்பல்லாண்டில் "ஏழாட்காலும்பழிப்பிலோம்நாங்கள்" என்ற விடத்து 'ஒருஸந்தாநத்திலே ஒருவன் அநந்யப்ரயோஜநனானால், அவனைப் பற்ற, பகவத்ப்ரபாவம் ஸம்பந்திஸம்பந்திகளளவுஞ் செல்லக் கீழும் மேலும் வெள்ளமிடும்' என்கிற வியாக்யாநவாக்கியம் உணரத்தக்கது.) எழுதலைமுறை சேர்ந்தவர்க்கும் சேராளவே, இவர்க்குச்சேரா வென்பது சொல்லவேண்டாதாயிற்று ; உம்மை - இறந்ததுதழுவியஎச்சம். இனி, பரம்பரையாகத் தீவினையையேசெய்யும் இயல்பினராய்க் கொடியநரகங்களை எழுதலைமுறை சேர்ந்தவர்களும் திருமாலிருஞ்சோலையிற்போய் அழகனைப் பணிவாராயின், பின்பு அவர்க்கு அந்நரகங்கள் அமையா என்று உரைத்தலு மொன்று; இப்பொருளில், உம்மை - இழிவுசிறப்பு.

நரகு - நரக மென்ற வடசொல்லின் விகாரம்; இந்தப் பால்பகாஅஃறிணைப்பெயர், இங்குப் பன்மையாய்ப் பலவகைநரகங்களை யுணர்த்துதலால், 'சேரா' என்ற பலவின்பால்முற்றைக் கொண்டது. 'நரகுசேரா' என்றாரேனும், அவர்கள் நரகஞ்சேரார் என்பதே கருத்து. அகாதம், பாபம் - வடசொற்கள். வசை பிணி பாவம் வாராது - பன்மையொருமைமயக்கம் ; (தனித்தனி) வாராது என்க. அகாதம் - வஞ்சகமுமாம். 'தகாதவசை' என்ற பாடத்துக்கு - முதலடியில் அகாதம் நரகு சேராது என்று பிரித்து, ஆழமாகிய நரகக்குழி வாய்த்திடாது என்று உரைத்து, இரண்டாமடியில் தகுதியற்ற வசைபிணிபாவங்கள் வாரா என்க.

மறிகடல் - வினைத்தொகை. முன் - காலமுன். இனி, எழனுருபெனக் கொண்டு, கடல்முன் - கடலிலே எனினுமாம்; "கற்றூர்முற் றோன்றா கழிவிரக்கம்" என்றவிடத்துப் போல. காதம் - ஏழரைநாழிகை வழித்தூரம். இராமசேதுவின் அகலநீளங்களின் மிகுதி விளங்க, 'தூராதகாதங்கள் தூர்த்தான்' என்றார். "எய்தயோசனையீண்டொரு நூறினை, யையிரண்டினகலமமைந்திடச், செய்ததாலணை" என்ற கம்பராமாயணத்தால், அதன் அளவை உணர்க. 'ஆராதகாதலுடன்' என்றதை, மத்திமதீபமாக, முன்நின்ற 'போய்' என்றதனோடும், பின்நிற்கும் 'பணிவீர்' என்பதனோடும் கூட்டுக.

[பாங்கிவிடுதூது.]

கசு. அழக்கன்றியகருங்கண்ணிக்குக்கண்ணியளித்திலரேல்
வழக்கன்றிமுன்கொண்டவால்வளைகேளு மறுத்ததுண்டேற்
குழக்கன்றின்பின்குழலூதலங்காரர்க்குக் கோதைநல்லீர்
சழக்கன்றில்வாய்பிளந்தானுய்யலாமென்றுசாற்றுமினே.

(இ - ள்.) கோதை நல்லீர் - பூமாலைபோலும் மெல்லியலாரான மாதர்களே!—அழ கன்றிய கருங் கண்ணிக்கு-(கண்ணீர்விட்டு) அழுதலினாற் கன்

றிப்போன கருமையான கண்களையுடைய இம்மகளுக்காக, கண்ணி அளித்திலர் எல் - (தலைவர்) தமது மாலையைக் கொடாராயின், வழக்கு அன்றி முன் கொண்ட வால் வளை கேளும் - நியாயமாகவன்றி முன்பு (இவளிடமிருந்து) வலியக் கவர்ந்துகொண்ட ஒள்ளிய வளையல்களை (த் தரும்படி) கேளுங்கள்; மறுத்தது உண்டு எல்-(அவற்றையுந் தாராது அவர்) தடைசொல்வதுண்டானால்,—குழ கன்றின் பின் குழல் ஊது அலங்காரர்க்கு - இளமையான கன்றுகளின்பின்னே புள்ளாங்குழலையூதிச்சென்ற அழகப்பிரானாகிய அத்தலைவர்க்கு,—சழக்கு அன்றில் வாய் பிளந்தால் உய்யல் ஆம் என்று சாற்றுமின் - குற்றத்தையுடைய அன்றிற்பறவையின் வாயைக் கிழித்துவிட்டால்தான் இவள்பிழைத்தல்கூடும் என்று சொல்லுங்கள்; (எ - று.)

தலைவனைப்பிரிந்த தலைவி அப்பிரிவுத்துயரைப் பொறுக்கமாட்டாமல் நள்ளிரவிலுமுட்படத் துயில்கொள்ளாது அன்றிலின்குரல் கேட்கும்போதெல்லாம் மரணவேதனையுற்றுக் கைவளைகள்கழன்றுகீழ்விழும்படி உடல் மெலிந்து கண்கலங்கி அழுதபடியே யிருக்க, அந்நிலைமையைக் கண்டுவருந்திய செவிலித்தாய், அத்தலைவியின்தோழியரைநோக்கி இங்ஙனஞ்சொல்லி, அவர்களைத் தலைவனிடத்துத் தூதுசெல்லுமாறு வேண்டுகிறாளென்க. "இயம்புகின்ற காலத்து எகினம் மயில் கிள்ளை, பயம்பெறுமேகம் பூவை பாங்கி—நயந்தகுயில், பேதைநெஞ்சம் தென்றல் பிரமரம் ஈரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" என்ற இரத்தினச்சுருக்கத்தால், தூதனுப்பப்படுதற்குஉரிய பொருள்களை உணர்க. பிரிந்ததலைவன் வருமளவும் ஆறியிருக்கவொண்ணாதே அவன்வரவுக்குப் பிறர் விரைந்து ஆள்விடும்படி யாயிற்று, ஆற்றாமைமிகுதி. தலைமகனைப்பிரிந்துவருந்துகின்ற நிலையில் அவன் தரித்த மாலையையாயினும் பெற்றால், அதுகொண்டு தலைமகள் ஒருவாறு தணிந்திருத்தல்கூடு மாதலால், அது, முதலில் வேண்டப்பட்டது. தலைவனது பிரிவு தலைவிக்கு மெலிவைவிளைத்து அவள்கையினின்று வளைகள்கழன்றுவிழும்படிசெய்ததை அத்தலைவன்மேலேற்றி,'முன்கொண்டவால்வளை' என்றாள். ("கைப்பொருள்கள்முன்னமேகைக்கொண்டார் காவிரிநீர்,செய்ப்புரளவோடுந் திருவரங்கச்செல்வனார்," "எம்மானார் என்னுடைய,கழல்வளையைத் தாமும் கழல்வளையேயாக்கினரே" என்பன, நாச்சியார்திருமொழி). 'அதனைத் தரும்படி கேளும்' என்றது, பிரிந்தகாலத்திலே கைவளைகழலுமாறு இவட்குநேர்ந்த உடல்மெலிவு இனித் தணிந்து அவ்வளைகழலாதவண்ணம் மகிழ்ச்சியால் உடல்பூரிக்கும்படி மீண்டுவந்து இவளோடு கலந்திடுமாறு அத்தலைவனை வற்புறுத்துங்க ளென்றபடி. தம்மையேகதியாகக்கொண்ட ஒருபெண்ணினது கைப்பொருளைக் கவர்ந்துகொள்ளுதல் நீதியன்றாதலால், 'வழக்கன்றி முன்கொண்ட வால்வளை' எனப்பட்டது.

அன்றிலென்பது, ஒருபறவை. அது, எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாது நிற்கும். கணப்பொழுது ஒன்றை ஒன்று விட்டுப் பிரிந்தாலும் அத்துயரத்தைப்பொறாமல் ஒன்றை யொன்று இரண்டுமூன்றுதரம் கத்திக்கூவி அதன்பின்பும்தன் துணையைக்கூடாவிடின்உடனே இறந்துபடும்.

இதனை வடநூலார் க்ரௌஞ்சம் என்பர். ஆணும்பெண்ணுமான அந்த அன்றிற்பறவை இணைபிரியாமல் நெருங்கி ஒன்றோடொன்று வாயலகைக் கோத்துக்கொண்டு உறங்கும்பொழுது அவ்வுறக்கத்திலே வாயலகு தன்னில்நெகிழ்ந்தவளவிலே துயிலுணர்ந்து அப்பிரிவைப்பொறாமல் மெலிந்து பெருந்தொனியாகக்கத்துகின்ற மிகஇரங்கத்தக்க சிறுகுரல் காமோத்தீபகமாய்ப் பிரிவாற்றாமைத்துயரை வளர்த்துப் பிரிந்தகாமுகரை மிகவருத்தும்; ஆதலால், அந்தஅன்றில் கத்தாதபடி அதன்வாயைப் பிளந்துவிட்டாலன்றி இவள்உய்யாள் என்று சொல்லுங்க ளென்றாள். ("புள்ளின்பகுவாயது போலனி, விள்ளுங்குயில்வெவ்வியவாய்கிழியாய்" என்ற பாகவதத்தோடு இதனை ஒப்பிடுக.) துணைவனின்றித் தனிமையாயிருக்கிறசமயத்திலே மெல்லியலாளான தலைவியைச் சிறிதுங்கண்ணோட்டமின்றித் தன்குரலால்வருத்தும் பிழைபாடுடையது அன்றி லென்பாள், 'சழக்கன்றில்' என்றாள். தம்மைச் சார்ந்த அநபராதிகளான எளியார் மிகவருந்தும்படி அவரை வாயினால் வருத்துங் குற்றவாளிகட்குத் தலைவர்செய்யத்தக்க தண்டனை அவ்வாயைப் பிளத்த லென்க.

கன்றின்பின் குழலூதியது, கிருஷ்ணன் இடையர்தலைவனான நந்தகோபன்மகனாகத் திருவாய்ப்பாடியில்வளர்ந்த இளமையி லென்க. அப்பொழுது, பிராயமுதிர்ந்த இடையர்கள் பசுக்களைமேய்க்க, சிறுபிள்ளையான கண்ணன் இடைச்சாதிப்பிள்ளைகளுடனே சேர்ந்து கன்றுகளை மேய்த்தனன். பலஇடங்களிற் பரவிமேய்கின்ற ஆன்கன்றுகளை ஒருங்குசேர்த்தற் பொருட்டும், அவற்றை மகிழ்வித்தற்பொருட்டும், கண்ணன் மிகஇனிதாக வேய்ங்குழலூதியமை, பிரசித்தம். எளியகன்றுகளினிடத்துமுட்பட வாத்ஸல்யமுடையராய் அவற்றைவிடாதுதொடர்ந்து களிப்பிக்கும் இயல்புடையவர்க்கு, தம்மையேஅடுத்த ஒருபெண்ணை இங்ஙனம் உபேக்ஷித்தல் தகுதியோ? என்பதுபட, 'குழக்கன்றின்பின்குழலூதலங்காரர்க்கு' எனப்பட்டது.

வால் வளை - வெண்மையான சங்கவளையல்களுமாம். குழ - இளமையுணர்த்தும் உரிச்சொல்; "மழவும் குழவும் இளமைப்பொருள" என்பது தொல்காப்பியம். கன்று - இளமைப்பெயர்; இது, பசுமுதலியவற்றிற்கு உரியது. நல்லாளென்று இலக்குமிக்கு ஒருபெய ராதலால், அதன்பன்மையாகிய நல்லாரென்பது, பெரும்பாலும் மாதரை யுணர்த்தும்: நற்குண நற்செய்கைகளையும் அழகையு முடையா ரென்க. சழக்கு - பேதையுமாம்.

ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமான் மறைந்தவளவிலே, அவனது நிரந்தராநுபவத்தைப் பெறவிரும்பிய அவர் அப்பிரிவாற்றாமையாலும் தம்மை வருத்தக்கடவனவான லௌகிக பதார்த்தங்களைக்குறித்தும் மிகவருந்த, அந்நிலைமையை நோக்கிய அவரிடத்துப் பரிவுடையரான ஞானிகள், அவரதுசுகதுக்கங்களைத் தமதுசுகதுக்கங்களாகக் கொள்ளும் மனமொத்த அன்பர்களை நோக்கி 'இவரது இந்நிலைமையை நீங்கள் எம்பெருமான்பக்கல் விண்ணப்பஞ்செய்து இவர்க்கு அவனது ஸதா ஸாந்நித்யம் கிடைக்குமாறு செய்யலாகாதோ?' என்று தூண்டுதல், இதற்கு

உள்ளுறைபொருள். ஸ்வாபதேசத்தில், 'கண்ணழகென்பது, ஜ்ஞாநவைலக்ஷண்யத்தை' என்றனர் ஆன்றோர். கரியதிருமேனியையுடைய கண்ணபிரான்பக்கல் ஈடுபட்டுத் தம்மயமாகியஞானம் இப்பிரிவுத்துயரால்நிலைகுலையப்பெற்றன ரிவ ரென்பார், 'அழக்கன்றியகருங்கண்ணி' என்றார். கண்ணியளித்திலரேல் - தமதுநிரதிசயஆநந்தத்தைத் தந்தருளாராயின் என்றபடி. ('வளைஎன்பது, அநந்யார்ஹதாசித்தத்தை' என்பர் ஸ்வாபதேசத்தில்.) 'வழுக்கன்றி முன்கொண்ட வால்வளை கேளும்' என்றது, ஸ்வாதந்திரியமின்றி எம்பெருமானுக்கே பாரதந்திரராயிருக்கும் இவரதுநிலைமை பிரிவாற்றாத்துயரால் நிலைகுலைகின்றது: அது அங்ஙனமாகாதபடி எம்பெருமானைக் கொண்டு செய்விக்கவேண்டு மென்றவாறு. வால்வளை — சுத்தமான பாரதந்திரியம். ('வாடை அன்றில் தென்றல் முதலான பாதகங்க [ளாயுக] ளென்பது, ஸ்மாரகத்வேந அஸஹ்யங்களான லௌகிகபதார்த்தங்களை' என்பது, ஸ்வாபதேசவுரை.) தம்மைப்போலப் பிரிந்துவருந்துவாரது அரற்றொலியைக் கேட்குமிடத்து உய்யக்கடவரல்ல ரிவரென்பது, ஈற்றடியில் வெளியாம். விவரம், வல்லார்வாய்க் கேட்டுஉணர்க.

'கண்ணிக்குக் கண்ணி யளித்திலரேல்' என்றவிடத்துச் சொன்னயம் கருதத்தக்கது; சொற்பின்வருநிலையணி. (௬௬)

[தலைமகளது மடலூர்தற்றுணிவைத் தோழி செவிலிக்கு உணர்த்தல்.]

௬௭. சாற்றுக்கரும்பனைக்கூற்றென்னு மாசைத்தமிழ்மலயக்
காற்றுக்கரும்பனையுங் கண்படா ளலங்காரற் கண்ட
ரேற்றுக் கரும்பனையக்கொங்கையாள்கொண்டவின்னலுக்கு
மாற்றுக்கரும்பனையல்லாதுவேறுமருந்தில்லையே.

(இ - ள்.) (இம்மங்கை),— சாறு கரும்பனை - இரசமுள்ள கரும்பை வில்லாகவுடையவனான மன்மதனை, கூற்று என்னும் - யமனென்றுசொல்வாள்; ஆசை தமிழ் மலயம் காற்றுக்கு - (எல்லாராலும்) விரும்பப்படுவதும் தமிழ்வளர்ந்தஇடமான பொதியமலையினின்று தோன்றுவதுமான தென்றற்காற்றுக்கு, அரும்பல் ஐயும் - அதுசிறியதாகவீசும்போதெல்லாம் வருந்துவாள்; கண்படாள் - (நள்ளிரவிலும்முட்படத்) துயில்கொள்ளாள்; (ஆகவே).—அண்டர் ஏற்றுக்கு - தேவர்களிற் சிங்கம்போன்றவனாகிய, அலங்காரற்கு - அழகப்பிரான்விஷயமாக, அரும்பு அனைய கொங்கையாள் கொண்ட - கோங்கரும்பை[அல்லது தாமரையரும்பை] (வடிவில்) ஒத்த தனங்களையுடையவளான இவள் கொண்ட, இன்னலுக்கு - துன்பத்துக்கு, மாற்று - பரிகாரம், கரும் பனை அல்லாது - கரிய பனைமடலை யூர்தலே யல்லாமல், வேறு மருந்து இல்லையே - (இக்காதல்நோயைத்தீர்ப்பதற்கு)வேறு எப்பரிகாரமும் இல்லைபோலும்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - இரக்கம்; இல்லையோ? என வினாவுமாம்.

தலைமகனும் தலைமகளும் தெய்வவசத்தால் ஏகாந்தமான ஓரிடத்திலே சந்தித்து ஒருவர்பக்கல் ஒருவர் காதல்கொண்டு கூடிப்பாரும் அடுப்பாரு

மின்றித் தமதுவிருப்பத்தின்படி களவுப்புணர்ச்சிபுணர்ந்து பிரிந்தபின்பு அவ்வாற்றாமைவிஞ்சி அதனால் நாணம்முதலியன அழிந்து இவர்களுள் ஒருவர் மற்றொருவரது வடிவத்தையும் ஊரையும் பேரையும் தமதூரையும் பேரையும் ஒருபடத்திலெழுதி அச்சித்திரபடத்தைக் கையிற்கொண்டு பனைமடலினால் ஒருகுதிரையுருச்செய்வித்து அதன்மீது தாம் ஏறி அதனைப் பிறரால் இழுப்பித்து வீதிவழியே பலரும்கூடும் பொதுவிடங்களி லெல்லாஞ் செல்லுபவராவர்; இது, மடலூர்த லெனவும், மடன்மாவேறுத லெனவும் படும். இதற்குப் பயன் - இவரது இக்கடுந்தொழிலைக் கண்டு அதனால் இவரது பெருவேட்கையை யுணர்ந்து உறவினராயினும் அரசனாயினும் வெளிப்படையாக மணஞ்செய்துவைக்கப்பெறுதலாம். இம்மடற்றிறம், ஆடவர்க்கே பெரும்பாலும் உரியது. அளவுக்குவிஞ்சின ஆசையின் மிகுதியால், மகளிர்க்கும் சிறுபான்மை வரும். அன்றியும், மடலூர்தல் ஆடவர்க்கேஉரிய தென்றும், மடலூர்வேனென்று சொல்லுதல் இருபாலார்க்கு முரிய தென்றும் உணர்க. இங்குக்கூறிய இது, தலைவியின் மடற்றிறம். பிரிவாற்றாது வருந்துந் தலைமகள் காதல்மிகுதியால் நாணந்துறந்து மடலேறத்துணிவதைக் கண்ட தோழி. இவளை இங்ஙனம் வரம்புகடக்கவிடலாகா தென்று சிந்தித்து அவளது அந்நிலைமையைச் செவிலித்தாய்க்குக் கூறுதல், இச்செய்யுளிற்குறிக்கப்பட்ட விஷயம். இதன்பயன், அச்செவிலித்தாய் இவளுடையகாதலை உரியபடிநற்றாய்க்குஉணர்த்த, அவள் தந்தைக்குக்கூறிமணஞ்செய்விப்பளென்பது.

இனி, இப்பாட்டுக்கு - தோழி தலைவிக்கு இனி மடலே பொருளென மதித்ததாகவுந் துறைகொள்ளலாம்.

சாற்றுக்கரும்பனைக் கூற்றென்னும் - தனக்குநேர்ந்த காதல் மரணவேதனையை விளைத்தலால், இவள், காதற்கடவுளான காமனை யமனென்று அஞ்சி வெறுப்பளென்க. தென்திசையிலிருந்து வருங் காற்றாகிய தென்றலை, பரதகண்டத்திலே தென்னாடாகிய பாண்டியநாட்டிலே யுள்ள மலயபருவதமெனப்படுகின்ற பொதியமலையிலிருந்து தோன்றிவருவதாகக் கூறுதல், கவிசமயம்; 'மலயமாருதம்' என அதற்கு ஒருபெயர் வழங்குதலுங் காண்க. வடதிசையிலிருந்து தென்திசைக்கு வந்த அகத்தியமகாமுனிவர் பொதியமலையிலே வீற்றிருந்து பேரகத்தியம் சிற்றகத்தியம்என்ற தமிழிலக்கணநூல்களை இயற்றித் தமதுமாணாக்கர்கட்குப் போதித்துத் தமிழ்ப்பாஷையைச் சீர்திருத்தி வளர்த்ததனால், அம்மலை, தமிழ்வளர்ந்தஇடமெனப்படும். பிறர்க்குஇன்பத்தைத்தருவதான இளந்தென்றல் இனிது வீசும்பொழுதெல்லாம் இவள் வருந்துகின்றாளென்பாள், 'ஆசைத்தமிழ்மலயக்காற்றுக்கு அரும்பல்லையும்' என்றாள். கூடினோர்க்குஇன்பந்தரும் பொருள்களெல்லாம், பிரிந்தார்க்குத் துன்பம்விளைக்கு மென்க. அண்டரேறு - விலங்குகளுக்குள் அரசாகிய சிங்கம்போலத் தேவர்களில் தலைமைபெற்ற ஆதிதேவனென்க; சிங்கம் காளை யானை முதலிய சிலசொற்கள், ஆடவரிற் சிறப்பை யுணர்த்துவனவாக வழங்கும். 'அலங்காரற்கு'.'அண்டரேற்றுக்கு' என்பன - தலைவனது அழகின்மிகுதியையும், தலைமையையும் உணர்த்தும். பனைமடற்குதிரையேறுதலை 'பனை' என்றது, மும்மடியாகுபெயர்.

அரும்பல் என்ற தொழிற்பெயர் - ஆகுபெயராய், அரும்பும்பொழுதை யுணர்த்திற்று. அரும்ப னையும் என்று எடுத்து, அரும்புந்தோறும் வருந்துவா ளெனினும் அமையும்; இவ்வுரைக்கு, திரிபுக்காக நகரம் ணகரமாக் கொள்ளப்பட்டதென வேண்டும். இனி, காற்று உக்கு அரும்பல் என்று பதம்பிரித்து, தென்றல் வெளிப்பட்டுத் தோன்றுதலுக்கு என்று உரைப்பாரு முளர். கண்படுதல் - கண்மூடியுறங்குதல். அண்டம் - வானம், மேலுலகம்: அதிலுள்ளவர், அண்டர். ஏறு - சிங்கத்தின் ஆண்மைப்பெயர். ஏறு போன்றவனை 'ஏறு' என்றது, உபசாரவழக்கு. 'அரும்பனையக்கொங்கை' என்றவிடத்து, ககரவொற்று - விரித்தலென்னுஞ் செய்யுள்விகாரத்தால் வந்தது; அது இல்லாவிடின், கட்டளைக்கலித்துறைக்கு உரிய வெண்டளை சிதைதல் காண்க: அன்றி, பெயரெச்சத்தின்முன் வலிமிக நியாயமில்லை.

'ஆசைத்தமிழ்மலயக்காற்று' என்றது, மலயமலையில்வளர்ந்த தமிழ்ப் பாஷைபோலவே அதிலுண்டான தென்றற்காற்றும் மிகஇனியதாய்ப் பலரும்விரும்பத்தக்க தென்ற குறிப்பு ; (எனவே, இங்கு இந்நூலாசிரியரது பாஷாபிமானம் விளங்கும்.)

ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமான் மறைந்தவளவிலே, அவனது நிரந்தராநுபவத்தில் அபேக்ஷையுடைய இவர், ஸ்வதந்திரனான அவன் மீண்டும் தானாகவந்து தம்மைச்சேர்த்துக்கொண்டருளுங் காலத்தின் வரவை எதிர்நோக்கிப் பொறுத்து மார்ஜாரகிசோரநியாயத்தால் பரதந்திரராய் ஆறியிருப்பது தகுதியாக, தமது அவாவின்மிகுதியால் அத்தன்மைகுலைந்து, எவ்வாற்றாலாயினும் தாம் முயன்று அவனது ஸாந்நித்யத்தைப் பெறுதற்கு விரைய, அத்தன்மையைக் கண்ட அன்பர்கள், அவர் பக்கல் பரிவுடையரான பெரியோர்க்கு அந்நிலைமையை எடுத்துஉரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். மன்மதன் தென்றல் முதலிய லௌகிகபதார்த்தங்களைக்குறித்து இவர் அஞ்சுதலும், வெறுத்தலும், முன்னிரண்டுவாக்கியங்களிற் புலனும். கண்படாள் - கருமமேகண்ணான இவர் அதில் எப்பொழுதும் கண்விழிப்பு [ஜாக்கிரதை] உடையராயேயிருப்ப ரென்றபடி. அரும்பனைய கொங்கையாள் - மேன்மேல்வளரக்கடவதான பக்தியை யுடைய இவரென்க. அப்ரஸ்துதப்ரசம்ஸையில் 'கொங்கை' என்றது, ஸ்வாபதேசத்தில் பக்தியாம். மகளிருறுப்பாய்ச்சிறக்கிற இது, அடியார்க்கு இலக்கணமாய்ச்சிறக்கிற அதனைக் குறிப்பிக்கும். தலைவனைச்சேர்ந்து அநுபவித்தற்கு உபகரணமாதல், இரண்டுக்கும் உண்டு. மடலூர்தலுக்கு ஸ்வாபதேசம்-பாரதந்திரியத்தைவிட்டு ஸ்வாதந்திரியத்தை மேற்கொண்டு ஸாதநாநுஷ்டானஞ் செய்தல். இவரது பாரதந்திரியநிலைகுலையாதபடி எம்பெருமான் ஸாந்நித்யந் தந்தருளுமாறு செய்விக்கவேண்டுமென்று உணர்த்துதல், இங்ஙனம் உரைத்தலின் பயனும். பிறவும் ஆய்ந்துஉணர்க.

இனி, இரண்டாமடியில், அரும்பு அனையும் என்று பதம்பிரித்து, அதற்கு - (எள்ளளவு கடுகளவு தினையளவு என்றாற்போல) அரும்பினவ்வளவும் என்று பொருள்கொண்டு, இனிய தென்றலினாற் சிறிதளவும் துயில்கொள்

ளாள் என்று உரைப்பாருமுளர்; அது, திரிபுநயத்துக்குப் பொருந்தாது: மூன்றுமடியிலும்அரும்புஎன்பது அப்பொருளதேயாதல் காண்க. திரிபுயமகங்களுள் ஓரடியிற்கூறியவாறு மற்றோரடியிலும் பொருள்கூறுதல் இலக்கணமன்றென்றும், அங்ஙனங்கூறினால் கவிசமத்காரங் கெடுமென்றும் உணர்க.

கஅ. மருந்துவந்தார்தொழுமாலிருஞ்சோலைமலையழக
ரருந்துவந்தாரணியென்றயின்றா ரடலாயிரவாய்
பொருந்துவந்தார்பணிப்பாயார் விதுரன்புதுமனையில்
விருந்துவந்தா ரடியார்க்கில்லை நோயும்வெறுமையுமே.

(இ - ள்.) தாரணி - பூமியை, அருந்துவம் என்று - உண்போமென்று திருவுள்ளங்கொண்டு, அயின்றார் - உண்டருளியவரும்,—அடல் - வலிமையையுடையதும், ஆயிரம் வாய் பொருந்து - ஆயிரம்வாய்கள் பொருந்தியதும், வந்து ஆர் - காற்றை உணவாகக்கொள்வதுமான, பணி - (ஆதிசேஷனென்னும்) பாம்பாகிய, பாயார் - சயனத்தையுடையவரும்,—விதுரன் புது மனையில் - விதுரனது புதிய மாளிகையில், விருந்து வந்தார் - விருந்தினராக வந்தருளியவருமாகிய, மருந்து உவந்தார் தொழும் மாலிருஞ்சோலை மலை அழகர் - அமிருதத்தை விரும்பியுண்டவரான தேவர்கள் வணங்கப்பெற்ற திருமாலிருஞ் சோலைமலையில் எழுந்தருளியிருக்கின்ற அழகருடைய, அடியார்க்கு - தொண்டர்களுக்கு, நோயும் வெறுமையும் இல்லை - பிணியும் தரித்திரமும் (ஒருநாளும்) உளவாகா; (எ - று.)

என்று, எம்பெருமான் திருவடிக்கு ஆட்படுதலின் பயன் கூறியவாறு. அவனடியார் அவனருளால் எல்லாசசெல்வமும் நிறைந்து அரோகதிருடகாத்திரராய் வாழ்வ ரென்க.

மருந்து - சாவாமருந்து. உவத்தல் - விரும்புதல்; இங்கு, அதன் காரியமாகிய உண்ணுதலின்மேல் நின்றது: உபசாரவழக்கு. மருந்துவந்தார்தொழும் மாலிருஞ்சோலை—"அமரரொடு கோனுஞ் சென்று, திரிசுடர் சூழும் மலை திருமாலிருஞ்சோலையதே" என்றார் பெரியாழ்வாரும். தாரணி-தாரணீ யென்ற வடசொல்லின் விகாரம். பூமியின் பெயராகிய இது - இங்கே, எல்லாவுலகங்களுக்கும் உபலக்ஷணம். பிரமன் முதலிய சகலதேவர்களு முட்பட யாவும் அழிந்துபோகின்ற கல்பாந்தகாலத்திலே ஸ்ரீமகாவிஷ்ணு அண்டங்களை யெல்லாம் தன்வயிற்றில் வைத்துக்கொண்டு சிறுகுழந்தை வடிவமாய்ப் பிரளயப்பெருங்கடலிலே ஆதிசேஷனது அம்சமானதோ ராலிலையின்மீது பள்ளிகொண்டு அறிதுயில்செய்தருள்கின்றன னென்பது, நூற்கொள்கை. இது, எம்பெருமான் செயற்கரியன செய்யும் விசித்திர சக்தியைக் காட்டும்.

வந்து என்ற பெயர்ச்சொல் காற்றுஎன்னும் பொருளதாதலை, "விண்டு நீளை வந்து உலவை, கொண்டல் கோடை யென்றிவை காற்றே" என்ற பிங்கலந்தையாலும் உணர்க. பாம்பு வாதாசந மாதலால், 'வந்துஆர் பணி' எனப்பட்டது. எம்பெருமானுக்குத் திருவனந்தாழ்வான் காற்றடைத்த மெத்தைபோன்று இனிது பள்ளிகொள்ளுதற்குப் பாங்காயிருப்பன். ஆர் பணி-

வினைத்தொகை. பணம் - படம்; அதனையுடையது பணி எனக் காரணக் குறி: இவ்வடசொல், பணியென ஈயீறு இகரமாயிற்று.

விதுரன் - திருதராட்டிரனுக்கும் பாண்டுவுக்கும் தம்பிமுறையாகிற வன்; ஆதலால், பாண்டவர்க்கும் துரியோதனாதியர்க்கும் சிற்றப்பன்: பரம பாகவதர்களில் ஒருவன்: கண்ணன் பாண்டவர்க்காகத் துரியோதனாதிய ரிடம் தூதுபேசுதற்பொருட்டு அத்தினாபுரிக்கு எழுந்தருளியபோது, அங்கு வேறு யாருடையவீட்டிற்குஞ் செல்லாமல் ஞானபக்திகளிற்சிறந்த விதுர னுடைய திருமாளிகையினுட் புக்குத்தங்கி அங்கு அவனால் மிக்க அன்புடன் அமைக்கப்பட்ட விருந்துணவை அமுதுசெய்தருளின னென்பது, பிரசித் தம். இது, எம்பெருமான் அடியவர்க்கெளியவ னென்பதைக் காட்டும். அவ் விதுரன்மாளிகை இங்ஙனம் கண்ணன்திருவருளுக்கு இலக்காகி அவன் பொன்னடி சார்த்தப்பெற்ற பாக்கிய முடைமையால், 'புதுமனை' என்று கொண்டாடிக்கூறப்பட்டது. கண்ணன் முன்பு ஒருநாளும் அங்குச்செல் லாது அன்றைக்கேசென்றன னென்பதுபற்றி, கண்ணனுக்குப் புதியதான மனை யெனினுமாம். விருந்து - புதுமை; புதியனான விருந்தினனை உணர்த் துகையில், பண்பாகுபெயர். வெறுமை = வறுமை; பொருளின்மை. (௧௮)

[தலைமகளிளமைக்குச் செவிலி இரங்கல்.]

௧௯. வெறுத்தவரைக்கஞ்சனைச்செற்றுளார்விடைவெற்பர்வெங்கட்
கறுத்தவரைக்கஞ்சலென்றுவந்தார் கனகாம்பரத்தைப்
பொறுத்தவரைக்கஞ்சனமேனிக்காவிபுலர்ந்துருகிச்
சிறுத்தவரைக்கஞ்சங்கூப்புமென்பேதைக்கென்செப்புவதே.

(இ - ள்.) கஞ்சனை - கம்சனையும், வெறுத்தவரை - (மற்றும் தம்மைப்) பகைத்தவர்களான பல கொடியவர்களையும், செற்று உளார் - கொன்றிட்ட வரும், வெம் கண் கறுத்த வரைக்கு அஞ்சல் என்று வந்தார் - கொடியகண் களையுடைய கரிய மலைபோன்ற யானைக்கு 'அஞ்சாதே' என்றுசொல்லி அபயமளித்து எதிரிலே வந்தருளியவரும், விடைவெற்பர் - விருஷபகிரியில் எழுந்தருளியவருமாகிய அழகருடைய, கனக அம்பரத்தை பொறுத்த அரை க்கு - பொன்மயமான பீதாம்பரத்தைத் தரித்த திருவரையினழகைக்குறித் தும், அஞ்சனம் மேனிக்கு - மைபோலுங் கரிய திருமேனிநிறத்தைக்குறித் தும், ஆவி புலர்ந்து உருகி - (ஈடுபட்டு) உயிர்வருந்திக் கரைந்து, வரை சிறு த்த கஞ்சம் கூப்பும் - (உத்தமவிலக்கணமாகிய) ரேகைகளையுடைய சிறிய தாமரைமலர்போன்ற கைகளைக் குவித்துத்தொழுகின்ற, என் பேதைக்கு - எனது மிக்க இளமைப்பருவமுடையளான பெண்ணின் நிலைமையைக்குறி த்து, என் செப்புவது - (யான்) யாதுசொல்வது? [ஒன்றுஞ்சொல்லத் தர மில்லை யென்றபடி]; (எ - று.)

தலைமகனைக் களவொழுக்கத்திற் கூடிய தலைமகள் அவன் பிரிந்தநிலை யில் ஆற்றாது வருந்தி மேனிமெலிந்து உள்ளமும் உயிரும் உருகப்பெற்றவ ளாய் "சிந்திக்கும் திசைக்கும் தேறும் கைகூப்பும் திருவரங்கத்துள்ளாயெ ன்னும், வந்திக்கும் ஆங்கே மழைக்கண்ணீர்மல்க வந்திடா யென்றென்றே

மயங்கும்” என்றபடியெல்லாம் ஆக, அவ்வேறுபாடுமொத்திரத்தைக் கண்ட செவிலித்தாய் ‘இதற்குக்காரணம் என்னோ?’என்றுகவன்று அவளது உயிர்ப் * பாங்கியை வினவ, அவள் உண்மையானகாரணத்தைக் கூறியிட, அதுகேட்ட செவிலி ‘பேதைப்பருவத்தளான இவளுக்கு இப்பேரறிவு வந்தவாறு என்னோயிருந்தது?’ என்று இரங்கிக்கூறிய துறை, இது. இவள் யௌவனபருவத்தை யடைந்திருந்தும்,இவள்தாய்மார்க்கு இவள்பக்கல் அன்புமிகுதியால் இவளது மிக்க இளமையே தோற்றுவதென்க. மகளிர்க்குஉரிய பருவம் எழுனுள் முதலதாகிய பேதைப்பருவத்திலேயே இவளுக்கு இத்தன்மையதான வியாமோகம் உண்டானால், யாம் சொல்லத்தருவது யாது? என்பதாம். பேதைப்பருவத்துக்கு வயதெல்லை - ஐந்துமுதல் எழளவும் என்பர். “பிஞ்சாய்ப் பழுத்தாளை யாண்டாளை” என்றாற்போல, வேட்கைபிறவாப்பருவமே தொடங்கி இவள் வேட்கைவிஞ்சினளென்க.

“உள்ளுளாவியுலர்ந்துலர்ந்து” என்றபடி உலர்ந்துஉருகும் இயல்பினதல்லாத உயிரும் உலர்ந்துஉருகியது என்றதனால், உருகுமியல்பினதான உள்ளமும் வாடுமியல்பினதான உடலும் நெகிழ்ந்துதளர்ந்தமை சொல்லவேண்டாதாயிற்று. சிறுத்த கஞ்சம் என இயையும். “கடியார்பொழிலரங்கத்தம்மா னரைச், சிவந்த ஆடையின்மேற் சென்றதா மெனசிந்தனையே,” “அந்திபோல்நிறத்தாடையும் அதன்மேலயனைப்படைத்ததோரெழில், உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே”என்றபடி திருவரையும் பொற்பட்டாடையுஞ் சேர்ந்த சேர்த்தியழகில் ஈடுபட்டமை கூறுவாள் ‘கனகாம்பரத்தைப்பொறுத்த வரைக்கு’ என்றும், அச்சிவந்தஆடையும் கரியதிருமேனியும் ஒன்றுக்குஒன்று நிறவிளக்கந்தரும்படியுள்ள தன்மையில் ஈடுபட்டமை கூறுவாள் அதனையடுத்து ‘அஞ்சனமேனிக்கு’ என்றும் கூறினாள்.

‘வெறுத்தவர்’ என்றது, சிசுபாலன் தந்தவக்ரன் முதலியோரை. வெங்கண்-காண்பவர்க்கு அச்சந்தருகிற “தீயுமிழ்சிறுகண்”;இது, உத்தமகஜத்துக்கு இயற்கை. ‘வெங்கண்வரை’ எனவே, யானையாயிற்று; ‘கைம்மலை’ என்றாற்போல: ‘வரைக்கஞ்சம்’ என்றதும் இத்திறத்ததே. கருமை யென்றபண்பினடி, கறுஎன்று விகாரப்பட்டு வினைத்தன்மை யடையும். கஜேந்திராழ்வானைக்காத்தருளிய வரலாற்றை யெடுத்துக்கூறியது.உயர்திணையோடு அஃறிணையோடு பேதமற அடிமைப்பட்ட உயிர்களை அன்போடு துயர்தீர்த்துப் பாதுகாத்தருள்கின்ற தலைவனது கருணைமிகுதி காட்டுதற்கு. கஞ்சம் - இங்கேகைக்குஉவமையாகுபெயர்.இரண்டாமடியில்,‘வரை’என்றதும் இது.

ஐயங்கார் அழகப்பிரானது இயற்கையழகிலும் செயற்கையழகிலும் துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலநசீலங்களிலும் உயர்ந்தஇடத்திலே வாழுந்திறத்திலும் ஈடுபட்டு அவனதுஸாந்நித்யத்தைப் பெறுதற்கு விரைந்து ஆற்றாமையால் தளர்ச்சியடைந்து “அழுவன் தொழுவ னாடிக்காண்பன் பாடியலற்றுவன்” என்றபடி ஆக, அந்நிலைமையை அவரது அன்பர்கள் சொல்ல உணர்ந்த ஞானிகள், ‘எம்பெருமானைச்சேர்தற்குச் சாதகமான பக்திமுதலியன் பூர்ணமன்றியேயிருக்க, இவர்க்குஉண்டாகிய விரைவுஎன்னோ? என்று சொல்லும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். இங்ஙனம் உரைத்தல்,

இவர்பக்கல் தமக்கு உள்ள பரிவினா லுண்டான கலக்கத்தா லென்க. மிக்க இளமைதொடங்கியே இளையபெருமாள் இராமபிரானிடத்துப் பேரன்பு கொண்டு அடிமைபூண்டொழுகி அப்பெருமானைப்பிரியமாட்டாது நின்றாற் போல, "அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்புசெய்வித்து, அறியாமா மாயத்து அடியேனை வைத்தாயால்" என்றபடி ஐயங்கார் எம்பெருமானை முதலிற்கண்ட காலந் தொடங்கியே அவனைப்பிரியில்தரியாதவாறு பிறந்த பரமபக்தியுடையராயின ரென்க. ஒருவிலங்கினாலே மற்றொருவிலங்கிற்கு நேர்ந்த துன்பத்தைத் தான் இருந்தஇடத்தி லிருந்தே தீர்ப்பது ஸர்வசக்தனான எம்பெருமானுக்கு மிகஎளிதாயினும் அப்பெருமான் அங்ஙனஞ்செய்யாமல் தனதுபேரருளினால் அரைகுலையத் தலைகுலைய மடுக்கரைக்கேவந்து உதவின மகாகுணத்தில் ஈடுபட்டு, 'கறுத்தவரைக்கு அஞ்சலென்றுவந்தார்' என்றார். (௧௯)

௨௦. செப்போதனஞ்செழுந்துப்போசெவ்வாயென்றுசேயிழையார்
கொப்போதனஞ்சுருகித்திரிவீர் கனலூதைமண்விண்
ணப்போதனமென்றமுதுசெய்தா ரலங்காரர் பொற்றா
ளெப்போதனந்தறவிர்ந்தேத்தநீங்களிருக்கின்றதே. [ர்க்

(இ - ள்.) 'தனம் செப்போ - கொங்கைகள் (பொற்) கலசங்களோ? செம் வாய் செழுந் துப்போ - சிவந்தவாயானது செழுமையான பவழமோ?' என்று—, சேயிழையார்க்கு ஒப்பு ஓதல் - செம்பொன்னாபரணமணிந்தவர்களான மாதர்களின் உறுப்புக்களுக்கு (வடிவும் நிறமும் முதலியனபற்றி) உவமையெடுத்துச் சொல்வதில், நஞ்சு உருகி -(மனம்)நெகிழ்ந்து கரைந்து, திரிவீர் - வீணே திரிகின்றவர்களே!— நீங்கள்—,— கனல் - அக்கினியும், ஊதை - காற்றும், மண் - நிலமும், விண்-ஆகாயமும், அப்பு - நீரும் (ஆகிய பஞ்சபூதங்களை), ஓதனம் என்று அமுதுசெய்தார் - உணவாக உட்கொண்டவராகிய, அலங்காரர் - அழகருடைய, பொன் தாள் - அழகிய திருவடிகளை, அனந்தல் தவிர்ந்து ஏத்த இருக்கின்றது - தாமசகுணம் ஒழிந்து துதிக்கவிருப்பது, எப்போது - எக்காலத்தோ! (எ - று.)

என்று உலகத்தாரை நோக்கி இரங்கிக்கூறியவாறு. தாமதகுணத்தவராய்ச் சிற்றின்பவாசைகொண்டு மகளிர்பக்கல் ஈடுபட்டு அவரது அவயவங்களுக்கு ஒப்புமைதேடி யெடுத்துச்சொல்லிக் கொண்டாடித்திரிகிற நீங்கள், அத்தன்மையொழிந்து சத்துவகுணந்தலையெடுக்கப்பெற்றவர்களாகி, பிரளயாபத்திலேபஞ்சபூதங்களையும் வயிற்றில்வைத்துக் குறிக்கொண்டுபாதுகாத்தருள்கிற அழகப்பிரானுடைய பொன்னடிகளைத் துதித்து உய்யுங் காலம் எந்நாளோ! என்றார்.

இழை - இரத்தினமிழைத்துச் செய்யப்படுவது. செம்பொன்னணிகலமென்ற பொருளில் 'சேயிழை' என்றது, உபசாரவழக்கு. நஞ்சு - நைந்து என்பதன் மரூஉப்போலி. ஓத நஞ்சு என்று பிரித்து உரைப்பதானால்,'நஞ்சு' என்பதன் நகரம் திரிபுக்காக னகரமாக் கொள்ளப்பட்ட தெனவேண்டும். 'நெஞ்சுருகி' என்று பாடங்கொள்ளுதல், திரிபுநயத்துக்குமாறாம். உற்பத்தி

முறைமைபற்றி விண் ஊதை கனல் அப்பு மண் என்றாவது, லயக்கிரமம் பற்றி மண் அப்பு கனல் ஊதை விண் என்றாவது கூறுவது மரபாயினும், இங்குச் செய்யுள் நோக்கிப் பிறழவைத்தார். பொற்றாள் - பொன்னணி யணிந்த பாதமுமாம்; பொன் - அதனாலாகிய அணியை யுணர்த்தும்போது, கருவியாகுபெயர். அனந்தல் - தூக்கம், சோம்பல்: இங்குக் காரியப்பெயர், காரணத்தின்மேலதாய்த் தமோகுணத்தைக் குறித்தது. (௨0)

௨௧. இருக்கந்தரத்தனைவோர்களுமோதியிடபகிரி
நெருக்கந்தரத்தனையேத்தநின்றானை நிறத்ததுப்பி
னுருக்கந்தரத்தனைத்துன்பொழித்தானை யுலகமுண்ட
திருக்கந்தரத்தனை யல்லா தெண்ணேனொருதெய்வத்தையே.

(இ - ள்.) அந்தரத்து அனைவோர்களும் - மேலுலகத்திலுள்ள எல்லாத் தேவர்களும், இருக்கு ஓதி - வேதவாக்கியங்களைச் சொல்லி, இடபகிரி நெருக்கம் தர தனை எத்த - திருமாலிருஞ்சோலைமலையிலே நெருக்கமுண்டாகுமாறு (வந்துதிரண்டு) தன்னைத் துதிக்க, நின்றானை - (அத்துதிகளை ஏற்றுக்கொண்டு அங்கு) நின்றவனும்,—நிறத்த துப்பின் உரு - நிறம்விளங்கப்பெற்ற [சிறந்த] பவழம்போன்ற வடிவுநிறத்தையுடைய, கந்தர் - முருகக்கடவுளுக்கு, அத்தனை - தந்தையாகிய சிவபிரானை, துன்பு ஒழித்தானை - இரத்தற்றுன்பமொழியும்படி செய்தருளியவனும்,—உலகம் உண்ட திரு கந்தரத்தனை அல்லாது - உலகங்களை அமுதுசெய்த அழகிய கண்டத்தையுடையவனுமான ஸ்ரீமந்நாராயணனை யல்லாமல், ஒரு தெய்வத்தை எண்ணேன் - வேறொருதெய்வத்தைக் கருதேன், (யான்); (எ - று.)

இவர் "மறந்தும்புறந்தொழாமாந்தர்" ஆதலால், பரதேவதையான திருமாலையன்றி, பிரளயகாலத்திலே பிறவுயிர்களோடொப்ப அவனதுதிருவயிற்றினுட் புக்குப் பின்பு வெளிப்படுபவர்களும், தமக்குஆபத்துநேர்ந்தகாலத்தில் அவனையேசரணமடைந்துதேறி மற்றைச்சமயங்களிற் செருக்கித்திரிபவர்களுமான அபரதேவர்களைச் சிறிதும்பொருள்செய்யாமையில் தமக்கு உள்ள உறுதியான துணிவை இங்ஙனம் வெளியிட்டார்; "அரங்கா உன்னையன்றித் தெய்வம், ஆக மதிக்கு மெண்ணே னடியேன் பிறரானையுமே" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். ("களிர்மதிச்சடையனும் நான்முகக் கடவுளும், தளிரொளியிமையவர்தலைவனும் முதலா, யாவகையுலகமும் யாவரு மகப்பட, நிலநீர்தீகால்சுடரிருவிசும்பும், மலர்சுடர்பிறவும் சிறிதுடன் மயங்க, ஒருபொருள்புறப்பாடின்றி முழுவதும், அகப்படக்கரந் தோராலிலைச்சேர்ந்த எம், பெருமாமாயனை யல்லது, ஒருமாதெய்வ மற்றுடையமோ யாமே" என்ற ஆழ்வாரருளிச்செயல் இங்கு அறியத்தக்கது.)

நான்குவேதங்களுள் ருக்வேதம் முதலதாகையால், தலைமைபற்றி, அது எடுத்துக்கூறப்பட்டது; இது, மற்றைவேதங்களுக்கும் உபலக்ஷணம். அந்தரம் - வானம்; வடசொல்; அங்குஉள்ள சுவர்க்கலோகத்துக்கு இடவாகுபெயர். துப்பின் நிறத்தஉரு எனமொழிமாற்றியுரைத்தலும் அமையும். கந்தரம் - தலையைத்தரிப்பது என்று காரணப்பொருள்பெறும்; கம் தலை. (௨௧)

௨௨. தெய்வம்பலவவர்நூலும்பலவவைதேர்பொழுதிற்
பொய்வம்பலவென்றுதோன்றும்புல்லோர்கட்குப் போதநல்
லுய்வம்பலனுமவனேயென்றேதியுணர்வர் நெஞ்சே [லோ
கொய்வம்பலர்சொரியுஞ்சோலைமாமலைக்கொண்டலையே.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—தெய்வம் பல - (உலகத்தில்) தெய்வங்கள் பல இருக்கின்றன; அவர் நூலும் பல - அத்தேவர்களைப்பற்றிய ஆகமங்களும்(மதவேறுபாட்டினால்)பல இருக்கின்றன; அவை-அந்நூல்கள், தேர் பொழுதில் - ஆராயுமிடத்து,பொய் வம்பு அல என்று புல்லோர்கட்கு தோன்றும் - பொய்ம்மையுடையனவும் பயனற்றவையும் அல்லவென்று அற்பர்களுக்குத் தோன்றும்; போதம் நல்லோர் - ஞானத்தையுடைய நல்லவர்களோ,—'உய்வம் - (இவ்வழியல்லாவழிகளில் இறங்காது நல்வழிச்சென்று) உய்யக்கடவோம்: பலனும் அவனே - (பரகதிக்கு உபாயமாகின்றமாத்திரமேயன்றி அவ்விடத்து அநுபவிக்கப்படும்) பயனாகின்றவனும் அழகப்பிரானே', என்று - என்றுஎண்ணி, கொய் வம்பு அலர் சொரியும் சோலை மா மலை கொண்டலையே ஓதி உணர்வர் - விரும்பிப்பறிக்கத்தக்க வாசனையுள்ள மலர்கள் சிந்தப்பெற்ற திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற நீர்கொண்டமேகம்போன்றவனான அழகனையே துதித்துத் தியானிப்பார்கள்; (எ-று.)—ஈற்றுஏகாரம் - பிரிநிலையோடு உயர்வுசிறப்பு.

புல்லோர், தமது ஆராய்ச்சிக்குறைவினால், பற்பலதேவதாந்தரங்களையும் அவரைப்பற்றிய பொய்நூல்களையும் உண்மையென்று நம்பிப் பாராட்டிப் பழுதே பலபகலும் போக்குவர்; மெய்யுணர்வுள்ள நல்லோர்களோ, அங்ஙனமன்றிக் காண்பவர் கண்குளிர்ந்து விடாய்தீருமாறு குளிர்ந்திருண்ட தோற்றமுடையவனும்ப் பக்ஷபாதமின்றிக் கைம்மாறுகருதாது உலகத்துக்குக் கருணைமழைசொரிந்துகொண்டு காளமேகம்போலத் திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற திருமாலையே உபாயமும் உபேயமுமாக உணர்ந்து துதித்து உயர்கதிபெறுவர் என்று, விபரீதஞானமுடைய ஸாமாந்யஜநங்களுக்கும் தத்துவஞானமுடைய ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் உள்ள ஞானதாரதம்மியத்தையும், அதனால் அவர்கள் அடையும் பயன்வேறுபாட்டையும் தம்நெஞ்சத்துக்கு எடுத்துக்காட்டியவாறும். நெஞ்சே! நீ புல்லோர்வழியிற்புகுதாது நல்லோர்நெறியில் நிற்பாய் என்று குறிப்பித்தபடி.

தேவர்களை இருதிணையாலுங்கூறுதல் இலக்கணமாதலால், 'தெய்வம் பல அவர்நூலும் பல' என்றது அமையும். உம்மை - இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. செய்யுளாதலின், 'அவர்' என்ற சுட்டுப்பெயர் முன் வந்தது. ஏ - பிரிநிலை. கொண்டல் - நீர்கொண்டமேகத்துக்குத் தொழிலாகுபெயர். கொள் தல் எனப் பிரியும்: அது, இங்குப் பெருமானுக்கு நிறமும் பயனும் பற்றிவந்த உவமையாகுபெயராய் நின்றது. ('சோலைமாமலைக்கொண்டலை' என்பதை "ஸ்ரீவேங்கடாத்ரிசிகராலயகாளமேகம்" என்றாற்போலக் கொள்க; "புயன்மழைவண்ணர் புரிந்துறைகோயில், மயன்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை" என்றார் ஆழ்வாரும்.) (௨௨)

உங. கொண்டலையாநிற்குமைம்புலக்கோண்மகரங்களினீர்ப்
புண்டலையார்பிறவிக்கடன்மூழ்குவ ருத்தமனைத்
தண்டலையார்திருமாலிருஞ்சோலைத்தனிச்சுடரைப்
புண்டலையால்வணங்கா ரணங்கார்வினைபோகவென்றே.

(இ - ள்.) (உலகத்துப்பேதைகளாயுள்ளவர்கள்),—கொண்டு அலையாநிற்கும் ஐம் புலம் கோள் மகரங்களின் - (மனத்தைத் தம்வசமாகக்) கொண்டு வருத்திநிற்கிற ஐம்புலன்களாகிய வலிய சுறாமீன்களினால், ஈர்ப்புஉண்டு - இழுக்கப்பட்டு, அலை ஆர் பிறவி கடல் மூழ்குவர் - (பலவகைச்) சஞ்சலங்கள் பொருந்திய பிறப்புத்துன்பமாகிய அலைகள் பொருந்திய கடலின்மேல் மூழ்குவார்கள்; உத்தமனை - புருஷோத்தமனும், தண் தலை ஆர் திருமாலிருஞ்சோலை தனி சுடரை - குளிர்ச்சியான இடத்தையுடைய சோலைகள் நிறைந்த திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கின்ற ஒப்பற்ற தேஜோரூபியுமான எம்பெருமானை,—அணங்கு ஆர் வினை போக என்று - 'துன்பம் நிறைந்த(தம்)கருமங்கள் ஒழிவனவாக' என்று, புண் தலையால் வணங்கார் - தசைபொருந்திய தங்கள்தலையைக்கொண்டு நமஸ்கரிக்கமாட்டார்கள்.

இந்த அஜ்ஞானிகளுடைய தீவினை இருந்தபடி என்னே! என்று இரங்கியவாறும். இனி, திருமாலிருஞ்சோலைச்சுடரை வினைபோகவென்று தலையால் வணங்காதவர்கள், ஐம்புலமகரங்களினால் ஈர்ப்புண்டு பிறவிக்கடலில் மூழ்குவர் என்று எழுவாய்பயனிலையமைய உரைப்பினும் அமையும்; இவ்வுரைக்கு, வணங்கார் என்பது - வினையாலணையும்பெயர்.

அலையாநிற்கும் என்பதை, அலையா நிற்கும் என்று பிரித்து, வருத்திநிற்குமென்று பொருள்காண்க. ஐம்புலம் - சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தமென்னும் பஞ்சவிஷயங்கள்; இவை, முறையே தமிழில் ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் எனப்படும்; இவை, முறையே செவி மெய் கண் வாய் மூக்கு என்ற பஞ்சஇந்திரியங்களுக்கு உரியவை. மகரம் - முதலையுமாம். கோள்மகரம்- "முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா" என்றபடி எவ்வகைவலியுடையவற்றையும் இழுத்துக்கொண்டுசென்று மீளவும் எளிதில் விடுதலில்லாத பெருவலிமையுடைய மகரம். 'அலைஆர்' என்ற அடைமொழியை, கடலாகிய உபமானத்துக்கும் பிறவியாகிய உபமேயத்துக்கும் உரியதாக்கொண்டு, அவ்விரண்டனோடும் கூட்டி, அதற்கு இருவகையாகப் பொருள்கொள்ளப்பட்டது; சிலேடை. இனி, அலை ஆர் கடல் என்பதற்கு - அலைகள் ஒலிக்கப்பெற்ற கடலென்று உரைத்தலும் அமையும்; ஆர்த்தல் - ஒலித்தல். உத்தமன் - மேலானவன். தனிச் சுடர் - முச்சுடர்களினும் மேம்பட்ட ஒளியுருவம். போக - வியங்கோள்முற்று. (உங)

உச. என்றுதரங்கலந்தேனற்றைநான்றுதொட்டிற்றைவரை
நின்றுதரங்கிக்கின்றேற்கருள்வாய் நெடுங்கான்கடந்து
சென்றுதரங்கக்கடறார்த்திலங்கையிற்றீயவரைக்
கொன்றுதரங்குவித்தாய் சோலைமாமலைக்கோவலனே.

(இ - ள்.) நெடுங் கான் கடந்து சென்று - நெடியகாட்டை [தண்டகாரணியத்தை] நடந்துகடந்து அப்பாற்சென்று, தரங்கம் கடல் தூர்த்து - அலைகளையுடைய கடலை (மலைகளைக்கொண்டு) நிரப்பி அணைகட்டி, இலங்கையில் தீயவரை கொன்று தாம் குவித்தாய் - இலங்காபுரியிலுள்ள கொடியவர்களான அரக்கர்களைக் கொன்று (அவர்களுடலை) மலையாகக் குவித்தவனே! சோலை மா மலை கோவலனே - திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கின்ற ஆயனே!—என்று உதரம் கலந்தேன் - எப்பொழுது (தாயின்) வயிற்றில் வந்துபுகுந்தேனே, அற்றை நான்று தொட்டு - அன்றைத்தினந் தொடங்கி, இற்றை வரை - இன்றைநாளளவும், நின்று தயங்கின்றேற்கு - இடைவிடாது அலைகின்றவனாகிய எனக்கு, அருள்வாய் - (இனியாயினும் அங்ஙனம் அலையாதபடி) கருணைசெய்வாய்; (எ - று.)

நான்று - ஞான்று என்பதன் முதற்போலி. கான் - கானநமென்றவடசொல்லின் விகாரம். தாம் - குவியல், தொகுதி யென்றபடி. கோவலன் - பசுக்களைக்காக்க வல்லவன்; கோ - பசு: வடசொல்; வலன் = வல்லன்: தமிழ்ச்சொல். கோபாலன் என்ற வடசொல், கோவலனென்று விகாரப்பட்டதெனக் கொண்டாலும், பசுக்களைக்காப்பவ னென்றே பொருளாம். கிருஷ்ணாவதாரத்தில் நந்தகோபகுமாரனாய் இடைச்சாதியில் வளர்ந்தமை பற்றி, 'கோவலனே!' என்றார்; இப்பெயர், பெருமானுடைய சௌலப்பியத்தைக் காட்டும். இனி, கோ வலன் - உயிர்களைக் காக்கவல்லவனுமாம். (உசு)

உரு. கோவலன் பார்ப்புடன்கேகயஞ்சூழ்குளிர்சோலைமலைக்
காவலன் பாற்கடற்கண்டுயின்மா லலங்கார னென்றே
பாவலன்பாற்பணிவா ரணிவானவராகி மறை
நாவலன்பார்ப்பதிநாதனண்ணாப்பதநண்ணுவரே.

(இ - ள்.) 'கோவலன் - ஆயனாய்வளர்ந்தவன்: பார்ப்புடன் கேகயம் சூழ் குளிர் சோலைமலை காவலன் - குஞ்சுகளுடனே மயில்கள் சூழப்பெற்ற குளிர்ந்த திருமாலிருஞ்சோலைமலைக்குத் தலைவன்: பால் கடல் கண்துயில் மால் அலங்காரன் - திருப்பாற்கடலிலே யோகநித்திரை கொண்டருள்கிற பெருமைபொருந்திய அழகன்,' என்றே - என்று (இங்ஙனம் எம்பெருமானுடைய குணவிசேஷங்களைச்) சொல்லிக்கொண்டே, பாவல் அன்பால் பணிவார் - பாவுதலையுடைய [மிக்க] பக்தியினால் (அப்பெருமானை) வணங்குபவர்கள்,—அணி வானவர் ஆகி - (மறுமையிலே) அழகிய முக்தர்களாகி, மறை நாவலன் பார்ப்பதி நாதன் நண்ணா பதம் நண்ணுவர் - வேதம் வல்ல நாவையுடையவனான பிரமனும் பார்வதிநாயகனான சிவபிரானும் அடைய மாட்டாத பரமபதத்தை அடைவார்கள்; (எ - று.)

கோவலன் = கோபாலன். காவலன் - லோகஸம்ரக்ஷகன். மறைநாவலன் - வேதங்களை ஓதியுணரும் நாவன்மையுடையவன். நாவலன் - நா வலன். மறைநாவலன் - வேதங்களை நாவில்வல்லவன். பாவல் என்ற தொழிற்பெயரில், பாவு - பகுதி. பார்ப்பு என்ற இளமைப்பெயர், பறவைக்கு உரியது; "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" என்பது, தொல்காப்பியம். பார்

ப்புஎன்பதற்கு - (தாய்ப்பறவையினால் அன்போடு) பார்த்துக்குறிக்கொண்டு பாதுகாக்கப்படுவதென்று காரணப்பொருள் காணலாம். வானவர் - எல்லாவுலகங்களுக்கும் மேலுலகமாகிய முத்தியையடைந்தவர். சிலசாதியார்க்கும் பெண்பாலார்க்கும் ஓதுவிக்கவும் ஓதவும் கேட்கவும் ஆகாதென்று மறுக்கப்படுதலாலும், எளிதிலுணரலாகாதபடி மறைந்த ஆழ்பொருளையுடைமையாலும், மறையென்று வேதத்திற்குக் காரணக்குறி. பார்வதிநாதன் என்ற வடமொழித்தொடர், விகாரப்பட்டது. பர்வதராசனுன இமவானுக்கு மகளானதனால், அம்பிகைக்குப் பார்வதியென்று பெயர். 'நன்னுப்பதம் நண்ணுவர்' என்றவிடத்துத் தொடைமுரண் தோன்றுதல் காண்க. (உரு)

உசு. நண்ணினனாகமுடிமேனடித்தென்னைநாசமறப்
பண்ணினனாகமும்பாருமளந்தன பண்டுதம்பி
மண்ணினனாகவனம்போயின வளர்சோலைமலைக்
கண்ணினனாகங்கரியான்சிவந்தகழலிணையே.

(இ - ள்.) வளர் சோலைமலைக்கண் இனன் - ஓங்கிவளர்ந்த திருமாலிருஞ்சோலைமலையி லுதித்த சூரியன்போல விளங்குகின்றவனும், ஆகம்கரியான் - திருமேனிகறுத்துள்ளவனுமான அழகப்பிரானுடைய, சிவந்த கழல் இணை - செந்நிறமாயுள்ள உபயபாதங்கள்,—நாகம் நண் இனன் முடிமேல் நடித்து - (காளியனென்னும்) பாம்பினது நெருங்கித் தொகுதியாயுள்ள தலைகளின்மேல் நடனஞ்செய்து,--என்னை நாசம் அற பண்ணின - (அந்தத் துஷ்டநிக்கிரகசிலத்தி லீடுபடுதலால்) என்னை அழியாது உய்யும்படி செய்தருளின; நாகமும் பாரும் அளந்தன - மேலுலகத்தையும் பூமியையும் அளந்தருளின; பண்டு - முன்பு [ஸ்ரீராமாவதாரத்தில்], தம்பி மண்ணினன் ஆக வனம் போயின - அடுத்ததம்பியான பரதாழ்வான் நிலவுலகத்தரசாட்சிக்கு உரியவனாகுமாறு தாம் வனவாசஞ்சென்றன; (எ - று.)

பாதவகுப்பு என்னும் பிரபந்தத்துறை கூறியவாறும்: இந்நூலின் கூ௦-ஆஞ் செய்யுளும் இது. பாதவகுப்பு - பிரபந்தத்தலைவனது திருவடிகளின் சிறப்புக்களை யெடுத்துக்கூறுவது; (இங்ஙனமே புயவகுப்பும் உண்டு: அது, பிரபந்தநாயகனது தோள்களின் சிறப்பைக் கூறுவது. "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்றபடி சரணமடைகிற உயிர்கட்கெல்லாம் உஜ்ஜீவநகரமாயிருப்பது திருமாலின் திருவடியாதலால், அதன் ஏற்றத்தை எடுத்துக்கூறின ரென்க.

நாகமும்பாரும்அளந்தது, திரிவிக்கிரமாவதாரத்தில்; இவ்வரலாற்றால், கொடியவரையடக்குதற்கு வேண்டிய தந்திரம் வல்லவ னென்றவாறு.

சீதாகல்யாணத்தின்பிறகு தசரதசக்கரவர்த்தி இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய யத்தனிக்கையில், மந்தரைசூழ்ச்சியால் மனங்கலங்கப்பெற்ற கைகேயி தன்கொழுநரான தசரதனை நோக்கி முன்பு தனக்குக் கொடுத்திருந்த இரண்டுவரங்களுக்குப் பயனாகத் தன்மகனான பரதனுக்குப் பட்டங்கட்டவும் கௌசல்யைமகனான இராமனைப் பதினான்குவருஷம் வனஞ்செலுத்தவும் வேண்டுமென்று சொல்லி வற்புறுத்த, அதுகேட்டுவருந்

திய தசரதர், சத்தியவாதியாதலால், முன்பு அவட்குவரங்கொடுத்திருந்த சொல்லைத் தவறமாட்டாமலும், இராமன்பக்கல் தமக்குஉள்ள மிக்கஅன்பி னால் அவ்வரத்தை நிறைவேற்றுமாறு அவனை வனத்துக்குச்செல்லச்சொல்ல வும் மாட்டாமலும், கலங்கி வாய்திறவாதிருக்கிறசமயத்தில், கைகேயி இரா மனை வரவழைத்து 'பிள்ளாய்! உங்கள்தந்தை பரதனுக்கு நாடுகொடுத்துப் பதினான்குவருடம் உன்னைக் காடேறப் போகச்சொல்லுகிறார்' என்றுசொ ல்ல, அச்சொல்லைத் தலைமேற்கொண்டு அந்த மாற்றாந்தாயின்வார்த்தையை யும் அவட்குத் தனதுதந்தைகொடுத்திருந்த வரங்களையும் தவறாது நிறை வேற்றி மாத்ருபித்ருவாக்யபரிபாலநஞ் செய்தலினிமித்தம் இராமபிரான் அரசாட்சியைப் பரதனுக்குஉரியதாம்படி கைவிட்டு இலக்குமணனோடும் சீதையோடும் அயோத்தியைநீங்கி நடந்து வனவாசஞ்சென்றன னென்ற வரலாறுபற்றி, 'பண்டு தம்பிமண்ணினனாக வனம்போயினை' என்றார்.

இராமபிரானும் கண்ணபிரானும் திருமாலின் திருவவதாரமூர்த்திக ளாதலால், அவர்கள்செய்கை, திருமாலின்செய்கையாக ஒற்றுமைநயம்பற் றிக் கூறப்பட்டது; இதனை, முன்னும் பின்னும் இதுபோல வருமிடங்கட் கெல்லாங் கொள்க.

இனன் - இனமென்பதன் இறுதிப்போலி. இது, முடிக்கு அடைமொழி; * நாகம் என்ற வடசொல் - நகத்தில் [அதாவது-மரத்தில் அல்லது மலையில்] வாழ்வது என்றும், கால்களினால் செல்லாதது என்றும் காரணப்பொருள் பெறும். நாமும், † நாகம், வநம், இநன் - வடசொற்கள். நாகமும் என்றவிட த்து, நகரவேறுபாடு, திரிபுநயத்தின்பொருட்டுக் கொண்டது. முதலடியில் னாகம் என்றவிடத்து னகரத்தையும் இங்ஙனங் கொண்டு, நண்ணினன் என்று எடுத்து, நாகமுடிமேல் நடித்துப் பொருந்தின என்று தனிவாக்கியமா க்கி யுரைப்பாரு முளர். முதலடியிலாவது இரண்டாமடியிலாவது நல் நா கம் என்றுஎடுத்தலு மொன்று. நாகம் - சுவர்க்கத்தைக் குறிக்கையில்—கம்- சுகம்: அகம்-அது அல்லாதது, அகம்: அது துக்கம்; அது இல்லாதஇடம் - நாகம் எனக் காரணப்பொருள் காண்க. அடியார்களுடைய அஜ்ஞாநமாகிய இருள் அகலவும், அவர்களுடைய உள்ளக்கமலங்கள் மலரவும், சூரியன்போன்று காட்சிதருதலால், 'சோலைமலைக்கண் இனன்' என்றார்; இதனை, திருவரங் கத்தந்தாதியில் "ஆய்க்குலத்தினர்" என்றாற்போலக் கொள்க. "இருள்விரி நீலக்கருஞாயிறு சுடர்கால்வதுபோ, லிருள்விரிசோதிப்பெருமான்" ஆத லால், 'இனன் ஆகங்கரியான்' எனப்பட்டான். திருவடி சிவந்திருத்தல், உத் தமவிலக்கணம். 'ஆகங்கரியான் சிவந்தகழலிணை' என்றவிடத்து, தொடை முரண் காண்க. (உகூ)

[தலைவனைப்பிரிந்த தலைவி இரங்கல்.]

உஎ. கழலப்புகுந்தவனையறியா ரென்கருத்தறியா
ரழலப்புகன்றுறப்பாரன்னைமா ரறுகாற்சுரும்பு
சுழலப்புனைந்ததுழாய்மார்பர்மாலிருஞ்சோலையென்னார்
தழலப்புவரென்றனங்களிலேசந்தனங்களென்றே.

* நாமம். † நாகம்.

(இ-ள்.) அன்னைமார் - (என்) தாய்மார்கள்,—கழல புகுந்த வளை அறியார் - (என் கைகளினின்று) கழன்றுவிழத்தொடங்கிய வளையல்களின் தன்மையை உணரார்; என் கருத்து அறியார் - என்மனத்திற்கொண்ட காதலை உள்ளபடி உணரார்; அழல புகன்று ஒறுப்பார் - (என்மனம்) கொதிக்க(க் கடுஞ்சொற்களை)க்கூறி வருத்துவார்கள்; அறு கால் சுரும்பு சுழல புனைந்த துழாய் மார்பர் மாலிருஞ்சோலை என்னார் - ஆறுகால்களுள்ள வண்டுகள் சுழன்றுமொய்க்கும்படிதரித்த திருத்துழாய்மாலையையுடைய திருமார்பினரான அழகரது திருமாலிருஞ்சோலைமலையென்று ஒருகாலமேனுஞ்சொல்லார்; சந்தனங்கள் என்று என் தனங்களிலே தழல் அப்புவர் - சந்தனக்குழம்புவகைகளென்று சொல்லி என்தனங்களின்மேல் நெருப்பை வாரிப்பூசிநிரப்புவார்கள்; (எ - று.)

களவொழுக்கத்தால் தலைவனைக்கூடிப் பிரிந்த தலைவி அப்பிரிவுத்துயரை யாற்றமாட்டாமல் விரகதாபத்தால் மிகவருந்த, அத்தலைமகளைக்கண்ட செவிலித்தாய்மார் அத்தாபத்துக்குக் காரணம் இன்னதென்றுஆய்ந்துஉணராதவர்களாய் அப்பொழுதுநிகழ்கின்ற வேனிற்காலத்தினாலாகியதென்று கருதி அதனைத் தணித்தற்பொருட்டுச் சந்தனக்குழம்பை அம்மகளுடம்பின்மேல் மிகுதியாகஅப்பிச் சைத்யோபசாரஞ்செய்ய, காலதாபமன்றாதலால் அதனைத்தணிக்கமாட்டாதஅச்சந்தனக்குழம்பு,கலவிக்காலத்திலே இன்பஞ்செய்யும் பொருள்களு ளொன்றாதலாற் பிரிவுக்காலத்திலே காலதாபத்தை மிகுவிப்பதாகி மிக்கவெப்பஞ் செய்ய, அதனால் மிகவருந்திய அந்தத்தலைமகள், தோழியின்முன்னிலையில் அத்தாயின்செயலைக்குறித்து வெறுத்துக்கூறியது, இது.

எனது உடம்பு சடக்கென்று மிகமெலிந்திருப்பதை உற்றுநோக்கி அக்காரியத்தைக்கொண்டு அதன்காரணமாகிய என்கருத்தின்காதலை அநுமானித்துஉணரமாட்டிற்றில ரென்பாள், 'கழலப்புகுந்தவளையறியார் என்கருத்தறியார்' என்றாள். தாபசாந்திசெய்யத்தக்கவையான சைத்தியோபசாரங்களைத் தாய்மார் ஏமாறாமல் இடைவிடாது இவட்குச் செய்துவருகையிலும் இவள் சிறிதும் தாபந்தணிந்திடாது மேன்மேல்தவிக்க, இப்படியும் ஓர் ஆற்றாமை உண்டோவென்று அவர்கள் வெறுத்துஉரைத்தலே யன்றி, இத்தலைமகள் ஒருதலைமகனோடு தொடர்புடையளென்று ஊரார்சொல்லும் பழிமொழியைக்கேட்டுத் தாய்மார் வெகுண்டு 'இங்ஙனம் நமதுகுடிக்குப் பழிவிளையுமாறு ஒரு நிகழ்ச்சி யுண்டோ?' என்று சொல்லுகின்ற வெஞ்சொற்களும் பற்றி, 'அழலப்புகன்று ஒறுப்பார் அன்னைமார்' என்றாள். அன்றியும், தாய்மார்அப்புகிற தண்ணியசந்தனம் இவட்கு வெவ்வியதழலாகத் தோன்றினாற்போல, அவன்தானே வருதலைநோக்கி ஆறியிருப்பதொழிய இங்ஙனம் பதறுவது குடிப்பிறப்புக்கு அடாது என்று அவர்கள்சொல்லுகிற இதவசனங்களே இவட்கு வெஞ்சொற்களாகத் தோன்றின வென்றுங் கொள்ளலாம். இவள் தான்காதலித்த தலைவனது ஊரையும்பேரையும் அலங்காரத்தையும் குணங்களையும் சொல்லக் கேட்கப்பெறின் ஒருவாறு ஆறியிருக்குந்தரமுடைய ளாதலால், அவற்றிலொன்றையேனும் அத்தாய்மார் சொல்லாமை

யைக்குறித்து 'சுரும்புசுழலப்புனைந்ததுழாய்மார்பர்மாலிருஞ்சோலை யென்ஞர்' என்று இரங்கினாள். 'அறுகாற்சுரும்பு சுழலப் புனைந்த துழாய்' என்று தலைவரது திருத்துழாயின் திவ்யபரிமளத்தில் ஈடுபட்டவாறு. தழலப்புவர் என்தனங்களிலே சந்தனங்களென்றே—"ஆயிரஞ்சால், அத்தனை வேது அனையப்புவள் சாந்தென்றனலரைத்தே" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். புகன்று, புகல் - பகுதி. அன்னைமார், மார் - பலர்பாற்பெயர்விகுதி. வண்டு, ஷட்பதமாதலின், 'அறுகாற்சுரும்பு' எனப்பட்டது.

அழகப்பிரான் ஒருகால் ஐயங்காரதுஞானக்கண்ணுக்கு இலக்கான பொழுதே இவர் அவனைக்கிட்டி முத்தியின்பமனுபவிக்கும்படி ஆசைகொள்ள, இவரை அப்பெருமான் அப்பொழுதேசேர்த்துக்கொள்ளாது மறைய, அதனாலுண்டான துயரத்தால் ஐயங்கார் தபிக்கிற காலத்தில், அவர்பக்கல் பரிவுடையஞானிகள் அவர்க்குச்செய்கின்ற ஆறுதல்கள் அவர்வருத்தத்தைத் தணிவிக்கமாட்டாது மிகுவிக்கிறநிலையிலே, ஐயங்கார் அவர்கள்திறத்தைத் தமதுநண்பரை நோக்கி உரைத்தவாறாகு மிது வென்று உள்ளுறைபொருள் காண்க. கழலப்புகுந்தவளையறியார் - எனதுபாரதந்திரியம் நிலைகுலைதலை இவர்கள் உணர்கின்றாரில்லை. என்கருத்து அறியார் - என்மனம் எம்பெருமானது நிரந்தராநுபவத்தில் ஊன்றியிருத்தலை யுணரார். எம்பெருமான் தானேவந்து ஆட்கொள்வதைஎதிர்நோக்கி அக்காலம்வருமளவும் ஆறியிருப்பதை விட்டு இன்னம் பேற்றுக்கு மிகவிரைந்து துடிப்பது பிரபந்நகுல மரியாதைக்குப் பொருந்தாது என்று இவர்பதற்றத்தை அடக்குமாறு இவர் பக்கல்பரிவுடையார்சொல்லும் இதவசனங்கள் இவர்க்கு ஆறுதலுண்டாக்காமற் கடுஞ்சொற்களாகத் தோன்றுதலால், 'அழலப்புகன்றுறப்பார் அன்னைமார்' என்றார். எம்பெருமானுடைய குணவிபவங்களையும் திவ்ய தேசநாமத்தையும் பிறர்சொல்லக் கேட்கப்பெறுதலே இவர்க்குச் சிறிது ஆறுதலாயிருக்கு மென்பது, அடுத்தவாக்கியத்தாற் போதரும். இவர்கள் எனது துடிப்பையடக்குதற்காக எடுத்துக்காட்டுகிற உலகவியல்புகள் எனது பக்திரூபஞானத்துக்கு இந்நிலையில் ஏலா என்பது, இறுதிவாக்கியத்தின் உட்கோள். 'அறுகாற் சுரும்பு சுழலப் புனைந்த துழாய்மார்பர்'—ஷட்பத நிஷ்டரான ஸாரக்ராஹிகள் விரும்பிநாடும் இனிமையைத் தமது திருமேனியி லுடையவ ரென்க. விரிப்பிற் பெருகும். (உஎ)

உஅ. தனத்துக்கராவியவேல்விழிக்கேக்கற்றுத்தையலராற்
றினத்துக்கராகித்திரிவார்பலர் சிலர்செங்கமல
வனத்துக்கராசலங்காத்தாற்குச் சோலைமலையினின்ற
கனத்துக் கராவணையாற் கெம்பிராற் குள்ளங்காதலரே.

(இ - ள்.) தனத்துக்கு - (மகளிரது) கொங்கையழகுக்கும், அராவிய வேல் விழிக்கு -(அரத்தினால்) அராவிக்கூர்செய்யப்பட்டவேலாயுதம்போன்ற கண்களினழகுக்கும், ஏக்கற்று - ஏங்கி,தையலரால் தினம் துக்கர் ஆகி-அம்மாதர்களின் தொடர்பினால் எந்நாளும் துன்பமுடையவர்களாய், திரிவார்-வீணே அலைபவர்களோ, பலர் - (உலகத்திற்) பலராவர்; சிலர் - (உலகத்திற்)

சிலர்தாமே,—செம் கமலம் வனத்து கராசலம் காத்தாற்கு - செந்தாமரை மலர்கள் மலர்ந்த (தடாகத்தின்) நீரினிடத்துக் கஜேந்திராழ்வானைப் பாது காத்தருளியவனும், சோலை மலையில் நின்ற கனத்துக்கு - திருமாலிருஞ் சோலைமலையிலே நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருக்கிற காளமேகம் போன்றவனும், அரா அணையாற்கு - ஆதிசேஷனைச் சயனமாகவுடையவனு மாகிய, எம்பிராற்கு-எம்பெருமான் விஷயத்தில், உள்ளம் காதலர்-மனத்தில் விருப்பமுடையவராவர்; (எ - று.)

உலகத்திற் பேதையர்பலரும் அறிவுடையார்சிலருமே யாதலால், அவர் கள் முறையே விஷயாந்தரத்திலும் பகவத்விஷயத்திலும் ஆசைகொண்டு ஒழுகுந் திறத்தின் வேறுபாட்டை எடுத்துக்காட்டியவாறும். அராவியவேல் விழி—"வாளரந் துடைத்த வைவேலிரண்டுடன் மலைந்தவேபோ, லாள்வழுக் கொழிய நீண்ட வணிமலர்த்தடங்கண்" என்றார் சிந்தாமணியாரும். மக ளிர்கண்ணுக்கு வேலுவமை - கூரியவடிவிலும், எத்துணை வலிமையுடைய ஆடவரது நெஞ்சையும் பிளந்து அவரை வருத்துந் திறத்திலும் என்க. வெல்வது வேல், விழிப்பது விழி எனக் காரணக்குறி. மகளிரிடத்துக்கொ ண்ட அவாவினால் இம்மையில் அவர்கட்குஆட்பட்டுப் பலவாறுவருந்துதலே யன்றி மறுமையிலும் நற்கதிபுகுதாது வருந்துதலால், 'தையலரால் தினத் துக்கராகி' என்றார். திரிவார் - மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து அலைபவ ரென்றவாறுமாம். வடமொழித்திரிபாகிய வன மென்பது - காட்டையே யன்றி நீரையும் உணர்த்தும். இனி, இங்கு, காடென்றே கொண்டு, செந்தா மரைத்தொகுதியினிடத்து என்றலு மொன்று. அடர்ந்த தாமரைத்தொகுதி யை 'தாமரைக்காடு' என்றல், மரபு. 'எம்' என்ற தன்மைப்பன்மை, எல்லா வுயிர்களையும் உளப்படுத்தியது. (௨௬)

௨௭. காதலைப்பத்தினிமேல்வைத்தநீசக்கருநிருதன்
மாதலைப்பத்தினையமண்ணிலிட்டாய் நின்னைவாழ்த்திநொண்
டீதலைப்பத்தியைச்செய்வோர்கள்வாழுமிடபவெற்பா [டர்க்
தீதலைப்பத்தியங்கித்திரிவேற்கருள்செய்தருளே.

(இ - ள்.) காதலை-ஆசையை, பத்தினிமேல் வைத்த - அறக்கற்புடைய நின்மனைவியான சீதாபிராட்டியினிடத்து வைத்த, நீசன் கரு நிருதன் - கீழ்மகனான(இராவணனென்னும்)கரிய அரக்கனுடைய, மா தலை பத்தினை - பெரிய தலைகளீரைந்தை, மண்ணில் இட்டாய் - (துணித்துத்)தரையில் தள்ளி யவனே! நின்னை வாழ்த்தி - (போன்பினால்)உன்னைவாழ்த்தி, தொண்டர்க்கு ஈதலை பத்தியை செய்வோர்கள் - நினது அடியவர்களுக்கு (வேண்டுவன) கொடுத்தலையும் (அவர்கள்பக்கல்) பக்தியையுஞ் செய்பவர்கள், வாழும் - இனிதுவசிக்குமிடமான, இடப வெற்பா - ருஷபகிரியில் எழுந்தருளியிருப் பவனே!—தீது அலைப்ப தியங்கி திரிவேற்கு - தீவினை வருத்த (அதற்கு மாறொன்றுஞ்செய்யமாட்டாது) கலங்கியலைபவனான எனக்கு, அருள் செய் தருள் - (அக்கொடியகருமம் ஒழிந்து உய்யுமாறு) கருணைசெய்தருள்வாய்.

ராக்ஷஸராஜனும் பத்துத்தலையுடையவனுமான இராவணன், தன்தங்கையான சூர்ப்பணகையினால் தூண்டப்பட்டு, இராமபத்தினியாகிய சீதையினிடத்துக்காதல்கொண்டு கோதாவரிநதிதீரத்திற் பஞ்சவடியாச்சிரமத்திலே மாயமான்வடிவுபூண்ட மாரீசனைக்கொண்டு, இராமலக்ஷ்மணர்களைப் பிரித்து, சீதைதனித்துநின்றசமயம்பார்த்து அவளை வலியஎடுத்துத் தேரின் மேல்வைத்துச் சென்று இலங்கையில் அசோகவனத்திலே அரக்கியர் சூழச் சிறைவைத்து, அவளைத் தன்வசப்படுத்துதற்பொருட்டுப் பலவாறு நலிய, பின்பு சீதையைக்காணுத ஸ்ரீராமன், கடல்கடந்துசென்று இலங்கைபுக்கு மீண்ட அநுமானுற் செய்தியறிந்தபின்னர், வாநரசேனையுடனே சென்று சேதுபந்தநஞ்செய்து கடல்கடந்து இலங்கைசார்ந்து பெரும்போர்புரிந்து இராவணனது தலைகளைத் துணித்துத்தள்ளி அவனைக்கொன்று சீதையை மீட்டுக்கொண்டு மீண்டன னென்பது பிரசித்தம்.

நிருதன் - நைருதனென்ற வடசொல்லின் சிதைவு; அது, நிருருதியென்னுந் திக்பாலகனது மரபினனென்று காரணப்பொருள்பட்டு அரக்கனைக் குறிக்கும்.

நின்னைவாழ்த்தித் தொண்டர்க்கு ஈதலைப் பத்திமையைச் செய்வோர்கள் - பகவானுக்கும் பாகவதர்க்கும் அடிமைப்பட்டொழுகுபவ ரென்றபடி. எம்பெருமானை வாழ்த்துதல் மிக்க அன்பின் செயலாதலை,பெரியாழ்வார் திருப்பல்லாண்டுபாடியதுகொண்டும் உணர்க. எம்பெருமானுடைய சௌந்தரியத்திலும் திருக்கலியாணகுணங்களிலும் கண்ணையுங் கருத்தையுஞ் செலுத்தி அவற்றிலீடுபட்டு ஆழ்ந்தவர், பக்திபரவசராய் அதனால் தம்நிலையையும் எம்பெருமான் நிலையையும் மறந்து, 'காலாதீதமான வைகுண்டத்திலே யிருக்கிற இந்த அரும்பொருள், காலம்நடையாடப்பெற்றஇவ்வுலகத்திலே வந்து கண்ணுக்குஇலக்காகுதலால், திருஷ்டிதோஷங்காரணமாக இதற்குஎன்ன தீங்கு வருகின்றதோ ?' என்று தமக்கு உள்ள ஆதராதிசயத்தால் அநாவசியமாக அதிகபயசங்கைகொண்டு, 'இத்திருமேனிக்கு எவ்வாற்றாலும் ஒரு குறையும் வாராதிருக்கவேணும்' என்று வாழ்த்துவ ரென்க. எம்பெருமானைக்கண்டவளவிலே தமக்குவேண்டுவனவற்றை வேண்டிப்பெறநினையாமல் அவனதுவாழ்வையே தமக்குப் பரமபுருஷார்த்தமாக நினைத்தலின் அருமையை உணர்க. "எல்லாவிடத்திலுமெங்கும்பரந்து பல்லாண்டொலி, செல்லாநிற்குஞ்சீர்த் தென்திருமாலிருஞ்சோலையே", "புனத்தினைகிள்ளிப் புதுவவிகாட்டி யுன்பொன்னடிவாழ்கவென்று, இனக்குறவர்புதியதுண்ணுமெழின்மாலிருஞ்சோலை யெந்தாய்" என்ற ஆழ்வாரருளிச்செயல்களையுங் காண்க. 'திவ்யதேசங்களுக்கு அழகாகிறது, அநந்யப்ரயோஜநராய் அத்தலைக்கு மங்களாசாஸநம் பண்ணுமவர்கள் வர்த்திக்கை' ஆதலால், 'அங்ஙனம்வாழ்த்துபவர் வாழும் இடபவெற்பு' என்று சிறப்பித்துக் கூறினார்.

௩௦. அருடருமங்கைவிடாதேத்துமன்பருக்கன்ப ரெல்லி
லிருடருமங்கையெறியாழியா னிசைக்கின்னரருங்
கெருடருமங்கையருவ்வாழிடபகிரியிற்கல்லா
முருடருமங்கையலெய்திலன்றேயவர்முத்தரன்றே.

(இ - ள்.) அருள் - கருணையையும், தருமம்-அறத்தையும், கைவிடாது - விட்டிடாமல், ஏத்தும் - (தம்மைத்) துதிக்கின்ற, அன்பருக்கு - அடியார்களிடத்தில், அன்பர் - அன்பையுடையவரும், எல்லில் இருள் தரும் - பகற்பொழுதிலே (சூரியனை மறைத்து) இருளை யுண்டாக்கிய, அம் கை எறி ஆழியார் - அழகிய தம்திருக்கையா லெறிந்த சக்கராயுதத்தையுடையவரு மான எம்பெருமானது, இசை கின்னரரும் கெருடரும் மங்கையரும் வாழ் இடப கிரியின் அங்கு அயல் - இசைபாடுதலில்வல்ல கிந்நரர்களும் கருடர்களும் (அத்தேவசாதியாருடைய) மாதர்களும் வாழுமிடமான திருமாலிருஞ் சோலைமலையின் சமீபத்திலே, கல்லா முருடரும் எய்தில் - கல்வியறிவில்லாத மூடர்கள் வந்தாலும், அன்றே அவர் முத்தர் அன்றே - அப்பொழுதே அவர்கள் முக்தர்களாவரன்றோ? (எ - று.)—ஈற்றிலுள்ள 'அன்றே' என்பது - தேற்றம். அன்று ஏ என்ற இரண்டெதிர்மறைகள் சேர்ந்து உடன்பாட்டுப்பொருளை யுணர்த்தித் தேற்றக்கருத்தை விளக்குமென்க.

இடபகிரிக்குஅருகிலே சென்றாலும் கல்லாதமூடருமுட்பட அப்பொழுதே முக்தாத்மாக்களாவர் என்பதாம். திருமாலிருஞ்சோலைமலையையேயன்றிஅதனருகிடத்தையடைந்தாலும்பேறுவாய்க்குமென்பதை "மாலிருஞ்சோலை,யயன்மலையடைவதுகருமமே", "மாலிருஞ்சோலைப்,புறமலைசாரப் போவது கிறியே" என்று ஆழ்வாரருளிச்செய்திருத்தல்கொண்டும் அறிக. திவ்வியதேசத்தை அடுத்தமாத்திரத்திலே எல்லாவினைகளும் நீரப்பெறுதலால், அவர்கள் பின்பு முக்திபெறுதல் தவறாது என்ற துணிவினால், 'அன்றே அவர் முத்தரன்றே' என்றார். உடனே அவர்கள் ஜீவன்முக்தராகிப் பின்பு அப்பிறப்பின்முடிவிலே பரமுக்தியை அடைவ ரெனினும் அமையும். இதனை "பசையற்று, லன்றே யப்போதே வீடு அதுவே வீடு வீடாமே" என்றாற்போலக் கொள்க. கிந்நரர் முதலியோர் இசைபாடுதல் முதலிய திருவடித்தொண்டு செய்து எம்பெருமானது திருவுள்ளத்தை உகப்பித்துத் தாம் பேறுபெறுதற்குத் திருமாலிருஞ்சோலைமலையில் வந்து வாழ்வ ரென்க; அன்றியும், அவர்கள்வாழுமிடமான சுவர்க்கலோகத்திலும் இந்த இடம் இனியதாதலாலும், அதனைவிட்டு இங்கு வந்து வாழ்வர்.

"அறனும் அருளுடையான்கண்ணதேயாகும்", "அருளிலார்க்கு அவ்வுலகமில்லை" என்ப வாதலால், 'அருள் தருமங் கைவிடா தேத்து மன்பருக்கன்பர்' என்றார். அன்பருக்கு அன்பர் - தம்மைக்குறித்து அன்புசெய்வார்பக்கல் தாம் அன்புசெய்பவர்; முந்தின அன்பு - பக்தி, பிந்தின அன்பு - கருணை. ஆழியா ரிடபகிரி யென இயையும். இசை - சங்கீதம். கிந்நரர், கருடர் - பதினெண்தேவகணங்களிற் சேர்ந்தவர். கிந்நரர்-கிந்நரமென்னும் வாத்தியத்தைக் கையிற்கொண்டு இசைபாடித்திரிபவர். 'கருடர்' என்ற சொல், மோனைநயத்தின்பொருட்டு 'கெருடர்' எனத் திரிந்துநின்றது; "கீதங்கள்பாடினர் கின்னரர் கெருடர்கள்" என்ற ஆண்டாளருளிச்செயலிற் போல. மங்கையரென்பது - இங்கே பருவப்பெயராகாமல் மகளிரென்றமாத்திரமாய் நின்றது: அப்பருவத்துக்கு வயதெல்லை - பன்னிரண்டு முதற் பதின்மூன்றளவும். முருடு - விறகு; அதுபோன்றவர், முருடர்.

உணர்விலாரென்க. உம்-இழிவுசிறப்பு. ஞானமில்லாதவர்களும் அந்தஇடத்தைச் சார்ந்தவளவில் உயர்கதிபெறுவரெனவே, ஞானிகள் அங்ஙனமாவ ரென்பது சொல்லவேண்டாதாயிற்று. கல்லா மூருடரும் - கல்லாத வேடர்களும் எனினுமாம். அங்கு - அசை. அயல் என்பது, ஐயல்என முதற்போலி பெற்றது, திரிபுநயத்துக்காக. (௯௦)

௯௧. முத்தரன்றேநின்கழலொருகாற்கைமுகிழ்க்கப்பெற்றோர்
பித்தரன்றேநினக்கேபித்தராகிற் பிரமன்கங்கை
வைத்தரன்றேய்துயர்தீர்த்தாய் நின்சோலைமலைமருவும்
பத்தரன்றேபரிவாலென்னையாளும்பரமர்களே.

(இ - ள்.) பிரமன் கம் - பிரமனது தலையை, கை வைத்து - கையில் வைத்துக்கொண்டு, அரன்தேய் - சிவபிரான் வருந்திய, துயர்-துன்பத்தை, தீர்த்தாய் - ஒழித்தருளியவனே!—நின் கழல் ஒரு கால் கைமுகிழ்க்கப் பெற்றோர் - உன் திருவடிகளை ஒருதரம் கைகூப்பித்தொழப்பெற்றவர்கள், அன்றே முத்தர் - அப்பொழுதே முத்திபெற்றவராவர்; நினக்கே பித்தர் ஆகில்-உன்விஷயமாகவே பக்திப்பித்து ஏறியவர்களாயின், பித்தர் அன்றே-(அவர்கள்) பித்துடையாரென்று இகழத்தக்கவராகார்; நின் சோலைமலை மருவும் பத்தர் அன்றே-உனது திருமாலிருஞ்சோலைமலையை அடைந்திருக்கிற அடியார்களன்றோ, பரிவால் என்னை ஆளும் பரமர்கள் - அன்பினால் என்னை ஆட்கொள்ளும் மேலோராவர்; (எ - று.)

'அன்றே' என்ற சொல் - முதலடியில் அப்பொழுதே யென்றபொருளிலும், இரண்டாமடியில் அல்லவே யென்றபொருளிலும், ஈற்றடியில் அன்றோ எனத் தேற்றப்பொருளிலும் வந்த வேறுபாட்டை உணர்க. 'அன்றேமுத்தர்' என்பதற்கு - கீழ்ச்செய்யுளிற்கூறிய உரையைக் கொள்க. கைமுகிழ்த்தல் - அஞ்சலிசெய்தல்; "தனி ஐந் நொது முன் மெலிமிகலுமாம்" என்ற பொதுவிதிப்படி தனிஐகாரத்தின்முன் மெலிமிகவில்லை, இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சிச் சிறப்புவிதியால். கீழ் மூன்றுஞ்செய்யுளில் "அனகனுக்குப் பித்தரானவர் பித்தரன்றே" என்றஇடத்துக் கூறிய உரை, இச்செய்யுளின் இரண்டாம்வாக்கியத்துக்கும் ஏற்கும். பகவத்கைங்கரியம் பண்ணுகிறவர்கள் எனக்குத்தலைவர்களென்று தமதுபாகவதசேஷத்வத்தை இறுதிவாக்கியத்தில் வெளியிட்டார்; "பயிலுஞ்சுடரொளிமூர்த்தியைப் பங்கயக் கண்ணனைப், பயிலவினியநம்பாற்கடற்சேர்ந்தபரமனைப், பயிலுந்திருவுடையார் யவரேனு மவர்கண்டீர், பயிலும் பிறப்பிடைதோறெம்மையாளும் பரமரே" என்றார் நம்மாழ்வாரும்: 'பகவத்சேஷத்வத்தின் எல்லையாகிறது, பாகவதசேஷத்வத்தளவும் வருகையிறே.' (௯௧)

௯௨. பரந்தாமரைத் திருமாலிருஞ்சோலைப்பரமரைக் கால்
கரந்தாமரையன்னகார்நிறத்தாரைக் கடல்கடக்குஞ்
சரந்தாமரைதிரிகான்போயிலங்கைத்தலைவன்பத்துச்
சிரந்தாமரைக்கணத்தெய்தாரை யெய்தற்குத்தேர்மனமே.

(இ - ள்.) மனமே—!—பரந்தாமரை - பரமபதத்தையுடையவரும்,—திருமாலிருஞ்சோலை பரமரை - திருமாலிருஞ்சோலைமலையி லெழுந்தருளியிருக்கிற தலைவரும்,—கால் கரம் தாமரை அன்ன - திருவடிகளும் திருக்கைகளும் தாமரைமலர்களை யொத்திருக்கப்பெற்ற, கார் நிறத்தாரை - காளமேகம்போன்ற திருமேனிநிறத்தை யுடையவரும்,—தாம் மரை திரி கான் போய் - தாவுகின்ற மான்கள் சஞ்சரிக்கப்பெற்ற வனத்திலே வாசமாகச்சென்று, (பின்பு), கடல் கடக்கும் சரம் - சமுத்திரராசனை வென்ற (ஆற்றலையுடைய) அம்பினால், இலங்கை தலைவன் பத்து சிரம் தாம் அரை கணத்து எய்தாரை - இலங்கையரசனான இராவணனுடைய பத்துத்தலைகளையும் தாம் அரைக்கணப்பொழுதிலே துணித்துத்தள்ளியவருமாகிய எம்பெருமானை, எய்தற்கு - சரணமடைவதற்கு, தேர் - துணிவுகொள்வாய்.

என்று நெஞ்சைநோக்கி இதமுரைத்தவாறு.

பரந்தாமர் என்ற வடமொழிப்பெயர்- (எல்லாப்பதவிகட்கும்)மேலான இடத்தையுடையவரென்றும்,(எல்லாவொளிகளினுஞ் சிறந்த ஒளியையுடையவ ரென்றும் பொருள்படும் ; பரம் - மேலானது. தாமம் - இடமும், ஒளியும். பரமர் - சிறந்தவர். திருவடி திருக்கைகளுக்குத் தாமரைமலர்-செம்மை மென்மை யழகுகளில் உவமம். கால் கரம் தாமரையன்ன கார்நிறத்தார்— "கருமுகில் தாமரைக்காடு பூத்து" என்றார் கம்பரும். சரம் எய்தாரை என இயையும். தா மரை என்று பிரித்து, வினைத்தொகையென்னவும் அமையும்; மரை - மானின்சாதிகளி லொன்று. கான் போய் - தண்டகாரணியத்தைக் கடந்து சென்று. 'அரைக்கணத்து' என்றது, மிக்கவிரைவைக் காட்டும். தேர் - வினைப்பகுதியே ஓசைவேறுபாட்டினால் ஏவலொருமையாக நின்றது; தேர்தல் - தெளிதல், நிச்சயித்தல். எம்பெருமானைச் சரணமடைதற்கு வழிதேடுவா யென்று உரைப்பர் ஒருசாரார்.

'எய்தாரை யெய்தற்கு' என்றவிடத்து, முரண்தொடை தோன்றும். இனி, கடம் குஞ்சரம் என்று எடுத்து, மதத்தையுடைய யானைகளும் தாவுகின்றமான்களுந் திரிகிற வனத்தைக் கடந்துசென்று கடலையும் இலங்கைத்தலைவன்பத்துச்சிரங்களையும் தாம் எய்தவரை என்று பொருள்கொள்ளவும் இடமுண்டு. கானும் கடலும் (கடந்து) போய் எனவும் அமையும். ()

௯௯. தேரா யிரவுபகலிரைதேடுவை தீமைநன்மை
பாராயிரங்குவைபாவையராற் பண்டுமாவலிபாற்
சோராயிரந்தவனைத் திருமாலிருஞ்சோலைநின்ற
பேராயிரமுடையானை நெஞ்சே யென்றுபேணுவையே.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—(நீ), தேராய் - ஆராய்ந்துதெளியாயாகி, இரவு பகல் இரை தேடுவை - இராத்திரியும் பகலும் உணவைநாடித் திரிகின்றாய் ; தீமை நன்மை பாராய்-தீவினைகள் (இன்னவையென்றும்) நல்வினைகள் (இன்னவையென்றும்) நோக்குகின்றாயில்லை ; பாவையரால் இரங்குவை - மாதர்கள்காரணமாக உருகுவாய் ; (இங்ஙனம் செய்வன தவிர்வன

பகுத்துஉணராது நிலையில்லாதபொருளின்பங்களையே காதலித்துத் திரிகிற நீ), பண்டு - முன்னொருகாலத்திலே, மாவலிபால் - மகாபலிசக்கரவர்த்தியி னிடத்தில், சோர் ஆய் இரந்தவனை - கபடமாய் யாசித்தவனும், திருமாலி ருஞ்சோலை நின்ற பேர் ஆயிரம் உடையானை - திருமாலிருஞ்சோலைமலை யில் நின்றதிருக்கோலமாய் எழுந்தருளியிருக்கின்ற ஆயிரந்திருநாமங்களை யுடையவனுமான எம்பெருமானை, என்று பேணுவை - எக்காலத்தில் விரும் பித் தியானிப்பாயோ! (எ-று.)—ஈற்று ஏகாரம் - இரக்கம்.

இங்ஙனம் தம்மனத்தை நோக்கி இரங்கிக் கூறுகின்றவகையால், உல கத்தார்க்கு அறிவுறுத்தியவாறும்.

சோராய் - முன்னிலை யொருமை யெதிர்மறை முற்றெச்சம். இரையென்ற சிறப்புப்பெயரைக் கீழ்இரண்டாங்கவியிற்போலப் பொதுப்பொருளதாகக் கொண்டு, ஐம்பொறிகளாலும் நுகரப்படும்பொருள்களையெல்லாம் அல்லும் பகலும் அநவரதமும் நாடித்திரிவா யென்று கருதலுக்கொள்ளலாம். பாவை யர் - சித்திரப்பிரதிமைபோல் அழகிய மகளிர்; கண்மணிப் பாவைபோல் அருமையாகப் பாராட்டப்படுகிற மாதர்கள். 'பாவையர்பால்' என்ற பாட த்துக்கு - பாவையர்பக்கல் என்பது பொருள். பண்டு இரந்தவனை என்று இயையும். மாவலி - மஹாபலீ என்ற வடசொல் விகாரப்பட்டது; பால் - ஏழனுருபு. சோரம் என்ற வடசொல் சோர்என விகாரப்பட்ட தென்றா வது, சோர்என்ற வினைப்பகுதிதானே சோர்வு என்ற தொழிற்பெயரின் பொருள் குறித்தது [முதனிலைத்தொழிற்பெயர்] என்றாவது கொள்க. சோ ராய் இரந்தவன் - மிகக்குறிய வாமநவடிவங்கொண்டுசென்று வறுமைத்தளர் ச்சியை ஏறிட்டுக்கொண்டுகாட்டித் தன்காலடியால் மூவடிமண்வேண்டி அது கொடுக்கப்பெறும்போது அவனது உடல்பொருளாவிகளை யெல்லாம் தன்வசப்படுத்திக்கொண்டவன். பேராயிரம் - ஸஹஸ்ரநாமம். (௯௩)

[தலைவி தனதுவேட்கைமிகுதியைக் கூறுதல்.]

௯௪. பேணிக்கவித்தவரைக்குடையாய் பெரியோர்பதின்ம
ராணிக்கவித்தமிழ்மாலைகொண்டா யழகா கரிய
மாணிக்கவித்தகமாமலையே வண்டுளவுக்கல்லாற்
பாணிக்கவித்தடங்காதுவெங்காமப்படர்கனலே.

(இ - ள்.) பேணி கவித்த - (ஆக்களிடத்தும் ஆயரிடத்தும்) அன்பு கொண்டு எடுத்துப்பிடித்த, வரை குடையாய் - கோவர்த்தனமலையாகிய குடையையுடையவனே! பெரியோர் பதின்மர் - (அறிவொழுக்கங்களிற்) பெரியவர்களான பத்துஆழ்வார்களுடைய, ஆணி கவி தமிழ் மாலை - சிறந்த தமிழ்ப்பாமாலைகளாகிய திவ்வியப்பிரபந்தங்களை, கொண்டாய் - ஏற்றுக் கொண்டவனே! அழகா - அழகனே! வித்தகம் - ஞானத்தையுடைய, கரிய மாணிக்கம் மா மலையே - கருநிறமானதொரு மாணிக்கமயமாகிய பெரிய மலைபோன்றவனே!—வெம் காமம் படர் கனல் - (எனது)வெவ்வியகாதலா கிய மேன்மேற்பரவுகின்ற நெருப்பானது, வண்துளவுக்கு அல்லால் - வள

ப்பமுள்ள (நினது) திருத்துழாய் மாலைக்குத் தணியுமே யன்றி, பாணிக்கு அவித்து அடங்காது - நீரினால் தணிக்கப்பட்டு அடங்கிவிடமாட்டாது.

நினதுதிருத்துழாய்மாலையைத் தந்தருள்வையாயின், எனது மையல் நோய் தணியு மென்பதாம். தலைவனது ஒருவழித்தணத்தலிலே பிரிவையாற்றாதுவருந்துகிற தலைவி தனதுநினைப்புமிகுதியால் தலைவனை எதிரில்நிற்கின்றவாறுபோலப் பாவித்து அங்ஙனம் உருவெளித்தோற்றத்திலே வெளிப்பட்ட அத்தலைவனை முன்னிலைப்படுத்திக் கூறியது, இது. ஒருவழித் தணந்துவந்த தலைவன் சிறைப்புறமாக, அதனையுணர்ந்த தோழி அவனை முன்னிலையாக்கித் தலைவியின்நிலைமையைக் கூறியதென்று இதற்குத்துறை கொள்ளுதலு மொன்று. பிரிந்துவருந்துங்காலத்திலே, தலைவனதுசம்பந்தமுடைய மாலையைப் பெற்றால் அதுகொண்டு ஒருவாறு விரகதாபம்தணியக் கூடுமே யன்றி, இது வெயிற்காலத்தினாலாகியதாபமன்றாதலால், சீதளோபசாரமாக மேலேபெய்யும் பனிநீரினால் தணியமாட்டாதென்றாள். "ஊருளெழுந்தவுருகெழுசெந்தீக்கு, நீருட்குளித்தும் உயலாகும்—நீருட், குளிப்பினுங் காமஞ்சுடுமே குன்றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்" என்ற நாலடியாரையுங் காண்க. தீயினும் வெவ்வியது இவ்விரகதாப மென்பது, 'வெங்காமப்படர்கனல்' என்ற விதப்பினால் வெளியாம்.

திரிலோகாதிபதியென்று பேர்படைத்தவனான தேவேந்திரன் தானே அவ்வுலகத்தில் ஒருசார் நிரபராதியாயுள்ள சிலஉயிர்களுக்கு நலிவுசெய்யப் புக்கவிடத்து எம்பெருமான் தான் அருள்கொண்டு பாதுகாத்தனனென்பதை விளக்குதற்கு, 'பேணிக் கவித்த' எனப்பட்டது. 'நாம் கோவர்த்தனமலையை ஆராதித்தோம்: அதனால்நேர்ந்த தீங்கைப் போக்கிக் கண்ணன் காத்தருளினான்' என இடையர்கள் நினைக்கவொண்ணாதென்றுநோக்கி அவர்கள் ஆராதித்த மலையைக்கொண்டே காத்தருளினனென்க.

'பெரியோர் பதின்மர்' என்றது, பத்து ஆழ்வார்களை; அவராவார் - பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என இவர். (நம்மாழ்வாருடைய சிஷ்யரான மதுரகவிகளையும், பெரியாழ்வாருடைய திருமகளாரான ஆண்டாளையுங் கூட்டி 'ஆழ்வார்கள் பன்னிருவர்' என்பதும் உண்டு.) இவர்கள் அருளிச்செய்த இருபத்துநான்கு திவ்வியப்பிரபந்தங்களுஞ்சேர்ந்து நாலாயிரப்பிரபந்தமென்று வழங்கும். உயர்தரப்பொன்னை 'ஆணிப்பொன்' என்றும், சிறந்தமுத்தை 'ஆணிமுத்து' என்றும் வழங்கும் மரபைத் தழுவித் திவ்வியகவியென்ற பொருளில் 'ஆணிக்கவி' எனப்பட்டது. கவித்தமிழ்மாலை - மிக்க பக்தியுடன் எம்பெருமானுக்குச் சாத்தும் பூமாலைபோன்ற பாமாலையென்க. "அடிசூட்டலாகுமந்தாமம்", "செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை," "கற்றினம்மேய்த்த கழலிணைக்கீ, ழுற்ற திருமாலை பாடுஞ்சீர்" எனப் பெரியாரும் பணித்தார். இங்கே 'வித்தகம்' என்றது, எம்பெருமானுக்கு உரிய முற்றுணர்மை: அது, ஸர்வஜ்ஞதை யெனப்படும்.

எதற்குஞ்சலியாமையும், அளத்தற்கரியபெருமையும், கம்பீரமான தோற்றமும், பலவளங்களை யுடைமையும் முதலிய சிறப்புக்கள்பற்றி, எம்பெருமானைக் குன்றாக உருவகஞ்செய்தார்.

நெஞ்சென்னும்உட்கண்ணால் எம்பெருமானைத் தரிசித்த ஐயங்கார், அவன்பக்கல் தமக்குஉண்டான வியாமோகத்தை அப்பெருமானைக்குறித்து விண்ணப்பஞ்செய்தல்,இதற்கு உள்ளுறைபொருள். 'வண்துளவு' என்றது-எம்பெருமானுடைய நிரதிசயபோக்கியதையையும், 'பாணி' என்றது - அன்பர்கள்செய்யுந்தோத்திரவுகளையுங் குறிக்கும். 'பேணிக் கவித்த வரைக்குடையாய்' என்று விளித்தது, எம்பெருமான் தன்னைச்சார்ந்த உயிர்களைப் பரிவோடு பாதுகாக்குந் திறத்தி லீடுபாட்டினால். பெரியோர் பதின் மராணிக் கவித்தமிழ்மாலை கொண்டாய் - மயர்வறமதிநலம்பெற்ற ஆன்றோர்பலரால் துதிக்கப்பட்டவனே யென்றபடி. கரியமாணிக்க வித்தகமாமலையே - கண்டவர்கண்குளிரும்படி கருமாணிக்கம்போன்று காண்பவரிளைப்பைத்தீர்க்கும்படியான வடிவை யுடையவனே யென்றவாறு. (௬௪)

[பிரிவாற்றாத தலைவி சந்திரனைநோக்கி இரங்கிக்கூறுதல்.]

௬௫. படராகுவால்குவியக்குழலூதியபால ரைய
மடராகுவாகனன்றாதைக்கிட்டா ரலங்காரர் துழாய்க்
கிடராகுவார்பலர்காண் டமியேனையெரிப்பதென்னீ
விடராகுவாய்க்கொண்டுடல்சுட்டுக்கான்றிட்டவெண்டிங்களே.

(இ - ள்.) விடம் ராகு வாய் கொண்டு - விஷத்தையுடைய ராகுவென்னும்பாம்பினால் வாயிற்பெய்துகொள்ளப்பட்டு, உடல் சுட்டு கான்றிட்ட - அதனுடம்பைச் சுடுதலால் (பொறுக்கமாட்டாமல்) உமிழ்ந்துவிடப்பெற்ற, வெள் திங்களே - வெண்மையான சந்திரனே!--படர் ஆ -(மேய்தற்குப் பல இடங்களிற்) பரவிச்சென்றுள்ள பசுக்கள், குவால் குவிய - தொகுதியாக (ஓரிடத்தில்) வந்துசேரும்படி, குழல் ஊதிய - (இன்னிசையமைய) வேய்க்குழலையூதிய,பாலர் - ஆய்ப்பிள்ளையாய்வளர்ந்தவரும்,—ஐயம் அடர் - பிச்சையேற்றலால் வருந்திய, ஆகுவாகனன் தாதைக்கு - பெருச்சாளியை வாகனமாகவுடையவனான விநாயகனது தந்தையாகிய சிவபிரானுக்கு, (ஐயம்) இட்டார் - பிச்சையிட்டவருமாகிய, அலங்காரர் - அழகரது, துழாய்க்கு - திருத்துழாய்மாலையைப் பெறுதற்கு (ஆசைகொண்டு), இடர் ஆகுவார் - துன்பமடைபவர்,பலர் காண் - (உலகத்திற்) பலர் உளரன்றோ? தமியேனை நீஎரிப்பது என்-என்னையொருத்தியைமாத்திரம் நீஎரிப்பது ஏனோ?(எ-று.)

தலைவனது ஒருவழித்தணத்தலில் அப்பிரிவையாற்றாது வருந்துகின்ற தலைவிக்கு இரவிலே விரகவேதனை வளர, அப்பொழுது விளங்குகிற சந்திரனும் பிரிந்தார்க்குத்துயர்க்கேதுவானபொருள்களுளொன்றாதலால் இவளை இன்னும் அதிகமாக வேதனைப்படுத்த, அத்தாபத்தையாற்றாத அத்தலைவி, சந்திரனை முன்னிலைப்படுத்தி இரங்கிக்கூறியது, இது; சந்திரோபாலம்பநம் [சந்திரனை நிந்தித்தல்] எனப்படும். ஒருவழித்தணந்துவந்த தலைவன்

சிறைப்புறத்தானாக, அதனையுணர்ந்த தலைவி அவன் கேட்டு வெளிப்படையாக மணம்புரிந்துகொள்ளமுயலுமாறு அவன்செவிப்படச் சந்திரனைநோக்கி இங்ஙனங்கூறுகின்றனளென விவரங்காணலாம். தலைவன் அழகு செல்வம் கல்வி குடிப்பிறப்பு முதலிய மேன்மைகளிற் சிறந்தவனாதலால் அவன் பக்கல் தன்னைப்போலவே ஈடுபட்டுக் காதல்கைம்மிக்கவர் பலர்உளராதல் கூடுமென்னுங் கருத்தினால்,'அலங்காரர்துழாய்க்குஇடராகுவார்பலர்காண்' என்றும், உலகத்தில் துன்பமுறுவார் தம்மைப்போலத்துன்புறுபவர் வேறெவருமில ரென்று எண்ணுதல் இயல்பாதலால் 'தமியேனையெரிப்பதென்நீ' என்றும் கூறினாள். இதனால், நீ பக்ஷபாதமுடையா யென்று பழித்தவாறும். இராகுவின்வாய்ப்பட்டுவெளிப்போந்த சந்திரனை, விஷத்தையுடைய கொடிய அக்கரும்பாம்பு சந்திரமண்டலத்தைக் கண்டு தனக்குஏற்றஇரையெனக்கருதி அதனைவிழுங்கத்தொடங்கி வாய்க்கொண்டவிடத்து அச்சந்திரனதுதாபத்தைப் பொறுக்கமாட்டாமல் உமிழ்ந்துவிட்டதெனக் கற்பித்து, 'விடராகுவாய்க்கொண்டுடல்சுட்டுக்கான்றிட்டவெண்டிங்களே'என்று விளித்தாள். எவரையுங்கொல்லத்தக்க நஞ்சுடைநாகத்தையும் எரிக்கவல்ல கொடுமையுடையாய் நீ யென்று நிந்தித்தவாறு. நைடதத்துச் சந்திரோபாலம்பனப்படலத்தில் "துணைவர்ப்பிரிந்து துயில்துறந்த, மையன்மடவாருயிர் கவர்வான் கூற்றம்போல வரு மதியே, ஐயமிலை யுன்னுடற்களங்கமழலுங்கொடியவிடமன்றே, வெய்யபகுவாய்க்கரும்பாந்தள் விழுங்கி யாற்றாதுமிழ்ந்ததுவே" என்றது, ஒப்புநோக்கத்தக்கது. 'வெண்டிங்கள்' என்றது, அவனது சிறந்தஅறிவின்மையையுங் காட்டும்; 'வெண்மையாவது - அறிவு முதிராமை.'

ஒவ்வொருசமயத்திற் சந்திரனைமறைக்கிற பூமியின்சாயையையும், சூரியனை மறைக்கிற சந்திரனது சாயையையும், இராகு கேதுவென்னுங் கரும்பாம்பு செம்பாம்புகளாகக் கூறுதல், கவிசமயம்; அன்றியும், பாற்கடல்கடைகையிலுண்டான அமிருதகலசத்தை எடுத்துக்கொண்ட திருமால் மிகஅழகியமோகினியென்னும்பெண்வடிவத்தால் அசுரர்களைமயக்கித் தேவர்கட்கே அமிருதத்தைப் பங்கிட்டுக்கொடுத்துவருகையில், இராகுவென்னும் ஓர் அசுரன் தான்இருத்தற்குஉரிய அசுரர்கூட்டத்தை விட்டுத் தந்திரமாகத் தேவகோஷ்டியினிடையிலே புகுந்து கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனைச் சூரியசந்திரர் குறிப்பித்தமாத்திரத்தில், எம்பெருமான் அவனை அகப்பையால்அடித்துத் தலைவேறு உடல் வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர்நீங்காத அந்தத்தலையும் உடலும் விஷ்ணுவின் அநுக்கிரகத்தால் இராகு கேதுக்களென இரண்டுகிரகங்களாகிச் சூரியன்முதலிய ஏழுகிரகங்களோடு சேர்ந்து, தம்மேற் கோள்சொன்ன சூரியசந்திரர்க்குப் பகையாய்ச் சிற்சில காலத்தில் அவர்களைப் பிடித்துக்கொள்கின்றன; அவையே கிரகண மெனப்படுகின்றன வென்பது வரலாறு.

திங்களுக்கு வெண்மை - இயற்கை யடைமொழி; இனம் விலக்கவந்ததன்று. 'ஐயம்' என்றது - 'அடர்' என்பதனோடும், 'இட்டார்' என்பதனோடும் இயையும். அடர்தல் - நெருக்குண்ணுதல், சங்கடப்படுதல். இது, தா

தைக்கு அடைமொழி. இனி, அடர் - (பகையைப்) பொருது அழிக்கவல்ல என்று கொண்டு, அதனை, ஆகுவுக்கேனும் ஆகுவாகனனுக்கேனும் அவன் தாதைக்கேனும் அடைமொழியாக்கலும் ஒன்று.

பேறுகிடைத்தசமயத்திலே மகிழ்ச்சிசெய்யக்கடவதான ஞானவிளக்க மானது, உரியகாலத்திற் பேறுகிடையாமையாலே நலிவுசெய்ய, ஐயங்கார் அதனை முன்னிலைப்படுத்திப் பழித்துரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். 'திங்கள்' என்றது - ஸ்வாபதேசத்தில், விவேகத்தையாம். 'மாயாகாரியமான தாமசகுணமானது தன்னைக் கவிந்துகொள்ளமுயலவும் அதற்கு அகப்ப டாது அதனைஒழித்துவிளங்குகின்ற சுத்தஞானமே!' என்றுவிளித்து, 'வாத் ஸல்யத்தையும் பரத்வத்தையும் சௌந்தரியத்தையும் உடைய எம்பெருமா னது இனிமையில் ஈடுபட்டு அதனைப்பெறாது வருந்துவார் உலகத்திற் பல ருளராகவும் என்னைமாத்திரம் நீ வருத்துவது என்னோ?' என்று இரங்கிக் கூறினரென்க. 'அலாபதசையில் விவேகமும் பாதகமாம்'. (௯௫)

[நிலவினால் வருந்துந் தலைவியின் தளர்ச்சியைக்கண்ட பாங்கி இரங்கல்.]

௯௬. திங்களப்பாநின்றசெந்தீக்கொழுந்திற்செழுஞ்சங்குபோ
லுங்களப்பாவையுருகுவதோர்கில ரும்பரெல்லா
மெங்களப்பாவெமைக்காவாயெனவுலகீரடியா
லங்களப்பான்வளர்ந்தார்சோலைமாமலையாதிபரே.

(இ - ள்.) உம்பர் எல்லாம் - தேவர்களனைவரும், எங்கள் அப்பா எமை காவாய் என - 'எங்கள் இறைவனே! (மாவலியினாலாகிய துயரினின்று நீக்கி) எங்களைப் பாதுகாத்தருள்வாய்' என்று பிரார்த்திக்க, (அவ்வேண்டு கோட்கு இரங்கி), உலகு ஈர் அடியால் அளப்பான் - உலகங்களை இரண்டு அடிவைப்புக்களால் அளவிடுமாறு, அங்கு வளர்ந்தார் - அப்பொழுது (திரி விக்கிரமமூர்த்தியாய்) வளர்ந்தருளியவராகிய, சோலைமாமலை ஆதிபர் - திரு மாலிருஞ்சோலைமலைக்குத் தலைவரான அழகர்,—செழுஞ் சங்கு போலும் களம் பாவை - செழுமையான சங்குபோலுங் கழுத்தையுடைய அழகிய இத்தலைவி, திங்கள் அப்பாநின்ற செம் தீக்கொழுந்தின் உருகுவது - சந்தி ரன்பூசியிடுகின்ற அக்கினிச்சுவாலையினால் [நிலாவினால்] கரைந்துவருந்து வதை, ஓர்கிலர் - அறிகின்றாரில்லை; (எ - று.)

அறிவாராயின் உடனே மீண்டுவந்து இவளை வெளிப்படையாக மணம் புரிந்தருள்வ ரென்பது, தாற்பரியம். சந்திரமண்டலத்தினின்று வெளிப் பட்டு மேலேபடுகின்ற நிலாவானது, பிரிந்தநிலையிலுள்ள இவளுக்கு மிக்க தாபத்தை விளைத்தலால், 'திங்களப்பாநின்ற தீக்கொழுந்து'எனப்பட்டது. தீக்குச் செம்மை - இயற்கையடைமொழி. கழுத்துக்குச் சங்குஉவமை - வடி விலும் ரெய்ப்பிலு மென்க.செழுஞ்சங்கு-வலம்புரிச்சங்கு. இங்ஙனம்இதனை ஓராதிருத்தல், உலகங்களை ஆட்கொண்டு சிறியதைப்பெரியதுநலியாதபடி சமயமறிந்து ஆவனசெய்து பாதுகாக்கிற அவரது சால்பின்தகுதிக்குச் சிறி தும்ஏலாது என்பது தொனிக்க, 'உலகீரடியாலளப்பான்வளர்ந்தார்' என்ற

அடைமொழி கொடுக்கப்பட்டது. நிலவுலகத்தையளந்ததில் நிலவுலகமும் அதன்கீழுள்ள ஏழுலகங்களும், வானத்தையளந்ததில் நிலவுலகத்துக்கு மேலுள்ள ஆறுஉலகங்களும் அடங்கியதனால், 'உலகீரடியாலளப்பான் வளர்ந்தார்' என்றார். மக்களைத் தந்தையர்போலத் தேவர்களைத் தேவாதிதேவன் அன்புகொண்டு ஆவனசெய்து பரிபாலித்தலால், அவர்கள் 'அப்பா' என்று விளித்தனர்.

களம் - வடசொல். பாவை - அதுபோன்ற பெண்ணுக்கு உவமையாகு பெயர். 'எல்லாம்' என்பது - இருதிணைக்கும் பொது; இங்கு உயர்திணைக்கு வந்தது. அங்கு - அவ்விடத்து எனினுமாம்; அசையுமாம்.

உரியகாலத்திற் பேறுகிடையாமையாலே ஞானவிளக்கமும் துயர்க்கு ஏதுவாக, ஐயங்கார் அடைந்த தளர்ச்சியைக் கண்ட அன்பர்கள் நொந்து உரைத்த வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். ஸர்வஜ்ஞரும் ஸர்வசக்தரும் ஸர்வரக்ஷகருமான எம்பெருமான் விவேகவிளக்கத்தால் இவர் படுந்துயரத்தை அறியாதிருக்கின்றனரே! என்று இரங்கிக்கூறியவாறு. செழுஞ்சங்குபோலுங்களப்பாவை - ஸ்ரீபாஞ்சஜந்யமென்னுந் திவ்வியசங்கம்போல எம்பெருமான் திருவுள்ளத்துக்குப் பாங்காய்க் கம்பீரமான இனியதொனியை வெளியிடுங் கண்டத்தையுடையவரிவரென்க; அச்சங்கினொலி பெருமானது வெற்றிக்கு அறிகுறியாய்ப் பகைவர்க்கு அச்சத்தைவிளைத்து அவர்களை அழியச்செய்தல்போல, ஐயங்காரது திருமிடற்றினின்று வருகின்ற கம்பீரமான ஒலிவடிவாகிய வாக்கியங்களும் அப்பெருமானது பரத்வத்தை விளக்குவனவாய்ப் பரசமயவாதிகட்கு அச்சத்தைவிளைத்து அவர்களைத் தோற்பிக்குமென்க. இங்ஙனந் தோழிபேச்சாலே தமதுநிலைமையை வெளியிட்டனர் ஐயங்கார் என்று உணர்க. (௬௬)

௬௭. ஆதியராவிற்றுயிலலங்கார ரழக ரன்பாம்
வேதியராவுதிவீற்றிருப்பா ரண்டமீதிருக்குஞ்
சோதிய ராவின்பின்போந்தாரையன்றித்தொழேனுடலைக்
காதியராவினும் பொன்மாமகுடங்கவிக்கினுமே.

(இ - ள்.) ஆதி அராவில் துயில் - ஆதிசேஷன்மேற் பள்ளிகொண்டு யோகநித்திரைசெய்கின்ற, அலங்காரர் அழகர் - அலங்காரரென்றும் அழகரென்றுந் திருநாமமுடையவரும், அன்பு ஆம் வேதியர் ஆவுதி வீற்றிருப்பார் - (தம்மிடத்து) அன்புகொண்ட அந்தணர்களுடைய (மந்திரபூர்வமாக வைதிகாக்கினியில் ஓமஞ்செய்யப்படுகிற நெய் முதலிய) ஆகுதிகளில் வீற்றிருப்பவரும், அண்டம் மீது இருக்கும் சோதியர் - அண்டகோளத்துக்குப் புறம்பேமேலுள்ளதான பரமபதத்தில் எழுந்தருளியிருக்கிற ஒளிவடிவமானவரும், ஆவின் பின் போந்தாரை அன்றி - பசுக்களை மேய்த்தற்கு அவற்றின்பின்னே சென்றவருமாகிய எம்பெருமானை யல்லாமல் (மற்றொருவரை),—உடலை காதி அராவினும் பொன் மா மகுடம் கவிக்கினும் தொழேன் - என்உடம்பைக் கூறுசெய்து அராவிவருத்தினாலும் பொன்மயமான பெரியகிரீடத்தை (எனக்கு)ச் சூட்டினாலும் வணங்கமாட்டேன்; (எ - று.)

தேவதாந்தரங்களை வணங்காவிடின் என் உடலைத் துணித்து அராவி மிகவருத்துவதாயினும், வணங்கின் எனக்குப் பொன்முடிசூட்டி மிக்க சிறப்புச்செய்வதாயினும், யான் அழகரையன்றிப் பிறரைத்தொழமாட்டேன் என்று, தமது அநந்யசரணத்வத்தை வெளியிட்டார்; "மறந்தும் புறந்தொழா மாந்தர்" ஆதலால். ஆதி அரா - பழமையான பாம்பு. யஜ்ஞாங்கன், யஜ்ஞவாஹநன், யஜ்ஞஸாதநன் என்ற திருநாமங்கள் பெறுமாறு எம்பெருமான் யாகத்தைத் தமக்குஇடமாக்கொண்டு அதற்குச்சாதநமாகிய பொருள்களின் வடிவாயு மிருந்து பயனையும் அளித்தலால், 'வேதியராவுதி வீற்றிருப்பார்' என்றார்; இதனை, "அதவமாய்நறுநெயுண் டிலகி லன்பர்கருதிற், றுதவு சேவடி" என்றாற்போலக் கொள்க.

வேதியர் - வேதம்வல்லவர்; வேதங்களை ஓதுதலோடு ஓதுவித்தற்கும் உரிமை அந்தணர்க்கே யுள்ளதனால், அவர்கள் வேதியரெனப் பெயர் பெறுவர். வீறு - வேறொன்றற்கில்லாத சிறப்பு; அவ்வகை மிக்க சிறப்பு அமைய இருத்தல், வீற்றிருத்தல். (௩௭)

௩௮. கவித்தானைமன்னற்குநட்பாய்முடிகவித்தானையன்று
புவித்தானைவற்றப்பொழிசரத்தானைப் பொருதிலங்கை
யவித்தானை மாலிருஞ்சோலைநின்றானை யழகனை முன்
றவித்தானைவாவெனவந்தானைப் பற்றினென் றஞ்சமென்றே.

(இ - ள்.) கவி தானை மன்னற்கு - வாநரசேனைகளையுடைய வாநரராசனான சுக்கிரீவனுக்கு, நட்பு ஆய் - நண்பனாகி, முடி கவித்தானை - (அவனுக்கு) மகுடாபிஷேகஞ்செய்வித்தவனும்,—அன்று - அந்நாளில் [ஸ்ரீராமாவதாரத்தில்], புவி தானை வற்ற - பூமிதேவிக்கு ஆடையாகிய கடல் தபிக்கும்படி, பொழி - பிரயோகிக்கத்தொடங்கிய, சரத்தானை-ஆக்நேயாஸ்த்ரத்தையுடையவனும்,—பொருது இலங்கை அவித்தானை - போர்செய்து இலங்காபுரியை அழித்திட்டவனும்,— மாலிருஞ்சோலை நின்றானை - திருமாலிருஞ்சோலைமலையில் நின்றதிருக்கோலமாய் எழுந்தருளியிருக்கின்றவனும்,— முன் - முன்னொருகாலத்தில், ஆனை - கஜேந்திராழ்வான், தவித்து - (முதலைவாய்ப்பட்டு) வருந்தி, வா என - '(எனது துயர்தீர்த்தற்பொருட்டு இங்கு) வந்தருள்' என்று அழைக்க, வந்தானை - (அதனெதிரில்) வந்தருளியவனுமான, அழகனை—,—தஞ்சம் என்று பற்றினென் - சரணமென்று அடைந்தேன்; (எ - று.)

கவி - கபி யென்ற வடசொல்லின் விகாரம். அனைத் துலகுக்கும் அரசனும் சக்கரவர்த்தித் திருமகனுமான இராமபிரானுக்குச் சுக்கிரீவன் தனது எழுபதுவெள்ளம்வாநரசேனைகளைக்கொண்டு உதவிசெய்ததனால், சுக்கிரீவனுக்கு 'மஹாராஜர்' என்று வைஷ்ணவபரிபாஷையில் ஒருபெயர் வழங்கும். 'கவித்தானைமன்னற்கு நட்பாய் முடிகவித்தானை' என்ற தொடரிலுள்ள சொல்நயம் காண்க; மடக்கு: "சேர்ந்துகவிக்கும் முடிகவித்தாய்" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும். பூமியைச் சூழ்ந்துள்ள கடலை 'பூமி

யாகியபெண் உடுக்கும் ஆடை' என்றல், கவிமரபு; "பொங்குபுணரிக்கடல் சூழாடை நிலமாமகள்" என்றார் திருமங்கையாழ்வாரும். தஞ்சம் - ரக்ஷகம்.

௩௯. தஞ்சந்தனமென்றுதேடிப்புல்லோர்தையலார்கடைக்கண்
வஞ்சந்தனங்கொள்ளவாளாவிழப்பர் மதியுடையோர்
செஞ்சந்தனப்பொழின்மாலிருஞ்சோலைத்திருநெடுமா
னெஞ்சந்தனக்குவப்பாகநல்காநிற்பர்நேர்படினே.

(இ - ள்.) புல்லோர் - அற்பர்கள்,—தனம் தஞ்சம் என்று தேடி - செல்வமே ரக்ஷகமென்று கருதி முயன்று அதனைச்சம்பாதித்து, தையலார் கடைக்கண் வஞ்சம் தனம் கொள்ள - மாதர்களுடைய கடைக்கண்களின் வஞ்சனையும் (அவரது) கொங்கைகளின் பொலிவும் கவர்ந்துகொள்ள, வாளா இழப்பர் - வீணாக (அப்பொருளை) இழந்துவிடுவார்கள்; மதி உடையோர் - நல்லறிவுடையவர்களோ,—நேர்படின் - (தமக்குப் பொருள்) கிடைத்தால், (அதனை), செம் சந்தனம் பொழில் மாலிருஞ்சோலை திரு நெடு மால் நெஞ்சந்தனக்கு உவப்பு ஆக நல்காநிற்பர் - சிவந்த சந்தனமரங்களின் சோலையையுடைய திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற மகாவிஷ்ணுவின் திருவுள்ளத்துக்கு உகப்புஉண்டாம்படி உபயோகிப்பார்கள்; (எ - று.)

சிற்றறிவுடைய புல்லோர், செல்வப்பொருளையே பொருளென்றுகொண்டு ஈட்டி அதனைச் சிற்றின்பவிஷயங்களிற் செலவுசெய்து வறியராய் நிற்பர்; பேரறிவுடைய நல்லோரோ, எவ்வாற்றாலேனும் தமக்குப் பொருள் கிடைத்தால் அதனை எம்பெருமான் திருவுள்ளத்துக்குப் பாங்காகுமாறு பகவத் பாகவத ஆசாரிய கைங்கரியவிஷயங்களில் விநியோகித்துக் கிருதார்த்தராவ ரென்பதாம்.

தனம் என்ற சொல்—முதலடியில் தநம் என்ற வடசொல்லின் விகாரமும், இரண்டாமடியில் ஸ்தநம் என்ற வடசொல்லின் விகாரமுமாம். 'தையலார் கடைக்கண் வஞ்சம்' என்றது, ஆடவரை வசீகரிக்குமாறு அவர்களை மகளிர் தங்கள்கடைக்கண்களால் ஒதுக்கிப் பார்க்கும் பார்வையை. கண்ணின்கடைஎன்பது கடைக்கண் என முன்பின்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை: இலக்கணப்போலி. வாளா - பயனின்மைகுறிக்கும் இடைச்சொல்; 'சும்மா' என்பதும் இது. நல்காநிற்பர் - நல்கிநிற்பரென்க. (௩௯)

௪0. நேராயவேதனைநெஞ்சிடந்தாய் நெடுஞ்சோலைமலைக்
காராய வேதனைமுன்படைத்தாய் நின்கழற்குத்தொண்டென்
றோராயவேதனைப்புன்பிறப்போயு மவாவறியிற்
பேராயவேதனையில்லுனைப்போற்றும்பிழைப்பர்களே.

(இ - ள்.) நேர் ஆய - (தனக்கு) எதிராய் நின்ற, ஏதனை - குற்றத்தையுடையவனான இரணியனை, நெஞ்சு இடந்தாய் - மார்பைப் பிளந்தவனே! நெடுஞ் சோலை மலை கார் ஆய - நெடிய திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிறவனும் கரியதிருநிறமுடைய இடைப்பிள்ளையாய் வளர்ந்தவனுமானவனே! வேதனை முன் படைத்தாய் - (படைத்தற்கடவுளான)

பிரமனை முன்பு சிருஷ்டித்தவனே!—நின் கழற்கு தொண்டு என்று ஆராயவே - உனது திருவடிகட்குத் தாம் அடிமையென்று (பரமாத்மஜீவாத்ம ஸ்வரூபங்களை ஒருவர்) ஆராய்ந்துணரவே, தனை புல் பிறப்பு ஓயும் - இழிவான ஜந்மவகைகள் எத்தனையுண்டோ அத்தனையும் (அவரைத் தொடரமாட்டாமல்) ஒய்ந்துவிடும்; அவா வழியின் - ஆசைவழியால், பேர் ஆயம் வேதனை - பெரிய தொகுதியான துன்பங்களைத் தருகின்ற, இல் - சம்சாரபந்தத்தில், உழைப்போரும் - அகப்பட்டுவருந்துபவர்களும், பிழைப்பர்கள் - (நின்கழற்குத் தொண்டென்று தம்மைஆராய்ந்தமாத்திரத்திலே அச்சம்சார துக்கங்களினின்று தப்பி) உய்வார்கள்; (எ - று.)

'நெஞ்சிடத்தல்' என்ற குறிப்பினால், 'ஏதன்' என்றது, இரணியனை உணர்த்திற்று; அவன், சர்வலோகநாயகனான ஸ்ரீமந்நாராயணனுக்கு எதிர்த்தட்டாய்த் தானே முழுமுதற்கடவுளென்று சொல்லி யாவரும் தன்னை வணங்கும்படி நிர்ப்பந்தித்துவந்தனனாதலால், 'நேராய ஏதன்' எனப்பட்டான். ஏதன் - அபராதி: ஏதம் - குற்றம். நெஞ்சு - தானியாகுபெயராய், அதற்கு இடமான மார்பையுங் குறிக்கும். இடத்தல் - கீளுதல். ஆ - பசுக்கள்; அவற்றையுடையவனாதலால், இடையனுக்கு ஆயனென்று பெயர். வேதன் - வேதஸ் என்ற வடசொல்லின் விகாரம்; அது, சிருஷ்டிகர்த்தாவென்று பொருள்படும். இனி, வேதம் வல்லவன் வேதனெனக் காரணக்குறியுமாம். முன் - ஆதிகாலத்தில். தனை - அளவு. கர்மவசத்தாலாகும் பலவகைப் பிறப்புக்களும் எம்பெருமான் திருவடிக்குத் தொண்டுபூண்டவரைச் சாரக்கடவனவல்லவென்க. ஓய்தல் - ஒழிதல். 'தனை' என்பதைத் தன்னையென்பதன் தொகுத்தலாகவும், உருபுமயக்கமாகவுங் கொண்டு, தனது புன்பிறப்பு ஓயுமென உரைத்தலுமொன்று. ஆயம் - திரள். இல் - வீடு; அதில் இருந்து நடத்தும் சம்சாரத்துக்கு இங்கு இடவாகுபெயராம். இனி, இல் என்பதை எழனுருபாக்கொண்டு, வேதனையிலுழைப்போர் என்பது வேதனையில்லுழைப்போர் என விரித்தல்விகாரம்பெற்றதென்றாக்கி உரைப்பினும் இழுக்காது. உம் - இழிவுசிறப்பு. (௪௦)

[தலைவி தோழியர்க்கு அறத்தோடு நிற்றல்.]

௪௧. பிழைத்தலையானெண்ணிப்பேசுகின்றே னிப்பிணிமற்றொன்றான்
மழைத்தலைவார்குழலீர் தணியாது வருணனைமு
னழைத்தலையங்கடைத்தா ரலங்கார ரலங்கனல்கீர்
முழைத்தலைநின்றுமலயாநிலம்வந்துமோதுமுன்னே.

(இ - ள்.) தலை - சிரசிலே, மழை - மேகம்போன்ற, வார் குழலீர் - நீண்ட கூந்தலை யுடையவர்களே!— யான் பிழைத்தலை எண்ணி பேசுகின்றேன் - நான் பிழைக்கும்வழியை ஆராய்ந்து சொல்லுகின்றேன்:—இ பிணி மற்று ஒன்றால் தணியாது - (எனக்கு நேர்ந்திருக்கின்ற) இந்தக்காதல்நோய் வேறொருபரிகாரத்தால் அடங்காது; மலய அநிலம் முழைத்தலைநின்று வந்து மோதுமுன்னே - மலயமாருதமாகிய தென்றற்காற்று அம்மலைய பருவதத்தினது குகையிடத்தினின்று வந்து தாக்குதற்கு முன்னமே,—வருணனை

முன் அழைத்து அலை அங்கு அடைத்தார் அலங்காரர் அலங்கல் நல்கீர் - (சமுத்திரராசனென) வருணனை எதிரில் வரவழைத்துக் கடலை அப்பொழுது அணைகட்டியடைத்தவரான அழகருடைய மாலையைக் கொணர்ந்து கொடுங்கள்; (எ - று.)

தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடிப் பிரிந்த தலைமகள், அப்பிரிவுத் துயரை யாற்றி யடக்கும் வல்லமை யிலளாகி, தனது நிலைமையை அன்புடைத்தோழியர்க்கு வெளிப்படையாக வுரைத்தது இது. தன்விருப்பத்தை நிறைவேற்றுதற்பொருட்டுத் தோழியரைக் கொண்டாடியழைப்பவளாய் 'மழைத்தலைவார்குழலீர்' என்று புனைந்துரைத்து விளித்தாள். புண்ணிற் புளிப்பெய்தாற்போல இந்நிலையில் தென்றற்காற்றுவந்து என்மேல் வீசுமாயின் யான் இறந்துபடுவேன்: அது வீசுதற்கு முன்னமே என்தலைவனணிந்த மாலையை எனக்குக் கொணர்ந்து கொடுத்தால்மாத்திரமே யான் அது கொண்டு சிறிதுஆறியிருப்பேன் என்றாள். அவனது பிரசாதமான திருத்துழாய் இந்நோய்த்தணித்தற்கு ஏற்ற பசுமருந்தாகிய சஞ்சீவிமூலிகை யென்றவாறு. முன்புஒருதலைவியினிடத்துஆராதஅன்பினால் அவள்பிரிவையாற்றாது அவளைக்கூடுதற்பொருட்டுத் தன்னினுந்தாழ்ந்தவனை ஒருவனைத் தலையால் வணங்கிக் கடலையடைத்தலாகிய செயற்கருஞ்செயலைச் செய்து அவளைச் சேர்ந்தவராகிய தலைவர் இங்ஙனம் என்னைப் பிரிந்து உபேக்ஷித்து நிற்கின்றனரென்று இரங்குவாள், 'வருணனைமுன்அழைத்துஅலைஅங்குஅடைத்தார்' என்றாள். 'அலங்காரர்' என்றது, அவரது திவ்வியசௌந்தரியத்திலே தான் கொண்ட ஈடுபாட்டினால். 'முழைத்தலைநின்று வந்து மோதுமுன்' என்றதனால், தென்றற்காற்றை ஒருபுலியாகக் குறித்தவாறும். 'முழைத்தலை நின்று மலயாநிலம் வந்து மோதுமுன்னே'-- "மலயக், குன்றிற் குலமாமுழையிற் குடிவாழ், தென்றற்புலியே யிரைதேடுதியோ" என்பது, கம்பராமாயணம்.

பிழைத்தற்குக்காரணமான உபாயத்தை 'பிழைத்தல்' என்றது, ஆகுபெயர். மகளிர்கூந்தலுக்கு மேகம் உவமை, கருமை குளிர்ச்சிகளில். அலை - கடலுக்கு ஆகுபெயர். 'அங்கு' என்று சுட்டினது, கதையை உட்கொண்டு; இராமாவதாரத்தில் என்றபடி. அலங்கல் - தொங்கியசைதல்: மாலைக்குத் தொழிலாகுபெயர்; இதில், அல் - கருத்தாப்பொருள்விகுதி யெனினும் அமையும். மலயாநிலம் - தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். 'மழைத் தலை வார் குழல்' என்பதற்கு - மேகத்தின் தன்மையைத் தன்னிடத்தே கொண்ட நீண்ட கூந்தல் என்று பதவுரை கொள்ளலுமாம்.

எம்பெருமானை இடையீடின்றிச்சேரப்பெறாதுவருந்துகின்ற ஐயங்கார் தமதுநிலைமையை அன்பர்க்கு உரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். யான் பிழைத்தலை எண்ணிப் பேசுகின்றேன் - நான் உய்யும் ஆற்றைச் சிந்தித்து ஆய்ந்துஉணர்ந்து கூறுகின்றேன். மழைத்தலைவார்குழலீர் - எம்பெருமானைத் தலையால்வணங்கி உத்தமஅங்கமாகிய தலை படைத்தபயன் பெற்று அதுகொண்டு சிறப்பித்துக்கூறத்தக்கவர்களே யென்றபடி. ஒருசமயத்தில் இன்பஞ்செய்வதும் மற்றொருசமயத்தில் துன்பஞ்செய்வதுமான லௌகிக

பதார்த்தங்கள் மறைவின்றி வெளிப்பட்டு என்னை வருத்துதற்குமுன்னமே பகவத்பிரசாதமாகிய திருத்துழாயை எனக்குக் கொணர்ந்து கொடுத்தால் யான் ஆற்றாமைதீர்ந்து ஆனந்தமடைவேன் என்பது,பிந்தினவாக்கியத்தின் உட்கோள். 'வருணனை முன் அழைத்து அலையங்கடைத்தார்' என்றதனால், ஜீவகோடிகளில்உத்தமையான பிராட்டியைப்போலவே எம்மையும் தம்பக்கல் சேர்த்துக்கொள்ளக்கடவர் அவ ரென்று குறிப்பித்தவாறு.

இனி, இச்செய்யுளுக்கு—தோழியானவள் செவிலித்தாயர்க்குத் தலைவியின்நிலைமையைக் கூறி அறத்தொடுநின்றதாகவுந் துறைகூறலாம்; அப்பொழுது, முதல்வாக்கியத்துக்கு— இவள்பிழைக்கும்வழியை ஆராய்ந்து யான் சொல்லுகின்றேன் என்று பொருள் காண்க. அங்ஙனங்கொள்ளுமிடத்து—எம்பெருமானது சேர்க்கையைப் பெறாமல் வருந்துகிற ஐயங்காரது துயரத்தைத் தீர்க்கும்வகையை அவரது அன்பர்கள் அவர்பக்கல் பரிவுடையரான ஞானிகளைக்குறித்துக் கூறுதல், உள்ளுறைபொருளாம். 'பிழைத்தலை யான் எண்ணிப்பேசுகின்றேன்'என்றதனால், இவரது ஆற்றாமையைத் தீர்த்தற்கு ஆப்தரது உபதேசம் மூலமா மென்பது தோன்றும். அலங்கல்நல்கீர்—"மாலையர்தண்ணந்துழாய்கொண்டுசூட்டுமினே" என்றார் ஆழ்வாரும்.(௩௧)

௩௨. மோதாகவந்தனைமூட்டிலங்கேசன்முடிந்துவிண்ணின்
மீதாகவந்தனைவில்லெடுத்தே விடைவெற்பினின்ற
நாதா கவந்தனைச்செற்றா யுனையன்றிநான்மறந்துந்
தீதாகவந்தனைசெய்யேன்புறஞ்சிலதேவரையே.

(இ - ள்.) விடைவெற்பில் நின்ற நாதா - விருஷபகிரியாகிய திருமாலிருஞ்சோலைமலையில் நின்றதிருக்கோலமா யெழுந்தருளியிருக்கிற தலைவனே! கவந்தனை செற்றாய் - கவந்தனென்ற இராக்கதனைக் கொன்றிட்டவனே!—மோது - (ஒருவரோடொருவர்) தாக்கிச்செய்வதான, ஆகவந்தனை - போரை, மூட்டு - வலியஉண்டாக்கிநடத்திய, இலங்கா ஈசன் - இலங்காபுரிக்குத் தலைவனான இராவணன், முடிந்து-இறந்து, விண்ணின்மீது ஆக - மேலுலகத்திற் சேரும்படி, வில் எடுத்து வந்தனை - கோதண்டத்தைக் கையிலெடுத்துவந்தாய்; உனை அன்றி - (இங்ஙனம்பெரும்பிழைசெய்துபகையாய்எதிர்த்தவனும் நற்கதிசேருமாறு கருணைபுரிந்த) உன்னையே (வணங்குவேனே) யன்றி, புறம் சில தேவரை - வேறுசில தேவர்களை, நான்—, மறந்தும் தீது ஆக வந்தனை செய்யேன்-மறந்தாயினும் தீமைநிகழுமாறு வணங்க மாட்டேன் ; (எ - று.)

"மறந்தும் புறந்தொழா மாந்தர்" ஆதலால், தேவதாந்தரங்களிடத்தில் தமக்குஉள்ள உபேக்ஷையையும்,பரதேவதையினிடத்தில் தமக்குஉள்ள அபேக்ஷையையும் இங்ஙனம் கூறி வெளியிட்டார். கணவனையே தெய்வமாகக் கொண்டொழுகுங் கற்புடைமகளிர்க்குப்பிறிதோராடவரதுதொடர்பில்லாமலிருத்தல் இன்றியமையாதவாறுபோல, எம்பெருமானைச்சரணமடைந்து உய்யும் பிரபந்நர்க்குத் தேவதாந்தரபஜநம் பண்ணாமை அவசிய மென்பர் ஆன்றோர். 'மறந்தும்' என்பது, வந்தனைசெய்தலோடு இயையும். "வீழ்வார்

க்குவீழ்வார்துணை" என்றாற்போல, பிணிபசிமூப்புப்பிறப்பிறப்புத்துன்பங் களினின்று தாம் உய்யமாட்டாத பிறசிலதேவர்களை வந்தனைசெய்தால், அத னால் ஆகக்கடவது வினைத்தொடர்பேயன்றி வீடுபேறன்றாதலால், 'தீது ஆக' எனப்பட்டது; ஜீவாத்மாவினது ஸ்வரூபம் நிலைகுலைய என்றவாறு மாம். புறம் - விலக்காகிய என்றபடி. தம்மைச்சரணமடைந்தவர்களைச் சம யத்திலே கைவிடுபவர்களான வென்பது தொனி.

பகைமைக்காரணம் யாதொன்றுமில்லாதிருக்கவும், ஸ்ரீராமபத்நியான சீதையைக் காதலால் வலியக் கவர்ந்துசென்று சிறைவைத்துவருத்திப் பின் னர் ஒருமுறைக்குஇருமுறை அப்பெருமான் தூதனுப்பவும் சமாதானத் தில் அப்பிராட்டியைக்கொணர்ந்துவிட்டிடாமற் பெரும்போர்விளைதற்குக் காரணமாய் நின்றனனாதலால், இராவணனுக்கு'மோது ஆகவந்தனை மூட்டு' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. நாற்புறமுங்கடல்சூழ்ந்த தீவிலே வசித்தலால் எவரும் வந்து நம்மைநலிவுசெய்ய இயலாதென்னுஞ் செருக்குடையானென்பது தோன்ற, 'இலங்கேசன்' என்றார். அப்படிப் பட்டவனும் இறந்து பரலோகமடையும்படி வில்லெடுத்துவந்தா யென்ற தில், ஸ்ரீராமபிரானது திவ்யசக்தி தோன்றும். இனி, மூட்டி லங்கேசன் என்று பிரித்தும் பொருள்கொள்ளலாம். (௬௨)

௬௩. தேவரையாதன் மனிதரையாதல்செழுங்கவிதை
நாவரையாமனவிலுகிற்பீர் நம்மையாளுஞ்செம்பொன்
மேவரையானை யிருஞ்சோலைவேங்கடமெய்யமென்னு
மாவரையானை யொருவனையே சொல்லிவாழுமினே.

(இ - ள்.) தேவரை ஆதல் - (பிற)தேவர்களைக்குறித்தாவது, மனிதரை ஆதல் - மநுஷ்யர்களைக்குறித்தாவது, நா வரையாமல் - நாவினால் (இன் னாரை இன்னவாறு துதிக்கலாம் இன்னாரை இன்னவாறு துதிக்கலாகாது என்னும்)வரையறை கொள்ளாமல், செழுங் கவிதை நவிலுகிற்பீர் - செழு மையான பாடல்களைப் பாடித் துதிப்பவர்களே!—நம்மை ஆளும் - நம்மை யனைவரையும் (இயல்பிலே)அடிமையாகக்கொண்டுள்ள, செம் பொன் மேவு அரையானை - மாற்றுயர்ந்த பொன்மயமான ஆடையாகிய பீதாம்பரம் பொருந்திய திருவரையையுடையவனும், இருஞ் சோலை வேங்கடம் மெய் யம் என்னும் மா வரையானை - திருமாலிருஞ்சோலை திருவேங்கடம் திரு மெய்யம் என்னும் பெரியமலைகளை(த் தானெழுந்தருளியிருக்குமிடமாக)க் கொண்டவனு மாகிய, ஒருவனையே - ஸ்ரீமந்நாராயணனொருவனையே, சொ ல்லி - கவிபாடித்துதித்து, வாழுமின் - பேரின்பவாழ்க்கைபெற்றுஉய்யுங்கள்.

பகவத்குணாநுபவத்தி லாசையுடைய ஐயங்கார், தேவதாந்தரங்களைக் குறித்தும் மனிதர்களைக்குறித்தும் பற்பலவாறு கண்டபடி புகழ்ந்து கவி பாடித் தம்தம்புலமையையும் வாக்கையும் வீண்படுத்தித்திரிகிற சிலபுலவர் களைப் பார்த்து 'இதனால் என்ன பய னுண்டாகும்? வேண்டியபயன்களை வேண்டியவாறே பெறும்படி எம்பெருமானைக் கவிபாடித் துதியுங்கள்' என்று இதோபதேசஞ்செய்கின்றார். 'கவிபாடலாகாது' என்ற

நிஷேதசாஸ்திரத்துக்கு இலக்கு - அஸத்விஷயத்திலாதலும், 'கவிபாடுதல் புகழ்முதலிய பலவற்றைப் பயக்கும்' என்ற விதிசாஸ்திரத்துக்கு இலக்கு - ஸத்விஷயத்திலாதலு மாகிய வேறுபாடு காணத்தக்கது.

முதலடியில் இரண்டிடத்து வந்த 'ஆதல்' என்ற சொல், விகற்பப்பொருளது. மனிதர்-மநுஜரென்ற வடசொல்லின் விகாரம்; (காசியபமுனிவனது மனைவியருள்) மநுவென்பவளிடத்துத்தோன்றியவரென்பது, அதன்பொருள். கவிதா-வடசொல்: கவிபாடுந் திறமென்பது, இதன்பொருள்: இலக்கணையாய், பாடலின்மேல் நின்றது. செழுங் கவிதை - சொற்பொருட்கருத்துக்களிலும், தொடை நடை அணி துறை வகைகளிலும் சிறந்த பாடல்களென்க. 'நம்மை' என்றது, முன்னிலையாரையும் படர்க்கையாரையும் உளப்படுத்திய தன்மைப்பன்மை. பொன் - பொன்னுடைக்குக் கருவியாகுபெயர். அரை - நடுவுறுப்புக்கு எண்ணலளவாகுபெயர். வரை என்ற கணுவின்பெயர்-அதனையுடைய மூங்கிலுக்குச் சினையாகுபெயரும், அது பின்பு அம்மூங்கில் விளையும் மலைக்குத் தானியாகுபெயரு மாதலால், இருமடியாகுபெயராம். ஒருவனையே, ஏ - பிரிநிலை. திருமெய்யம் - பாண்டிநாட்டுத்திருப்பதி பதினெட்டில் ஒன்று; ஸத்யகிரி யென்னும் மறுபெயருடையது. (௪௩)

௪௪. வாழுமின்பங்கயச்சுந்தரவல்லிமணாளன்வெற்பைச்
சூழுமின்பந்தித்ததொல்வினைதீர்ந்துய்யத் தொங்கல்சுற்றுந்
தாழுமின்பஞ்சணைமேன்மடவார்தடமாமுலைக்கே
வீழுமின்பங்கருதித்துன்பயோனியில்வீழ்பவரே.

(இ - ள்.) சுற்றும் தொங்கல் தாழும் - சுற்றிலும் பூமாலைகள் தொங்கவிடப்பெற்ற, இன் பஞ்சு அணைமேல் - இனிமையான பஞ்சுமெத்தையின் மீது, மடவார் தட மா முலைக்கே வீழும் - இளமகளிரது பெரிய அழகிய தனங்களிலே விரும்பிச்சேர்ந்துபெறுகிற, இன்பம் - சிற்றின்பத்தை, கருதி- பொருள்செய்து, துன்பம் யோனியில் வீழ்பவரே - துன்பத்தைத்தருகின்ற பிறப்புக்களாகிய படுகுழியில் விழுந்து அழிபவர்களே!—பந்தித்த தொல் வினை தீர்ந்து உய்ய - (உங்களுயிரைக்)கட்டுப்படுத்துகின்றபழமையான கருமங்கள் நீங்கி (நீங்கள்) ஈடேறும்படி,—வாழும் மின் பங்கயம் சுந்தரவல்லி மணாளன் வெற்பை சூழுமின் - (சிறிதுபொழுதேனும் நிலைநில்லாது தோன்றியவுடன்அழியும் மின்னலன்றி)என்றும்அழியாது நிலைபெற்றிருப்பதொரு மின்னல்(உளதாயின் அது)போன்றவளும் செந்தாமரைமலரில்வாழ்பவளும் சுந்தரவல்லியென்னுந் திருநாமமுடையவளு மான பெரியபிராட்டியின் கணவனாகிய அழகப்பிரானது திருமாலிருஞ்சோலைமலையைப் பிரதக்ஷிணஞ் செய்யுங்கள்; (எ - று.)

மாதரார்கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்திச் சிற்றின்பப்படுகுழியில்வீழ்ந்து மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்து இறந்துதிரிகின்ற பேதையரைக் குறித்து, 'நீங்கள் கருமமனைத்தும்ஒழிந்து பரகதிபெறுமாறு அழகரது திருமாலிருஞ்சோலைமலையை வலஞ்செய்யுங்கள்' என்று நல்லறிவுகூறுகின்றார்; "வலஞ்செய்துவைகல்வலங்கழியாதே, வலஞ்செய்யுமாயமாயவன்கோயில்,

வலஞ்செய்யும்வானோர்மாலிருஞ்சோலை, வலஞ்செய்துநாளும்மருவுதல்வழக்கே" என்றார் ஆழ்வாரும்.

'வாழும் மின்'என்றது, இல்பொருளுவமை. ஸுந்தரவல்லி என்ற வடமொழித்தொடர், அழகியபூங்கொடிபோன்றவ ளென்று பொருள்பட்டு உவமையாகுபெயராம். சுந்தரவல்லிநாச்சியாரென்பது, திருமாலிருஞ்சோலை நாச்சியாரின் திருநாமம். மணாளன் - மணவாளனென்பதன் மரூஉ. மடவார் - மடமையுடையவர். வீழ்தல் - விரும்புதலாதலை, "தாம்வீழ்வார்மென்றோட்டுயில்" எனத் திருக்குறளிலுங் காண்க. (சச)

சரு. வீழமராமரமெய்தார்மதிதவழ்வெற்பை நெஞ்சே
தாழமராடச்சமன்குறுகானிச்சரீரமென்னும்
பாழமராமற்பரகதியேற்றுவர் பார்க்கில்விண்ணோர்
வாழமராவதியுந்நரகாமந்தமாநகர்க்கே.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—மராமரம் வீழ எய்தார் - மராமரங்கள் விழும்படி அம்பெய்தவரான எம்பெருமானுடைய, மதி தவழ் வெற்பை - (உயர்ச்சியினால்) சந்திரன் தவழப்பெற்ற திருமாலிருஞ்சோலைமலையை, தாழ் - வணங்குவாய்; (அதனால் யாது பயனெனின்),—அமர் ஆட சமன் குறுகான் - (வினையனைத்தும்ஒழிதலால் அந்திமகாலத்திலே) போர்செய்து வென்று உயிரைக்கவர்ந்துசெல்லுதற்காக யமன் அருகில்வருதலுஞ்செய்யான்; (அன்றியும்), இ சரீரம் என்னும் பாழ் அமராமல் - இந்தஉடம்பாகிய பாழிலே பொருந்தாதபடி [மீண்டும்பிறப்பு இல்லையாம்படி], பர கதி ஏற்றுவர் - (அவ்வுயிரை எம்பெருமான்)பரமபதத்திற் சேர்த்தருள்வர்; பார்க்கில்- ஆலோசித்துப்பார்க்குமிடத்து,—விண்ணோர் வாழ் அமராவதியும் - தேவர்கள்வாழ்கின்ற அமராவதிநகரமும், அந்த மா நகர்க்கு நரகு ஆம் - அந்தஸ்ரீவைகுண்டதிவ்வியநகரத்துக்குமுன்னே நரகமெனத்தக்கதாம்; (எ - று.)

மனமே! அழகரது திருமாலிருஞ்சோலைமலையை வணங்கு; அங்ஙனம் வணங்கினால், நம்மை யமன் அணுகான்; எல்லாவுலகங்கட்கும் மேலதான பரமபதஞ் சேரலாம்; அப்பரமபதமோ,புண்ணியப்பயனாலடையுஞ் சுவர்க்கலோகத்தினும் மிகப்பலமடங்கு மேலானது என்பதாம். தீவினைப்பயனால் நேர்வதும் மிகப்பலதுன்பங்களையேநுகருமிடமுமான நரகத்துக்கும், நல்வினைப்பயனால்நேர்வதும் மிகப்பலஇன்பங்களையேநுகருமிடமுமானசுவர்க்கத்துக்கும் எத்துணைவேறுபாடு உண்டோ,அத்துணைவேறுபாடு உண்டு,சிற்றின்பங்களையேநுகருமிடமாய் மீளுமுலகாகிய அச்சுவர்க்கத்துக்கும் எம்பெருமானருளால்நேர்வதும் பேரின்பத்தையேநுகருமிடமும் மீளாவுலகமுமான பரமபதத்துக்கும் என்பார், 'பார்க்கில் விண்ணோர் வாழமராவதியும் நரகாம் அந்தமாநகர்க்கு' என்றார். இனி, 'அந்தமாநகர்க்கு' என்பதற்கு - அத்திருமாலிருஞ்சோலைத் திவ்வியதேசத்துக்கு என்று உரைத்தலும் ஒன்று. அப்பொழுது, தேவாதிதேவன்வாழுமிடமான அத்திருப்பதி தேவநகரத்தினும் மிகமேம்பட்ட தென்பது போதரும்.

மதிதவழ்வெற்பு—அதிசயோக்திவகையால் அம்மலையின் மிக்க உயர்வைக் கூறியது; தொடர்புயர்வுநவிற்சியணி: "மதிதவழ்குடுமிமாலிருஞ்சோலைப், பதியதுவேத்தியெழுவதுபயனே" என்றார் நம்மாழ்வாரும். 'பரிபூர்ண சந்த்ரமண்டலத்தாலே அலங்க்ருதமான சிகரங்களையுடைத்தான திருமாலிருஞ்சோலை' என்றும், 'சந்த்ரனானவன் தவழும்படி ஓங்கின சிகரசிகைகளையுடைத்தான திருமலை' என்றும், 'சூற்பெண்டுகள் சுரமேறுமாபோலே சந்த்ரன் தவழ்ந்தேறுகின்றுள்ள சிகரத்தையுடைய திருமலை' என்றும் அங்கு உரைத்தனர் ஆன்றோர்.

"மாலடிமைகொண்டவனந்தரத் தும்பேர் நினைக்கவுங் கூற்றஞ்சுமே", "அசந்தரங்கமுற்றாரடியார்க்கு நமனஞ்சுமே" ஆதலால், 'அமராட்சமன் குறுகான்' என்றார். "நான் மற்றவர்களுக்குப் பிரபுவல்லது, வைஷ்ணவர்களுக்குப் பிரபுவல்லேன்; எம்பெருமான் எவனுடைய இருதயகமலத்தில் வாசஞ்செய்துகொண்டிருப்பனோ, அந்தமகாபுருஷனுடைய கடாக்ஷம் பிரஸரிக்குமிடங்களிலெல்லாம் நீ செல்லத்தக்கவனல்லை, நானும் செல்லத்தக்கவனல்லேன்; பதறிச்சென்றால், அப்பெருமானுடைய திருவாழியின் தேஜோவிசேஷத்தினாலே பஸ்மாக்கப்படுவோம்; அந்தமகாபுருஷன் ஸ்ரீவைகுண்டதிவ்யலோகத்துக்குளெழுந்தருளத்தக்கவன்" என்ற வாக்கியங்களை, ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் யமகிங்கரஸம்வாதரூபமான வைஷ்ணவப்பிரபாவத்திற் காணலாம்.

அமர்-ஸமர மென்ற வடசொல்லின் விகாரம்; சமர், சமம் என்பனவும் இது. ஸமன் என்ற வடசொல் சமன் என விகாரப்பட்டதென்று கொண்டால், (எல்லாவுயிர்களிடத்தும்) பக்ஷபாதமின்றி நடுவுநிலைமைதவறாது ஒப்ப நடப்பவன் என்று பொருள்படும்; ஸமவர்த்தி, நடுவன் என்பனவும் அவன்பெயர்களாம். இனி, ஶமநன் என்ற வடசொல் சமனென விகாரப்பட்டதென்று கொண்டால், (பாவிகளைத்) தண்டிப்பவனென்பது அதன் பொருளாம். ஶரீரம் என்ற வடசொல், சிதிலமாவது என்று காரணப்பொருள்படுவது; ஆகவே, 'சரீரமென்னும் பாழ்' என்றது, பொருந்தும். பரகதி - எல்லாக்கதிகளினும் மேலான கதி; வடமொழித்தொடர். அமராவதி என்ற வடசொல்லுக்கு - தேவர்களையுடையதுஎன்பது பொருள்; இது, சுவர்க்கலோகத்து இராசதானி. 'அமராவதியுந்நரகாம்' என்றவிடத்து, நகரவொற்று - விரித்தல்விகாரம். நரகம், நகரம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. (சரு)

சகூ. நகரமுறுநடும்புரந்தவர்நண்ணலரால்வனமுஞ்
சிகரமுறுநடுஞ்சிறுமைகண்டோ மஞ்ஞைதேனிசைகள்
பகரமுறுநடும்பனிச்சோலைவெற்பினிற்பார்க்குக் கஞ்சன்
றகரமுறுநடுகைத்தார்க் கறிந்தீர்கள்சரண்புகுமே.

(இ - ள்.) நகரமும் நாடும் புரந்தவர் - பட்டணங்களையும் தேசங்களையும் ஆண்ட அரசர்கள், நண்ணலரால் வனமும் சிகரமும் நாடும் - பகைவர்களால் (அடித்துத்துரத்தப்பட்டுக்) காட்டையும் மலையுச்சியையும் தேடிச்செல்லும்

படியான, சிறுமை-எளிமையை, கண்டோம்-(உலகத்திற்) பார்த்துள்ளோம்; (இங்ஙனம் செல்வம்நிலையில்லாமையால் அதிலாசையைவிட்டு),—அறிந்தீர்கள்-(அறியவேண்டுபவற்றை) அறிந்தவர்களே!—தேன் இசைகள்பகர-வண்டுகள் கீதங்கள்பாட, மஞ்ஞை முன் ஆடும் - மயில்கள் எதிரிலே கூத்தாடப்பெற்ற, பனி சோலை வெற்பில் - குளிர்ந்த திருமாலிருஞ்சோலைமலையிலே, நிற்பார்க்கு - நின்றதிருக்கோலமாய்எழுந்தருளியிருப்பவரும், கஞ்சன் தகர முன் நாள் துகைத்தார்க்கு - கம்சன் அழியும்படி முற்காலத்திலே [கிருஷ்ணாவதாரத்தில்] மிதித்தவரு மான எம்பெருமானுக்கு, சரண் புகும்-அடைக்கலம்புகுங்கள்; (எ - று.)

பகவத் பக்திலாழ்ந்த ஐயங்கார், பொருளாசைகொண்டு திரிகின்ற உலகத்தாரைக்குறித்து, அப்பொருளின் நிலையாமையை எடுத்துக்காட்டி, 'நீங்கள் எம்பெருமான்திருவடிகளைச் சரணமடைந்து உய்யுங்கள்' என்று உபதேசிக்கின்றார். "உய்ம்மின்திறைகொணர்ந்தென்றுலகாண்டவ ரிம்மையே, தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ளத் தாம் விட்டு, வெம்மினொளி வெயிற்கானகம்போய்க் குமைதின்பர்கள், செம்மின்முடித்திருமாலைவிரைந் தடிசேர்மினோ" என்றார் ஆழ்வாரும். நண்ணலரால் - பகைவர்செய்யும் உபத்திரவத்தா லென்றபடி.

புரந்தவர் என்பதில், உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்க தென்னலாம். 'கண்டீர்' என்ற முன்னிலைப்பன்மைமுற்றுப் போலவே, 'கண்டோம்' என்ற தன்மைப்பன்மைமுற்றும், தேற்றப்பொருள்காட்டும். "வண்டினமுரலுஞ்சோலை மயிலினமாலுஞ்சோலை" என்றபடி வண்டுகள் தேனை மிகுதியாக உண்டு களித்து இன்னிசைபாட, அதற்கு ஏற்றபடி, மயில்கள் சோலையினிருட்சியாற் கார்காலமென்றெண்ணிக் களித்துக் கூத்தாடுமென, அம்மலைச்சோலைகளின் வளங் கூறியவாறும். மஞ்ஞை - பெயர்த்திரிசொல். மூன்றுமடியில், முன் - இடமுன்; நான்காமடியில், முன் - காலமுன். அறிந்தீர்கள் - அண்மைவிளியாதலின், இயல்பு. அறிவுடையராகிய நீங்கள் என முன்னிலைப்பன்மை வினையாலணையும்பெயராகவுங் கொள்ளலாம். துகைத்தார்க்குச் சரண்புகுதல் - துகைத்தவரை ரக்ஷகமாகப் பற்றுதல். துகைத்தார்க்கு - உருபுமயக்கம்.

முதலிரண்டடிகளில் நகரம் ணகரமாகக்கொள்ளப்பட்டது, திரிபுநயத்திற்காக. இரண்டாமடியில், சிகரம் முன் என்று எடுத்து, மலைச்சிகரம் முதலியவற்றையும் என்றலும் ஒன்று. (சகூ)

சஎ. சரணியனாகத்தனைநினைந்தாரைத்தன்போலவைக்கு
மரணிய னாகத்தனையா னரங்க னழக னெங்கோ
னிரணியனாகமிடந்தான்கதையன்றி யீனர்தங்கண்
முரணியனாகத்தும்புன்குரலோரிமுதுக்குரலே.

(இ - ள்.) தனை - தன்னை, சரணியன் ஆக - சரணமடையத்தக்கவனாக, நினைந்தாரை-எண்ணிச்சரணமடைந்தவர்களை, தன்போல வைக்கும்-

தன்னைப்போலவே வைத்தருள்கின்ற, அரணியன் - பாதுகாப்பாகவுள்ளவனும்,—நாகத்து அணையான் - ஆதிசேஷனைச் சயனமாக வுடையவனும்,—அரங்கன் - ஸ்ரீரங்கத்திலெழுந்தருளியிருப்பவனும்,—எம் கோன் - எமது தலைவனும்,—இரணியன் ஆகம் இடந்தான் - இரணியாசுரனுடைய மார்பைப் பிளந்தவனுமான, அழகன் - அழகப்பிரானுடைய,கதை அன்றி - திவ்வியசரித்திரம்(பரகதிபிற்செலுத்தும்பெருமையுடையதாய் அனைவரும்விரும்பிக்கேட்கத்தக்கதாகுமே) அல்லாமல்,—ஈனர் தங்கள் முரண் இயல் நாகத்தும் புல் குரல் - இழிவான பிறசமயத்தார் தங்களுடைய மாறுபாடுபொருந்திய நாவினின்று பிதற்றுகின்ற இழிவான சொற்கள், ஓரி முது குரலே - கிழநரி ஊளையிடுகிற பெருங்குரல்போலச் செவிக்குஇன்னாததாய் வெறுக்கத்தக்கதாம் ; (எ - று.)

"கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ," "நாகத்துப்பாய்ந்தான்கதையன்றி வெவ்வினைகள், துன்னப் பல்நாகத்துப்பொய்ந்நூல் புகா என்துளைச்செவிக்கே" என்பன காண்க.

சரணியனாக - ரக்ஷகனாக என்றபடி. சரணியனாகத் தனையினைந்தாரைத் தன்போலவைக்கும் அரணியன் - தன்னை நன்குமதித்துத் தியானித்தவர்களை ஸாரூப்யநிலையால் தன்னைப்போலவே சங்கசக்கராதிகளைத்தாங்கி ஸாலோக்யத்தாற் பரமபதத்திலே இருந்து பேரானந்தமனுபவித்துக்கொண்டு வினைத்தொடர்பும் அதனாலாகும்பிறப்பிறப்புப்பிணிபசிமூப்புத் துன்பங்களுமின்றி வாழும்படி செய்து பாதுகாத்தருள்பவன்; "சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம், மரணமானால் வைகுந்தங்கொடுக்கும் பிரான்," "மணியாழிவண்ணனுகந்தாரைத் தன்வடிவாக்கு மென்றே, துணியாழிய மறைசொல்லும்" என்பன காண்க. எம்பெருமான் தனது அன்பர்க்கு முத்தியில் தந்தருள்கின்ற நிலைமைகள் - ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என நான்காம்; ஸாலோக்யம் - அப்பெருமானுடைய ஸ்ரீவைகுண்டலோகத்தில் வாழ்தல்; ஸாமீப்யம்-அவனருகில் வாழ்தல்; ஸாரூப்யம்-அவனுக்குச்சமமான ரூபத்தைப் பெறுதல் ; ஸாயுஜ்யம்-அப்பரமாத்மாவோடு ஒன்றிவாழ்தல். அரணியன் - அரண்போல அடுத்தவர்களைக் காக்குந் தன்மையுள்ளவன் ; இப்பெயரில், அரண் - பகுதி ; கோட்டை மதிள் காவல் என்பன, அதன்பொருள்; இ - சாரியை, அன் - விகுதி.

ஸ்ரீமந்நாராயணனது பரத்வத்தையே கூறுகிற வேதசாஸ்திரங்களின் சித்தாந்தத்துக்கு மாறாகத் தேவதாந்தரங்கட்குத் தலைமைகூறுதலால், 'முரணியல்நா' எனப்பட்டது. கத்துதல் - கதறுதல் ; இவ்வினைச்சொல்லாற் கூறினதும், இழிவைக் காட்டும். அச்சொற்கள் கடலோசைபோலப் பொருளில்லாதன வென்பது பட, 'புன்குரல்' என்றார். முதுக் குரல் - பண்புத்தொகை. இனி, இரண்டாம்அடியில், அரண் இயல் நாகம் என்று பிரித்து, ("சென்றாற் குடையாம்" என்றபடி பலவாறு பணிவிடைசெய்தலால் எம்பெருமானது, திருமேனிக்குப்) பாதுகாவலாகும் இயல்புடைய ஆதிசேஷன் என்று உரைத்து, நான்காம்அடியில், முரணிய நா என்றுஎடுத்து, மாறுபாடு கொண்ட நாக்கு என்றலு மொன்று. (சஎ)

சஅ. முதுவிருந்தாவனத்தானிரைமேய்த்தவர் முன்விதுரன்
புதுவிருந்தானவர் மாலலங்காரர் பொலங்கழலா
மதுவிருந்தாமரைக்காளாயிரார்க்குமதிநுட்பநூ
லெதுவிருந்தாலுமதனால்விடாவிங்கிருவினையே.

(இ - ள்.) முது விருந்தாவனத்து - பழமையான பிருந்தாவனத்திலே, ஆன் நிரை மேய்த்தவர் - பசுக்கூட்டங்களை மேய்த்தவரும், முன் - முன்பு, விதுரன் புது விருந்து ஆனவர் - விதுரனுக்கு அதிசயிக்கத்தக்க விருந்தின ரானவரு மாகிய, மால் அலங்காரர் - பெருமையுடைய அழகரது, பொலம் கழல் ஆம் - அழகிய திருவடிகளாகிய, மது இருந் தாமரைக்கு - தேன் கொண்ட பெரிய தாமரைமலர்களுக்கு, ஆள் ஆய் இரார்க்கு - அடிமைப் பட்டிராதவர்களுக்கு;—மதி நுட்பம் நூல் எது இருந்தாலும் - நுண்ணறி வையுண்டாக்குகின்ற சாஸ்திரங்களில் எது பயின்றதேறப்பட்டிருந்தாலும், அதனால் - அச்சாஸ்திரத்தேர்ச்சிமாத்திரத்தால், இங்கு - இவ்வுலகத்தில், இரு வினை - இருவகை வினைகளும், விடா - நீங்கமாட்டா; (எ - று.)

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன், நற்றாள்தொழாஅ ரெனின்", "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத்தக" என்றபடி கற்றற்குஉரிய உறுதிநூல்களைக் கற்றவர்கள், அக்கல்வியறிவின்பயனாக அந் நூல்களிற்கூறியபடி எம்பெருமான்திருவடிக்கு அடிமைப்பட்டால், கருமம் ஒழிய வீடுபெறுவரேயன்றி அநுட்டானமில்லாத வெறுங்கல்வியறிவுமாத்தி ரத்தால் வினையொழியப்பெறா ரென்பதாம்.

புது விருந்து - வருதற்கரிய விருந்து என்றபடி. பொன் + கழல் = பொ லங்கழல்; இப்புணர்ச்சி "பொன்னென்கிளவி யீறுகெட முறையின், முன் னர்த் தோன்றும் லகார மகாரம், செய்யுண் மருங்கிற் றொடரிய லான" என்ற தொல்காப்பியவிதியால் அமைந்தது: பிற்காலத்தார் நிகண்டுகளில் 'பொலம்' என ஒருசொல் கொண்டுள்ளதனால், பொலம் கழல் என்று பிரி த்து மகரவீற்றுப்புணர்ச்சியின்பாற் படுத்தலு முண்டு. அன்றலர்ந்த வா டாத தாமரை யென்பார் 'மதுவிருந்தாமரை' என்றார்; அதுவே, எம்பெரு மான்திருவடிக்கு நிகராவது. 'கழலாம் மதுவிருந்தாமரைக்கு' என்று உருவக மாகக் கூறினாரேனும், தாமரைமலர்போன்ற திருவடிகளுக்கு என்பது கருத்து. எம்பெருமானது திருவடிகளினின்று வெளிவீசுகிற கிரணங்களை, அத்திருவடித்தாமரைகளினின்று பெருகுந் தேன்பெருக்காக வேதம் ஓதும்; திருவடியின் இனிமையை மதுவென்றலும் உண்டு.

நுட்பமதி என்பது மதிநுட்பம் என முன்பின்னாகத்தொக்கதெனக் கொண்டு, 'பின்மொழிநிலையல்' என்பர். "மதிநுட்பநூலோடுடையார்க்கு" என்றபடி இயற்கையாகிய நுண்ணறிவும் செயற்கையாகிய நூலறிவும் என் னும் இவற்றில் எதுஇருந்தாலும் என உரைப்பினும் அமையும். பஞ்சுகொ ண்டு இழைத்து நூற்கப்படும் நூல்போலச் சொற்கொண்டுதொடுத்து அமை க்கப்படுதலாலும், மரம்முதலியவற்றின் கோணலைத் தீர்த்துச் செப்பஞ்செய் யும் ஏற்றநூல்போல மனத்தின்கோணலைத் தீர்த்துச் செவ்வைசெய்தலா

லும், நூல்என்பது - சாஸ்திரத்துக்கு உவமையாகுபெயராகிய காரணக் குறியாம். இக்கு - இப்பிறப்பி லென்றபடி. (௬௩)

[தலைவி வெறிவிலக்கிச் செவிலியர்க்கு அறத்தொடுநிற்றல்.]

௬௪. வினையாட்டியேன்கொண்டவெங்காமநோய்வெறியாட்டினுமிச்
சினையாட்டினுந்தணியா தன்னைமீர் செய்யபூங்கமல
மனையாட்டிநாயகன்மாலிருஞ்சோலைமலைச்சிலம்பாற்
றெனையாட்டிவாருஞ்சொன்னேனெந்தநோயுமெனக்கில்லையே.

(இ - ள்.) அன்னைமீர்-தாய்மார்களே!—வினையாட்டியேன் கொண்ட வெம் காமம் நோய் - தீவினையால்ஆட்டப்படுபவளாகிய யான் அடைந்திருக்கின்ற கொடிய இந்தக்காதல்நோயானது, வெறி ஆட்டினும் - (முருகக்கடவுளின் விஷயமாக) ஆவேசமாடுவித்தலாலும், இ சினை ஆட்டினும் - உறுப்புக்களிற்குறைவில்லாத இந்த ஆட்டைப் பலிகொடுத்தலினாலும், தணியாது-அடங்கமாட்டாது; (பின்னை இதற்கு என்ன பரிகாரமோ? எனின்,—) செய்ய பூ கமலம் மனை ஆட்டி நாயகன் - அழகிய செந்தாமரை மலரைத் தான்வாழுமிடமாகக்கொண்டு ஆள்பவளான திருமகளின் கணவனாகிய திருமாலினுடைய, மாலிருஞ்சோலைமலை - திருமாலிருஞ்சோலைமலையிலுள்ள, சிலம்பு ஆறு - நூபுரகங்கையென்னும் திவ்வியநதியிலே, எனை ஆட்டி வாரும் - என்னை ஸ்நாநஞ்செய்வித்து வாருங்கள்; (அங்ஙனம் அதில் நீராடுவித்தால்), எந்த நோயும் எனக்கு இல்லை - எனக்குச் சிறிதுநோயும் இராது; சொன்னேன் - (எனது நோயின் நிலைமையையும் அதற்குஏற்ற பரிகாரத்தையுஞ்) சொல்லிவிட்டேன்; (எ - று.)

இச்செய்யுளுக்குத் துறைவிவரணமும், உள்ளுறைபொருளும், கீழ் ௮ - ஆஞ் செய்யுளி னுரையிற் கூறியதுகொண்டு உணரலாம்.

வினையாட்டியேன் - தீவினையால் வருத்தியலைக்கப்படுபவளான யான்; இங்ஙனந் தலைவனைப்பிரிந்துவருந்துதற்குக் காரணமான கொடிய கருமத்தை யுடையே னென்று தன்னைத் தானே வெறுத்துக்கொண்டாள். ஆட்டி என்ற பெயரில், ஆடுஎன்பதன் பிறவினையான ஆட்டு - பகுதி; இ - செயப்படுபொருளுணர்த்தும் பெயர்விகுதி. இப்படர்க்கைப்பெயர், 'ஏன்' என்ற விகுதியோடு சேர்ந்து, தன்மையொருமைக் குறிப்பு வினையாலணையும் பெயராய் நின்றது. இது இவ்வகைஆட்டினால் தணியாது சிலம்பாற்றிலாட்டினாலேயே தணியும் என ஒருவகைச்சமத்காரம் அமைய 'வெறியாட்டினு மிச் சினையாட்டினுந் தணியாது சிலம்பாற்றெனையாட்டிவாரும்' என்ற சொல்நயம் உணரற்பாலது; சொற்பின்வருநிலை. வெறியாட்டினும், சினையாட்டினும் என்றவற்றில், இன் - ஐந்தனுருபு, ஏது. வெறியாட்டு என்பதில், ஆட்டு என்பது - ஆடு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். உறுப்புக்குறையில்லாத ஆடு பலிக்குச்சிறத்தலால், 'சினையாடு' எனப்பட்டது; இனி, இதற்கு கருப்பங்கொண்ட ஆடு என்று உரைப்பாரு முளர். "திசைக்கின்றதே யிவ்ள் நோய் இதுமிக்கபெருந்தெய்வம், இசைப்பின்றி நீரணங்காடு மிளந்தெய்வ

மன்றிது," "இவளைப்பெறும்பரிசு இவ்வணங்காடுதலன்று அந்தோ" என்ற அருளிச்செயல்களை அடியொற்றி, 'வெறியாட்டின் தணியாது' எனப்பட்டது. இச்சினையாட்டின் தணியாது - அசேதநமான ஒருபிராணி தான் இறந்து சேதநமான ஒருபிராணியை உயிர்காக்குமோ? என்றபடி; "மசகந்தர மென்னலாய் நிலையாவுடல் வாழுயிரை, அசகந்தரவல்லதோ" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும்.

செய்யபூங்கமலமனையாட்டிநாயகன் - ஸ்ரீயஃபதி. தலைவனை இப்பெயராற்குறித்ததனால், "அகலகில்லேன் இறையும்" என்று அத்திருமகள் அத்தலைவனை என்றும்விட்டுநீங்காது உடனுறைதலைக்குறித்து, அங்ஙனந் தனக்குப் பிரியாத இன்பம் நேர்ந்திலதே யென்ற அழுக்காறு கொண்டனள் இத்தலைவி யென்பது தோன்றும். மூன்றாமடியிலுள்ள 'ஆட்டி' என்பதில், ஆள் - பகுதி, இ - பெண்பால்விகுதி, ட்-எழுத்துப்பேறு. (இதன் ஆண்பால்- ஆளன்.) திருமால் உலகமளந்த காலத்தில் மேலே சத்தியலோகத்திற் சென்ற அப்பெருமானது திருவடியைப் பிரமன் தன்கைக்கமண்டல நீர்த்தத்தாற் கழுவிவிளக்க, அக்காற்சிலம்பினின்று தோன்றியதனால், சிலம்பாறு என்று பெயர்: நூபுரகங்கை யென்ற வடமொழிப்பெயரும், இதுபற்றியதே; நூபுரம், சிலம்பு - ஒருவகைக்காலணி. 'எந்தநோயும் எனக்கு இல்லை' என்றது, அழகர் விஷயமான காதல்நோயே யன்றி நீங்கள் நினைக்கிறபடி வேறு எவ்வகையான நோயும் எனக்கு இல்லை யென்றவாறுமாம். 'சொன்னேன்'என்பது, தேற்ற முணர்த்தும். தலைவனைப்பிரிந்திருக்கிற நிலையிலே, அவனோடு நேரிலாவது இடையிட்டாவது சம்பந்தமுடைய பொருள் ஏதேனும் கிடைத்தால், அது அப்பிரிவுநோயைத் தணிவிப்பது இயல்பாதலால், எனது இவ்விரகதாபம் தணிவதற்கு எம்பெருமானது திருவடித்தீர்த்தத்தில் நீராட்டுதலே ஏற்றதா மென்றாள்.

பகவத்விஷயமூலமான எனது இவ்வாற்றாமைக்கு அதன்சம்பந்தமான பரிகாரஞ் செய்தலே தகுதி யென்று ஐயங்கார் தம்பக்கல் பரிவுடையார்க்குக் கூறுதல் இதற்குஉள்ளுறைபொருளாதலால், எம்பெருமானது ஸ்ரீபாத தீர்த்தமாய் எப்பொழுதும் திவ்யதேசத்தின் சம்பந்தமுடையதாய்க் கங்கையினும்புனிதமான புண்ணியதீர்த்தத்திலே தம்மை நீராடப்பண்ணுங்களென்றாராம். எம்பெருமானது சம்பந்தத்தை நேரிலேனும் பரம்பரையாகவேனும் பெற்ற பாகவதரது சம்பந்தம் இவ்வாற்றாமைக்குப் பரிகாரமா மென்பதும் இதற்கு ஸ்வாபதேசமாகலாம். தேவதாந்தர சம்பந்தத்தையும், அதனால்நிகழும் தாமசகாரியங்களையும் ஸ்ரீவைஷ்ணவர் சிறிதும்பொறாரென்பது, முதல்வாக்கியத்தாற் போதரும். (சக)

[வண்டு விடுதூது.]

ரூ0. எனக்காவிபங்குமுடலிங்குமாகியிருப்பதைச்சந்
தனக்காவியங்குந்தமரவண்டீர் சொல்லுந் தத்துவநூல்
கனக்காவியங்கவிவல்லோர்புகழலங்காரனுக்கு
வனக்காவியங்கண்ணிமாமலராண்மணவாளனுக்கே.

(இ - ள்.) சந்தனம் கா இயங்கும் - சந்தனமரச்சோலைகளிலே (நறுமணம்நுகர்தற்காகச்) சஞ்சரிக்குந்தன்மையுள்ள, தமரம் வண்டீர் - ஓசையையுடைய வண்டுகளே!—தத்துவம் நூல் - தத்துவசாஸ்திரங்களிலும், கனம் காவியம் - பெரிய காவியங்களிலும், கவி-கவிபாடுதலிலும், வல்லோர்-வல்லவர்களான ஆன்றோர்களால், புகழ் - துதிக்கப்பெற்ற, அலங்காரனுக்கு - அழகனும்,—வனம் காவி அம் கண்ணி - நீரிலுள்ள நீலோற்பலமலர்போன்ற அழகிய கண்களையுடையவளான, மா மலராள் - சிறந்த தாமரைமலரில் வீற்றிருக்கின்றவளாகிய திருமகளினது, மணவாளனுக்கு - கணவனுமாகிய தலைவனுக்கு,—எனக்கு ஆவி அங்கும் உடல் இங்கும் ஆகி இருப்பதை சொல்லும் - எனக்கு உயிர் அத்தலைவனிடத்தும் உடம்புமாத்திரம் இங்குமாயிருக்கிற செய்தியைச் சொல்லுங்கள்; (எ - று.)

தலைவனைப்பிரிந்த தலைவி, இங்ஙனஞ்சொல்லி, தலைவனிடத்து வண்டுகளைத் தூதுசெல்லுமாறு வேண்டுகிறாள். எனது பிராணநாதனான தலைவன் என்னைவிட்டுப்பிரிந்துசென்றபொழுதே எனது உள்ளத்தின்உணர்வுமுழுவதும் அத்தலைவன் பின்னேயே சென்றுவிட உயிர்நீங்கிய உடல்போலப் பொலிவிழந்து யான்மாத்திரம் இங்கு உள்ளேனென்பாள், 'எனக்கு ஆவி அங்கும் உடலிங்குமாகி இருப்பது' என்றாள். இதனால் இவள் விரகவேதனையால் அயர்ப்பும் மயக்கமுமாக இடையிடையே மூர்ச்சையடைதல் புலனும். தலைவனுள்ள இடம், நீங்கள் சந்தனமரங்களின் நறுமணத்துக்காக உத்ஸாகத்தோடு ஆரவாரஞ்செய்துகொண்டு செல்லுஞ் சோலைகளையுடைய தாதலால், அங்குச்செல்லுதல் உங்கட்கும் இனிதாம் என்பது பட, 'சந்தனக்காவியங்குந் தமரவண்டீர்' என்று விளித்தாள். "அறுகால் வரிவண்டுகளாயிர நாமஞ்சொல்லிச், சிறுகாலைப்பாடுந்தென் திருமாலிருஞ்சோலையே" என்ற அருளிச்செயல் இங்கு அறியத்தக்கது. தமரம் என்றது, வண்டுகள் செய்யும் ரீங்காரத்தொனியை. மூன்றாமடி - தலைமகனுடைய புகழ்ச்சிறப்பையும், நான்காமடி - காதற்குக்கட்டுப்பட்டவளவனென்பதையுங் காட்டும். பெரியாழ்வார் ஆண்டாள் திருமங்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் நம்மாழ்வார் என்கிற ஆழ்வார்கள் தமது திவ்வியப்பிரபந்தங்களால் துதித்துள்ளதும், ஸ்ரீபாஷ்யகாரருடைய அந்தரங்கசிஷ்யர்களில் முதல்வரான கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவமென்ற வடமொழிப்பிரபந்தம் பாடித் துதித்துள்ளதும் முதலியனபற்றி, 'தத்துவநூல் கனக்காவியங் கவிவல்லோர் புக ழலங்காரன்' எனப்பட்டான். புலவர்பாடும்புகழுடையோரது சிறப்பு மற்றையனைவர்சிறப்பினும் மேம்படுதலால், அத்தன்மைத்தான புகழையுடைய அலங்காரனென்று தன்தலைவன்பெருமையைக் கொண்டாடினன்.

'வண்டீர் சொல்லும்' என, பேசாதது பேசுவதுபோலவும், கேளாதது கேட்பதுபோலவும் சொல்லப்பட்டது; வழுவமைதி: "ஞாயிறு திங்க ளறிவே நாணே, கடலே கானல் விலங்கே மரனே, புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே, அவையல பிறவும் நுவலிய நெறியாற், சொல்லுந போலவுங் கேட்குந போலவுஞ், சொல்லியாங் கமையு மென்மனார் புலவர்" என்ற தொல்காப்பியச்சூத்திரம் காணத்தக்கது: வண்டுக்குச் செவியுணர்வில்லை

யென்பது, "தும்பி வண்டாதி கண்ணறிவி னுலறிவுயிர்" என்பதனுற் புல னும். (இனி, இதற்குச் செவியுணர்வும் உண்டென்று சாதிப்பர் நச்சினார்க்கி னியர்.) பிரிந்தநிலையிலே தலைவி மதிமயக்கமுடையளாதலால், இங்ஙனம் புலன்குறைந்தவற்றையும் விளித்துப் பேசுவள். செய்யுளாதலின், 'அங்கு' எனச் சுட்டுப்பெயர் முன்வந்தது. கா - பாதுகாக்கப்படுவது என்று கார ணப்பொருள்படும். வண்டீர் - வண்டார் என்பதன் ஈற்றயல்திரிந்த விளி: அது, உயர்த்திச்சொல்லுதலால் அஃறிணை உயர்திணையான திணைவழுவ மைதி. 'ஆர்' என்ற பலர்பால்விகுதி உயர்வுப்பொருளில் 'வண்டு' என்ற பால்பகா அஃறிணைப்பெயரோடு சேர்ந்துவந்த தென்க; தன்வேண்டு கோளை நிறைவேற்றுதற்பொருட்டு வண்டுகளைக் கொண்டாடி யழைப்பவ ளாய், இங்ஙனம் மரியாதைகாட்டி விளித்தாள்.

தத்துவநூல் - ஜீவாத்மா பரமாத்மா வினை வினைப்பயன் உலகம் முத லிய பொருள்களின் உண்மைநிலையை யுணர்த்தும் நூல். கவியினுற்செய்யப் பட்டது காவ்யம் எனத் தத்திதாந்தநாமம்; அதன் இலக்கணத்தை, அணி நூல்களிற் காண்க. அன்றலர்ந்த வாடாத மல ரென்பது தோன்ற, 'வனக் காவி' எனப்பட்டது. திருமகளின் கண்களுக்கு நீலோற்பலமல ருவமை, கருமை மென்மை யழகுகளி லென்க. "பூவிற்குத் தாமரையே" என்றபடி தாமரை சிறத்தலால், 'மாமலர்' எனப்பட்டது.

ஐயங்கார் தமது ஆற்றாமையை ஆசாரியமூலமாக எம்பெருமானுக்குத் தெரிவித்துத் தமது துயரந்தணியக்கருதி அவர்களைத் தமக்குப் புருஷகார மாகும்படி வேண்டுதல்,இதற்கு உள்ளுறைபொருள். ஸ்வாபதேசத்தில் 'தூது என்பது, [வடமொழி] கடகமான ஆசார்யவிஷயத்தை'என்றனர் ஆன்றோர். பிரிந்த தலைவிதலைவரைச் சேர்த்தற்குத் தூதர்போல,பிரிந்துநின்ற ஜீவாத்ம பரமாத்மாக்களைச் சேர்த்தற்கு ஆசாரியர் உரியவராதல் காண்க. பலவகை மலர்களிலுஞ் சென்று அவற்றின் சாரமான தேனை அம்மலர்கள்கெடாதபடி கவர்ந்து உண்ணுந்தன்மையனவான வண்டுகளை, பலவகைநூல்களிலும் பிர வேசித்து அவற்றின்சாரமான தத்துவப்பொருளை அந்நூல்கள்நலிவுபடாத படி கிரகித்து அனுபவிக்குந்தன்மையரான ஆசாரியராகச் சொல்லத்தகும். வண்டுகளுக்கு இரண்டுஇறகுகள்போல, ஆசாரியர்க்கு ஞானமும் அநுட்டா னமும் உயர்கதிச்செலவுக்கு உறுதுணை யென்க. அன்றியும், நறுமணத்தை யும்மதுவையும்நாடி அவையுள்ள இடங்களிலெல்லாம்திரிதல் வண்டுகளுக்கு இயல்பாதல்போல, ஸர்வகந்தனென்றும் உள்ளக்கமலத்திலூறுகிறதேனெ ன்றும் சொல்லப்படுகிற எம்பெருமானை நாடி அவனெழுந்தருளியிருக்கின்ற திவ்யதேசங்களிலெல்லாம் யாத்திரைசெய்தல் ஆசாரியராகக்கடவரான பாகவதர்க்கு இயல்பாம்; இங்கு 'சந்தனக்கா இயங்கும்'என்ற அடைமொழி இக்கருத்தை உட்கொண்டது. 'தமரவண்டீர்' என்றது, தான்வகுத்தக்கூறு வானுகிய உத்தமனாதனுக்கு இன்றியமையாப்பண்பாகின்ற ஆராய்ந்தசொல் வன்மையையுடைய ஆசாரியர்களே யென்று விளித்தபடி. பிறவும் நோக்கிக் கொள்க. (௬o)

௫௧. மணவாளராவிநிகர்திருமாதுக்குமாலழகர்
பணவாளராவிற்கண்பள்ளிகொள்வார்திருப்பாதமெண்ணக்
குணவாளராவிரின்றே யுயிர்கா ளும்மைக்கூற்றுவனார்
நிணவாளராவியறுக்கும்பபோதுநினைப்பரிதே.

(இ - ள்.) உயிர்காள் - பிராணிகளே!—ஆவி நிகர் திருமாதுக்கு மணவாளர் - (தமக்கு) உயிர்போன்ற [பிராணநாயகியான] திருமகளுக்குக் கணவரும், மால் அழகர் - பெருமையையுடைய அழகரும், பணம் வாள் அராவில் கண்பள்ளிகொள்வார் - படத்தையும் ஒளியையு முடைய திருவனந்தாழ்வான்மேலே படுத்துக்கொண்டு யோகநித்திரைசெய்தருள்பவருமான எம்பெருமானுடைய, திருப்பாதம் - திருவடிகளை, எண்ண - தியானிக்குமாறு, இன்றே - இப்பொழுதே, குணவாளர் ஆவிர் - நற்குணமுடையவராவீர்கள்; (ஏனென்றால்,—) உம்மை - உங்களை, கூற்றுவனார் - யமன், நிணம் வாள் அராவி அறுக்கும்-(நீங்கள்செய்துள்ள கொடுவினைக்கு ஏற்ப)நிணந்தோய்ந்த வாளாயுதத்தைக் கூர்செய்து அதுகொண்டு அறுக்கும்படியான, அப்போது- அந்தஅந்திமகாலத்தில், நினைப்பு அரிது - (எம்பெருமான் திருவடிகளை) நினைப்பது இயலாதாகும்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - தேற்றம்.

பிராணிகாள்! யமன் வந்து நலிய வருந்தும் மரணகாலத்திலே எம்பெருமான்திருவடியை நினைத்தல் அசாத்திய மாதலால், இப்பொழுதே அதனை நினைப்பீர்களானால், உங்கட்கு யமனாலாகுங் கொடுமை இல்லையாக நற்கதிபெற்று உய்யலாம் என்பது கருத்து. "வடவேங்கடநாதனைத் தேசத்துள்ளீர், நெஞ்சக்கரவடநீக்கி யின்றேதொழும் நீண்மறலி, துஞ்சக்கரவடம் வீசுமக்காலந் தொழற்கரிதே" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும். "எய்ப்பென்னைவந்து நலியும்போதங்கேது நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன்" என்ற ஆழ்வாரருளிச்செயலைப் பின்பற்றியது, பிந்தினவாக்கியம்.

இன்றியமையாமையும், மிக்கஅன்புக்கு இடமாதலும் பற்றி, 'ஆவிநிகர் திருமாது' எனப்பட்டாள். 'அராவின்கண்' என்ற பாடத்துக்கு, கண் - ஏழனுருபு. எண்ண - எண்ணுதலினால் எனினுமாம்; முந்தியபொருளில், காரியப்பொருட்செயவெனெச்சம்: எதிர்காலம்; இப்பொருளில், காரணப் பொருட்செயவெனெச்சம்: இறந்தகாலம். கூற்றுவனார் என்றவிடத்து, 'ஆர்' என்ற பலர்பால்விகுதி - கொடுமை தோன்ற இழித்தற்பொருளில் வந்தது. நிணவாள்-(முன்பு அறுக்கப்பட்ட பிராணிகளின்)உடற்கொழுப்புத் தோய்ந்த வாள். (௫௧)

௫௨. நினைப்பரியாயெளியாயும்பர்யார்க்குநின்னன்பருக்கும்
வினைப்பரியானவன்வாய்பிளந்தாய் வியன்சோலைமலை
தனைப்பரியாநின்றதாளழகா முற்சனனத்துள்ளு
முனைப்பரியாமலன்றோபரித்தேனிவ்வுடலத்தையே.

(இ - ள்.) உம்பர் யார்க்கும் - தேவரெல்லார்க்கும், நின் அன்பருக்கும் - உன்பக்கல் பக்தியையுடைய அடியார்கட்கும், நினைப்பு அரியாய்

எளியாய் - (முறையே) சிந்தித்தற்கு அரியவனும் எளியவனுமாயிருப்பவனே! வினை பரிஆனவன் வாய் பிளந்தாய் - தீச்செயலையுடைய குதிரைவடிவாய் வந்த அசுரனது வாயைக் கிழித்தவனே! வியல் சோலைமலை தனை பரியா நின்ற தாள் அழகா - பெரிய திருமாலிருஞ்சோலைமலையானது தன்னைவகிக்கப்பெற்ற திருவடியையுடைய அழகனே!—முன் சனனத்தினும் உனை பரியாமல் அன்றோ இ உடலத்தை பரித்தேன் - முற்பிறப்பிலும் உன்னை விரும்பிப் பக்திசெய்யாமற்போனதனாலன்றோ இப்பிறப்புஎடுத்தேன்; (எ - று.)

முற்பிறப்பில் உன்னிடம் பக்திசெய்திருந்தால், எல்லாக்கருமங்களும் ஒழியப் பிறப்பற்றுமீளாவுலகமாகிய முத்தியை அடைந்திருப்பேனாதலால், இப்பிறப்பு எனக்கு நேர்ந்திராது என்பதாம். இங்ஙனம், சென்றபிறப்பிற் பக்திசெய்யாதுபோனதற்குக் கழிவிரக்கங்கொள்வார்போன்று, இப்பிறப்பிலும் இதுவரை பழுதேபலபகலும்போக்கினமைக்கு அஞ்சி இனியாயினும் மீளப்பிறத்தலில்லையாம்படி பக்திசெய்யக்கடவேனென்றவாறும்.

முதலடி - உம்பர்க்குநினைப்பரியாய், அன்பர்க்குஎளியாய் என முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள்; க்ரமாலங்காரமென்பர் வடநூலார். "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கு அரிய, வித்தகன்" என்பவாதலால், இங்ஙனம் விளிக்கப்பட்டான். உம்பர்யார்க்கும் - (நின்பக்கல் மெய்யன்பில்லாத) தேவர்கட்கெல்லாம் என்றபடி. 'நினைத்தற்கும் அரியாய்' எனவே, காணுதல் கிட்டுதல் துதித்தல் முதலியவற்றிற்கு அரியா யென்பது சொல்லவேண்டாதாயிற்று; நினைப்பு என்பதில் இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. நினைப்புஅரியாய் - நான்காம் வேற்றுமைத் தொகை. 'உம்பர்யார்க்கும் அரியாய்' என்றவிடத்து, 'நினைப்பு'என ஒருசெயலை எடுத்துக்கூறி, 'நின்னன்பருக்குஎளியாய்' என்றவிடத்து ஒருசெயலையுங் குறிப்பிடாது பொதுப்பட 'எளியாய்' என்றதனால், பக்தியுள்ள அடியார்கட்குக் காணுதற்கும் கிட்டுதற்கும் துதித்தல்முதலியவற்றிற்கும் எளியனாய் அவர்கள்தீவினையைப் போக்குதலும், அவர்கட்கு நல்வினையை அருளுதலும், அவர்கள் தன்னை வேண்டியபடி ஏவல்கொள்ளுமாறு அவர்கட்குத் தன்னையேகொடுத்தலும் செய்வனென்க. 'உம்பர்யார்க்கும் நினைப்பரியாய்' என்றது - பரத்வத்தையும், 'நின் அன்பருக்கு எளியாய்' என்றது - ஸௌலப்யத்தையும் காட்டும்.

வியல் - விசாலமுணர்த்தும் உரிச்சொல்; "வியலென் கிளவி அகலப் பொருட்டே" என்பது தொல்காப்பியம். தாள் - சாதியொருமை; ஆதலால், 'தனை' என்ற ஒருமை அமையும். இனி, சோலைமலைமேல் நின்று அதனைக்காக்கின்ற திருவடிகளையுடைய அழகனே என்றலு மொன்று: இப்பொருளில், தன் - சாரியை. (௫௨)

௫௩. உடலம்புயங்கத்திரிபோல்விடுமென்றுவணப்புள்ளி
னடலம்புயமிசைநீவரவேண்டு மையானனற்கு
மடலம்புயற்கும்வரந்தருஞ்சோலைமலைக்கரசே
கடலம்புயர்வரையாலடைத்தா யென்னைக்காப்பதற்கே.

(இ - ள்.) ஐ ஆனனற்கும் - ஐந்துமுகங்களையுடையவனான சிவபிரானுக்கும், மடல் அம்புயற்கும் - இதழ்கள்நிறைந்த தாமரைமலரில் தோன்றியவனான பிரமனுக்கும், வரம் தரும் - வேண்டியவரங்களைக் கொடுத்தருள்கின்ற, சோலை மலைக்கு அரசே - திருமாலிருஞ்சோலைமலைக்குத் தலைவனே! கடல் அம்பு உயர் வரையால் அடைத்தாய் - சமுத்திரஜலத்தை உயர்ந்தமலைகளைக்கொண்டு அணைகட்டி யடைத்தவனே!—புயங்கத்து உரி போல் உடலம் விடும் அன்று - பாம்பு தன்தோலைவிட்டுநீங்குதல்போல (உயிர்) உடம்பைவிட்டுநீங்கும் அந்நாளில், என்னை காப்பதற்கு - என்னைப் பாதுகாத்தற்காக, உவணம் புள்ளின் அடல் அம் புயமிசை நீ வர வேண்டும் - கருடப்பறவையின் வலிய அழகிய தோள்களின்மேல்(ஏறி)நீ எழுந்தருளவேண்டும்.

இப்பிறப்பின்முடிவிலே, மறுபிறப்பில்லாதபடி என்னைக்காக்குமாறு நீ பெரியதிருவடியின்மே லெழுந்தருளிக் காட்சிதரவேண்டும் என்பதாம்; "சாமிடத்தென்னைக்குறிக்கொள்கண்டாய் சங்கொடுசக்கர மேந்தினனே" என்றார் பெரியாழ்வாரும். என்னை - என் உயிரை யென்றபடி.

புஜங்கம் என்ற வடசொல் - மார்பினால் ஊர்வதென்றும், வளைந்துசெல்வதென்றும் காரணப்பொருள்படும். உவணம் - ஸுபர்ண மென்ற வடசொல்லின் விகாரம்; அழகியஇறகுகளையுடைய தென்பது அதன்பொருள்: பர்ணம் - இறகு. வரந்தரும் அரசு என இயையும்; வரந்தரும்மலை எனினும் இழுக்காது. விளியிரண்டனுள்—முந்தியது - பரத்வத்தையும், பிந்தியது - திவ்வியசக்தியையுங் காட்டும். அம்பு - வடசொல். (ருங)

ருச. காப்பவனந்தமலரோனையுங்கறைக்கண்டனையும்
பூப்பவனந்தரம்போக்கவைப்பான் புனல்பார்விசும்பு
தீப்பவனந்தருந்தெய்வசிகாமணிசேவடியை
நாப்பவனந்தப்புகழ்வார்க்கொப்பில்லைநவகண்டத்தே.

(இ - ள்.) காப்பவன் - (எல்லாவுலகங்களையுங்) காத்தற்றொழில்செய்பவனும், அந்த மலரோனையும் கறைக்கண்டனையும் - அந்தப் பிரமனையும் சிவனையும், பூப்ப அனந்தரம் போக்க வைப்பான் - (முறையே முதலிற்) படைத்தற்றொழில்செய்யுமாறும் பின்பு[இறுதியில்] அழித்தற்றொழில்செய்யுமாறும் நியமித்துவைப்பவனும், புனல் பார் விசும்பு தீ பவனம் தரும் - நீர் நிலம் வானம் நெருப்பு காற்று என்னும் பஞ்சபூதங்களையும் (ஆதியிற்) படைத்தருளிய, தெய்வ சிகாமணி - தேவர்கட்குச்சிரோரத்தினம்போன்றவனுமான அழகப்பிரானுடைய, சே அடியை - சிவந்த திருவடிகளை, பவம் நந்த - (தங்கட்குப்) பிறப்பு இனிஇல்லையாம்படி, நா புகழ்வார்க்கு - நாவினால் துதிக்கின்ற பாகவதர்களுக்கு, நவ கண்டத்து ஒப்பு இல்லை - ஒன்பது கண்டங்களிலும் நிகராவார் எவரு மில்லை; (எ - று.)

இது, பாகவதமகிமை கூறியது.

படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களுள், படைத்தலைப் பிரமனைக்கொண்டும், அழித்தலைச் சிவனைக்கொண்டும் நடத்தி, காத்தலைத் தானே மேற்கொண்டு நடத்துபவ னென்பது, முதலிரண்டுவிசேஷ

ணங்களின் கருத்து;"ஆக்குந்தொழிற்கு விரிஞ்சியைவைத்து அழிக்குந்தொழிற்குச் சிவனைவைத்துக், காக்குந்தொழில் தான்கைக்கொள் அருட்கடவுள்", "ஆக்குமாறயனும் முதலாக்கியவுலகம், காக்குமாறு செங்கண்ணிறை கருணையங்கடலாம், வீக்குமாறரனும் அவைவீந்தநாள் மீளப், பூக்குமாமுதலெவன் அவன்பொன்னடிபோற்றி" என்றார் பிறரும். பூப்ப மலரோனையும், போக்கக் கறைக்கண்டனையும் வைப்பான் என முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். மலரோன் - திருமாலின் திருநாபித்தாமரைமலரில் தோன்றியவன். 'அந்தமலரோன்' என்றது, பிரசித்தி பற்றி; உலகறிசுட்டு. அந்தம் மலரோன் என்று எடுத்து, அழகிய தாமரை மலரில் தோன்றியவனெனினும் அமையும். கறைக்கண்டன் - பாற்கடலில் தோன்றிய விஷத்தை யுண்டதனாற் கறுத்த கழுத்தை யுடையவன். இனி, 'அந்தமலரோனையும் கறைக்கண்டனையும்' என்பதை மத்திமதீபமாக 'காப்பவன்' என்றதனோடும் இயைத்து, அவர்களையுமுட்படப் பாதுகாப்பவனெனினும் அமையும்.

ஐம்பெரும்பூதங்கள் முறைபிறழக் கூறப்பட்டன, செய்யுளாதலின். தெய்வசிகாமணி - தேவர்கள்முடிமேற்கொள்ளும் இரத்தினம் போன்றவன்; அவர்களாற் சிரமேற்கொண்டு கொண்டாடப்படுபவன்: தேவாதிதேவன். இது, திருமாலிருஞ்சோலைமலையெம்பெருமான் திருநாமங்களிலொன்று. புகழ்வார்க்கு என்றவிடத்து, 'நா' என வேண்டாதுகூறியதனால், நாப்படைத்தபயன்பெறுமாறு புகழ்வார்க்கு என விசேஷார்த்தங்கொள்க; "பஞ்சவர்க்குத்தூது,நடந்தானை யேத்தாத நா வென்னநாவே, நாராயணவென்னா நா வென்னநாவே" என்றார் பிறரும். நந்துதல் - அழிதல். நவகண்டம் - கீழ்விதேகம்,மேல்விதேகம், வடவிதேகம்,தென்விதேகம், வடவிரேபதம்,தென்னிரேபதம், வடபரதம், தென்பரதம்,மத்திமம் என்பன. இதற்குப் பிறவாறு கூறுதலு முண்டு. நவகண்டத்தும் என இனைத்தென் றறிபொருளில் வரும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

நான்காமடியில், பவனந்த என்றவிடத்தில், நகரம் னகரமாகக்கொள்ளப்பட்டது, திரிபுநயத்திற்காக. (நச)

நரு. கண்டாகனன்கண்ணனல்லாற்கதியின்மைகண்டடைந்த
துண்டாகனம்பவொட்டாதுங்களூழ்வினை யுண்மையறிந்
தண்டாகனவண்ணனேயருளாயென்றழகனுக்கே
தொண்டாகனன்னெஞ்சினூலுரைப்பீர்பிறர்தொண்டர்களே.

(இ - ள்.) பிறர் தொண்டர்களே - வேறுதெய்வங்கட்கு அடிமையாயிருப்பவர்களே!—கண்டாகனன் - கண்டாகர்ணனென்பவன், கண்ணன் அல்லால் கதி இன்மை - ஸ்ரீகிருஷ்ணபகவானேயல்லாமல் (முத்தியளிக்கத்தக்க) புகலிடம் வேறுஇல்லாமையை, கண்டு - அறிந்து, அடைந்தது - (அப்பெருமானையே) சரணமடைந்த செய்தி, உண்டு ஆக - உளதாயிருக்கவும்,உங்கள் ஊழ்வினை நம்ப ஒட்டாது-உங்கள்விதியானது (அதனை) நம்பும்படி செய்யாது; (இனியாயினும் நீங்கள்), உண்மை அறிந்து - யதார்த்தத்

தைத் தெரிந்துகொண்டு, அண்டா கனம் வண்ணனே அருளாய் என்று - 'இடைப்பிள்ளையாய் வளர்ந்தவனே! மேகம்போலுந் திருநிறமுடையவனே! கருணைபுரிவாய்' என்று, அழகனுக்கே தொண்டு ஆக நல் நெஞ்சினால் உரைப்பீர் - அழகனுக்கே அடிமையாகுமாறு நல்லமனத்துடன் சொல்லுங்கள்; (எ - று.)

"எந்தை வானவர்க்கும், வணங்கரியா னன்றிக் காப்பாரில்லாமை விண்மண்ணறியும்,வணங் கரியானவர் வாணன் கண்டாகனன் மார்க்கண்டனே" என்றபடி ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருளென்று சாதித்தற்குச் சாக்ஷியாகிற திவ்யசரித்திரங்களுள், முதலிற் சிவபக்தியோடு விஷ்ணுத்வேஷமும்மேலிட்டிருந்த கண்டாகர்ணன் பின்பு சிவனால்முத்திபெறமாட்டாது கண்ணபிரானாற் பெற்றனனென்ற வரலாறு சிறந்தலால், அதனை இங்கு எடுத்துக்காட்டினர். "கனவண்ணனென்றேதொலியந்தடையா, ஈனக்கண்டாகனற்கீந்தான்பரகதியென்னப்பனே" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும்.

க்ருஷ்ணன் என்ற திருநாமம் - கருநிறமுடையவனென்றும், (கண்டவர் மனத்தைக்) கவர்பவனென்றும், (எல்லாவற்றையுஞ்) செய்பவனென்றும், மற்றுஞ் சிலவகையாகவும் பொருள்படும். ஊழ்வினை - ஜந்மாந்தரகர்மம்; இங்கு இது, பாவத்தின்மேல் நின்றது. இரண்டாமடியிலும், நான்காமடியிலும் நகரம் ணகரமாகக் கொள்ளப்பட்டது, திரிபுநயத்தின்பொருட்டு. இரண்டாமடியில், ஆகல்என்று பதம்பிரித்துத் தொழிற்பெயராக வுரைத்தலும் அமையும். (நரு)

நகூ. தொண்டுபடார் திருமாலிருஞ்சோலையிற்சோதிக்கன்பு
கொண்டு படாமலரிட்டிறைஞ்சார் மடக்கோதையரைக்
கண்டுபடாமுலைதோயனுராகங்கருதியிரா
வுண்டுபடாநிற்கும்போதுணைவா ரெங்ஙனுய்வதுமே.

(இ - ள்.) (சிற்றறிவாளர்கள்,)—திருமாலிருஞ் சோலையில் சோதிக்கு - திருமாலிருஞ்சோலைமலையி லெழுந்தருளியிருக்கிற பரஞ்சோதிசொரூபியாகிய அழகப்பிரானுக்கு, அன்புகொண்டு தொண்டுபடார் - பக்திகொண்டு அடிமைப்படார்; படா மலர் இட்டு இறைஞ்சார் - வாடாத மலர்களை (அப்பெருமான் திருவடிகளில்) இட்டு அருச்சித்து வணங்கார்; மடம் கோதையரை கண்டு - இளமைப்பருவமுடைய மாதர்களைப் பார்த்து, படாம் முலை தோய் அனுராகம் கருதி - கச்சணிந்த அவர்கள் கொங்கைகளில் அணைகிற இன்பத்தில் ஆசையை மனத்திற்கொண்டு, இரா உண்டு படாநிற்கும்போது நைவார் - இராப்பொழுதில் உணவுண்டு படுத்துக்கொள்ளும்போது வருந்துவார்கள்; (இப்படிப்பட்டவர்கள்), உய்வது - நற்கதிபெறுவது, எங்ஙன் - எவ்வாறோ? (எ - று.)—ஈற்றுஏகாரம் - இரக்கம்.

பேரின்பத்தைத்தரவல்ல பெருமான்பக்கல் அன்புகொண்டு அவனுக்கு ஆட்பட்டு அருச்சியாது சிற்றின்பவாசையால் தவிப்பவர்கள் உய்யுமாறு இல்

லை யென்பதாம். இது, சிலவகை வைணவர்களுடைய இயல்பை நோக்கி இரங்கிக் கூறியவாறு; லோகாயதிகனென்னுஞ் சார்வாகனது கொள்கையை வெறுத்துக்கூறியது இது வென்னலாம்.

படாமலர் - செவ்விமாறாத பூ. கோதையர் - பூமாலைபோன்ற மெல்லியலார்; (செயற்கை யழகின்பொருட்டுப்) பூமாலையைத் தரித்தவர்கள்; (இயற்கையிற்) கூந்தலழகுடையவர்கள். படாம் - படம் என்ற வடசொல்லின் விகாரம்; (கடம் = கடாம் என்பதுபோல.) ஆடையைக்குறிக்கிற இச்சொல், இங்குக் கஞ்சுகத்தைக் குறித்தது: பொதுப்பெயர், சிறப்புப்பொருளுணர்த்திற்று. அநுராகம் - வடசொல். எங்ஙன் - எங்ஙன மென்பதன் விகாரம்.

"பெண்டிரார்சுகங்களுப்பான் பெரியதோர்இடும்பைபூண்டு, உண்டிராக் கிடக்கும்போது உடலுக்கே கரைந்துநைந்து, தண்டுழாய்மாலை மார்பன் தமர்களாய்ப்பாடியாடித், தொண்டுபூண்டமுதமுண்ணாத்தொழும்பர் சோறுகக்குமாறே" என்ற திருமாலையை அடியொற்றியது, இச்செய்யுள். (ருசு)

ருஎ. உய்வந்தொழும்புசெய்தென்றிருப்போமை யுய்யாமலைவர்
பெய்வந்தொழுவினைக்கேயென்பராற் பெருந்தேன்சிகரந்
தைவந்தொழுகுமலையலங்கார சதுமுகத்துத்
தெய்வந்தொழுந்தெய்வமே யென்கொலோவுன் றிருவுளமே.

(இ - ள்.) பெருந் தேன் - மிகுதியான தேன், சிகரம் தைவந்து ஒழுகும் - சிகரத்தைத் தடவிக்கொண்டு பெருகப்பெற்ற, மலை - திருமாலிருஞ்சோலைமலையி லெழுந்தருளியிருக்கிற, அலங்கார - அழகனே! சதுமுகத்து தெய்வம் தொழும் தெய்வமே - நான்குமுகங்களையுடையகடவுளாகிய பிரமதேவனும் வணங்கப்பெற்ற முதற்கடவுளே!—தொழும்பு செய்து உய்வம் என்று இருப்போமை - '(உனக்கு) அடிமைசெய்து உஜ்ஜீவிப்போம்' என்று எண்ணியிருக்கின்ற எங்களை, ஐவர் - ஐம்பொறிகளாகிய பகைவர்கள், உய்யாமல் தொழுவினைக்கே பெய்வம் என்பர் - '(அங்ஙனம்) உஜ்ஜீவிக்கவொட்டாதபடி கொடிய பாவங்களிலே (உங்களை) அகப்படுத்துவோம்' என்று கறுவிச்சொல்லுகின்றார்கள்; உன் திருஉளம்என்கொலோ (இவ்விஷயத்தில்) நின் திருவுள்ளக்கருத்து யாதாயிருக்கின்றதோ? (எ - று.)—ஆல் - ஈற்றசை.

"வாழ்விப்பானெண்ணமோ வல்வினையி லின்னமென்னை, ஆழ்விப்பானெண்ணமோ அஃதறியேன் - தாழ்விலாப், பாடலழகார் புதுவைப்பட்டர்பிரான் கொண்டாடுங், கூடலழகா நின்குறிப்பு" என்றபடியாம். எதுவும் அவனையன்றி அசையாதாதலால், 'உன் திருவுளம் என்கொலோ' என்றார்.

ஐம்பொறிகளை 'ஐவர்' என உயர்திணையாகக் கூறியது, இழிப்புப்பற்றிய திணைவழுவமைதி. தொல்காப்பியவுரையில் நச்சினார்க்கினியர் "தாம் வந்தார் தொண்டனார்' என்பது உயர்சொல் குறிப்புநிலையின் இழிபு விளக்கிற்று' என்றது, இங்கு உணரத்தக்கது. ஐவர்-தொகைக்குறிப்பு. ஐம்பொறிகளின் வழியாக ஐம்புலன்களையும் வேண்டியபடியெல்லாம் அனுபவிக்க விரும்பும் ஆசை எங்களைத் தீவழிச்செலுத்த முயல்கின்றது என்றவாறும்.

தொழுவினை-தொழுமரம்போல அகப்படுத்தி வருத்துங்கருமம்; குட்டநோய் போலக் கொடிய கருமமெனினுமாம். தொகுதியாகிய கருமமென்னவும் படும்; ஏ - பிரிநிலையோடு இழிவுசிறப்பு. தைவந்து, தைவா - பகுதி; தைவரல் - தடவுதல். கோட்டுப்பூ முதலிய மலர்களினின்றும் தேன்கூடுகளினின்றும் பெருகுகின்ற மிக்கதேன் சிகரத்தின்மீதெல்லாம் வழிந்தோடப்பெற்ற மலையென்க. எல்லாப்பொருள்களையும் படைக்கிற கடவுளும் வணங்கும்படியான தெய்வமெனவே, அவனது படைப்புக்கு உட்பட்ட பிறரெல்லாரும் வணங்கத்தக்க தெய்வமென்பது சொல்லவேண்டாதாயிற்று. என் என்ற முற்றே வினாப்பொருளைக் காட்டியதனால், கொல் ஓ - அசைகள்; கொல் - ஐயமுமாம். (௫௭)

௫௮. திருவிளையாடுதிண்டோட்செங்கண்மால் பலதேவருடன்
மருவிளையான் றிருமாலிருஞ்சோலைமலையெனவோ
ருருவிளையாமற்பிறப்பார்பலர் புகழோதிச்சிலர்
கருவிளையாநிற்கவித்தாவர்முத்தியிற்காமமற்றே.

(இ - ள்.) 'திரு விளையாடு திண் தோள் - வீரலக்ஷ்மி வீற்றிருந்து குலாவுதற்கிடமான வலியதோள்களையுடைய, செம் கண் மால் - சிவந்த திருக்கண்களையுடைய திருமாலும், பலதேவருடன் மருவு இளையான் - (தனக்குத்தமையனான) பலராமருடனே மனங்கலந்து பொருந்திய தம்பியுமாகிய எம்பெருமானது, திருமாலிருஞ்சோலைமலை—', என - என்று, ஓர் உரு விளையாமல் - ஒருதரமேனும் சொல்லாமல், பிறப்பார் - (கருமம் ஒழியப்பெறாது மாறிமாறிப் பலபிறப்பும்) பிறந்து வருந்துபவர், பலர் - (உலகத்திற்) பலராவர்; சிலர் - சிலபேரோ, காமம் அற்று - சிற்றின்பவாசையொழிந்து, புகழ் ஓதி - (அத்திருமலையின்) மகிமையை எடுத்துச்சொல்லி, (அதனால்), கரு இளையாநிற்க - பிறப்புக்கள் (இனித் தம்மைச் சேரமாட்டாவாய்)வலிகுன்றிநிற்க, முத்தியில் வித்து ஆவர் - வீட்டுலகத்தில் முளைக்கும் விதையாவார்கள்.

முத்திபெறத்தக்கவராவரென்பதாம். 'முத்தியில்வித்தாவர்' என்பதை, "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்புக்கோர் வித்து" என்றாற்போலக் கொள்க: அத்திருக்குறளினுரையிற் பரிமேலழகர் "அந்நிலத்திற்சென்று முளைத்தலின், 'வித்து' என்றார்; ஈண்டுப்பிறந்திறந்து வரும் மகனல்லன் என்பதாம்" என உரைத்தது, இவ்விடத்திற்கும் ஏற்கும்.

திருவிளையாடுதிண்டோள்-வெற்றித்திரு நீங்காதுஉறையுந்தோளென, புயவலிமை கூறியவாறும். இனி, பெரியபிராட்டியார் தழுவிவிளையாடப் பெற்ற திண்ணியதோள்களெனினுமாம். திருவிளையாடுதிண்டோள் - திருமகள்விளையாடும்மலைகள்போலுள்ளன தோள்களென்ற குறிப்பு; "திருவிளையாடுதிண்டோள் திருமாலிருஞ்சோலைநம்பி"என்றார் ஆண்டாளும்: 'பெரியபிராட்டியார்க்கு லீலார்த்தமாகச் சேண்குன்று சமைத்தாற்போலே வாய்த்துத் திருத்தோள்களிருப்பது' என்று அங்கு உரைத்தனர் ஆன்றோர். கண்

களிற் சிலசிவந்தரேகைகளிருத்தல் உத்தமவிலக்கண மாதலால், 'செங்கண் மால்' என்றார். செங்கண் -செந்தாமரைமலர்போன்ற கண் என்ற குறிப்பு; செங்கண்மால் - புண்டரீகாக்ஷன். பலராமன் - கண்ணனுக்குத் தமையன், திருமாலின் எட்டாம் அவதாரம்; வசுதேவனுடைய பத்நிகளுள் தேவகியின் ஏழாவது கருப்பத்திலே முதலில் ஆறுமாசந்தங்கிப் பின்பு ரோகிணியின் கருப்பத்திற் சென்றுசேர்ந்து ஆறுமாசம் இருந்து பிறந்தவன். இவனிடத்து ஆதிசேஷாம்சமும் உண்டு. "பலதேவனென்னுந், தன் நம்பியோடப் பின்கூடச்செல்வான்", "பட்டிமேய்ந்தோர்காரேறு பலதேவற்கோர் கீழ்க் கன்றாய், இட்டீறிட்டு விளையாடி யிங்கேபோதக் கண்டீரே" என்றபடி முறைதவறாமல் தமையனான பலராமனுக்குக் கீழ்ப்படிந்து அவனைத்தழுவி நடப்பவன் கண்ணனென்பார், 'பலதேவருடன் மருவிளையான்' என்றார். பலதேவர் என்ற வடமொழிப்பெயர், பலத்தினால் விளங்குபவரென்று பொருள்படும். நம்பிமூத்தபிரா னென்பது, இவர்க்குச் சம்பிரதாயநாமம்.

விளைத்தல் - நிகழ்த்துதல். உருவிளைத்தல் - உருச்சொல்லுதல். 'திருமாலிருஞ்சோலையென வோருரு விளையாமற் பிறப்பார்' எனவே, அங்ஙனம் ஒருமுறைகூறினாலும் முத்திசித்திக்கு மென்பது போதரும். கரு - கர்ப்பமென்ற வடசொல்லின் சிதைவு; பிறப்புக்கு இலக்கணை. காமமற்றுப் புகழோதி - காமியபலன்களை விரும்புதலின்றி [நிஷ்காம்யமாக] எம்பெருமானுடைய கீர்த்தியை எடுத்துச்சொல்லி யெனினுமாம். இனி, 'சிலர், முத்தியிற் காமமற்று - வீடுபெறும்விருப்பமின்றி, திருமாலிருஞ்சோலைமலையென்று ஒருதரமேனுஞ் சொல்லாமல், உலகத்தில் தம்மைப்போலப் பிறந்திறந்து வருந்துபவராகிய பலருடைய புகழை எடுத்தோதி, கரு [பிறப்பு] மேன்மேல் விளைதற்கு வித்தாவர்' என உரைப்பினும் அமையும். (ருஅ)

ருகூ. காமத்தனைப்பொய்யழுக்காறுகோபங்களவுகொலை
யாமத்தனையுமுடையேனையாளுங்கொ லான்பொருப்பாந்
தாமத்தனைவரும்போற்றநின்றான் பண்டுதாமரையோன்
பூமத்தனைச்செய்தநோய்துடைத்தானடிப்போதுகளே.

(இ - ள்.) ஆன் பொருப்பு ஆம் தாமத்து - இடபகிரியாகிய இடத்திலே, அனைவரும் போற்ற நின்றான் - எல்லாரும் (தன்னை) வணங்கும்படி நின்றதிருக்கோலமாய் எழுந்தருளியிருப்பவனும்,—தாமரையோன் - தாமரைமலரில் தோன்றியவனான பிரமன், பண்டு - முன்பு [தன் தலையைக்கிள்ளியகாலத்தில்], பூ மத்தனை செய்த - ஊமத்தம்பூவைச் சூடியவனான சிவபிரானுக்கு உண்டாக்கிய[பிரமகத்திதோஷத்தாற் கையிற்கபாலமொட்டிக் கொண்டதனா லாகிய], நோய் - (பிச்சையெடுத்தல்) துன்பத்தை, துடைத்தான் - தீர்த்தருளியவனு மாகிய எம்பெருமானுடைய, அடி போதுகள் - திருவடித்தாமரைமலர்களானவை,—காமத்தனை - சிற்றின்பவாசையையுடையவனும், பொய் அழுக்காறு கோபம் களவு கொலை ஆம் அத்தனையும் உடையேனை - பொய்யும் பொறாமையும் கோபமும் திருட்டுத்தனமும் கொல்லு

தற்றொழிலு மாகிய அவ்வளவுதீங்குகளையுடையவனுமான என்னை, ஆளும் கொல் - பாதுகாத்தருளுமோ? (எ - று.)

இங்ஙனங் கூறியது, நைச்யாநுஸந்தாநம்; அதாவது தம்மைத் தாழ்த்திக்கூறுவது: "அரும்பாதகன் பொய்யன் காமுகன் கள்வன் அருள்சிறிதும், அரும்பாதகன்னெஞ்சன் ஆரச்சினத்தன் அவாவினின்றூர், திரும்பாதகன் மத்தனேனற்குச் சேடச்சிலம்பமர்ந்த, திரும்பாதகஞ்சந் தரி லதுகானுன்றிருவருளே" என்றூர் திருவேங்கடத்தந்தாதியிலும். "பண்டேயுன் தொண்டாம் பழவுயிரை யென்னதென்று, கொண்டேனைக் கள்வனென்று" என்றபடி எம்பெருமானுக்குஉரியதான உயிரை அங்ஙனம் பகவததீநமென்றுகருதாது ஸ்வதந்திரமென்று எண்ணுதலும், அவ்வாறு மாறுக எண்ணி அதனைக்கெடுத்தலும், 'களவு கொலை' எனப்பட்டன.

அழுக்காறு - பிறராக்கம்பொறாமை; அழுக்கறு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர்: அழுக்கறு-ஒருசொல். இனி, அழுக்கு அறு என்னும்இரண்டு சொற்கள் சேர்ந்து ஒருசொல்தன்மைப்பட்டு, எதிர்மறையிலக்கணையால், குற்றத்தைநீக்கு என்னும் பொருளைத் தாரமல் குற்றத்தையுடையவனுகு எனப் பொருள்பட்டுப் பொறாமையைக் குறித்த தென்றுங் கொள்ளலாம். கொல் - வினு. மத்தம் - ஊமத்தையென்னும் பொருளதாதலை, "காந்தை மத்தமொடெருக்கலர் கூவிளை கடுக்கை,பிறந்தபொற்சடை நின்மலக்கொழுந்து" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. ஊமத்தைக்கு 'பூமத்தம்' என்று ஒருபெயர் வழங்குதலும் உண்டு. (ருக)

கூ0. போதகத்தானும்வெண்போதகத்தானும்புராந்தகனுந்
தீதகத்தானதுதீர்தருங்காலைத்திருவரைசேர்
பீதகத்தாயழுகாவருளாயென்பர் பின்னையென்ன
பாதகத்தான்மறந்தோதனிநாயகம்பாவிப்பரே.

(இ-ள்.) போது அகத்தானும்-தாமரைமலரைத்(தான்பிறந்த) இடமாகவுடையவனுன பிரமனும், வெள் போதகத்தானும் - (ஐராவதமென்னும்) வெள்ளையானையையுடையவனுன இந்திரனும், புர அந்தகனும் - திரிபுரத்துக்கு அழிவுசெய்தவனுன சிவனும்,—அகத்து ஆனது தீது தீர்தரும் காலை- (அசுரர் அரக்கர் முதலிய கொடியவர்கள் செய்யும் உபத்திரவங்களால்) தம் மனத்திலுண்டான துன்பம் நீங்கவேண்டியசமயத்தில், திரு அரை சேர் பீதகத்தாய் அழகா அருளாய் என்பர் - 'திருவரையிற்பொருந்திய பீதாம்பரத்தையுடையவனே! அழகனே! (எம்பக்கல்)கருணைசெய்வாய்' என்று துதித்துப் பிரார்த்திப்பார்கள்; பின்னை - (அப்பரமனருளால் தமதுதுயர்தீர்ந்த) பின்பு,—என்ன பாதகத்தாலோ - என்ன தீவினையினுலோ, மறந்து - (அப்பெருமான் தங்கட்குச்செய்த உபகாரத்தையும் தங்கள்நிலைமையையும்) மறந்துபோய், தனி நாயகம் பாவிப்பர்-ஒப்பற்றதலைமையைத் தமக்குஏறிட்டுக் கொண்டு அதற்குஏற்ப ஒழுகுவார்கள்! (எ - று.)

தமக்கு ஆபத்துவந்தபோது அதனைத்தீர்த்துக்கொள்ளத் திறமில்லாமல் எம்பெருமான் திருவடிகளில் விழுந்து சரண்புகுந்து, அவனுற்காரியங்

கொண்டபின்பு 'யானே முழுமுதற்கடவுள்' என்று செருக்கிப்பேசித் திரிந்து தீவினைக்குஉள்ளாவது என்ன பேதைமை! என்று, பிரமன் முதலிய தலைமைத்தேவர்களின் இயற்கையைக்குறித்து இரங்குகின்றார்.

போதகம் - பத்துப்பிராயத்து யானைக்கன்று; இங்கு யானையென்ற மாத்திரமாய் நின்றது. பீதகம் - பொன்னிறம், பொன். அகத்து ஆனது தீது - தம்மிடத்து உண்டாகிய தீமை யெனினுமாம். (கூ0)

கூக. பாவிக்கமலவிரிஞ்சற்கிறையவர் பத்தர்தங்க
ளாவிக்கமலத்துவீற்றிருப்பா ரளிப்பாடல்கொண்ட
வாவிக்கமலமணநாறுஞ்சோலைமலையைக்கண்ணாற்
சேவிக்கமலமறு மனமேயெழுசெல்லுதற்கே.

(இ - ள்.) மனமே—!—பாவிக்கு - தீவினையுடையவனான எனக்கும், அமல விரிஞ்சற்கு - பரிசுத்தனான பிரமனுக்கும், இறையவர் - தலைவரும், பத்தர்தங்கள் ஆவி கமலத்து வீற்றிருப்பார் - பக்தியுள்ள அடியார்களது இதயகமலத்திலே எழுந்தருளியிருப்பவருமான எம்பெருமானது, அளி பாடல் கொண்ட வாவி கமலம் மணம் நாறும் சோலைமலையை - (தாமரை முதலிய நீர்ப்பூக்களில் மொய்த்தற்கு வருகின்ற) வண்டுகளின் இசைப்பாட்டைக் கொண்ட தடாகங்களின் நீர் (அம்மலர்களின்) நறுமணம்வீசப்பெற்ற திருமாலிருஞ்சோலைமலையை, கண்ணால் சேவிக்க - கண்களால் தரிசித்த மாத்திரத்திலே, மலம் அறும் - (நமது) தீவினைகள் தீரும்; (ஆதலால்), செல்லுதற்கு எழு - (அங்குப்) போதற்குச் சித்தமாவாய்; (எ - று.)

என்று, தம்நெஞ்சைநோக்கி இதமுணர்த்தியவாறாம்.

நைச்யாநுஸந்தாநத்தால் தன்னினுங் கீழ்ப்பட்டா ரில்லை யென்று கொண்டு அங்ஙனம் மிகத்தாழ்ந்தவனான எனக்கும், எல்லாத்தேவர்களையும் படைத்த கடவுளாதலால் மிக்கமேன்மையுடையவனாகிற பிரமனுக்கும் ஒரு நிகராக இயல்பிலே தலைவராய் நிற்பவர் ஸ்ரீமந்நாராயணமூர்த்தி யென்பார், 'பாவிக்கு அமலவிரிஞ்சற்கு இறையவர்' என்றார். 'பாவிக்கு' என்றது, தன்னையே படர்க்கையாகக்கூறியது: தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. [இனி, (தந்தையானபிரமனது தலையைக் கிள்ளிப் பிரமஹத்திதோஷம்பெற்றதனாற்) பாதகமுடையவனான சிவனுக்கும், (அங்ஙனம்சிவபாதியான தனது தலையை அவன்கிள்ளியதற்குத் தானும் எதிரொன்று செய்து தீவினைக்குஉள்ளாகாது அப்பிழையைப்பொறுத்துப்) பரிசுத்தனாய்விளங்கிய பிரமனுக்கும் தலைவ ரென்று உரைத்தலு முண்டு; திரிமூர்த்திகளுள் மற்றையிருவர்க்குந் தலைவ னென்க. "பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும், நாயக னவனே கபாலநன்மோக்கத்துக் கண்டுகொண்மின்" என்ற திருவாய்மொழியும், அதன் வியாக்கியானத்தில் 'நீங்கள் ஈச்வரர்களாக ஸங்கித்தவர்க ளிருவரும் நின்ற நிலை கண்டதே! ஒருவன் தலைவெட்டுகின்றான், ஒருவன் ஓடுகொண்டு ப்ராயச்சித்தியாய் நின்றான். ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமாய், உங்கள் குறைதீரப் பற்றுகிற நீங்கள்

உங்களிலும் பெருங்குறைவாளரையோ பற்றுவது! 'பாதகியாய்ப் பிக்ஷைக்குத் திரிந்தான்' என்று நீங்களே சொல்லிவைத்து, அவனுக்கே பரத்வத்தைச் சொல்லவோ! ஒருவனுடைய ஈச்வரத்வம் தலையோடே போயிற்று; மற்றவனுடைய ஈச்வரத்வம் அவன்கையோடே காட்டிக் கொடுக்கிறார்' என்றதும் இங்கு அறியத்தக்கவை. "பிரமன் சிவனிந்திரன் வானவர் நாயகராய, எங்களடிகள்" என்றார் திருமங்கையாழ்வாரும்.]

"மலர்மிசை யேகினான்" என்றபடி அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தில் எம்பெருமான் அவர்நினைந்த வடிவோடு விரைந்துசென்று சேர்தலால், 'பத்தர்தங்களாவிக்கமலத்து வீற்றிருப்பார்' என்றார்; ஆவி - உயிர்; இங்கு, இலக்கணையாய் மனத்தைக்குறித்தது. கமலம் என்ற வடசொல் - தாமரையையேயன்றி நீரையும் உணர்த்துதலை "ஸலிலம் கமலம் ஜலம்' என்ற வடமொழி நிகண்டினாலும் அறிக; "வநசமும் புனலும் கமலமெனப்படும்" என்பது, பிங்கலந்தை. மூன்றாமடியில் 'கமலம்' என்பதற்கும் தாமரையென்று பொருளுரைத்தல், திரிபிலக்கணத்துக்கு மாறாம்; இரண்டாமடியில் அச்சொல் அப்பொருளில் வந்ததனால். பாடல் - பாட்டுக்கு ஆகுபெயர். இறையவர் - இறைமையென்னும் பண்பினடியாப்பிறந்த பலர்பாற்பெயர். பத்தர்தங்கள் என்றவிடத்து, தம்-சாரியை. வண்டுகளின் இசைப்பாட்டைக் கொண்ட வாவி யென்றும், வாவிநீர் மணநாறு மென்றுஞ் சொன்னதனால், அவ்வாவிகளிலுள்ள நீர்ப்பூக்களின் நறுமணமிகுதி கூறியவாறாம். (௬௧)

௬௨. செல்லுக்குவளை குழனாட்டமென்றுதெரிவையர்பாற்
பல்லுக்குவளைமுதுகாந்தனையும்புன்பாட்டுரைப்பீ
ரல்லுக்குவளையுழும்பாண்டிநாட்டையடைந்துநுங்கள்
சொல்லுக்குவளையுண்டார்க்கலங்காரர்க்குச்சூட்டுமினே.

(இ - ள்.) 'குழல் நாட்டம் - (மகளிரது) கூந்தலும் கண்களும், செல்லு குவளை - (முறையே) மேகத்தையும் நீலோற்பலமலரையும் போலும்', என்று—, தெரிவையர்பால் - அம்மாதர்களிடத்து, பல் உக்கு வளை முதுகு ஆம் தனையும் புல் பாட்டு உரைப்பீர் - பற்கள்விழுந்து கூன்வளைந்த முதுகையுடையராமளவும் இழிவானபாடல்களைப் பாடிப்புகழ்ந்து ஏங்கிநிற்பவர்களே!—(இனியாயினும் நீங்கள்), அல்லு குவளை உழும் பாண்டிநாட்டை அடைந்து - இராப்பொழுதிலே சங்குகள் (நிலத்தில்) உழுதுசெல்லப்பெற்ற பாண்டியநாட்டைச் சேர்ந்து, நுங்கள் சொல்லு - உங்கள்சொன்மாலைகளை, குவளை உண்டார்க்கு அலங்காரர்க்கு சூட்டுமின் - பூமியையும் வெண்ணெயையும் அமுதுசெய்தவராகிய அழகர்க்குச் சமர்ப்பியுங்கள்; (எ - று.)

என்று, பெண்ணாசைகொண்டு அவர்களுடம்பினழகில் ஈடுபட்டு அவர்களைக்குறித்துப் பலவாறுவர்ணித்துக் கவிபாடித்திரியுஞ் சிற்றறிவாளராகிய புலவர்க்கு அறிவுறுத்தியவாறாம்.

செல்லுப்போலுங் குழல், குவளைபோலும் நாட்டம் என முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். 'பல் லுக்கு வளை முதுகாந்தனையும்' என்றது, நீங்கள் மிக்கமுதுமை யடையுமளவும் என்ற

வாறும்; லௌகிகசுகாநுபவத்துக்கு உரிய யௌவநபருவம் கழிந்து நெடு நாளானபின்பும் ஸ்திரீசாபல்யத்தை விட்டிலீரென்க. இதற்கு - அம்மாதர்கள் மிக்கமுதுமையடையுமளவும் என்றும் பொருள்கொள்ளலாம்; அவர்கள் இளமைகழிந்து முற்றமூத்தபின்னரும் நீங்கள் அவர்களைப் பாராட்டுதலை விட்டிலீர்: இது என்ன பேதைமை! என்றவாறு. புன்பாட்டு - சிற்றின்பப் பாடல்; இயல்பிற் சிறப்பில்லாதவற்றைக் குறித்து வீணே சிறப்பித்துச் சொல்லும் பயனில்பாடல். சங்குகள் நீர்வளம்மிக்கஇடத்தே வாழ்தல்இயல்பாதலால், அவைஉழும்பாண்டிநாடு என அந்நாட்டின் நீர்வளச்சிறப்பையுணர்த்தியவாறும். உழும் - சேற்றுநிலத்திலே உழுவதுபோலக் கீற்றையுண்டாக்கிக்கொண்டு செல்லுமென்க; "மானத்துவண்டறாழ்" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். பகலிலே உழவர்கள் உழ இரவிலே சங்குகள் உழுமென ஒருகருத்து அமைய,'அல்லுக்கு வளையுழும்' எனப்பட்டது. அச்சங்குகள் பகலிலே உழவராதுஉழுபடைக்கு அஞ்சி ஒளித்திருக்குமென்றும், அவ்வுழுபடைச்செலவில்லாத இராக்காலத்திலே அவை வெளிப்பட்டு உழுமென்றுங் காண்க. எம்பெருமான் பூமியைஉண்ணுதலாவது - பிரளயகாலத்தில் அதனை வாயினுட்கொண்டு வயிற்றிலுள்வைத்துக் காத்தல். வெண்ணெயை உண்ணுதல், கிருஷ்ணாவதாரத்திலே திருவாய்ப்பாடியில்வளர்ந்த குழந்தைப்பருவத்திலென்க. அமுதுசெய்யுமிடத்து நிலவுலகத்தோடு வெண்ணெயோடு வாசியில்லை ஸர்வசக்தனான எம்பெருமானுக்கு என்பார், 'குவலை உண்டார்க்கு' என்றார்; வெண்ணெயைப்போலவே நிலவுலகத்தையும் மிக எளிதில் உண்பனென்க. "சிறிதமுது,செய்ய அளைக்கும் புவிக்கு மங்காந்த செவ்வாய் முகுந்தன்" என்று திருவரங்கத்தந்தாதியிலும், "தாரணியும், பின்பங்களையு மிழுது முண்டான்" என்று திருவேங்கடத்தந்தாதியிலும் கூறியமை காண்க. 'சூட்டுமின்' என்ற வினையின் ஆற்றலால், சொல் - மாலை யெனப்பட்டது.

(வானத்திற்) செல்லுந்தன்மையது என்பதுபற்றி, செல் என்று மேகத்துக்குக் காரணக்குறியாம். செல்லு, அல்லுக்கு. சொல்லு என்ற இடங்களில், உ - சாரியை. நாட்டம் - நாடுதற்கருவி. தெரிவையர் என்பது, இங்குப் பருவப்பெயராகாமல் மகளிரென்ற மாத்திரமாய் நின்றது: அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவு மென்பர். உக்கு என்பதை உகவெனச் செயவெனெச்சத்திரிபாகக் கொள்ளுதல், இங்கு இலக்கணத்திற்கு ஏற்கும்; பிறகருத்தாவின் வினையைக் கொண்டு முடிதலால். அல்லுக்கு என்பது - இரவில்எனப் பொருள்பட்டதனால், உருபுமயக்கம். பாண்டிநாடு - பாண்டியநாடு என்பதன் மரூஉ. (௬௨)

[மேகவிடுதூது.]

௬௩. சூட்டோதிமஞ்சென்றுசொல்லாதெங்காதலைத் தும்பியிசைப்
பாட்டோதிமங்கையருஞ்பணியார் பண்டுகன்மழைக்காக்
கோட்டோதிமமெடுத்தார் சோலைமாமலைக்கோவலனார்
மாட்டோதிமஞ்சினங்கா ளுரைப்பீர்மறுவாசகமே

(இ - ள்.) மஞ்சு இனங்காள் - மேகக்கூட்டங்களே!—சூடு ஓதிமம் - உச்சிக்கொண்டையையுடைய அன்னப்பறவையானது, சென்று என்காதலை சொல்லாது - (என்தலைவரிடத்துப்)போய் என் ஆசைநோயை (அவர்க்கு) எடுத்துச்சொல்லமாட்டாது; தும்பி இசை பாட்டு ஓதி மங்கையரும் பணியார் - (சூடியமலர்களில் மொய்க்கின்ற) வண்டுகளின் இசைப் பாட்டையுடைய கூந்தலையுடையமாதர்களும் (என்காதலை என்தலைவர்க்குச்)சொல்லமாட்டார்; பண்டு - முன்பு [ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில்], கல்மழைக்கு ஆ - கல்மழையைத் தடுத்தற்காக, கோடு ஓதிமம் எடுத்தார் - (உயர்ந்த) சிகரத்தையுடைய (கோவர்த்தநமென்னும்) மலையை எடுத்துக் குடையாகப்பிடித்தவரும், சோலை மா மலை கோவலனார்மாட்டு - திருமாலிருஞ்சோலைமலையிலெழுந்தருளியிருக்கிற ஆயனாருமாகிய அத்தலைவரிடத்து, ஓதி - (நீங்களாயினும் என்காதலைச்) சொல்லி, மறு வாசகம் உரைப்பீர் - (அவர்சொல்லும்) மறுமொழியை (வந்து எனக்கு)ச் சொல்லுங்கள்; (எ - று.)

கார்காலத்தில் மீண்டுவருவதாகக் காலங்குறித்துச்சென்ற தலைவனைப் பிரிந்த தலைவி, அப்பிரிவுத்துயரையாற்றமாட்டாது பலவாறுவருந்தும்போது, இன்னதுசெய்வதென்று அறியாது திகைத்து "வானமேநோக்கும் மையாக்கும்" என்றபடி அண்ணாந்து வானத்தை நோக்குமளவிலே, அங்குச் செல்லுகின்ற மேகங்கள் கட்புலனாக, அவற்றைப் பார்க்குமிடத்து அவை நிறமுதலியவற்றால் எம்பெருமானுக்குப் போலியாய் விளங்கக் கண்டு இவை நமக்கும் நமதுதலைவர்க்கும் இனியனவாமென்றுகொண்டு அவற்றை நோக்கி 'எனதுநிலைமைகளை எனதுதலைவரான திருமாலிருஞ்சோலையழகர்பக்கல்சொல்லி அதற்கு அவர்அருளிச்செய்கிற மறுமொழிகளைக் கேட்டு மீண்டுவந்து எனக்குச்சொல்லுமாறு நீங்கள் தூதாகவேண்டும்' என வேண்டுகிறாள். "கொண்டல்காள் உம்மைக்குறித்தே தொழுகின்றேன், அண்டர்கோன் அரங்கத்தம்மானைக் - கண்டு, மனத்துளவத்தைப்படு மென் மையவெல்லாஞ் சொல்லிப், புனத்துளவத்தைக் கொணரீர் போய்" என்றார் திருவரங்கக்கலம்பகத்திலும்.

("விதியினாற்பெடைமணக்கும்மென்னடையவன்னங்காள்," "இடரில் போகம்மூழ்கி யிணைந்தாடும் மடவன்னங்காள்," "அலர்மேலசையுமன்னங்காள்," "தடம்புனல்வாயிரைதேர்ந்து, மிகவின்பம்படமேவும்மென்னடையவன்னங்காள்" என்றபடி) அன்னப்பறவை, சிரமம்பொறுததும், மந்தகதியுடையதும், இனியஇடத்தில்வீற்றிருந்து கிடைத்தஇரையை உண்டு பிரிவுத்துயரறியாது தானும் தன்துணையும் கூடிவாழ்ந்து களித்திருப்பதும், தன்னலம் பேணுவது மாதலால், அது அந்தப்போகத்தைவிட்டு எனக்காக அவ்வளவுதூரம் வருந்திச்சென்று விரைவில் என்நிலைமையைத் தலைவர்க்குச் சொல்லி சேரில் மீண்டுவந்து அவர்சொல்லை எனக்குச் சொல்ல மாட்டாதென்பாள், 'சூட்டோதிமம் சென்று சொல்லாது என்காதலை' என்றாள்; ("வாயான் மலர்கோதி வாவிதொறு மேயுமோ, மேயாமலப்பால் விரையுமோ—மாயன், திருமோகூர்வாயின்றுசேருமோ நாளை, வருமோ கூர்வா

யன்னம் வாழ்ந்து" என்று நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில்) ஐயமுற்றுக்கூறியதும் இதுபற்றியே. "இன்னன்னதூதெம்மை யாளற்றப்பட்டிரந்தாளிவளென்று, அன்னன்னசொல்லாப் பெடையொடும் போய்வரும் நீலமுண்ட, மின்னன்னமேனிப்பெருமானுலகிற் பெண்ணூதுசெல்லா, அன்னன்னநீர்மைகொலோ குடிச்சீர்மையி லன்னங்களே" என்று ஆழ்வார் தாம் அன்னங்களைத் தூதுசென்றுதவுமாறுவேண்டவும் அதுசெய்யாதஅப்பறவைகளைக்குறித்து வெறுத்து உரைத்ததுங் காண்க. ("நயந்தவின்பச், சேவல் தழீஇச்சென்று தான் துஞ்சும் யான் துயிலாச் செயிர். எங்காவல் தழீஇயவர்க்கு ஓதாது அளிய களியன்னமே" என்றார் திருக்கோவையாரிலும்.)

சுகதுக்கங்களிலெல்லாம் எமக்குத்துணையாயிருந்து உதவுகின்ற பாங்கியரைத் தூதனுப்பலாமென்று பார்த்தாலோ, அவர்கள் எம்மோடொத்த பருவமுடைய இளமகளிராதலால், அத்தலைவனழகிலீடுபட்டு ஆழ்ந்திடுவரேயன்றி என்காதலை அவனிடம்சொல்லி மறுமொழிகொண்டு மீண்டுவரக்கடவரல்லரென்பாள், 'எங்காதலை மங்கையரும் பணியார்' என்றாள். இயற்கையழகுடனே மலர்சூடுதலாலாகுஞ் செயற்கைநலனுஞ் செய்துகொண்டிருப்பவரென்னும் பொருளில், 'தும்பியிசைப்பாட்டோதி மங்கையர்' எனப்பட்டனர். உத்தமஅங்கமான தலையிலுள்ள கூந்தலினழகை எடுத்துக்கூறியது, மற்றையழகுக்கும் உபலக்ஷணம். மங்கையர்க்கு 'ஓதி' என்ற அடைமொழி கொடுத்ததற்கு ஏற்ப, ஓதிமத்துக்கு 'சூடி' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது.

எம்மை முன்புஒருகால் தடுத்திட்டவரென்று மேகங்கள் அருகிற்செல்லுதற்கு அஞ்சாமைப்பொருட்டு, 'அவர் முன்பு இடைச்சாதியில் வளர்ந்ததுபற்றி அச்சாதிதருமத்துக்குஏற்பப் பசுக்களைக் காக்கப்புக்கவிடத்தும், அவற்றிற்குஇடையூறுசெய்யத்தொடங்கிய உங்கட்கு எதிராக இடையூறொன்றுஞ் செய்யாது, தம்மையும் தம்மைச்சார்ந்தஉயிர்களையும் பாதுகாத்தவளவோடு நின்றருளினராதலால், அதுகுறித்து நீங்கள் அஞ்சவேண்டுவதில்லை' யென்பாள், 'பண்டுகண்மழைக்காக்கோட்டோதிமமேந்தார் கோவலனூர் மாட்டு' என்றாள். அவர் இருக்கிற இடம் நீங்கள் உங்கள்காரியத்திற்காகவே இனிதுசென்றுசேரத்தக்க இடமென்பாள், சோலைமாமலையைக் கூறினாள்; "வருமழைதவழும்மாலிருஞ்சோலைத்திருமலை" என்றிறே ஆழ்வாரருளிச்செயல். கருக்கொண்ட மேகங்கள் சென்று உயர்ந்த மலைச்சிகரத்தில் தங்கி இளைப்பாறிக் கருமுதிர்ந்து மழைபொழிதல்,இயல்பு. உங்கள்காரியத்திற்காக இனத்தோடு உல்லாசமாகப்போய்வரும்போது என்காரியத்தையும் செய்து உதவுங்கள், எனக்கென்று தனியே சிரமப்பட்டுச் செல்லவேண்டுவதில்லையென்றாளாம். அவரையழைத்துக்கொண்டுவருதல், அல்லது அவர்சாத்திய மாலையைவாங்கிவருதல்செய்ய இயலாதேனும், அவர்சொல்லும்உத்தரங்களை எனக்குவந்துசொல்லுதலாவது செய்தால், அவ்வளவுகொண்டே யான் ஆறியிருப்பேனென்பாள், 'ஓதி உரைப்பீர் மறுவாசகம்' என்றாள். "என்திருமார்வற் கென்னை யின்னவாறிவள்காண்மினென்று, மந்திரத்தொன்றுணர்த்தியுரையீர் மறுமாற்றங்களே" என்றார் ஆழ்வாரும்.

'என்காதலை' என்பதை மத்திமதீபமாக முன்நின்ற 'சொல்லாது' என்றதனோடும், பின்நிற்கும் 'பணியார்' என்பதனோடுங் கூட்டுக. இசைப்பாட்டு - சங்கீதம்; என்றது, இங்கு, ரீங்காரத்தை. ஓதி-பெண்களின் தலைமயிர்; (ஓதி ஐம்பால் கூந்தல் கோதை முதலிய சில - மகளிர்தலைமயிர்க்கும், குஞ்சி குடுமி சிகை பங்கி முதலிய சில - ஆடவர்தலைமயிர்க்கும் உரியனவாக வழங்கும்: பிறபலவற்றைஇருபாலார்தலைமயிர்க்கும்பொதுப்படவழங்குவர்.) உம்மை - இறந்தது தழுவியஎச்சம். மாட்டு - ஏழனுருபு. வாசகம் - வடசொல்.

ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமான் மறைந்தவளவிலே, அவனது நிரந்தராநுபவத்தைப் பெறவிரும்பிய ஐயங்கார், தமது நிலைமையை அப்பெருமான்சந்நிதியில் விண்ணப்பஞ்செய்து அவனருளிச்செய்யும் மறுமொழிகளைத் தம்மிடம் வந்து உரைக்கும்படி குணஞ்செயல்களில் அவனோடொத்தவரான பாகவதர்களைப் பிரார்த்தித்தல், இதற்கு உள்ளுறைபொருள். உரியகாலத்தில் எம்பெருமானது குணக்கடலிலே படிந்து அதில் நீர்மையை உட்கொண்டு ஸாரூப்யத்தால் அவன் திருமேனியையொக்கும்படிவுபெற்ற உயிர்களை உய்வித்தற்காகப் பலவிடங்களிற் சஞ்சாரம் பண்ணி ஆங்காங்குக் கைம்மாறுகருதாதே கருணைமழைபொழிந்து நன்மைவிளைத்துப் பிறரை வாழ்வித்தலே பேறாக ஒழுகி உலகமும் உறுதிப்பொருள்களும் நடத்தற்கு ஏதுவாய் இன்றியமையாமைபெற்று விஷ்ணுபதத்தைச் சார்ந்து தெற்குத் திருமலையாகிய திருமாலிருஞ்சோலைமலையிற் சென்று சேர்தற்குப் பிரயாணப்பட்ட பாகவதர்களை, உரியகாலத்திற் கடலிலே படிந்து அதன் நீரை உட்கொண்டு மின்னலோடு கூடிய நீலநிறத்தால் திருமகளை மார்பிற்கொண்ட திருமாலின் திருமேனியை ஒத்து உயிர்களை உய்விக்குமாறு பலவிடங்களில் திரிந்து கைம்மாறுகருதாது மழைபொழிந்து பயன்விளைத்து உலகத்தைவாழ்வித்தலே பேறாக ஒழுகி வான்சிறப்பிற்கூறியபடி உலகமும் உறுதிப்பொருள்களும் நடத்தற்கு ஏதுவாய் இன்றியமையாததாகி, விஷ்ணுபதமெனப்படுகின்ற வானத்தைச் சார்ந்து திருமாலிருஞ்சோலைமலையைக் குறித்துச் செல்லும் மேகங்களென்னத் தகும்.

இங்ஙனம் தமதுஆற்றாமையை ஒருவர்முகமாக அவனுக்கு அறிவிக்க நினைத்து முன்பு சிலரை ஆசாரியராகவரிக்க, அவர்கள் ஸாராஸாரவிவேகமும் பெரும்பான்மை சுத்தகுணமும் நன்னடையும் மற்றையோரினும்மேம்பாடும் விலக்ஷணமான தன்மையும் உடையராயிருந்தும், ஸ்வகாரியபரராய்த் தம்காரியஞ்செய்யாதுவிட்டமை கூறுவார், 'சூட்டோதிமம் சென்றுசொல்லாது' என்றார். என்னினும்மேம்பட்டவர் என்னைஈடேற்றக்கடவரேயன்றி என்னோடொத்த அன்பர்கள் என்னையீடேற்றுதற்கு வல்லராகாரென்பது, 'மங்கையரும் பணியார்'என்றதன் போக்கு. 'பண்டுகன்மழைக்காக் கோட்டோதிமமெடுத்தார் சோலைமாமலைக் கோவலனார்'—ஒருமலையைக் கையிலெடுத்தும் மற்றொருமலையிலே தாம்நின்றும் அடுத்தஉயிர்களைப் பாதுகாப்பவர்: அரியனசெய்து அடிமைகளைக்காத்து அடியவர்க்கெளியராய் நிற்ப

வர். இந்திரன் கல்மழைபொழிவித்ததனால் அதனைக் கல்மலைகொண்டு தடுத்திட்டனர், அவன் நீர்மழைபொழிவித்திருந்தால் அதனை நீர்கொண்டே தடுத்திருப்பர், செயற்கரியனசெய்யுந் திறமுடைய எம்பெருமான் என்ற தாற்பரியம்'கல்மழைக்காலிதியமெடுத்தார்'என்ற சொற்போக்கில் தோன்றுமென்பர் ஆன்றோர். கல்மழை - ஆலாங்கட்டிமழை. பிறவுங் கண்டுகொள்க.

௬௪. வாசம்பரந்ததுழாயுமென்பாடலுமாலை யொளி
வீசம்பரம்பசும்பொன்னுமென்வேட்கையும் வீற்றிருக்குந்
தேசம்பரமபதமுமென்சிந்தையுந் தீவளியா
காசம்பரவைமண்கண்டுண்டமாலலங்காரனுக்கே.

(இ - ள்.) தீ - நெருப்பும், வளி - காற்றும், ஆகாசம் - வானமும், பரவை - கடலும் [நீரும்], மண் - நிலமும் (ஆகிய ஐம்பெரும்பூதங்களை), கண்டு - (ஆதியிற்) படைத்து, உண்ட - (பிரளயகாலத்திலே) விழுங்கியருள்கிற,மால் அலங்காரனுக்கு - பெருமையையுடைய அழகப்பிரானுக்கு,—வாசம் பரந்த துழாயும் என் பாடலும் - நறுமணம்பரவுகின்ற திருத்துழாயும் யான்பாடுஞ் செய்யுளும், மாலை - (சாத்தும்) மாலையாம்; பசும் பொன்னும் என் வேட்கையும்-மாற்றுயர்ந்த பொன்மயமான பீதாம்பரமும் யான்செய்கின்ற பக்தியும், ஒளி வீசு அம்பரம் - காந்தியைவீசுகிற (உடுக்கும்) ஆடையாம்; பரமபதமும் என் சிந்தையும் - ஸ்ரீவைகுண்டமும் அடியேனுடைய மனமும், வீற்றிருக்கும் தேசம் - மிக்கசிறப்பாக எழுந்தருளியிருக்கும் இடமாம்; (எ - று.)

எனது மனம் மொழி முதலியவற்றையெல்லாம் ஸர்வஸ்வாமியாமகனும் ஸர்வரக்ஷகனுமான எம்பெருமான்விஷயத்திலே யான் உபயோகிக்க, அந்த அன்புக்கேற்றபடி அப்பெருமானும் என்பக்கல் அன்புசெய்து அவற்றைத் தனக்கு இனியனவும் உரியனவுமாம்படி அங்கீகரித்தனனென்று அத்திறத்தைச் சொல்லி மகிழ்கிறார். எனதுசொற்கொண்டு யான் தொடுத்துச் சமர்ப்பித்த பாமாலையை அவன் தனக்கு இனிய திவ்வியமான நறுந்துழாய்மாலைபோலவும், யான் அவன்பக்கல்வைத்த காதலை அவன் தனக்கே உரியதாய்ச் சிறக்கிற திவ்வியபீதாம்பரம்போலவும், யான் அவனுக்கு இடமாக ஆக்கிய என்மனத்தை அவன்தான் நித்தியமாக வசிக்குங் கலங்காப்பெருநகரமாகிய பரமபதம்போலவும் போக்கியமாகக்கொண்டருளின னென்பதாம். ("புனையுங்கண்ணி யெனதுடைய, வாசகஞ்செய்மாலையே............ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்த வெந்தை யேகமூர்த்திக்கே," "கண்ணியெனதுயிர்காதல்கனகச்சோதிமுடி முதலா, எண்ணில்பல்கலன்களு மேலுமாடையு மஃதே," "நெஞ்சமே நீணகராக விருந்தவென் தஞ்சனே" என்றஆழ்வாரருளிச்செயல்களைத் தழுவியது, இது) இது,புகழ்பொருப்புமைக்கூட்டவணியின் பாற்படும்.

௬௫. அலங்காரன் சுந்தரத்தோளனழகனணிமுடியி
லிலங்காரனேறுதிருவுடையானெட்டெழுத்துங்கற்றோர்
கலங்காரனங்கன்கணையாலெச்செல்வமுங்காதலியார்
மலங்காரருந்துயர்மேவினுமாகுவர்வானவரே.

(இ - ள்.) அலங்காரன் சுந்தரத்தோளன் அழகன் - அலங்காரனென்றும் சுந்தரத்தோளனென்றும் அழகனென்றுந் திருநாமங்களை யுடையவனும், அணி முடியில் இலங்கு ஆரன் - அழகியமுடியிலே (தரிக்கப்பட்டு) விளங்குகின்ற பூமாலையை யுடையவனும், ஏறு திரு உடையான் - (திருமார்பில்) ஏறிவீற்றிருக்கின்ற திருமகளையுடையவனுமான எம்பெருமானுடைய, எட்டு எழுத்தும்-எட்டெழுத்துக்களையும் [நாராயணநாமத்தையுட்கொண்ட திருவஷ்டாக்ஷரமகாமந்திரத்தை], கற்றார் - (நல்லாசிரியனிடத்திலிருந்து) உபதேசமுகமாகப் பெற்று ஓதியுணர்ந்தவர்கள்,—அனங்கன் கணையால் கலங்கார் - (காதற்கடவுளான) மன்மதனுடைய அம்புகளினால் மனங்கலங்கார்; எ செல்வமும் காதலியார் - எவ்வகைப்பொருட்செல்வத்தையும் விரும்பார்; அருந் துயர் மேவினும் மலங்கார் - பொறுத்தற்கரிய துன்பங்கள் நேர்ந்தாலும் வருந்தமாட்டார்; வானவர் ஆகுவர் - பரமபதத்தையடைபவராவர்.

இது, பெரியதிருமந்திரத்தின்மகிமை கூறியது. அதனைப் பொருளுடன் உணர்ந்தவர்கள், அதற்குஉரிய பகவத்விஷயத்தில் மனஞ்செலுத்துவாரகளேயன்றி, அதற்குமாறான அர்த்தகாமங்களில் மனங்கலங்கார், எவ்வகைத் துயர்வரினும் அஞ்சி நிலைகுலையார், "நஞ்சுதான்கண்டீர் நம்முடைவினைக்கு நாராயணாவென்னும்நாமம்" என்பவாதலால் எல்லாவினைகளுந் தீர்ந்து முத்திபெறுவர் என்பதாம். இதற்கு உதாரணம் - பிரகலாதன் முதலிய பரமபாகவதர் பலர். வானவர் ஆகுவர் - முக்தராவர்.

ஏறுதிருவுடையான்—"அகலகில்லே னிறையு மென் றலர்மேன்மங்கை யுறைமார்பன்;" இனி, இதற்கு - 'நாட்செல்ல நாட்செல்ல ஏறிவருகிற சம்பத்தையுடையவன்' என்றும் உரைப்பர்: இத்தொடர். நாச்சியார்திருமொழியில் வந்துள்ளது. அநங்கன் - அங்கமில்லாதவன்; சிவபிரானால் எரிக்கப்பட்டு உடம்பையிழந்தவன். தாமரைமலர் அசோகமலர் மாமலர் முல்லைமலர் நீலோற்பலமலர் என்ற ஐந்தும், மன்மதனுக்கு அம்பெனப்படும். எவரிடத்தும் நிலைத்திராது நீங்கிச்செல்வதுபற்றி, 'செல்வம்' என்று பெயர். (௬௫)

௬௬. வானவதாரணிசுந்தரத்தோளன் முன்மாவலியைத்
தானவதாரணிதாவென்றமாயன் றராதலத்து
மீனவதாரமுதலானவைவினையின்றியிச்சை
யானவதாரறிவாரவரேமுத்தராமவரே.

(இ - ள்.) வால் - ஒளியுள்ளதும் [அல்லது சுத்தமானதும்], நவம் - புதியதுமாகிய [அதாவது - அன்றலர்ந்த மலர்கொண்டு தொடுக்கப்பட்டதுமாகிய], தார் - மாலையை, அணி - தரித்த, சுந்தரம் தோளன் - அழகிய திருத்தோள்களையுடையவனும், முன் - முன்பு, மாவலியை - மகாபலிசக்கரவர்த்தியை, தானவ தாரணி தா என்ற - 'அசுரனே! நிலத்தைக்கொடு' என்று இரந்த, மாயன் - ஆச்சரியகரமான குணஞ்செயல்களை யுடையவனுமாகிய ஸ்ரீமந்நாராயணன், தராதலத்து - நிலவுலகத்திலே எடுத்த, மீன் அவதாரம் முதலானவை - மத்ஸ்யாவதாரம் முதலியவைகள், வினை இன்றி

இச்சை ஆன - கர்மவசத்தினாலல்லாமல் (அவனது) சங்கல்பமாத்திரத்தாலேயே ஆகிய, அது - அம்மெய்ம்மையை, ஆர் அறிவார் அவரே - யாவர் அறியரோ அவர்தாம், முத்தர் ஆம் அவர் - முத்திபெறுபவராவர்; (எ - று.)

ஜீவாத்மாக்கள் தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவர ரூபங்களாய்ப் பிறப்பது போலக் கருமவசத்தினாலன்றிப் பரமாத்மா உபேந்திர மத்ஸ்ய கூர்மாதி அவதாரங்கள் செய்வது துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநத்தின்பொருட்டும் தருமத்தை நிலைநிறுத்துதற்பொருட்டும் அப்பெருமான் கொண்ட இச்சையினாலேயே யாகுமென்ற இவ்வுண்மையை உணர்தல், அவதாரரஹஸ்ய ஜ்ஞாநமெனப்படும். இந்தஞானத்தையுடையராய்ப் பகவதவதாரங்களை அவனது சங்கல்பத்தினாலாயவையென்றுகொண்டவர், அப்பெருமானது அருள் ஆற்றல் அடியவர்க்கெளிமை முதலிய திருக்கல்யாணகுணங்களில் ஈடுபட்டுத்துதித்து முத்தியையடைவர்; அங்ஙனமன்றி, அவ்வவதாரங்களைக் கருமவசத்தாலாயவையென்றுகொண்டு இகழ்பவர்நரகமடைவர்என்பது, கருத்து. "கோதண்டத்தானத்தன் வாள்கதைநேமியன் கோலவட, வேதண்டத்தானத்தனின்னிசையான் மண்ணும்விண்ணுமுய்ய, மூதண்டத்தானத்தவதரித்தானெனின் முத்திவினைத், தீதண்டத்தானத்தனுமெடுத்தானெனிற் றீநரகே" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும்.

முதலடியில், வான் என்று எடுத்து, மேன்மையான என்றலுமொன்று. நவ தார் - நிலைமொழி வடமொழியாதலின், வருமொழிமுதல்வலி பொது விதிப்படி மிகாது இயல்பாய் நின்றது. தாநவன் என்ற வடசொல் - (காசியபமுனிவனது மனைவியருள்) தநுவென்பவளது சந்ததியானென்று காரணப்பொருள்பெறும்; தத்திதாந்தநாமம். இது, இங்கு, அசுரனென்றமாத்திரமாய் நின்றது: மாவலி, திதிமரபினன். (கக)

[பிரிவாற்றாது வருந்துந் தலைவியைக்குறித்துச் செவிலி இரங்கல்]

கஎ. ஆமவரைப்பணித்தாள்வாரழகரயனுமையாள்
வாமவரைப்பணியான்பணிபாதத்தைவாழ்த்துங் கொங்கை
யேமவரைப்பணிபூணாள் சந்தேந்திழையாளுரைத்தால்
வேமவரைப்பணியாதேயெனுமெங்கண்மெல்லியலே.

(இ - ள்.) எங்கள் மெல்இயல் - மென்மையான தன்மையையுடையவளாகிய எங்கள் பெண்ணானவள்,—ஆமவரை பணித்து ஆள்வார் - (தம்பக்கல்) அநுகூலராய்வருபவர்களான அன்பர்களை அடிமைகொண்டு ஆள்பவராகிய, அழகர் - அழகருடைய, அயன் உமையாள் வாமம் அரை பணியான் பணி பாதத்தை - பிரமனும் பார்வதியைக் கொண்ட இடப்பாகத்தையும் இடையிற் பாம்புக்கச்சையையுமுடையவனான சிவனும் வணங்கப்பெற்ற திருவடிகளை, வாழ்த்தும் - வாழ்த்துவாள்; கொங்கை ஏமம் வரை - பொன் மலைபோன்ற தனங்களின்மீது, பணி பூணாள் - ஆபரணங்களை அணியாள்; ஏந்து இழையாள் சந்து உரைத்தால் - தரித்த ஆபரணங்களையுடையளான பாங்கி சமாதானவார்த்தை சொன்னால், வேம் - உள்ளமும் உடலும் தவிப்

பாள்; அவரை பணியாதே எனும் - '(சிறிதேனும் அன்பும் அருளுமின்றி என்னைவிட்டுப் பிரிந்துசென்ற) அத்தலைவரது பிரஸ்தாபத்தைச் சொல்லாதே' என்று சொல்வாள்; (எ - று.)

தலைமகனோடுகூடிப் பிரிந்த தலைமகள் பிரிவாற்றாமையாற் படுகிற பல வகைத்துன்பங்களையுங் கண்டு ஆற்றமாட்டாளான செவிலித்தாய், தன் ஆற்றாமை மிகுதியால் இரங்கிக்கூறியது, இது.

அழகர்பாதத்தை என இயையும். தலைவனைப்பிரிந்திருக்குங் காலத்திலே அணிகலம்அணியவிரும்பாமையும், தேசாந்தரஞ்சென்ற தலைவனது க்ஷேமத்தைக்குறித்தே எப்பொழுதுஞ் சிந்தித்தலும், கற்புநலமுடையமகளிரது இயல்பு. 'தலைவரைப்பிரிந்ததலைவியர்பலரும் அப்பிரிவை ஆற்றியிருப்பர்: அது நீசெய்யாதது என்னை?'என்றும், ''பிரியேன் பிரியில்தரியேன்' என்றிருக்குமவர் நின்னைப்பிரிந்து நீட்டித்தல் செய்யார்; அவர்சொன்ன சொற்களையும் அவரது நற்றிறங்களையும் நீ அறிந்துள்ளாயாதலால், அவர் கடிதின்வருமளவும் பொறுத்திருக்கக்கடவை' என்றும், மற்றும் பலவாறாகவும் தோழிதேற்றரவுசொல்லச்சொல்ல, இவள்சிறிதும்ஆறுதல்கொள்ளாது தவித்து, 'எம்மை நெஞ்சால்விரும்பாது சொல்மாத்திரத்தால் விரும்பியவரும் அதனால் எம்மைப்பிரிந்துசென்று முன்குறித்தபடி விரைவில் மீண்டு வாராதவருமான அவ்வன்கணாளரது பிரஸ்தாபமொன்றையும் என்செவிப்படச் சொல்லவேண்டா'என வெறுத்துப்பேசுதலால், 'சந்துஏந்திழையாள் உரைத்தால் வேம் அவரைப்பணியாதே யெனும்' என்றாள். மெல்லியல் - இவ்வளவு துயரத்தைப் பொறுக்கமாட்டாத மென்மைத்தன்மை யுடையவளென்றபடி.

பணித்தல் - ஏல்கொள்ளுதல். அயன் - அஜனென்ற வடசொல்லின் விகாரம்; திருமாலிடத்தினின்று தோன்றியவனென்பது, அதன்பொருள்; அ - விஷ்ணு. உமை - ஆவீறு ஐயான வடசொல். 'ஏமவரை' என்றது, மேருமலையை. சந்து - ஸந்தி என்ற வடசொல்லின் விகாரம். மெல்லியல் - பண்புத்தொகையன்மொழி.

எம்பெருமானது பூர்ணாநுபவத்தைப் பெறாதபோது பலவாறுவருந்துகிற ஐயங்காரது நிலைமைகளை அவர்பக்கல்பரிவுடையார் அறிந்து இரங்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். பரிபூர்ணபக்தியுடையராயிருந்தும், உரியகாலத்திலே அவன் தானாகவந்து அருள்புரிவனென்று ஆறிப் பரதந்திரமாயிருத்தல் முதலிய ஆத்மாலங்காரமானகுணங்களை வியாமோகத்தால் மேற்கொள்ளாரென்பது, 'கொங்கையேமவரைப்பணிபூணாள்' என்பதன் உட்கோள். அங்ஙனம் ஆற்றாமைகொண்ட காலத்தில், அன்பர்கள் தேறுதலாக எம்பெருமானது குணநிசயங்களைக் கூறினால், அவற்றை மனங்கொள்ளாது தவிப்பர்: தவித்து, 'அவன் பிரஸ்தாப மொன்றுஞ் சொல்லவேண்டா'என்பர் என்பது-'சந்துஏந்திழையாள்உரைத்தால்வேம் அவரைப் பணியாதே எனும்' என்பதன் போக்கு. ஏந்திழையாள் - ஆத்மாலங்கார குணங்களையுடைய அன்பர். மெல்லியல் - மிருதுஸ்வபாவமுடையவரான

ஐயங்காரென்றபடி. இங்ஙனம் தாய்பேச்சாலே தமதுநிலைமையைக் கூறினார் ஐயங்காரென்க. (கூஎ)

[பிரிவாற்றதுவருந்துந் தலைவிநிலை கண்டு தோழி இரங்கல்.]

கூஅ. மெல்லியலைப்பரியங்கனையாரும்வெறுத்துவசை
சொல்லியலைப்ப ரியங்கவொட்டார் சுடர்மாமலையைப்
புல்லியலைப்பரியங்கத்திலேறும்புயல்பதின்மர்
நல்லியலைப்பரியங்கழற்றாமநயந்தபின்னே.

(இ - ள்.) சுடர் மா மலையை புல்லி - விளங்குகின்ற பெரிய திருமாலிருஞ்சோலைமலையை அடைந்து அதில்எழுந்தருளியிருப்பவனும், அலை பரியங்கத்தில் ஏறும் புயல் - (திருப்பாற்)கடலிலே (ஆதிசேஷனாகிய) கட்டிலில் ஏறிப் பள்ளிகொண்டருளும் மேகம்போன்றவனுமான அழகப்பிரானது, பதின்மர் நல் இயலை பரி அம் கழல் - பத்து ஆழ்வார்களுடைய சிறந்த தமிழ்ப்பிரபந்தங்களை ஏற்றுக்கொண்ட அழகிய திருவடிகளிற் சாத்திய, தாமம் - மாலையை, நயந்த பின் - (இம்மடமகள்) விரும்பியபின்பு,—மெல் இயலை - மென்மைத்தன்மையுடையளான இவளை,—பரி அங்கனையாரும் - அன்புகொண்டுடத்திவந்த மாதர்களும் [செவிலித்தாயரும் என்றபடி], வெறுத்து—, வசை சொல்லி - பழிமொழிகூறி, அலைப்பர் - வருத்துவார்கள்; இயங்க ஒட்டார் - (இவள்விருப்பத்தின்படி இவளைச்) செல்லவிடமாட்டார்கள்; (எ - று.)

இங்ஙனம், தலைவனைக் களவொழுக்கத்திற்கூடிப்பிரிந்து வருந்துகின்ற தலைவியைக்குறித்துச் செவிலியர் முனிந்துசொல்லுஞ் சொற்களைப்பற்றியும், அவர்கள்செய்யும் பாதுகாவலைப்பற்றியும் தோழி இரங்கிக்கூறினாள்.

முதலடியில், பரிதல் - அன்புசெய்தல். 'மெல்லியலை' என்பது—பரி, வெறுத்து, சொல்லி, அலைப்பர், இயங்கவொட்டார் என்பவற்றோடெல்லாம் சேரும். 'பரிஅங்கனையார்' எனவே, செவிலித்தாயரென்றாயிற்று. அன்பிலரான அயலார் அலர்தூற்றிவருத்துதலேயன்றி, இவள்பக்கல் பரிவுடையரான செவிலியரும் வெறுத்து வசைசொல்லியலைப்பரென்னுங் கருத்தைத் தருதலால், உம்மை - உயர்வுசிறப்போடு இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. இயங்கவொட்டார் - குடிக்குப்பழிநேர்தற்கு அஞ்சி, இவளைப் புறம்போகவொட்டாது பாதுகாவலில் வைத்திருப்பரென்றபடி. புல்லி - ஆண்பாற்பெயர்; சங்கேந்தி, பிறைசூடி என்பன போல. புயல் என்பது - சொல்லால் அஃறிணையாயினும், உவமையாகுபெயராய்ப் பொருளால் உயர்திணையாதலால், 'புல்லி' என்ற உயர்திணைப்பெயர் அதனை விசேடித்தது. இனி, பிரகாசமுள்ளதொரு பெரிய மலையைப் போன்ற திருவநந்தாழ்வானாகிய சயநத்தில் ஏறிப் பள்ளிகொண்டுள்ள மேகம்போன்றவ ரென்றேனும், பிறவாறாகவேனும் பொருள்கூறுதல் பொருந்தாது; ஏனெனின்;— இவ்வகைப்பிரபந்தத்திற் செய்யுள்தோறும் பிரபந்தத்தலைவன் பெயரையேனும் அவனது ஊர்ப்பெயரையேனும் கூறும் மரபு, இச்செய்யுளில் தவறிய

தாய்விடும். புயல்கழல் என இயையும். பதின்மர் - தொகைக்குறிப்பு. நான்காமடியில், பரித்தல் - மேற்கொள்ளுதல். சுடர்மாமலை - சூரியசந்திரர்கள் பிரதக்ஷிணஞ்செய்யப்பெற்ற திருமாலிருஞ்சோலைமலை யெனினுமாம்; "திரி சுடர் சூழும் மலை திருமாலிருஞ்சோலையதே" என்றார் பெரியாழ்வாரும். நம்மாழ்வார் "புயன்மழைவண்ணர்புரிந்துறை கோயில், மயல்மிகு பொழில் சூழ்மாலிருஞ்சோலை" என்றதுகொண்டு, திருமாலிருஞ்சோலை யெம்பெருமானை 'புயல்' என்றார்; வடிவழகிலும் வரையாது அருளும் வள்ளன்மையிலும் காளமேகம்போன்ற பெருமான் என்க.

எம்பெருமானது பிரிவையாற்றாது வருந்துகின்ற ஐயங்காரது நிலைமைகளைக் கண்ட அன்பர்கள் இரங்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறை பொருள். 'பரிஅங்கனையார்' என்றது, இவர்பக்கல்பரிவுடையரான அறிவாளர்களை. இயக்கவொட்டார் - இவரை விரும்பியபடி செல்லவிடார். புயல் கழல்தாமம்நயந்தபின் - புயன்மழைவண்ணனான அழகரது திருவடிகளின் இனிமையை இவர்விரும்பியபின்பு என்றபடி. மற்றவை, கீழ் ௨௭-ஆங் கவிக்குக் கூறியவாற்றால் விளங்கும். (௬௫)

௬௬. பின்னிறப்பும்பிறப்புநரைமூப்பும்பிணியுமனை
முன்னிறப்பும்பிரித்தா னிருந்தானவர்மூதிலங்கை
மன்னிறப்புங்கக்கணைதொட்டசோலைமலையழகன்
பொன்னிறப்புண்டரிகத்திருத்தாளன்றிப்போற்றிலமே.

(இ - ள்.) பிறப்பும் - ஜநநத்தையும், பின் இறப்பும் - அதன்பின்நேரக்கடவதான மரணத்தையும், நரை மூப்பும் - மயிர்நரைக்கப்பெறுகிற முதுமையையும், பிணியும் - வியாதிகளையும், மனை முன் இறப்பும் - (இவற்றிற்கெல்லாங்காரணமாய்)வீட்டின் மேலிறப்புப்போல (உயிரை)க் கவிந்துகொள்வதான கருமத்தையும், பிரித்தான் - இயல்பில் நீக்கியுள்ளவனும், இருந்தானவர் - பெரிய அசுரர்களும், மூது இலங்கை மன் - பழமையான இலங்காபுரியின் அரசனாகிய இராவணனும், இற - அழியும்படி, புங்கம் கணை தொட்ட-சிறந்த அம்புகளைத் தொடுத்தவனுமான, சோலை மலை அழகன்-திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற அழகப்பிரானது, பொன் நிறம் புண்டரிகம் திரு தாள் அன்றி-பொன்னிறமுள்ளசெந்தாமரைமலர்போன்ற திருவடிகளையல்லாமல், போற்றிலம் - (வேறொன்றை)வணங்கோம், (யாம்).

கருமங்களும் கருமவசத்தாலாகும் பிணிமூப்புக்களும் பிறப்பிறப்புக்களும் இல்லாதவன் எம்பெருமானென்பது, முதல்விசேஷணத்தினால் தேர்ந்தபொருள். இறப்பு,பிறப்பு,மூப்பு - 'பு'விகுதிபெற்ற தொழிற்பெயர்கள். 'மனைமுன்இறப்பு' என்றது,வீட்டின்மேலுள்ள இறப்புப்போல ஒருயிரைக் கவிந்து புண்ணியம் பாவம் என்னும் இருபகுப்புடையதான கருமத்தைக் குறித்தது; உவமையாகுபெயர்: பாரதவெண்பாவில் "வாய்த்த, பிறப்பைக் கழித்தேன் பெரும்பதம்பெற்றேனென், றிறப்பைப்பிரித்தானெழுந்து", "தன்னுடைய கூரை பிரித்தான்"என்றவை, இங்கு ஒப்புநோக்கத்தக்கவை.

இனி, 'மனைமுன் இரப்பும்' என்பதற்கு - குடும்பத்திற்சென்று தடுமாறுதலையும் என்று உரைப்பாருமுளர்; இப்பொருளில், மனை-ஆகுபெயர்; முன் - ஏழனுருபு. இரப்பு - செல்லுதல். 'பிறப்புந்நகை' என்றவிடத்து, நகரவொற்று - விரித்தல்விகாரம்.

காசியபமுனிவர்மனைவியருள் தநுவென்பவளது சந்ததியாரான அசுரர்களைக் குறித்தற்கு உரிய தாநவரென்ற சொல், இங்கு அரக்கரைக் குறித்தது, கொடுமையிலொற்றுமையால்; "தாசையாடைமுடியோடிக் காதல்செய் தானவனூர்", "தையலாள்மேற் காதல்செய்த தானவன் வாளரக்கன்" என்ற அருளிச்செயல்களிலும் இங்ஙனங் காண்க. இனி, அசுரரென்றே கொள்ளினும் பொருந்தலாம்; இராமபிரான் ஆக்நேயாஸ்திரம் பிரமோகித்துக் கடலைவற்றுவிக்கத் தொடங்கியபோது, தாபமடைந்து அஞ்சிக் கதறியோடிவந்து சரண்புகுந்து ஒடுங்கிநின்று தன்பிழையைப்பொறுத்தருளுமாறு பிரார்த்தித்த வருணனுக்கு அப்பெருமான் அபயமளித்து அவனை நோக்கி 'எனது அம்பு வீண்போகாதாதலால், அதற்கு இலக்கு என்?' என்ன, நீர்க்கடவுள் 'மருகாந்தாரமென்ற தீவில் நூறுகோடிக்கும் மேலாக வாழ்கிற அசுரர்கள் மிகக்கொடியராய் உலகத்தை வருத்துதலால், அவர்கள்மேல் இந்தஅனலம்பை விடுத்தருள்க' என்றுசொல்ல, இராமமூர்த்தி அங்ஙனமே அதனைவிடுத்து அவ்வசுரர்களனைவரையும் எரித்தொழித்தனனென்ற வரலாறு காண்க; "கடல்தானவர்தேசங்கத்த மரம்பட வெய்த சார்ங்கத்தனுவரங்கன்" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும்.

இலங்கை, ஆதியில் தேவசிற்பியான விசுவகர்மாவினால் இந்திரனுக்காக நிருமிக்கப்பட்டு, பின்பு மாலியவான்முதலிய பூர்விகராக்ஷசர்க்கும், அதன்பிறகு குபேரனுக்கும், அப்பால் இராவணனுக்கும் இராசதானியாயினமை தோன்ற, 'முதிலங்கை' எனப்பட்டது. மன் - பெருமை; அதனையுடையனான மன்னனுக்குப் பண்பாகுபெயர். புங்கம் - உயர்வு; அம்புக்குதையுமாம். புண்டரீகம் - இது வெண்டாமரைக்குப் பெயரென்று வடமொழிநிகண்டுகளிற் கூறப்பட்டிருப்பினும், இங்கு, தகுதிபற்றி, செந்தாமரையைக் குறித்தது; 'புண்டரீகாக்ஷன்' என்ற இடத்துப் போல. போற்றிலம் - பரதேவதைக்கு ஆட்பட்ட யாம் அப்பரமன்திருவடிகளையன்றிப் பிறிதொன்றை வணங்கோம் எனக் களிப்புத்தோன்ற உயர்வுத்தன்மைப்பன்மையாற் கூறினர்.

[பிரிவாற்றாத தலைவி, செவிலியரைக்குறித்து இரங்குதல்.]

௭௦. போற்றியிராமவென்றார் சோலைமாமலைபோதவிடார்
மாற்றியிராவைப்பகலாக்கிலார் வண்டுழாய்குழன்மே
லேற்றியிராசதமாகவையா ரென்னிடரையெல்லா
மாற்றியிரா ரன்னைமா ரென்னைவாய்வம்பளக்கின்றதே.

(இ - ள்.) அன்னைமார் - (எனது) தாய்மார்,—(யான்கொண்ட நோய்க்குப் பரிகாரமாக), இராம போற்றி என்றார் - 'இராமபிரானே! வாழ்வாயாக' என்று (அத்தலைவன்பெயரைச்) சொல்லி வாழ்த்தமாட்டார்கள்; சோலை மா மலை போத விடார் - (என்னை அவனது) திருமாலிருஞ்சோலை

மலையிற் சென்றுசேர விடார்கள் ; இராவை மாற்றி பகல் ஆக்கிலார்-இராப் பொழுதை மாற்றிப் பகற்பொழுதாக்கமாட்டார்கள்; வண் துழாய் குழல் மேல் ஏற்றி இராசதம் ஆக வையார் - (அத்தலைவனுடைய) செழிப்பான திருத்துழாய்மாலையைக் கொணர்ந்து என்) கூந்தலின்மேற் சூட்டி மேன் மையாகவைக்கமாட்டார்கள்; என் இடரை எல்லாம் ஆற்றிபிரார் - யான் படுந் துன்பங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டிருக்கமாட்டார்கள்; என்னை வாய் வம்பு அளக்கின்றதே - என்னைக்குறித்து வாயினால் வம்பளக்கின் றதே, (இவர்கள்தொழிலாயிருக்கின்றது)! (எ - று.)

களவொழுக்கத்தால் தலைவனைக்கூடிப்பிரிந்து வருந்துந் தலைவி, தனது தளர்ச்சியை ஊரலர்முதலியவற்றாலறிந்த செவிலித்தாயர் அதற்குத்தக்க பரிகாரமொன்றுஞ்செய்யாது முனிந்துகூறும் வார்த்தைகள் தன்வருத்தத் தை மிகுவித்தல்பற்றி, இரங்கிக்கூறியது, இது. ஈற்றில் ஏற்ற வினைமுற்று வருவித்து முடிக்கப்பட்டது. இனி, 'என்னை' என்பதை வினாவடியாகப்பிற ந்த 'என்'என்னுங் குறிப்புமுற்றின் விகாரமெனக் கொண்டு, (இவர்கள் என்னைக்குறித்து எப்பொழுதும்) வாயினால் வம்பளக்கின்றது என்னே? என்று உரைத்தலுமொன்று. இவர்கள் எனது நோய்க்கு ஏற்ற பரிகார மொன்றுஞ் செய்யாராயினும், சும்மாஇருத்தலாவது செய்யலாமே; அதுவு மின்றி எனக்கு மேன்மேல் வருத்தம்மிகுமாறு என்னைக்குறித்துப் பலவாறு வம்பளப்பது தகுதியோ? என்பதாம். வம்புஅளத்தல் - வீணே நிந்தித்துப் பேசுதல்; கீட்டரவார்த்தைகளைக் கூறுதல். இங்கு 'வாய்' என வேண்டாது கூறியது, இவர்கள்வாய் இத்தியசொற்களைப் பயின்றுள்ளதெனத் தான்வே ண்டியதன் இழிபு முடித்தற்கு: திருக்குறளில் "இறந்தார் வாயின்னாச் சொல்" என்றவிடத்துப் போல

("மதுவார்துழாய்முடிமாயப்பிரான்கழல்வாழ்த்தினால், அதுவே யிவளு ற்ற நோய்க்கு மருமருந்தாகுமே," "உலகேழுமுண்டான், சொன்மொழி மாலையந்தண்ணந்துழாய்கொண்டு சூட்டுமினே," "ஆணையால்நீரென்னைக் காக்கவேண்டி லாய்ப்பாடிக்கே யென்னையுய்த்திடுமின்" என்றபடி), பிரிந்த நிலையிலே தலைவிசெவிப்படத் தலைவன்பெயரைச் சொல்லி வாழ்த்துதலும், அவன்சாத்திய மாலையைக் கொண்டுவந்து தலைவியின்முடியிற் சூட்டுதலும், தலைவியை அவன்வாழுமிடத்தே கொண்டுபோய்ச்சேர்த்தலும், அவள்கொ ண்ட காதல்நோய்க்குப் பரிகாரமாகும்: அவற்றி லொன்றையும் இச்செவி லித்தாயர் செய்திலரென்று அவர்களை வெறுத்துரைத்தாள். இந்நோய் தீர்த்தற்குத் தலைவனது திருநாமத்தைச் சொல்லி வாழ்த்துதல் தக்கமந்திர மும், அவனது பிரசாதமான திருத்துழாய் பசுமருந்துமா மென்க. 'வண் துழாய்குழல்மேலேற்றி' என்றதனால், அந்தச்சஞ்சீவிமூலிகைதான் உட்கொ ள்ளவேண்டியஅவசியமுமின்றித் தலைமேற்கொண்டு நன்குமதித்தவளவிலே உயிர்காக்கவல்லதென்றுதோன்றும். "கெண்டையொண்கணும்துயிலுமென் னிறம், பண்டுபண்டுபோலொக்கும் மிக்கசீர்த், தொண்டரிட்டபூந்துளவின் வாசமே, வண்டுகொண்டுவந்து தூமாகிலே" என்றபடி அத்திருத்துழாயின் காற்று இவள்மேலேபட்டாலும் இவள்நோய்க்குப் பரிகாரமா மென்க.

நோயாளிகட்கு உட்செலுத்துவதொருமருந்தும் மேலிற்பூசுவதொருமருந்தும் உபயோகித்தல்போல, தலைவன்திருநாமத்தை இவள்செவிவழியாக உள்ளேபுகும்படி உச்சரித்துப் புறம்பே அவன்சாத்தின திருத்துழாய்மாலையைக் கொண்டுவந்து இவட்குச்சூட்டுதல் இந்நோய்தணித்தற்கு ஏற்ற பரிகார மென்க. தலைவன் தானாகவருமளவும் பார்த்து ஆறியிருக்கின்ற இயல்பை இழந்து, அவனிருக்கிறவிடத்தே தான்சென்று அவன்முகத்தைக்கண்டு பிழைக்கலா மென்றும், தான் அவன்கண்ணெதிரிற்சென்று நின்றால் அவன் கண்ணோட்டத்தைப் பெறலா மென்றுங் கருதி விரைவில் அங்குச்செல்ல விரும்பிய தலைவி, தனக்குக் காலநடைதாராதபடி வலியழிவு மிக்கதனால், தானாக அங்குச்சென்று சேரமாட்டாது, தன்னை அங்குக்கொண்டுபோய்விடுதற்குப் பிறருதவியை வேண்டுகின்றாளாகி, அவர்கள் அதற்குஇணங்கி உதவினார்களில்லையே யென்று வெறுத்தாள். இவ்வளவுஞ்செய்யாதவர், கலவிக்கு உரியகாலமாதலால் மிகவும்வருத்தத்தைத்தருகிற இராப்பொழுதைப் பகற்பொழுதாக மாற்றுதலேனுஞ் செய்தால், அப்பொழுது யான் ஆறியிருக்கவில்லை யென்று என்மேற் பழிகூறலாம்; அதுவுஞ்செய்திலரே யென்பாள், 'மாற்றி யிராவைப் பகலாக்கிலார்' என்றாள். 'என் இடரையெல்லாம் ஆற்றியிரார்' என்றது, எனது துன்பங்களையெல்லாந் தணித்தில ரென்றும் பொருள்படும்.

போற்றி - இகரவீற்றுவியங்கோள்; வாழியவென்பது வாழியென விகாரப்படுதல்போல, போற்றிய வென்னும் யகரவீற்றுவியங்கோள் போற்றியென விகாரப்பட்ட தெனினும் பொருந்தும். ராமன் என்ற திருநாமம் - (தனது நற்குணநற்செய்கைகளாலும் திருமேனியழகினாலும் தன்பக்கல் அனைவரும்) மனங்களித்திருக்கப் பெற்றவன் என்று பொருள்படும். இராசதம் - ராஜத்வம் என்பதன் விகாரம்: அரசனதுதன்மை யென்பது, அதன் பொருள்; இலக்கணையாய், மேன்மையை உணர்த்திற்று. நான்காமடியில், மாற்றியிரார் என்று பதம்பிரித்தல், நிரிலக்கணத்துக்கு மாறாம்; இரண்டாமடியில் 'மாற்றி' என்று எடுத்தகனே.

தமதுஞானக்கண்ணுக்குப்புலனான எம்பெருமான் மறைந்தவளவிலே, அவனது நிரந்தரானுபவத்தைப் பெறும் விருப்பத்தால் வருந்துகின்ற ஆழ்வார், தம்பக்கல்பரிவுடையாரான அறிவுடையார் அச்சமயத்தில் தமதுதுயர்க்கு ஏற்ற பரிகாரமொன்றுஞ் செய்யாது 'இப்படி இவர் அவனாகவருளுங்காலத்தை எதிர்பார்த்து ஆறியிராது விரைவுகொள்வது இவரதுசொரூபத்துக்குத் தகாது' என்று சொல்வாராக, அதுகுறித்து இரங்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். இவர்காதிற்படும்படி பகவந்நாமோச்சாரணஞ்செய்தலும், அவனுக்குப் பல்லாண்டு பாடுதலும், அவனெழுந்தருளின திருப்பதியில் இவரைக்கொண்டுபோய்ச்சேர்த்தலும், அவனதுபிரசாதமான திருத்துழாயைக்கொணர்ந்து இவர்முடிமீது வைத்தலும், இவரதுஆற்றாமையை ஒருவாறுதீர்க்கக்கடவனவாக, அவற்றில் ஒன்றையேனும் அவர்கள் செய்திலரென்க. வண்துழாய் குழல்மேல்ஏற்றி இராசதமாகவைத்தல்—பகவத்பிரசாதத்தைச் சிரஸாவகித்தல் தம்முடிக்கு அலங்கார மென்க. இரா

கைமாற்றிப்பகலாக்கிலார் - இங்ஙனம் ஏதேனும்பரிகாரஞ்செய்து, பிரிவுத் துயர்பொறுக்கவொண்ணாத காலத்தை அதனைப்பொறுத்திருக்குங்காலமாக மாற்றினார்களில்லையே! என்று இரங்கியவாறு; மோகாந்தகாரத்தால் மறையும் விவேகத்தை அங்ஙனம்மறைந்திடாதபடி செய்கில ரென்றவாறுமாம்.

எக. அளப்பதுமங்கையினீரேற்பதுந்தந்தளிப்பதும்பின்
பிளப்பதுமங்கையில்வெண்கோட்டிற்கொள்வதும்பேருணவா
கிளப்பதுமங்கையெனத்தோள்புணர்வதுங்கேட்கில்வையம்[க்
வளப்பதுமங்கையஞ்சேர்சோலைமாமலைமாதவரே.

(இ - ள்.) வளம் பதுமம் - செழிப்பான தாமரைமலர்கள், கையம் சேர் - தடாகங்களிற் பொருந்திய, சோலை மா மலை - திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற, மா தவர் - திருமகள்கொழுநரான திருமால்,—அளப்பதும் - (காலினால்) அளந்துகொள்வதும், அம் கையில் நீர் ஏற்பதும் - அழகிய கையில் தாரைவார்க்கும்நீரோடு தானமாகஏற்றுக்கொள்வதும், தந்து அளிப்பதும் - (ஆதியிற்) படைத்து(ப் பின்பு) காப்பதும், பின் பிளப்பதும் - இறுதியில் அழிப்பதும், ஐயில் வெள் கோட்டில் கொள்வதும் - கூரிய வெண்ணிறமான கோரதந்தத்தாற் குத்தியெடுப்பதும், பேர் உணவு ஆ கிளப்பதும் - (தமக்கு ஏற்ற) சிறந்தஉணவாகச் சொல்வதும், மங்கை என தோள் புணர்வதும் - மனையாளாகக்கொண்டு தோள்களைத் தழுவுவதும்,—கேட்கில் - (ஆகிய இவையெல்லாம் எதனையென்று) கேட்குமிடத்து, வையம் - பூமியையாம்; (எ - று.)—இரண்டாமடியில், 'அங்கு' - அசை.

("அடங்கைதடங்கைவனஞ்சூழரங்கத்தரவணைமேற்,கிடந்தனர் தூங்கக் கிரிநிசைநின்றனர் சேழலொன்றாய்,இடந்தனர் மீளவிழுங்கினர் கான்றனர் ரீரடியாற்,கடந்தனர் கைவழிமண்ணான திந்தமண்காரணர்க்கே" என்று திருவரங்கத்துமாலையிலும், "வாயுண் டுமிழ்ந் தளந்து, காத் தாண்ட மண்டலத்தார்" என்று திருவேங்கடமாலையிலும் கூறியமை காண்க; "மண்ணை யுண்டுமிழ்ந்து பின்னிரந்துகொண்டளந்து","பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்ட பேராளன்" என்றார் ஆழ்வார்களும்.) அங்கையில்நீரேற்றது, வாமநாவதாரத்தில்; அளந்தது, திரிவிக்கிரமாவதாரத்தில்; தந்தது, ஆதிசிருஷ்டியில்; அளிக்கின்றது, எப்பொழுதும்; அழிப்பது, கற்பாந்தகாலத்தில்; கூரிய கோட்டினாற் குத்தியெடுத்தது, வராகாவதாரத்தில்; உணவென்று உகந்துகொள்வது, பிரளயகாலத்தில்; மங்கையெனத் தோள்புணர்வது, எக்காலத்தும் எனக் காண்க. மங்கை = ஸ்ரீபூமிப்பிராட்டி.

அயில் = ஐயில், கயம் = கையம்: திரிபுநோக்கிய மூதற்போலிகள். 'அளப்பது' முதலியவற்றைச் செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினையாக்கொண்டு, அவற்றிற்கெல்லாம் வையத்தைப் பெயர்ப்பயனிலை யாக்கியுரைப்பினும் அமையும். 'மாதவரே' என்பதை விளியாகக்கொண்டு, 'நீவிர்' என வருவித்து, 'அளப்பது' முதலியவற்றோடு சேர்த்து உரைக்கவும் இடமுண்டு. மாதவன்—மா - இலக்குமி, தவன் - கணவன். (எக)

எஉ. மாதவராலும்பராலறியார் மதுரைப்பிறந்த
யாதவ ராலிலைமேற்றுயின்றா ரிருந்தாழ்சுனையிற்
போதவராலுகண்மாலிருஞ்சோலையிற்போம் பிறவித்
தீதவராலன்றியெத்தேவராலுந்தெறலரிதே.

(இ - ள்.) மா தவரால் உம்பரால் அறியார் - பெருந்தவமுடைய முனிவர்களாலும் தேவர்களாலும் (உள்ளபடி) அறியவொண்ணாதவரும், மதுரை பிறந்த யாதவர் - வடமதுரையில் திருவவதரித்த யதுகுலத்தோன்றலும், ஆல் இலைமேல் துயின்றார் - (பிரளயப்பெருங்கடலில்) ஆலிலையின்மீது கண்வளர்ந்தருளியவருமாகிய எம்பெருமானுடைய, இருந் தாழ் சுனையில் போத வரால் உகள் மாலிருஞ்சோலையில் - பெரிய ஆழ்ந்த சுனைகளிலே மிகுதியாக வரால்மீன்கள் துள்ளப்பெற்ற திருமாலிருஞ்சோலைமலையில், போம் - (நீங்கள்) சென்றுசேருங்கள்; பிறவி தீது அவரால் அன்றி எ தேவராலும் தெறல் அரிதே - பிறப்புத்துன்பம் அப்பெருமானாலன்றி வேறு எந்தக்கடவுளாலும் நீக்குதற்கு அருமையானதாம்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - தேற்றம்.

என்று உலகத்தார்க்கு உணர்த்தியவாறும்.

"எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும் மற்றும்,ஒருத்தரும் இப்பிறவியென்னும்நோய்க்குமருந்தறிவாருமில்லை, மருத்துவனாய்நின்றமாமணிவண்ணா மறுபிறவிதவிரத், திருத்தி யுன்கோயிற்கடைப்புகப்பெய் திருமாலிருஞ்சோலையெந்தாய்" என்ற அருளிச்செயல் இங்கு அறியற்பாலது.

மதுவென்னும் அசுரனால் முதலில் அமைக்கப்பட்ட நகரமாதலாலும், பின்பு மதுவென்னுஞ் சந்திரகுலத்து அரசனாற் சீர்திருத்தியாளப்பட்டதனாலும்,கண்ணுக்குஇனியதாயிருத்தலாலும்,மதுராஎன்றுபெயர்; அவ்வடசொல் மதுரையென ஆவீறு ஐயாயிற்று. இங்குக்குறித்தது,வடமதுரை: யமுநாநதிதீரத்தி லுள்ளது. யாதவர்-கண்ணபிரான்; யதுவென்னும்அரசனது மரபிற் பிறந்தவர் என வடமொழித்தத்திதாந்தநாமம்: (யதுவென்பவன், சந்திரவம்சத்திற் பிரசித்திபெற்ற ஓரரசன்; யயாதியின் குமாரன்.) சுனை-மலையிலுள்ள நீர்நிலை. 'இருந்தாழ்சுனையிற் போத வராலுகள்' என்ற அடைமொழி, அம்மலையின் நீர்வளமிகுதியைக் காட்டும். (எஉ)

எ௩. அரியவரந்தந்தயன்முதலோர்க்கருள்செய்தவரைப்
பெரியவரந்தமில்வாழ்வினராக்கித்தம்பேரருளாற்
கரியவ ரந்தணர்கைதொழுமாலலங்காரர் வையத்
துரியவரந்தரங்கத்துயர்தீர்க்கவுலாவுவரே.

(இ - ள்.) கரியவர் - கரியதிருநிறமுடையவரும், அந்தணர் கை தொழும் மால் அலங்காரர் - வேதியர்கள் கைகூப்பிவணங்கப்பெற்ற பெருமையுடைய அழகருமாகிய எம்பெருமான்,— அயன் முதலோர்க்கு - பிரமன் முதலிய தலைமைத்தேவர்கட்கு, அரிய வரம் தந்து அருள்செய்து - (பெறுதற்கு) அரிய வரங்களைத் தந்து கருணைபுரிந்து, அவரை - அவர்களை, பெரிய

வர் அந்தம் இல் வாழ்வினர் ஆக்கி-பெருமையையுடையவர்களாகவும்(கல்பாந்தகாலமளவும்) முடிவில்லாதவாழ்வையுடையவர்களாகவுஞ் செய்து,—தம் பேர் அருளால் - தமது பெருங்கருணையினால், வையத்து - நிலவுலகத்திலே, உரியவர் அந்தரங்கம் துயர் தீர்க்க உலாவுவர் - (தமக்கு) உரியவர்களான அடியார்களுடைய மனத்துன்பங்களை நீக்குதற்பொருட்டு உலாவுவர்;(எ-று.)

விபவம் அர்ச்சை அந்தர்யாமித்வம் இவைகளையுடையராய் எங்கும் வியாபித்திருப்ப ரென்றபடி. 'வாழ்வு' என்றது - ஆயுளையும், செல்வத்தையும் உணர்த்தும். அந்தண ரென்ற பெயர் - அம் தண் அர் என்று பிரிந்து அழகியதண்ணளியை[குளிர்ச்சியான அருளை]யுடையவரென்றும், அந்த அணவு அர் என்றுபிரிந்து வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவ ரென்றும் காரணப்பொருள்படும்; இது - பிறசாதியார்க்கு வழங்காமல், சிறப்பினால். பிராமணர்க்கே பெயராக வழங்கும். அந்தணர்கைதொழும் அலங்காரர் - பிராமணதெய்வ மென்றபடி. அந்தரங்கம் - வடசொல். (எ௩)

எ௪. உலகுதிக்கும்படிசிந்தித்துத்தந்திவ்வுலகிலுறு
நலகுதிக்கும்படிநின்றபிரானிட நானிலமு
மிலகுதிக்கும்விசும்புந்தொழவோங்கியிறால்வருடை
பலகுதிக்குந்தொறுந்தேன்பாயுஞ்சோலைப்பருப்பதமே.

(இ-ள்.) உலகு உதிக்கும்படி சிந்தித்து - உலகங்கள் உண்டாகுமாறு நினைத்து, தந்து - (அந்தச் சங்கல்பமாத்திரத்தால் அவற்றைப்) படைத்து, இ உலகில் உறும் நல குதிக்கும்படி - இந்தஉலகத்திலே மிக்கநன்மைகள் மேன்மேற்பொங்கும்படி, நின்ற - (திருவருள்கொண்டு) நின்ற, பிரான் - உபகாரகனாகிய எம்பெருமான், இடம் - (திருவுள்ளமுகந்து எழுந்தருளியிருக்கிற)இடம்(எதுவென்றால்),—நானிலமும் இலகு திக்கும் விசும்பும் தொழ ஓங்கி - நிலவுலகத்திலுள்ளாரும் விளங்குகின்ற எட்டுத்திசைகளிலுமுள்ளாரும் மேலுலகத்திலுள்ளாரும் வணங்கும்படி உயர்ந்து, வருடை பல குதிக்குந்தொறும் இறால் தேன் பாயும் - மலையாடுகள் பல எழும்பிப் பாயுந்தோறும் தேன்கூடுகளினின்று தேன் பெருகிப் பாயப்பெற்ற, சோலை பருப்பதம் - திருமாலிருஞ்சோலைமலையாம்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - அசை: பிரிநிலையாக் கொள்ளின், இத்திருப்பதி எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மற்றையெல்லாத்திவ்யதேசங்களினும் மிகப்பாங்கான வாஸஸ்தான மென்னுங் கருத்து அமையும்.

இச்செய்யுள், ஊர் அல்லது பதி எனப்படுகிற பிரபந்தத்துறையமையக் கூறியது; 'இன்னசிறப்புடையது பிரபந்தத்தலைவனது வாழிடம்' என்ற வாய்பாடு பொருந்தக் கூறுதல், இதன் இலக்கணமாம்.

அழகப்பிரான் ஸர்வேச்வரனான திருமாலாதலாலும், காத்தற்றொழிலை முக்கியமாக்கொண்டவனாதலாலும், மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் அவன்எழுந்தருளியிருக்கிற அவ்விடத்தைத் தொழுவ ரென்க. வருடைபலகுதிக்குந்தொறும் இறால்தேன்பாயு மென, குறிஞ்சிநிலமாகிய

அம்மலையின் வளங் கூறியவாறும். அம்மலையிலுள்ள ஆட்டின் கொழுமையும், தேனின் மிகுதியும் விளங்கும். "தேவருடை யைந்தருவின் செந்தேனிறால் கிழிய, மீவருடைபாய்கின்றவேங்கடமே" என்ற திருவேங்கடமாலையிலும் இறால் வருடை என்பன இப்பொருளினவாதல் காண்க.

நல - நல்ல: தொகுத்தல். குதித்தல் - மேன்மேல்வளர்ந்துபெருகுதல். நானிலம் - நால்வகைநிலங்களையுடையது என, பூமிக்குப் பண்புத்தொகையன்மொழியாகிய காரணக்குறி; நால்வகை நிலங்கள் - முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன: காடும் காடுசார்ந்தஇடமும் - முல்லை, மலையும் மலைசார்ந்தஇடமும் - குறிஞ்சி, நாடும் நாடுசார்ந்தஇடமும் - மருதம், கடலும் கடல்சார்ந்தஇடமும் - நெய்தல்; நீரும் நிழலு மில்லாததான பாலைநிலம், பிராணிசஞ்சாரத்துக்கு உரியதன் றாதலால், விலக்கப்பட்டது: அன்றியும், பாலைக்குத் தனியே நிலமில்லை யென்றும், மற்றைநான்குநிலங்களும் தம் இயல்புதிரிந்தவிடத்தே பாலையாமென்றுங் கொள்கையுண்டு. இங்கு, நானிலமென்றது - நானிலத்தார்க்கு இடவாகுபெயர். திக்கு, விசும்பு என்பனவும் இவ்வாறே. 'ஓங்கி' என்றது, பருப்பதத்தின் வினை. பருப்பதம் - பர்வதமென்ற வடசொல்லின் சிதைவு. திக் - வடசொல். (எச)

எரு. பருப்பதந்தாமன்னிநிற்பது பாற்கடல்பள்ளிகொள்வ
திருப்பதந்தாமம்பண் டிப்போதெலாமிளஞாயிறன்ன
வுருப்பதந்தாமதர்க்கீயாமலன்பர்க்குதவழகர்
திருப்பதந்தாமரைபோல்வா ருகப்பதென்சிந்தனையே.

(இ - ள்.) இள ஞாயிறு அன்ன - இளஞ்சூரியனைப்போன்று விளங்குகின்ற, உரு - திருவுருவத்தையுடைய, பதம் - பரமபதத்தை, தாமதர்க்கு ஈயாமல் - தாமசகுணமுள்ளவர்கட்குக் கொடாமல், அன்பர்க்கு உதவு - (தம் பக்கல்) பக்தியுள்ள அடியார்கட்குக் கொடுத்தருள்கிற, திரு பதம் தாமரை போல்வார் அழகர் - திருவடிகள் தாமரைமலர்களை யொத்திருக்கப்பெற்றவரான அழகப்பெருமான், பண்டு - முன்பு, தாம் மன்னி நிற்பது - தாம் நின்றதிருக்கோலமாக நித்தியவாசஞ்செய்கின்ற இடம், பருப்பதம் - திருமாலிருஞ்சோலைமலையாம்; பள்ளிகொள்வது - சயனத்திருக்கோலமாக எழுந்தருளியிருக்கின்ற இடம், பால்கடல் - திருப்பாற்கடலாம்: இருப்பது - வீற்றிருக்கின்ற இடம், அம் தாமம் - அழகிய ஸ்தாநமான பரமபதமாம்; இப்போது - இப்பொழுதோ, எலாம் உகப்பது - (நிற்கிறஇடமும் படுக்கிறஇடமும் இருக்கிறஇடமும் ஆகிய) அனைத்துமாக (அப்பெருமான் விரும்புவது, என் சிந்தனையே - எனது மனமேயாம்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - பிரிநிலையோடு தேற்றம்.

நின்றதிருக்கோலமாகவும் கிடந்ததிருக்கோலமாகவும் வீற்றிருந்ததிருக்கோலமாகவும் எம்பெருமானை அடியேன் அன்போடு தியானித்தல்பற்றி அப்பெருமான் நான் நினைத்தபடியெல்லாம் எனது மனத்தில் திருவுள்ளமுகந்துவந்து எழுந்தருளியிருக்கின்றனனென்பது தோன்ற, இங்ஙனங்

கூறினார். "நிற்பதும்மோர்வெற்பகத் திருப்பும்விண் கிடப்பதும், நற்பெருந் திரைக்கடலுள் நாணிலாத முன்னெலாம், அற்புதன் னனந்தசயன னாதி பூதன் மாதவன், நிற்பதும் மிருப்பதுங் கிடப்பதும் மென்னெஞ்சுளே," "கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும், புல்லென் றொழிந்தனகொலேபாவம் - வெல்ல, நெடியான் நிறங்கரியான் உள்புகுந்துநீங்கான், அடியேன துள்ளத்தகம்" என்ற ஆழ்வார்களருளிச்செயல்களை அடியொற்றியது, இது. 'அத்திருப்பதிகளைக் காற்கடைக்கொண்டு, அவ்விடங்களில் நின்றும் இருந்தும் கிடந்தும் செய்தருளின நன்மையெல்லாம் என்னெஞ்சிலே ஆய்த்து. நிதிநாக்ரேஸாருன என்னை விஷயீகரித்தவாறே, திருமலையில் நிலையும் மாறி என்னெஞ்சிலே நின்றருளினான்; தன்திருவடிகளின் போக்யதையை எனக்கு அறிவித்தபின்பு, பரமபதத்திலிருப்பைமாறி என்னெஞ்சிலே போகஸ்தானமாயிருந்தான்;...திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபடியைக் காட்டி என்னுடைய ஸாம்ஸாரிகமான தாபத்தைத் தீர்த்தபின்பு, திருப்பாற்கடலிற்கிடையைமாறி என்னெஞ்சிலே கண்வளர்ந்தருளித் தன்விடாய்தீர்ந்தான்; இப்படிஎன்பக்கல்பண்ணினவியாமோகம் என்னால்மறக்கலாயிருக்கிறதில்லை யென்கிறார்' என்ற வியாக்கியானவாக்கியங்கள் இந்த இடத்துக்கும் பொருந்தும். "கடமாமலையின் மருப்பொசித்தாய்க்குக் கவி நடத்தத், தடமாமலைவற்றயாளிதொட்டாய்க் கென்தனிநெஞ்சமே, வடமாமலையும் திருப்பாற்கடலும் வைகுந்தமும்போல்,இடமாம் அலைவற்றுநின்றுங் கிடந்து மிருப்பதற்கே" என்ற திருவேங்கடத்தந்தாதிச் செய்யுளும் இக்கருத்தை யுட்கொண்டதே.

பருப்பத மென்ற பொதுப்பெயர், இங்கு அதிகாரத்தால்,தெற்குத்திருமலையாகிய அழகர் திருமலையை உணர்த்திற்று. மன்னிநிற்பது பருப்பதம், பள்ளிகொள்வது பார்கடல், இருப்பது அந்தாமம் என்ற வாக்கியங்களில், நிலம், கருத்தாவாகக் கூறப்பட்டது. உகப்பது என்சிந்தனை என்பதில், செயப்படுபொருள் கர்த்தாவாகக் கூறப்பட்டது. மன்னி - நிலைபெற்று. அந்தாம மென்பது - பரமபதமென்ற பொருளதாதலை, "அந்தாமத் தன்பு செய்து" எனத் திருவாய்மொழியிலுங் காண்க. ஞாயிறு = நாயிறு: முதற்போலி. பரமபதம் இயல்பிலே திவ்விய தேஜோமயமாய் விளங்குதலால், இளஞாயிறன்ன வுருப்பதம்' எனப்பட்டது. இளஞாயிறு - உதயகாலத்துச் சூரியன். 'இளஞாயிறன்னஉரு' என்பதை அழகர்க்கு அடைமொழி யாக்கினும் அமையும். 'பதம் தாமதர்க்குஈயாமல் அன்பர்க்கு உதவு' என்ற போக்கினால், அன்பர்கள் தமோகுணமின்றிச் சத்துவகுணமுடையவரென்றும், தமோகுணமுடையவர் அன்பராகாரென்றும் விளங்கும். நிற்பது, இருப்பது, பள்ளிகொள்வது என்ற செயல்கள், முறைபிறழக்கூறப்பட்டன; செய்யுளாதலின். அர்ச்சாவதாரம் வியூகம் பரத்வம் என்ற நிலைகளின் அண்மைசேய்மைக்கு ஏற்ப இம்முறை கொள்ளப்பட்டதெனினுமாம்; மேற்காட்டிய "கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும்" என்ற ஆழ்வாரருளிச்செயலிலும் இம்முறைகாண்க. மேல் ௮௨ - ஆஞ்செய்யுளில் இம்முறைமையை எதிராகக்கூறுமாறும் நோக்குக. (௭௫)

எக. சிந்திக்கலாரங்கொழிக்குந்திருச்சிலம்பாற்றழகும்
பந்திக்கலாபமயிலாடுஞ்சாரலும் பங்கயனோ
டந்திக்கலாமதியார்க்கரியாருறையான்பொருப்பும்
வந்திக்கலாமெனிற்சந்திக்கலா முயர்வைகுந்தமே.

(இ - ள்.) ஆரம் - முத்துக்களையும், கல் - (மற்றும்பலவகை) இரத்தினங்களையும், சிந்தி கொழிக்கும் - (அலைகளினால்) வீசி ஒதுக்குகின்ற, திருசிலம்பு ஆறு - சிறந்த நூபுரகங்காநதியினது, அழகும் - அழகையும்,—பந்தி கலாபம் மயில் ஆடும்-வரிசையான தோகையையுடைய மயில்கள்(களித்துத் தோகைவிரித்துக்) கூத்தாடப்பெற்ற, சாரலும் - (திருமாலிருஞ்சோலைமலையின்) சாரலையும்,—பங்கயனோடு - தாமரைமலரில்தோன்றியவனான பிரமனுக்கும், அந்தி கலா மதியார்க்கு - அந்திமாலைப்பொழுதிலே விளங்குகிற கலையையுடைய பிறைச்சந்திரனைத் தரித்தவனான சிவபிரானுக்கும், அரியார் - (உள்ளபடி உணர்தற்கு) அரியவரான அழகப்பிரான், உறை - நித்திய வாசஞ்செய்தருளப்பெற்ற, ஆன் பொருப்பும் - விருஷபகிரியாகிய அத்திருமாலிருஞ்சோலைமலையையும், வந்திக்கல் ஆம் எனின்-வணங்குதல் கூடுமாயின், உயர் வைகுந்தம் சந்திக்கல் ஆம் - (எல்லாப்பதவிகளினும்) உயர்ந்ததான பரமபதத்தை அடையலாம்; (எ - று.)

இவற்றை வணங்கியவர், தவறாது திருவைகுந்தம்பெறுவர் என்பதாம். பங்கயனோடு அந்திக்கலாமதியார்க்கு அரியார்—“ஒற்றைவிடையனும் நான்முகனும் உன்னையறியாப் பெருமையோனே” என்றார் பெரியாழ்வாரும்; ‘விஷ்ணுவினுடைய பரமான ஸ்வரூபத்தைத் தானும் ருத்ரனும் மற்றுமுண்டான தேவர்களும் ருஷிகளும் அறியார்களென்னுமிடம் ப்ரஹ்மா தானே சொன்னானிறே.’ முன்னும் “மாதவரா னும்பாலறியார்” என்றார்.

கலாரம் என்பதைக் கல்ஹாரம் என்னும் வடமொழி சிதைந்ததாகக் கொண்டு, அதற்கு - செங்கழுநீர்மலர்களென்று உரைப்பாருமுளர். ஆழ்வார் “மாதுறுமயில்சேர் மாலிருஞ்சோலை” என்றாராதலின், அதன்சாரல் ‘பந்திக்கலாபமயிலாடுஞ் சாரல்’ எனப்பட்டது. பங்க்தி, மயூரம், ஸந்த்யா, வைகுண்டம் என்ற வடசொற்கள்—பந்தி, மயில், அந்தி, வைகுந்தம் என விகாரப்பட்டன. கலா, கலாபம் - தற்சமவடசொல். காலைச்சந்திக்கும் மாலைச்சந்திக்கும் பொதுவான அந்தியென்பது, இங்குச் சிறப்பாய் மாலைப்பொழுதை யுணர்த்திற்று. கலா-சந்திரன்பங்கு; சந்திரன், பதினாறுகலைகளையுடையவன். வைகுண்டம் என்ற பெயர் - அழிவில்லாததென்று பொருள்படும்; குண்டம் - அழிவு: அது இல்லாதது, விகுண்டம்; அதுவே வைகுண்டம்: சிறிதுமாறித் தன்பொருளையே யுணர்த்திய தத்திதாந்தநாமம். இனி, விகுண்டன் - அழிவில்லாதவனாகிய ஸ்ரீமந்நாராயணன்; அப்பெருமானது இடம், வைகுண்டம் என்று பொருள்கூறுதலு முண்டு.

‘வந்திக்கலாமெனிற் சந்திக்கலாம்’ என்றவிடத்து, பிராசமென்னுஞ் சொல்லணி காண்க. (எக)

எஎ. வைதாரையுமுன்மலைந்தாரையுமலர்த்தாளில்வைத்தாய்
மொய்தாரையத்தனைத்தீங்கிழைத்தேனையுமூதுலகிற்
பெய்தாரைவானிற்புரப்பானிடபப்பெருங்கிரியாய்
கொய்தாரைவேய்ந்ததிருவடிக்கீழ்த்தொண்டுகொண்டருளே.

(இ - ள்.) மூது உலகில் - பழமையான உலகத்திலே, பெய் - (வரையாது) பொழிகின்ற, தாரை - மழைப்பெருக்கையுடைய, வானின் - மேகம்போல, புரப்பான் - (வரையாது அனைவரையும்) பாதுகாத்தற்கு, இடபம் பெருங்கிரியாய்-பெரியவிருஷபகிரியில்எழுந்தருளியிருக்கின்றவனே!—(நீ), முன் - முன்பு, வைதாரையும் - (உன்னை) நிந்தித்தவரையும், மலைந்தாரையும் - (உன்னை எதிர்த்துப்)போர்செய்தவரையும், மலர் தாளில் வைத்தாய்-தாமரைமலர்போன்ற(நினது)திருவடியிற் சேர்த்தருளினாய்; (அத்தன்மையனை நீ,) மொய் தாரை அத்தனை தீங்கு இழைத்தேனையும் - (வானத்தில்) நெருங்கிய நக்ஷத்திரங்க ளெவ்வளவு [பெருந்தொகையுள்ள] தீவினைகளைச் செய்துள்ளேனை என்னையும், கொய் தாரை வேய்ந்த திரு அடிக்கீழ் தொண்டு கொண்டு அருள் - பறிக்கப்பட்ட மலர்களாலாகிய மாலையைத் தரித்த (நின்) திருவடியின்கீழ் அடிமைகொண்டருள்வாய்; (எ - று.)

வைதார் - சிசுபாலன் முதலானோர்; மலைந்தார் - தந்தவக்கிரன் முதலியோர். எம்பெருமான் தன்னைவிரும்பி இடைவிடாது மனத்திற்கொண்டு பக்தியோடு வாழ்த்தியவர்க்கும் வழிபட்டவர்க்கும் பரமபதமளித்தல்போலவே, தன்னை வெறுத்து இடைவிடாது மனத்திற்கொண்டு வைதவர்க்கும் எதிர்த்தவர்க்கும் பரமபதமளித்தருள்கின்றனனென்பதையும், அபாரகருணாநிதியான அப்பெருமான் உயிர்கட்கு நற்கதியளித்தற்குத் தன்சம்பந்தமான ஏதேனுமொன்றை வியாஜமாகக்கொண்டு அருள்செய்கின்றனனென்பதையும், எவ்விதத்திலும் சேதநரை உஜ்ஜீவிப்பிப்பது எம்பெருமானது இயல்பு என்பதையும், ஏதேனும் ஒருவியாஜத்தை அபேக்ஷிக்கும் எம்பெருமான் த்வேஷாதிகளினாலாவதுசெய்யும்நாமசங்கீர்த்தநாதிகளையுந் திருவுள்ளம்பற்றியருளும்படியான மகோதார னென்பதையும் உணர்க;"மருவுகாமத்தாற் பயத்தினால் வஞ்சநெஞ்சகத்தாற், பொருவெறுப்பினால் விருப்பினாற் புனிதனைநினையின்,உரைசெய்முத்தியினுயர்குவர்காமமுற்றுணர்ந்தே, அரியமுத்திசென்றடைந்தனர்கோவியரன்றே," "கஞ்சன்வெம்பயத்தால் திகழ் கண்ணனைநினைவுற்று,எஞ்சலற்றவீடெய்தினன் இனிதுவந்தடைந்தார், நெஞ்சவப்புறுகேண்மையால் நினைந்துநின்போல்வார், செஞ்சிலைச்சிசுபாலனே முதல வெந்நீயோர்," "வெறுப்பினால் நினைந்தடைந்தனர் வீட்டினைவிரும்புந், திறத்தினால் நினைந்தடைந்தனர் திருமறைதெளிந்தோர், குறிப்புமுத்தொழில் குணங்களா னடாத்து மோர் கொண்டற்கு, அறத்தின்காதல வெறுப்பெவன் விருப்பெவ னம்மா" என்ற ஸ்ரீபாகவதச்செய்யுள்கள் இங்கு நோக்கத்தக்கவை.

'எம்பெருமானது திருவடியே வீடு' என்னுங் கொள்கை இங்கு விளங்குகின்றது. வைதாரையும், மலைந்தாரையும் என்ற உம்மைகள் - எண்ணுப்

பொருளோடு இழிவுசிறப்புப்பொருளு முடையன. தீங்கிழைத்தேனையும் என்ற உம்மை - இறந்ததுதழுவியஎச்சத்தோடு இழிவுசிறப்பு. இரண்டா மடியில் தாரா என்ற வடசொல்லும், மூன்றாமடியில் தூரா என்ற வட சொல்லும் விகாரப்பட்டன. புரப்பான் - 'பான்' விகுதிபெற்ற எதிர்காலங்கா ட்டும் வினையெச்சம். வரையாது மழைபொழிந்து உலகத்தைக்காக்கும் மே கம்போல வரையாது கருணைமழை பொழிந்து உயிர்களைப் பாதுகாத்தற் கென்று திருமாலிருஞ்சோலைமலைமீது நிற்கின்றவனே யென்று அழைத்த விளி, இத்தன்மையனான நீ முன்பு வைதவனையும் மலைந்தவனையும் மலர்த் தாளில்வைத்ததுபோல, இப்பொழுது அளவிறந்ததீவினைசெய்த என்னையும் திருவடிக்கீழ்த் தொண்டுகொண்டருளுதற்கு உரியாய் என்ற கருத்துக்கு உபகாரப்படுதலால், கருத்துடையடைகொளியணி.

இனி, 'பெய்தாரை' என்பதை ஒருசொல்லாக்கொண்டு, பழமையான உலகத்திலே (நின்றுற்) படைத்திடப்பட்டவர்களை (நிலைத்த உலகமான) பரமபதத்தில் (வைத்துப்) பாதுகாத்தற்பொருட்டுத் திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளியிருக்கின்றவனே யென்று உரைத்தலுமொன்று. நான் காமடியில், தார் - மலர், மாலை. (எஎ)

எஅ. கொண்டமருந்துங்கடைவாய்வழியுகக்கோழைவந்து
கண்டமருந்துயராம்போதுன்பாதங்கருதறியேன்
வண்டமருந்துளவோனே தென்சோலைமலைக்கரசே
யண்டமருந்தும்பிரானே யின்றேயுன்னடைக்கலமே.

(இ - ள்.) வண்டு அமரும் துளவோனே-வண்டுகள் விரும்பிமொய்க்குந் திருத்துழாய்மாலையை யுடையவனே! தென் சோலை மலைக்கு அரசே - அழ கிய திருமாலிருஞ்சோலைமலைக்குத் தலைவனே! அண்டம் அருந்தும் பிரா னே-அண்டகோளங்களை உண்ணும் எம்பெருமானே!—கொண்ட மருந்தும் கடைவாய் வழி உக - அரிதில் வாயினுட்செலுத்தப்பட்ட பாலும் (உள்ளே யிறங்கமாட்டாமற்) கடைவாயின்வழியாக வெளியே வழிய, கோழை கண் டம் வந்து - கபம் நெஞ்சிலடைத்துக்கொண்டு, அருந் துயர் ஆம் போது - (பொறுத்தற்கு) அரிய மரணவேதனை யுண்டாகுஞ் சமயத்தில், உன் பாதம் கருது அறியேன் - (உள்ளங்கலங்குதலால்) உன்திருவடிகளை நினைக்கவல் லேனல்லேன்; (ஆதலால்), இன்றே உன் அடைக்கலம் - இப்பொழுதே உன்னை நான் சரணமடைந்தேன்; (எ - று.)

உள்ளமும் உடலும் சிறிதும் ஸ்வாதீநமில்லையாம்படி நேர்கிற பொறுக்க வொண்ணாத்துயர்தரும் அந்திமதசையில் உன்திருவடிகளை நினைத்தல் அரிதாதலால், அப்பொழுது நீ எழுந்தருளி எனக்கு மறபிறப்பில்லாதபடி முத்திதந்து ஆட்கொள்ளுதற்பொருட்டு இப்பொழுதே யான் உன்னைச் சரணமடைந்தேன் என்பதாம். "எய்ப்பென்னைவந்துநலியும்போ தங்கேது நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக் கிப்போதே சொல்லிவைத் தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே" என்றார் பெரியாழ்வாரும். "பாலு

ண்கடைவாய்படுமுன்னே" என்றாற்போல, 'கொண்டமருந்துங் கடைவாய் வழியுக' என்றார்; "பஞ்சொழுக்கியபால்வார்ந்துஉக" என்றார் திருவேங்கடத் தந்தாதியிலும்: "வாயிலட்டியகஞ்சியும் மீண்டே, கடைவழிவாரக் கண்ட மடைப்பக் கண்ணுறக்கமதாவதன்முன்னம்" என்றார் பெரியாழ்வாரும். மருந்து - அமிருதம்; இங்கே, பாலென்றமாத்திரமாய் நின்றது. மற்றை உணவுகளேயன்றிப் பாலும் உட்செல்லாதாம்படி என்ற பொருளைத் தருத லால், மருந்தும் என்ற உம்மை - இறந்ததுதழுவியஎச்சம்; இனி, மருந்தும் என்பதற்கு - ஔஷதமும் என்று உரைத்தலும் அமையும்.

கடைவாய்=வாயின்கடை: முன்பின்னாகத்தொக்க ஆறாம்வேற்றுமைத் தொகை; இலக்கணப்போலி. கண்டம் - வடசொல். கருது - முதனிலைத் தொழிற்பெயர்; நான்காம் வேற்றுமைத் தொகை. 'தேவர்கள் மாலையில் வண்டு மொய்யாது' என்பது பொதுவிதியாயினும், இறைவனது குளிர்ந்த திருவருளினால் வண்டு மொய்க்குமென்க; அன்றியும், மநுஷ்யர்க்கு அதீந மான அர்ச்சாவதாரத்தில் வண்டுமொய்த்தல் இயல்பே. உன் அடைக்கலம் - நான் உனக்கு அடைக்கலப்பொருளாகிறேன்; அடைக்கலம் - பாதுகாக் கத்தக்க பொருள்: சரணமடைந்தவனென்றபடி. (எஅ)

எகூ. அடைக்கலந்தானையிரந்தாள்புகலவவள்பொருட்டாற்
படைக்கலந்தானைத்தருமன்கெடாமல்வெம்பாரதப்போ
ரிடைக்கலந்தானை யலங்காரனைச் சரணென்றடைந்தேன்
முடைக்கலந்தானையுமப்போதயர்ப்பினுமுத்தியுண்டே.

(இ - ள்.) தானை இரந்தாள் - (கண்ணபிரானைக்குறித்து) ஆடையை இரந்துபெற்றவளாகிய திரௌபதி, அடைக்கலம் புகல - சரணமென்று சொல்ல, அவள்பொருட்டால் - அவள்நிமித்தமாக, படைக்கலம் தானை தருமன் கெடாமல் - ஆயுதங்களையும் சேனைகளையுமுடைய தருமபுத்திரன் அழியாதபடி, வெம் பாரதம் போரிடைகலந்தானை - கொடிய பாரதயுத்தத் திலே (பாண்டவசகாயனாய் அருச்சுனன்தேரில்) சேர்ந்தவனாகிய, அலங்கா ரனை - அழகனை, சரண் என்று அடைந்தேன் - அடைக்கலமென்று அடை ந்துவிட்டேன்: (ஆதலால், இனி), முடை கலம் தான் ஐயும் அப்போது அயர்ப்பினும் - நாற்றமுடைய தசைநிரம்பியதொரு பாத்திரம் போன்ற இவ்வுடம்பு தளர்ந்தழியும் அப்பொழுது [அந்திமகாலத்தில்] (அப்பெரு மானை நினையாது) மறந்தாலும், முத்தி உண்டு - (எனக்கு) மோக்ஷம் கிடைக் கும்; (எ-று.)—ஏற்றுஏகாரம் - தேற்றம்.

எம்பெருமானைச் சரணமடைந்தவர் அந்திமகாலத்தில் அவனை நினை யாவிடினும் பரமபதம்பெறுவரென்பது, தாற்பரியம். ஸ்ரீபாஷ்யகாரர்க்கா கத் திருக்கச்சிநம்பி விண்ணப்பம்செய்யபோது பேரருளாளப்பெருமாள் 'பரதத்வம் நாமே, பேதமே தரிசனம், உபாயமும் பிரபத்தியே, அந்திமஸ்மிருதியும் வேண்டா, சரீராவஸாநத்திலே மோக்ஷம், பெரியநம்பிதிருவடிகளிலே ஆச்ர யிப்பது' என்ற ஆறுவார்த்தைகளை அருளிச்செய்தமை அறியத்தக்கது.

பஞ்சபாண்டவரில் தருமபுத்திரன் சகுனியுடன் சூதாடி இராச்சியம் முதலிய செல்வங்களையெல்லாம் இழந்தபின்னர்த் துரியோதனன்சொன்ன படி துச்சாசனன் திரௌபதியைச் சபையிற்கொணர்ந்து துகிலுரியத் தொடங்கியபோது, அவள் கைகளால் தன்ஆடையை இறுகப்பற்றிக்கொண்டே கண்ணபிரானைக் கூவியழைக்க, அப்பெருமான் அருள்செய்யாது தாழ்த்து நின்று, பின்பு துச்சாசனன் வலிய இழுக்கையில் ஆடையினின்று கைநெகிழ, அவள் இருகைகளையுந் தலைமேல்வைத்துக் கூப்பி வணங்கித் துதித்தவுடனே, ஸ்ரீகிருஷ்ணன் அவளுடையஆடை மேன்மேல்வளருமாறு அருள் செய்து மானங்காத்தனனாதலால், திரௌபதி, 'தானையிரந்தாள்' எனப் பட்டாள்.

வனவாசஅஞ்ஞாதவாசங்களின்பின் துரியோதனனிடத்தினின்று சமாதானத்திலே கிடைத்தவளவு இராச்சியத்தைப்பெற்றுவாழ்வதென்று தருமபுத்திரன் முதலான பாண்டவர்கள் ஆலோசித்து ஸ்ரீகிருஷ்ணபகவானைத் துரியோதனனிடம் தூதனுப்பத்தொடங்கியபோது, திரௌபதி கண்ணபிரானை வணங்கி அவனுக்குத் தன்தலைவிரிகோலத்தைக்காட்டி 'பாண்டவர்க்குத் துரியோதனாதியரோடு போர்நிகழுமாறும், அப்போரில் துரியோதனாதியர்இறக்க நான் முன்புசெய்த சபதத்தின்படி என்கூந்தலை முடித்துக் கொள்ளுமாறும் திருவருள் புரியவேண்டும்' என்று பிரார்த்தித்துச் சரணமடைய, கண்ணபிரான் "தொல்லாண்மைப்பாண்டவர்க்குத் தூதுபோய் மீண்டதற்பின்,நல்லாய் உன்பைங்கூந்தல் நானே முடிக்கின்றேன்" என்று அவளுக்கு வாக்குதத்தஞ்செய்து, பின்பு அங்ஙனமே நிகழ்ந்தபோரிற் பாண்டவசகாயனாகி அருச்சுனன்தேர்த்தட்டிற் பாகனாய் நின்று பலவாறுஉதவி செய்து துரியோதனாதியரைத் தொலைத்துப் பாண்டவரைப் பாதுகாத்துத் திரௌபதியின் பிரதிஜ்ஞையை நிறைவேற்றிவைத்தனனென்ற வரலாறு, இங்குக் குறிக்கப்பட்டது.

அடைக்கலம்புகல - 'எனக்கு நீயே கதி, நான் உன்னாற் பாதுகாக்கத் தக்கவள்' என்று சொல்ல. 'அவள்பொருட்டு' என்றவிடத்து, பொருட்டு - நான்காம்வேற்றுமைச்சொல்லுருபு; ஆல் - அசை. படைக்கலம் - போர்க்கு உரிய கருவி; ஆயுதமாகிய போர்க்கருவி. தருமத்தினின்று தவறியவர்க்குத் தக்கதண்டனைசெய்து தருமத்தைக்காத்தலால், யமனுக்கு வடமொழியில் தர்மனென்று பெயர்; 'தந்தையே மைந்தனாகிறான்' என்னும் நூல் வழக்குப்பற்றி, தருமபுத்திரன் தருமனெனப்படுவன். ஒருபெயரின் ஒரு பகுப்பைக்கொண்டு அப்பெயர்முழுவதையுங் குறிப்பதொரு வழக்கினால் [நாமைகதேசேநாமக்ரஹணத்தால்], தருமபுத்திரனைத் தருமனென்றகுறித்த தாகவுங் கொள்ளலாம். இவன், பாண்டுமகாராசனது மனைவியரிருவரிற் குந்திதேவியினிடம் யமனுக்குப் பிறந்தவன். பஞ்சபாண்டவருள் மூத்தவனான தருமனைக் கூறியது, மற்றையோர்க்கும் உபலக்ஷணம். பாரதம் - வடசொல்; பரதவம்சத்தாருள் நிகழ்வதென்று பொருள்படும்: தத்திதாந்தநாமம். நான்காமடியில், கலம் - கொள்கலம்; "ஹறி யுவர்த்தக்க வொன்பது

வாய்ப்புல்லும், சோதிக் குழம்பலைக்குங் கும்பம்" என்றாற்போல், 'முடைக் கலம்' என்றார்: "குற்றக்கொள்கலம்,..........மக்கள்யாக்கை" என்றார் பிறரும். தான் - அசை. (எக)

அ0. உண்டிறக்கும்புவனங்களைமீளவுமிழ்ந்திலையேற்
பண்டிறக்கும்பதுமத்தோன்புரந்தரன்பைந்தழல்போற்
கண்டிறக்குஞ்சங்கரன்முதலோர்களைக்கண்டவரார்
திண்டிறக்குஞ்சரஞ்சேர்சோலைமாமலைச்சீதரனே.

(இ - ள்.) திண் திறம் - மிக்கவலிமையையுடைய, குஞ்சரம்-யானைகள், சேர் - பொருந்திய, சோலை மா மலை - திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற, சீதரனே - திருமாலே!—(நீ), உண்டு இறக்கும் - (பிரளய காலத்திலே)வாயினுட்கொண்டு வயிற்றினுட்செலுத்திய, புவனங்களை-உலகங்களை,மீள உமிழ்ந்திலையேல் - (அப்பிரளயம்நீங்குமளவிலே) வெளிப்படுமாறு உமிழாதிருந்தனையானால்,—பண்டு இறக்கும்-முன்பு அழிந்துபோன, பதுமத்தோன் - பிரமனும்,புரந்தரன் - இந்திரனும், பைந் தழல் போல் கண் திறக்கும் சங்கரன் - பசுமையான [புதிதாக மூண்டெரிகின்ற] நெருப்புப்போல நெற்றிக்கண்ணைத் திறக்கின்ற சிவபிரானும், முதலோர்களை - முதலானவர்களை, கண்டவர் ஆர் - (மீளவும்)பார்த்தவர் ஆர்?[எவரும்பாரார் என்றபடி].

நீ அமுதுசெய்த உலகங்களை மீளஉமிழ்ந்ததனாலே அவ்வுலகங்களுடனே பிரமன்முதலிய தலைமைத்தேவர்கள் தோன்றினர் என்பதாம். "உலகந்தர வுந்திபூத்திலையேல் சுடரோரிரண்டும், இலகந்தரமும் புவியு மெங்கே அயனீச னெங்கே, பலகந்தரமு முணவுமெங்கே பல்லுயிர்களெங்கே, நிலகந்தரனிக்கென நின்ற வேங்கடச்சீதரனே" என்ற திருவேங்கடத்தந்தாதிச்செய்யுளோடு இச்செய்யுளை ஒப்பிடுக. இது, ஸ்ரீமந்நாராயணனது பரத்வத்தைக் காட்டக் கூறியது. ("பரந்தெய்வமும் பல்லுலகும் படைத்தன் றுடனே விழுங்கிக், கரந்துமிழ்ந்து கடந்திடந்தது கண்டுந் தெளியகில்லீர்," "எல்லாருமறியாரோ எம்பெருமானுண்டுமிழ்ந்த வெச்சில்தேவ, ரல்லாதார் தாமுளரே அவனருளே யுலகாவ தறியீர்களே," "நெற்றிமேற்கண்ணானும் நிறைமொழிவாய் நான்முகனும் நீண்டநால்வாய், ஒற்றைக்கை வெண்பகட்டிலொருவனையும் உள்ளிட்ட அமரரோடும், வெற்றிப்போர்க் கடலரையன் விழுங்காமல் தான்விழுங்கி யுய்யக்கொண்ட, கொற்றப்போராழியான் குணம் பரவாச் சிறுதொண்டர் கொடியவாறே" என்றார் ஆழ்வார்களும்.)

முதலடியில், 'இறக்கும்' என்றது - 'இறங்கும்' என்பதன் பிறவினை; இறங்கச்செய்யு மென்பது பொருள். சங்கரன் - (தன்னைச்சார்ந்தவர்க்கு) இன்பத்தைச் செய்பவன்; சம் - சுகம். திண்திறம் - ஒருபொருட்பன்மொழி. சீதரன் - ஸ்ரீதரனென்ற வடசொல்லின் விகாரம்: திருமகளை (மார்பில்) தரிப்பவ னென்பது பொருள். (அ0)

[பிரிவாற்றுவநந்துந் தலைவியின் நிலைமையைக்குறித்துத்
தோழி இரங்கல்.]

அ௩. சீரரிதாழ்பொழின்மாலிருஞ்சோலையிற்செல்வர்செங்கட்
போரரிதாள்புனைதாரரிதாகிற் றண்பூந்துளவின்
றாரரிதாவுந்தழையரிதாகிற் றழைதொடுத்த
நாரரிதாகிற் பிழைப்பரிதா மெங்கணன்னுதற்கே.

(இ - ள்.) சீர் அரி - சிறந்த ஹரியென்னும் ஒருதிருநாமமுடையவரும், செம் கண் போர் அரி - (கோபத்தாற்) சிவந்த கண்களையுடைய போர்த் தொழில்வல்ல நரசிங்கமூர்த்தியானவரு மாகிய, தாழ் பொழில் மாலிருஞ் சோலையில் செல்வர் - (கிளைகள் தழைத்துத்) தாழ்ந்துள்ள சோலைகளை யுடையதிருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கின்ற எல்லாச்செல் வங்கட்குந் தலைவரான அழகப்பிரானது, தாள் - திருவடிகளில், புனை - தரித்த, தார் - மாலை, அரிது ஆகில் - (கிடைப்பது) அரியதானால்,—தண் பூ துளவின் தார் - குளிர்ச்சியான மலர்களையுடைய அத்திருத்துழாய்மாலை யில் இடையிடையே தொடுக்கப்பட்டுள்ள, அரி தாவும் தழை - (நறுமணத் தால்) வண்டுகள் மேல்விழுந்துமொய்க்கப்பெற்ற தழையும், அரிது ஆகில் - (கிடைப்பது) அரியதானால், தழை தொடுத்த நார் அரிது ஆகில் - அத்தழை தொடுக்கப்பெற்றுள்ள நாரும் (கிடைப்பது) அரியதானால்,—எங்கள் நல்நுத ற்கு பிழைப்பு அரிது ஆம் - அழகியநெற்றியையுடையளான எங்கள் மங்கை க்கு உயிர்வாழ்க்கை அரியதாம்; (எ - று.)

"வானோர்தலைமகனாஞ்சீராயினதெய்வநன்னோயிது தெய்வத்தண்ணந் துழாய்த், தாராயினுந் தழையாயினுந் தண்கொம்பதாயினுங் கீழ், வேராயி னும் நின்றமண்ணாயினுங் கொண்டுவீசுமினே" என்றபடி, தலைவி தலைவ னைப்பிரிந்து விரகதாபத்தால் மரணவேதனைப்படுகின்றநிலையிலே அவனது மாலைகிடைக்கப்பெற்றால் அதுகொண்டு ஒருவாறுஆறி உயிர்வைத்திருக்கக் கூடும்; அம்மாலைமுழுதுங் கிடையாவிடின், அதில்தொடுக்கப்பட்ட தழை யாயினும் கிடைத்தால் அதுகொண்டு தணிந்து பிழைத்திருக்கலாம்; அத் தழையும் கிடையாவிடின், அதுதொடுத்த நாராயினும் கிடைத்தால் அது கொண்டாயினும் ஆறி உயிர்த்திருத்தல் கூடும்; அதுவும் கிடையாவிடின், இவள் பிழைத்திருக்கமாட்டாள்; அவ்வேதனைமிகுதியால் இறந்துபடுவள் என்பதாம். தலைவனோடு சம்பந்தம்பெற்ற பொருள் யாதாயினும் இந்நோய் க்குப் பரிகாரமா மென்பது, இதனாற் போந்த பொருள்.

சீர் அரி - ஸ்ரீஹரி: திருமால். தன்னைச்சரணமடைந்தவர்களுடைய துன் பங்களையெல்லாந் தீர்ப்பவனாதலால், ஹரியென்று திருநாமம்; ஹரித்தல் - அழித்தல். ஹரிஎன்ற சொல் - சிங்கத்தைக்குறிக்கும்போது யானை முதலிய பெருவிலங்குகளையும் அழிக்கவல்லது என்றும், வண்டைக்குறிக்கும்போது மலர்களினின்று தேனைக் கவர்வது என்றும் காரணப்பொருள்பெறும். மற் றும் அரியென்ற சொல்லுக்குப் பலபொருளுள்ளதனால், 'சீரரிதாழ்பொழில்'

என்பதற்கு - சிறந்த சூரியன் [அல்லது சந்திரன்] தாழ்ந்துசெல்லும்படியான [மிகவுயர்ந்த] சோலை யென்றும், சிறந்த இந்திரனும் விரும்பும்படியான சோலை யென்றும், அழகிய கிளிகள் தங்கப்பெற்ற சோலை யென்றும் பொருளுரைக்கவும் படும். தாழ்தல் - கவிந்திருத்தல், கீழ்ப்படுதல், விரும்புதல், தங்குதல். செல்வர் - இம்மைமறுமைவீடுகளில் உயிர்கள்நுகருஞ் செல்வங்கட்கெல்லாம் உடையவர். நன்னுதல் - பண்புத்தொகையன்மொழி. 'எங்கள்' என்றது, மற்றைப்பாங்கியரையுங் கூட்டி ; படர்க்கையை உளப்படுத்திய தன்மைப்பன்மை. இனி, இதனை, செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடுநிற்றலாகக் கொள்ளினும் இழுக்காது.

ஐயங்கார் எம்பெருமானைப் பிரிந்து வருந்துகின்ற நிலைமையைக் கண்ட அன்பர்கள், எம்பெருமானதுசம்பந்தம்பெற்ற பொருள் யாதாயினுமொன்றை அவனதுபிரஸாதமாகப் பெற்றாலன்றி இனி இவர் தரித்திரா ரென்று சொல்லும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். "எந்தைபிரான்தனக்கு, அடியாரடியார்தம்மடியாரடியார்தமக், கடியாரடியார் தம்மடியாரடியோங்களே" என்றபடி எம்பெருமானதுசம்பந்தத்தை நேரிலேனும் பரம்பரையாகவேனும் பெற்ற பாகவதரது சம்பந்தம் இவ்வாற்றாமைக்குப் பரிகாரமாமென்று ஸ்வாபதேசங்கொள்ளவும் அமையும். (அக)

அஉ. நன்னுதலைப்பணிபூண்மார்பில்வைத்துவிண்ணாட்டிருப்பார்
மின்னுதலைப்பணிமேற்றுயில்வார் விடைவெற்பினிற்பார்
மன்னுதலைப்பணியன்பரைவைக்குமலரடிக்கீழ்த்
துன்னுதலைப்பணிசெய்வதென்ஞான்றென்றுயர்தொலைந்தே.

(இ - ள்.) பணி பூண் மார்பில் - ஆபரணங்களைத் தரிக்கின்ற திருமார்பிலே, நல்நுதலை வைத்து - அழகிய நெற்றியையுடையவளான திருமகளை வைத்துக்கொண்டு, விண் நாடு இருப்பார் - பரமபதத்தில் வீற்றிருக்கின்றவரும்,—மின்னு தலை - (மாணிக்கத்தால்) விளங்குகின்ற தலைகளையுடைய, பணிமேல் - (ஆதிசேஷனென்னும்) பாம்பின்மீது, துயில்வார் - யோகநித்திரைசெய்கின்றவரும்,—விடை வெற்பில் நிற்பார் - திருமாலிருஞ்சோலைமலையில் நின்றதிருக்கோலமாய் எழுந்தருளியிருக்கின்றவருமான அழகரது,—பணி அன்பரை மன்னு தலை வைக்கும் மலர் அடிக்கீழ் - (தம்மை) வணங்குகின்ற அடியார்களை (எந்நாளும் அழிவின்றி) நிலைபெற்ற இடமாகிய பரமபதத்திலே வைத்தருள்கிற தாமரைமலர்போன்ற திருவடிகளின்கீழ்,— என் துயர் தொலைந்து துன்னு தலை பணி செய்வது - (யான்) எனது துன்பங்கள்நீங்கிப் பொருந்திய தலைமையான திருத்தொண்டுகளைச் செய்வது, என்று ஞான்று - எந்நாளோ? (எ - று.)

அழகப்பிரானுக்குக் கைங்கரியஞ்செய்து பேறுபெறுதலில் உள்ள அவாவினால் இங்ஙனங் கூறினார்.

நிற்பார்அடிக்கீழ் எனவும், அடிக்கீழ்ப்பணிசெய்வதுஎனவும்இயையும். துயர் - கவலை. துயர்தொலைந்து பணிசெய்வது - பணிசெய்து துயர்தொ

லைவது என விகுதிபிரித்துக்கூட்டினுமாம்; துயர்-பிறவித்துன்பம். நின்றான் இருந்தான் கிடந்தான் என்ற மூன்றுபடிகளும் எம்பெருமானுக்கு இருத்தலை, முதலிரண்டடியிற் காட்டினர். செய்யுளாதலின், இருப்பார் துயில்வார் நிற்பார் என முறைபிறழக்கூறப்பட்டது; பரத்வம் வ்யூஹம் அர்ச்சை என்ற நிலைகளின் முறைமைபற்றிக் கூறியதாகவுங் கொள்ளலாம். பணி பூண் மார்பு - கௌஸ்துபமென்னுந் திவ்யரத்தினமாகிய ஆபரணத்தைத் தரித்த மார்புஎன்று உரைப்பாருமுளர். "உறுகால்கிளர்பூதமெலாமுகினும், மறுகாநெறி" என்றபடி பரமபதம்அழிவின்றி என்றும்ஒருபடிப்பட இருப்பதாதலால், 'மன்னு தலை' எனப்பட்டது: தலை - இடம்; தலம் என்ற வடசொல் தலைஎன விகாரப்பட்டதென்னலாம்: வதம்-வதை என்பது போல. இனி, பணி என்பதைப் பண்ணியென்பதன் தொகுத்தலாகவும், மன்னு தலை, என்பதைத் தொழிற்பெயரின்மேல் வந்த இரண்டாம்வேற்றுமை விரியாகவுங் கொண்டு, அன்பர்களை நிலைபெறுதலைப்பண்ணி வைக்கும் என்று உரைப்பர் ஒருசாரார். பணிமேல் துயிலுதல், திருப்பாற்கடலில். (அ௨)

அ௩. தொலைந்தானையோதுந்தொலையானையன்னைசொல்லான்மகுடங்
கலைந்தானை ஞானக்கலையானை யாய்ச்சிகலைத்தொட்டிலோ
டலைந்தானைப் பாலினலையானை வாணன்கையற்றுவிழ
மலைந்தானைச் சோலைமலையானை வாழ்த்தென்மடநெஞ்சமே.

(இ - ள்.) என் மடம் நெஞ்சமே - அறியாமையையுடைய எனது மனமே!—ஆனை தொலைந்து ஓதும் - கஜேந்திராழ்வான் வலிமைகுன்றி அழைக்கப்பெற்ற, தொலையானை [தொல்லையானை] - பழமையானவனும்,—அன்னை சொல்லால் மகுடம் கலைந்தானை - சிறியதாயான கைகேயியின் வார்த்தையாற் பட்டாபிஷேகோத்ஸவங் கலைந்துவிடப் பெற்றவனும்,—ஞானம் கலையானை - நல்லுணர்வைத்தருகின்ற சாஸ்திரங்களாற் கொண்டாடப்படுகிறவனும்,—ஆய்ச்சி கலை தொட்டிலோடு அலைந்தானை - இடைச்சியாகிய யசோதையினால் அமைக்கப்பட்ட துணித்தொட்டிலோடு அசைந்தவனும்,—பாலின் அலையானை - திருப்பாற்கடலைத் தான்வாழுமிடமாகவுடையவனும்,—வாணன் கை அற்று விழ மலைந்தானை - பாணாசுரனுடைய கைகள் துணிபட்டுவிழும்படி போர்செய்தவனும்ஆகிய, சோலைமலையானை - திருமாலிருஞ்சோலை அழகப்பிரானை, வாழ்த்து - வாழ்த்துவாய்; (எ - று.)

தொலையான் - தொன்றுதொட்டுள்ளவன்; ஆதிமூலம். தொல்லையென்னும் 'ஐ'விகுதிபெற்ற பண்புப்பெயரின்மேல் வந்த உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணையும்பெயராகிய தொல்லையானென்பது, தொலையானெனத் தொகுத்தல்விகாரப்பட்டது. இனி, தொலையானை என்பதற்கு - நெடுந்தூரமாகிய பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனை யென்று உரைப்பர் ஒருசாரார்; தொலை - தூரம். கூனியாகிய மந்தரை கலகஞ்செய்து கலைத்தற்கு முன்னம் கைகேயிக்கு இராமபிரானிடம் இயல்பாகவுள்ள புத்திரவாத்ஸல்யத்தையும், இராமபிரானுக்கு அவளிடம் எப்பொழுதும் உள்ள மாத்ருவிசுவாசத்தையுங் கருதி, சிற்றன்னை யென்னாது, 'அன்னை' என்றார்; இராம

பிரானுக்குக் கௌஸல்யையோடு கைகேயியோடு பேதமில்லாதபடியும், கைகேயிக்குப் பரதனோடு இராமனோடு பேதமில்லாதபடியும் இருந்ததென்பதை இராமாயணத்து அயோத்தியாகாண்டத்தில் விளங்கக்காணலாம். ஞானக்கலையானை என்பதற்கு - ஞானநூலாகிய ஸ்ரீகீதையை வெளியிட்டவனை யென்று உரைப்பாருமுளர். ஆய்ச்சி - ஆயனென்பதன் பெண்பால்.

இச்செய்யுளின் அடிகளில், தொலைந்தானை தொலையானை, கலைந்தானை கலையானை, அலைந்தானை அலையானை, மலைந்தானை மலையானை என்பவை உடன்பாடும் எதிர்மறையுமாய் ஒன்றுக்கொன்று மாறுபடுவதாக மேல்நோக்கில் தோன்றி, பொருளையுணருமிடத்து வேறுவகைப்பொருள்பட்டு மாறுபாடின்றிமுடிதலால், முரண்விளைந்தழிவணி; வடநூலார் விரோதாபாஸாலங்கார மென்பர். இது, சொல்லால்வந்த முரண்தொடை; "சொல்லினும் பொருளினும் முரணுதல் முரணே" என்றது காண்க. திருவேங்கடத்தந்தாதியின் அங-ஆஞ்செய்யுளும் இத்தன்மையதாம்: அது வருமாறு:—"போரானைக்கோட்டினைப்பேர்த்தானை வேங்கடம்பேணுந்துழாய்த்,தாரானைப்போதனைத்தந்தானை யெந்தையைச் சாடிறப்பாய்ந், தாரானைமேய்த்துப்புள்ளூர்ந்தானைப் பஞ்சவர்க்குய்த்துநின்ற, தேரானை நான்மறைதேர்ந்தானைத் தேருநுந்தீதறுமே." "மாத்தளவத்,தாரானை வேட்கையெலாந்தந்தானை மும்மதமும், வாரானையன்றழைக்க வந்தானைக்—காரான,மெய்யானை யன்பருக்கு மெய்த்தானைக் கண்கைகால், செய்யானை வேலையணை செய்தானை—வையமெலாம், பெற்றானைக் காணப்பெறாதானைக் கன்மழைக்குக், கற்றானைக் காத்தவொரு கல்லானை—யற்றார்க்கு, வாய்ந்தானைச் செம்பவளவாயானை—மாமுடியப், பாய்ந்தானை யாடரவப் பாயானை" என்ற திருநறையூர்நம்பி மேகவிடுதூதினடிகளையுங் காண்க. (அங)

[தலைவி, தோழியர்க்கு அறத்தொடுநிற்றல்.]

அச. நெஞ்சிலம்பாற்றமுடியாதுவேளெய்துநீளிரவுந்
துஞ்சிலம் பாற்றுளியுநஞ்சமாஞ் சொரிகன்மழையை
யஞ்சிலம்பாற்றடுத்தாரலங்காரரடிவிளக்குஞ்
செஞ்சிலம்பாற்றருகேகிடத்தீ ருயிர்தேற்றுதற்கே.

(இ - ள்.) நெஞ்சில் - (எமது) நெஞ்சிலே, அம்பு - பாணங்களை, ஆற்ற முடியாது - பொறுக்கமுடியாதபடி, வேள் எய்து - மன்மதன் பிரயோகித்தலால், நீள் இரவும் - நெடிய இராக்காலமுழுவதிலும், துஞ்சிலம் - உறக்கங்கொள்ளுகின்றோமில்லை; பால் துளியும் நஞ்சம் ஆம் - பாலின்துளியும் (எமக்கு) விஷம்போன்றதாம் [மிகக்கைக்கும் என்றபடி]; (ஆதலால்),—சொரி கல் மழையை - பொழிந்த சிலாவருஷத்தை, அம் சிலம்பால் தடுத்தார் - அழகிய (கோவர்த்தன) மலையைக்கொண்டு தடுத்திட்டவராகிய, அலங்காரர் - அழகரது, அடி - திருவடிகளை, விளக்கும் - (பிரமன் தன்கைக்கமண்டல தீர்த்தங்கொண்டு) கழுவியதனால் வருகிற, செம் சிலம்பு ஆறு - சிறந்தசிலம்பாற்றின து, அருகே - சமீபத்திலே, உயிர் தேற்றுதற்கு கிடத்தீர் -(எம்மை) உயிர்பிழைக்கச்செய்தற்காகக் கொண்டுபோய்ப்படுக்கவையுங்கள்; (எ - று.)

தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடிப்பிரிந்த தலைமகள், அப்பிரிவுத் துயரை ஆற்றியடக்கும் வல்லமையில்லளாகி, தனது நிலைமையை அன்புடைத் தோழியர்க்கு வெளிப்படையாகவுரைத்து 'இனி நான் பிழைத்திருக்கவேண்டில், என்னை நீங்கள் அத்தலைவன்முன்னிலையிற் கொண்டுபோய்ச் சேர்த்திடுங்கள்' என்று வேண்டுகின்றாளென்க. தலைவன் தானாகவருமளவும் பார்த்து ஆறியிருக்கின்ற இயல்பை இழந்து, அவனுள்ளஇடத்தேசென்று அவன் முகத்தைக்கண்டு பிழைக்கலாமென்றும் அவன்கண்ணெதிரிற்சென்று நின்றால் அவன்கண்ணோட்டத்தைப் பெறலாமென்றுங் கருதி விரைவில் அங்குச்செல்லவிரும்பிய தலைவி, தனக்குக்கால்நடைதாராதபடி வலியழிவுமிக்கதனால் தான் அங்குச்சென்று சேரமாட்டாது, தன்கண்வட்டத்திலே நின்று தன்நிலையைப்பார்த்துக் கால்நடைதளராத தோழியரை நோக்கித் தன்னை அங்குக்கொண்டுபோய் விடுமாறு வேண்டுகின்றனளென்க. ("இங்குத்தை வாழ்வையொழியவேபோய் யமுனைக்கரைக் கென்னையுய்த்திடுமின்," "நீர்க்கரைநின்றகடம்பையேறிக் காளியனுச்சியில் நட்டம்பாய்ந்து, போர்க்களமாகநிருத்தஞ்செய்த பொய்கைக்கரைக்கென்னை யுய்த்திடுமின்", "மதுரைப்புறத் தென்னை யுய்த்திடுமின்," "ஆணையால் நீரென்னைக் காக்கவேண்டிலாய்ப்பாடிக்கே யென்னையுய்த்திடுமின்" என்பவை முதலாகிய அருளிச்செயல்களைக் காண்க.)

எம்பெருமானை இடையீடின்றிச் சேரப்பெறாத நிலையிலே காலவிளம்பம் பொறுக்கமாட்டாமையாற் காலம்நீட்டித்ததாகத் தோன்றி வருந்துகிற ஐயங்கார், தமது அன்பர்களை நோக்கி 'இனி யான் எம்பெருமானது நிரந்தரானுபவம் பெற்று உய்யுமாறு என்னை நீங்கள் அவனுகந்தருளினஇடத்திற் கொண்டுபோய்ச் சேர்த்திடுங்கள்' என்று வேண்டுதல், இதற்கு உள்ளுறைபொருள். 'நீளிரவு' என்றது - ஸ்வாபதேசத்தில், பொறுக்கவொண்ணாத காலவிளம்பத்தையாம். அவ்விளம்பகாலத்தில் மிகக்கவலைகொண்டுள்ளோமென்பது, 'நீளிரவுந் துஞ்சிலம்' என்றதன் உட்கிடை. அப்பிரிவுக்காலத்தில் லௌகிகபதார்த்தங்கள் வருத்தந்தருவனவாதலை, 'நெஞ்சிலம்பு ஆற்றமுடியாதுவேளெய்து','பாற்றுளியும் நஞ்சமாம்'என்றவற்றாற் குறிப்பித்தவாறும். திருமாலினது திருவடியின் சம்பந்தமுள்ள திவ்வியதீர்த்தத்தின் சமீபத்தில் வசித்தலும் உயிர் ஈடேறுதற்கு ஏதுவாமென்பது, பின்னிரண்டடிகளால் நன்கு விளங்கும்.

முடியாது - எதிர்மறைவினையெச்சம். முடியாது என்பதை முற்றாகக்கொண்டு, நெஞ்சில்தைக்கிற அம்பு பொறுக்கமுடியாது எனத் தனிவாக்கியமாக்கி, வேள் எய்தும் என எடுத்து மன்மதன் வருகின்ற என்று பொருள்கொண்டு இரவுக்கு அடைமொழியாக்கி யுரைப்பாருமுளர். "ஊழிபலவோரிரவாயிற்றோ வென்னும்," "ஊழியிற்பெரிதால் நாழிகையென்னும் ஒண்சுடர்துயின்றதாலென்னும்", "இது ஓர்கங்கு லாயிரமூழிகளே" என்றபடி, கூடியநிலையில் ஒருக்ஷணமாகக்கழிகிற இரவு பிரிந்த நிலையில் அநேகயுககாலமாக நீட்டித்துத்தோன்றுகின்றமைபற்றி, 'நீளிரவு' எனப்பட்டது. துஞ்சிலம் - இங்கே, தனித்தன்மைப்பன்மை. பாற்றுளியுநஞ்சமாம்—"உண்ட

மருந்துகைக்கும்" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும். உம்மை - உயர்வு சிறப்பு; இங்கு, நகரவொற்று - விரித்தல்விகாரம். 'பால்துளியும் நஞ்சமாம்' என்றது, மன்மதபாணத்தின் செயல்களி லொன்றான துய்ப்பனதெவிட்டல் என்னுஞ் சோகவகை கூறியதாம். 'பால்துளி'எனக் கூறியதனால், அப்பாலும் நன்றாகஉள்ளிறங்காமல் "பஞ்சொழுக்கிய பால்" என்றபடி பிறர் துளிதுளியாகப் பாலைத் தன்வாயில் துளிக்கும்படியான நிலைமையை அடைந்தன ளென்பது தோன்றும். செம்மை - செவ்வை; சிலம்பாற்றுக்குச் செம்மையாவது - தன்னில் ஒருகால் நீராடியவர்க்கும் அருவினையனைத்தையுந் தொலைத்து உயர்பதமளித்தல். கிடத்திர் - பிறவினை ஏவற்பன்மைமுற்று. ()

அரு. தேற்றுவித்தாற்புனறேற்றுநர்போற்றிருவெட்டெழுத்தான்
மாற்றுவித்தானென்மயக்கமெல்லா மண்ணும்விண்ணுமுய்யப்
போற்றுவித்தாரப்புயலலங்காரன் பொன்மேருவைப்போற்
றோற்றுவித்தாரணியுஞ்சுந்தரத்திருத்தோளண்ணலே.

(இ - ள்.) மண்ணும் - நிலவுலகத்தாரும், விண்ணும் - வானுலகத்தாரும், உய்ய - (தாம்தாம்) உய்வுபெறுதற்காக, போற்று - வணங்கப்பெற்ற, வித்தாரம் புயல் - பெரிய மேகம்போன்றவனும்,—பொன் மேருவை போல் தோற்று - பொன்மயமான மேருமலைபோல விளங்குகின்ற, விதார் அணியும் சுந்தரம் திரு தோள் - வண்டுகள் மொய்க்கும் மாலையைத் தரித்த அழகிய தோள்களையுடைய, அண்ணல் - பெரியோனுமாகிய, அலங்காரன் - அழகப்பிரான்,—தேற்று வித்தால் புனல் தேற்றுநர் போல் - தேற்றாங்கொட்டையைக்கொண்டு நீரை(க்கலக்கம்மாற்றி)த் தெளியச்செய்பவர்போல,திரு எட்டு எழுத்தால் என் மயக்கம் எல்லாம் மாற்றுவித்தான் - அஷ்டாக்ஷர மகாமந்திரத்தைக்கொண்டு என்மதிமயக்கத்தையெல்லாம் மாற்றி மனந்தெளியச்செய்தருளினான்; (எ - று.)

ஞானம் அநுட்டாநம் இவை நன்றாகவேயுடையனான நல்லாசிரியன் நேர்ந்து திருமந்திரோபதேசஞ்செய்து மனத்தைத் தெளிவித்தல் எம்பெருமானது திருவருளின்வாய்ப்பினாலன்றி அமையாதாதலின் அதனை அப்பெருமான்மேல் ஏற்றியும், "எயிற்றிடைமண்கொண்ட வெந்தை யிராப்பகலோதுவித் தென்னைப், பயிற்றிப் பணிசெய்யக்கொண்டான்," "ஏதங்களாயின வெல்லா மிறங்கலிடுவித் தென்னுள்ளே, பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து, போதிற்கமலவன்னெஞ்சம் புகுந்து மென்சென்னித்திடரிற், பாதவிலச்சினைவைத்தார்" என்றபடி எம்பெருமானே ஆசாரியனாய் நிற்றல்பற்றியும், "அறவோர்க்கு அடிகளே தெய்வம்" என்றபடி குருவைத் தெய்வமாகப் பாவிக்கவேண்டுதலாலும், மண்கலந்தநீரைத் தேற்றாங்கொட்டையைக்கொண்டு தெளிவித்தல்போல மயங்கியமனத்தைப் பெரியதிருமந்திரத்தைக்கொண்டு தெளிவித்தவ னென்றார்; "சாலுறையும், மண்மயக்கந் தேற்றுவித்தான் மாற்றுதல்போ லாரியனா,லுண்மயக்கந் தேற்றுவித்தான்" என்றார் திருவேங்கடமாலையிலும். உயிர்கட்கு ஆவனசெய்தல், இறைவன் செய லென்க. தேற்றாமரத்தின்விதையைத் தேய்த்து அத்தேய்வையைக்

குழம்பியநீரிற்கரைத்தால் அந்நீர் கலக்கத்தெளிதல் இயல்பு. குழம்பிய நீர் - மனக்கலக்கத்துக்கும், தேற்றாம்வித்து - திருமந்திரத்துக்கும் உவமை. மயக்கம் - விபரீதஞானம்.

மண், விண் - இடவாகுபெயர்கள். விஸ்தாரம் - வடசொல். புயல் - உவமையாகுபெயர். சுந்தரத்திருத்தோளுக்குப் பொன்மேரு - பருத்தோங்கியவடிவிலும் வலிமையிலும் ஒளியிலும் உவமம். பறவைப்பொதுப்பெயராகிய 'வி' என்ற வடசொல், இங்குச் சிறப்பாய் வண்டை உணர்த்திற்று; இனி, வி என்பதை 'வீ' என்பதன் குறுக்கலெனக் கொண்டு, வித்தார் - மலர்களாலாகிய மாலையென்றலுமொன்று. அண்ணல் - பெருமையிற் சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர். போற்று - அன்போடு பாதுகாக்கிற எனினுமாம். (௬௫)

௬௬. அண்ணலை வான்மதிதோய்சோலைமாமலையச்சுதனைத்
தண்ணலைவானவனைத் தெய்வநாதனைத் தாளடைவா
னெண்ணலை வான்பகையாமைவரோடிசைந்தின்னமுடற்
புண்ணலைவானெண்ணினாய் மனமே யுன்புலமைநன்றே.

(இ - ள்.) மனமே—!—அண்ணலை - பெருமையிற்சிறந்தவனும், தண் அலை வானவனை - குளிர்ச்சியான திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டருளுகின்ற கடவுளும், தெய்வம் நாதனை - தேவர்கட்கெல்லாந் தலைவனுமாகிய, வால் மதி தோய் சோலை மா மலை அச்சுதனை - சுத்தமான சந்திரன் படியப்பெற்ற திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கின்ற அச்சுதனென்னும் ஒருதிருநாமமுடையவனுமான அழகப்பிரானை, தாள் அடைவான் - திருவடிகளில் ஆசிரயிக்கும்படி, எண்ணலை - நீ நினைக்கின்றாயில்லை; வான் பகை ஆம் ஐவரோடு இசைந்து - பெரும்பகைவராகிய பஞ்சேந்திரியங்களோடு கூடி, இன்னம் உடல் புண் அலைவான் - இன்னமும் உடம்பாகிய புண்ணினால் வருந்துமாறு, எண்ணினாய் - நினைத்தாய்; உன் புலமை நன்று - உனது அறிவுத்தேர்ச்சி நன்றாயிருந்தது! (எ - று.)—ஈற்றுஏகாரம் - இகழ்ச்சிப்பொருளைக் காட்டும்.

'உன்புலமை நன்று' என்றது - 'கல்லைக்கடிக்க நன்றாய்ச்சமைத்தாய்' என்றாற்போல, இகழ்ச்சிக்குறிப்பாகிய எதிர்மறையிலக்கணையால், நினது விவேகம் சிறிதும்நன்றாயில்லையென்று இகழ்ந்தவாறாம். செய்வனதவிர்வன உணராது உட்பகையான ஐம்பொறிகட்கு இணங்கி ஐம்புலநுகர்ச்சியில் அவாக்கொண்டு அப்புலன்களில் ஆழ்ந்து இதுவரை மாறிமாறிப்பலபிறப்பும் பிறந்து அலைந்ததுபோதாமல் இன்னும்பிறப்பெடுத்தலையுமாறு தீவினைதேடுவதாகி, எம்பெருமானைச் சரணமடைந்து பிறவிநோய்தீரக்கருதாமையால், மனம் இங்ஙனம் இகழப்பட்டது.

வால் - வெண்மை. மதிதோய் என்ற அடைமொழி, உயர்வுநவிற்சிவகையால், அம்மலையின் மிக்கஉயர்வைக் காட்டும். அச்யுதன் என்ற வடமொழித் திருநாமம் - அழிவில்லாதவனென்றும், (தன்னைச்சரணமடைந்த

வர்களை) கழுவவிடாதவ னென்றுங் காரணப்பொருள்படும். உடம்பு தசை நிறைந்ததும், அசுத்தமாய் அருவருக்கத்தக்கதும், துன்பத்துக்கு இடமு மாதலால், 'உடற்புண்' எனப்பட்டது. வால் - ஒளியுமாம். (அ௬)

அ௭. புலமையிலேநிமிர்ந்தற்பரைப்போற்றிப்பொதுமகளைக்
குலமையிலேகுயிலேகொடியேயென்றுங்கூர்விழியாம்
பலமையிலேயென்றும்பாடாமற் பாடுமின் பாவலர்கா
ணலமையிலேய்முத்தமார்சோலைமாமலைநம்பனையே.

(இ - ள்.) பாவலர்காள் - கவிபாடவல்ல புலவர்களே!—(நீங்கள்), புலமையிலே நிமிர்ந்து - கல்வித்தேர்ச்சியிலே சிறந்து, அற்பரை போற்றி - இழிவான மனிதர்களைத் துதித்து, பொதுமகளை - வேசையை, குலம் மையிலே குயிலே கொடியே என்றும் - சிறந்த மயிலே குயிலே பூங்கொடியே என்றும், கூர் விழி பலம் ஐயிலே ஆம் என்றும் - (அவளது) கூரியகண்கள் வலியவேலாயுதம்போலும் என்றும், பாடாமல்-கவிபாடாமல்,—நல் அமையில் ஏய் முத்தம் ஆர் - சிறந்தமூங்கில்களிற் பொருந்திய முத்துக்கள் நிறைந்த, சோலை மா மலை - திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற, நம்பனை - சிறந்தகடவுளான அழகனை, பாடுமின் - கவிபாடித் துதியுங்கள்.

இழிவான பொருளின்பங்களிற் பற்றுவைத்து அதனால் அற்பமனிதர்களைத் துதித்தும், விலைமகளிரைப்புகழ்ந்தும் கவிபாடித் திரியாது, இம்மை மறுமைவீடுகளில் மேன்மைபெறுமாறு எம்அழகனைக் கவிபாடித்துதித்து உய்யுங்கள் என்று, நரஸ்துதிசெய்யும் பாவலர்க்கு நல்லறிவுகூறினர்.

புலமை - பலவேறுவகைப்பட்ட நூலுணர்ச்சிகளை ஒருங்கே கொண்ட பேரறிவுடைமை; பாண்டித்தியம். நிமிர்தல் - உயர்தல், பலரினும் மேம்படுதல். பொதுமகள் - பொருள்கொடுப்பவர்க்கெல்லாம் பொதுவாகின்ற பெண். மயில்-சாயலிலும், குயில்-இன்குரலிலும், பூங்கொடி - மெல்லிதாய் ஒல்கியொசியும் அழகியவடிவிலும் மகளிர்க்கு உவமைகூறப்படும். அவர்கண்கட்கு வேல் - கூரியவடிவிலும், ஆடவரைத்தாக்கி வருத்துதலிலும் உவமமென்க. இரண்டாமடியில்—மயில் = மையில், மூன்றாமடியில் —அயில் = ஐயில் என்பவை - திரிபுநயம் நோக்கிய முதற்போலிகள். முத்துப்பிறக்குமிடங்களுள் மூங்கிலும் ஒன்றாதலால், 'நல்அமையில் ஏய் முத்தம்' எனப்பட்டது; (அவ்விடங்கள் இன்னவை யென்பதை, "தந்தி வராகமருப்பு இப்பி பூகம் தழைகதலி, நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினம் மின்னார், கந்தரம் சாலி கழை கன்னல் ஆவின்பல் கட்செவி கார், இந்து உடும்பு கரா முத்தமீனு மிருபதுமே" என்பதனால் அறிக.) 'நலமையிலேய் முத்தமார் சோலைமாமலை நம்பன்' என்றது, வேய்தந்த முத்தராகிய சிவபிரான்வந்து வணங்குந் திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானென்ற குறிப்பை உட்கொண்ட தென்பர், இந்நூலைச் சம்பிரதாயமாக உணர்ந்தோர். நல்லமை யென்பது நலமையெனத் தொக்கது, திரிபுநயத்துக்காக. முத்தம் - முக்தா என்ற வடசொல் விகாரப்பட்டது.

நம்பன் - (யாவரும்) நம்பிச் சரணமடையத் தக்கவன்; நமது தலைவனென்றும் பொருள்கொள்ளலாம். (அஎ)

அஅ. நம்பிநின்றேனுன்சரணாரவிந்தத்தை நன்னெஞ்சென்னுஞ்
செம்பினின்றேபொறித்தே னுனக்காளென்று தெய்வக்குழாம்
பம்பிநின்றேசெறிக்கும்பதங்காணப்பதறுகின்றேன்
கொம்பினின்றேன்சொரியுஞ்சோலைமாமலைக்கொற்றவனே.

(இ - ள்.) கொம்பின் - பூங்கொம்புகளினின்று, இன் தேன் சொரியும் - இனிமையான தேன் பெருகப்பெற்ற, சோலை மா மலை - திருமாலிருஞ்சோலைமலையி லெழுந்தருளியிருக்கின்ற, கொற்றவனே - (யாவர்க்குந்) தலைவனே!—உன் சரண அரவிந்தத்தை - நினது திருவடித்தாமரையையே, நம்பி நின்றேன் - (கதியாக) நம்பிநின்றேன்; உனக்கு ஆள் என்று - 'உனக்கு (நான்) அடிமை' என்று, நல் நெஞ்சு என்னும் செம்பின் இன்றே பொறித்தேன் - (எனது)அநுகூலமான மனமாகிய செப்பேட்டில் இன்றைக்கே எழுதிவைத்துக்கொண்டேன்; தெய்வம் குழாம் பம்பி - நித்தியசூரிகளுடைய கூட்டம் நெருங்கப்பெற்று, நின் தேசு எறிக்கும் - நினதொளி விளங்கப்பெற்ற, பதம் - பரமபதத்தை, காண - அடைவதற்கு, பதறுகின்றேன் - விரைகின்றேன்; (எ - று.)

சரணாரவிந்தம் - தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர்; பின்முன்னாகத்தொக்க உவமத்தொகை. தான்நல்வழிப்படுதற்கு இணங்கிவந்தமைபற்றி, 'நல்நெஞ்சு' என்று கொண்டாடப்பட்டது. 'நெஞ்சென்னுஞ் செம்பினின்றேபொறித்தேன்' என்றது, உருவகம்; மாறாதபடி என்மனத்தில் நன்றாகப் பதியவைத்துக்கொண்டேன் என்றவாறு: செம்பிற்பொறித்தல், தாமிரசாஸநம். திருவாய்மொழியில் "அயர்வறுமமரர்களதிபதி" என்ற இடத்தில் 'அமரர்' என்றது போல, இங்கு 'தெய்வக்குழாம்' என்றது - பரமபதத்தில்வாழ்கின்ற நித்தியமுக்தர்களைக் குறித்தது. 'நின்' என்றது, 'பதம்' என்பதனோடும் இயைதற்கு உரியது. தேசு - தேஜஸ் என்ற வடசொல்லின் சிதைவு. கொம்பின், இன் - ஐந்தனுருபு: நீக்கம். மரக்கொம்புகளிற் பூத்த மலர்களினின்று பெருகுந் தேன் அக்கொம்புகளின்வழியாய்ச் சொரிதல்பற்றி, 'கொம்பின் இன்தேன்சொரியும்' எனப்பட்டது; மரக்கொம்புகளிற் கட்டிய தேன்கூடுகளினின்று இனியதேன் சொரியு மெனவும் அமையும்.

இரண்டாமடியிலும், நான்காமடியிலும் னகரம் நகரமாக் கொள்ளப்பட்டது, திரிபிலக்கணத்தின்பொருட்டு. (அஅ)

அகூ. கொற்றவிராவணன்பொன்முடிவீழக்கொடுங்கண்டுஞ்ச
லுற்றவிராவணன்மாளவெய்தோ னெண்பரதனுக்குச்
சொற்றவிராவணன் மாலிருஞ்சோலைதொழுதுவினை
முற்றவிராவணனற்றமிழ்மாலைமொழிந்தனனே.

(இ - ள்.) கொற்றம் - வெற்றியையுடைய, இராவணன் - (ராக்ஷசராசனை) இராவணனது, பொன் முடி [illegible] கள் [அல்லது

அழகிய தலைகள்], வீழ - கீழேவிழும்படியும், கொடுங் கண் துஞ்சல் உற்ற - பயங்கரமான கண்களை மூடித்தூங்குதல் மிக்க, இராவணன் - இருள்போன்ற (கரு)நிறத்தை யுடையவனான கும்பகர்ணன், மாள - இறக்கும்படியும், எய்தோன் - அம்பெய்தவனும்,—ஒள் பரதனுக்கு - (நற்குணங்களால்) விளங்குகின்ற பரதாழ்வானுக்கு, சொல் தவிரா - (முன்பு வாக்குதத்தஞ்செய்த) சொல்தவறாதபடி மீண்டுவந்தருளிய, அணன் - தமையனுமான அழகப்பிரானுடைய, மாலிருஞ்சோலை - திருமாலிருஞ் சோலைமலையை, தொழுது - (யான்)வணங்கி, வினை முற்ற இராவணம் - (என்)கருமம்முழுவதும் இராதவிதமாக, நல் தமிழ் மாலை மொழிந்தனன் - சிறந்த தமிழ்ப்பாமாலையை (அந்தஎம்பெருமான்மீது) சொன்னேன்; (எ - று.)

இராவணன் திக்விஜயயாத்திரைசெய்து ஆங்காங்கு அனைவரோடும் பொருது தேவர்முதலிய பலரையும் வென்றுவந்தவனாதலால், 'கொற்ற விராவணன்' எனப்பட்டான். ராவணன் என்ற வடமொழிப்பெயர் - கூச்சலிடுபவனென்றும், கூச்சலிடச்செய்பவனென்றும் பொருள்படும்; சிவபிரானது கைலாசகிரியைப் பெயர்க்கத்தொடங்கி அதன்கீழ்த் தன்கைகள் அகப்பட்டு நசுங்குண்டபோது பேரிரைச்சலிட்டதனாலும், தனது கொடியசெய்கைகளால் உலகத்தைக் கதறச்செய்ததனாலும், இவனுக்கு இப்பெயர்; இது, சிவபிரான் இட்டது. இனி, விசிரவமுனிவனது புதல்வனென்று பொருள்படும் தத்திதாந்தநாமமெனக் கொள்ளுதலு மொன்று. இவன், பிரமபுத்திரரான புலஸ்தியமகாமுனிவரது குமாரராகிய விசிரவமுனிவர்க்குக் கேகசியென்னும் ராக்ஷஸஸ்திரீயினிடத்திற் பிறந்தவன். 'பொன்முடி' என்பது - பொன்னினாலாகிய கிரீடத்தைத் தரித்த தலை யென்றும் பொருள்படும்; மூன்றும்வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்கதொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. வீழ, மாள என்ற செயவெனெச்சங்களில் எண்ணும்மை தொக்கது, வினைச்செவ்வெண்.

கும்பகர்ணன் - இராவணனது தம்பி; இவன் இளமையில் மிக்க தவஞ்செய்கையில், இவனுக்கு வேண்டியவரங்கொடுத்தற்குப் பிரமதேவன் பிரதியக்ஷமாக, அக்கடவுளினிடத்து 'யான் என்றும் அழியாது நித்தியனாயிருக்கவேண்டும்' என்று வரங்கேட்கத் தொடங்கிய இவன், தேவர்கள் விருப்பத்தின்படி தன்நாவில்வந்துநின்ற ஸரஸ்வதிதேவியின் சூழ்ச்சியால் 'யான் என்றும் நித்திரையுள்ளவனாயிருக்கவேண்டும்' என்று வரம்வேண்ட, 'அங்ஙனமே ஆகுக' என்று அக்கடவுள் அநுக்கிரகித்ததனால், எப்பொழுதும் பெருந்தூக்கமுடையவனாய்விட்டனனாதலால், 'கண் துஞ்சலுற்ற இராவணன்' என்றார். இரா வணன் - இராவண்ணன்: தொகுத்தல். இராத்திரியைக்குறிக்கிற இராவென்பது - இங்குக் காலவாகுபெயராய், அப்பொழுது நிறைந்துகாணப்படுகிற இருளைக் குறித்தது. கும்பகர்ணன் பயங்கரமான கண்களையும் கருநிறத்தையு முடையவனாதலால், 'கொடுங்கணிரா வணன்' எனப்பட்டான். இவன் வழக்கப்படி பெருந்துயில்கொண்டிருக்கிறபோது, இராவணன் பற்பலஏவலாளரைக்கொண்டு வெகுசிரமப்பட்டு இவனை வலிய

எழுப்பிப் போர்க்குச்செலுத்த,அவ்வனுஞ்சென்று பலவாகரங்களைச் சின்ன பின்னஞ்செய்து எதிர்த்துப் பொருகையில், ஸ்ரீராமபிரானாற் கொல்லப் பட்டான்.

. பரதன் என்ற பெயர்-இராச்சியபாரத்தை நிர்வகிக்கவல்லவ னென்று உறுப்புப்பொருள்படும்; இராமன் வநவாசஞ்செல்ல, தசரதன் சுவர்க்கம் புக, அரசனில்லாததாகும்இராச்சியத்தை இவன் பாதுகாக்கும்படி நேரிடு வதை முன்னமே ஞானக்கண்ணினாலறிந்து வசிஷ்டமுனிவர் இவனுக்கு இத்திருநாமமிட்டன ரென்று அறிக. நற்குணநற்செய்கைகளில் இவன் மிகச்சிறந்தவனாதலால், 'ஒண்பரதன்' என்றார்; அத்தன்மையை, "ஆயிர மிராமர் நின்கேளாவரோ அறியி லம்மா" என்று குகன் பரதனைக்கொண் டாடியதுகொண்டு உணரலாம். கைகேயியின்சொற்படி இராமபிரான் வன வாசஞ்சென்று சித்திரகூடபருவதத்தில் வசிக்கையில் அயோத்தியிலே தச ரதசக்கரவர்த்தி இறந்தனனாக, அதற்குமுன்பு தன்மாமனுடனே கேகய தேசஞ்சென்றிருந்த பரதன் தானும் சத்துருக்கினனுமாக அயோத்திக்கு வந்து அங்குநிகழ்ந்ததை யறிந்து இராமன்வனம்புக்கமைக்கு மிகவருந்தித் தந்தைக்குஉரிய அந்திமகிரியைகளைச் செய்துமுடித்து இராமனை யழைத்து வந்து முடிசூடுவிக்கக்கருதித் தான்அரசியலைத்துறந்து மரவுரிபுனைந்து தாய் மார்முதலியவரோடு சேனைசூழ வனம்புகுந்து சித்திரகூடத்தில் ஸ்ரீராம னைக் கண்டு திருவடிதொழுது செய்தியைக் கூற, இராமமூர்த்தி தந்தை திருநாடலங்கரித்ததை அறிந்து சோகித்துச் செய்யவேண்டியகிரியைகளைச் செய்துமுடித்தபின்னர், அயோத்திக்கு வந்து முடிசூடிக்கொள்ளவேண்டு மென்று தன்னைமிகப்பிரார்த்தித்த பரதனுக்குப் பதினான்குவருடங் கழித்த வுடன் வருவதாகக் கூறி அதுவரை அரசாளுமாறு நியமித்துப் பாதுகையை அளித்தனுப்ப, பரதாழ்வான் பதினான்குவருடங் கழிந்தவுடன் இராமன் வாராவிடின் அக்கினிப்பிரவேசஞ்செய்து உயிர்நீப்பே னென்று பிரதிஜ்ஞை செய்து மீண்டு சென்று இராசாங்க காரியங்களைப் பார்த்துவர, பிறகு இராவணசங்காரஞ் செய்தவுடனே இராமபிரான் முன்பு பரதனுக்குத் தான்வாக்குஅளித்ததைத் திருவுள்ளத்திற் கொண்டு அதுதவறாதபடி வருவ தற்காகப் புஷ்பகவிமானத்திலேறி வெகுவிரைவில் திருவயோத்திசேர்ந்து அங்குத் தீக்குதிக்கச் சித்தனாய்த் தன்வரவை எதிர்பார்த்திருந்த பரதனால் மகிழ்ச்சியோடு எதிர்கொண்டு அழைக்கப்பட்டன னாதலால், 'பரதனுக்குச் சொல்தவிரா அணன்' என்றார். அணன் - அண்ணன்: தொகுத்தல்; அணல் என எடுத்து, அண்ணலென்பதன் தொகுத்தலெனக் கொண்டு, பெரியோ னென்று உரைத்தலும் அமையும்.

வினை முற்ற இராவணம் - கருமங்களெல்லாம் அழியும்படி. வணம் - வண்ணம்: தொகுத்தல். இராவணன், இராவணம் என்பன இப்பொருள் களில்வருதலை "இராவண னிராவண னிராவண மறுத்தோர்" என அழகர் கலம்பகத்துங் காண்க. பகவத்விஷயமாகத் தாம் விண்ணப்பஞ்செய்த பிர பந்த மாதலால்,அவ்விஷயவைலக்ஷண்யம் தோன்ற,'நல்தமிழ்மாலைமொழிந் தனன்' என்று கொண்டாடிக்கூறினார்; ஆதலால், இது தற்புகழ்ச்சிக்குற்

றத்தின்பாற்படாது. 'வினைமுற்றஇராவணம் நல்தமிழ்மாலை மொழிந்தனன்' என்றதனால், இந்நூலிற்குப் பயனுங் கூறியவாறும். மொழிந்தனன் என்பதில், 'அன்'விகுதி - தன்மையொருமைக்கு வந்தது.

நான்காமடியில் நகரம் னகரமாக் கொள்ளப்பட்டது, திரிபுநயத்திற்காக. (அக)

கூ௦. மொழித்தத்தைகொஞ்சுமலையலங்காரன் முன்னூற்றுவரை
யழித்தத்தைமைந்தர்க்கரசளித்தோ னடிநாட்டொடர்ந்தென்
னுழித்தத்தைச்செய்தன்றிப்போகாவினையையொருநொடியிற்
கழித்தத்தையென்சொல்லுகேன் றனக்காட்பட்டகாலத்திலே.

(இ - ள்.) மொழி - சொல்லழகிற்சிறந்த, தத்தை - கிளிகள், கொஞ்சும் - கொஞ்சிப்பேசுதற்குஇடமான, மலை - திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கின்ற, அலங்காரன் - அழகனும்,—முன் - முன்பு [கிருஷ்ணாவதாரத்தில்], நூற்றுவரை அழித்து - துரியோதனாதியர்நூறுபேரையும் (வீமசேனனைக்கொண்டு) நாசஞ்செய்து, அத்தை மைந்தர்க்கு அரசு அளித்தோன் - (தனது) அத்தையான குந்தியின் குமாரர்களாகிய பாண்டவர்கட்கு அரசாட்சியைக் கொடுத்தருளியவனுமாகிய எம்பெருமான்,—அடி நாள் தொடர்ந்து என் உழி தத்தை செய்து அன்றி போகா வினையை - ஆதிகாலந்தொடங்கி என்னிடத்தில் துன்பத்தைச்செய்தல்லது ஒழியாத என்கருமங்களை, தனக்கு ஆள்பட்ட காலத்திலே ஒரு நொடியில் கழித்தத்தை - அவனுக்கு (நான்) அடிமைப்பட்டபொழுதே ஒருமாத்திரைப் பொழுதில் ஒழித்தருளிய திறத்தை, என் சொல்லுகேன் - என்னவென்று சொல்வேன்! (எ - று.)

பிறப்பு அநாதியாய்வருதலின் தமது உயிரால் அளவின்றிஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இதுவரை அநுபவித்தவை போக இனி அநுபவிக்கக்கடவனவாய் நின்ற கருமங்களெல்லாம் தாம் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டமாத்திரத்தில் உடனே அவனருளால் காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுத்துய்போல இருந்தது தெரியாதபடி அழிந்த திறத்தைக் கொண்டாடிக் கூறினர்.

கொஞ்சுதல் - மழலைச்சொற்பட இனிமையாகப்பேசுதல். தத்தை - கிளிகள், மொழி - சொற்களை, கொஞ்சும் - கொஞ்சிப்பேசுகிற என்று பதவுரை கூறினும் அமையும். நூற்றுவர் - தொகைக்குறிப்பு. குந்தி, கண்ணனது தந்தையான வசுதேவனது உடன்பிறந்தவளாதலால், அத்தையெனப்பட்டனள். பாண்டவர்கட்குத் துரியோதனாதியர் வஞ்சனையால் நேர்ந்த பற்பல துன்பங்கட்கெல்லாம் கண்ணபிரான் எற்றமாறுசெய்து பாண்டவர்க்குப் பலவாறு உதவிபுரிந்து, அவர்கள் துரியோதனாதியரைத் தொலைத்தற்கும் அரசுபெற்றுவாழ்வதற்கும் அவனே மூலகாரணமானதனால், 'முன் நூற்றுவரையழித்து அத்தைமைந்தர்க்கு அரசளித்தோன்' என்றார்; ("செற்றவனத்து அத்தைமைந்தரை வாழ்வித்துத் தீயமன்னர், பொன்றஅனத்

தத்தைச்செய்த பிரான்" என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும்.) என்னுழி, உழி - ஏழனுருபு. தத்து - ஆபத்து. அடிநாள்தொடர்ந்து - அநாதிகாலமாய் என் உயிரைத் தொடர்ந்து. தத்தைச்செய்தன்றிப்போகா வினை - தன் பங்களைச்செய்துவிட்டே கழியக்கடவனவான கருமங்கள். நொடி - கைந்நொடிப்பொழுது; மனிதர் இயல்பிலே ஒருகால் கைந்நொடித்தற்குக்கொள்ளும்பொழுது. கழித்தனை - கழித்தது என்ற இறந்தகாலத் தொழிற்பெயரின் இரண்டாம்வேற்றுமைவிரியாகிய கழித்ததை யென்பது விரித்தல்விகாரம்பெற்றது. சொல்லுகேன் - ககரவொற்று இடைநிலை, எதிர்காலங்காட்டிற்று. (கூ0)

**கூக.** காலமலைக்கும்புவனங்களைக்கரந்தா யுதிரங்
காலமலைக்குமைத்தா யழகா கமலத்துப்பஞ்சார்
காலமலைக்கும்புவிக்குமன்பா வுயிர்காயம்விடுங்
காலமலைக்குங்கடுங்கூற்றைக்காய்ந்தென்னைக்காத்தருளே.

(இ - ள்.) கால் - ஊழிக்காற்றின்உதவியால், அம் அலைக்கும் - கடல்நீர் அலைவீசிப் பொங்கி மேல்வரப்பெற்ற, புவனங்களை - உலகங்களை, கரந்தாய் - திருவயிற்றில் ஒளித்துவைத்துப் பாதுகாத்தருளியவனே! உதிரம் கால - இரத்தத்தைக் கக்கும்படி, மலை குமைத்தாய் - மல்லர்களை நசுக்கியழித்தவனே! அழகா—! கமலத்து - செந்தாமரைமலரில் வீற்றிருக்கின்ற, பஞ்சு ஆர் கால் அமலைக்கும் - செம்பஞ்சுக்குழம்பு ஊட்டப்பெற்ற திருவடிகளையுடைய குற்றமற்றவளான திருமகளுக்கும், புவிக்கும் - பூமிதேவிக்கும், அன்பா - அன்புள்ள கணவனே!—உயிர் காயம் விடும் காலம்-(எனது) உயிர் (எனது)உடம்பை விட்டு நீங்குங்காலத்தில், மலைக்கும் கடுங் கூற்றை காய்ந்து என்னை காத்தருள் - எதிர்த்துப்பொருதுகலியவரும் கொடிய யமனைச் சினந்து விலக்கி என்உயிரை (நற்கதியிற்சேர்த்து)ப் பாதுகாத்தருள்வாய்; (எ - று.)

"நன்றுங்கொடியநமன்தமர்கள் நலிந்துவலிந்தென்னைப்பற்றும்போது, அன்றங்கு நீ யென்னைக்காக்கவேண்டும்" என்றார் பெரியாழ்வாரும்.

பிரளயகாலத்திற் பெருங்காற்றுவீசக் கடல்பொங்கி உலகங்களை மேற்கொண்டு அழித்தல் இயல்பு. அந்தஆபத்துக்காலத்தில் உலகங்களை அவற்றிலுள்ள சராசரங்களுட்பட வயிற்றில்வைத்துப் பாதுகாத்தவனே யென்பார், 'கால் அம் அலைக்கும் புவனங்களைக் கரந்தாய்' என்றார். ("பனிப்பரவைத் திரைததும்பப் பாரெல்லாம்நெடுங்கடலேயானகாலம்,இனிக்களைகணிவர்க்கில்லையென் றுலகமேழினையு மூழில்வாங்கி, முனித்தலைவன் முழங்கொளிசேர்திருவயிற்றில் வைத் தும்மை யுய்யக்கொண்ட, கனிக்களவத்திருவுருவத்தொருவன்" என்றார் திருமங்கையாழ்வாரும்.) வேறுபுகலிடமில்லாதபடி உலகமுழுவதுக்கும் நேர்ந்த கொடிய அத்துன்பக்காலத்தில் அவ்வுலகங்களை அந்தப் பிரளயப்பெருவெள்ளத்துக்கு உள்ளாய் அழிந்திடாதபடி பாதுகாத்ததுபோல, நின்னையன்றிவேறுகதியற்றவனுன என்னை அந்திமகா

லத்திலே கொடியயமனுக்குஇலக்காகாதபடி ஆட்கொண்டருள்வை யென்பார், இதுகூறி விளித்தார். மலைக்குங்கடுங்கூற்றைக் காயவல்ல திறம் நினக்கு உளதென்பது, 'உதிரங்காலமல்லைக்குமைத்தாய்' என்று விளித்ததன் குறிப்பு. ஜீவகோடிகளிற் சிலர் நின்னை என்றும்விட்டுப்பிரியாது உடனுறையும்படி நீ அருள்செய்ததுபோல, அடியேனிடத்தும் அருள்செய்யவேண்டாவோ? என்பது, 'கமலத்து அமலைக்கும் புவிக்கும் அன்பா' என்று அழைத்ததன் தாற்பரியம். உதிரம் - ருதிர மென்ற வடசொல்லின் விகாரம். காலுதல் - கக்குதல். மலை - மல்லை என்பதன் விகாரம். கமலத்து அமலை என இயையும். அமலா என்ற வடசொல், ஆவீறு ஐயாயிற்று.

இச்செய்யுளில் அடிதோறும் முதலெழுத்துக்கள் சில ஒன்றிநின்று வெவ்வேறுபொருள் தருதல், இடைபிட்டுவந்த முதல்முற்றுமடக்கு எனப் படும் யமகமாம்; மேல் ௬௪ - ஆஞ் செய்யுளிலும் இது காண்க. இந்நூலில் இவ்விரண்டு யமகச்செய்யுள்தவிர மற்றையெல்லாம் திரிபுஉடைய செய்யுள்.

௬௨. அருளக்கொடியிடைப்பூமாதுநீயும்வந்தாளினுமா
மிருளக்கொடியநமன்வருங்காலத்திகழினுமாங்
கருளக்கொடியழகா வலங்கார வன்கஞ்சனெஞ்சத்
துருளக்கொடியவுதைத்தா யெனதுயிருன்னுயிரே.

(இ - ள்.) கருளன் கொடி - கருடனதுவடிவ மெழுதிய துவசத்தையுடைய, அழகா - அழகனே! அலங்கார - அலங்காரனே! வல் கஞ்சன் நெஞ்சத்து - கொடிய கம்சனது நெஞ்சிலுள்ள, உருள் அக்கு - திரண்ட எலும்பு, ஒடிய - முறியும்படி, உதைத்தாய் - உதைத்தவனே!—எனது உயிர் உன் உயிரே - என்னுடைய உயிர் உனக்கு அடிமைப்பட்ட உயிரேயாம்; (இனி), இருள் அ கொடிய நமன் வரும் காலத்து - இருள்நிறமுள்ள [மிகக்கரிய] அந்தக் கொடுமையுடைய யமன் வரும் அந்திமகாலத்திலே, கொடி இடை பூ மாதும் நீயும் - பூங்கொடிபோலும் மெல்லிய இடையையுடைய தாமரைமலரில்வாழும் பெரியபிராட்டியும் நீயுமாக, அருள வந்து ஆளினும் ஆம் - நற்கதியருளுமாறு எழுந்தருளி (அவ்வுயிரை) ஆட்கொண்டாலும் சரி, இகழினும் ஆம் - (அன்றி யமன்கொண்டுபோம்படி) உபேக்ஷை செய்துவிட்டாலும் சரி; (எ - று.)

என் உயிரை உனக்கு அடிமையாக்கிவிட்டேன்; அங்ஙனம் உன்வசப்பட்டஉயிரை அணைக்கவும் அடிக்கவும் உனக்கு ஸ்வாதந்திரியமுண்டு; நீஎது செய்வதானாலும் அதுகுறித்து எனக்கு ஒன்றும்பாரமில்லை யாதலால், நான் இனிக் கவலைகொள்ளவேண்டுவதில்லை,என்கடமையை யான்செய்தாய்விட்டது என்பதுகருத்து."நானந்தனைக்குந்தநாடெய்திவாழிலென்ஞாலத்தன்றி, ஈனந்தவாதநிரயத்துவீழிலென் யானடைந்தேன், கோனந்தன்மைந்தனை நான்முகன்தந்தையைக் கோயிலச்சு,தானந்தனையெனக்காராவமுதையரங்கனையே" என்றார் திருவரங்கக்கலம்பகத்தும். புதல்வர்செய்த பிழைகளைப் பிழைகளென்று கொள்ளாமல் தான்பொறுப்பதேயன்றி அவற்றிற்காகத்

தக்தை சீற்றங்கொள்ளுமிடத்தும் பொறுத்தருளுமாறுசொல்லிச் செய்விக்கிற தாய்போல,அடியார்கள்செய்தகுற்றங்களைக் குற்றமென்றுகொள்ளாது தான்பொறுத்தருளுதலேயன்றி அவற்றிற்காக எம்பெருமான் சீற்றங்கொள்ளுமிடத்தும் பொறுத்தருளுமாறு சொல்லிப் புருஷகாரமாகிற பெரிய பிராட்டியார் உடனுறைதல் இன்றியமையாதென்றுகொண்டு, 'பூமாதும் நீயும் அருள வந்து ஆளின்' என்றார். 'கருளக்கொடியழகா' என்றது, "கருளக்கொடியுடைப்புண்ணியன்" என்றபடி தன்புற்றவரைப் பாதுகாத்தற்குக் கொடிகட்டியுள்ளவனே! என்றவாறு.

'அந்தமன்' என்றது, உலகநிசுட்டு. கருளன் - கருடனென்ற வடசொல்லின் விகாரம். கருளன் + கொடி = கருளக்கொடி: "சிலவிகாரமாம் உயர்திணை." (கருடன் பறவைக்காசாயினும், நித்தியசூரிகளில் ஒருவனாய்ப் பரமசேதநனாதலால், அவனை உயர்திணையென்னத் தட்டில்லை.) (சுஉ)

[பிரிவாற்றாத தலைவி தனதுநிலைமையைக் கூறுதல்.]

சுங. உயிர்க்கும்படிக்குமுன்னாயிரம்பேரென்றெறுத்தன்னைமார்
செயிர்க்கும்படிக்குநின்றேனென்செய்கேன்செழுந்தேவர்களு
மயிர்க்கும்படிக்குறளாமழகா வலங்கார நெய்க்குந்
தயிர்க்கும்படிக்குஞ்செவ்வாய்மலர்ந்தாய்நின்னைத்தாள்பணிந்தே.

(இ - ள்.) செழுந் தேவர்களும் அயிர்க்கும்படி - ஞானவளமுடைய தேவர்களும் (இதுஎன்! என்று) சங்கிக்கும்படி, குறள் ஆம் - குறுகிய வடிவமாகிய[வாமநாவதாரஞ்செய்த], அழகா - அழகனே! அலங்கார - அலங்காரனே! நெய்க்கும் தயிர்க்கும் படிக்கும் செம் வாய் மலர்ந்தாய் - (கிருஷ்ணாவதாரத்திலே) வெண்ணெயையும் தயிரையும் அமுதுசெய்தற்காகவும் (பிரளயகாலத்திலே) உலகத்தை உட்கொள்ளுதற்காகவும் சிவந்த திருவாய் மலரைத் திறந்தருளியவனே!—நின்னை தாள்பணிந்து - (நான்) உன்னைத் திருவடிவணங்கி [நான் உன்னைக் காதலித்ததனாலே என்றபடி],—உயிர்க்கும் உன் ஆயிரம் பேர் படிக்கும் என்று அன்னைமார் ஒறுத்து செயிர்க்கும்படிக்கு நின்றேன்-(என்னைக்குறித்து)இவள்பெருமூச்செறிகின்றாள் நினது ஆயிரம்பெயர்களையும்(எப்பொழுதும்)சொல்லிக்கொண்டிருக்கிறாள் என்ற காரணத்தால் என்தாய்மார் வெறுப்புக்கொண்டு கோபிக்கும் நிலையிலே நின்றிட்டேன்; என் செய்கேன் - யாது செய்யக்கடவேன்! (எ - று.)

தலைவன் ஒருவழித்தணந்துநின்ற சமயத்திலே பிரிவாற்றாது பலவாறு வருந்துந் தலைவியின் நிலைமையை நோக்கிய செவிலியர் வெகுண்டு அவளைப் பலபடிசொல்ல, அவ்வெஞ்சொற்களைக் கேட்டு மிகத்துன்புறுகின்ற அத்தலைவி, தனது நினைப்புமிகுதியால் தலைவனை எதிரில்நிற்கின்றவாறுபோலப் பாவித்து அங்ஙனம் உருவெளித்தோற்றத்திலே வெளிப்பட்ட அத்தலைவனை முன்னிலைப்படுத்திக் கூறியது. இது. உயிர்த்தல்—'வெய்துயிர்த்திரங்கல்' என்னும் மன்மதாவத்தை; ("வெவ்வுயிர்த்துயிர்த்துருகும்," "ஆவியனலவெவ்வுயிர்க்கும்" என்பன - திருவாய்மொழியில் தாயார்வார்த்தை.)

ஆயிரம்பேர்படிக்கும்--'மொழிபலபிதற்றல்' என்னும் மன்மதாவத்தையின் பாற்படும். ("முகில்வண்ணன்பேர் கிளரிக்கிளரிப்பிதற்றும்" என்பது, திருவிருத்தத்தில் தாயார்வார்த்தை.)

இரண்டாமடியில், படிக்கு என்பது-படியில் என்ற பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். மனிதரினும் தேவர் அறிவிற்சிறத்தலால், 'செழுந்தேவர்' என்றார். அவர்களும் வாமநமூர்த்தியின் சொரூபத்தை உள்ளபடி உணரமாட்டாமற்போயினரென, அதன் விசித்திரங் கூறியவாறு. உம்மை- உயர்வுசிறப்பு. படி - பூமி; இங்குச் சிறப்புப்பெயர் பொதுப்பொருளதாய், உலகங்களென்றமாத்திரமாய் நின்றது. 'உயிர்க்கும் படிக்கும் உன் ஆயிரம் பேர்' என்றது - தன்னைப் படர்க்கையாக் கூறியது.

தியானநிலையில்நின்ற ஐயங்காரது அகக்கண்ணுக்கு எம்பெருமான் புலனாகிமறைந்தவளவிலே அப்பெருமானது ஸதாஸாந்நித்யத்தை அபேக்ஷித்து அது உடனே கிடையாமையால் ஆற்றாமைமிக்குப் பெருமூச்சுவிட்டுக்கொண்டும் எம்பெருமான் திருநாமங்களை வாய்மாறாமல் எடுத்துக்கூறிக்கொண்டும் வருந்துகின்ற அவரது துயரத்தை நோக்கிப் பரிவர்கள் 'பொறுமைபூணுது இங்ஙனமும் ஓர் ஆற்றாமையுண்டோ?' என்று குறைகூற, அதுகேட்டு மிகத் துயருற்ற ஐயங்கார், அங்ஙனம் தமக்குஉண்டான தடுமாற்றத்தை அப்பெருமானைக்குறித்து விண்ணப்பஞ்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். விவரம் நோக்கிக்கொள்க. (கூங)

கூச. பணிபதிவாடநின்றாடின நூற்றுவர்பாற்சென்றன
பணிபதினாலுபுவனமுந்தாயின பாப்பதின்மர்
பணிபதியெங்குமுவந்தன பங்கயப்பாவையுடன்
பணிபதிமார்பனலங்காரன்பொற்றிருப்பாதங்களே.

(இ - ள்.) பங்கயம் பாவையுடன் - செந்தாமரைமலரில் வீற்றிருக்கின்ற சித்திரப்பாவைபோ லழகியவளான திருமகளுடனே, பணி - (கௌஸ்துபமென்னும்) ஆபரணமும், பதி - நீங்காதுபொருந்தப்பெற்ற, மார்பன்- திருமார்பையுடையவனான, அலங்காரன் - அழகப்பிரானுடைய, பொன் திரு பாதங்கள் - பொன்மயமான ஆபரணங்களை யணிந்த திருவடிகள்,— பணி பதி வாட நின்று ஆடின - ஸர்ப்பசிரேஷ்டனான காளியன் வலிமை தளரும்படி (அவன் முடிகளின்மேல்) நின்று நர்த்தநஞ்செய்தன; நூற்றுவர் பால் சென்றன - துரியோதனாதியரிடத்துச் சென்றன; பணி பதினாலு புவனமும் தாயின - (இயல்பிலே தமக்குக்) கீழ்ப்படிந்தனவான பதினான்கு உலகங்களையும் தாவியளந்தன; பதின்மர் பா பணி - பத்து ஆழ்வார்களாலும் பாசுரம்பாடித் துதிக்கப்பெற்ற, பதி எங்கும் - (திவ்விய) தேசங்களிலெல்லாம், உவந்தன - விரும்பியெழுந்தருளியிருந்தன; (எ - று.)

இது, இந்நூலின் உகூ-ஆஞ் செய்யுள்போன்ற பாதவகுப்பு. எம்பெருமான்திருவடிகளினிடத்துத் தமக்குஉள்ள ஆராதஅன்பினால் மீண்டும் இது கூறினர். திருவேங்கடத்தந்தாதியிலும் பாதவகுப்புச் செய்யுள்கள் இரண்டு வந்துள்ளன.

பணிபதி - வடமொழித்தொடர்; நாகராஜன். நூற்றுவர்பாற் சென்றது, கண்ணன்பாண்டவதூதனாய் உபப்பிலாவியத்தினின்று அஸ்திநாபுரிக்கு எழுந்தருளியபொழு தென்க. பதினாலு புவனம் - பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் மஹர்லோகம் ஜநலோகம் தபோலோகம் சத்தியலோகம் என்ற மேலேழுலகங்களும், அதலம் விதலம் ஸுதலம் தராதலம் ரஸாதலம் மகாதலம் பாதாளம் என்ற கீழேழுலகங்களுமாம். பூலோகத்தை யளந்ததில் அதன்கீழுலகங்களேழும், மேலுலகத்தையளந்ததில் புவர்லோகம் முதலிய ஆறும் அடங்குதலால், 'பதினாலுபுவனமுமளந்தாயின' என்றார்; உம்மை - முற்றுப்பொருளது:("புடவிகடத்தலையிரேழளந்தன"என்றார் திருவேங்கடத்தந்தாதியிலும்.) உலகங்களெல்லாம் இயல்பிலே தமது திருவடிகட்குக் கீழ்ப்பட்டன வென்பது காட்டி எல்லாவுயிர்களையும் ஆட்கொண்டருளுதற்கு, உலகமளக்கிறதென்கிற வியாஜத்தால் எல்லாவுயிர்களின் முடியிலும் தன்திருவடிகளை வைத்தனன் என்றகருத்துத் தொனிக்குமாறு, 'பணிபதினாலுபுவனமுமளந் தாயின' என்றார். தாயின - தாவு என்ற பகுதி, தொகுத்தல் விகாரப்பட்டுத் தாஎன நின்றது. 'பதின்மர்பாப்பணி பதி' என்றது, நூற்றெட்டுத் திருப்பதிகளை. உலத்தலாகிய எம்பெருமானது செயலை அவனது திருவடிகளின்மேல் ஏற்றிக்கூறியது, உபசாரவழக்கு; (திருவேங்கடத்தந்தாதியில் "அடவிகடத்தலை வேட்டன" என்றதனோடு இதனை ஒப்பிடுக.) பொன் - ஆகுபெயர்.

இது, யமகச்செய்யுள். (கூச)

கூரு. பாதகரத்தனைபேருங்கனகனும்பன்னகத்தா
லேதகரத்தனையற்கருளாளியை யெட்டெழுத்து
ளோதகரத்தனைச் சுந்தரத்தோளுடையானை நவ
நீதகரத்தனைச் சேர்ந்தார்க்குத்தேவருநேரல்லரே.

(இ - ள்.) பாதகர் அத்தனை பேரும் - தீவினையுடையாரான அசுரர்களெவ்வளவுபேரும், கனகனும் - இரணியனும், பல் நகத்தாலே தகர - கைந்நகங்கள்பலவற்றால் பிளந்தழிய, தனையற்கு அருள் - (அவ்விரணியனது) குமாரனான பிரகலாதாழ்வானுக்குக் கருணைசெய்த, ஆளியை - (நர)சிங்கமூர்த்தியும்,—எட்டு எழுத்துள் ஓது அகரத்தனை - அஷ்டாக்ஷரமந்திரத்தில் (முதலிலே) சொல்லப்படுகிற அகரமென்னும் உயிரெழுத்தின் பொருளாயுள்ளவனும்,—சுந்தரம் தோள் உடையானை - அழகிய திருத்தோள்களையுடையவனும், நவநீத கரத்தனை - (கிருஷ்ணாவதாரத்திலே) வெண்ணெயையேந்திய கையையுடையவனுமாகிய அழகப்பிரானை, சேர்ந்தார்க்கு - சரணமடைந்தவர்கட்கு, தேவரும் நேர் அல்லர் - (புண்ணியப்பயனையே அநுபவிப்பவரான) தேவர்களும் சமானராகார்; (எ - று.)

என்று பாகவதமகிமை கூறியவாறும். புண்ணியப் பயனுள்ளவளவும் சிற்றின்பம் நுகர்ந்து அஃது ஒழிந்தவளவிலே மீண்டும் இவ்வுலகிற் பிறந்து வருந்தக்கடவரான தேவர்கள், எம்பிரானருளால் இருவினையும் அற்று இனி

ப்பிறப்பின்றி நித்தியமான முத்தி பெறக்கடவராகி ஜீவன்முக்தி நிலையில் நின்று பிரமாநந்தமனுபவிக்கின்ற பாகவதர்க்குச் சிறிதும் நிகராகாரென்க.

'பாதக ரத்தனைபேரும்' என்றது, இரணியனது பரிவாரங்களான மிகப்பல அசுரர்களை. இரணியனுக்குப்பரிந்து நரசிங்கமூர்த்தியை எதிர்த்ததனால், இவர்களும் அப்பெருமானாற் கொல்லப்பட்டனர்; இதனை, "அறியினரக்கர் முன்னுளரியாகிய வப்பொழுது, கொறியினவுணர்தம் வெள்ளங்கள் கோடியுங் கொன்றதிலோ, தறியின்வயிற்றிற் றருவனெஞ் சுஞ் சரபத்துடலும், நெறியின்வகிர்ந்தபினன்றோ தணிந்தது நின்சினமே" என்ற திருவரங்கத்து மாலையினாலும் உணர்க. இவர்களும் இரணியனோடொப்ப எம்பெருமான்பக்கல் பகைமையுடைமையால், 'பாதகர்' எனப் பட்டனர். இப்படி தன்பக்கல் துவேஷங்கொண்ட அசுரர்களையெல்லாம் அப்பெருமான் அழிக்கின்றபோதே, தனக்கு அடிமைபூண்ட பிரகலாதன் பக்கல் அநுக்கிரகமுடையனாயிருந்தனனாதலால், 'பாதகரத்தனைபேருங் கனகனும் பல்நகத்தாலே தகரத் தனையற்கருளாளி' என்றார்; அத்தன்மையை, "தாழ்குமரன்மேற் கனகவஞ்சகன்மே லோர்முகத்தே, சூழ்கருணையும் முனிவுந் தோன்றியவால்" என்று நூற்றெட்டுத்திருப்பதியந்தாதியில் நன்கு விளக்குவர். இரணியன்முதலிய அசுரர்கள் பலரைக் கொன்ற நரசிங்கமூர்த்தியின் உக்கிரத்தைக் கண்டு அஞ்சித் திருமகளும் அருகிற்செல்ல மாட்டாளாக, பிரமன்முதலிய தேவர்கள்பலரும் பலவாறு துதிக்கவும் அச்சீற்றம் அடங்காதிருந்த அந்நிலையிலே, பிரகலாதன்செய்த துதிமொழிக்குச் சிங்கப்பிரான் திருவுள்ளமுகந்து அவன்முதுகைத்தடவி 'நீ விரும்பிய வரத்தைக் கொடுப்பேன்; வேண்டுக' என்று சொன்னதற்கு, அந்தப் பரமபாகவதன் 'நின்னை வழிபடும் அன்பேயன்றி யான் வேண்டுவதொரு வரமும் உண்டோ?' என்றுசொல்லித் தொழுது பலவாறுதுதித்து 'இங்ஙனம் உற்ற சீற்றந்தணிந்து திருவுள்ளமுவந்தருளவேணும்' என்று பிரார்த்தித்தவளவிலே, அப்பெருமான் சினந்தணிந்தனனென்ற விவரத்தைப் புராணங்களிற் காணலாம். தகர என்ற செயவெனெச்சம் - உடனிகழ்ச்சிப் பொருளதாய், நிகழ்காலங் காட்டும்.

இரணியனென்ற பெயர் பொன்னிறமானவனென்று பொருள்படுதலால், அதன் பரியாயநாமமாக, 'கனகன்' என்றார். இரணியம், கநகம் என்பன - பொன்னின் பெயர்கள். திருவேங்கடத் தந்தாதியில், "செம்பொற்றனவன்" என்றதும் இத்தன்மையதே. 'பல் நகத்தாலே' என்பதற்கு - பற்களினாலும் நகங்களினாலும் என்று உரைப்பாருமுளர். தநயன் என்ற வடசொல்லின் விகாரமாகிய தனயன் என்றது, திரிபுநயத்துக்காக, தனையன் என இடைப்போலிபெற்றது. ஆளி - சிங்கம்.

'எட்டெழுத்துள் ஓது அகரம்' என்றது, அப் பெரியதிருமந்திரத்தின் முதலிலுள்ள பிரணவத்திலடங்கிய அகாரத்தை. "அகாரார்த்தோவிஷ்ணு:" என்றபடி அதன்பொருள் திருமாலாதலால், 'அகரத்தன்' என்றார். 'அகரம் எல்லாச்சொற்களுக்கும் மூலமாதலாலும், பிரஹ்மம் எல்லாப்பொருள்களுக்

கும் மூலமாதலாலும், 'அ' என்று பரப்பிரஹ்மத்துக்குப் பெயர்' என வாமன புராணம் கூறும். அகரம், எல்லா வெழுத்துக்களிலுங் கலந்து அவற்றின் தன்மையாய் நிற்கும்; கடவுள் எல்லாச் சராசரப் பொருள்களிலுங் கலந்து அவற்றின் தன்மையாய் நிற்பன்: அகரம், எல்லா வெழுத்துக்கும் முதல்; பகவான், எல்லாவுலகிற்கும் முதல்: அகரம், அவிகாரமான நாதம்; பகவான், விகாரமில்லாத இயற்கைப்பொருள்: இவ்வாறு பல கண்டுகொள்க. ஸ்ரீ கீதையிலே கண்ணன் 'எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே' என்று அருளிச்செய்ததும் உணர்க. அகரம் என்பதில், கரம் - சாரியை.

நவநீதகரம் - வடமொழித்தொடர். நவநீதமென்ற சொல் - புதியதயிரி லிருந்து எடுக்கப்பட்டதென்று காரணப்பொருள்பெறும். தேவரும், உம் - உயர்வுசிறப்பு. இதனால், பிறர் தேவல்லரென்பது தானே போதரும். (கூரு)

கூசு. அல்லலங்காரையுஞ்சேர்விக்குமைம்புலவாசையென்றும்
பல்லலங்காநைந்துகோலூன்றியும்பற்றறுதுகண்டாய்
மல்லலங்காரிகையார்மருடீர்ந்துவணங்குநெஞ்சே
தொல்லலங்காரனைத் தென்றிருமாலிருஞ்சோலையிலே.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—ஆரையும் அல்லல் சேர்விக்கும் - எவரையுந் துன்பமடைவிக்கின்ற, ஐம் புலம் ஆசை - ஐந்துபுலன்களிற் செல்லுகின்ற ஆசையானது, என்றும் - எந்நாளும், பல் அலங்கா நைந்து கோல் ஊன்றியும் - பற்கள் அசையப்பெற்று உடல்தளர்ந்து (நடக்க வலியில்லாமற்) கோலையூன்றும்படியானாலும், பற்று அறுது - தொடர்ச்சி நீங்காது; (ஆதலால்), மல்லல் அம் காரிகையார் மருள் தீர்ந்து - அழகுவளமுள்ள மாதர்கள் பக்க லுண்டாகிற மோகம் நீங்கி, தொல் அலங்காரனை தென் திருமாலிருஞ்சோலையிலே வணங்கு - அநாதியான அழகனை அழகிய திருமாலிருஞ்சோலைமலையிலே வணங்குவாய்; (எ - று.)—கண்டாய் - தேற்றம். அங்கு - அசை; அவ்விடத்திலெனக்கொண்டு, மறுமையிலென்றலுமொன்று.

ஐம்பொறிகளின் வழியாக ஐம்புலன்களை யனுபவிப்பதி லுண்டாகின்ற ஆசையானது, மிக்ககிழத்தனத்திலுமுட்பட எப்பொழுதும் நீங்காது; ஆதலால், அதற்கு முடிவில்லை: ஆகவே, அதில் விருப்பம்வைத்துப் பெண்ணாசை கொண்டு மயங்குதலின்றித் திருமாலிருஞ்சோலையழகனை வணங்கி உய்யும் வழியை நாடுவாய் என்று, தம்நெஞ்சத்துக்கு நல்லறிவுணர்த்தியவாறாம்.

'கருது நெஞ்சே' என்றது 'வணங்குநெஞ்சே'என மெய்யின்வினையை மனத்தின்மேலேற்றிக் கூறியது, புறக்கரணமாகிய அம்மெய்யின் வணக்கத்துக்கு அந்தக்கரணமாகிய மனத்தின் உடன்பாடு இன்றியமையாதாதலால். இதனை,முதற்செய்யுளில் "உரைநெஞ்சமே" என்றதனோடு ஒப்பிடுக. இத்தன்மைபற்றியே, பந்தத்துக்கும் மோக்ஷத்துக்கும் மனமே காரணமென்ப. இது, ஒருவகை உபசாரவழக்கு. அன்றி, தியானமென்னும் மனவணக்கத்தைக் குறித்ததுமாம்.

ஆரையும் - யாரையும் என்பதன் மரூஉ; எவ்வளவுகொஞ்சுமறிவுள்ளவர்களையும் என்றபடி. அலங்கா - உடன்பாட்டிறந்தகால வினையெச்சம்; அலங்குதல் - அசைதல். 'பல்லலங்கா நைந்து கோலூன்றி' என்றவிடத்து, சினைவினை முதல்வினை கொண்டது; அலங்குதல் - பல்லின் வினையாதலும், நைந்துகோலூன்றுதல் - அப்பல்லுடையானது வினையாதலுங் காண்க. பல்லலங்கா நைந்து கோலூன்றியும் - முற்றமூத்தும் என்றபடி; உம் - இழிவுசிறப்பு. மல்லல் - வளப்பமுணர்த்தும் உரிச்சொல். காரிகை - அழகு; அதனையுடையவர், காரிகையார். மருள் - காமமயக்கம். (கசு)

[பிரிவாற்றாத தலைவிநிலையைக்கூறித்துப் பாங்கி இரங்கல்.]

கூஎ. சோலையிலாமையில்சேர்திருமாலிருஞ்சோலைநின்றான்
வேலையிலாமையில்வேடங்கொண்டான் புயமேவப்பெறாச்
சேலையிலாமையிலங்குகண்ணாளவன்றெய்வத்துழாய்
மாலையிலாமையின்மாலையுற்றாளந்திமாலையிலே.

(இ - ள்.) சோலை இல் ஆ - சோலைகளை(த் தமக்கு) இருப்பிடமாக(க்கொண்டு), மையில் சேர் - மயில்கள் தங்கிவசிக்கப்பெற்ற, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையில், நின்றான் - நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருக்கின்றவனும்,—வேலையில் ஆமையில் வேடம் கொண்டான் - (திருப்பாற்)கடலிலே ஆமைபோல வடிவங்கொண்டு அவதரித்தவனுமான அழகப்பிரானுடைய, புயம் - தோள்களை, மேவ பெறா - தழுவப்பெறாத, சேல் ஐயில் ஆம் மை இலங்கு கண்ணாள் - சேல்மீனும் வேலாயுதமும் போன்ற மையிடப்பெற்று விளங்குங் கண்களை யுடையவளான இம்மங்கை, அவன் தெய்வம் துழாய் மாலை இலாமையில் - அத்தலைமகனது தெய்வத்தன்மைபொருந்திய திருத்துழாய்மாலை கிடைக்கப்பெறாமையால், அந்தி மாலையிலே - அந்திமாலைப்பொழுதிலே, மாலை உற்றாள் - மயக்கத்தையடைந்தாள்; (எ - று.)

இல் - இடம். ஆ - ஆக என்பதன் விகாரம். மையில் = மயில்: முதற்போலி. அங்குள்ள சோலைகள், மயில்கள் விரும்பித் தமக்குஉரிய வாசஸ்தானமாகக்கொண்டு நித்தியவாசஞ்செய்யும்படியான வளமுடையன வென்க. மேவப்பெறாக் கண்ணாள் என இயையும். சேல் - மீனின் சாதிபேதங்களிலொன்று; இது, மகளிர்கண்ணுக்குப் பிறழ்ச்சியிலும் வடிவிலும் உவமம். ஐயில் = அயில்: முதற்போலி. ஆம் - உவமவுருபு. இலாமையில், இல் - ஐந்தனுருபு, ஏது. மால் - மயக்கம். அதனையுறுதல், மோகமென்னும் மன்மதாவத்தை. அந்திமாலை - ஒருபொருட்பன்மொழி; அந்தியென்ற பொதுப்பெயர் மாலையென்ற சிறப்புப்பெயரோடு கூடி ஒருபொருளையுணர்த்தியதென்னலாம்: இதனை, இருபெயரொட்டென்றலு முண்டு. "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலைமலரு மிந்நோய்"என்றபடி,கலவிக்குரியகாலமான இரவின் தொடக்கத்திலே, தம்தம் துணையைக் கருதி வந்துசேரும் விலங்குகளையும் மக்களையுங் கண்டு தலைவி விரகவேதனைமிகுதலால், 'அந்தி

மாலையிலே மாலையுற்றாள்' என்றார். நான்காமடியில், வெவ்வேறு பொருள் பட 'மாலை' என்ற சொல் பலமுறை வந்தது, சொற்பின்வருநிலையணி.

ஞானக்கண்ணுக்கு இலக்காகி மறைந்த எம்பெருமானது பிரிவினால் வருந்துகின்ற ஐயங்காரது வியாமோகத்தைக் கண்ணுற்ற அன்பர்கள் இரங்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். முதலிரண்டடி - அடியார்கட்கு அருளுதற்சென்று எளப்பமுள்ள திவ்வியதேசத்தில் வந்து நித்தியவாசஞ்செய்பவனும் சமயமறிந்து உதவுபவனு மான எம்பெருமானுடைய திருத்தோளழகில் ஈடுபட்டு அவனது நிரந்தராநுபவத்தைப் பெறாத என்றவாறு. அயில் ஆம் கண்ணாள் - எப்பொருளிலும் நுட்பமாகநுழைந்து செல்லுங் கூரிய ஞானவைலக்ஷண்யத்தை யுடைய ஐயங்கா ரென்றபடி. சேல்ஆம்கண்ணாள் - எம்பெருமானைப்பிரிந்த கலக்கத்தால் இப்பொழுது இவர்அறிவை ஓரிடத்திலேஒடுக்கி சிறத்தந் நியானநிலைகுலைந்து பலபொருளகளிற்செலுத்தும் அறிவுடையராயின ரென்க. மைஇலங்குகண்ணாள் - அஞ்சனவண்ணனாகிய பெருமானை இலக்காக்கொள்ளும் உணர்வுடையவ ரென்றவாறு. அவன்தெய்வத்துழாய்மாலையிலாமையில் - அப்பெருமானது திவ்வியமான இனிமை அனுபவிக்கக் கிடையாமையால், மாலை உற்றாள் - வியாமோகத்தையடைந்தனர், அந்திமாலையிலே - போராநந்தமனுபவிக்கக் கடவதான காலத்திலே யென்க. சோலை இல்ஆ மயில்சேர் திருமாலிருஞ்சோலை - அழகாகவிரிந்துகாட்டுந் தோகைக்கண்கள்பலவற்றை யுடையனவாய்க் கார்வரவுகண்டுகளித்துக்கூத்தாடும் மயில்கள் போல, பொலிவுறப் பலபடியாகவிசாலிக்கிற ஞானக்கண்களையுடையராய்க் காளமேகவண்ணனை எம்பெருமானது தரிசனத்தாற் களித்துக் கூத்தாடும் பாகவதர்கள் தங்கட்குஉரியவாசஸ்தாநமாகக் கொண்டுநித்தியவாசஞ்செய்யப்பெற்ற திவ்வியதேச மென்னலாம். சேலாங் கண் - எம்பெருமானது மத்ஸ்யாவதாரத்திலே ஈடுபட்டுத் தன்மயமான ஞான மென்றலுமாம். (கூஎ)

[பிரிவாற்றுதுவருந்துந் தலைவிநிலையைத் தலைவனுக்குப் பாங்கி கூறல்.]

கூஅ. மாலைக்கருப்புசிறுகா றுகைக்கவருந்துமெங்க
ளாலைக்கரும்புதன்னுசைமெல்லாஞ்சொல்லி லாயிரந்தோட்
டோலைக்கருப்புண் டொடமுடமாமதியூர்குடுமிச்
சோலைக்கரும்புயலே யருளா யுன்றுளவினையே.

(இ - ள்.) தொட முடம் ஆ (க) - (அடியில்)உராய்தலாலே அடிதேய்ந்திமொறு, மதி ஊர் - சந்திரமண்டலம் தவழ்ந்துசெல்லப்பெற்ற, குடுமி - சிகரத்தையுடைய, சோலை - திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கின்ற, கரும் புயலே - காளமேகம்போன்றவனே!—மாலைக்கு - மாலைப்பொழுதிலே, அரும்பு சிறு கால் துகைக்க - மந்தமாகவீசுகின்ற இளந்தென்றற்காற்று வருத்துதலால், வருந்தும் - வருந்துகிற, எங்கள் ஆலை கரும்பு தன் - ஆலையிலகப்பட்டகரும்புபோன்றவளான எங்கள்தலைவியினது, ஆசை எல்லாம் - ஆசைமுழுவதையும், சொல்லில் - சொல்லிவருவதானால், ஆயி

ரம் தோறு ஓலைக்கு அரும் புண் - (அதனை எழுதுமிடத்து) ஆயிரம்பனையோலைக்கு (எழுதுதலால்) அரியபுண்ணாகும்; (இங்ஙனமிருத்தலால்), உன் துளவினை அருளாய் - நினது திருத்துழாய்மாலையை (இவட்கு)த் தந்தருள்வாய்.

ஒருவழித்தணந்த தலைவன் வந்து சிறைப்புறமாக, அதனையுணர்ந்த தோழி சென்று அவனைச்சந்தித்து, தலைவியின் வேட்கைநோய்மிகுதியைக் கூறியது, இது. 'நீங்கியணைந்தவர்க்குப் பாங்கி பகர்ந்தது'; இது, 'வருத்தமிகுதிகூறல்' எனப்படும். இதன்பயன், விரைவில் இவளை வரைந்துகொள்கவென வற்புறுத்துதல்.

தலைவரைப்பிரியாத தலைவியர்க்குத் தம்வரவினால் மகிழ்ச்சியை விளைவிப்பனவான மாலைப்பொழுதும் மந்தமாருதமும், பிரிந்ததலைவியர்க்குக் காமோத்தீபகமாய் விரகவேதனையைவளர்த்து வருத்துதலால், 'மாலைக்கு அரும்பு சிறுகால் துகைக்க வருந்தும்' எனப்பட்டது. இரசமுள்ள கரும்புபோல இனிமைமிக்கவளான இவள், அது ஆலையிலகப்பட்டு நொருங்கிச் சிதையுமாறுபோல இங்ஙனம் இவ்விரண்டிக்கும் இலக்காகி வருந்துகின்றனளென்பாள், 'துகைக்க வருந்தும் ஆலைக்கரும்பு' என்றாள். ஒருபால் காதல்நோயினாலும் மற்றொருபால் காமோத்தீபகப்பொருள்களினாலும் நெருக்கிவருத்தப்பெறுமவளென்றவாறுமாம். 'மாலைக்கு அரும்பு சிறுகால் துகைக்க' என்றசொற்போக்கு, துணையிழந்து தனிப்பட்டுநின்ற சமயம் பார்த்து இருட்பொழுதிலே இழிவான கால்கொண்டு உதைக்க என்ற ஒரு பொருளைத் தொனிப்பிக்கும். இவளது ஆசைநிலைகளையெல்லாஞ்சொல்வதானால், அவற்றை ஒருவர் எழுதிவருமிடத்து ஆயிரம்ஓலைக்கு எழுதக்காணுமென்பது, 'ஆசையெல்லாஞ்சொல்லி லாயிரந்தோட்டோலைக்கரும்புண்' என்றதன் கருத்து; இதனை "பன்னியுரைக்குங்கால் பாரதமாம்" என்றாற்போலக் கொள்க. கூரியஎழுத்தாணிகொண்டு ஓலையிற்பதியும்படியெழுதுதலால், அதற்குப் பொறுத்தற்கு அரியபுண்ணாகு மென்று கற்பித்து, 'ஓலைக்கு அரும்புண்' எனப்பட்டது; எழுதியஓலையை "செல்லரித்தஓலை" என்று திருவரங்கக்கலம்பகத்திற் சொல்லியதனோடு இதனை ஒப்பிடுக.

'தொடமுடமாமதியூர்குடுமி' என்றது - அதிசயோக்தி வகையால், அம்மலையின் மிக்கஉயர்வை எடுத்துக்காட்டும். வானத்திலே சந்திரன் செல்லும் வீதியளவும் அம்மலைச்சிகரம் உயர்ந்திருத்தலால், சந்திரன் அச்சிகரத்தில் அடியுராய்ந்து சென்றுசென்று அவ்வடிப்புறம் தேய்வதாயிற்றென்க. 'முடமா' என்பதில், ஆ என்பது - ஆக என்பதன் விகாரம். நாமைகதேசநாமக்ரஹணத்தால், சோலைமலை, 'சோலை' எனப்பட்டது. புயல் - உவமவாகுபெயர். மாலைக்கு - உருபுமயக்கம். அன்றி, நினது திருத்துழாய்மாலைக்காக எனினுமாம்; அப்பொருளில், 'வருந்தும்' என்பதனோடு இயையும். தோட்டோலை - ஒருபொருட்பன்மொழி.

எம்பெருமானைப்பிரிந்து வருந்தும் ஐயங்காரது நிலைமையை அன்பர்கள் அப்பெருமான் சந்நிதியில் விண்ணப்பஞ்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். **மாலைக்கு அரும்பு சிறுகால் துகைக்க வருந்தும்—உரியகாலத்தி**

லே பேறுகிடையாமையால், உலகத்துப்பொருள்கள் மேலிடுதல்பற்றி வருந்துகின்றனர் இவரென்க. ஆலைக்கரும்பு - இக்கு அரையந்திரத்துட்பட்டதென்ன இருவினையுட்புக்கு அரைமாநொடியுந்தரியாதுழல் புன்பிறப்பைக் குறித்து வருந்துபவர் இவர் என்க. உன் தளவினை அருளாய் - நினது இனிமையை இவர்க்கு அருள்செய்வாய் என்றவாறு. பிறவும் கண்டுகொள்க. இம்மலையின் உயர்வை மதியாது வருபவர் துன்புறுவரென்பது, 'தொடமுடமாமதியூர்குமி' என்ற அடைமொழியாற் போதரும்.

'ஒலைக்கரும்புண் தொட முடமாய்' என்பதற்கு வேறு உரை கூறுவரேனும், பொருந்துவதை ஆய்ந்துகொள்க; பிறஇடங்களிலும் இவ்வாறே. (௯௰)

௯௧. துளவிலையார்பொன்னடிமுடிசூட்டித்தொண்டாக்கியென்னை
வளவிலையாக்கொண்டநீகைவிடேன் மங்கலகுணங்க
ளளவிலையா வலங்கார சமயிகளாய்ந்தவண்ண
முளவிலையாயுருவாயருவாயவொருமுதலே.

(இ - ள்.) மங்கலகுணங்கள் அளவு இல் ஐயா - திருக்கலியாண குணங்கள் அளவின்றி மிகப்பெற்ற ஸ்வாமீ! அலங்கார - அழகனே! சமயிகள் ஆய்ந்த வண்ணம் - பற்பலசமயத்தார் (தம்தமது நூல்களைக்கொண்டும் புத்திசக்திகளைக்கொண்டும்) ஆராய்ந்தவாறு, உள இலை ஆய் உரு ஆய் அரு ஆய- (அவர்களால்) உள்ளனவென்று கூறப்படும் பொருள்களும் இல்லையெனப்படும் பொருள்களும் உருவப்பொருளும் அருவப்பொருளும் ஆகின்ற, ஒரு முதலே - ஒப்பற்ற முதற்பொருளே!— துளவு இலை ஆர் பொன் அடி முடி சூட்டி - துளஸீதளங்கள் பொருந்திய (நினது) திருவடிகளை (என்) சிரமேல் வைத்து, என்னை—, தொண்டு ஆக்கி - அடிமையாக்கி, வளம் விலை ஆ கொண்ட - நல்ல விக்கிரயப் பொருளாகக் கொண்ட, நீ—, கைவிடேல் - கைவிடாதே; (எ - று.)

என்முடியில் அடிவைத்து என்னை அடிமையாக்கொண்டு விலைக்குவாங்கியபொருளைப்போல அங்கீகரித்தருளிய நீ, அங்ஙனம் அடிமையான என்னைக் கைவிடாது காத்தருளக்கடவை யென்பதாம்.

துளவு இலை - அடியார்கள் எம்பெருமான் திருவடிகளில் அருச்சித்தவை. நின்திருவடி என்முடிக்கு அலங்காரமென்பது பட, 'பொன்னடிமுடிசூட்டி' என்றார். இம்முடியில் அடிசூட்டுதல், இதற்குக் கிரீடாபிஷேகஞ்செய்தாற்போல மேன்மையை விளைக்குமென்க. "கோலமாமென்சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே," "மாலடிமுடிமேற் கோலமாங் குலசேகரன்" எனப் பெரியாரும் பணித்தார். மற்றும், 'முடிசூட்டி' என்றதன் ஆற்றலால், திருவடி மலரென்றவாறுமாம். வளவிலையாக் கொண்ட - ஒன்றுக்கு இரண்டாக மிக்கவிலைகொடுத்துப் பிரியத்துடன்வாங்கிய பொருளாக ஏற்றுக்கொண்ட என்றபடி. மங்கலகுணங்கள் - யாவர்க்கும் சுபகரமான ஸௌந்தர்யம் ஸௌசீல்யம் ஸௌலப்யம் வாத்ஸல்யம் ஸ்வாமித்வம் முதலியன. எம்பெருமான் அநந்த கல்யாணகுண பரிபூர்ணனாதலால், மங்கலகுணங்கட்கு ஓரளவில்லாத ஐயனே யென்றார்.

"வணங்குந்துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால், பிணங்குஞ்சமயம் பலபலவாக்கியவையவைதோறு, அணங்கும்பலபலவாக்கி நின்மூர்த்திபரப்பி வைத்தாய்" என்றபடி, ரஜோகுண தமோகுணங்களால் மிக்கவர்க்கு ஏற்ப, ஒன்றோடொன்றுமாறுபடுகிற பலபலமதக்கோட்பாடுகளையும், பலபலதெய்வங்களையும், பலபல உபாசனைவகைகளையும் எம்பெருமான் அமைத்துவைத்தனனாதலால், அவரவர்கூறும் வண்ணம் உள்ளபொருளும் இல்லாதபொருளும் உருவப்பொருளும் அருவப்பொருளும் ஆகுவன் அவனென்க. 'பிரமாணமுமில்லை பிரமேயமுமில்லை, ஸர்வமும் சூந்யம்; ஆகையாலே, வேதமும் ஈஶ்வரனும் ஜகத்தும் இல்லை' என்று ஸர்வசூந்யவாதிகள் சொன்னால், அவரால் இல்லையெனப்படுகிற அபாவபதார்த்தமும் பகவானதுசொரூபமேயாம் என்பது சித்தாந்தம். உரு - ஸ்தூலரூபவஸ்து. அரு - நாமரூபங்களில்லாத சூக்ஷ்மரூபவஸ்து. "உளனெனி லுள னவனுருவ மிவ்வுருவுக, ளுளனல னெனி லவனருவ மிவ்வருவுக, ளுளனென விலனென விவைகுண முடைமையி, லுள னிருதகைமையொ டொழிவிலன் பரந்தே" என்ற திருவாய்மொழிப்பாசுரத்தின் சம்பிரதாயார்த்தம் இங்குக் கொள்ளத்தக்கது. (கூகூ)

க00. ஒருபாலமரரொருபான்முனிவருடனிருந்தெ
னிருபார்வையுங்கொண்டுவப்பதென்றோ விடபக்கிரிக்கும்
பொருபாற்கடற்குமயோத்திக்கும்பொற்றுவராபதிக்கு
நிருபா வைகுந்தமுநீவீற்றிருக்கின்றநீர்மையுமே.

(இ - ள்.) இடபக்கிரிக்கும் - திருமாலிருஞ்சோலைமலைக்கும், பொருபால் கடற்கும் - (அலைகள்) மோதப்பெற்ற திருப்பாற்கடலுக்கும், அயோத்திக்கும் - திருவயோத்திக்கும், பொன் துவராபதிக்கும் - அழகிய திருத்துவாரகைக்கும், நிருபா - தலைவனே!—வைகுந்தமும் - ஸ்ரீவைகுண்டத்தையும், நீ வீற்றிருக்கின்ற நீர்மையும் - (அதில்) நீ எழுந்தருளியிருக்கின்ற அழகையும், ஒரு பால் அமரர் ஒரு பால் முனிவருடன் இருந்து என் இரு பார்வையும் கொண்டு உவப்பது - ஒருபக்கத்தில் நித்யசூரிகளுடனும் மற்றொருபக்கத்தில் முக்தர்களுடனும் (யான்) கூடியிருந்து எனது இரண்டுகண்களையுங்கொண்டு (சேவித்துப்) பரமாநந்தமடைவது, என்றோ - எந்நாளோ!

இங்ஙனம் தமது ஆதரத்தைக் கூறியதனால், விரைவில் எனக்குப் பரமபதம் அளித்தருளவேணுமென்று பிரார்த்தித்தவாறும். இருவினைப் பாசபந்தத்திலுட்பட்டு இப்பொழுது பத்தாத்மாவாயிருக்கிற யான் அந்தப் பந்தம் ஒழிந்து வீடுபெற்று முக்தனாகி அங்கு நித்யமுக்தர்களின் கோஷ்டிநடுவேயிருந்து ஸ்ரீவைகுண்டநாதனைத் தரிசித்துக் கிருதார்த்தனாவது எப்பொழுதோ? என்றார். இது இப்பிரபந்தத்தின் ஈற்றுச்செய்யுளாதலால், இதில், தமது முக்கியமான பிரார்த்தனையை வெளியிட்டு, அவ்வளவோடு இப்பிரபந்தத்தைத் தலைக்கட்டுகிறார்.

மரணமில்லாதவரென்று பொருள்படும் 'அமரர்' என்ற வடசொல், இங்கு, நித்யசூரிகளைக் குறித்தது; திருவாய்மொழியில் "அயர்வறு மமரர்கள்" என்றவிடத்துப் போல: அவராவார் - பிறப்பு இறப்பு இல்லாமல் எம்பெரு

மான்போலவே என்றும் ஒருநிலையாகப் பரமபதத்தில் வாழ்கிற அநந்தகருட விஷ்வக்ஸேநர் முதலியோர்; இவர்கள் முக்காலத்தும் நிரந்தரமான பகவதநுபவத்தை யுடையவர்கள். மநநசீலர் [அதாவது கடவுளை எப்பொழுதுந் தியானிப்பவர்] என்று பொருள்படுகிற 'முனிவர்' என்ற சொல், இங்கு முக்தர்களைக் குறித்தது; அவராவார் - இவ்வுலகங்களிற் கருமவசத்தராயிருந்து பின்பு கடவுளருளாற் பிறப்பையொழித்து முத்திபெற்றவர். இவ்விருதிறத்து அடியவருமே பரமபதத்திலுள்ளார்.

எம்பெருமானது ஐவகைநிலைகளுள், அர்ச்சை, வியூகம், விபவம் என்றவற்றை உட்கொண்டு 'இடபகிரிக்கும் பாற்கடற்கும் அயோத்திக்கும் துவராபதிக்கும் கிருபா' என்று விளித்தார். இவற்றில், அர்ச்சை - விக்கிரகரூபங்களில் ஆவிர்ப்பவித்தல்; அங்ஙனம் எழுந்தருளியிருக்குந் திவ்வியதேசங்கள் பலவற்றுள்ளும் இங்குத் தலைமைபற்றி, இடபகிரி எடுத்துக் கூறப்பட்டது. வ்யூஹமாவது-வாசுதேவ சங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாகிய நான்கு ரூபத்துடன் திருப்பாற்கடலில் எழுந்தருளியிருக்கும் நிலை. விபவமாவது - மத்ஸ்யாவதாரம் முதலிய அவதாரங்கள்; அவை பலவற்றுள்ளும், தலைமைபற்றி, இராமகிருஷ்ணாவதாரங்கள் இங்குக் கூறப்பட்டன; "மாநீரயோத்தி வண்பூந்துவரை" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். அயோத்தி - அயோத்யா என்ற வடசொல்லின் விகாரம்; அது, (பகைவராற்) போர்செய்து வெல்லமுடியாததென்று காரணப்பொருள்பெறும். துவராபதி - த்வாரவதீ என்ற வடசொல்லின் விகாரம். (௧00)

---

அலங்காரருக்குப் பரமச்சுவாமிக் கழகருக்குக்
கலங்காப்பெருநகரங்காட்டுவார்க்குக் கருத்தன்பினா
னலங்காதசொற்றொடையந்தாதியைப் பற்பநாபப்பட்டன்
விலங்காதகீர்த்திமணவாளதாசன் விளம்பினனே.

(இ - ள்.) அலங்காரருக்கு பரமச்சுவாமிக்கு அழகருக்கு - அலங்காரரென்றும் பரமஸ்வாமியென்றும் அழகரென்றும் திருநாமங்களை யுடையவரும், கலங்கா பெரு நகரம் காட்டுவார்க்கு - அழிவில்லாத பெருமையுடைய ஸ்ரீவைகுண்ட நகரத்தை(த் தமது அடியவர்கட்கு வாழுமிடமாக)க் காண்பித்தருள்பவருமாகிய எம்பெருமான் விஷயமாக,—கருத்து அன்பினால் - மனத்திற்கொண்ட மெய்யன்பினால்,—நலங்காத சொல் தொடை அந்தாதியை - (காலபேதத்தால்) வாடுதலில்லாத சொன்மாலையாகிய இந்த அந்தாதிப்பிரபந்தத்தை, பற்பநாபப்பட்டன் விலங்காத கீர்த்தி மணவாளதாசன் - ஸ்ரீமந்நாராயணனது திருவவதாரமான பெரியபட்டரை (ஆசிரயித்து அவரைவிட்டு) நீங்காதிருத்தலாகிய புகழையுடைய அழகியமணவாளதாசன், விளம்பினன் - விண்ணப்பஞ்செய்தான்; (எ - று.)

பரமச்சுவாமியென்பது அழகர்க்கு ஒருதிருநாமமாதலை, "சேமியம்பரமசாமிவாழி," "பிரமர்போற்றிய பரமசாமி" என்ற அழகர்கலம்பகத்தாலும் அறிக. பரமஸ்வாமீ என்ற வடமொழிப்பெயர், சிறந்த தலைவனென்று பொ

ருள்பவும்: தலைவராவார்யாவர்க்கும் மேம்பட்ட தலைவனென்க. 'கலங்காப் பெருநகரங்காட்டுவோன்' என்ற தொடர், மூன்றாந்திருவந்தாதியில் வந்துள்ளது; ஒருகலக்கமுமில்லாதிருக்கிற பெரிய இராசதானியான பரமபதத்தை "வானவர் நாட்டையும் நீகண்டுகொள்ளென்று வீடுந்தரும் நின்றுநின்றே" என்றபடி அடியார்க்குத் தந்தருள்பவரென்க. கருத்தன்பினால் விளம்பினன் என இயையும். சொல்தொடை - சொற்கள்கொண்டு தொடுத்த பாமாலை. சிறிதுபொழுது கழிந்தவளவிலே வாடுமியல்பினதான பூமாலையினும் பாமாலைக்கு உள்ள சிறப்புத் தோன்ற, அதற்கு 'நலங்காத' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. மற்றும் இந்த அடைமொழியினால், இப்பிரபந்தம்,அழகரருளால்,சொல்வழு பொருள்வழு இல்லாது "சொன்னோக்கும் பொருணோக்குந் தொடைநோக்கு நடைநோக்குந் துறையினோக்கோடு, எந்நோக்குங் காண இலக்கிய"மாய் அமைந்ததென்று கொண்டாடிக் கூறியதுமாம்.

பத்மநாபன் என்ற வடமொழி, பற்பநாபனெனச் சிதைந்தது; தாமரை மலரை நாபியிலுடையவனென்பது, இதன் பொருள். இது, திருமாலின் திருநாமங்களில் ஒன்று. ஸ்ரீரங்கநாதனே திருவருளினாற் கூரத்தாழ்வான் குமாரராய்த் திருவவதரித்தமைபற்றி, அப்புதல்வர்க்கு ஸ்ரீரங்கராஜபட்டரென்றும், திருவரங்கப்பெருமாள்பட்டரென்றும் திருநாமங்கள் வழங்கும்; அப்பெயரின் பரியாயநாமமாக 'பற்பநாபப்பட்டன்' என்றார். "நிழலின் நீங்கான்" என்றபடி ஆசாரியனைவிட்டுப்பிரியாது உடனிருந்து வழிபடுதல் சீடனுக்கு இன்றியமையாததாதலால், அங்ஙனம் தாம் பட்டரை விட்டு நீங்காதவ ரென்பார், 'பற்பநாபப்பட்டன் விலங்காத கீர்த்தி மணவாள தாசன்' என்றார்: "ஆசார்யன்செய்த வுபகாரமானவது, தூய்தாக நெஞ்சு தன்னில் தோன்றுமேல் - தேசாந், தரத்தி லிருக்க மனந்தான் பொருந்த மாட்டாது, இருத்தலினி யேதறியோம் யாம்," "தன்னாரியனுக்குத் தானடிமை செய்வ தவன், இந்நாடுதன்னி லிருக்கும்நாள் - அந்நே, ரறிந்து மதிலாசையின்றி யாசாரியனைப், பிரிந்திருப்பாரார் மனமே பேசு" என்றார் பெரியாரும். பட்டர் - எம்பாருடைய சிஷ்யர்: பண்டிதர்க்கு வழங்குகின்ற பட்டரென்ற பெயர், இவர்க்குச் சிறப்பாக வழங்கும்; இவர், ஸ்ரீபாஷ்யகாரரால் நாமகரணஞ்செய்தருளப்பெற்றவர்.

இச்செய்யுள், நூலாசிரியர் தாமே தம்மைப் பிறன்போலும் பாயிரங் கூறியது. (பிரயோகவிவேகநூலார் 'இது, தன்னைப் பிறன்போலும் நாந்தி கூறுகின்றது,' 'வடநூலார் தாமே பதிகமும் உரையுஞ் செய்வார்', 'இனிச் சம்பந்தர் சடகோபர் முதலாயினாரும் திவாகரரும் பதினெண் கீழ்க்கணக்குச்செய்தாரும் முன்னாகப் பின்னாகப் பதிகங்கூறுவதுங் காண்க' என்றவை கருதத்தக்கன). இது, தற்சிறப்புப்பாயிர மெனப்படும்.

அழகரந்தாதி முற்றிற்று.



# அழகரந்தாதிச்

## செய்யுண்முதற்குறிப்பகராதி.





# நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் மங்களாசாசனஞ்செய்த நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகளைப் பற்றிப் பாடிய அந்தாதித்தொடையாலமைந்த நூல் என்பது பொருள். திருப்பதி - திருமால் அர்ச்சாவதாரரூபியாய் எழுந்தருளியிருக்குந் திவ்வியதலம். உகந்தருளிய நிலங்களாகையால், இவற்றிற்கு 'திரு' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. 'திருப்பதி' என்பது - அத்தலங்களையும், அவற்றில் எழுந்தருளியுள்ள எம்பெருமான்களையுங் குறிக்கும்.

## சிறப்புப்பாயிரம்.

ஏற்றமணவாளரிசைத்தாரந்தாதிவெண்பா
தோற்றக்கேடில்லாததொன்மாலைப்—போற்றத்
திருப்பதியாநூற்றெட்டினையுஞ்சேவிப்போர்
கருப்பதியாவண்ணமுண்டாக.

(இ - ள்.) திருப்பதி ஆம் நூற்றெட்டினையும் - நூற்றெட்டுத் திருப்பதிகளையும், சேவிப்போர் - சேவிப்பவர்கள், கரு பதியா வண்ணம் உண்டாக - (தமக்கு) மீண்டும்(தாயின்)கருப்பத்திற் பொருந்தாத விதம் உண்டாகுமாறு [மீண்டும் பிறப்பின்றி முத்தியைச்சேருமாறு],—தோற்றம் கேடு இல்லாத தொல் மாலை போற்ற-பிறப்பும் இறப்பு மில்லாத பழமையாகிய திருமாலைச் சொல்லித் துதிக்கும்படியாக,—ஏற்றம் மணவாளர் - சிறப்பினையுடைய அழகியமணவாளதாசரென்பவர், அந்தாதி வெண்பா - வெண்பாவினாலாகிய நூற்றெட்டுத்திருப்பதியந்தாதியை, இசைத்தார் - பாடியருளினார் ; (எ-று.)

அடியவர்கள் திருமாலின் நூற்றெட்டுத்திருப்பதிகளையும் தாம் சேவிக்கக்கருதுங்காலத்தில் அத்திருப்பதிகளைப் பாடித் துதித்துப் பிறவித்துயர் தீர்ந்து மோக்ஷஸாம்ராஜ்யத்தைப் பெறும்படி அழகியமணவாளதாசரால் இந்நூல் அருளிச்செய்யப்பட்டதென்பது, கருத்து. இதனால், இந்நூலின் சிறப்பும், இந்நூலாசிரியரது தெய்வப்புலமையும் விளங்குதல் காண்க. சிறப்புப்பாயிரவிலக்கணங்களுள், 'மணவாளர்' என்றதனால் ஆக்கியோன்பெயரும், 'அந்தாதிவெண்பா' என்றதனால் நூற்பெயரும், 'வெண்பா' என்றதனால் யாப்பும், 'நூற்றெட்டினையும் சேவிப்போர் கருப்பதியாவண்ண முண்டாகத் தொன்மாலைப்போற்ற' என்றதனால் நுதலியபொருளும் பயனும் நூல்செய்தற்குக் காரணமும், இச்செய்யுளில் செம்பொருளாகவும் குறிப்புப்பொருளாகவும் விளங்குமாறு உணர்க.

சொல்நோக்கு பொருள்நோக்கு தொடைநோக்கு நடைநோக்கு முதலிய இனிய நோக்கங்கள்யாவும் அமைய ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகையிலும் திவ்வியகவிகளைப் பாடவல்ல புலவர்பெருமானாதலால், இவர்க்கு 'ஏற்றம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. ஏற்ற மணவாளர் என்று பிரித்து-(எம்பெருமானது விஷயமான கவிகளைச் சொல்

வதற்குத்) தகுதியுடைய மணவாளர் என்று உரைத்தலும் பொருந்தும்; எம்பெருமானைத் துதிப்பதற்கு ஏற்ற ஞானம் முதலிய குணங்களை யுடைமையால், இவரை இவ்வாறு கூறுதல் தகுமென்க. ஒருபெயரின் ஒருபகுதியைக் கொண்டு அப்பெயர் முழுவதையுங் குறிப்பதொரு மரபுபற்றி, அழகியமணவாளதாசரை 'மணவாளர்' என்றார்; (இதனை, வடநூலார் 'நாமைகதேசே நாமக்ரஹணம்' என்பர்.) திருமால் துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனத்தின் பொருட்டும் தருமத்தை நிலைநிறுத்துதற் பொருட்டும் தனது இச்சையினாலேயே மத்ஸ்ய கூர்மாதிகளான திருவவதாரங்களைச் செய்தபோதிலும், ஜீவாத்மாக்கள் தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவரரூபங்களாய்க் கருமவசத்தினால் பிறந்திழிவதுபோலப் பிறப்பு இறப்புக்களை யுடையவனாகாமையால், அவனை 'தோற்றக்கேடில்லாத மால்' என்றார். தொல்மால்-எப்போதுமுள்ள புராணபுருஷன். மால் - பெருமை, அடியார்கள்பக்கல் அன்பு, திருமகளிடத்துக்காதல், மாயை, கருநிறம், இவற்றை யுடையவன்.

தோற்றம் - தோன்றுதல்; தொழிற்பெயர். கேடு - 'கெடு' என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். போற்ற, உண்டாக என்னுஞ் செயவெனெச்சங்கள் - காரியப்பொருளனவாய் எதிர்காலங் குறிக்கும். உண்டாக, போற்ற, இசைத்தா ரென்க. உம்மை-முற்றுப்பொருளது. போற்றவும் உண்டாகவும் இசைத்தார் என வினைச்செவ்வெணாக்கி உரைப்பாரு முளர். பதியா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

இக்கவி அபியுக்தரி லொருவர்செய்த தென்பர். இது, வைஷ்ணவசம்பிரதாயத்தில் 'தனியன்' எனப்படும். (நூலினுள் அடங்காது தனியே பாயிரமாய் நிற்றல்பற்றியது, அப்பெயர் ; 'அன்' விகுதி - உயர்வுப்பொருளது.)

---

காப்பு.

காப்பு - காத்தல்: அது, இங்கு, காக்கின்ற கடவுளின் விஷயமான வணக்கத்தைக் குறிக்கும் : ஆகவே, கவி தமக்கு நேரிடக்கூடிய இடையூறுகளை நீக்கித் தமதெண்ணத்தை முடிக்கவல்ல தலைமைப்பொருளின்விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது, கருத்து. இக்காப்புச்செய்யுள் ஆழ்வார்கள் பன்னிருவரையும் பற்றியது. ஸ்ரீவைஷ்ணவசமயத்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இக்காப்புச்செய்யுள் விஷ்ணுபக்தர்களிற் சிறந்த ஆழ்வார்களைக் குறித்த தாதலால், வழிபடுகடவுள்வணக்கமாம். தம் தமது மதத்திற்கு உரிய கடவுளை வணங்குதலேயன்றி, அக்கடவுளது அடியார்களை வணங்குதலும் வழிபடுகடவுளின்வணக்கத்தின்பாற் படுமென அறிக. ஆழ்வார்களால் வெளியிடப்பட்டுள்ள திவ்வியபிரபந்தங்களின் சொற்பொருட்கருத்துக்களமையுமாறு அவர்களால் மங்களாசாஸநஞ்செய்யப்பெற்ற நூற்றெட்டுத்திருப்பதிகளின் விஷயமாகவே அம்மூதனூல்கட்கு வழிநூல்போல இவராற் செய்யப்படுவது இப்பிரபந்த மென்பதுபற்றி, இந்நூலின் இக்காப்புச்செய்யுளை ஏற்புடைக்கடவுள்வணக்க மென்று கொள்ளவும் அமையும். இப்பன்னிரண்டுஆழ்வார்களும் திருமாலினிடத்துப் பரிவராய் அப்பிரானுக்கு ரக்ஷகயாக நிற்கின்ற ஆயுதபரிஜனங்களின் அம்ஸமாவ ராதலால், அவர்களை ரக்ஷகயாகக் கொள்ளுதல் ஏற்குமென்க.

[ஆழ்வார்கள் பன்னிருவர்.]

க. பொய்கை பூதன் பேயார் பொன்மழிசைக்கோன் மாறன்
செய்யமதுரகவி சேரர்பிரான்—வையகமெண்
பட்டர்பிரான் கோதை தொண்டர்பாதப்பொடி பாணன்
கட்டவிழ்தார்வாட்கலியன் காப்பு.

(இ - ள்.) பொய்கை - பொய்கையாழ்வாரும், பூதன் - பூதத்தாழ்வாரும், பேயார் - பேயாழ்வாரும், பொன் மழிசை கோன் - திருமழிசையாழ்வாரும், மாறன் - நம்மாழ்வாரும், செய்ய மதுரகவி - செம்மையையுடைய மதுரகவியாழ்வாரும், சேரர் பிரான் - குலசேகராழ்வாரும், வையகம் எண் பட்டர்பிரான் - உலகத்தவரால் நன்குமதிக்கப்பெற்ற பெரியாழ்வாரும், கோதை - ஆண்டாளும், தொண்டர் பாதம் பொடி - தொண்டரடிப்பொடியாழ்வாரும், பாணன் - திருப்பாணாழ்வாரும், கட்டு அவிழ் தார் வாள் கலியன் - (அரும்புகளின்) முறுக்கு விரிந்த மாலையைத் தரித்த வாட்படையை யேந்திய திருமங்கையாழ்வாரும், காப்பு-(நமக்கு) ரக்ஷகமாவர்; (எ-று.)

ஆசீர்வாதம் [வாழ்த்து], நமஸ்காரம் [வணக்கம்], வஸ்துநிர்த்தேசம் [தலைமைப்பொருளுரைத்தல்] என்ற மூன்றுவகை மங்களங்களுள், இது - நமஸ்காரத்தின்பாற்படுமென்க. "பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ் மழிசை, யைய னருண்மாறன் சேரலர்கோன் - துய்யபட்ட, நாதனன் பர்தாள்தூளி நற்பாணன் நன்கலிய, னீதிவர்தோற்றத்தடைவா மிங்கு" என்றபடி திருவவதாரக்கிரமத்தால், பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் மாறன் குலசேகரன் பெரியாழ்வார் தொண்டரடிப்பொடி திருப்பாணர் திருமங்கையாழ்வார் என முறைப்படுத்தி, நம்மாழ்வாரது சிஷ்யரான மதுரகவியை அவரையடுத்தும், பெரியாழ்வாரது திருமகளாரான ஆண்டாளை அவரையடுத்தும் கூறினரென உணர்க.

பொய்கை - குளம்; கச்சித்திருப்பதியிலே திருவெஃகாவென்னுந் திவ்வியதலத்தின் வடபுறத்திலுள்ள பொற்றாமரைப்பொய்கையில் திருவவதரித்த ஆழ்வாரை 'பொய்கை' என்றது-இடவாகுபெயர்; இனி, உவமவாகுபெயராய் ஊர்நடுவேயுள்ள குளம்போல எல்லார்க்கும் எளிதிற்பயன்கொடுப்பவரென்று உரைத்தல், சம்பிரதாயமன்று. பூதன் - எம்பெருமானையறிதலாலே தமதுஉளனாகையை யுடையவராதலால், இவர்க்கு இத்திருநாமம்; 'பூஸத்தாயாம்' என்றபடி ஸத்தையென்னும் பொருள்கொண்ட 'பூ' என்னும் வடமொழிவினையடியினின்று பிறந்த பெயராதலால், 'பூதன்' என்பதற்கு - ஸத்தை [உள்ளவனாயிருக்கை] பெறுகின்றவனென்று பொருளாயிற்று: இனி, இத்திருநாமத்துக்கு - (உலகத்தவரோடு சேராமையால்) பூதம்போன்றவரென்று பொருளுரைத்தல், சம்பிரதாயமன்று. பேயார் - உலகத்தவரால் பேய்போல எண்ணப்படுபவர்; அல்லது, அவர்களைத் தாம் பேய்போல எண்ணுபவர்; "பேயரே யெனக்கி யாவரும் யானுமோர், பேயனே யெவர்க்குமிதுபேசியென், ஆயனே யரங்கா வென்றழைக்கின்றேன், பேயனாயொழிந்தே னெம்பிரானுக்கே" என்ற கொள்கைப்படி இவர் பகவத்பக்தி

யாற் பரவசப்பட்டு நெஞ்சழிதல் கண்சுழலுதல் அழுதல் சிரித்தல் தொழுதல் மகிழ்தல் ஆடுதல் பாடுதல் அலறுதல் முதலிய செய்கைகளையே எப்பொழுதுங் கொண்டு காண்பவர் பேய்பிடித்தவரென்னும்படி யிருந்ததனால், பேயாழ்வாரென்று பெயர்பெற்றனர். பொன்மழிசைக்கோன் - திருமழிசையென்று வழங்குகின்ற மஹீஸாரக்ஷேத்ரத்தில் திருவவதரித்த பெரியோன்; இத்தலம், தொண்டைநாட்டிலுள்ளது. நம்மாழ்வார்க்கு அநேகத்திருநாமங்கள் இருப்பினும், அவற்றில் 'மாறன்' என்பது, முதலில் தந்தையார் இட்ட குழந்தைப்பெயராதலால், அதில் ஈடுபட்டு அப்பெயரினாற் குறித்தார். பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பாலுண்ணுதல் முதலியன செய்யாமல் உலகநடைக்கு மாறாயிருந்ததனால், இவர்க்கு 'மாறன்' என்ற இத்திருநாமம் இடப்பட்டதும்போலும்; வலியவினைகட்கு மாறாகஇருத்தலாலும், அந்நியமதஸ்தர்களை அடக்கி அவர்கட்குச் சத்துருவாயிருத்தலாலும், பாண்டியநாட்டில் தலைமையாகத் தோன்றியதனாலும் வந்த பெயரென்றலும் உண்டு. மதுரகவி-இனிமையானபாடல் பாடுபவர். மதுரகவிக்குச் செம்மை-மற்றையாழ்வார்கள்போல எம்பெருமானுக்கு அடிமைப்படாமல் அப்பெருமானது அடியவரான நம்மாழ்வார்க்கு அடிமைபூணுதல்; பகவத்பக்தியினும் பாகவதபிரதிபத்தி விசேஷமென்பது, ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்தம். சேரர்பிரான் - சேரநாட்டிலுள்ளார்க்கு அரசர். பட்டர்பிரான்-வித்துவான்களுக்கெல்லாந் தலைவர். வல்லபதேவனென்னும் பாண்டியராஜன் வேதாந்தஸித்தாந்தமான பரதத்துவத்தை நிர்ணயம்பண்ணவேண்டுமென்று ஏற்படுத்திய வித்யாசுல்கமாகிய பொற்கிழியை, இவர் அங்குத்திரண்டுவந்த வித்துவான்களையெல்லாம் வாதத்தில்வென்று அறுத்துக் கொண்டது கண்ட அவ்வரசன் அக்காலத்தில பண்டிதர்கட்கெல்லாந் தலைவராய் விளங்கிய தகுதிக் கேற்ப, இவர்க்கு இத்திருநாமத்தைச் சாற்றினனென்க. இவர் மற்றையாழ்வார்கள்போலத் தமதுநன்மையை நாடாமல் எம்பெருமானது நன்மையை நாடி அவனுக்குப் பல்லாண்டுபாடிய சிறப்புத்தோன்ற 'வையகமெண்பட்டர்பிரான்' என்றார். 'வையகம்' என்பது - இங்கு இடவாகுபெயராய், உலகத்திலுள்ளாரை உணர்த்திற்று. கோதை-மாலை; எம்பெருமானுக்கு மாலைபோல மிக இனியளாயிருப்பவள்: அல்லது, எம்பெருமானுக்குச் சமர்ப்பித்தற்காகத் தனதுதந்தையார் அமைத்துவைத்த பூமாலையை அவரில்லாதசமயத்தில் தான்சூடிக்கொண்டு அழகுபார்த்துப் பின்பு கொடுத்தவள்; அன்றி, எம்பெருமானுக்குப் பாமாலைசூட்டினவள். தொண்டர்பாதப்பொடி - உள்ளும் புறமும் ஒத்துத் தொண்டுசெய்யும் மெய்யடியாரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவடித்தூளிபோல அவர்கட்குக் கீழ்ப்படிந்து அடிமைபூண்டு ஒழுகுபவராதலால், இவர்க்கு 'தொண்டரடிப்பொடி' என்று திருநாமம். பாணன் - வீணையுங் கையுமாய்ப் பெரியபெருமாள்திருவடிக்கீழே நிரந்தரசேவைபண்ணிக்கொண்டு பாட்டுப்பாடிப் புகழ்பவர் ; பாண் - இசைப்பாட்டு. கலியன்-மிடுக்குடையவர்; சோழராசன் கட்டளைப்படி மங்கைநாட்டார்க்கரசராகிய இவர் குமுதவல்லியென்னுங் கட்டழகியை மணஞ்செய்துகொள்ளுதற்பொருட்டு அவள்சொற்படி நாடோறும்ஆயிரத்தெட்டுஸ்ரீவைஷ்ணவர்களை அமுது

செய்வித்துவருகையில், கைப்பொருள் முழுவதுஞ் செலவாய்விட்டத ஞல் வழிபறித்தாகிலும் பொருள்தேடிப் பாகவத ததியாராதநத்தைத் தடையற நடத்தத் துணிந்து வழிச்செல்வோரைக் கொள்ளையடித்துவரும் போது ஸ்ரீமந்நாராயணன் இவரையாட்கொள்ளக் கருதித் தாம் ஒருபிராம ணவேடங்கொண்டு பலஅணிகலங்களைப் பூண்டு மணவாளக்கோலமாய் மனைவியுடனே இவரெதிரில் எழுந்தருள, இவர் கண்டு களித்து ஆயுதபாணி யாய்ப் பரிவாரத்துடன் சென்று அவர்களை வளைந்து வஸ்திரஆபரணங் களையெல்லாம் அபகரிக்கையில் அம்மணமகன் காலிலணிந்துள்ள மோதிர மொன்றைக் கழற்றமுடியாமையால் அதனையும் விடாமற் பற்களாலே கடி த்து வாங்க, அம்மிடுக்கை நோக்கி, எம்பெருமான், இவர்க்கு 'கலியன்' என்று ஒருபெயர் கூறினு னென உணர்க. இவர் தமதுகுடிக்குஏற்ப இளமை யிலேயே ஆயுதவித்தையில் தேர்ச்சிபெற்றுச் சோழராஜனையடுத்துச் சேனு பதியுத்தியோகத்தி லமர்ந்து கொற்றவனுக்குக் கொடியவரோடு கடும்போர் நேருங்காலங்களிற் படைகளோடு முன்சென்று பராக்கிரமத்தாற் பகை வென்று பரகாலனென்று பெயர்பெற்றுப் பலமுறை வாகைசூடிவந்தவ ராத லால், 'கட்டவிழ்தார்வாட்கலியன்' என்றார்; தாரை வாளுக்கும் அடை மொழியாக்கலாம். தார்-முள்ளிமலர்மாலை யெனினுமாம். இவர்க்கு இம்மலர் மாலை உரியதாதலை, "முள்ளிச்செழுமலரோ தாரான்" என்பதனு லுணர்க.

[நம்மாழ்வார்.]

உ. பிறவாதபேறுபெறுதற்கென்ஞான்று
மறவாதிறைஞ்சென்மனனே—துறவாளன்
வண்குருகூர்வாவிவழுதிவளநாடுடைய
தண்குருகூர்நம்பிதிருத்தாள்.

(இ - ள்.) என் மனனே - எனது மனமே,—துறவு ஆளன் - பற்றின் மையுடையவரும் [பற்றற்றவரும்], வள் குருகு ஊர் வாவி வழுதி வளம் நாடு உடைய தண் குருகூர் நம்பி - அழகிய நீர்வாழ்பறவைகள் உலாவப்பெற்ற நீர்நிலைகள் சூழ்ந்த பாண்டிவளநாட்டிலுள்ள குளிர்ந்த திருக்குருகூரில் திரு வவதரித்த பெரியவருமான நம்மாழ்வாரது, திரு தாள் - திருவடிகளை,— பிறவாத பேறு பெறுதற்கு - மீண்டும் பிறவாமையாகிற இலாபத்தை யடை யும்பொருட்டாக, எ ஞான்றும் - எப்பொழுதும், மறவாது - மறவாமல், இறைஞ்சு - வணங்குவாயாக; (எ - று.)

திருமாலடியார்களிற் சிறந்த ஆழ்வார்கள் பன்னிருவருள் ஐந்தாமவரா கிய நம்மாழ்வார் - மற்றையாழ்வார்கள்போல லௌகிகவிஷயஞானம் நடை யாடுகையில் எம்பெருமானருளால் ஒருகாலவிசேஷத்தில் தத்துவஞானுதி கள் தோன்றப்பெற்று அந்தப்பகவானை யனுபவிப்பதன்றித் திருத்துழாய் பரிமளத்துடனே அங்குரிப்பதுபோல இயற்கையிலேயே விலக்ஷணமான ஞானபக்திகளையுடையவ ராதலால், மிகுந்த ஏற்றமுள்ளவராய்த் தத்துவ ஞான பிரவர்த்தநத்திற் சிறந்தவராதலோடு ஸ்ரீவைஷ்ணவர்கட்கு இத்தப் பூலோகத்திற் பிரதமாசாரியருமாவர். ஆகவே, கவி இவரைப்பற்றித் தனி

யே காப்புச்செய்யுள் கூறின ரென்க. இவ்வாழ்வார் - பகவானது அம்ச மும், ஸ்ரீகௌஸ்துபத்தினது அம்சமும், சேனைமுதலியாரது அம்சமுமாவர். சடகோபன், வகுளாபரணன், பராங்குசன் என்ற பெயர்களும் இவர்க்கு வழங்கும்.

இதனால், நம்மாழ்வாரது திருவடிகளை வணங்கினால் மீண்டும் இவ்வுல கத்திற்பிறந்திறத்தலாகிய பிறவித்துயர் தீருமென, தம்மனத்துக்கு இதோப தேசஞ் செய்கின்றனரென்க. பேறு - பெறுதற்கு உரியது; புருஷார்த்தம். எஞ்ஞான்றும் மறவாது இறைஞ்சுதல் - எப்பொழுதும் விடாமல் மனத்திற் கொண்டு வணங்குதல். மனம் - மனன்: ஈற்றுப்போலி. நம்மாழ்வார் பிறந்த பொழுதேதொடங்கி உலகப்பற்றுச் சிறிதுமின்றி யிருந்தவ ராதலால், அவ ரை 'துறவாளன்' என்றார். நம்பி - ஆண்பாற் சிறப்புப்பெயர்.

இச்செய்யுளின் பின்னிரண்டடிகள் - திரிபு என்னுஞ் சொல்லணியின் பாற்படும்; திரிபாவது - அடிகளின் முதலெழுத்துமாத்திரம் வேறுபட்டிரு க்க, இரண்டுமுதலிய பலஎழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபடுவது: இதனையும் யமகவகையி லடக்குவர் ஒருசாரார். அடுத்த இரண்டுசெய்யுள் களிலும் இவ்வணி காண்க. (௨)

[உடையவர்.]

௩. முன்னேபிறந்திறந்துமூதுலகிற்பட்டவெல்லா
மென்னேமறந்தனையோவென்னெஞ்சே—சொன்னே
னினியெதிராசன்மங்க ளின்றுமுதற்பூதூர்
முனியெதிராசன்பேர்மொழி.

(இ - ள்.) என் நெஞ்சே - எனது மனமே!—முன்னே - இதற்குமுன்பு, பிறந்து இறந்து-ஜநநமரணங்களை யடைந்து, மூது உலகில் பட்ட எல்லாம்- பழமையாகிய இவ்வுலகத்தில் அநுபவித்த கஷ்டங்களையெல்லாம், மறந் தனையோ - மறந்துவிட்டாயோ! என்னே - (மீண்டும் ஸம்ஸாரத்திற் செல் லாமலிருத்தற்கு உரிய வழியைத் தேடாமல் அதனிடத்திலேயே செல்கின்ற இது) என்ன விபரீதபுத்தி! சொன்னேன் - (நான் இப்பொழுது ஓர் உறுதி மொழி) கூறுகின்றேன்: (அதாவது),— இன்றுமுதல் - இன்றுதொடங்கி, பூதூர் முனி எதிராசன் பேர் மொழி - ஸ்ரீபெரும்பூதூரில் திருவவதரித்த துறவியாகிய யதிராஜனது திருநாமத்தைச் சொல்லுவாய்; (நீ அவ்வாறு சொல்வையாயின்), சன்மங்கள் இனி எதிரா - பிறப்புக்கள் இனி (உனக்கு) உண்டாகமாட்டா; (எ - று.)

இதனால், யதிராஜனது திருநாமத்தை வாயினாற்சொல்லுதலாகிய இந் தச் சிறுதொழிலொன்றினாலேயே பிறவித்துயரைக் கடத்தலாகிய பெரும் பேறு கிடைப்பதாயிருக்க, அதனைப்பெறாது ஜநநமரணங்கட்கே இடமாகிய உலகவாழ்க்கையிற் கிடந்து உழல்கின்ற தமது மனத்துக்கு நல்லுபதேசஞ் செய்கின்றனரென்க. என்னே - 'பட்டபிறகும் அறிவுவரவில்லையே!' என்று மனத்தின் அறியாமைக்கு இரங்கிக்கூறியவாறு: இகழ்ச்சிக்குறிப்புமாம். எம்

பெருமான் 'உடையவர்' என்று ஒருநாமதேய முண்டாகுமாறு எதிராஜனை நோக்கி, 'உமக்கும் உம்முடையார்க்கும் உபயவிபூதி ஐஸ்வர்யமும் தந்தோம்' என்று அருளிச்செய்கையாலும், உடையவர்க்கு முற்பட்ட ஆசாரியர்கள் அவர்திருமுடிசம்பந்தத்தாலும் பிற்பட்ட ஆசாரியர்கள் அவரது திருவடி சம்பந்தத்தாலும் உய்வுபெறுவரென்பது, ஸ்ரீவைஷ்ணவர்களின் துணிபாதலாலும், முனியெதிராசன் பேர் மொழிந்தால் இனிச் சந்மம் எதிரா என்று கூறினரென்னலாம்.

'சொன்னேன்' = சொல்லுகின்றேன் : இயல்புபற்றிவந்த காலவழுவமைதி. சன்மம் - ஜந்மம்: வடமொழி. முனி - மநநசீலன் : தத்துவஞானமுடையவன்: இப்பெயர், துறவறமுடையோனைக் குறிக்கும். எதிராசன் = யதிராஜன்: யதிகட்குத் தலைவன் : யதிகள்யாவரினும் மேம்பட்டிருப்பவன். பேர் - பெயர் : மரூஉ.

ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைத மத ஸ்தாபநாசார்யரும் ஸ்ரீ பாஷ்யகாரருமாகிய யதிராஜர் தமது திருவடி சம்பந்தத்தாற் பின்புள்ளோரும் தமது திருமுடி சம்பந்தத்தால் முன்புள்ளோரும் ஈடேறுமாறு குருபரம்பரையில் நடுநாயகமணியாய்ச் சிறத்தலால், அவரைப்பற்றி, இந்நூலாசிரியர் இங்குத் துதிகூறினரென்க. இவர், தொண்டைநாட்டில் ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீகேசவஸோமயாஜியாரின் திருக்குமாரராய்த் திருவவதரித்தவர் ; இவருக்கு நல்லம்மானுகிய பெரியதிருமலைநம்பியால் இளமையில் இடப்பட்ட திருநாமம் - இளையாழ்வாரென்பது; பின்பு பஞ்சஸம்ஸ்காரஞ்செய்தபோது பெரியநம்பி 'ராமாநுஜன்' என்றபெயரை யிட்டனர். இவர் ஸந்யாஸாச்ரமம் பெற்றபோது திருக்கச்சிப்பேரருளாளப்பெருமாள் 'ராமாநுஜமுனி' என்று பேரிட்டழைத்தனர்; உடையவர் எம்பெருமானார் பாஷ்யகாரர் கோயிலண்ணன் சடகோபன்பொன்னடி என்ற திருநாமங்களும் இவர்க்கு உண்டு; இவர் - ஆதிசேஷாம்சமானவர். இவரது சம்பந்தம் பெற்ற காரணத்தால், ஸ்ரீவைஷ்ணவசமயம், 'எம்பெருமானார் தரிசனம்' என்று சிறப்பித்துக் கூறப்படும். (௩)

[கூரத்தாழ்வான்.]

ச. முக்காலமில்லாமுகில்வண்ணன்வைகுந்தத்
தெக்காலஞ்செல்வானிருக்கின்றேன்—தக்காரெண்
கூரத்தாழ்வானடியைக்கூடுதற்கு நாயடியேன்
போரத்தாழ்வானசடம்போட்டு.

(இ - ள்.) நாய் அடியேன் - நாய்போற் கடைப்பட்டவனுகிய யான்,— போர தாழ்வு ஆன சடம் போட்டு - மிகவும் இழிவையுடையதாகிய இவ்வுடம்பை (இங்கு) விட்டிட்டு,—தக்கார் எண் கூரத்தாழ்வான் அடியை கூடுதற்கு - பெரியோர்களால் நன்குமதிக்கப்பெற்ற கூரத்தாழ்வானது திருவடிகளைச் சேர்தற்கு,—முக்காலம் இல்லா முகில் வண்ணன் வைகுந்தத்து - (இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும்) மூன்றுகாலங்களு மில்லாததாகிய காளமேகம்

போன்ற திருநிறமுடைய திருமாலினது ஸ்ரீ வைகுண்டலோகத்தில், எக்காலம் - எந்நாளில், செல்வான் இருக்கின்றேன் - சென்று சேரப்போகின்றேன்? (எ - று.)

இந்நூலாசிரியர்க்கு ஸ்வாசார்யரான பட்டர்க்குக் கூரத்தாழ்வான் திருத்தமப்பனாராதல்பற்றியும், தம்குலமுதல்வரான திருவரங்கத்தமுதனார் ஸ்ரீபாஷ்யகாரருடைய திருவடிகளில் ஆச்ரயித்தற்குக் கூரத்தாழ்வான் புருஷகாரமாயிருந்தமைபற்றியும், அவ்வாழ்வானைப்பற்றி வணக்கம் கூறப்பட்டதென்க. கூரமென்னுந்தலத்தில் திருவவதரித்து, எம்பெருமானுடைய திருக்கலியாணகுணகணங்களாகிய அமுதவெள்ளத்தில் முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்பவராதலால், இவர்க்கு இத்திருநாமம். கூரம்-தொண்டைநாட்டில் காஞ்சிபுரத்துக்கு வடமேற்கிலுள்ளதொரு தலம். இவர் - ஹாரீதகுலதிலகரான ஸ்ரீராமஸோமயாஜியாரின் குமாரர்; இராமாம்சம் சங்காம்சம் ஸர்வநேத்ராம்சம்: இவரது வேறுதிருநாமங்கள் - ஸ்ரீவத்ஸசிஹ்நர், திருமறுமார்பர், நடையாடுபதஞ்சலி, ஸஞ்சாரிமஹாபாஷ்யர், யதீந்த்ரசரணர் என்பன. கூரத்தாழ்வான் அடி என்பதற்கு - பட்டர்எனப் பொருள்கொள்ளுதலும் தகும்: பட்டர் - கூரத்தாழ்வானது திருக்குமாரராதலாலும், அத்தமப்பனாரிடத்தினின்று முக்கியமான வித்யைகளையெல்லாம் அதிகரித்த சிஷ்யராதலாலும், பிஷ்யரை ஆசாரியரது திருவடியாகக் கூறுதல் மரபாதலாலுமென்க.

மிகவும் நிக்ருஷ்டமாகிய இந்தமாம்ஸதேகத்தை ஒழித்துவிட்டுத் தேஜோமயமான திவ்யசரீரத்தோடு அந்தமில்பேரின்பத்தழிவில் வீட்டுலகத்தையடைந்துள்ள தமதுபரமாசாரியராகிய கூரத்தாழ்வானது திருவடிகளை எப்போது கூடுவே னென்று, நூலாசிரியர் ஸம்ஸாரத்தில் வெறுப்புக்கொண்டு மிக்கஆற்றாமையோடு கூறுகின்றனரென்க. நிமிஷம் காஷ்டை கலை நாழிகை முகூர்த்தம் நாள் மாதம் வருஷம் யுகம் கற்பம் முதலிய காலவரையறை பரமபதத்தில் இல்லையாதலால், 'முக்காலமில்லாவைகுந்தம்' எனப்பட்டது. இனி, 'முக்காலமில்லா' என்பதை 'முகில்வண்ணனுக்கு' அடைமொழியாக்கி, காலத்தினால் தோன்றுங் குற்ற மற்று என்றும் ஒருபடிப்பட இருக்கிற முகில்வண்ணனென்று உரைகூறலு மொன்று. திருமாலுக்குக் காளமேகம் உவமை - கருநிறத்திலும் செய்ப்பிலும் குளிர்த்தியிலும் கண்டோரைமகிழ்வித்தலிலும் கைம்மாறுகருதாது கருணைமழைபொழிதலிலு மென்க.

வைகுந்தம் - வைகுண்டம் என்ற வடசொல்லின் சிதைவு: குண்டம் - பாபம்; அஃது இல்லாதவர் - விகுண்டர்: அவருடைய சம்பந்தமுள்ள உலகம் - வைகுண்டம். "வஞ்சமுக்குறும்பாங் குழியைக் கடக்கும் நங்கூரத்தாழ்வான்" என்றபடி நீக்குதற்கு அரிய வித்யாமதம் தநமதம் குலமதம் என்கின்ற மும்மதங்களையும், மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்கிற மூவகைப் பற்றுக்களையும் ஒழித்தவராய், உடையவரதுபேரருளுக்குப் பிரதமபாத்ரமாய் அவருக்கு அந்தரங்கசிஷ்யரா யிருந்ததுபற்றி, 'தக்காரெண் கூரத்தாழ்வான்' என்றார். அடியேன் - இரட்டுறமொழிதலால், சரமாங்கமாகிய அடி

போன்றவனென்றும், அடிமைப்பட்டவனென்றும் பொருள்படும். 'அடியேன்' என்றது, ஆத்துமாவை. சடம்=ஜடம்: அறிவில்லாத பொருள்; அசித்து. போரத்தாழ்வான சடம் - புழுநெளிந்து புண்ணழுகி யோசனைநாறுங் கழிமுடை நாற்றத்தையுடைத்தாய், ஊறியுவர்த்தக்க ஒன்பதுவாய்ப்புலனுங் கோதிக்குழம்பலைக்குங் கும்பமான மாமிசதேகம். 'போட்டு' என்றதனால், இந்தச்சரீரம் இவர்க்குப் பெருஞ்சுமையாயிருக்கின்றதென்பது,போதரும்.

[பட்டர்.]

ரு. நான்கூட்டில்வந்தவன்றே நானறியாநன்மையெல்லாந்
தான்கூட்டிவைத்தநலந்தான் கண்டீர் - கூட்டச்
சிட்டருக்குவாய்த்ததிருவரங்கனின்னருளாற்
பட்டருக்காட்பட்டபயன்.

(இ - ள்.) கூட்டம் ஆம் சிட்டர்க்கு - திரள்திரளாகவுள்ள பெரியோர்கட்கு, வாய்த்த - (கருணைசெய்யுமாறு வாத்ஸல்யத்துடன்) பொருந்தியிருக்கின்ற, திருவரங்கன் - ஸ்ரீரங்கநாதன், இன் அருளால் - (தனது) இனிமையான [நிர்ஹேதுக] கிருபையினால்,—நான்—, கூட்டில் - இந்தச் சரீரத்தில், வந்த - வந்துபிறந்த, அன்றே - அப்பொழுதே, நான் அறியா நன்மை எல்லாம் - என்னால் அறியப்படாத நல்வினைகளையெல்லாம், தான் கூட்டி வைத்த-தான் உண்டாக்கிய, நலம் - நன்மையென்பது,—பட்டருக்கு - ஸ்ரீபராசரபட்டர்க்கு, ஆள்பட்ட - சிஷ்யனாக அமையப்பெற்றதாகிய, பயன்-பயனாகும்; (எ - று.)—கண்டீர் - முன்னிலையசை; தேற்றமுமாம். தான் - அசை.

ஸர்வேஶ்வரன் என்னையும் அறியாமல் என்னிடத்து நிகழ்ந்த சுகிருத விசேஷங்களையே காரணமாகக்கொண்டு, ஸ்ரீ பராசரபட்டரது திருவடிகளில் ஆஶ்ரயிக்குமாறு செய்து அதனால் என்னை ஈடேற்றினனென்பதாம். 'நான் அறியா நன்மை'என்பது - அஜ்ஞாதஸுக்ருத விஶேஷங்களெனப்படும்; அவையாவன - 'என்னூரைச் சொன்னாய், என்பேரைச் சொன்னாய், என்னடியாரை நோக்கினாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்கட்கு ஒதுங்க நிழலைக்கொடுத்தாய்'என்றாற்போல எம்பெருமான் தானே வியாஜமாகக் கொள்ளுமவை: இவ்வாறு அப்பிரான் கொள்வதற்குக் காரணம் - ஸர்வமுக்திப்ரஸங்கம் வாராமைக்காக என்பர்: ஆயின், எம்பெருமானது திருவருள் நிர்ஹேதுகம் என்பது எவ்வாறு? ஸஹேதுகமாகவன்றோ தோற்றுகின்றது? என்னில்,—அன்று: ஸ்ருஷ்டிகாலத்திலே இவ்வாத்மா உருமாய்ந்து கரணகளேபரங்களின்றி இறகொடிந்த பறவைபோலவாகி உரைமெழுகிற்பொன்போல மூலப்ரக்ருதியிற் கிடக்கையில், எம்பெருமான் 'இவ்வாத்மா நம்மை யடைந்து உஜ்ஜீவநம் அடையவேணும்' என்று தனது நிர்ஹேதுகமான பரமகிருபையாலே கரண களேபரம் முதலியவற்றைக் கொடுத்து ஸ்ருஷ்டித்தபின்பன்றோ, இவ்வாத்மாவுக்கு அஜ்ஞாதஸுக்ருத விஶேஷங்களைக் கற்பிக்கத்தக்க நிலைமை வந்தது. ஆகையால், எம்பெருமானது நிர்ஹேதுககிருபையே ஆத்மா ஈடேறுவதற்குக் காரணமாம்: இதனை விளக்குதற்காகவே, 'திருவரங்கன் இன்னருளால் நான் கூட்டில் வந்தஅன்றே

நானறியாநன்மையெல்லாம் கூட்டிவைத்த' என்றார். (கூடு - பால்பகாவஃறிணைப்பெயராய்ச் சரீரங்களை யுணர்த்துமென்க.) இதன்விவரத்தை, ஸ்ரீவசநபூஷணம் முமுக்ஷுப்படி முதலிய ரஹஸ்யக்ரந்தங்களிலும், அவற்றின்வியாக்யானங்களிலும் பரக்கக்காணலாம். "ஞான மநுட்டான மிவை நன்றாகவே யுடைய, ஞான குருவை யடைந்தக்கால்—மாநிலத்தீர், தேனார்கமலத் திருமாமகள் கொழுநன், தானே வைகுந்தந்தரும்" என்றபடி ஸதாசார்ய ஸம்பந்தம் முக்திக்குக் காரணமாய் நிற்றலாலும், அதுவும் அவ்வெம்பெருமானது இன்னருளாலேயே நிகழவேண்டிய தாகையாலும், 'நானறியா நன்மையெல்லாந் தான்கூட்டிவைத்த நலம் - பட்டர்க்கு ஆட்பட்ட பயன் கண்டீர்' என்றார். கூட்டமாம் சிட்டர்க்கு வாய்த்த திருவரங்கன்—"பத்துடையடியவர்க் கெளியவன்". சிட்டர் = சிஷ்டர்: நல்லொழுக்க முடையவர்: பெரியோர். பண்டிதரைக் குறிக்கின்ற 'பட்டர்' என்ற பொதுப்பெயர், சிறப்பாக இவர்க்கு இட்டு வழங்கப்பெற்றது. (௫)

[திருப்பதிகளின் வகை.]

௬. ஈரிருபதாஞ்சோழ மீரொன்பதாம்பாண்டி
யோர்பதின்மூன்றாமலைநா டோரிரண்டாஞ்—சீர்நடுநா
டாறோடெட்டுத்தொண்டை யவ்வடநாடாறிரண்டு
கூறுதிருநாடொன்றாக் கொள்.

(இ - ள்.) சோழம் - சோழநாட்டுத் திருப்பதிகள்,—ஈர் இருபது ஆம் - நாற்பதாகும்; பாண்டி - பாண்டியநாட்டுத் திருப்பதிகள்,—ஈர் ஒன்பது ஆம் - பதினெட்டாகும்; மலைநாடு - மலைகள் நிறைந்த சேரநாட்டுத் திருப்பதிகள்,—ஓர் பதின்மூன்று ஆம் - பதின்மூன்றாகும்; சீர் நடுநாடு - சிறப்புப் பொருந்திய நடுநாட்டுத்திருப்பதிகள்,—ஓர் இரண்டு ஆம் - இரண்டாகும்; தொண்டை - தொண்டைநாட்டுத் திருப்பதிகள்,—ஆறோடு ஈர் எட்டு-இருபத்திரண்டாகும் ; அ வட நாடு-தூரத்திலுள்ள வடநாட்டுத்திருப்பதிகள்,— ஆறு இரண்டு - பன்னிரண்டாகும்; கூறு - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, திருநாடு - பரமபதமென்ற திவ்வியலோகம், ஒன்று - ஒன்றாகும்; ஆ - இவ்வாறாக, கொள் - (திருமாலின் திருப்பதிகள் நூற்றெட்டென்பதை) அறிந்துகொள்வாயாக; (எ - று.)—இச்செய்யுள், நூலாசிரியர் தமது மனத்தை விளித்துக் கூறியதாகவேனும், பிறனைநோக்கிக் கூறியதாகவேனும் கொள்ளத்தக்கது.

சோழம் முதலிய நாட்டின் பெயர்கள் - அந்நாட்டிலுள்ள திருமால் திருப்பதிகளைக் குறித்தன : இடவாகுபெயரின் பாற்படும். நடுநாடு - தொண்டைநாட்டுக்கும் சோழநாட்டுக்கும் இடையிலுள்ள தேசம். தொண்டை - தொண்டைமா னென்னும் அரசனால் ஆளப்பட்ட நாடு; 'தொண்டைமான்' என்றது, குலத்துமுன்னோரில் ஒருவனது பெயராய் அவ்வரசனது பரம்பரையோர்க்கெல்லாம் வழங்கும்; இப்பெயரின் காரணம் வருமாறு:— தொண்டைநாட் டிராசதானியான காஞ்சிபுரத்தி லிருந்த தொண்டைமா னிளந்திரையனைக் குறித்துப் பாடியதாகிய பெரும்பாணாற்றுப்படையில்

"அந்நீர்த், திரை தருமரபின்...பல்வேல்திரையன்" என்றவிடத்து "நாகபட்டினத்துச்சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாககன்னியை மணந்தகாலத்து அவள் 'யான்பெற்ற புதல்வனை என்செய்வேன்?' என்றபொழுது, 'தொண்டையை[தொண்டை - ஓர்கொடி] அடையாளமாகக் கட்டிக் கடலிலே விட, அவன் வந்து கரையேறின், அவற்கு யான் அரசவுரிமையை எய்துவித்து நாடாட்சிகொடுப்பல்' என்று அவன்கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிட, திரைதருதலின் 'திரையன்' என்று பெயர் பெற்ற கதை கூறினார்' என்றும், "தொண்டையோர்மருக" என்றவிடத்து 'தொண்டையைச்சூடினோருடைய குடியி லுள்ளவனே!' என்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்தவாற்றால் விளங்கும். இனி, 'தொண்டை' என்பதற்கு - நிலமகட்குத் தொண்டை[கழுத்துப்]போல முக்கியஸ்தாநமாகவுள்ளதென்றும், தொண்டர்கள் வசிக்கின்ற இடமென்றும் காரணப்பொருள் கூறுவாருமுளர். வடநாடு - தமிழ்நாட்டின் வடவெல்லையாகிய திருவேங்கடமலை தொடங்கி வடக்கேயுள்ள நாடு. அகரச்சுட்டு - சேய்மையைக் குறிக்கும். நலமந்தமில்லதோர் நாடாகிய ஸ்ரீவைகுண்டம் எல்லாநாடுகளினுஞ் சிறந்ததாதலால், 'திருநாடு' என்று தனியே சிறப்பித்துக் கூறப்படும்.

"கடல்கிழக்குத் தெற்குக் கரைபொருவெள்ளாறு, குடதிசையிற்கோட்டைக்கரையாம்—வடதிசையி, லேணாட்டுப்பெண்ணை யிருபத்துநாற்காதம். சோணாட்டுக் கெல்லையெனச்சொல்", "வெள்ளாறதுவடக்கா மேற்குப்பெருவழியாம், தெள்ளார்புனற் கன்னி தெற்காகு—முள்ளாரா, வாண்ட கடல் கிழக்கா மைம்பத்தறுகாதம், பாண்டிநாட் டெல்லைப் பதி", "வடக்குத் திசைப்பழனி வான்கீழ் தென்காசி, குடக்குத்திசை கோழிக்கூடாம்—கடற்கரையி,னோரமோ தெற்காகு முள்ளெண்பதின்காதம், சேரநாட்டிற் கெல்லையெனச் செப்பு," "மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்கா, மார்க்குமுவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர், தெற்குப் பினாகி திகழிருபதின்காதம், நற்றொண்டை நாடெனவே நாட்டு" என்பவற்றால் சோழ பாண்டிய சேர தொண்டை நாட்டி னெல்லையை யறிக. (க)



நூல்.

# சோழநாட்டுத்திருப்பதிகள் - ௪௰.

## ௧. திருவரங்கம் பெரியகோயில்.

*சீர்வந்தவுந்தித்திசைமுகனல்லாதென்*
*சோர்வந்தசொல்லிற்சுருங்குமோ—வார்வ*
*மொருவரங்கங்கோயிலுகந்தவரையாள்வான்*
*திருவரங்கங்கோயிற்சிறப்பு.*

(இ - ள்.) ஒருவர் - ஒருத்தர், அங்கு அங்கு - அந்த அந்த விஷயங்களில் [பலவகையான உலகப்பற்றுக்களில்], ஆர்வம் ஒயில் - ஆசையொழிந்தால், அவரை - அவ்வாறு பற்றற்ற அன்பரை, உகந்து - விரும்பி, ஆள்வான் - அடிமைகொள்பவனாகிய எம்பெருமானது, திருவரங்கம் கோயில் - திருவரங்கம்பெரியகோயிலென்னுந் திருப்பதியின், சிறப்பு - பெருமையானது, —சீர் வந்த உந்தி திசைமுகனல் அல்லாது - சிறப்புப்பொருந்திய (திருமாலின்) நாபீகமலத்திற் பிறந்த நான்குதிக்கையும் நோக்கிய நான்குமுகங்களையுடைய பிரமதேவனாலல்லாமல், என் சோர்வந்த சொல்லில் சுருங்குமோ - எனது குற்றம்பொருந்திய சொற்களில் அடங்குமோ? (எ - று.)

எம்பெருமானது திருநாபீகமலத்தில் தோன்றி அவனது அருளைப் பெற்றுத் தேவர்களுட்சிறந்தவனாய் அந்தஎம்பெருமானது ஸ்வரூபரூபகுண விபவங்களைத் துதித்தற்கு ஏற்ற பலமுகங்களையுடையவனான பிரமன் ஸ்ரீரங்கத்தின் சிறப்பை ஒருகால் கூறிமுடித்தால் முடிக்கலாமேயல்லது, சாதாரணமனிதனாய் அற்பஞானமுடையவனான என்னால் எவ்வாறு கூறமுடியும்? முடியாதென்பதாம்; பிரமதேவன் நான்முகனாயிருத்தலும், எம்பெருமானது புதல்வனாயிருத்தலுமன்றி ஸ்ரீரங்கத்திலெழுந்தருளியுள்ள கடவுளை முதலில் ஆராதித்தவனுமாயிருத்தலால், 'சீர்வந்த வுந்தித்திசைமுகனல்லாது' என்றனரென்க. எம்பெருமானது திருவருளுக்குப் பாத்திரமாவதற்குப் பற்றறுதலே முதற்காரண மென்பதை, மூன்றாமடியால் விளக்கினர். 'அங்கங்கு' என்ற அடுக்கு - பற்றுண்டாதற்குஉரிய வழிகள் பலவாதல்பற்றியதாம். 'ஒயில்' என்ற எதிர்காலவினையெச்சம், ஒய்வது அருமை யென்பதைக் குறிப்பிக்கும். கோ + இல் = கோயில்; 'கோவில்' என வகரவுடம்படுமெய் பெற்றுவரற்பாலது யகரவுடம்படுமெய்பெற்று வந்தது: இலக்கணப்போலி.

திருவரங்கமென்பது - திருமாலின் திவ்யதேசங்கள் நூற்றெட்டனுள் தலைமைபூண்டதும், சோழநாட்டுத்திருப்பதிகள் நாற்பதில் முக்கியமானதும், 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று பிரதானமாக எடுத்துக் கூறப்படுகின்ற மூன்றுதலங்களுள் முதலதும், 'கோயில்' என்றும் 'பெரிய கோயில்' என்றும் மறுபெயருடையதும், 'பூலோகவைகுண்டம்' எனப்படுகின்ற மகிமையுடையதும், 'போகமண்டபம்' எனப்படுவதுமாகிய தலம். பிரணவாகாரமான ஸ்ரீரங்கவிமானத்திலே ஆதிசேஷசயனத்திற் பள்ளிகொண்

டருளுந் திருமால் ஆதியிற் சத்தியலோகத்தில் பிரமனது திருவாராதனத் திருவுருவமாயிருந்தான்: பின்பு, சூரியகுலத்து மநுகுமாரனான இக்ஷ்வாகு மகாராஜன் பிரமனைக்குறித்துப் பலகாலம் அரும்பெருந்தவம்புரிந்து அத் தேவனருளால் அப்பெருமானைத் தான்பெற்றுத் திருவயோத்திக்கு எழுந்த ருளப்பண்ணிக்கொண்டுவந்து பிரதிஷ்டித்துத் திருவாராதனஞ்செய்துவந் தனன். அந்தஸ்ரீரங்கநாதனே இக்ஷ்வாகுமுதல் இராமபிரான்வரையிலுள்ள இரவிகுலமன்னவரெல்லார்க்கும் குலதெய்வமாகி விளங்கினான். இங்ஙனம் மனிதவுருவங்கொண்ட பெருமாளாகிய இராமபிரானால் வணங்கப்பட்ட மைபற்றி, ரங்கநாதனுக்கு 'பெரியபெருமாள்' என்று திருநாமம். இராம பிரான், வனவாசஞ்சென்று விபீஷணனுக்கு அபயமளித்துக் கடல்கடந்து இலங்கைசேர்ந்து இராவணாதிராக்ஷஸசங்காரஞ்செய்து, திருவயோத்திக்கு மீண்டெழுந்தருளிப் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டபின்பு சுக்கிரீவன் முதலிய அனைவர்க்கும் விடைகொடுத்து அவரவரைத் தந்தம் இருப்பிடங் கட்கு அனுப்பும்பொழுது தனது திருவாராதனமூர்த்தியும் குலதனமு மான திருவரங்கநாதனைத் தனக்கு மிகவும்அந்தரங்கனான விபீஷணாழ்வா னிடங் கொடுத்து ஆராதித்துவரும்படி நியமித்து அனுப்பினான். * அங்ங னமே அவ்வரக்கர்பெருமான் அவ்வமரர்பெருமானை அவ்விமானத்துடனே எழுந்தருளப்பண்ணிக்கொண்டு இலங்கை நோக்கிச் செல்லும்பொழுது இடைவழியில் உபயகாவேரிமத்தியிலே பெருமான் புடைபெயராது விமா னத்துடனே நிலைநின்றருளினான். அவ்வாறு திருமால் திருவுள்ளமுவந்து தங்கிய இடமே ஸ்ரீரங்க மெனப்படுவது.

(ஸ்ரீ வைகுண்டம் திருப்பாற்கடல் சூரியமண்டலம் யோகிகளுடைய உள்ளக்கமலம் என்னும் இவையனைத்தினும் இனியதென்று திருமால்) திரு வுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கு மிடமான தென்பதுபற்றி, 'ரங்கம்' என்று அவ்விமானத்திற்குப் பெயர்; திருமால் இங்கு ரதியை[ஆசைப்பெருக் கத்தை] யடைகின்றன னென்க. 'ரங்கம்' என்னும் வடமொழி அகரம் மொழிமுதலாகி முன்வரப்பெற்று 'அரங்கம்'என நின்றது; இங்கு, 'அரங் கம்' என்பது - விமானத்தின்பெயர் திருப்பதிக்கு ஆனதோர் ஆகுபெயர் [தானியாகுபெயர்.] இனி, திருமகளார் திருநிருத்தஞ்செய்யு மிடமாயிருத்த லாலும், ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய திருவுக்கு [மேன்மைக்கு]க் கூத்துப் பயிலிடமா யிருத்தலாலும், ஆற்றிடைக்குறை [நதியினிடையே உயர்ந்த திடர்] ஆதலாலும், 'திருவரங்கம்' என்னும் பெயர் வந்த தெனினுமாம்.

(பரத்வம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமி அர்ச்சை என்ற திருமால்நிலைகள் ஐந்தனுள், பரமாகிய திருநாடும் வ்யூஹமாகிய திருப்பாற்கடலும் ஒழிய, மற்

---

* இராமபிரான், திருவவதாரத்தை முடித்துக்கொண்டு தன்னடிச் சோதிக்கு எழுந்தருளும்பொழுது வந்து தன்னைவணங்கித் தனது பிரிவை யாற்றமாட்டாது நின்ற விபீஷணனுக்கு இக்ஷ்வாகு குலதெய்வமும் தனது திருவாராதனமூர்த்தியு மான திருவரங்கநாதனைத் தந்தருளினனென வ ரலாறுகூறுதலு முண்டு.

றைத்தலங்கள்-அர்ச்சையின் வகையினைச் சேர்ந்தவை; இந்த அர்ச்சை- மாநுஷம் ஆர்ஷம் தைவம் ஸ்வயம்வ்யக்தம் என நான்குவகைப்படும்; இவற்றுள், சாதாரணமநுஷ்யரால் பிரதிஷ்டைசெய்து பூஜிக்கப்பட்டு வருபவை - மாநுஷமாம்; வ்யாஸர் முதலிய மஹர்ஷிகளால் பிரதிஷ்டைசெய்து பூஜிக்கப்பட்டு வந்தவை - ஆர்ஷமாம்; பிரமன்முதலிய தேவர்களால் பிரதிஷ்டைசெய்து பூஜிக்கப்பட்டுவந்தவை - தைவமாம். இவ்வாறன்றி, எம்பெருமான் ஸ்வயமாகவே ஆவிர்ப்பவிக்கப் பிறகு தேவர்முதலியோரால் பூஜிக்கப்பட்டு வந்தவை - ஸ்வயம்வ்யக்தமாம். அந்த ஸ்வயம்வ்யக்த க்ஷேத்ரம் எட்டாகும்; அவையாவன-ஸ்ரீரங்கம், திருவேங்கடம், ஸ்ரீமுஷ்ணம், வானமாமலை, புஷ்கரம், நைமிசாரணியம், பதரிகாச்சிரமம், சாளக்கிராமம் என்பன. திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகள் - மாநுஷமொழிந்த மற்றை மூவகை யர்ச்சையினைச் சேர்ந்தவையென்றும், மூவகையர்ச்சையிற் சேர்ந்த திருப்பதிகளுள்ளுஞ் சில - ஆழ்வார்களது மங்களாசாசனம்பெற்ற நூற்றெட்டுத்திருப்பதிகளிற் சேர்ந்தனவாகாமல், புராணஸ்தலங்களென்று சிறப்பித்துக்கூறப்படுமென்றும் அறிக.)

'ஸ்ரீரங்கம்' என்ற திவ்வியதேசம் பூமண்டலத்திலுள்ள திருமால் திருப்பதிக ளெல்லாவற்றினும் சிறந்தல்பற்றியும், அத்தலத்தினிடத்துத் தமக்கு அன்புமிகுதல்பற்றியும், அத்தலத்தைத் தன்னிடையுடைய சோழநாட்டை முதலாகவே இந்நூலாசிரியர் கூறலாயின ரென்க.

நூல் தொடங்கும்போது மங்கலமொழியை முதலில்வைத்துக்கூறுவது மரபாதலின், 'சீர்' என்று தொடங்கினார்.

இந்நூல், நேரிசைவெண்பாவினு லியன்று, பின்னிரண்டடிகள்தோறும் திரிபு என்னுஞ் சொல்லணி யமையச் செய்யப்பெற்றுள்ளது. (க)

## உ. திருவுறையூர்.

சிறப்புடையசெல்வத்திருப்பதிகள்போல
மறப்புடையநாயேன்மனத்து—றுறப்போந்
தறந்தையாநின்றவரங்கா திருவா
முறந்தையா யிங்குறைந்த தோது.

(இ - ள்.) மறப்பு உடைய - மறதியையுடைய, நாயேன் - நாய்போலக் கடைப்பட்டவனான எனது, மனத்தூள் - மனத்திலே, உற போந்து - நன்றாகவெழுந்தருளியிருந்து, அறம் தையா நின்ற - தருமத்தைப் பதியுமாறுசெய்கின்ற, அரங்கா - திருவரங்கநாதனே! திரு வாழ் உறந்தையாய் - இலக்குமி வாழ்கின்ற திருவுறையூரென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளி யிருப்பவனே!—(நீ),—சிறப்பு உடைய செல்வம் திருப்பதிகள் போல - பெருமை பெற்ற செல்வம் நிறைந்த திவ்வியக்ஷேத்திரங்கள்போல, இங்கு - இந்தஎன் மனத்தில், உறைந்தது - நித்தியவாசஞ் செய்வதற்குக் காரணத்தை, ஓது - கூறியருள்வாய்; (எ - று.)

திருப்பதிகளில் திருவுள்ளமுவந்து வாழ்வதுபோல, மிகவுந்தண்ணிய ஞன எனது மனத்தில் வாழ்வது உனது நிர்ஹேதுகமான கிருபாகடாக்ஷமே யென ஈடுபட்டுக் கூறியவாறு. எம்பெருமான் திவ்வியதேசங்களில் எழுந்தருளியிருக்குமாறுபோல, நின்றதிருக்கோலமாகவும் கிடந்ததிருக்கோலமாகவும் வீற்றிருந்த திருக்கோலமாகவும் அந்த எம்பெருமானை அடியேன் மனத்தினுல் அன்போடு தியானித்தல்பற்றி, அப்பெருமான் நான் நினைத்தபடியெல்லாம் எனது மனத்தில் திருவுள்ளமுவந்து வந்து எழுந்தருளியிருக்கின்றனனென்பது தோன்ற, இங்ஙனங் கூறினர். திருப்பதிகள் யாவும் என்றும் அழியாததான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை யுடையன வாதலால், 'சிறப்புடைய செல்வத்திருப்பதிகள்' என்றார். நீ இவ்வாறு காரணமின்றிச் செய்யும் பெருங்கருணையை நினைத்தற்கும் வல்லமையற்றவன் யா னென்பார், 'மறப்புடைய நாயேன்' என்றார்; எம்பெருமானிடத்துச் செல்லும்போது, தமதுகுற்றத்தை முன்னிட்டுக்கொண்டு செல்லுதல் முறைமையாகு மென்பது, இங்கு உணரத்தக்கது. இங்குக்கூறிய 'மறப்பு' - எம்பெருமானை ஸ்வாமியென்றும், தன்னை 'ஸ்வம் [உடைமை]' என்றும் அறியாமையை உணர்த்துமென்னலுமாம்; "மறந்தே னுன்னை முன்னம்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரமும், அதன் வ்யாக்யாநத்தில், 'ஸம்பந்தம் ஸ்வாபாவிகமே யாகையாலே முன்பு நெடுநாள் மறந்துபோகச் செய்தேயும் சிலநாள் ஸ்மரித்து மறந்தாற்போலே யிருக்கத் தோற்றிற்று' என்று பெரியாருளியதும் இங்கு உணரத்தக்கன. திருவரங்கநாதனே அழகியமணவாளக்கோலமாக இத்தலத்தில் எழுந்தருளியிருத்தலால், 'அரங்கா திருவாழுறந்தையாய்' எனச் சேர்த்துக்கூறினர்.

திரு உறைந்த காரணம்பற்றி, இத்திருப்பதிக்கு, 'திருவுறையூர்' என்று திருநாமமாயிற்று; உறையூர் = உறந்தை: மரூஉ. இஃது, அழகிய மணவாளனுக்கும் உறையூர்வல்லிக்கும் திருமணம் நடந்த தலம்; திருப்பாணாழ்வார் திருவவதரித்த தலம். (௨)

௩. திருத்தஞ்சை.

ஓதக்கேணெஞ்சே யுனக்குமிதுநன் றெனக்கு
மேதக்கநன்மையினிவேறில்லை—போதப்
பெருந்தஞ்சைமாமணியைப் பேணிவடிவம்
பொருந்தஞ்சைமாமணியைப் போற்று.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—ஓத - (நான்) சொல்வதை, கேள் - (நீ) கேட்பாயாக; (கேட்டால்), இது உனக்கும் நன்று - நான் சொல்லுகின்ற இவ்விஷயம் உனக்கும் நன்மையை யுண்டாக்கும்; எனக்கும் மேதக்க நன்மை இனி வேறு இல்லை - எனக்கும் மிக்கநன்மையை யுண்டாக்குவது இதனினும் வேறொன்று இல்லையாம்: (இவ்வாறு நம்மிருவர்க்கும் ஒருங்கே நன்மை பயக்கக்கூடிய உபாயம் யாதெனில்),— பெருந் தஞ்சை மா மணியை போத பேணி - பெரிய திருத்தஞ்சையென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளிய சிறந்த மாணிக்கம்போன்ற கடவுளை நன்றாக விரும்பித் துதித்து, வடி

வம் பொருந்து - (அப்பெருமானது) திருமேனியிற் பொருந்திய, அஞ்சை - பஞ்சாயுதங்களையும், மா - லக்ஷ்மியையும், மணியை - கௌஸ்துபரத்நத்தையும், போற்று - வாழ்த்துவாயாக; (எ - று.)

திருத்தஞ்சையி லெழுந்தருளியுள்ள எம்பெருமானையும், அவனது திருமேனியில் அமைந்துள்ள பஞ்சாயுதம் முதலியவற்றையும் போற்றினால் விஷயாந்தரங்களைப் பற்றியுள்ள உனக்கும் அதனாலுண்டான மாசு ஒழிய எனக்கும் நற்பேறுவாய்க்கு மென்பதாம். தமக்குள்ளடங்கிய மனத்தை இங்ஙனம் வேறுபடுத்துக் கூறியது, இதுவரையில் மனம் தமக்கு வசப்படாமல் விஷயாந்தரங்களிற் சென்று தமக்குப் பலபடியாலும் அநர்த்தத்தை விளைத்து வந்ததனா லென்க. 'தஞ்சைமாமணி' என்பது, இத்தலத்து எம்பெருமானது திருநாமம். இதனால், இத்தலத்திற்குத் தஞ்சைமாமணிக்கோயிலெனத் திருநாமமுண்டாயிற்று. வடிவம்பொருந்து அஞ்சு-சுதர்சநமெனப்படுஞ் சக்கரமும், பாஞ்சஜந்ய மெனப்படுஞ் சங்கமும், கௌமோதகீ யெனப்படுங் கதையும், நந்தகமெனப்படும் வாளும், சார்ங்கமெனப்படும் வில்லுமாம். 'வடிவம்பொருந்து' என்ற தொடர், 'மா,' 'மணி' என்றவற்றோடும் இயையும். திருமாலின் வலப்பால் மேற்கரத்திற் சக்கரமும், இடப்பால் மேற்கரத்திற் சங்கும், வலப்பாற்கீழ்க்கரத்திற் கதையும், இடப்பாற்கீழ்க்கரத்தில் வில்லும், அரையில் உடைவாளும், வலத்திருமார்பில் இலக்குமியும், இடத்திருமார்பிற் கௌஸ்துபரத்நமும் உள்ளனவென்க. இனி, 'வடிவம்பொருந்து அஞ்சை' என்பதற்கு—திருமால் திருவுருவங்கொண்டுள்ள ஐவகைநிலையை எனக் கூறலு மொன்று. அவை - பரத்வம், வ்யூஹம், விபவம் அந்தர்யாமித்வம், அர்ச்சை என்பன. (அவற்றுள், பரத்வமாவது - பரமபதத்தில் பரவாசுதேவராய் எழுந்தருளியிருக்கும் நிலை; வ்யூஹமாவது - திருப்பாற்கடலில் (வாசுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாகிய நான்குருபத்துடன்) எழுந்தருளியிருக்கும் நிலை; விபவமாவது - ராமக்ருஷ்ணாதி யவதாரங்கள். அந்தர்யாமித்வமாவது - சராசரப்பொருள்களெல்லாவற்றினுள்ளும் எள்ளினுள் எண்ணெய்போல மறைந்துவசித்தலும், அடியார்மனத்தில் வீற்றிருத்தலும்; அர்ச்சையாவது - விக்கிரகரூபத்தில் ஆவிர்ப்பவித்தல்.) 'அஞ்சு' என்பது - இவ்விருவகைப்பொருளிலும் எண்ணளவையாகுபெயர்; இச்சொல், 'ஐந்து' என்பதன் மூழுப்போலியாம். 'போதம்' என்று பிரித்து - அறிவு விளங்குகின்ற என்று உரைப்பாருமுளர். உம்மைகள் இரண்டும் - ஒன்றையொன்று நோக்கி இறந்ததும் எதிரதுந் தழுவியன.

தஞ்சாசுரனைக் கொன்ற தலமாதல்பற்றி, இதற்குத் தஞ்சையென்று நாமதேய முண்டாயிற் றென்பர். (௩)

## ௪. திருவன்பில்.

போற்றிசெயவோர்குடைக்கீழ்ப்பொன்றுடுமிந்நாடு
நாற்றிசையுமாண்டாலுநன்கில்லை—தோற்றமிலா
வெந்தையன்பிலாதியிணைத்தாமரையடிக்கே
சிந்தையன்பிலாதார்சிலர்.

(இ - ள்.) தோற்றம் இலா எந்தை - பிறப்பில்லாத எமது தந்தையும், அன்பில் ஆதி - திருவன்பி லென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருக்கின்ற முழுமுதற்கடவுளுமான எம்பெருமானது, இணை தாமரை அடிக்கு - இரண்டு திருவடித்தாமரைகளினிடத்தில், சிந்தை அன்பு இலாதார் சிலர் - தமது மனத்திற் பக்தியைக்கொள்ளாதவராகிய சிலபேர்,—போற்றி செய - (யாவரும் தமக்கு) வாழ்த்துக்கூற, ஓர் குடை கீழ் - ஒற்றைவெண்கொற்றக்குடையின்கீழிலே, பொன் நாடும் - பொன்னுலகமாகிய தேவலோகத்தையும், நால்திசையும் இ நாடும் - நான்குதிக்கின் எல்லைவரையிலுமுள்ள இம்மண்ணுலகத்தையும், ஆண்டாலும் - தனியரசாட்சிசெய்தாலும், நன்கு இல்லை - (அதனால் அவர்க்கு யாதொரு) நன்மையும் உண்டாகாது; (எ - று.)

அழியாப் பேரின்பத்தைப் பெற்று உய்யுமாறு எம்பெருமானிடத்துப் பக்திசெலுத்துவதைவிட்டு அழிந்தொழியுந் தன்மையதாகிச் சிற்றின்பத்திற்கே இடமான இந்திரபதவிமுதலிய சிறப்புக்களை ஒருங்கேயடைந்து எல்லாவுலகங்களையும் தனிச்செங்கோல் செலுத்தும் பெருமை பெற்றாலும் அஃது நற்கதிபெறுதற்குச் சிறிதுங்காரணமாகா தாதலால், அதனால் யாதொரு பயனுமில்லை யென்பதாம். அரசாட்சியை—குடையென்றும், கோலென்றும், சக்கரமென்றுங் கூறுதல், கவிசமயம். பொன்னாடும் இந்நாடும் என்பது, மேல் கீழ் உலகங்க ளெல்லாவற்றிற்கும் உபலக்ஷணம். ஸ்வர்க்கலோகத்திலுள்ளன யாவும் பொன்மயமா யிருக்குமென்பது நூல்துணிபாதலின், அது 'பொன்னாடு' எனப்படும். தோற்றத்தைக்கூறியது -இறப்பிற்கும் உபலக்ஷணம்; தோற்றமிலாவெந்தை - ஆதிமத்யாந்தரஹித னென்றவாறு. ஒருபிறப்பில் மாத்திரம் மக்களானவர்க்கு உவந்தபோது உபகாரத்தைச் செய்யும் தந்தைபோலவல்லாமல் எப்போதும் இடைவிடாமல் அடியவரான தமக்கு அன்போடு ஆவனஎல்லாவற்றையும் செய்த உபகாரகனாதலால், எம்பெருமானை 'எந்தை' என்றார் ; இது, ஸர்வவிதபந்துவாயிருத்தற்கு உபலக்ஷணம். ஆதி— "முதலாவார் மூவரே யம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர் வண்ணன்" என்றார் பெரியாரும்.

போற்றி - இகரவிகுதிபெற்ற தொழிற்பெயர்; இனி, போற்றிசெய என்பதற்கு - போற்றியென்ற சொல்லைக் கொண்டு வாழ்த்த எனினுமாம்; இப்பொருளில், 'போற்றி' என்பது - 'போற்றிய' என்னும் வியங்கோளின் அநுகரணம்; ஈறுதொக்குவந்த தென்க. உம்மைகள் நான்கனுள், முன்னைய இரண்டும் - எண்ணும்மைப்பொருளன; மூன்றாவது - முற்றும்மைப்பொருளது; நான்காவது - உயர்வுசிறப்புப்பொருளது. அடிக்கு - உருபுமயக்கம். ஏகாரம் - இசைநிறை: சிறப்புப்பொருளுமாம். (௪)

௫. திருக்கரம்பனூர்.

சிலமாதவஞ்செய்துந் தீவேள்விவேட்டும்
பலமாநதியிற்படிந்து—முலகிற்
பரம்பநூல்கற்றும் பயனில்லை நெஞ்சே
கரம்பனூருத்தமன்பேர்கல்.

(இ - ள்.) நெஞ்சே-எனது மனமே!—உலகில் - இவ்வுலகத்தில், சில மா தவம் செய்தும் - சில பெருந்தவங்களைச் செய்தும், தீ வேள்வி வேட்டும் - ஓமாக்கினியையுடைய யாகத்தைச் செய்தும், பல மா நதியில் படிந்தும்-பல சிறந்தநதிகளில் மூழ்கியும், பரம்ப நூல் கற்றும் - விரிவாக நூல்களைப் படித்தும், பயன் இல்லை - (அவற்றால்) யாதொருபயனுமுண்டாகாது; (ஆதலால், அவ்வாறெல்லாம் செய்வதைவிட்டுத் தவறுமற்பயன்பெறும்படியாக), கரம்பனூர் உத்தமன் பேர் கல் - திருக்கரம்பனூரென்னூர் தலத்தி லெழுந்தருளியுள்ள புருஷோத்தமனது திருநாமத்தைப் பலதரம் கூறுவாயாக; (எ - று.)

பகவத்ப்ராப்திக்கு விரோதியான சரீரஸம்பந்தாதிகளை யறத்துக்கழித்து எம்பெருமானைப் பெறவேண்டுமென்று கருதி அரும்பெருந்தவஞ்செய்தும் மகாயாகங்களைப்புரிந்தும் புண்ணியநதிகளில் மூழ்கியும் 'சித்திக்கு வித்து அதுவோ இதுவோ' என்று பலநூல்களைப் படித்தும் புருஷார்த்தம் கைகூடாமல் வருந்தல்வேண்டா; அடியார்கள்பக்கல் பேரருளுடையனாகிய திருக்கரம்பனூரிலெழுந்தருளியுள்ள எம்பெருமானது திருநாமசங்கீர்த்தனமென்ற இந்த எளிய உபாயத்தினாலேயே சகலவிரோதிகளும் ஒழிய நற்கதி பெறுவாயென்று தமது நெஞ்சிற்கு ஹிதோபதேசஞ் செய்கின்றார். "ஊன் வாடவுண்ணாதுயிர்காவலிட்டு உடலிற்பிரியாப்புலனைந்தும் நொந்து, தாம் வாடவாடத் தவஞ்செய்யவேண்டா", "காயோடு நீடுகனியுண்டு வீசுகடுங் கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து, தீயோடுநின்று தவஞ்செய்யவேண்டா ...தில்லைத் திருச்சித்திரகூடஞ் சென்று சேர்மின்களே" என்ற வாய்பாடு கொண்டது, இச்செய்யுள். "செய்தவராகவருந்தியுந் தீர்த்தத்துறைபடிந்தும், கைதவராகமங்கற்றுமென்னும்" என்றார் அழகரந்தாதியிலும். உத்தமன் - 'புருஷோத்தமன்' என்ற சொல்லின் நாமைகதேசநாமக்ரஹணம். கதம்பமஹர்ஷிக்குத் திருமால் ப்ரத்யக்ஷமான தலமாதல்பற்றி, இது 'கரம்பனூர்' என்று பெயர்பெற்றதுபோலும். கரம்பனூர் - கதம்பனூர்என்பதன் மரூஉவென்க. இத்தலம் - 'உத்தமர்கோயில்' என்று வழங்கப்பெறும். (ரு)

## சு. திருவெள்ளறை.

கல்லிருந்தான்றந்தைகமலத்தோ னக்கமலத்
தில்லிருந்தான்றந்தையரங்கேசனென்றே—தொல்லைமறை
புள்ளறையாநின்றமையா லுள்ளமே கள்ளமின்றி
வெள்ளறையான்றாளேவிரும்பு.

(இ - ள்.) உள்ளமே - எனது மனமே!—'கல்இருந்தான் தந்தை - கைலாசமலையி லிருப்பவனாகிய சிவபெருமானது திருத்தந்தை, கமலத்தோன் - (திருமாலினது நாபித்) தாமரையில் தோன்றியவனாகிய பிரமனாவன்; அக் கமலத்தில் இருந்தான் தந்தை - அந்தத்தாமரைமலரில் வாழ்பவனாகிய பிரமனது திருத்தந்தை, அரங்கேசன் - திருவரங்கநாதனாவன்,' என்று—, தொல்லை மறையுள் அறையாநின்றமையால் - பழமையாகிய வேதங்களிற் சொல்வதனால்,—கள்ளம் இன்றி - கபடமில்லாமல், வெள்ளறையான் தானே - திரு

வெள்ளறையென்னுந் தலத்தி லெழுந்தருளியுள்ள எம்பெருமானது திருவடிகளையே, விரும்பு - விரும்பிச்சேர்வாயாக; (எ - று.)

இதனால், பிரமருத்திரர்களுக்கும் காரண மென்று வேதத்திற்சிறப்பித்துக்கூறப்படுந் தலைமை பெற்றுள்ள எம்பெருமானது திருவடிகளை நீ விரும்பிச் சரணமடைவா யென்று தமதுநெஞ்சிற்கு உபதேசஞ் செய்கின்றனர். பரதெய்வம் இன்னதென்று தெரியாமல் தடுமாறவொட்டாதபடி இதுவே பரதெய்வமென்று நிச்சயித்துக் கூறினரென்க. "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும், தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்" என்றார் திருமழிசைப்பிரானும்.

கல் - கற்களையுடைய மலைக்குச் சினையாகுபெயர்; இது, சிறப்பாய்க் கைலாசகிரியை யுணர்த்திற்று. கமலம் - நீரையலங்கரிப்பதென்று காரணப் பொருள்படுந் தற்சமவடசொல். கமலத்திலிருந்தான்—எதுகைநோக்கிய விரித்தல். அரங்க + ஈசன் = அரங்கேசன்: குணசந்திபெற்ற வடமொழித் தொடர். ஓதலாகாதென்று சிலர்க்கு மறுக்கப்படுதல்பற்றி, மறையென்று பெயர்; இனி, இச்சொல்லுக்கு - (எளிதிலுணரலாகாதபடி) மறைந்துள்ள பொருள்களையுடையதென்று காரணப்பொருள்கூறவுமாம்.

வெள்ளறை - வெண்மையான பாறைகளா லியன்ற மலை; [அறை - பாறை;] இது, வடமொழியில் 'ஶ்வேதாத்ரி' எனப்படும். (சு)

## எ. திருப்புள்ளம்பூதங்குடி.

விரும்பினவையெய்துந் வினையனைத்துந்தீரு
மரும்பரமவீடுமடைவீர்—பெரும்பொறிகொள்
கள்ளம்பூதங்குடிகொள்காயமுடையீ ரடிகள்
புள்ளம்பூதங்குடியிற்போம்.

(இ- ள்.) பெரும் பொறி கொள் - வலிய ஐம்பொறிகளைக்கொண்டதும், கள்ளம் பூதம் குடி கொள் - வஞ்சனைக்குணமும் பஞ்சபூதங்களும் பொருந்தப்பெற்றதுமான, காயம் - சரீரத்தை, உடையீர் - உடையவரான ஜநங்களே!—(நீங்கள்),—அடிகள் புள்ளம்பூதங்குடியில் போம் - எம்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருப்புள்ளம்பூதங்குடியென்னுந் தலத்திற் போய்ச்சேருங்கள்; (சேர்ந்தமாத்திரத்தில்),—விரும்பினவை எய்தும் - (நீங்கள்) விரும்பியவை எல்லாம் கைகூடும்; வினை அனைத்தும் தீரும் - (உங்களது) எல்லாவினைகளும் நீங்கும்; அரும் பரம வீடும் அடைவீர் - பெறுதற்கு அரிய சிறந்த முத்தியுலகத்தையும் சேர்வீர்கள்; (எ - று.)

திருப்புள்ளம்பூதங்குடி யென்னுந் திருப்பதியைச் சேர்ந்தமாத்திரத்தில், அதன்மகிமையால் நீங்கள் இம்மையில் விரும்பிய எல்லாவற்றையும் பெற்று வினையனைத்துந்தீர்ந்து மறுமையில்மோக்ஷத்தையும்பெறுவீரென்பதாம். நல்வினையும் பிறப்பிற்கு ஏது வாதலால் அதனையுஞ்சேர்த்து 'வினையனைத்துந் தீரும்' என்றார். "இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார்மாட்டு" என்றார் திருவள்ளுவனாரும். தேவஜ்ஞ

மம் நல்வினைப்பயனாற் பெரிதும் இன்பநுகருமாறு சேர்வதாயினும் அத்தேவர்களும் நல்வினை முடிந்தவளவிலே அவ்வுடம்பொழிய மீளவும் இவ்வுலகத்திற் கருமவசத்திற்குஏற்ப வேறுபிறவி கொள்பவராதலும், உயிரைப் பந்தப்படுத்துவதில் பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலப் புண்ணியகருமமும் பாபகருமமும் சமமேயாதலும், எல்லாக்கருமங்களையும் முற்றுமொழித்தவர்களே சிற்றின்பத்திற்கும் பெருந்துன்பத்திற்கும் இடமான எழுவகைப்பிறப்புக்களிலும் புகுதாமல் பேரின்பத்திற்கே இடமான மீளாவுலகமாகிய முத்தியிற் சேர்ந்து மீளவும் பிறத்தலிலராவ ரென்பதும் உணர்க. சஞ்சிதகருமமும் ஆகாமியகருமமும் அநப்யுபகதப்ராரப்தமும் ஆகிய எல்லாக்கருமங்களும் காட்டுத்தீயின்முன் பஞ்சுப்பொதிபோலவும் விளக்கின்முன் இருள்போலவும் மிகஎளிதில் அதிசீக்கிரத்தில் அழிந்தொழிதலால், 'வினையனைத்துந் தீரும்' என்றருளியதாம். (பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரால் அளவின்றி ஈட்டப்பட்டுள்ள வினைகள் - சஞ்சிதம்; அவற்றுள் இறந்த உடம்புகளால் அநுபவித்தன ஒழியப் பிறக்கும் உடம்புகளால் அநுபவிக்கக் கடவனவாய் நின்றவை - ப்ராரப்தம்; ஆகாமியம் - பிறக்கும்உடம்புகளால் புதியனவாக ஈட்டப்படுபவை. எடுத்த உடம்பால் அநுபவிப்பவை - அப்யுபகதப்ராரப்தமும், இனிவரும் உடம்புகளால் அநுபவிக்கப்படுபவை - அநப்யுபகதப்ராரப்தமுமாம்.)

துஷ்டமிருகங்களை யகப்படுத்தும் பொறியை [யந்திரத்தை]ப் போன்று ஆத்துமாவை இந்திரியங்கள் அகப்படுத்துதலால், அவை 'பொறி' எனப்படும். அவைகளின் வலிமையை நோக்கி 'வெம்பொறி' என்றார். நிலம் நீர் தீ காற்று வானம் என்னும் பஞ்சபூதங்களினால் இவ்வுடம்பு அமைக்கப்பட்டிருத்தலின், 'பூதங்குடிகொள்காயம்' எனப்பட்டது; "மண்ணும் நீ ரெரிகால்மஞ்சுலாவுமாகாசமுமாம், புண்ணியாகனை" என்னும் பாசுரங் காண்க. இது நிலையற்றதாயிருந்தும் நிலையுள்ளதுபோலத் தோன்றி அஜ்ஞானத்தை விளைத்தலின், இதற்கு 'கள்ளம்' என்ற அடைமொழி கொடுத்துக்கூறினார். அடிகள் - பெரியவ ரென்னும் பொருளது; வடமொழியில் 'பாதா:' என்பதுபோல.

பரமம், பூதம், காயம் - வடசொற்கள். வீடு - எல்லாப்பற்றுக்களையும் விட்டு அடையப்படுமிடம்: 'முக்தி' என்னும் வடசொல்லும் இப்பொருளதே. போம்-'போகும்' என்ற எவற்பன்மைமுற்றின் ஈற்றுஉயிர்மெய் சென்றது.

ஜடாயுவென்ற புள்ளிற்கு [பக்ஷிக்கு]ப் ப்ரத்யக்ஷமாய் இராமபிரான் மோக்ஷங்கொடுத்த தலமென்பது, 'புள்ளம்பூதங்குடி' என்பதற்குப் பொருளாகலாம். (எ)

அ. திருப்பேர்நகர்.

போமானையெய்துபொருமானைக்கொம்பொசித்
தாமானைமேய்த்துவந்தவம்மானைத்—தாமச்
செழுந்திருப்பேரானைச் சிறுகாலைச்சிந்தித்
தெழுந்திருப்பேற்குண்டோவிடர்.

(இ - ள்.) போம் மானை எய்து - (தனக்கு முன்னே மாயமாக) ஓடிச் சென்ற (மாரீசனாகிய) பொன்மானை அம்பெய்து கொன்றும், பொரும் ஆனை கொம்பு பறித்து-யுத்தஞ்செய்யவந்த (குவலயாபீடமென்னும்) யானையினது தந்தங்களைப் பிடுங்கியும், ஆம் ஆனை மேய்த்து - மந்தையாகத்திரண்ட பசுக்களை மேய்த்தும், உவந்த - மகிழ்ந்த, அம்மானை - ஸ்வாமியும், தாமம் செழுந் திருப்பேரானை [செழுந்திருப்பேர் தாமத்தானை] - வளப்பமமைந்த திருப்பேரென்னுந் தலத்தி லெழுந்தருளியிருப்பவனுமான திருமாலை, சிறு காலை - சிற்றஞ்சிறுகாலையில், சிந்தித்து - தியானித்துக்கொண்டே, எழுந் திருப்பேற்கு - எழுந்திருக்கும் எனக்கு, இடர் - பிறவித்துன்பம், உண்டோ - உள்ளதாகுமோ? [உண்டாகா தென்றபடி] ; (எ - று.)

நான் தினந்தோறும்வைகறைப்பொழுதில் எம்பெருமானைத் தியானித்துக் கொண்டே துயிலொழிந்து எழுதலால், அந்த எம்பெருமான் என்னைப் பிற வித்துயர் சிறிதும் அணுகாதவாறு பாதுகாப்ப னென்பதாம். போமானை பொருமானை ஆமானை அம்மானை என்று வந்துள்ள சொல்நயம் பாராட்டத் தக்கது. அம்மான் = அந்தமஹான். 'தாமச்செழுந்திருப்பேரானை' என்றவிடத்து, விகுதியும் உருபும் பிரித்துக் கூட்டப்பட்டன. தாமம் - வடசொல்; இட மென்னும் பொருளது: இனி, பிரித்துக்கூட்டாமல், தாமம் - மாலையையணிந்த, செழுந்திருப்பேரானை யென்று கூறுவாரு முளர். சிறுகாலை - விடியற் காலத்துக்கு ஐந்துநாழிகைநேரம் முற்பட்ட காலம்; உஷஃகால மென்றும் ப்ராஹ்மமுகூர்த்த மென்றும் சொல்லப்படும். 'ப்ராஹ்மமுகூர்த்தத்தில் பக வானைச் சிந்தித்துக்கொண்டு துயிலெழவேண்டும்' என்று ஆஸ்திகர்கள் கூறும். சிந்தித்து எழுந்திருப்பேற்கு = சிந்தியாநின்று எழுந்திருப்பேற்கு என்று பொருள். துயிலொழியுங்காலத்தல்லது முன்னே உணர்வு இல்லாமை யால், உணர்வு உண்டாகுங் காலந் தொடங்கியே சிந்திப்பவனாகிய எனக்கு என்றவாறு; "கொழுநற் றொழுதெழுவாள்" என்றவிடத்தில் 'தொழுது' என்பது போல; எச்சத்திரிபு. (அ)

## கூ. திருவாதனூர்.

இடரானவாக்கையிருக்கமுயலார்
மடவார்மயக்கின் மயங்கார்—கடவுளர்க்கு
நாதனூராதரியார் நானெனதென்றா ரமல
னாதனூரெந்தையடியார்.

(இ - ள்.) அமலன் - குற்றமற்றவனும், ஆதனூர் எந்தை - திருவாத னூரென்னுந் தலத்தி லெழுந்தருளியுள்ளவனுமாகிய எம்பெருமானது, அடி யார் - பக்தர்கள்,—இடர் ஆன ஆக்கை இருக்க முயலார் - (பலவகைத்) துன்பங்கட்கும் இடமாகிய தமது உடம்பு நிலைத்திருக்குமாறு முயற்சிசெய்ய மாட்டார்கள்; மடவார் மயக்கில் மயங்கார் இளமகளிரது மோகவலையிற் சிக் கித் தியங்கமாட்டார்கள் ; கடவுளர்க்கு நாதன் ஊர் ஆதரியார் - தேவர்கட் குத்தலைவனான இந்திரனது ஊரையும் [சுவர்க்கலோகவின்பத்தையும்] விரு

ம்பமாட்டார்கள்; நான் எனது என்னார்-அகங்கார மமகாரச்சொற்களையும் சொல்லமாட்டார்கள்; (எ - று.)

திருமாலடியார்கள் - தேகாபிமானங் கொள்ளாமலும் காமமயக்கத்திற்கு உட்படாமலும் நின்று சிற்றின்பவாசையை அறவொழித்து அகங்கார மமகாரங்களின்றி யிருப்ப ரென்பதாம்; இதனால், ஸ்ரீவைஷ்ணவலக்ஷணங் கூறியவாறு. இவர்கள் என்றும் அழியாத பேரின்பத்தினிடத்து ஆசையுள்ளவராய் உண்மையுணர்ந்தவ ராதலால், இவ்வாறாவ ரென்க.

ஆக்கை - யாக்கை என்பதன் மரூஉ: (தோல் முதலிய எழுவகைத் தாதுக்களால்) யாக்கப்பட்டதென்று பொருள்படும்; (யாத்தல் - கட்டுதல்.) இடரான ஆக்கை - "வினையின்வந்தது வினைக்குவிளைவாயது, புனைவனநீங்கிற் புலால்புறத்திடுவது, மூத்துவிளிவுடையது தீப்பிணிபிருக்கை, பற்றின் பற்றிடம் குற்றக்கொள்கலம், புற்றடங்கரவிற் செற்றச்சேக்கை, அவலக் கவலை கையாறழுங்கல், தவலாவுள்ளந் தன்பாலுடையது, மக்கள்யாக்கை" என்பது, மணிமேகலை. மடவார் - இளமகளிர், இனி, மடமைக்குணமுடைய மகளிருமாம்; மடமையாவது - அறிந்தும் அறியாதுபோலிருத்தல். மயக்கு - முதனிலை திரிந்த தொழிற்பெயர். ஆதரியார்-ஆதரம் என்னும் வடமொழிப் பெயரினடியாப் பிறந்த எதிர்மறைமுற்று. நான் என்பது - பகவானுக்கு அடியவனாய் ஸ்வதந்த்ரனல்லாத தன்னை ஸ்வதந்த்ரனென்பது; இது, அகப் பற்றெனவும், அஹங்கார மெனவும்படும். எனது என்பது - எம்பெருமானது உடைமையாய்த் தன்னுடைமையல்லாதவற்றைத் தன்னுடைமையாகச் சொல்வது; இது - புறப்பற்றெனவும், மமகார மெனவும்படும். 'அமலன்' என்ற திருநாமம் - இயல்பிலே யாதொருகுற்றமும் தன்னிடத்திலில்லாதவனென்னும் பொருளோடு, தனக்குச்சரீரமாக அமைகின்ற சராசரங்களின் வினைத்தொடர்பு ஒன்றும் தன்னிடத்திற் பொருந்தப்பெறாதவ னென்ற கருத்தையுங் கொண்டது.

காமதேநுவுக்குப் பிரதியக்ஷமான தல மாதல்பற்றி, இதற்கு 'ஆதனூர்' என்று திருநாம மாயிற்றுப் போலும். (க)

## கம. திருவழுந்தூர்.

அடியாராய்வாழ்மி னறிவிலாப்பேய்காள்
செடியார்வினையனைத்துந்தீரு—முடிவிற்
செழுந்தூரத்தன்னெனினுஞ்செங்கண்மாலெங்க
ளழுந்தூரத்தன்னணியனும்.

(இ - ள்.) அறிவு இலா பேய்காள் - புத்தியில்லாமையாற் பேய்போன் றிருப்பவர்களே! (நீங்கள்),—அடியார் ஆய் வாழ்மின் -(எம்பெருமானுக்குத்) தொண்டர்களாய் நல்வாழ்ச்சியை யடையுங்கள்; (அவ்வாறுசெய்தால்),—செடி ஆர் வினை அனைத்தும் தீரும் - செடிபோலடர்ந்துள்ள (உங்களது) தீவினைகள்யாவும் ஒழியும்; செம் கண் மால் - சிவந்த திருக்கண்களையுடைய திருமாலும், அழுந்தூர் எங்கள் அத்தன் - திருவழுந்தூரென்னுந் திருப்பதியி

லெழுந்தருளிய எங்கள்ஸ்வாமியுமாகிய எம்பெருமான், செழுந் தூரத்தன் எனினும்-(சாதாரணமான நிலையில்) மிக்கதூரத்திலிருப்பவன்போலத் தோன்றினாலும், முடிவில் - அந்திமகாலத்தில், அணியன் ஆம் - சமீபத்தில் வந்து காட்சிதந்து உங்களுக்கு நற்கதியை அளிப்பவனாவன்; (எ - று.)

மெய்யடியராக வாழ்பவர்கட்கு இருவினையும் எம்பெருமானது திருவருளால் ஒழிந்துபோக, அவரது அந்திமதசையில் அவ்வெம்பெருமான் கருடாரூடனாய் வந்து ஸேவைஸாதித்துத் தானே வழித்துணையாகி நற்கதியிற் சேர்ப்பனென்பதாம்; இத்தன்மையை, அர்ச்சிராதி முதலிய நூல்களிற் பரக்கக் காண்க. எம்பெருமான் எங்குமுள்ளனாயினும் அவனை 'செழுந்தூரத்தன்' என்றது-அடியவர் இங்கு இருக்கும் நாளில் அவ்வெம்பெருமான் பிரதியட்சமாகத்தோன்றிக் காட்சிதாராமையாலென்க. 'முடிவில் செழுந்தூரத்தன்' என இயல்பான பாடத்துக்கு - அளவில்லாத மிக்கதூரத்திலிருப்பவனென்று பொருள்: இப்பொருளில், பின்னிரண்டடிக்கு-"பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்" என்பது, கருத்து. நிலைநின்ற புருஷார்த்தமாகிய எம்பெருமானைப் பற்றுதலிற் பக்திசெலுத்துதலை விட்டு நிலையில்லாத புருஷார்த்தங்களான அறம்பொருளின்பங்களை விரும்புகின்றவர்களை 'அறிவிலாப்பேய்காள்' என விளித்தார். செடியார் வினை - புதர்போல அடர்ந்துள்ள வினை; "செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமால்" என்பது. குலசேகராழ்வார்பாசுரம். செங்கண்மால் - அடியவர்களை அன்புடன் நோக்கிநோக்கிக் கண்கள் சிவந்த திருமாலென்க. 'செழுந்தூரத்தனெனினும்,' 'அழுந்தூரத்தனணியனாம்'—னகரமெய்விரித்தல்விகாரம்.

தனது தபோபலத்தால் விமானத்துடன் ஆகாசத்திற் சஞ்சரிக்குந் தன்மையனான உபரிசரவஸுவென்னும்அரசன் தேவர்கட்கும் முனிவர்கட்கும் நேர்ந்த விவாதத்தில் பக்ஷபாதமாகத் தீர்ப்புச்சொன்னமையால் ரிஷிகளாற் சபிக்கப்பட்டுப் பூமியில்விழுகையில் அவனதுதேர் அழுந்தப்பெற்ற இடமாதல்பற்றி, இதற்கு, அழுந்தூர்' என்று பெயர்வந்ததென்பர்; 'தேரழுந்தூர்' எனவும் வழங்கும். (க0)

## கக. திருச்சிறுபுலியூர்.

ஆமருவிமேய்த்தவரங்கரெதிரார்நிற்பார்
தாமருவிவாணனைத்தோள்சாய்த்தநாள்—சேம
முறுபுலியூர்வன்றோலுடையானுடைந்தான்
சிறுபுலியூரெந்தைமேற்சென்று.

(இ-ள்.) தாம்-திருவரங்கநாதர்தாம், (கிருஷ்ணாவதாரத்தில்), வாணனை மருவி-பாணாசுரனைக் கிட்டி, தோள் சாய்த்த - (போரில்அவனது) ஆயிரந் தோள்களையும் அறுத்துத்தள்ளிய, நாள்-காலத்தில்,—சேமம் உறு - (அந்தப் பாணாசுரனுக்குக்) காவலாக அமைந்தவனான, புலி ஊர் வல் தோல் உடையான் - புலியினது மேற்கொண்டுள்ள வலியதோலை [வலியபுலித்தோலை]

ஆடையாகவுடைய சிவபெருமான். சிறுபுலியூர் எந்தைமேல் சென்று - சிறுபுலியூரென்னுந் தலத்தி லெழுந்தருளிய எமதுதந்தையாகிய அவ்வெம்பெருமானை யெதிர்த்துச்சென்று, உடைந்தான் - தோற்றோடினான்; (ஆதலால்), —ஆ மருவி மேய்த்த அரங்கர் எதிர் ஆர் நிற்பார் - (திருவவதாரத்தில்) பசுக்களை விரும்பிமேய்த்த ஸ்ரீரங்கநாதருக்கு முன்பாக எவர்தாம் எதிர்த்து நிற்கவல்லவர்? [எத்தேவராலும் எதிர்த்துநிற்றல் முடியாது]; (எ - று.)

"அவரிவரென்றில்லை யனங்கவேள்தாதைக்கு, எவருமெதிரில்லை கண்டீர், உவரிக் - கடல்நஞ்சமுண்டான் கடனென்றே வாணற்கு, உடனின்று தோற்றானொருங்கு" என்ற பாசுரம், இங்குக் காணத்தக்கது. சிவபெருமான் பரிவாரங்களோடு எதிர்த்தும் எம்பெருமான் முன்னே நிற்கமாட்டாமல் புறங்கொடுத்தோடினனென்றபொருளை, 'ஆமருவிமேய்த்தவரங்கரெதிரார்நிற்பார்?' என்ற வாக்கியங்கொண்டு சமர்த்தித்ததனால், இது - தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம்; இதனை, வடநூலார் காவ்யலிங்காலங்காரமென்பர். இச்செய்யுளினால், எம்பெருமானே தேவாதிதேவனென்று அறுதியிட்டவாறு. 'உடையான் உடைந்தான்' என்ற தொடர்மொழி, சொல்லால் முரணுதலின் முரண்தொடையாம்; "சொல்லினும் பொருளினும் முரணுதல் முரணே" என்றது காண்க.

எம்பெருமான் வியாக்கிரபாத மஹர்ஷிக்குப் பாலசயனமாய்ச் சேவை சாதித்த தலமாதல்பற்றி, இதற்கு 'சிறுபுலியூர்' என்று திருநாமம். (கக)

## கஉ. திருச்சேறை.

சென்றுசென்றுசெல்வஞ்செருக்குவார்வாயிறொறு
நின்றுநின்றுதூங்குமடநெஞ்சமே—யின்றமிழைக்
கூறைக்குஞ்சோற்றுக்குங்கூறாதே பேறாகச்
சேறைக்குநாயகன்பேர்செப்பு.

(இ - ள்.) செல்வம் செருக்குவார் வாயில்தொறும் - செல்வத்தினால் இறுமாப்புக்கொண்டவரது வீட்டுவாசல்கள்தோறும், சென்று சென்று - போய்ப்போய், நின்று நின்று - அங்கங்கே நெடுநேரம் நின்று, தூங்கும் - சோர்வையடைகின்ற, மடம் - அறியாமையையுடைய, நெஞ்சமே - (எனது) மனமே!—(நீ), இன் தமிழை-இனிய தமிழ்ப்பாடலை, கூறைக்கும்-வஸ்திரத்தின்பொருட்டும், சோற்றுக்கும் - சோற்றின்பொருட்டும், கூறாது - (மனுஷ்யரைப்) பாடாமல், பேறு ஆக - முத்திப்பயன் கைகூடும்படி, சேறைக்கு நாயகன் பேர் செப்பு - திருச்சேறையென்னுந் திவ்யதலத்திற்குத் தலைவனான எம்பெருமானது திருநாமத்தைப் பாடுவாயாக; (எ - று.)

நிலையில்செல்வத்தையும் அஹங்காரம் மமகாரம் முதலிய இழிகுணங்களையுமுடையவரான அற்பமனிதரைக் கூறைசோறுகளாகிய நிலையற்ற பயனைப் பெறுதற்பொருட்டுக் கவிபாடித் துதித்து நரகத்தைவிளைத்துக் கொள்ளாமல், எல்லையில்பெரும்பொருளையுடையவனும் அநந்தகல்யாண குணகணநிதியும் புருஷோத்தமனுமான எம்பெருமானைப் பாடித் துதித்து

என்றும்அழிவில்லாததான பரமபதத்தை யடைந்து பேரானந்தத்தைப் பெறுவா யென்று தமதுமனத்திற்கு நல்லறிவு கூறியவாறு. செல்வர்வாயில் தொறும் செல்லுதற்குக் காரணம் மனமே யாதலால், அவ்வாறுசென்று தூங்குந் தமதுசெயலைத் தம்மனத்தின்மேலேற்றிக் கூறினர்; இது - ஒரு வகைஉபசாரவழக்கு. "அகத்தாரேவாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப், புக த்தாம்பெறுஅர் புறங்கடைபற்றி, மிகத்தாம் வருந்தியிருப்பர்" என்றபடி காவல்மிகுதியால் செல்வாதுவீட்டினுள்ளே நுழைவது அருமையாகின்றத னல் 'செல்வஞ்செருக்குவார்வாயில்தொறும் நின்றுநின்று தூங்கும்'என்றார்; இவ்வாறு அவர் தமதுவீட்டுவாயிலில் காவலாளரைவைப்பது செல்வச்செரு க்கைத் தோற்றுவிக்கு மென்க. 'இன்தமிழைக் கூறைக்குஞ் சோற்றுக்குங் கூறுதே'என்றதனல்,தமிழ்ப்பாடலின் அருமைபெருமைகளைச் சிறிதுங்கரு தாது அற்பப்பயனுக்காகப் பாழ்படுத்துவதைப்பற்றி இரங்கியவாறு.

இத்தலத்தில் எம்பெருமான் நாய்ச்சியார் விமானம் தீர்த்தம் நிலம் என்ற ஐந்து ஸாரமுள்ள பொருள்கள் அமைந்திருத்தலால், இத்தலத்திற்கு 'திருச்சேறை' என்று திருநாம மாயிற்று. இது, வடமொழியில் 'பஞ்சஸார க்ஷேத்ரம்' என வழங்கப்படுதலுங் காண்க. இவ்வாறு ஸாரமுள்ள பொருள் களையுடைய இத்தலத்தில் காவேரிநதி தவஞ்செய்து கங்காநதியைக்காட் டிலும் சிறப்புப்பெற்றன ளென்பர். (கஉ)

கங. திருத்தலைச்சங்கநாண்மதியம்.

செப்புங்காலாதவனுந்திங்களும்வானுந்தரையு
மப்புங்காலுங்கனலுமாய்நின்றான்—கைப்பா
லலைச்சங்கமேந்துமணியரங்கத்தம்மான்
றலைச்சங்கநாண்மதியத்தான்.

(இ - ள்.) கைப்பால் - கையினிடத்தில், அலை சங்கம் - அலைகளையு டைய கடலினிடத்துத் தோன்றிய (பாஞ்சஜந்யமென்னுஞ்) சங்கத்தை, ஏந்தும் - தரித்துள்ள, அணி அரங்கத்து அம்மான் - திருவரங்கத்தி லெழுந் தருளியுள்ள ஸ்வாமியும், தலைச்சங்கநாண்மதியத்தான் - திருத்தலைச்சங்க நாண்மதியமென்னுந்திவ்யதலத்திலெழுந்தருளியுள்ளவனுமான எம்பெரு மான்,—செப்பும் கால் - சொல்லுமிடத்தில்,—ஆதவனும் - சூரியனும், திங் களும் - சந்திரனும், வானும் - ஆகாயமும், தரையும் - பூமியும், அப்பும் - ஜலமும், காலும் - காற்றும், கனலும் - அக்கினியும், ஆய்-ஆகி, நின்றான் - (எங்கும் பரவி)நிற்பவ னுவன் ; (எ - று.)

சராசரங்களாகிய யாவும் எம்பெருமானது வடிவமே யென்பது, கருத் து; "உலவுதிரையுங் குலவரையு மூழிமுதலா வெண்டிக்கும், நிலவுஞ் சுடரு மிருளுமாய் நின்றான்" என்பது முதலிய பெரியார்பாசுரங்களைக் காண்க. ஆதபன் - எங்கும் நன்றாகத் தபிப்பவன்; சூரியன்; வடசொல். செய்யு ளாதலின், பஞ்சபூதங்களை முறைபிறழ வைத்தார். எம்பெருமான் திருக் கையில் தரித்துள்ள பாஞ்சஜந்யமென்னுஞ் சங்கமானது கடலிலேதோன்

றிய பஞ்சஜநனென்னும் அசுரனது உடலிற் பிறந்த தென்பதை, "கடலுட் பிறந்து கருதாது பஞ்சசன, னுடலில் வளர்ந்துபோ யூழியான்கைத்தலத், திடரிற் குடியேறித் தீயவசுரர், நடலைப்பட முழங்குந் தோற்றத்தாய் நற்சங்கே" என்பதனாலும் அறிக. இனி, அலைச்சங்கம் என்பதற்கு - (பகைவரைத் தனதுபேரொலியால்) அலைத்தலை [வருத்துதலை] யுடைய சங்கமென்றும் பொருள்கொள்ளலாம்.

சிறந்தசங்கத்தையேந்திய நாண்மதியப்பெருமானை யுடைய தலமாதல்பற்றி, இத்தலத்திற்கு 'தலைச்சங்கநாண்மதியம்' என்று திருப்பெய ரென்பர். (கங)

கச. திருக்குடந்தை

தானேபடைத்துலகைத்தானேயளித்துநீ
தானேயழிக்குந்தளர்ச்சியோ—வானிற்
றிருமகுடந்தைக்கச்சிறுகுறளாய் நீண்ட
பெருமகுடந்தைக்கிடந்தாய் பேசு.

(இ - ள்.) சிறு குறள் ஆய் (முதலில்) சிறிய வாமனனுந்தாராமாகி, (பின்பு), வானில் - ஆகாயமுகட்டில், திரு மகுடம் தைக்க - அழகிய கிரீடம் முட்டும்படி, நீண்ட - (திரிவிக்கிரமனாகி) நீண்டுவளர்ந்தருளிய, பெரும - பெருமானே! உலகை - உலகங்களை, நீ தானே - நீயே, படைத்து - (பிரமனாகிச்) சிருஷ்டித்து, (நீ) தானே—, அளித்து - (தானானநிலையில் நின்று) பாதுகாத்து, (நீ) தானே—, அழிக்கும் - (சிவனாகி) அழிப்பதனாலாகிய, தளர்ச்சியோ - இளைப்பினாலோ, குடந்தை கிடந்தாய் - திருக்குடந்தையென்னுந் தலத்திற் பள்ளிகொண்டிருக்கின்றாய்? பேசு - (இதன்காரணத்தைக்) கூறியருள்வாயாக; (எ - று.)

எல்லாவுலகங்களையும் நீ ஒருவனாகவே படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களையுஞ் செய்ததனால் நேர்ந்த தளர்ச்சி நீங்குவதற்காகவோ இவ்வாறு இந்தத்திருக்குடந்தையிற் பள்ளிகொண்டருள்வா யென்று வினவியவாறு. வரம்பிலாற்றலுடையவனான எம்பெருமானுக்கு எந்தநிலையிலும் ஒருவகை வருத்தமும் தோன்றாதாயினும் இவ்வாறு கூறியது - இவ்வாசிரியர்க்கு அப்பெருமான்பக்கலுள்ள பொங்கும்பரிவினாலென்க. "நடந்த கால்கள் நொந்தவோ நடுங்க ஞால மேனமாய், இடந்த மெய் குலுங்கவோ இலங்குமால்வரைச்சுரம், கடந்தகால்பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள், கிடந்தவா றெழுந்திருந்து பேசு வாழிகேசனே" என்ற திருமழிசையாழ்வார் பாசுரத்தை அடியொற்றியது, இச்செய்யுள். எம்பெருமான் பிரமருத்திரரைச் சிருஷ்டித்து, அவர்கட்கு அந்தராத்மாவாய் நின்று அவர்களைக்கொண்டு ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களை நடத்துதலால், அவனே முத்தொழில்களையும் நடத்துபவனெனக் கூறினர்; இனி, ஸத்வாரகமான [ஒருவரை முன்னிட்டுச்செய்கின்ற] ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைக் குறிப்பதெனக் கொள்ளாமல், அத்வாரகமாகச் செய்கின்ற ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையே கூறிய

தாகக் கொள்ளுதலும் பொருந்தும். 'நீ'என்பதை 'படைத்து' 'அழிக்கும்' என்பவற்றோடும் கூட்டுக. (கச)

## கரு. திருக்கண்டியூர்.

பேசவரிற்றென்னரங்கன்பேரெல்லாமபேசுகவாய்
கேசவனைக்காண்கவிழி கேட்கசெவி—யீசனு
ருண்டியூர்தோறுமுழன்றிரவாமற்றவிர்த்தான்
கண்டியூர்கூப்புகவென்கை.

(இ - ள்.) வாய் - (எனது) வாயானது,—பேச வரின் - பேசத்தொடங்கினால், தென் அரங்கன் பேர் எல்லாம் பேசுக - அழகிய ஸ்ரீரங்கநாதனது திருநாமங்களை யெல்லாம் பேசக்கடவது; விழி - (எனது) கண்கள்,—கேசவனை காண்க - கேசவனென்னுந் திருநாமத்தையுடைய எம்பெருமானைத் தரிசிக்கக்கடவன; செவி - (எனது) காதுகள்,—கேட்க - (அவனது புகழ்களையே)கேட்கக்கடவன; என் கை - எனதுகைகள்,—ஈசனை - சிவபெருமானை, ஊர்தோறும் உழன்று உண்டி இரவாமல் - ஊர்கள்தோறும் அலைந்துசென்று உணவை யாசிக்க வொட்டாமல், தவிர்த்தான் - (அவனது சாபத்தை) நீக்கியருளியவனுடைய, கண்டியூர் - திருக்கண்டியூரென்னுந் தலத்தை நோக்கி, கூப்புக - குவித்து அஞ்சலிசெய்யக்கடவன; (எ - று.)

எம்பெருமானே வாய் முதலிய உறுப்புக்களை யளித்து மாநுடர்களைப் பிறப்பித்ததன் காரணம் எல்லாவகையாலும் இவர்கள் தன்னையடைந்து வழிபட்டு நற்கதிபெறுதற்பொருட்டே யாதலால், அப்பெருமானது திருநாமங்களைச் சொல்லித் துதிக்குமாறு வாயையும், அவனது திருவுருவத்தைத் தரிசிக்குமாறு கண்களையும், அவனது வைபவங்களைக் கேட்குமாறு செவிகளையும், அவனது திவ்வியதேசத்தைக் கூப்பித் தொழுமாறு கைகளையும் வேண்டுகின்றன ரென்க; மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் பஞ்சேந்திரியங்களுள், மூக்கைநோக்கி அவ்வெம்பெருமானுக்குச் சாத்திய பத்திர புஷ்பாதிகளின் திவ்யகந்தத்தை மோர்ந்து நுகருமாறு வேண்டியதாக உபலக்ஷணத்தாற் கொள்க. "கேசவனையே செவிகள்கேட்க திருவரங்கத் தீசனையே சென்னியிறைஞ்சிடுக—நேசமுடன், கண்ணனையேகாண்க விருகண்ணிணர்கொள்காயாம்பூ, வண்ணனையே வாழ்த்துக வென்வாய்" என்றார் திருவரங்கக்கலம்பகத்திலும். "வாழ்த்துகவாய் காண்ககண் கேட்கசெவி மகுடந், தாழ்த்துவணங்குமின்கள் தண்மலரால் - சூழ்த்ததுழாய், மன்னுநீண் முடியென் தொல்லைமால்தன்னை, வழாவண்கைகூப்பி மதித்து" என்ற திருமழிசைப்பிரான் பாடலை ஒருவாறு அடியொற்றியது இச்செய்யுள்.தென்னரங்கன் - தெற்கேயுள்ள திருவரங்கத்திலுள்ளவனெனினுமாம். கேசவன் - பிரமனையும் சிவனையும் தன்னங்கத்திற்கொண்டவ னென்றும், அழகியமயிர் முடியையுடையவ னென்றும்,கேசியென்னும் அசுரனைக் கொன்றவ னென்றும் பொருள்படும் வடசொல். இத்தலத்து எம்பெருமான் திருநாமம் 'அரன் சாபந்தீர்த்தபெருமான்' என்ப தாதலால், இங்கு, அப்பெருமானை 'ஈசனூர்

உண்டியூர்தோறு முழன்றிரவாமல் தவிர்த்தான்' என்றார். "பிண்டியார்மண் டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணு, முண்டியான் சாபந்தீர்த்த ஒருவ னூர் உலகமேத்துங்,கண்டியூர்" என்ற திருமங்கையாழ்வார்வாக்கு இங்குக் கருதத்தக்கது. 'என்' என்பதை, 'வாய்' முதலியவற்றோடுங் கூட்டுக.

சிவபெருமானது சாபத்தைக் கண்டனஞ்செய்ததுபோலச் சேவைசாதி த்த இடமாதலால், இத்தலத்திற்கு 'திருக்கண்டியூர்' என்று திருநாம மாயி ற்று; இது - வடமொழியில் 'கண்டனபுரம்' எனப்படும். (கரு)

கசு. திருவிண்ணகர்.

கையுமுரையுங்கருத்துமுனக்கேயடிமை
செய்யும்படிநீதிருத்தினாய்—ஐயா
திருவிண்ணகராளா சிந்தையிலுமெண்ணேன்
பெருவிண்ணகராளும்பேறு.

(இ - ள்.) ஐயா - தலைவனே! திருவிண்ணகர் ஆளா - திருவிண்ணகர மென்னுந் திருப்பதிக்குத் தலைவனே!—கையும் - (எனது) கைகளும், உரை யும் - வாக்கும், கருத்தும் - எண்ணமும், (ஆகிய திரிகரணங்களையும்), உனக் கே அடிமை செய்யும் படி—, நீ திருத்தினாய் - நீ திருத்தமான வழியிற் போ கச்செய்தாய்; (ஆதலால், இனிமேல்), பெரு விண் நகர் ஆளும் பேறு - பெரு மைபெற்ற தேவலோகத்தை அரசாளுஞ்செல்வத்தை [தேவேந்திரபதவியை யும்], சிந்தையிலும் எண்ணேன் - (ஒருபொருட்டாக) மனத்திலும் நினைக்க மாட்டேன், (யான்); (எ - று.)

வேறுவிஷயங்களிற் செல்லாது உன்விஷயத்தில் உபயோகிக்குமாறு எனது திரிகரணங்களையும் நீ நிர்ஹேதுககடாக்ஷத்தாற்செய்தா யாதலால், இனி மீளாவுலகமாய்ப் பேரின்பத்திற்குஉரிய இடமான பரமபதத்திற்குச் செல்ல இணங்குவேனேயன்றிச் சிலகாலம் சிற்றின்பங்களை யநுபவித்தற் கேயுரிய சுவர்க்கலோகத்து இந்திரபதவியைக் கொடுத்தாலும் அதனையும் சிறிதும்பொருள்செய்யேன் யா னென்பதாம். "ஆனாதசெல்வத்தரம்பையர்க டற்சூழ, வானாளுஞ்செல்வமு மண்ணரசும் யான்வேண்டேன்" என்று குல சேகராழ்வார் அருளிச்செய்தமை காண்க. இவ்வாறு நினைப்பது, திருமா லடியார்களுக்கு இயல்பாகு மென்க. 'அரங்கன் தமர்கள் பொருந்தார் அணி தான வமராவதியும் தருநிழலும், காரணி தான வயிராவதமுந் தருகினுமே" என்றதும், பிரமன் கட்டளையால் இந்திரன் சரபங்கமஹர்ஷியைச் சத்திய லோகத்துக்கு அழைத்தபோது மகாவிஷ்ணுபக்தரான அம்முனிவன் அம் மேலுலகையுமுட்படஇகழ்ந்து "அற்பங்கருதேன்" என்றும், "மறுகாநெறி யெய்துவன்" என்றும் உரைத்ததும் உணரத்தக்கன. முதலில் நினைந்து பிறகு மொழிந்து பின்பே ஒருதொழில் செய்யப்படுதலால், அம்முறைபற்றி, 'மனோ வாக் காயம்' என்று வழங்கப்படுகின்ற திரிகரணங்களை இங்கே மாற் றிக்கூறினர்.

விண்ணகரென்பது - தேவலோகம்போன்றதென்ற காரணம்பற்றி வந்த பெயரென்னலாம்; இதுவே, உப்பிலியப்பன்ஸந்நிதி யெனப்படுவது. இத்தலத்து எம்பெருமான் திருநாமம்-உப்பிலியப்பன்; (ஒப்பிலியப்பனென்றும் வழங்குவர்.) இத்தலத்து எம்பெருமான் திருவேங்கட முடையான் போன்ற திருவுருவ முள்ளவராய்,அன்பர்களின் அபிமதத்தைப் பூர்த்திசெய்கின்றன ரென்றும், மிருகண்டுமுனிவர் பத்தினியினது விருப்பத்தின்படி உப்பில்லாத பிரசாதங்களையே அமுதுசெய்கின்றன ரென்றும் அறிக. (கசு)

## கஎ. திருக்கண்ணபுரம்.

பேறுதரினும்பிறப்பிறப்புநோய்மூப்பு
வேறுதரினும்விடேன்கண்டாய்—யேறுநீர்
வண்ணபுரத்தா யென்மனம்புகுந்தாய் வைகுந்தா
கண்ணபுரத்தா யுன்கழல்.

(இ - ள்.) ஏறு நீர் வண்ணம் புரத்தாய் - (அலைகள் கரைமேற்) புரளப்பெற்ற நீரையுடைய கடல்போன்ற கருநிறத்தைக்கொண்ட திருமேனியையுடையவனே! என் மனம் புகுந்தாய் - எனது மனத்திற் குடிபுகுந்துள்ளவனே! வைகுந்தா - ஸ்ரீவைகுண்டத்தில் எப்போதும் வாழ்பவனே! கண்ணபுரத்தாய் - திருக்கண்ணபுரமென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியிருப்பவனே!—(நீ அடியேனுக்கு),பேறு தரினும்-பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷத்தைக் கொடுத்தாலும், வேறு - அதற்குமாறாக, பிறப்பு இறப்பு நோய் மூப்பு தரினும் - ஜநநத்தையும் மரணத்தையும் வியாதியையும் கிழத்தனத்தையும் தந்தாலும் [இந்த லீலாவிபூதியிலேயே அலையவைத்தாலும்], உன் கழல் - உனது திருவடிகளை, விடேன் - (உபாயமாகக் கொண்டிருப்பேனேயன்றி ஒருபோதும்) விட்டு நீங்கேன்; (எ - று.)—கண்டாய் - முன்னிலையசை; தேற்றமுமாம்.

தலைவனான நீ உனது நிர்ஹேதுககிருபையாலே அடியேனுக்கு நிரதிசயாநந்தத்தையுடைய மோக்ஷத்தை யளித்தாலும் சரி; அன்றி, என்னைப் பரிசோதிப்பதற்காகவாதல் உனது நிரங்குஶஸ்வாதந்த்ரியத்தாலேயாதல் இந்த ஸம்ஸாரத்திலேயே அலையவைத்தாலும் சரி; அவற்றால் அடியேனுக்கு ஒருவகை லாபலோபங்களு மில்லை; எல்லாத்தசையிலும் உனது திருவடிகளையே சரணமாகக்கொண்டு உன்னுடைய விருப்பத்தினால் அடியேனுக்கு நேர்கின்ற அவ்வந்நிலையிலேயே பரிபூர்ணதிருப்தியுட னிருப்பே னென்று தமது உறுதியான உபாயாத்யவஸாயத்தை வெளியிடுகின்றனரென்க. "களைவாய் துன்பங் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்ற திருவாய்மொழியும், "இன்பந்தரு பெருவீடு வந்தெய்திலென் எண்ணிறந்த, துன்பந்தருநிரயம்பலசூழிலென்?*** இராமாநுசனென்னை யாண்டனனே" என்ற இராமாநுசநூற்றந்தாதியும் இங்குக் காணத்தக்கன. "நானந்த வைகுந்த நாடெய்தி வாழிலென் ஞாலத்தன்றி, ஈனந்தவாத நிரயத்து வீழிலென் யானடைந்தேன், *** அரங்கனையே" என்றார் திருவரங்கக்கலம்பகத்தும்.

பேறு - புருஷனால் அர்த்திக்கப்பெறப்படும் பரமபுருஷார்த்தம்; மோக்ஷைஸ்வர்யம். உம்மைகள் - விகற்பப்பொருளன. 'கண்ணபுரத்தாய்'என வலிமிக்குவராற்பாலது, எதுகைநயம்நோக்கி இயல்பாயிற்று. புரமென்ற வடசொல் - சரீரம் பட்டணம் என்னும் இருபொருளையுங் காட்டவல்லது. ஏறு நீர் - வினைத்தொகையன்மொழி. கழல் - வீரர்கள் தமது வீரத்துக்கு அறிகுறியாகப் பாதங்களில் அணியும் ஓர்வடம்; "வீரத்தின்வீக்கியகழலே யாடவர்கான்மிசை யணிவடம்"என்றது காண்க: இச்சொல் - இங்கு, தானியாகுபெயராய், திருவடியை உணர்த்திற்று.

திருக்கண்ணபுரமென்பது, பஞ்சகிருஷ்ணக்ஷேத்ரங்களுள் ஒன்று; (மற்றவை - திருக்கண்ணங்குடி, திருக்கண்ணமங்கை, திருக்கண்ணன்கவித்தலம், திருக்கோவலூர் என்பன என்பர்.) இத்தலத்தின் மறுபெயர், கண்வபுரம். இத்தலத்தில் விமானம் - உத்பலாவதகம்: அதன்பொருள் வருமாறு:— பலம் - மாமிசம், அது சோஷிக்கப்பெற்றவர் - உத்பலர்: அவராவார் - தேகத்தை உபேக்ஷிக்கின்ற முமுக்ஷுக்கள்: அவர்களைக் காக்கின்ற கடவுள் எழுந்தருளியிருக்கும் விமானமாதலால், இதற்கு 'உத்பலாவதகம்' என்று திருநாமம். இதுபற்றியே, "மரணமானால் வைகுந்தங்கொடுக்கும்பிரான்"என்று நம்மாழ்வார் மங்களாசாசனஞ்செய்ததும். இவ்விமானம் பிரதக்ஷிணஞ் செய்யும்போது கட்புலனாகாதவாறு கட்டப்பெற்றுள்ள தென்பர். (கஎ)

கஅ. திருவாலி.

கழன்றுபோம்வாயுவினைக்கட்டாமற்றீர்த்த
முழன்றுபோயாடாமலுய்ந்தே—னழன்று
பொருவாலிகாலன்பரகாலன்போற்றுந்
திருவாலிமாயனையேசேர்ந்து.

(இ - ள்.) அழன்று - கோபித்து, பொரு - போர்செய்த, வாலி - வாலிக்கு, காலன் - யமனாய்நின்றவனும், பரகாலன் போற்றும் திருவாலி மாயனை - திருமங்கையாழ்வாரால் பாடித் துதிக்கப்பெற்ற திருவாலியென்னுந் திருநகரியி லெழுந்தருளி யிருப்பவனுமான ஆச்சரியகுண சேஷ்டிதங்களையுடைய எம்பெருமானை, சேர்ந்து-உபாயமாகப்பற்றியதனால்,— கழன்றுபோம் வாயு வினை கட்டாமல் -(உடம்பிலிருந்து) வெளிச்செல்லுகின்ற மூச்சுக்காற்றைப் (பிராணாயாமத்தால்) அடக்காமலும், உழன்றுபோய் தீர்த்தம் ஆடாமல் - வருந்திப் பலவிடங்களிலுஞ்சென்று புண்ணியதீர்த்தங்களில் மூழ்காமலும், உய்ந்தேன் - நற்கதிபெற்றேன், (யான்) ; (எ - று.)

எம்பெருமானுக்கே யடியவனாயிருக்கின்ற ஆத்மாவின் ஸ்வரூபத்திற்கு விருத்தமான தவஞ்செய்தல் முதலிய உபாயாந்தரத்தை மேற்கொண்டு வருத்தப்படாமல், ஆத்மஸ்வரூபத்திற்கு அநுகூலமாய் ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றுதலாகிற பிரபத்தியுபாயத்தை மேற்கொண்டு எளிதில் நற்கதிபெற்று ஈடேறினே னென்பதாம். காலன் - (பிராணிகளின் ஆயுட்) காலத்தை முடிவுசெய்பவ னென்ற பொருள்படுங் காரணக்குறி. திருவாலியென்

பது திருமங்கையாழ்வாரின் திருவவதாரஸ்தல மாதலால், அத்தலத்து எம்பெருமானை 'பரகாலன்போற்றுந் திருவாலிமாயன்' என்றார். திருமங்கையாழ்வார் தாம் பிறந்த கள்ளக்குடிக்கு ஏற்ப இளமையிலேயே ஆயுதவித்தையில் தேர்ச்சிபெற்றுச் சோழராஜனையடுத்துச் சேனாபதியுத்தியோகத்தி லமர்ந்து கொற்றவனுக்குக் கொடியவரோடு கடும்போர் நேருங் காலங்களிற் படைகளோடு முன்சென்று பராக்கிரமத்தாற் பகைவென்று வந்தவ ராதலின், இவர்க்கு 'பரகாலன்' என்று பெயர்.

எம்பெருமானைத் திருமகள் ஆலிங்கனஞ்செய்துகொண்ட தலமாதல் பற்றி, இதற்கு, 'திருவாலி' என்று பெயர். (கஅ)

கக. திருநாகை.

சேர்ந்துனக்குக்குற்றேவல்செய்தில னென்சிந்தையினீ
யார்ந்ததற்கோர்கைம்மாறறிகிலேன்—பூந்துவரை
மன்னா கையாழிவலவா வலம்புரியாய்
தென்னாகையா யருளிச்செய்.

(இ - ள்.) பூ துவரை மன்னா - அழகிய துவாரகாபுரிக்கு அரசனே! கை ஆழி வலவா [வலம் கை ஆழியாய்] - வலத்திருக்கையில் (சுதர்சநமென்னுஞ்) சக்கரத்தை யுடையவனே! வலம் புரியாய் - (இடத்திருக்கையில் பாஞ்சஜந்யமென்னும்) வலம்புரிச்சங்கத்தை யுடையவனே! தென் நாகையாய் - அழகிய திருநாகையென்னுந்தலத்தி லெழுந்தருளி யிருப்பவனே!—சேர்ந்து உனக்கு குறு ஏவல் செய்திலன் - (அடியேன் இதுவரையில் உன்னைச்) சரணமாக அடைந்து உனக்குச் சிறிய கைங்கரியத்தையும் செய்தேனில்லை; (அவ்வாறு இருக்கவும்), என் சிந்தையில் - அடியேனது மனத்தில், நீ ஆர்ந்ததற்கு-(காரணமின்றியெழுந்த பெருங்கருணையோடு) நீ நன்றாக எழுந்தருளியிருப்பதற்கு, ஓர் கைம்மாறு அறிகிலேன் - ஒருபிரதியுபகாரத்தையும் அறியேன்; அருளிச்செய் - (ஏதேனும் இருப்பின் அதனை இன்னதென்று நீ அடியேனுக்குக்) கூறியருள்வாயாக; (எ - று.)

நானே உன்னைச் சரணமடைந்து ஏதேனும் ஒரு திருத்தொண்டைச் செய்தேனாயின், அதனையே பற்றாசு ஆகக் கொண்டு நீ அடியேன்மனத்தி லெழுந்தருளலாம்; அவ்வாறு ஒன்றுமில்லா திருக்கையிலும் நீ உனது நிர்ஹேதுக கிருபையாலேயே அடியேனது மனத்தில் வந்து குடிபுகுந்தாய்; நீ இவ்வாறு எழுந்தருளியது செய்யாமற் செய்த பேருதவி யாதலால், அதற்குத் தக்க கைம்மாறு இல்லாவிடினும் எல்லாவிதத்திலும் பரிபூர்ணனான உனக்குப் போலியாயிருப்பதொரு பிரதியுபகாரமுங் காண்கின்றிலே னென்பதாம். "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய் உனக்கோர் கைம்மாறு நானொன் றிலேன் எனதாவியு முனதே" என்ற நம்மாழ்வார் பாசுரத்தின் கருத்துக்கொண்டது, இது. குற்றேவல் - கைங்கர்யம். துவரை-த்வாரகா என்ற வடமொழியின் சிதைவு: இது - முத்திதரும் நகர மேழனுள் ஒன்று; (மற்றவை - அயோத்யை மதுரை மாயை காசி காஞ்சி அவந்தி என்பன.)

கையாழிவலவா - விகுதி பிரித்துக்கூட்டப்பட்டது. இனி, இத்தொடர்க்கு - விகுதிபிரித்துக்கூட்டாமல், கையிலேந்தியுள்ள ஆழியைப் பிரயோகிப்பதில் வல்லவனே! என்றும் உரைக்கலாம். ஆழி—பகையையழிப்பதென்பது பற்றி வந்த பெயர். வலம்புரி - வலப்பக்கமான உட்சுழியை யுடையது; காரணக்குறி. தென்னாகை - தெற்கின்கணுள்ள நாகையுமாம்.

நாகை - நாகபட்டணமென்பதன் மரூஉ. நாகராஜனுக்குப் பிரதியக்ஷமான தலமாதலால், இதற்கு 'திருநாகை' என்று பெயர். (௧௯)

## ௨௰. திருநறையூர்.

செய்யசடையோன்றிசைமுகத்தோன்வானவர்கோ
னையமறுத்தின்னமறியாரே—துய்ய
மருநறையூர்வண்டுழாய்மாயோன்செவ்வாயோன்
றிருநறையூர்நின்றான்செயல்.

(இ - ள்.) துய்ய - பரிசுத்தமாகிய, மரு நறை ஊர் வண் துழாய் - நறுமணமும் தேனும் பொருந்திய செழிப்பான திருத்துழாயை யணிந்த, மாயோன் - ஆச்சரியமான குணசேஷ்டிதங்களையுடையவனும், செவ் வாயோன் - (செந்தாமரைமலர்போலச்) சிவந்த திருவதரத்தை யுடையவனும், திருநறையூர் நின்றான் - திருநறையூரென்னுந் திவ்வியதலத்தில் நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருப்பவனு மான எம்பெருமானது, செயல் - செய்கையைப் பற்றி,—செய்ய சடையோன் - செந்நிறமான (கபர்த்தமென்னும்) சடையை யுடைய சிவபிரானும், திசைமுகத்தோன் - நான்குதிக்கையும் நோக்கிய நான்குமுகங்களையுடைய பிரமனும், வானவர் கோன் - தேவர்கட்கெல்லாந் தலைவனான இந்திரனும், ஐயம் அறுத்து - சந்தேகத்தையொழித்து [நிஸ்ஸந்தேஹமாய்], இன்னம் அறியார் - இன்னமும் அறியமாட்டார்கள்; (எ - று.)

எம்பெருமானது வலப்பக்கத்தில் வாழ்கின்ற சிவபெருமானும், அவனது திருவுந்திக்கமலத்திலேயே யிருக்கின்ற பிரமனும், தேவர்கட்கெல்லாந் தலைவனென்று பேரிட்டுக்கொண்டிருக்கின்ற இந்திரனுமே எம்பெருமானது செயலை உள்ளபடியறியமாட்டார்களென்பதாய்; எனவே, நம்போலியரால் அவ்வெம்பெருமானது செயலை அறியமுடியுமோ? என்பது கருத்து. "எம்பெம்மானை ஆரே யறிவாரது நிற்க - நேரே, கடிக்கமலத்துள்ளிருந்துங் காண்கிலான் கண்ண, னடிக்கமலந்தன்னை யயன்," "ஆரேயறிவா ரனைத்துலகு முண்டுமிழ்ந்த, பேராழியான்றன் பெருமையைக் - கார்செறிந்த, கண்டத்தானெண்கண்ணான் காணான்" என்பன காணத்தக்கன.

துய்ய=தூய. துழாய் - துளஸீ யென்ற வடமொழியின் சிதைவென்பர். வாய்சிவந்திருத்தல், உத்தமலக்ஷணம்.

நறுமணம்மிக்கதலமென்பதுபற்றி, இதற்கு 'திருநறையூர்' என்று திருநாமம்; வடமொழியில், 'ஸுகந்தகிரி' என்று எம்பெருமானெழுந்தருளியிருக்குமிடத்தை வழங்குவதுங் காண்க. இங்கு, கந்யாகல்கமாக நாச்சியாருக்

குப் பிராதானியத்தை எம்பெருமான் அளித்ததனால், இத்தலத்திற்கு 'காச்சி யார்கோவில்' என்று ஒருபெயர் வழங்குகின்றது. இத்தலத்து எம்பெருமான், மேதாவிமுனிவரின்கன்னிகையைப் பலியென்னும் அசுரன் கவர்ந்துசெல்ல அவனைச் சபித்து அக்கன்னிகையை அம்முனிவர்க்கு அருள்செய்தனனென்றும், திருமங்கையாழ்வார்க்கு எம்பெருமான் திருவிலச்சினை பிரசாதித்தனனென்றும் அறிக. (உ0)

உக. திருநந்திபுரவிண்ணகரம்.

செயற்கரியசெய்வோமைச்செய்யாமனெஞ்சே
மயக்குவாரைவர்வலியா—னயக்கலவி
சிந்திபுரவிண்ணகரமென்பர் திருச்செங்கண்மா
னந்திபுரவிண்ணகரநாடு.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—செயற்கு அரிய செய்வோமை - செய்வதற்குஅருமையான தொழில்களையும் செய்யவல்ல நம்மை, செய்யாமல் - செய்யவொட்டாமல், வலியால் மயக்குவார் - (தமது) வலிமையால் மயக்கச் செய்பவர்களாகிய, ஐவர் - பஞ்சேந்திரியங்கள், (உன்னைநோக்கி), 'நயம் கலவி சிந்தி - இனிமையைத் தருகின்ற சிற்றின்பத்தையே எப்போதும் நினைப்பாய்; விண் நகரம் புர - ஸ்வர்க்கலோகத்தை யரசாட்சிசெய்வாய்', என்பர் - என்று துர்ப்போதனை செய்வார்கள்; (நீ அந்தப்பஞ்சேந்திரியங்கட்கு வசப்பட்டு அவற்றைக்கொள்ளாமல்), திரு செம் கண் மால் - (அழகிய செந்தாமரைமலர்போன்ற) சிவந்த திருக்கண்களையுடைய திருமாலினது, நந்திபுர விண்ணகரம் - திருநந்திபுரவிண்ணகரமென்னுந் தலத்தை, நாடு - (எப்போதும்) விரும்புவாயாக; (எ - று.)

தவம் முதலிய அரும்பெருந்தொழிலைச் செய்து எம்பெருமானையடைய வேண்டுமென்றாலும் அவற்றைச்செய்து அவ்வெம்பெருமானையடையும் வல்லமைபெற்றுள்ள நம்மைப் பஞ்சேந்திரியங்கள் நற்றொழிலொன்றையுஞ் செய்யவொட்டாமல் மயக்கிச் சிற்றின்பத்திலேயே வலியஇழுக்கின்றன; மனமே! நீ அவற்றின்வழியிற் சேராமல், எம்பெருமானெழுந்தருளியிருக்கின்ற நந்திபுரவிண்ணகரத்தை நாடுதலாகிற இச்சிறுதொழிலைக் கைக்கொண்டாலும் பேரின்பங் கைகூடுமென மனத்திற்கு உபதேசஞ்செய்கின்றன ரென்க. 'செயற்கரியசெய்வோம்' என்று மேம்பாடுதோன்றக் கூறியது, மனத்தை நல்வழிப்படுத்துதற்பொருட்டாம்; "நெஞ்சமே நல்லை நல்லை" என்றவிடத்துப் போல. "உய்வர்தொழும்புசெய்தென் றிருப்போமை யுய்யாமலைவர், பெய்வர்தொழுவினைக்கேயென்பரால்" என்றது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது. செயற்கு எளியவாவன - வேண்டியவாறே மனத்தைப் பஞ்சேந்திரியங்களின்வழிகளால் ஐம்புலன்களிற் செலுத்துதலும், கண்டபொருளை விரும்புதலும், அவை கிடையாதபோது கோபித்தலும் முதலாயின; செயற்குஅரியவாவன - இயமம் நியமம் முதலான எண்வகை யோகவுறுப்புக்கள். இனி, செயற்கரிய என்பதற்கு-எம்பெருமானது முகமலர்த்திக்காகச் செய்யுங் குற்

தேவர்களென்றலும் பொருந்தும். 'நயக்கல்வி' என்ற பாடத்துக்கு - இனிமையைத்தருகின்ற படிப்பு என்று பொருள்; அவையாவன - வாத்ஸ்யாயநம் கொக்கோகம் முதலிய காமசாஸ்திரங்கள். எம்பெருமானைத் தியானஞ் செய்து உய்யாமல், நயக்கல்வியைவிரும்பிக்கற்றும் ஸ்வர்க்கத்தை அரசாளும் பயனில்லை யென்பது, கருத்து. அடியார்களை அன்புடன்நோக்கிநோக்கி எம்பெருமானது திருக்கண்கள் சிவந்தனபோலும்.

ஐம்பொறிகளை 'ஐவர்' என உயர்திணையாகக்கூறியது இழிப்புப்பற்றிய திணைவழுவமைதி; தொல்காப்பியவுரையில் நச்சினார்க்கினியர் "தாம்வந்தார் தொண்டனார்' என்பது, உயர்சொல் குறிப்புநிலையின் இழிபு விளக்கிற்று' என்றது, இங்கு உணரத்தக்கது. ஐவர் - தொகைக்குறிப்பு.

நந்திதேவர்க்குப் பிரத்யக்ஷமான சிறந்த நகர மாதல்பற்றி, இத்தலத்திற்கு, 'திருநந்திபுரவிண்ணகரம்' என்று திருநாமம்: இது, 'நாதன்கோவில்' என வழங்கும். (உக)

உஉ. திருவிந்தளூர்.

நாடுதும்வா நெஞ்சமே நாராயணன்பதிகள்
கூடுதும்வாமெய்யடியார்கூட்டங்கள்—சூடுதும்வா
வீதியிந்தளத்தகிலின்வீசுபுகைவாசமெழு
மாதியிந்தளூரானடி.

(இ - ள்.) நெஞ்சமே - (எனது) மனமே!—நாராயணன் பதிகள் - திருமாலினது திருப்பதிகளை, நாடுதும் - சென்று தரிசிப்போம்: வா—; மெய் அடியார் கூட்டங்கள் - உண்மையான பக்தர்களது கூட்டங்களை, கூடுதும் - போய்ச் சேருவோம்: வா—; இந்தளத்து - தூபக்கால்களிற் போகடப்பட்ட, அகிலின் - அகிற்கட்டைகளினின்று, வீசு - வீசுகின்ற, புகை - புகையினது, வாசம் - நறுமணமானது, வீதி - தெருக்களில், எழும் - கமழ்ந்தெழப்பெற்ற, ஆதி இந்தளூரான் - முதன்மையாகிய திருவிந்தளூரென்னுந் தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானது, அடி - திருவடித் தாமரைகளை, சூடுதும் - (தலைமேற்) சூடிக்கொள்ளுவோம்: வா—; (எ-று.)

திருமாலின் திருப்பதிகளிற் சென்று அடியார்கூட்டங்களுடன் கூடி எம்பெருமானது திருவடித்தாமரைகளை முடிக்கு அணியாகச் சூடுமாறு இணங்கிவரும்படி தமது நெஞ்சை யழைக்கின்றன ரென்க. நாராயணன் என்ற திருநாமம் - நித்யவஸ்துக்களையெல்லாம் தனக்குஇருப்பிடமாகவுடையவனென்றும், நித்யவஸ்துக்களுக்கு ஆதாரமாயிருப்பவனென்றும், பிரளயப் பெருங்கடலை வாழுமிடமாகக்கொண்டவனென்றும் இவ்வாறாகப் பொருள்படும். 'சூடுதும்' என்ற வினைக்கு ஏற்ப, திருவடி தாமரையாக்கி உரைக்கப்பட்டது.

சந்திரன் தனது சாபம் நீங்கப்பெற்ற தல மாதலால், 'திருவிந்தளூர்' என்று இத்தலத்திற்குப் பெய ரென்பர். இதற்கு வடமொழியில் 'ஸுகந்த வநம்' என்று ஒருதிருநாமம் வழங்குகின்றது. (உஉ)

உங. திருச்சித்திரகூடம்.

அடியா லுலகெல்லா மன்றளந்துகொண்ட
நெடியானைக்கூடுதியே னெஞ்சே—கொடிதாய
குத்திரகூடங்கிகொளுந்தாமுன் கோவிந்தன்
சித்திரகூடங்கருதிச்செல்.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—அடியால் - (தனது) திருவடிகளினால், உலகு எல்லாம் - எல்லாவுலகங்களையும், அன்று - முற்காலத்தில், அளந்து கொண்ட - அளந்து தன்னுடையனவாக்கிக்கொண்ட, நெடியானை - திரிவிக்கிரமாவதாரஞ்செய்த கடவுளை, கூடுதி எல் - சேரவேண்டுமென்று விரும்பினையானால்,—கொடிது ஆய - கொடுமையுள்ளதாகிய, குத்திரம் - இழிகுணத்தைக்கொண்ட, கூடு - இந்தச்சரீரத்தை, அங்கி - அக்கினியானது, கொளுந்தா முன் - எரித்துவிடுதற்குமுன்னமே, கோவிந்தன் - கோவிந்தராஜனெழுந்தருளியிருக்கின்ற, சித்திரகூடம் - திருச்சித்திரகூடமென்னுந் திவ்வியதலத்தை, கருதி - நினைத்து, செல் - செல்வாயாக; (எ - று.)

இறப்பதற்குமுன்னம் சித்திரகூடத்தைச் சென்று சேர்வாயானால், என்றும் எம்பெருமானைக் கூடிவாழும் நற்கதி வாய்க்குமென்பதாம். உயிர்கள் தன்னையுணராதநிலையிலும் தனக்கும் அவைகட்குமுள்ள தொடர்பையே பற்றுசெனக்கொண்டு தேவேந்திரனுக்கு மூவுலகத்தையும் மீட்டுக்கொடுத்த லென்ற ஒருவ்யாஜத்தை முன்னிட்டுக் காடும் ஓடையுமான நிலப்பரப்பையெல்லாம் தனதுமலர்போன்ற மெல்லிய திருவடிகளால் அளந்து அவ்வுயிர்களைத் தனக்குஅடிமையாக்கிக்கொண்ட பரமகாருணிகனான அத்திரிவிக்கிரமனே சரணமடைதற்கு உரியவனென்பது தோன்ற, அப்பெருமானை 'அடியாலுலகெல்லாமன்றளந்துகொண்ட நெடியான்' என்றார். நிலவுலகத்தையளந்ததில் நிலவுலகத்தோடு அதன்கீழுள்ள எழுலகங்களும், வானத்தையளந்ததில் நிலவுலகத்திற்குமேலுள்ள ஆறுலகங்களும் அடங்கியதனால் 'உலகெல்லாம் அளந்துகொண்ட' எனப்பட்டது. ஸம்ஸாரத்தை மேன்மேலும் விளைப்பதாய்ப் பலதுன்பங்கட்கும் அசுத்தங்கட்கும் இடமாய் ஆத்மா சேர்ந்திருத்தற்கு ஒருகூடுபோல நிற்றலால், உடம்பை 'கொடிதாய குத்திர கூடு' என்றார். 'இறப்பதற்குமுன்' என்ற பொருளில் 'குத்திர கூடங்கிகொளுந்தாமுன்' என்றது - காரணத்தைக் காரியமாகக் கூறிய உபசாரவழக்கின்பாற்படும். கோவிந்த னென்ற திருநாமத்துக்கு - பசுக்களைக் காத்தவ னென்றும், உயிர்களை அடிமையாகவுடையவ னென்றும், சூரியகிரணத்தில் தங்கியிருப்பவ னென்றும், வேதத்தை (ஹம்ஸரூபியாகிப் பிரமனுக்கு) உபதேசித்தவ னென்றும், (வராஹாவதாரஞ்செய்து நஷ்டமான) பூமியை யடைந்தவ னென்றும் இன்னுஞ்சிலவாறாகவும் பொருளுரைக்கப்படும். திருமங்கையாழ்வார் இத்தலத்தை மங்களாசாஸநஞ்செய்கையில் "தில்லைத்திருச்சித்திரகூடஞ் சென்று சேர்மின்களே" என்று உபதேசமுகத்தாற் கூறியிருத்தலால், இவ்வாசிரியரும் தமதுமனத்தைநோக்கி உபதேசமாகக் கூறினர்போலும்.

சித்திரகூடம் - விசித்திரமான சிகரங்களை யுடையதெனப் பொருள்படுங் காரணப்பெயர். இது, இராமபிரான் வனவாசஞ்செய்தபொழுது அவ்வெம்பெருமானது திருவுள்ளத்திற்கு மிகவும் பாங்காயிருந்ததொரு மலை; அதனைப்போலவே, இத்தலமும் எம்பெருமானது திருவுள்ளத்திற்கு மிகவும்பாங்காயிருப்ப தென்பதுபற்றி, அப்பெயரே இதற்கும் இடப்பட்டதென்பர். இங்கு உத்ஸவமூர்த்தி, இராமபிரான் வனவாசஞ்செய்கையில் சித்திரகூடபருவதத்தில் வீற்றிருந்தவண்ணமாக எழுந்தருளியிருக்கின்றனர்; மூலமூர்த்தி, ஸ்ரீரங்கநாதன்போலச் சயனத்திருக்கோலமாகிச் சிவபிரானது நடனத்தைப் பார்த்து ஆமோதித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கின்றனர். இது, தில்லைமரங்க ளடர்ந்த காடாயிருந்ததனால், 'தில்லைத் திருச்சித்திரகூடம்' என்று வழங்கப்படும். இது, எம்பெருமான் தேவர்களும் முனிவர்களும் சூழக் கொலுவீற்றிருந்த சபை. (உ௩)

உ௪. திருச்சீராமவிண்ணகரம்.

செல்லுந்தொறுமுயிர்ப்பின்செல்லுமிருவினையை
வெல்லுமுபாயம்விரும்புவீர்—தொல்லரங்கர்
சீராமவிண்ணகரஞ்சேர்மின் பின்மீளாத
வூராமவிண்ணகரமுண்டு.

(இ - ள்.) செல்லும்தொறும் - (உடலைவிட்டு உயிர்) போகின்ற இடங்களிலெல்லாம், உயிர் பின் செல்லும் - அவ்வுயிரின்பின்னே விடாதுதொடர்ந்துசெல்லுகின்ற, இரு வினையை - (நல்வினை தீவினையென்னும்) இரண்டு வினைகளையும், வெல்லும் - கடத்தற்குத் தக்க, உபாயம் - வழியை, விரும்புவீர் - இச்சிக்கின்றவர்களே!—(நீங்கள்), தொல் அரங்கர் சீராமவிண்ணகரம் சேர்மின் - பழைய திருவரங்கநாதனுடைய திருச்சீராமவிண்ணகரமென்னுந் தலத்தைப் போய்ச் சேருங்கள்; பின் - அவ்வாறுசேர்ந்தபிறகு, மீளாத ஊர் ஆம் அ விண்நகரம் - (தன்னைச்சேர்ந்தவர்) திரும்பிச்செல்லுதலில்லாத திருநகரமாகிய அந்தப்பரமபதம், உண்டு - (உங்களுக்குச்) சித்திக்கும்.

திருச்சீராமவிண்ணகரத்தைச் சேர்ந்தால், இருவினைகளையுமொழித்து மீளாவுலகமாகிய பரமபதத்தில் நிலைத்து வாழ்வீ ரென்று ஜநங்கட்கு ஹிதோபதேசஞ் செய்தவாறு. திருமங்கையாழ்வாரும் "காழிச்சீராமவிண்ணகரே சேர்மினீரே" என்று பரோபதேசமாகக் கூறியது, கருதத்தக்கது. இருவினைகளும் தம்மைச்செய்த உயிர்கள் எத்தனை பிறப்பெடுத்தாலும் அத்தனைபிறப்புக்களிலும் அவ்வுயிர்களைப் பின்தொடர்ந்துசென்று தத்தம்பயனைத் தவறாதுவிளைக்கு மென்பதை, 'செல்லுந்தொறுமுயிர்ப்பின் செல்லுமிருவினை' என்றதனால் விளக்கினர்.

தாம் செய்த அவ்வவ்வினைகளின் பயனாகச் சுவர்க்கம் முதலிய இடங்களிற் சேர்ந்தவர் அவ்வினைகள் கழிந்தபிறகு அவ்வவ்விடங்களினின்று திரும்பிவிடுதல்போல, பரமபதத்தைச்சேர்ந்தவர் தொல்லையிருவினைகளும் ஒழிதலால் அங்குநின்று திரும்பிச்செல்லாராவ ரென்பதுபற்றி அம்முத்தி

யுலகத்தை 'மீளாதவூராம் அவ்விண்ணகரம்' என்றார். இந்நூலாசிரியர்க்கு ஸ்ரீரங்கநாதனிடத்துள்ள பத்திப்பேரன்பினாலும், நூற்றெட்டுத் திருப்பதிகளுட் சிறந்த தலம் திருவரங்கமே யாதலாலும், மற்றைத் திருப்பதிகளிலுள்ள எம்பெருமான்களையும் 'அரங்கர்' என்றே ஆங்காங்குக் கூறுவரென்க.

சக்கரவர்த்தித்திருமகனெழுந்தருளியிருக்கின்ற சிறந்தநகரமாதல் பற்றி, இத்தலத்திற்கு 'சீராமவிண்ணகரம்' என்று பெயர்: காளி வாசஞ்செய்கிற காரணம்பற்றி இத்தலத்திற்குக் காழிச்சீராமவிண்ணகர மென்றும் பெயருண்டு. (இது, சீர்காழி யென்றும் வழங்கப்படும்.)

இது திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரைத் திருமங்கையாழ்வார் தமது கவித்திறத்தினால் வென்று அவரதுவெற்றிவேலைத் திருமுன்காணிக்கையாகப் பெற்ற தலம். (உச)

## உரு. திருக்கூடலூர்.

உண்டுகேட்டுற்றுமோந்துப்பார்க்குமைவர்க்கே
தொண்டுபடலாமோவுன்றொண்டனேன்—விண்டிலங்கு
மாடலூர்நேமிமுதலைம்படையா யன்புடையாய்
கூடலூரா யிதனைக்கூறு.

(இ - ள்.) விண்டு இலங்கும் - விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்ற, ஆடல் ஊர் - வெற்றி பொருந்திய, நேமி முதல் - சக்கரம் முதலிய, ஐம் படையாய் - பஞ்சாயுதங்களையுடையவனே! அன்பு உடையாய் - (உயிர்களிடத்தில் நிர்ஹேதுகமான) கிருபையையுடையவனே! கூடலூராய் - திருக்கூடலூரென்னுந் தலத்தி லெழுந்தருளியிருப்பவனே!—உன் தொண்டனேன் - உனக்கேயடியவனாகிய நான், (அவ்வாறு அடிமையாயிருத்தலைவிட்டு),—உண்டு - (இனியவுணவுகளைச்) சுவைத்தும், கேட்டு - (இனியஇசைமுதலியவற்றைக்) கேட்டும், உற்று - (இன்பமுண்டாக்கும் பொருள்களைப்) பரிசித்தும், மோந்து - (நறுமணமுள்ள பொருள்களை) மோந்தும், பார்க்கும் - (நற்காட்சியுள்ள பொருள்களைக்) கண்டும் மகிழ்கின்ற, ஐவர்க்கே - பஞ்சேந்திரியங்கட்கே, தொண்டு படல் ஆமோ - அடிமைப்படுதல் தகுதியாகுமோ?(எ-று.)

மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளுள் கண் எம்பெருமானையே தரிசிப்பதும், செவி அப்பெருமானதுவைபவங்களையே கேட்பதும், வாய் அவனையே துதிப்பதும், மூக்கு அவனது திவ்வியபரிமளத்தையே மோப்பதும், கை கால் தலை முதலிய உறுப்புக்களையுடைய மெய் அவ்வெம்பெருமானைத் தொழுதல் வலஞ்செய்தல் வணங்குதல் முதலியன செய்வதுமாக, இங்ஙனம் எல்லாப்பொறிகளும் ஸர்வஸ்வாமியான எம்பெருமானது விஷயங்களையே நுகரும் பொருளாகக் கொள்வதனால் நான் ஈடேற்றும்வகை எளிதில் அமைந்திருக்க, அதனைவிட்டு, "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடிகண்ணே யுள" என்றபடி சிற்றின்ப விருப்பத்தால் விஷயாந்தரங்களிற் சென்று பஞ்சேந்திரியங்கட்கு வசப்

பட்டு நாசமடையலாமோ? நான் அவ்வாறு வசப்பட்டுஅழியாதவாறு பாது காப்பது உனது கடமை யென்று வேண்டியவாறும். "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாம், கண்ணன்," "வாஸுதேவஸ்ஸர்வம்," "ஸர்வகந்தஃ ஸர்வரஸஃ" என்றவற்றால் தாரக போஷக போக்யாதிகளெல்லாம் அவ்வெம்பெருமானே யாதலை யுணர்க. 'ஐவர்க்குத் தொண்டுபடலாமோ வுன்தொண்டனேன்' என்ற தொடரில், ஸாஸ்வதமும் ஸர்வரஸமுமான நீ இருக்கையில், நஸ்வரமும் அஸாரமுமான பஞ்சேந்திரியங்கட்கு ஆட்படுதல் தகாதென்பது, போதரும்: வெண்டளைபற்றி 'மோந்துப்பார்க்கும்' என, அல்வழியில் மென்றொடர்முன் வலிமிக்குவந்தது. ஆடல்=அடல்: நீட்டல்விகாரம்.

தேவர்கள் கூட்டமாகவந்து எம்பெருமானைச் சேவிக்குந் தலமாதலால், 'திருக்கூடலூர்' என்று இத்தலத்திற்குத் திருநாம மென்பர். (௨௫)

௨௬. திருக்கண்ணங்குடி.

கூறுபுகழ்த்தன்னடிக்கேகூட்டுவனோ வின்னமென்னை
வேறுபடப்பல்பிறப்பில்வீழ்த்துவனோ—தேறுகிலே
னெண்ணங்குடியாயிருந்தானின்றான்கிடந்தான்
கண்ணங்குடியான்கருத்து.

(இ - ள்.) எண்ணம் - (எனது) மனத்தை, குடி ஆய் - (தான்) வாழுமிடமாகக்கொண்டு, இருந்தான் நின்றான் கிடந்தான் - (அந்நெஞ்சினில்) வீற்றிருத்தலையும் நிற்றலையும் சயனித்தலையும் செய்பவனும், கண்ணங்குடியான் - திருக்கண்ணங்குடியென்னுந் தலத்தி லெழுந்தருளியிருப்பவனுமான எம்பெருமான்,—என்னை - அடியேனை, கூறு புகழ் தன் அடிக்கே கூட்டுவனோ - (வேதங்களினால் சிறப்பித்துக்) கூறப்படுகின்ற கீர்த்தியையுடைய தனது திருவடிகளிலே சேர்த்துக்கொள்வனோ? (அன்றி), இன்னம் - இனிமேலும், வேறுபட - (அவ்வாறு தன் திருவடிகளிற் சேர்த்துக்கொள்ளுவதற்கு) மாறாக, பல் பிறப்பில் - பலவகைப்பிறப்புக்களிலும், வீழ்த்துவனோ - தள்ளி வருத்துவனோ? கருத்து - (அவனது) திருவுள்ளக்கருத்தை, தேறுகிலேன் - (இன்னதென்று) அறியேன், (யான்); (எ - று.)

என்மனத்திலே வந்துபுகுந்து நிற்பதும், அவ்வாறுநிற்குமிடத்து வருத்தந்தட்டுகையில் வீற்றிருப்பதும், அவ்வாறு இருக்குமிடத்தும் வருத்தந்தோற்றினாற் பள்ளிகொள்வதுமாக இவ்வாறு நிலையாகவாழ்கின்ற எம்பெருமான் அடியேனுக்கு நற்கதியருள்வனோ? அன்றி, இதுவரையிலும்போலவே இன்னமும் பலவகைப்பிறப்புக்களில் அலைந்துழலவைப்பனோ? நிரங்குசஸ்வதந்த்ரனான அவ்வெம்பெருமான் யாதுசெய்வனோ? அறியேனென்பதாம். இவ்வாறு ஐயங்கார் ஐயமுறுதற்குக் காரணம், எம்பெருமான் தம்மிடத்துக் காரணமின்றியெழுந்த பெருங்கருணையோடு பேரன்புபாராட்டுதலும், இயற்கையான அடிமைப்பொருளாகிய தாம் இத்தனைகாலம் அவ்வெம்பெருமானுக்கு ஆட்படாமல் ஸ்வதந்த்ரராய்த் திரிந்து விமுகராகக்கிடந்தமையு

மென்க. "பின்பிறக்கவைத்தனன்கொலன்றி நின்றுதன்கழற்கு, அன்புறைக்கவைத்தநாளறிந்தனன்கொல் ஆழியான், ***, என்திறத்திலென்கொல் எம்பிரான் குறிப்பில்வைத்ததே" என்ற பெரியார்பாசுரத்தை அடியொற்றியது, இது. எம்பெருமான் தனது அடியார்களின் சரீரத்தில் நூற்றெட்டுத் திருப்பதிகளிற்செய்துள்ள விருப்பத்தைச் செய்வானென்ற கொள்கை விளங்குமாறு 'எண்ணங்குடியா யிருந்தான் நின்றான் கிடந்தான்' என்றார்; "நிற்பதுமோர் வெற்பகத்து இருப்புவிண் கிடப்பதும், நற்பெருந்திரைக்கடலுள் நானிலாதமுன்னெலாம், அற்புத னநந்தசயன னாதிபூதன் மாதவன், நிற்பதும் இருப்பதுங் கிடப்பதும் என்னெஞ்சுளே," "நின்ற தெந்தை யூரகத் திருந்த தெந்தை பாடகத்து, அன்றுவெஃகணைக்கிடந்த தென்னிலாதமுன்னெலாம், *** நின்றது மிருந்ததுங் கிடந்தது மென்னெஞ்சுளே" என்ற திருமழிசையாழ்வார் பாசுரங்களும், "உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய ஸரீரைகதேஸத்திலே பண்ணும். அங்குத்தை வாஸம் ஸாதநம்; இங்குத்தை வாஸம் ஸாத்யம். "கல்லுங் கனைகடலும்" என்கிறபடியே இது ஸித்தித்தால் அவற்றில் ஆதரம் மட்டமாயிருக்கும்" என்ற ஸ்ரீவசநபூஷணவாக்கியங்களும் இங்குஉணரத்தக்கன. பல்பிறப்புக்களாவன - மக்கள் தேவர் விலங்கு புள் ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்னும் எழுவகைப்பிறப்புக்கள்.

கண்ணன் வாழ்கின்ற இடமாதலால், இத்தலத்திற்கு 'திருக்கண்ணன் குடி' என்று பெயர்; அதுவே கண்ணங்குடியென்று வழங்குவதாயிற்று. இத் தலத்தைக்குறித்து 'உறங்காப்புளி, ஊறாக்கிணறு, காயாமகிழ், தீராவழக்கு, திருக்கண்ணங்குடி' என்று ஒருபழமொழி வழங்கும். (உசு)

## உஎ. திருக்கண்ணமங்கை.

கருத்தினால்வாக்கினானான் மறையுங்காணா
வொருத்தனைநீநெஞ்சேயுணரிற்—பெருத்தமுகில்
வண்ணமங்கைகண்கால்வனசந்திருவரங்கங்
கண்ணமங்கையூரென்றுகாண்.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—கருத்தினால் - மனத்தினாலும், வாக்கினால் - வாக்கினாலும், நால் மறையும் - நான்குவேதங்களும், காணா - கண்டறியமுடியாத, ஒருத்தனை - ஒப்பற்ற திருமாலை, நீ உணரின் - நீஅறியவிரும்பினால்,—(அவனுக்கு), 'வண்ணம் - திருமேனிநிறம், பெருத்த முகில் - பெரிய காளமேகமாம்; அம் கை - அழகிய திருக்கைகளும், கண் - திருக்கண்களும், கால் - திருவடிகளும், வனசம் - செந்தாமரைமலர்களாம்; ஊர் - இருப்பிடம், திருவரங்கம் - ஸ்ரீரங்கமும், கண்ணமங்கை - திருக்கண்ணமங்கையுமாம்,' என்று—, காண் - அறிவாயாக; (எ - று.)

எம்பெருமானது ஸ்வரூபத்தை உள்ளபடியறிய விரும்பினால், அவனது திருமேனிநிறம் காளமேகத்தைப்போலு மெனவும், அவனது கை கால் கண்க ளென்ற உறுப்புக்கள் செந்தாமரைமலர்போலு மெனவும், அவனெ

யெழுந்தருளியிருக்கின்ற இடங்கள் ஸ்ரீரங்கமும் திருக்கண்ணமங்கையும் போன்ற திருப்பதிகளெனவும் இவ்வாறு தனித்தனியே உவமைப்பொருள்களைக் கொண்டு ஒருவாறு ஊகித்து உணரலாமேயன்றி, வேதபுருஷனது மனோவாக்குக்களுக்கும் எட்டாத அந்தஎம்பெருமானது ஸ்வரூபத்தை நேர்கொடு நேரே நிரூபித்து உணர்தல் அற்பஞானமுள்ள நம்மால் எவ்வாற்றாலும் முடியாதென்பது, கருத்து. ("மைவளர்க்கும் மணியுருவம் மரதகமோ மழைமுகிலோ வென்கின்றாளால்," "அடித்தலமும் தாமரையே அங்கைகளும் பங்கயமே யென்கின்றாளால்," "கைவண்ணந் தாமரை வாய்கமலம் போலும் கண்ணிணையுமரவிந்தம் அடியுமஃதே", "தமருள்ளந் தஞ்சை தலையரங்கந் தண்கால், *** வெவ்வவெஃகைக்கிடம்" என்னும் பெரியார்பாசுரங்களை இங்கே அறிக.) ஆநந்தவல்லியில் எம்பெருமானது ஆனந்தகுணத்தை அளவிடப்புக்க வேதபுருஷன் "யதோவாசோநிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸாஸஹ, ஆநந்தம்ப்ரஹ்மண:" என்று தனது வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாமல் மீண்டமைபற்றி எம்பெருமானது தன்மை அறிதற்கு அரியதென்பது தானே பெறப்படுதலால்,'கருத்தினுல் வாக்கினுல் நான்மறையுங் காணு வொருத்தன்' என்றார். ஒருத்தன் - அத்விதீயன்: ஈடுமெடுப்புமில்லாத ஒரு தெய்வம்.

நான்மறை - ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்பன: அன்றி, தைத்திரியம், பௌடியம், தலவகாரம், ஸாமவேதம் என்பனவுமாம். வண்ணம் - வர்ணம் என்பதன் சிதைவு. அங்கை - அகங்கை யென்பதன் திரிபுமாம்: அகங்கை - உள்ளங்கை; "அகமுனர்ச் செவி கை யரி னிடையன கெடும்." வநஜம் - நீரில்தோன்றுவதெனத் தாமரைக்குக் காரணவிடுகுறி.

திருமங்கையாழ்வார் இத்தலத்தில் வந்து இங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமானைப் பதிகம்பாடித் துதிக்கையில், திருநின்றவூர்ப் பத்தராவிப் பெருமாள் முன்பு திருக்கடன்மல்லையில் ஒருபாடல்பெற்றது போதாதென்று மீட்டும் அவ்வூரிலுள்ள நாய்ச்சியாரான என்னைப்பெற்றஅன்னையால் ஞாபிக்கப்பட்டவராய், ஆழ்வாரெதிரில் வந்து காட்சியளிக்க, ஆலிநாடர் "நின்றவூர்நின்ற நித்திலத்தொத்தினை *** கண்ணமங்கையுட் கண்டு கொண்டேனே" என்று அப்பிரானையுஞ் சேர்த்துத் துதிசெய்தன ரென்க.

## உஅ. திருக்கவித்தலம்.

காணியுமில்லமுங்கைப்பொருளுமீன்றோரும்
பேணியவாழ்க்கையும்பேருறவுஞ்—சேணிற்
புவித்தலத்திலின்பமும்பொங்கரவமேறிக்
கவித்தலத்திற்கண்டுயில்வோன்கால்.

(இ - ள்.) (அடியேனுக்கு), காணியும் - பூமியும், இல்லமும்-வீடும், கைபொருளும் - கையிலுள்ள திரவியமும், ஈன்றோரும் - பெற்ற தாய்தந்தையரும், பேணிய வாழ்க்கையும் - விரும்பிய நல்வாழ்வும், பேர் உறவும் - நெருங்கிய சுற்றத்தாரும், சேணில் புவித்தலத்தில் இன்பமும் - மறுமையிலும் இம்மையிலும் உண்டாகக்கூடிய இன்பங்களும்,— கவித்தலத்தில் - திருக்

கவித்தல மென்னுந் தலத்தில், பொங்கு அரவம் ஏறி - சிறந்தன்மையுள்ள ஆதிசேஷன்மீது ஏறி, கண் துயில்வோன் - திருக்கண்வளர்ந்தருளுந் திருமாலினுடைய, கால் - திருவடிகளேயாம்; (எ - று.)

போக்ய போகோபகரண போகஸ்தாநங்களாகிய யாவும் எனக்கு எம்பெருமான் திருவடிகளே யென்பது, கருத்து. "தோட்டமில்லவளாத்தொழுவோடை துடவையுங் கிணறுமிவையெல்லாம், வாட்டமின்றி யுன்பொன்னடிக்கீழே வளைப்பகம்வகுத்துக்கொண்டிருந்தேன்," "பெற்றதாய்நீயே பிறப்பித்ததந்தைநீ, மற்றையாராவாருநீ பேசில்," "ஒருநற்சுற்றமெனக்குயிரொண்பொருள், வருநல்தொல்கதியாகிய மைந்தன்" என்ற ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் இங்குக் கருதத்தக்கன.

காணி - விளைநிலம். உறவுக்குப் பெருமையாவது, வறுமைக்காலத்திலும் தம்மைவிட்டுப் பிரியாமல் உடனிருந்து உதவிசெய்தல். சேண் - மேலுலகம். இறந்தபின் மறுமையிற் பெறக்கூடிய இன்பம் பெரும்பாலும் மேலுலகத்திற்சென்று பெறக்கூடியதா யிருத்தலால், அம்மறுமையின்பத்தை 'சேணின்பம்' என்றார். திருக்கவித்தலத்தில் எம்பெருமான் புஜங்கசயநத்திற் பள்ளிகொண்டிருத்தலால், அப்பிரான் 'பொங்கரவமேறிக் கவித்தலத்திற் கண்டுயில்வோன்' எனப்பட்டான். தன்மீது திருக்கண்வளர்கின்ற எம்பெருமானுக்கு எச்சமயத்தில் யாவரால் என்னதீங்கு விளையுமோ? என்று, தீங்குஉண்டாதற்கு இடமாகாத எம்பெருமான்திறத்திலும் பொங்கும்பரிவினாற் பயசங்கைகொண்டு மங்களாஸாஸநபரனான ஆதிசேஷன் எப்பொழுதுஞ் சீறிக்கொண்டிருப்ப னென்னுங் கருத்தைக் குறிப்பித்தற்கு, அரவத்திற்கு 'பொங்கு' என்ற அடைமொழி கொடுத்தார். பக்தர்கள் கோஷித்துத் துதிக்கும்போது பயசங்கையினால் திருவநந்தாழ்வான் அழலுமிழ்வனென்று "ஆங்காரவாரமதுகேட்டு அழலுமிழும் பூங்காரரவணையான்" என்று திருமழிசைப்பிரான் கூறியிருத்தலுங் காண்க.

அநுமானுக்குப் பிரதியக்ஷமான தல மாதலால், இத்திருப்பதிக்கு, 'திருக்கவித்தலம்' என்று பெய ரென்பர். (உ௮)

உ௯. திருவெள்ளியங்குடி.

காலளவும்போதாக்கடன்ஞாலத்தோர்கற்ற
நூலளவேயன்றிநுவல்வாரார்—கோலப்
பருவெள்ளியங்குடியான்பாதகமூண்மாய்த்த
திருவெள்ளியங்குடியான்சீர்.

(இ - ள்.) கோலம் பரு வெள்ளி அம் குடியான் - அழகிய பெரிய (கைலாசமென்னும்) வெள்ளிமலையை வாழுமிடமாகவுடையவனான சிவபிரானது, பாதகம் ஊண் -(பிரமஹத்தியாகிய) பாவத்தினால் நேர்ந்த இரந்துண்ணுநிலை, மாய்த்த - ஒழித்தருளிய, திருவெள்ளியங்குடியான் - திருவெள்ளியங்குடி யென்னுந் தலத்தி லெழுந்தருளிய எம்பெருமானது, சீர் - சிறப்பை,—கால் அளவும் போதா கடல் ஞாலத்தோர் - (திரிவிக்கிரமாவதாரகாலத்தில் எம்

பெருமானது) ஒருதிருவடியினாலளவிடுதற்கும் போதாத கடல்சூழ்ந்த நிலவுலகத்திலுள்ளவர்களில், கற்ற - (தாம்) படித்தறிந்த, நூல் அளவே அன்றி - நூல்களின் அளவாகக் கூறுவதேயல்லாமல், நுவல்வார் - முழுதும்உணர்ந்து சொல்லவல்லவர், ஆர் - யாவருளர்? (எ - று.)

எம்பெருமானது திருக்கல்யாணகுணங்களை முழுவதுந் தெரிவிக்கின்ற நூல்களும் இவ்வுலகத்திலில்லை; ஆகவே, "நூலளவேயாகுமாம்நுண்ணறிவு" என்றபடி, அவ்வெம்பெருமானது குணங்களைச் சிறிதே கூறுகின்ற அந்நூல்களைக் கற்றவர்கள் அதனால் தாம் உணர்ந்துகொண்ட சிறிதளவே எம்பெருமானதுகுணங்களைக் கூறவல்லவ ராவரேயன்றி முற்றுமுணர்ந்து கூறவல்லவர் ஒருவருமில்லை யென்பதாம். பூமியைப்பார்க்கிலும் எம்பெருமானது திருவடி பெரிதாயிருந்த தென்பார் 'காலளவும் போதாக் கடன்ஞாலம்' என்றார்; இதனால், அத்திரிவிக்கிரமாவதாரங்கொண்ட எம்பெருமானது உருவத்தின் பெருமை அளவிடுதற்கு அரியதெ்தன விளக்கியவாறு. 'காலளவும் போதாக் கடன்ஞாலம்' என்ற தொடரால், எம்பெருமானது சரமாவயவமான திருவடிகளில் ஒன்றின் அளவையே கண்டறியமாட்டாத நிலவுலகத்தார் அவ்வெம்பெருமானது சீர்முழுவதையும் எவ்வாறு காணமாட்டுவர்? என்ற பொருள் தோன்றும்; இங்கு, ஞாலத்திற்குக்கொடுத்துள்ள 'காலளவும்போதா' என்ற அடைமொழி இவ்வாறு ஒருகருத்தை உட்கொண்டிருத்தலால், கருத்துடையடைமொழியணியாம். எம்பெருமானது நித்யவிபூதியாகிய பரமபதம் 'த்ரிபாத் [முக்காற்பங்குள்ள] விபூதி' என்று பெயர்பெறுமாறு இந்த லீலாவிபூதி முழுதும் அந்தஎம்பெருமானது பெருஞ்செல்வத்தில் நான்கிலொருபங்கே யாதல்பற்றி, 'காலளவும்போதாக் கடன்ஞாலம்' என்றாருமாம். "முதலாவார் மூவர்" என்றபடி முதல்மூர்த்திகளாகிய மூவரில் ஒருவன் தலையறுப்புண்டான்; ஒருவன் தலையைக்கொய்து அப்பாதகத்தால் வருந்தி யலைந்து அதைப் போக்கிக்கொள்வதற்கு உபாயந்தேடி உலகமெங்கும் இரந்து திரிந்தான்; ஒருவன் அவனது பாதகத்தை மிகஎளிதில் அகலுமாறு அருள்செய்தான்; ஆகவே, அவ்வாறு அருள்செய்த திருமாலே மற்றையிருமூர்த்தியினும் பரதேவதையாவனென்றற்கு, அவனை 'பருவெள்ளியங்குடியான் பாதகஞூண் மாய்த்த திருவெள்ளியங்குடியான்' என்றார்: "பேசநின்ற சிவனுக்கும் பிரமன்தனக்கும் பிறர்க்கும், நாயகனவனே கபாலநன்மோக்கத்துக் கண்டுகொண்மின்" என்றது காண்க.

சுக்கிராசாரியனுக்குப் பிரதியக்ஷமான தலமாதலால், இத்திருப்பதிக்கு 'திருவெள்ளியங்குடி' என்று பெயர்: 'பார்க்கவபுரி' என்று இத்தலத்திற்கு வடமொழியில் ஒருபெயர் வழங்குதலுங் காண்க. (உகூ)

௩௦. திருமணிமாடக்கோயில்.

சீரேதருங்கதியிற்சேருகைக்குநானுன்னை
நேரேவணங்கினேனெஞ்சேநீ—பாரி
லணிமாடக்கோயிலரங்கனூர்நாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்கு.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—சீரே தரும் கதியில் சேருகைக்கு - சிறப்பையே தருகின்ற நல்லகதியில் [முத்தியுலகத்தில்] சென்றுசேர்வதற்காக, நான்—, உன்னை - (எனது நன்மைதீமைகட்குக் காரணமாயிருக்கின்ற) உன்னை, நேரே வணங்கினேன் - நன்றாகத்தொழுகின்றேன்; நீ—, (யாது செய்யவேண்டுமெனின்),—பாரில் - இந்நிலவுலகத்தில், அணி மாடம் கோயில் அரங்கனார் - அழகிய மாடமாளிகைகளையுடைய கோயிலென்று சொல்லப்படுகின்ற ஸ்ரீரங்கத்தி லெழுந்தருளியுள்ள ரங்கநாதனது, நாங்கூர் மணிமாடக்கோயில் - திருநாங்கூரைச்சார்ந்த திருமணிமாடக்கோயி லென்னுந் திவ்வியதலத்தை, வணங்கு - தொழுவாயாக; (எ - று.)

அத்திருப்பதியை வணங்குமாறு நீ இசைவாயானால், நமக்குத் தவறாமல் நற்கதிவாய்க்குமென்று தமதுநெஞ்சைநோக்கி இதனுரைத்தவாறு. தமக்கு நற்கதிவாய்த்தற்கும், அன்றித்தீநரகிற்கிடந்துழைத்தற்கும் எல்லாவற்றிற்கும் மனமே காரண மாதலால், நற்கதிகிடைப்பதற்கு முயற்சிசெய்யவேண்டுமென்று கருதிய ஆசிரியர் தமது விருப்பத்தின்படி வருதற்பொருட்டு அந்நெஞ்சை வணங்கி வேண்டுகின்றன ரென்க; "நெஞ்சமே நல்லைநல்லை யுன்னைப்பெற்றா, லென்செய்யோ மினியென்னகுறைவினம், மைந்தனை மலராண்மணவாளனைத், துஞ்சும்போதும் விடாது தொடர் கண்டாய்" என்ற நம்மாழ்வார்பாசுரம், இங்குக் கருதத்தக்கது.

இதுமுதற் கூறப்படுகின்ற திருப்பதிகள் பதினொன்றையும், 'திருநாங்கூர்த்திருப்பதிகள்' என வழங்குவர். நாங்கூர் - வடமொழியில், நாகபுரியெனப்படும்.

அழகிய உபரிகைவீடுகள் நிறைந்த எம்பெருமானெழுந்தருளியிருக்கின்ற தலமாதலால், இத்தலத்திற்கு, 'திருமணிமாடக்கோயில்' என்று பெயர் வந்ததுபோலும். (௩௦)

## ௩௧. திருவைகுந்தவிண்ணகரம்.

வணங்கேன்பிறதெய்வ மாலடியாரல்லாக்
குணங்கேடர்தங்களுடன்கூடே—னிணங்கிநின்று
வைகுந்தவிண்ணகரம்வாழ்த்துவே னீதன்றோ
வைகுந்தவிண்ணகரவாழ்வு.

(இ - ள்.) (நான்),—பிற தெய்வம் - திருமாலல்லாத வேறுதெய்வங்களை, வணங்கேன் - வணங்கமாட்டேன்; மால் அடியார் அல்லா - திருமாலினது அடியவரல்லாத, குணம் கேடர்தங்களுடன் - நற்குணமில்லாதவரோடு, கூடேன் - சேரமாட்டேன்; இணங்கிநின்று - (திருமாலடியாருடன்) கூடிநின்று, வைகுந்த விண்ணகரம் - திருவைகுந்தவிண்ணகரமென்னுந் திவ்வியதலத்தை, வாழ்த்துவேன் - துதிப்பேன்; ஈது அன்றோ - இவ்வாறு அடியவருடன் கூடித் துதித்தலல்லவோ, வைகுந்த விண் நகரம் வாழ்வு - ஸ்ரீவைகுண்டமென்னுந் திவ்வியநகரத்தி லுண்டாகின்ற நல்வாழ்க்கையாவது; (எ - று.)

"அடியார்நிலாகின்ற வைகுந்தம்" என்னுஞ் சிறப்பினையுடைய ஸ்ரீவைகுண்டத்துச் சென்றாலும் அங்கு உண்டாகும் நல்வாழ்வென்பதும் திருமாலடியார்களுடன் கூடி எம்பெருமானைத் துதித்தலே யாதலால், இந்நிலவுலகத்திலேயே மறந்தும் புறந்தொழாமலும் அவைஷ்ணவஸஹவாஸ மில்லாமலும் நின்று ஸ்ரீவைஷ்ணவர்களுடன் கூடி எம்பெருமானை யேத்தி ஜீவன்முக்தனாவேன் அடியேன் என்பதாம். பரதேவதையான திருமாலையன்றி, பிரளயகாலத்தில் பிறவுயிர்களோடொப்ப அவனது திருவயிற்றினுட் புக்குப் பின்பு வெளிப்படுபவர்களும் தமக்கு ஆபத்துநேர்ந்த காலத்தில் அவனையே சரணமடைந்து தேறி மற்றைச்சமயங்களிற் செருக்கித் திரிபவர்களு மான அபரதேவதைகளைச் சிறிதும் பொருள்செய்யாமையில் தமக்குஉள்ள உறுதியான துணிவை 'வணங்கேன் பிறதெய்வம்' என்பதனால் வெளியிட்டார்; "அரங்கா! உன்னையன்றித் தெய்வமாக மதிக்குள்வையே னடியேன் பிறரானரையுமே," "உலகமுண்ட திருக்கந்தரத்தனையல்லாது எண்ணே னொருதெய்வத்தையே" என்றார் பிறவிடங்களிலும். கணவனையே தெய்வமாகக் கொண்டொழுகுங் கற்புடைமகளிர்க்குப் பிறிதோராடவரது தொடர்பில்லாதிருத்தல் இன்றியமையாதவாறுபோல, எம்பெருமானைச் சரணமடைந்து உய்யும் பிரபந்நர்க்குத் தேவதாந்தரபஜநம்பண்ணாமை அவசியமென்பர் ஆன்றோர். பிணி பசி மூப்புப் பிறப்பு இறப்புத் துன்பங்க ளின்றித் தாம் உய்யமாட்டாதவரும் தம்மைச் சரணமடைந்தவர்களைச் சமயத்திலே கைவிடுபவர்களுமான பிறதேவதைகளையும் அவரைப்பற்றிய பொய்ந்நூல்களையும் தமது ஆராய்ச்சிக்குறைவினால் உண்மையென்று நம்பிப் பாராட்டிப் பழுதே பலபகலும் போக்குகின்ற வம்பருடன் கூடுதல் அறிவின்கேட்டிற்குக் காரணமாய் ஸம்ஸாரத்திற்கே வித்தாமாதலால், 'மாலடியாரல்லாக் குணங்கேடர் தங்களுடன் கூடேன்' என்றார். "சிறந்தார்க்கெழுதுணையாஞ் செங்கண்மால்நாமம், மறந்தாரை மானிடமாவையேன்" என்பது பூதத்தார் பாசுரம். தம்மோடுகூடினவர்களைத் தீக்கதியிற் சேர்த்தலால், மாலடியாரல்லாதவர் குணங்கேடராவர். ஸ்ரீவைஷ்ணவர்களைத்தமறிந்து உகந்திருக்கையும் *** ஜ்ஞாநமும் விரக்தியும் ஶாந்தியு முடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம்பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவஶ்யாபேக்ஷிதமாகையால், 'இணங்கிநின்று வாழ்த்துவேன்' என்றார்.

ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமான் எழுந்தருளியிருப்பதுபோலவே இத்தலத்தில் வீற்றிருந்ததிருக்கோலமாகச் சேவைசாதித்தலால், இத்திருப்பதிக்கு 'திருவைகுந்தவிண்ணகரம்' என்று பெயரென்பர். (௯௧)

## ௯௨. திருவரிமேயவிண்ணகரம்.

வாழுமடியார் மடநெஞ்சே நம்மளவோ
தாழுஞ்சடையோன்சதுமுகத்தோன்—பாழிக்
கரிமேயவிண்ணகரக்காவலோன்கண்டா
யரிமேயவிண்ணகரத்தார்க்கு.

(இ - ள்.) மடம் நெஞ்சே - அறியாமையையுடைய மனமே!—அரிமேய விண்ணகரத்தார்க்கு - திருவரிமேயவிண்ணகர மென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியுள்ள எம்பெருமானுக்கு, வாழும் அடியார்-அடியவராக வாழ் கின்றவர்கள், நம் அளவோ - நாம்மாத்திரந்தானோ? (அன்று); தாழும் சடை யோன் - தொங்குகின்ற (கபர்த்தமென்னுஞ்) சடையையுடைய சிவபிரா னும், சதுமுகத்தோன் - நான்குமுகங்களையுடைய பிரமதேவனும், பாழி கரி மேய விண் நகரம் காவலோன் - பலம்பொருந்திய (ஐராவதமென்னும்) யானைமேல் ஏறிச் செல்லுகின்ற சுவர்க்கலோகத்துக்கு அரசனாகிய இந்திர னும், (அடியவராவர்); (எ - று.)—கண்டாய் - முன்னிலையசை; தேற்றமு மாம்.

நம்மைப்போல ஸாமாந்யரான மநுஷ்யர்கள்தாம் அப்பிரானுக்கு அடி யவரென்று நினைக்கிறாயோ? அவ்வாறல்ல. உலகத்தார்க்கு யோகஞ்செய்யும் முறையை யுணர்த்தியவனும், "ஜ்ஞாநமந்விச்சேத்" என்றவாறு ஞானத்தைத் தரக்கூடியவனும்ப் பாகவதாக்ரேஸரனான சிவபெருமானும், எப்போதும் வேதங்களை யோதி அவற்றின்பொருளையுணர்பவனான பிரம தேவனும், தேவர்கட்கெல்லாந்தலைவனான மஹேந்திரனுமே அத்திருமா னுக்கு அடியவராவர்; இப்படி எல்லார்க்கும் அவனே தலைவ னாதலால், வேறுதெய்வங்களினிடத்திற் சிறிதும்பற்றுவையாது அவனையே நம்பியிருப் பின், நமக்குத் தவறாமல் நற்கதி கிடைக்கு மென்று நெஞ்சிற்கு அறிவுறுத் தியவாறு.

சதுமுகத்தோன் = சதுர்முகத்தோன். கரி - கரத்தையுடையது என் பதனால், யானைக்குக் காரணக்குறி: இனி, இச்சொல்லுக்கு - கருமைநிற முடைய தாதலால் கரி யெனத் தமிழ்வகையாற் காரணங் கூறலாகாது; வடசொல்லாதலின். 'காவலன்' என்பது 'காவலோன்' எனத் திரிந்தது. மேய - மேவிய என்பதன் விகாரம்.

'திருவரிமேயவிண்ணகரம்' என்பது - அரிபொருந்திய விண்ணகரம் போன்றது எனப் பொருள்படும். ('அரி' என்ற சொல் - அழகு திருமால் குரங்கு சிங்கம் தவளை மூங்கில் முதலிய பலபொரு ளுள்ளது.) (௯௨)

## ௯௩. திருத்தேவனார்தொகை.

ஆர்க்கும்வலம்புரியாலண்டமுமெண்டிசையுங்
கார்க்கடலும்வெற்புங்கலங்கினவாற்—சீர்க்குந்
திருத்தேவனார்தொகைமால்செவ்வாய்வைத்தூதத்
தருத்தேவனார்தொகையுஞ்சாய்ந்து.

(இ - ள்.) சீர்க்கும் - சிறப்புப்பெற்ற, திருத்தேவனார்தொகை மால் - திருத்தேவனார்தொகை யென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியிருக்கின்ற திருமால், (பாரிஜாதவிருக்ஷத்தைத் தேவலோகத்தினின்று பேர்த்துக்கொண ரும்போது), செம் வாய் வைத்து ஊத - (பாஞ்சஜந்யத்தைத்) தமது சிவ

ந்த வாயிலே வைத்து ஊதுகையில், ஆர்க்கும் வலம்புரியால் - பேராரவாரஞ் செய்கின்ற அந்த வலம்புரிச்சங்கத்தினால், தருதேவனார் தொகையும் - கற்பகதருவின்நிழலில் வசிக்கின்ற தேவர்களின் கூட்டமும், சாய்ந்து - மூர்ச்சித்துவிழ,--அண்டமும் - அண்டங்களும், எண் திசையும் - எட்டுத்திக்குகளும், கார் கடலும் - கரிய சமுத்திரமும், வெற்பும் - அஷ்டகுலபருவதங்களும், கலங்கின - கலங்கிப்போயின; (எ - று.)—ஆல் - ஈற்றசை ; வியப்புக்குறிப்புமாம்.

எம்பெருமானது பஞ்சாயுதங்களு ளொன்றான சங்கத்தினது சிறப்பை இதனாற் கூறினார். "அருட்கொண்டலன்னவரங்கர் சங்கோசையி லண்டமெல்லாம், வெருட்கொண்டிடர்பட மோகித்து வீழ்ந்தனர் வேகமுடன், தருக்கொண்டுபோகப்பொருதே தொடருஞ் சதமகனுஞ், செருக்கொண்ட முப்பத்துமுக்கோடிதேவருஞ் சேனையுமே" என்றார் திருவரங்கத்துமாலையிலும். சாய்ந்து = சாய; எச்சத்திரிபு. சாய்ந்துகலங்கின என்று ஒருமுடிபாகவே உரைப்பாருமுளர். அண்டம்-உலகவுருண்டை. அண்டம், எண்டிசை, கடல், வெற்பு என்பன—அங்குள்ள ஜீவராசிகளையும் குறித்தலால், ஆகுபெயர்கள். தேவர்கள் கற்பகதருவின்நிழலில் வசித்தலை, "இன்றளிர்க்கற்பக நறுந்தேனிடைதுளிக்குநிழலிருக்கை" என்ற கம்பராமாயணத்தாலும் அறியலாம்.

"தேவர்கள் சபைகூடின இடமாதலால், இத்திருப்பதிக்கு 'திருத்தேவனார்தொகை' என்று பெயராயிற் றென்னலாம். (௩௩)

௩௪. திருவண்புருடோத்தமம்.

சாய்ந்ததிருவரங்கந்தண்வேங்கடங்குடந்தை
யேய்ந்ததிருமாலிருஞ்சோலை—பூந்துவரை
வண்புருடோத்தமமாம் வானவர்க்கும்வானவனு
மொண்புருடோத்தமன்றனூர்.

(இ - ள்.) வானவர்க்கும் வானவன் ஆம் - தேவர்கட்கெல்லாந் தேவனாகிய, ஒள் புருடோத்தமன்தன் - அழகிய புருஷோத்தமனென்னுந் திருமாலினது, ஊர் - திருப்பதிகளாவன,—சாய்ந்த திருவரங்கம் -(எம்பெருமான்) பள்ளிகொண்டிருக்கின்ற ஸ்ரீரங்கமும், தண் வேங்கடம் - குளிர்ந்த திருவேங்கடமலையும், குடந்தை - திருக்குடந்தையும், ஏய்ந்த திருமாலிருஞ்சோலை - (எம்பெருமானது திருவுள்ளத்துக்குப் பாங்காகப்) பொருந்திய திருமாலிருஞ்சோலைமலையும், பூ துவரை - அழகிய துவாரகையும், வண் புருடோத்தமம் - திருவண்புருடோத்தமமும், ஆம் - ஆகும்; (எ - று.)

புருஷோத்தமனென்ற வடசொல் - பத்தர்களும் முக்தர்களும் நித்யர்களுமாகிய புருஷர்கள் யாவரினுஞ் சிறந்தவ னென்று பொருள்படும். புருஷோத்தம னெழுந்தருளியிருக்கின்ற வளப்பமுள்ள திருப்பதி யாதலால், இதற்கு 'திருவண்புருடோத்தமம்' என்று பெயர். (௩௪)

## ௯௫. திருச்செம்பொன்செய்கோயில்.

ஊர்வேன் மடலையொழிவேன் மடநாணஞ்
சேர்வேன்கரியதிருமாலைப்—பாரறிய
வம்பொன்செய்கோயிலரங்கனணிநாங்கூர்ச்
செம்பொன்செய்கோயிலினிற்சென்று.

[தலைவி ஆற்றாமைமிகுதியால் மடலூரத் துணிதல்.]

(இ-ள்.) பார் அறிய-உலகத்தவரெல்லாம் உணரும்படி [வெளிப்படையாக], மடம் நாணம் ஒழிவேன் - மடப்பத்தையும் நாணத்தையும் துறந்தவளாகி, மடலை ஊர்வேன் - மடலூர்ந்துசெல்வேன்; (அதனாலேனும்),—அம் பொன் செய் கோயில் அரங்கன் - அழகிய பொன்னினாற் செய்யப்பட்ட கோயிலையுடைய திருவரங்க நாதனது, அணி - அழகிய, நாங்கூர் - திருநாங்கூரைச் சேர்ந்த, செம்பொன்செய்கோயிலினில் - திருச்செம்பொன் செய்கோயிலென்னுந் தலத்தில், சென்று - போய், கரிய திருமாலை-(அங்கு எழுந்தருளியுள்ள) கருநிறமுடைய எம்பெருமானை, சேர்வேன் - அடைவேன், (யான்); (எ - று.)

திருச்செம்பொன்செய்கோயிலென்னுந் தலத்தி லெழுந்தருளியுள்ள எம்பெருமானது திவ்விய சௌந்தரியத்தி லீடுபட்டு அவனது உத்தமபுருஷத்தன்மையைக் கருதியதனாலே அப்பொழுதே அவனைக் கிட்டவேண்டும் படியான ஆசையுண்டாய், அங்ஙனம் அவனைக்கிட்டப்பெறாமையாலே ஐயங்கார் ஆற்றாமை மீதூர்ந்து தளர்ந்தார்; அத்தளர்ச்சியாலே தாமானதன்மை குலைந்து, ஆண்பெண்ணும்படியான நிலைமை தோன்றி ஒருபிராட்டி நிலையை யடைந்தார். ஆண்பெண்ணுதல் கூடுமோ வெனின்,—"கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினாய்," "வாராக வாமனனே அரங்கா வட்டநேமிவலவா ராகவா உன்வடிவுகண்டால் மன்மதனும் மடவாராக ஆதரஞ்செய்வன்" என்ப வாதலாலே, இது கூடும்; தண்டகாரணியவாசிகளான முனிவர்கள் இராமபிரானது சௌந்தரியாதிசயத்தி லீடுபட்டுத் தாம் பெண்தன்மையைப் பெறவிரும்பி மற்றொருபிறப்பில் ஆயர் மங்கையராய்க் கண்ணனைக் கூடின ரென்ற ஐதிகியமு முணர்க. ("பெண்டிரும் ஆண்மைவெஃகிப் பேதுறுமுலையினாள்," "வாண்மதர்மழைக்கணோக்கி *** ஆண்விருப்புற்றுநின்றார் அவ்வளைத்தோளினாரே" எனப் பெண் ஆணாக விரும்பு மிடமு முண்டு.) அங்ஙனம் ஆண்பெண்ணுகிலும் சாதாரணப்பெண்மையையேயன்றி எம்பெருமானுக்குஉரியவளாகும் ஒருபிராட்டியின்நிலைமையை யடையுமாறு எங்ஙன மெனில்,—பரமாத்மாவினது தலைமையும், ஜீவாத்மாவினது அடிமையும், ஜீவாத்மா பரமாத்மாவுக்கே உரியதாயிருக்கையும், புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்குமுன் உலகமுழுதும் பெண்தன்மையதாதலும், ஜீவாத்மாவினது ஸ்வாதந்திரியமின்மையும், பாரதந்திரியமும், தாம் எம்பெருமானது சேர்க்கையால் இன்பத்தையும் பிரிவினால் துன்பத்தையு மடைதலும், அவனையே தாம் கா

ணங்களெல்லாவற்றாலும் அனுபவித்து ஆனந்தித்தலும் முதலிய காரணங்களால் தம்மைப் பிராட்டிமாரோடொக்கச் சொல்லத் தட்டில்லையென்க.

ஓர் உத்தமபுருஷன் பரிவாரத்துடன் வேட்டையாடுதற்குப் புறப்பட்டு வனத்திற்குச் சென்றவனும் ஓர் உத்தமகன்னிகையும் தோழியருடன் பூக்கொய்துவிளையாடுதற்கென்று பூஞ்சோலையிற் சேர்ந்தவளுமிலே, ஒவ்வொரு நிமித்தத்தால் தோழியர்பிரிய அக்கன்னிகை அங்குத் தனித்துநின்ற சமயத்திலே ஒவ்வொருநிமித்தத்தால் பரிவாரங்கள் பிரியத் தனிப்பட்டவனும் அப்புருஷன் அங்குவந்து சேர, இருவரும் தெய்வவசத்தால் தற்செயலாய் ஏகாந்தமான ஓரிடத்திலே சந்தித்து ஒருவர்பக்கல் ஒருவர் காதல்கொண்டு கொடுப்பாரும் அடுப்பாருமின்றித் தமதுவிருப்பத்தின்படி களவுப்புணர்ச்சிபுணர்ந்து பிரிந்தபின்பு ஆற்றாமைமிஞ்சி அதனால் நாணம் முதலியன அழிந்து இவர்களுள் ஒருவர் மற்றொருவரது வடிவத்தையும் ஊரையும் பேரையும் தமதுஊரையும் பேரையும் ஒருபடத்திலெழுதி அச்சித்திரபடத்தைக் கையிற்கொண்டு பனைமடலினால் ஒருகுதிரையுருச்செய்வித்து அதன்மீது தாம் ஏறி அதனைப் பிறராலிழுப்பித்து வீதிவழியே பலருங்கூடும் பொதுவிடங்களிலெல்லாஞ் செல்லுபவராவர்; இது, மடலூர்த லெனவும், மடன்மாவேறுத லெனவும் படும். இதற்குப் பயன் - இவரது இக்கடுந்தொழிலைக் கண்டு அதனால் இவரதுபெருவேட்கையை யுணர்ந்து உறவினராயினும் அரசனாயினும் வெளிப்படையாக மணஞ்செய்துவைக்கப்பெறுதலாம். இம்மடற்றிறம் ஆடவர்க்கே பெரும்பாலும் உரியது. அளவுக்குமிஞ்சின ஆசையின்மிகுதியால் மகளிர்க்குஞ் சிறுபான்மை வரும். அன்றியும், மடலூர்தல் ஆடவர்க்கே யுரியதென்றும், மடலூர்வேனென்று சொல்லுதல் இருபாலார்க்கும் உரியதென்றும் உணர்க. இங்குக்கூறிய இது, தலைவியின் மடற்றிறம். பிரிவாற்றாது வருந்துந் தலைமகள் காதல்மிகுதியால் நாணந்துறந்து மடலூரத் துணிந்தமையைக் கூறுதல், இச்செய்யுளிற் குறிக்கப்பட்ட விஷயம்.

தோத்திரப்பிரபந்தங்களில் அகப்பொருட்கிளவித்துறைகளை இடையிடையே கூறுதல் கவிசமயமாதலை, இலக்கியங்கள்கொண்டு உணர்க. சிருங்காரரசப்பிரதானமான அகப்பொருட்கிளவித்துறைகளை ஞானநூலாகிய தோத்திரப் பிரபந்தங்களிற் கூறுதற்குக் காரணம், கடுத்தின்னாதானைக் கட்டிபூசிக் கடுத்தின்பிப்பார்போலச் சிற்றின்பங்கூறும் வகையாற் பேரின்பத்தைக் காட்டி நாட்டுதலென்பர். இங்ஙனம் வெளிப்படைப்பொருளால் அந்யாபதேசமாகக் கூறுகின்ற சிற்றின்பத்துறைச்செய்யுள்கட்கெல்லாம் ஸ்வாபதேசமாகப் பேரின்பத்தின்பாற் படுத்தும் உள்ளுறைபொருள் உண்டென்பதையும் உணர்க. அன்றியும், இங்குக் கூறியது, உலகவாழ்க்கைச் சிற்றின்பமன்று: "நான்கினுங் கண்ணனுக்கேயாமது காமம்" என்றபடி எம்பெருமானைச் சேரவேண்டுமென்று அவன்பக்கலிலே யுண்டாகின்ற அபேக்ஷையையே கூறியது. "கோவிந்தா, எற்றைக்கு மேழேழ்பிறவிக்கு முன்றன்னோடுற்றோமேயாவோம் உனக்கேநாமாட்செய்வோம், மற்றைநங்

காமங்கள் மாற்று" என்றபடி லோகநாயகனுடைய சேர்க்கையை அபேக்ஷிக்கின்ற பேரின்பக்காதலானது வேதாந்தநிர்ணயத்தின்படி அன்புசெலுத்த வேண்டியஇடத்தில் அன்புசெலுத்திய தாதலால், சிற்றின்பக்காதல்போலன்றி, ஸகலபாபநிவ்ருத்திக்கும் வீடுபேற்றுக்குமே காரணமாம். கண்ணபிரான்பக்கல் கொண்ட காமத்தால் கோபஸ்திரீகள் மூத்தி பெற்றனரென்று புராணங் கூறுதலுங் காண்க.

ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமான் மறைந்தவளவிலே அவனதுநிரந்தராநுபவத்தில் அபேக்ஷையுடைய இவர் ஸ்வதந்திரனை அவன் மீண்டும் தானாகவந்து தம்மைச்சேர்த்துக் கொண்டருளுங்காலத்தின் வரவை யெதிர்நோக்கிப் பொறுத்துப் பாரதந்திரராய் ஆறியிருப்பது தகுதியாக, தமது அவாவின்மிகுதியால் அத்தன்மை குலைந்து எவ்வாற்றாலாயினும் தாம் முயன்று அவனதுசாந்நித்தியத்தைப் பெறுதற்கு விரைதலையெடுத்துஉரைத்தல், இச்செய்யுளுக்கு உள்ளுறைபொருளாம். மடலூர்தலுக்கு ஸ்வாபதேசம் - பாரதந்திரியத்தை விட்டு ஸ்வாதந்திரியத்தை மேற்கொண்டு ஸாதநாநுஷ்டாநஞ்செய்தல். இவரது பாரதந்திரியநிலை குலையாதபடி எம்பெருமான் ஸாந்நித்தியத்தைத் தந்தருளுமாறு செய்தல், இதன் பயனும். பிறவும் ஆய்ந்துஉணர்க.

மடல் என்ற சொல் - இலக்கணையால், அதனாலியன்ற குதிரையைக் குறித்தது. மடம், நாணம் என்பன - மகடூஉக்குணங்கள் நான்கைச் சேர்ந்தவை: மற்றவை - அச்சமும் பயிர்ப்புமாம்: இவற்றுள், மடமாவது - அறிந்தும் அறியாதுபோலிருத்தல்; கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமையென்றுங் கூறுவர். நாணமாவது - செய்யத்தகாதவற்றின்கண் உள்ளமொடுங்குதல். அச்சமாவது - பலஆடவர்களினிடையிற் செல்லக்கூசுதல். பயிர்ப்பாவது - கணவனல்லாத மற்றைப்புருஷரது ஆடை முதலியன தம்மேற்பட்டால் அருவருப்புக்கொள்ளுதல். (௬௫)

௬௬. திருத்தேற்றியம்பலம்.

சென்றதுகாலந் திரைநரைமூப்பானவினி
யென்றுகொல்சாவறியோ மென்னெஞ்சே—கன்று
லுருத்தெற்றியம்பலத்தையோர்விளவின்வீழ்த்தான்
திருத்தெற்றியம்பலத்தைச்சேர்.

(இ - ள்.) என் நெஞ்சே - எனது மனமே!—(நமக்கோ),—காலம் சென்றது - வாழ்நாள் பெரும்பாலுங் கழிந்திட்டது; திரை - தோற்சுருக்கமும், நரை - மயிர்வெளுத்தலும், மூப்பு - கிழத்தனமும், ஆன - தோன்றியுள்ளன; இனி - இனிமேல், சாவு - மரணம், என்றுகொல் - என்றைக்கோ? அறியோம் - அறிந்திலோம்; (ஆதலால், நமது ஆயுள் முடிவதற்குள்), ஓர் விளவின் அம் பலத்தை-ஒருவிளாமரத்திலுள்ள (அசுராவேசங்கொண்ட) அழகிய பழத்தை(க்கண்டு), உருத்து - கோபித்து, கன்றால் -(அசுராவேசங்கொண்ட) இளங்கன்றைக்கொண்டு, எற்றி - வீசியெறிந்து, வீழ்த்தான் - விழச்செய்தவ

ஞன திருமாலினது, திருத்தெற்றியம்பலத்தை - திருத்தெற்றியம்பலமென்னுந் திவ்வியதலத்தை, சேர் - இடைவிடாது தியானிப்பாயாக; (எ - று.)

இதனால், பழுதே பலபகலும் போயினமைக்கு இரங்கி, ஒவ்வொருகரணமும் ஒடுங்கிக்கொண்டே வருகின்ற முதுமைப்பருவத்திலும் தமது நெஞ்சமானது மரணம் பின்றையே நின்றதென்ற சிந்தனை சிறிதுமின்றி உலகப்பற்றுக்கொண்டு உழல்வது கண்டு ஆற்றாது, அந்நெஞ்சை நோக்கி இனியாவது எம்பெருமானது திவ்வியதலத்தைச் சேர்ந்து உய்வுபெறுவாயென்று உணர்த்துகின்றனரென்க. இதுவரை வீணே கழிந்த நாள்களைக்குறித்துக் கழிவிரக்கங் கொள்ளுகிறவளவோடு நில்லாமல், இனி உயிர் வாழும் நாள்களுள் "நின்றபிராணன் கழலுமுன்னே நெஞ்சமே நினையாய்" என்றபடி இறப்பதற்குமுன்னே எம்பெருமானெழுந்தருளியுள்ள தலத்தைத் தியானித்தாலும் அதுபயன்படுமென்பது, கருத்து. பின்னிரண்டடிகளில், நெஞ்சே! விரோதிநிரஸநசீலனான எம்பெருமானது திவ்வியதலத்தை நீ சேர்வாயாயின், அவனும் வேண்டா, அப்பிரானது திவ்யதலமே பகவத்தியானத்திற்கு இடையூறு உண்டாக்குகின்ற உனது விரோதிகளைப் போக்குமென்ற கருத்துத் தொனிக்கும். இடைச்சிறுவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கு விருப்பத்தையுண்டாக்குமாறு ஓரசுரன் ஆவேசித்ததனால் இயற்கைக் கனிகளினும் இனியதோற்றத்துடன் அவ்விளவின்கனி இருந்ததென்பார், அதற்கு 'அம்' என்ற அடைமொழி கொடுத்துக்கூறினர். கன்றினிடத்து ஆவேசித்த அசுரன் வத்ஸாசுரனென்றும், விளங்கனியினிடத்து ஆவேசித்த அசுரன் கபித்தாசுரனென்றும் பெயர்பெறுவர். (நகூ)

## நள. திருமணிக்கூடம்.

சேராதுமுன்செய்ததீவினை பின்செய்வதுவும்
வாரா தினிநீமடநெஞ்சே—நேராக்
குருமணிக்கூடத்தானைக்கொம்புபறித்தானைத்
திருமணிக்கூடத்தானைச்செப்பு.

(இ - ள்.) மடம் நெஞ்சே - அறியாமையையுடைய எனதுமனமே!—நேரா - எதிர்த்து, குரு மணி கூடத்து - சிறந்த இரத்தினங்களிழைத்துச் செய்யப்பெற்ற கூடத்தி லிருந்த, ஆனை - (குவலயாபீடமென்னும்) பட்டத்துயானையினது, கொம்பு - தந்தங்களை, பறித்தானை - வேரோடுபிடுங்கி (அதனால் அதனை அடித்து) அழித்தவனும், திருமணிக்கூடத்தானை - திருமணிக்கூடமென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியிருப்பவனுமாகிய திருமாலை, நீ செப்பு - நீ இடைவிடாது துதிசெய்ய உதவுவாய்; (அவ்வாறுசெய்வாயாயின்),—முன் செய்த தீ வினை - நீமுற்பிறப்பிற்செய்து சேர்த்துவைத்துள்ள (ஸஞ்சிதம் அநப்யுபகதப்ராரப்தம் என்ற இரண்டுவகைப்) பாவமும், சேராது -(தன்பயனை ஊட்டுமாறு உன்னை) அணுகாது; பின்செய்வதுவும் - இனி (அபுத்திபூர்வகமாகச்) செய்கின்ற (ஆகாம்யமெனப்படும்) பாவமும், இனி வாராது - இனிமேல் (உன்னை) அணுகாது ; (எ - று.)

பிறப்பு அநாதியாய் வருதலின் தமது உயிரால் அளவின்றி யீட்டப்பட்ட வினைகளின்பயன்களுள் இதுவரை அனுபவித்தவைபோக இனி அனுபவிக்கக் கடவனவாய் நின்ற கருமங்களெல்லாம் எம்பெருமான் திருநாமத்தைச்சொன்னமாத்திரத்தில் உடனே அவனருளால் இருந்ததுதெரியாதபடி அழிந்திட, அபுத்திபூர்வகமாக இனி நேரிடுங் கருமங்களும் காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுத்துய்போல அழிந்தொழியு மென்பதாம். புண்ணியமும் பொன் விலங்குபோன்று மோட்சத்திற்குத்தடையாய்ப் பிறப்பிற்கு ஏதுவாதல்பற்றி, அதனையுஞ்சேர்த்து 'தீவினை' என்றே கூறினர். "போயபிழையும் புகுதருவானின்றனவுந் தீயினிற்றூசாகுஞ் செப்பு" என்ற ஆண்டாள் அருளிச்செயலும், "செப்பு - வாங்மநஃகாயங்களால் அநுபவிக்கவேணுமென்றது மிகை; விரோதி போனைக்கு உக்திக்குமேல் வேண்டா வென்கை; அவன், இவன் அநுகூலித்தவாறே பூர்வாகத்தை [ஞானம்பிறப்பதற்குமுன்செய்த பாபத்தை] விஸ்மரிக்கும் [மறப்பான்]; உத்தராகத்துக்கு அவிஜ்ஞாதா [அறியாதவன்] ஆம்: இனி யார் அநுபவிப்பார்? அவன்பொறுத்தே னென்னத் தீருமத்தனையிறே இது" என்ற வ்யாக்யாநவாக்யங்களும் இங்குக் காணத்தக்கன.

பாலுங் கண்டசர்க்கரையும் கலந்து குடிக்கப் பித்தம் தன்னடையே போமாறுபோல, எம்பெருமானது திருநாமத்தை ஒருகால் உச்சரித்தமாத்திரத்தில் தீவினைகளெல்லாமொழிந்து நற்கதிபெறுதல் எளிதாயிருக்க, சுகமான இந்த உபாயத்தை மேற்கொள்ளாது அலைகின்ற தம்மனத்தை ஐயங்கார் 'மடநெஞ்சே' என்று விளித்தல் ஏற்கும். 'குருமணி' என்பதை ஆனைக்கொம்புக்கு அடைமொழியாக்கி, சிறந்தமுத்துக்கள் தோன்றுதற்கு இடமான யானைத்தந்தம் என உரைப்பினுமாம்: யானைக்கொம்பு முத்துப்பிறத்தற்கு உரிய இருபது இடங்களு ளொன்றாதலும், முத்து நவமணிகளு ளொன்றாதலும் அறிக. (௬௭)

## ௬௮. திருக்காவளம்பாடி.

செப்பேன்மனிதருக்கென்செஞ்சொற்றமிழ்மாலை
கைப்பேன்பிறதெய்வங்காண்பாரை—யெப்போதுங்
காவளம்பாடித்திருமால்காற்றாமரைதொழுது
நாவளம்பாடித்திரிவேனான்.

(இ - ள்.) நான்—, எப்போதும் - எக்காலத்திலும், என் செஞ் சொல் தமிழ் மாலை - இன்சொற்கள் நிறைந்த எனது தமிழ்ப்பாமாலையை, மனிதருக்கு - மனிதரைப்பற்றி, செப்பேன் - (ஒருபோதும்) பாடமாட்டேன்; பிற தெய்வம் காண்பாரை - தேவதாந்தரங்களைத் தரிசிக்கின்ற அவைஷ்ணவரை, கைப்பேன் - வெறுப்பேன்; காவளம்பாடி திருமால் - திருக்காவளம்பாடி யென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியுள்ள திருமாலினது, கால் தாமரை - திருவடித்தாமரைகளை, தொழுது - வணங்கி, நா - (எனது) நாவினால், வளம் பாடி - வளமாகக் கவிபாடிக்கொண்டு, திரிவேன் - யாதொரு கவலையுமின்றி இனிதுகாலங்கழிப்பேன்; (எ - று.)

பந்தத்திற்கு ஏதுவான நரஸ்துதிசெய்வதைவிட்டு, தேவதாந்தரபஜநஞ் செய்வாரையும் வெறுத்து, மோட்சத்திற்கே ஏதுவான திருமாலினது திருவடித்தாமரைகளைக் கவிபாடித் துதித்துப் பொழுதுபோக்குவே னென்று மறந்தும் புறந்தொழாத வீரவைஷ்ணவராகிய தமது அநுஷ்டாநத்தை வெளியிட்டன ரென்க. தேவாதிதேவனை திருமாலைத் துதித்தற்கு உதவியாதல்பற்றி, தமதுபாடல்களை 'செஞ்சொல்தமிழ்மாலை' என்றனர். 'கைப்பேன் பிறதெய்வங்காண்பாரை' என்பதனால், இவர் பிறதெய்வங்களைக் காணுதலுஞ்செய்யாமை சொல்லாமலே அமையும்; இன்னும் இதனால், "ஞானத்தினொளியுருவை நினைவா ரென்நாயகரே", "கொண்டாடும் நெஞ்சுடையாரவரெங்கள்குலதெய்வமே" என்றபடி திருமாலைத் துதிக்கும் மெய்யடியார்களிடத்தில் பிரேமையுள்ளவ ரிவரென்பதும் பெறப்படும். (௯௮)

௯௯. திருவெள்ளக்குளம்.

நானடிமைசெய்யவிடாய்நானானே னெம்பெருமான்
றானடிமைகொள்ளவிடாய்தானானா—னதற்பின்
வெள்ளக்குளத்தேவிடாயிருவருந்தணிந்தோ
முள்ளக்குளத்தேனையொத்து.

(இ - ள்.) நான்—, அடிமை செய்ய - (எம்பெருமானுக்குத்) திருத்தொண்டுசெய்யவேண்டு மென்று, நான் விடாய் ஆனேன் - நான் பேராவல் கொண்டவனானேன்; எம்பெருமான்—, தான் - தானும், அடிமை கொள்ள - (என்னை) அடிமையாகக் கொள்ளவேண்டு மென்று, தான் விடாய் ஆனான் - தான் பேராவல்கொண்டவனானான்; ஆனதன் பின் - இங்ஙனம் இருவரும் விடாய்கொண்டபின்பு, வெள்ளக்குளத்தே - திருவெள்ளக்குள மென்னூந் திருப்பதியில், இருவரும் - யாங்களிருவரும், உள்ளம் குளம் தேனை ஒத்து - மனத்தில் சர்க்கரைப்பாகையும் தேனையும் போன்று, (ஒன்றுசேர்ந்து), விடாய் தணிந்தோம் - எங்கள் வேட்கை தணியப்பெற்றோம்; (எ - று.)

எம்பெருமானது ஜாயமாநகடாக்ஷத்தால் அப்பிரானுக்குத் திருத்தொண்டுசெய்தாலன்றித் தரித்திருக்கவொண்ணாத நிலைமை எனக்கு உண்டாக, உடையவன் பயிர்த்தலையிலே குடிசைகட்டிக்கொண்டு நிற்பதுபோல எம்பெருமானும் திவ்வியதேசங்கள்தோறும் எழுந்தருளியிருந்து எப்போது சேதநலாபம் தனக்கு நேருமோ வென்று பேராவல்கொண்டு எதிர்பார்த்து நிற்க, நான் அங்குச் சென்று அப்பிரானைத் தரிசித்து அடிமைசெய்யவே அப்பிரானும் உவந்து என்னை ஆட்கொள்ள, அதனால் இருவரும் விடாய் தீரப்பெற்றோ மென்பதாம். திருவெள்ளக்குளம் என்ற அந்தத்திவ்வியதலத்தின் திருநாமத்திற்கு ஏற்ப, 'விடாய்தணிந்தோம்' என்று சமத்காரந்தோன்றக் கூறின ரென்க.

எம்பெருமான் வ்யூஹம் விபவம் முதலிய நிலைகளை மேற்கொண்டும் அவை பயனிலவாதல்பற்றி, அர்ச்சாவதாரத்தை மேற்கொண்டு உலகத்து உயிர்களை அடிமைகொள்கின்றன னென்பது, நூல்துணிபு. "பூர்த்தியுள்ள

தும் அர்ச்சாவதாரத்திலே; ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ப்ரபத்திபண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே. பூர்ணமென்கையாலே, எல்லாக்குணங்களும் புஷ்கலங்கள். ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள் இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாசிப்பது இங்கே. பூர்த்தியையும் ஸ்வாதந்த்ரியத்தையுங் குலைத்துக்கொண்டு தன்னை அநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்துநிற்கிற இடம். பூகதஜலம்போலே அந்தர்யாமித்வம்; ஆவரண ஜலம்போலே பரத்வம். பாற்கடல்போலே வ்யூஹம். பெருக்காறுபோலே விபவங்கள். அதிலே தேங்கின மடுக்கள்போலே அர்ச்சாவதாரம். இதுதான் ஶாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாதே விஷயாந்தரங்களிலேமண்டி விமுகராய்ப்போருஞ் சேதநர்க்கு வைமுக்யத்தை மாற்றி ருசியை விளைக்கக்கடவதாய், ருசிபிறந்தால் உபாயமாய் உபாயபரிக்ரஹம்பண்ணினால் போக்யமுமாய் இருக்கும்" என்பது, ஸ்ரீவசநபூஷணம்.

ஐயங்கார், தமக்கு அடிமைசெய்யும் விருப்பம் மிக்கிருப்பதையும், அப்பிரானுக்குத் தம்மை அடிமைகொள்ளும் விருப்பம் தம்மினும் மிக்கிருப்பதையும் விளக்குவதற்கு, 'நான்', 'தான்' என்ற சொற்களை இருமுறை கூறினர்: இனி, இவ்விரண்டு சொல்லையும் அசைநிலை யென்பாரு முளர். ஜீவாத்மஸ்வரூபமும் பரமாத்மஸ்வரூபமும் தனித்தனி இனிதாயிருத்தல்பற்றி, அவ்விரண்டற்கும் நேர்ந்த சேர்க்கைக்கு சர்க்கரைக்குந் தேனுக்கும் நேர்ந்த சேர்க்கையை உவமைகூறினர். உபமானப்பொருள்கள் அசேதநமாதலால், அவை தமது இனிமையை யுணரமாட்டா; உபமேயத்திலோ, ஒன்று சேதநமும் மற்றொன்று பரமசேதநமு மாதலால், அவை அவ்வினிமையை நன்கு உணருமென வேறுபாடு காண்க. ஆகவே, இங்கு, உபமானத்தினும் உபமேயம் மிக்கதாதலால், எதிர்நிலையணி தொனிக்கும். இருவரும் = இருவோமும்: தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. (௩௯)

## ௪௦. திருப்பார்த்தன்பள்ளி.

ஒத்தமரரேத்துமொளிவிசும்பும்பாற்கடலு
மித்தலத்திற்காண்பரிய வென்னெஞ்சே—சித்துணர்ந்த
தீர்த்தன்பள்ளிக்கிருந்துசெப்பவெளிநின்றானைப்
பார்த்தன்பள்ளிக்குட்பணி.

(இ - ள்.) என் நெஞ்சே—! ஒத்து - ஒன்றுகூடி, அமரர் - நித்தியசூரிகளும் தேவர்களும், ஏத்தும் - துதிக்கின்ற, ஒளி விசும்பும் - பேரொளிவடிவமான பரமபதமும், பால்கடலும் - திருப்பாற்கடலும், இ தலத்தில் - இந்தப்பூமியில், காண்பு அரிய - காணுதற்கு அரியனவாம்; (ஆதலால், அவைகளை விட்டு), சித்து உணர்ந்த - ஜீவாத்மாவின் உண்மைநிலையை யுணர்ந்த, தீர்த்தன் - பரிசுத்தனான பிரகலாதாழ்வான், பள்ளிக்கு இருந்து - பள்ளிக்கூடத்திலிருந்து [பள்ளிக்கூடத்திற்படிக்கின்ற சிறுவனாயிருந்தும்], செப்ப - (தனது தந்தை வினவியதற்கு 'எங்குமுளன்' என்று) மறுமொழிகூற, வெளி

நின்றானை - (அதுகேட்டு வெகுண்டு இரணியன் தூணைத் தட்ட அதனி னின்று நரசிங்கமாகி) வெளித்தோன்றிய திருமாலை, பார்த்தன்பள்ளிக்குள்- திருப்பார்த்தன்பள்ளியென்னுந் திவ்வியதலத்திற் சென்று, பணி - வணங்கு வாயாக ; (எ - று.)

பரத்வநிலையாகிய பரமபதத்தையும் வ்யூஹநிலையாகிய திருப்பாற்கடலை யுங் கூறியது - மற்றை விபவநிலை அந்தர்யாமித்வநிலை என்ற இரண்டற்கும் உபலக்ஷணம். பரத்வமும் வ்யூஹமும் தேசத்தினால் மிகவும் சேய்மையன வாதலால் அவைகள் காணமுடியாதனவாம்; விபவநிலையோ தேசத்தினாற் சேய்மையதன்றாயினும் அக்காலத்தார்க்கன்றிப் பிற்பாடரான நம்மாற் கா ணவிரகில்லை; அந்தர்யாமித்வமோ தேசம் காலம் என்ற இரண்டினாலும் சேய் மையதன்றாயினும் ஞானதிருஷ்டியினாலன்றி வேறுவகையாற் காண இய லாது; ஆகையால், அஜ்ஞரான நமக்கு அதுவும் பயனற்றதேயாம்; ஆகவே, ஒருவகையாலும் அருமைப்பாடின்றி ஆங்காங்குக் கோயில்கொண்டெழுந் தருளியிருக்கின்ற அர்ச்சையே நமக்கெல்லாம் எளிதில் அடைந்து ஈடேறு தற்கு உரிய தாகையால், அவற்றுளொன்றான திருப்பார்த்தன்பள்ளியை யடைந்து உய்வுபெறுவா யென்று தம்மனத்தை நோக்கிக் கூறினரென்க. "த்ருஷார்த்தனுக்கு [நீர்வேட்கையுடையவனுக்கு] தேசாந்தரத்திற் போக வேண்டாதபடி நிற்கிற இடந்தன்னிலே உண்டாயிருக்கச்செய்தேயும் கொட்டும் குந்தாலியுங் கொண்டு கல்லினாலல்லது குடிக்கக் கிடையாத பூகதஜலம்போலே யாயிற்று, கண்டு பற்றவேணுமென்று ஆசைப்பட்ட வனுக்கு ஹ்ருதயத்திலே யிருக்கச்செய்தேயும் "கட்கிலீ" என்கிறபடியே கண்ணுக்கு விஷயமன்றிக்கே அஷ்டாங்கயோகரூபயத்நத்தாலே காண வேண்டும்படியான அந்தர்யாமித்வம். அவனுக்கு [தாகித்தவனுக்கு] அண்ட த்துக்குப்புறம்பே பெருகிக்கிடக்கிற ஆவரணஜலம்போலே யாயிற்று, இவனுக்கும் [பற்றவேணுமென்று ஆசைப்பட்டவனுக்கும்] "அப்பால் முதலாய்நின்ற அளப்பரிய ஆரமுது" என்கிற படியே லீலாவிபூதிக்கு அப்பாற்பட்டிருக்கிற பரத்வம். அப்படி அதிவிப்ரக்ருஷ்டம் [தூரத்தி லுள்ளது] அன்றியே அண்டாந்தர்ப்பூதமாயிருக்கச்செய்தேயும் அவனுக்கு துஷ்ப்ராபம் [அடைவதற்கு அரியது] ஆன பாற்கடல் போலே யாயிற்று, இவனுக்கும் "பாலாழிநீகிடக்கும் பண்பை யாங்கேட்டேயும்" என்கிற படியே கேட்டிருக்குமித்தனையல்லது சென்றுகாண அரிதாம்படியிருக்கிற வ்யூஹம். ப்ரத்யாஸந்நம் [கிட்டியது] ஆயும் தாத்காலிகர்க்கு உபஜீவ்ய மாய்ப் பாஸ்சாத்யன் [பிற்காலத்தவன்] ஆனவனுக்குத் துர்லபமான பெருக்காறுபோலே யாயிற்று, "மண்மீதுழல்வாய்" என்கிறபடியே பூமி யிலே அவதரித்து ஸஞ்சரித்தும் தத்காலவர்த்திகளுக்கு ஆஸ்ரயணீயமாய்ப் பிற்காலத்திலுள்ளானை இவனுக்குக் கிட்டாதபடியான விபவம். முன்பு சொன்னவைபோலன்றிக்கே அவனுக்கு விடாய்கெடப் பருகலாம்படி பெ ருக்காற்றிலே தேங்கின மடுக்கள்போலே யாயிற்று, இவனுக்கும் தேசகால கரண விப்ரக்ருஷ்டமன்றிக்கே கோயில்களிலும் க்ருஹங்களிலும் எங்கு மொக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படிநிற்கிற பின்னானார்வணங்

குஞ்சோதியான அர்ச்சாவதாரம்" என்ற ஆன்றோர் வ்யாக்யாநவாக்யங்கள் இங்குக் கருதத்தக்கன.

சித்து - உணர்வுடையது: ஆத்மா: சித்தை உணர்தலாவது - "ஆத்மஸ்வரூபந்தான் - "சென்றுசென்றுபரம்பரமாய்"என்கிறபடியே தேஹ இந்த்ரிய மநః ப்ராண புத்தி விலக்ஷணமாய், அஜடமாய், ஆநந்தரூபமாய், நித்யமாய், அணுவாய், அவ்யக்தமாய், அசிந்த்யமாய், நிரவயவமாய், நிர்விகாரமாய், ஜ்ஞாநாஸ்ரயமாய், ஈஸ்வரனுக்கு நியாம்யமாய், தார்யமாய், ஶேஷமாயிருக்கும்" என்று அறிகை. இவ்வாறு இதனையறியவே, மற்றையிரண்டு தத்வங்களாகிய அசித் ஈஸ்வர தத்வங்களும் அறியப்பட்டனவாம். 'பள்ளிக்கிருந்து' என்றதனால், பிரகலாதாழ்வானுடைய இளமைப்பருவத்தை விளக்கியபடியாம். (சா)

சோழநாட்டுத்திருப்பதிகள் முற்றும்.

---

## பாண்டிநாட்டுத்திருப்பதிகள் - கஅ.

### க. திருமாலிருஞ்சோலைமலை.

பணிந்தேன்றிருமாலைப் பாமாலைதாளி
லணிந்தே னருட்டஞ்சமாகத்—துணிந்தேன்
றிருமாலிருஞ்சோலைசேர்ந்தே னெனக்கு
வருமாலிருஞ்சோதிவான்.

(இ - ள்.) (நான்),—திருமாலிருஞ்சோலை-(அழகன் எழுந்தருளியுள்ள) திருமாலிருஞ்சோலை யென்னும் திவ்வியதலத்தை, சேர்ந்தேன் - அடைந்தேன்; திருமாலை ஶ்ரியఃபதியான அவ்வெம்பெருமானை, பணிந்தேன் - வணங்கினேன்; பா மாலை - தமிழ்ப்பாடலினாலாகிய மாலையை, தாளில் - (அவனது) திருவடிகளில், அணிந்தேன் - சூட்டினேன்; அருள் - (அவனது) திருவருளையே, தஞ்சம் ஆக - பற்றுக்கோடாக, துணிந்தேன் - நிச்சயித்தேன்; (அங்ஙனம் துணிந்ததனால், இனி), எனக்கு—, இருஞ் சோதி வான் - பெரிய ஒளிவடிவமான பரமபதம், வரும் - கிடைக்கும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

திருமாலிருஞ்சோலைமலையைச் சேர்ந்து அங்குஎழுந்தருளியுள்ள அழகப்பிரானைச் சேவித்து அப்பிரான்திருவடிகளிற் பாமாலைசூட்டி அவனது அருளையே தஞ்சமாகத் துணிந்திருத்தலால், அவனருளால் எனக்கு நற்பேறுவாய்த்தல் திண்ணமென்பதாம். "பணிந்தேன்திருமேனி பைங்கமலங் கையால், அணிந்தேன் உன்சேவடிமே லன்பாய்த் - துணிந்தேன், புரிந்தேத்தி உன்னைப் புகலிடம்பார்த்து ஆங்கே, இருந்தேத்திவாழுமிது"என்ற பாசுரத்தை அடியொற்றியது, இச்செய்யுள். இறைவன் எழுந்தருளியிருக்

இன்ற பரமபதம், மூச்சுடர்களின் ஒளியினும் மிக்கபேரொளியுடைமையால், 'இருஞ்சோதிவான்' என்றார். வரும் மால் இருஞ்சோதி வான் என்று பிரித்து, திருமாலினது பரமபதம் கிடைக்குமென்றும் பொருள்கூறலாம். (சக)

## உ. திருக்கோட்டியூர்.

வான்பார்க்கும்பைங்கூழ்போல்வாளாவுனதருளே
யான்பார்க்கநீபார்த்திரங்கினாய்—தேன்பார்ப்பி
னோசைத்திருக்கோட்டியூரானே யின்னுமுமென்
னாசைத்திருக்கோட்டியாள்.

(இ - ள்.) தேன் பார்ப்பின் ஓசை - இளவண்டுகளுடைய ரீங்காரவோசை மிகுந்த, திருக்கோட்டியூரானே - திருக்கோட்டியூரென்னுந் திவ்விய தலத்தி லெழுந்தருளியிருக்குந் திருமாலே!—வான் பார்க்கும் பைங்கூழ் போல் - வானத்தெழுகின்ற மழையையே யெதிர்நோக்குகின்ற பசியபயிரைப்போல, வாளா - சும்மா [எப்போதும்], உனது அருளே - உன்னுடைய திருவருளையே, யான் பார்க்க - நான் ஆதரத்தோடு எதிர்நோக்க, நீ பார்த்து இரங்கினாய் - நீ (அதனைக்) கடாக்ஷித்து (என்மீது) அருள்புரிந்தாய்; இன்னமும் - இனிமேலும், என் - எனது, ஆசை திருக்கு - இவ்வுலகப் பற்றாகிய மாறுபாட்டை, ஓட்டி - போக்கி, ஆள் - (என்னை) ஆட்கொள்வாயாக; (எ - று.)

தாபத்தைத்தணித்துத் தன்னைக்காத்தற்குஉரிய மேகம் மழைபொழியாது நீட்டிக்கநீட்டிக்கப் பயிர் அதனை ஆவலோடு எதிர்பார்க்குந் தன்மை மிகுதல்போல, பிறவித்துன்பத்தை யொழித்து என்னைப் பாதுகாத்தற்கு உரிய நீ தண்ணளிசெய்யாது உபேக்ஷிக்கஉபேக்ஷிக்க என்மனம் உன்பக்கலிலே ஒருகாலைக்குஒருகால் மிகவும் அன்புகொண்டு ஆழ்ந்துநிற்க, அதனைக் கண்ட நீ வெகுகாலத்திற்குப் பின்பு என்னிடத்துத் திருவருட்பார்வையை வைத்துள்ளாயாதலால், இனிப் பலவகைப்பற்றுக்களால் என்மனம் தீயவழிச்செல்லாதபடி அதன்மாறுபாட்டை நீக்கி என்னை அடிமைகொள்ளவேண்டு மென்பதாம். பயிர் வானையே பார்த்திருத்தற்குக் காரணம் வேறொரு நீர்நிலத்தைத் தேடிப்போகமாட்டாமைபோலவே, ஐயங்கார் இங்ஙனம் ஆதற்குக் காரணம் வேறொருபுகலிடத்தைப் பெறாமை யென்க. வாளா என்பதற்கு-உன்கருணையைப் பெறுவதற்குஉரிய உபாயம் என்னிடத்து இல்லாதிருக்கவும் என்று கருத்துக் கொள்ளினும் அமையும். எம்பெருமான்திருவருளைப் பெற்றபிறகு 'என்னாசைத்திருக்கோட்டியாள்' என்று பிரார்த்திப்பதற்குக் காரணம் என்னையோ வெனின்,— "விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையுஞ் செறும் ஐம்புலனிவை," "இருள்தருமாஞாலம்" என்றபடி நிலத்தின்தன்மையாலும் ஐம்பொறிகளின்வலிமையாலும் ஒருகால் மீண்டும் அவனது திருவருளுக்கு விலக்காய்ச் செல்லுமாறு நேர்ந்திடுமோ? என்று அதிசங்கை கொண்டமை யென்க. ஆசை யென்பது - மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்ற மூன்றையும் குறிக்கும்.

இரணியாசுரன் மூவுலகத்தையும் ஆட்சிசெய்தகாலத்தில் தேவர்கள் அவ்வசுரனையொழித்தற்கு வேண்டும் உபாயத்தை ஆலோசிப்பதற்கு ஏற்றதாய், அசுரருபத்திரவமில்லாத இடத்தைத் தேடுகையில் கதம்பமுனிவரது சாபத்தால் 'துஷ்டர்ஒருவரும் வரக்கூடாது' என்று ஏற்பட்டிருந்த இந்தக்ஷேத்ரம் அவர்கள் கூட்டமாகஇருந்து ஆலோசித்தற்கு ஏற்ற இடமாயிருந்த காரணம்பற்றி, இத்தலத்திற்கு 'கோஷ்டீபுரம்' என்று வடமொழியிற் பெயர்; அதுவே,'கோட்டியூர்' எனத் தமிழில் வழங்குகின்றது. இத்தலத்திற்கு 'தேன்பார்ப்பினோசை' என்று அடைமொழி கொடுத்துக் கூறியதனால், இத்தலம் வசித்தற்கு இனியசோலையைக்கொண்டுள்ளதாய் நீர்வளநிலவளங்களால் மிக்கிருக்கு மென்பது பெறப்படும். 'தேன்பார்ப்பின்ஓசைத் திருக்கோட்டியூர்' என்பதற்கு - 'வண்டுபோல் ஸாரக்ராஹியான எம்பெருமானார் திருக்கோட்டியூர்நம்பியினிடத்துத் திருமந்திரத்தை உபதேசங்கொண்டருளி, விமானத்தின்மீது ஏறியிருந்து பரமரஹஸ்யமான அந்தத்திருமந்த்ரத்தை எல்லாருங் கேட்டு உய்வுபெறுமாறு உரத்துவெளியிட்டதற்கு இடமான திருக்கோட்டியூர்' என்று ஸ்வாபதேசார்த்தங் கூறுவர். "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" என்ற தொல்காப்பியத்தால், இளவண்டை 'தேன்பார்ப்பு' என்றார். தேன் - வண்டின் சாதிபேதம். (சஉ)

## ௪௩. திருமெய்யம்.

ஆளாயுனக்கன்பாயாசையாய்நாணிலியாய்
வாளாமனைவியென்றுவாழ்வேனைக்—கேளாய்
திருமெய்யமாயா சிலைகால்வளைத்து
வருமெய்யமாயாமதன்.

[பிரிவாற்றாத தலைவி இரங்கிக்கூறுதல்.]

(இ - ள்.) திருமெய்யம் மாயா - திருமெய்யமென்னுந் தலத்தி லெழுந்தருளியுள்ள ஆச்சரியமான குணசேஷ்டிதங்களையுடையவனே!—உனக்கு - உன்னிடத்தில், ஆள் ஆய் - அடிமைப்பட்டு, அன்பு ஆய் - அன்புடையவளாய், ஆசை ஆய் - ஆசைகொண்டு, நாண் இலி ஆய் - வெட்கமற்றவளாய், வாளா - வீணாக [பெயர்மாத்திரத்தால்],மனைவி என்று வாழ்வேனை - மனைவியென்று வாழ்கின்ற என்னை, கேளாய் - நீ கேளாமல் உபேக்ஷித்துவிட்டாய்; மாயா மதன் - அழிந்தொழியாத மன்மதன், சிலை கால் வளைத்து - (தனது) கருப்புவில்லை (நாணேற்றி) நுனிப்புறங்களில் வளைத்துப் பிடித்துக்கொண்டு, எய்ய - (என்மீது மலரம்புகளை) எய்துவருத்துமாறு, வரும்- வருவானே! (என் செய்வேன்!!) (எ - று.)

தலைமகன் பரத்தையிற்பிரிவிற் பிரிந்தனனாக, அப்பிரிவுத்துயரை யாற்றாது வருந்துகின்ற தலைவி அவ்வாற்றாமையே வாயிலாக உருவெளித்தோற்றத்தில் எதிரில்நிற்கின்ற தலைவனை முன்னிலைப்படுத்திக் கூறியது, இது. காமநோய் மிகமுதிர்தற்கு உரிய காலத்தில் ஆற்றாமைமிகுதியால் தன்னுயிரைப் பாதுகாத்துக்கொள்ள வேறுவிரகு இல்லாமல் தலைமகள் தலைமகனைக் கருதி இவ்வாறு கூறி முறையிடுகின்றன ளென்க. எனக்கு நீ அருள்புரியா

யாயின் நினது பிரிவுத்துயரை யாற்றாது இறந்துபடுவே னென்பது,குறிப்பு. "பரத்தையிற்பிரிதல் ஓதற்குப்படர்தல், அருட்டகுகாவலொடு தூதிற்கு அகறல், உதவிக்குஎகல் நிதியிற்குஇகத்தல் என்று, உரைபெறுகற்பிற் பிரிவு அறுவகைத்தே" என்று கூறப்படுகின்ற அறுவகைப்பிரிவுகளுள், இது- 'வாளாமனைவியென்றுவாழ்வேனே' என்று புலந்துகூறுதலால், பரத்தையிற் பிரிவாதல் பெறப்படும். தலைமகள் தலைமகனிடத்துத் தான் பேரன்புவைத்து அவனையன்றி வேறொன்றை யறியாத கற்புடையா ளென்பாள், 'ஆளாய் உனக்கன்பாய் ஆசையாய் நாணிலியாய் வாளா மனைவியென்று வாழ் வேனே' என்றாள். அன்பு என்பது - ஒரு பொருளினிடத்து முதலில் தோன் றுகின்ற விருப்ப மென்றும், ஆசை என்பது - அவ்வன்பு முதிர்ந்து அதை விட்டுப் பிரிந்தால் தரிக்கமுடியாத நிலையென்றும் வேறுபாடு உணரத்தக்கது. தமதுகாமத்தின் தன்மையைத் தாமே சொல்வது குலமகளிர்க்கு அடுப்ப தன்று; ஆயினும், யான் அக்காமமிகுதியால் மரணவேதனையை யடையும் படியான நிலையைப் பெற்றதனால், யானே எனதுகாமத்தை இப்பொழுது வெளியிட்டுக்கூறுமாறு நேர்ந்த தன்மைக்கு இரங்குவே னென்பாள், 'நாணி லியாய்' என்றாள். மன்மதன் சிவபிரானதுநெற்றிக்கண்ணின் நெருப்பி னால் இறந்ததாக உலகத்தார் கூறுகின்றனரே. அது என்னளவில் இல்லை யாயிற்றே? என்ற கருத்தும்; கண்ணோட்டமின்றி உலகத்துஉயிர்களைக் கொள்ளைகொள்ளுகின்ற யமன் இம்மன்மதனுயிரையுங் கொள்வானாயின் யான் உய்வேனே, இம்மன்மதனுக்கு அக்கூற்றுவனால் மாய்வுநேரவில்லை யே! இதுவும் என்வினையோ? என்ற கருத்தும் - 'வருமெய்யமாயாமதன்' என்ற தொடரில் தோன்றும். கேளாய் என்பதை, உடன்பாட்டுமுற்றாகக் கொண்டு, என்சொல்லைக் கேட்டருளவேண்டு மென்றும் பொருளுரைக்க லாம்; கேட்டால்தான் யான் வாழ்வுபெறுவே னென்பது, கருத்து.

ஐயங்கார் தமதுஞானக்கண்ணுக்குச் சிற்சிலசமயங்களில் எம்பெரு மான் இலக்காகின்றபொழுதே அவனைக் கிட்டி முத்தியின்பமனுபவிக்கும் படியான ஆசை கொள்ள, அவரை அப்பெருமான் அப்பொழுதே தன்பக் கல் சேர்த்துக்கொள்ளாது காரியாந்தரங்களிற் கருத்தூன்றி மறைய, அத னாலுண்டான துயரமிகுதியினால் ஐயங்கார் அவனையே இடைவிடாது சிந்தித்துக்கொண்டு மிகவருந்தி அவனை நொந்துகூறுவது, இதற்கு உள்ளு றைபொருள். தனதுஸ்வரூபத்திற்கு ஒவ்வாமையாலே உபேக்ஷித்தாலும் எதிராக உபேக்ஷியாமலும், வேறுகதியை நாடாமலும் முன்புள்ள அவனது சம்பந்தத்தையே நினைத்து மற்றும் அவனால் உதவியைப்பெற நாடி அவன் காலிலேயே விழுந்துகிடக்குந்தன்மையை யுடையவர் ஐயங்கார் என்பது, இங்குப் பெறப்படும்.

ஸத்யதேவதைகள் திருமாலைநோக்கித் தவஞ்செய்த தலமாதல்பற்றி, அத்திருமலை ஸத்யகிரி யென்றும்,அங்குத்தோன்றிய திருமால் ஸத்யகிரிநாத ரென்றும் பெயர்பெறுவர்; சத்தியகிரியென்ற அச்சொல்லே திருமெய்யமலை யென்றும், அத்திருப்பதி திருமெய்யமென்றும் வழங்கப்பெறும். (சஈ)

ச. திருப்புல்லாணி.

மதயானைக்கோள்விடுத்துமாமுதலைகொன்ற
கதையாலிதயங்கரையு—முதலாய
புல்லாணிமாலே புறத்தோர்புகழிருப்பு
வல்லாணியென்செவிக்குமாறு.

(இ - ள்.) முதல் ஆய - முழுமுதற்கடவுளாகிய, புல்லாணி மாலே - திருப்புல்லாணியென்னுந் திவ்யதலத்தில் எழுந்தருளியுள்ள திருமாலே!— மதம் யானை கோள் விடுத்து - மதம்பெருகுந்தன்மையுள்ள கஜேந்திராழ்வானது (முதலை பற்றியதனாலாகிய) துன்பத்தைப் போக்கி, மா முதலை கொன்ற - (அதனைப்பிடித்துவருத்திய) பெரியஅம்முதலையை (அவ்யானை ஆதிமூலமே! என்றுகூவியபோது தன்சக்கராயுதத்தால்) கொன்ற, கதையால் - வரலாற்றினால், இதயம் கரையும் - (எனது) மனம் உருகும்; (அத்தகைய உனது புகழல்லாமல்), புறத்தோர் புகழ் - தேவதாந்தரங்களினுடைய புகழ், என் செவிக்கு - எனது காதுகளுக்கு, மாறு - விரோதமான, இரும்பு வல் ஆணி - வலிய இருப்பாணிபோன்றதாம்; (எ - று.)

பரதேவதையான உனது புகழ் என்செவிக்கு இன்பந்தருமேயன்றி, தேவதாந்தரங்களினது புகழ் என்செவிகளுக்கு இன்னாதாகுமென்பதாம். "செவிக்குஇனாத கீர்த்தியார்" என்ற ஆழ்வாரருளிச்செயலும், "ச்ரவ்ஷ்டவ்யரல்லாதவோபாதி ச்ரோதவ்யருமல்லர்; கேட்கவேண்டியிருந்திகோளேயாகிலும், பித்ருவதப்ரவ்ருத்தியென்ன, தத்பலமான பிக்ஷாடநசாரித்ரப்ரதையென்ன, அந்தகாத்வம்ஸகதையென்ன, ப்ரஹ்மாரவதகதையென்ன இத்யாதி ச்ரவணகடுகமான கீர்த்தியையுடையராயிருப்பர். ம்ருதனான புத்ரனை ஸாந்தீபநிக்கு மீட்டுக்கொடுத்தான்; புநராவ்ருத்தியில்லாத தேசத்தினின்றும் வைதிகன்புத்ரர்களை மீட்டுக்கொடுத்தான் என்றும் இத்யாதிகளாலே ஸம்ச்ரவேமதுரமான கீர்த்தியனிறே" என்ற அதன்வ்யாக்யாநமும், 'புறத்தோர்புகழ் என்செவிக்கு மாறு' என்றவிடத்துக் கருதத்தக்கன. "மறந்தும் புறந்தொழாமாந்தர்," "சிந்தைமற்றொன்றின் திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்" என்றபடி முழுமுதற்கடவுளான திருமாலையன்றிப் பிறப்பு இறப்புத் துன்பமுடைய பிறிதொருதெய்வத்தைச் சிறிதும்பொருள்செய்யாத நிறைவுடையவர் ஐயங்காரென்பது, இச்செய்யுளிற் போதரும். உயர்திணைப்பிறவியாதல் பகுத்தறிவாதல் நல்லொழுக்கமாதல் ஒன்றுமின்றிக்கே கேவலம்தன்னிடத்துப்பக்திகொண்டு தனக்குஅடிமையான பிராணியினிடத்து அருளினால், அதற்குத் துன்பஞ்செய்த பிராணியின்விஷயமாகப் பெருமான் தனதுகுளிர்ந்ததிருவுள்ளத்திலே கொடியசீற்றத்தைக் கொண்டு அரைகுலையத் தலைகுலைய மடுக்கரைக்கே வந்துஉதவின மகாகுணத்தில் 'இது என்னநீர்மையோ!' என்று ஈடுபட்டு 'மாமுதலைகொன்ற கதையாலிதயங்கரையும்' என்றனர். தன்னிலமாகிய நீரிலே மலையொத்த யானையையும் வெல்லவல்ல வலிமையுடைய தென்பார், 'மாமுதலை' என்றார். 'இருப்புவல்லாணி' என்றது, காராசம்போலக் கொடியது என்ற கருத்தைப் புலப்படுத்தும்.

புல்லாணி - புல்லணை யென்பதன் மரூஉ: இது, சீதையைக் கவர்ந்து சென்ற இராவணனைக் கொல்லுதற்பொருட்டு இராமபிரான் வானர சேனையுடனே புறப்பட்டுச் சென்று தென்கடற்கரையை யடைந்து கடல் கடக்க உபாயஞ்சொல்லவேண்டு மென்று அக்கடலரசனான வருணனைப் பிரார்த்தித்துத் தருப்பத்திற் படுத்து எழுநாளளவும் பிராயோபவேசமாகக் கிடந்த தல மாதலால், இது வடமொழியில் தர்ப்பசயநம் எனப்படும்; புல்லணை என்பது - அதற்குஏற்ற தென்மொழி. (சச)

## ரு. திருத்தண்காலூர்.

மாறுபடவாடையெனும்வன்கால்வந்தென்முலைமே
லூறுபடவூர்ந்தவுளைவெல்லா—மாறத்
திருத்தண்காலூரான்றிருத்தண்டுழாயின்
மருத்தண்காலூராதோவாய்ந்து.

[தலைவனைப்பிரிந்த தலைவி வாடைக்கு வருந்தி யிரங்கல்.]

(இ - ள்.) வாடை எனும் வல் கால் - வாடையென்கின்ற வலியகாற்றானது, மாறுபட - (எனக்கு) விரோதமாக, வந்து—, என் முலைமேல் - எனது தனங்களின்மீது, ஊறு பட - தாபமுண்டாகும்படி, ஊர்ந்த - தவழ்ந்துசென்றதனாலுண்டாகிய, உளைவு எல்லாம் - வருத்தம்முழுதும், மாற - (அடியோடு) நீங்கும்படி,—திருத்தண்காலூரான் - திருத்தண்கா லென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியிருக்குந் தலைவனணிந்த, திரு தண் துழாயின் - அழகிய குளிர்ந்த திருத்துழாயினது, மரு - வாசனைபொருந்திய, தண் கால் - குளிர்ந்த காற்றானது, வாய்ந்து - இனிதாகப்பொருந்தி, ஊராதோ - (என் மீது) தவழ்ந்துவீசாதோ? (எ - று.)

களவொழுக்கத்தால் தலைமகனோடு கூடிப் பிரிந்த தலைமகள் காமோத்தீபகப்பொருள்களு ளொன்றான காற்றுத் தன்மீது வீசி வருத்த அதற்குப் பொறாளாய், 'இனித் தலைவனுடைய சம்பந்தம்பெற்ற பொருளினது தொடர்பினாலாவது ஒருவாறு இந்நோய் தணியப்பெறலாம்' என்று கருதி, தலைவனணிந்த திருத்துழாய்மீது பட்டு அந்நறுமணத்தோடுவருகின்ற காற்றாவது தன்மேல் வீசப்பெறுமா? என்று ஏங்கிக் கூறுகின்றன ளென்பதாம். கந்தவஹ னென்றும், கந்தவாஹனென்றும் பெயர்பெறுமாறு ஆங்காங்குள்ள மணத்தைக்கொண்டுவீசும் இயல்பினதும், பொதுப்பட எல்லாவுயிர்கட்குங் குளிர்ச்சியைச்செய்வதுமான காற்றானது தனதுதலைவர் சாத்திக்கொண்டுள்ள திருத்துழாயின்மேற் பட்டு அதன்நறுமணத்தைக் கொண்டுவந்து தன்மேல்வீசும்போது அவரைப் பிரிந்திருக்கின்ற தனக்கு அமிருதம்போலு மென்று கருதி அக்காற்றைத் தலைவி வேண்டுகின்றன ளென்க. ஒருபொருளே தலைவன் சம்பந்தத்தைப் பெற்றபோது இனிமைதருதலும் பெறாத போது துன்பம்விளைத்தலும் கருதத்தக்கன. பிரிந்தாரை வருத்துதலில் துணைவேண்டாமல் அஸஹாயமான திறமையுள்ள தென்பார், 'வாடையெனும்வன்கால்' என்றார்.

ஐயங்கார் எம்பெருமானைச் சேராதபோது லௌகிகபதார்த்தங்கள் தம்மை வருத்த, அந்த எம்பெருமானது சாந்நித்தியம் கிடையாவிடினும் பாகவதர்களுடைய சம்பந்தங் கிடைத்தாலும் அதுகொண்டு ஈடேறலாமென்று எதிர்பார்ப்பது, இதற்கு உள்ளுறைபொருள். விவரம்உய்த்துணர்க. (சரு)

சுசு. திருமோகூர்.

வாயான்மலர்கோதிவாவிதொறுமேயுமோ
மேயாமலப்பால்விரையுமோ—மாயன்
றிருமோகூர்வாயின்றுசேருமோ நாளை
வருமோ கூர்வாயன்னம்வாழ்ந்து.

[அன்னத்தைத் தூதுவிடுத்த தலைவி அதனைக்குறித்து ஐயுறுதல்.]

(இ - ள்.) கூர் வாய் அன்னம் - கூர்மையுள்ள வாயையுடைய [என்னால் தூதுவிடுக்கப்பட்ட] அன்னப்பறவையானது,—வாயால் - தன்வாயலகினால், மலர் கோதி - தாமரைமலரினிதழ்களைக் கோதிக்கொண்டு, வாவிதொறும் - (இடைவழியிலுள்ள) தடாகங்கள்தோறும், மேயுமோ - மேய்ந்துகொண்டிருக்குமோ? மேயாமல் - அவ்வாறு தன்காரியத்தைச்செய்யாமல், வாழ்ந்து - வாழ்ச்சிபெற்று, அப்பால் - அப்புறம், விரையுமோ - (என்காரியத்தைச் செய்வதாக) விரைந்துசெல்லுமோ? மாயன் - ஆச்சரியமான குணசேஷ்டிதங்களையுடைய (எனது தலைவனாகிய) திருமாலினது, திருமோகூர்வாய் - திருமோகூரினிடத்து, இன்று - இன்றைக்கு, சேருமோ - சென்றுசேருமோ? நாளை வருமோ - (எனதுநிலைமைகளைத் தலைவன்பக்கற் சொல்லிவிட்டு) நாளைக்கே திரும்பிவருமோ? (எ - று.)

தலைவனைப்பிரிந்த தலைவி அப்பிரிவாற்றாது வருந்தும்போது அன்னம் இரங்குமிடம் நெய்தனிலமாதலால், திருமோகூரைச்சார்ந்த மருதநிலத்து வாழ்கின்ற அன்னப்பறவை அந்நெய்தனிலத்துக்கழிக்கரையில் இரைதேடுதற்கு வர, அதனைநோக்கி, 'எனதுநிலைமைகளை என்தலைவனான காளமேகப்பெருமான்பக்கல் சொல்லுதற்கு எனக்குத் தூதாகவேண்டும்' என்று வேண்டி விடுத்து, தனது ஆற்றாமைமிகுதியால், 'நான் தூதுவிடுத்த அன்னம் என்னை மறந்திட்டுத் தன்காரியத்தைச் செய்யுமோ? அன்றி, என்காரியத்தைச் செய்யுமோ?' என்று ஐயுற்றுக் கூறியது, இது. "விதியினாற் பெடைமணக்கும் மென்னடைய வன்னங்காள்," "இடரில்போகம்மூழ்கி யிணைந்தாடும் மடவன்னங்காள்," "அலர்மேலசையு மன்னங்காள்," "தடம்புனல்வா யிரைதேர்ந்து, மிகவின்பம்பட மேவும் மென்னடைய வன்னங்காள்" என்றபடி அன்னப்பறவை சிரமம்பொறுததும் மந்தகதியுடையதும் இனிய இடத்தில் வீற்றிருந்து கிடைத்தஇரையை யுண்டு பிரிவுத்துயரறியாது தானும் தன்துணையுங் கூடிவாழ்ந்து களித்திருப்பதும் தன்னலம்பேணுவதுமாதலால், அது அந்தப்போகத்தை விட்டு எனக்காக அவ்வளவுதூரம் வருந்திச்சென்று விரைவில் எனது நிலைமையைத் தலைவர்க்குச்சொல்லி நேரில் மீண்டுவந்து அவர்சொல்லை எனக்குச் சொல்லுமோ? சொல்லாதோ?

என்று ஐயுறவேண்டுவதாயிற் றென்க. 'வாவிதொறும் மேயுமோ, அப்பால் விரையுமோ' என்பன - தலைவியின் ஐயத்தையும், 'திருமோகூர்வாய் இன்றுசேருமோ, நாளைவருமோ' என்பன - அன்னப்பறவை அவ்வாறு விரைந்துசெல்வதானால் இன்றுபோய்ச்சேர்ந்து நாளை மீண்டுவரக்கூடுமோ? என்று தலைவி மனோரதித்திருப்பதையும் காட்டும். பிரிந்த தலைவன் வந்திடுவனென்று ஆறியிருக்கவொண்ணாதே அவன்வரவுக்கு விரைந்து ஆள்விடும்படியாயிற்று ஆற்றாமைமிகுதி. "இயம்புகின்றகாலத்து எகினம் மயில் கிள்ளை, பயம்பெறுமேகம் பூவை பாங்கி - நயாதகுயில், பேதைநெஞ்சம் தென்றல் பிரமர மீரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" என்ற இரத்தினச் சுருக்கத்தால் தூதிற்குஉரியவை இன்னவையெனக் காண்க. "மறக்குமோ, காவின்மதுவருந்தி யப்பாற், பறக்குமோ சந்நிதிமுன்பாமோ - சிறக்கத், தருவரங்கள் கேட்குமோ தாழ்க்குமோ நெஞ்சே, திருவரங்கர்பாற் போன தேன்" என்ற திருவரங்கக்கலம்பகச்செய்யுளோடு ஒத்த வாய்பாடுடையது, இச்செய்யுள். "இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்வளவிற் காணுங்கொல், இவ்வளவிற் காதலியம்புங்கொல் - இவ்வளவில், மீளுங்கொ லென்றுரையா விம்மினான்" என்ற புகழேந்திவாக்கு இங்குக் கருதத்தக்கது.

ஐயங்காரது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமான் மறைந்தவளவிலே அவனதுநிரந்தராநுபவத்தைப் பெற விரும்பிய ஐயங்கார் தமது நிலைமையை அப்பெருமான்சந்நிதியில் விண்ணப்பஞ்செய்யும்படி ஆசாரியர்களைப் பிரார்த்தித்து அவர்கள் நமதுகாரியத்தைக் கைகூட்டுவிக்கவேண்டுமேயென்று கவலுதல், இதற்கு உள்ளுறைபொருள். வெண்ணிறமுடையதாய் இரண்டு இறகுகளுடன் கூடி, எங்குங் கவலையற்றுத்திரிந்து, தன்னையேயன்றித் தனதுபரிவாரத்தையும் பாதுகாப்பதாய், கருமமே கண்ணாயிருந்து உத்தேசித்தகாரியத்தைச் சமயம்வாய்க்கும்போது தவறாது செய்துமுடித்துக் கொள்வதான அன்னப்பறவையை - சுத்தசத்துவகுணமுடைமையால் உள்ளும்புறமும் ஒக்க நிர்மலஸ்வபாவராய், ஞானம் ஒழுக்கம் என்னும் இரண்டு சாதனங்களுடன் கூடித் திவ்வியதேசங்களிலெல்லாம் கவலையற்று யாத்திரைசெய்பவராய், தம்மையேயன்றித் தம்மையடுத்தவர்களையும் பாதுகாப்பவராய், காரியமேகருத்தாயிருந்து அதனை உரியகாலத்தில் தவறாதுசெய்து முடிக்கவல்ல ஆசாரியர் என்னத் தகும். விவரம் கேட்டுஉணர்க.

திருமோகூர் - வடமொழியில் ஸ்ரீமோஹநபுரம் எனப்படும். (சசு)

## எ. திருக்கூடல்.

வாழ்விப்பானெண்ணமோ வல்வினையின்னமென்னை
யாழ்விப்பானெண்ணமோ வஃதறியேன்—றாழ்விலாப்
பாடலழகார்புதுவைப்பட்டர்பிரான்கொண்டாடுங்
கூடலழகா நின்குறிப்பு.

(இ - ள்.) தாழ்வு இலா - இழிவில்லாத, பாடல் - பாசுரங்களின், அழகு - அழகானது, ஆர் - பொருந்திய, புதுவை பட்டர்பிரான் - ஸ்ரீவில்லி

புத்தூரில் திருவவதரித்த பெரியாழ்வார், கொண்டாடும் - புகழ்ந்துபாடிய, கூடல் - திருக்கூடலென்னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளிய, அழகா - அழகனென்னுந் திருநாமமுடையவனே!—நின் குறிப்பு - உனது திருவுள்ளக்கருத்து,—என்னை - அடியேனை, வாழ்விப்பான் - நல்வாழ்வுபெறும்படி, எண்ணமோ - திருவுள்ளமோ? (அன்றி), இன்னம் - இன்னமும், வல்வினையில் - கொடிய இருவினைகளில், ஆழ்விப்பான் - அழுந்தச்செய்யும்படி, எண்ணமோ - திருவுள்ளமோ? அஃது அறியேன் - அதனை இன்னதென்று தெரிந்திலேன்; (எ - று.)

'அவனன்றி யோரணுவும் அசையாது' என்றபடி எல்லாம் உனதுஸங்கல்பத்தின்படியே யாகுமாதலால், நரகதியிற்சேர்ப்பாயோ? அன்றி, இவ்வுலகத்தில் அலையவிடுவாயோ? என்னைக்குறித்து நீ கொண்டிருக்கின்ற உனது திருவுள்ளம் இன்னதென்று அறியாது அடியேன் தியங்குகின்றே னென்பதாம். எம்பெருமானே ஆன்மாக்களை உஜ்ஜீவிப்பித்தற்கு ஏற்ற உபாய மாதலாலும், அப்பிரானை அடைதற்கு ஏற்ற உபாயங்களைச் செய்து அவனைக் கூடுவோ மென்றற்கு ஸ்வரூபாநுரூபமாயும் ஸுகரமாயு முள்ள உபாயம் வேறொன்றும் இல்லாமையாலும், நன்மைதீமைகட்கு அப்பிரானது திருவருளே ஏற்ற உபாயமா மென்பதை, இதனால் அறிவித்தன ரென்க. "சதுமுகத்துத், தெய்வந் தொழுந் தெய்வமே யென்கொலோ வுன்திருவுளமே" என்றார் அழகரந்தாதியிலும்.

புதுவை - புத்தூர் என்பதன் மரூஉ. பெரியாழ்வார் மதுரைநகரின் அதிபதியான வல்லபதேவபாண்டியனது வேண்டுகோளின்படி பரதத்வநிர்ணயஞ் செய்ய, அதுகண்ட அம்மன்னவன் மனமுவந்து இவரை யானையின் மேலேற்றிக் கூடல்நகரை வலஞ்செய்வித்தபோது தன்புத்திரன்பவனிவருதலைப்பார்த்து ஆனந்தமடைகிற தாய்தந்தையர்போலத் தன்பக்தன் உலாக்கொள்ளுதலை நோக்கி உவத்தற்குப் பிராட்டியுடனே பெருமாள் விண்ணவர் புடைசூழ வானத்தி லெழுந்தருள, அக்காட்சியைக் கண்டு பாகவதசிரோமணியாகிய அப்பெரியாழ்வார் தாம் சிறிதும் இறுமாப்புக்கொள்ளாமல், அத்தேவாதிதேவனுடைய ஸர்வஜ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் முதலிய மங்களகுணங்களைக் கருதுதற்குமுன்னே அக்கருடவாகனனது சௌந்தரியத்திற் கண்செலுத்தி அதனையே சேவித்து அதில்ஈடுபட்டு ஆழ்ந்து பரவசராய், அதனால் தம்நிலையையும் எம்பெருமான்நிலையையும் மறந்து பயசங்கை கொண்டு 'இத்திருமேனிக்குஎவ்வாற்றாலும் ஒருகுறைவாராதிருக்கவேணும்' என்று வாழ்த்துபவராய் யானைமணிகளையே தாளமாகக்கொண்டு 'திருப்பல்லாண்டு' என்னுந் திவ்வியப்பிரபந்தத்தைப் பாடியருளின ராதலால், 'தாழ்விலாப் பாடலழகார் புதுவைப் பட்டர்பிரான் கொண்டாடுங் கூடலழகா' என்றார். இவ்வாழ்வார்க்குச் சேவைசாதித்த அவ்வெம்பெருமான், அஷ்டாங்கவிமானத்தின்மீது எழுந்தருளியிருக்கின்ற 'வையந்தாயபெருமான்' என்பர். கூடல் என்பது - தென்மதுரைக்கு ஓர்பெயர். (சஎ)

அ. ஸ்ரீவில்லிபுத்தூர்.

குறித்தொருவர்கொண்டாடுங்கொள்கைத்தோ கோதை
பிறத்தவூர்விண்டுசித்தர்நீடூர்—பிறப்பிலியூர்
தாழ்வில்லிபுத்தூரென்றைவர்க்குத்தானிரந்தான்
வாழ்வில்லிபுத்தூர்வளம்.

(இ - ள்.) கோதை பிறத்த ஊர் - ஆண்டாளின் திருவவதாரத்தால் மேம்பாடுபெற்ற ஊரும்,—விண்டுசித்தர் நீடு ஊர் - பெரியாழ்வார் வாழ்ந்த பெரியஊரும்,—பிறப்புஇலி - ஜநநமில்லாதவனும், தாழ்வு இல்லி புதுஊர் என்று ஐவர்க்கு தான் இரந்தான் - 'தாழ்வில்லாத [பெருஞ்சிறப்புடைய] துரியோதநனே! புதியஊர்களை(க் கொடுப்பாயாக)' என்று பஞ்சபாண்டவர்க்காகத் தான் தூதுசென்று இரந்தவனுமாகிய திருமால், வாழ் - எழுந்தருளியிருக்கின்ற, ஊர் - ஊருமான, வில்லிபுத்தூர்-ஸ்ரீவில்லிபுத்தூரினது, வளம் - செழிப்பானது, ஒருவர் குறித்து கொண்டாடும் கொள்கைத்தோ- ஒருவரால் நினைத்துப் பாராட்டுந் தன்மையுடையதோ? [அன்று என்றபடி].

பிரணவமானது அகார உகார மகாரங்களினால் பெருமாள் பிராட்டி சேதநன் என்னும் மூவரையும் தோற்றுவிப்பதுபோல, வடபெருங்கோயிலுடையான் ஆண்டாள் பெரியாழ்வார் என்கிற மூவரையும் தன்னிடத்திற் கொண்டிருப்பதனால் மிகவும்உத்தேசியமான ஸ்ரீவில்லிபுத்தூரினது பெருமையை எவராலுஞ் சொல்லமுடியா தென்பதாம். "பொன்னும் முத்தும் மாணிக்கமு மிட்டுச்செய்த ஆபரணம்போலே, நாச்சியாரும் பெரியாழ்வாரும் வடபெருங்கோயிலுடையானு மான அலங்காரமுள்ள தேசமிறே" என்ற பெரியார்வாக்கு இங்கு அநுஸந்திக்கத்தக்கது. "பிராட்டிக்கு ஸ்ரீமிதிலையும் திருவயோத்யையும் போலவும், நப்பின்னைப்பிராட்டிக்குக் கும்பகுலமும் திருவாய்ப்பாடியும் போலவு மன்றிக்கே ஆண்டாளுக்குப்பிறவியும்புக்கவிடமும் ஓரூரிலேயான ஏற்றம் இவ்வூர்க்கேயிறே உள்ளது" என்பவாதலால், 'கோதைபிறத்த வூர்' என்றார். 'குறித்தொருவர்கொண்டாடுங் கொள்கைத்தோ' என்ற வாக்கியத்தை, கோதை பிறத்தவூர், விண்டுசித்தர் நீடூர், பிறப்பிலியூர் என்ற தொடர்கள் சமர்த்தித்துநிற்பது—தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம்.

இளமைதொடங்கி எப்பொழுதும் தமதுசித்தத்தை விஷ்ணுவினிடத்திலே செலுத்தி "மார்வமென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தை நாட்டி, ஆர்வமென்பதோர் பூவிடவல்லார்க் கரவதண்டத்திலுய்யலுமாமே" என்னும்படி அப்பெருமானை மனத்திலே நிலைநிறுத்தித் தியானித்து வந்ததனால், பெரியாழ்வார் 'விஷ்ணுசித்தர்' என்று பெயர்பெற்றனர். விண்டு=விஷ்ணு. ஏற்பவர் ஈபவரிடத்திற் சென்று அவரைப் புனைந்துகூறும் உலகவியல்புபற்றி, பஞ்சவர்க்குத் தூதுவனாய்ச் சென்ற ஸ்ரீக்ருஷ்ணன் துரியோதநனைநோக்கி 'தாழ்வில்லி' என்றுபுகழ்ந்துவிளித்தனனென்க: இனி, இத்தொடர்க்கு - துரியோதனன் எவரையும் பணியாத இயல்பின

ஞதல்பற்றி, அவனை 'வணங்காமுடிமன்னனே'என்று விளித்ததாகக் கொள்ளினுமாம். மூன்றாமடியில் ஏற்ற வினைமுற்று வருவித்து உரைக்கப்பட்டது. அன்றி, தாழ்வு இல் இ புத்தூர் என்றுபிரித்து, இ என்பதை 'ஈ'என்ற ஏவல் வினைமுற்றின் குறுக்கலெனக் கொண்டு, தாமதித்தலில்லாமல் புதியவூர்களைக்கொடு என்று பொருள் உரைப்பினுமாம். ஐவர் - தொகைக்குறிப்பு. ஜீவாத்மாக்கள் தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவர ரூபங்களாய்ப் பிறப்பது போலப் பரமாத்துமா உபேந்த்ர மத்ஸ்ய கூர்மாதிஅவதாரங்கள் செய்வது கருமவசத்தினாலன்றித் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநத்தின்பொருட்டும், தருமத்தைநிலைநிறுத்துதற்பொருட்டும் அப்பெருமான்கொண்ட இச்சையினாலேயே யாகு மென்ற இவ்வுண்மையை யுணர்த்த, 'பிறப்பிலி - தாழ்வில்லிபுத்தூரென்றைவர்க்குத்தான்இரந்தான்' என்றார்; இவ்வுண்மையையுணர்தல் - அவதாரரஹஸ்யஜ்ஞாநம் எனப்படும். 'தாழ்வில்லிபுத்தூரென்றைவர்க்குத்தான்இரந்தான்' என்ற தொடரில், பக்தபராதீநனாய் எம்பெருமான் தூதுசென்ற நீர்மையை விளக்கியபடி.

வில்லி கண்டர் என்பவர்களில் மூத்தவனான வில்லியென்பவனால் ஏற்படுத்தப்பட்ட புதியநகரமாகையால், இதற்கு, 'ஸ்ரீவில்லிபுத்தூர்' என்று திருநாம மென்பர். (சஅ)

## கூ. திருக்குருகூர்.

வளர்ந்தழைக்கவுண்டாலென் வாசமணந்தாலென்
றெளிந்தகலைகற்றாலென்சீசீ—குளிர்ந்தபொழிற்
றண்குருகூர்வாவிச்சடகோபனூரெங்கள்
வண்குருகூரென்னாதவாய்.

(இ - ள்.) 'குளிர்ந்த பொழில் - (மரச்செறிவால்) குளிர்ச்சிபொருந்திய சோலைகள்சூழ்ந்த, குருகு ஊர் தண் வாவி - குருகுஎன்னும் நீர்வாழ்பறவைகள் வாழப்பெற்றுக் குளிர்ந்த நீர்நிலைகளையுடைய, சடகோபன் ஊர் - நம்மாழ்வார் திருவவதரித்த தலமானது, எங்கள் வண் குருகூர் - வளப்பம்பொருந்திய எங்கள்திருக்குருகூர்,' என்னாத - என்று ஒருதரமேனுஞ் சொல்லாத, வாய் - வாயானது,—வளம் தழைக்க - வளமாக, உண்டால் என் - உணவுகளைப் புசித்தால் என்னபயனுண்டாகும்? வாசம் மணந்தால் என் - முகவாசப்பொருள்களையுண்டு மணம்வீசினால்தான் என்னபயன்? தெளிந்த கலை கற்றால் என் - மனந்தெளிவடைதற்குஉரிய சாஸ்திரங்களைக் கற்றால்தான் என்னபயன்? [ஒன்றினாலும் ஒருபயனும் உண்டாகாது என்றபடி]; (எ - று.)—சீசீ—இகழ்ச்சிக்குறிப்பிடைச்சொல்.

சிலர் வாய்படைத்த பயன் வளப்பமான உணவை உண்ணுதலே யென்பர்; வேறுசிலர் முகவாசப்பொருள்களால் வாயை மணக்கச்செய்தலே வாய்படைத்தபயனென்பர்: ஞானநூல்களைக் கற்றலே வாய்படைத்தபயனென்பர் மற்றுச்சிலர்: உண்மையிலோ இவையொன்றுமன்று: திருத்துழாய் பரிமளத்தோடே அங்குரிக்குமாறுபோலத் திருவவதரிக்கும்போதே ஞானநலத்

தோடு திருவவதரித்த நம்மாழ்வாரது திருவவதாரஸ்தலம் திருக்குருகூரென்று ஒருதரமேனுஞ் சொல்லுதலே வாய்படைத்தபயனென்பதாம். அங்ஙனம் அவ்வூரின் திருநாமத்தை ஒருமுறைகூறினாலும் முத்தி சித்திக்குமென்பது, போதரும். உயிர்கட்குக் கரணகளேபரங்களைக் கடவுள் அளித்ததற்குக் காரணம் - தன்னையும் தன்னடியாரையும் அடைந்து ஈடேறுதற்பொருட்டே யாகுமென்ற நூற்கொள்கை இங்குக் கருதத்தக்கது.

வளந்தழைக்க உண்ணுதல் - அறுசுவையுணவை அமர்ந்து உண்ணுதல். முகவாசப்பொருள்களாவன - "தக்கோலந் தீம்பூத் தகைசாலிலவங்கங், கர்ப்பூரம் சாதியோ டைந்து". "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவ, னற்றாடொழாஅ ரெனின்," "கற்கசடறக்கற்பவை கற்றபின், நிற்க வதற்குத்தக" என்றவாறு நூற்பொருள்களைக் கற்றாலும் அதற்குத்தக்க ஒழுக்கமில்லாவிடின் பயனில்லை யாதலால், 'தெளிந்தகலை கற்றாலென் சீ?' என்றார். நூற்பொருளைக் கற்காவிடினும், 'சடகோபனார் - குருகூர்' என்று சொல்லவே, வாய்படைத்தபயன் பெறுவரென்ற கருத்து இங்குத் தொனிக்கும். கர்ப்பத்திலிருக்கிறபொழுது ஞானமுடையனவாயிருக்கின்ற குழந்தைகளைப் பிறந்தவுடனே தனதுஸ்பரிசத்தால் அஜ்ஞாநத்துக்குஉள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான ஶடம் என்னும் வாயு இவ்வாழ்வார் திருவவதரித்தபொழுது இவரையுந் தொடுதற்குவர, அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒறுத்து ஓட்டி ஒழித்ததனால், 'சடகோபர்' என்று இவர்க்குத் திருநாமமாயிற்று.

ஒருகால் பிரமன் எங்குத் தவஞ்செய்வது? என்று சிந்தைகொண்டிருக்கையில், 'க - பிரமனே! குரு - (இங்குத் தவஞ்) செய்' என்று இத்தலத்தைச் சுட்டி ஆகாயவாணி மொழிந்ததனால் இதற்கு 'குருகாபுரீ' என்று பெயர்வந்ததென்பர். இத்தலம், நம்மாழ்வார்திருவவதரித்த தலமாதல்பற்றி, 'ஆழ்வார் திருநகரி' என்று பெயர்பெறும். (சக)

## சo. திருத்தொலைவில்லிமங்கலம்.

வாயுமனைவியர்பூமங்கையர்க ளெம்பிராற்
காயுதங்களாழிமுதலைம்படைக—டூய
தொலைவில்லிமங்கலமூர் தோள்புருவமேனி
மலைவில்லிமங்கலந்தவான்.

(இ - ள்.) எம் பிராற்கு - எமது ஸ்வாமிக்கு,—வாயும் மனைவியர் - பொருந்திய தேவிமார், பூமங்கையர்கள் - தாமரைமலரில் வாழ்கின்ற ஸ்ரீதேவியும் பூதேவியு மாவர்; ஆயுதங்கள் - படைக்கலங்கள், ஆழி முதல் ஐம்படைகள் - சக்கரம் முதலிய பஞ்சாயுதங்களாம்; ஊர் - திவ்வியதலம், தூய தொலைவில்லிமங்கலம் - பரிசுத்தமாகிய தொலைவில்லிமங்கல மென்பதாம்; தோள் - தோளும், புருவம் - புருவமும், மேனி - திருமேனிநிறமும், (முறையே), மலை - பருவதமும், வில் - வில்லும், இமம் கலந்த வான் - குளிர்ச்சி பொருந்திய ஆகாசமும் போலும்; (எ - று.)

'பூமங்கையர்' என்பதில், இரட்டுறமொழிதலால், பூ என்பதைத் தமிழ்மொழியாகக் கொண்டு, தாமரைமலரில்வாழ்கிற என்றும், 'பூ' என்ற வடமொழியின் திரிபாகக்கொண்டு பூமியாகிய என்றும் இருவகைப்பொருளும் ஒருங்கே கொள்ளப்பட்டன; "பங்கயமின்னொடு பார்மகள் தேவி," "பூமடந்தையும் நிலமடந்தையும் தேவியர்," "தேவிமாராவார் திருமகள் பூமி" என்பன காண்க. 'தோள் - மலை, புருவம் - வில், மேனி - வான்' என்று முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். இமங்கலந்தவான் என்பதற்கு - பனிபொருந்திய விசும்பு எனவும், குளிர்ச்சி பொருந்திய காளமேகம் எனவும் பொருள்கூறினுமாம். (ருo)

## கக. ஸ்ரீவரமங்கை.

வானோர்முதலாமரமளவாவெப்பிறப்பு
மானேற்கவதியிடலாகாதோ—தேனேயும்
பூவரமங்கைபுவிமங்கைநாயகனே
சீவரமங்கையரசே.

(இ - ள்.) தேன் எயும் பூ வர மங்கை - தேன்நிரம்பிய தாமரைமலரில் வசிக்கின்றசிறந்த பெரியபிராட்டியார்க்கும், புவிமங்கை - பூமிப்பிராட்டியார்க்கும், நாயகனே - தலைவனே! சீவரமங்கை அரசே - ஸ்ரீவரமங்கையென்னுந் திவ்விய தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனே!—வானோர் முதல் ஆ - தேவர்பிறவி முதலாக, மரம் அளவு ஆ - தாவரப்பிறவி ஈறாகவுள்ள, எ பிறப்பும் ஆனேற்கு - எல்லாப்பிறவிகளையும் எடுத்து வருந்திய எனக்கு, அவதி இடல் ஆகாதோ - (இனியாயினும்) ஒருமுடிவை யேற்படுத்துதல் கூடாதோ? (எ - று.)

தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவரங்களாகின்ற நால்வகையோனிகளிலும் பிறந்து பிறந்து வருந்தி உன்னை யடைக்கலம்புகுதாது எய்த்த பாவியாகிய எனக்கு, இப்போது உன்னைச் சரணமாக அமர்ந்துபுகுந்துநிற்கின்ற நல்லறிவை நீ அருளியிருத்தலால், இனியாவது அப்பிறவித்துயரம் நேராதவாறு என்னைக்கடைக்கணித்துப் பாதுகாக்கவேண்டுமென்பதாம். வானோர்முதலா மரம் அளவா எப்பிறப்பு என்பதற்கு - தேவர் மனிதர் விலங்கு புள் ஊர்வன நீர்வாழ்வன தாவரம் எனப்படுகின்ற எழுவகைப்பிறப்பு எனக் கூறுதலு முண்டு. "முன்னம்பிறந்த பிறப்போ முடிவில்லை, யின்னம் பிறப்பிக்க வெண்ணுதே - தென்னரங்கம், மேவிக்கிடந்தானே வீற்றிருக்க நின்பதத்தென், ஞவிக் கிடந்தா னருள்' என்றார் திருவரங்கக்கலம்பகத்தும்.

சீவரமங்கையென்பது - அத்தலத்திற்கு, அங்குஎழுந்தருளியுள்ள நாச்சியாரின் திருநாமத்தால் வந்தது; அங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமான் திருநாமத்தைக்கொண்டு, இந்தத் திவ்யதேசத்தை 'வானமாமலை' என்றும் வழங்குவர்: அதற்கு ஏற்றவடமொழித்திருநாமம், 'தோதாத்ரி' என்பது. (ருக)

## ௪௨. திருப்பேரை.

அரைசாகிவையமுழுதாண்டாலுமின்பக்
கரைசாரமாட்டார்கள்கண்டீர்—முரைசாருந்
தென்றிருப்பேரைப்பதியான்சீர்கேட்டுநாவிலவன்
றன்றிருப்பேரைப்பதியாதார்.

(இ - ள்.) முரைசு ஆரும் - பேரிகைவாத்தியம் முழங்கப்பெற்ற, தென் திருப்பேரை பதியான் - தெற்கின்கணுள்ள திருப்பேரையென்னுந் திவ்விய தலத்தி லெழுந்தருளிய திருமாலினது, சீர் - சிறப்பை, கேட்டு - காதினாற் கேட்டு, அவன்தன் திருப்பேரை - அப்பிரானது (மகரநெடுங்குழைக்காதன் என்னுந்) திருநாமத்தை, நாவில் பதியாதார் - தமதுநாக்கினிடத்தில் திருத்தமாக உச்சரியாதவர்கள்,—அரைசு ஆகி - ஒருநாயகமாய், வையம் முழுது ஆண்டாலும் - நிலவுலகமுழுவதையும் அரசாட்சிசெய்தாலும், இன்பம் கரை சார மாட்டார்கள் - பேரின்பத்திற்குஎல்லைநிலமாகிய முத்தியுலகத்தை அடையமாட்டார்கள்; (எ - று.)—கண்டீர்—முன்னிலையசை; தேற்றமுமாம்.

தென்திருப்பேரைத்திருமாலினது திருநாமத்தைச் செவியினாற்கேட்டலும் நாவினாலுச்சரித்தலும் செய்தால், பேரின்பத்திற்குஇடமாகிய முத்தியுலகம் வாய்க்கு மென்பதாம். இம்மையிற் பெருஞ்செல்வம்பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்தாலும் அது இம்மையிலேயே யொழிந்திடுவ தன்றி, அதனால் மறுமையில் யாதொருநற்பயனுங் கைகூடா தென்க.

அரைசு = அரசு: முரைசு = முரசு: எதுகைநோக்கிய இடைப்போலிகள். முரசுஎன்பது - வெற்றிமுரசு கொடைமுரசு மங்கலமுரசு என்ற மூன்றையுங் குறிக்கு மென்றாவது, சிறப்புப்பெயர் பொதுப்பொருளின்மேலதாய் மங்கலத்தின்பொருட்டு முழங்குகின்ற வாச்சியங்களெல்லாவற்றையுங் குறிக்கு மென்றாவது கொள்க. (௪௨)

## ௪௩. ஸ்ரீவைகுந்தம்.

தாருடுத்துத்தூசுதலைக்கணியும்பேதையிவ
ளோருடுத்தசிந்தைநிலையறியேன்—போருடுத்த
பாவைகுந்தம்பண்டொசித்தான்பச்சைத்துழாய்நாடுஞ்
சீவைகுந்தம்பாடுந்தெளிந்து.

[தலைவியின் இளமை கண்ட செவிலி யிரங்கல்.]

(இ - ள்.) தார் உடுத்து - (முடியிற்சூடவேண்டிய) பூமாலையை (அரையில்) உடுத்துக்கொண்டு, தூசு தலைக்கு அணியும் - (அரையில் அணியவேண்டிய) ஆடையை முடியின்மீது தரித்துக்கொள்ளுகின்ற, பேதை - அறிவு நிரம்பாப் பருவத்தளாகிய, இவள் - இந்தப்பெண்,—தெளிந்து - மனத்தெளிவுகொண்டு,—போர் உடுத்த - போர்புரிதற்குச் சித்தமாய்நின்ற, பாவை - பெண்ணாகிய தாடகையானவள் (தன்மீது எறிந்த), குந்தம் - சூலா

யுதத்தை, பண்டு - முற்காலத்தில் [இராமாவதாரத்தில்], ஒசித்தான் - (தனுவில்லம்பையேவி முறித்த) திருமாலினது, பச்சை துழாய் - பசுமையாகிய திருத்துழாய்மாலையை, நாடும் - விரும்புவாள்; சீவைகுந்தம் பாடும் - (அத்திருமாலெழுந்தருளியிருக்கிற) ஸ்ரீவைகுண்டமென்னுந் திவ்வியதலத்தைப்பற்றிப் பாடல்பாடுவாள்; நேர் உடுத்த சிந்தை நிலை அறியேன் - நேர்மையாகச்சென்றுகொண்டிருந்த (இவளது) மனம் (இவ்வாறு மாறிய) நிலையைப்பற்றி (யான்) அறியகில்லேன்; (எ - று.)

தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடிப்பிரிந்த தலைமகள் அவன் தன்னைப்பிரிந்ததனா லாற்றாது மிகவருந்தி, மேனிமெலிந்து அப்பிரானது திருத்துழாய்மாலையைச் சூடுவது அப்பிரானது திவ்வியதலத்தைச் சொல்வது முதலியன செய்து ஒருவாறு ஆறியிருக்கப் பார்க்க, அவ்வேறுபாடுகண்ட செவிலித்தாய், 'மிக்கஇளமைப்பருவத்தளாகிய இவளுக்குப் பருவம்நிரம்பியவர்க்கு வரக்கடவ தன்மை நேர்ந்தது என்னே!' என்று இரங்கிக்கூறியது, இது. தலைமகளது இளமைப்பருவத்தை விளக்குவாள், இன்னஇடத்தில் ஆடையையுடுப்பது, இன்னவிடத்தில் மாலையையணிவது என்னவும் தெரியாத பேதை என்றாள்: "செய்யநூலின்சிற்றாடை செப்பனுடுக்கவும்வல்லளல்லள்," "பேசவுந்தெரியாத பெண்மையிற் பேதையேன் பேதை யிவள்" என்றார் பெரியாழ்வாரும். இவள் யௌவநபருவத்தையடைந்திருந்தும் இவள்தாய்மார்க்கு அன்புமிகுதியால் இவளது மிக்கஇளமையே தோற்றுவதென்க. மகளிர்க்குஉரிய பருவம் ஏழனுள் முதலதாகிய பேதைப்பருவத்திலேயே இவளுக்கு இத்தன்மையதான வியாமோகம் உண்டானால், யாம் சொல்லத்தகுவது யாது? என்பதாம். பேதைப்பருவத்திற்கு வயதுஎல்லை-ஐந்துமுதல் ஏழளவும் என்பர். "பிஞ்சாய்ப்பழுத்தாளையாண்டாளை" என்றாற்போல வேட்கைபிறவாப் பருவமே தொடங்கி இவள் வேட்கை விஞ்சினளென்றவாறு. பேதை இவள் தாருடுத்துத் தூசு தலைக்கு அணியும் என இயைத்து - பேதையாகிய இவள் (தலைமகனிடத்துஈடுபாட்டினால்) தாரை அரையி லுடுப்பதும், தூசைத் தலையிலணிவதும் செய்கின்றாளெனப் பொருளுரைப்பினும் அமையும்: இவ்வாறாகிய செய்கைமாறாட்டம், மன்மதாவஸ்தைகள் பத்தனுள் உன்மாதாவஸ்தையின் செயலாகும். பாவைகுந்தம் பண்டொசித்தான் பச்சைத்துழாய்நாடும் சீவைகுந்தம்பாடும்—"வெற்பென்று வேங்கடம்பாடும் வியன்துழாய்க், கற்பென்றுசூடுங் கருங்குழல்மேல்" என்பது பேயாழ்வார்பாசுரம்.

ஐயங்காரது ஆற்றாமையைக்கண்ட ஞானிகள் 'எம்பெருமானைச் சேரப்பெறுதற்கு உபாயமான பக்திமுதலியன பூர்ணமின்றியிருக்க, இவருக்கு உண்டாகிய விரைவு என்னே?' என்றுசொல்லும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள்.

விசுவாமித்திரமுனிவரது வேண்டுகோளினால் தசரதசக்கரவர்த்தி ராமலக்ஷ்மணர்களை அவர்செய்யும் யாகத்தைப் பாதுகாத்தற் பொருட்டாக அம்முனிவரின் பின்னே அனுப்பியபோது, அவர்பின்சென்ற இராமபிரான் எதிர்த்துப்போர்செய்த தாடகையென்பாள் தன்மீது வீசியெறிந்த சூலா

யுதத்லைதத் தனதுவில்லினால் முறித்துத் தள்ளிய விவரத்தை, "கங்கைத் திம்புனலுடன் கருத்தையும், மங்கைத்தீயனையாளு மனக்கொளாச், செங் கைச்சூலவெந்தீயினைத் தியதன், வெங்கட்டையொடு மேற்செலவீசினான்," "மாலு மக்கணம் வாளியைத்தொட்டதும், கோலவிற் கால்குனித்ததுங் கண்டிலர், காலனைப்பறித்தக்கடியாள்விட்ட, சூலமற்றன துண்டங்கள் கண் டனர்" என்ற கம்பராமாயணத்தால் அறிக. (ருங)

கச. திருப்புளிங்குடி.

தெளியும்பசும்பொற்சிறைக்காற்றுவீச
விளியுந்துயர்போய்விடுமே—யெளியேற்
கருளப்புளிங்குடிவாழச்சுதனைக்கொண்டு
கருளப்புளிங்குவந்தக்கால்.

[தலைவி தோழியர்க்கு அறத்தொடுநிற்றல்.]

(இ - ள்.) எளியேற்கு - ஏழையேனாகிய எனக்கு, அருள - திருவருள் புரியுமாறு, புளிங்குடி வாழ் - திருப்புளிங்குடியென்னுந் திவ்வியதலத்தில் வாழ்கின்ற, அச்சுதனை - அழிவில்லாத கடவுளை, கொண்டு - (தனதுதோ ளின்மீது) எழுந்தருளப் பண்ணிக்கொண்டு, கருளப்புள் - கருடாழ்வான், இங்கு வந்தக்கால் - (நான்வசிக்கின்ற) இவ்விடத்து வந்தால்,—(அப்போது), தெளியும் - தெளிந்த, பசும்பொன் - பசிய பொன்மயமாகிய, சிறை - (அப் பெரியதிருவடியின்) இறகுகளினின்று, காற்று வீச-காற்று (என்மீது) வீசுத லாலே, விளியும் துயர் - (இப்பொழுது எனக்குநேர்ந்துள்ள) மரணத்தை யுண்டாக்குவதுபோலும் பெருந்துயரமும், போய்விடும்—; (எ - று.)

தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடிப்பிரிந்த தலைமகள் அப்பிரிவுத் துயரை யாற்றி யடக்கும் வல்லமை யிலளாகித் தன்னிலையை அன்புடைத் தோழியர்க்கு வெளிப்படையாக உரைத்தது இது. இப்பொழுதே எனது தலைவனாகிய எம்பெருமான் கருடாரூடனாகவந்து என்னைச் சார்ந்தால்மாத் திரமே எனதுஉயிர் நிற்கும்; இல்லாவிடின் இறந்துபடு மென்று தன்னிலை யைத் தெரிவிக்கின்றன ளென்க. அவன் இங்கு எழுந்தருளினால் அவனது முகத்தைக் கண்டு பிழைக்கலா மென்பதும், அவன் கண்ணோட்டத்தைப் பெற்று உய்யலா மென்பதும் அவள் உட்கோள். தான்விரும்பிய பொருளைக் கொண்டுவருவதுபற்றி, 'தெளியும்பசும்பொற்சிறை' என்று புகழ்ந்துகூறு வாளாயினாள். அத்தலைவனது சம்பந்தம் பெற்ற பெரியதிருவடியினது சிறைக்காற்று எனதுநோய் தணித்தற்கு ஏற்ற அருமருந்தாம் என்றவாறு. தூது விடுத்தபொழுது, ஆழ்வார் "அவராவி துவராமுன், அருளாழிப் புட்கடவீர் அவர்வீதி யொருநாளென்று, அருளாழி யம்மானைக் கண்டக்கா லிதுசொல்லி, யருள் ஆழிவரிவண்டே" என்று கூறியது காண்க.

எம்பெருமானை இடையீடின்றிச் சேரப்பெறாது வருந்துகின்ற ஐயங் கார் தமதுநிலைமையை அன்பர்க்குஉரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். நம்மாழ்வார் இத்திருப்பதியை மங்களாசாசனஞ்செய்கையில், "புளிங்குநீர்

முகிலின்பவளம்போற் கனிவாய்சிவப்ப நீகாணவாராயே" என்பது முதலிய பாசுரங்களால் அப்பிரானைத் தாம் உள்ளவிடத்தில் வருமாறு வேண்டுவது, இங்குக் கருதத்தக்கது. (௫௪)

## ௧௫. திருவரகுணமங்கை.

காலமுநோயுங்கருதா தவன்னைமீர்
வேலன்வெறியைவிலக்குமின்கண்—மாலாம்
வரகுணமங்கையன்றாள்வண்டுழாய்மேலா
தரகுணமங்கைதனக்கு.

[பாங்கி வெறிவிலக்கிச் செவிலியர்க்கு அறத்தொடுநிற்றல்.]

(இ - ள்.) காலமும் - (இவளது) பருவத்தையும், நோயும் - (இவளுக்கு இப்பொழுது நேர்ந்துள்ள) நோயின் தன்மையையும், கருதாத - ஆராய்ந்து (உண்மை) அறியமாட்டாத, அன்னைமீர்-தாய்மார்களே!—மங்கைதனக்கு-(உங்கள்) பெண்ணுக்கு,—மால் ஆம் - திருமாலாகிய, வரகுணமங்கையன் - திருவரகுணமங்கையென்னுந் தலத்திலெழுந்தருளிய பெருமானது, தாள்-திருவடிகளிற்சாத்திய, வள் துழாய்மேல் - வளப்பமுள்ள திருத்துழாயின் மீது, ஆதர குணம் - ஆசையாகிய குணம், (உளது): (ஆதலால்), வேலன் வெறியை - வேன்மகனது வெறியாட்டை, விலக்குமின்கள் - நீக்கிவிடுங்கள்; (எ - று.)

களவொழுக்கத்தால் தலைமகளைக் கூடிய தலைமகன் பின்பு அவளை வெளிப்படையாக மணஞ்செய்துகொள்ளுதற்பொருட்டுப் பொருள்தேடிவருதற்காக அவளைப்பிரிந்துசென்று வரவுகுறித்தகாலத்தில் வாராது நீட்டிக்க, அந்நிலையிற் பிரிவாற்றாது மிகவருந்திய தலைமகளைச் செவிலித்தாய்மார் எதிர்ப்பட்டு அவளதுவடிவுவேறுபாட்டை நோக்கி 'இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னோ?' என்று கவலையுற்றுக் கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவளும் தன்மரபின்படி ஆராய்ந்து 'இவளுக்கு முருகக்கடவுள் ஆவேசித்ததொழியப் பிறிதொன்றுமில்லை' என்றுகூற, அதுகேட்ட செவிலித்தாயர் உடனே தலைமகள்பக்கல் தமக்குஉள்ள அன்பின்மிகுதியால் 'ஏதேனும் ஒருதெய்வத்தை வழிபட்டாகிலும் இவளை உயிர்த்திருக்கப்பெறில் அதுவே நமக்கு ஆத்மலாபம்' என்றுஎண்ணி வழியல்லாவழியிலே யிழிந்து அதற்குப் பரிகாரமாக வேலனெனப்படுகிற வெறியாட்டாளனை யழைப்பித்து அவனைக்கொண்டு ஆவேசமாடுவிக்க முயல, நோயொன்றும் மருந்தொன்றுமாதலால் தான்காதலித்த புருஷோத்தமனான தலைமகனது தகுதிக்கு ஏலாத அச்செயலை நோக்கித் தலைமகள் மேன்மேல் மிகவருந்த, அவளது துன்பத்தின் உண்மைக்காரணத்தை யுணர்ந்த தோழி அச்சமயத்திற் செவிலியரை நோக்கி வெறிவிலக்குமாறு கூறி, தலைவியினது துன்பத்தின் உண்மைக்காரணத்தை யுணர்த்துகின்ற துறை இது. ஆழ்வார் திருவாய்மொழியில் "தீர்ப்பாரையாமினி" என்று தொடங்குகிற வெறிவிலக்குப்பதிகத்திலும் "இதுகாண்மினன்னைமீரிக்கட்டுவிச்சிசொற்கொண்டு நீ, ரெதுவானுஞ்

செய்தங்கோர்கள்ளுமிறைச்சியுந் தூவேன்மின், மதுவார்துழாய்முடிமாயப் பிரான்கழல்வாழ்த்தினு, லதுவே யிஃதுற்றநோய்க்கு மருமருந்தாகுமே" என்று அருளிச்செய்தமை யறிக.

முருகக்கடவுளது வேலைத் தனக்குஅடையாளமாக ஏந்திக்கொண்டு நின்று ஆடுதலால், 'வேலன்' எனப்பட்டான்; 'வேன்மகன்' என்றும் இவனை வழங்குவர். 'இவ்வகம் தேவதாந்தரசம்பந்தமுடையார்புகும் அகமன்றுகாண்' என்று வெருட்டுபவளாய் 'வேலன்வெறியை விலக்குமின்கள்' என்றாள்; "கூராராழிவெண்சங்கேந்தி" என்று சொல்லுகிறபடியே கையுந்திருவாழியு மாகக் காணவேண்டியிருக்கிறவிடத்தே கையும் வேலுமாக இவன் வந்து தோற்றுவதே! என்று வெறுத்தவாறு. அன்னைமீர் - உண்மைக்காரணம் உரைக்கப்படுதற்கு உரிமையையும் இவளியல்பிற்கு ஏற்றபடி நன்மைசெய் யும் வாற்சலியத்தையும் உடையவர்களே! என்றபடி. தலைவனது திருமேனி யழகிலும் திவ்யாத்மகுணத்திலும் ஈடுபட்டனள் இம்மங்கை யென்பாள், 'மாலாம்வரகுணமங்கையன்' என்றாள். திருமாலாகிய தலைமகனால் நேர்ந்த நோய்க்கு அவனது தொடர்புடைய பொருளல்லது மாற்றுமருந்தில்லை யென்பது, தேர்ந்தபொருள்.

தமது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமான் மறைந்தவளவிலே அவனது பிரிவைப் பொறாமல் வருந்துகின்ற ஐயங்காரது துயரத்தைக் கண்ட ஞானிகள், அவர்பக்கல் வைத்த பரிவா லுண்டான கலக்கத்தால் எம்பெருமான் உபாயாந்தரங்களால் அடையத்தக்கவனல்ல னென்பதை மறந்து, தேவதாந்தரபஜநத்தாலாவது இவரது ஆற்றாமையைத் தணிப்பிக்க லாமோ? என்று தொடங்கியநிலையில், ஐயங்காரது தன்மையை யறிந்த அன்பர்கள் விலக்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். 'வேலன் வெறியை விலக்குமின்கள்' என்றவிடத்து தேவதாந்தரசம்பந்தமுடையாரது சேர்க்கையும் மறந்தும்புறந்தொழா மாந்தரான பாகவதர்க்குக் குறிக்கொண்டுவிலக்கத்தக்க தென்பது, பெறப்படும். ஞானிகள்தாம் அங்ஙனம் வழியல்லாவழியில் இழிவார்களோ என்னில்?—ஐயங்கார்பக்கல் தாம்கொண்ட பரிவின் மிகுதி தம்மைக் கலங்கப்பண்ணுகையால், அமார்க்கங்களாலே யாகிலும் பரிகரிக்கப்போமோ வென்று முயன்றன ரென்க; (இதனை, 'அயோத்யாபுரியிலுள்ள ஜநங்களெல்லாரும் இராமபிரானுடைய க்ஷேமத்தின்பொருட்டு எல்லாத்தேவர்களையும் வணங்கினர்' என்றதனோடு ஒப்பிடுக.) அன்னைமீர் என்று விளித்ததனால், முதியரான நீர் இளையரான எமது வார்த்தையை உபேக்ஷிக்கலாகா தென்று குறிப்பித்தபடி. மோக்ஷப்ரதர் இழியுந் துறை மோக்ஷியின் திருவடிகளே யாதலால், 'தாள்துழாய்மேலா தரம்' என்றனர். (ருரு)

சுசு. திருக்குளந்தை.

தனக்குடலம்வேறான தன்மையுணரான்
மனக்கவலைதீர்ந்துய்யமாட்டா—னினைக்கிற்
றிருக்குளந்தையாருரைத்தசீர்க்கிதைபாடுந்
தருக்குளந்தையாமலிருந்தால்.

(இ - ள்.) நினைக்கில் - ஆராய்ந்துபார்க்குமிடத்து,—திருக்குளந்தையார் உரைத்த - திருக்குளந்தையென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளிய திருமால் திருவாய்மலர்ந்தருளிய, சீர் கீதை - சிறந்தபகவத்கீதையை, பாடும் - படிப்பதனாலுண்டாகிய, தருக்கு - மனக்களிப்பு, உளம் - (ஒருவனது) மனத்தில், தையாமல் இருந்தால் - பதியாமலிருந்தால்,—(அவன்), தனக்கு - (ஆன்மாவாகிய) தன்னைக்காட்டிலும், உடலம் - உடம்பு, வேறு ஆன - வேறுபட்டுள்ள, தன்மை - நிலையை, உணரான் - அறியமாட்டான்; மனம் கவலை தீர்ந்து - (ஸம்ஸாரபாசத்தால்நேரும்) மனக்கவலை மாறி, உய்யமாட்டான் - நற்கதியடையமாட்டான்; (எ - று.)

பாரதயுத்தத்து முதனாட்போரில் "உற்றாரையெல்லாம் உடன்கொன்று அரசாளப், பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம்" என்று எண்ணி, ஸ்வதர்மத்தில் அதர்மபுத்தியால் போர்புரியேனென்று காண்டீவம் கைந்நெகிழத் தேர்த்தட்டின்மீதே திகைத்துநின்ற அருச்சுனனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் தத்துவோபதேசஞ்செய்து அவனதுகலக்கத்தைப் போக்கிய கீதையைப் படித்து அதன்பொருளை மனத்திற்கொண்டு ஆனந்தமடைபவரே 'ஆத்மா வேறு, சரீரம் வேறு' என்கிற தேஹாத்மவிவேகம் பிறந்து, தத்துவவுணர்ச்சியால் மனக்கவலைதீர்ந்து வாழ்வ ரென்பதாம். ஸ்ரீகிருஷ்ணன் கீதையில் முதலிலே அர்ஜுநனுக்கு தேஹாத்மவிவேகத்தைப் போதித்து அதன்மூலமாகக் கர்மயோகம் புருஷோத்தமவித்யை அவதாரரஹஸ்யஜ்ஞாநம் விச்வரூபம் முதலியவற்றை உபதேசிக்க, அர்ஜுநன் அந்த எம்பெருமான் உபதேசித்த உபாயவிசேஷங்களைக் கேட்டு அவை செயற்கரியனவென்றும் ஸ்வரூபவிரோதிகளென்றும் நினைத்துக் கலக்கமடைய, அவனுடைய கலக்கந் தீருமாறு எல்லாவுபாயங்களினும் மேம்பட்ட பிரபத்தியுபாயத்தை உபதேசித்து, "அஹந்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச: [நீ என்னையேசரணமாகப்பற்றினால் நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிப்பேன்; கலங்கவேண்டா]" என்று அவனதுகலக்கத்தைப் போக்கியமை காண்க. இங்கு,கீதையின் முதலிற் கூறிய தேஹாத்மவிவேகமும், இறுதியிற்கூறிய எம்பெருமானால் அபயமளிக்கப்பெற்றுக் கலக்கம்நீங்குதலும் கீதையைப் படியாதார்க்கு உளவாகா வென்று கூறிய முகத்தால், அந்நூலின் இடையிற் கூறிய கர்மயோகம் முதலியவற்றைப்பற்றிய விஷயங்களையும் பெறவைத்தன ரென்க.

"அறிவினாற்குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய, நெறியெல்லா மெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி" என்றபடி ஸர்வஜ்ஞனான ஸர்வேஸ்வரன் தனது திருவாக்கினின்று உலகத்தார் நற்கதிபெறவேணுமென்ற கருத்தோடு உபநிஷத்துக்களின் ஸாரமாக வெளியிட்ட தாதலின், இந்தக்கீதை, எல்லாநூல்களினுஞ் சிறந்த பிரமாணமாய்த் தன்னையுணர்ந்தார்க்குத் தத்துவஞானத்தைப் பிறப்பித்து நற்கதியளிக்குஞ் சிறந்தது; பதினெட்டுஅத்தியாயங்களை யுடையது; ஸ்ரீமகாபாரதத்தில் பீஷ்மபர்வத்திலுள்ளது.

இந்தத்தலம்-பெரியகுளத்தையுடைய தாதலின், 'பெருங்குளம்' என்று வழங்குகின்றது: ஆகவே, குளந்தை யென்பது மரூஉமொழிபோலும். (ருசு)

## கஎ. திருக்குறுங்குடி.

தாலத்திழிகுலத்துச்சண்டாளமானாலு
மேலத்தவரதனின்மேன்மைத்தே—கோலக்
குறுங்குடிவாழ்மாயன்குரைகழற்காளாகப்
பெறுங்குடியாய்வாழ்வார்பிறப்பு.

(இ - ள்.) கோலம் - அழகிய, குறுங்குடி - திருக்குறுங்குடி யென்னுந் திவ்வியதலத்தில், வாழ் - நித்தியவாசஞ்செய்கின்ற, மாயன் - திருமாலினது, குரை கழற்கு - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகட்கு, ஆள் ஆக பெறும் - அடிமையாகப்பெறுகின்ற, குடி ஆய் - சந்ததியிற் பொருந்தியவராய், வாழ்வார் - வாழ்கின்றவர்களுடைய, பிறப்பு - ஜந்மமானது,—தாலத்து - இந்நிலவுலகில், இழி குலத்து - தாழ்ந்தசாதியைச்சேர்ந்த, சண்டாளம் ஆனாலும் - சண்டாளஜந்மமேயானாலும்,—மேல் - உயர்குடிப்பிறப்பையுடைய, அதவர் அதனின் - அந்தமுனிவரது பிறவியைக்காட்டிலும், மேன்மைத்து - உயர்வையுடையதாம்; (எ - று.)

திருக்குறுங்குடியி லெழுந்தருளியுள்ள நம்பியென்னுந் திருமாலினது திருவடிகட்கு ஆட்பட்டார் சண்டாளஜந்மத்திற் பிறந்தாராயினும் உயர்குடிப்பிறந்த அந்தணாளரினும் மிகவும் மேம்பட்டவராவ ரென்பதாம். ஐயங்கார் இத்தலத்தைப் பாடுகையில் இவ்வாறுகூறியது - சண்டாளஜந்மத்திற் பிறந்த நம்பாடுவான் தன்னை யுண்ணுமாறு வந்த பிரமராக்ஷஸனுக்கு முன்பு சபதஞ்செய்துகொடுத்து, இத்தலத்து எம்பெருமானைக்குறித்துக் கைசிகமென்னும் பண்பாடி வழிபட்டு மீண்டு, முன்னர்ப் பிராமணனாகிக் கருமாநுஷ்டானத்திற் கொத்தையினால் பிரமராக்ஷஸான அவனை உய்விக்குமாறு அவனினும் மேம்பட்டா னென்ற சரிதத்தை உட்கொண்டுபோலும். ஒருவனுக்கு உயர்வு "ஆக்குமறிவானலது பிறப்பினால், மீக்கொளுயர்விழிவு வேண்டற்க" என்றபடி தத்துவவுணர்ச்சியினாலேயன்றிப் பிறவியினாலன்று என்பது, இதன் கருத்து.

உயர்குடிப்பிறந்தோராயினும் தத்துவவுணர்ச்சியின்மையால் திருமாலை வழிபடாதவர் சண்டாளரினும் தாழ்ந்தவராவ ரென்பது, இங்குப்போதரும்; "அடிமையிற் குடிமையில்லா அயல்சதுப்பேதிமாரில், குடிமையிற்கடைமைப்பட்ட குக்கரிற் பிறப்பரேனும், முடியினிற் றுளபம்வைத்தாய் மொய்கழற்கன்புசெய்யும், அடியரை யுகத்திபோலும் அரங்கமாநகருளானே," "அமரவோரங்கமாறும் வேதமோர்நான்கு மோதித், தமர்களில்தலைவராய சாதியந்தணர்களேலும், நுமர்களைப்பழிப்பராகில் நொடிப்பதோரளவிலாங்கே, அவர்கள்தாம் புலையர்போலும் அரங்கமாநகருளானே" என்ற திருமாலைப்பாசுரங்களும், "ப்ராஹ்மண்யம் விலைச்செல்லுகிறது - வேதாத்யயநாதிமுகத்தாலே பகவல்லாபஹேதுவென்று; அதுதானே இழவுக்கு உறுப்பாகில், த்யாஜ்யமாயிறே. ஜந்மவ்ருத்தங்களினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் பேற்றுக்கும் இழவுக்கும் அப்ரயோஜகம்; ப்ரயோஜகம் - பகவத்ஸம்பந்தமும் தத்ஸம்பந்தமும்" என்பவை முதலிய ஸ்ரீவசநபூஷணவாக்கியங்க

ளும் இங்குக் காணத்தக்கன. "பாதிபாயழுகிய கால்கையரேனும் பழிதொழிலு மிழிகுலமும் படைத்தாரேனும், ஆதியாயரவணையாயென்பராகி லவரன்றே யாம்வணங்குமடிகளாவார், சாதியாலொழுக்கத்தால் மிக்கோரேனும் சதுமறையால் வேள்வியால் தக்கோரேனும், போதில்நான்முகன் பணியப் பள்ளிகொள்வான் பொன்னரங்கம் போற்றாதார் புலையர்தாமே" என்றார் திருவரங்கக்கலம்பகத்தும்.

தாலம் - தலம் என்பதன் நீட்டல். 'அத்தவர்' என்பதில், அகரச்சுட்டு- பிரசித்திபற்றியது. இனி, மேலத்தவர் என்பதை ஒருசொல்லாகக்கொண்டு, மேன்மையுள்ளவர் எனப் பொருள் கூறுவாரு முளர்: இதில், அத்து அ- சாரியைகள்.

குறங்கியவனான வாமனனது க்ஷேத்ர மாதலால், இத்தலத்திற்குக் குறுங்குடியென்று பெயர்வந்த தென்பர். இத்தலத்திலுள்ள எம்பெருமான்களுள் ஒரு எம்பெருமான் ஸ்ரீபாஷ்யகாரர்பக்கலிலே வேதாந்தார்த்தம் கேட்டு ஶிஷ்யனாய் 'நாமும் நம்மிராமாநுசனை யுடையோம்' என்கையாலே, அப்பெருமானுக்கு வைஷ்ணவநம்பியென்று திருநாமம். நம்மாழ்வார்திருவவதாரத்திற்குக் காரணமாயிருந்தவரும் இத்தலத்துநம்பியே. (ருஎ)

## கஅ. திருக்கோளூர்.

பிறப்பற்றுமூப்புப்பிணியற்றுநாளு
மிறப்பற்றுவாழவிருப்பீர்—புறப்பற்றுத்
தள்ளுங்கோ ளூரரவிற்றாமோதரன்பள்ளி
கொள்ளுங்கோளூர்மருவுங்கோள்.

(இ - ள்.) பிறப்பு அற்று - பிறப்பு ஒழிந்து, மூப்பு பிணி அற்று - கிழத்தனமும் வியாதியும் நீங்கி, இறப்பு அற்று - மரணந் தவிர்ந்து, நாளும் - எந்நாளும், வாழ - (முத்தியில் நிலைபெற்று) வாழும்படி, இருப்பீர் - விருப்பங்கொண்டிருப்பவர்களே !--(நீங்கள்), புறம் பற்று தள்ளுங்கோள் - மமகாரத்தை யொழியுங்கள்; ஊர் அரவில் - மார்பினாலூர்ந்துசெல்லுந் தன்மையதான சர்ப்பசாதியிற்சேர்ந்த திருவநந்தாழ்வான்மீது, தாமோதரன் - திருமால், பள்ளிகொள்ளும் - சயனத்திருக்கோலமாகக் கண்வளர்ந்தருளுகின்ற, கோளூர் - திருக்கோளூ ரென்னுந் திவ்வியதலத்தை, மருவுங்கோள் - சென்று சேருங்கள்; (எ - று.)

திருவநந்தாழ்வானாகிய திருவணையின்மீது வைத்தமாநிதிப்பெருமாள் கண்வளர்ந்தருளப்பெற்ற திருக்கோளூரைச் சார்ந்தால், பிறப்பு இறப்பு முதலிய பிறவித்துன்பங்கள் யாவும் நீங்கி மூத்திபெறலா மென்பதாம். புறப்பற்றைக் கூறியது - அகப்பற்றுக்கும் உபலக்ஷணம். அகப்பற்றாவது - தான் அல்லாத உடம்பை யானென்றுகருதி அதனிடத்துப் பற்றுச்செய்வது. புறப்பற்றாவது-தன்னோடுஇயைபில்லாத உலகத்துப்பொருளை எனதுஎன்று கருதி அதனிடத்துப் பற்றுச்செய்வது. "யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்தவுலகம் புகும்" என்ற திருக்குறளினும் இவ்விரு

வகைப் பற்றுக்களையும் அறுத்தவரே உயர்கதிபுகுவரென்று கூறியிருத்தல் காண்க. இருபற்றையுங் கெடுத்தலாவது - 'தேசிகர்பாற்பெற்ற உறுதிமொழிகளாலேனும், யோகப்பயிற்சியாலேனும் அவை யான் எனது அன்மை தெளிந்து அவற்றின்கண் பற்றைவிடுதலாம்.' "அற்றதுபற்றெனி லுற்றதுவீடுயிர்" என்பது - நம்மாழ்வார் பாசுரம். தள்ளுங்கோள், மருவுங்கோள் - தள்ளுங்கள், மருவுங்கள் என்பவை திரிந்துவந்தன.

நவநிதிகள் இங்கே ஒளித்துக்கொண்டிருக்கின்றன என்று அதருமம் குபேரனுக்குக் கோள்சொல்லிய இடமாதல்பற்றி, இத்தலத்திற்குத் திருக்கோளூ ரென்று பெயரென்பர்; நிதாநக்ஷேத்ரம் என்று வடமொழியிற் பெயர்வழங்கும்; மதுரகவியாழ்வார் திருவவதரித்த தலம் இது. (ருஅ)

பாண்டியநாட்டுத்திருப்பதிகள் முற்றும்.

---

## மலைநாட்டுத் திருப்பதிகள் - கக.

### க. திருவனந்தபுரம்.

கோளார்பொறியைந்துங்குன்றியுடலம்பழுத்து
மாளாமுனெஞ்சேவணங்குதியாற்—கேளார்
சினந்தபுரஞ்சுட்டான்றிசைமுகத்தான்போற்று
மனந்தபுரஞ்சேர்ந்தானடி.

(இ - ள்.) நெஞ்சே - (எனது) மனமே!—கோள் ஆர் பொறி ஐந்தும் - (விஷயங்களில் உன்னை) இழுத்துச் செல்லுந் தன்மை பொருந்திய ஐம்பொறிகளும், குன்றி-(தம்தமக்குஉரிய) வலிமையொடுங்கி, உடலம்-உடம்பானது, பழுத்து - (முதுமையினால்) தளர்ச்சியடைந்து, மாளாமுன் - இறப்பதற்குமுன்னே,—கேளார் - பகைவர்களாகிய அசுரர்கள், சினந்த - கோபித்துப்பொருதற்கு இடமாயிருந்த, புரம் - திரிபுரங்களை, சுட்டான் - (நெற்றிக்கண்ணினால்) எரித்தழித்தவனான சிவபெருமானும், திசைமுகத்தான் - நான்குதிசையையும் நோக்கிய நான்குமுகங்களையுடையவனான பிரமதேவனும், போற்றும் - துதித்துவணங்கப்பெற்ற, அனந்தபுரம் சேர்ந்தான் - திருவனந்தபுரமென்னுந் திருப்பதியில் (சயனத்திருக்கோலமாக) எழுந்தருளியுள்ள பத்மநாபப்பெருமானுடைய, அடி - திருவடிகளை, வணங்குதி-வணங்குவாயாக; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

திரிமூர்த்திகளில் மற்றையிருமூர்த்திகளாலும் வணங்கப்பெற்ற திருமாலை மூப்புமுதிர்ந்து இறப்புநேர்தற்குமுன்னம் வணங்குவாயாகவென்று நெஞ்சைநோக்கி இதமுரைத்தவாறு: "நடமினோ...யலனந்தபுரநகர் புகுதுமின்னே" என்றார் நம்மாழ்வாரும். திருவனந்தபுரத்துத் திருமாலின் திருவடியை வணங்குவதே ஆத்மாவுக்குப் பரமப்ரயோஜந மென்க. நினைத்தல் பேசுதல் தொழில்செய்தல் என்பன முறையே மனம் மொழி மெய் என்னுந் திரிகரணங்களின் செயலாதலால், அவற்றில் மெய்யின்செயலான வணங்கு

தலை மனத்தின்மேலேற்றி 'நெஞ்சே வணங்குதி' என்றது - ஒருறுப்பின் வினையை மற்றோருறுப்பின்மேலேற்றிக் கூறும் ஒருவகையுபசாரவழக்காம். மெய்யினால் வணங்குதற்கும் மனத்தின்நினைப்பு இன்றியமையாது வேண்டு தலால், அத்தலைமைபற்றி, இங்ஙனம் புறக்கரணத்தின்செயல் அகக்கரணத் தின்மே லேற்றப்பட்ட தென்க. "நிலையாமையானவுடலு முயிரு நினைவுந் தம்மிற், கலையா மையானங்கலக்குமுன்னே கங்கைவைத்தசடைத், தலையா மையானனன் தாமரையான் தொழுந்தாளழகன், அலையாமையானவன் மாலிருஞ்சோலை யடை நெஞ்சமே" என்ற அழகரந்தாதியோ டொத்த வாய் பாடுடையது, இச்செய்யுள். "குமரனார்தாதை துன்பந்துடைத்த கோவிந்த னார்" என்றபடி அங்குஎழுந்தருளிய எம்பெருமான் சிவபெருமானது துய ரத்தைப் போக்கினவனாதலாலும், பிரமன் அப்பெருமானது நாபீகமலத் தில் தோன்றி எப்போதும் சேவித்துக்கொண்டிருத்தலாலும், 'சேனார் சினந்தபுரஞ்சுட்டான் திசைமுகத்தான் போற்றும் அனந்தபுரஞ்சேர்ந் தான்' என்றார். (ருக)

## உ. திருவண்பரிசாரம்.

அடியுங்குளிர்ந்தா ளறிவுங்குலைந்தாள்
முடிகின்றாள் மூச்சடங்குமுன்னே—கடிதோடிப்
பெண்பரிசாரங்குப்பிறப்பித்துமீளுவார்
வண்பரிசாரங்கிடந்தமாற்கு.

[பிரிவாற்றுவநந்துந் தலைவியின் நிலைகண்ட செவிலி இரங்கல்.]

(இ - ள்.) (தலைமகள்),— அடியும் குளிர்ந்தாள் - கால்களும் குளிரப் பெற்று, அறிவும் குலைந்தாள் - அறிவும் அழியப்பெற்று, முடிகின்றாள் - மர ணமடையுந்தறுவாயி லிருக்கின்றாள்; மூச்சு அடங்கும் முன்னே - (இவளது) சுவாசம் ஒடுங்குவதற்குமுன்னே [உயிரோடிருக்கையில்], வண்பரிசாரம் கிட ந்த மாற்கு - திருவண்பரிசாரமென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியுள்ள திருவாழ்மார்பரென்னுந் திருமாலினிடத்தில், கடிது ஓடி - விரைந்துசெ ன்று, பெண் பரிசு - இப்பெண்ணின் தன்மையை, பிறப்பித்து - விளங்கும் படி சொல்லித்தெரிவித்து, மீளுவார் - திரும்பவல்லவர், ஆர் - யாவர்? (எ-று.) —அங்கு - அசை; அவ்விடத்து எனினுமாம்.

தலைமகனோடு கூடிப்பிரிந்த தலைமகள் பிரிவாற்றாமையாற் படுகின்ற பெருந்துயரமுழுவதும் கண்டு ஆற்றமாட்டாளான செவிலித்தாய், தன் னாற்றாமைமிகுதியால் தலைமகளினது நிலைமையைத் தலைமகனிடத்துச் சொல்லுதற்கு ஏற்ற தூதுவர் இல்லாமை கண்டு இரங்கிக்கூறியது, இது. மன்மதாவஸ்தை ஐந்தனுள் அயர்ப்பும் மயக்கமு முடைய மாணவஸ்தை, இச்செய்யுளில் எடுத்துக்காட்டப்பட்ட தென்க. அடிகுளிர்தல் - மரணத் திற்கு முற்குறி. மூச்சடங்குமுன்னே பிறப்பித்து மீளுவார் என இயையும். இவள் உயிரோடிருக்கையிலேயே இவளதுசெய்தியைத் தலைமகனிடத்துத் தெரிவித்துத் தலைமகனை இவளிடம் வந்துசேருமாறு செய்தால்தான் இவள்

உயிர்பெறுவ ளென்றாளாம்: தலைமகனிடத்துச் சென்றுமீண்டுவருவதற்குச் சிறிது தாமதிக்குமாயின், இப்பெண்மகள் இறந்துபடுவ ளென்பாள், 'கடிது ஓடி மீளுவார் ஆர்' என்றாள்.

வண்பரிசாரங்கிடந்தமார்க்கு என்பதற்கு - திருவண்பரிசாரத்தில் சயனத்திருக்கோலமாகப் பள்ளிகொண்டிருக்கின்ற திருமாலுக்கு எனப் பொருளுரைத்தல், சரியன்று; "வண்பரிசாரத்திருந்த வென், திருவாழ்மார்பற்கு என் திறம்சொல்லார் செய்வதென்" என்ற நம்மாழ்வார் பாசுரத்தின் படி, இத்திருப்பதியில் எம்பெருமான் வீற்றிருந்ததிருக்கோலமாக எழுந்தருளியிருத்தலா லென்க. "வண்பரிசாரம்மிருந்தமார்க்கு" எனப் பாடமோதுவாரு முளர்.

எம்பெருமானது பூர்ணாநுபவத்தைப் பெறாதபோது பலவாறுவருந்துகின்ற ஐயங்காரது நிலைமைகளை அவர்பக்கல் பரிவுடையார் அறிந்து, அவரதுநிலைமையை அப்போதே புருஷகாரமாகச்சென்று உரைப்பவர் இல்லாமைநோக்கிப் பரிந்துகூறிய பாசுரம், இதற்கு உள்ளுறைபொருள்; பிறவும் உய்த்துஉணர்க. (௬௦)

## ௬௧. திருக்காட்கரை.

மார்க்கமுந்தாந்தாம்வழிபடுந்தெய்வமு
மேற்கவுரைப்பார்சொலெண்ணாதே—தோற்குரம்பை
நாட்கரையாமுன்னமே நன்னெஞ்சே நாரணனுங்
காட்கரையாற்காளாகாய்காண்.

(இ - ள்) நல் நெஞ்சே - (எனது) நல்லமனமே!—தாம் தாம்-(உலகத்து மானுடரில்) அவரவர்கள், வழிபடும் - (கடவுளையடைதற்குக்) கைக்கொள்ளுகிற, மார்க்கமும்-வழிகளும், (தாம் தாம் வழிபடும்) - அவரவர்கள் வணங்குகின்ற, தெய்வமும் - தெய்வங்களும், (ஆகிய இவற்றிற்கு), ஏற்க - பொருந்துமாறு, உரைப்பார் - வலியுறுத்திப்பேசுகின்ற அந்நியமதஸ்தரது, சொல்-வார்த்தைகளை, எண்ணாது - (நன்மைதருவனவாக) மதியாமல்,—தோல் குரம்பை நாள் கரையா முன்னமே - உயிர்வாழுதற்கென்று தோலினால் வேய்ந்த குடிசைபோன்ற உடம்பின் வாழ்நாள் கழிதற்குமுன்னமே [இறப்பதற்குள்ளே], நாரணன் ஆம் காட்கரையாற்கு - திருக்காட்கரை யென்னுந் திருப்பதியி லெழுந்தருளியுள்ள ஸ்ரீமந்நாராயணனுக்கு, ஆள் ஆகாய் - அடிமைப்படுவாயாக; (எ - று.)—காண் - முன்னிலையசை: தேற்றமுமாம்.

புல்லோர் தமது ஆராய்ச்சிக்குறைவினால் பற்பல தேவதாந்தரங்களையும் அவரைப்பற்றிய பொய்ந்நூல்களையும் உண்மையென்று பாராட்டிக் கூறுவதைச் சிறிதும்மதியாமல், திருக்காட்கரையப்பனே உபாயமும் உபேயமு மாவ னென்னும் உண்மையை யுணர்ந்து அவனுக்கு ஆட்படவேண்டுமென்று தமதுநெஞ்சிற்கு அறிவுஉறுத்தியவாறு. நெஞ்சே! நீ புல்லோர் வழியிற் புகுதாது நல்லோர்நெறியில் நிற்பா யென்று குறிப்பித்தபடி. "வணங்குந்துறைகள்பலபலவாக்கி மதிவிகற்பாற், பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி

யவையவைதோ, றணங்கும்பலபலவாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்" என்ற பாசுரம் இங்குக் கருதத்தக்கது. "தெய்வம்பல வவர்நூலும் பல" என்றார் அழகரந்தாதியிலும். 'தாம்தாம்வழிபடும்' என்பது, முன்னுள்ள 'மார்க்கம்' என்பதனோடும், பின்னுள்ள 'தெய்வம்' என்பதனோடும் கூட்டியுரைக்கப்பட்டது; இவ்வாறு வருவது - இடைநிலைத்தீவகம் எனப்படும். தாம்தாம் வழிபடும் மார்க்கம் - பக்தி ப்ரபத்தி முதலியனவாகக் கூறப்படுகின்ற பலவேறு சாதநங்கள். 'தாம்தாம்வழிபடுந்தெய்வம்' என்றது - சிவன் குமாரன் கணபதி புத்தன் ஜிநன் முதலியனவாக உலகத்துப் பலவேறுதெய்வங்கள் வழங்குதல்பற்றியாம். என்னுதே என்பதை ஏவலொருமைமுற்றாகக்கொண்டு உரைப்பினுமாம். (௬௩)

## ௪. திருமூழிக்களம்.

காண்கின்றனைவர்பூதங்கட்குமிருசுடர்க்குஞ்
சேண்கலந்தவிந்திரற்குந்தேவர்க்கு—மாண்கரிய
பாழிக்களத்தாற்கும்பங்கயத்துநான்முகற்கு
மூழிக்களத்தான்முதல்.

(இ - ள்.) காண்கின்ற - கண்ணுக்குப் புலப்படுகின்ற, ஐம் பூதங்கட்கும்- (பிருதிவி முதலிய) பஞ்சபூதங்களுக்கும், இருசுடர்க்கும் - சூரியசந்திரரென்னும் ஒளியுள்ள பொருளாகிய இருவர்க்கும், சேண் கலந்த - வானுலகத்தில் வாழ்கின்ற, இந்திரற்கும் - தேவேந்திரனுக்கும், தேவர்க்கும் - (அவனுக்குக் கீழ்ப்பட்ட மற்றைத்) தேவர்கட்கும்,—மாண் - மாட்சிமையுடைய, கரிய- (விடமுண்டதனால்) கறுத்த, பாழி - வலிமைகொண்ட, களத்தாற்கும் - கழுத்தையுடைய உருத்திரமூர்த்திக்கும், பங்கயத்து நான்முகற்கும்-தாமரை மலரில்வாழ்கின்ற நான்குமுகங்களையுடைய பிரமதேவனுக்கும்,—மூழிக்களத்தான் - திருமூழிக்களமென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளிய திருமாலே, முதல் - மூலகாரணமாவன்; (எ - று)

மண்முதல் பிரமனீறாகவுள்ள எல்லாப்பொருள்களையும் படைத்த முதற்கடவுள் திருமாலே யென்பதாம். 'காண்கின்ற' என்ற அடைமொழியை, மற்றைப்பொருள்கட்குங் கூட்டுக. தேவர்க்கும் - இந்திரனினும்மேம்பட்ட பிருகஸ்பதி முதலிய கடவுளர்க்கும் எனினுமாம். (௬௪)

## ௫. திருப்புலியூர்.

முதல்வண்ணமாமேமுலைவண்ணமுன்னே
விதிவண்ணநீக்கிவிடுமே—சதுரத்
திருப்புலியூர்நின்றான்றிருத்தண்டுழாயின்
மருப்புலியூர்தென்றல்வரின்.

[தலைவி தோழியர்க்கு அறத்தோடு நிற்றல்.]

(இ - ள்.) சதுரம் - அழகிய, திருப்புலியூர் - திருப்புலியூரென்னுந் திவ்வியதலத்தில், நின்றான் - நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருக்கின்ற

மாயப்பிரானது, திரு தண் துழாயின் - குளிர்ந்த திருத்துழாய்மாலையினது, மரு - நறுமணத்தை, புல்லி - பொருந்தி, ஊர் - தவழ்ந்துசெல்லுந்தன்மையுடைய, தென்றல் - தென்றற்காற்றானது, வரின் - வந்துவீசுமாயின்,—(அப்பொழுது, எனக்கு), மேலை வண்ணம் - தனத்தின் நிறம், (காமவிகாரத்தால் ஏற்பட்ட பசலைநிறம் மாறி), முதல் வண்ணம் ஆம் - முன்னைய நிறமே வந்துசேரும்; முன்னே விதி வண்ணம் - முற்பிறப்பிற்செய்த தீவினையின்பயனாக நேர்ந்த பிரிவுத்துயர்முழுவதும், நீங்கிவிடும் - அடியோடு போய்விடும்; (எ - று.)

தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடிப் பிரிந்த தலைமகள் அப்பிரிவுத்துயரை யாற்றியடக்கும் வல்லமை யிலளாகி, தனது நிலைமையை அன்புடைத் தோழியர்க்கு வெளிப்படையாக உரைத்து, 'இனித் தலைமகனது திருத்துழாயின் நறுமணத்தைக் கொண்டுவந்து இளங்காற்று என்மீது வீசினால்தான் யான் உயிர்பிழைத்து முன்னையநிலையைப் பெறுதல் கூடும்' என்று தனது வேறுபாட்டைப் போக்குதற்குஉரிய உபாயத்தைக் கூறி, அறத்தொடுநின்றது, இது. இதனை, தோழி செவிலியர்க்கு அறத்தொடுநிற்றலாகக் கொள்வாருமுளர்.

எம்பெருமானை இடையீடின்றிச் சேரப்பெறாத நிலையில் காலவிளம்பம் பொறுக்கமாட்டாமையாற் காலம் நீட்டித்ததாகத் தோன்ற, வருந்துகின்ற ஐயங்கார் தமது அன்பர்களை நோக்கி எம்பெருமானது திருவருளைப் பெற்றவளவிலே யான் உய்வுபெறுவேனென்று கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். எம்பெருமான் திருவருள்புரிந்தால், நிலைகலங்குதலில்லாது பக்தி உறுதிப்படுமென்பது, முதலடியின் உள்ளுறை. "போயபிழையும் புகுதருவானின்றனவும், தீயினிற்றூசாகும்" என்றபடி எம்பெருமானது திருவருளைப் பெற்றார்க்கு முன்னையவினைகள்யாவும் அகலுமாதலால், 'முன்விதிவண்ணம் நீங்கி விடும்' என்றனரென்க. விவரம் உய்த்துணர்க. 'முன்னை, விதி வண்ணம்' என்றும் பாடம் வழங்கும். (௬௩)

௬௪. திருச்செங்குன்றூர்.

வரவேண்டுங்கண்டாய் மதிகலங்கிவிக்குள்
பொரவேயுயிர்மாயும்போழ்து—பரமேட்டி
செங்குன்றூர்மாலே சிறைப்பறவைமேற்கனகப்
பைங்குன்றூர்கார்போற்பறந்து.

(இ - ள்.) பரமேட்டி - பரமபதத்தில் வீற்றிருப்பவனே! திரு செங்குன்றூர் மாலே - திருச்செங்குன்றூரென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியிருக்கிற திருமாலே!—மதி கலங்கி - (எனது) அறிவு ஒடுங்கி, விக்குள் பொர - விக்கலானது உபத்திரவிக்க, உயிர் மாயும் போழ்து - (எனது) உயிர் நீங்கும் அந்திமகாலத்தில், சிறை பறவைமேல் - இறகுகளையுடைய கருடாழ்வான் மீது, பைம் கனகம் குன்று ஊர் கார்போல் - பசும்பொன்மயமான மலையின் மீது ஏறிவருகின்ற காளமேகம்போல, பறந்து வரவேண்டும் - விரைந்து

எழுந்தருளிச் சேவைசாதிக்கவேண்டும்; (எ - று.)—கண்டாய் - முன்னிலையசை: நீ அந்திமகாலத்தி லெழுந்தருளிவந்து சேவைசாதித்தால்தான் எனக்கு நற்கதியுண்டு என்ற தேற்றப்பொருளை யுட்கொண்டதாம்.

இப்பிறப்பின் முடிவிலே, மறுபிறப்பில்லாதபடி என்னைக்காக்குமாறு நீ பெரியதிருவடியின்மே லெழுந்தருளிவந்து காட்சிதரவேண்டு மென்பதாம். "சாமிடத் தென்னைக் குறிக்கொள்கண்டாய் சங்கொடுசக்கரமேந்தினனே," "உடலம்புயங்கத்துரிபோல்விடுமன்றுவணப்புள்ளி, னடலம்புயமிசைநீவரவேண்டும்" என்றபடி, ஐம்பொறிகளுங் கலங்கி மரணநோய் நேர்கின்ற அப்போதையில் எம்பெருமானை நினைத்து வேண்டுதல் அரியதாகுமாதலால் ஐம்பொறிகளும் தமதுநிலையில்நிற்க மனம் செம்மைப்பட்டிருக்கின்ற இப்போதே சொல்லிவைத்தன ரென்க. பரமேட்டி = பரமேஷ்டீ: சிறந்ததானமாகிய பரமபதத்தில் நிலையாக வீற்றிருப்பவ னென்பது, அவ்வயப்பொருள். பெரியதிருவடிக்குப் பொற்குன்றும், அத்திருவடியின்மீது எழுந்தருளுந் திருமாலுக்குக் காளமேகமும் உவமையாம்; "கருமுகில் தாமரைக்காடு பூத்து நீ, டிருசுட ரிருபுறத்தேந்தி யேடவிழ், திருவொடும் பொலியவோர்செம்பொற்குன்றின்மேல், வருவபோற் கலுழன்மேல்வந்து தோன்றினன்" என்ற கம்பராமாயணம் இங்குக் காணத்தக்கது. பெரிய திருவடியினது தொழிலாகிய 'பறந்து' என்பதனை அதனையூருந் திருமாலின் மேலேற்றிப் பறந்துவரவேண்டு மென்று கூறினார்போலும். (கூச)

## எ. திருநாவாய்.

பறந்துதிரிதரினும்பாவியேனுள்ளம்
மறந்தும்பிறிதறியமாட்டா—சிறந்த
திருநாவாய்வாழ்கின்றதேவனையல்லாலென்
னொருநாவாய்வாழ்த்தாதுகந்து.

(இ - ள்.) பாவியேன் - தீவினையுடைய எனது, உள்ளம் - மனமானது, பறந்து திரிதரினும் - ஒருநிலையில்நில்லாது விரைந்து அலையுந்தன்மையதாயினும், மறந்தும் - மறந்தாயினும், பிறிது - திருமாலையன்றி வேறொருதெய்வத்தை, அறியமாட்டாது (தியானிக்கும்பொருளாக) மதியாது; என் ஒரு நா வாய் - எனது ஒருபடிப்பட்ட நாக்கையுடைய வாயானது, சிறந்த - மேம்பட்ட, திருநாவாய் - திருநாவா யென்னுந் திவ்வியதலத்தில், வாழ்கின்ற - நித்தியவாசஞ்செய்கின்ற, தேவனை அல்லால் - ஸ்ரீமந்நாராயணனையல்லாமல், (பிறிதொருதெய்வத்தை), உகந்து வாழ்த்தாது - விரும்பித் துதியாது; (எ - று.)

"மறந்தும்புறந்தொழா மாந்தர்" ஆதலால், தேவதாந்தரங்களினிடத்தில் தமக்குஉள்ள உபேட்சையையும் பரதேவதையினிடத்தில் தமக்குஉள்ள அபேட்சையையும் இங்ஙனம் கூறி வெளியிட்டனர். கணவனையே தெய்வமாகக்கொண்டொழுகுங் கற்புடைமகளிர்க்குப் பிறிதோராடவரது தொடர்பில்லாமலிருத்தல் இன்றியமையாதவாறுபோல, எம்பெருமானைச் சரண

மடைந்து உய்யும் பிரபந்நர்க்குத் தேவதாந்தரபஜநஞ்செய்யாமை இன்றியமையாத தாகு மென்க. ஒருநாவாய் தேவனையல்லால் வாழ்த்தாது என்ற தொடரில் - எனக்கு நாவொன்றாதலால், பரதேவதையாகி அடியார் துயரைப் போக்கிப் பாதுகாக்க வல்ல பரமபுருஷனொருவனைத் துதித்தலே அதற்கு ஏற்றதாமென்பதும், சரணமடைபவர்களைச் சமயத்திலே கைவிடும் பிறதெய்வங்களைச் சிறிதும்பொருள்செய்யாதென்பதும், தொனிக்கும். "உனையன்றி நான் மறந்தும், நீதாக வந்தனைசெய்யேன் புறஞ்சிலதேவரையே" என்பர், அழகரந்தாதியிலும். ஒருகால் தேவதாந்தரங்களை யான் வாழ்த்தக் கருதினாலும் என்வாய் வாழ்த்தாது; அது எம்பெருமானையே வாழ்த்தப் பழகியதும், பிறதெய்வங்களை வாழ்த்தப் பழகாததுமாதலால் என்னுங் கருத்து அமைய 'திருநாவாய்வாழ்கின்ற தேவனையல்லால் என்னொருநாவாய் வாழ்த்தா தகந்து' என வாயின்மேலேற்றிக் கூறினாரென்னலாம். "வாயவனையல்லது வாழ்த்தாது" என்றார் பெரியாரும். (சுரு)

அ. திருவல்லவாழ்.

உகந்தார்க்கென்ஞான்றுமுளனா யுகவா
திகந்தார்க்கென்ஞான்றுமிலனாய்த்—திகழ்ந்திட்
டருவல்லவாழுருவமல்லவெனநின்றான்
றிருவல்லவாழுறையுந்தே.

(இ - ள்.) திருவல்லவாழ் உறையும் தே - திருவல்லவாழென்னுந் திவ்விய தலத்தி லெழுந்தருளியுள்ள திருமால்,—உகந்தார்க்கு - (தன்னை) விரும்பின மெய்யடியார்கட்கு, எஞான்றும் - எக்காலத்தும், உளன் ஆய - உள்ளவனாகியும்,—உகவாது - தன்னை விரும்பாமல், இகந்தார்க்கு - இல்லையென்று சொல்லும் நாஸ்திகர்க்கு, எஞான்றும் - எக்காலத்தும், இலன் ஆய் - இல்லாதவனாகியும், திகழ்ந்திட்டு - விளங்கி,—'அரு அல்ல அருவப்பொருளுமாகான், வாழ் உருவம் அல்ல - கண்களுக்குப்புலப்பட்டுத்தோன்றுகின்ற உருவப் பொருளுமாகான்', என-என்றுகூறுமாறு, நின்றான் இருக்கின்றான்; (எ-று.)

திருமால் - கடவுள் உண்டென்றுசொல்லும் ஆஸ்திகர்க்கு அவர் வேண்டியபடியே உளனென்று சொல்லுமாறு உருவப்பொருளாகியும், எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாததொருபொருள் வழக்கில் வருதற்கே வழியில்லையாதலால், கடவுள் இல்லையென்றுசொல்லும் நாஸ்திகர்க்கும் கடவுளென்று எடுத்து அவனுடைய இன்மையைச் சாதிக்கவேண்டியிருத்தலின் அப்போது அருவப்பொருளாகியும் தோன்றுவன்: ஆதலால், உண்டென்பார்க்கு உருவப்பொருள்களிலெல்லாம் அந்தராத்மாவாகியும், இல்லையென்பார்க்கும் அவ்வருவப்பொருளாகியும் திருமால் எப்போதும் உளனேயாவனென்பதாம்; "உளனெனி லுள னவனுருவ மிவ்வுருவுகள், உளனலனெனி லல னவனருவ மிவ்வருவுகள். உளனென விலனென விவைகுணமுடைமையில், உளனிருதகைமையொ டொழிவிலன் பரந்தே" என்ற அருளிச்செயலும், "சூர்யவாதியான உன்னைக் கேட்போம்: ஈச்வரனுடைய இல்லாமையைச் சாதிக்கிற நீ ஈச்வரனுளனென்றோ இலனென்றோ ப்ரதிஜ்ஞைபண்ணு

வது? இவையிரண்டு ப்ரகாரத்தாலும் நீ நினைக்கிற இல்லாமை ஸம்பவி யாது; எத்தாலே யென்னில்?—லோகத்தில் பாவ அபாவ [உண்டு இல்லை என்கிற] சப்தங்களும், பாவஅபாவப்ரதீதிகளும் [அறிவுகளும்] வித்யமாந [இருக்கிற] வஸ்துவினுடைய அவஸ்தாவிசேஷவிஷயங்களாகக் காண்கையா லே. ஆதலால், ஈஶ்வரன் உளனென்னில், அஸ்தித்வ தர்மவிஶிஷ்டனாய் இருக்குமென்று சொல்லிற்றாய்வரும்; ஈஶ்வரன் உளனலனென்னில், நாஸ் தித்வதர்மவிஶிஷ்டனாயிருக்குமென்று சொல்லிற்றாய்வரும். இப்படி ஈஶ்வர வ்யதிரிக்தபதார்த்தங்களை உளவென்னில், அவையும் அஸ்தித்வதர்மவிஶி ஷ்டங்களாய்க்கொண்டு உளவென்று சொல்லிற்றாய்வரும்; தத்வ்யதிரிக்த பதார்த்தங்களை இல்லையென்னிலும், அவை நாஸ்தித்வதர்மவிஶிஷ்டங்க ளென்று சொல்லிற்றாய்வரும். அந்த அஸ்திநாஸ்திரூபபதார்த்தங்களும் அவ னுக்கு ரூபமாயிருக்கும்; கீழ்ச்சொன்ன ப்ரமாணங்களாலே இப்படி அஸ்தி த்வ நாஸ்தித்வங்களாகிற குணங்களையுடையனென்று சொல்லுகையாலே, அஸ்தியென்னிலும் உளன், நாஸ்தியென்னிலும் உளன்; உளனுமிடத்து ஸர் வாந்தராத்மாவாய்க்கொண்டு உளனென்கிறார்" என்றவ்யாக்யானமும் இங்கு உணரத்தக்கன. "சமயிகளாய்த்தவண்ணம், உளவிலையா யுருவா யருவாய வொருமுதலே" என்பர் அழகரந்தாதியிலும்.

புதியன புகுதலாக, இருதிணையைம்பால் மூவிடத்துக்கும் பொதுவாய் வரும் எதிர்மறைக்குறிப்புமுற்றான 'அல்ல' என்னுஞ் சொல் இங்கு ஆண் பாலுக்கு வந்தது. (கூகூ)

## கூ. திருவண்வண்டூர்.

தேவுமுலகுமுயிருந்திரிந்துநிற்கும்
யாவும்படைத்தவிறைகண்டீர்—பூவிற்
றிருவண்வண்டூருறையுந்தேவாதிதேவன்
மருவண்வண்டூர்துளவமால்.

(இ - ள்.) பூவில் - இப்பூமியிலுள்ள, திருவண்வண்டூர் - திருவண்வண்டூ ரென்னுந் திவ்வியதலத்தில், உறையும் - நித்தியவாசஞ்செய்கின்ற, தேவாதி தேவன் - தேவர்கட்கெல்லாந் தேவனான,—மரு - வாசனையுடையதும், வள் - வளப்பமுடையதும், வண்டு ஊர் - வண்டுகள் மொய்க்கப்பெற்றதுமாகிய, துளவம் - திருத்துழாய்மாலையை யணிந்த, மால் - திருமால்,—தேவும் - (பிரமன் முதலிய) தேவர்களையும், உலகும் - உலகங்களையும், உயிரும் - (அவ் வுலகங்களிலுள்ள) பிராணிகளையும், திரிந்து நிற்கும் யாவும் - (கீழ்க்கூறிய பொருள்களைவிட) வேறுபட்டுநின்ற அசேதநப்பொருள்க ளெல்லாவற்றை யும், படைத்த - ஆதியிற்சிருட்டித்த, இறை - கடவுளாவன்; (எ - று.)—கண் டீர் - முன்னிலையசை; தேற்றமுமாம்.

திருமாலே சேதநம் அசேதநம் என்னும் எல்லாப்பொருள்கட்கும் ஆதி காரணனென்பதாம். "ஒன்றுந் தேவு முலகு முயிரும் மற்றும்யாது மில்லா, வன்று நான்முகன்றன்னொடு தேவருலகோ டுயிர்படைத்தான், குன்றம்

போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள், நின்றவாதிப்பிரான்'' என்றார் நம்மாழ்வாரும். நித்தியமான உயிர்களைப் படைத்தலாவது - அவற்றிற்குக் கரணகளேபரங்களைக் கொடுத்தல். இனி, தேவும் உலகும் உயிருமாகிய, திரிந்து நிற்கும் - ஜங்கமமாகியும் ஸ்தாவரமாகியு முள்ள, யாவும் எனப் பொருள் கூறுவாரு முளர். (சுஎ)

## கo. திருவாட்டாறு.

மாலைமுடிநீத்துமலர்ப்பொன்னடிநோவப்
பாலைவனநீபுகுந்தாய்பண்டென்று—சாலவுநான்
கேட்டாற்றுயிலேன்காண் கேசவனே பாம்பணைமேல்
வாட்டாற்றுக்கண்டுயில்கொள்வாய்.

(இ - ள்.) கேசவனே-கேசவனென்னுந் திருநாமத்தையுடையவனே!—'மாலை முடி நீத்து - (அரசர்க்குஉரிய அடையாளப்பூ) மாலையையும் கிரீடத்தையும் (கைகேயியின்சொற்படியே பித்ருவாக்யபரிபாலநஞ் செய்யுமாறு) பூணாமல் துறந்து, மலர் பொன் அடி நோவ - தாமரைமலர்போன்ற அழகிய (உனது) திருவடிகள் வருந்தும்படி, பாலை வனம் - (தண்டகாரணியம் முதலிய) கொடுங்காட்டில், பண்டு - முற்காலத்தில் [ஸ்ரீராமாவதாரத்தில்], நீ—, புகுந்தாய் - நடந்துசென்றாய்,' என்று கேட்டால் - என்று (இதிஹாஸம் வல்லோர் சொல்லக்) கேட்டால், நான்—, சாலவும் துயிலேன் காண் - அடியேன் கண்டுயில்கொள்ளேன்; (அங்ஙனமாக இருக்க, நீயோ), வாட்டாறு - திருவாட்டாறென்னுந் திவ்வியதலத்தில், பாம்பு அணைமேல் - ஆதிசேஷசயனத்தின்மீது, கண் துயில் கொள்வாய் - (கவலையின்றிக்) கண்ணுறங்குகின்றாய்; (எ - று.)—காண் - அசை.

நெடுநாள்முன்பு நடந்த ராமாவதாரத்தில் நீ காலினால் வருந்திக் கானகத்திற்சென்ற செய்தியை இப்போது பிறர்சொல்லக் கேட்டாலும், கல்நெஞ்சனாகிய எனதுமனமும் நெகிழ்ந்துநெகிழ்ந்து கரைந்துஉருக எனக்குத் தூக்கம் பிடிப்பதில்லை; பதினான்குவருடம் காலினாற் பாலைவனங்களிலெல்லாம் அலைந்துதிரிந்து வருந்திய நீயோ சிறிதும் கவலையின்றித் திருவாட்டாற்றில் நெடுநாளாகக் கண்ணுறங்குகின்றாயே? இது என்ன வியப்பு? என்று எம்பெருமான்திறத்து ஈடுபட்டு ஐயங்கார் கூறுகின்றனரென்க. துயரமனுபவித்தவன் யாதொருகவலையுமின்றி நிச்சிந்தையாகத் துயிலத் துயரமனுபவியாதவன் கவலையினாற் கண்ணுறங்குவதில்லை யென்று, காரணமில்லாதவிடத்துக் காரியம்நிகழ்ந்ததாகக் கூறினமையால், இச்செய்யுள்-விபாவனையணியின்பாற்படும். கேசவன் என்பது-அத்தலத்து எம்பெருமான்திருநாமமென்பர். இத்தலம் - நதியாற் பெயர்பெற்றது. (சுஅ)

## கக. திருவிற்றுவக்கோடு.

வாய்த்தகருமமினிமற்றில்லைநெஞ்சமே
தோய்த்ததயிர்வெண்ணெய்தொட்டுண்ட—கூத்தன்
றிருவிற்றுவக்கோடுசேர்ந்தாற்பிறவிக்
கருவிற்றுவக்கோடுங்காண்.

(இ - ள்.) நெஞ்சமே - (எனது) மனமே!—(கிருஷ்ணாவதாரத்திலே), தோய்த்த தயிர் - தோய்த்தபடியேயுள்ள தயிரையும், வெண்ணெய் - வெண்ணெயையும், தொட்டு உண்ட - களவுகண்டு புசித்த, கூத்தன் - திருவிளையாட்டையுடைய திருமாலினது, திருவிற்றுவக்கோடு - திருவிற்றுவக்கோடென்னுந் திவ்வியதலத்தை, சேர்ந்தால் - சென்று சேர்ந்தமாத்திரத்தில்,—பிறவி - பிறப்புக்குக்காரணமான, கருவின் துவக்கு - கர்ப்பத்தின் சம்பந்தம், ஒடும் - நீங்கும்; (ஆதலால்), வாய்த்த கருமம் - நாம்செய்யக்கிடைத்த தொழில், இனி மற்று இல்லை - இனிமேல் வேறொன்று மில்லை; (எ - று.)—காண் - அசை, தேற்றமுமாம்.

மனமே! திருவிற்றுவக்கோடென்னுந் திவ்வியதலத்தைச் சேர்ந்தாயாயின், பிறப்புக்குக்காரணமான கருமசம்பந்தமெல்லாம் ஒழிந்து நற்கதி பெறுவையென்பதாம். இவ்வாறு சுகரமான உபாயத்தாற் பெரும்பேறு பெறலாயிருக்க, அதனைச்செய்யாது வீணேயுழல்வது என்னே! என்ற கருத்து இங்குத்தொனிக்கும். இங்குத் திருவிற்றுவக்கோடு என்றது - அத்திருப்பதியிலெழுந்தருளியிருக்கும் எம்பெருமானையுங் குறிக்கும்; உபலக்ஷணம். 'திருவித்துவக்கோடு' என்றும் வழங்குவர். (சுகூ)

## எ0. திருக்கடித்தானம்

காணவிரும்புமென்கண் கையுந்தொழவிரும்பும்
பூணவிரும்புமென்றன் புன்றலைதான்—வாணன்
றிருக்கடித்தானத்தான் றிகிரியான் றண்டான்
றிருக்கடித்தானத்தானைச்சென்று.

(இ - ள்.) வாணன் - பாணாசுரனது, திருக்கு - மாறுபாட்டை, அடித்தான் - ஒழித்தவனும், நத்தான் - சங்கத்தையுடையவனும், திகிரியான் - திருவாழியாழ்வானை யுடையவனும், தண்டான் - கதாயுதத்தையுடையவனுமாகிய, திருக்கடித்தானத்தானை - திருக்கடித்தானமென்னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளிய திருமாலை, சென்று - போய்க்கிட்டி,—என் கண் - எனது கண்கள், காண - தரிசிப்பதற்கு, விரும்பும் - ஆசைகொள்ளும்; கையும் - (எனது) கைகளும், தொழ - கூப்பிவணங்குதற்கு, விரும்பும்—; என்தன் - எனது, புல் தலைதான் - இழிவான தலையும், பூண - (அப்பிரானது திருவடித் தாமரைகளைச்) சூடிக்கொள்வதற்கு, விரும்பும்—;(எ - று.)

பாணாசுரனது விருத்தாந்தத்தை அநுசந்தித்த ஐயங்கார், அதனால் எம்பெருமானே பரதத்துவப்பொருளாவ னென்ற உண்மையை யுணர்ந்து தமது கண் முதலிய பொறிகள் வகுத்தவிஷயமான அவ்வெம்பெருமானிடத்தே சென்று தத்தமக்கு உரிய திருத்தொண்டுபுரிய விரும்புவதை இதனால் தெரிவிக்கின்றன ரென்க. "காண்காணென விரும்புங் கண்கள் கதிரிலகு, பூண்டாரகலத்தான் பொன்மேனி" என்றார் ஆன்றோரும். புன்றலை யென்றது - நைச்யாநுஸந்தாநம். (எ0)

கா. திருவாறன்விளை.

*சென்றுபுனன்மூழ்கிச்செய் தவங்கள்செய்தாலும்*
*வென்றுபுலனைந்தடக்கிவிட்டாலு—மின்றமிழான்*
*மாறன்விளைத்தமறையோதார்க்கில்லையே*
*யாறன்விளைத்திருமாலன்பு.*

(இ - ள்.) சென்று - தீர்த்தயாத்திரையாகச் சென்று, புனல் மூழ்கி - புண்ணியதீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து, செய் தவங்கள் செய்தாலும்-செய்தற்குஉரிய [சிறந்த] தவங்களைச் செய்தாலும், புலன் ஐந்து வென்று அடக்கிவிட்டாலும் - தமது ஐம்பொறிகளையும் (தமக்குஉரிய ஐம்புலன்களிற் செல்லவொட்டாது) சயித்து அடக்கினாலும், மாறன் - நம்மாழ்வார், இன் தமிழால் விளைத்த மறை - செவிக்கினிய தமிழ்ப்பாடலாகச் செய்தருளிய வேதத்தை, ஓதார்க்கு - ஓதியுணராதவர்க்கு, ஆறன்விளை திருமால் அன்பு - திருவாறன்விளையென்னுந் திருப்பதியி லெழுந்தருளிய எம்பெருமானது திருவருள், இல்லை - உண்டாகாது; (எ - று.)

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திருவாய்மொழியை ஓதியுணர்ந்தவரிடத்துத் திருமால் எளிதில் எவ்வாறு திருவருள் புரிவானோ, அவ்வாறாகப் புண்ணியதீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்தல் உக்கிரமான தவங்களைச்செய்தல் ஐம்பொறிகளையடக்குதல் முதலிய அரும்பெருந்தொழில்களைச் செய்பவரிடத்தும் திருவருள்செய்யா னென்பதாம். வேதத்தின் முற்பகுதியாகிய கர்மகாண்டத்தை முக்கியமாகக்கொண்டு அதன்படி தவம்முதலியன செய்தால் அவை அழியுமியல்பினவான சுவர்க்கம் முதலிய காமியபயன்களைத் தருவனவாய் முத்திக்கு நேரேகாரணமாகாமையால் அவ்வாறாகிய அரிய தொழிலை மேற்கொள்பவரிடத்தில் திருமாலின் திருவருள் எளிதி லுண்டாகாது; திருக்குருகூரில் அவதரித்து லோகோபகாரமாகப் பரப்பிரமசுவரூபத்தை உள்ளபடி உணர்ந்து யாவரும் அறியும்படி "ஆரார்வானவர்கள் செவிக்கினியசெஞ்சொல்லே" என்றவாறு இனியசெஞ்சொற்களாக வெளியிட்டு உயிர்களை இனிஒருபிறப்புமின்றி முத்திபெறுமாறு செய்த பொய்யில்புலவராகிய நம்மாழ்வாருடைய அருளிச்செயலைக் கேட்டும் ஓதியும் உணர்ந்து நிற்பவரிடத்துத் திருமாலின் திருவருள் எளிதில் சித்திக்குமென்க.'அராஜகமான தேசத்திலே பட்டத்துக்குஉரிய யானையைக் கண்ணைக்கட்டிவிட்டால் அது எடுத்துத் தன்கழுத்திலே வைத்துக்கொள்ளப்பெற்றவன் அரசனாய்விடுமாறுபோல இவ்வுலகத்தில் வைதிகமரியாதை அழிந்துபோன சமயத்திலே அதனை நிலைநிறுத்துதற்பொருட்டு எம்பெருமான் தனது நிரங்குசஸ்வாதந்த்ரியத்தால் பத்தாத்மாக்களி லொருவர்பக்கல் விசேஷகடாக்ஷஞ்செய்ய, அதனால் அவர் மற்றையோரையும் சீர்திருத்தும்படி சிறப்புற்றனர்' என்று ஆன்றோர் கூறுமாறு எம்பெருமான் உலகத்தைத் திருத்துவதற்காகவே விசேஷகடாக்ஷஞ்செய்து நம்மாழ்வாரைத் திருவவதரிப்பித்தானாதலால், அவரது அருளிச்செயலை யோதினவரிடத்துத் திருமாலருள் சித்

திக்குமென்னலாம். "தவஞ்செய்வதும் தழல்வேள்விமுடிப்பதும் தம்மை யொறுத், தெவன்செய்யு மெய்யன் குருகைப்பிரா னெம்மை யின்னமொரு, பவஞ்செய்கைமாற்றிய பண்டிதன் வண்டமிழ்ப்பாவு முண்டே, யவஞ்செய் கைமாற்றச் செவியுண்டு நாவுண் டறிவுமுண்டே" என்ற சடகோபரந்தாதி இங்குக் காணத்தக்கது. இனி, பலவிஷயங்களையும்பற்றிக் கண்டபடி கூறு கின்ற வடமொழிவேதம்போலவன்றி, எம்பெருமானது ஸ்வரூபரூபகுண விபூதிகளையே கூறிக்கொண்டுசெல்லுந் திருவாய்மொழியை யோதினோர்க் கே திருமாலினிடத்துப் பக்தியுண்டாகு மென்று இச்செய்யுட்குப் பொருள் கூறினுமாம். 'ஓதாதார்க்கு' என்றும் பாடம். (எக)

மலைநாட்டுத்திருப்பதிகள் முற்றும்.

---

## நடுநாட்டுத்திருப்பதிகள் - உ.

### க. திருவயிந்திரபுரம்.

அன்பணிந்தசிந்தையராயாய்ந்தமலர் தூவி
முன்பணிந்துநீரெமக்குமூர்த்தியரே—யென்ப
ரெமையிந்திரபுரத்தார்க்கின்றொண்டரானார்
தமையிந்திரபுரத்தார்தாம்.

(இ - ள்.) எம் - எமது, ஐயிந்திரபுரத்தார்க்கு - திருவயிந்திரபுரமென் னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளிய தெய்வநாயகப்பெருமானுக்கு, இன் தொண்டர் ஆனார்தமை - நல்லடியாரானவர்களை,—இந்திரபுரத்தார்தாம் - தேவேந்திரனது அமராவதிநகரத்தில் வாழ்கின்ற தேவர்கள்,—அன்பு அணி ந்த சிந்தையர் ஆய் - பக்திகொண்ட மனமுடையவராய், ஆய்ந்த மலர் தூவி-(அவர்கள்மீது) ஆராய்ந்தெடுத்த [சிறந்த] கற்பகமரத்தின்மலர்களைச் சொரிந்து, முன் பணிந்து - (அவர்கட்கு) முன்னே வந்து நமஸ்கரித்து, நீர் எமக்கு மூர்த்தியரே என்பர் - 'நீவிர் எங்கட்குக் கடவுளாவீர்கள்' என்று கொண்டாடுவார்கள்; (எ - று.)

"மணியாழிவண்ணனுகந்தாரைத் தன்வடிவாக்குமென்றே, துணியா ழியமறைசொல்லும்" என்றபடி எம்பெருமானுக்கு அடிமைப்பட்டமாத்திர த்தில் எம்பெருமானோடு பரமஸாம்யத்தைப் பெறுதலால், அப்படிப்பட்ட அடியார்களை, நல்வினையொழிந்தமாத்திரத்தில் நசிக்குந்தன்மையுள்ள சாதா ரணதேவர்கள் தாங்கள் நற்பேறுபெறுமாறு வணங்குவரெனத் திருமாலடி யார்களின் மேன்மையைக் கூறினார். தெய்வநாயகனுக்கு அடிமைப்பட்டமாத் திரத்தில் அவ்வாறு அடிமைப்பட்டவர்களும் தெய்வநாயகராவரெனச் சமத் காரந்தோன்றக் கூறியவாறு. "வழிநின்று நின்னைத்தொழுவார் வழுவா, மொழிநின்ற மூர்த்தியரேயாவர்," "மாதவன்றமரென்று வாசலில்வானவர், போதுமினெமதிடம் புகுதுகவென்றலும், கீதங்கள்பாடினர் கின்னரர்கெரு டர்கள், வேதநல்வாயவர் வேள்வியுள்மடுத்தே" என்பவை இங்குக் கருதத் தக்கன. தூவி - அருச்சித்து எனினுமாம்.

ஐயிந்திரபுரம்=அயிந்திரபுரம்:எதுகைபற்றியபோலிவிகாரம். அஹீந்த்ர னெனப்படுகிற திருவனந்தாழ்வான் பூஜித்த தலமாதல்பற்றி, 'அஹீந்த்ர புரம்' என்று இத்திருப்பதிக்குத் திருநாமம். (எஉ)

உ. திருக்கோவலூர்.

தாமரையானாதியாய்த்தாவரங்களீறான
சேமவுயிருஞ்செகமனைத்தும்—பூமடந்தைக்
காங்கோவலாயுதன்பின்னாவவதரித்த
பூங்கோவலாயன்பொருள்.

(இ - ள்.) தாமரையான் ஆதி ஆய்-தாமரைமலரில்வாழ்கின்ற பிரமன் முதலாக, தாவரங்கள் ஈறு ஆன - தாவரப்பொருள்கள் இறுதியாகவுள்ள, சேமம் உயிரும் - உலகத்துவாழ்கின்ற ஜீவராசிகளும், செகம் அனைத்தும் - (அவற்றிற்கெல்லாம்இடமான) எல்லாவுலகங்களும்,—பூ மடந்தைக்கு ஆம் கோ - தாமரைமலரில்வசிக்கின்ற இலக்குமிக்கு உகந்த தலைவனும், அலாயுதன் பின் ஆ அவதரித்த - கலப்பையை ஆயுதமாகவுடைய பலராமனுக்குத் தம்பியாகத் திருவவதரித்தவனுமாகிய, பூ கோவல் ஆயன் - அழகிய திருக்கோவலூரென்னுந் திவ்யதேசத்தி லெழுந்தருளிய ஆயனாரது, பொருள் - படைப்புப்பொருள்களாம்; (எ - று.)

பிரமன்முதல் தாவரமீறான எல்லாப்பொருள்களும் திருமாலாற் படைக்கப்பெற்று அவனிட்டவழக்காயிருக்கு மென்பதாம்.

கோபாலன் எனப்படுகிற ஆயனார் எழுந்தருளியிருக்குந் திவ்விய தலமாதல்பற்றி, இதற்கு 'திருக்கோவலூர்'என்று திருநாமமாயிற்று: வடமொழியில், இது, 'கோபாலபுரம்'எனப்படும். "பாவருந்தமிழாற் பேர்பெறுபனுவற் பாவலர்பாதிநாளிரவின், மூவரு நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்று புகழ்ந்துகூறும்படி முதலாழ்வார்மூவரும் ஒருவரையொருவர் சந்தித்து அந்தாதிபாடின தலம், இது. (எங)

நடுநாட்டுத்திருப்பதிகள் முற்றும்.

---

## தொண்டைநாட்டுத்திருப்பதிகள் - உஉ.

க. திருக்கச்சி—அத்திகிரி.

பொருளாசைமண்ணாசைபூங்குழலார்போகத்
திருளாசைசிந்தித்திராதே—யருளாளன்
கச்சித்திருப்பதியாமத்தியூர்க்கண்ணனன்று
ளிச்சித்திருப்பதியாமென்று.

(இ - ள்.) பொருள் ஆசை - செல்வத்தினிடத்து ஆசையையும், மண் ஆசை - பூமியினிடத்தி லாசையையும்; பூ குழலார் போகத்து இருள் ஆசை - மலரையணிந்த கூந்தலையுடைய மகளிரது இன்பத்திலே வைக்கின்ற மனம் மேன்மேலும் இருளுவதற்குக்காரணமான பெண்ணாசையையும், சிந்தித்து

இராதே - மனத்திற்கொண்டிடாமல்,—அருள் ஆளன் - பேரருளாளனுகிய, கச்சி திருப்பதி ஆம் அத்தியூர் கண்ணன் - காஞ்சீபுரத்திலுள்ள திவ்விய தலமாகிய திருவத்தியூரில் எழுந்தருளியிருக்குந் திருமாலினது, தாள் - திருவடிகளை, யாம்—, இசசித்து இருப்பது - உபாயமும் உபேயமுமாக விரும்பிச் சிந்தையற்றிருப்பது, என்று - என்னாளோ? (எ - று.)

மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யெனப்படுகின்ற ஈஷணாத்ரயங்களும் ஒழிந்து எம்பெருமான்திருவடிகளையே உபாயமும் உபேயமுமாகப் பற்றிக் கவலையற்றிருக்கும் நாள் எப்பொழுது அடியேனுக்கு நேருமோ?என்று பேற்றில்த்வரையால் அந்நாளை ஐயங்கார்எதிர்நோக்குகின்றனரென்க. "திணரார்சார்ங்கத்துனபாதம் சேர்வ தடியே னென்னாளே" என்றார் ஆழ்வாரும். ஈஷணாத்ரயத்தினுள்ளும் பெண்ணாசை மிகக்கொடியதென்பதைத் தெரிவித்தற்கு, 'பூங்குழலார்போகத்துநாளாசை' என்றார்.

கச்சி=காஞ்சீ என்னும் வடசொல்லின் சிதைவு: பிரமனாற் பூசிக்கப்பட்ட தலம் என்பது, பொருள்; இனி, பூமியாகிய பெண்ணுக்கு அரையில் அணியும் அரைநூல்மாலைத்தானத்தி லுள்ளதுபற்றி வந்த பெயரென்று கூறுவாரு முளர். அத்தியூர்=ஹஸ்திகிரி: 'கோயில் திருமலை பெருமாள் கோயில்' என்று சிறப்பாக எடுத்துக்கூறப்படுகின்ற மூன்றுதலங்களில் ஈற்றுத்தலம், இது: இது, தியாகமண்டபம் எனப்படும். நெடுநாள் தவஞ்செய்தும் மனத்தூய்மைபெறாத பிரமதேவன் ஆகாயவாணிகூறியபடி பூலோகத்தில் புண்ணியக்ஷேத்திரங்களெல்லாவற்றுள்ளும் உத்தமமானதும் ஒன்று ஆயிரமாகப் பயன்தருவது மாகிய சத்தியவிரதக்ஷேத்திரத்தை யடைந்து, அங்கு அநந்தஸரஸின்கரையிலுள்ள ஹஸ்திகிரியை உத்தரவேதியாகக்கொண்டு யாகசாலையையமைப்பித்து, அசுவமேதயாகஞ்செய்து அதனால் ஸ்ரீமந் நாராயணனை யாராதிக்க, அந்தயாகாக்கினியினின்று எழுந்த புண்ணிய கோடிவிமானத்தில் தேவராஜனென திருமால் பிரசன்னனாயின னென்றும், அந்த வரதராஜஸ்வாமியைப் பின்பு கஜேந்திராழ்வான் பூசித்து முதலையினாலாகிய துயர்தீர்ந்து மேன்மைபெற்றதென்றும்,தைவத்தச்சரிலொருவனான மயன் பிரமன்கட்டளையால் அங்கு எம்பெருமானுக்குத் திருக்கோயில் கட்டியமைத்தன னென்றும் அறிக. இந்திரனது யானையாகிய ஐராவதம் நெடுநாள் தவஞ்செய்து மலைவடிவங்கொண்டு எம்பெருமானைத் தரித்தலால், அம்மலைக்கு 'ஹஸ்திகிரி'என்று பெயர்: கஜேந்திராழ்வான் பூஜித்துப் பேறு பெற்ற தலமாதலால், இப்பெயர்நிகழ்ந்ததென்றலு முண்டு. இங்கு, மலையடிவாரத்திலுள்ள அழகியசிங்கப்பெருமானே ஆழ்வாரதுமங்களாசாசனம் பெற்றவ ரென்பது, பலரது கொள்கை. (எச)

## உ. திருவட்டபுயங்கம்.

என்றுந் துயருழக்குமேழைகாணீங்களிளங்
கன்றுபோற்றுள்ளிக்களித்திரீ—ரன்றுநட
மிட்டபுயங்கத்திருசரணமேசரணென்
றட்டபுயங்கத்தற்காளாய்.

(இ - ள்.) என்றும் - எப்போதும், துயர் உழக்கும் - (தாபத்திரயங்களி லடிபட்டு) வருந்துகின்ற, ஏழைகாள்-அறிவில்லாத ஜநங்களே!—நீங்கள்—, 'அன்று - முற்காலத்தில் [கிருஷ்ணாவதாரத்தில்], புயங்கத்து நடம் இட்ட- (காளியனென்னுஞ்) சர்ப்பராசன்மீது கூத்தாடிய, இரு சரணமே - (எம் பெருமானது) இரண்டுதிருவடிகளே, சரண் - தஞ்சமாகும்,' என்று - என்று உறுதிகொண்டு, அட்டபுயங்கத்தற்கு ஆள் ஆய் - திருவட்டபுயக்கம் என் னுந் திருப்பதியி லெழுந்தருளியுள்ள திருமாலுக்கு அடிமைப்பட்டு,—இளங் கன்றுபோல் துள்ளி களித்து இரீர் - இளங்கன்றுபோல (ப் பயமறியாமல்) துள்ளிக் குதித்து அகமகிழ்ந்திருங்கள்; (எ - று.)

அட்டபுயத்தி லெழுந்தருளியுள்ள பெருமானுக்கு ஆட்பட்டு, பிற வித்துன்பங்கள்யாவும் ஒழிய இளங்கன்றுபோலப் பயமறியாது துள்ளிக் களித்து வாழுங்களென, உலகத்து ஸாம்ஸாரிகதாபத்தால் வருந்துஞ் சேத நர்க்கு அறிவுறுத்தியவாறு. அட்டபுயங்கத்தர்க்குஆளாய்க் களித்திரீரென்க.

இத்தலத்து எம்பெருமானுக்கு எட்டுத்திருக்கைகள் உள்ளதுபற்றி 'அஷ்டபுஜம்' என்று திருப்பெயராக, அச்சொல் 'க'ப்ரத்யயம் பெற்று 'அஷ்டபுஜகம்'என்று ஆகி, தமிழில் அட்டபுயங்கம் எனத் திரிந்தது. இனி, இத்திருப்பதி அட்டபுயகரம் என்று வழங்கப்பெறுதலுமுண்டு; அஷ்டபுஜன் எழுந்தருளியிருக்கின்ற கரம் [ கிருகம் ] ஆதல்பற்றி, இப்பெயர் வந்தது போலும்: அட்டபுயவகரம் என்பதன் மரூஉ வென்பாருமுளர். (எரு)

## சு. திருத்தண்கா.

ஆட்பட்டேனைம்பொறியாலாசைப்பட்டேனறிவுங்
கோட்பட்டுநாணுங்குறைபட்டேன்—சேட்பட்ட
வண்காவைவண்டுவரைவைத்தவிளக்கொளிக்குத்
தண்காவைச்சேர்ந்தான்றனக்கு.

[பிரிந்து ஆற்றளாய தலைவி தலைமகன்பக்கல் தனக்குஉள்ள
அன்புறுதியைத் தோழிக்குக் கூறுதல்.]

(இ - ள்.) சேண் பட்ட - தேவலோகத்திலுள்ள, வள் காவை - வளப்ப மான சோலைபோலத்தழைத்த பாரிஜாதவிருக்ஷத்தை, வள் துவரை-செழிப் பான (தனது) துவாரகாபுரியில், வைத்த - கொண்டுவந்துநாட்டிய, தண்கா வை சேர்ந்தான்தனக்கு - திருத்தண்காவென்னுந் திவ்வியதேசத்தி லெழுந் தருளியிருப்பவனாகிய, விளக்கொளிக்கு - தீபப்ரகாசனென்னும் எம்பெரு மான்திறத்தில், ஆள் பட்டேன் - அடிமைப்பட்டேன்; ஐம் பொறியால் ஆசைப்பட்டேன் - (எனது) பஞ்சேந்திரியங்களாலும் (அப்பெருமானையநுப விக்கும்படி) ஆசைகொண்டேன்; அறிவும் கோள்பட்டு - எனது அறிவும் அப் பெருமானாற் கவரப்பட்டு, நாணும் குறைபட்டேன் - (மகளிர்க்குச் சிறந்த) நாணமென்னுங் குணமும் குறைந்துவிடப்பெற்றேன்; (எ - று.)

திருமாலாகிய தலைமகனைக் கலந்துபிரிந்த தலைமகள் தான் அவன்பக் கற்கொண்ட காதலின்மிகுதியைத் தோழிக்கு எடுத்துக்கூறியது, இது. இவ்

வாறு தன்காதலைத் தோழிக்கு எடுத்துக்கூறுவது - அவள்மூலமாகச் செவி லிக்கும், அவள்மூலமாக நற்றாய்க்கும், அவள்மூலமாகத் தந்தைக்கும் மற்றும் பெரியோர்க்குந் தெரிவித்து, விரைவில் தன்னை அவனுக்கு மணஞ்செய்து வைக்கும்படி செய்துகொள்ள விரும்பியதனாலாகும். தன்னிலையைக் கரந்து வைக்கமுடியாது வாய்கொண்டு சொல்லவேண்டும்படி ஆற்றாமை விஞ்சுத லால், 'நாணுங்குறைபட்டேன்' என்றாள். ஐம்பொறியாலாசைப்படுதலா வது - மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் பஞ்சேந்திரியங்களுள், கண் எம்பெருமானையே தரிசிப்பதும், செவி அப்பெருமானதுவைபவங்களை யே கேட்பதும்,வாய் அவனையேதுதிப்பதும்,மூக்கு அவன்சாத்தியமாலையின் திவ்வியபரிமளத்தையே மோப்பதும், கை கால் தலை முதலிய உறுப்புக்களை யுடைய மெய் அவனைத்தொழுதல் வணங்குதல் பரிசித்தல் முதலியன செய் வதுமாக, இங்ஙனம் எல்லாப்பொறிகளும் அத்தலைவனதுவிஷயமான செய லைப் பெறவிரும்புதல். திருத்தண்காவில் எம்பெருமான் தண்காக்கொணர்ந் தானெனச் சமத்காரமாகக் கூறினர்.

நெஞ்சென்னும் உட்கண்ணால் எம்பெருமானைத் தரிசித்த ஐயங்கார் அவன்பக்கல் தமக்குஉண்டான வியாமோகத்தைத் தமக்குப்புருஷகாரராக நிற்கும் ஆசாரியரிடத்து உரைக்கவேண்டி, தம்மோடொத்த ஞானிகளான நண்பர்க்கு எடுத்து உரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். ஐம்பொறியா லாசைப்பட்டேன்—"உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல் லாங்கண்ணன்," "வாஸுதேவஸ் ஸர்வம்" என்றபடி தாரகபோஷகபோக் யங்களெல்லாம் அவனேயாம்படி என்னுள்ளத்துக்கொண்டேனென்றபடி.

திருத்தண்கா என்பது - குளிர்ந்தசோலைகளை யுடைமைபற்றி வந்த பெயர்போலும். இத்தலத்து எம்பெருமான் திருநாமம் - விளக்கொளி. (எசு)

## ச. திருவேளுக்கை.

தனக்குரியனாயமைந்ததானவர்கோன்கெட்டா
னுனக்குரியனாயமைந்தனுய்ந்தா—னினைக்குங்கால்
வேளுக்கையாளரியே வேறுதவியுண்டோ வுன்
றாளுக்காளாகாதவர்க்கு.

(இ - ள்.) வேளுக்கை ஆள் அரியே - திருவேளுக்கையென்னுந் திவ்விய தலத்திலெழுந்தருளிய நரசிங்கமூர்த்தியே!—தனக்குஉரியன் ஆய்அமைந்த- (உனக்குஆட்படாமல்) தனக்குத்தானே ஸ்வதந்த்ரனென்று இருந்த[தானே தெய்வமென்று செருக்கியிருந்த], தானவர்கோன் - அசுரராசனாகிய இரணி யன், கெட்டான் - அழிந்தொழிந்தான்; உனக்கு உரியன் ஆய மைந்தன் - (செருக்குக்கொள்ளாது) உனக்கே அடிமையாகப் பொருந்திய (அவனது) குமாரனாகிய பிரகலாதாழ்வான், உய்ந்தான் - நல்வாழ்வுபெற்று ஈடேறி னான்; (ஆதலால்), நினைக்கும் கால் - ஆலோசிக்குமிடத்து,—உன் தாளுக்கு ஆள் ஆகாதவர்க்கு - உனது திருவடிகட்கு அடிமைப்படாதவர்க்கு, வேறு உதவி உண்டோ - (ஆபத்துக்காலத்தில் பாதுகாத்தற்குஉரிய) துணை வேறு உளதோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

ஸர்வேஶ்வரனது திருவடிகளை வணங்காமல் தானே ஸர்வேஶ்வரனென்று சொன்ன இரணியனை அப்பெருமான் நிக்கிரகித்ததையும் ஸர்வேஶ்வரனுக்கு அடிமையென்று தன்னையெண்ணின இரணியபுத்திரனான பிரகலாதாழ்வானை அப்பெருமான் அநுக்கிரகித்ததையும் ஆலோசிக்குமிடத்து, எம்பெருமானது திருவடிகளிடத்து ஆட்படாதார்க்கு ஆபத்துக்காலத்தில் ஒருதுணையுமின்றி அழியவேண்டிவரு மென்பது பெறப்படு மென்பதாம். "ஆளென்று தன்னையெண்ணாத் தானவனாகநினைந்திருப்பார்க் கென்றுந் தானவனே" என்பர் திருவேங்கடத்தந்தாதியிலும். 'தனக்குரியனாயமைந்த தானவர்கோன் கெட்டான்' என்ற சிறப்புப்பொருளை 'உன்தாளுக்கு ஆளாகாதவர்க்கு வேறு உதவியுண்டோ' என்ற பொதுப்பொருள்கொண்டு சமர்த்தித்தது - வேற்றுப்பொருள்வைப்பணியாம். ஆள்அரி - நரங்கலந்த சிங்கம்; இத்தலத்து எம்பெருமான் திருநாமம் - ஆளழகியசிங்கர். (எஎ)

## ரு. திருப்பாடகம்.

தவம்புரிந்தசேதனரைச்சந்திரனாதித்தன்
சிவன்பிரமனிந்திரனாச்செய்கை—யுவந்து
திருப்பாடகமருவுஞ்செங்கண்மாறன்மார்
பிருப்பாடகவுரையாலே.

(இ - ள்.) உவந்து - திருவுள்ளத்தில் மகிழ்ந்து, திருப்பாடகம் மருவும்- திருப்பாடகமென்னுந் திவ்வியதலத்தில் நித்தியவாசஞ்செய்கின்ற, செங்கண் மால் - சிவந்தகண்களையுடைய திருமால்,—தவம் புரிந்த சேதநரை - (சந்திரன் ஆதித்தன் முதலிய பட்டம்பெறுமாறு தன்னைநோக்கித்) தவஞ்செய்த ஆன்மாக்களை, (அவரவர்கள் விருப்பத்தின்படியே), சந்திரன் - சந்திரனும், ஆதித்தன் - சூரியனும், சிவன் - உருத்திரனும், பிரமன் - பிரமதேவனும், இந்திரன் - தேவேந்திரனும், ஆ - ஆக, செய்கை-செய்வது,—தன் மார்பு இருப்பாள் - தனதுவலத்திருமார்பில் வீற்றிருப்பவளான திருமகளினது, தகவுஉரையாலே - புருஷகாரவார்த்தையாலேயாகும்; (எ - று.)

எம்பெருமான் பிராட்டியினது புருஷகாரத்தால்தான் தன்னைக்குறித்துத் தவம்புரியும் அடியார்கட்கு அதன்பயனாக மறுமையில் சந்திரன் சூரியன் முதலான தேவர்களின் பதவிகளை ஈந்தருளுவ னென்பதாம். சேதநர் மறுமையில் எவ்வகையான நற்கதிபெறவேணுமென்று விரும்பினாலும் அவற்றையெல்லாம் அளிக்கத்தக்கவன் திருமாலே யென்பதும், அவ்வாறு திருமால் அளிக்குமிடத்துத் திருமகளின்புருஷகாரம் அவசியமென்பதும், இங்கு விளக்கப்பட்டன. திருப்பாடகம் - பாண்டவதூதர் சந்நிதி. (எஅ)

## சு. திருநீரகம்.

ஆலத்திலைசேர்ந்தழியுலகையுட்புகுந்த
காலத்திலெவ்வகைநீகாட்டினாய்—ஞாலத்து
ணீரகத்தாய் நின்னடியேனெஞ்சகத்தாய் நீண்மறையின்
வேரகத்தாய் வேதியற்குமீண்டு.

(இ - ள்.) ஞாலத்துள் - இந்தப்பூமியிலே, நீரகத்தாய் - திருநீரகமென்னும் திவ்வியதலத்தி லெழுந்தருளியிருப்பவனே! நின் அடியேன் நெஞ்சு அகத்தாய் - நினக்கு ஆட்பட்ட அடியேனது மனத்தி லெழுந்தருளியிருப்பவனே! நீள் மறையின் வேர் அகத்தாய் - நீண்ட வேதங்களாற் பிரதிபாதிக்கப்படுகிற மூலப்பொருளாயுள்ளவனே!—வேதியற்கு -(பிரளயக்காட்சியைக் காணவேணுமென்று விரும்பிய) வேதம்வல்லவனான மார்க்கண்டேயனுக்கு, நீ—, உள் புகுந்த காலத்தில் - (அம்முனிவன் உனது) திருவயிற்றினுள்ளே பிரவேசித்தகாலத்தில், ஆலத்து இலை சேர்ந்து - நீ ஆலிலையின்மீது பள்ளிகொண்டு,—அழி உலகை - (பிரளயகாலத்தில்)அழிந்துபோன லோகங்களை, எ வகை - எவ்வாறு, மீண்டு - மறுபடியும், காட்டினாய் - காட்டியருளினாய்? (இது என்ன வியப்போ!) (எ - று.)

என்றும்பதினாறாக நெடிதூழிவாழும்படி நீண்டஆயுள்பெற்ற மார்க்கண்டேயமுனிவன் பத்திராநதிக்கரையில் தவம்புரிந்து பிரளயக்காட்சியைக் காணுமாறு நரநாராயணர்களால் அநுக்கிரகிக்கப்பெற்று, பின்பு மாயவன் மாயையால் மகாபிரளயம் தோன்ற, அப்பிரளயப்பெருங்கடலிற் பலவாறு அலைப்புண்டு வருந்திய அம்மார்க்கண்டேயமுனிவனுக்கு அவ்வெள்ளத்தில் ஆலிலையின்மீது ஒருகுழந்தைவடிவமாய் அறிதுயிலமர்ந்த நீ முன்பேஅழிந்த உலகங்களையும் எல்லாசசராசரங்களையும் உனது திருவயிற்றினுட் காட்டியது என்னஆச்சரியமென்று எம்பெருமானது திவ்வியகுணத்தி லீடுபட்டு ஐயங்கார் கூறினரென்க. "எய்த்தமார்க்கண்டன் கண்டிட வமலைக்குமூலகழியாதுள்ளிருந்த தென்னே" என்பர் திருவரங்கத்தந்தாதியிலும். மூன்று நான்காமடிகளில், முற்றுமோனை காண்க. (எசு)

## எ. திருநிலாத்திங்கட்டுண்டம்.

மீண்டுந்தெளியார்கண்மேதினியோர் நின்னடிப்பூப்
பாண்டரங்கமாடிபடர்சடைமேற்—றீண்டிக்
கலாத்திங்கட்டுண்டத்தின்மீதிருப்பக்கண்டு
நிலாத்திங்கட்டுண்டத்தானே.

(இ - ள்.) நிலாத்திங்கள் துண்டத்தானே - திருநிலாத்திங்கள்துண்டமென்னுந் திவ்வியதேசத்தி லிருப்பவனே!—நின் அடி பூ - (பதின்மூன்றும் போர்நாளிரவில் அருச்சுனன் கைலாசயாத்திரையில்) உனது திருவடிகளிற் சாத்திய புஷ்பங்கள், பாண்டரங்கமாடி - பாண்டரங்கக்கூத்தாடிய சிவபெருமானது, படர் சடைமேல் - பரந்த சடையின்மீது, தீண்டி-பொருந்தி, கலா திங்கள் துண்டத்தின்மீது - (அச்சடையின்மேல் சிவபிரானணிந்துள்ள) இளம்பிறைச்சந்திரனுக்கும் மேலே, இருப்ப - இருக்க, கண்டும் - அதனைப் பார்த்திருந்தும்,—மேதினியோர் - இப்பூமியிலுள்ளவர்கள், மீண்டும் - மறுபடியும், தெளியார்கள் - (நீயே பரம்பொருளென்ற உண்மையை) அறியாதொழிகின்றனர்; (இது என்ன பேதைமை?) (எ - று.)

அருச்சுனன் கண்ணனது திருவடிகளி லிட்டு அருச்சித்த மலர்கள் சிவபிரானது முடிமேலிருத்தலைக் கண்டபிறகும் திருமாலே பரம்பொருளென்ற

உறுதியான உணர்ச்சி கொள்ளாமல் தடுமாறுவது என்ன பேதைமையோ? என்று உலகத்தோரது அறியாமையை வியந்தவாறு. "தீர்த்தனுலகளந்த சேவடிமேற் பூந்தாமஞ்,சேர்த்தியவையே சிவன்முடிமேல் தான்கண்டு,பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான்பெருமை, பேர்த்து மொருவராற் பேசக்கிடந்ததே" என்று நம்மாழ்வார் இச்சரித்திரத்தில் ஈடுபட்டுக் கூறியமை காண்க. மேதினியோர் கண்ணபிரானடிப்பூவைச் சிவபிரான்சடைமேற் காண்பது - ஆகமபிரமாணத்தினு லென்க.

பாண்டரங்கம் - பதினோராடலு ளொன்று: அது - பூமிதேவியாகிய தேரில் முன்னின்ற பிரமன் காணும்படி பைரவ வடிவாகிய பரமசிவன் திரிபுரசங்காரகாலத்தில் வெண்ணீற்றையணிந்து ஆடியது. "தேர்முனின்ற திசைமுகன்காணப், பாரதியாடிய வியன்பாண்டரங்கம்," "பாண்டரங்க முக்கணானுடிற்று," "மண்டமர்பலகடந்து மதுகையானீறணிந்து, பண்டரங்கமாடுங்கால்," "ஏறமர்கடவுள் மூவெயிலெய்வுழிக், கூறுகூறாக் கொடியொடும் படையொடும், வேறுவேறுருவின் விண்மிசைப் பரந்தன, ரவ்வழியொளியொடு முருவொடுந்தோன்றித், தேர்முனின்று திசைதலைபனிப்பச், சுவையுங்குறிப்பு மொழிவில தோன்றி, யவையவை யவ்வழி யாடின னுட, மைந்தருமகளிருந் தந்நிலையழிய,மெய்ப்படுசுவையொடு கைப்படைமறப்பக், கடியகாலக்காற்றென வேற்றவன், படிநிலைதிரியாப் பாண்டரங்கமே" என்பவற்று லுணர்க. (அ0)

## அ. திருவூரகம்.

நேசத்தாலன்றுலகைநீர்வார்க்கவைத்தளந்த
வாசத்தாளென்றலைமேல்வைத்திலையே—நாசத்தாற்
பாரகத்துளன்றிநான்பாழ்நரகில்வீழ்ந்தென்கொ
லூரகத்துணின்றாயுரை.

(இ - ள்.) ஊரகத்துள் நின்றாய் - திருவூரகமென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருப்பவனே!—நீர் வார்க்க - (நீ வாமனனாய்ச்சென்று இரந்தபோது தான்கொடுத்ததற்கு அறிகுறியாக உனது கையில் மகாபலி) நீரை வார்த்தபோது, அன்று - முன்னாளில் [திரிவிக்கிரமாவதார காலத்தில்], நேசத்தால் - (உயிர்களினிடத்துக்) கருணையினால், உலகை - மூவுலகங்களையும், வைத்து அளந்த - (அளவுகருவியாகக்) கொண்டு அளந்த, வாசம் தாள் - நறுமணமுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளை, என் தலைமேல் - எனது தலையின்மீது, வைத்திலை ஏல் - பொறித்துவைத்திடாயானால்,— நான்—, பார் அகத்துள் அன்றி - இப்பூமியில் வாழ்தலு மில்லாமல், நாசத்தால் - நாசமடைந்து, பாழ் நரகில் வீழ்ந்து என்கொல் - பாழான நரகத்தில் வீழ்ந்தால்தான் என்ன? உரை - நீகூறுவாய் ; (எ - று.)

திரிவிக்கிரமாவதாரகாலத்தில் உயிர்கள் அறியாதிருக்கையிலும் தான் அறிந்த தொடர்பே பற்றுகோடாகக் கொண்டு அவ்வுயிர்களிடத்துக் காரணமின்றியெழுந்த பெருங்கருணையினால் அவற்றை ஆட்கொள்ளவேண்டி மகா

பலிசக்கரவர்த்தி தந்த புவியை யளத்த லென்ற ஒருவியாஜத்தைக்கொண்டு உலகத்திலுள்ள எல்லாவுயிர்களின் தலைமீதும் நினது திருவடிகளை வைத்தது போலவே, "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து, போதிற் கமலவன்னெஞ்சம் புகுந்தும் என்சென்னித்திடரில், பாதவிலச்சினைவைத்தான்" என்றபடி உனது திருவடிகளை எனது தலையின்மீது பொறித்து என்னை ஆட்கொள்ளாது உபேக்ஷித்தனையாயின். யான் ஈடேறுதலின்றிக் கொடுநரகத்தில் வீழ்வது திண்ணம்; அவ்வாறு உபேட்சித்தல் நினக்குத் தகுதியோ? என்று தமது ஆற்றாமையை அறிவுறுத்தியவாறு. திரிவிக்கிரமாவதாரத்தில் திருவடிகள் வைக்கப்பெற்றும் உயிர்கள்யாவும் உய்வுபெறாதது-அவைகட்கு எம்பெருமானது திருவடி தமது தலையின்மீது வைக்கப்படுகின்றது என்னும் அறிவு இன்மையாலாகும்; அவ்வாறன்றி உனதுநல்லருளால் சிறிது அறிவு பெற்ற எனது முடியின்மீது நினதுதிருவடிகளைப் பொறித்தால் நான் உய்வுபெறுவேன்; அறிவின்றியிருந்த உயிர்களின்மீது திருவடிகளை வைத்தருளிய நீ, அறிவுபெற்ற என்தலைமீது அத்திருவடிகளைப் பொறித்த லாகாதோ? வேண்டற்பாடில்லாத உயிர்களின் தலைமீது திருவடியைப் பொறித்த நீ, வேண்டற்பாடுடைய எனதுதலைமீது அவற்றைப் பொறித்த லாகாதோ? நீயறிந்த சம்பந்தங்கொண்டுமாத்திரந்தானோ திருவடிகளைப்பொறிப்பது? யான் அறிந்த சம்பந்தம் உளதாயின் திருவடிகளைப் பொறித்த லாகாதோ? என்ற கருத்துக்கள் இச்செய்யுளில் தோன்றும்.

வாசத்தாள் - மெய்யடியார்கள் அருச்சித்த திருத்துழாய் முதலியவற்றின் சம்பந்தத்தால் நறுமணம்வீசப்பெற்ற திருவடி. பூமியையளப்பதுஎன்று ஒருவியாஜம்; உலகத்தார்க்குத் திருவடிகளைக் காட்டியருளவேணுமென்பதே உட்கருத்து என்பார் 'நேசத்தால் உலகையளந்த' என்றார்; "பாரளப்பான் போல் எவர்க்குங் கஞ்சவடிகாட்டினான்" என்ற திருவேங்கடமாலையையுங் காண்க. நேசத்தால் நீர்வார்க்க என்று இயைத்து-கொடுக்கலாகாது என்று தடுத்த சுக்கிரனது உபதேசத்தையும் உபேக்ஷித்து வாமனரூபியாய்வந்த திருமாலினிடத்து அன்போடு தாரைவார்த்துக்கொடுத்த என்று பொருள் கூறினுமாம்.

இத்தலத்தில் திருமால் உரகரூபியாய்ச் சேவைசாதிப்பதுபற்றி, இத்திருப்பதிக்கு 'ஊரகம்' என்ற திருநாமம்போலும்; உரகம் - பாம்பு. (அக)

கூ. திருவெஃகா.

உரைகலந்த நூலெல்லாமோதியுணர்ந்தாலும்
பிரைகலந்தபால்போற்பிறிதாந்—தரையிற்
றிருவெஃகாமாயனுக்கேசீருறவாந்தங்க
ளொருவெஃகாவுள்ளத்தினோர்க்கு.

(இ - ள்.) தரையில் - இப்பூமியில், திருவெஃகா - திருவெஃகாவென்னுந் திவ்வியதலத்திலெழுந்தருளிய,மாயனுக்கே-சொன்னவண்ணஞ்செய்த பெருமானுக்கே, சீர் உறவு ஆம் - சிறந்த [ஒருபோதும் நீங்காத] சம்பந்தம்

பெற்ற, தங்கள் உரு - தமது ஸ்வரூபத்தை, வெஃகா - விரும்பியறியாத, உள்ளத்தினோர்க்கு-மனத்தையுடையவர்க்கு,—உரை கலந்த நூல் எல்லாம்-உரையோடுகூடிய சாஸ்திரங்களெல்லாவற்றையும்,ஓதி உணர்ந்தாலும்-கற்று அறிந்திருந்தாலும், பிரை கலந்த பால்போல் - பிரைசேர்ந்த பாலைப்போல, பிறிது ஆம் - (அவ்வறிவு) திரியுந்தன்மையதாய்விடும் ; (எ - று.)

"கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன், நற்றாடொழாஅரெனின்," "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க வதற்குத் தக" என்றபடி கற்றற்குஉரிய உறுதிநூல்களைக் கற்றவர்கள், அக்கல்வியறிவின்பயனாக அந்நூல்களிற்கூறியபடி 'எம்பெருமானுக்கு அடிமைப்பொருள் இவ்வுயிர்' என்னும் உண்மையுணர்வு மனத்திற் பதிந்தால்தான் கருமம் ஒழிய வீடுபெறுவரே யன்றி, அநுஷ்டானமில்லாத வெறுங்கல்வியறிவு, பிரையால்திரிந்த பால் ஒன்றுக்கும் உதவாததுபோலப் பயனற்றதாகுமென்பதாம். உரை கலந்த நூல் - பாஷ்யத்தோடுகூடிய சாஸ்திரம் என்றபடி. 'பிரைகலந்த' என்ற சொல்லாற்றலால், பாலைப்பருகவேண்டுமென்னும் எண்ணத்துடன் காய்ச்சுகையில் காய்ச்சுபவர்க்குத்தெரியாமலே அப்பாலைத் திரிக்கும்படி பிரைப்பொருள் கலந்தமை பெறப்படும்.

"பிதாச ரக்ஷகஶ் ஶேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி: - ஸ்வாம்யாதாரோ மமாத்மாச போக்தாசாயமநூதித:" என்கிறபடி கடவுளுக்கும் ஆத்மாவுக்கும் - பிதாபுத்ர ஸம்பந்தமும், ரக்ஷ்யரக்ஷகஸம்பந்தமும், ஶேஷஶேஷிஸம்பந்தமும், பர்த்ருபார்யாஸம்பந்தமும், ஜ்ஞாத்ருஜ்ஞேயஸம்பந்தமும், ஸ்வஸ்வாமிஸம்பந்தமும், ஆதாரஆதேயஸம்பந்தமும், ஶரீரஶரீரிஸம்பந்தமும், போக்த்ருபோக்ய ஸம்பந்தமும் ஆக ஒன்பதுவகையான ஸம்பந்தம் உள்ளதனால்,'மாயனுக்கே உறவார் தங்களூரு' என்றார். இதன் விவரத்தை 'நவவிதஸம்பந்தம்'என்ற நூலிற் பரக்கக்காணலாம். உலகத்தில் ஒருஆத்மாவுக்கும் மற்றொருஆத்மாவுக்கும் கர்மசம்பந்தத்தினால் நேர்கிற பிதாபுத்ராதிஸம்பந்தங்கள் அக்கருமத்தின்தொடர்பு நீங்கும்போதெல்லாம் மாறிவிடுதல்போல நீங்குதலில்லாமல், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்குமுள்ள இந்தஒன்பதுவகைத்தொடர்பும் "உன்தன்னோடுறவேல் நமக்கு இங்கு ஒழிக்க வொழியாது" என்றபடி என்றும் அழியாதிருத்தலால், 'சீருறவு' எனப்பட்டது.

திருவெஃகாவிலெம்பெருமான் பிரமதேவன்செய்த வேள்வியை யழிக்க வந்த வேகவதிநதியைத் தடுத்தற்பொருட்டு அதற்குஅணையாகக் குறுக்கிற் பள்ளிகொண்டருளினவனாதலால், அப்பிரானுக்கு வடமொழியில் 'வேகாஸேது' என்று பெயர்; அது, தமிழில்'வேகவணை' என்று மொழிபெயர்ந்து, அது பின்பு (நாகவணையென்பது நாகணையென்று விகாரப்படுதல்போல) 'வேகணை' என விகாரப்பட்டு, அது பின்னர் 'வெஃகணை' எனத் திரிந்து, தானியாகுபெயராய்த் தலத்தைக் குறித்து,அது, பின்பு'வெஃகா'என மருவி வழங்கிற்றென நுண்ணிதின் உணர்க. (அஉ)

## கo. திருக்காரகம்.

ஓராதார் கல்வியுடையேங் குலமுடையே
மாராதனமுடையேம்யாமென்று—சீராயன்
பூங்காரகங்காணப்போதுவார்தாடலைமேற்
றாங்காரகங்காரத்தால்.

(இ - ள்.) ஓராதார் - விவேகமில்லாதவர்கள்,—'யாம்—, கல்வி உடையேம் - நிரம்பக் கற்றிருக்கின்றோம்; குலம் உடையேம் - உயர்குடியிற் பிறந்துள்ளோம்; ஆராதனம் உடையேம் - (நாடோறுந் தவறாது) திருவாராதநஞ் செய்கின்றோம்.' என்று - என்றுகருதி,—அகங்காரத்தால்-செருக்கினால், சீர் ஆயன் - சிறப்புப்பொருந்திய ஆயர்குலத்தினில் வந்துதோன்றிய திருமாலினது, பூ காரகம் - அழகிய திருக்காரகமென்னுந் திவ்வியதலத்தை, காண-சேவிக்குமாறு, போதுவார் - யாத்திரைசெய்கின்ற அடியார்களது, தாள் - திருவடிகளை, தலைமேல் தாங்கார் - தமது முடிக்கு அலங்காரமாகச் சூடமாட்டார்கள்; (எ - று.)

ஆராய்ச்சியில்லாத சிலர் - வித்யாமதம் குலமதம் முதலியவற்றினால் தம்மினும்மிக்கவர் இல்லையென்றுகொண்டு, ஸர்வவேதஸாரதமமான திருமந்திரத்தின்கருத்து "உற்றதுமுன்னடியார்க்கடிமை, மற்றெல்லாம்பேசிலு நின்திருவெட்டெழுத்துங், கற்று நான் கண்ணபுரத்துறை யம்மானே" என்றபடி பாகவதஶேஷத்வமாயிருக்கவும் அவ்வுண்மையை யறிந்து "எம்பெருமான்தாள் தொழுவார் காண்மின் என்தலைமேலாரே," "வாழ்த்துவார் தம்மலரடி என்சென்னிக்குமலர்ந்தபூவே" என்றபடி அந்தப்பாகவதர்களின் திருவடிகளைத் தமதுசென்னிக்கு மலர்ந்தபூவாகக் கொள்ளவேண்டியதாக விருக்க அவ்வாறு கருதாமல், தம்மினும் மிக்கவர் வேறொருவரும் இல்லையென்றுகருதி அகங்காரப்பட்டு அழிவரென்பதாம். பாகவதசேஷத்வமில்லாதவர்க்குக் கேவலமான கல்வி குலம் முதலியன இருந்தும் பயன்படாஎன்பது, கருத்து. "அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ண ஆஶ்ரம வித்யா வ்ருத்தங்களை-கர்த்தப ஜந்மம் ஶ்வபசாதமம் ஶில்பநைபுணம் பஸ்மாஹுதி ஶவவிதவாலங்காரம் என்று கழிப்பர்கள்" என்பது, ஆசார்யஹ்ருதயம். 'பூங்காரகங்காணப் போதுவார்' என்று பொதுப்படக் கூறியதனால், அவர்களது ஜந்மவித்யா வ்ருத்தங்கள் முதலியவற்றைக் கருதவேண்டா என்பது பெறப்படும். (அரு)

## கக. திருக்கார்வானம்.

தாலேலோவென்றுய்ச்சிதாலாட்டித்தன்முலைப்பா
லாலேயெவ்வாறுபசியாற்றினண்முன்—மாலே பூங்
கார்வானத்துள்ளாய் கடலோடும்வெற்போடும்
பார்வானமுண்டாய்நீபண்டு.

(இ - ள்.) மாலே-திருமாலே! பூ கார்வானத்து உள்ளாய்-அழகியதிருக்கார்வானமென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியிருப்பவனே!—கடலோ

டும் - சமுத்திரத்தோடும், வெற்போடும் - மலைகளோடும், பார் - பூமியையும், வானம் - ஆகாயத்தையும், பண்டு - முற்காலத்தில் [பிரளயகாலத்தில்] நீ—, உண்டாய் - அமுதுசெய்தருளினாய்; (அப்படிப்பட்ட உன்னை), முன்-கிருஷ்ணாவதாரத்தில், ஆய்ச்சி - இடைச்சியாகிய யசோதைப்பிராட்டி, தாலேலோ என்று தாலாட்டி - தாலேலோவென்று பாடித் தாலாட்டுதல்செய்து, தன் முலை பாலாலே - தனது ஸ்தந்யத்தால், எ ஆறு பசி ஆற்றினள் - எப்படி பசியைத் தணித்தாளோ! (எ - று.)

உனது உலகமுண்டபெருவயிற்றுக்கு ஆய்ச்சியின்முலைப்பால் எவ்வாறு பசிதணிக்கவல்லது? உன்னுடையமாயை என்தான்! என்பதாம். இதனால், எம்பெருமான் தன்தன்மை தோன்றாதவாறு கரந்து உலகத்திற் சாதாரண மானுடர்போலவே பிறந்துவளர்ந்த கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபட்டுக் கூறிய வாறு. "வானாகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்த், தேனாகிப் பாலாந் திருமாலே - ஆனாய்ச்சி, வெண்ணெய் விழுங்க நிறையுமே முன்னொருநாள், மண்ணை யுமிழ்ந்த வயிறு" என்ற பாசுரமும், "அவ்வச்சாதிகளிலே அவதரித்து அதிலுள்ளாருடைய தாரகமே தனக்குத் தாரகமாயிருக்கிறபடி. ஸ்ரீவராஹ மானானகில் கோரைக்கிழங்கு தாரகமாம்; இடையனானனகில் வெண்ணெய் தாரகமாயிருக்கிறபடி," "ப்ரளயங்கொள்ளாதபடி வயிற்றிலேவைத்து வெளிநாடுகாணப் புறம்பேயுமிழ்ந்து ரக்ஷித்த வயிறு இத்தனை வெண்ணெயாலே நிறைக்கவேண்டியிருந்ததோ!" என்ற வ்யாக்யானவாக்கியங்களும் இங்குக் காணத்தக்கன. (அச)

## கஉ. திருக்கள்வனூர்.

பண்டேயுன்றொண்டாம்பழவுயிரையென்னதென்று
கொண்டேனைக்கள்வனென்றுகூறாதே—மண்டலத்தோர்
புள்வாய்பிளந்தபுயலே யுனைக்கச்சிக்
கள்வாவென்றோதுவதென்கண்டு.

(இ - ள்.) புள் வாய் பிளந்த - (கொக்கென்னும்) பறவையினது (வடிவங்கொண்டுவந்த அசுரனது) வாயைப் பிளந்து கொன்ற, புயலே - நீர்கொண்ட மேகம்போன்றவனே!—மண் தலத்தோர் - பூமியிலுள்ளவர்கள்,—பண்டே உன் தொண்டு ஆம் - அநாதிகாலமாக உனக்கு அடிமைப்பட்டிருப்பதாகிய, பழ உயிரை - அநாதியாயுள்ள ஆத்மாவை, என்னது என்று கொண்டேனை - என்னுடையது [ஸ்வதந்த்ரமானது] என்று கருதியிருந்த என்னை, கள்வன் என்று கூறாது - திருடனென்று சொல்லவேண்டியதாக இருக்க அவ்வாறு கூறாமல், உனை - (ஸர்வஸ்வாமியான) உன்னை, கச்சி கள்வா என்று ஓதுவது - கச்சிக்கள்வனேயென்று சொல்வது, என் கண்டு - என்னகாரணங்கண்டோ?

கள்ளமென்பது-ஒருவர்க்குஉரிய பொருளைத் தன்னதாகக்கொள்வது: ஆகவே, அநாதியாக உனக்கே அடிமையாகக்கிடந்த உயிரை நான் என்னுடையதென்று கொள்வதனால் என்னைக் கள்வனென்றல் தகும்; உலகத்திலுள்ள பொருள்கள்யாவும் நின்னுடையனவே யாதலால், வெண்ணெய்கொள்ளு

தல் முதலிய தொழில்களைச் செய்யினும் உன்னைக் கள்வனென்றல் தகாது: இவ்வாறிருக்க, உலகத்தார் இத்தன்மையை ஆய்ந்து அறியாமலே என்னை யானே திருடிக்கொண்ட பெருந்திருடனாகிய என்னைக் கள்வனென்னாமல் ஸர்வஸ்வாமியான உன்னைக் கள்வனென்கின்றனரே! இது என்னபேதை மையென்று சமத்காரந்தோன்றக் கூறியவாறு. ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலே, அதற்குமாறாக ஸ்வதந்த்ரமென்று நினைக்கை ஆத்மா பஹார மாதல் காண்க. நித்யனான ஆத்மா அநாதியாகவே எம்பெருமா னுக்கு அடியவனாதலால், 'பண்டே உன்தொண்டாம் பழவுயிர்' என்றார். 'கொண்டேனை' என்று இறந்தகாலத்தாற் கூறியதனால், இப்போது ஐயங் கார் உண்மையறிவு தோன்றித் தம்முயிரை அடியவனென்று கருதியிருக்கின் றன ரென்பது விளங்கும். 'என்கண்டு' என்பது - மண்டலத்தோரது அறி யாமையே இவ்வாறுகூறக் காரண மென்பதைப் புலப்படுத்தும். (அரு)

## கசு. திருப்பவளவண்ணம்.

கண்டறிந்துங்கேட்டறிந்துந்தொட்டறிந்துங்காதலா
லுண்டறிந்துமோந்தறிந்துமுய்யேனே—பண்டைத்
தவளவண்ணா கார்வண்ணா சாமவண்ணா கச்சிப்
பவளவண்ணா நின்பொற்பதம்.

(இ - ள்.) பண்டை - பழமைக்காலத்தில் [கிருதயுகத்தில்], தவளம் வண்ணா - (பால்போல்) வெண்ணிறமானவனே! கார் வண்ணா - மேகத்தின் தன்மையை யுடையவனே! சாம வண்ணா - (இயற்கையில்) கருநிறமான வனே! கச்சி பவளம் வண்ணா - காஞ்சீபுரத்தி லெழுந்தருளியுள்ள பவளவ ண்ணனே!—நின் பொன் பதம் - உனது அழகிய திருவடிகளை,—காதலால் - பக்தியோடு,—கண்டு அறிந்தும் - (எனது கண்களால்) தரிசித்துஉணர்ந்தும், கேட்டு அறிந்தும் - (காதுகளாற்) கேட்டுஉணர்ந்தும், தொட்டு அறிந்தும் - (மெய்யினாற்) பரிசித்துஉணர்ந்தும், உண்டு அறிந்தும் - (வாயினாற்) புசித்து உணர்ந்தும், மோந்து அறிந்தும் - (மூக்கினால்) மோந்துஉணர்ந்தும், உய் யேன் - ஈடேறுகின்றேனில்லை; (எ - று.)—ஏ - இரக்கப்பொருளது.

"உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாம், கண் ணன்," "வாஸுதேவஸ் ஸர்வம்" என்பவை முதலியவற்றிற் கூறுகிறபடி ஐம்பொறிகளாலும் எம்பெருமானையே நுகரப்படுபொருளாகக் கொண்டு ஈடேறவேண்டியதாயிருக்க, யான் அவ்வாறிருத்தலை விட்டு, "கண்டுகேட் டுண்டுயிர்த்துற்றறியுமைம்புலனும், ஒண்டொடிகண்ணேயுள" என்றவாறு சிற்றின்பத்தில் அழிந்து வருந்துகின்றேனே; இவற்றைப் போக்கி என்னைப் பாதுகாத்தருளவேண்டு மென்பதாம்: "உரைமாற்ற முண் டுடன்பொறி யைந்து முன்னிடத்தன்றி யுண்ணு, மிரை மாற்றவேண்டு மிதுவே யென் விண்ணப்பம் என்னப்பனே" என்றார் அழகரந்தாதியிலும். வேறுவேறு காலங்களில் வேறுவேறுபொருள்களால் அநுபவிக்கப்படுவன ஒருகாலத்து இத்திருவடியின்கண்ணே அநுபவிக்கப்படு மென்க.

இனி, கார்வண்ணா சாமவண்ணா என்பதற்கு - (கலியுகத்தில்) காள மேகம்போன்ற நீலநிறமுள்ளவனே! (துவாபரயுகத்தில்) பசுமைநிறமுள்ள வனே! என்று பொருள்கூறி, எம்பெருமான் நான்குயுகங்களிலும் நான்கு நிறமுடையவனாயிருக்கின்றபடியை இச்செய்யுளிற் பின்னிரண்டடிகளினாற் கூறியதாகக் கொள்ளுதல் ஏற்கும்; "க்ருதயுகத்திலேவந்தால் க்ருதயுகபுரு ஷர்கள் ஸத்வோத்தரராகையாலே அவர்களுடைய ருசி(க்கு) அநுகுணமாகச் சுக்லவர்ணமான வடிவையுடையனாயிருக்கும்," "திரேதாயுகத்தில்வந்தால் சிவந்தவடிவையுடையனாயிருக்கும்; அக்காலத்திலே புருஷர்கள் ரஜஃப்ரசுர ராகையாலே சிவப்பிலேயாயிற்று ருசியுண்டாயிருப்பது; அந்தருசி(க்கு) அநுகுணமாகச் சிவந்தவடிவைக்கொண்டு முகங்காட்டும்," "த்வாபரயுகத்தி லுள்ளார் ரஜஸ்தமோமிஶ்ரராயிருக்கையாலே அவர்களுடைய ருசி(க்கு) அநுகுணமாகச் சிவப்புமன்றியிலே நீலமுமன்றியிலே பாசியினுடைய புறத் திற் பசுமைபோலே ஶ்ரமஹரமான திருமேனியை யுடையனாயிருக்கும்," "கலிகாலத்தில் தன்பக்கல் அபிமுகராய் ஒருவர்ணவிஶேஷத்திலே ருசி பண்ணுவார் இல்லாமையாலே ஸ்வாபாவிகமான வடிவுதன்னை [கருநிறத் தை]க் கொண்டிருக்கும்," "பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம், போலு நீர்மை பொற்புடைத்தடத்து வண்டுவிண்டுலா, நீலநீர் மை யென்றிவை நிறைந்தகால நான்குமாய், மாலினீர்மை வையகம் மறைத்த தென்னநீர்மையே," "திருவடிவிற் கருநெடுமாற் சேயனென்றுந் திரேதைக்கண் வளையுருவாய்த் திகழ்ந்தானென்றும், பெருவடிவிற் கடலமு தங் கொண்ட காலம்" என்பன காண்க. (அசு)

## கஎ. திருப்பரமேச்சுரவிண்ணகரம்.

பதத்தமிழாற்றன்னையேபாடுவித்தென்னைத்தன்
பதத்தடியார்க்கேயாட்படுத்தா—னிதத்த
பரமேச்சுரவிண்ணகரான் பலவான்
வரமேச்சுரலணைந்தமால்.

(இ - ள்.) பல ஆன் வர - பலபசுக்கள் ஒருங்குதிரண்டுவர, மேச்சு - (அவற்றை) மேய்த்து, உரல் அணைந்த - (வெண்ணெய் களவாடியதற்காக யசோதைப்பிராட்டியால்) உரலிற் பிணிப்புண்டிருந்த, மால்-திருமாலாகிய, இதத்த பரமேச்சுர விண்ணகரான் - (தன்னடியார்க்கு) நன்மைசெய்கின்ற பரமேச்சுரவிண்ணகர மென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளிய பரமபத நாதன்,—பதம் தமிழால் - பக்குவமாயுள்ள தமிழ்ப்பாடல்களினால்,தன்னையே பாடுவித்து - (பிறரைத் துதியாமல் பரதேவதையாகிய)தன்னையே பாடும்படி செய்து, என்னை—, தன் பதத்து அடியார்க்கே - தனது திருவடிகளில் தொண்டுபூண்டவர்கட்கே, ஆள்படுத்தான் - அடிமையாக்கினான்; (எ - று.)

பரமேச்சுரவிண்ணகரத்தி லெழுந்தருளியிருக்கிற திருமால், தன்னைக் கவிபாடுதற்கு ஏற்ற ஜ்ஞாநஶக்திகள் முதலியன என்னிடத்திலில்லாதிருக்க

வும், தனது நிர்ஹேதுககிருபையால் அவற்றை எனக்கு உண்டாக்கி, வேதங்களாலும் அளவிட்டுச்சொல்லமுடியாத தன்னைப்பற்றிக் கவிபாடித் துதிக்குமாறு செய்து என்னைத் தன்னடியார்க்கு ஆட்படுமாறு செய்தனனென்பதாம். எம்பெருமானது அடிமை நிலைத்துநிற்பது அவனடியார்க்கு அடிமைப்பட்டபின்னரேயாகு மாதலால்,"எந்தம்மைவிற்கவும்பெறுவார்களே" என்றபடி தாம் அவர்க்கு ஆட்பட்டிருத்தலால் 'தன்பதத்தடியார்க்கேயாட்படுத்தான்' என்றது. விஷயகௌரவத்தாலும் இயற்கையாகவே பாஷை இனியதாயிருத்தலாலும், 'பதத்தமிழால்' என்றார்; "என்னால் தன்னை யின் றமிழ்பாடிய வீசனை" என்பது, நம்மாழ்வார்பாசுரம். எம்பெருமான் எப்போதும் 'உயிர்கள் எவ்வாறு கரைமரஞ்சேருமோ?' என்று அவர்களின் நன்மையையே எதிர்பார்த்து நிற்பவனாதலால், 'இதத்த பரமேச்சுரவிண்ணகரான்' எனப்பட்டான். மேச்சு = மேய்த்து: மரூஉ.

பரமேச்சுரன் [தேவாதிதேவன்] எழுந்தருளியிருக்கின்ற விண்ணகரமாதல்பற்றி, இத்தலத்திற்குப் பரமேச்சுரவிண்ணகர மென்று திருநாமம்; வைகுண்டப்பெருமாள்ஸந்நிதி யெனப்படுவது, இதுவே. (அள)

## கரு. திருப்புட்குழி.

மால்வேழமுமரவுமாயையும்வெற்புங்கடலு
மேல்வீழ்படையுர்விடமும்போய்ப்—பால
னெருப்புட்குழிகுளிரநின்றதுங்கேட்டோதார்
திருப்புட்குழியமலன்சீர்.

(இ - ள்.) (இரணியாசுரன் தனக்குஇணங்கிவராத தனதுகுமாரனான பிரகலாதாழ்வானை உபத்திரவிக்கும்பொருட்டு ஏவியனவான), மால் வேழமும் - பெரிய மதயானைகளும், அரவும் - பெரும்பாம்புகளும், மாயையும் - (சம்பரனென்னும்அசுரனாற் செய்யப்பட்ட) மாயையும், வெற்பும் - மலையும், கடலும் - சமுத்திரமும், மேல் வீழ் படையும் - மேலேவிழுகின்ற வாள்முதலிய ஆயுதங்களும், விடமும் - விஷமும், போய் - (உபத்திரவஞ்செய்யமாட்டாமல் வலியொடுங்கிப்) போக, பாலன் - (எம்பெருமானதுதிருவஷ்டாக்ஷரத்தின் மகிமையை யறிந்து உச்சரித்த) சிறுவனாகிய பிரகலாதாழ்வான், குழி உள் நெருப்பு குளிர நின்றது - பள்ளத்திலே மூட்டிய நெருப்புச் சுடாமற் குளிரும்படி நின்றதை, கேட்டும் - கேட்டிருந்தும்,—திருப்புட்குழி அமலன் சீர் - திருப்புட்குழியென்னூர் திவ்வியதலத்தி லெழுந்தருளிய திருமாலினது சிறப்புக்களை, ஓதார் - (இவ்வுலகத்துச்சனங்கள்) கூறமாட்டார்கள்; (எ - று.)

எம்பெருமானது திருவடிகளையே சரணமாக நம்பியிருந்த சிறுவனாகிய பிரகலாதாழ்வான் தன்தந்தையாகிய இரணியாசுரனது சூழ்ச்சியினால் தோன்றிய பலவகையாபத்துக்களினின்று நீங்கியதைக் கேட்டிருந்தும், உலகத்துச்சனங்கள் அப்பெருமானதுகுணங்களை யநுசந்தித்து நற்கதி

பெறாது அழிகின்றனரே! இது என்ன பேதைமை? என்று இரங்கியவாறு. இரணியன் அருந்தவம்புரிந்து பெருவரங்கள்பெற்றுச் செருக்கித் தன்னையே அனைவரும் கடவுளாகக்கொண்டு வணங்கி வழிபடவேண்டுமென்று கட்டளையிட்டகாலத்தில் எல்லாத்தெய்வங்களும் இருந்தஇடம்தெரியாதபடி மறைந்துகிடக்க, அவ்விரணியனது செருக்கை யொழிக்குமாறு எம்பெருமான் பிரகலாதனுக்கு அநுக்கிரகித்து நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றிய பின்பு பிறதெய்வங்கள் தலையெடுத்ததனால் ஸ்ரீமந்நாராயணனே பரதேவதையென்று அப்பிரானது சீரையே ஓதவேண்டியதாக இருக்க, அதனைவிட்டுப் பிறதெய்வங்களின்சீரையும் ஓதுகின்றார்களே! இது என்ன அறிவு! என்ற கருத்தும் 'நெருப்புட்குழிகுளிர நின்றதுகேட்டும் ஓதார் திருப்புட்குழி அமலன்சீர்' என்றவிடத்துத் தோன்றும்.

இரணியாசுரனது ஏவுதலினால் திக்கஜங்கள் பிரகலாதனைப் பூமியிலே வீழ்த்தித் தந்தங்களினாலே பாய்ந்து இடிக்க, அந்தத்தந்தங்கள் முறிந்து பொடியாய்ப்போயினதனால், மால்வேழமும்; தக்ஷகன் முதலான கொடிய மகாசர்ப்பங்கள் உக்கிரமான விஷங்களைக் கக்கிக்கொண்டுவந்து அவனது சகலஅவயவங்களிலும் கடிக்கவும் அவனதுதேகத்திலுள்ள தோலிற் கிஞ்சித்தாயினும் சேதமுண்டாகவில்லை யாதலால், அரவும்; மகாமாயாவியாகிய சம்பராசுரன் செய்த மாயைகளெல்லாம் ஸ்ரீமந்நாராயணனுடைய நியமனத்தினாலே திருவாழியாழ்வான் அவரைப் பாதுகாக்கும்பொருட்டு அங்கே எழுந்தருளித் தகித்துச் சாம்பராக்கிவிட்டதனால், மாயையும்; பருவதங்களினாலே அமுக்கப்பட்டபோதிலும் ஸ்ரீவிஷ்ணுஸ்மரணமாகிற கவசத்தினாலே காக்கப்பட்டதனால், வெற்பும்; தைத்தியர்கள் நாகபாசங்களினாலே கட்டிக் கடலிலே போகட அவன் அதில்வீழ்ந்து அசைந்துகொண்டு அதனைவிட்டுப் புறப்பட்டு வெளியில்வந்துவிட்டதனால், கடலும்; அங்கிருந்த அசுரர்களெல்லாரும் ஒன்றாய்ச்சேர்ந்து பலவிதஆயுதங்களையெடுத்துப் பிரகரித்துவதைக்கும்படி யத்தனிக்க, அவன் அவற்றினாற் கிஞ்சித்தும் வேதனையுறாமல் விளங்கியதனால், மேல்வீழ்படையும்; பாகஞ்செய்வோர் போஜநங்களிலெல்லாம் கலந்துகொடுத்த மகாவிஷம் ஸ்ரீஅநந்தநாமோச்சாரண பிரபாவத்தினாலே நிர்வீரியமாகி அவனுடையஉதரத்தில் ஜீரணமாகிவிட்டதனால், விடமும்; அசுரர்கள் அக்கினியை வளர்த்து அவனை அதிலே மறையவைத்து அனலை மூட்டிக்கொளுத்த அவ்வக்கினி கொஞ்சமாகிலும் அவனைத் தகிக்கமாட்டாமல் அதிசீதளமானதனால், நெருப்பும் ஒன்றுஞ்செய்யமாட்டாமற் போயினமை பிரசித்தம். "நம்பெருமானெழுத்தெட்டின் பெருமை நவிலுமதோ, சம்பரன்மாயம் புரோகிதர்சூழ்வினை தாரணிவாள், வெம்படை மாசுணம் மாமதவேழம் விடந் தழல் கால், அம்பரமே முதலானவை பாலனுக்கு அஞ்சினவே" என்றார் திருவரங்கத்துமாலையிலும்.

புள்ளை [சடாயுவென்னும் பெரியவுடையாரைக்] குழியிலிட்டு ஸம்ஸ்கரித்ததுபோல எம்பெருமான் சேவை சாதிக்கின்ற தலமாதல்பற்றி, திருப்புட்குழியென்று இத்தலத்திற்குத் திருநாம மென்பர். (அஅ)

கக. திருநின்றவூர்.

*சீரறிந்து தோழிமீர் சென்றுகொணர்ந்தெனக்குப்*
*போரமுலைமுகட்டிற்பூட்டுமினோ—நேரவுணர்*
*பொன்றவூர்புட்கழுத்திற்பொன்னை மாணிக்கத்தை*
*நின்றவூர்நித்திலத்தை நீர்.*

[தலைவி தோழியர்க்கு அறத்தோடுநிற்றல்.]

(இ - ள்.) தோழிமீர் - (எனது) பாங்கிமார்களே!—நீர்-நீங்கள்,—நேர் அவுணர் பொன்ற - எதிர்த்துப்பொருத அசுரர்கள் அழியும்படி, ஊர் - ஏறி நடத்துகின்ற, புள் - கருடாழ்வானது, கழுத்தில்-கழுத்திலே, பொன்னை - பொன்போலப் பிரகாசிப்பவனும், மாணிக்கத்தை - (இயற்கையில்) கரு மாணிக்கம்போன்ற கருநிறமுள்ளவனுமாகிய, நின்றவூர் நித்திலத்தை-திரு நின்றவூரென்னும் திவ்யதலத்தி லெழுந்தருளிய முத்துப்போன்றவனை, சீர் அறிந்து-(அவனது) சிறப்பை யுணர்ந்து,—சென்று-போய்க்கிட்டி, கொணர்ந்து - கொண்டுவந்து, எனக்கு போர - எனக்குத் திருப்தியுண்டாகும் படி, முலை முகட்டில் - (எனது) தனங்களது உச்சியின்மீது, பூட்டுமின் - அணியுங்கள்; (எ - று.)

திருநின்றவூர்ப் பத்தராவியாகிய தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடிப்பிரிந்த தலைவி அப்பிரிவாற்றாமையாற் பலவாறு நோவுபட, அத்துயர மாத்திரத்தையே கண்ட தோழியர் அந்நோயின்காரணமும் அதற்குப்பரி காரமும் இன்னவென்று உணராது வேறுபலவகையாக ஆராய்ந்து பரிகா ரஞ்செய்யத் தொடங்கியபோது நோயொன்றும் மருந்தொன்று மாகை யாலே அந்நோய் தீராது வளர, அதனை ஆற்றமாட்டாத அந்தத்தலைவி நாணந்துறந்து தானே தனதுநோயையும் நோயின்காரணத்தையும் அந் நோய்தீர்க்கும் மருந்தையும் அம்மருந்தைப் பிரயோகிக்கும் விதத்தையும் உணர்த்துதல், இச்செய்யுளிற் கூறிய விஷயம். இங்ஙனம் களவைவெளிப் படுத்துதலின் காரணம் - தன்கருத்தைத் தோழியர்மூலமாகத் தாய்மார்க் கும் அவர்கள்மூலமாகத் தந்தைக்கும் மற்றும்பெரியோர்க்கும் தெரிவித்துத் தன்னை அவனுக்கே விரைவில் வெளிப்படையாக மணஞ்செய்துவைக்கும் படி கொள்ளும் விருப்பம்.

எம்பெருமானை - பெறுதற்கு அருமையும் ஒண்மையும் பற்றிப் பொன் னாகவும், கருநிறம்பற்றி மாணிக்கமாகவும், ஸ்ரமஹரமாயிருத்தல்பற்றி முத் தாகவும் கூறினள்; "வெள்ளறையுள் கல்லறைமேற்பொன்னை,மரதகத்தை," "நின்றவூர் நின்ற நித்திலத்தொத்தினை," "நின்றவூர் நித்திலத்தை" என்ற ஆன்றோர் அருளிச்செயல்கள் காண்க. எம்பெருமானொருத்தனையே இவ் வாறு பொன்னாகவும் மாணிக்கமாகவும் நித்திலமாகவும் குணபேதத்தால் வியப்புத்தோன்றக் கூறியது - பலபடப்புனைவணியாம். எம்பெருமானைப் பொன் மாணிக்கம் முத்து என்று உருவகத்தாற் கூறியதற்கு ஏற்ப, 'முலை முகட்டிற்பூட்டுமின்' என்று தலைவி சமத்காரந்தோன்றக் கூறினள்; பொன் முதலியவை முலைமுகட்டிற் பூணத்தக்க பொருள்களாதல் காண்க. 'முலை

முகட்டிற்பூட்டேமினே' என்றதனால், "மலராள்தனத்துள்ளான்" என்றவாறு அப்பிராட்டியோடொப்ப எம்பெருமானைத் தான் அநுபவிக்கப் பாரிக்கின்றனள் இத்தலைவி யென்பது பெறப்படும். சீர் அறிந்து என்பதற்கு - "மற்றொருவர்க் கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலை யெம்மாயற்கல்லால்" என்றபடி அவ்வெம்பெருமானுக்கன்றி மற்றொருத்தற்குப் பேச்சுப்படாதபடி அநந்யார்ஹையான எனது சிறப்பை யறிந்து என்றும் உரைக்கலாம்.

எம்பெருமான் ஒருகால் காட்சிகொடுத்து மறைய, பின்பு பிரிவாற்றாதவருந்துகின்ற ஐயங்கார் தம்பக்கல் பரிவுடையாரை நோக்கி 'எம்பெருமானை என்னிடத்திற்சேர்த்து என்னை ரக்ஷிக்கப் பாருங்கள்' என்று பிரார்த்தித்தல், இதற்கு உள்ளுறைபொருள். விவரம் உய்த்து உணர்க. (கசு)

## கஎ. திருவெவ்வுளூர்.

நீர்மைகெடவைதாரு நின்னோடெதிர்த்தாருஞ்
சீர்மைபெறநின்னடிக்கீழ்ச்சேர்கையினா—னேர்மையிலா
வெவ்வுளத்தனேன்செய்மிகையைப்பொறுத்தருளி
யெவ்வுளத்தனே நீயிரங்கு.

(இ - ள்.) எவ்வுள் அத்தனே - திருவெவ்வுளூர் என்னுந் திவ்யதலத்தில் எழுந்தருளிய தலைவனே!—நீ—,—நீர்மை கெட-(தமது) தன்மை அழியும்படி, வைதாரும் - (உன்னை) நிந்தித்தவரும், நின்னோடு எதிர்த்தாரும் - உன்னோடு எதிர்த்துப்போர்செய்தவரும், (தாங்கள்செய்த அபராதத்தினால் அழிந்துபோகாமல்), சீர்மை பெற - சிறப்பு அடையும்படி, நின் அடிக்கீழ் சேர்கையினால் - உனது திருவடிகளிற் சேர்தலினாலே,— நேர்மை இலா - நல்லகுணமில்லாத, வெம் உளத்தனேன் - கொடிய சிந்தனையையுடைய யான், செய் - செய்த, மிகை - குற்றங்களையும், பொறுத்து அருளி - உனது திருவருளினாற் பொறுத்துக்கொண்டு, இரங்கு - (என்திறத்தில்) திருவுள்ளமிரங்கி (உனக்கு) ஆட்கொள்வாயாக; (எ - று.)

வைதார் - சிசுபாலன் முதலானோர். எதிர்த்தார் - தந்தவக்ரன் முதலானோர். எம்பெருமான் தன்னைவிரும்பி இடைவிடாது மனத்திற்கொண்டு பக்தியோடு வாழ்த்தியவர்க்கும் வழிபட்டவர்க்கும் பரமபதம் அளித்தல் போலவே, தன்னை வெறுத்து இடைவிடாது மனத்திற்கொண்டு வைதவர்க்கும் எதிர்த்துப்போர்செய்தவர்க்கும் பரமபதம்அளித்தருள்கின்றன னென்பதையும்; அபாரகருணாநிதியான அப்பெருமான் உயிர்கட்கு நற்கதியளித்தற்குத் தன்சம்பந்தமான ஏதேனும் ஒன்றை வியாஜமாகக்கொண்டு அருள்செய்கின்றன னென்பதையும்; எவ்விதத்திலும் சேதநரை உஜ்ஜீவிப்பிப்பது எம்பெருமானது இயல்பு என்பதையும்; ஏதேனும் ஒருவியாஜத்தை அபேக்ஷிக்கும் எம்பெருமான் த்வேஷாதிகளினாலாவது செய்யும் நாமஸங்கீர்த்தநாதிகளையும் திருவுள்ளம்பற்றியருளும்படியான மஹோதாரனென்பதையும் இங்கு உணரலாம்; "வைதாரையு முன்னே [illegible] மலர்த்தாளில்வைத்

தாய், மொய்தாரையத்தனை நீங்கிழைத்தேனையு மூதுலகிற், பெய்தாரை வானிற் புரப்பா னிடப்பெருங்கிரியாய், கொய்தாரைவேய்ந்த திருவடிக் கீழ்த் தொண்டுகொண்டருளே" என்றார் அழகரந்தாதியிலும். 'எம்பெருமானது திருவடியே வீடு' என்ற கொள்கை, இரண்டாமடியில் விளங்குகின்றது. 'எவ்வுளத்தனே' என்ற விளியால், வைதாரையும் எதிர்த்தாரையும் கூடக் கைவிடமாட்டாது திருவடிக்கீழ்ச்சேர்த்துக்கொள்ளும் உரிமையுடையவன் எம்பெருமா னென்பது, பெறப்படும். "செய்தகுற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே" என்பது திருமழிசையார் பாசுரம்.

திருமால் சாலிஹோத்திர மகாரிஷிக்குப் பிரதியக்ஷமாகி, உறைதற்கு உரிய உள் 'எவ்வுள்' என வினவியதனால், இத்தலத்திற்குத் திருவெவ்வுளூரென்று திருநாமமாயிற் றென்பர். (௬௦)

## ௬௧. திருநீர்மலை.

இரங்குமுயிரனைத்துமின்னருளாற்காப்பா
னரங்கனொருவனுமேயாதல்—கரங்களாற்
போர்மலைவான்வந்தபுகழ்வாணன்காட்டினா
னீர்மலைவாழெந்தையெதிர்நின்று.

(இ - ள்.) இரங்கும் - வருந்துகின்ற, உயிர் அனைத்தும் - எல்லாவுயிர்களையும், இன் அருளால் - (தனது) இனியகருணையினால், காப்பான் -பாதுகாப்பவன், அரங்கன் ஒருவனுமேஆதல்-திருவரங்கநாதன் ஒருத்தனேயாவனென்ற விஷயத்தை, கரங்களால் - (தனது) ஆயிரங்கைகளினாலும், போர் மலைவான் வந்த - போர்செய்யும்படி வந்த, புகழ் வாணன் - பிரசித்திபெற்ற பாணாசுரன், நீர்மலை வாழ் எந்தை எதிர் நின்று - திருநீர்மலையென்னுந் திவ்வியதலத்தில் நித்தியவாசஞ்செய்கின்ற எம்பெருமானது எதிரிலே நின்று, காட்டினான்—; (எ - று.)

பாணாசுரன் முதலிற் சிவபிரானை யடுத்து அவனது துணைவலியாற் செருக்கிக் கண்ணபிரானோடு போர்செய்யத்தொடங்கி, இடையிலே தனது பரிவாரங்களோடு சிவபிரான் கைவிட்டு ஓடியதனால் தனதுகுறைகள்தீரவும் தன்விருப்பம்கைகூடவும் பெருமையோடு அப்பிரானது சக்கராயுதத்தினாற் கைகள் அறுப்புண்டு, சிவபிரான்பிரார்த்தனைக்கு இணங்கி நான்குகைகளோடும் உயிரோடும் தன்னை அக்கண்ணபிரான் விட்டிட்டதைக் காணவே, அவ்வசுரன் ஸ்ரீகிருஷ்ணனே ரக்ஷகனென்று துணிந்து அப்பிரானை வணங்கி உறவுபூண்டு அத்திருமாலருளாற் பேறுபெற்று உய்ந்தனனென்பது பிரசித்தமாதலால், ஸ்ரீரங்கநாதனே எல்லாவுயிர்களையுந் தமோற்றத்தினின்று நீக்கிக் காக்கின்ற கடவுளாவ னென்றதைக் காட்டியவ னாவான்; "வணங்கரியா னரங்கன் னடியார்தொழ வாளரவு, வணங்கரியாடல்பரிதேர் நடத்தெந்தை வானவர்க்கும், வணங்கரியா னன்றிக் காப்பாரில்லாமை விண்மண்ணறியும், வணங் கரியானவர் வாணன் கண்டாகனன் மார்க்கண்டனே" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும்.

'புகழ்வாணன்' என்றது அவன் சிவபிரான் தனதுவாயிலிற் கணங்களோடு பாதுகாவலாகும் பெருமை பெற்றிருந்தவனென்பதையும், 'கரங்களால் போர்மலைவான்' என்றது - தான் ஆயிரங்கைகள் கொண்டதனால் போர்த்தினவுவிஞ்சப்பெற்றிருந்தவனென்பதையுங் காட்டும். "ருத்ரனும் ஸகலப்ராணிகளையும் ஸம்ஹரிக்கையே தொழிலாகவுடையனாய், விடாயர் முகத்திலே நெருப்பைச் சொரிந்தாற்போலே யிருக்கத் தழல்நிறவண்ணனாய், தன்னையாஸ்ரயித்தவர்களை 'அறுத்துத்தா, பொசித்துத்தா' என்று கொடுந்தொழில்களைச் செய்வித்துக் கொள்ளுகையாலும், தன்னை ஆஸ்ரயித்த வாணனை 'தலையிற்பூவாடாதே நோக்குகிறேன்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணித் தன்னைத்தொழுத கைகளைக் கள்ளிக்காடுசெய்த்தாப்போலே சிய்க்கக்கண்டு 'உயிருண்டாகில் உப்புமாறியுண்ணலாம்' என்று நெற்றியிற் கண்ணைப் புதைத்துக்கொண்டு நழுவினவனுகையாலும் ........ரக்ஷகனுகமாட்டான்......ஈஸ்வரன் மாதாக்கள்கைவிட்ட அவஸ்தையிலும் "பின்னுமின்னடியேனுக்கு உற்றானாய் வளர்த்து என்னுயிராகி நின்றான்" என்கிறபடியே தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டு தாய்முகங்காட்டியும், இன்சொல்லுச்சொல்லியும், ப்ராதாக்களும் பர்த்தாக்களும் நெகிழநின்றவன்று தான் ஏறிட்டுக்கொண்டு கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோயும், புருவம்நெரித்தவிடத்திலே தேரைநடத்தியும், மார்பிலே அம்பேற்றும், சாவாமல் நோக்கியும், செத்தாரை மீட்டும் நாராயணத்வப்ரயுக்தமான உதரத்தெரிப்பாலே அகவாயிலேநின்று ஸத்தையைநோக்கிக்கொண்டுபோருகையாலே இவனே எல்லார்க்கும் ரக்ஷகன்" என்ற ப்ரபந்நபரித்ராணம் இங்குக் காணத்தக்கது. "வாணபுரம்புக்கு முக்கட்பிரானைத் தொலைய வெம்போர்கள்செய்து, வாணனை யாயிரந்தோள் துணித்தான் சரணன்றி மற்றொன்றிலமே" என்பது, நம்மாழ்வார் பாசுரம். நீரானது அரண்போலச் சூழப்பெற்ற மலையாதல்பற்றி, இத்தலம், திருநீர்மலை யெனப் பெயர்பெறும். (கக)

கஉ. திருவிடவெந்தை.

நின்றுதிரியும்பிறவியெல்லாநேர்வித்துக்
கொன்றுதிரியுங்கொடுவினையா—ரின்று
வெருவிடவெந்தைக்கேவிழுமியதொண்டானேன்
திருவிடவெந்தைக்கேசெறிந்து.

(இ - ள்.) நின்று திரியும் பிறவி எல்லாம் நேர்வித்து - நிலைத்திணைப் பொருளும் [ஸ்தாவரமும்] இயங்குதிணைப்பொருளும் [ஜங்கமமும்] ஆகிய எல்லாப்பிறவிகளையும் (எனக்கு) உண்டாக்கி, கொன்று திரியும் - (என்னை) மிகவும்வருத்திக்கொண்டு திரிகின்ற, கொடு வினையார் - மிகக்கொடிய தீவினைகள், இன்று - இப்போது, வெருவிட - அஞ்சியோடும்படியாக, (யான்), திருவிடவெந்தைக்கே செறிந்து - திருவிடவெந்தையென்னுந் திவ்வியதலத்தில் நெருங்கி, எந்தைக்கே விழுமிய தொண்டு ஆனேன் - (அத்தலத்தில் எழுந்தருளிய) எமதுஸ்வாமியாகிய நித்யகல்யாணப்பெருமானுக்கே சிறந்த அடியவனாயினேன்; (எ - று.)

எம்பெருமானுக்கே அடிமைப்பட்டதனால், எனக்குப் பிறவித்துன்பங்களை இதுகாறும் விளைத்து என்னை வருத்திவந்த பாவங்களெல்லாம் இனி என்னையணுகாது அஞ்சியோடுமென்பதாம். "அகஞ்சிவந்த கண்ணினராய் வல்வினையராவார், முகஞ்சிதைவராமன்றேமுக்கி-மிகுந்திருமால், சீர்க்கடலையுள்பொதிந்த சிந்தனையேன்றன்னை, யார்க்கடலாஞ் செவ்வேயடர்த்து," "வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ, கானோ வொருங்கிற்றுக் கண்டிலமால் - ஆனீன்ற, கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள்பணிந்தோம், வன்றுயரையாவா மருங்கு" என்பன நம்மாழ்வார்பாசுரம். செறலினால், 'கொடுவினையார்' என அஃறிணையை உயர்திணையாக் கூறினர்; திணைவழுவமைதி.

இத்தலத்தி லெழுந்தருளிய வராகப்பெருமாள் அமுதுதேவியை இடப்பக்கத்திற் கொண்டிருத்தலால், இத்தலத்திற்குத் திருவிடவெந்தையென்று திருநாமமாயிற்று. (௯௨)

## ௨௦. திருக்கடன்மல்லை.

செறிந்தபணைபறித்துத்திண்களிற்றைச்சாடி
முறிந்துவிழப்பாகனையுமோதி—யெறிந்து
தருக்கடன்மல்லைக்குமைத்தான்றஞ்சமென்றுநெஞ்சே
திருக்கடன்மல்லைக்குட்டிரி.

(இ - ள்.) நெஞ்சே - (எனது) மனமே!— செறிந்த - நெருங்கியுள்ள, பணை-தந்தங்களை, பறித்து - பிடுங்கி, (அவற்றைக்கொண்டே), திண் களிற்றை - வலிய (குவலயாபீடமென்னும்) மதயானையை, சாடி - அடித்துக் கொன்று,—பாகனையும் - (அவ்யானையை நடத்துபவனான) பாகனையும், முறிந்து விழ - இறந்து கீழ்விழும்படி, மோதி எறிந்து-அடித்துத் தள்ளி,— தருக்கு அடல் மல்லை - செருக்கையும் தேகவலிமையையுமுடைய மல்லர்களை, குமைத்தான்-பொருது கொன்றவனாகிய திருமாலே, தஞ்சம் என்று-ரக்ஷகமென்று (அறுதியிட்டு), திருக்கடன்மல்லைக்குள் திரி - திருக்கடன்மல்லையென்னுந் திவ்வியதலத்திற் சென்று திரிவாயாக; (எ - று.)

எம்பெருமானையே ரக்ஷகமாக நினைத்துத் திருக்கடன்மல்லையிற் சென்று வசித்தால் அப்பெருமான் விரோதிகளையெல்லாம் போக்கி நற்கதியளிப்பனென்பதாம். இது, பூதத்தாழ்வார் திருவவதாரஸ்தலம். (௯௩)

## ௨௧. திருவல்லிக்கேணி.

திரிந்துழலுஞ்சிந்தைதனைச்செவ்வேநிறுத்திப்
புரிந்துபுகன்மின்புகன்றான்—மருந்தாங்
கருவல்லிக் கேணியாமாக்கதிக்குக் கண்ணன்
றிருவல்லிக்கேணியான்சீர்.

(இ - ள்) திரிந்து உழலும் - (ஐம்புலவாசைகளிற்) சென்று அலைகின்ற, சிந்தைதனை - உங்கள் மனத்தை, செவ்வே நிறுத்தி -(அவ்வாறுசெல்லவொட்

டாது) நேராகநிறுத்தி, திருவல்லிக்கேணியான் - திருவல்லிக்கேணியென்னூர் திவ்வியதலத்தி லெழுந்தருளிய, கண்ணன் - கண்ணபிரானுகிய வேங்கடகிருஷ்ணனது, சீர் - கீர்த்தியை, புரிந்து புகன்மின் - விரும்பிக் கூறுங்கள்; புகன்றால் - அவ்வாறு புகழ்ந்துகூறினால், (அது),—கரு வல்லிக்கு - கருப்பமாகிய கொடிக்கு, மருந்து ஆம் - (நசிக்கச்செய்யும்) ஔஷதமாம்; மாகதிக்கு - சிறந்த முத்தியுலகத்துக்கு, ஏணி ஆம் - (ஏறிச்செல்லுதற்குஉரிய) ஏணியாகும்; (எ - று.)

மனத்தைப் பலவிஷயங்களிற்செல்லாது ஒருவழிப்படுத்தித் திருவல்லிக்கேணியி லெழுந்தருளிய திருமாலின் கீர்த்தியை யெடுத்துக்கூறினால், அது கொழுந்தோடிப்படர்கின்ற கர்ப்பபரம்பரைகளை நீக்கி முத்திநெறியிலேறுதற்கு எளியஉபாயமாகு மென்பதாம். கருவல்லிக்கு மருந்து - பிறப்புக்களை இனி உண்டாகவொட்டாது தடுக்குந் திவ்யௌஷதம். கீழிடத்திலிருந்து மேலிடத்திலேறுதற்கு ஏணி இன்றியமையாக் கருவியாதல்போல நிலவுலகத்திலிருந்து மேலுலகமாகிய முத்தியுலகத்தி லேறுதற்குக் கண்ணபிரானதுபுகழ்கள் இன்றியமையாத உபாயமாமென்பது, 'ஏணியாம் மாகதிக்கு' என்றதன் கருத்து. கண்ணன் - பார்த்தசாரதியுமாம்.

இது-தொண்டைமான்சக்கரவர்த்தியின் பிரார்த்தனைப்படியே திருவேங்கடமுடையான் கண்ணனாகத் தனதுகுடும்பத்தோடு சேவைசாதித்த தலம்; இத்தலத்துப்புஷ்கரிணி - அல்லிப்பூக்கள் நிறையப்பெற்றதனால், கைரவிணியென்று வடமொழியிலும், திருவல்லிக்கேணி யென்று தென்மொழியிலும் பெயர்பெறும். இந்தப் புண்ணியதீர்த்தத்தின்பெயரே இத்தலத்திற்கும் பெயராயிற் றென்க. இது மயிலையை யடுத்திருத்தலால், மயிலைத்திருவல்லிக்கேணி யெனப் பெயர்பெறும்; இம்மயிலையே பேயாழ்வாரது திருவவதாரஸ்தலமாம். (கூச)

## உஉ. திருக்கடிகை.

சீரருளானம்மைத்திருத்திநாமுன்னறியாக்
கூரறிவுந்தந்தடிமைகொண்டதற்கே—நேரே
யொருகடிகையும்மனமே யுள்ளுகிலாய் முத்தி
தருகடிகைமாயவனைத்தான்.

(இ - ள்.) மனமே—!—சீர் அருளால் - சிறந்ததிருவருளினால், நம்மை—, திருத்தி - நல்லவழியிற் செல்லுமாறு செய்து, நாம் முன் அறியா கூர் அறிவும் தந்து - நாம் இதற்குமுன்னே அறிந்திராத நுட்பமான அறிவையும் (நமக்குக்)கொடுத்து, அடிமை கொண்டதற்கு - (நம்மை) ஆட்கொண்டதற்காக,—முத்தி தரு கடிகை மாயவனை - (தன்னையடைந்தார்க்கு) நற்கதியையளிக்குந் திருக்கடிகையென்னூர் திவ்வியதலத்தி லெழுந்தருளிய எம்பெருமானை, நேரே - நேராக, ஒரு கடிகையும் - ஒருநாழிகைப் பொழுதாவது, உள்ளுகிலாய் - நினைக்கமாட்டாய்; (எ - று.)—தான் - ஈற்றசை.

எம்பெருமான் தனது நிர்ஹேதுககிருபையினால் நம்மைத்திருத்தி நுண்ணியபகுத்தறிவைக்கொடுத்து நம்மையாட்கொண்டதற்காக, அப்பெருமா

லேச் சிறிதுபொழுதாவது சிந்திக்கலாமே! அதுவுஞ்செய்யாது செய்ந்நன்றி மறந்தவனாய் வாளா கிடக்கின்றனேயே! இது என்ன துர்ப்புத்தி? என்று தமது நெஞ்சத்தின்நிலையை இகழ்ந்தவாறு. நம்மிடத்து நன்மை சிறிதுமில்லாதிருக்கையிலும் அவ்வெம்பெருமான் வலியக் கருணைசெய்து திருத்தி நம்மை அடிமைகொண்டதற்குக் கைம்மாறு - அப்பிரான்விஷயத்தில் உபகாரஸ்மிருதி செய்யவேண்டுவதன்றி, வேறுதொழிலின்று என்பது இங்குப் போதரும்.

ஒருவர் ஒருகடிகைப்பொழுது இத்தலத்தி லுறைந்தாலும் அவர்க்கு முத்தி கிடைக்கு மாதலால், இத்தலத்திற்குக் கடிகையென்று திருநாமம்: கடிகாசல மெனப்படும். இது, சோளதேசம்போன்று வளம்மிக்கு நரஸிங்கமூர்த்தி உறைதற்கு இடமாயிருத்தல்பற்றி, சோளஸிம்ஹபுரமென்றும் வழங்கப்பெறும். சோளஸிம்ஹராஜனது புர மெனினுமாம். (கூ௬)

தொண்டைநாட்டுத்திருப்பதிகள் முற்றும்.



## வடநாட்டுத்திருப்பதிகள் - க௨.

### க. திருவேங்கடம்.

தானேசரணமுமாய்த் தானேபலமுமாய்த்
தானேகுறைமுடிக்குந்தன்மையான்—றேனேய்
திருவேங்கடந்தொழுதேந் தீயவிபூதிக்குண்
மருவேங் கடந்தனெமிவ்வாழ்வு.

(இ - ள்.) தானே—, சரணமும் ஆய் - உபாயமாகியும், தானே—, பலமும் ஆய் - உபேயமாகியும், தானே குறை முடிக்கும் தன்மையான் - தானே (அடியார்களது) மனக்குறையைப் போக்கி அவரெண்ணத்தை ஈடேற்றுந் தன்மையுடையவனாகியு மிருக்கின்ற திருவேங்கடமுடையானது, தேன் ஏய் திருவேங்கடம் - தேன்நிறைந்த (பொழில்கள்சூழ்ந்த) திருவேங்கடமென்னுந் திவ்வியதலத்தை, தொழுதேம் - வணங்கினோம்; (அதன்பயனாக), தீய விபூதிக்குள் - கொடிய இந்தலீலாவிபூதியில், மருவேம் - இனிப் பொருந்தமாட்டோம்; இ வாழ்வு - இந்த ஸாம்ஸாரிகவாழ்க்கையை, கடந்தனெம் - இனிக் கடந்துவிட்டோம்; (எ - று.)

எம்பெருமான் தன்னைச் சேர்தற்குத் தானே உபாயமாகியும், அவ்வாறு சேர்ந்தால் பயனாகியும், அவ்வாறு சேரவொட்டாமல் குறுக்கேவருகின்ற விரோதிகளை போக்கிப் பயனளிப்பவனாகியும் நிற்பனென்று அந்த எம்பெருமானது ஸ்வரூபத்தை முன்னிரண்டடிகளினால் விளக்கினர். இவ்வாறான எம்பெருமானைத் தாம் அடைக்கலமாகச் சேர்ந்ததனால், இனி இந்தஸம்ஸாரவாழ்க்கை யொழிந்து இந்த லீலாவிபூதியைவிட்டு நித்யவிபூதியாகிய மோட்சத்தைச் சேர்தல் திண்ண மென்பதாம். த்ரிபாத்விபூதியைப்போலல்லாது புலவுகைத்துன்பங்கட்கும் இடமாயிருத்தல்பற்றி, லீலாவிபூதியை 'தீயவிபூதி'

என்றார். கடந்தனெம் - தெளிவுபற்றி எதிர்காலத்தை இறந்தகாலத்தாற் கூறிய காலவழுவமைதி. (கூசு)

உ. திருச்சிங்கவேள்குன்றம்.

வாழ்குமரன்மேற்கனகவஞ்சகன்மேலோர்முகத்தே
சூழ்கருணையும்முனிவுந்தோன்றியவாற்—கேழ்கிளரு
மங்கவேள்குன்றவழல்சரபத்தைப்பிளந்த
சிங்கவேள்குன்றத்தினார்க்கு.

(இ - ள்.) கேழ் கிளரும் - நிறம்விளங்குகின்ற, அங்கம் வேள் - அழகிய தேகத்தையுடைய மன்மதன், குன்ற - சாம்பலாயழியும்படி, அழல்-(தனது நெற்றிக்கண்ணைத்திறந்து) கோபித்த, சரபத்தை - (சிவபிரானது அவதாரமாகிய) சரபமென்னும் விலங்கை, பிளந்த - பிளந்து அழித்த, சிங்கவேள்குன்றத்தினார்க்கு - சிங்கவேள்குன்றமென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளிய நரசிங்கப்பிரானுக்கு, வாழ் குமரன்மேல் - கடவுளினருள்பெற்ற பிரகலாதனென்னும் சிறுவனிடத்து, ஓர் முகத்து - ஒருபால், சூழ் கருணையும் - நிறைந்த பேரருளும்,—கனகம் வஞ்சகன்மேல்-(அவனது தந்தையான)வஞ்சனைக்குணமுடைய இரணியன்மீது, (ஓர்முகத்து - ஒருபால்), முனிவும் - கடுங்கோபமும், தோன்றிய - உண்டாயின;(எ-று.)—ஏ, ஆல்-ஈற்றசைகள்.

தனதுமெய்யடியானான பிரகலாதனை இரணியன் வருத்தியதுபற்றி அவன்மீது பெருஞ்சினமும், பெற்றதந்தை தன்னைப் பலவாறாக நலியவும் அந்நிலையிலும் தனது மெய்யன்பு மாறாமலிருந்ததுபற்றிப் பிரகலாதாழ்வான்மீது திருவருளும் நரசிங்காவதாரமூர்த்திக்கு ஒருங்கே தோன்றின வென்க; இவ்வாறு ஒன்றற்கொன்று மாறான குணங்களை ஒருங்கே எம்பெருமான்கொண்டது,அப்பிரானது ஆச்சரியகுணயோகத்தை விளக்கும்.

சரபம் - இரண்டுதலைகளையும் சிறகுகளையும் கூரியநகமுள்ளஎட்டுக்கால்களையும் மேல்நோக்கியகண்களையு முடைய தொரு மிருகவிசேடம்; இதனைப் பறவையென்றலு முண்டு. இது, சிங்கத்தை எளிதிற்கொல்லுந்திறமுடையது. வெறுஞ்சிங்கமன்றி நரசிங்க மாதலாலும், ஸாமாந்யஸிம்ஹமன்றி வரம்பிலாற்றலுடையபுருஷோத்தமனது அவதாரமான திவ்யஸிம்ஹமாதலாலும், இது சரபத்தைக் கொன்றிட்டது. இரணியனென்ற பெயர் பொன்னிறமானவனென்று பொருள்படுதலால், அதன்பரியாயநாமமாக 'கனகன்' என்றார்: இரணியம் கனகம் என்பன - பொன்னின் பெயர்கள். முதலடியில் முறைநிரனிறைப்பொருள்கோள் காண்க.

சிங்கமாகிய யாவரும் விரும்பப்படுகின்ற கட்டழகுடைய பெருமான் எழுந்தருளிய திருமலை யாதலால், சிங்கவேள்குன்றம் என்று இத்தலத்திற்குப் பெயர்: 'சிங்கவேழ்குன்றம்' என்று வழங்குதலு முண்டு: அப்போதைக்கு நரசிங்கமூர்த்திகள் எழுந்தருளியிருக்கின்ற ஏழுகுன்றங்களையுடையது எனப் பொருள் காண்க; இதுவே அஹோபில மெனப்படும். (கூஎ)

௯. திருவயோத்தி.

ஆர்க்குமிதுநன்றுதீதானாலுநெஞ்சேநீ
பார்க்கும்பலகலையும்பன்னாதே—சீர்க்குந்
திருவையோத்திப்புயலைச் சீரியமெய்ஞ்ஞானத்
துருவை யோத்திற்பொருளை யோர்.

(இ - ள்.) நெஞ்சே - (எனது) மனமே!—இது - (யான்சொல்லுகின்ற) இவ்விஷயம், ஆர்க்கும் நன்று - எல்லோர்க்கும் நல்லதே; தீது ஆனாலும் - (ஒருகால்அதனால்) தீமையேநேர்வதானாலும்,—நீ—, பார்க்கும் பல கலையும்- (உலகத்திற்) காணப்படுகின்ற பலவகைச்சாஸ்திரங்களையும், பன்னாது - கண்டபடி கற்காமல், சீரிய மெய் ஞானத்து உருவை - சிறந்த தத்துவ ஞான சொரூபியானவனும், ஓத்தின் பொருளை - வேதத்தின் அர்த்தமாகி யிருப்பவனுமாகிய, சீர்க்கும் திரு ஐயோத்தி புயலை - சிறப்புப்பொருந்திய திருவயோத்தியென்னுந்திவ்வியதலத்தி லெழுந்தருளிய காளமேகம்போலக் கருநிறமுடைய ஸ்ரீராமபிரானை, ஓர் - தியானிப்பாயாக; (எ - று.)

தர்க்கம் வியாகரணம் முதலிய உலகத்துச்சாஸ்திரங்கள் பலவற்றை யும் படித்துப் பழுதே பலபகலும்போக்காமல், தத்துவஞானஸ்வரூபியாகிய கடவுளையே தியானஞ் செய்வாயாக என்று மனத்திற்கு உபதேசித்தன ரென்க. உலகத்துவழங்குகின்ற சாஸ்திரங்களிற் பயிலுதல் வேதத்தின்நுண் ணியபொருளை உணர்தற்பொருட்டே யாதலாலும், வேதப்பொருளாகிய கடவுளை யறியாது மற்றைச்சாஸ்திரங்களிற் பயில்வது பயனற்றதாதலா லும் அதனைவிட்டு வேதப்பொருளாகிய கடவுளைத் தியானித்தலே சிறந்த செயலாகு மென்பதாம். அன்றியும், கலைகளிற்பயிலுதல் மிகவும்வருத்தமா யிருத்தலோடு புத்தியில்ஸிஷ்கர்ஷம் தோன்றாமல் புத்திசலித்தற்குங் கார ணமாயிருத்தலால் அதனைநீத்து, கடவுளை உபதேசத்தினாலுணர்ந்து வழி படுக வென்று போதித்தன ரென்க; "ஶாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேஶம் - புத்தேஃ சலநகாரணம் | உபதேஶாத் ஹரிம் புத்வா-விரமேத்ஸர்வகர்மஸு" என்ற மேற்கோள் இங்கு உணரத்தக்கது. கடவுளைத் தியானித்தலென்பது அனைவர்க்குங்கடமை யாதலால் 'ஆர்க்கும் இதுநன்று' என்றும், அவ்வாறு செய்தலில் தீதுஒன்றுமில்லை யென்பதை வற்புறுத்துதற்பொருட்டு 'தீதானா லும்' என்றும் கூறினர். திருவயோத்தியென்பது - திரிபுநோக்கி, திருவை யோத்தி என வந்தது. ஓதப்படுதலினால், வேதத்திற்கு 'ஓத்து' எனப் பெயர்.

அயோத்தி - பகைவர்களாற் போர்செய்து வெல்லமுடியாதது எனப் பெயர்பெறும்: அரண்முதலியவற்றால் மிக்கபாதுகாவலையுடையது என்பது கருத்து; இது, ஸ்ரீராமபிரானது திருவவதாரஸ்தலம்: முத்திதரும் நகர மேழனுள் ஒன்று. (௯௮)

௪. திருநைமிசாரணியம்.

ஓரறிவுமில்லாதவென்போல்வார்க்குய்யலாம்
பேரறிவுண்டேனும்பிறர்க்கரிது—பாரறிய
நைம்மிசாரண்ணியத்துநாதரடியாரோடு
மிம்மிசார்வுண்டாயினால்.

(இ - ள்.) பார் அறிய-உலகத்தார் அறியும்படி, நைமிசாரண்ணியத்து நாதர் அடியாரோடும்-திருநைமிசாரணியத்தி லெழுந்தருளிய ஸர்வஸ்வாமியினது பக்தர்களோடும், இம்மி சார்வு உண்டாயினால் - கொஞ்சமாவது சம்பந்தமேற்படுமேயாயின்,—ஓர் அறிவும் இல்லாத - சிறிதேனும்அறிவில்லாத, என் போல்வார்க்கு - என்னைப்போன்றவர்கட்கும், உய்யல் ஆம் - ஈடேறுதல்கூடும்; பிறர்க்கு -(அவ்வாறு பாகவதசம்பந்தம்பெறாத) மற்றையோர்க்கு, பேர் அறிவு உண்டு எனும் - விசேஷஞானம் உளதாயினும், அரிது - (ஈடேறுதல்) முடியாத காரியமாகும்; (எ - று.)

வீடுபேற்றுக்கு அறிவு பிரதானகாரண மன்று; பாகவதசம்பந்தமே முக்கியமானகாரண மென்பதாம். "ஜ்ஞாந அநுஷ்டாநங்களை யொழிந்தாலும் பேற்றுக்கு அவர்கள்பக்கல் ஸம்பந்தமே அமைகிறாப்போலே" என்கிற ஸ்ரீவசநபூஷணமும், "பகவல்லாபஹேதுவான தத்வஜ்ஞாநமும், ததநுரூப [அந்தஞானத்திற்குஏற்ற] அநுஷ்டாநமு மின்றிக்கே யொழிந்தாலும் பகவல்லாபத்துக்கு "பஶுர்மநுஷ்ய: பக்ஷீவா - யேசவைஷ்ணவஸம்ஶ்ரயா: | தேநைவதேப்ரயாஸ்யந்தி - தத்விஷ்ணோ:பரமம்பதம் [பசுவாயிருந்தாலும் மநுஷ்யனாயிருந்தாலும் பக்ஷியாயிருந்தாலும் யாராயிருந்தாலும் ஸ்ரீவைஷ்ணவர்களை யாஶ்ரயித்தவர் - அந்தஸம்பந்தத்தினாலேயே அந்தவிஷ்ணுவினுடைய பரமபதத்தைச் சார்வர்]" என்றும், "யம்யம்ஸ்ப்ருஶதிபாணிப்யாம் - யம்யம்பஶ்யதி சக்ஷுஷா | ஸ்தாவராண்யபிமுச்யந்தே - கிம்புநர்பாந்தவா ஜநா: [விஷ்ணுபக்தனது ஸ்பர்ஶம் நேரிட்டாலும் பார்வைக்கு இலக்கானாலும் ஸ்தாவரங்களும் மோக்ஷம்பெறும்; அப்படியிருக்க, பந்துக்களைப் பற்றிச் சொல்லவேண்டுமோ?]" என்றும் சொல்லுகிறபடியே பாகவதஸம்பந்தமே நிரபேக்ஷஸாதநமாகிறாப்போலே" என்ற அதன்வியாக்கியானமும் இங்குக் காணத்தக்கன. (பாகவதர்கட்கு இடைவழியில் இளைப்புத்தீருமாறு நிழல்கொடுத்து உதவின புளியமரமொன்று ஸ்ரீமணவாளமாமுனிகளின் திருவருளால் முத்திபெற்ற வரலாறு இங்குக் கருதத்தக்கது.)

ஒருகாலத்தில் முனிவர்கள் 'தவஞ்செய்தற்குச் சிறந்த இடம் நிலவுலகத்தில் யாது?' என்று தங்களுக்கு விளக்கிக்காட்டுதற்பொருட்டுப் பிரமனை வேண்டியபோது, அம்முனிவர்க்கு, அப்பிரமதேவன் தான் ஒருதருப்பையை யாழியைச்செய்து மண்ணுலகத்திலுருட்டி அது சென்று நின்றஇடத்தையே சிறந்ததென்று காட்டினனாதலால், அதற்கு இடமான இத்தலம் நைமிசமெனப் பெயர்பெற்றது. நைமிசம் - நேமிவிழுந்த இடம். (கக)

## ரு. திருச்சாளக்கிராமம்.

உண்டாமுறைமையுணர்ந்தடிமைப்பேர்பூண்டேன்
பண்டாங்குடிகுலத்தாற்பன்மதத்தாற்—கொண்டாட்டா
லாளக்கிராமத்தாலல்லற்பேர்பூணுமற்
சாளக்கிராமத்தார்தாட்கு.

(இ - ள்.) பண்டு ஆம் - தொன்றுதொட்டுவருகிற, குடி (ஆல்) - குடியினாலும், குலத்தால் - குலத்தினாலும், பல் மதத்தால் - பலவகையாகவுள்ள

மதத்தினாலும், கொண்டாட்டால்-(தாம்தாம்செய்யுந் தொழில்முதலியவற்றா லுண்டாகின்ற) ஏற்றத்தினாலும், ஆள் அ கிராமத்தால் - உரிமைகொண்டு வசிக்கிற தம்தமது கிராமத்தினாலும், அல்லல் பேர் பூணாமல் - துன்பத்திற்கு இடமாகிய பெயரை வைத்துக்கொள்ளாமல்,—சாளக்கிராமத்தார் தாட்கு-சாளக்கிராமமென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளியுள்ள திருமாலினது திருவடிகளோடு, உண்டாம் - பொருந்திய, முறைமை - சம்பந்தத்தை, உணர்ந்து - ஆராய்ந்து தெரிந்துகொண்டு, அடிமை பேர் - (அப்பெருமானுக்கு) அடியவனென்கின்ற பேரை [தாஸ்யநாமத்தை], பூண்டேன் - வைத்துக் கொண்டேன்; (எ - று.)

குடி முதலியவற்றால் வருகின்ற பேர்கள் அகங்காரத்திற்கே இடனாகி அழிதற்கே யுரியனவாதலோடு தாமும் நிலையாதன வாதலால் அவற்றை நல்லாசிரியரது உபதேசம் முதலியவற்றால் அறநீத்து, ஆத்மாவுக்கு நிலைநின்றபேராகிய ஸ்ரீவைஷ்ணவதாஸனென்கின்ற அடிமைப்பேரைப் பூண்டு கொண்டேனென்று தாம் நல்லுணர்ச்சிபெற்றிருத்தலை இப்பாசுரத்தால் தெரிவிக்கின்றன ரென்க. "அஹங்காரமாகிற ஆர்ப்பை [மாலிந்யத்தை]த் துடைத்தால் ஆத்மாவுக்கு அழியாத பேர் அடியா னென்றிற. க்ராம குலாதிகளால் வரும் பேர் அநர்த்தஹேது" என்ற ஸ்ரீவசநபூஷணவாக்கியங்கள் இங்குக் கருதத்தக்கன. குடி குலம் முதலியவற்றால் வரும் பெயர்கள் உடலைப்பற்றி வருவன வாதலால், அவற்றிற்கும் ஆத்துமாவுக்கும் யாதொருதொடர்பு மில்லாது நின்று உடலொழியும்போது அவை தாமும் ஒழியும்; ஆகலான், அவற்றால் ஆத்மாவுக்கு எவ்வகைப்பயனும் விளையாது; அடிமைப்பேரோ என்றும் உளதாகையால் அதனையுணர்ந்து பூண்டோர்க்கு எம்பெருமானது பேரருள் சித்திக்கு மென்க. இங்ஙனம் குலம் குடி முதலியவற்றால் வரும் பேர்கள் கேவலம் அகங்காரத்திற்கே காரணமாய் ஸ்வரூப ஹாநியையு முண்டாக்கு மென்பார் 'அல்லற்பேர்' என்றார். குடியென்பது-பிறந்த வமிசம்: குடியால்வரும் பேராவன - கந்தாடையார் ப்ரதிவாதிபயங்கரத்தார் சக்கரவர்த்தியார் என்றாற் போல்வன. குலம் - வர்ணம்: குலத்தால்வரும் பேராவன - பிராமணன் க்ஷத்திரியன் என்றாற் போல்வன. மதத்தால் வரும்பேராவன - சைவன் வைஷ்ணவன் என்றாற்போல்வன. கொண்டாட்டால்வரும் பேராவன - சதாவதானி மஹோபாத்யாயன் சமயகோளரி மகாபண்டிதன் என்றாற்போல்வன. கிராமத்தால் வரும் பேராவன - திருமலையார் நாவற்பாக்கத்தார் என்றாற் போல்வன. (கoo)

சூ. திருவதரியாச்சிரமம்.

தாட்கடிமையென் றுதமையுணரார்க்கெட்டெழுத்துங்
கேட்கவெளியிட்டருளுங்கேசவனை—வேட்கையொடு
போவதரிதானாலும்போய்த்தொழுவோ நெஞ்சமே
மாவதரியாச்சிரமத்து.

(இ - ள்.) நெஞ்சமே - (எனது)மனமே!—தாட்கு - (தனது)திருவடிகட்கு, அடிமை என்று - அடிமைப்பட்டவரென்று, தமை - தங்களது ஸ்வ

ரூபத்தை, உணரார்க்கு - அறியாத இவ்வுலகத்தவர்க்கு, எட்டு எழுத்தும் - (ஆத்மாவினது ஸ்வரூபத்தை உள்ளபடிஉணர்த்துவதான) திருவஷ்டாக்ஷர மகாமந்திரத்தை, கேட்க - காதிற்படும்படி, வெளியிட்டு அருளும் - கருணையோடு வெளியிட்ட, கேசவனை - திருமாலை,—போவது அரிது ஆனாலும் - யாத்திரைசெய்வது வருத்தமுடையதாயிருந்தாலும், மா வதரியாச்சிரமத்து -சிறந்தபதரிகாச்சிரமமென்னும் திவ்வியதலத்தில், வேட்கையொடு - பக்தியுடனே, போய்—, தொழுவோம் - வணங்குவோம்; (எ - று.)

முன்னொருகாலத்தில் குருசிஷ்யக்கிரமத்தை உலகத்தில் அனைவர்க்கும் விளக்குதற்பொருட்டு நரனென்னும் ஶிஷ்யனும் நாராயணனென்னுங் குருவுமாகப் பதரிகாச்சிரமத்தில் திருமால் தோன்றி, சிஷ்யனுக்குக் குரு திருமந்திரத்தை உபதேசித்தருளி, தன்னை உணராத உலகோர்க்குத் தான் அறிந்ததொடர்பையே பற்றாசுஆகக்கொண்டு ஈடேறுதற்கு ஏற்றவழியைக் காட்டியருளியதனால், அப்பெருமானெழுந்தருளியிருக்கின்ற தலம்போய்த் தொழுதற்குஅரியதாயிருந்தாலும், அப்பிரான்செய்த உபகாரஸ்மிருதியால் அங்குஅருமைப்பட்டாயினுஞ் சென்று அப்பிரானைத் தொழுது உய்வுபெற வேண்டுமென்று தமதுநெஞ்சிற்கு அறிவுறுத்துகின்றன ரென்க. "நாராயணனாயுலகத்தறநூல், சிங்காமைவிரித்தவன்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரமும், "ஸம்ஸாரிகள் தங்களையும் ஈஶ்வரனையும் மறந்து ஈஶ்வரகைங்கர்யத்தையு மிழந்து இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேஶ்வரன் தன் க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ் சேரும்படி தானே ஶிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான். ஶிஷ்யனாய் நின்றது, ஶிஷ்யனிருக்கும் இருப்பு நாட்டார் அறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக" என்ற முமுக்ஷுப்படியும் இங்குக் காணத்தக்கன. திருமாலால் வெளியிடப்பட்ட திருமந்திரம் ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி காட்டவல்லதென்பார் 'தமையுணரார்க்கு எட்டெழுத்துங் கேட்க வெளியிட்டருளுங் கேசவன்' என்றார். எட்டெழுத்து - திருவஷ்டாக்ஷரம்.

பதரிகாஶ்ரமம் என்ற வடசொல் திரிந்துவந்தது; (பதரி - இலந்தை மரம்.) இலந்தைமரங்களடர்ந்த ஆஶ்ரமமென்பது, பொருள்: இது - இமயமலையி லுள்ளது; அதுபற்றியே, 'போவதரிதானாலும்' என்றார். (௧0௧)

எ. திருக்கங்கைக்கரைக்கண்டம்.

மத்தாற்கடல்கடைந்துவானோர்க்கமுதளித்த
வத்தா வெனக்குன்னடிப்போதிற்—புத்தமுதைக்
கங்கைக்கரைசேருங்கண்டத்தாய் புண்டரிக
மங்கைக்கரைசே வழங்கு.

(இ - ள்.) மத்தால் - (மந்தரமலையாகிய) மத்தினாலே, கடல் கடைந்து - திருப்பாற்கடலைக்கடைந்து, வானோர்க்கு - தேவர்களுக்கு, அமுது அளித்த - அமிருதத்தைக் கொடுத்தருளிய, அத்தா - தலைவனே! புண்டரிக மங்கைக்கு அரைசே - செந்தாமரைமலரில் வாழ்கின்ற பெரியபிராட்டியார்க்குத்

தலைவனே! கங்கை கரைசேரும் கண்டத்தாய்-கங்கைநதிக்கரையிற்பொருந்திய கண்டமென்னுங் கடிநகரி லெழுந்தருளியிருப்பவனே!—எனக்கு - அடியேனுக்கு, உன் அடி போதின் புது அமுதை - உனது திருவடித்தாமரையில்) தோன்றுகின்ற புதிய அமிருதத்தை, வழங்கு - கொடுத்தருள்வாயாக;(எ-று.

இதனால், ஐயங்கார், எம்பெருமானை நோக்கி, உனது திருவடிகளின் போக்யதையை அனுபவிக்குமாறு எனக்குநல்லறிவைத்தந்தருள்வாயென்று பிரார்த்திக்கின்றனர். "தேனேமலருந் திருப்பாதம்," "விஷ்ணோ: பதே பரமேமத்வஉத்ஸ: [விஷ்ணுவினது சிறந்ததிருவடிகளிலே தேனின்பெருக்கு உள்ளது]" என்றபடி எம்பெருமானது திருவடிகளில் போக்யதை விஞ்சியிருக்குமென்க. பாற்கடலைக் கையினால் வருந்திக் கடைந்து அதனினின்று எழுந்த அமிருதத்தைப் பிரயோஜநாந்தரபரரான தேவர்கட்குக் கொடுத்தது போலன்றி,அநந்யப்ரயோஜநனான அடியேனுக்கு உன் திருவடிகளினிடத்து இயற்கையாகவேயுள்ள இனிமையைத் தருவது மிகவும் எளிதாகுமென்ற கருத்து, 'மத்தாற் கடல்கடைந்து வானோர்க்கு அமுதுஅளித்த அத்தா! எனக்கு உன்னடிப்போதிற் புத்தமுதை வழங்கு' என்ற தொடரில் தோன்றும். அமுதம் வேண்டுமென்று பிரார்த்தியாத தேவர்கட்கு அதனை உண்டாக்கி யளித்த நீ அதனைவேண்டுகின்ற எனக்கு இயற்கையாக உன்னிடத்திலுள்ள அதனை அளிக்கலாகாதோ? சமயம் வந்தபோதுமாத்திரம் காலைக் கட்டிக் காரியங்கொண்டு மற்றைச்சமயங்களில் விலகிநிற்பவர்க்குத்தான் உதவவேண்டுமோ? எப்போதும் உன்னையே அணுகிநின்று உன்னாலல்லது மற்றையாவராலும் ஒன்றுங்குறைவேண்டாத எனக்கு உதவலாகாதோ? என்பவைமுதலிய கருத்துக்களும் இங்குத்தொனிக்கும். புத்தமுது என்றது - எத்துணைக்காலம் அனுபவித்தாலும் தெவிட்டுதலில்லாது மேன்மேலும் இன்சுவைபயப்பதும், 'தேவாமிருதம்போல அசுரர்கள் கைக்கொள்ளப்புகுகிறார்களே!' என்று அஞ்சவேண்டாததுமாகிய அமிருத மென்றபடி.

இத்தலம் இப்பொழுது தேவப்ரயாகை யென்று வழங்குகின்ற தென்பர். புண்டரீகமங்கையென்பது - இத்தலத்துநாச்சியார்திருநாமம். (௧0௨)

அ. திருப்பிருதி.

வழங்குமுயிரனைத்தும்வாரிவாய்ப்பெய்து
விழுங்குங்கவந்தன்விறற்றோட்—கிழங்கைப்
பொருப்பிருதிக்குங்கிடந்தாற்போற்றுணித்துவீழ்த்தான்
றிருப்பிருதிக்கென்னெஞ்சேசெல்.

(இ - ள்.) என் நெஞ்சே - எனது மனமே!—வழங்கும் உயிர் அனைத்தும் - சஞ்சரிக்கின்ற எல்லாப்பிராணிகளையும், வாரி -(தனது இரண்டு கைகளாலும் ஒருசேரத்) திரட்டியெடுத்து, வாய் பெய்து - (தனது) வாய்க்குள் தள்ளி, விழுங்கும் - விழுங்குந்தன்மையுள்ள, கவந்தன் - கபந்தனென்னும் அசுரனது, விறல் தோள் கிழங்கை - வலிமையுள்ள தோள்களின் மூலபாகத்தை, பொருப்பு இரு திக்கும் கிடந்தால் போல் - மலை இரண்டுபக்கத்திலும்

வீழ்ந்து கிடந்ததுபோலக் (கிடக்கும்படி), (இராமாவதாரத்தில்) துணித்து வீழ்த்தான்-வெட்டித்தள்ளிய திருமாலினது, திருப்பிருதிக்கு - திருப்பிருதி யென்னுந் திவ்வியதலத்திற்கு, செல் - நீ சென்று சேர்வாயாக; (எ - று.)

திருமாலினது திருப்பிருதியென்னுந் திவ்வியதலத்தைப் போய்ச்சேர்ந் தாயாயின், உனது சகலவிரோதிகளும் போய் நற்கதிபெறுவது திண்ண மென்பது,கருத்து. இராமபிரான் கவந்தனது வலத்தோளையும்,லக்ஷ்மணன் அவனது இடத்தோளையும் வெட்டித் தள்ளியதாக ஸ்ரீராமாயணத்திற் கூறி யிருக்க,இங்கு இவ்வாசிரியர் கவந்தனது இருதோள்களையும் இராமபிரானே வெட்டித்தள்ளியதாகக் கூறியது - "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்றபடி லக்ஷ்மணனை இராமபிரானது வலக்கையாகக் கூறியிருப்பதுகொண்டு அவ் விலக்குமணனது செயலையும் இராமபிரானது செயலாகவே கொண்டதனு லாருமென்க: இது, ஒருவகைஉபசாரவழக்கின்பாற்படு மென்னலாம். கவந் தனதுதோள்கள் யோசனைதூரம் நீண்டிருந்தன வாதலால் அவை வெட்டப் பட்டுக் கீழ்வீழ்ந்துகிடந்ததற்கு - இருபொருப்புக்கள் கீழ்வீழ்ந்திருத்தலை உவமை கூறினர். தோட்கிழங்கு - புஜமூலம். (கoரு)

கூ. திருவடமதுரை.

செல்வமுயிருடம்புசேரவுரித்தாக்கி
வல்வினையினீங்குமினோ மாந்தர்கா—டொல்லை
வடமதுரையான்கழலேவாய்த்ததஞ்சமென்று
திடமதுரைசெய்தான்றிறத்து.

(இ-ள்.) மாந்தர்காள் - மனிதர்களே!—(அனைவர்க்கும்),'கழலே - எனது திருவடிகள்தாம், வாய்த்த தஞ்சம் - பொருந்திய ரக்ஷகமாகும்,' என்று—, திடம்அது உரைசெய்தான் - உறுதியாக உபதேசித்தவனும், தொல்லை வட மதுரையான் திறத்து - பழமையான [முதற்கடவுளான] வடமதுரையிற் பிறந்தவனுமாகிய பெருமானிடத்தில்,—செல்வம்-(நுமது) செல்வங்களையும், உயிர் - பிராணனையும், உடம்பு - உடம்பையும், சேர - ஒருசேர, உரித்து ஆக்கி - உரியனவாகச் சமர்ப்பித்து, வல் வினையின் நீங்குமின் - வலிய இரு வினைத் தொல்லைகளினின்று நீங்குங்கள்; (எ - று.)

கர்மம் ஜ்ஞாநம் பக்தி ப்ரபத்தி முதலிய உபாயங்களையெல்லாம் ஒழித் துத் தனதுதிருவடிகளையே தஞ்சமாகப்பற்றும்படி உபதேசித்த ஸ்ரீக்ருஷ்ண பகவான்திறத்தில் உமது உடல் பொருள் ஆவி அனைத்தையும் ஒருசேர அர்ப்பணம்பண்ணி, அப்பிரானருளால் இருவினைத் தொல்லைகளினின்றும் நீங்கி உய்வுபெறுவீர்களென்று உலகத்தார்க்கு உபதேசித்தவாறு. "ஸர்வதர் மாந் பரித்யஜ்ய - மாமேகம்ஶரணம்வ்ரஜ" என்று அப்பிரான் சரமஶ்லோ கத்தில் தன்னையே ரக்ஷகமாக அடையுமாறு கூறியிருக்கவும், மோக்ஷபூதன் இழியுந் துறை மோக்ஷியின் திருவடிகளே யாதலால், 'கழலே வாய்த்ததஞ்ச மென்று திடமது உரைசெய்தான்' என்றார். திடம்=த்ருடம்: அது - பகுதிப் பொருள்விகுதி. செல்வமுயிருடம்பு உரித்தாக்கி - பன்மையொருமை வழு வமைதி.

இது - ஸ்ரீகிருஷ்ணபகவானது திருவவதாரஸ்தலம்; முத்திதரும்நகர மேழனுள் இதுவும்ஒன்று. கண்ணுக்கு மதுரமாயிருத்தலாலும், மதுவென்ற அசுரனை யழித்த இடமாதலாலும், இதற்கு மதுரையெனப் பெயர்வந்த தென்பர். (க0ச)

## க0. திருத்துவாரகை.

திறந்திறமாத்தாந்துய்க்குந்தீஞ்சுவையைநாடி
யறந்திறம்பிப்பாதகரோரைவர்—நறுந்துளவ
மாதுவரையோனே மனந்துணையாக்கொண்டென்னைக்
காதுவரையோமெய்கலந்து.

(இ - ள்.) நறுந் துளவம் - நறுமணமுடைய திருத்துழாய்மாலையைத் தரித்த, மா துவரையோனே - பெருமைபெற்ற துவாரகையென்னுந் திவ்வியதலத்தை வாழுமிடமாகக்கொண்டவனே!—பாதகர் ஓர் ஐவர் - மிகக் கொடிய பாதகங்களைச்செய்வதற்குக் காரணமாய்நிற்கின்ற பஞ்சேந்திரியங்கள், திறம்திறம் ஆ - விதம்விதமாக, தாம் துய்க்கும் - தாம் அனுபவித்தற்கு உரிய,தீஞ்சுவையை-இன்சுவையுள்ளபொருள்களை, நாடி - தேடிக்கொண்டு, அறம் திறம்பி - தருமமார்க்கத்தினின்று தவறி, மனம் துணை ஆ கொண்டு-(எனது) மனத்தை(த் தமக்கு) உற்றதுணையாகக்கைக்கொண்டு, மெய் கலந்து - எனதுஉடலிற் பொருந்தி, என்னை—,காதுவர்-இடைவிடாது வருத்துவார்கள்; ஐயோ—! (எ - று.)

"மனமாரு மோரைவர்" என்றபடி கொடிய பஞ்சேந்திரியங்கள் மனத்தைத் தமக்கு உற்றதுணையாகக்கொண்டு சரீரத்திற்கு உள்ளாகவே இருந்து தம்தமக்குஉரிய விஷயங்களில் விரும்பி என்னுயிரை வருத்திக் கொல்கின்றன; இவற்றை உனதுஅருளென்னுந் தண்டா லடித்து வலியொடுக்கி நற்கதி யளிக்க வேண்டு மென்பதாம். எம்பெருமான் சேதநர்கள் தன்னையுணர்ந்து வழிபட்டு ஈடேறுதற்பொருட்டே கரணகளேபரங்களை அவர்கட்கு அளித்திருக்க,இந்திரியங்கள் அவ்வெம்பெருமானை வழிபடுதற்கு இசையாது மனத்தைத் துணைக்கொண்டு வேறுவழியிற் செல்லுதலால் 'பாதகர்ஓரைவர் அறந்திறம்பிக் காதுவர்' என்றார். பஞ்சேந்திரியங்கள் புறம்பே விலகிநின்றால் ஒருவாறு உய்தல்கூடும்; உள்ளேபுகுந்து உற்றதுணைவர் போன்று உயிரை வருத்துதலால், உய்யும் வகை யில்லை யென்பது, 'காதுவரையோ மெய்கலந்து' என்பதன் கருத்து; "புறப்பகைகோடியின் மிக்குறினு மஞ்சார், அகப்பகையொன்றஞ்சிக் காப்ப" என்றது காண்க. 'திறந்திறமாத் தாம்துய்க்குந் தீஞ்சுவை' என்றது - மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பஞ்சேந்திரியங்களும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐவகைப்புலன்களைத் தமக்கு விஷயமாகக் கொண்டிருத்தலால் என்க. செறலினால் 'ஐவர்' என அஃறிணையை உயர்திணையாக் கூறினர்.

துவரை - த்வாரகா என்ற வடசொல்லின் சிதைவு: அகன்ற துவாரத்தையுடையது எனக் காரணப்பொருள்படும். இதுவும் முத்திதரும் நகரமேழனுள் ஒன்று. இந்நகரம் - காலயவனன் பெருஞ்சேனையோடு வடமது

ரையை முற்றுகைசெய்தபோது அவனால் யாதவர்க்கு எங்குத் தீங்குவருமோ? என்ற கருத்தினால் ஸ்ரீகிருஷ்ணபகவான் சமுத்திரத்தினிடையே அவ்யாதவரைப் பாதுகாக்குமாறு ஏற்படுத்தி அரசாண்ட நகரம். "பதினாறுமாயிரவர் தேவிமார் பணிசெய்யத் துவரையென்னும், மதில் நாயகராகிவீற்றிருந்த மணவாளர்" என்பது, பெரியார்பாசுரம். (க0ரு)

கக. திருவாய்ப்பாடி.

கலந்தமரரோடுங்கரைகண்டாரோடும்
பொலிந்துதிருநாட்டிருக்கப்போவீர்—மலிந்தபுக
ழண்டராய்ப்பாடியமலரடியாரடியார்
தொண்டராய்ப்பாடித்தொழும்.

(இ - ள்.) (உலகத்தவர்களே!)—மலிந்த புகழ் - நிறைந்த கீர்த்தியையுடைய, அண்டர் - இடையர்கள்வாழ்கின்ற, ஆய்ப்பாடி - திருவாய்ப்பாடியென்னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளியிருக்கின்ற, அமலர் - குற்றமற்ற கண்ணபிரானது, அடியார் அடியார் தொண்டர் ஆய் - தாஸஅநுதாஸர்க்கு அடிமைப்பட்டவராய், பாடி - (அவரது குணங்களைப்) பாடி, தொழும் - (அவரை) வணங்குங்கள்; (அவ்வாறு வணங்கினால்),—அமரரோடும் - நித்யஸூரிகளோடும், கரைகண்டாரோடும் - (இவ்வுலகத்தினின்று) அக்கரை சேர்ந்தவரான முக்தர்களோடும், கலந்து - ஒருசேரக்கலந்து, பொலிந்து - சிறப்புப்பெற்று, திருநாடு - பரமபதத்தில், இருக்க - அழிவின்றி இருக்கும்படி, போவீர் - செல்வீர்கள்; (எ - று.)

திருமால் ஸ்ரீகிருஷ்ணனாகத் திருவவதரித்து விளையாடின இடமாகிய திருவாய்ப்பாடியி லுள்ள அடியாரின் அடியார்கட்கு அடியவராகி அவரது குணங்களைப் பாடித் துதித்தால், அதன்பயனாக, நீங்கள் ஸ்ரீவைகுண்டலோகத்தில் அநாதியாய் வாழ்கின்ற நித்யஸூரிகளோடும் ஸம்ஸாரத்தினின்று வீடுபெற்றுச்சென்ற முக்தரோடும் ஒருகோவையாகக்கலந்து பேராநந்தமநுபவிக்கப்பெறுவீ ரென்று உலகத்தோர்க்கு உபதேசித்தவாறு: இச்செய்யுளால், பாகவதசேஷத்தின் சிறப்பைக் கூறின ரென்க.

அமரர் - என்றும் மரணமில்லாதவர்: நித்யஸூரிகள் எனப்படுவர்: அவராவார் - அநந்த கருட விஷ்வக்ஸேநர் முதலியோர். கரைகண்டோர் - எம்பெருமானது நிர்ஹேதுககிருபையினால் தத்துவஞானம் தோன்றப்பெற்று ஸாம்ஸாரிகஸகலபாபங்களையும் ஒழித்து முக்தியிற் சேர்ந்தவர்கள்; "கரைகண்டோர், துளக்கமில்லாவானவர்" என்றார் நம்மாழ்வாரும். இங்கு, 'கலைகண்டார்' என்ற பாடம் சாஸ்திரங்களில்வல்லவரெனப் பொருள்படுமாயினும், இனிதுபொருந்தாமை உணர்க. அண்டர் ஆய்ப்பாடி அமலர் என்பதற்கு - இடையர்களது ஆய்ப்பாடியில் தோன்றிய குற்றமற்ற பாகவதர் என்றும், அண்டராகிய ஆய்ப்பாடியமல ரென்றும் பொருள்கூறினுமாம்.

ஆய்ப்பாடி - இடையர்கள்வசிக்கின்ற சேரி யெனப் பொருள்படும்; 'கோகுலம்' என்று வடமொழியில் வழங்கப்பெறும். (க0சு)

௧௰. திருப்பாற்கடல்.

தொழும்பாயநானல்லசூதறிந்துகொண்டேன்
செழும்பாயலைமுத்தஞ்சிந்தி—முழங்குந்
திருப்பாற்கடலான்றாள்சேர்ந்தாரடிசேர்ந்
திருப்பாற்கடலாமிடர்.

(இ - ள்.) தொழும்பு ஆய-(எம்பெருமானுக்கு)அடியவனாகிய, நான்—, நல்ல சூது - நல்ல உளவை, அறிந்துகொண்டேன்—; (அதாவது),—செழும் பாய் அலை - செழித்த பாய்கின்ற அலைகளினால், முத்தம் சிந்தி - முத்துக் களைக் கொழித்து, முழங்கும் - ஒலிக்கின்ற, திருப்பாற்கடலான் - திருப் பாற்கடலென்னுந் திவ்வியதலத்தி லெழுந்தருளிய க்ஷீராப்திநாதனது, தாள் - திருவடிகளை, சேர்ந்தார் - உபாயமாகவடைந்த பாகவதர்களது, அடி - திருவடிகளை, சேர்ந்து இருப்பாற்கு - தஞ்சமாகப்பற்றிக் கவலையற்று இருப்பவனுக்கு, இடர் - பிறவித்துன்பங்களையெல்லாம், அடல் ஆம் - ஒழித்தல் எளிதிற்கூடும் (என்பதே); (எ - று.)

பாகவதர்களின் திருவடிகளை யாச்ரயித்தலே பிறவித்துன்பங்கள் யாவும்ஒழிந்து எளிதில்ஈடேறுதற்குஉரிய உபாயமென்பதனை யான்அறிந்து கொண்டு கடைப்பிடிக்கலானே னென்பதாம். அற்பச்செயலாற் பெரும் பேறு சித்திக்கும் உபாய மாதலால், 'நல்லசூது' என்றார்.

எம்பெருமானது ஐவகைநிலைகளுள், திருப்பாற்கடலி லெழுந்தருளி யிருப்பவன் வியூகமூர்த்தியாவன்; "வ்யூஹமாவது - ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம் ஹாரார்த்தமாகவும், ஸம்ஸாரிஸம்ரக்ஷணார்த்தமாகவும், உபாஸகாநுக்ரஹார் த்தமாகவும் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த ரூபேண நிற்கும் நிலை".(௧௦எ)

வடநாட்டுத்திருப்பதிகள் முற்றும்.

---

திருநாட்டுத்திருப்பதி - ௧.

இடருடையேன்சொல்லவெளிதோ பிரம
னடரும்விடையோர்க்குமரிதே—தொடருங்
கருவைகுந்தம்பிறவிக்கட்டறுத்துமீளாத்
திருவைகுந்தம்பெறுவார்சீர்.

(இ - ள்.) தொடரும் - (இருவினைப்பயன்காரணமாகத்) தொடர்ந்து வருவதும்,கரு வைகும் - சர்ப்பத்தினிடத்திற் பிரவேசிப்பதற்குக் காரணமா னதுமான, தம் பிறவி கட்டு - தமது ஜந்மபந்தத்தை, அறுத்து - (எம்பெரு மானது திருவருளால் அடியோடு) ஒழித்து, மீளா - (தன்னிடத்துச்சேர்ந்த வர்கள்) திரும்பிவருதலில்லாததாகிய, திரு வைகுந்தம் - ஸ்ரீவைகுண்ட லோகத்தை, பெறுவார் - அடையப்பெறுபவர்களது, சீர் - சிறப்பானது,— பிரமன் - பிரமதேவனுக்கும், அடரும் விடையோர்க்கும் - போர்செய்யுந்

தன்மையுள்ள ருஷபத்தை வாகனமாகவுடைய சிவபெருமானுக்கும், அரிது- சொல்லமுடியாதது; (என்றால்),—இடர் உடையேன் - ஸம்ஸாரத்தில் மிக வும்உழலுகின்ற யான், சொல்ல-புகழ்ந்துகூறுதற்கு, எளிதோ - எளியதாகு மோ? (எ - று.)

"முதலாவார் மூவர்" என்றபடி திருமாலோடு சேர்த்து எண்ணப்படு கின்ற பிரமருத்திரராகிற மற்றையிருமூர்த்தியராலுமே ஸ்ரீவைகுண்டலோ கத்தை யடைந்த முக்தர்களின் பெருமை சொல்லமுடியா தென்றால், கேவ லம் ஸம்ஸாரத்தில் உழலுகின்ற ஜ்ஞாநஹீநனை என்னால் எவ்வாறு சொல் லப்போகு மென்பதாம்; இங்குக் கைமுதிகநியாயத்தினால் [கைமுதிகநியாய மாவது - ஓர்எலி தண்டத்தை விழுங்கியதென்றால் அதிற்கட்டப்பட்டிருந்த அபூபமும் [பக்ஷணமும்] விழுங்கியமை பெறப்படுவதுபோல்வது.] பிரமருத் திரர்க்கே திருவைகுந்தம் பெறுவார் சீர் சொல்ல அரிதாயின் என்னால் எவ் வாறு சொல்ல முடியு மெனக் கூறியது - தொடர்நிலைச் செய்யுட்பொருட் பேறணியாம்.

இது - திருமாலினது ஐவகைநிலைகளுள் பரத்வம் விளங்குந் தானம். "பரத்வமாவது - அகால கால்யமான நலமந்தமில்லதோர்நாட்டிலே நித்ய முக்தர்க்குப் போக்யனாய்க்கொண்டு எழுந்தருளியிருக்கும் இருப்பு." இது வே - பரமபதமெனவும், நித்தியவிபூதி யெனவும்படும். (௧0௮)

திருநாட்டுத்திருப்பதி முற்றும்.

---

மண்ணிலரங்கமுதல்வைகுந்தநாடளவு
மெண்ணுதிருப்பதிநூற்றெட்டினையு—நண்ணுவார்
கற்பார்துதிப்பார்கருதுவார்கேட்டிருப்பார்
பொற்பாதமென்றலைமேற்பூ.

(இ - ள்.) மண்ணில் அரங்கம் முதல் -நிலவுலகத்திலுள்ள திருவரங்கம் பெரியகோயில் முதலாக, வைகுந்தம் நாடு அளவும் - பரமபதநாடு வரையி லும், எண்ணு திருப்பதி நூற்றெட்டினையும் - நன்குமதிக்கப்படுகின்ற நூற் றெட்டுத் திருமால்திருப்பதிகளையும், நண்ணுவார் - சென்று சேர்பவர்களும, கற்பார் - (வாயினால்) சொல்லுபவர்களும், துதிப்பார் - தோத்திரஞ்செய்பவர் களும், கருதுவார் - மனத்தினால் நினைப்பவர்களும்,கேட்டு இருப்பார் - (பிறர் சொல்லக்) கேட்டிருப்பவர்களுமாகிய பரமபாகவதர்களது, பொன்பாதம் - அழகிய திருவடிகள், என் தலைமேல் பூ - நான் முடிக்கு அணியாகச் சூடும் மலர்களாகும்; (எ - று.)

நூற்றெட்டுத்திருமால்திருப்பதிகளைப்பற்றி யாத்திரைமுதலியன செய் கின்ற அடியவர்களது திருவடித்தாமரைகளை முடிமேற்கொள்வே னென்ப தாம். "நூலோதி வீதி, வாழியெனவருந்திரளை வாழ்த்துவார்தம் மலரடிஎன் சென்னிக்கு மலர்ந்தபூவே" என்றது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

பதின்மருரைத்தபதியொருநூற்றெட்டுந்
துதிசெய்யவந்தாதிசொன்னான்—அதிக
குணவாளபட்டரிருகோகனகத்தாள்சேர்
மணவாளதாசன்வகுத்து.

(இ - ள்.) அதிகம் குணம் ஆளர் பட்டர் - மிக்க நற்குணங்கள் வாய்ந்தவரான பெரியபட்டரது,இரு கோகனகம் தாள் - தாமரைமலர்போன்ற திருவடித்தாமரைக ளிரண்டையும், சேர் - (தஞ்சமென்று) பற்றின, மணவாள தாசன் - அழகியமணவாளதாசன்,—பதின்மர் உரைத்த - ஆழ்வார்கள் பதின்மரும் மங்களாசாசனஞ்செய்தருளிய, பதி ஒரு நூற்றெட்டும் - திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகளையும், துதி செய்ய - தோத்திரஞ் செய்யுமாறு, வகுத்து-(சோழநாடு முதலியனவாகப்) பகுத்துக்கொண்டு, அந்தாதி சொன்னான் - இந்த அந்தாதிப்பிரபந்தத்தைப் பாடினான்; (எ - று.)

ஆழ்வார் பதின்மரும் மங்களாசாசனஞ் செய்தருளிய நூற்றெட்டுத் திருப்பதிகளையும் யாவரும் உணர்ந்து துதிக்குமாறு சோழநாடு முதலாகப் பிரித்துக்கொண்டு நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியைப் பிள்ளைப்பெருமாளையங்கார் பாடினா ரென்பதாம்.

இச்செய்யுளிரண்டும் - நூலாசிரியர் தம்மைத் தாமே பிறன்போலும் பாயிரங்கூறியன; பிரயோகவிவேகநூலார் - 'இது, தன்னைப் பிறன்போலும் காந்திகூறுகின்றது. வடநூலார் தாமே பதிகமும் உரையும்செய்வார்: இனிச் சம்பந்தர் சடகோபர் முதலாயினாரும் திவாகரரும் பதினெண்கீழ்க்கணக்குச்செய்தாரும் முன்னாகப் பின்னாகப் பதிகங்கூறுவதுங் காண்க' என்றவை கருதத்தக்கன. இது, தற்சிறப்புப்பாயிர மெனப்படும்.

நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி முற்றிற்று.

---



# நூற்றெட்டுத்திருப்பதியந்தாதிச்

## செய்யுண்முதற்குறிப்பகராதி.

இதுவரையிற் கூறிவந்த திருப்பதிகள் யாவும் மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களால் மங்களாசாஸனம்செய்யப்பட்டு மிகவும் ஏற்றம்பெற்றன. இவைகளன்றி, முனிவர்முதலியோரால் ப்ரதிஷ்டைசெய்யப்பட்டு ஏற்றம்பெற்ற புராணஸ்தலங்களும், ஆழ்வாராசாரியர்களின் திருவவதாரம் முதலியசம்பந்தங்களினால் ஏற்றம்பெற்ற தலங்களும் உண்டு. அவையாவன:—

க. திருநாராயணபுரம்—செல்வப்பிள்ளை எழுந்தருளிய தலம். ஸ்ரீபாஷ்யகாரர், திருநாராயணன் செல்வப்பிள்ளை என்ற இவர்கட்குச் சந்நிதி முதலியன நிர்மாணம்செய்து செல்வப்பிள்ளையை எழுந்தருளப் பண்ணி உத்ஸவாதிகளையெல்லாம் நடப்பித்தருளினர். நாராயணாத்ரியென்றும், வேதாத்ரியென்றும், யாதவாத்ரியென்றும், யதிசைலமென்றும் மறுபெயர்களையுடைய பிரசித்தமான தலம் இதுவே. இது மேல்நாட்டிலுள்ளது.

உ. ராஜமன்னார் கோயில்—ராஜகோபாலன் எழுந்தருளிய தலம்.

ங. ஜநார்த்தநம்—ஜநார்த்தநப்பெருமாள் எழுந்தருளிய தலம்; இப்பெருமான் தமது கையிற்கொண்டுள்ள நீரை யுகமுடிவில் ஆசமநஞ்செய்வரென்பர்; இது, மேலைக்கடற்கரையிலுள்ளது.

ச. ஸ்ரீமுஷ்ணம்—ஆதிவராகப்பெருமாள் எழுந்தருளிய தலம். இது, எட்டு ஸ்வயம்வ்யக்தஸ்தலங்களில் ஒன்று. சோழநாட்டிலுள்ளது.

ரு. புஷ்கரம்—தீர்த்தஸ்வரூபியாகிய எம்பெருமான் எழுந்தருளிய தலம். இது, ஸ்வயம்வ்யக்தஸ்தலங்களில் ஒன்று.

சு. ஜகந்நாதம்—ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி எழுந்தருளிய தலம். புருஷோத்தமம் என்னும் மறுபெயருடையது. வடநாட்டிலுள்ளது.

எ. ஸ்ரீகூர்மம்—ஸ்ரீவராகப்பெருமாள் எழுந்தருளிய தலம்.

அ. சிங்கப்பெருமாள்கோயில்—இது, தொண்டைநாட்டிலுள்ளது; நரஸிங்கமூர்த்தி எழுந்தருளியுள்ள தலம்.

கூ. அவந்தி—கண்ணன் எழுந்தருளிய தலம். உஜ்ஜயினி என்னும் மறுபெயருடையது. இது, முத்திதரும்நகரங்கள் ஏழனுள் ஒன்று.

கo. கயா—பல்குனி நதிக்கரையிலுள்ளது. சிராத்தபிண்டம் போடும்படியான விஷ்ணுபாதத்தை யுடையது.

கக. ப்ரயாகை—மாதவப்பெருமாள் ஆலிலையில் பள்ளிகொண்டுள்ள தலம். அலகபாத் என்னும் மறுபெயருடையது.

கஉ. மயிலாப்பூர்—இது, முதலாழ்வார்கள் மூவரில் பேயாழ்வார் திருவவதரித்த தலம்.

கங. திருமழிசை—திருமழிசையாழ்வார் திருவவதரித்த தலம். மஹீஸாரக்ஷேத்ரம் என்னும் மறுபெயருடையது.

கச. திருவஞ்சிக்களம் — குலசேகராழ்வார் திருவவதரித்த தலம். மலைநாட்டிலுள்ளது.

கரு. திருமண்டங்குடி—தொண்டரடிப்பொடியாழ்வார் திருவவதரித்த தலம்.

கசு. திருக்குறையலூர்—திருமங்கையாழ்வார் திருவவதரித்த தலம்.

கஎ. காட்டுமன்னார்கோவில்—ஸ்ரீமந்நாதமுனிகளும் ஸ்ரீஆளவந்தாரும் திருவவதரித்த தலம்.

கஅ பூவிருந்தவல்லி—திருக்கச்சிநம்பிகள் திருவவதரித்த தலம்.

கக ஸ்ரீபெரும்பூதூர்—ஸ்ரீ பாஷ்யகாரர் திருவவதரித்த தலம். இவர்க்குப் பெரியநம்பிகள் த்வயம் உபதேசம்செய்த தலம்—ஸ்ரீ மதுராந்தகம்.

உo. கூரம்—கூரத்தாழ்வான் திருவவதரித்த தலம்.

உக. மழலைமங்கலம்—எம்பார் திருவவதரித்த தலம்.

உஉ. பச்சைப்பெருமாள்கோயில்—முதலியாண்டான் திருவவதரித்த தலம். மற்றும் பல வுள.

ஸ்ரீ

# சீரங்கநாயகரூசல்.

சீரங்கநாயகரைப்பற்றிப் பாடிய ஊசல் என விரியும். ஊசலாவது - ஆசிரியவிருத்தத்தாலாதல், கலித்தாழிசையாலாதல், 'ஆடிரூசல்,' 'ஆடாமோவூசல்,' 'ஆடுகவூசல்' என ஒன்றால் முடிவுறக் கூறுவது; இது, தொண்ணூற்றாறுவகைப்பிரபந்தங்களுள் ஒன்று.

## தனியன்.

அண்டப்பந்தரிற்பற்றுக்கால்களாக
வறிவுவிட்டங்கரணஞ்சங்கிலிகளாகக்
கொண்டபிறப்பேபலகைவினையசைப்போர்
கொடுநரகசுவர்க்கப்பூவெளிகடம்மிற்
றண்டலிலேற்றம்மிறக்கந்தங்கலாகத்
தடுமாறியிடருழக்குமூசன்மாறத்
தொண்டர்க்காமணவாளர்பேரர்கூடித்
தொகுத்திட்டார்திருவரங்கத்தூசலுனே.

(இ - ள்.) அண்டம் பந்தரில் - உலகமாகிய பந்தலிலே, பற்று-பாசமே, கால்கள் ஆக-(விட்டத்தைத்தாங்குவதற்குஉரிய) தூண்களாகவும்,—அறிவு-அறிவே, விட்டம் (ஆக) - (சங்கிலியைமாட்டுதற்குஉரிய) உத்தரமாகவும்,—கரணம் - இந்திரியங்களே, சங்கிலிகள் ஆக - சங்கிலிகளாகவும்,—கொண்ட பிறப்பே - எடுத்த பிறவியே, பலகை (ஆக) - ஊஞ்சற்பலகையாகவும்,—வினை - இருவினைகளே, அசைப்போர் (ஆக) - (அவ்வூஞ்சலை) ஆட்டுபவராகவும்,—கொடு நரகம் - கொடிய நரகமும், சுவர்க்கம் - சுவர்க்கமும், பூ - பூமியும், (ஆகிய), வெளிகள்தம்மில் - வெளியிடங்களில் (செல்லுதலே), இறக்கம் - இறங்குதலும், தண்டல் இல் ஏற்றம் - தடையின்றி ஏறுதலும், தங்கல் - நிலைபெறுதலும், ஆக - ஆகவும்,—(இவ்வாறு), தடுமாறி - அலைந்து, இடர் உழக்கும் - துன்பமநுபவிக்கின்ற, ஊசல் - ஊசலாட்டம், மாற - நீங்கும்படி,—தொண்டர்க்கு ஆ - அடியார்கள் அநுசந்திக்குமாறு,—மணவாளர் - அழகியமணவாளதாசரும், பேரர் - (அவரது) திருப்பேரனாரகிய கோனேரியப்பனையங்காரும், கூடி - சேர்ந்து, திருவரங்கத்து ஊசல் - ஸ்ரீரங்கத்தைக் குறித்ததான ஊசலென்னும் பிரபந்தத்தை, தொகுத்திட்டார் - பாடியருளினர்; (எ - று.)

இது, சீரங்கநாயகரூசல் சீரங்கநாயகியாரூசல் என்ற இரண்டு பிரபந்தங்கட்குந் தனியனாகும்: அதுபற்றியே, 'திருவரங்கத்தூசல்'எனப் பொதுப்

படக் கூறினர். பிள்ளைப்பெருமாளையங்கார் பாடியது - ஸ்ரீரங்கநாயகரூசல் என்றும், அவரது திருப்பேரனாராகிய கோனேரியப்பனையங்கார் பாடியது - ஸ்ரீரங்கநாயகியாரூசல் என்றும் அறிக. உயிர் ஊசலாடுவதுபோல அலைகிற பிறவித் தடுமாற்றத்தினின்று நீங்கித் தொண்டர்கள் உய்யுமாறு இந்த இரண்டு பிரபந்தங்களும் செய்யப்பட்டன வென்க. ஊசல்நீங்க ஊசல்பாடினார் என்ற நயம் கருதத்தக்கது; இது - தொடர்பின்மையணி யெனப்படும்; வடநூலார் இதனை அஸங்கத்யலங்கார மென்பர்: ஒன்றைச்செய்யத்தொடங்கி அதற்குமாறான செயலைச் செய்தல், இதன் இலக்கணம். பிறவித்தடுமாற்றத்தை ஊசலாக உருவகஞ்செய்ததற்கு ஏற்ப, அண்டத்தைப் பந்தலாகவும், பற்றைக் கால்களாகவும், அறிவை விட்டமாகவும், கரணங்களைச் சங்கிலிகளாகவும், பிறப்பைப் பலகையாகவும், வினைகளை ஆட்டுபவராகவும், நரக சுவர்க்க பூமிகளிற் செல்லுதலை இறக்கம் ஏற்றம் தங்குதலாகவும் உருவகஞ் செய்தன ரென்க; முற்றுருவகவணி. நரக சுவர்க்க பூ வெளிகள் என்றதற்கு ஏற்பக் கூறாது ஏற்றமிறக்கம் தங்கல் என மாற்றிக்கூறியது-எதிர்நிரனிறைப் பொருள்கோள். தான், ஏ - ஈற்றசைகள்.



காப்பு.

புதுவைநகர்ப்பட்டர்பிரான்சரண்கள்போற்றி
பொய்கைபூதன்பேயார்பாதம்போற்றி
சதுமறைச்சொற்சடகோபன்சரணம்போற்றி
தமிழ்ப்பாணன்றொண்டரடிப்பொடிதாள்போற்றி
முதுபுகழ்சேர்மழிசையர்கோன்பதங்கள்போற்றி
முடிக்குலசேகரன்கலியன்கழல்கள்போற்றி
மதுரகவியெதிராசன்கூரத்தாழ்வான்
வாழ்வானபட்டர்திருவடிகள்போற்றி.

(இ - ள்.) புதுவை நகர் - ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதரித்தருளிய, பட்டர்பிரான் - பெரியாழ்வாருடைய, சரண்கள் - திருவடிகள், போற்றி - வாழ்வனவாக; பொய்கை - பொய்கையாழ்வாரும், பூதன் - பூதத்தாழ்வாரும், பேயார் - பேயாழ்வாரும், (ஆகிய முதலாழ்வார்களுடைய), பாதம் - திருவடிகள், போற்றி—; சது மறை சொல்-வடமொழி நான்குவேதங்களின் பொருளையும் தமிழ்ச்சொல்லாற் பாடியருளிய, சடகோபன் - நம்மாழ்வாரது, சரணம் - திருவடிகள், போற்றி—; தமிழ் பாணன் - செந்தமிழ்ப்பாடல்வல்ல திருப்பாணாழ்வாரும், தொண்டர் அடி பொடி - தொண்டரடிப்பொடியாழ்வாரும் ஆகிய இவர்களது, தாள்-திருவடிகள், போற்றி—; முது புகழ் சேர் - பழமையாகிய கீர்த்தி பொருந்திய, மழிசையர்கோன்-திருமழிசைப்பிரானுடைய, பதங்கள் - திருவடிகள், போற்றி—; முடி குலசேகரன்-கிரீடமணிந்த [அரசரான] குலசேகராழ்வாரும், கலியன் - திருமங்கையாழ்வாரும், (ஆகிய இவர்களது), கழல்கள் - திருவடிகள், போற்றி—; மதுரகவி-

மதுரகவியாழ்வாரும், எதிராசன் - உடையவரும், கூரத்தாழ்வான் - கூரத்தாழ்வானும், வாழ்வு ஆன பட்டர் - நல்வாழ்வுபெற்ற பட்டரும், (ஆகிய இவர்களது), திருவடிகள்—, போற்றி—; (எ - று.)

---

நூல்.

க. திருவாழத்திருவாழிசங்கம்வாழத்
திருவனந்தன்கருடன்சேனையர்கோன்வாழ
வருண்மாறன்முதலாமாழ்வார்கள்வாழ
வளவில்குணத்தெதிராசனடியார்வாழ
விருநாலுதிருவெழுத்தினேற்றம்வாழ
வேழுலகுநான்மறையுமினிதுவாழப்
பெருவாழ்வுதந்தருணம்பெருமாளெங்கள்
பெரியபெருமாளரங்கராடிரூசல்.

(இ - ள்.) திரு - இலக்குமி, வாழ - வாழவும்,—திரு ஆழி சங்கம் - சங்க சக்கரங்கள், வாழ—,—திரு அனந்தன் - திருவனந்தாழ்வானும், கருடன் - பெரியதிருவடியும், சேனையர்கோன் - சேனைமுதலியாரும், வாழ—,— அருள் மாறன் முதல் ஆம் ஆழ்வார்கள் - (எம்பெருமானது) திருவருளைப் பெற்ற நம்மாழ்வார் முதலாகிய ஆழ்வார்கள் பன்னிருவரும், வாழ—,— அளவு இல் குணத்து எதிராசன் - எல்லையில்லாத நற்குணங்களையுடைய எம்பெருமானாரும், அடியார் - (அவரது) அடியார்களும், வாழ—,—இரு நாலு திருவெழுத்தின் ஏற்றம் - திருவஷ்டாக்ஷரமகாமந்திரத்தின் சிறப்பு, வாழ—,—ஏழ் உலகும் - மேலேழ் கீழேழ் என்ற பதினான்கு லோகங்களும், நால்மறையும் - நான்குவேதங்களும், இனிது வாழ - இனிமையாக வாழவும்,—பெரு வாழ்வு தந்தருள் - பெரியவாழ்ச்சியைக் கொடுத்தருள்கின்ற, நம்பெருமாள் - நம்பெருமானே! எங்கள் பெரிய பெருமாள் - எமது பெரியபெருமானே! அரங்கர் - திருவரங்கநாதரே! ஊசல்ஆடிர் - ஊசலாடுவீராக; (எ - று.)

'வாழ' என்னும் எச்சங்கள் யாவும் 'பெருவாழ்வுதந்தருள்' என்பதனோடு இயையும். வாழ ஊசலாடிர் என இயைப்பினுமாம். (க)

உ. உயரவிட்டகற்பகப்பூம்பந்தர்நீழ
லொண்பவளக்காலிறுவியூடுபோட்ட
வயிரவிட்டத்தாடகச்சங்கிலிகணாற்றி
மரகதத்தாற்பலகைதைத்தவூசன்மீதே
தயிரிலிட்டமத்துழக்கும்வெண்ணெய்க்காடித்
தடமறுகிற்குடமாடித்தழல்வாய்நாக
மயரவிட்டன்றூடியநீராடிரூச
லணியரங்கநம்பெருமாளாடிரூசல்.

(இ - ள்.) உயர இட்ட - உயரமாகச் சமைத்த, கற்பகம் பூ பந்தர் நிழல் - கற்பகச்சோலைபோன்ற பூப்பந்தலின் நிழலில், ஒள் பவளம் கால் நிறுவி - ஒளியுள்ள பவழத்தாலாகிய கால்களை நிறுத்தி, ஊடு போட்ட -(அவ் விருகால்கட்கும்) நடுவில் அமைத்த, வயிரம் விட்டத்து - வஜ்ரத்தினாலாகிய விட்டத்திலே, ஆடகம் சங்கிலிகள் நாற்றி - பொற்சங்கிலிகளை மாட்டித் தொங்கவிட்டு, மரகதத்தால் பலகை தைத்த ஊசல்மீதே - மரகதரத்தினத் தாலாகிய பலகையைக்கொண்டு செய்த ஊசலின்மீது ஏறி,— அன்று - அக் காலத்தில் [கிருஷ்ணாவதாரத்தில்], தயிரில் இட்ட மத்து உழக்கும் வெண் ணெய்க்கு ஆடி - தயிரின்கண் இடப்பட்ட மத்தினாற் கடைந்தெடுத்த வெண் ணெயைப் பெற்ற மகிழ்ச்சியினால் கூத்தாடி, தட மறுகில் குடம் ஆடி - பெரிய தெருக்களிற் குடக்கூத்தாடியும், தழல் வாய் நாகம் அயர இட்டு அன்று ஆடிய - விஷாக்கினியைக்கக்குகின்ற வாயையுடைய (காளியனென் னும்) பாம்பு சோர்ந்துபோம்படி (அதன்முடிமீது திருவடிகளை) வைத்துக் கூத்தாடிய, நீர்—, ஊசல்ஆடிர்—; அணி அரங்கம் நம்பெருமாள் - அழகிய திருவரங்கத்தி லெழுந்தருளிய நம்பெருமாளே! ஊசல் ஆடிர்—; (எ - று.)

வெண்ணெய்க்குஆடி என்பதற்கு - வெண்ணெய்பெறுதற்பொருட்டுக் கூத்தாடி என்று உரைப்பினுமாம். (உ)

௩. மீன்பூத்தவிசும்பதுபோற்றரளங்கோத்து
விரித்தநீலப்பட்டுவிதானந்தோன்ற
வான்பூத்தகலைமதிபோற்கவிகையோங்க
மதிக்கதிர்போற்கவரியிருமருங்கும்வீசக்
கான்பூத்ததனிச்செல்வன்சிலையுள்மின்னற்
கருமுகில்போற்கணமணிவாசிகையினுப்பண்
டேன்பூத்ததாமரையாண்மார்பிலாடத்
தென்னரங்கமணவாளராடிரூசல்.

(இ - ள்.) மீன் பூத்த விசும்பு அது போல் - நட்சத்திரங்கள் விளங்கு கிற ஆகாசம்போல, தரளம் கோத்து விரித்த நீலப்பட்டு விதானம் தோன்ற- முத்துக்கள் கோக்கப்பெற்றுப் பரப்பிய நீலப்பட்டினாலியன்ற மேற்கட்டு விளங்கவும்,—வான் பூத்த கலை மதி போல் - ஆகாயத்தில்தோன்றி விளங்கு கின்ற பதினாறுகலைகளும் நிரம்பிய பூர்ணசந்திரன்போல, கவிகை ஓங்க - வெண்கொற்றக்குடை உயர்ந்துவிளங்கவும்,—மதி கதிர் போல் - சந்திரனு டைய கிரணங்கள்போல, கவரி இரு மருங்கும் வீச - வெண்சாமரங்கள் இரண்டுபக்கத்திலும் வீசப்பெறவும்,—கான் பூத்த தனி செல்வன் சிலையுள்- கற்பகக்காட்டில் விளங்குகின்ற ஒப்பற்ற செல்வத்தையுடையவனான இந்தி ரனது தநுசின்மத்தியில் தோன்றுகின்ற, கரு முகில் மின்னல் போல் - காளமேகத்து மின்னற்கொடிபோல, கணம் மணி வாசிகையின் நாப்பண் - கூட்டமாகிய நவரத்தினங்களினா லியன்ற மாலையி னிடையிலே, தேன் பூத்த தாமரையாள் - தேன்நிறைந்த செந்தாமரைமலரில்வாழ்கின்ற பெரிய

பிராட்டியார்,மார்பில் ஆட-(தேவரீரது)மார்பில் அசையாநிற்கவும்,—தென் அரங்க மணவாளர்-தெற்கின்கணுள்ள திருவரங்கம்பெரியகோயிலி லெழுந்தருளிய அழகியமணவாளரே! ஊசல் ஆடிர்—; (எ - று.)

கான்பூத்ததனிச்செல்வன்சிலை - இந்திரதநுசு. பல நிறங்களையுடைய இந்திரதநுசு - பலவகையிரத்தினங்களினுலியன்ற வாசிகைக்கும், கருமுகிலில் தோன்றும் மின்னல் - அத்திருமாலினது மார்பில்தோன்றுகின்ற பெரிய பிராட்டியார்க்கும் உவமை. (௩)

௪. பூசுரரும்புரவலரும்வானநாட்டுப்
புத்தேளிர்குழுவுமவர்பூவைமாரும்
வாசவனுமலரயனுமழுவலானும்
வணங்குவானவசரம்பார்த்திணங்குகின்றார்
தூசுடையகொடித்தடந்தேர்மானந்தோன்றச்
சுடரிரண்டும்பகல்விளக்காத்தோன்றத்தோன்றுந்
தேசுடையதிருவரங்கராடிரூசல்
சீரங்கநாயகியோடாடிரூசல்.

(இ - ள்.) பூசுரரும் - பூமியில் தேவர்போல விளங்குகின்ற பிராமணரும், புரவலரும் - காத்தல்தொழிலில்வல்ல அரசர்களும், வானம் நாட்டு புத்தேளிர் குழுவும் - வானுலகத்தவரான தேவர்களின் கூட்டமும், அவர் பூவைமாரும்-அத்தேவர்களது மனைவியரும்,வாசவனும்-(அத்தேவசாதியார்க்குத்தலைவனான) தேவேந்திரனும், மலர் அயனும் - (திருமாலின்நாபித்)தாமரைமலரில் தோன்றிய பிரமதேவனும், மழு வலானும் - மழுவென்னும் ஆயுதத்தை யேந்திய சிவபிரானும், (ஆகிய இவர்கள்யாவரும்), வணங்குவான் - (தேவரீரைத்) தொழுதற்காக, அவசரம் பார்த்து-சமயத்தை எதிர்நோக்கிக் கொண்டு, இணங்குகின்றார் - கூடுகின்றார்கள்; (அவர்கள்சேவிக்கும்படி),—தூசு உடைய கொடி தட தேர் - சீலையினாலியன்ற துவசங்கள் கட்டிய பெரியதேரின்மீதும், மானம் - விமானத்தின்மீதும், தோன்று - காணப்படுகின்ற, அ சுடர் இரண்டும்-(சூரியன் சந்திரன் என்ற) அந்தஇருசுடர்களும், பகல் விளக்கு ஆ தோன்ற-பகற்காலத்தில் ஏற்றிய விளக்குப்போல(த் தேவரீரது ஒளிக்குமுன்னே) ஒளிமழுங்கும்படி, தோன்றும் - விளங்கிக்காணப்படுகின்ற, தேசு உடைய - பேரொளியையுடைய, திருவரங்கர்-ஸ்ரீரங்கநாதரே! ஊசல்ஆடிர்—; சீரங்கநாயகியோடு ஊசல் ஆடிர்—; (எ - று.)

தேரின்மீது வருகின்ற சூரியனும், விமானத்தின்மீது வருகின்ற சந்திரனும், கோடிசூரியபிரகாசரான பெருமானது பேரொளிக்குமுன்னே பகல்விளக்குப்போலத் தோன்றுவரென்க. அ - உலகறிசுட்டு. மானம் - விமான மென்பதன் முதற்குறை. (௪)

௫. மலைமகளுமரனுமொருவடந்தொட்டாட்ட
வாசவனுஞ்சசியுமொருவடந்தொட்டாட்டக்
கலைமகளுமயனுமொருவடந்தொட்டாட்டக்
கந்தனும்வள்ளியுங்கலந்தோர்வடந்தொட்டாட்ட

வலைமகரப்பாற்கடலுளவதரித்த
வலர்மகளுநிலமகளுமாயர்காதற்
றலைமகளுமிருமருங்கிலாடவெங்க
டண்ணரங்கமணவாளராடிரூசல்.

(இ - ள்.) மலைமகளும் - பார்வதியும், அரனும் - (அவளது கணவனை) சிவபிரானும், ஒரு வடம் தொட்டு ஆட்ட - ஒருசங்கிலியைப் பிடித்து ஆட்ட,—சசியும் - இந்திராணியும், வாசவனும் - (அவளது கணவனை) இந்திரனும், ஒரு வடம் தொட்டு ஆட்ட—,— கலைமகளும் - சரசுவதியும், அயனும் - (அவளது கணவனை) பிரமனும், ஒரு வடம் தொட்டு ஆட்ட—,—வள்ளியும் - வள்ளியம்மையும், கந்தனும் - (அவளது கணவனை) சுப்பிரமணியமூர்த்தியும், கலந்து - ஒன்றுகூடி, ஓர் வடம் தொட்டு ஆட்ட—,—அலை மகரம் பாற்கடலுள் அவதரித்த அலர்மகளும் - அலைகளையும் சுறாமீன்களையுமுடைய திருப்பாற்கடலில் (கடைந்தபோது) தோன்றியவளாகிய தாமரை மலரில்வாழ்கின்ற திருமகளும், நிலமகளும் - பூமிப்பிராட்டியும், ஆயர் காதல் தலைமகளும் - இடையரால் பெற்றுவளர்க்கப்பட்ட அன்பிற்குஉரிய தேவியாகிய நீளாதேவியும்,இரு மருங்கில் ஆட-(தேவரீரது)இருபக்கத்திலும் உடனிருந்து ஆடும்படி, எங்கள் தண் அரங்கம் மணவாளர் - எமது குளிர்ந்த ஸ்ரீரங்கத்திலெழுந்தருளியுள்ள அழகியமணவாளரே! ஊசல் ஆடிர்—; (ரு)

சஈ. திருவழுதிவளநாடன்பொருநைச்சேர்ப்பன்
சீபராங்குசமுனிவன்வகுளச்செல்வன்
றருவளருங்குருகையர்கோன்காரிமாறன்
சடகோபன்றமிழ்வேதந்ததியர்பாடக்
கருணைபொழிமுகமதியங்குறுவேர்வாடக்
கரியகுழல்கத்தூரிநாமத்தாட
வருகிருக்குந்தேவியர்களதுகொண்டாட
வணியரங்கத்தெம்பெருமானாடிரூசல்.

(இ - ள்.) திரு வழுதி வளம் நாடன் - வளப்பமுள்ள பாண்டியநாட்டில் திருவவதரித்தவரும், பொருநை சேர்ப்பன் - தாமிரபர்ணிநதியின் கரையில் வாழ்பவரும், சீபராங்குசமுனிவன் - (அந்யமதஸ்தராகிய யானைகட்கு அங்குசம்போன்றிருத்தலால்)ஸ்ரீபராங்குசனென்று திருநாமம்பெற்ற யோகியும், வகுளம் செல்வன் - மகிழமலர்மாலையையணிந்த சிறப்புடையோரும், தரு வளரும் குருகையர் கோன் - மரச்சோலைகள் ஓங்கிவளர்தற்கு இடமான திருக்குருகூரிலுள்ளார்க்குத் தலைவரும், காரி மாறன் - காரியென்பவர்க்குத் திருக்குமாரராய் மாறனென்று ஒருதிருநாமம்பெற்றவரும், சடகோபன்-சடகோபனென்னுந் திருநாமமுடையவருமான நம்மாழ்வார் அருளிச்செய்த, தமிழ் வேதம் - வடமொழி வேதத்தின்சாரமாகித் தமிழ்மொழியினலியன்ற திருவாய்மொழி முதலிய திவ்யபிரபந்தங்களை, ததியர்

[ததீயர்]பாட-பாகவதர்கள் பாடாநிற்கவும்,—கருணை பொழி முகம் மதியம்-திருவருளைச் சொரிகின்ற பூர்ணசந்திரன்போன்ற திருமுகத்திலே, குறு வேர்வு ஆட-சிறிய வேர்வைநீர் தோன்றி அசையவும், கரிய குழல் கத்தூரி நாமத்து ஆட-கருங்குழற்கற்றையும் கத்தூரித்திருநாமமும் ஒருசேர அசையவும்,—அருகு இருக்கும் தேவியர்கள் அது கொண்டாட - இருமருங்கிலுமுள்ள தேவிமார்கள் அந்தவைபவத்தைக் கண்டு கொண்டாடவும்,—அணி அரங்கத்து எம்பெருமான் - அழகியதிருவரங்கநாதனே! ஊசல் ஆடீர்—;

நம்மாழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்கள்-திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என நான்காம். (சு)

எ. வையமொருபொற்றகட்டுத்தகளியாக
வார்கடலேநெய்யாகவதனுட்டேக்கி
வெய்யகதிர்விளக்காகச்செஞ்சொன்மாலை
மெல்லடிக்கேசூட்டினன்மேன்மைபாடத்
தூய்யமதிமண்டலத்தின்மறுவேயொப்பச்
சோதிவிடுகத்தூரிதுலங்குநாமச்
செய்யதிருமுகத்தரங்கராடிரூசல்
ஸ்ரீரங்கநாயகியோடாடிரூசல்.

(இ - ள்.) வையம் - நிலவுலகத்தையே, ஒரு பொன் தகடு தகளி ஆக-ஒப்பற்ற பொன்தகட்டினாற் செய்த அகலாகக்கொண்டு, வார் கடலே - நீண்ட சமுத்திரத்தையே, நெய் ஆக—,அதனுள் தேக்கி - அவ்வகலில் நிறைத்து, வெய்ய கதிர்-உஷ்ணகிரணனான சூரியனையே, விளக்கு ஆக-விளக்காகக்கொண்டு [இவ்வாறானபொருளைத் தெரிவிக்கின்ற பாடலைத் தொடங்கி], செஞ் சொல் மாலை - செவ்விய தமிழ்ச்சொற்களினாலாகிய பாமாலையை, மெல் அடிக்கே சூட்டினன்-மேன்மையான (தேவரீரது) திருவடிகளில் அணிந்தவராகிய பொய்கையாழ்வார் அருளிச்செய்த, மேன்மை - (தேவரீரது) மேன்மையைத் தெரிவிக்கின்ற திவ்யப்ரபந்தத்தை, பாட - (ததீயர்) எடுத்துப்பாடாநிற்க,—தூய்ய மதி மண்டலத்தின் மறுவே ஒப்ப - பரிசுத்தமாகிய சந்திரமண்டலத்திலுள்ள களங்கத்தைப் போல, சோதி விடு கத்தூரி நாமம் துலங்கு - ஒளிவிடுகின்ற கஸ்தூரிதிலகம் விளங்கப்பெற்ற, செய்ய திருமுகத்து - அழகிய திருமுகத்தையுடைய, அரங்கர் - திருவரங்கநாதரே! ஊசல் ஆடிர்—; ஸ்ரீரங்கநாயகியோடு ஊசல் ஆடிர்—; (எ - று.)

முதலாழ்வார்மூவரும் திருக்கோவலூரில் ஓர்இடைகழியில் மழைக்காலத்து ஒருநாளிரவில் தங்கியிருக்கையில், எம்பெருமான் இருட்டில் அவர்களோடு தானும் ஒருவனாய் நின்று நெருக்க, அப்பொழுது பொய்கையாழ்வார் "வையந் தகளியா வார்கடலே நெய்யாக, வெய்யகதிரோன் விளக்காகச்-செய்ய, சுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை, யிடராழி நீங்குகவே யென்று" என்று முதல்திருவந்தாதிப் பிரபந்தத்தைத் தொடங்கி வெய்யகதிரினால் விளக்கேற்றின ரென்க.

கீழ்ச்செய்யுளில், 'சடகோபன்தமிழ்வேதம் ததியர்பாட' என்று கூறிய தற்கு ஏற்ப, இச்செய்யுளிலும் 'ததியர்' என்று வருவித்துப் பொருளுரைக் கப்பட்டது; மேலும் இங்ஙனமே கூறப்படும். இப்பொருளில், மேன்மை - மேன்மையான பிரபந்தத்திற்கு, இலக்கணை; இனி, பொய்கையாழ்வார் தேவரீரது மேன்மைகளைப் பாட என்றும், பொய்கையாழ்வாரது மேன் மையைத் ததியர்பாட என்றும் கூறுவாருமுளர்; மேலும் இங்ஙனமே காண்க. (எ)

அ. அன்பென்னுநன்பொருளோர்தகளியாக
வார்வமேநெய்யாகவதனுட்டேக்கி
யின்புருகுசிந்தையிடுதிரியாஞானத்
திலகுவிளக்கேற்றினனிசையைப்பாடப்
பொன்புரையும்புகழுறையூர்வல்லியாரும்
புதுவைநகராண்டாளும்புடைசேர்ந்தாட
முன்பிலும்பின்பழகியநம்பெருமாடொல்லை
மூவுலகுக்கும்பெருமாளாடிரூசல்.

(இ-ள்.) அன்பு என்னும் நல் பொருள் - அன்புஎன்கிற நல்ல பொரு ளையே, ஓர் தகளி ஆக - ஒரு அகலாகக் கொண்டு, ஆர்வமே - பக்தியையே, நெய் ஆக—,அதனுள் தேக்கி-அவ்வகலுள் நிறைத்து, இன்பு உருகு சிந்தை - ஆனந்தத்தினாலே உருகுகின்ற மனத்தையே, இடு திரி ஆ - அதிலிட்ட திரியாகக்கொண்டு, ஞானத்து இலகு விளக்கு ஏற்றினன் - தத்துவஞானத் தினால் விளங்குகின்ற விளக்கை ஏற்றினவராகிய பூதத்தாழ்வாருடைய, இசையை-புகழ்பெற்ற திவ்யப்ரபந்தத்தை, பாட-(ததியர்) பாடாநிற்கவும்,— பொன் புரையும் புகழ் உறையூர் வல்லியாரும் - பெரியபிராட்டியாரைப் போன்ற கீர்த்தியையுடைய திருவுறையூர்நாச்சியாரும், புதுவைநகர் ஆண் டாளும் - ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதரித்த ஆண்டாளும், புடை சேர்ந்து ஆட - தேவரீரது இருபக்கத்திலும் சேர்ந்து ஆடவும்,— முன்பிலும் பின்பு அழகிய நம்பெருமாள் - முற்பக்கத்திலும் பிற்பக்கம் அழகியவரான நம் பெருமாளே! தொல்லை மூவுலகுக்கும் பெருமாள் - பழமையான மூன்று லோகங்களுக்கும் நாயகரே! ஊசல் ஆடிர்—; (எ - று.)

"அன்பே தகளியா வார்வமேநெய்யாக, இன்புருகுசிந்தையிடுதிரியா - நன்புருகி, ஞானச்சுடர்விளக்கேற்றினேன் நாரணற்கு, ஞானத்தமிழ் புரிந்த நான்" என்பது, பூதத்தாழ்வார் அப்போது அருளிச்செய்த இரண்டாந்திரு வந்தாதியின் முதற்பாசுரம். (அ)

கூ. திருக்கண்டேன்பொன்மேனிகண்டேனென்ற
திகழருக்கனணிநிறமுந்திகிரிசங்கு
மிருட்கொண்டகருங்கங்குலிடையேகோவ
லிடைகழியிற்கண்டபிரானேற்றம்பாட

மருக்கொண்டகொன்றையான்மலரின்மேலான்
வானவர்கோன்முதலானோர்மகுடகோடி
நெருக்குண்டதாளரங்கராடிரூசல்
நீளைக்குமணவாளராடிரூசல்.

(இ - ள்.) இருள் கொண்ட கருங் கங்குலிடையே - அந்தகாரம் மிகுந்த கரிய நடுராத்திரியில், கோவல் இடைகழியில் - திருக்கோவலூரிலுள்ள ஓர் இடைகழியிலே, "திரு கண்டேன் - இலக்குமியைக் கண்டேன், பொன் மேனி கண்டேன் - அழகிய திருமேனியைக் கண்டேன், திகழ் அருக்கன் அணி நிறமும் - விளங்குகின்ற சூரியன்போன்ற அழகிய திரு நிறத்தையும், திகிரி சங்கும் - (திவ்வியாயுதங்களாகிய) சக்கரத்தையும் சங்கத்தையும், (கண்டேன்—") என்ற - என்று பாடினவரும், கண்ட - (திரு முதலானவர்களை நேரில்) தரிசித்தவருமாகிய, பிரான் - தலைவரான பேயாழ்வாருடைய, ஏற்றம் - சிறப்புள்ள பிரபந்தத்தை, பாட -(ததீயர்) பாடாநிற்க,—மரு கொண்ட கொன்றையான் - வாசனையையுடைய கொன்றைமலர்மாலையைத் தரித்த சிவபிரானும், மலரின் மேலான் - தாமரைமலரில் வீற்றிருப்பவனாகிய பிரமனும், வானவர் கோன் - தேவராசனாகிய இந்திரனும், முதலானோர் - முதலிய அடியவர்களது, மகுடம் கோடி - கிரீடங்களின் வரிசைகள், நெருக்குண்ட - (அந்தத் தேவர்கள் கீழ்வீழ்ந்து தேவரீரைச் சேவிக்கும்போது) நெருங்கப்பெற்ற, தாள் - திருவடிகளையுடைய, அரங்கர் - திருவரங்கநாதரே! ஊசல் ஆடிர்—; நீளைக்கு மணவாளர் - நீளாதேவிக்கு மணவாளரே! ஊசல் ஆடிர்—; (எ - று.)

"திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் றிகழு, மருக்கனணிநிறமுங்கண்டேன் - செருக்கிளரும், பொன்னாழிகண்டேன் புரிசங்கங்கைக் கண்டேன், என்னாழிவண்ணன்பாலின்று" என்பது, பேயாழ்வார் அருளிச்செய்த மூன்றந்திருவந்தாதியின் முதற்பாசுரம். (௯)

௧0. நான்முகனை நாரணனே படைத்தானந்த
நான்முகனுநக்கபிரானைப்படைத்தான்
யான்முகமாயந்தாதியறிவித்தேனென்
றியார்க்கும்வெளியிட்டபிரானியல்பைப்பாடப்
பான்முகமார்வளைநேமிபடைகள்காட்டப்
பாசடைகடிருமேனிப்படிவங்காட்டத்
தேன்முகமாமுளரியவயவங்கள்காட்டச்
செழுந்தடம்போலரங்கேசராடிரூசல்.

(இ - ள்.) 'நாரணனே - நாராயணனே, நான்முகனை - நான்கு முகங்களையுடைய பிரமதேவனை, படைத்தான் - சிருஷ்டித்தான்; அந்த நான்முகனும் - அந்தப் பிரமனும், நக்கபிரானை படைத்தான் - சிவபிரானைச் சிருஷ்டித்தான், (என்கிற இந்த அர்த்தவிசேஷத்தை), யான் - (எம்பெருமானது

நல்லருளாலே தத்துவஞானம் உதிக்கப்பெற்ற) நான், முகம் ஆய் - (பிரசாரஞ்செய்வதில்) முக்கியனாய்க்கொண்டு, அந்தாதி - அந்தாதியென்னும் பிரபந்தத்தினால், அறிவித்தேன் - (அஜ்ஞான உலகத்தோர்க்குத்) தெரிவிக்கலானேன்,' என்று - என்றுதொடங்கி, யார்க்கும் வெளியிட்ட - யாவர்க்கும் (தத்துவத்தை) வெளியிட்டருளிய, பிரான் - திருமழிசைப் பிரானது, இயல்பை-சிறந்த தன்மையுள்ள பிரபந்தங்களை, பாட - (ததீயர்) பாடாநிற்க,—பால் முகம் ஆர் வளை - பால்போன்ற வெண்ணிறத்தைக் கொண்டுள்ள சங்குபூச்சிகளும், நேமி - சக்கரவாகப் பறவைகளும், படைகள் -(தேவரீரது) திவ்வியாயுதங்களை, காட்ட - காட்டாநிற்கவும், பசு அடைகள் - பசிய தாமரையிலைகள், திருமேனி படிவம் காட்ட - (தேவரீரது) திருமேனிநிறத்தைக் காட்டாநிற்கவும், தேன் முகம் மா முளரி - தேனைக் கொண்ட சிறந்த தாமரைமலர்கள், அவயவங்கள் காட்ட-(தேவரீரது திருக்கை திருவடி முதலிய) திருவவயவங்களைக் காட்டாநிற்கவும், செழுந் தடம் போல்-செழித்த தடாகத்தை யொத்திருக்கிற, அரங்கேசர் - ஸ்ரீரங்கராஜரே! ஊசல் ஆடிர்—; (எ - று.)

"நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனுந், தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான் - யான்முகமாய், அந்தாதிமேலிட்டறிவித்தே னாழ்பொருளைச், சிந்தாமற்கொண்மினீர் தேர்ந்து" என்பது, திருமழிசைப்பிரான் அருளிச்செய்த நான்முகன்றிருவந்தாதியின் முதற்பாசுரம். இதுவன்றி, இவ்வாழ்வார் திருச்சந்தவிருத்தம் என்னும் பிரபந்தமும் அருளிச்செய்திருக்கின்றனர். "மாயக்கூத்தா வாமனா வினையேன்கண்ணா கண்கைகால், தூயசெய்ய மலர்களாச் சோதிச்செவ்வாய் முகிழதாச், சாயச் சாமத்திருமேனி தண்பாசடையாத் தாமரைநீள், வாசத்தடம்போல் வருவானே யொருநாள் காணவாராயே" என்ற பாசுரம் பின்னிரண்டடிகளில் கருதத்தக்கது. (௧0)

௧௧. மருளிரியமறமிரியவனைத்துயிர்க்கு
மயலிரியவினையிரியமறையின்பாட
லிருளிரியவென்றெடுத்துத்தொண்டர்தங்க
ளிடரிரியவுரைத்தபிரானிட்டம்பாட
வருளிரியவறமிரியவுலகையாண்ட
வாடகத்தோனகம்பரனென்றபிமானித்த
பொருளிரியச்சொல்லிரியமார்வங்கீண்ட
பொன்னிசூழ்திருவரங்கராடிரூசல்.

(இ - ள்.) அனைத்து உயிர்க்கும் - எல்லாச்சீவராசிகளுக்கும், மருள் இரிய - அஜ்ஞானம் நீங்கவும், மறம் இரிய - கொடுமை நீங்கவும், மயல் இரிய - (அஜ்ஞானத்தினால் விளைகின்ற) மதிமயக்கம் நீங்கவும், வினை இரிய - இருவினைகளும் நீங்கவும், மறையின் பாடல் - வேதத்தின்பொருளமைந்த பாடல்களை, இருள் இரிய என்று எடுத்து,—"இருளிரிய" என்றுதொடங்கி, தொண்டர்

தங்கள் இடர் இரிய - (அதனைப்பாடுகின்ற) அடியார்களது பிறவித்துன்ப மெல்லாம் நீங்கும்படி, உரைத்த - (பிரபந்தத்தைத்) திருவாய்மலர்ந்தருளிய, பிரான் - குலசேகரப்பெருமாளுடைய, இட்டம்-விருப்பான பெருமாள் திருமொழியென்னும் பிரபந்தத்தை, பாட - (ததீயர்)பாடாநிற்க,—அருள் இரிய - கருணையில்லாமற் போக, அறம் இரிய - தருமம் விலகும்படி, உலகை ஆண்ட - மூவுலகங்களையும் (தானொருவனாகவே) தனியரசாட்சிசெய்த, ஆடகத்தோன் - இரணியன், அகம் பரன் என்று அபிமானித்த பொருள் இரிய- 'நான்தான் பரதேவதை' என்று செருக்கியிருந்த தன்மை ஒழியுமாறும், சொல் இரிய - (அப்பொருளுக்கு இடமாகிய) சொற்களும் ஒழியுமாறும், மார்வம் கீண்ட-(அவ்வசுரனது) மார்பத்தை (நரசிங்கரூபியாய்த்தோன்றிப்) பிளந்தழித்த, பொன்னி சூழ் திருவரங்கர் - காவேரிநதியினாற் சூழப்பெற்ற திருவரங்கநாதரே! ஊசல் ஆடிர்—; (எ - று.)

"இருளிரியச் சுடர்மணிகளிமைக்குநெற்றி யினத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த, அரவரசப்பெருஞ்சோதி யனந்தனென்னு மணிவிளங்குமுயர் வெள்ளையணையைமேவித், திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளும், கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண் டென்கண்ணிணைக ளென்றுகொலோ களிக்குநாளே" என்பது, குலசேகராழ்வார் அருளிச்செய்த பெருமாள்திருமொழியின் முதற்பாசுரம். ஹாடகம்-பொன். நரசிங்கமூர்த்தியாய் இரணியாசுரனதுமார்பைக் கீண்டமாத்திரத்தில் அகம்பரனென்ற சொல்லும் பொருளும் ஒழிந்தன வென்க. (கக)

கஉ. அரனென்றுமயனென்றும்புத்தனென்று
மலற்றுவார்முன்றிருநாரணனேயாதி
பரனென்றுமறையுரைத்துக்கிழியறுத்த
பட்டர்பிரான்பாடியபல்லாண்டுபாடக்
கரனென்றமாரீசன்கவந்தனென்ற
கண்டகராருயிர்மடியக்கண்டிலங்கா
புரம்வென்றசிலையரங்கராடிரூசல்
புகழுறையூர்வல்லியோடாடிரூசல்.

(இ - ள்.) (பரதேவதை), அரன் என்றும் - சிவபெருமானே யென்றும், அயன் என்றும் - பிரமதேவனே யென்றும், புத்தன் என்றும் - புத்தனே யென்றும், அலற்றுவார் முன்-(இவ்வாறு தமக்குத்தோன்றியவாறெல்லாம் வாயினாற்) பிதற்றுகின்ற அந்யமதஸ்தர்கட்கு எதிரில், திருநாரணனே ஆதி பரன் என்று-'ஸ்ரீமந்நாராயணனே முதலாகிய பரதேவதை' என்று, மறை உரைத்து - (அதற்குஆதாரமாகிய) வேதபிரமாணங்களை எடுத்துக்கூறி, கிழி அறுத்த - (வல்லபதேவபாண்டியன் வித்யாசுல்கமாகக்கட்டிவைத்த) பொற்கிழியை அறுத்துக்கொண்ட, பட்டர்பிரான் - (அவ்வாறு அந்யமதஸ்தரான வித்துவான்களையெல்லாம் வென்றிட்டதனால்) பட்டர்பிரானென்று பட்டப்

பெயர்பெற்ற பெரியாழ்வார், பாடிய - திருவாய்மலர்ந்தருளிய, பல்லாண்டு - 'திருப்பல்லாண்டு' என்னுந் திவ்யப்ரபந்தத்தை, பாட - (ததீயர்)பாடாநிற்க, —கரன் என்ற (கண்டகன்) - கரனென்று சொல்லப்பட்ட கொடியவனும், மாரீசன் கவந்தன் என்ற கண்டகர் - மாரீசன் கவந்தனென்ற கொடியவரும், ஆர் உயிர் மடிய கண்டு - அருமையான உயிர் மடியும்படி கொன்று, இலங்காபுரம் வென்ற-இலங்காபட்டணத்தைச் சயித்த, சிலை - (கோதண்டமென்னும்) வில்லையேந்திய, அரங்கர் - திருவரங்கநாதரே! ஊசல் ஆடிர்—; புகழ் உறையூர் வல்லியோடு - புகழ்பெற்ற உறையூர்நாச்சியாரோடு, ஊசல் ஆடிர்—; (எ - று.)

பல்லாண்டு - முதற்குறிப்பால், 'பல்லாண்டு' என்றுதொடங்கிய பிரபந்தத்தைக் காட்டும். இவர்பாடிய பிரபந்தங்கள்-திருப்பல்லாண்டும், பெரியாழ்வார் திருமொழியும். (கஉ)

கங. மருமாலைப்பசுந்துளவத்தொடைகளோடு
வைகறையில்வந்துதிருத்துயிலுணர்த்தித்
திருமாலைதிருவடிக்கேசூட்டிநிற்குந்
திருமண்டங்குடிப்பெருமான்சீர்மைபாடப்
பெருமாலையடைந்துலகமதிமயங்கப்
பேணாதார்படக்கதிரோன்காணாதேக
வொருமாலைபகலிலழைத்தொளித்தநேமி
யொளியுள்ளாரரங்கேசராடிரூசல்.

(இ - ள்.) மரு மாலை - (திருமகளோடு) மருவியுள்ள திருமாலை, பசுந் துளவம் தொடைகளோடு - பசுமையாகிய திருத்துழாய்மாலையுடனே, வைகறையில் - விடியற்காலத்தில், வந்து - (சந்நிதிக்கு) வந்து, திருதுயில் உணர்த்தி - (திருப்பள்ளியெழுச்சிபாடித்) துயிலுணரச்செய்து, திரு மாலை - திருமாலையென்னுந் திவ்வியபிரபந்தத்தை, திருவடிக்கே சூட்டி நிற்கும் - திருவடிகளிற் சமர்ப்பித்துநிற்கின்ற, திருமண்டங்குடி பெருமான் - திருமண்டங்குடியில் திருவவதரித்த தொண்டரடிப்பொடியாழ்வாரது, சீர்மை - சிறப்புள்ள பிரபந்தங்களை, பாட-(ததீயர்) பாடாநிற்க,—உலகம் - உலகத்திலுள்ளார், பெரு மாலை அடைந்து - பெரிய மயக்கத்தை யடைந்து, மதி மயங்க - அறிவு கலங்கவும், பேணாதார் பட-பகைவர்கள் அழியவும், கதிரோன் காணாது ஏக - சூரியன் தோன்றாது மறையவும், ஒரு மாலை - ஓரிரவை, பகலில் - பகற்பொழுதிலே, அழைத்து - வருவித்து, ஒளித்த-(சூரியனை) மறைத்த, ஒளி நேமி உள்ளார் - கோடிசூரியபிரகாசமான திருவாழியாழ்வானையுடையவராகிய, அரங்கேசர் - திருவரங்கநாதரே ! ஊசல் ஆடிர்—; (எ-று.)

இனி, மருமாலைப்பசுந்துளவத்தொடைகளோடு-நறுமணமுள்ள மாலைகளாகிய திருத்துழாய்மாலைகளோடு என்று பொருளுரைப்பாருமுளர். தொண்டரடிப்பொடியாழ்வார், ஸ்ரீரங்கநாதனுக்குத் திருத்துளவத்தொண்டு செய்து வந்ததோடு, திருப்பள்ளியெழுச்சி, திருமாலை என்னுந் திவ்யப்ரபந்தங்களையும்

பாடினரென்க. தொண்டரடிப்பொடியாழ்வார்திருவவதாரஸ்தலமாகிய திருமண்டங்குடியென்னுந் தலம், சோழநாட்டில் கபிஸ்தலத்திற்கு வடகிழக்கேயுள்ளது. 'நிரவதிகதேஜோரூபமான திருவாழியாலே ஆதித்யனை மறைத்தாலும் லோகத்துக்கு மிகவும் வெளிச்சிறப்பு உண்டாமித்தனையன்றோ? ஆதித்யன் அஸ்தமித்தானென்னும்படி கண்களுக்கு இருண்டுதோற்றுவான் என்' என்னில், —இந்த ஆதித்யனுடைய தேஜசு கண்ணாலே முகக்கலாம்படி அளவுபட்டிருக்கையாலே தமஸ்ஸு போம்படியாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே, திருவாழியாழ்வானுடைய தேஜசு நேர்கொடுநேர் கண்கொண்டு பார்க்கவொண்ணாதபடி மிக்கிருக்கையாலே பளபளத்துக் கண்ணையிருளப்பண்ணிற்று' என்ப வாதலால், 'ஒருமாலை பகலிலழைத்தொளித்த நேமியொளியுள்ளார்' என்றார். (௧௩)

௧௪. காரங்கத்திருவுருவஞ்செய்யபாத
கமலமுதன்முடியளவுங்கண்டுபோற்றச்
சாரங்கமுனியையூர்ந்தமலனாதி
தனையுரைத்தபாண்பெருமாடகைமைபாட
வாரங்கொள்பாற்கடல்விட்டயனூரேறி
யயோத்திநகரிழிந்துபொன்னியாற்றிற்சேர்ந்த
சீரங்கமணவாளராடிரூசல்
சீரங்கநாயகியோடாடிரூசல்.

(இ - ள்.) கார் அங்கம் திருஉருவம் - காளமேகம்போன்ற திருவுருவத்தை, செய்ய பாத கமலம் முதல் - செந்நிறமாகிய திருவடித்தாமரையென்ற உறுப்புமுதல், முடி அளவும் - திருமுடிவரையிலும், கண்டு போற்ற - சேவித்துத்துதிக்கும்படி, சாரங்கமுனியை ஊர்ந்து - லோகசாரங்கமகாமுனிவர்மேல் ஏறிவந்து, அமலனாதிதனை உரைத்த - 'அமலனாதிபிரான்' என்று தொடங்கும் பிரபந்தத்தைப்பாடியருளிய, பாண்பெருமான் - திருப்பாணாழ்வாரது, தகைமை - பெருமையுள்ள ('அமலனாதிபிரான்' என்னும்) பிரபந்தத்தை, பாட - (ததீயர் எடுத்துப்) பாடாநிற்க,—ஆரம் கொள் பாற்கடல் விட்டு - முத்துக்களையுடைய திருப்பாற்கடலை விட்டுநீங்கி, அயன் ஊர் ஏறி - பிரமதேவனது நாடாகிய சத்தியலோகத்திற் சென்றிருந்து, அயோத்திநகர் இழிந்து - திருவயோத்தியில் இறங்கிச் சிலகாலம் வாழ்ந்து, (பின்பு), பொன்னி ஆற்றில் சேர்ந்த - உபயகாவேரியின் மத்தியிற் சேர்ந்த, சீரங்கமணவாளர் - ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தி லெழுந்தருளிய அழகியமணவாளரே! ஊசல் ஆடிர்—; சீரங்கநாயகியோடு ஊசல் ஆடிர்—; (எ - று.)

லோகசாரங்கமகாமுனிவர் திருவரங்கநாதனுக்குத்திருமஞ்சனம் சமர்ப்பித்துவரும்நாளில் ஒருகால் திருமஞ்சனங்கொணருமாறு தென்திருக்காவேரிக்குச் செல்லுகையில், வீணையுங் கையுமாய் மெய்ம்மறந்து ஸ்ரீரங்கநாதனைப் பாடிக்கொண்டிருந்த திருப்பாணாழ்வார்திருவடிகளில் அபசாரப்பட்டு, அந்த அபசாரம் திருமாறு ஸ்ரீரங்கநாதனது திருவுள்ளத்தால் அவ்வாழ்வாரைத்

